சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த

# தேவாரத் திருப்பதிகங்கள்

முதல் திருமுறை (தொகுதி - 1)

(தமிழிலும் ஆங்கிலத்திலும் உரைநடையில் விரிவான விளக்கங்களுடன்)

வெளியீடு

**சமூக சமயச் சங்கம்**

"அப்பர் இல்லம்", 21-ஐந்தாம் குறுக்குத் தெரு,
மகாராஜ நகர், திருநெல்வேலி - 627 011
தமிழ் நாடு, இந்தியா.
தொலைபேசி : 0462-2574468

# THĒVAARAM

Divine outpourings of Saint Thiru-Gnaana-Sambandar
First Thirumurai (Volume - 1)
(With Elaborate Commentary both in Tamil and English)

PUBLISHERS

**SOCIO RELIGIOUS GUILD**

"APPAR ILLAM", 21, FIFTH CROSS STREET,
MAHAARAAJA NAGAR, TIRUNELVELI - 627 011
TAMIL NADU, INDIA.
Phone: 0462-2574468
E-Mail: apparva@yahoo.com

2008

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த

# தேவாரத் திருப்பதிகங்கள்

## முதல் திருமுறை (தொகுதி - 1)

(தமிழிலும் ஆங்கிலத்திலும் உரைநடையில் விரிவான விளக்கங்களுடன்)

வெளியீடு

**சமூக சமயச் சங்கம்**

"அப்பர் இல்லம்", 21-ஐந்தாம் குறுக்குத் தெரு,
மகாராஜ நகர், திருநெல்வேலி - 627 011
தமிழ் நாடு, இந்தியா.
தொலைபேசி : 0462-2574468

# THĒVAARAM

## Divine outpourings of Saint Thiru-Gnaana-Sambandar
## First Thirumurai (Volume - 1)

(With Elaborate Commentary both in Tamil and English)

PUBLISHERS

**SOCIO RELIGIOUS GUILD**

"APPAR ILLAM", 21, FIFTH CROSS STREET,
MAHAARAAJA NAGAR, TIRUNELVELI - 627 011
TAMIL NADU, INDIA.
Phone: 0462-2574468
E-Mail: apparva@yahoo.com

2008

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

ஸ்ரீ திருஞானசம்பந்த சுவாமிகள் அருளிச் செய்த

# தேவாரத் திருப்பதிகங்கள்

*முதல் திருமுறை* (*தொகுதி* - 1)

(தமிழிலும் ஆங்கிலத்திலும் உரைநடையில் விரிவான விளக்கங்களுடன்)

வெளியீடு

**சமூக சமயச் சங்கம்**

"அப்பர் இல்லம்", 21-ஐந்தாம் குறுக்குத் தெரு,
மகாராஜ நகர், திருநெல்வேலி - 627 011
தமிழ் நாடு, இந்தியா.
தொலைபேசி : 0462-2574468

# THĒVAARAM

Divine outpourings of Saint Thiru-Gnaana-Sambandar
First Thirumurai (Volume - 1)
(With Elaborate Commentary both in Tamil and English)

PUBLISHERS

**SOCIO RELIGIOUS GUILD**

"APPAR ILLAM", 21, FIFTH CROSS STREET,
MAHAARAAJA NAGAR, TIRUNELVELI - 627 011
TAMIL NADU, INDIA.
Phone: 0462-2574468
E-Mail: apparva@yahoo.com

2008

சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ

உ
திருச்சிற்றம்பலம்
சிவமயம்

# திருக்கைலாய பர்வதம் – Holy Mount Kailaas

காளை வாகனத்தில் ஸ்ரீகண்ட பரமசிவன் – பார்வதி – விநாயகர் – பாலமுருகன்

Lord Civa - Goddess Parvathi - Lord Vinayakar - Lord Murugan





திருக்கயிலாய பரம்பரை
ஸ்ரீலஸ்ரீ குரு ஞான சம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்
தருமை ஆதின ஸ்தாபகர்

**THIRUK KAILAAYA PARAMBARAI**
**SRI-LA-SRI GURU GNAANA SAMBANDA DESIKA PARAMAACHAARYA SWAMIGAL**
**FOUNDER OF DHARUMAI AADHEENAM**



திருக்கயிலாய பரம்பரை
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள்
தருமை ஆதீன 26-வது குருமகா சந்நிதானம். இந்த நூலை வெளிக் கொணரச் செய்து
இன்று (2007-ஆம் ஆண்டில்) ஆட்சி பீடத்தில் இருப்பவர்கள்

**THIRUK KAILAAYA PARAMBARAI**
**SRI-LA-SRI SHANMUGA DESIKA GNAANASAMBANDA PARAMAACHAARYA SWAMIGAL**
**26th PONTIFF RULING AT PRESENT (2007 A.D.) IN DHARUMAI AADHEENAM**
**(BY HIS WISH & BLESSINGS THIS BOOK IS BEING PUBLISHED)**



திருக்கயிலாய பரம்பரை
ஸ்ரீலஸ்ரீ நமச்சிவாய மூர்த்திகள்
திருவாவடுதுறை ஆதீன ஸ்தாபகர்

**THIRUK KAILAAYA PARAMBARAI**
**SRI-LA-SRI NAMACHCHIVAAYA MOORTHIGAL**
**FOUNDER OF THE THIRUVAAVADUTHURAI AADHEENAM**



திருக்கயிலாய பரம்பரை
திருவாவடுதுறை ஆதீனம்
ஸ்ரீலஸ்ரீ சிவப்பிரகாச தேசிக பரமாசாரிய சுவாமிகள்
23-வது குருமகா சந்நிதானம். இன்று (2007-ஆம் ஆண்டில்) ஆட்சி பீடத்தில் இருப்பவர்கள்
இப்பணிக்கு ஆசி வழங்கியுள்ளார்கள்

**THIRUK KAILAAYA PARAMBARAI**
**SRI-LA-SRI SIVAPPRAKAASA DESIKA PARAMAACHAARYA SWAMIGAL**
**23rd PONTIFF RULING AT PRESENT (2007 A.D.) IN THIRUVAAVADUTHURAI AADHEENAM**
**HE HAS BLESSED THIS PROJECT**



மதுரை ஆதீனம் “லோக குரு”
292ஆவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ அருணகிரிநாத
ஸ்ரீ ஞான சம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகள்

**MADURAI AATHEENAM "LOKA GURU"**
**292$^{nd}$ PONTIFF**
**SRI-LA-SRI ARUNAGIRI NAATHA**
**SRI GNAANA SAMBANDA DESIKA PARAMAACHAARYA SWAMIGAL**




திருக்கயிலாய பரம்பரை
திருப்பனந்தாள் காசித்திருமடத்து ஸ்தாபகர்
ஸ்ரீலஸ்ரீ குமரகுருபர சுவாமிகள்

**THIRU-K-KAILAYA PARAMBARAI**
**THIRU-P-PANANDAAL KAASI-TH-THIRU-MUTT FOUNDER**
**SRILA-SRI-KUMARA KURUPARA SWAAMIGAL**



கயிலை மாமுனிவர்
திருவளர்திரு காசிவாசி எஜமான் சுவாமிகள் என்று அன்போடு அழைக்கப்பெறும்
திருப்பனந்தாள் காசித்திருமடத்து அதிபர்
முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

**HIS HOLINESS KAILAIMAAMUNIVAR**
**SRI-LA-SRI KASIVAASI**
**MUTHUKUMARA SWAMI THAMBIRAN SWAMIGAL**
**HEAD OF KASI MUTT, THIRUPPANANDAL**

உ
சிவமயம்

ஸ்ரீ திருஞான சம்பந்த சுவாமிகள்
அருளிச் செய்த

# தேவாரத் திருப்பதிகங்கள்

(தமிழிலும் ஆங்கிலத்திலும் உரைநடையில்
விரிவான விளக்கங்களுடன்)

**மயிலாடுதுறை - தருமபுரத்தில்**
**ஸ்ரீ ஞானாம்பிகை உடனாய**
**ஸ்ரீ ஞானபுரீசுவரர் எழுந்தருளியுள்ள**
**ஸ்ரீ ஞானபுரீசுவரர் திருக்கோயிலில்**
ஸர்வஜித்து வருடம் வைகாசித் திங்கள்
23-ஆம் நாள் (06.06.2007) புதன்கிழமை
தருமை ஆதீன ஸ்தாபகர்
ஸ்ரீலஸ்ரீ ஆதிகுருஞானசம்பந்த தேசிக பரமாசாரிய சுவாமிகளின்
குருபூசைத் திருநாளன்று இந்த நூல்
தருமை ஆதீனம் 26ஆவது குருமகா சந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்களால்
பூஜிக்கப்பட்டது.

வெளியீடு:
**சமூக சமயச் சங்கம்,**
'அப்பர் இல்லம்', 21-ஐந்தாம் குறுக்குத் தெரு,
மகாராச நகர், திருநெல்வேலி - 627 011
தமிழ் நாடு, இந்தியா
தொலைபேசி எண் 0462 – 2574468
மின்மடல் (இ–மெயில்) apparva@yahoo.com

2008

உ

SIVA-MAYAM

# THĒVAARAM

Divine Outpourings of

## Saint Thiru-gnaana-Sambandar

## FIRST THIRUMURAI

(with elaborate commentary both in Tamil and English)

Ceremonially worshipped by the

26th Pontiff - Darumai Aadheenam Guru Mahaa Sannidhaanam

**Sri-la-Sri Shanmuga Desiga Gnana Sambanda Paramaacharya Swamigal Avergal**

on Wednesday, 6th June 2007

**at Sri Sri Gnaana Pureeswarar Temple**

Dharmapuram, Maayavaram,
Tamilnadu, India.

Publishers:

**SOCIO RELIGIOUS GUILD**

**'Appar Illam', 21-Fifth Cross Street,**
**Mahaaraaja Nagar, Tirunelveli - 627 011**
**Tamil Nadu, India.**
**Phone: 0462 - 2574468**
**E-mail : apparva@yahoo.com**

**2008**

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

*திருஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்த*

# தேவாரம்

## முதல் திருமுறை

### இந்த நூல் வெளியீடுபற்றிய சில முக்கிய தகவல்கள்

திருக்கயிலாய பரம்பரை தருமபுரம் ஆதீனத் திருமடத்தின் 26–ஆவது குருமகா சந்நிதானம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின் ஆணையைச் சிரமேற் கொண்டு, அவர்களின் ஆசியோடும், பற்பல ஆதரவுகளோடும் இந்த நூல் வெளியிடப்படுகிறது என்பதை நன்றியோடு தெரியப்படுத்துவது அடியேனுடைய கடமையாகும்.

குறிப்பாக, தருமபுரம் ஆதீனத்திலிருந்து பதிப்பிக்கப்பட்ட 'திருஞானசம்பந்தர் தேவாரம் – முதல் திருமுறை' வெளியீடு எண் 987–இல் உள்ள ஆசிச் செய்தி, தலவரலாறு, கல்வெட்டுக் குறிப்புகள், பொழிப்புரை, குறிப்புரை முதலியவைகளைத் தருமை ஆதீனத்தின் அனுமதி பெற்று இந்த நூலில் வெளியிடப் பெற்றுள்ளது. தருமைப் பதிப்பில் உள்ள பொழிப்புரை பெரும்பாலும் ஒரு பாட்டிற்கு ஒரே வாக்கியமாக அமைந்துள்ளது. அந்தப் பொழிப்புரையை இக்காலத்தில் படிப்பவர்களுக்கு எளிமையாக இருக்கும் பொருட்டு, கருத்து மாறுபடாமல் சிறுசிறு வாக்கியங்களாக மாற்றி அமைத்துப் பதிப்பித்து உள்ளோம்.

ஆங்கில மொழி பெயர்ப்பு, தஞ்சை சேக்கிழார் அடிப்பொடி Dr. T. N. இராமச்சந்திரன் D. Litt. (Jaffna) அவர்கள் அன்புடன் எழுதி உதவியதை அடிப்படையாகக் கொண்டு, சிறுசிறு வாக்கியங்களாகவும், எளிய வார்த்தைகளை உபயோகித்தும் விளக்கியும் பதிப்பித்து உள்ளோம்.

சந்தி பிரித்து, பதம் பிரித்து பதிப்பிக்கப்பட்டுள்ள மூலப் பாட்டுக்கள், கல்விக் கடல், பண்டித வித்வான் உயர்திரு. தி. வே. கோபாலய்யர் அவர்கள் எழுதியுள்ள 'தேவாரம்' என்ற நூலில் (Published by French Institute of Indology, Pondicherry in 1984) பதிப்பித்தபடி, இந்த நூலில் பதிப்பித்து உள்ளோம்.

இவை அனைத்தும் சான்றோர்கள் பலராலும், அடியேனாலும் எழுதப்பட்டு சரிபார்க்கப்பட்டுப் பதிப்பிக்கப்பட்டவைகள் ஆகும். இதன் விபரங்கள் பதிப்புரையில் கூறியுள்ளோம்.

Oh! Lord Civa of the Golden Hall
Pray, shower Thy Blessings on us all.
வாழ்க சிவநெறி!
வளர்க திருமுறை!!
வாழ்க உலகமெலாம்!!!

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# தேவாரத்தின் சிறப்பு

சிவ மூல மந்திரங்கள்

1. நமச்சிவாய – தூல பஞ்சாக்கரம்
2. சிவாய நம – சூக்கும பஞ்சாக்கரம்

ஏனைய சிவமந்திரங்களை அறிஞர்கள் கண்டு கொள்க.

தேவாரம் அருளப்பட்ட ஏழாம் நூற்றாண்டிற்கு, வெகு காலத்திற்கு முன்பு வேதங்கள் செவி வழியாக ஓதப்பட்டு வந்தன. அப்பொழுது வேதங்கள் "த்ரயீ" என்றுதான் சொல்லப்படும். நான்காம் வேதமாகிய அதர்வண வேதம் நீண்ட காலத்திற்குப்பின் தோன்றியது. முதல் மூன்று வேதங்கள் 'ருக்' 'எசூர்' 'சாம' என்று கூறப்படுவன. இந்த மும் மறையுள் நடுநின்ற 'எசூர்' வேதத்தின் நடுவே விளங்கும் திருஉருத்திரத்தின்கண்

"நமச்சிவாயச"
"சிவதராயச"

என நமச்சிவாய என்னும் ஐந்தெழுத்து அருமறையும் "சிவ" என்னும் ஈரெழுத்து ஒரு மொழியும் காணப்படுவதை ஓர்க.

இதே போன்று மூவர் தேவாரங்களில் நடுவணதாகிய திருநாவுக்கரசர் பாடியருளிய ஐந்தாம் திருமுறையில் "திருக்குறுந்தொகை"யில் நடுவணதாகிய 51ஆவது "திருப்பாலைத்துறை" என்ற இத்திருப்பதிகத்துள் 6ஆம் திருப்பாடலின் நடுவில் "சிவாய" என்னும் சிவ மூல மந்திரம் அமைந்துள்ளது. இத்தெய்வ அமைப்பை உடைய இத்திருப்பாடலை கீழே கொடுத்துள்ளோம். அதை உணர்ந்து தேவாரத்தின் சிறப்பை அறிந்து கொள்க.

"விண்ணினார் பணிந்து ஏத்த வியப்புறும்
மண்ணினார் மறவாது **சிவாய** என்று
எண்ணினார்க்கு இடமா எழில் வானகம்
பண்ணினார் அவர் பாலைத் துறையரே"

பொருள்: தேவர்கள், திருப்பாலைத்துறைக்கு வந்து, அங்கு எழுந்தருளியிருக்கும் தவள வெண்ணகையாள் சமேதரராக வீற்றிருக்கும் பாலைவன நாதரைப் பணிந்து, ஏத்தி வழிபாடு

செய்கிறார்கள். மண்ணுலகத்தார், தேவர்கள் அங்கு வந்து வழிபடும் செயலைக் கண்டு வியப்புறுகிறார்கள்.

மண்ணுலகத்தோர் "**சிவாய**" என்ற சிவமூல மந்திரத்தை, மறவாது ஓதி வழிபாடு செய்து வருகின்றனர். இவர்களது சிவவழிபாட்டை விரும்பி ஏற்று சிவபெருமான் இவர்களுக்கு வேண்டிய இடமாக எழில் மிகுந்த வீடுபேற்றிற்குரிய இடத்தைப் படைத்து அருளினார்.

'த்ரயீ' எனப்படும் வேதங்கள் சிவநாமத்தை இதய நடுவுள் வைத்துப் போற்றுவதுபோல, மூவர் தேவாரங்களில் நடுவணதாகிய இந்த ஐந்தாம் திருமுறையில் நடுவணதாகிய இத்திருப்பாடலில் நடுவில் "**சிவாய**" என்னும் சிவமூல மந்திரம் அமைந்து விளங்கும் தெய்வ அமைப்பை உடையது இத்திருப்பாட்டு என்பதை உணர்ந்து தேவாரத்தின் சிறப்பை ஓர்க.

*வாழ்க சிவநெறி!*
*வளர்க திருமுறை!!*
*வாழ்க உலகெலாம்!!!*

உ
CIVAMAYAM
THIRU-CH-CHITRAMBALAM

## REPUTATION OF THEVAARAM

The five letter two sacred words (Mantras) of Lord Civa is :-

1. "NAMASI-VAAYA"

   (This is called "Thoola Panchaakaram" - தூல பஞ்சாக்கரம்)

2. "CIVAAYA NAMA"

   (This is called "Sookkuma Panchaakaram" - சூக்கும பஞ்சாக்கரம்)

These two sacred words of Lord Civan were in use in Vedaas itself whose period goes back to 2000 B.C. or even earlier. Vedaas originally three in number. Therefore, it is called as "Thirayee - (த்ரயீ)". They are "Ruk - ருக்", "Ejur - எசூர்" and "Saama - சாம". In the middle of these three Vedaas is Ejur (எசூர்). The central portion of Ejur Vedaa is called "Thiru-Uruththiram - திருஉருத்திரம்". In this chapter, we see the sacred word Civa as under:

"NAMACHI-VAAYASA" - "நமச்சிவாயச"
"CIVA-THARA-YASA" - "சிவதராயச"

Exactly in the same manner, the sacred word of Lord Civa "CIVAAYA" appears in the central portion of Thevaaram also. That is, in this particular hymn (Hymn No. 51 of 5th Thirumurai). The meaning of this poem is as under:

"Devaas arrive in Thiru-p-palai-th-thurai and pay obeisance to Lord Civa entempled therein. Worldly people surprised by witnessing the Devaas offering worship. However, the earthly people never forget to repeat Civa's sacred mantra "CIVAAYA" and offer worship to Lord Civa. He is pleased in the prayers of the worldly people and regulates to take them to Civa Loka".

*"May we praise Lord Civa for ever by chanting Thevaaram"*

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## திருஞானசம்பந்தரின் மாட்சிமை

"..... கழுமல நாதன், கவுணியர்குலபதி
தண்டமிழ் விரகன், சைவசிகாமணி
பண்டிதர் இன்பன், பரசமய கோளரி
என்புனை தமிழ் கொண்(டு) இரங்கி என் உள்ளத்து
அன்பினை அருளிய ஆண்தகை தன்புகழ்
குறைவறுத்து உள்கி நிறைகடைகுறுகி
நாப்பொலி நல்லிசைபாட
மாப்பெருஞ் செல்வம் மன்னுதி நீயே"

– நம்பி ஆண்டார் நம்பி அருளிச் செய்த 'ஆளுடைய பிள்ளையார் திருக்கலம்பகம்' (30–37).

பொருள்: திருஞானசம்பந்தர் கழுமலம் என்று சொல்லப்படும் சீகாழி நகரின் நாதன் ஆவார். கவுணியர் குலத்திற்குத் தலைவர் ஆவார். அவர் சிறப்பான தமிழ் மொழியில் வல்லவர். சைவத்தில் சிறந்தவர். புலவர்களிடம் இனிமையாகப் பழகுபவர். சைவ சமயத்திற்கு விரோதமாக உள்ள பிற சமயத்தாருக்குச் சிங்கம் போன்று விளங்குபவர். அவன்மீது யான் புனைந்த தமிழ்ப்பாடலைக் கேட்டு என்மீது சிறிது இரக்கம் கொண்டான். என் உள்ளத்திலும் தன்மீது செல்லும் அன்பினை அருளிய அந்த ஞானசம்பந்தரது புகழை நிரம்ப உணர்ந்து அவனது வாயிலில் போய் நின்று பாடுவாயாக. பாடினால், நீ அருட்செல்வத்தோடு பொருட்செல்வமும் அடைவாயாக என நம்பியாண்டார் நம்பி அருளியதை எண்ணி ஓர்க.

*"திருஞானசம்பந்தரின் திருவடிகள் போற்றி போற்றி"*

உ
CIVAMAYAM
THIRU-CH-CHITRAMBALAM

## GLORY OF THIRU-GNAANA-SAMBANDAR

"He is the Lord of Seekaazhi city - called Kazhumalam.
He is the Chief of the Kaunya (கவுணிய) family lineage.
He is the skillful person in Tamil language.
He is the Gem of diadem among the Saivites.
He is the most meritful scholar among learned men.
He is like lion for other enemical religions.
I reduced my indigence and my heart started melting for my love on him.
Then I started singing divine songs praising His glory in Tamil.
He, therefore, took pity on me
And showered His affection on me
By which, I became eligible
To get His favouritism
For my great richness".

- Nambi-Aandaar-Nambi in his Eleventh Thirumurai in hymn called "Thiru-k-kalambakam" (Lines 30-37).

*'Glory of Thiru-Gnaana-Sambandar may spread all over the world'*

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## திருஞானசம்பந்தர் வாழ்த்து

(சேக்கிழார் சுவாமிகள் அருளியது)

வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்
பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத
சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்
பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.

*வேத நெறி தழைத்து ஓங்க மிகு சைவத்துறை விளங்கப்*
*பூத பரம்பரை பொலியப் புனித வாய் மலர்ந்து அழுத*
*சீத வள வயல் புகலித் திரு ஞான சம்பந்தர்*
*பாத மலர் தலைக் கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.*

VĒDA NERI THALAITHTHU ŌNGA MIHU SAIVATH THURAI VILANGA
BOOTHA PARAMBARAI POLIYA PUNITHA VAAI MALARNTHU AZHUTHA
SEETHA VALA VAYAL PUKALI-TH THIRU GNAANA SAMBANDAR
PAATHA MALAR THALAI-K-KONDU THIRU-TH-THONDU PARAVUVAAM.

## INVOCATION HYMN TO SAINT THIRU-GNAANA-SAMBANDAR

**(By Sek-kizhaar Swaamigal)**

Aloft we hold the sacred flowery Feet of Saint Thiru-Gnaana-Sambandar on our head and work to propagate his divine vedic message. This saint was born in Pukali (See-Kaazhi) which is surrounded by cool and fertile paddy fields.

A crying voice "AMMAYĒ APPAA" (*அம்மையே அப்பா*) blossomed forth from the holy mouth of the sage child while he was standing on the banks of the Temple Tank (of Pirama-Puram). This resulted in the rich Vedic Culture and the vast Saiva Cult growing and spreading everywhere. May the traditional giant servitors (Army of Boothas of Lord Civa) glow in fame!

சேக்கிழார் சுவாமிகள் திருவடிகள் போற்றி!
திருஞான சம்பந்த சுவாமிகள் திருவடிகள் போற்றி போற்றி!!
Let the renown of Sekkizhaar and Thiru-Gnaanasambandar be remembered
all over the world for ever.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

## நால்வர் வயது

அப்பருக்கு எண்பத்தொன்று அருள் வாதவூரருக்குச்
செப்பிய நாலெட்டில் தெய்வீகம் – இப்புவியில்
சுந்தரர்க்கு மூவாறு தொன் ஞான சம்பந்தர்க்
கந்தம் பதினாறு அறி.

அப்பருக்கு எண்பத்தொன்று அருள் வாதவூரருக்குச்
செப்பிய நாலெட்டில் தெய்வீகம் – இப்புவியில்
சுந்தரருக்கு மூவாறு தொல் ஞான சம்பந்தருக்கு
அந்தம் பதினாறு அறி.

APPAR-UK-KU ENNPATHTHŌNDRU ARUL VAATHA VOORA-RUK-KU-CH
CHEPPIYA NAALETTIL THEIVEEKAM IP-PUVIYIL
SUNDARA-RU-KU MOOVAARU THŌL GNAANA SAMBANDA-RU-KU
ANTHAM PATHI-NAARU ARI.

## AGE OF THE FOUR SAINTS

Saint Appar (Thiru-Naavu-k-karasu Swaamigal) was blessed with eighty one years of life while Saint Maanickavaachaka Swaamigal attained Para Mukthi at thirty two. Here, in this earth Saint Sundaramoorthy Swaamigal lived upto eighteen years, while Saint Thiru-Gnaana-Sambanda Swaamigal had a spell of life for sixteen years.

நால்வர் புகழ் ஓங்குக உலகெலாம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

**நால்வர் குருபூசை நட்சத்திரங்கள்**

சித்திரைச்சதயம் அப்பர் சிறந்தவை காசிமூலம்
அத்தரைப்பணி சம்பந்தர் ஆனிமாமகத் தில்அந்த
முத்தமிழ் வாதவூரர் முதியநல்ஆடி தன்னில்
சுத்தமாஞ்சோதி நாளில்சுந்தரர் கயிலை சேர்ந்தார்.

சித்திரைச் சதயம் அப்பர் சிறந்த வைகாசி மூலம்
அத்தரைப் பணி சம்பந்தர் ஆனிமா மகத்தில் அந்த
முத்தமிழ் வாதவூரர் முதியநல் ஆடி தன்னில்
சுத்தமாஞ் சோதி நாளில் சுந்தரர் கயிலை சேர்ந்தார்.

CHITHIRAI-CH CHATHAYAM APPAR CHIRANTHA VAIKAASI MOOLAM
ATHTHARAI-P-PANI SAMBANDAR AANI-MA MAKATH-THIL ANDHA
MUTH-THAMIL VAATHA-VOORAR MUTHIA NAL AADI THANNIL
SUTH-THA-MAANCH CHŌTHI NAALIL SUNDARAR KAILAI CHĒRNTHAAR.

## STARS ON THE GURU POOJA DAY OF THE FOUR SAINTS

In the Tamil month of "Chithirai" with star "Sathayam" (சதயம்-24th Star) Saint Appar Swaamigal reached Lord Civan's Holy Feet; In the Tamil month of "Vaikaasi" with star Moolam (மூலம்-19th Star) Saint Thiru-Gnaana-Sambandar attained Mōksha; In the Month of "Aani" with star "Maham" (மகம்-10th Star) Saint Maanickavaachakar became one with Lord Nataraaja at Chidambaram. While in the Tamil month of "Aadi" with star "Swaathi" (சுவாதி-15th Star) Saint Sundara Moorthy Swaamigal reached Lord Civan's aboard in Mount Kailas, riding on a white elephant.

நால்வர் திருவடிகள் போற்றி போற்றி!!

# நூல் விபர அட்டவணை

| | | |
|---|---|---|
| நூலின் தலைப்பு | : | **தேவாரம் - முதல் திருமுறை**<br>தொகுதி I & II |
| பதிப்பாசிரியர் | : | செந்தமிழ் சிவநெறிச் செல்வர்<br>வை. ஆறுமுகம் |
| பொருள் | : | சைவ சமயத் தோத்திரப் பாடல்கள் |
| மொழி | : | தமிழ் மற்றும் ஆங்கிலம் |
| பதிப்பு | : | முதல் பதிப்பு |
| பதிப்பு ஆண்டு | : | ஜூலை, 2008 |
| நூலின் அளவு | : | 11" X 8.5" |
| தாள் | : | 80 GSM MAP LITHO |
| கட்டமைப்பு | : | அட்டைக்கட்டு |
| அச்சு எழுத்து | : | 12 புள்ளி |
| மொத்த பக்கங்கள் | : | 1804 |
| பிரதிகள் | : | 1500 |
| பக்க வடிவமைப்பு | : | சிவா கம்ப்யூட்டர்ஸ்,<br>12, பரஞ்சுடர் தெரு,<br>பாளையங்கோட்டை, திருநெல்வேலி – 627 002<br>தமிழ் நாடு, இந்தியா.<br>✆ 91 - 462 - 2579673 |
| அச்சிட்டோர் | : | தி சுதர்சன் ஆப்செட் பிரிண்டர்ஸ்,<br>பழைய எண் 153–A, புதிய எண் 358<br>முண்டக நாடார் தெரு,<br>சிவகாசி – 626 123<br>தமிழ் நாடு, இந்தியா.<br>✆ 91 - 4562 - 220780 |
| வெளியீடு | : | சமூக சமயச் சங்கம்,<br>'அப்பர் இல்லம்'<br>21– ஐந்தாம் குறுக்குத் தெரு,<br>மகாராசநகர், திருநெல்வேலி – 627 011.<br>தமிழ் நாடு, இந்தியா.<br>✆ 91 - 462 - 2574468 |

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

திருஞானசம்பந்தப் பெருமான்அருளிச் செய்த

# தேவாரம்

# THĒVAARAM

**Bestowed by St. Thiru-Gnaana-Sambandar**

## முதல் திருமுறைப் பதிகங்களின் அட்டவணை
## List of Hymns in First Thirumurai

திருச்சிற்றம்பலம்

# TRANSLITERATION CODE

| Tamil | Transliteration | Approximate Pronunciation |
|---|---|---|
| அ | a | u in up |
| ஆ | A | a in father |
| இ | i | i in sit |
| ஈ | I | i in unique |
| உ | u | u in pull |
| ஊ | U | oo in woo |
| எ | e | c in fed |
| ஏ | E | a in plane |
| ஐ | ai | i in site |
| ஒ | o | o in mobile |
| ஓ | O | o in noble |
| ஔ | au | ow in now |
| ஸ் | S | S in BUS |
| ஹ் | h | h in hulk |
| ஜ் | j | j in Haj |
| க்ஷ | x | x in box |
| ஷ் | ch / sh | sh in shine |
| ஸ்ரீ | C / sr | sr in sri |

| Tamil | Transliteration | Approximate Pronunciation |
|---|---|---|
| க் | k | k in cake |
| ங் | g | ng in bangle, English |
| ச் | c | c in charm |
| ஞ் | nj | nj in Kanji |
| ட் | T | t in butter; d in bed |
| ந் | n | n in new |
| த் | t | th in cloth |
| ன் | n2 | n in new |
| ண் | N | N in new |
| ப் | p | p in deep |
| ம் | m | m in man |
| ய் | y | y in yellow |
| ர் | r | r in revive |
| ல் | l | l in salt |
| வ் | v | v as in English but so firm |
| ழ் | z | z pronounced with the tongue curled as far back as possible |
| ள் | L | l pronounced with the tongue curled back |
| ற் | R | r in true, dr in drew |

| தமிழ் எழுத்து | க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| Transliteration Code | ka | kA | ki | kI | ku | kU | ke | kE | kai | ko | kO |

குருபாதம்

திருக்கயிலாய பரம்பரைத் தருமபுர ஆதீனம் 26ஆவது குருமகாசந்நிதானம்
ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் வழங்கியருளிய
ஆசியுரை

ஆசையறாய் பாசம்விடாய் ஆனசிவ பூசைபண்ணாய்
நேசமுடன் ஐந்தெழுத்தை நீ நினையாய் – சீசீ
சினமே தவிராய் திருமுறைகள் ஓதாய்
மனமே உனக்கென்ன வாய்.

–ஸ்ரீலஸ்ரீ குருஞானசம்பந்தர்.

திருமுறைகள்

சைவ சமய நூல்களைச் சான்றோர் தோத்திரம், சாத்திரம் என இருவகையாகப் பகுத்துக் கூறுவர். அவற்றுள் தோத்திரம் அன்பின் அடிப்படையில் எழுந்தது. சாத்திரம் அறிவின் அடிப்படையில் தோன்றியது. இவ்விரு திறத்து நூல்களும் மெய்யுணர்வாளர்களால் அருளிச் செய்யப் பெற்றவை.

தோத்திரங்களில் தலையானவைகளாக விளங்குவன பன்னிரு திருமுறைகளாகும். முறை–நூல். திருமுறை என்ற சொல்லுக்கு, தெய்வத் தன்மை வாய்ந்த நூல் என்பது பொருளாகும். தெய்வத் தொடர்புடைய கோயில், குளம், நந்தவனம் முதலானவற்றைத் திருக்கோயில், திருக்குளம், திருநந்தவனம் என வழங்குதல் போலத் தெய்வத் தொடர்புடைய இந்நூல்களையும் திருமுறை என வழங்கினர் நம் முன்னோர்.

திருமுறை என்ற சொல், திருவை அடையச் செய்யும் நூலுக்குப் பெயராயிற்று. திரு என்பது சிவம். ‘சிவமே பெறும் திருஎய்திற்றிலேன்’ என்பது மணிவாசகர் திருவாக்கு. அவர் சிவத்தைத் திரு என்றே குறிப்பிடுகிறார்.

‘திரு’ என்ற சொல்லுக்கு உண்மை, அறிவு, ஆனந்தம் என்ற மூன்று பொருளும் உண்டு. சிவபரம்பொருளைச் சச்சிதானந்த வடிவமாகக் காட்டுகின்றன ஞானநூல்கள். சத் – உள்ளது, சித் – அறிவு, ஆனந்தம் – இன்பம். இம்மூன்றையும் உடையது எதுவோ அதுவே உண்மைத் “திரு” எனப்படும். ‘சத்’ என்பது சிவம். ‘சித்’ என்பது உமாதேவி. ‘ஆனந்தம்’ என்பது முருகன். எனவே, உண்மை, அறிவு, இன்பம் இம்மூன்றும் நிறைந்ததே முழுமையான பரம்பொருளாகும்.

இப்பரம்பொருளை அடைய வழிகூறும் நூலே திருமுறை எனப்படும். முறை என்ற சொல், நூல் என்ற பொருளில் கந்தபுராணத்துள் வந்துள்ளமையைக் காணலாம்.

'இறைநிலம் எழுதுமுன் இளைய பாலகன்
முறைவரை வேன்என முயல்வது ஒக்குமால்'

என்பது கந்தபுராண அவையடக்கப் பாடல் பகுதி.

தேவாரம்

திருமுறைகள் பன்னிரண்டாகப் பகுக்கப் பெற்றுள்ளன. இவற்றை அருளியவர்கள் திருஞானசம்பந்தர் முதலாகச் சேக்கிழார் ஈறாக 27 அருளாசிரியர்கள் ஆவர். இருபத்தேழு நட்சத்திரங்களும் புற இருளைப் போக்குவது போல இவ்விருபத்தேழு ஆசிரியர்கள் அருளிய நூல்கள் மக்கள் உள்ளத்தின்கண் உள்ள அக இருளைப் போக்கும் தன்மையன. இவற்றுள் முதல் ஏழு திருமுறைகளை அருளிச் செய்தவர்கள் திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூவர் ஆவர். இவை பழந்தமிழ் இசையமைப்பில் பண்ணமைப்புடன் கூடிய இசைப் பாடல்களாதலின் தேவாரம் எனப் போற்றப் பெறும். தே–தெய்வம். வாரம் – இசைப்பாடல். தெய்வத்தைக் குறித்த இசைப்பாடல் என்ற பொருளில் இவை அப்பெயரால் வழங்கப் பெறுகின்றன. தேவாரத்தை 'மூவர் தமிழ்' என ஔவையார் போற்றியுரைப்பார். 'மொழிக்கு மொழி தித்திக்கும் மூவர் தமிழ்' என அறிஞர்கள் போற்றி உரைப்பர். இம்மூன்று அருளாசிரியர்களையும் மூவர் முதலிகள் எனவும், இவர்களோடு திருவாசகம், திருக்கோவையார் அருளிய மணிவாசகரையும் இணைத்து, சமயாசாரியர் எனவும் கூறுவர். இந்நால்வர் பெருமக்களும் சைவ சமயம், வேற்றுச் சமய நெறிகளால் நிலை குலைந்திருந்த காலத்தில் இறைவன் திருவருளால் இந்நிலவுலகில் அவதரித்து, சைவசமயத்தை நிலைநிறுத்திய பெருமக்களாதலின் சமயாசாரியார்கள் எனப் போற்றப்படுகின்றனர்.

அடங்கல் முறை

தேவாரத் திருப்பதிகங்களின் தொகுப்பு நூல் அடங்கல் முறை எனப்படும். இவ்வடங்கல் முறை – தலமுறை, பண்முறை, வரலாற்று முறை என மூவகைப்படும். இவற்றுள் பண் அமைப்புடன் தொகுத்துள்ள அடங்கலே முதல் ஏழு திருமுறைகள் ஆகும். ஏழு திருமுறைகளில் முதல் மூன்று திருமுறைகள் திருஞானசம்பந்தரால் அருளிச் செய்யப்பட்டவை. 384 திருப்பதிகங்களையும், 4181 பாடல்களையும்

கொண்டவை. 4, 5, 6 திருமுறைகள் திருநாவுக்கரசு சுவாமிகளால் அருளிச் செய்யப்பட்டவை. 313 திருப்பதிகங்களையும், 3066 பாடல்களையும் உடையவை. 7ஆம் திருமறை சுந்தரரால் அருளிச் செய்யப்பட்டது. 100 பதிகங்களையும் 1026 பாடல்களையும் கொண்டது.

பதிகம் என்ற சொல்லுக்கு பத்துப் பாடல்களைக் கொண்டது என்பது பொருள். இவற்றுட் சில பதிகங்கள் கூடியோ குறைந்தோ வந்துள்ளன.

அப்பர் திருமுறை

திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் இருவரும் சைவப் பணியைச் சற்றே கடந்தும் புரிந்ததில் சம காலத்தவர். நாவுக்கரசர் கி.பி. ஆறாம் நூற்றாண்டின் இறுதியிலும் 7ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியிலும் வாழ்ந்தவர். இவர் காலத்தில் அரசு புரிந்த மன்னர்கள் முதலாம் மகேந்திரவர்ம பல்லவனும் (கி.பி. 580–630), நரசிம்மவர்ம பல்லவன் (கி.பி. 630–668) ஆவர். திருஞானசம்பந்தரையும், திருநாவுக்கரசரையும் சைவ சமயத்தின் இருகண்கள் எனச் சேக்கிழார் போற்றுகிறார். திருஞானசம்பந்தர் திருமுறைகள் உண்மைப் பொருளைச் சுருங்க உரைக்கும் முறையில் வேதங்களைப் போல் அமைந்தவை. திருநாவுக்கரசர் திருமுறைகள் அதனை விரித்துக் கூறும் முறையில் சிவாகமங்களைப் போல் அமைந்தவை. இவ்விருவர் பாடல்களையும் கேட்டு மகிழும் இயல்பினன் இறைவன் என்பதை சுந்தரர் ‘நல்லிசை ஞானசம்பந்தனும் நாவினுக் கரையனும் பாடிய நற்றமிழ் மாலை சொல்லியவே சொல்லி ஏத்துகப்பானை’ எனப் போற்றி உரைக்கிறார்.

செப்பேட்டில் திருமுறை

கி.பி. 1070 முதல் கி.பி.1120 வரை ஆட்சி புரிந்தவன் முதல் குலோத்துங்கன். இவன் படைத்தலைவர்களுள் ஒருவனான மணவிற்கூத்தன் காளிங்கராயன் என்பான், மூவர் தேவாரத்திருப் பதிகங்களைச் செப்பேடுகளில் எழுதுவித்து, திருக்கோயிலுள் சேமமுற வைத்தான் என்று தில்லைக் கோயில் கல்வெட்டுக் கூறுகிறது. அதுபற்றிய வெண்பா:

“முத்திறத்தா ரீசன் முதற்றிறத்தைப் பாடியவா(று)
ஒத்தமைத்த செப்பேட்டி னுள்எழுதி – இத்தலத்தின்
எல்லைக் கிரிவாய் இசைஎழுதி னான்கூத்தன்
தில்லைச்சிற் றம்பலமே சென்று”

தில்லைச் சிற்றம்பலத்தின் மேல்பால் மூவர் கை அடையாளம் உள்ள அறையில் இருந்த திருமுறைகள் செல்அரித்திருந்தமையை உணர்ந்தமையால் செல் அரியாவண்ணம் இப்படைத்தலைவன் காளிங்கராயன் செப்பேடு செய்வித்தான்.

திருவாரூரிலும் திருமுறைகள் செப்பேடு செய்திருந்தமையை, அச்செப்பேட்டிலிருந்து படிஎடுத்த தருமை ஆதீன ஓலைச்சுவடியால் புலனாகிறது. இப்படியெல்லாம் திருமுறைகளின் அருமை, பெருமை தெரிந்து போற்றிய முன்னோர்களின் திருவுள்ளக் கருத்தை உணர்வோமாக.

ஓலைச்சுவடிகளில் திருமுறை

மற்றொரு வகையில் திருமுறைகண்ட சோழன் பற்றிச் சிந்திப்போம். ஞானசம்பந்தர் காலத்தில் அவருடனே இருந்து அவர் பாடல்களையெல்லாம் எழுதி வந்த சம்பந்த சரணாலயரே திருமுறைகளை முதன்முதலில் ஓலைச்சுவடிகளில் எழுதியவர்.

அதன்பிறகு ஏறத்தாழ ஞானசம்பந்தர் காலத்தில் இருந்தவராகக் கருதப்பெறும் சீகாழி கணநாதநாயனார், திருமுறைகளை எழுதுவோர் வாசிப்போரைத் தயாரித்தார் என்பது அவரைப்பற்றிய செய்தி.

மூத்த திருப்பதிகம்

இத்திருமுறையில் எட்டுப் பண்களில் அமைந்த 136 திருப்பதிகங்கள் உள்ளன. அவற்றுள் முதல் திருப்பதிகம் "தோடுடைய செவியன்" என்பது. ஞானசம்பந்தர் காலத்திற்கு முன்பே பண்ணோடு திருப்பதிகம் பாடி நெறிகாட்டியவர் காரைக்கால் அம்மையார்.

அவர் பாடிய நட்டபாடைப் பண்ணையே முதலில் ஞானசம்பந்தரும் அருளினார். இதுபற்றியே அம்மையார் அருளிய திருப்பதிகம் மூத்த திருப்பதிகம் என்ற பெரைப் பெறுவதாயிற்று.

மூவினைகள்

திருவாரூரில் பாடிய 'பாடலன் நான்மறையன்' என்ற பதிகத்துள் இரண்டாம் பாடலில், 'காலையும் மாலையும் போய்ப் பணிதல் கருமமே' என்று கடமையை உணர்த்துகின்றார். வழிபாட்டாலும், தேவாரத் திருப்பதிகங்களை ஓதுவதாலும்

பழவினை (சஞ்சிதம்), வருவினை – மேல் எதிர்காலத்து வருவினை (ஆகாமியம்), இப்பிறப்பில் நாம் அனுபவிக்க இருக்கும் வினை (பிராரத்தவினை) ஆகிய இவையெல்லாம் தீரும் என்பது ஆளுடைய பிள்ளையாரின் அறிவுரை.

'வல்லதோர் இச்சையினால் வழிபாடிவை பத்தும் வாய்க்கச் சொல்லுதல் கேட்டல் வல்லார் துன்பம் துடைப்பாரே'. இது பொதுவாக வினையினால் வரும் துன்பம் நீங்கும் என்கிறது.

'தோடுடைய செவியன்' கடைசிப் பாடலில், தொல்வினை – பழவினை தீர்தல் எளிதாம் என்றறிவித்துள்ளமை காண்க. திருநள்ளாற்றுப் போகமார்த்த பூண்முலையாள் என்னும் பதிகக் கடைசிப் பாடலில் 'உண்பு நீங்கி வானவரோடு உலகில் உறைவாரே'. உண்பு – பிராரத்தவினை. இதில் பிராரத்த வினை நீங்கும் என்கிறார்.

'கண்ணார் கோயில் கைதொழு வார்கட் கிடர்பாவம்
நண்ணா வாகும் நல்வினை யாய நணுகும்மே'

என்பதனால் ஆகாமியமாகிய எதிர்வினை நணுகாது என்கிறார் ஞானசம்பந்தர். இவ்வாறு பலபாடல்களால் சஞ்சித, ஆகாமிய, பிராரத்த வினைகள் நீங்கும் என்பதை இம்முதல் திருமுறையிலேயும் குறிப்பிட்டுள்ளார். **மூவினையும் முற்றிலும் நீங்காது. நீங்கினால் பிறவி இல்லையாகிவிடும். எனவே இலேசாகத் தாக்கும் என்பதையே நீங்கும் என்பதற்குப் பொருளாகக் கொண்டு ஓதி உணர்ந்து கொள்க.**

நமது திருமடத்து அடியார் செந்தமிழ் சிவநெறிச் செல்வர் வை. ஆறுமுகம் பிள்ளை அவர்கள் முதல் திருமுறையில் உள்ள 1469 பாக்களையும் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்தும் (வசன நடை மற்றும், விரிவான நடை), எழுத்துப் பெயர்ப்பும் (Transliteration) மிகச் சிறப்பாக செய்துள்ளார். இந்தப் பெரிய நூலுக்குப் பணி செய்த அவரும், அவர் குடும்பத்தாரும், அவருக்குப் பல்வேறு வகையில் உதவிபுரிந்த அனைத்து அன்பர்களும், மேலும் மேலும் சமயப் பணிகள் பல புரிந்து, இனிது வாழ எல்லாம் வல்ல செந்தமிழ்ச் சொக்கன் திருவருளைச் சிந்திக்கின்றோம்.

வாழ்க சிவநெறி! வளர்க திருமுறை! வாழ்க உலகெலாம்!

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

திருக்கயிலாய பரம்பரைத்
திருவாவடுதுறை ஆதீனம்
23-ஆவது குரு மகாசன்னிதானம்
ஸ்ரீ லஸ்ரீ சிவப்பிரகாச தேசிக
பரமாச்சாரிய சுவாமிகள் அவர்கள்
திருவாவடுதுறை - 609 803
நாகை மாவட்டம்
தொலைபேசி எண்: 04364 - 232021



நாள் 12.5.07

நமச்சிவாய வாழ்க நாதன்தாள் வாழ்க
இமைப்பொழுதும் என்நெஞ்சின் நீங்காதான் தாள்வாழ்க
கோகழி ஆண்ட குருமணிதன் தாள்வாழ்க

## அருள் வாழ்த்துரை

'மருந்தவன் வானவர் தானவர்க்கும்
பெருந்தகை பிறவினொ டிறவுமானான்
அருந்தவ முனிவரொ டானிழற்கீழ்
இருந்தவன் வளநகர் இடைமருதே' – முதல் திருமறை

திருவாசகத்தினை உலகளாவிய பயன்கிட்டும் முறையில் சிறப்பாக வெளியிட்ட திருநெல்வேலி சமூக சமயச் சங்கத்தினர் அதுபோன்றே ஏனைய பதினோரு திருமுறைகளையும் பதிப்பிக்கும் திட்டத்தில் இப்போது திருஞான சம்பந்த சுவாமிகள் தேவாரமாகிய முதல் திருமுறையினை வெளியிட இருப்பது அறிந்து மகிழ்ச்சி அடைகிறோம்.

தமிழிலும் ஆங்கிலத்திலும் பதிகங்களுக்கு விளக்கம் தந்து, அதனோடு மூர்த்தி தலத்தீர்த்தங்களின் சிறப்புகளையும், வரலாற்றுக் குறிப்புகளையும் இரு மொழிகளிலும் தந்திருப்பது மிகவும் பயனுள்ளதாக இருக்கின்றது. திருவாசகப் பதிப்பினைப் போன்றே இப்பதிப்பும் உலகளாவிய முறையில் பயன்படும் என்பதில் ஐயமில்லை.

சமூக சமயச் சங்கத்தினைத் திறம்பட நிர்வகித்து அரியமுறையில் திருமுறைப் பணிகள் ஆற்றிவரும் அதன் தலைவர் சிவத்திரு. வை. ஆறுமுகம் அவர்களும், அவர்களுக்குத் துணைநின்று ஒத்துழைக்கும் பிற பொறுப்பாளர்களுக்கும், நூலினைப் பெற்றுப் பயன்கொள்ளும் அன்பர்களுக்கும் இருமை வளங்களும் சிவஞானமும் சித்திக்க வேண்டுமென நமது வழிபடு கடவுளாகிய அருள்மிகு ஞானப் பெருங்கூத்தன் திருவடி மலர்களைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

பெறுநர்,
சிவத்திரு. வை. ஆறுமுகம் அவர்கள்,
'அப்பர் இல்லம்', 21-ஐந்தாம் குறுக்குத்தெரு,
மகராச நகர், திருநெல்வேலி-627 011.

# THE HINDU TEMPLE SOCIETY OF NORTH AMERICA
**Sri Maha Vallabha Ganapati Devasthanam**

August 16, 2007

Sri. V. Arumugam Pillai
President
Socio Religious Guild
Appar Illam
21, 5th Cross Street,
Maharaja nagar,
Tirunelveli - 627 011.

Respected Sri Arumugam,

I thank you for your letter from which I am glad to know that following the publication of the great tamil epic "Thiruvachakam" with commentary in English, you have now taken up and completed the translated version of the first canon of "Thevaram" graced by saint Thirugnanasambandar. I am also pleased to know that this publication is to be released very soon and I wish you success.

I fondly remember your visit to our Temple - Sri Maha Vallabha Ganapati Devasthanam - in April 2005 accompanied by Mr. Chidambaranathan of United Nations University, New York, When you had very kindly offered to Sri Maha Vallabha Ganapati Temple's Library the two volumes of Saint Manickavaasagar's "Thiruvachakam" with commentary in English by you. Please by assured the these valuable works will occupy their due place in our Library and those interested will be greatly benefitted.

I wish you success in your remaining noble and literary efforts and may Lord Maha Vallabha Ganapati bestow His blessings to you for your long life and good health to successfully complete the translated publication of the remaining 11 canons of the 12 "Thirumurais" in English.

I am happy to send herewith the "Vibhuti & Kumkumam" prasadams of Sri Maha Vallabha Ganapati.

With Profund regards,

Your Sincerely,

Dr. Uma Mysorekar
President

45-57 Bowne Street, Flushing, New York 11355-2202 * Tel: (718)460-8484 * Fax: (718) 461-8055

http://www.nyganshtemple.org * email:webmaster@nyganeshtemple.org.

உ
சிவ சிவ

கயிலை மாமுனிவர்
திருவளர்திரு காசிவாசி முத்துக்குமாரசுவாமித்
தம்பிரான் சுவாமிகள் அவர்கள்
அதிபர், காசித்திருமடம்.

Ph: 0435-2456655
திருப்பனந்தாள் - 612 504
(தஞ்சை மாவட்டம்)



தேதி 15.5 2007

## ஆசியுரை

"மேன்மை கொள் சைவ நீதி" "மறை முடிவாம் சைவம்" என்றெல்லாம் போற்றப்பெறும் சைவ சமயக் கருவூலங்களாகிய திருமுறைகளை உலகளாவிய நிலையில் அறிமுகப்படுத்திப் பலரும் பயின்று மேன்மையை உணரவேண்டும் என்னும் குருமணிகளின் திருவுள்ளத்தை மனதில் ஏற்று, திருஞானசம்பந்தர் தேவாரப் பதிகங்களை – ஆங்கில வசன நடையில் வெளியிடும் திருநெல்வேலி செந்தமிழ் சிவநெறிச் செல்வர் திரு. வை. ஆறுமுகம் பிள்ளை அவர்களின் முயற்சி சிறப்பானது. பாராட்டத்தக்கது.

பாடல்கள், அதனையடுத்து எளிய முறையில் சந்தி பிரித்த வடிவம், ஒலிபெயர்ப்பு (Trans Literation), விளக்கம் செய்யும் உரைநடை என இந்நிரலில் பாடல்கள் அழகுற தெளிவு செய்யப்பட்டுள்ளன.

தல வரலாறு, விசேடங்கள், விழாக்கள், கல்வெட்டு முதலான அம்சங்களுடன் சிறப்பாகப் பதிக வரலாறும், பயில்வோர்க்கு உதவியாகத் தரப்பட்டுள்ளன.

'குறிப்புரை' எனும் பகுதி, பாடலின் உட்கூறுகளை விரித்து ஐயம் நீக்குவதாக அமைந்துள்ளது.

எந்நாட்டவர்க்கும் இறைவனை சமயக்குரவர்கள் போற்றிப் பரவிப் பாடிய திருமுறைகளை எந்நாட்டோடும் பயில, பொருளுணர்ந்து நுகர, நுகர்ந்து முருகியல் இன்பமும், பக்திப் பரவசமும் உறச் செய்யும் முயற்சி தொடர்ந்து துலங்கி நிறைவுறவும், அன்பர் மேன்மேலும் நலம் இயைந்து நற்பணிபுரியவும், செந்திற்கந்தன் சேவடிகளைச் சிந்தித்து வாழ்த்துகிறோம்.

"வாழி பெருமான் புகழ்கேட்ட வார்செவிகள்"

சுபம்.

பெறுநர்:

திரு. வை. ஆறுமுகம்

நெல்லை

உ
சிவ சிவ
அழகிய திருச்சிற்றம்பலமுடையார் துணை



திருக்கயிலாய பரம்பரை, செங்கோல் ஆதீனம்
102 வது குருமகா சந்நிதானம்
ஸ்ரீ ல ஸ்ரீ கல்யாண சுந்தர சத்தியஞான பண்டாரசந்நிதி சுவாமிகள்
ஆதீன கர்த்தர் செங்கோல் ஆதீனம்
பெருங்குளம் - 628 752, தூத்துக்குடி மாவட்டம்.
✆ 04630 - 271411

நாள் : 11 . 5 . 2007

உ

ஞானசம்பந்தன் சொன்ன அருந்தமிழ்
மாலைகள்பாடி ஆடக்கெடும் அருவினையே

ஆழ்க தீயதெலாம் அரன்நாமமே சூழ்க
வையகமும் துயர் தீர்கவே.

# அருள்வாழ்த்துரை

புத்த, சமண, சமயங்களை வென்றவர் பரசமயக்கோளரியாகிய ஞானசம்பந்தப் பெருமான் எனதுரை தனதுரையாக என்று அருளிச் செய்த திருப்பாடல்கள், திருக்கடைக்காப்பு என வழங்கப்படுகிறது.

பன்னிருதிருமுறைகளில் மூன்று திருமுறைகளாக சம்பந்தர் பாடல்கள் விளங்குகின்றது. திருநெல்வேலி சமூகச்சமய சங்கத்தலைவர், செந்தமிழ் சிவநெறி, சிவபூஜை செல்வர்.

திரு ஆறுமுகம்பிள்ளையவர்கள்.

நமதுதருமை ஆதீனம் குருமகா சந்நிதானம் அவர்களின் அருளாணையின் வண்ணம், ஆசியும், ஆதரவும் பெற்று திருஞான சம்பந்தப்பெருமான் அருளிச் செய்த முதல் திருமுறையை சமய சங்கத்தாரின் பொறுப்பாளர்கள் ஒத்துழைப்புடன் நூலை வெளியிட விருப்பத்தைப் பெரிதும் போற்றி பாராட்டுகின்றோம்.

சிவபூஜை செல்வர் திரு. ஆறுமுகம்பிள்ளையவர்கள் பெருமுயற்சி, உயர்ச்சிபெற்று திருப்பெருஞ் செல்வராகத் திகழ்ந்து பல்லாண்டு வாழவும், இத்திருமுறையினை ஓதிப் பயன் பெறும் அன்பர்களும் அருள்ஞான இன்பம் பெற்றுய்ய நமது ஆன்மார்த்த மூர்த்தியாகிய அழகிய திருச்சிற்றம்பலமுடையான் திருவடிமலரை சிந்தித்து வாழ்த்துகின்றோம்.

அருள்நெறியே வந்தணைக

நன்மை பெருகுக

சிவ சிவ

கல்யாண சுந்தர சத்திய ஞானதேசிக பண்டாரசந்நிதி

திருக்கயிலாயப் பரம்பரை சைவ ஆதீனம்

ஸ்ரீ அப்பர் சுவாமிகள் திருமடம்

சேலம் மெயின் ரோடு, மூலசமுத்திரம் & அஞ்சல்,
உளுந்தூர்பேட்டை - 606 107.

ஸ்ரீலஸ்ரீ சிவஞான தேசிக சுவாமிகள்
குரு முதல்வர்

தொலைபேசி: 04149-220737

தேதி...............................

"தென்நாடுடைய சிவனே போற்றி
என்னாட்டவருக்கும் இறைவா போற்றி"

என்னும் வாக்கின்படி நம்நாட்டு ஆன்மீக அருளாளர்கள் நால்வர், 63 நாயன்மார்கள் மற்றும் மகான்கள் சித்தர்கள் இயற்றிய நூல் தேவாரம் திருவாசங்கள் அனைத்தையும் திருநெல்வேலி நெல்லையப்பர் திருவருள் கொண்டு ய. ஆறுமுகம் தனது 90 வயதில் தமிழ் நூல்களை ஆங்கிலத்தில் எழுதிச் சிறப்பு பெற்ற நூல்கள் பல. இன்னும் எழுதும், எழுத வேண்டிய நூல்களுக்கும் அடியேன் அருள் ஆசை வழங்கி அண்ணார் அவர்கள் 101 வயது வாழ்ந்து இறை அருளும் குருவின் பரிபூரண அருளும் கிடைக்க யாம் வழிபடும் ஸ்ரீ அப்பர் சுவாமிகள் அருள் என்றும் உரித்தாகுக.

இப்படிக்கு



உ
திருச்சிற்றம்பலம்
**ஸ்ரீ மாணிக்கவாசகர் திருமடாலய "57வது மகா சந்நிதானம்"**
**"வேத சிவகாம சிரோமணி"**
**ஸ்ரீ.ல.ஸ்ரீ. இராஜ. சரவணமாணிக்கவாசக சுவாமிகள்**
கூனம்பட்டி கல்யாணபுரி ஆதீனம்
பல்லகவுண்டம்பாளையம் (P.O), விஜயமங்கலம் – 638 056.
போன் : 04294 – 242056 செல் : 94421–42056



தேதி 16–5–2007



உ

நமது நல்லாசிக்குரிய திருவாளர், சமூக சமயச் சங்கத் தலைவர் அவர்கட்கு சந்நிதானத்திலிருந்து எழுதிய ஆசீர்வாதம். நலம்.

உங்கள் கடிதமும், ஆங்கில வசன நடையோடு கூடிய தமிழ்மறை நூலின் ப்ரதியும் கிடைக்கப்பெற்று மகிழ்ந்தோம். கருணைக்கோர் உறைவிடமாகத் திகழும் பரம்பொருள் உலக ஆன்மாக்கள் வினைகள் அகல அருளாளர்களைத் தோற்றுவித்து அவர்கள் வழி நின்றும், அவர்கள் அருளிய தமிழ் திருமுறைகளை ஓதியும் திருவருளைப் பெற அருளினான். அத்திருமுறைகளை நம் நாட்டில் மட்டுமல்ல, அண்டை நாட்டவர்களும் ஓதி திருவருள் பெற எண்ணிய தருமையாதீனத்தின் உள்ளப்பாங்கே தனிச்சிறப்பு. அச்செம்மொழியை சிரமேற்கொண்டு அரும் பணியாம் இத்திருப்பணியைச் செய்யும் நீங்கள் மிகப்பேறு பெற்றவர்கள். உங்களை உளமாற வாழ்த்துகிறோம். உங்கள் பணி சிறக்க பரம் பொருளை நினைந்து ஆசீர்வதிக்கிறோம்.

நிறைந்த ஆசிகள்.




# SRI RAMAKRISHNA TAPOVANAM

✆: 0431-2614351
Fax: 0431-2614366
email - rktapovanam@eth.net

POST BOX NO. 1.
TIRUPPARAITHURAI - 639115
TIRUCHIRAPPALLI
TAMINADU, S. INDIA

**PRESIDENT**
**SWAMI NITHYANANDA**


Date.......................22.05.2007

திருஞான சம்பந்தர் பெருமான் சிவபெருமானின் குழந்தை. அவருக்கு பால் ஊட்டினது முதல் சம்பவம், காரியம், கருணை. அதன் பிறகு பாத குறடு, குடை, தாளம் எல்லாம் கொடுத்தது ஆண்டவன் தானே. பக்தி பாவனைகளில் வாத்சல்ய பாவம் – குழந்தை – தாய் – என்கிற பாவம் ஒன்று. ஸ்ரீ ராமகிருஷ்ணர் தன்னை காளி தேவியின் – ஜகந்மாதாவின் குழந்தையாக நினைத்துக் கொண்டு அப்படியே வாழ்ந்தார். சம்பந்தரும் அப்படியே வாழ்ந்தார். ஐயா அடியார்களும் கடவுளும் ஒன்று. இவர்கள் அல்லவா நம்மை ஆசீர்வதிக்க வேண்டும். இவர்களின் ஆசிதான் நமக்கு வேண்டும்.

எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான் சென்றே எந்தை நினது அருட்புகழை இயம்பியிடல் வேண்டும் என்று அடியார் பிரார்த்திக்கின்றார். நீங்கள் அந்த காரியத்தை நன்றாக செய்து வருகிறீர்கள். அதுவும் உலக விஷயங்களிலேயே உழலும் மேல் நாட்டவருக்கு கடவுள் செய்திகளை சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள். இதைவிட நல்ல காரியம் வேறு என்ன இருக்கிறது. உங்கள் முதுமையை தெய்வ சிந்தனையிலேயே ஈடுபடுத்திக் கொண்டு பயன்படும்படியான லோக உபகாரமான காரியமும் செய்து கொண்டிருக்கிறீர்கள். கடவுள் உங்களுக்கு அருள் புரியாமல் இனி யாருக்கு அருள் புரியப் போகிறான். தங்களுக்கு அருள் புரிய ஆண்டவனை நானும் பிரார்த்திக்கிறேன்.

அன்பும் நமஸ்காரமும்,
ஸதானந்த.

O/sc.

**A.P.J. Abdul Kalam**

**Rashtrapati Bhava**
**New Delhi - 110004**

திரு. ஆறுமுகம் அவர்களுக்கு,

வணக்கம்

தாங்கள் எழுதிய கடிதமும், அனுப்பிய சமூக சமயச் சங்க வெளியீடான தேவாரத் திருப்பதிகங்கள் - முதல் திருமறை-யின் இரண்டு பிரதிகளும் கிடைக்கப் பெற்றேன் நன்றி.

சமூக சமயச் சங்கம் சார்பாக, திருஞான சம்பந்தரின் தேவாரத்தில் முதல் திருமுறையினை தமிழ் மற்றும் ஆங்கில மொழியில் வெளியிட முனையும் திருப்பணிக்கும், நூல்களை வெளியீடு செய்தபின், அவற்றைத் திருமடங்கள், திருக்கோயில்கள், புரவலர்கள், சான்றோர்கள், நூலகங்கள், கல்வி நிலையங்கள் ஆகியவற்றுக்கு இலவசமாக வழங்கவிருப்பது குறித்த நல்ல உள்ளங்களுக்கும் என் வாழ்த்துக்கள்.

அன்புடன்

(ஆ.ப.ஜெ. அப்துல்கலாம்)

**Shri V. Arumugam**
**President - Socio Religious Guild**
**21, Appar Illam, Tirunelveli**
**Maharaja Nagar, Tirunelveli**
**Tamil Nadu - 627 011.**

Dr. S. Sivayoham, MBBS. DTPH. DIH. MFPH. MD
Consultant in Public Health Medicine
Dr. Mrs. Indra Sivayoham FRCS (Eng). FRCO phth.
Consultant Ophthalmic Surgeon

"Shakthi Vihar"
10, Dell Road,
Stoneleigh, Epsom, Surrey, KT 17 2ND
U.K

Tuesday, 24 June 2008

---

உ

நீறேறு செஞ்சடை மேல் நிலாவெண் திங்கள் நீங்காமை வைத்துகந்த நீதியான்தன் பொன்னடிகளை சதா சிந்தையில் வருடி உகக்கும் சைவப் பெரியார் திருவாளர் ஆறுமுகம் ஐயா அவர்களுக்குப் பணிவுடன் சிவயோகம் தம்பதிகள், எம்பெருமான் கிருபையால் எழுதிக்கொள்வது,

எம்தம்மை பொருட்படுத்தி, தொல்லாயிரம் தொலையிலுள்ள புண்ணிய பூமியாம் தாய்நாட்டிலிருந்து, கருணை கலந்த தாங்கள், குரலைக் கேட்டு யாமிருவரும் மிகவும் உளம் பூரித்தோம். அண்ட சராசரங்கள் யாவற்றையும் தன் கோமளப் புன்னகையால் வசீகரித்து பராபரிக்கும் ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரியின் ஆலய சன்னதியில் முதல்முதலாக ஆன்மீகப் பெரியாராகிய தங்களைச் சந்திக்கும் வாய்ப்பை ஏற்படுத்தியதும் அம்பிகையின் திருவிளையாடலே.

அவ்வேளை தாங்கள் அம்பிகையைப்" பூரணி புராதனி சுமங்கலை சுதந்தரி" என்று பதிகம் பாடியது, பசுமரத்து ஆணிபோல் நல்ல ஞாபகம் இருக்கின்றது. அப்பதிகத்தில் எம் குடும்பத்தினர் இருவரின் நாமங்கள் வரும் காரணத்தால், பல காலமாக எம்மை ஈர்த்திருந்ததுக்கு ஒரு காரணம் போலும்.

நாரணி எம் புத்திரியுடைய நாமம்

"வரைராஜனுக்கு இரு கண்மணியாய் "என் தாயாருடைய நாமம்.

தாங்கள் சைவ உலகத்தின் மேம்பாட்டுக்காக ஆற்றிவரும் மகத்தான சேவையை சொற்களால் வருணிக்க இயலாது. இறையருளால் எம் இளம் பராயத்தில் கைத்துணையாய் எம்பெற்றார் விருதுநகரிலிருந்து 1954ம் ஆண்டு திரும்பியபொழுது என் மூத்த சகோதரிக்கும் எனக்கும் வழங்கியதும், இன்றும் பூஜை அறையில் வைத்து உபயோகித்து வருவதும், உள்ளங்கையில் அடங்கும் எடையுள்ளதும், தங்கள் திருநெல்வேலியின் கிழக்கு இரத வீதியில் காரியாலயம் அமைந்துள்ளதுமாகிய, தென் இந்திய சைவ சித்தாந்த நூல் வெளியீட்டுக் கழகத்தாருடைய, படைப்பும், சென்னை அப்பர் அச்சகத்தில் அச்சிடப்பட்ட படைப்பே.

அப்பர் இல்லம் என்ற நாமம் தாங்கிய வசிப்பிடத்தைக் கொண்ட தாங்களே இதன் பிரதம கர்த்தா என நாம் நம்புகிறோம். என்னே எம்பெருமான் திருவிளையாடல். சில ஆண்டுகளுக்கு முன், 2001, நாம் மதுரை வந்தபொழுது ஒரு தமிழகராதி வேண்டிக் கொண்டோம். அதன் படைப்பும், தென் இந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தாரின், கழகப் புலவர் குழுவினர்களால், சென்னை அப்பர் அச்சகத்தில், அச்சேறி வெளிவந்துள்ளது என அவதானித்தோம்.

எம்பெருமான் தூண்டுதலின் விளைவாக தாங்கள் தமிழ் ஆங்கில விரிவுரைகளுடன் படைத்து நிறைவேறிய திருஞானசம்பந்த சுவாமிகளின் திருமுறை ஆக்கத்தின் ஒரு தொகைப்பு மட்டும் எம்பால் அனுப்பி வைத்தருளுமாறு வேண்டுகிறோம்.

"தேனோடு கொன்றை சடைக்கணிந்த சிவபெருமான் தங்கள் ஊனாடி நாடி வந்து உள்புகுந்து தங்களை உலகர் முன்னே (திருவாசகம்) அரியாசனத்தில் ஏற்றிப் பல்லாண்டு, பல்லாண்டு காலம் சுக பலத்துடன் வாழ வாழ்த்தி விடைபெறுகிறோம்.

இத்துடன் தாங்கள் விரும்பி வரவழைத்த ஏவலின் பிரகாரம் எம் புகைப்படம் இணைத்துள்ளோம்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# பன்னிரு திருமுறை ஆய்வு மையம்

கற்பகம் கலை அறிவியல் கல்லூரி
ஈச்சநாரி, கோயமுத்தூர் - 641 021.

24-05-2007

"ஞாலம் தன் புகழே மிக வேண்டும்" என்று பலரும் வாழும் இந்த இருபத்தொன்றாம் நூற்றாண்டுத் துவக்கத்தில் "ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென் ஆலவாயில் உறையும் எம் ஆதியே" என்ற திருஞானசம்பந்தரின் திருவாக்குக்கேற்பவும்

"எந்நிலையில் நின்றாலும் எக்கோலம் கொண்டாலும் மன்னியசீர்ச் சங்கரன் தாள் மறவாமை", "யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி மாதொர்பாகன் அங்கே வருவார்", "பூதம் ஐந்தும் நிலையிற் கலங்கினும் மாதொர்பாகன் மலர்த்தாள் மறப்பிலார்" என்ற கொள்கைகளை கடைபிடித்தும் பெருவாழ்வு வாழ்ந்து வருபவர் நெல்லை நேயர் வை.ஆறுமுகம் அவர்கள், "என்னை நன்றாக இறைவன் படைத்தனன்" என்றபடி தன்னைத் தானுணர்ந்து தான் பெற்ற பேறுகளை அனைவரும் பெறவேண்டும் என்ற உயரிய நோக்கில் செம்மையாகத் திருமுறைத் திருப்பணி செய்து வருபவர்தான் இந்நூலின் ஆசிரியர். முறையாகத் தீக்சை பெற்று, சிவபூஜை செய்து வந்த இவர் தற்சமயம் திருமுறைகளைப் படிப்பதற்கும், எழுதுவதற்கும், ஆங்கிலத்தில் மொழிபெயர்ப்பு செய்து இவ்வசன நூலை வெளியிடுவதற்கும் தினமும் 16 மணி நேரம் போதாமையால் சிவபூசையையே நிறுத்திவிட்டு மானசீக பூசையாக இந்த நூலை அவர் வெளியிடுவதாகச் சொன்ன போது என் கண்கள் கலங்கின. நமது மைய நிகழ்ச்சிகளுக்கு வரும்பொழுதெல்லாம் இந்த நூலைப்பற்றியே எங்களுடன் கருத்துப் பரிமாற்றங்கள் செய்து கொண்டிருப்பார். ஆயிரம் பிறை கண்ட அன்னாரையும், அவரது சைவ சமய நூலறிவின் ஆழத்தையும் கண்டு நான் பலகாலம் வியந்ததுண்டு. பல்லூழிக்காலம் பயின்று அரனை அர்ச்சித்ததன் பயனாக நல்லறிவு சற்றே நல்கப்பெற்றுப் பல காலம் முயன்று மிகப்பெரிய அளவில் இதுவரை யாரும் செய்யாத அளவு திருவாசகத்துக்கு ஆங்கில வசனநூல் வெளியிட்டுப்பின், "தளர்ந்தேன் எம்பிரான் என்னைத் தாங்கிக் கொள்ளே" என்று இறைவனிடம் சொல்லாமல் இத்தேவார ஆங்கில வசனநூலை வெளியிட்டு மகிழ்கிறார் நூலாசிரியர். இந்நூலில் ஒரு பிழைகூட இருக்கக்கூடாது என்றெண்ணி கற்றவர்களை நாடி உற்றவற்றை வாங்கிச் சேகரித்துப் பெருநூலாக இந்நூலைத் தயாரித்துள்ளார். தோடுடைய செவியனில் பிரம்மபுரத்துக் காட்சிகளைத் திருஞானசம்பந்தர் தமது தகப்பனார் சிவபாதவிருதயரிடம் கடவுளின் அடையாளங்களாகக் கூறும் வசனக்காட்சிகள் மிக அற்புதமாகப் படைக்கப்பட்டுள்ளன. இவர் அகத்தில் கண்கொண்டு இறைவனைப் பார்த்ததற்கு இவையே ஆதாரங்கள்.

வேதங்களாட, மிக ஆகமங்களாட, கீதங்களாடக் கிளரண்டம் ஏழாட, பூதங்களாட, புவனம் முழுதாட நாதம் கொண்டாடும் அந்த ஞானானந்த மூர்த்தியின் திருவருளால் நாமெல்லாம் கிடைத்தற்கரிய மானுடப்பிறவியைப் பெற்றுச் சைவப்பெருவாழ்வு வாழ்ந்து சிவத்தை அனுபவித்து வருகிறோம். முறையான கல்வி பெற்றுப் புறப்பூசனைகளையே அதிகமாகச் செய்துவரும் நம்மவர்கள் அகப்பூசனை வழிநின்று அதன் வழி ஞானம் பெற்று - ஞானம் ஈசன்பால் அன்பே என்ற பாசுரப்படி அன்பு - அருளாய் மலர்ந்து வீடுபேறு பெற வழிகாட்டிகளாக உள்ளவைகள் இம்மாதிரி நூல்களே! இவ்வளவு சிறப்பான நூலை வெளியிட்டுள்ள சைவத் திரு வை.ஆறுமுகம் அவர்கள் இம்மை மறுமை இன்பங்களைப் பெறவேண்டும்.

இட்டஏட்டினில் எழுதிய செந்தமிழ்ப்பதிகம்
மட்டுலாங்குழல் வனமுலைமலை மகள்பாகத்து
அட்டமூர்த்தியைப் பொருளெனக் கொண்டிருந்தமையால்தான்
பட்டதீயிடை பசுமையாயிருந்தது.

அதுபோல செய்கின்ற செயல் எதுவானாலும் நமது சிவபரம் பொருளையே மெய்ப்பொருள் எனத் துணிந்து செயல்படும்போது "அவர்" அருள் நமக்குக் கிடைக்கும். அந்தச் செயல் 90ஆவது அகவையில் தொடங்கினாலும் அதுமுடியும் வரை பயணநீடிப்புச்சீட்டு வழங்கப்படும் என்ற செய்தி போப்பையர் திருவாசக மொழிபெயர்ப்பு எழுதும்போதே சொல்லப்பட்டு வந்தது. அந்த வகையில் "வேண்டுவார்க்கு வேண்டுவதே ஈவான் கண்டாய்" என்றபடி நமது நூலாசிரியர் விருப்பமாக சதாபிடேகம் கண்ட அவர் பூர்ணாபிடேகம் கண்டு மீதமுள்ள திருமுறைகளுக்கு இப்பணியைச் செய்யவேண்டும்; அதற்கு எம்வழிபடு கடவுள் பற்றிடங்கொண்ட புராதனன் திருவருள் புரிய வேண்டுமென வேண்டி அமைகிறேன்.

நன்றி. வணக்கம்.

அன்பன்

டாக்டர். இராச. வசந்தகுமார்.
24-05-2007.



# INTERNATIONAL SCHOOL OF DRAVIDIAN LINGUISTICS

**V. I. Subramoniam** M.A., Ph.D., (Indiana, USA)
Hon. D. Litt.,(Jaffna, Sri Lanka), Hon. D. Litt.,(Tamil University)
**Former Vice-Chancellor**, Tamil University, Tanjavur, Tamil Nadu
**Former Pro-Chancellor**, Dravidian University, Kuppam - Andhra Pradesh
**HON. ~~DIRECTOR~~**

Date :

Ref. No. :

ஐயா,

தாங்கள் அனுப்பிய 63 பக்க இதழ் கிடைத்தது. மிக்க நன்றி.

ஆங்கில விளக்கத்தைத் தொடர்ந்து செய்க.

நாளாகும். ஆனால் செய்ய வேண்டிய பணி.

இப்படிக்கு,
அன்பன்
**V.I. Subramoniam**

I S D L Complex, St. Xavier's College P.O. Thiruvananthapuram - 695 586 KERALA - INDIA
Tel. Off. : 0471 2704953, 2704951 E-mail: dravling@md5.vsnl.net.in Website : www.ijdl.org

மனநலம் மன்உயிர்க்கு ஆக்கம் இனநலம்
எல்லாப் புகழும் தரும். குறள் – 457.

முனைவர் **ச.வே. சுப்பிரமணியன்**
மதிப்புறு இயக்குனர்
தொ.பே. (04633) வீடு: 270239

உலகத் தமிழ்க் கல்வி இயக்கம்,
தமிழூர்
அடைக்கலப்பட்டணம் அஞ்சல்–627 808.
திருநெல்வேலி மாவட்டம்.

---

பெறுநர்,

வை. ஆறுமுகம் அவர்கள்
தலைவர்
சமூகச் சமயச் சங்கம்,
திருநெல்வேலி.

பேரன்புடையீர்,

அன்பான வணக்கம்.

தாங்கள் அன்புடன் அனுப்பிய தேவாரத் திருப்பதிகங்கள் முதல் திருமுறையின் மாதிரி நூல் கிடைத்துப் பெரிதும் மகிழ்ந்தேன். நல்ல முறையில் தேவையான விளக்கங்களுடன் புரியும் ஆங்கில மொழி பெயர்ப்புடன் அமைந்துள்ளது. பாராட்டி மகிழ்கின்றேன்.

ஏற்கனவே தாங்கள் முன்பு வெளியிட்டுள்ள திருவாசகம் – மொழிபெயர்ப்பு, விளக்கங்களைப் படித்து மகிழ்ந்து கொண்டிருக்கிறேன்.

பன்னிரு திருமுறை முழுவதும் வெளிவரும்வரை தாங்கள் இறையருளால் வாழ்ந்து அதை நிறைவு செய்ய நீண்ட ஆயுளைத் தருமாறு இறைவனிடம் வேண்டுகின்றேன். மிகவும் பயனுடைய பணி. மிகப்பெரிய குறிக்கோள். வெற்றிபெற வாழ்த்தி மகிழ்கின்றேன்.

அன்பன்
ச.வே. சுப்பிரமணியன்

# ANNA UNIVERSITY TIRUNELVELI

**GOVERNMENT COLLEGE OF ENGINEERING CAMPUS**
**TIRUNELVELI - 627 007.**

**Prof. Dr. S. KALIAPPAN,** B.E., M.Tech., Ph.D., (Illinois) — **Phone : 0462-2554255**
**Vice - Chancellor** — **Fax : 0462-2552877**

நாள்: 06.06.08

பெருமைக்குரிய திரு. ஆறுமுகம் அவர்களுக்கு

வணக்கம்

தங்களை சந்தித்து அளவளாவியபோது காலக்கோடுகளின் வரைவுகள் உருவத்தில் வெளிப்பட்டதேயன்றி, புத்தொளி மிக்க விவேக இள உள்ளமும் மதி நுட்பமும் சமுதாய சிந்தனை ஓட்டமும் கண்டு மட்டில்லா மகிழ்ச்சியுற்றேன்.

இன்றைய இளவல்களுக்கு தங்களைப் போன்றோரின் வழிகாட்டுதலும், உறுதுணையும் நம் கலாச்சாரம் மற்றும் சமயநெறிமுறை விளக்கங்களும் மிக இன்றியமையாததாகும்.

தங்களின் அயரா உழைப்பாலும், சமூக சமய சங்கத்தின் உறுதுணையாலும் தமிழ் மற்றும் ஆங்கில மொழியில் வெளிவர இருக்கும் திருஞானசம்பந்தரின் தேவார திருமுறை மூலம் இவ்வுலகம் விழிப்புற என் பிரார்த்தனைகளும், வாழ்த்துகளும்.

அன்புடன்

(சு. காளியப்பன்)

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
குருபாதம்

திருஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்த

# தேவாரம்

திருமுறைகள் 1, 2 மற்றும் 3

## பதிப்புரை

தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி

திருக்கயிலாய பரம்பரைத் தருமை ஆதீனம் 26ஆவது குரு மகாசந்நிதானம்
**ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகளின்**
ஆதரவோடும் பரிபூரண ஆசிகளோடும் இந்நூல் வெளியிடப் பெறுகிறது.

பேரன்புடையீர்!

வணக்கம். உலகத்தில் உள்ள பல்வேறு சமயங்களில் தொன்மையானதும் மிகச் சிறந்த தோத்திர, சாத்திர, இலக்கண நூல்களைத் தன்னகத்தே கொண்டதுமான சமயம் சைவ சமயம் என்பது உலகவர் பலரும் அறிந்த உண்மை. தொல்பொருள் ஆராய்ச்சிப் பேரறிஞர் சர். ஜான் மார்ஷல் அவர்கள் "மொகஞ்சதாரோ, ஹாரப்பா ஆகிய சிந்து சமவெளி அகழ்வு ஆய்வுகளில் இருந்து, உலகின் மிகத் தொன்மையான சமயம், 'சைவ சமயம்' எனப் புலனாகிறது" என்று சைவத்தின் தொன்மையை நிரூபிக்கின்றார்.

1839ஆம் ஆண்டு இங்கிலாந்தில் இருந்து இந்தியாவில் கிறித்துவ சமயத்தைப் பரப்புவதற்காக வந்த டாக்டர் ஜி.யு. போப் என்ற கிறித்துவப் பாதிரியார் திராவிட மொழிகளை ஐயம் திரிபு அறக் கற்றுத் தேர்ந்த நிபுணர். அவர் ஒழுக்க நூலாகிய திருக்குறளையும், தோத்திர நூலாகிய திருவாசகத்தையும், சாத்திர நூலாகிய திருவருட் பயனையும் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தவர். அவர் சைவ இலக்கியங்களின் தொன்மையையும், கருத்தாழத்தையும் வியந்து பாராட்டிய புகழுரைகள் பல உள.

உலகத்தில் உள்ள எல்லாச் சமயங்களுக்கும் அவை எந்தெந்தக் காலத்தில் யார் யாரால் தோற்றுவிக்கப்பட்டன என்னும் வரலாறு தெரிய வந்துள்ளது. ஆனால் சைவ சமயம் எந்தக் காலத்தில் யாரால் உருவாக்கப்பட்டது என்பதை அறிய முடியவில்லை. சைவ சமயம் வரலாற்றுக்

காலத்திற்கும் மிக முற்பட்டது ஆகும். இச்சமய நூல்களும், இலக்கியங்களும், மிகத் தொன்மையானதும், செம்மொழியெனப் பாராட்டப்படுவதும், இன்று வரை தனித்தன்மையோடு இயங்கி வருவதுமான தமிழ் மொழியில் ஆக்கப்பட்டவையும் ஆகும். தமிழ்த் தாயின் தொன்மையைக் கவி சுப்பிரமணிய பாரதியார் பின்வருமாறு பாடுகின்றார்.

"தொன்று நிகழ்ந்தது அனைத்தும் உணர்ந்திடும்
சூழ்கலை வாணர்களும் – இவள் என்று
பிறந்தவள் என்று உணராத
இயல்பினளாம் எங்கள் தாய்"

"She (Tamil) is our Mother Supreme
Whose date of birth is not known
Even to those learned philosophers
Who knew all that occurred in antiquity"

Saivism is at once the most ancient and the most modern of all schools of theology - ancient, because of its beginnings in the hoary past, and modern, because of the very rational dispensation inherent therein.

தேனினும் இனிய தமிழில் உள்ள தலைசிறந்த இப்படைப்புகள், நம் முன்னோர்கள் நமக்கு விட்டுச் சென்ற அரும்பெரும் சொத்தாகும். பிற நாட்டினரின் அரசியல் ஆதிக்கத்தினாலும், அவர்களின் விஞ்ஞான வளர்ச்சியினாலும், அன்னாரின் பொருளாதார வளத்தினாலும், காலப்போக்கின் காரணமாகவும் நமது சொத்தாகிய இலக்கியங்கள் பல அழிந்து விட்டன. இத்தாக்குதலுக்குத் தப்பி எஞ்சியுள்ள இலக்கியப் படைப்புகள் பல உள. இந்த எஞ்சியுள்ள, ஈடு இணையற்ற, காலத்தால் அழியாப் படைப்புகளையாவது நமது வருங்கால சந்ததியினருக்கும், உலக மக்களுக்கும் எளிதில் பயனளிக்கும் வகையில் கொடுக்க வேண்டும் என்ற உயரிய நோக்கத்தோடு பாடுபட்டு வருவது எங்கள் **சமூக சமயச் சங்கம்.** அதன் முதல் பணியாக, சைவ சமயத் தோத்திர நூலாகிய **திருவாசகத்தை** விரிவான முறையில் இருமொழி நூலாக (Bi-lingual) 2004–ல் வெளியிட்டோம். **ஏனைய பதினோரு திருமுறைகளையும், திருவாசகம் பதிப்பித்த அதே பாணியில் (Bi-lingual Style) வெளியிட வேண்டும் என்று தருமைக் குருமகா சந்நிதானம் 26ஆவது பட்டம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அடியேனுக்கு ஆணையிட்டு அருளினார்கள்.** இப்பணி மிகப்பெரிய ஞான வேள்வி ஆகும். திருமடத்தார் செய்ய வேண்டிய பெரிய பணியாகும். சிறியேன் தகுதி உடையேன் அல்லேன்; வயதும் முதிர்ந்துவிட்டது,

எனப்பலவாறு வேண்டியும் 'உன்னால்தான் முடியும்; செய்வாயாக' என அறுதியிட்டு அருளி ஆசீர்வதித்தார்கள்.

"செம்மலர் நோன்தாள் சேரல்ஒட்டா
அம்மலங் கழீஇ அன்பரொடுமரீஇ
மால்அற நேய(ம்) மலிந்தவர்வேட மு(ம்)
ஆலயந்தானும் அரன் எனத் தொழுமே"

என்ற சிவஞான போத இறுதிச் சூத்திரத்தை உளங்கொண்டு குருமகா சந்நிதானத்தின் ஆணையை, கல்லால மரநிழல் அமர்ந்த குருவின் ஆணையாகவே கருதி ஏற்றுக் கொண்டு அவர்கள் திருவடிகளை வணங்கித் திருவருளின் துணை கொண்டு இந்த ஞான வேள்வியைச் செய்ய முற்பட்டேன்.

'திருமுறை' என்ற சொல்லில் வரும் 'முறை' என்பதற்கு 'நூல்' என்று பொருள் தந்துள்ளது கந்த புராணம் அவையடக்கம் செய்யுள்–1. 'திரு' என்பது சிவம்–நிலையான இன்பம். 'திருவான தேவற்கே சென்றூதாய் கோத்தும்பி (திருக்கோத்தும்பி 8–10–14)' என்பது மாணிக்கவாசகர் வாக்கு. அவர் சிவத்தைத் திரு என்றே குறிப்பிடுகிறார். எனவே, 'திருமுறை' என்பதற்கு சிவத்தை – நிலையாய இன்பத்தை – அடைவதற்கு வழிகாட்டும் நூல் என்று பொருள் கொள்ளலாம். தோத்திரங்களால் ஆகிய திருமுறைகள், ஆன்மாக்களாகிய நமக்கு இறைவன் செய்த பரம உபகாரங்களைப் பலகாலும் சொல்லி அவ்விறைவனிடத்துக் கருத்து ஊன்றச் செய்து மனத்தைக் கனிய வைக்கும் கருவிகள் ஆகும்; மனித மனத்தைத் தெய்வ மனமாக்கும் மருந்து; கவலை மனத்தைக் களிப்பு மனமாக்கும் குளிகை.

மூவர் முதலிகளாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய இவர்கள் அருளிச் செய்த மொத்தப் பாக்கள் 1,03,000 ஆகும். இதில் திருஞானசம்பந்தர் பாடிய பாக்கள் 16000 ஆகும். இவைகளில் பெரும்பகுதி கால ஓட்டத்தால் செல்லரித்துப் போயின. மூவர் பாடல்களிலும் செல்லரிப்புக்குத் தப்பியவை 8250 பாக்களே ஆகும். இவற்றில் திருஞானசம்பந்தர் பாடிய 16000 பாக்களில் நமக்குக் கிடைத்தவை 4158 பாக்கள் ஆகும். இந்த 4158 பாக்களே பன்னிரு திருமுறைகளில் முதல் மூன்று திருமுறைகளாக வகுக்கப்பட்டுள்ளன. முதல் திருமுறையில் 1469 பாக்களும், இரண்டாம் திருமுறையில் 1331 பாக்களும், மூன்றாம் திருமுறையில் 1358 பாக்களும் உள்ளன. இம்மூன்று திருமுறைகளையும் ஒரு திருமுறைக்கு ஒரு நூல் என, மூன்று நூல்களாக வெளியிடத் திட்டமிட்டு 06.06.2007ல் இந்த முதல் திருமுறையை பூஜை செய்யப்பட்டது.

திருஞானசம்பந்தப் பெருமான் பாடிய பாக்கள் அனைத்தும் பண்ணோடு அமைந்தன. திருஞானசம்பந்தர் காலத்திற்கு முன்பே பண்ணோடு திருப்பதிகம் பாடி நெறிகாட்டியவர் காரைக்கால் அம்மையார் என்ற புனிதவதியார். அவர் பாடி அருளிய நட்டபாடைப் பண்ணையே, திருஞான சம்பந்தரும் முதல் பண்ணாக அருளிச் செய்தார். இது பற்றியே அம்மையார் அருளிய திருப்பதிகம் 'மூத்த திருப்பதிகம்' என்ற பெயரைப் பெறுவதாயிற்று.

திருநாரையூரில் உள்ள பொள்ளாப் பிள்ளையாரைப் பூசனை செய்து வந்த சிவாச்சாரியார் நம்பி ஆண்டார் நம்பிகளே முதல் 11 திருமுறைகளைத் தொகுத்தவர் ஆவார். திருமுறை கண்ட சோழன் முதலாம் ஆதித்தனா அல்லது முதலாம் இராஜ ராஜனா என்பதில் கருத்து வேறுபாடுகள் உண்டு. அதை ஆராய்ச்சி நூல்களில் கண்டு கொள்க. திருமுறைகளில் இருந்து தேவாரத்திற்கு வருவோம். தேவாரம் என்ற சொல்லுக்குத் 'தெய்வத்தைப் போற்றும் இசைப்பாடல்கள்' என்பது சுருக்கமான பொருள் ஆகும்.

திருஞான சம்பந்தர் அருளியவற்றைத் 'திருக்கடைக்காப்பு' என்றும், திருநாவுக்கரசர் அருளியவற்றைத் 'தேவாரம்' என்றும், சுந்தரர் அருளியவற்றைத் 'திருப்பாட்டு' என்றும் சொல்லுவது மரபு. ஆயினும் அனைத்தையும் இன்று நாம் தேவாரம் என்ற சொல்லாலேயே வழங்கி வருகிறோம் (ஆரம் – மலர் மாலை. மாலைகளாகிய இசைப்பாக்கள்). இம்மூன்றையும் அடங்கன்முறை என்றும் கூறலாம்.

திருஞானசம்பந்தர் காலத்தில் (கி.பி.638) அவருடனே இருந்து அவர் பாடல்களையெல்லாம் ஓலைச் சுவடியில் முதல் முதலில் எழுதியவர் சம்பந்தசரணாலயர் என்பவர் ஆவார். பின்னர் முதலாம் குலோத்துங்கனின் (கி.பி. 1070 முதல் கி.பி. 1120 முடிய) படைத்தலைவர்களுள் ஒருவனான மணவிற்கூத்தன் காளிங்கராயன் என்பவன் மூவர் தேவாரத் திருப்பதிகங்களைச் செப்பேடுகளில் எழுதுவித்துத், திருக்கோவிலிற் சேமமுற வைத்தான் என்று தில்லைக் கோயில் கல்வெட்டுக் கூறுகிறது. திருவாரூரிலும் திருமுறைகள் செப்பேடு செய்திருந்தமையை, அச்செப்பேட்டில் இருந்து படி எடுக்கப் பெற்ற தருமை ஆதீன ஓலைச்சுவடியால் அறிகிறோம். திருமயிலை சுப்புராய ஞானியார் அவர்கள் சபாபதி முதலியார் உதவியுடன் 1864–1866–ல் மூவர் தேவாரப் பதிகங்களைப் பண்முறையில் தனித் தனி மூன்று நூல்களாக அச்சேற்றி முதன் முதலாகப் புத்தக வடிவில் தமிழ் உலகிற்கு வழங்கினார்கள். 'ஞானசம்பந்தம் பிள்ளை' என்ற தீட்சா நாமம் பெற்ற மதுரை இராமசாமிப் பிள்ளை அவர்கள் கி.பி.1881–ல் தேவாரப் பதிகங்கள் அனைத்தையும் 'தல' வரிசையில்

முதன்முதல் பதிப்பித்து வழங்கினார்கள். 1953–ல் மயிலைக்கிழார் இளமுருகனார் என்ற ம. பாலசுப்பிரமணிய முதலியார் B.A., B.L. அவர்கள் 'தேவாரம் அடங்கன்முறை' என்ற தலைப்போடு மூவர் தேவாரப் பதிகங்கள் அனைத்தையும் மிகச் சிறப்பாகப் பண்வரிசையில் பதிப்பித்தார்கள். அதில் 250 பக்கங்களுக்கு மேலாக அரும்பொருள் அகராதியும், தலச்சிறப்பு அகராதியும், மூவர் வாழ்க்கை வரலாறும் இடம் பெற்றுள்ளன.

கல்விக்கடல் பண்டித வித்வான் உயர்சைவத்திரு தி.வே கோபாலய்யர் அவர்கள் வெளியிட்டுள்ள ‘தேவாரம்’ என்ற நூலில் (Published by French Institute of Indology, Pondicherry in 1984) குறிப்பிடப்பட்டுள்ள விபரம் வருமாறு “இளமுருகனார் பதிப்பித்த பண்முறை அடங்கன்முறை தேவாரம் மிகச் சிறந்த பல செய்திகளுடன் ஒரே தொகுப்பாக மிகக் குறைந்த விலையில் கி.பி. 1953–இல் வெளிவந்தது (பக்கம் 1328). இளமுருகனார் பதிப்பை அடிப்படையாகக் கொண்டுள்ள இப்பதிப்பில், அவர் கொண்டுள்ள பாடங்களோடு வேறுபட்டுக் கொள்ளப்பட்டுள்ள பாடங்களையும் அடுத்துக் குறிப்பிட்டுள்ளோம். இப்பாடங்கள் எதுகை, மோனை ஆகிய தொடை நயங்கள் பற்றியும், யாப்பு அமைதி, செய்யுள் ஓசை இன்பம், புணர்ச்சி அமைதி, சொற்றொடர் அமைதி, செய்யுள் முடிவு அமைதி முதலியன பற்றியும், பொருட்சிறப்புப்பற்றியும் கொள்ளப்பட்டுள்ளன. இவற்றுள் குறில் நெடில் வேறுபாடு (ஒர் – ஓர், ஒடு – ஓடு) தொகுத்தல் விகாரத்தால் வேறுபாடு (வலவரே – வல்லவரே), மெய், உயிர் மெய், அகர வேறுபாடு (சில் – சில) – போன்றவற்றைப் பெரும்பாலும் விடுத்துக் கொள்ளப்பட்ட வேறுபட்ட பாடங்கள் பலவற்றிற்கும் அவை கொள்ளப்பட்ட காரணங்களைக் குறிப்பிட்டுள்ளோம். காரணங்கள் உளவேனும், விரிவு அஞ்சி எல்லாப் பாடவேறுபாடுகளுக்கும் காரணங்கள் குறிப்பிடப்படவில்லை. அவற்றை நோக்குவார் எளிதில் அறிந்து கொள்ளுதல் கூடும்.” இருப்பினும் இளமுருகனார் பதிப்பின் ஏழு திருமுறைகளிலும் உள்ள சொற்களில் சுமார் 650 சொற்களுக்கு மாறுபட்ட சொற்களைப் பல்வேறு சுவடிகளிலிருந்தும் பொருளமைதி கருதியும் தான் ஊகித்தும் தமது தேவாரப் பதிப்பில் திரு. தி. வே. கோபாலய்யர் அவர்கள் ஆண்டுள்ளார்கள் என்பதையும் தெரியப்படுத்திக் கொள்ளுகிறோம்.

இன்னோரன்ன பல அரிய கருத்துக்களோடு ஞானக் கருவூலமாக விளங்கும் திருமுறைகளைத் **தருமைக் குருமகா சந்நிதானம் 25ஆவது பட்டம் ஸ்ரீலஸ்ரீ கயிலைக் குருமணி சுப்பிரமணிய தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் 1953ஆம் ஆண்டு** குறிப்புரை முதலிய விளக்கங்களோடும் தலங்களின் வரலாற்றுக் குறிப்புகளோடும் சேர்த்துப் பதிப்பித்தார்கள். அவர்களுடைய அருளாட்சிக் காலத்தில் 9 திருமுறைகள் வெளிவந்தன.

**இப்போது, தருமைக் குருமகா சந்நிதானமாக எழுந்தருளியிருக்கும் 26ஆவது பட்டம் ஸ்ரீலஸ்ரீ சண்முக தேசிக ஞானசம்பந்த பரமாசாரிய சுவாமிகள் அவர்கள் பன்னிரு திருமுறைகளையும் ஒரு சேர ஒளியச்சில் பொழிப்புரை, குறிப்புரை, தலங்களின் வரலாற்றுக் குறிப்புகள் மற்றும் பல அரிய குறிப்புகள் ஆகியவற்றோடு மிக விரிவான முறையில் 16 நூல்களாக (ஒவ்வொரு நூலும் 1200 முதல் 1400 பக்கங்களைக் கொண்டது) பதிப்பித்து வெளியிட்டு உள்ளார்கள்.**

திருப்பனந்தாள் ஸ்ரீ காசித் திருமடத்தார் பன்னிரு திருமுறைப் பதிப்பு நிதி நிறுவி அவ்வப்போது பன்னிரு திருமுறைகளையும் பல்லாண்டு காலமாகப் பதிப்பித்து வருகிறார்கள். தேவாரத் திருமுறைகளைப் பண் வரிசையிலும் வெளியிட்டு வருகிறார்கள். தலவரிசையிலும் வெளியிட்டு வருகிறார்கள். அண்மையில் சென்னையில் உள்ள வர்த்தமானன் பதிப்பகத்தார் பன்னிரு திருமுறைகளையும் தெளிவுரை, சிறப்புரை, குறிப்புரை, தல விளக்கம் மற்றும் பல புள்ளி விவரங்களோடு பதிப்பித்து வெளியிட்டுள்ளார்கள். இவை நீங்கலாகப் பல்வேறு அமைப்புகள், பண் வரிசை, தல வரிசை, வரலாற்று வரிசை என்ற அமைப்பில் முழுமையாகவும், திரட்டாகவும் வெளியிட்டு வருகிறார்கள்.

தேவாரம் அல்லது அடங்கன்முறை என்று சொல்லப்படும் முதல் ஏழு திருமுறைகளும் ஒன்பதாம் நூற்றாண்டு முற்பகுதி முடிய திருஞான சம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரமூர்த்தி ஆகிய மூவராலும் பாடப்பட்டவை. அவர்கள் மூவரும் பாடியது 1,03,000 பாக்கள் ஆகும். ஆனால் இன்று நமக்குக் கிடைத்தவை 8250 பாக்களே ஆகும். இந்த 8250 பாடல்களில் இதுவரை ஒருசில ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. வாசகர்கள் அதுபற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற நோக்கத்தோடு தெரிந்தவரை அதன் விபரங்களைக் கீழே கொடுத்துள்ளோம்.

1. தேவாரத்திலிருந்து 79 பாடல்களும், திருவாசகத்திலிருந்து 58 பாடல்களும் தேர்ந்தெடுக்கப்பட்டு "Hymns of the Tamil Saivite Saints" என்ற புத்தகத்திலிருந்து F. Kingsbary and G.P. Philips ஆகியோரால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன.
2. தென் ஆற்காட்டில் 32 சைவத் திருக்கோயில்கள் உள்ளன. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர் ஆகிய மூன்று நாயன்மார்களும் இந்த நாட்டில்உள்ள கோயில்களுக்குச் சென்று 92 பதிகங்கள் (1000 பாடல்கள்) பாடி உள்ளனர். இப்பாடல்களை "South Arcot in Sacred Song – தென் ஆற்காட்டுத் திருப்பதிகங்கள்" என்ற நூலில் பதித்துள்ளார்கள். இந்த நூலில் 286 பாட்டுக்கள் மட்டும் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டு, போடப்பட்டுள்ளன. மீதமுள்ள சுமார் 700 பாட்டுக்களும் தமிழிலேயே

உள்ளன. இதை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ள 286 பாட்டுக்களும் T.B. Krishna Swami Mudaliar, M.A., B.L., Principal, District College, அனந்தப்பூரில் உள்ள அன்பரால் எழுதப்பட்டது. அவருடைய அன்பர் ஓமலூர் D. வீரராகவன் அவர்களால் 1937ஆம் ஆண்டு சென்னையில் உள்ள Pearl Press மூலமாக இதை வெளியிட்டார்.

3. மேலும் "Poems to Lord Civa - Hymns of Tamil Saints by Indra Viswanathan" என்ற புத்தகத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட பாடல்கள் ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கப்பட்டுள்ளன. இப்புத்தகத்தின் மறுபதிப்பு 1991ல் மோதிலால் பானர்சிதாஸ் என்பவரால் வெளியிடப்பட்டுள்ளது.

4. ஸ்ரீ T. B. சித்தலிங்கம் எனபவரால் மொழிபெயர்க்கப்பட்ட "Hymns and Proverbs" என்ற புத்தகத்தில் 109 செய்யுட்கள் மொழிபெயர்க்கப்பட்டுள்ளன. இப்புத்தகம் காசி மடத்தினரால் வெளியிடப்பட்டது. பின்னர் 1964ல் திருப்பனந்தாள் மடத்தினரால் மொழிபெயர்க்கப்பட்டது.

5. The Heritage of India Series by F. Kingsbury and Q. E. Phillips என்ற புத்தகத்தில் திருஞானசம்பந்தர் பாடிய பாடல்களில் 24 பாடல்களும், திருநாவுக்கரசர் பாடிய பாடல்களில் 40 பாடல்களும், சுந்தரர் பாடிய பாடல்களில் 15 பாடல்களும், மாணிக்கவாசகர் பாடிய பாடல்களில் 59 பாடல்களும் ஆக மொத்தம் 138 பாடல்கள் மட்டுமே மொழிபெயர்க்கப்பட்டு ஆக்ஸ்போர்டு பல்கலைகழக்கத்தால் 1921ல் வெளியிடப்பட்டது.

6. அடையார் யோக சமாஜம் வெளியிட்ட "Mystic Treasure" என்ற நூலில் தேவாரத்திலிருந்து 169 செய்யுட்கள் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு உள்ளன.

7. சேக்கிழார் அடிப்பொடி திரு. T.N. இராமச்சந்திரன் அவர்கள் "திருமுறை ஆறாவது அப்பர் நடனச் செய்யுட்கள்" என்ற புத்தகத்தை ஆங்கில மொழி பெயர்ப்புடன் 1995ல் "பன்னாட்டு சைவ சித்தாந்த ஆராய்ச்சி கழகம்" தருமபுரம் ஆதீனம் மூலம் வெளியிட்டார். அவர் 981 செய்யுட்களை அடிக்குறிப்புகளுடன் மொழிபெயர்த்துள்ளார். மேலும், அவர் சமய ஆசாரியார்கள் தரிசித்து அனுபவித்த முக்கியமான கோயில்கள்பற்றிய 275 செய்யுட்களை ஆங்கில மொழிபெயர்ப்பு செய்து; U.K.ல் "Waiting for the Wave" என்ற பெயரில் 2007ல் வெளியிட்டார். இந்தப் புத்தகத்தில் முக்கியமான 275 திருத்தலங்களின் பலவண்ண புகைப்படங்களுடன் வெளியிடப்பட்டது பாராட்டுக்குரியது.

8. சுந்தரமூர்த்தி நாயனாரின் ஏழாம் திருமுறைத் தேவாரம் David Dean Shulman (The Hebrew University of Jerusalem) என்பவரால் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு

"Songs of The Harsh Devotee" என்ற பெயரில் 1990ல் ஜெருசலேத்தில் உள்ள Hebrew பல்கலைக்கழகத்தால் வெளியிடப்பட்டது. 1026 செய்யுட்களுக்கும் அடிக்குறிப்புகளும் விளக்கங்களும் தரப்பட்டுள்ளன.

எங்கள் சமூக சமயச் சங்கத்தில் இருந்து வெளியிடப்பட்டுள்ள இந்த நூலானது இதுவரை வெளிவராத கீழ்க்கண்ட சிறப்பு அம்சங்களைக் கொண்டதாகும்.

1. இந்நூல் இரு மொழி நூல் (Bi-lingual) தமிழ் – ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் உள்ளது.
2. பதிக விளக்கம் தமிழ் மற்றும் ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் உள்ளது.
3. திருத்தல வரலாறு தமிழ் மற்றும் ஆங்கிலம் ஆகிய இரு மொழிகளிலும் உள்ளது.
4. மூலம் – சந்தி பிரியாதது (மந்திர சக்தியும், இசை அமைப்பும் மாறாமல் இருப்பதற்காக)
5. மூலம் – சந்தி பிரித்தது; வாசிக்க எளிமையாக அமைவது.
6. எழுத்துப் பெயர்ப்பு – ஆங்கில எழுத்தில் தமிழில் உள்ள மூல வார்த்தைகளைச் சந்தி பிரித்து அமைத்தது (Transliteration)
7. தமிழில் பொருள், குறிப்புரை முதலியன உள்ளன.
8. ஆங்கிலத்தில் உரைநடையில் விரிவான பொருள்; (Translation and/or Transcreation) தரப்பட்டுள்ளது.
9. திருஞான சம்பந்தர் அருள் வரலாறு – தமிழிலும் ஆங்கிலத்திலும் உள்ளது.

முதல் திருமுறையில் திருஞான சம்பந்தப் பெருமான் சென்று தரிசித்துப் பாடிய திருத்தலங்கள் 88. அத்திருத்தலங்களின் படங்கள் அனைத்தும் இப்பகுதியில் கொடுக்கப்பட்டு உள்ளன. திருமுறைகள், சிவபரம்பொருளால் அருளாளர்களின் உள்ளத்தில் உணர்த்தப்பட்டு, அவர்கள் வாயிலாக அருளிச் செய்யப்பட்டவை. "எனதுரை தனதுரையாக" என்று திருஞான சம்பந்தர் இந்தத் திருமுறையில் திரு இலம்பையங்கோட்டூர் பதிகத்தில் பதிக எண் 76–ல் பாடியுள்ளார். ஆகவே, இப்பதிகங்கள் யாவும் இறைவனுடைய வாக்காகும். அவ்வாக்கினை விளக்கி, இந்த விரிவான நூலைப் படைப்பதற்கு என்னுடைய சிற்றறிவினால் இயலாது. இப்பெரு முயற்சியில் கைம்மாறு கருதாது பெரும் உதவி செய்த எனது உழுவலன்பர்கள் பலர். அனைவரையும் குறிப்பிட்டு எழுதி நன்றி கூறப் பெரிதும் விழைகின்றேன். ஆனால் அதுவே ஒரு பெரும் பகுதி ஆகிவிடுமே என அஞ்சுகின்றேன். இருப்பினும், பேருதவிகள் செய்த ஒரு சிலரை மட்டுமாவது குறிப்பிட்டு அவர்களுக்கு நன்றி சொல்லக் கடமைப்பட்டுள்ளேன்.

ஆங்கில மொழி பெயர்ப்புச் செய்யப் பேருதவி செய்த பெரியோர்கள்:

1. சேக்கிழார் அடிப்பொடி **முனைவர் T.N. இராமச்சந்திரன்** அவர்கள், B.A., B.L., D.Litt., (Jafna), தஞ்சாவூர்.
2. **Dr. M. குப்புசுவாமி** அவர்கள், B.E., M.S. (U.S.A.), D.Phil. (W.V.), Ph.D. (Los Altos), F.I.S.E., F.I.E., F.W.A. (India), M.Am.Sc., Ag.E., சென்னை.
3. **முனைவர் பேராசிரியர் கி. சுப்பிரமணியன்**, பொறுப்பாளர், பன்னிரு திருமுறை ஆய்வு மையம், கற்பகம் கலை அறிவியல் கல்லூரி, ஈச்சநாரி, கோயம்புத்தூர்.
4. பேராசிரியை **திருமதி. S. சிதம்பர வடிவு அம்மையார்**, M.A. (English), முதல்வர் (பணி நிறைவு), தூத்துக்குடி மகாலட்சுமி பெண்கள் கல்லூரி, தூத்துக்குடி.

இவர்கள் நால்வரும் கைம்மாறு எதுவும் கருதாமல், அரும்பாடுபட்டுச் செய்த உதவியை நான் என்றும் மறவேன். இவர்கள் நால்வரையும் போற்றி எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். இதே போன்று தமிழில் உள்ள பொருள், குறிப்புரை, விரிவுரை, குருவருள், பதிக வரலாறு முதலிய யாவற்றையும் சரிபார்த்து உதவி செய்த பெரியோர்கள்:

1. ஞானமணி, ஞானத் தமிழாகரர் பேராசிரியர் **முனைவர் வை. இரத்தினசபாபதி**, M.A., Ph.D. சென்னை.
2. சைவ சித்தாந்தப் **பேராசிரியர் Dr. ர. வையாபுரி**, M.A., Ph.D., முன்னாள் முதல்வர், த. சா. அ. தமிழ்க் கல்லூரி, பேரூர், கோயம்புத்தூர்.

இவர்கள் இருவரும் அரும்பாடுபட்டுக் கைம்மாறு கருதாமல் மிக நல்ல திருத்தங்களைச் செய்து, உயர்ந்த நல்ல கருத்துக்களையும், இலக்கண வரம்புகளையும் எடுத்துக்கூறிச் செய்த செய்நன்றியை என்றும் மறவேன். அவர்களைப் போற்றி வணங்கி எனது உளங்கலந்த நன்றியினை இதன்மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருஞானசம்பந்தப் பெருமான் அருளிச் செய்த மூன்று திருமுறைகளில் உள்ள 4158 பாட்டுக்களுக்கும் தருமைப் பதிப்பில் மிகச் சிறப்பான பொருள் கொடுக்கப்பட்டு உள்ளன. அப்பொருளையே நம்பதிப்பில் இடம் பெறுவதற்கு தருமைக் குருமகா சந்நிதானம் அவர்கள் அனுமதி அளித்தார்கள். ஆனால் பெரும் பகுதியான பாட்டுக்களுக்குத் தருமைப் பதிப்பில் கொடுத்துள்ள பொருள் ஒரு பாட்டுக்கு ஒரே வரியில் மிக நீளமாக அமைந்துள்ளது.

படிப்பவர்களுக்கு எளிமையாக இருத்தல் வேண்டும் என்ற நோக்கம் கருதி அதனைச் சிறுசிறு வாக்கியமாக எழுதி அமைக்கத் தீர்மானிக்கப்பட்டது. அதனை அவ்வாறு எழுதி உதவியவர்கள்:

1. பேராசிரியர் **முனைவர் வைணவப் பெரியார் உயர்திரு. S. லக்ஷ்மிநாராயணன்** அவர்கள் M.A., Ph.D., முன்னாள் முதல்வர், பரம கல்யாணி கல்லூரி, ஆழ்வார்குறிச்சி, திருநெல்வேலி. (முதல் திருமுறையில் ஒரு பகுதி செய்து முடித்த காலை இவர்கள் அகாலமாக வைகுண்டப் பிராப்தி அடைந்துவிட்டார்கள். மீதமுள்ள முதல் திருமுறைப் பகுதிகள் முழுமையையும் எங்கள் **செயலர் திரு. P.J. விக்டர்** அவர்கள் செய்து முடித்தார்கள்)
2. **திருமதி இரா. காஞ்சனா அம்மையார்,** M.A., முன்னாள் ஆசிரியை, மகாராஜ நகரில் வசிப்பவர்கள். இவர்கள் இரண்டு, மூன்றாந் திருமுறைகளில் உள்ள 2689 பாட்டுக்களின் பொருளைச் சிறுசிறு வாக்கியமாக எழுதி உதவியுள்ளார்கள்.

**Dr. M.G. சீனிவாசன்,** Ph.D., ஸ்ரீரங்கம் அவர்கள் தருமைப் பதிப்பில் உள்ள 88 திருத்தல வரலாறு மற்றும் இதர குறிப்புகள் அனைத்தையும் நல்ல ஆங்கிலத்தில் மொழி பெயர்த்து கணினியில் அச்சடித்துக் கொடுத்து உதவி செய்தார்கள். அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

உயர் சைவத்திரு சிவபூசைச் செம்மல், சித்தாந்த ரத்தினம் **புலியூர் சுப்பிரமணிய பிள்ளை** அவர்கள், A.T.A (Textiles), M.I.M.A., பிழை திருத்தம் பார்த்து உதவி செய்தார்கள். அவர்களுக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தருளிய முதல் திருமுறையில் 88 திருத்தலங்களுக்கும் நேரில் சென்று, அங்குள்ள இறைவனைத் தரிசித்து பதிகம் பாடியுள்ளார்கள். அத்திருத்தலங்கள் எண்பத்தியெட்டையும் மிகச்செம்மையாகப் படம் எடுத்த அன்பர், இலண்டனைச் சேர்ந்த **ஸ்ரீஸ்கந்த ராஜா** அவர்கள் ஆவார்கள். அப்படங்களை உயர்திரு சேக்கிழார் அடிப்பொடி T.N. இராமச்சந்திரன் அவர்கள் எனக்கு கொடுத்து உதவியதால், அடியேன், அவைகளை இந்த நூலில் வெளியிட முடிந்தது. ஆதலால், அடியேன் எனது மனமுவந்த நன்றியை ஸ்ரீஸ்கந்த ராஜா அவர்களுக்கும், உயர்திரு சேக்கிழார் அடிப்பொடி T.N. இராமச்சந்திரன் அவர்களுக்கும் இதன் மூலம் தெரிவித்துக் கொள்கிறேன்.

உயர்சைவத்திரு **பொன். வீரபாகு,** நிருவாக அலுவலர் (பணி நிறைவு), திருநெல்வேலி மருத்துவக் கல்லூரி) மற்றும் அவர்களது தம்பி உயர் சைவத்திரு. **பொன். வேலுமயில்,** அலுவலக மேலாளர் (பணி நிறைவு), மத்திய சிறை, பாளையங்கோட்டை) ஆகிய இருவருடன் அண்மையில் பழக நேர்ந்தது. அதுமுதல் அவர்கள் இருவரும் பிழை திருத்தம் செய்யும் பணியையும் மற்றும் தொடர்புடைய சில பணிகளையும் கவனித்து வருகிறார்கள். இவர்கள் இருவருக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு அடியேனது அன்பர்கள் செய்து வரும் உதவிகள் அல்லாமல் எங்கள் சங்கத்தின் செயற்குழுவினர் செய்து வரும் உதவி அளவிடற்பாலது அன்று. சங்கத்தின் துணைத்தலைவர் **உயர் சைவத்திரு. P.N. நாயகம்,** M.A., Assist Development Commissioner (Retd.), அவர்கள் பெரும் பகுதி ஆங்கிலம், தமிழ் இவைகளைச் சரிபார்த்துப் பிழை திருத்தியும் கமிட்டிக் கூட்டங்களில் தலைமை தாங்கித் திறம்பட நடத்தியும், மற்றும் எல்லாவித உதவிகளும் செய்து வருகிறார்கள். இவர்களுக்கு எனது மனமார்ந்த நன்றியினைச் செலுத்திக் கொள்ளுகிறேன். அதேபோன்று பொருளாளர் **உயர்சைவத்திரு. R.V.P. கோபாலகிருஷ்ணன்,** B.Com., C.A.I.I.B., Assistant General Manager, State Bank of India (Retd) அவர்கள் பொருள் சம்பந்தமான சகல பொறுப்புகளையும் ஏற்று, வரவு செலவு கணக்குகளை எழுதி, வருடாந்திர கணக்குகளையும் முடித்துக் கொடுத்து உதவி செய்து வருகிறார்கள். அன்னாருக்கும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். எல்லாவற்றிற்கும் மேலாக எங்கள் **செயலர் P.J. விக்டர்,** M.A., B.L., Wing Commander, Indian Air Force (Retd.) அவர்கள் செய்து வரும் உதவி அளவிடற்கரியது. மேலே கூறிய முதல் திருமுறையில் 100 பதிகங்களுக்கு மேலான பொருளைச் சிறுசிறு வாக்கியமாக எழுதி உதவினார்கள். எல்லாவிதமான கடிதப் போக்குவரத்து, அரசு சம்பந்தமான அனைத்து வேலைகள், கமிட்டிக் கூட்டம் கூட்டுவது, கூட்டத்தில் நடந்தவைகளை அறிக்கையாக எழுதுவது, சில்லரைச் செலவுகள் அனைத்தையும் பொறுப்பேற்று நடத்துவது மற்றும் பல உதவிகளைச் செய்து வருகிறார்கள். அவர்கள் செய்து வரும் உதவிகளை என்றும் மறவேன். அவர்களுக்கும் எனது மனமார்ந்த நன்றியினைச் செலுத்திக் கொள்ளுகிறேன். என் மூன்றாவது மகள் **திருமதி. ஆ. சிவகாமி,** M.A., M.Ed., முன்னாள் ஆங்கில ஆசிரியை, ஆங்கில மொழி பெயர்ப்பின் இலக்கணப் பிழைகளைச் சரிபார்த்ததோடு அல்லாமல், திருஞானசம்பந்தர் அருள் வரலாற்றையும் ஆங்கிலத்தில் எழுதி உதவினார்கள். அவர்களுக்கும் எனது நன்றி கலந்த பாராட்டுக்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

"எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை செய்நன்றி கொன்ற மகற்கு" என்ற திருவள்ளுவப் பெருந்தகை கூறியுள்ளதை மனத்தில் கொண்டு மேலே கூறிய அனைவருக்கும் மீண்டும் மீண்டும் எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

பாட்டுக்களை ஒலிபெயர்ப்பு (Transliteration) செய்தவர் ஜெர்மன் தேசத்துப் பெரியார் **Dr. Thomas Malton**, Head of the Department of Indology, Cologne University, Germany ஆவார். அவர் எழுதியுள்ளதை எனது அமெரிக்க உழுவலன்பர் **Dr. கணேசன்**, Ph.D., அவர்கள் C.D. எடுத்துக் கொடுத்து உதவினார்கள். ஆதலால் அதில் அதிகமான மாற்றம் செய்யாமல் சிறுசிறு வேறுபாடு மட்டுமே கொண்டுள்ளோம். இவர்கள் இருவருக்கும் எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூலுக்கு ஆசியுரை, வாழ்த்துரை, அணிந்துரை முதலியன வழங்கிய சைவத் திருமடத்துச் சந்நிதானங்கள், இந்திய நாட்டின் **ஜனாதிபதி உயர்திரு ஆ.ப.ஜெ. அப்துல் கலாம்** அவர்கள் மற்றும் ஆன்றவிந்து அடங்கிய சான்றோர்கள் அனைவருக்கும் எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்து அவர்கள் திருவடிகளைப் போற்றி வணங்குகின்றேன். குறிப்பாக, இந்திய நாட்டின் ஜனாதிபதியாக விளங்கும் உயர்திரு ஆ.ப.ஜெ. அப்துல் கலாம் அவர்கள் நினைக்க முடியாத அளவுக்கு அல்லும் பகலும் அரும் பெரும் பணி செய்து வருபவர்கள். அவர்கள் தனது ஈடு இணையற்ற மிக உயர்ந்த உள்ளத்தால் அடியேனையும் ஒரு பொருட்டாகக் கருதி, அடியேனது வேண்டுகோளை ஏற்று, தன் திருக்கையால் தமிழில் கையெழுத்திட்டு வாழ்த்துரை வழங்கியதற்கு எனது உளங்கனிந்த நன்றியினைத் தெரிவித்து அன்னாரது திருவடிகளைப் போற்றி வணங்குகின்றேன். அன்னார் செய்த பேருதவியை என்றும் மறவாது நன்றி செலுத்தக் கடமைப் பட்டுள்ளேன்.

எல்லாவற்றிற்கும் மேலாக, திருவள்ளுவப் பெருந்தகையார் கூறியபடி "அருள் இல்லார்க்கு அவ்வுலகம் இல்லை பொருள் இல்லார்க்கு இவ்வுலகம் இல்லாகி யாங்கு" என்றதன்படி, பொருள் உதவி இல்லையாயின் அடியேன் இந்த நூலை வெளிக் கொணர இயலாமற் போயிருக்கும்.

தருமைக் குருமகா சந்நிதானம் அவர்கள் அடியேனை ஆசீர்வதித்து இப்பணியில் ஈடுபடச் செய்தமை குருவருளும் திருவருளுமே அன்றி வேறில்லை. அவர்கள் அடியேனை ஆசீர்வதித்துப் பெருந்தொகையும் கொடுத்து அருள் செய்தார்கள். அதே போன்று திருவாவடுதுறை குருமகா

சந்நிதானம் அவர்களும் அடியேனை எல்லா வகையிலும் ஆசீர்வதித்துப் பொருள் உதவியும் செய்தருளினார்கள். மதுரை ஆதீனம் குருமகாசந்நிதானம் அவர்களும் ஆசீர்வாதித்து அருள் செய்தார்கள். திருப்பனந்தாள் காசி மடத்து அதிபர் எஜமான் சுவாமிகள் அவர்களும் அடியேனை ஆசீர்வதித்துப் பொருள் உதவி செய்துள்ளார்கள். இவர்கள் நால்வருடைய திருவடிகளை என் சிரமேற்கொண்டு போற்றி வழிபடுகின்றேன்.

இதைத் தவிர அமெரிக்காவில் உள்ள எனது இரண்டாவது மருமகன் S.G. அப்பன் என்ற **Dr. S. கணபதி அப்பன்,** Ph.D., அவர்கள் நிதி திரட்டுவதற்குச் செய்த உதவி மறக்க முடியாதது. திருவாசகத்திற்குப் பெருமளவில் உதவி செய்தது போன்று, இவர்கள் இதற்கும் பல்லாற்றானும் வேலைகள் பல செய்து பெருந்தொகை திரட்டிக் கொடுத்தார்கள். மேலும், தானும் தன் குடும்பத்தாரும் பெருந்தொகை கொடுத்துள்ளார்கள்.

இந்த நூலை வெளிக்கொணர உதவி செய்த அமெரிக்க அன்பர்கள் பலர். முக்கியமாக அமெரிக்கக் கமிட்டியில் உள்ள (1) **Emeritus Priest இராஜ ரத்தின பட்டர்** அவர்கள், (2) **Er. S. கண்ணப்பன் அவர்கள்,** (3) **Dr. வேணு கோபால் மேனன்** M.D. அவர்கள். இவர்கள் மூவரும் எடுத்துக் கொண்ட முயற்சி மிகவும் பாராட்டுதலுக்குரியது. பல அன்பர்கள் பெரும் பொருள் உதவி செய்துள்ளார்கள். New Mexico மாகாணத்தில் Albuquercue ஊரில் உள்ள **உயர்சைவத்திரு. இராஜன் பிள்ளை** என்பவர் தனது சொந்த முயற்சியால் பெருந்தொகை வசூல் செய்து தானும் பெருந்தொகை கொடுத்து உதவி செய்தார்கள். இலண்டன் மாநகரத்தில் முதன் முதலாகத் **திரு. K. சொக்கலிங்கம்** அவர்கள் வீட்டில் தங்கி இருந்தேன். அப்பொழுது அவர்களும், அவரது வாழ்க்கைத் துணைவியாராகிய **திருமதி ஆறுமுகப்பிரியா** அம்மையாரும் என்னை நன்றாகக் கவனித்து பொருள் உதவியும் மற்றும் சகல உதவிகளையும் செய்தார்கள். அவர்களை வாழ்த்திப் பாராட்டிக் கொள்கிறேன். இலண்டன் மாநகரத்திற்கு அடியேன் இரண்டாவது முறையாகச் சென்ற பொழுது **Dr. மகேஸ்வரன்** அவர்கள் இல்லத்தில் அடியேன் ஒருமாத காலம் தங்கியிருந்தேன். அப்பொழுது பன்னிரு திருமுறை வேள்விக்கு, அவர்களும் அவர்களின் வாழ்க்கைத் துணைவியார் **திருமதி கீதா மகேஸ்வரன்** அவர்களும் எல்லாவிதமான உதவிகளையும் செய்தார்கள். அவர்கள் இருவரையும் பாராட்டிப் போற்றி, எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன். அவர்களுடைய அன்பர்களில் ஒருவராகிய **Dr. S. சிவயோகம்** அவர்களும் அவர்களின் வாழ்க்கைத் துணைவியார் திருமதி Dr. **இந்திரா சிவயோகம்**

**அம்மையார்** அவர்களும் தங்களது தனிப்பட்ட முறையில் உள்ளன்போடும் இறையன்போடும் பெருந்தொகை கொடுத்துச் செய்த உதவிகளை எனது வாழ்க்கையில் என்றும் மறவேன். அவர்களைப் போற்றிப் பாராட்டி எனது மனமார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்தியாவிலும், பல அன்பர்கள் குறிப்பாக உயர் **சைவத்திரு. Rm.K.V. நெல்லையப்பன்** அவர்களும், **உயர்சைவத்திரு. K. பாலசுப்பிரமணியன்** அவர்களும் அவர்தம் துணைவியார் **திருமதி மீனாம்பாள் பாலசுப்பிரமணியன்** அம்மையார் அவர்களும், சிங்கம்பட்டி அரசர் **உயர்சைவத்திரு T.N.S. முருகதாஸ் தீர்த்தபதி** அவர்களும் உயர் சைவத்திரு. **முனைவர் இராச. வசந்தகுமார்**, Ph.D., கோவை, ஈச்சநாரி கற்பகம் கலைக்கல்லூரி தாளாளர் அவர்களும், கோவை என்ஜினியர் தொழிலதிபர் **உயர்சைவத்திரு மு. மாரிமுத்து** அவர்களும், அவர்கள் வாழ்க்கைத் துணைவியார் **திருமதி M. கோமதி** அம்மையாரும் மற்றும் பலரும் பெரும் பொருள் கொடுத்து உதவி செய்துள்ளனர். இவ்வாறு பொருள் உதவி செய்த நன்கொடையாளர்கள் அனைவருடைய பெயர், ஊர் முதலிய விபரங்களை இந்த நூலின் கடைசிப் பக்கத்தில் கொடுத்துள்ளேன். இவர்கள் யாவருக்கும் எனது பாராட்டுதலோடு கூடிய நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்த நூலை நல்ல முறையில் கணினியில் பதிவு செய்து உதவிய பாளையங்கோட்டையில் உள்ள **சிவா கம்ப்யூட்டர்ஸ்** நிறுவனத்தாருக்கும், சிவகாசியில் உள்ள அச்சகத்தார் **சுதர்சன் ஆப்செட் பிரிண்டர்ஸ்** அவர்களுக்கும் பெரிதும் கடமைப்பட்டுள்ளோம். இதை நல்ல முறையில் அச்சடித்துக் கட்டமைப்பு வேலைகளையும் சிறப்பாகச் செய்து முடித்துக் கொடுத்துள்ளோர்களைப் பாராட்டி எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிவபெருமான் திருவருளாலும், அனைத்துத் திருமடத்துக் குருமகா சந்நிதானங்களின் குருவருளாலும்தான் இந்த நூலை வெளியிட முடிந்ததே அன்றி அடியேனால் அல்ல என்பதை உண்மையாகக் கூறி முடிக்கின்றேன். இதில் உள்ள தவறுகள் அனைத்திற்கும் அடியேன்தான் பொறுப்பாவேன். இந்த நூலைப் படிப்பவர்கள் தவறுகளைப் பொறுத்தருள்க. முடிந்தால் தெரிவித்தருள்க.

திருஞானசம்பந்தர் தாம் பாடியருளிய பதிகங்களில் ஒவ்வொரு பத்தாவது பாடலிலும் சமண, புத்த மதக் கொள்கைகளை மறுத்துப் பாடியுள்ளார். 6 மற்றும் 7–ஆம் நூற்றாண்டில் களப்பிரர் மற்றும் பல்லவர்களுள் பலரும் சமண புத்த சமயத்தாரைப் போன்று போலி வேடந்தரித்து,

தமிழ்நாட்டிற்குள் புகுந்து சைவ சமயக் கொள்கைகளுக்கு எதிரான கருத்துக்களைக் கூறியும், மதமாற்றம் செய்வித்தும் சைவ சமயத்தார்க்குப் பெருந்துன்பம் விளைவித்தனர்.

அவர்கள் இழைத்தக் கொடுமைகளைப் பார்த்து மனம் வருந்திய திருஞானசம்பந்தர், அப்போலித்துறவியர் வேடத்தில் இருந்த களப்பிரர் மற்றும் பல்லவர்களைப் பார்த்து மனம் வருந்திப் பாடினாரே ஒழிய, உண்மையில் சமண, புத்த சமயத்தார்களின் கொள்கைகளையோ அல்லது அவர்கள் சமயத்தையோ குறை கூறிச் சொல்லவில்லை என்பதை ஓர்க.

ஆகவே, தேவாரத்தில் வருகிற கதைப்பகுதியை வைத்துக் கொண்டு இது இந்த நாட்டு சமணர்களுக்கும், சைவர்களுக்கும் ஏற்பட்ட போராட்டம் என்று யாரும் பொருள் கொள்ள வேண்டாம் என்றும் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். அன்பர்கள் இத்திருமுறைகளை ஓதி உணர்ந்தும், பிறர்க்குரைத்தும், இம்மை, மறுமை, அம்மை என்னும் மும்மை நலங்களும் பெற்று இனிது வாழ அங்கயற்கண்ணி உடனுறை ஆலவாய் அண்ணல் திருவடிகளை மன, மொழி, மெய்களால் வணங்குகின்றேன்.

Oh! Lord Civa of the Golden Hall
Pray, shower Thy Blessings on us all.

வாழ்க சிவநெறி!
வளர்க திருமுறை!!
வாழ்க உலகமெலாம் !!!

"அப்பர் இல்லம்"
21 – ஐந்தாம் குறுக்குத் தெரு,
மகாராச நகர், திருநெல்வேலி – 627 011
தமிழ்நாடு, இந்தியா.
பேசி : 0462–2574468
e-Mail: apparva@yahoo.com

செந்தமிழ் சிவநெறிச் செல்வர்
சிவத் திருத்தொண்டர்
சித்தாந்த ரத்தினம்
திருமுறை ஆராய்ச்சிச் செம்மல்
**வை. ஆறுமுகம்**
தலைவர், சமூக சமயச் சங்கம்.
திருநெல்வேலி.

06–06–2007

உ
CIVA MAYAM
THIRU-CH-CHITRAMBALAM

# THĒVAARAM

## Holy Scriptures of Saint Thiru-Gnaana-Sambandar
## Thirumurai 1, 2 and 3

## PREFACE

Saivism is the most ancient and the most modern of all schools of theology; ancient because of its beginnings in the hoary past, and modern because of the very rational and logical dispensation inherent therein.

The antiquity and glory of Saivism has been testified to by learned scholars from the eastern as well as the western parts of the world - notably Sir John Marshall, Dr. G. U. Pope and others. They had made deep study of Saiva Siddhanta and recorded their profound appreciation of this School of Philosophy which dates back to prehistoric times. Literary works highlighting the various aspects of Saivism were coming out from time to time. However, many of these priceless works suffered damage due to extreme weather condition and the non-availability of methods for the preservation of ancient manuscripts and possibly the lack of adequate care. However despite the passage of time, several works survived, and our Socio Religious Guild took upon itself the task of publishing with suitable annotation in English and Tamil, the Holy Thiruvaachakam. After this, the High Pontiff of the Holy Seat of Dharumapuram, Sri-la-Sri Shanmuga Desika Gnaana Sambanda Paramaacharya Swamigal has ordered me to publish the remaining Eleven Thiru Murais also on the same pattern as Thiruvaachakam which has received wide acclaim both in India and abroad.

Lord Civan's blessings were showered on the Socio Religious Guild in full, by which our first publication of Thiruvaachakam was released in July 2004 by the 26th Spiritual Head of the Dharumai Monastery (Aadheenam) (*தருமை ஆதீனத்து 26ஆவது குருமகா சந்நிதானம்*). This was very well received in India, U.S.A., Canada, England and other countries. Within a period of sixteen months, the entire stock of 1000 sets was exhausted.

The Dharumai Gurumaha Sannithanam decreed that we publish the remaining eleven holy scriptures also (மீதமுள்ள பதினோரு திருமுறைகளையும்) in the same format as was done in our Thiruvaachakam publication.

Thiruvaachakam is the eighth out of the total twelve Thirumurais in the order of holy scriptures (Devotional songs) and has 658 verses arranged in 51 hymns. The remaining eleven scriptures consists of 17,622 verses. This is a multi-mega project. The estimated cost of product for the remaining eleven holy scriptures is expected to be around Indian Rupees One Crore. However, Socio Religious Guild took up the challenge by placing our faith on Lord Civan, on our Spiritual Heads of all Saiva Mutts and on our well wishers (திருவருளையும் குருவருளையும் மெய்யடியார்களின் அருளையும் உள்ளத்தில் கொண்டு அவர்களை வழுத்தி இந்த மாபெரும் ஞானவேள்வியைச் செய்ய முற்பட்டோம்).

Our prayers were heard and we have now completed the publication of the first Thirumurai consisting of 1469 verses (1469 பாக்களைக் கொண்ட முதல் திருமுறையை முடித்துள்ளோம்). The ceremonious worship of the book in this First Thirumurai was carried out by Dharumai 26th Gurumaha Sannidhanam Sri-la-Sri Shanmuga Desika Gnaana Sambanda Paramaacharya Swamigal on the Guru Pooja day of the founder of this Aadheenam Sri-la-Sri Guru Gnaana Sambandar on 6th June 2007 at the Gnaaṇa-pureesuwar temple in the Mutt Premises in Dharumapuram, near Maayuram, Tamilnadu, India..

What we now call Thēvaaram (தேவாரம்) are the holy scriptures exposed by three of our Saints as under.

| Thirumurai No. | Name of the Saint | No. of hymns sung originally | No. of verses sung originally | Now Available number of | |
|---|---|---|---|---|---|
| | | | | Hymns | Verses |
| 1, 2 & 3 | St. Thiru Gnaana Sambandhar | 1,600 | 16,000 | 384 | 4,158 |
| 4, 5 & 6 | St. Thiru-Naavuk-Karasar (Appar) | 4,900 | 49,000 | 312 | 3,066 |
| 7 | St. Sundarar | 3,800 | 38,000 | 100 | 1,026 |
| Total | | 10,300 | 1,03,000 | 796 | 8,250 |

The original verses written on palm leaves were kept in an underground cell at Sri Nataraja Temple in Chidambaram. Most of them were eaten away by moth and we were able to salvage only 8250 verses.

In the literary world, these hymns are identified under the following nomenclature:

1. Hymns of St. Thiru-gnaana-Sambandhar - Thiruk-kadaik-Kaappu
2. Hymns of St. Thiru-naavuk-karasar - Thēvaaram
3. Hymns of St. Sundara-moorthy - Thirup-Paattu

However, it is customary to call all these 8250 verses as "Thēvaaram". Songs sung in each shrine are classed as the பதிகம் of that shrine and these are usually ten songs for each shrine - பதிகம் - Ten Songs.

The present release of these two volumes is in respect of Thirumurai 1, consisting of 136 hymns (பதிகங்கள்) of 1469 verses (பாக்கள்). These hymns mostly consist of 11 verses each, and less in a few cases.

The eighth verse in almost all the hymns mentions about King Raavanan of Sri Lanka who tried to lift and put aside Mount Kailas (abode of Lord Civan) to make way for his aircraft (புஷ்பக விமானம்) to pass through in the sky. While trying to lift and move the mount, he got crushed under the mount and repented for his folly. He cried aloud and begged pardon from Lord Civan by playing Saama Gaana music by improvising a Veena fabricated from his own body veins. Lord Civan pardoned him, gave him longevity and a mystic sword for his self-defence. He also conferred on him the name "RAAVANAN" (meaning one who wept (அழுதவன்). This name lasted for ever thereafter.

**The ninth** verse in each hymn tells the story of the quarrel between Thirumaal and Brahmma about their superiority over each other. They decided, that whosoever reaches and finds the Holy Feet of Lord Civan or HIS hair lock will be superior to the other. Both failed in their attempts. Lord Civan appeared before them and condoned their egoism and made them realise that they both were under his tutelage and they are mere mortals (Vide Adi Sankarar's Sivananda Lahari - Verse 99 'இதம் தேயுக்தம்வா ....').

In the tenth hymn, he decries the philosophy of Jainism and Buddhism.

The last and eleventh verse in each hymn is called Thiruk-Kadaik-Kaappu (திருக்கடைக் காப்பு). It tells us the name of the author of this hymn (Himself), his place of birth, the nature's beauty of his birthplace and the benefits that will accrue to those who read

and study these hymns, understanding the priceless meaning of all the verses in the hymn with sincere devotion.

Apart from these last four verses, all the rest seven verses in all the hymns are in the form of praising and worshipping Lord Civan; glorifying the various places where HE manifests Himself. Also they describe nature's beauty in those places, HIS valour, HIS various acts of gracing the mortals (அறக்கருணை), punishing the wrong doers (மறக்கருணை), the multifarious forms he assumes instantaneously according to the need of the circumstance: say in the guise of a mendicant, as a mother, as a warrior, as horseman, as a child, as a pig, as a bird and so on and disappearing instantaneously as soon as the mission is completed. It may be noted here that Lord Civan is never born in this earth, as AVATAAR [அவதாரம்] which is attributed only to Thirumaal [திருமால்] who has taken nine avataars so far on this earth. Saivism is firm in its conviction that the Supreme Lord Civan is Eternal Entity and has neither birth nor death.

Scholars have come to the conclusion that Saint Thiru-Naavuk-Karasar (திருநாவுக்கரசர்) was the first to sing the sacred hymns of Thēvaaram in the 7th Century A.D. during the period of Mahendra-varma Pallavan-I (முதலாம் மகேந்திர வர்ம பல்லவன் – 615 - 630 A.D.). Saint Thiru-gnaana-Sambandar's birth year was identified as 638 A.D. during the reign of Nara-Simma-Varma-Pallavan-I (முதலாம் நரசிம்மவர்ம பல்லவன்). Saint Thiru-Gnaana-Sambandar lived on earth only for 16 years while Saint Thiru-naavuk-karasar lived for 81 years.

Though Saint Thiru-gnaana-Sambandar succeeds Saint Thiru-Naavuk-karasar, the former's hymns were compiled as the first, second and third Thirumurais, while those of Saint Thiru-naavuk-karasar comes under the 4th, 5th and 6th Thirumurais. This is due to the fact that Saint Thiru-gnaana-Sambandar was blessed and anointed by Lord Civan as a Spiritual Teacher-preceptor, with authority to initiate people into the esoteric doctrines of religion (ஆசாரியத்துவம்) and this was not done to Saint Thiru-Naavuk-Karasar. That is why Saint Thiru-gnaana-Sambandar's hymns take the first place preceding the hymns of Thiru-naavuk-karasar.

In the first Thirumurai, there are 1469 verses sung in seven different (metrical) musical notes called Pann (பண்) such as Natta Paadai (நட்டபாடை), Thakka Raagam (தக்க

ராகம்), etc. These details can be seen recorded in the respective hymns. These musical notes were revealed and recorded by a lady poet who was one of the direct descendants of Thiru-Neela-Kanda-Yaazh-P-Paanar (திருநீலகண்ட யாழ்ப்பாணர்) a contemporary of the Saint. This lady scholar musician hailing from the suburb of Chidambaram formulated the various musical notes (பண்) for all the Thēvaaram. These musical notes are being followed till today. Thiru-Neela-Kanda-Yaazh-P-Paanar always travelled along with the Saint and formulated all these musical notes (பண்) then and there, as and when our Saint was singing in various temples (Reference:- Dr. Nellai Veenai Saraswathi's Thesis on the musical intricacies in the Thēvaaram of St. Thiru-gnaana-Sambandhar).

All the hymns of Saint Thiru-Gnaana Sambandar were originally written on palm leaves by one great scholar sage Sambanda Saranalayar (சம்பந்த சரணாலயர்) then and there while our saint was singing in various temples. According to tradition, devotees asked to sing these hymns in various shrines from memory. The then ruling Chola King came to know of these hymns and charmed by their Divine spell, ordered a search for the entire set of these hymns.

During the period of King Kulōthungan I, (முதலாம் குலோத்துங்க அரசன் – 1070-1120 A.D.) his army Chief by name Manavir Kooththan Kaalinga Raayan (மணவிற் கூத்தன் காளிங்க ராயன்) transcribed the entire Thēvaaram of all the three saints in copper plates and kept them safely in the Sri Nataraajar Temple in Chidambaram town. Later some unknown scholars hailing from Thiru-Aaroor (திருவாரூர்) also transcribed the entire hymns in copper plates. The present whereabouts of these copper plates is however not clearly known. In 1864-1866, one sage by name Sri Subbaraaya Gnaaniyaar (சுப்பராய ஞானியார்) with the help of one Sri Sabapathy Mudaliar was the first ever person to print and publish the entire Thēvaaram in the order of musical notes - (பண்முறை). In 1881, one Mr. Ramaswamy Pillai of Madurai (later he was anointed and given the name Thiru-Gnaana-Sambandam printed and published the entire Thēvaaram in the 'Temple-war' (தலமுறை) order. In 1953, one Mr. Balasubramania Mudaliar, B.A., B.L. (who later changed his name to as Mylai-k-Kizhaar Ila Muruganaar (மயிலைக்கிழார் இளமுருகனார்) published the entire Thēvaaram under the title 'Adangan Murai' (அடங்கன் முறை also spelt as அடங்கல்) in the order of musical notes (பண்முறை) containing elaborate Lexicon and concordance, life history of the three saints etc (அரும்பொருள் அகராதி - தலச்சிறப்பு அகராதி, வாழ்க்கை வரலாறு முதலியன). Vidwan T. V.

Gopala Iyer's commentary of Ila Muruganaar's publication (தேவாரம்) has valuable information - vide French Institute of Indology, Pondicherry (1984).

From 1953 onwardsï the 25th Pontiff of Dharumai Aadheenam Sri-la-Sri Subramania Desika Gnaana Sambanda Paramaachaarya Swaamigal started publishing the Thirumurais 1 to 9 with meanings, short notes, temple history, etc. The meaning, short notes, etc were contributed to these publications by M/s. Maha Vidwan S. Dhandapaani Desikar, Muthu-Su-Maanickavaachaka Mudaliar, Panditha A. Kandasamy Pillai, C. Arunai Vadivelu Mudaliar, Vai Sundaresa Vaandyaar (மகா வித்துவான் ச. தண்டபாணி தேசிகர், முத்து சு. மாணிக்கவாசக முதலியார், பண்டித அ. கந்தசாமி பிள்ளை, சி. அருணை வடிவேலு முதலியார், வை. சுந்தரேச வாண்டையார்) and other scholars.

Now the 26th Pontiff of Dharumai Aadheenam Sri-la-Sri Shunmuga Desika Gnaana Sambanda Paramaachaarya Swaamigal published the entire 12 Thirumurai from 1 to 12, in a much more elaborate manner than ever before, in 16 volumes, containing a vast number of details, each volume running from 1000 to 1500 pages.

The Thiru-p-panandaal Sri Kasi Mutt are publishing now and then since long all the 12 Thirumurai in different patterns such as musical notes order (பண்முறை) and Temple war (தல முறை) - all original poems only. Recently, one Vardhamaanan Publishers (வர்த்தமானன் பதிப்பகம்) from Chennai (Madras) have brought out all the Thēvaaram in 24 small books with commentary etc. Apart from the above publications, a number of organizations and individuals brought out now and then, the Thēvaaram in full or in part, with or without commentary.

The following are some minor details of the number of Sacred Temples, etc. where our Saint sang these holy scriptures.

| | | |
|---|---|---|
| Thirumurai numbers | - | 1,2 & 3 |
| Number of Sacred Temples where our saint sang those holy scriptures | - | 220 |
| Number of hymns sung in those sacred temples | - | 377 |
| Number of hymns unrelated to any temple | - | 7 |
| Total number of hymns | - | 384 |
| Total number of verses salvaged out of 16000 verses originally sung by our saint | - | 4158 |

In this first three Thirumurai, there are 28 miracle hymns (அற்புதத் திருப்பதிகங்கள்) such as the one on the drinking of divine milk by the Saint, one on receiving golden cymbal from the Supreme etc. These details can be seen in the respective hymns as well in the life history of the Saint.

The Thirumurais from 1 to 11 were compiled by one Sage Poet called Nambi-Aandaar-Nambigal of Thiru-Naaraiyoor during 9th/10th Century (9/10 ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த திருநாரையூர் நம்பியாண்டார் நம்பிகள்). Different scholars have written differently about the exact period of Sage Nambi-Aandaar-Nambigal. Tradition has it that this Sage poet was able to identify and compile these verses in an orderly manner with the guidance of 'Pillayar' his favourite Lord.

A question may arise whether this, our new publication is necessary when there already exist earlier publications giving Tamil meanings etc., especially the recent Dharumapuram Mutt Publication in a very elaborate manner in 16 volumes for the entire 12 Thirumurai in Tamil.

We would like to inform the readers that this is the first publication containing the original verses and euphonic combinations separated, and also transliteration - all side by side for each poem. Then, of course, the meaning with special notes is given in Tamil. Then, the English translation and/or transcension is given of all the poems in prose order which was not attempted earlier for all hymns. The history of all places given in this publication and references to the poem is also given both in English and Tamil. Nuances of Tamil grammar are indicated when necessary. Thus, the entire book is bi-lingual. This will enable our next generation especially those Tamil children living in foreign countries to learn and enjoy these sacred heritage poems. Also scholars who cannot read Tamil might be drawn to read and enjoy this Hindu Theological work, as the Tamil rendering of the poems is given in Roman script also. I beg to submit to the readers the need to have in mind the words of Swami Vivekananda who said that one should be able to differentiate between history, mythology, philosophy and rituals, and understand the theological works accordingly.

These divine songs cannot be correctly interpreted and my poor knowledge is insufficient to bring out such a publication. I am indebted to the intelligent labour of many of my friends whose services are unforgettable in my life.

Saint Thiruvalluvar says in his eleventh chapter on "Gratefulness". "There may be salvation for those who violated all virtues; but there will be no salvation for those who killed gratitude in his heart".

எந்நன்றி கொன்றார்க்கும் உய்வுண்டாம் உய்வில்லை
செய்நன்றி கொன்ற மகற்கு.

I actually wanted to express my gratitude to all the individual scholar helpers and to all my friends whose names I give below. However to avoid the voluminous work of describing each person I decided to mention the names only who helped me a lot. Neverthless, I have mentioned a descriptive details for each and every individual friend in my 'Pathipurai' in Tamil.

At the outset, I am offering my gratitude to all the Gurumaha Sannithanams of Hindu Mutts and also to many other scholars, especially to our Honourable President of India Sri A.P.J. Abdul Kalam for writing the benediction and / or felicitation for this book. We all know the Honourable President of India is the most extremely busy person, writing a benediction letter to me in vernacular and to sign the same by his own handwriting, is indeed a very great admireness. I shall never forget his help and offer my grateful thanks to him.

I would like to make a special mention about Sekkizhar Adi-p-podi Dr. T.N. Ramachandram who has done yeoman service in doing English Translation work in poetical form for many Hindu Theological works especially to the following:

1. Sixth Thirumurai by Saint Thiru-naavuk-karasar () containing 99 hymns - 981 verses.
2. Eighth Thirumurai - Thiruvaachakam and Thirukoviaar by Saint Maanickavaachakar - 651 plus 400 verses.
3. 12th Thirumurai - Thiru-th-thondar Puranam by Sekkizhar Swamigal - consisting 4286 verses.
4. Saiva Darshanam - one verse relating to each 275 temples visited and worshipped by the three authors of Thevaaram.

It may not be out of place to mention here, even for this publication (First Thirumurai), he has offered his valuable services in a great manner.

Similarly, my special gratitude goes equally to Dr. M. Kuppuswami, who has gone through and corrected the entire translation work which could be lest forgotten.

My grateful thanks are due to the following scholars who have rendered very valuable services to this project Dr. I.K. Subramanian, Dr. R. Vaiyapuri, Mrs. S. Chidambara Vadivoo, Dr. V. Rathinasabapathy, Dr. S. Lakshmi Narayanan, Mrs. R. Kanchana, Dr. M.G. Srinivasan, my nephew Mr. Puliyur Subramania Pillai, Mr. Pon Veerabahu, Mr. Pon Velumayil, our committee members namely, Vice President Mr. P. N. Nayagam, Treasurer R.V.P. Gopalakrishnan, Secretary Mr. P. J. Victor, my daughter Mrs. A. Sivagami and many others.

I would like to say a word about my transliteration work. I started the work; but before proceeding further I came to know that Dr. Malton, Head of the Department of Indology, Cologne University, Germany has mastered our Tamil language and transliterated the Thevaaram. My good friend Dr. N. Ganesan of USA came forward and gave me the CD in which Dr. Malton's transliteration of the entire Thevaaram was recorded. I am therefore using it for this publication. Through this note, I am conveying my gratitude to these two gentlemen.

My thanks are also due to Mr. Siva Murugan and Mr. G. Parthasarathy of M/s. Siva Computers, Palayamkottai who spared no pains in composing the entire work in a best possible manner. Also my thanks are due to M/s. Sudarsan Offset Printers, Sivakasi for bring out this publication in an appreciating manner. The co-operation given by the above persons are innumerable.

In U.S.A., Dr. S. G. Appan, Ph.D., my second son-in-law gave me immense help in raising funds in that country, apart from his own substantial contribution. He also helped me and made suitable arrangements for clearing the goods and releasing them at the temple with a great function and to dispatch them to various donors. The committee members in U.S.A. Emiritus Priest Raja Rathina Pattar, Er. S. Kannappan and Dr. Venugopal Menon, M.D., also did a very great help in raising the funds. I owe my gratitude to these three members also.

There are many more friends in U.S.A., U.K. and Canada who came forward to donate substantially for this Project. I am grateful to all of them, I cannot forget a few of them who donated very substantially to this Project viz., Dr. S. Sivayogam, Dr. Mrs. Indira Sivayogam both from U.K., Dr. Maheswaran, Mrs. Geetha Maheswaran (U.K.),

Mr. K. Chokkalingam and Mrs. Arumugapriya Chokkalingam, U.K. and Sri Rajan Pillai of New Mexico, U.S.A.

In India also, many friends came forward willingly and donated substantially for this Project. I am grateful to them also. I cannot but forget them particularly, Mrs. & Mr. Rm.K.V. Thiagarajan, Mrs. & Mr. Rm.K.V. Nellaiappan and other Rm.K.V. Family Members. Mr. K. Balasubramanian, and his wife Mrs. Meenambal, Raja of Singampatti Sriman T. N. S. Murugadoss Theerthapathy, Dr. Rasa Vasanthakumar, Ph.D., Correspondent of Karpagam Arts and Science College and other Institutions, Coimbatore, Er. M. Marimuthu and his wife Mrs. Gomathi Ammal of Coimbatore, Mr. Manickam, Chennai, and our secretary Mr. P. J. Victor, Air Force Wing Commander (Retd.).

Apart from the names I have written and still many more I am unable to write here in the Preface owing to limited space. However, I offer my gratefulness to one and all. Of course, the names of all the donors are shown separately at the end of the second volume for each country.

I hereby declare sincerely that I am able to bring out this mega project book by the grace of Lord Civa and the blessings of all Guru Maha Sannithanams only and not by myself. I am fully responsible for all the mistakes you might find in this book. If possible kindly inform me.

I pray to Lord Civa to shower his blessings on us all.
Let the Saiva faith spread to all the four corners of the world;
Let the Saiva Holy Scriptures reach the hands of the entire humanity in the world;
Let humanity prosper with Supreme Love for one another;
Hail to Lord Civa!
Hail to Saint Thiru-gnaana-Sambandar!

General Editor

செந்தமிழ் சிவநெறிச் செல்வர்;
சிவத் திருத் தொண்டர்;
திருமுறை ஆராய்ச்சிச் செம்மல்
சித்தாந்த இரத்தினம்

**V. Arumugam,**
President,
Socio Religious Guild.

"APPAR ILLAM"
21-Fifth Cross Street,
Maharajanagar,
Tirunelveli - 627 011
Phone: 0462-2574468
E-Mail: apparva@yahoo.com

June 6, 2007.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்

# திருஞானசம்பந்தர் அருள் வரலாறு

**வித்துவான் திரு. வி. சா. குருசாமி தேசிகர், எம். ஏ.,**
பேராசிரியர், அனைத்துலகச் சைவ சித்தாந்த ஆராய்ச்சி நிறுவனம்,
தருமை ஆதீனம், தருமபுரம், அவர்கள் எழுதியது

## திருஞானசம்பந்தர் துதி

**பரசமய கோளரியைப் பாலறா வாயனைப் பூம் பழனம் சூழ்ந்த**
**சிரபுரத்துத் திருஞான சம்பந்தப் பெருமானைத் தேய மெல்லாம்**
**குரவையிடத் தமிழ்வேதம் விரித்தருளும் கவுணியர்கள் குலதீபத்தை**
**விரவிளமை ஆளுடைய வென்றிமழ இளங்களிற்றை விரும்பி வாழ்வாம்.**
– சிவஞான முனிவர்.

**வேதநெறி தழைத்தோங்க மிகுசைவத் துறைவிளங்கப்**
**பூதபரம் பரைபொலியப் புனிதவாய் மலர்ந்தழுத**
**சீதவள வயற்புகலித் திருஞான சம்பந்தர்**
**பாதமலர் தலைக்கொண்டு திருத்தொண்டு பரவுவாம்.**
**– சேக்கிழார் (12–34–1904)**

திருச்சிற்றம்பலம்

பன்னிரு திருமுறைகளுள் முதல் மூன்று திருமுறைகளை அருளிச் செய்தவர் திருஞானசம்பந்தர். இவர்தம் அருள் வரலாற்றைப் பெரிய புராணத்தில் 1256 பாடல்களால் சேக்கிழார் சுவாமிகள் அழகுற விரித்துரைத்துள்ளார். சைவசமய ஆசாரியர்கள் நால்வரில் முதல் ஆசாரியராகவும், அறுபான் மும்மை நாயன்மார்களில் ஒருவராகவும் விளங்கும் இவர் வரலாற்றை முதன்முதல் சுந்தரர் திருத்தொண்டத் தொகையில்,

**"வம்பறா வரிவண்டு மணம் நாற மலரும்**
**மதுமலர்நற் கொன்றையான் அடியலால் பேணா**
**எம்பிரான் சம்பந்தன் அடியார்க்கும் அடியேன்"**
**7 – 39 – 4 – 7621.**

எனக் குறிப்பிட்டு அருளியதோடு, தாம் அருளிய தேவாரத் திருப்பதிகங்களிலும் திருஞானசம்பந்தர் பெருமைகளைப் போற்றிப் பாடியுள்ளார்.

திருத்தொண்டர்களின் வரலாறுகளை மேலும் விளக்கி, திருத்தொண்டர் திருவந்தாதி பாடிய நம்பியாண்டார் நம்பிகள், இரண்டு பாடல்களில் இவர் வரலாற்றை அந்நூலில் விளக்கியதோடு பதினொராம் திருமுறையில் இலங்கும் ஆறு பிரபந்தங்களில் திருஞானசம்பந்தர்



திருஞானசம்பந்தர்

THIRU-GNAANA-SAMBANDAR

வரலாற்றையும் அவர்தம் அருள் நலங்களையும், அவர் அருளிய தேவாரத் திருமுறைகளின் பெருமைகளையும் விளக்கியுள்ளார். இவ்வாறு மிக விரிந்த புகழாளராகிய திருஞானசம்பந்தர் அருள் வரலாற்றைச் சுருக்கமாகக் காண்போம்.

**தோற்றம்:**

சோழவள நாட்டில் **பிரமபுரம், வேணுபுரம், புகலி, வெங்குரு, தோணிபுரம், பூந்தராய், சிரபுரம், புறவம், சண்பை, சீகாழி, கொச்சைவயம், கழுமலம்** என்னும் பன்னிரு திருப்பெயர்களை உடைய சீகாழிப்பதியில் கவுணியர் கோத்திரத்தில் அந்தணர்குலத்தில் சிவபாதஇருதயர் என்னும் வேதியர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர்தம் அருமைத் துணைவியராக அமைந்தவர் பகவதியார் எனப் பெறுவார். இருவரும் இணைந்து சிவநெறி போற்றி வாழ்ந்து வரும் காலத்தில் தமிழகத்தில் சமண புத்த சமயங்கள் தலை தூக்கி நின்றன. வேதநெறி வளர்ச்சி குன்றியிருந்தது. மக்கள் உத்திராட்சம், திருநீறு முதலிய சாதனங்களைப் போற்றாது வாழத் தொடங்கினர். அவற்றைக் கண்ட சிவபாதஇருதயர் பரசமயத்தை நிராகரித்து அதனை இல்லாமல் ஆக்கும் மைந்தர் ஒருவரைத் தமக்குத் தந்தருளுமாறு திருத்தோணிபுரத்து இறைவனை வேண்டி வந்தார்.

திருத்தோணிபுரத்து இறைவர் திருவருளால் அன்னை பகவதியார் மணிவயிறு வாய்த்தார்கள். ஞாயிறு முதலிய கோள்கள் உச்சநிலையில் அமைந்த நற்பொழுதில், ஒரு திருவாதிரைத் திருநாளில், சிவநெறி சிறந்து விளங்கவும், தமிழ்மக்கள் செய்த தவம் நிரம்பவும், தவநெறி தழைக்கவும், திசைகளில் தென்திசையே சிறப்பெய்தவும், செழுந்தமிழ் வழக்கு ஏனைய மொழிகளின் வழக்கை வென்று மேம்படவும், இசைத்திறன் யாண்டும் நிலை பெறவும், இறையருள் விளக்கம் எங்கும் உண்டாகவும், புறச்சமயங்கள் பொலிவிழக்கவும் சீகாழிப்பதியில், எவ்வுயிர்க்கும் சிவமாந்தன்மையை வழங்கும் ஆளுடைய பிள்ளையார் திருஅவதாரம் செய்தருளினார். அவரது தோற்றத்தால் எவ்வுயிர்களும் மகிழ்வுற்றன. வேதவிதிப்படி பெயரிடுதல், தொட்டிலிற் கிடத்தல் முதலிய சடங்குகள் உரிய காலங்களில் நிகழ்ந்தன. பகவதி அம்மையார் இறைவன் திருவடிப் பரவும் பேரன்பைத் தம் திருமுலைப்பாலுடன் கூட்டி ஊட்டி அன்பான அரவணைப்பில் ஆளுடைய பிள்ளையாரை வளர்த்து வந்தார். முன்னைப் பிறப்பில் சிவபிரானை வழிபட்டுச் சிவானந்தம் நுகர்ந்து வந்த பிள்ளையாருக்கு, சிவனிடமிருந்து வந்த பிரிவுணர்வு அவ்வப்போது வர, வெருக்கொண்டு அழும் நிலை அவர்பால் இருந்தது. இந்நிலையில் பிள்ளையாருக்கு வயது இரண்டாண்டுகள் நிரம்பின. மூன்றாவது வயதின் தளர் நடைப்பருவத்தில் பிள்ளையார் ஏனைய குழந்தைகளோடு வீதியில் விளையாடும் நிலையை எய்தினார்.

**ஞானப்பால் உண்டது**

ஒரு நாள் காலையில் சிவபாத இருதயர் வேதவிதிப்படி நீராடுதற்குத் திருக்கோயில் உள்ளிருக்கும் பிரமதீர்த்தத்திற்குப் புறப்பட்டார். தந்தையார் வெளியில் செல்வதைக் கண்ட பிள்ளையார் தானும் உடன் வரவேண்டுமென்ற குறிப்போடு கால்களைக் கொட்டிக் கொண்டு அழுதார். தந்தையார் தன் மைந்தரைப் பார்த்து, 'உன் செய்கை இதுவாயின் உடன் வருக' எனக் கூறி அவரையும் உடனழைத்துக் கொண்டு சென்று பிரம தீர்த்தக் கரையில் பிள்ளையாரை இருத்திவிட்டு விரைந்து நீராடித் திரும்பும் எண்ணத்தோடு நீர் நிலையில் இறங்கினார். சில நிமிடங்கள் மூழ்கியிருந்து செபித்தற்குரிய அகமர்ஷண மந்திரங்களைச் சொல்லிக் கொண்டு நீரில் மூழ்கினார்.

இந்நிலையில் கரையில் அமர்ந்திருந்த பிள்ளையார் தந்தையாரைக் காணாமல் முற்பிறப்பின் நினைவு மேலிட்டவராய் திருத்தோணி மலைச் சிகரத்தைப் பார்த்துக் கண்மலர்கள் நீர் ததும்பக் கைமலர்களால் பிசைந்து வண்ணமலர்ச் செங்கனிவாய் மணியதரம் புடை துடிப்ப 'அம்மே அப்பா' என அழைத்து அழுதருளினார். பிள்ளையின் அழுகுரல் கேட்ட நிலையில் தோணிச் சிகரத்து இறைவர் பெரியநாயகர் இறைவியார் பெரியநாயகியுடன் விடைமீது அமர்ந்து குளக்கரைக்கு எழுந்தருளினார். பெருமான் அம்மையை நோக்கி 'அழுகின்ற இப்பிள்ளைக்கு உன் திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத்தில் கறந்து ஊட்டுக' எனப் பணித்தார். அம்மையாரும் அவ்வாறே தன் திருமுலைப்பாலைப் பொற்கிண்ணத்தில் கறந்து சிவஞானமாகிய அமுதத்தைக் குழைத்து அழுகின்ற குழந்தை கையில் கொடுத்து உண்ணச் செய்து அழுகை தீர்த்தருளினார். தேவர்க்கும் முனிவர்க்கும் கிடைக்காத பேரின்பம் அந்த நிலையில் பெற்ற பிள்ளையார் திருஞானசம்பந்தராய் அபரஞானம் பரஞானம் அனைத்தும் கைவரப் பெற்றார்.

**எண்ணரிய சிவஞானத்து இன்னமுதம் குழைத்தருளி**
**உண் அடிசில் எனஊட்ட உமையம்மை எதிர்நோக்கும்**
**கண் மலர் நீர் துடைத்தருளிக் கையில் பொற் கிண்ணம்அளித்(து)**
**அண்ணலை அங்கு அழுகை தீர்த்து அங்கணனார் அருள் புரிந்தார் (12–34–1971).**

**சிவன் அடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்**
**பவம் அதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்**
**உவமை இலாக் கலைஞானம் உணர்வறிய மெய்ஞ்ஞானம்**
**தவமுதல்வர் சம்பந்தர் தாம் உணர்ந்தார் அந்நிலையில் (12–34–1973).**

எனச் சேக்கிழார் இதனைப் போற்றி உரைத்தலைக் காணலாம்.

அப்பொழுது நீரில் மூழ்கி நியமங்களை முடித்துக் கரையேறிய சிவபாத இருதயர் சிவஞானத் திருவுருவாய்க் கரையில் நிற்கும் தம் மைந்தரைக் கண்டார். கடைவாய் வழியாகப் பால் வழிந்திருப்பதைக் கண்ட அவர், தன் மகனார்க்கு யாரோ பால் அளித்துச் சென்று உள்ளார்கள் என்று எண்ணியவராய் ஞான போனகரை நோக்கி; 'பிள்ளாய் நீ யார் அளித்த பால் அடிசிலை உண்டாய்? எச்சில் கலக்குமாறு உனக்கு இதனை அளித்தவர் யார்? காட்டுக' என்று வெகுண்டு தரையில் கிடந்த கோல் ஒன்றைக் கையில் எடுத்து ஒச்சியவராய் வினவினார்.

**சிறிய பெருந்தகையார் தம் உள்ளத்துள் எழுந்த உயர் ஞானத் திருமொழியால் தமிழ் என்னும் மொழியின் முதல் எழுத்தாகிய தகரமெய்யில் பிரணவத்தை உயிராய் இணைத்துத் தனக்குப் பாலளித்த உமைஅம்மையின் தோடணிந்த திருச்செவியைச் சிறப்பிக்கும் முறையில் 'தோடுடைய செவியன்'** என்ற முதற்பெரும் பாடலால் தனக்குப் பாலளித்த கடவுளின் அடையாளங்களைச் சுட்டித் திருப்பதிகம் பாடி அருளிச் செய்தார். அத்தகைய தேவாரத்தின் தெய்வீக முதல்பாடல் கீழ்வருமாறு:

தோடு உடைய செவியன், விடையேறி ஓர்தூவெண்மதி சூடி
காடு உடைய சுடலைப் பொடி பூசி, என் உள்ளம் கவர் கள்வன்
ஏடு உடைய மலரான் முனைநாள் பணிந்து ஏத்த அருள் செய்த
பீடு உடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன் அன்றே. 1–1–1.

அதனைக் கேட்ட சிவபாத இருதயர் அடித்தற்கு என ஓங்கிய கோல் நெகிழ்ந்து விழ வியப்பும் வெருட்சியும் மேலிட்டவராய் நின்றார். திருஞானசம்பந்தர் தந்தையார் உடன் வர ஆலயம் சென்று பிரமபுரத்துப் பெருமானை வணங்கிப் போற்றி தம் இல்லம் சென்றடைந்தார்.

இச்செய்தி நகர் முழுவதும் பரவிய நிலையில் அன்பர்கள் திருஞானசம்பந்தரைப் போற்றி வணங்க, சிவபாத இருதயர் இல்லம் வந்து குழுமினர்.

## முதல் திருத்தல யாத்திரை

### பொற்றாளம் பெற்றது

உமையம்மையார் அளித்த ஞானவாரமுதம் உண்டு திருநெறிய தமிழ் பாடிய திருஞானசம்பந்தர் தம் திருமாளிகையில் இறையருளையே எண்ணியிருந்து மறுநாள் காலையில் துயிலுணர்ந்து எழுந்து நீராடி திருக்கழுமலத்து ஈசனை வணங்கிப் போற்றி, சீகாழிக்கு அருகில் உள்ள திருக்கோலக்காவைத் தரிசிக்கும் வேட்கை உடையவராய் அத்தலத்தை அடைந்து ஆலயத்தை வலம் வந்து இறைவன் திருமுன் நின்று 'மடையில் வாளை' எனத் தொடங்கும் இசைத்தமிழ்ப் பதிகத்தைத் தம் கைமலர்களால் தாளம் இட்டுப் பாடும் பொழுது கோலக்கா

இறைவன் அருளால் திருவைந்தெழுத்து எழுதப் பெற்ற பொற்றாளங்கள் திருஞானசம்பந்தர் கையில் வந்தன. ஞானசம்பந்தர் அத்தாளத்தைத் தலைமேல் கொண்டு போற்றி, தாளமிட்டு அத்திருப்பதிகத்தைப் பாடிப் போற்றினார்.

திருஞானசம்பந்தர் மேற்கொண்ட முதல் தலயாத்திரையாக இது அமைந்தது. திருக்கோலக்காவில் பொற்றாளம் பெற்றுச் சீகாழி திரும்பிய ஞானசம்பந்தர் நேரே ஆலயம் சென்று 'பூவார் கொன்றை' எனத் தொடங்கும் திருப்பதிகத்தைத் தாளமிட்டுப் பாடிப் போற்றித் தம் மாளிகையை அடைந்தார்.

## இரண்டாவது திருத்தல யாத்திரை

### திருநனிபள்ளி யாத்திரை

ஞானசம்பந்தரின் தாயார் பகவதி அம்மையார் பிறந்த நனிபள்ளியில் உள்ள அந்தணர்கள், அவர் மூவாண்டில் சிவஞானம் பெற்றதையும் சிவபிரானால் பொற்றாளம் அருளப் பெற்றதையும் கேள்வியுற்றுத் தங்கள் ஊருக்கு எழுந்தருள வேண்டுமென ஞானசம்பந்தரை வேண்டினர். அதற்கு இசைந்த ஞானசம்பந்தர் தோணிபுரத்து இறைவரை வணங்கி விடைபெற்றுத் தாமரை மலர் போன்ற தம் திருவடி நோக நனிபள்ளி நோக்கி நடந்தருளினார். ஆளுடைய பிள்ளையார் அடிமலர் வருந்தக் கண்ட சிவபாத இருதயர் ஞானசம்பந்தரைப் பிறர் தூக்கிச் செல்வதை விரும்பாது தாமே தன் திருத்தோளில் அமர்த்திக் கொண்டு செல்வாராயினார். நனிபள்ளியை அணுகிய நிலையில் ஞானசம்பந்தர் 'எதிரே தோன்றும் இப்பதியாது' எனக் கேட்கத் தந்தையார் 'அதுதான் நனிபள்ளி' எனச் சொல்லக் கேட்டுக் 'காரைகள் கூகைமுல்லை' எனத் தொடங்கித் திருப்பதிகம் பாடிக் கொண்டே நனிபள்ளி ஆலயத்தை அடைந்து வணங்கிப் போற்றி அவ்வூரின் அருகில் உள்ள தலைச்சங்காடு, சாய்க்காடு, வெண்காடு முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு மீண்டும் சீகாழிப் பதிக்குத் திரும்பினார். வளம் குன்றிப் பாலையாயிருந்த நனிபள்ளி, ஞானசம்பந்தர் வரவால் நெய்தலாய்ப் பின் மருதமாயிற்று. இது ஞானசம்பந்தர் வரலாற்றில் அமைந்த இரண்டாவது தல யாத்திரை ஆகும்.

## மூன்றாவது திருத்தல யாத்திரை

சில நாட்கள் கழித்து ஞானசம்பந்தர் மயேந்திரப் பள்ளி, குருகாவூர், முல்லைவாயில் முதலிய தலங்களைச் சென்று வணங்கி மீண்டார். இது மூன்றாவது தல யாத்திரை.

### திருநீலகண்ட யாழ்ப்பாணர் தொடர்பு

திருஞானசம்பந்தர் மிக இளைய பருவத்திலேயே இறைவனால் ஆட்கொள்ளப் பெற்ற அற்புத நிகழ்ச்சியைக் கேள்வியுற்று அவரை வணங்குதற் பொருட்டு, திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர்தம் மனைவியார் மதங்க சூளாமணியாரும் சீகாழிப் பதியை அடைந்தனர். அவ்விருவரின் வரவறிந்த ஞானசம்பந்தர் அவர்களை எதிர்சென்று அழைத்து வந்து திருத்தோணிபுரத் திருக்கோயிலில் இருத்தி யாழிசையில் இறைவரைப் போற்றுமாறு செய்து அவர்கள் தங்குதற்கு வேண்டிய வசதிகள் அமைத்துக் கொடுத்தருளினார். திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஞானசம்பந்தர் பாடும் பாடல்களை யாழிசையில் வாசித்து இன்புறுத்தும் பணியை மேற்கொண்டார்.

### நான்காவது திருத்தல யாத்திரை

### தில்லை செல்லுதல்

திருஞானசம்பந்தர் அடியவர் புடைசூழ யாழ்ப்பாணருடன் கொள்ளிட நதியைக் கடந்து தில்லை சென்றார். **தென்திசை வாயில் வழியே ஆலயத்தினுட் சென்று** பேரம்பலத்தை வணங்கிக் 'கற்றாங்கு எரியோம்பி' 'ஆடினாய் நறுநெய்' என்பனவாகிய திருப்பதிகத்தால் பாடிப் போற்றி வழிபட்டார். அத்தலத்தில் தங்குதற்கு மனமின்றி திருவேட்களத்தில் தங்கியிருந்து நாள்தோறும் தில்லைக் கூத்தனை வழிபட்டார். அங்குத் தங்கியிருக்கும் நாட்களில் திருக்கழிப்பாலை, திருநெல்வாயில் முதலிய தலங்களுக்கும் சென்று வழிபட்டார்.

திருநீலகண்ட யாழ்ப்பாணர் தில்லையின் மேற்றிசையில் வெள்ளாற்றின் கரையில் உள்ள தலங்களை வழிபட வேண்டுமென வேண்ட ஞானசம்பந்தரும் அதற்கிசைந்து புறப்பட்டார். சிதம்பரத்திற்கு அருகே உள்ள திருஎருக்கத்தம்புலியூரை அடைந்தவுடன் இத்தலம் அடியேன் பிறந்த தலம் என யாழ்ப்பாணர் கூறக் கேட்டு மகிழ்ந்து திருக்கோயிலுக்குச் சென்று பதிகம் பாடிப் பரவினார்.

### முத்துச் சிவிகை, குடை, சின்னம் பெறல்

ஞானசம்பந்தர் திருஎருக்கத்தம்புலியூரில் இருந்து திருமுதுகுன்றம், திருப்பெண்ணாகடம் ஆகிய தலங்களை வணங்கிக் கொண்டு திருநெல்வாயில் அரத்துறை செல்லப் புறப்பட்டார். தந்தையார் தோள்மேல் அமர்ந்து செல்ல மனம் இன்றித் திருவடி நோக நடந்தே வருவதைக் கண்ட தந்தையாரும் அடியவர்களும் மிகவும் பரிவுற்றனர். திருநெல்வாயில் அரத்துறை அணுகியபோது

மாலை நேரம் வந்தது. வழி நடந்த களைப்பு வர ஞானசம்பந்தர் அடியவர்களோடு மாறன்பாடி என்ற ஊரில் தங்கினார்.

அரத்துறை இறைவன் ஞானசம்பந்தரின் வழிநடை வருத்தத்தை அறிந்து அரத்துறை அந்தணர்கள் கனவில் தோன்றி 'ஞானசம்பந்தன் நம்மைக் காண வருகின்றான். அவனுக்கென ஆலயத்துள் முத்துச்சிவிகை, முத்துக்குடை, முத்துச் சின்னம் ஆகியன வைத்துள்ளோம். எடுத்துச் சென்று கொடுத்து அழைத்து வருக' எனப் பணித்தருளினான். அவ்வாறே இறைவன் ஞானசம்பந்தர் கனவிலும் தோன்றி 'யாம் அளிக்கும் பொருள்களை ஏற்று வருக' எனக் கூறியருளினான். அரத்துறை அந்தணர்கள் வியந்து எழுந்து திருக்கோவில் சென்று இறைவன் வைத்துள்ள அப்பொருட்களைக் கண்டு மெய்சிலிர்த்து ஞானசம்பந்தரிடம் சென்று நடந்ததைக் கூறிச் சிவிகையில் ஆரோகணித்து அரத்துறை வரவேண்டுமென வேண்டினர். ஞானசம்பந்தர் இறைவன் திருவருளை எண்ணி வியந்து அச்சிவிகையை மும்முறை வலம் வந்து பணிந்து திருவைந்தெழுத்தோதி அச்சிவிகையில் அமர்ந்து 'எந்தை ஈசன் எம்பெருமான்' என்ற திருப்பதிகத்தால், இறையருளை வியந்து புறப்பட்டுச் சென்று அரத்துறை ஈசனை வணங்கிப் போற்றினார். திருநெல்வாயில் அரத்துறையில் சில நாள் தங்கியிருந்து புறப்பட்டுச் சிவிகையில் விசையமங்கை, திருவைகா, புறம்பயம், சேய்ஞலூர், திருப்பனந்தாள், பந்தணைநல்லூர், ஓமாம்புலியூர், வாழ்கொளிபுத்தூர், கடம்பூர், நாரையூர், கருப்பறியலூர் முதலிய தலங்களைப் பணிந்து திருப்பிரமபுரம் மீண்டருளினார். இது நான்காவது தல யாத்திரை ஆகும்.

**உபநயனம்**

திருஞானசம்பந்தருக்கு ஏழாவது வயது தொடங்கியது. வேதியர்கள் தங்கள் குலமரபை எடுத்துக்கூறி இரு பிறப்பாளர் நிலையை விளக்கி அவருக்கு முப்புரிநூல் அணிவிக்கும் உபநயனச் சடங்கினைச் செய்து 'மறை நான்கும் தந்தோம்' என்றனர். பிள்ளையார் இறையருளால் எல்லாக் கலையுணர்வுகளையும் ஓதாது உணர்ந்தவர். ஆதலின் வேதங்களின் பல பகுதிகளையும் அவற்றின் பொருளோடு ஓதக் கேட்ட அந்தணர்கள் வேதங்களில் தங்கட்கிருந்த ஐயங்களை ஞானசம்பந்தரிடம் கேட்டுத் தெளிவு பெற்றனர். ஞானசம்பந்தர் அவர்களை நோக்கி வேதம் நான்கினும் மெய்ப் பொருளாய் விளங்கும் திருவைந்தெழுத்தின் சிறப்பை, 'துஞ்சலும் துஞ்சல்' என்று தொடங்கிப் பாடி அனைவர்க்கும் உணர்த்தி அருளினார்.

**திருநாவுக்கரசர், சம்பந்தர் முதல் சந்திப்பு**

உபநயனச் சடங்கு முடிந்து ஞானசம்பந்தர் சீகாழியில் தங்கியிருக்கும் பொழுது, தில்லை வந்தருளிய திருநாவுக்கரசர் ஞானசம்பந்தரை இறைவன் ஆட்கொண்டருளிய அற்புத நிகழ்ச்சியைக் கேள்வியுற்று அவரைக் காணும் பெருவேட்கையோடு சீகாழிப்பதிக்கு எழுந்தருளினார். கல்லைப் புணையாகக் கொண்டு கடலிடைக் கரையேறிய நாவுக்கரசர் பெருமைகளைக் கேட்டறிந்திருந்த ஞானசம்பந்தர் அவர் தன்னைக் காண வருகின்றார் என்பதை அறிந்து அன்பர்களோடு சென்று அவரை எதிர்கொண்டு அழைத்தனர். தூய வெண்ணீறு துதைந்த பொன்மேனியும் தாழ்வடமும் நாயகன் சேவடி தைவரும் நெஞ்சும் அன்பு பாய்வது போல் கண்ணீரும் கொண்டு முதியராய் வந்த திருநாவுக்கரசர் ஞானசம்பந்தரைக் கண்டு வணங்க தன்னை வணங்கிய நாவுக்கரசர் திருக்கரங்களை ஞானசம்பந்தர் தமது எழுதரிய மலர்க்கரங்களால் பற்றிக் கொண்டு, அவரைத் தாமும் எதிர்வணங்கி ‘அப்பரே’ என்று சொல்ல, நாவுக்கரசரும் ‘அடியேன்’ என்றார். இருவரும் அளவளாவி மகிழ்ந்து திருத்தோணிபுரத் திருக்கோயிலுக்கு வந்து வழிபட்டனர். ஞானசம்பந்தர் அப்பரைத் தம் திருமாளிகைக்கு அழைத்துச் சென்றார். இருவரும் திருவமுது கொண்டு அளவளாவி மகிழ்ந்திருந்தனர். சிலநாட்கள் சீகாழிப் பதியில் தங்கிப் போற்றிய அப்பர் பிரியாவிடை பெற்றுச் சோழ நாட்டுத் திருத்தலங்களை வணங்கப் புறப்பட்டார்.

ஞானசம்பந்தர் சீகாழியில் தங்கியிருக்கும் நாள்களில் ‘மொழிமாற்று’, ‘மாலைமாற்று’, ‘திருவியமகம்’, ‘ஏகபாதம்’, ‘இருக்குக்குறள்’, ‘எழுகூற்றிருக்கை’ முதலிய பல திருப்பதிகங்களைச் சித்திரகவிகளுக்குரிய இலக்கியங்களாகப் படைத்துக் காழி இறைவனைப் பாடிக் களிப்புற்றார். திருநீலகண்ட யாழ்ப்பாணரும் அவர்தம் துணைவியார் மதங்க சூளாமணியாரும் அப்பதிகங்களை அவ்வப்போது யாழில் இணைத்து இசைத்து வாழ்ந்து வரலாயினர்.

## ஐந்தாவது பெரிய திருத்தல யாத்திரை

### முயலகன் நோய் தீர்த்தல்

திருஞானசம்பந்தர் தமிழ்நாட்டில் உள்ள பல தலங்களையும் தரிசித்து வழிபடவும், ஆங்காங்குள்ள மக்கட்கு அவற்றின் பெருமைகளை அறிவுறுத்தவும் விரும்பி மிகப் பெரிய தமது ஐந்தாவது தல யாத்திரையை மேற்கொள்ள எண்ணினார். தன் தந்தையாரிடம் அவ்விருப்பத்தைத் தெரிவித்தார். சிவபாத இருதயர் தமது அருமருந்தன்ன பிள்ளையைப் பிரிய மனமின்றி ‘யான் உம்மைப் பிரிந்து ஒருகணமும் தரியேன் ஆயினும், இருமை இன்பம் அளிக்கும் யாகம் ஒன்றையும்

செய்ய எண்ணுகிறேன். எனவே, சில தலங்கட்கு உம்மோடு வருகிறேன்' என்று கூறி அவரோடு உடன் சென்றார்.

திருஞானசம்பந்தர் திருத்தோணிபுரப் பெருமானை வணங்கி விடைபெற்றுப் பயணம் மேற்கொண்டார். திருக்கண்ணார்கோயில், புள்ளிருக்குவேளூர் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு காவிரி வடகரை வழியே மழவர் நாட்டுத் திருப்பாச்சிலாச்சிராமம் சென்றடைந்தார். அந்நகரில் வாழும் குறுநில மன்னனாகிய கொல்லி மழவன் என்பான் முயலகன் என்ற நோயினால் வருந்தி வந்த தன் மகளைப் பல்வகை மருத்துவம் செய்தும் குணப்படுத்த இயலாத நிலையில் பாச்சிலாச்சிராமத்து ஆலயத்தில் இறைவர் திருமுன் கிடத்தியிருந்தான்.

திருஞானசம்பந்தர் வருகையை அறிந்து அம்மன்னன் நகரை அலங்கரித்து நன்முறையில் அவரை வரவேற்று ஆலயத்துக்கு அழைத்துச் சென்றான். ஆலயத்தில் இளம்பெண் ஒருத்தி உணர்வற்ற நிலையில் நிலத்திற் கிடத்தலைக் கண்டு அம்மழவனை வினவி அறிந்து அப்பெண்ணுக்கு ஏற்பட்ட முயலகன் என்னும் நோயைப் போக்கி அருளுமாறு இறைவனை வேண்டி, 'துணிவளர் திங்கள்' என்று தொடங்கித் திருப்பதிகம் பாடி அருளினார். அந்நிலையில் அப்பெண், நோய் நீங்கி நல் உணர்வு பெற்று எழுந்து ஞானசம்பந்தரை வணங்கிப் போற்றினாள். மழவன் மகிழ்ந்து அவர் திருவடிகளை வணங்கித் தன் நன்றியறிதலைப் புலப்படுத்திக் கொண்டான்.

**பனி நோய் தீர்த்தல்**

பாச்சிலாச்சிராமத்துப் பரமனைப் பணிந்து போற்றிய ஞானசம்பந்தர் அவ்வூரினின்றும் புறப்பட்டு, பைஞ்ஞீலி, ஈங்கோய்மலை முதலான தலங்களை வணங்கிக் கொண்டு கொங்கு நாட்டில் உள்ள கொடிமாடச் செங்குன்றூரைச் சென்றடைந்தார். அங்கு விளங்கும் மாதொரு பாகரைப் போற்றி அருகில் உள்ள திருநணாவை வழிபட்டு, திருச்செங்குன்றூர் வந்து திருமடம் ஒன்றில் தங்கியிருந்தார். அக்காலம் பனிக்காலம் ஆனதால் அந்நிலத்தின் இயல்புப்படி பனிநோய் என்னும் குளிர் காய்ச்சல் அவருடன் வந்த அடியார்களைப் பற்றி வருத்தியது. அதனை அறிந்த ஞானசம்பந்தர் அடியவர்களைப் பற்றியிருந்த அந்நோய் தீருமாறு நஞ்சுண்டு, அமரர்களைக் காத்த திருநீலகண்டப் பெருமானைப் போற்றி 'அவ்வினைக்கு இவ்வினை' என்னும் திருப்பதிகம் அருளிச் செய்தார். அக்கணமே அடியவர்கட்கே யன்றி கொங்கு நாடெங்கிலும் அந்நோய் வாராது நீங்கியது.

## முத்துப் பந்தர் பெற்றது

திருஞானசம்பந்தர் திருச்செங்குன்றூரிலிருந்து புறப்பட்டுப் பாண்டிக் கொடுமுடி, வெஞ்சமாக் கூடல், கருவூர் ஆனிலை முதலிய தலங்களைப் பணிந்து சோழநாடு மீண்டு திருச்சிராப்பள்ளி முதலிய காவிரித் தென்கரைத் தலங்களை வணங்கிக் கொண்டு திருவலஞ்சுழி வந்தடைந்தார். அப்போது இளவேனிற் பருவம் தொடங்கியது. திருவலஞ்சுழி இறைவனை வணங்கிப் பழையாறை மேற்றளியையும் திருச்சத்திமுற்றத்தையும் பணிந்து நண்பகற்போதில் பட்டீச்சுரம் வந்தடைந்தார். சிவபூதங்கள் வானத்தில் மறைந்து நின்று பட்டீசுரர் அளித்த முத்துப் பந்தரை ஏந்தியவாறு 'இது சிவபெருமான் அளித்தது' எனக்கூறி ஞானசம்பந்தரின் சிவிகையின் மேல் ஏந்தி நிழல் செய்தன. அடியார்கள் வானினின்று இழியும் அப்பந்தரை ஏந்தியவர்களாய்த் தண்ணிழலில் ஞானசம்பந்தரை ஆலயத்துக்கு அழைத்துச் சென்றனர். ஞானசம்பந்தர் இறைவனது தடங்கருணையை வியந்தவாறு 'பாடல் மறை' பதிகம் பாடிப் பட்டீச்சுரரை வழிபட்டு மகிழ்ந்தார்.

## உலவாக் கிழி பெறுதல்

ஞானசம்பந்தர் பட்டீச்சுரத்தில் இருந்து புறப்பட்டுப் பல தலங்களையும் வணங்கியவராய்த் திருவாவடுதுறை வந்தடைந்தார். அதுபோது சிவபாத இருதயர், தான் வேள்வி செய்தற்கு ஏற்ற காலம் இதுவாகும். அதற்குப் பொருள் தேவைப்படுவதை ஞானசம்பந்தரிடம் தெரிவித்தார். ஞானசம்பந்தர் தந்தையாருக்கு அளிக்கப் பொருள் இல்லையே என வருந்தியவராய் 'இடரினும் தளரினும்' என்று தொடங்கும் திருப்பதிகத்தால் இறைவனிடம் விண்ணப்பித்தார். சிவபூதம் ஒன்று ஆயிரம் பொன்னடங்கிய பொற்கிழி ஒன்றை ஆலயத்தில் மாசிலாமணியீசர் சந்நிதியில் உள்ள பீடத்தில் வைத்து, இப்பொற்கிழி எடுக்க எடுக்கக் குறையாத உலவாக் கிழி; இறைவர் இக்கிழியை உமக்கு வழங்குமாறு அளித்துள்ளார் எனக் கூறி மறைந்தது. ஆளுடைய பிள்ளையார் உலவாக் கிழியைத் தலைமேற் கொண்டு போற்றி அதனைத் தந்தையார் கையில் கொடுத்து, இக்கிழியின் பொன்னைக் கொண்டு தந்தையாரையும் கழுமலத்தில் உள்ள ஏனைய அந்தணர்களையும் நல்வேள்விகள் பலவும், செய்யுமாறு கூறி வழியனுப்பி வைத்தார்.

## யாழ்மூரி பாடியது

பின்னர் ஞானசம்பந்தர் திருக்கோழம்பம், வைகல் முதலான தலங்களை வணங்கிக் கொண்டு திருத்தருமபுரம் சென்றடைந்தார். திருத்தருமபுரம் திருநீலகண்ட யாழ்ப்பாணரின் தாயார் பிறந்த ஊர், ஆதலின் அங்கு வாழும் அவரது சுற்றத்தார் ஞானசம்பந்தரையும், யாழ்ப்பாணரையும்

அன்புடன் வரவேற்றுப் போற்றினர். பாணர், தன் உறவினர்களோடு உரையாடுகையில், அவர்கள் ஞானசம்பந்தரின் திருப்பதிக இசையைப் பாணர் உடனிருந்து யாழில் வாசித்து வருதலினாலேயே திருப்பதிக இசை சிறப்படைகிறது என முகமன் உரை கூறினர். அதைக் கேட்டு மனம் பொறாத திருநீலகண்ட யாழ்ப்பாணர் ஞானசம்பந்தரை வணங்கித் திருப்பதிக இசை யாழில் அடங்காதது என்பதனை உறவினர்கள் உணருமாறு செய்தருள வேண்டுமெனப் பணிந்தார். ஞானசம்பந்தர் கண்டத்திலும் கருவியிலும் அடங்காத இசைக் கூறுடைய 'மாதர் மடப்பிடி' என்ற திருப்பதிகத்தை அருளிச் செய்தார். யாழ்ப்பாணர் அப்பதிக இசை தம் கருவியில் அடங்காததை உணர்ந்து இக்கருவியினாலன்றோ உறவினர் ஞானசம்பந்தரையும் தன்னையும் ஏற்றத் தாழ்வு கற்பிக்க முற்பட்டனர் என, அதனை உடைத்தற்கு ஓங்கினார். ஞானசம்பந்தர் அதனைத் தடுத்து, இறைவன் பெருமை இக்கருவியில் அடங்குமெனக் கருதுதல் கூடாது. ஆயினும் இயன்றவாறு வாசிப்பீர் எனத் திரும்பக் கொடுத்து, இசைத் தொண்டு செய்யப் பணித்து, சில நாள் அப்பதியில் தங்கி, திருநள்ளாறு அடைந்து 'போகமார்த்த பூண் முலையாள்' எனத் தொடங்கித் திருப்பதிகம் பாடி நள்ளாற்றிறைவரை வணங்கித் திருச்சாத்தமங்கைக்கு எழுந்தருளினார்.

**நீலநக்கர் சிறுத் தொண்டர் உபசரிப்பு**

திருச்சாத்த மங்கையில் நீலநக்க நாயனார் ஞானசம்பந்தரை எதிர்கொண்டழைத்துத் தம் திருமனையில் திருவமுதளித்து உபசரித்தார். திருச்சாத்தமங்கையில் அயவந்தி என்னும் ஆலயத்தில் உள்ள இறைவனை வழிபட்டார். அத்தலத் திருப்பதிகத்தில் நீலநக்கரின் அன்பின் திறத்தைப் பாராட்டினார். பின்னர்ப் பல பதிகளையும் வழிபட்டுத் திருச்செங்காட்டங்குடியை அடைந்தார்.

திருச்செங்காட்டங்குடியில் கணபதீச்சுரம் சென்று 'பைங்கோட்டு மலர்ப் புன்னை' எனத் தொடங்கிப் பதிகம் பாடிப் பரவினார். அத்திருப்பதிகத்தில் சிறுத்தொண்டர் பக்திச் சிறப்பைப் பாராட்டித் திருமருகல் சென்றடைந்தார்.

**விடந் தீர்த்தல்**

திருஞானசம்பந்தர் மருகற் பெருமானை வழிபட்டுச் சிலநாள் அங்குத் தங்கியிருந்தார். அப்பொழுது ஓர் அற்புத நிகழ்ச்சி நடந்தது.

வணிகன் ஒருவன் தனக்கு முறைப் பெண்ணான கன்னி ஒருத்தியை உடன் அழைத்துக் கொண்டு தன்னூர் செல்பவன், மாலை நேரம் வந்ததால் தன் பயணத்தைத் தொடர முடியாமல்

திருமருகல் கோயிலின் அருகிலிலுள்ள ஒரு திருமடத்தில் தங்கினான். இரவில் வணிகனை அரவு தீண்டி விட்டது. விடந்தலைக்கேறி மயங்கிச் சோர்ந்தான். அந்நிலையில் அவனுடன் வந்த பெண் மணமாகாத நிலையில் அவனைத் தொட இயலாதவளாய்ப் பெற்றோர்க்குத் தெரியாமல் உடன் போக்காக வந்தவளாதலின் செய்வதறியாது திகைப்புற்று அழுது அரற்றினாள். ஊர் மக்கள் மந்திரம் வல்லாரைக் கொண்டு மந்திரித்தும் பயனின்றிப் போயிற்று. வணிகனின் உடல் அருகே இருந்து கதறி அழும் பெண் 'நஞ்சுண்டு தேவர்களைக் காத்த பெருமானே, மன்மதன் உயிரை அவன் மனைவி வேண்ட அளித்தருளிய கருணையாளனே, மார்க்கண்டேயர்க்காக காலனை உயிர்துறக்கச் செய்தருளியவனே, என் நாயகனைப் பற்றிய விடவேகம் தணியுமாறும், துன்பக் குழியிலிருந்து நான் கரையேறுமாறும் அருள் புரியவேண்டும்' என இறைவனை வேண்டி அழுதரற்றிக் கொண்டிருந்தாள். அவ்வழியில் காலை இளம்போதில் மருகற் பெருமானை வழிபட வந்த திருஞானசம்பந்தப் பெருமானின் திருச்செவிகளுக்கு இவ்அவலக்குரல் எட்டியது. உடன் ஞானசம்பந்தர் அத்திருமடத்தை அடைந்து அவளுக்கு ஆறுதல் கூறி நடந்ததை வினாவினார். அப்பெண் ஞானசம்பந்தரை வீழ்ந்து வணங்கித் தன் வரலாற்றைச் சொல்லலானாள்.

'வைப்பூரில் உள்ள தாமன் என்போன் என் தந்தை. அவனுக்கு மகளிர் எழுவர். அரவு தீண்டப்பட்டவன் என் தாய் மாமன். என் தந்தை தன் மகளிருள் மூத்தவளை இந்தத் தாய்மாமனுக்குத் தருவதாக முதலில் கூறியிருந்தும், பொருளாசையால் பிறன் ஒருவனுக்கு மணம் செய்வித்து விட்டார். அடுத்த பெண்ணை உனக்குத் தருகிறேன் என்று ஆறுதல் கூறிக் கொண்டே ஆறு பெண்களையும் இவ்வாறே பிறருக்கு மணம் முடித்து விட்டார். ஏழாவது பெண்ணாகிய நான், என்னையும் இவ்வாறே வேறு ஒருவருக்கு மணம் செய்வித்துத் தன் மருகனைத் தன் தந்தை தளர்வுறச் செய்வார் என்ற எண்ணத்தால் உறவினர் யாவருக்கும் தெரியாமல் இவரோடு போந்து மணம் முடித்து வாழ எண்ணினேன். வழியிடையே இவ்வூரில் அரவு தீண்டி இவரும் இறந்த நிலையில் உள்ளார். கடல் நடுவே கலம் கவிழ்ந்த நாயகன் போலத் துன்பத்துக்கு ஆளானேன். இந்நிலையில் என் சுற்றத்தார்போல என்பால் பரிவு காட்டி அருள் செய்கின்ற நீங்கள் என் துன்பத்தை துடைத்தருள வேண்டும் எனக் குரை இரந்தாள். இந்தப் பெண்ணின் ஆற்றாமையைக் கேட்டுத் திருவுளம் இரங்கிய ஞானசம்பந்தர் மருகற் பெருமான் ஆலயம் சென்று பணிந்து 'உன் பெயர் கூறி உள்ளிழையாள் உளம் மெலிந்து வருந்துதல் அருட்கடலாகிய உனக்கு அழகோ' என முறையிடும் நிலையில் 'சடையா யெனுமால்' எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடிப் போற்றினார். அந்நிலையில் வணிகனும் உயிர் பெற்று எழுந்தான். இருவரும் தங்கட்கு வாழ்வளித்த

ஞானசம்பந்தர் திருவடிகளைப் பணிந்தனர். ஞானசம்பந்தர் அவ்விருவருக்கும் இறைவன் திருமுன்னிலையில் மணம் புணரும் பெருவாழ்வு வழங்கி வாழ்த்தினார்.

திருஞானசம்பந்தர் திருமருகலில் தங்கியிருந்தபோது, சிறுத்தொண்ட நாயனார் அவரை வணங்கி மீண்டும் திருச்செங்காட்டங்குடிக்கு எழுந்தருளுமாறு வேண்டினார். மருகற் பெருமானை வணங்கி விடைபெறச் சென்ற ஞானசம்பந்தருக்கு இறைவன் செங்காட்டங்குடிக் காட்சியைக் காட்ட இரு தலங்களையும் இணைத்து 'அங்கமும் வேதமும்' என்ற திருப்பதிகம் பாடிப் போற்றிச் சிறுத்தொண்டருடன் செங்காட்டங்குடி சென்று கணபதீச்சுரத்தை வழிபட்டுக் கொண்டு சிலநாள் அங்குத் தங்கியிருந்தார். பின்னர் சிறுத்தொண்டருக்கு விடையருளித் திருப்புகலூர் தொழச் சென்றார்.

## முருக நாயனார் உபசரிப்பு

திருப்புகலூர் சென்ற ஆளுடைய பிள்ளையாரை முருக நாயனார் எதிர்கொண்டழைத்து ஆலயம் சென்று பெருமானை வணங்கி திருப்பதிகம் பாடிப் போற்றித் தமது திருமடத்தில் தங்கியிருக்க எல்லா வசதிகளையும் செய்திருந்தார்.

## திருநாவுக்கரசருடன் இரண்டாவது சந்திப்பு

திருநாவுக்கரசர் திருவாரூரில் புற்றிடங்கொண்ட பெருமானை வழிபாடாற்றித் திருப்புகலூரரை வழிபட எழுந்தருளினார். அவர் வருகையை அறிந்த ஞானசம்பந்தர் அவரை எதிர்கொண்டழைத்து அளவளாவி மகிழ்ந்திருந்தனர். அப்பர் திருவாரூரில் நிகழ்ந்த திருவாதிரை நாளின் சிறப்பை விரித்துரைக்கக் கேட்ட ஞானசம்பந்தர் அப்பரைத் திருப்புகலூரில் இருக்க வேண்டிக் கொண்டு விற்குடி வீரட்டத்தைப் பணிந்து திருவாரூருக்கு எழுந்தருளினார். ஞானசம்பந்தரின் வருகையை அறிந்த நகர மக்கள் எதிர்கொண்டு போற்றினர். ஞானசம்பந்தர் திருவாரூர்ப் பூங்கோயிலை அடைந்து 'சித்தம் தெளிவீர்காள்' என்பது முதலிய பல திருப்பதிகங்களை அருளிப் பரவி வழிபட்டார். அரனெறியைத் தரிசித்தார். பின்னர், வலிவலம், கோளிலி முதலான தலங்களை அடைந்து வழிபட்டு மீண்டும் திருவாரூரை அடைந்து தங்கியிருந்து வழிபட்டு அத்தலத்தைப் பிரிய மனம் இன்றி அப்பர் நினைவால் திருப்புகலூருக்கு எழுந்தருளினார். வழியிடையே பனையூரைத் தொழுது திருப்புகலூர் வந்தடைந்தார். ஊர் எல்லையில் முருக நாயனார் முதலிய அடியவர்கள் வரவேற்கத் திருப்புகலூரை அடைந்து இறைவனை வழிபட்டு முருக

நாயனார் திருமடத்தில் திருநாவுக்கரசர், நீலநக்கர், சிறுத்தொண்டர் முதலிய அடியவர்களோடு உரையாடிக் கலந்து மகிழ்ந்து உடனுறைந்து வந்தார்.

**திருநாவுக்கரசருடன் திருத்தல யாத்திரை**

ஞானசம்பந்தரும் அப்பரும், நீலநக்கர், சிறுத்தொண்டர் முதலானோர்க்கு விடையளித்து விட்டு இறைவன் வீற்றிருக்கும் பல திருத்தலங்களையும் வழிபட விரும்பிப் புறப்பட்டனர். ஞானசம்பந்தர், அப்பர் உடன் வருவதால், முத்துச்சிவிகை பின்வர, தானும் அவருடன் நடந்து சென்றார். அதைக்கண்ட அப்பர் பெருமான், தாங்கள் சிவிகையில் எழுந்தருள்வீராக எனக் கேட்டுக் கொள்ள ஞானசம்பந்தர் அப்பரை முன்னே விடுத்து அவர் செல்லும் திருத்தலங்களைத் தொடர்ந்து சென்று வழிபட்டார். இருவரும் அம்பர் மாகாளத்தை வணங்கித் திருக்கடவூர் சென்றனர். குங்கிலியக்கலயர் வரவேற்க, இருவரும் கடவூர் வீரட்டத்தைத் தொழுது போற்றி அந்நாயனார் திருமனையில் அமுது கொண்டு திருக்கடவூர் மயானம், ஆக்கூர், மீயச்சூர், பாம்புரம் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு திருவீழிமிழலை வந்தடைந்தனர். அத்தலத்தில் விண்ணிழி விமானத்தில் வீற்றிருந்தருளும் பெருமானை வணங்கி இருவரும் ஆலயத்தின் அருகே விளங்கிய இரண்டு திருமடங்களில் தனித்தனியே அடியார்களுடன் தங்கினர்.

கோயிலின் வடபால் உள்ள திருமடத்தில் ஞானசம்பந்தர் எழுந்தருளியிருந்தார். அங்கிருக்கும் நாள்களில் திலதைப்பதி, பேணுபெருந்துறை என்ற தலங்களை ஞானசம்பந்தர் வழிபட்டுப் போற்றினார். ஞானசம்பந்தர் வீழியில் இருந்தபோது சீகாழிமக்கள் அவர் பிரிவாற்றாது எங்களோடு சீகாழிக்கு வந்தருள வேண்டுமென வேண்டினர். ஞானசம்பந்தர் வீழிநாதனின் அருள் பெற்று இன்று கழித்து நாளை செல்வோம் எனக் கூறி அன்றிரவு துயில் கொண்டார். பெருமான் அவர் தம் கனவில் தோன்றி 'யாம் தோணியில் அமர்ந்த வண்ணத்தை நாளை நீ வீழிமிழலையிலேயே காணலாம்' எனக் கூறக்கேட்டு விழித்தெழுந்து நீராடி ஆலயம் சென்றபோது இறைவன் சீகாழிக் காட்சியை அவ்வாலயத்திலேயே காட்டக் கண்டு 'மைம் மருபூங்குழல்' எனத் திருப்பதிகம் பாடிப் பரவினார். காழி மக்கட்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டு வீழிமிழலையிலேயே தங்கியிருந்தார்.

**வாசி தீரக் காசு பெறுதல்**

ஞானசம்பந்தரும் அப்பரும் திருவீழிமிழலையில் தங்கியிருந்த காலத்து மழையின்மையால் நாட்டில் பஞ்சம் ஏற்பட்டது. உயிர்களெல்லாம் பசியால் வருத்தமுற்றன. அடியார்களும் துயருற்றனர்.

அதனை அறிந்த பிள்ளையார் சிவனடியார்களுக்கும் இவ்வாறு ஒரு துன்பம் வரலாமோ என்று கருதியவராய் இரவில் துயிலலுற்றார். பெருமான் அவர் கனவில் தோன்றிப் பஞ்சம் நீங்கும் கால எல்லைவரை ஆலயத்தின் கிழக்குப் பலிபீடத்திலும் மேற்குப் பலிபீடத்திலும் இருவருக்கும் பொற்காசு அளிக்கின்றோம் எனக் கூறி மறைந்தார். விழித்தெழுந்த ஞானசம்பந்தர் அப்பருடன் ஆலயம் சென்றார். கிழக்குப் பலிபீடத்தில் ஞானசம்பந்தர் காசு பெற்றார். மேற்குப் பலிபீடத்தில் அப்பர் காசு பெற்றார். இருவரும் அக்காசுகளைப் பெற்றுத் தத்தம் திருமடங்களில் அடியவர்களுக்கு அமுதளிக்கச் செய்தருளினர். இங்ஙனம் நிகழும் நாள்களில் நாவுக்கரசர் திருமடத்தில் உரிய காலத்திலும், ஞானசம்பந்தர் திருமடத்தில் சிறிது காலந்தாழ்ந்தும் அமுதளிக்கப் பெறுவதை அறிந்த ஞானசம்பந்தர், உரியவர்களை அழைத்துத் தாமதத்திற்குரிய காரணம் வினவினார்.

இறைவன் தனக்கு அளிக்கும் காசுகள் வாசியுள்ளதாக இருத்தலையும் அதனால் அக்காசினை மாற்றிப் பொருள்கள் பெற்று வருதலினால் காலத்தாழ்ச்சி ஏற்படுதலையும் அறிந்த ஞானசம்பந்தர், அப்பர் கைத்தொண்டும் செய்தலால் அவருக்கு வாசியில்லாத காசு வழங்குதலை அறிந்து மறுநாள் ஆலயம் சென்று 'வாசி தீரவே காசு நல்குவீர்' எனத் திருப்பதிகம் பாடி நல்ல காசினைப் பெற்று உரிய காலத்தில் தமது திருமடத்திலும் அடியவர்களுக்கு அமுதளிக்கச் செய்து மகிழ்ந்திருந்தார். சில திங்களில் மழை பெய்து நாடு செழித்தது. பஞ்சம் நீங்கி மக்கள் இனிது வாழத் தொடங்கினர்.

### மறைக்கதவம் அடைத்தல்

ஞானசம்பந்தரும் அப்பரும் அடியவர்களுடன் திருவீழிமிழலையிலிருந்து புறப்பட்டுத் திருவாஞ்சியம் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு அடியவர் எதிர்கொண்டு போற்றத் திருமறைக்காடு அடைந்தனர். ஆலயத்தை வலம் வந்து வாயிலை அணுகினார்கள். வேதங்களால் பூசிக்கப்பெற்றுத் திருக்காப்பிடப்பெற்ற அத்திருக்கதவுகள் திறக்கப்படாதிருத்தலையும், மக்கள் வேறோர் பக்கத்தில் வாயில் அமைத்துச் சென்று வழிபட்டு வருவதையும் கண்ட ஞானசம்பந்தர் வேதவனப் பெருமானை உரிய வாயில் வழியே சென்று வழிபட வேண்டுமெனத் திருவுளத்தெண்ணி அப்பரைப் பார்த்து 'இக்கதவுகள் திறக்கத் தாங்கள் திருப்பதிகம் பாடியருளுக' என வேண்டினார். அப்பர் 'பண்ணினேர் மொழியாள்' எனத் தொடங்கித் திருப்பதிகம் பாட அப்பதிகப் பொருட்சுவையில் ஈடுபட்ட இறைவன் பதிகத்தின் நிறைவில் திருக்கதவுகள் திறக்குமாறு செய்தருளினார். இருவரும் ஆலயம் சென்று மறைக்காட்டுறையும் மணாளனைப்

போற்றிப் பரவித் திரும்பினர். அப்பர், இக்கதவுகள் இனி திறக்கவும் அடைக்கவும் உரியனவாக இருத்தல் வேண்டுமென எண்ணி ஞானசம்பந்தரை நோக்கி இப்போது தாங்கள் திருக்கதவுகள் அடைக்கப் பாடவேண்டுமென வேண்டினார். ஞானசம்பந்தர் 'சதுரம் மறை' எனத் தொடங்கித் திருப்பதிகம் பாடினார். முதற்பாடலிலேயே கதவு அடைத்துக் கொண்டது. ஏனைய பாடல்களையும் பாடிப் போற்றினார் ஞானசம்பந்தர். பின்னர் இருவரும் சென்று தத்தம் திருமடங்களில் இனிதுறைந்து இருந்தனர்.

## வாய்மூரில் இறைவன் ஆடல் காட்டி அருளல்

அப்பர், அரிய வேதங்களால் திருக்காப்பிடப் பெற்ற கதவுகள் தாம் பாடிய திருப்பதிகத்தால் அரிதில் திறக்கப்பெற்றதையும் ஞானசம்பந்தரின் பாடலுக்கு எளிதில் அடைத்துக் கொண்டதையும் எண்ணியவராய்த் துயில் கொண்டார். அவர்தம் மனக்கருத்தை அறிந்த இறைவன் அவர் எதிரே சைவ வேடத்துடன் காட்சி நல்கி நாம் வாய்மூரில் இருக்கின்றோம். நம்மைத் தொடர்ந்து வருக என அழைத்து முன்னே செல்ல அவரைப் பின் தொடர்ந்து அப்பரும் சென்றார். அப்பர் நெடுந்தூரம் சென்ற நிலையில் பெருமான் மறைந்தார். அப்பர் வாய்மூரை அடைந்து வழிபட்டுத் திருப்பதிகம் பாடினார். இந்நிலையில் அப்பரை அவர்தம் திருமடத்தில் காணாத ஞானசம்பந்தர் அவர் சென்ற வழி கேட்டறிந்து அவரைத் தேடித் திருவாய்மூர் வந்தடைந்தார்.

ஞானசம்பந்தரின் வருகையை அறிந்த அப்பர் அவரைக் கண்டு மகிழ்ந்து தாம் அருளிய திருப்பதிகத்தில் திறக்கப்பாடிய என்னினும் சிறப்புடைய செந்தமிழ்பாடித் திருக்கதவம் அடைப்பித்த ஞானசம்பந்தர் வந்துள்ளார். திருக்காட்சி நல்குக என வேண்டினார். வாய்மூர் உறையும் இறைவர் ஞானசம்பந்தருக்கு மட்டுமே தமது ஆடல் காட்சியைக் காட்ட பிள்ளையார் 'தளிரிள வளரென' எனத் திருப்பதிகம் பாடிப் போற்றி அக்காட்சியை அப்பருக்கும் காட்டியருளினார். பின்னர் அப்பரும் அவ்வருட்காட்சியைக் கண்டு பதிகம் பாடிப் போற்றினார். இருவரும் வாய்மூரில் சில நாள் தங்கி மகிழ்ந்து மீண்டும் திருமறைக்காடு சென்று தத்தம் திருமடங்களில் இனிதுறைவாராயினர்.

## மதுரைப் பயணம்

அக்காலத்தில் பாண்டி நாடு சமண் சமய இருளில் மூழ்கியிருந்தது. ஆனைமலை முதலிய மலைகளைத் தம் இருப்பிடங்களாகக் கொண்ட சமண சமயிகள் தங்கள் சமயத்தைப் பரப்புவதுடன் சைவ சமயத்தை இகழ்ந்தும் பழித்தும் வந்தனர். அக்காலத்தில் அரசு புரிந்த கூன்பாண்டியன் சமண சமயத்தைச் சார்ந்து ஒழுகிய காரணத்தால் மக்களும் அச்சமயம் சார்ந்து

ஒழுகத்தலைப்பட்டனர். சிவாலயங்கள் சமண் கோயில்களாகவும் பள்ளிகளாகவும் மாற்றப்பட்டும் வழிபாடு இன்றியும் இருந்தன. மன்னனின் மாதேவியார் மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும் உறுதியாய்ச் சிவநெறி கடைப்பிடித்து வாழ்ந்து வந்தனர். இந்நிலையில் இறையருள் பெற்ற ஞானசம்பந்தரின் பெருமைகளைக் கேள்வியுற்ற அரசியாரும் அமைச்சரும் அவர் திருமறைக்காட்டுக்கு எழுந்தருளியிருப்பதை அறிந்து தம் பரிசனங்களை அனுப்பி வணங்கி தம் நாட்டு நிலையைத் தெரிவித்து வருமாறு செய்தனர்.

பாண்டி நாட்டிலிருந்து திருமறைக்காடு வந்த பரிசனங்கள் ஞானசம்பந்தரை வணங்கித் தங்கள் நாட்டின் நிலையை எடுத்துரைத்தனர். உடன் இருந்த அடியவர்கள் ஞானசம்பந்தரிடம் பாண்டி நாட்டுக்கு எழுந்தருள வேண்டுமெனத் தெரிவித்துக் கொண்டார்கள். ஞானசம்பந்தரும் அப்பரும் மறைக்காட்டீசன் திருக்கோயில் சென்று வணங்கினர். ஞானசம்பந்தர் மதுரைக்குச் செல்லும் தம் வேட்கையை அப்பரிடம் தெரிவித்தார். அதனை அறிந்த அப்பர் ஞானசம்பந்தரை நோக்கிப் 'பிள்ளாய் அமணர் செய்யும் வஞ்சனைக்கோர் அளவில்லை என்பதை நான் உணர்ந்தவன். மேலும் இன்று நாளும் கோளும் நன்றாக இல்லை. இதுபோது பாண்டி நாடு செல்வது கூடாது?' எனத் தடுத்தார். ஞானசம்பந்தர் அப்பரை நோக்கி 'நாம் போற்றுவது நம் பெருமானுடைய திருவடிகளை; ஆதலால் நம்பால் எத்தகைய தீங்கும் வாராது' எனக் கூறியதோடு, நாள் கோள்களின் குற்றங்கள் நீங்க 'வேயுறு தோளிபங்கன்' என்னும் திருப்பதிகம் பாடி, மதுரைப் பயணத்தை மேற்கொண்டார். தம்மோடு உடன் வரமுற்பட்ட அப்பரடிகளைத் தடுத்து நிறுத்திச் சோழ நாட்டில் இறைவனைத் தொழுது இருப்பீர்களாக எனக் கூறித் தமது மதுரைப் பயணத்தைத் தொடர்ந்தார்.

### அமைச்சர் வரவேற்பு

திருஞானசம்பந்தர் திருமறைக் காட்டிலிருந்து அடியவர் புடைசூழச் சிவிகையில் ஏறிப் புறப்பட்டு அகத்தியான்பள்ளி, கோடிக்குழகர் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு தென் மேற்றிசை நோக்கிச் சென்று திருக்கொடுங்குன்றம் பணிந்து மதுரையின் எல்லையை அடைந்தார். மங்கையர்க்கரசியார் ஞானசம்பந்தர் வருகையை அறிந்து ஊர் எல்லையில் வரவேற்குமாறு குலச்சிறையாரை அனுப்பி இருந்தார். மதுரை எல்லையை அடைந்த ஞானசம்பந்தரைக் குலச்சிறையார் வணங்கி வரவேற்றார். பிள்ளையார் சிவிகையிலிருந்து இறங்கி 'அரசியார்க்கும் அமைச்சர்க்கும் திருவருளால் நன்மைகள் விளைக' என வாழ்த்தினார். குலச்சிறையார் 'இன்று தாங்கள் எழுந்தருளப் பெற்ற பேற்றினால் எற்றைக்கும் திருவருள் உடையோம். இனி எங்கள்

நாட்டில் திருநீற்றொளி விளங்குவது உறுதி' என முகமனுரை கூறி, மங்கையர்க்கரசியார் ஞானசம்பந்தரை வரவேற்கத் தன்னை அனுப்பியுள்ளதைத் தெரிவித்தார். மேலும் மதுரை மிக அண்மையில் உள்ளது என்றும் கூறினார்.

ஞானசம்பந்தர் மதுரையை நெருங்கிய நிலையில் 'மதுரை இன்னும் எவ்வளவு தூரம் உள்ளது' எனக் கேட்க அடியவர்கள் கோபுரத்துடன் திருக்கோயிலைச் சுட்டிக்காட்டி 'அதுவே திருவாலவாய்' எனக் கூறக்கேட்டு மங்கையர்க்கரசியார் குலச்சிறையார் ஆகியோரின் பக்தி நலத்தைப் புகழ்ந்து 'மங்கையர்க்கரசி வளவர்கோன் பாவை' என்ற திருப்பதிகம் அருளிச் செய்து கொண்டே ஆலவாய்த் திருக்கோயிலை அடைந்து குலச்சிறையாருடன் வலங்கொண்டு பணிந்து 'நீலமாமிடற்று' எனத் தொடங்கும் திருப்பதிகம் பாடிப் போற்றினார்.

### மங்கையர்க்கரசியார் சந்திப்பு

ஆலவாய் இறைவர் திருக்கோயிலை வழிபட வந்த மங்கையர்க்கரசியார் வழிபாடு முடித்துக் கோயில் முன்றிலில் திருஞானசம்பந்தரைக் கண்டு அவர் திருவடித் தாமரைகளில் வீழ்ந்து பணிந்தார். பிள்ளையார் எழுதரிய மலர்க்கரங்களால் அவரை எடுத்தார். 'யானும் என் நாயகனும் செய்த தவப்பயனால் தங்களைத் தரிசிக்கும் பேறு பெற்றேன்' எனக்கூற ஞானசம்பந்தர் 'புறச் சமயச் சூழலுள்ளும் சிவனடித் தொண்டினை மறவாது போற்றும் உம்மைக் காணும் பொருட்டே இங்கு வந்தோம்' எனக்கூறி அவருக்கு விடைகொடுத்து அனுப்பித் திருக்கோயில் புறத்தணைந்து குலச்சிறையார் ஏற்பாடு செய்துள்ள திருமடம் ஒன்றில் அடியவர்களோடு எழுந்தருளியிருந்தார். அரசமாதேவியாரின் கட்டளைப்படி குலச்சிறையார் அடியார்களுக்கு நல்விருந்தளித்து உபசரித்து வந்தார்.

### திருமடத்திற்குத் தீ வைத்தல்

பகற்பொழுது கழிந்து இரவு வந்தது. ஞானசம்பந்தரோடு உடன் வந்த அடியவர் அந்தணர் முதலானோர் வருகையை அறிந்த சமணர் கண்டு முட்டு ஆயினர். மன்னனிடம் சென்று முறையிட்டனர். தாங்கள் அறிந்த மந்திரத்தால் ஞானசம்பந்தர் தூங்குகின்ற மடத்திற்குத் தீவைக்க அனுமதி பெற்றனர்.

சமணர் அனலை ஏவிய மந்திரம் ஞானசம்பந்தரின் அடியவர் ஓதும் ஐந்தெழுத்துக்கு முன்னால் பலிதம் ஆகவில்லை. அதை அறிந்த சமணர்கள் ஞானசம்பந்தர் திருமடத்திற்கு நேராகச் சென்று தீ வைத்தனர். ஒரு பகுதி தீப்பற்றி எரிந்தது. அடியவர்கள் சமணர்களின் வஞ்சனையை

அறிந்து ஞானசம்பந்தரிடம் தெரிவித்தனர். ஞானசம்பந்தர், 'இத்தீ அரசன் முறை செய்யாமையால் நேர்ந்ததாகும். ஆதலால் இத்தீ அவனைச் சென்று பற்றுதலே முறையாயினும் மங்கையர்க்கரசியாரின் மங்கல நாணுக்கு ஊறு நேராதவாறு பையவே சென்று பாண்டியனைப் பற்றுவதாகுக' என்று கூறி 'செய்யனே திரு' என்று பதிகம் ஓதினார்.

பொழுது விடிந்தது. ஞானசம்பந்தர் திருமடத்தில் சமணர்கள் தீ வைத்த செய்தி மதுரை மாநகர் முழுதும் பரவியது. அதனைக் கேள்வியுற்ற மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் மிகவும் மன நடுக்கம் உற்றனர். இக்கொடியோர் வாழும் நாட்டில் ஞானசம்பந்தரை வரவழைத்த குற்றத்துக்கு நாம் இறப்பதே சரியான தண்டனை என்று எண்ணினர். திருமடத்திலிடப்பட்ட தீயால் யாருக்கும் எந்தத் தீங்கும் ஏற்படாமை கருதி ஆறுதல் உற்றனர். இந்நிலையில் பாண்டி மன்னனை வெப்பு நோய் பற்றி வருத்தியதறிந்து உளம் நடுங்கி மன்னனை அடைந்தார்கள். மருத்துவர்களாலும் சமண முனிவர்களாலும் நோயைக் குணப்படுத்த இயலவில்லை. இந்நிலையில் குலச்சிறையார் அரசனை அணுகி, 'ஞானசம்பந்தர் திருமடத்துக்குச் சமணர்கள் இட்ட தீயே நோயாகி வந்துள்ளது. அவர் வந்தால் நோய் தீரலாம்' என்றார். மன்னன் ஞானசம்பந்தர் என்ற நாம மந்திரத்தைக் கேட்ட அளவில் அயர்வு நீங்கியதை உணர்ந்து 'அவரை அழைப்பீராக' என்று கூறினான். சமணர்கள் அரசனிடம் இந்நோய் ஞானசம்பந்தரால் தீர்க்கப் பெற்றாலும் தங்களாலேயே தணிந்தது எனப் பொய்யுரைக்க வேண்டினர். மன்னன் நடுநிலை பிறழேன் என மறுத்தான். குலச்சிறையாரும் அரசியாரும் ஞானசம்பந்தரைச் சென்று தரிசித்துத் திருமடத்திற்குத் தீயிட்ட செயலுக்கு மிக வருந்தியவர்களாய் மன்னன் வெப்பு நோயால் வாடுவதை விண்ணப்பித்துத் 'தாங்கள் எழுந்தருளி நோயைக் குணப்படுத்தினால் உய்வோம்' எனக் கூறி நின்றனர். ஞானசம்பந்தர் சமணர்களோடு செய்யும் வாதில் வென்று 'தென்னர்கோனுக்குத் திருநீறு அணிவிப்போம்' எனக் கூறிப் புறப்பட்டுத் திருக்கோயிலை அடைந்து 'காட்டு மாவது உரித்து' என்ற திருப்பதிகத்தால் போற்றி இறைவன் திருவுளக் குறிப்பை அறிந்தார். மேலும் சமணர் மேற்கொள்ளும் வாதங்களிலும் வெற்றி நல்க 'வேத வேள்வியை' என்ற திருப்பதிகம் பாடி இறைவனிடம் விடைபெற்று வெளிவந்து சிவிகையில் ஏறி மன்னனின் மாளிகையை அடைந்தார்.

**வெப்பு நோய் தவிர்த்தல்**

ஞானசம்பந்தர் பாண்டியன் அரண்மனையை அடைந்து மன்னன் அருகில் இடப்பெற்ற பொற்றவிசில் எழுந்தருளினார். மன்னன் ஞானசம்பந்தரைத் தரிசித்த அளவில் நோய் சிறிது

தணியப் பெற்றவனாய் அவரோடு உரையாடும் முறையில் 'நுமது ஊர் எது' எனக் கேட்கப் பிரமனூர் என்ற திருப்பதிகத்தால் விடையளித்தார்.

சமணர்கள் அச்சமுற்றார்கள். ஆயினும் அதனை மறைத்துக் கொண்டு சம்பந்தரை நோக்கி 'உங்கள் சமயக் கொள்கைகளைக் கூறுங்கள்' எனக் கூறினர். அரசியார் கொடிய சமணர்கள் நடுவில் இப்பாலகரை நாம் அழைத்தது தவறோ என வருந்திச் சமணர்களை நோக்கி 'மன்னனின் நோயை முதலில் தணிக்க முயலுங்கள். நோய் தணிந்த பிறகு வாது செய்யலாம்' என்றார். ஞானசம்பந்தர் அரசமாதேவியாரைப் பார்த்து "மானினேர் விழி" என்ற பதிகம் பாடி, 'அஞ்சற்க; என்னைப் பாலகன் எனக் கருத வேண்டா; ஆலவாயான் துணை நிற்க வாதில் வெல்வோம்' என்றார். சமணர்கள் மன்னன் உடலில் இடப்பாகம் பற்றிய நோயை நாங்கள் குணப்படுத்துகிறோம் என்று பீலி கொண்டு உடலைத் தடவிய அளவில் நோய் மேலும் கூடியது. ஞானசம்பந்தர் 'மந்திரமாவது நீறு' என்ற திருப்பதிகம் பாடி, தம் திருக்கரத்தால் வலப்பாகத்தில் திருநீற்றைத் தடவிய அளவில் வலப்பக்க நோய் தணிந்து விட்டது. இடப்பாகத்தே அதிக வெப்பு நோயைக் கண்ட மன்னன் அப்பாகத்தையும் தாங்களே தீர்த்தருள வேண்டுமென வேண்டினான். ஞானசம்பந்தர் இடப்பாகத்திலும் திருநீறு பூசிய அளவில் நோய் தணிந்தது. மன்னன் எழுந்து ஞானசம்பந்தரைப் பணிந்து 'யான் உய்ந்தேன்' என்று போற்றினான்.

**அனல் வாதம்**

பாண்டியனது வெப்பு நோயைப் போக்க இயலாத சமணர்கள் தருக்க வாதம் புரிவதை விடுத்துத் தீயிலும் நீரிலும் அவரைக் கொல்லலாம் என்று எண்ணினார்கள். திருஞானசம்பந்தர் 'இனி உங்கள் வாய்மையைக் கூறுங்கள்' என்றார். சமணர்கள் 'இருதிறத்தாரும் தாங்கள் கண்ட பேருண்மையை ஏட்டில் எழுதி நெருப்பில் இட்டால் வேகாத ஏடு எவருடையதோ அவர்கள் சமயமே மெய்ச்சமயம் எனக் கொள்வோம்' என்றனர். ஞானசம்பந்தரும் அதற்கிசைந்தார். பாண்டியன் தீக்குண்டம் அமைக்கக் கட்டளையிட்டான்.

ஞானசம்பந்தர் தாம் அருளிய திருப்பதிகச் சுவடியைக் கொணரச் செய்து வழிபட்டு அதனை விரித்தருளினார். 'போகமார்த்த பூண்முலையாள்' என்ற திருநள்ளாற்றுச் திருப்பதிகம் உதயமாயிற்று. ஞானசம்பந்தர் நள்ளாற்றிறைவனைப் போற்றி அவ்வேட்டினை எடுத்து அத்திருப்பதிகம் அனலிடை வேகாதிருக்க வேண்டி 'தளரிள வளரொளி' என்றதொரு திருப்பதிகம் அருளி 'போகமார்த்த பூண்முலையாள்' என்று எழுதிய ஏட்டினை எடுத்துத் தீயில் இட்டார். சமணர்கள் தங்கள் நூற்பொருள் எழுதப் பெற்றதொரு ஏட்டினைத் தீயில் இட்டனர். அது எரிந்து

கரிந்து சாம்பலாயிற்று. ஞானசம்பந்தர் குறித்த நேரம் வரை காத்திருந்து தான் இட்ட ஏட்டை யாவரும் காண எடுத்தருளினார். அது முன்னையினும் பச்சென்றிருந்த காரணத்தால் பச்சைத் திருப்பதிகம் எனப் போற்றப் பெறுவதாயிற்று.

**புனல் வாதம்**

சமணர்கள் தங்கள் ஏடு எரிந்து சாம்பலானதைக் கண்டு மன்னனை நோக்கி 'ஓர் வாதினை மும்முறை செய்து உண்மை காணுதலே முறையாகும். ஆதலால் இருதிறத்தாரும் தத்தம் சமய உண்மைகள் எழுதிய ஏட்டினை ஆற்றில் இடும்போது எவருடைய ஏடு எதிரேறிச் செல்கின்றதோ அவர்கள் சமயமே மெய்ச்சமயம் எனக் கொள்ளலாம்' என்றனர். அப்பொழுது அமைச்சர் குலச்சிறையார் இதிலும் தோற்றவர்களுக்கு ஏற்படும் இழப்பு யாது எனக் கேட்டார். சமணர்கள் இவ்வாதில் தோல்வியுற்றோமானால் எங்களை இவ்வேந்தன் கழுவேற்றி முறை செய்யலாம் என்றனர். மன்னனும் உடன்பட்டான்.

ஞானசம்பந்தரும், குலச்சிறையாரும், அடியார்களும் சமண முனிவர்களும் வைகை ஆற்றின் கரையை அடைந்தனர். முதலில் சமணர்கள் தங்கள் சமய உண்மையாகக் கூறும் 'அஸ்தி நாஸ்தி' என்ற வசனத்தை ஏட்டில் எழுதி ஆற்றில் இட்டனர். அவ்வேடு ஆற்று நீரோட்டத்தை எதிர்க்கும் ஆற்றலின்றி நீர் ஓடும் நெறியிலேயே விரைந்தோடிற்று. அதனைக் கண்ட சமணர்கள் நீவிரும் உமது சமய உண்மையை எழுதி நீரில் இடுக எனக் கூறினர். ஞானசம்பந்தர், திருப்பாசுரம் எனப்படும் 'வாழ்க அந்தணர்' என்னும் திருப்பதிகத்தை அருளிச் செய்து, அதனை ஏட்டில் எழுதச் செய்து, அவ்வேட்டை ஆற்றில் இட்டருளினார். ஏடு வைகை ஆற்று வெள்ளத்தைக் கிழித்து எதிர் ஏறிச் சென்றது.

அத்திருப்பதிகப் பாடலில் 'வேந்தனும் ஓங்குக' என ஞானசம்பந்தர் அருளிச் செய்ததால் பாண்டியன் கூன் நிமிர்ந்து நின்றசீர் நெடுமாறன் ஆயினான். குலச்சிறையார் குதிரையின்மீது ஏறி ஏட்டினைத் தொடர்ந்து சென்றார். ஏடு எதிரேறிச் செல்வதைக் கண்ட பிள்ளையார் 'வன்னியும் மத்தமும்' என்ற திருப்பதிகத்தை அருளிச் செய்தார். அவ்வேடு வைகையின் வடகரையிலமைந்த ஒரு கோயிலுக்கு அருகே சென்று நின்றது. ஏடு நின்ற கோயில் ஏடகம் எனப் பெயர் பெற்றது. குலச்சிறையார் அதனை எடுத்து வந்து ஞானசம்பந்தரிடம் சேர்ப்பித்தார். அனைவரும் கண்டு அதிசயித்து மகிழ்ந்தனர்.

சமணர்கள் தாங்களே செய்து கொண்ட சபதத்தின்படிக் கழுவேறினர். ஞானசம்பந்தர் பாண்டிய மன்னனுடன் ஆலவாய் இறைவர் திருக்கோயில் சென்று 'வீடலால வாயிலாய்' என்ற திருப்பதிகம் பாடி வழிபட்டுத் தம் திருமடத்துக்கு எழுந்தருளினார்.

**பாண்டித் தலங்களைத் தரிசித்தல்**

ஞானசம்பந்தர் மதுரையில் தங்கியிருக்கும் நாளில் அவரது தந்தையார் சிவபாத இருதயர் அவரைக் காண விரும்பி மதுரை வந்து அடைந்தார். அப்பொழுது ஞானசம்பந்தர் அவரைப் பார்த்து அருந்தவத்தீர் குழந்தைப் பருவத்தில் எனக்குப் பொற்கிண்ணத்தில் பாலளித்து அருள்புரிந்த தோணிபுரப் பெருந்தகை எம்பெருமாட்டியோடு இனிதாக இருந்ததே ? என நலம் உசாவும் முறையில் '**மண்ணின் நல்ல வண்ணம்**' என்ற திருப்பதிகத்தை அருளிச் செய்தார். பாண்டியனும் மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் உடன் வர திருப்புத்தூர், கானப்பேர், சுழியல், திருக்குற்றாலம், திருநெல்வேலி முதலிய தலங்களை வழிபட்டு இராமேச்சுரம் சென்றடைந்தார். திருமால் இராமாவதாரத்தில் தாபித்து வழிபட்ட இராமநாதரைத் தரிசித்து அங்கிருந்தபடியே ஈழத்தலங்களாகிய திருக்கேதீச்சரம், திருக்கோணமலை ஆகிய தலங்களை நினைந்து போற்றினார்.

**சோழ நாடு மீளல்**

இராமேச்சுரத்திலிருந்து ஆடானை, புனல்வாயில், மணமேற்குடி ஆகியவற்றை வழிபட்டுப் பாண்டிய மன்னன் அரசியார் அமைச்சர் முதலானோர்க்கு விடை கொடுத்து அனுப்பிவிட்டுச் சோழ நாடு புகுந்து பாதாளீச்சரம், திருக்களர் முதலான தலங்களை வழிபட்டுக் கொண்டு திருக்கொள்ளம்பூதூர் வந்தடைந்தார்.

**ஓடம் உய்த்தது**

கொள்ளம்பூதூர் எல்லையில் முள்ளியாறு வெள்ளத்தால் நிறைந்து காணப்பட்டது. மறுகரைக்கு ஏற்றிச் செல்லும் ஓடம் செலுத்துவோர் வெள்ளமிகுதி கண்டு ஓடத்தைக் கரையில் கட்டி விட்டிருந்தனர். ஞானசம்பந்தர் ஓர் ஓடத்தை அவிழ்க்கச் செய்து அடியவர்களுடன் தானும் ஏறிக் கொள்ளம்பூதூர் இறைவனைப் போற்றிக் 'கொட்டாமே கமழும்' என்ற திருப்பதிகத்தை அருளிச் செய்தார். ஓடம் தானே மறுகரைக்கு ஞானசம்பந்தரை அழைத்துச் சென்றது. ஞானசம்பந்தர் கொள்ளம்பூதூர் ஆலயத்தை அடைந்து எடுத்த திருப்பதிகத்தின் எஞ்சிய

பாடல்களால் இறைவனைப் பரவினார். அங்கிருந்து திருநள்ளாறு அடைந்து நள்ளாற்றிறைவன்மீது 'பாடகமெல்லடி' என்ற பதிகத்தால் போற்றித் தன் பயணத்தைத் தொடர்ந்தார்.

**புத்தரை வாதில் வென்றது.**

திருத்தெளிச்சேரியை அடைந்து வழிபட்டுப் போதி மங்கை அருகே ஞானசம்பந்தர் வரும்போது, அவரது முத்துச்சின்னம், காளம், 'பரசமயகோளரி வந்தான் பாலறாவாயன் வந்தான்' என முழங்கிய ஓசை கேட்ட புத்தநந்தி, ஒருவன் தனது குழாத்துடன் வந்து தங்களோடு வாதிட அழைத்தான். ஞானசம்பந்தருடன் வந்த அடியவர் ஒருவர் அவர் அருளிய தேவாரங்களில் "புத்தர் சமண்கழுக் கையர்" என்ற பாடலைப் பாடி 'புத்தன் தலையில் இடிவீழ்ந்து உருளுக' என உரைத்த அளவில் புத்தநந்தியின் மேல் இடி விழுந்தது. உடன் புத்த குழாங்கள் அஞ்சி அகன்றனர். சாரி புத்தன் என்பான் தர்க்க வாதம் புரியுமாறு ஞானசம்பந்தரை அழைத்த போது அந்த அடியவரைக் கொண்டே வாதிடச் செய்து வெற்றி கண்டார். புத்தர்கள் தங்கள் பிழை உணர்ந்து ஞானசம்பந்தரை வணங்கிச் சைவரானார்கள். பின்னர்த் திருக்கடவூர் சென்று வழிபட்டு அப்பர் எங்குள்ளார் எனக் கேட்டு அவர் திருப்பூந்துருத்தியில் இருக்கும் செய்தி அறிந்து அவரைக் காணத் திருப்பூந்துருத்தி வந்து அடைந்தார்.

**அப்பருடன் மூன்றாவது சந்திப்பு – அப்பரைக் கண்டு மகிழ்தல்**

ஞானசம்பந்தர் வருகையை அறிந்த அப்பர், திருப்பூந்துருத்தி எல்லைக்கு முன்னால் சென்று அடியவர் கூட்டத்தினரோடு அவர் ஏறி வரும் சிவிகையைத் தானும் ஒருவராய் யாவரும் அறியாதபடி சுமந்து வருவாராயினார்.

திருஞானசம்பந்தர் திருப்பூந்துருத்தி எல்லையை அடைந்த போது அப்பர் வரவைக் காணாது 'அப்பர் எங்குற்றார்?' என அடியவர்களை வினாவினார். அவ்வுரை கேட்ட அப்பர், 'உம் அடியேன் உம் அடிகள் தாங்கி வரும் பெருவாழ்வு வந்து எய்தப் பெற்று இங்குற்றேன்' என்றார். ஞானசம்பந்தர் விரைந்து சிவிகையில் இருந்து இறங்கி 'இவ்வாறு செய்தருள்வது தகுமா?' எனக்கூறி அப்பரை வணங்கினார். அப்பரும் உடன் வணங்கினார். பின்னர் இருவரும் ஆலயம் சென்று இறைவனை வணங்கினர். ஞானசம்பந்தர் அப்பர் திருமடத்தில் அவரோடு உடன் உறைந்து பாண்டி நாட்டில் நடந்தவைகளை விவரித்தார். அப்பர் 'திருநெறித் தொண்டெனும் வான்பயிர் தழைக்கச் சூழும் பெருவேலி ஆயினீர்' எனப் போற்றினார். பாண்டி நாட்டில் சைவம் தழைக்கத் தொடங்கியதை அறிந்த அப்பர் அந்நாடு செல்லும் விருப்புடையவராயினார். அப்பர் தொண்டை நாட்டின் சிறப்பைக்

கூறக் கேட்ட ஞானசம்பந்தர் தொண்டை நாடு செல்லும் விருப்புடையராயினார். இருவரும் ஒருவரையொருவர் பிரிந்து யாத்திரை மேற்கொண்டனர்.

ஞானசம்பந்தர் காவிரி வடகரையை அடைந்து நெய்த்தானம், ஐயாறு, பழனம் முதலிய தலங்களை வணங்கி, சீகாழிப் பதியை அடைந்து தோணிபுரப் பெருமானைப் போற்றி தம் திருமாளிகையை அடைந்தார்.

## ஆறாவது திருத்தல யாத்திரை

### தொண்டை நாட்டுத் திருத்தல யாத்திரை

ஞானசம்பந்தர் கச்சித் திருஏகம்பப் பெருமானை வழிபடும் கருத்தினராய்ச் சீகாழியிலிருந்து புறப்பட்டுத் தில்லை சென்று ஆனந்தக் கூத்தனைப் பணிந்து மாணிகுழி, பாதிரிப்புலியூர், வடுகூர், வக்கரை, இரும்பைமாகாளம் முதலிய தலங்களை வணங்கித் திருவதிகைவீரட்டம் தொழுது போற்றிக் கோவலூர், அறையணி, நல்லூர் ஆகிய தலங்களை வணங்கி அண்ணாமலை சென்றடைந்தார். உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய இறைவனை வணங்கிப் பதிகங்கள் பாடி திருஓத்தூர் அடைந்து இறைவனைப் போற்றினார். சிவனடியார் ஒருவர் அடியவர்க்கெனத் தான் வளர்த்த பனைகள் அனைத்தும் ஆண்பனைகளாக இருத்தலையும் சமணர்கள் சிலர் சிவனருளால் காய்க்க வைக்க முடியுமா? என ஏளனமாகக் கேட்டதையும் ஞானசம்பந்தரிடம் கூற அவர் ஆலயம் சென்று வணங்கி 'பூத்தேர்ந்தாயன' என்னும் பதிகம் பாடிய அளவில் ஆண் பனைகள் அனைத்தும் பெண் பனைகளாய் குலையீன்றன. அடியவர் அதிசயித்தனர். சமணர்கள் பிழைபொறுக்க வேண்டியதோடு சைவ சமயத்தின் சிறப்பினை அறிந்து சைவ சமயத்திற்கு மதம் மாறி ஞானசம்பந்தரைப் போற்றினர்.

திருவோத்தூரிலிருந்து புறப்பட்டு ஞானசம்பந்தர் திருமாகறல் குரங்கணில் முட்டம் ஆகிய தலங்களை வணங்கிக் காஞ்சிபுரம் சென்றடைந்தார். கச்சி ஏகம்பம், காமகோட்டம் ஆகிய ஆலயங்களை வணங்கிக் கொண்டு அத்தலத்தின் அருகில் விளங்கும், ஆலயங்களைப் போற்றிக் காரைக்காலம்மையார் முத்திப் பேறு பெற்றருளிய திருவாலங்காட்டை வணங்கிப் போற்ற எண்ணினார். அம்மையார் தலையால் நடந்து வந்த அத்தலத்தை மிதித்தற்கு அஞ்சி அத்தலத்தின் அருகில் உள்ளதொரு ஊரில் அன்றிரவு துயில் கொண்டார். ஆலங்காட்டு இறைவர் அவர் கனவில் தோன்றி நம்மைப் பாடுதற்கு மறந்தனையோ என்ன, உடனெழுந்து 'துஞ்சவருவாரும்' எனத் தொடங்கித் திருப்பதிகம் பாடிப் போற்றினார். பின்னர் அவ்வூரை விட்டகன்று பாசூர், வெண்பாக்கம், காரிகரை ஆகிய தலங்களை வணங்கிக் கொண்டு காளத்தியை அடைந்தார்.

கண்ணப்பரின் பக்தித் திறம் போற்றிக் காளத்தி இறைவரைப் பணிந்து அங்குள்ள திருமடம் ஒன்றில் பலநாள் தங்கிப் பரவினார். அங்கிருந்தே வடதிசையில் உள்ள கயிலாயம், கேதாரம், திருப்பருப்பதம் முதலிய தலங்களைப் போற்றிப் பதிகங்கள் அருளினார். பின்னர் அங்கிருந்து புறப்பட்டு திருவேற்காடு பணிந்து திருஒற்றியூரை வந்தடைந்தார்.

**எலும்பைப் பெண்ணாக்கியது**

மயிலாப்பூரில் வணிகர் குலத்தில் அளவற்ற செல்வம் உடையவராய் செம்மையே புரிமனத்தினராய் வணிகர் குலத்தில் சிவநேசன் என்னும் அடியார் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் சைவ சமயமே மெய்மைச் சமயம் என்பதையும், அறிந்த பெரியவர். அவர் ஞானசம்பந்தரது பெருமைகளைக் கேள்வியுற்று அவர்பால் எல்லையில்லாத பேரன்புடையர் ஆயினார். அவருக்கு ஒரு பெண் மகவு இருந்தாள். அழகிற் சிறந்த அப்பெண்ணுக்குப் பூம்பாவை எனப் பெயரிட்டார். அப்பெண்ணும் மணப்பருவம் எய்திய நிலையில் இருந்தாள்.

ஞானசம்பந்தர் மதுரை சென்று பரசமயம் நிராகரித்துப் பாண்டி நாட்டில் சைவ சமயத்தை நிலைநிறுத்தி வந்த செய்தி கேட்டு 'என்னையும், என் மகளையும் என் செல்வத்தையும் அவருக்கே உடைமையாக்கினேன்' என மொழிந்தார். இந்நிலையில் ஞானசம்பந்தருக்கு உரியள் என, சிவநேசர் மொழிந்திருந்த பூம்பாவை பூஞ்சோலையில் மலர் பறிக்கச் சென்றபோது அரவு தீண்டி இறந்தாள். சிவநேசர் மிகவும் வருந்தியவராய் அப்பெண்ணை உயிருடன் ஒப்புவிக்கும் புண்ணியம் அமையவில்லை. ஆயினும், அவள் உடலைத் தகனம் செய்து, எலும்பையும் சாம்பலையும் ஒரு மட்குடத்திலிட்டு, அதையேனும் ஒப்புவிப்போம் என்று பேணிவந்தார்.

ஞானசம்பந்தர் திருவொற்றியூர் வழிபாடு முடித்து மயிலாப்பூருக்கு எழுந்தருளும் செய்தி கேட்டு சிவநேசச் செல்வர், ஞானசம்பந்தர் வரும் வழியிலும், பிற இடங்களிலும் பலவகையான தோரணங்கள் நாட்டி தேவலோகம் போல ஆக்கினார். அவரை எதிர்கொண்டு அழைக்க எல்லை அருகே சென்றனர். திருஞானசம்பந்தர் அடியார்கள் சூழ முத்துச் சிவிகையில் வருவதைக் கண்டு மகிழ்ச்சியுற்று நிலமுறை விழுந்து இறைஞ்சினார். ஞானசம்பந்தரைக் கண்டு வணங்கிய அளவில் உடன் வந்த அடியார்கள் அவரை அறிமுகம் செய்ததோடு அவர் மகள் இறந்த செய்தியையும் அவரிடம் கூறினர்.

ஞானசம்பந்தர் மயிலாப்பூருக்கு எழுந்தருளி வழிபாடாற்றிப் புறத்தே போந்தவர் சிவநேசரை 'உலகவர் அறிய உமது மகளின் எலும்பு நிறைந்த மட்குடத்தை திருக்கோயில் திருமதிற் புறவாய்தலிற் கொணர்க' என்று கூறினார். அவ்வாறே அவரும் சென்று கொணர்ந்து திருக்கோயிற்

புறவாய்தலினை அணைந்து அக்குடத்தினை எடுத்து அபிமுகத்தினில் அடியுறைப்பிணிவே முன் வைத்து வணங்கினார். 'மண்ணினிற் பிறந்தார் பெறும் பயன் மதிசூடும் அண்ணலார் அடியார்தமை அமுது செய்வித்தல் என்பது உண்மையாயின் உலகவர் முன் இப்பூம்பாவை உயிர் பெற்று எழுந்து வருவாளாக' எனக்கூறி இறைவனை வேண்டிப் பூம்பாவை திருப்பதிகமாகிய 'மட்டிட்ட புன்னை' எனத் திருப்பதிகம் தொடங்கிப் பத்தாவது பாடல் பாடிய அளவில் செந்தாமரையில் வீற்றிருக்கும் திருமகள் போல அப்பெண் உலகவர் வியக்க உயிர் பெற்றுக் குடம் உடைய வெளிப்பட்டு ஞானசம்பந்தரின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினாள். ஞானசம்பந்தர் திருப்பதிகத்தின் பதினொன்றாவது பாடலைப் பாடி நிறைவு செய்தார். சிவநேசர் ஞானசம்பந்தரை வணங்கித் திருவருளைப் போற்றினார். தன் திருமகளைத் திருமணம் புரிந்து ஏற்றருள வேண்டுமென வேண்டினார். ஞானசம்பந்தர் மறைநெறி மரபை அவருக்கு உணர்த்தியதோடு பூம்பாவையை யாம் மீண்டும் உயிர்ப்பித்தோம்; ஆதலின், அவள் எமக்கு மகளாவாள் எனக்கூறிய அளவில் சிவநேசர் மனத் தெளிவுற்று அப்பெண்ணை வேறொருவர்க்கு மணம் முடிக்க மனமின்றிக் கன்னிமாடத்தே இருக்கச் செய்தார்.

ஞானசம்பந்தர் மயிலாப்பூரினின்றும் புறப்பட்டுத் திருவான்மியூர், இடைச்சுரம், திருக்கழுக்குன்றம் முதலான தலங்களை வணங்கிக் கொண்டு தில்லையை அடைந்து திருச்சிற்றம்பலம் உடையானைப் போற்றிச் சீகாழிக்கு எழுந்தருளிப் பிரமபுரத்துப் பெருமானைப் போற்றித் தம் திருமாளிகையை அடைந்தார். பின்னர் பூம்பாவையும் பலகாலம் சிவன் அருளையே சிந்தித்துச் சிவனடி கூடினார். இது ஞானசம்பந்தரின் ஆறாவது திருத்தல யாத்திரையாகும்.

### திருமணம்

ஞானசம்பந்தரைக் காணும் பெருவேட்கையில் முருக நாயனாரும், நீலநக்க நாயனாரும் சீகாழி வந்தனர். சிவபாதஇருதயரும் சுற்றத்தாரும் ஞானசம்பந்தர் புண்ணியப் பதினாறு ஆண்டு எய்திய நிலையினராய் இருத்தலை எண்ணி அவரை அணுகி மறை நெறிப்படி வேள்வி செய்ய ஒரு கன்னியைத் திருமணம் புரிந்து கொள்ள வேண்டும் என வேண்டினர். ஞானசம்பந்தர் முதலில் மறுத்தார். ஆயினும் திருவருளை நினைந்து மறை வாழவும் அந்நெறியில் துறை வாழவும் திருமணத்திற்கு இசைவு தெரிவித்தார்.

சிவபாதஇருதயர் திருநல்லூரில் வாழும் நம்பாண்டார்நம்பி என்பாரின் மகளை மணம் பேசி நிச்சயித்தார். திருநல்லூர், மணவிழாவினால் பொலிவு பெற்றது. ஞானசம்பந்தர் உரிய நாளில் தோணிபுரத்தில் பெரியநாயகியாருடன் வீற்றிருந்தருளும் பெருமானை வணங்கிச் சிவிகைமீது

கள்வனாதலின் யானைத் தோலைப் போர்த்து மாயம் செய்தார் என்று இயைபில்லாத பொருள் தோன்ற வைத்தார்.

The Jains and the Buddhists, both lacking in wisdom, go about spreading canards and indulging in cavil and stay away from righteousness. The Lord soliciting alms from the public, draws my heart over to Him. He, that in the days of yore, skinned a wild elephant and wore its hide on Himself, much to the astonishment of worldly folks who wondered what wayward mystic is He! This is He, the Lord that abides in Pirama-puram and graces those who adore Him in all sincerity and dedication.

**Note:** In this verse and in every tenth verse of each hymn, our saint decries the faiths and principles of Jainism and Buddhism.

அருநெறியமறை வல்லமுனியகன் பொய்கையலர்மேய
பெருநெறியபிர மாபுரமேவிய பெம்மானிவன்றன்னை
ஒருநெறியமனம் வைத்துணர்ஞானசம் பந்தன்னுரைசெய்த
திருநெறியதமிழ் வல்லவர்தொல்வினை தீர்தலெளிதாமே. 11

*அருநெறிய மறை வல்ல முனி அகன் பொய்கை அலர் மேய,*
*பெரு நெறிய, பிரமாபுரம் மேவிய பெம்மான் இவன் தன்னை,*
*ஒரு நெறிய மனம் வைத்து உணர் ஞானசம்பந்தன்(ன்) உரை செய்த*
*திரு நெறிய தமிழ் வல்லவர் தொல்வினை தீர்தல் எளிதாமே.*

aruneRiya maRai valla mun2i akan2 poykai alar mEya,
peru neRiya, piramApuram mEviya pemmAn2 ivan2 tan2n2ai,
oru neRiya man2am vaittu uNar njAn2acampantan2(n2) urai ceyta
tiru neRiya tamiz vallavar tolvin2ai tIrtal eLituAmE.

**பொருள்:** நல்ல அருமையான சிறந்த நெறிகளை நான்கு வேதங்களும் உணர்த்துகின்றன. இந்த வேதங்களில் தலையாய வல்லமை வாய்ந்தவன் நான்முகன் என்று கூறப்படும், படைப்புத் தொழிலைச் செய்யும் பிரமதேவன் ஆவான். அவன் பிரமபுரத்தைப் அடைந்து இங்குள்ள முதல்வனைப் போற்றிப் பூசித்துப் பேறு பெற்றான்.

பிரமபுரத்தைச் சுற்றிலும் அகன்ற பெரிய குளங்களில் தாமரை மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. இந்த அழகிய பிரமபுரத்தில் மேவி இருந்து அருள் வழங்கி, முத்தியைக் கொடுக்கும் முதல்வனாகிய சிவபெருமானை, திருஞானசம்பந்தர் தனது மெய், வாய், கண், மூக்கு, செவி என்கின்ற ஐம்புலன்களையும் அடக்கி மனதை ஒருமைப் படுத்தி, அதனை

அவன் திருவடியிலே பதித்து, அவனுடைய பெருமைகளை நன்கு உணர்ந்து அவனைப் போற்றி, திருநெறியாகவும் நன்னெறியாகவும் விளங்கும் இத்தமிழ்ப் பதிகத்தைப் பாடி அருளினார்கள். உள்ளத்தைச் சிதற விடாமல் இத்திருப்பதிகத்தை ஒன்றிய மனத்தோடு, பாட்டின் பொருளை நன்றாக உணர்ந்து பிரமபுரத்து இறைவனை நோக்கி ஓத வல்லவர்களுடைய பழைய வினைகள் தீர்தல் எளிதாக அமையும்.

***குறிப்புரை:*** ஊழ்வினை தீர்வதற்குரிய வழிகள் பல இருப்பினும், இத்திருப்பதிகத்தை நாள்தோறும் ஓதி வருவது, பழைய வினைகளை நீக்குவதற்கு ஒரு எளிமை வாய்ந்த வழியாகும். திருக்கடைக்காப்பு என்று சொல்லப்படும், இப்பதினொன்றாம் பாட்டில், இப்பதிகத்தைப் பாடி அருளியவர் இவர் என்றும், பதிகத்தை ஓதி வருவதால் ஓதுபவர்களுக்கு ஏற்படும் நற்பயன் இது என்றும் கூறப்பட்டிருப்பதை உணர்ந்து கொள்க. திருஞானசம்பந்தப் பெருமான் பாடி அருளிய அனேகமாக எல்லாப் பதிகங்களிலும் இவ்வாறு திருக்கடைக்காப்புப் பாடியுள்ளார் என்பதையும் தெரிந்து கொள்க. அருநெறியமறை வல்லமுனி – அருமையான நெறிகளை வகுக்கும் மறைகளில் வல்ல முனியாகிய பிரமன். அலர்மேய அகன் பொய்கை பிரமாபுரம் மேவிய பெருநெறிய பெம்மான் இவன்றன்னை – தாமரைகள் பொருந்திய அகன்ற பொய்கையை உடைய பிரமாபுரத்தில் விரும்பியிருந்த முத்திநெறி சேர்க்கும் முதல்வனை. ஒரு நெறியமனம் – ஒன்றுபட்ட மனம். மனம் ஐம்பொறி வழியாகவும், அறிந்தவற்றை வழியடைத்த காலத்தும் சென்று பற்றித் தன்மயமாயிருப்பதொன்றாகலின் அங்ஙனம் செல்லாது ஒருங்கிய மனத்தை ஈண்டு விதந்தார்கள். வைத்து – பிரியாதே பதித்து. திருநெறிய தமிழ் – சிவநெறியாகிய அருநெறியை உடைய தமிழ். தொல்வினை – பழமையாகிய வினை.

இவ்வாறு முதல் மூன்று திருமுறைகளிலும் இறுதிப்பாடலாகிய திருக்கடைக் காப்பில் திருஞான சம்பந்தப் பெருமான் பல பாடல்களால் சஞ்சித, ஆகாமிய, பிராரத்த வினைகள் நீங்கும் எனக் குறிப்பிட்டு உள்ளார்கள். சஞ்சிதம் நீங்கும். ஆகாமியம் ஏறாது. பிராரத்தம் மெலிதாகத் தாக்கி முழுமையாக அனுபவித்தப் பின்னரே கழியும் என்பது கருத்து.

Saint Thiru-gnana-Sambandar chanted with single minded devotion and deep seated feelings, the Holy Tamil Hymns on Lord Civa abiding in the exalted 'Piramapuram'. Piramapuram, the famed township having large tanks full of lotus flowers. Brahma who is normally seated in Lotus flower is well versed in scriptures. He came to Piramapuram to pay obeisance to our Lord. Those who chant these Holy

Tamil Hymns with dedication, will easily be freed from the impact of their karma called Sanchitham accumulated in their previous births.

**Note:** In stanzas (1) to (10) of this Hymn, the Saint points to the Lord in His physical appearance before him. This was in response to the query of his father (Siva Padha Hrudayar), as to who it was that fed him milk, when he was away bathing in the holy waters of the temple tank.

The eleventh stanza speaks about the grace that will be bestowed upon all those who chant these verses of St. Thiru-gnana-Sambandar with dedication. The Saint proclaims that it will be easy for such people to get rid of all their Karma accumulated in all their previous births, known as Sanchitham (சஞ்சிதம்). Our Saint mentions it as 'Thol Vinai' (தொல்வினை).

This format of the last 11th verse finds a place in almost all the hymns of our Saint in all the three Thirumurais (1st, 2nd and 3rd). It is called as Thiru-k-kadai-k-kaappu (திருக்கடைக்காப்பு).

The most beneficial point here is, the reader comes to know for certain, the author of this hymn is St. Thiru-gnana-Sambandar.

Our young Saint proclaims in most of the eleventh verses in these 1st, 2nd and 3rd Thirumurais that the effect of the two karmaas (Sanchitham and Aahaamiyam) will be fully wiped out from those who chant those hymns with devotion. However, the effect of piraaratha karma will have to be endured in that birth itself.

Such souls will be relieved from the cycle of birth and death. Then the soul enjoys the Supreme Bliss in the pervasion of Lord Civan and has an ineffable union (இரண்டறக் கலத்தல்) with Him. This is the ultimate goal of life as per Saiva Philosophy.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*1ஆம் பதிகம் முற்றிற்று*
End of 1st Hymn

உ
சிவமயம்

## 2. திருப்புகலூர்

### திருத்தலவரலாறு:

திருப்புகலூர் என்ற திருத்தலமானது சோழவள நாட்டில் காவிரித் தென்கரையில் அமைந்துள்ள 75ஆவது தலமாகும். நாகை மாவட்டத்தில் நன்னிலம் கோட்டத்தைச் சேர்ந்தது. நன்னிலம், சன்னாநல்லூர், நாகையிலிருந்து பேருந்து வசதிகள் உள்ளன. மயிலாடுதுறை – திருவாரூர் புகைவண்டி இருப்புப் பாதையில் நன்னிலம் இரயில் நிலையத்திற்குக் கிழக்கே 5 கி.மீ தூரத்தில் உள்ளது. புன்னாகவனம், சரண்யபுரம், ரத்தனாரண்யம் என்பன புராணங்களில் வழங்கும் மறுபெயர்கள். இத்தலத்தின் திருக்கோயில் நாற்புறமும் அகழிசூழ நடுவில் இருக்கிறது. அக்னி பகவான் பூசித்துப் பேறுபெற்ற தலம். திருநாவுக்கரசர் முத்தி பெற்ற தலம். முருக நாயனாருடைய அவதார ஸ்தலம். சுந்தரமூர்த்தி நாயனாருக்குச் செங்கல்லைப் பொன்னாக்கிய திருத்தலம். மேகங்கள் பூசித்த தலம்.

### பெயர்கள்:

இறைவன் பெயர் அக்னிபுரீஸ்வரர். இறைவி கருந்தாள் குழலியம்மை, 'கோணப்பிரானைக் குறுகக் குறுகா கொடுவினையே' 'கருந்தாள் குழலியும் தாமும் கலந்து' என்பன அப்பர் திருவாக்கால் தெரியவரும் அகச்சான்றுகள் ஆகும்.

### தீர்த்தம்:

அக்னிதீர்த்தம். இதற்குப் பாணதீர்த்தம் என்றும் ஒரு பெயர் உண்டு. முடிகொண்டான் ஆறு, கோயிலுக்குத் தென்பக்கத்தில் ஓடுகிறது.

### தல விருட்சம்:

புன்னை; 'புன்னைப் பொழிற்புகலூர்', 'புன்நாகம் மணங்கமழும் பூம்புகலூர்' என்று திருமுறைகளில் வரும் சொற்கள் இதற்கு மேற்கொள் ஆகும்.

**விழா:**

சித்திரைச் சதயத்தைப் பத்தாம் நாளாகக் கொண்டு விழா நடைபெறுகிறது. பத்து நாளிலும் அப்பர் சுவாமிகள் வரலாற்றை ஒட்டிய ஐதீகமே நினைவூட்டப்பெறுகின்றது. வைகாசி மாதம் பருவ இறுதியாகப் பிரமோற்சவம் நடைபெறுகிறது. சந்திரசேகரர் விசேஷமான மூர்த்தி. வேளாக்குறிச்சி ஆதீனத்தின் பராமரிப்பில் உள்ளது. திருப்புகலூர் ஆலயத்திற்குள் வடபுறம் வர்த்தமானீச்சரம் என்கின்ற ஒரு தனிச் சன்னதி ஒன்று உள்ளது. முருக நாயனார் திருவுருவமும் அங்கு அமைக்கப்பபட்டுள்ளது.

**கல்வெட்டு:**

அரசாங்கத்தினர் படி எடுத்த கல்வெட்டுக்கள் 67. அவை முதலாம் இராஜராஜன் (கி.பி. 985–1014) காலத்திலிருந்து காணப்படுகின்றன. இரண்டாம் பிராகாரம் முதலாம் இராஜராஜன், முதலாம் இராஜஇராஜேந்திரன் ஆகிய இவர்கள் காலத்திற்குப் பிந்தியதாகும். இக்கோயில் அர்த்தமண்டபத்தைக் கட்டியவன் இறையூர் உடையான் அரையன் கங்கை கொண்டானான சோழ விச்சாதரப் பல்லவரையன். முதல் பிராகாரத்துத் தென்னந் திருவாயிலுக்கு ராஜராஜன் திருவாசல் என்று பெயர்.

கர்ப்பக் கிருகத்தைச் சுற்றியுள்ள நீராழிப்பத்தி மண்டபத்தைத் திருப்பணி செய்தவன் ஆர்க்காடு கிழான் சேதுராயன் என்பவன். இத்தலத்து 'நரலோக வீரன் திருமண்டபம்' என்ற ஒன்று இருந்ததாக ஒரு கல்வெட்டுக் கூறுகின்றது. சிதம்பரம் கோயில் கல்வெட்டில் நரலோகன் என்று கூறப்பட்டவன் கோப்பெருஞ்சிங்கன். அக்காலத்து நூற்றுக்கால் மண்டபம் அவனால் கட்டப்பெற்றது. அதுபோல இத்தலத்தும் நூற்றுக்கால் மண்டபத்தை அவன் கட்டியிருக்கக் கூடும். திருமதில் வேளாக்குறிச்சி மகாதேவ பண்டாரத்தின் சீடரான அருணாசலத் தம்பிரானால் செய்யப் பெற்றது. மூன்றாம் குலோத்துங்கன் காலத்திலும் இக்கோயில் அகழால் சூழப்பட்டிருந்தமை அறியலாம். இவ்வூர், முதல் இராஜராஜன் காலத்தில் க்ஷத்திரியசிகாமணி வளநாடு என்றும், மும்முடிச்சோழ வளநாடு என்றும் முதல் குலோத்துங்கன் காலத்திலும் அதற்குப் பின்பும், குலோத்துங்க சோழவள நாட்டைச் சார்ந்தது எனவும் கூறப்பெறுகின்றது. இது பனையூர் நாட்டுப் பிரமதேயமான திருப்புகலூர் என வழங்கப் பெறுகின்றது. இறைவன் கோணப்பெருமான் என்று குறிப்பிடப் பெறுகிறார். இங்குள்ள அம்பிகை நம்பிராட்டியார் என வழங்கப் பெறுகிறார்.

இராஜராஜன் காலத்தில் அம்மைக்கு நிவந்தங்கள் அளிக்கப் பெற்றன. திருநாவுக்கரசு நாயனார் குளிச்செழுந்த நாயனார் எனக் குறிக்கப் பெறுகிறார். இவருக்கு இராஜராஜன் காலத்தில்

நித்திய பூசைக்கு ஏற்பாடு செய்யப்பெற்றிருக்கிறது. முருக நாயனார் திருமடம், நம்பி நாயனார் திருமடம் என்றும், திருநீலகண்ட யாழ்ப்பாணரைத் தருமபுரத்து நாயனார், யாழ்மூரி நாயனார் என்றும், திருநீலநக்க நாயனாரை நக்கநாயனார் என்றும் கல்வெட்டுக்கள் காட்டுகின்றன.

**பதிக வரலாறு:**

திருஞானசம்பந்தப் பெருமான் திருப்புகலூருக்கு எழுந்தருளும்போது, இதற்கு முன்னரே அங்கு எழுந்தருளியிருந்த திருநாவுக்கரசு சுவாமிகள் அவ்வூர் அடியாரோடும், பெருமகனாராகிய முருக நாயனாரோடும், பிற அடியார்களோடும், பிள்ளையாரை எதிர்கொண்டு அழைத்தனர். சம்பந்தப் பெருமான் அவர்கள் வேண்டுகோட்கு இணங்கி, முருக நாயனார் திருமடத்தில் எழுந்தருளினார்கள். அங்கே சிறுத்தொண்டர், திருநீலநக்கர் முதலிய அடியார்களும் வந்து தரிசித்து, அளவளாவி இருந்தனர். சுவாமிகள் அவர்கள் அனைவரோடும் திருக்கோயிலுக்குச் சென்று வழிபடும்போது புகலூரப் பெருமையை உணர்த்தும் முகத்தான் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 2. THIRU-P-PUKALOOR

**THE HISTORY OF THE PLACE**

The sacred city of Thiru-p-pukaloor is the 75th sacred site on the south bank of river Cauvery in the Chola country. It is in the Nannilam taluk of Naagappattinam district and is connected by buses to Nannilam, Sannaanallur and Naagappattinam. The Nannilam railway station, in the Mayilaaduthurai - Thiruvaaroor route, is at a distance of 5 km from here. This sacred place is also known by the names of Punnaagavanam, Saranyapuram and Raththnaaranyam in the Puraanams. The temple here is surrounded by a moat on all four sides. Lord Agni worshipped and obtained gifts here. Here is where Thiru-naavuk-karasar attained salvation. Muruka Naayanaar was born here. It is here that bricks became gold for the sake of Sundara-moorthy Naayanaar. The clouds offered worship here.

## Names of Deities

The Lord's name is Agnipureesar, that of the Goddess, Karunthaal kuzhali ammai. The expressions in the Thevaaram, "evil will not befall those who approach Konappiraan", "Karunthaal kuzhali and Himself together" are the internal evidences for the holy names of the God and Goddess.

## Sacred Fords

Agnitheertam. It is also known as Baanatheerththam. The Mudikondaan river runs near the temple to the south.

## Tree of the Sacred Place

Punnai. Such phrases in the Thirumurais as "Pugaloor of Punnai Garden", "Poompugaloor which is redolent of Punnaagam" can be cited for this.

## Temple Festivals

A festival with the tenth day falling on the asterism of Sadhayam in the month of Chiththirai is celebrated. The festival events of all ten days evoke traditions associated with Appar's life story. The Brahmotsavam takes place in the month of Vaikaasi. The special icon is that of Chandrasekharar. This temple is under the religious administration of the Velaakurichchi Aadheenam. In the northern portion of this temple a separate sacred area called Vardhamaaneech-charam has been provided for the deity Vardhamaaneeswarar. The statue of one Muruka Naayanaar is also installed in this area.

## Stone Inscriptions

Government epigraphists have copied 67 inscriptions. The inscriptions begin from the time of Raajaraajan I (985-1014 CE). The second praakaara was built after the times of Raajaraajan I and Raajaraajendiran I. The person who built the ardhamandapam of this temple is named Iraiyoor Vudaiyaan Araiyan

Gangaikondaanaana Chola Vichchaadarap Pallavaraiyan. The south entrance of the first praakaara is known as Raajaraajan Thiruvaasal.

The mandapa surrounding the sanctum sanctorum was renovated by the Aarkkaadu Kizhaan Sethuraayan. According to an inscription, there was in this temple a "Naraloka Veeran Thirumandapam". In an inscription in Chidambaram temple, the person named Naralokan was Kopperunjsingan. The hundred pillar mandapam of that temple was built by him. Simiarly, he might have built a hundred pillar mandapam in this temple too. The renovation of the outer compound wall was performed by one Arunaachala Thambiraan, a disciple of Velaakkurichchi Mahaadeva Pandaaram. It is known that during the reign of Kuloththungan III, this temple was surrounded by a moat.

This place was known as Kshaththiriya Sikhaamani Valanaadu during the reign of Raajaraajan I and as Mummudich Chola Valanaadu during and after that of Kuloththungan I, and is said to belong to Kuloththunga Chola Valanaadu. It is denoted as Panaiyoor Naattup Piramadeyamaana Thiruppugaloor. The God is referred to as Konapperumaan and Ambikai is known as Nampiraattiyaar. During the reign of Raajaraajan, endowments were made to the Mother. Thiru-naavuk-karasu Naayanaar is referred to as Kulichchezhundha Naayanaar. Arrangement had been made during the reign of Raajaraajan to offer daily worship to this saint. Muruka Naayanaar Thirumadam is denoted as Nambi Naayanaar Thirumadam, Thiruneelakanta Yazhppaanar as Dharumapuraththu Naayanaar and Yaazhmoori Naayanaar and Thiruneelakanda Naayanaar as Nakka Naayanaar in the inscriptions.

## INTRODUCTION TO THE HYMN

This hymn on this holy place of Thiru-p-Pukaloor was sung by our saintly child Thiru-Gnaana-Sambandar during his second visit to this sacred town. Apprised of his coming, Muruka Naayanaar, a native of Pukaloor, Saint Thiru-Naavu-k-karasar who was sojourning there, and other devotees proceeded to the outskirts of the town to

receive him. Saint Siru-th-thondar came to this town to pay obeisance to our saintly child.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 2. திருப்புகலூர் 2. THIRU-P-PUKALOOR

பண் : நட்டபாடை *Pann: Natta Paadai*

ராகம் : கம்பீரநாட்டை *Raagam: Kambeera Naattai*

குறிகலந்தவிசை பாடலினானசை யாலிவ்வுலகெல்லாம்
நெறிகலந்ததொரு நீர்மையனாயெரு தேறிப்பலிபேணி
முறிகலந்ததொரு தோலரைமேலுடை யானிடமொய்ம்மலரின்
பொறிகலந்தபொழில் சூழ்ந்தயலேபுய லாரும்புகலூரே. 1

குறி கலந்த இசை பாடலினான், நசையால் இவ் உலகு எல்லாம்
நெறி கலந்தது ஒரு நீர்மையனாய், எருது ஏறி, பலி பேணி,
முறி கலந்தது ஒரு தோல் அரைமேல் உடையான் இடம் - மொய்ம்மலரின்
பொறி கலந்த பொழில் சூழ்ந்து, அயலே புயல் ஆரும் புகலூரே.

kuRi kalanta icai pATalin2An2, nacaiyAl, iv ulaku ellAm
neRi kalantatu oru nIrmaiyan2Ay, erutu ERi, pali pENi,
muRi kalantatu oru tOl araimEl uTaiyAn2 iTam--moym malarin2
poRi kalanta pozil cUzntu, ayalE puyal Arum pukalUrE.

**பொருள்:** சிவபெருமான் சுரத்தானங்களைக் குறிக்கும் இசையமைதியோடு கூடிய பாடல்களைப் பாடுபவன். அவன் உயிர்கள்மீது கொண்ட பெருவிருப்பால் இவ்வுலகம் முழுவதும் வாழும் அவ்வுயிர்கள், தம்மை உணரும் நெறிகளை வகுத்து, அவற்றுள் கலந்து நிற்பவன். எருதின்மிசை ஏறிவந்து மக்கள் இடும் பிச்சையை விரும்பி ஏற்பவன். இடையில் மான் தோலாடையை உடுத்துபவன். அவன் விரும்பி உறையும் இடம், செறிந்த மலர்கள்மீது புள்ளிகளை உடைய வண்டுகள் மொய்த்துத் தேனுண்ணும் வானளாவிய பொழில் சூழ்ந்த திருப்புகலூர் ஆகும்.

**குறிப்புரை:** குறி கலந்த இசை – குறித்த சுரத்தானங்களோடு ஒன்றிய இசை, பாடலினான் – இறைவன், மனக்குறிப்போடு ஒன்றிய இசை அமைந்த பாடலினான் என்பாரும் உளர். நசை – விருப்பம். நெறி – முறை. அஃதாவது, அந்தந்த ஆன்மாக்களின் பக்குவ நிலைக்கு ஏற்ப விறகில் தீயாகவும் பாலில் நெய்யாகவும், மணியுட் சோதியாகவும் கலந்து நிற்கும் முறை. பலி – பிச்சை, முறி கலந்தது ஒரு தோல் –

கொன்ற புலியின் தோலை. பொறி – வண்டு. உடையான் இடம் புகலூர் என இயைக்க. இது பின்வரும் பாடற்கும் இயையும்.

Lord Civan is the singer of songs compact of musical notations. By reason of His loving compassion for humanity, He formulated precepts which pervade everywhere and He enables them to follow the Divine Consciousness and thus gain deliverance. He rides the Bull and seeks alms; His waist is clad in a tiger skin; He is entempled in Pukaloor. The city is surrounded by rich gardens. Clouds graze these gardens. The speckled bees swarm about the densely luxuriant flowers.

**Note:** Civa is the Patron of Dance and Music. He is Nataraajar as well as the Sapta Swaramaya Murti. Civa is the Way and the Goal.

காதிலங்குகுழை யன்னிழைசேர்திரு மார்பன்னொருபாகம்
மாதிலங்குதிரு மேனியினான்கரு மானின்னுரியாடை
மீதிலங்கவணிந் தானிமையோர்தொழ மேவும்மிடஞ்சோலைப்
போதிலங்குநசை யால்வரிவண்டிசை பாடும்புகலூரே. 2

*காது இலங்கு குழையன்(ன்), இழை சேர் திருமார்பன்(ன்) ஒருபாகம்*
*மாது இலங்கு திருமேனியினான், கருமானின்(ன்) உரி ஆடை*
*மீது இலங்க அணிந்தான், இமையோர் தொழ, மேவும்(ம்) இடம் - சோலைப்*
*போதில் அங்கு நசையால் வரிவண்டு இசை பாடும் புகலூரே.*

kAtu ilagku kuzaiyan2(n2), izai cEr tirumArpan2(n2), orupAkam
mAtu ilagku tirumEn2iyin2An2, karumAn2in2(n2) uri ATai
mItu ilagka aNintAn2, imaiyOr toza, mEvum(m) iTam--cOlaip
pOtil agku nacaiyAl varivaNTu icai pATum pukalUrE.

***பொருள்:*** சிவபெருமான் தன் காதில் விளங்கும் குழையை அணிந்தவன். பூணூல் அணிந்த அழகிய மார்பினன். இடப்பாகமாக உமையம்மை விளங்கும் திருமேனியன். கருமானின் தோலை மேல் ஆடையாக அணிந்தவன். அத்தகையோன், இமையவர் தொழுவதற்கு வசதியாகத் தான் தங்கி அருள்புரியும் இடம், சோலைகளில் தேனுண்ணும் விருப்பினால் வரி வண்டுகள் இசைபாடும் புகலூராகும்.

***குறிப்புரை:*** ஒரு பாகம் மாது இலங்கும் திருமேனியன் என்பதால், காதிலங்கு குழையன் என்பதற்குப் பெண் பாதியில் காதில் விளங்கும் குழையை உடையவன் என்றும், ஆண் பாதியில் தளிரை உடையவன் என்றும் பொருள் கொள்க. குழை – பனை மரத்து ஓலையால் செய்யப்படும் மகளிர் காதணி. ஆடவர்

காதில் செருகிக் கொள்ளுவது மணத்தழை. இதனை வடநூலார் 'கர்ணாவதம்சம்' என்பர். இழைசேர் திருமார்பன் – பூணூல் சேர்ந்த, இழைத்த தங்க அணிகள் சேர்ந்த மார்பினை உடையவன். கருமான் – கிருஷ்ண மிருகம் என்னும் மான், உரி – தோல். இமையோர் – தேவர்கள். சோலைப்போதில் அங்கு நசையால் வரிவண்டு பாடும் எனப் பிரித்துப் பொருள் கொள்க. அங்கு – அசை; போது இலங்கு எனப் பிரித்துக் கோடலும் ஒன்று.

Lord Civan wears a special ear ring in his left ear called "Kuzhai" made of palmyrah leaf. He wears the sacred thread on His holy chest. His Divine Frame is beautified by His Consort who occupied the left side of His body. He is clad in the flayed skin of a darksome deer (Deer skin on the *பூணூல்*). Hailed by the Devas, he abides in Pukaloor. This town is surrounded by fertile groves. In these groves striped bees desiring to consume more and more of honey go on humming round and round the garden. This music resounds in Pukaloor.

**Note:** Civa is Ammai-Appar, the Deity who is Father as well as Mother.

பண்ணிலாவும்மறை பாடலினானிறை சேரும்வளையங்கைப்
பெண்ணிலாவவுடை யான்பெரியார்கழ லென்றுந்தொழுதேத்த
உண்ணிலாவியவர் சிந்தையுணீங்கா வொருவன்னிடமென்பர்
மண்ணிலாவும்மடி யார்குடிமைத்தொழின் மல்கும்புகலூரே. 3

பண் நிலாவும் மறை பாடலினான், இறை சேரும் வளை அம் கைப்
பெண் நிலாவ உடையான், பெரியார் கழல் என்றும் தொழுது ஏத்த
உள் நிலாவி அவர் சிந்தையுள் நீங்கா ஒருவன்(ன்), இடம் என்பர் -
மண் நிலாவும்(ம்) அடியார் குடிமைத்தொழில் மல்கும் புகலூரே.

paN nilAvum maRai pATalin2An2, iRai cErum vaLai am kaip
peN nilAva uTaiyAn2, periyAr kazal en2Rum tozutu Etta,
uL-nilAvi avar cintai uL nIgkA oruvan2(n2), iTam en2par--
maN nilAvum(m) aTiyAr kuTimait tozil malkum pukalUrE.

**பொருள்:** சிவபெருமான் இசையமைதி விளங்கும் வேத கீதங்களைப் பாடுபவன் - முன் கைகளில் வளையல்கள் விளங்கும் அழகிய கைகளை உடைய உமையம்மையைத் தனது தேவியாக உடையவன். தன் திருவடிகளை என்றும் தொழுது ஏத்தும் பெரியவர்களாகிய அடியார்களின் உள்ளத்தே விளங்குவதோடு அவர்களின் அடிமனத்தில் என்றும் நீங்காது இருப்பவன். அத்தகையோன் விரும்பி உறையுமிடம் நிலவுலகில் வாழும் அடியவர்கள் அடிமைத்தொழிலில் மனம் நிறைந்திருக்கும் புகலூராகும்.

**குறிப்புரை:** பண் நிலாவும் மறை – இசை தாமே விளங்கும் வேதம். இறை – முன்கை. பெண் – உமாதேவி. பெரியார் – சிவஞானத்தில் பெரியவர்கள். உள்நிலாவி அவர் சிந்தை நீங்கா ஒருவன் எனப்பிரிக்க. பாடலினான், உடையான், ஒருவன் இடம் புகலூரே என்பர், எனக்கூட்டுக.

Lord Civan is a singer of melodious Vedic hymns. His Consort Uma Devi's lovely fore-arms are bedecked with bangles. He, the Peerless One is ever hailed and adored by the great. He inseparably indwells in their mind (*சிந்தை*). Pukaloor is His universally celebrated shrine. It is in this Pukaloor our Lord stays and bestows His grace on His servitors.

நீரின்மல்குசடை யன்விடையன்னடை யார்தம்மரண்மூன்றுஞ்
சீரின்மல்குமலை யேசிலையாகமு னிந்தானுலகுய்யக்
காரின்மல்குகட னஞ்சமதுண்ட கடவுள்ளிடமென்பர்
ஊரின்மல்கிவளர் செம்மையினாலுயர் வெய்தும்புகலூரே. 4

*நீரின் மல்கு சடையன், விடையன்(ன்), அடையார்தம் அரண்மூன்றும்*
*சீரின் மல்கு மலையே சிலைஆக முனிந்தான் உலகு உய்யக்*
*காரின் மல்கு கடல் நஞ்சு அமுது உண்ட கடவுள்(ள்) இடம் என்பர் -*
*ஊரின் மல்கி வளர் செம்மையினால் உயர்வு எய்தும் புகலூரே.*

nIrin2 malku caTaiyan2, viTaiyan2(n2), aTaiyAr tam araN mUn2Rum
cIrin2 malku malaiyE cilai Aka mun2intAn2, ulaku uyyak
kArin2 malku kaTalnanjcam atu uNTa kaTavuL(L), iTam en2par--
Urin2 malki vaLar cemmaiyin2Al uyarvu eytum pukalUrE.

**பொருள்:** சிவபெருமான், கங்கை நீரால் நனையப்பெற்று நிறைவாக உள்ள சடைமுடியை உடையவன். காளையைத் தனக்கு வாகனமாகக் கொண்டவன். முப்புரங்களையும் சிறப்புமிக்க மேரு மலையை வில்லாகக் கொண்டு அழித்தவன். தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலைக் கடைந்து, இறப்பை ஒழிக்கும் தன்மையை உடைய அமிர்தம் பெற, முற்பட்டார்கள். அதுசமயம், கருநிறம் உடைய நஞ்சு கடலினின்றும் வெளிப்பட்டது. அது ஆலகால விஷமாக உலகில் உள்ள எல்லா உயிர்களையும் அழித்துவிடும் நிலையில் விளங்கியது. அதுசமயம் சிவபெருமான் சுந்தரரை ஏவி, அந்த நஞ்சை எடுத்துவரச் சொல்லி அதனை அமிர்தமாகக் கருதி விழுங்கி உலகில் உள்ள எல்லா உயிர்களும் மாண்டு போகாமல் காப்பாற்றி அருளினார். அத்தகையோன் விரும்பி உறையுமிடம் ஒழுக்கத்தால் உயர்ந்த மக்கள் வாழ்ந்து சிறப்பெய்தும் புகலூராகும்.

**குறிப்புரை:** அடையார் – தேவர்க்குப் பகைவராகிய அசுரர்கள். மலையைச் சிலையாக முனிந்தான் என்றது அவன் முனிவொன்றுமே பகை தணித்து ஆட்கொண்டது. வில்லான மலை அன்று என்பதாம். காரின் மல்கும் – கருமை நிறத்தில் மிகுந்த, ஊரின் மல்கி வளர் செம்மையினால் உயர்வெய்தும் புகலூர் – ஊர்களில் ஒரு காலைக்கு ஒருகால் நிறைந்து வளரும் ஒழுக்கத்தால் உயர்ந்த புகலூர்.

The river (Ganga) courses through Lord Civan's matted hair crest. He is mounted on the Bull. Once, indignant Civan destroyed the three fortresses of Asuraas using Mount Mehru as a bow. In order to save all the beings of the Cosmos, He once drank the black oceanic poison as though it were ambrosia. This great God abides in Pukaloor grown great, thanks to its dwellers who are poised in lofty righteousness.

செய்யமேனிவெளி யபொடிப்பூசுவர் சேரும்மடியார்மேல்
பையநின்றவினை பாற்றுவர்போற்றிசைத் தென்றும்பணிவாரை
மெய்யநின்றபெரு மானுறையும்மிட மென்பரருள்பேணிப்
பொய்யிலாதமனத் தார்பிரியாதுபொ ருந்தும்புகலூரே. 5

செய்யமேனி வெளிய பொடிப் பூசுவர் சேரும்(ம்) அடியார்மேல்
பைய நின்ற வினை பாற்றுவர் போற்று இசைத்து என்றும் பணிவாரை
மெய்ய நின்ற பெருமான் உறையும் இடம் என்பர் - அருள் பேணி,
பொய் இலாத மனத்தார் பிரியாது பொருந்தும் புகலூரே.

ceyya mEn2i veLiya poTip pUcuvar, cErum(m) aTiyArmEl
paiya nin2Ra vin2ai pARRuvar, pORRa icaittu en2Rum paNivArai
meyya nin2Ra perumAn2, uRaiyum iTam en2par--aruL pENi,
poy ilAta man2attAr piriyAtu poruntum pukalUrE.

**பொருள்:** சிவபெருமான் தன் சிவந்த திருமேனியில் வெண்ணிறமான திருநீற்றைப் பூசுபவர். தம்மை வந்தடையும் அடியவர்களைத் தாக்க வரும் வினைகளை நீக்குபவர். என்றும் தம்மைப் பாடிப் பணிவார்க்கு உண்மையானவர். அவர் விரும்பி உறையும் இடம், அருளையே விரும்பிப் பொய்யில்லாத மனத்தவர் நீங்காது வாழும் புகலூர் என்பர்.

**குறிப்புரை:** அடியார்மேல் நின்ற வினையை மெதுவாக நீக்குவார். பைய – மெதுவாக. நோயை விரைந்து நீக்கினால் அதனால் விளையும் தீமை பெரியதாய், நோயின் பெருமையும், மருத்துவன் உழைப்பும் அறியப்படாதவாறுபோல, வினைகளை விரைந்து நீக்கின் விளையும் கேடு, பலவாமாகலின் பையப் பாற்றுவார் என்றார். பாற்றுதல் – சிதறிப் போகச் செய்தல். பணிவாரை – அடியார்கள் இடத்தில் வேற்றுமை மயக்கம். மெய்ய – உண்மையாக, பொய் – அஞ்ஞானம்.

Lord Civan smears His radiant frame with white ashes. He makes the accumulated karma of His devotees dissipate and disappear. It disappears only gradually; if it disappears all of a sudden the effect will be severe. He is ever true to His devotees who adore and hail Him. God of this nature abides in Pukaloor. This Pukaloor consists of people who nurture God's grace and whose minds are free from falsity and spiritual ignorance. They live in close harmony with the place, never willing to part at all.

**Note:** Pukaloor is indeed "the upright heart and pure".

கழலினோசைசிலம் பின்னொலியோசை கலிக்கப்பயில்கானில்,
குழலினோசைகுறட் பாரிடம்போற்றக் குனித்தாரிடமென்பர்
விழவினோசையடி யார்மிடைவுற்று விரும்பிப்பொலிந்தெங்கும்
முழவினோசைமுந் நீரயர்வெய்த முழங்கும்புகலூரே. 6

***கழலின் ஓசை, சிலம்பின்(ன்) ஒலி, ஓசை கலிக்க, பயில் கானில்,***
***குழலின் ஓசை குறள்பாரிடம் போற்றக், குனித்தார் இடம் என்பர் -***
***விழவின் ஓசை, அடியார் மிடைவுஉற்று விரும்பிப் பொலிந்து எங்கும்***
***முழவின் ஓசை, முந்நீர் அயர்வு எய்த முழங்கும் புகலூரே.***

kazalin2 Ocai, cilampin2(n2) oli, Ocai kalikka, payil kAn2il,
kuzalin2 Ocai kuRaLpAriTam pORRa, kun2ittAr iTam en2par--
vizavin2 Ocai, aTiyAr miTaivu uRRu virumpip polintu egkum
muzavin2 Ocai, mun nIr ayarvu eyta muzaNgkum pukalUrE.

***பொருள்:*** சிவபெருமானுடைய இரண்டு திருவடிகளில் இடக்காலில் விளங்கும் சிலம்பு, வலக்காலில் விளங்கும் வீரக்கழல் ஆகியன ஒலிக்கவும், குழல் முதலிய இசைக்கருவிகள் முழங்கவும், குள்ளமான பூதகணங்கள் போற்றவும், பலகாலும் பழகிய இடமாக இடுகாட்டில் முற்றழிப்பு நடனம் புரியும் இடமாக விளங்குவது புகலூர் ஆகும். அங்குத் திருவிழாக்களின் ஓசையும், அடியவர் மனமகிழ்வோடு எங்கும் முழக்கும் முழவோசையும் கடலோசையைத் தளரச் செய்யும் பேரொலியாக அமைகின்றன.

***குறிப்புரை:*** கழலின் ஓசை – ஆண் பகுதியாகிய வலத்தாளில் அணிந்த வீரக்கழலின் ஓசை. சிலம்பின் ஓசை – பெண் பகுதியாகிய இடத்தாளில் அணிந்த சிலம்பின் ஓசை, அன்றிச் சிவபெருமானது கழலின் ஓசையும் மாறாடிய மாகாளியின் சிலம்பின் ஓசையும் என்பாரும் உளர். குனித்தார் – ஆடியவர், குறள்பாரிடம் – குள்ளமான பூதங்கள், மிடைவுற்று – நெருங்கி, முந்நீர் – கடல்.

In the cremation ground He dances and His hero anklet (on the right leg) and His Cilambu (on the left leg) resound in resonance, and His pygmy Bhuta-Hosts, adoring Him play the flutes and other instruments. It is affirmed Pukaloor is His beloved shrine where the roar of the sea is overwhelmed by the festive din and the sound of Muzhavam played by the happy devotees who willingly throng everywhere in their strength.

**Note:** The pygmy Bhuta Hosts: Verse 16 of the Periya Puraanam speaks eloquently of the invincible puissance of these Bhutas (An army of attendants serving Lord Civan). Hero anklet: It is a string of bells (tintinnabulum) attached to a cord and fastened below the right knee. Only an acknowledged hero is entitled to wear it. Cilampus: Anklets.

வெள்ளமார்ந்துமிளிர் செஞ்சடைதன்மேல் விளங்கும்மதிசூடி
உள்ளமார்ந்தவடி யார்தொழுதேத்த வுகக்கும்மருடந்தெம்
கள்ளமார்ந்துகழி யப்பழிதீர்த்த கடவுள்ளிடமென்பர்
புள்ளையார்ந்தவய லின்விளைவால்வள மல்கும்புகலூரே. 7

வெள்ளம் ஆர்ந்து மிளிர் செஞ்சடை தன்மேல் விளங்கும் மதிசூடி,
உள்ளம் ஆர்ந்த அடியார் தொழுது ஏத்த உகக்கும்(ம்) அருள் தந்து, எம்
கள்ளம் ஆர்ந்து கழியப் பழி தீர்த்த கடவுள்(ள்) இடம் என்பர் -
புள்ளை ஆர்ந்த வயலின் விளைவால் வளம் மல்கும் புகலூரே.

veLLam Arntu miLir cenjcaTai tan2 mEl viLagkum mati cUTi,
uLLam Arnta aTiyAr tozutu Etta, ukakkum(m) aruL tantu, em
kaLLam Arntu kaziyap pazi tIrtta kaTavuL(L) iTam en2par--
puLLai Arnta vayalin2 viLaivAl vaLam malkum pukalUrE.

**பொருள்:** சிவபெருமானது திருமுடியாகிய செஞ்சடைமேல் கங்கைநீர் அடங்கி விளங்குகின்றது. அதில் விளக்கமான பிறைமதியைச் சூடி உள்ளார். தம்மிடம் மனம் ஒன்றி அடியவர் தொழுது ஏத்த அவர்கள் மனம் மகிழும் வண்ணம் அருளைப் புரிந்து வருகிறார். என்னைப் பற்றிய வினையையும் பழியையும் தீர்த்து அருளினார். இவர் உறையும் இடம், மீன் கொத்தி முதலிய பறவை இனங்கள் மீன்களைக் கவர வந்து தங்கும் வயல்களின் விளைவால் வளம் மல்கிய புகலூராகும்.

***குறிப்புரை:*** வெள்ளம் – கங்கை. வெள்ளம் ஆர்ந்து மிளிர் செஞ்சடை என்றது செருக்கால் மிக்க கங்கையை அடக்கியது என்றவாறு. விளங்கும் மதிசூடி என்பது இளைத்த மதியை விளங்க வைத்தது. இதனால் தருக்கினாரை ஒடுக்குதலும் தாழ்ந்தாரை உயர்த்துதலும் இறைவன் கருணை என்பது தெரிவிக்கப்படுகின்றன. எம் கள்ளம் ஆர்ந்து பழிதீர்த்த கடவுள் – அநாதியேபற்றி நிற்கும் எமது ஆணவ மலமாகிய வஞ்சனை நீங்கப் பெத்தான்மாக்கள் என்னும் பழியைத் தீர்த்த கடவுள். புள் – நாரை முதலியன.

The radiant matted hair of Lord Civan holds the river Ganges. Also the splendid crescent moon glows in another portion of His matted hair. Unto the devotees who adore and hail Him with fullness of heart, He grants His sweet grace. It is thus, the Lord-God annuls our insidious afflictions and the consequent blame that has got stuck in us. It is affirmed that the Lord-God's shrine is at Pukaloor which is rich with the yield of fields - the habitat of water - fowls.

தென்னிலங்கையரை யன்வரைபற்றி யெடுத்தான்முடிதிண்டோள்
தன்னிலங்குவிர லானெரிவித்திசை கேட்டன்றருள்செய்த
மின்னிலங்குசடை யான்மடமாதொடு மேவும்மிடமென்பர்
பொன்னிலங்குமணி மாளிகைமேன்மதி தோயும்புகலூரே. **8**

***தென் இலங்கை அரையன், வரை பற்றி எடுத்தான், முடி திண் தோள்,***
***தன் இலங்கு விரலால் நெரிவித்து, இசை கேட்டு, அன்று, அருள்செய்த***
***மின் இலங்கு சடையான் மடமாதொடு மேவும்(ம்) இடம் என்பர் -***
***பொன் இலங்கு மணி மாளிகைமேல் மதி தோயும் புகலூரே.***

ten2 ilaNgkai araiyan2, varai paRRi eTuttAn2, muTi tiN tOL,
tan2 ilaNgku viralAl nerivittu, icai kETTu, an2Ru, aruL ceyta
min2 ilaNgku caTaiyAn2 maTamA toTu mEvum(m) iTam en2par--
pon2 ilaNgku maNi mALikai mEl mati tOyum pukalUrE.

***பொருள்:*** சிவபெருமான் தாழ்ந்த சடைமுடியை உடையவன். புகலூரில் உள்ள மாளிகைகளில் பொன்னும் மணியும் திகழ்கின்றன. மாளிகைகளின் உச்சியில் சந்திரன் தவழ்ந்து செல்லுகின்றான். இந்த அழகான புகலூரில் சிவபெருமான் தன் தேவியுடன் வீற்றிருந்து அருளாட்சி செய்து வருகின்றான்.

அழகிய இலங்காபுரியின் மன்னன் ஒரு சமயம் வான வீதியில் தனது புஷ்ப விமானத்தில் சென்று கொண்டிருந்தான். அவனது வான வழியில் திருக்கயிலாய மலை தோன்றிற்று. அம்மலையில் சிவபெருமான் வீற்றிருப்பார் என்று அவனுக்குத் தெரியும். அவ்வாறு தெரியுமாதலால் அவன் அம்மலையைச் சுற்றி வேறு பாதையில் சென்றிருக்கலாம்.

அதை விடுத்து அம்மலையைத் தள்ளி வைத்துவிட்டு நேர் பாதையில் போக விருப்பம் கொண்டான். அந்த விருப்பம் காரணமாகத் தன் விமானத்தைத் தரையில் இறக்கி, தானும் இறங்கித் தன் தோள் வலிமையாலும், கைகளின் பலத்தாலும் கயிலை மலையை நகர்த்தி வைக்க முயற்சி செய்தான். அதை அறிந்த சிவபெருமான் தன் கால் கட்டை விரலால் மலையைச் சிறிது அழுத்தினான். இலங்கை அரசனது தோள்கள் நெரிந்து மலையின் கீழ் நசுக்கப்பட்டு, எழுந்திருக்க முடியாமல் துன்புற்றான். தன் செயலுக்கு வருந்தி, இறைவனிடம் மன்னிப்புக் கோரி, சாம கானம் பாடி இறைவனை மகிழ்வித்தான். சிவபெருமான் மனமிரங்கி இலங்கை மன்னனுக்கு 'இராவணன்' என்ற பெயரையும், நீண்ட ஆயுளையும், சந்திரகாசம் என்ற தெய்வீக வாளும் கொடுத்து அருள் செய்தான்.

**குறிப்புரை:** தென் – அழகு. திசை குறித்ததன்று. வரை – கயிலை; நெரித்து எனாது நெரிவித்து என்றது விரலின் செயல் என்பதைத் தெரிவிக்க. இவரே நினைத்துச் செய்யின் நேரும் தீமை பெரிதாயிருக்கும் என்பது. இசை – சாம கானம். பொன்னிலங்கும் மணி மாளிகையின் மேல் மதிதோயும் என்பது, புகலூரும் மதிசூடி இறைவனைப் போல் சாரூபம் பெற்றது என்பது அறிவித்தவாறு. இராவணன் – அழுதவன்.

In the days of Yore, the King of beautiful Sri Lanka gripping Mount Kailas on which Lord Civan was seated, attempted to lift it aside. The Lord pressing the mount with his toe crushed the heads and mighty shoulders of the arrogant King. Realizing his mistake, the king sang hymn on Him. Lord Civan was pleased and graced him. This Lord wearing the shining crescent moon on His effulgent and matted hair is gementempled with his bashful Consort in Pukaloor. The moon glides over the gem-studded mansions of Pukaloor. Pukaloor is such a divine place, which is beautified by the moon doubly.

நாகம்வைத்தமுடி யானடிகைதொழு தேத்தும்மடியார்கள்
ஆகம்வைத்தபெரு மான்பிரமன்னொடு மாலுந்தொழுதேத்த்
ஏகம்வைத்தவெரி யாய்மிகவோங்கிய வெம்மானிடம்போலும்
போகம்வைத்தபொழி லின்னிழலான்மது வாரும்புகலூரே. 9

நாகம் வைத்த முடியான், அடி கைதொழுது ஏத்தும் அடியார்கள்
ஆகம் வைத்த பெருமான், பிரமன்(ன்) னொடு மாலும் தொழுது ஏத்த
ஏகம் வைத்த எரிஆய் மிக ஓங்கிய எம்மான், இடம் போலும் -
போகம் வைத்த பொழிலின்(ன்) நிழலால் மது வாரும் புகலூரே.

nAkam vaitta muTiyAn2, aTi kai tozutu Ettum aTiyArkaL
Akam vaitta perumAn2, pirama(n2)n2oTu mAlum tozutu Etta
Ekam vaitta eri Ay mika Ongkiya emmAn2, iTampOlum--
pOkam vaitta pozilin2(n2) nizalAl matu vArum pukalUrE.

**பொருள்:** பாம்பை முடிமிசை வைத்துள்ளவன் சிவபெருமான். அவன் தன் திருவடிகளைப் போற்றும் அடியார்கள் தம் மனத்தின்கண் வைத்துப் போற்றும் தலைவன் ஆவான். பிரமனும், திருமாலும் தொழுதேத்த ஏகனாய் எரி வடிவில் மிக ஓங்கியவன். எம்மானுமாகிய அவனுக்கு மிக உகந்த இடம், பல்வகைப் பயன்களையும் தருவதோடு, நிழலாற் சிறந்ததாய், தேன் நிறைந்து விளங்கும் பொழில் சூழ்ந்த புகலூராகும்.

**குறிப்புரை:** அடியார்கள் ஆகம் வைத்த பெருமான் – அடியார்களைத் தமது திருவுள்ளத்து இடம்பெற வைத்த பெருமான். அடியார்கள் தமது நெஞ்சத்தில் வைத்த பெருமான் என்றுமாம். ஏகம் வைத்த எரி – ஒன்றான தீப்பிழம்பு. போகம் வைத்த பொழில் என்றது தனிமகன் வழங்காப் பனிமலர்க்கா என்றது போல இன்பச் சிறப்பு அறிவித்தவாறு.

Lord Civan is adorned with a serpent on His matted crest. He indwells in the minds of His devotees who hail His Feet with adoring hands. As a single blazing column of fire He soared into infinite height as a single column of fire causing Brahma and Vishnu to hail and adore Him. Pukaloor is our Lord God's shrine; it is rich in useful and shady groves filled with honey yielding flowers.

**Note:** Civa is both immanent and transcendent.

செய்தவத்தர்மிகு தேரர்கள்சாக்கியர் செப்பிற்பொருளல்லாக்
கைதவத்தர்மொழி யைத்தவிர்வார்கள் கடவுள்ளிடம்போலும்
கொய்துபத்தர்மல ரும்புனலுங்கொடு தூவித்துதிசெய்து
மெய்தவத்தின்முயல் வாருயர்வானக மெய்தும்புகலூரே. 10

செய்த(அ)வத்தர் மிகு தேரர்கள், சாக்கியர், செப்பில் பொருள் அல்லாக்
கைதவத்தர், மொழியைத் தவிர்வார்கள் கடவுள்(ள்) இடம்போலும் -
கொய்து பத்தர் மலரும் புனலும்கொடு தூவி, துதிசெய்து,
மெய் தவத்தின் முயல்வார் உயர்வானகம் எய்தும் புகலூரே.

ceyta(a)vattar miku tErarkaL, cAkkiyar, ceppil poruL allAk
kaitavattavar, moziyait tavirvArkaL kaTavuL(L) iTam pOlum--
koytu pattar malarum pun2alum koTu tUvi, tuti ceytu,
mey tavattin2 muyalvAr uyar vAn2akam eytum pukalUrE.

**பொருள்:** சாக்கியர்களும் சமணர்களும் எண்ணிக்கையில் மிக்கவர்கள். இவர்கள் உண்மையல்லாத வஞ்சகம் நிறைந்த மொழிகளைக் கூறுபவர்கள். இவர்களது கூற்றைக் கேளாதவர்கள் நன்னெறி நிறைந்த மெய்யடியார்கள். மிகுதியான தவம் செய்பவர்கள். இவர்களின் தலைவன் சிவபெருமான். அவனுடைய அடியவர்கள் மலர் கொய்து வந்து தூவிப் புனலாட்டி, துதி செய்து, தவநெறியில் முயன்று உயர் வானகத்தை எய்துதற்குரிய வழிபாடுகளை ஆற்றுகிறார்கள். இவர்கள் வாழும் ஊராகிய புகலூரைத் தனக்கு மிக உகந்த இடமாகக் கொண்டு சிவபெருமான் அருளாட்சி செய்து வருகிறார்.

**குறிப்புரை:** மொழியைத் தவிர்வார்களாகிய செய்தவத்தரது கடவுளிடம் என இயைக்க. அன்றிச் செய்த அவத்தர் எனப்பெயரெச்சத்து அகரம் விகாரத்தால் தொக்கதாகக் கொண்டு வீண்காரியம் விளைவிப்பவர்கள் எனத் தேரர்க்கு அடைமொழியாகவும் ஆக்கலாம். செய்யில் – உரையில், மெய்தவம் எதுகை நோக்கி மிகாதாயிற்று.

Pukaloor is a shrine beloved for those that totally ignore the senseless utterances of the numerous Jains and Buddhists. The devotees engaged in asceticism pluck choice flowers, carry water for His ablutions and perform pooja with flowers. Hailing Him and being engaged in religious austerities, they thus gain the sublime and supernal world. The Lord's Pukaloor is filled with such devotees.

**Note:** Tapas: (Sarya, Kriya, Yoga constitute Tapas and Gnaanam is fruit of it).

புற்றில்வாழுமர வம்மரையார்த்தவன் மேவும்புகலூரைக்
கற்றுநல்லவவர் காழியுண்ஞானசம் பந்தன்றமிழ்மாலை
பற்றியென்றும்மிசை பாடியமாந்தர் பரமன்னடிசேர்ந்து
குற்றமின்றிக்குறை பாடொழியாப்புக ழோங்கிப்பொலிவாரே. 11

புற்றில் வாழும் அரவம்(ம்) அரை ஆர்த்தவன் மேவும் புகலூரைக்,
கற்று நல்ல அவர் காழியுள் ஞானசம்பந்தன் தமிழ்மாலை
பற்றி, என்றும்(ம்) இசை பாடிய மாந்தர், பரமன்(ன்) அடி சேர்ந்து,
குற்றம் இன்றி, குறைபாடு ஒழியாப், புகழ் ஓங்கி, பொலிவாரே.

puRRil vAzum aravam(m) arai Arttavan2 mEvum pukalUrai,
kaRRu nalla avar kAziyuL njAn2acampantan2 tamiz mAlai
paRRi, en2Rum(m) icai pATiya mAntar, paraman2(n2) aTi cErntu,
kuRRam in2Ri, kuRaipATu oziyA, pukaz Ogki, polivArE.

***பொருள்:*** **புற்றில் வாழும் பாம்புகளை இடையிலே கட்டியவனாகிய சிவபிரான் எழுந்தருளிய புகலூர்மீது இறைவனது பொருள்சேர் புகழைக் கற்று வல்லவர்கள் வாழும் சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் பாடிய தமிழ் மாலையாகிய இந்தத் திருப்பதிகத்தைத், என்றும் இசையோடு பாடி வழிபடும் மாந்தர்கள் இறைவன் திருவடி நீழலை அடைந்து குற்றம் குறைபாடு அகன்று புகழோங்கிப் பொலிவெய்துவார்கள்.**

***குறிப்புரை:*** பாம்பு என்ற பொதுமை பற்றி, யாகத்திலிருந்து வந்த இந்தப் பாம்புகளையும், புற்றில் வாழும் அரவம் என்றார். சாதியடை. மேவும் – விரும்பும். கற்று நல்ல அவர் – இறைவன் புகழைப் படித்து நல்லவராயினார்கள். குற்றம் – சொல்லான் வருங்குற்றம் குறை – சிந்தனையால் வரும் தோஷம். ஞானசம்பந்தன் புகலூரைச் (சொன்ன) தமிழ் மாலை பற்றி, பாடிய மாந்தர் பொலிவார் என இயைத்துப் பொருள் கொள்க. கற்று நல்ல அவர் காழி என்றது. கற்றவர்கள் பணிந்தேத்தும் கழுமலத்துள் ஈசன் என்ற பகுதியை நினைவூட்டுவது. ஒழியா – ஒழிந்து, செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம்.

Gnaana-Sambandar has sung about Civan whose waist is encircled by the serpent of the ant-hill and who is the presiding deity of Pukaloor. Gnaanasambandar belongs to Seekazhi, where people are learned and righteous. Those who cling to and chant the garlands of Tamil verses composed by Gnaana-Sambandar will be free from flaws and blemishes. They get poised in splendid glory and will eventually reach His hallowed Feet.

**Note:** Serpent of the ant-hill: Tradition holds that a deserted ant hill serves as a serpent's hide out.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*2ஆம் பதிகம் முற்றிற்று*
End of 2nd Hymn



கீழைத்திருக்காட்டுப்பள்ளி – ஸ்ரீ ஆரண்யசுந்தரேஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Aaranya Sundreswarar Temple - Keezhaitthirukattuppalli (Araniyesurar Kovil) Tamil Nadu.**



திருமருகல் – மாணிக்கவண்ணர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Manickavannar Temple -Tirumarukal, Tamil Nadu.**



திருச்செங்காட்டங்குடி – உத்தராபதீஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Ganapateecchurar Temple - Tirucchengkattangkudi, Tamil Nadu.**



திருஆலவாய் – சொக்கநாதர் & மீனாட்சி – பாண்டிய நாட்டுத் தலம்
**Thiru Aalavaai - Chokkanaathar & Goddess Meenakshi Temple - Tamil Nadu.**

உ
சிவமயம்

# 3. திரு வலிதாயம்

## திருத்தலவரலாறு:

திருவலிதாயம் என்ற திருத்தலமானது தொண்டை நாட்டில் விளங்கும் தேவாரத் தலங்களில் 21ஆவது தலம். சென்னைப் பெருநகரின் மேல்பால் உள்ளது. சென்னை மையப் பேருந்து நிலையத்திலிருந்து நகரப் பேருந்துகளில் செல்லலாம். இத்தலம் பாடி என இன்று வழங்குகிறது. பாரத்வாஜ மகரிஷி, வியாழன், அநுமான் இவர்கள் வழிபட்டு முத்தி பெற்றதாகத் தலபுராணம் கூறும். கஜப்பிரஷ்ட விமானம். சுவாமி பெயர் வலிதாயநாதர். அம்மை பெயர் தாயம்மை; இங்கேயுள்ள கிணற்று நீர் மிக்க சுவையானது.

## கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுக்கள் 14 உள்ளன. அவற்றில் சுவாமி பெயர் திருவலிதாயமுடைய நாயனார் என வழங்கப் பெறுகிறது. அம்மை பெயர் திருவீதி நாச்சியார் என்பது. இன்ன அரசர் காலத்தது என்று அறியப் பெறாத கல்வெட்டு ஒன்று, திருவெண்காட்டிலிருந்து அழகிய திருச்சிற்றம்பலமுடைய நாயனாரை எழுந்தருள்வித்துப் பிரதிஷ்டை செய்து, அதனைப் பூசிக்க, அந்தணரையும் அங்கிருந்து குடியேற்றி, அவர்களுக்கும் உணவுக்காக ஜயங்கொண்ட சோழ மண்டலத்து, புலியூர்க் கோட்டமான சங்கம சோழவள நாட்டு அம்பத்தூர் நாட்டு திருவலிதாயத்தில் நிலம் விட்டதாகக் கூறுகிறது. திருஞானசம்பந்த நாழி என்னும் மரக்காலால் நெல் அளந்து கொடுக்கும்படியும் எழுதியுள்ளது. திரிபுவன சக்ரவர்த்தியான இராஜராஜசோழன் தமது ஆட்சி 28ஆம் ஆண்டில் க்ஷேத்ரபாலப் பிள்ளையார் கோயிலையும் கட்டி, நிவேதனத்திற்காக நிலமும் விட்டான். விஜயகண்ட கோபால தேவர் என்பவர் காஞ்சிபுரத்திலிருந்து நடனமாதரைக் கொண்டு வந்து குடியேற்றினார். சுவாமிக்கும் அம்மை திருவீதி நாச்சியாருக்கும் ஆபரணங்களும், பாத்திரங்களும் வழங்கினார். இராஜராஜன் காலத்தில் சாளுக்கிய நாரணன் யாதவராயன் என்பவனால் பாடியைச் சேர்ந்த சிந்தாமணிபுரம் என்னும் இடத்தில் இருவீடுகளும் இரு நந்தவனங்களும் வழங்கப் பெற்றன. பரமேஸ்வரமங்கலத்துச் சிலம்பூர் கோட்டத்துச் சிலம்பணிந்தான் மாதவராயனால் விளக்கிடப் பொன் வழங்கப் பெற்ற செய்தியும் அறியலாகும். இவையன்றி, விளக்கு, உணவு முதலியவற்றிற்கு நிலமும் காசும் அளித்ததாக ஏனைய கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

**பதிக வரலாறு:**

திருஞானசம்பந்த சுவாமிகள் அடியார் கூட்டத்தோடும் மலையுங் கானுங் கடந்து போந்து, பாலியாற்று வடகரையை அடைந்து, திருவேற்காட்டை வணங்கி அதனை அடுத்துள்ள வலிதாயத்தை வணங்கும்போது 'பத்தரோடு' என்னும் இத்திருப்பதிகத்தைப் பாடி அருளினார்கள்.

## 3. THIRU-VALI-THAAYAM

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-vali-thaayam is one of the Thēvaaram temples of Thondai Naadu. This is the 21st sacred site. It lies to the west of the city of Chennai. City buses from the Central Bust Stand of Chennai ply to this place. The place is called Paadi today. The temple chronicle states that Bhaaradvaaja Maharishi, Viyaazhan and Anumaan attained salvation by worshipping here. The vimaanam is of the Gajaprishta type. The Lord's name is Vali-thaaya Naathar and that of the Mother is Thaayammai. The well water here is exceptionally sweet.

### Stone Inscriptions

There are 14 inscriptions about this temple. The name of the Lord is referred to as Thiru-Vali-Thaaya-mudaiya Naayanaar. The Mother's name is Thiru-Veedhi-Naachchiyaar. An inscription, which could not be identified with a particular king's reign, states that Azhagiya Chitrambala-mudaiya Naayanaar was brought from Thiru-ven-kaadu and installed here, and that in order to offer worship to that deity andhanar were also brought over from there and for their livelihood, land was endowed in Thiru-vali-thaayam of Ambaththoor Naadu in Sangama Chola Valanaadu of Puliyoor Kottam. It is also inscribed that paddy was to be measured using a measure known as Thiru-Gnaana-Sambanda Naazhi. In his 28th regnal year, Raajaraaja Chola, the emperor of three worlds, had the Kshethrapaala Pillayaar temple built and endowed land for Nivedhanam. One Vijayakanda Gopaala Thevar brought dancing women from Kaanchipuram and settled them here. He also gifted utensils for the Lord and Goddess

Thiru-Veedhi Naachchiyaar. During the time of Raajaraajan, two houses and two flower gardens situated in Chinthaamani-puram, a part of Paadi, were gifted by one Chaalukkiya Naaranan Yaadhavaraajan. It is also known that one Silambaninthaan Maadhavaraayan of Silamboor Kottam in Paramesvara-mangalam made a gift of gold for lighting the temple with a lamp. Besides these, land and money were donated for lamp and food, according to other inscriptions.

## INTRODUCTION TO THE HYMN

Wading through hills and jungles, the godly saint arrived at Tiruverkaadu with bhaktas. After that he visited this holy town Tiru-vali-thaa-yam (*திருவலிதாயம்*). This place is today known as Paadi (*பாடி*).

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 3. திரு வலிதாயம் — 3. THIRU-VALI-THAAYAM

பண் : நட்டபாடை — *Pann: Natta Paadai*
ராகம் : கம்பீரநாட்டை — *Raagam : Kambeera Naattai*

பத்தரோடுபல ரும்பொலியம்மல ரங்கைப்புனல்தூவி
ஒத்தசொல்லியுல கத்தவர்தாந்தொழு தேத்தவுயர்சென்னி
மத்தம்வைத்தபெரு மான்பிரியாதுறை கின்றவலிதாயம்
சித்தம்வைத்தவடி யாரவர்மேலடை யாமற்றிடர்நோயே. 1

*பத்தரோடு பலரும் பொலிய(ம்) மலர் அங்கைப் புனல் தூவி,*
*ஒத்த சொல்லி, உலகத்தவர் தாம் தொழுது ஏத்த, உயர் சென்னி*
*மத்தம் வைத்த பெருமான் பிரியாது உறைகின்ற வலிதாயம்*
*சித்தம்வைத்த அடியார் அவர்மேல் அடையா, மற்று இடர், நோயே.*

pattarOTu palarum poliya(m) malar agkaip pun2al tUvi,
otta colli, ulakattavar tAm tozutu Etta, uyar cen2n2i
mattam vaitta perumAn2 piriyAtu uRaikin2Ra vali tAyam,
cittam vaitta aTiyAr avarmEl aTaiyA, maRRu iTar, nOyE.

**பொருள்:** வலிதாயம் சித்தம் வைத்த அடியார்களை இடர்நோய் அடையா என வினை முடிபு கொள்க.

சிவனடியார்கள், விளங்குகின்ற அழகிய மலர்களை வலது உள்ளங்கையில் ஏந்தி மந்திரத்தோடு நீர் வார்த்துப் பூசிக்க அவர்களோடு ஒரே இசையில் அம்மந்திரங்களைச் சொல்லி உலக மக்கள் தாமும் வெளிநின்று தொழுதேத்துமாறு ஊமத்தை மலரை முடிமிசைச் சூடிய பெருமான் பிரியாதுறையும் வலிதாயம் என்ற தலத்தைத் தம் சித்தத்தில் வைத்துள்ள அடியவர்கள் மேல், துன்பங்களோ நோய்களோ வந்தடைய மாட்டா.

**குறிப்புரை:** இது திருவலிதாயத்தைத் தியானிப்பவர்களுக்குத் துன்பம் இல்லை என்கின்றது. மந்திர புஷ்பம் இடுவதற்காக வலக்கையில் பூவை வைத்து அர்க்கிய ஜலத்தைச் சொரிந்து கையைமூடி அபிமந்திரித்துப் பலர்கூடி வேத மந்திரங்களைச் சொல்லி, இறைவற்குச் சாத்துதல் மரபாதலின் அதனைப் பத்தரோடு . . . ஒத்தசொல்லி என்பதால் குறிப்பிடுகிறார். பத்தர் – பூசிக்கும் சிவனடியார்கள். பலர் – உடனிருக்கும் சிவனடியார்கள். பொலியம்மலர் – விளங்குகின்ற அழகிய மலர். புனல் தூவி – அர்க்கிய ஜலத்தை மந்திரத்தோடு சொரிந்து, ஒத்த சொல்லி – ஒரே ஸ்வரத்தில் வேத மந்திரங்களைச் சொல்லி அங்ஙனம் அவர்கள் திருவணுக்கன் திருவாயிலில் நின்று வேத மந்திரங்களைச் சொல்கின்ற காலத்து வழிபடும் அடியார்கள் தொழுவார்கள் ஆதலின், அதனை உலகத்தவர் தாம் தொழுதேத்த என்பதால் விளக்குகின்றார். பிரியாது உறைகின்ற என்றது இறைவன் எங்கணும் பிரியாது உறைபவனாயினும் இங்கே அனைவர்க்கும் விளங்கித் தோன்றும் எளிமை பற்றி. அடியாரவர்மேல் என்றதில் 'அவர்' அடியார் என்னும் முன்மொழிப்பொருளையே உணர்த்தி நிற்கிறது. இதனைச் சேர்த்து அடியார்கள் பெருமை விளக்கியவாறு. இடர் – ஆதி பௌதீகம் முதலிய வினைகளால் வரும் துன்பம். நோய் – பிறவிநோய். பத்தரோடு பலரும் தூவிச் சொல்ல உலகத்தவர் தொழுது ஏத்தப் பெருமான் பிரியாதுறைகின்ற வலிதாயத்தைச் சித்தம் வைத்த அடியார்மேல் இடர் நோய் அடையா எனக் கூட்டுக.

It is at Valithaayam the Lord-God who wears on His lofty crown Datura-flowers, abides for ever. Here, thrive many devotees who hold in their palms, flowers drenched in water, and offer them prayerfully to Him, all the while, reciting in unison the Siva-mantras. It is thus that men on earth hail Him. Neither difficulties nor any illness will besiege those that contemplate devoutly on the Deity entempled here.

படையிலங்குகர மெட்டுடையான்படி றாகக்கலனேந்திக்
கடையிலங்குமனை யிற்பலிகொண்டுணுங் கள்வன்னுறைகோயில்
மடையிலங்குபொழி லின்னிழல்வாய்மது வீசும்வலிதாயம்
அடையநின்றவடி யார்க்கடையாவினை யல்லற்றுயர்தானே. 2

படை இலங்கு கரம் எட்டு உடையான், படிறு ஆகக் கலன் ஏந்திக்
கடை இலங்கு மனையில் பலி கொண்டு உணும் கள்வன்(ன்), உறை கோயில்,
மடை இலங்கு பொழிலின்(ன்) நிழல்வாய் மது வீசும் வலிதாயம்,
அடைய நின்ற அடியார்க்கு அடையா, வினை அல்லல் - துயர்தானே.

paTai ilagku karam eTTu uTaiyAn2, paTiRu Akak kan2al Entik
kaTai ilagku man2aiyil pali koNTu uNum kaLvan2(n2), uRai kOyil,
maTai ilagku pozilin2(n2) nizalvAy matu vIcum vali tAyam
aTaiya nin2Ra aTiyArkku aTaiyA, vin2ai allal--tuyarntAn2E.

**பொருள்:** படைக்கலங்களை ஏந்திய எட்டுத் திருக்கரங்களை உடைய பெருமானும், பொய்யாகப் பலியேற்பது போலப் பிரம கபாலத்தைக் கையில் ஏந்தி வீடுகளின் வாயில்களிற் சென்று பலியேற்று உண்ணும் கள்வனும் ஆகிய பெருமான் உறையும் கோயிலை உடையதும், நீர்வரும் வழிகள் அடுத்துள்ள பொழில்களின் நீழலில் தேன்மணம் கமழ்வதுமாகிய வலிதாயத்தை அடைய எண்ணும் அடியவர்களை, வினை, அல்லல், துயர் ஆகியன வந்தடைய மாட்டா.

**குறிப்புரை:** இது வலிதாயத்தை அடையும் அடியார்கட்கு வினையில்லை என்றது. படிறாக – பொய்யாக. கலனேந்தி – பிரமகபாலத்தைத் திருக்கரத்தில் ஏந்தி; என்றது உலகம் எல்லாவற்றையும் தமக்கு உடைமையாகக் கொண்ட இறைவன் பலிகொண்டுண்டான் என்பது பொருந்தாது ஆகலின், அதுவும் அவருக்கோர் விளையாட்டு என்பதை விளக்க. படிறாக, ஏந்தி, கொண்டு, உண்டுணும் கள்வன் எனக் கூட்டுக. அன்றியும், கள்வனாதற்குப் படிறும் இயைபுடைமை காண்க. வினை அல்லல் துயர் – வினை ஏதுவாக வரும் அல்லலும் துன்பமும்.

Eight are Lord Civan's arms adorned with an octad of weapons. Behold this temple where dwells He, holding a begging bowl, guilefully seeking alms from every threshold of the house, and imbibes it. In Vali-thaa-yam shody gardens full of flowering plants and trees exist near water running brooks. Honey is dripping from the flowers in these gardens. The wind blowing through these gardens carry the smell of honey. To such a rich place the devotees throng to pay their homage to our Lord who is

templed there. Those devotees shall be relieved of their past karmaa and they will have no trouble in their life nor any misery.

ஐயனொய்யன்னணி யன்பிணியில்லவ ரென்றுந்தொழுதேத்தச்
செய்யன்வெய்யபடை யேந்தவல்லான்றிரு மாதோடுறைகோயில்
வையம்வந்துபணி யப்பிணிதீர்த்துயர் கின்றவலிதாயம்
உய்யும்வண்ணந்நினை மின்னினைந்தால்வினை தீருந்நலமாமே. 3

ஐயன், நொய்யன்(ன்), அணியன், பிணி இல்லவர் என்றும் தொழுது ஏத்த,
செய்யன், வெய்ய படை ஏந்த வல்லான், திருமாதோடு உறை கோயில் -
வையம் வந்து பணியப், பிணி தீர்த்து உயர்கின்ற - வலிதாயம்
உய்யும் வண்ணம் நினைமின்! நினைந்தால் வினை தீரும்; நலம் ஆமே.

aiyan2, noyyan2(n2), aNiyan2, piNi illavar en2Rum tozutu Etta,
ceyyan2, veyya paTai Enta vallAn2, tirumAtOTu uRai kOyil--
vaiyam vantu paNiya, piNi tIrttu uyarkin2Ra--vali tAyam
uyyum vaNNam nin2aimin2! nin2aintAl, vin2ai tIrum; nalam AmE.

**பொருள்:** வலிதாயத்தை உய்யும் வண்ணம் நினைமின்; நினைந்தால் பிணி தீரும், இன்பம் ஆம் என வினை முடிபு கொள்க.

அழகன், நுண்ணியன், அருகிலிருப்பவன், செந்நிற மேனியன், நெடிய மழுவை ஏந்தும் ஆற்றலன், அவன் பாசங்கள் நீங்கிய அடியவர் எக்காலத்தும் வணங்கித் துதிக்குமாறு உமையம்மையோடு உறையும் கோயில் உலக மக்கள் அனைவரும் வந்து பணிய அவர்களின் பிணிகளைத் தீர்த்து உயரும் திருவலிதாயம் என்ற அத்தலத்தை நீவீர் உய்யும் வண்ணம் நினையுங்கள். நினைந்தால் வினைகள் தீரும். நலங்கள் உண்டாகும்.

***குறிப்புரை:*** இது வலிதாயம் உலகப் பிணியைத் தீர்ப்பது. அதனை நினைத்தால் நும் பிணியும் தீரும். இன்பம் ஆம் என்கின்றது. ஐயன் – அழகியன், நொய்யன் – அணுவினுக்கு அணுவாய் இருப்பவன், பிணியில்லவர் – அநாதியே பந்தித்து நிற்பதாகிய ஆணவ மலக்கட்டற்ற பெரியார்கள். என்றும் தொழுதேத்த – முத்தி நிலையிலும் தொழ, வெய்ய படை – கொடியவர்களுக்கு வெம்மையாய் அடியவர்களுக்கு விருப்பமாய் இருக்கும் படை. திருமாது – உமா தேவி. முடியுடை மன்னனைக் கண்டு பிடியரிசி யாசிப்பார் போலாது வலிதாய நாதரைத் தியானித்துக் காமியப் பயனைக் கருதாதீர்கள். உய்யுநெறியைக் கேளுங்கள். அப்போது அதற்கிடையூறாகிய வினைகள் நீங்கும். இன்பம் உண்டாகும். வினை நீங்குதலொன்றுமே இன்பம் என்பது சித்தாந்த முத்தி அன்றாதலின் வினை தீரும் என்பதோடு அமையாது நலமாமே என்று மேலும் கூறினார்.

Behold the shrine of Lord Civan who is concorporate with His consort who is Grace, ever hailed and adored by those that are freed from the malady. He is the Supreme Lord, the subtlest of the subtle, the One of easy access; He is the ruddy One who wields awesome weapons. It is Vali-thaa-yam of ever-growing glory that annuls the malady of men on earth, when they pay obeisance to Him here. So, meditate on it to gain salvation. If you contemplate thus, even thus, Karmaa will cease to be and blissful weal will be yours.

**Note:** The Thief: 'Thief' as stated in verses 2, 6, 8 etc. Both Saivism and Vaishnavism hail their Deities thus. It is a term of endearment and not one of blasphemy. Nevertheless it is better to refer to the Lord as One who draws devotees to Him on the sly.

Tiru Maathu: Paarvathi. Lakshmi is Thiru Mahal in Saivism.

ஒற்றையேறதுடை யானடமாடியோர் பூதப்படைசூழப்
புற்றினாகமரை யார்த்துழல்கின்றவெம் பெம்மான்மடவாளோ
டுற்றகோயிலுல கத்தொளிமல்கிட வுள்கும்வலிதாயம்
பற்றிவாழும்மது வேசரணாவது பாடும்மடியார்க்கே. 4

ஒற்றை ஏறுஅது உடையான்; நடம்ஆடி, ஓர் பூதப்படை சூழப்;
புற்றில் நாகம் அரை ஆர்த்து உழல்கின்ற எம்பெம்மான்; மடவாளோடு
உற்ற கோயில் - உலகத்து ஒளி மல்கிட உள்கும் - வலிதாயம்
பற்றி வாழும்(ம்) அதுவே சரண் ஆவது, பாடும்(ம்) அடியார்க்கே.

oRRai ERu atu uTaiyAn2; naTam ATi, or pUtappaTai cUza;
puRRil nAkam arai Arttu uzalkin2Ra empemmAn2; maTavALOTu
uRRa kOyil--ulakattu oLi malkiTa uLkum--vali tAyam
paRRi vAzum(m) atuvE caraN Avatu, pATum(m) aTiyArkkE.

**பொருள்:** அடியவர்க்கு வலிதாயத்தைப் பற்றி வாழ்வதே சரண் என முடிபு காண்க. ஒற்றை விடையை உடையவன். சிறந்த பூதப்படைகள் சூழ்ந்து வர, புற்றில் வாழும் நாகங்களை இடையில் கட்டி நடனமாடி, உழலும் எம்பெருமான், உமையம்மையோடு உறையும் கோயில் உலகத்தின் பெருமையையும் சேரத் திகழ்கின்ற திருவலிதாயம். இறைவனை பாடி துதி செய்யும் அடியவர்கட்கு அத்தலத்தைப் பற்றி வாழ்வதே அரணாம்.

**குறிப்புரை:** இது அடியார்களாகிய உங்களுக்கு வலிதாயத்தைப் பற்றி வாழ்வதே சரண் என்கின்றது. ஒற்றையேறு – மற்ற இடபங்களோடு உடன் வைத்து எண்ணக் கூடாத அறவடிவமாகிய இடபம். புற்றில்

நாகம் சாதியடை. வலிதாயம் – உலகம் முழுவதுமே ஒளி நிறைய நினைக்கப்படுவது என்பது. வாழுமது – வாழ்வது. சரண் – அடைக்கல ஸ்தானம்.

Lord Civan's mount is the peerless Bull; He, our Lord-God, wears serpent of the ant-hill; He goes about dancing, encircled by the Bhuta-Host (an army of servitors). He is concorporate with His consort, and is enshrined in Thiru-Vali-thaa-yam. The fame of the entire cosmos is collectively enjoyed by the devotees, who stay in Thiru-Vali-thaa-yam. Those devotees, who pay obeisience and praise the lord of this place by singing will reach the path way for their salvation.

புந்தியொன்றிநினை வார்வினையாயின தீரப்பொருளாய
அந்தியன்னதொரு பேரொளியானமர் கோயிலயலெங்கும்
மந்திவந்துகடு வன்னொடுங்கூடி வணங்கும்வலிதாயஞ்
சிந்தியாதவவர் தம்மடும்வெந்துயர் தீர்தலெளிதன்றே. 5

புந்தி ஒன்றி நினைவார் வினைஆயின தீரப், பொருள் ஆய
அந்தி அன்னது ஒரு பேர் ஒளியான் அமர் கோயில் - அயல் எங்கும்
மந்தி வந்து கடுவ(ன்)னொடும் கூடி வணங்கும் - வலிதாயம்
சிந்தியாதஅவர் தம் அடும் வெந்துயர் தீர்தல் எளிதன்றே.

punti on2Ri nin2aivAr vin2ai Ayin2a tIra, poruL Aya
anti an2n2atu oru pEr oLiyAn2 amar kOyil--ayal egkum
manti vantu kaTuva(n2)n2oTum kUTi vaNagkum--vali tAyam
cintiyAta avar tam aTum ventuyar tIrtal eLitu an2RE.

**பொருள்:** வலிதாயம் கோயிலைச் சிந்தியாதவர் துயர் தீர்தல் எளிதன்று என முடிபு கொள்க.

மனம் ஒன்றி நினைபவர் வினைகளைத் தீர்த்து அவர்க்குத் தியானப் பொருளாய்ச் செவ்வான் அன்ன பேரொளியோடு காட்சி தரும் இறைவன் எழுந்தருளியுள்ள கோயிலாய் அயலில் மந்தி ஆண்குரங்கோடு கூடி வந்து வணங்கும் சிறப்பை உடைய திருவலிதாயத்தைச் சிந்தியாத அவர்களைத் தாக்கும் கொடிய துன்பம் தீர்தல் எளிதன்று.

**குறிப்புரை:** இது, பரிபாக விசேடம் கைவரப் பெறாத மந்தியும் கடுவனும்கூட வணங்கும் பொழுது, அச்சிறப்பு வாய்ந்த மக்கள் வழிபடாராயின் அவர் வினை தீராதென்பதை அறிவிக்கின்றது. புந்தியொன்றி நினைவார் – மனம் பொறிவழிச் சென்று புலன்களைப் பற்றாமல் ஒருமையாய் நின்று தியானிக்கும் அடியார்கள், பொருளாய – தியானிக்கும் பொருளாய, அந்தியன்னதொரு பேரொளியான் – அந்திக்காலத்துச் செவ்வொளி போன்ற திருமேனியுடையான். மந்தியும் கடுவனும் வணங்கும் வலிதாயம்

என்றமையால் மக்களும் தம் இல்லற இன்பம் குலையாதே வந்து வணங்கும் பெற்றியர் என்பது விளக்கியவாறு. குரங்கினம் மனிதர்கள் செய்வதைப் பார்த்து அது போல் செய்யும் குணம் உடையது. மனிதர்களில் பக்தியுணர்வில்லாதவர்களும் பக்தியுணர்வுடையவர் செய்வதைப் பார்த்தாவது அதுபோல் செய்து பயன் பெறலாமே என்பது குறிப்பு.

Behold the shrine of Lord Civan who blazes red, like the bright evening Sun! The Supreme Lord annuls the Karma of those that contemplate on Him in single-minded devotion. It is Vali-thaa-yam to which monkeys, male as well as female, resort in strength to adore Him. Ha, it is well-nigh impossible to get freed of the onslaught of excruciating misery for those that set not their mind on this shrine.

ஊனியன்றதலை யிற்பலிகொண்டுல கத்துள்ளவரேத்தக்
கானியன்றகரி யின்னுரிபோர்த்துழல் கள்வன்சடைதன்மேல்
வானியன்றபிறை வைத்தவெம்மாதி மகிழும்வலிதாயந்
தேனியன்றநறு மாமலர்கொண்டுநின் றேத்தத்தெளிவாமே. 6

*ஊன் இயன்ற தலையில் பலி கொண்டு, உலகத்துஉள்ளவர் ஏத்த,*
*கான் இயன்ற கரியின்(ன்) உரி போர்த்து, உழல் கள்வன்; சடைதன்மேல்*
*வான் இயன்ற பிறை வைத்த எம் ஆதி; மகிழும் வலிதாயம்*
*தேன் இயன்ற நறுமாமலர் கொண்டு நின்று ஏத்த, தெளிவு ஆமே.*

Un2 iyan2Ra talaiyil pali koNTu, ulakattu uLLavar Etta,
kAn2 iyan2Ra kariyin2(n2) uri pOrttu, uzal kaLvan2; caTai tan2 mEl
vAn2 iyan2Ra piRai vaitta em Ati; makizum vali tAyam
tEn2 iyan2Ra naRu mA malar koNTu nin2Ru Etta, teLivu AmE.

***பொருள்:*** வலிதாயத்து இறைவனை நறுமாமலர் கொண்டு நின்றேத்தத் தெளிவு ஆம் என வினை முடிபு கொள்க.

ஊன் கழிந்த பிரம கபாலத்தில் பலி ஏற்று உலகத்தவர் பலரும் ஏத்தக் காட்டில் திரியும் களிற்று யானையின் தோலை உரித்துப் போர்த்துத் திரியும் கள்வனும், சடையின்மேல் வானகத்துப் பிறைக்கு அடைக்கலம் அளித்துச் சூடிய எம் முதல்வனும் ஆகிய பெருமான், மகிழ்ந்துறையும் திருவலிதாயத்தைத் தேன் நிறைந்த நறுமலர் கொண்டு நின்று ஏத்தச் சிவஞானம் விளையும்.

**குறிப்புரை:** இது வலிதாயம் தொழ ஞானம் உண்டாம் என்கின்றது. ஊனியன்ற தலை – ஊனால் அமைந்த தலை. இயன்ற – ஆக்கிக் கொள்ளப்பட்ட. பலி – பிச்சை. கான் – காடு. வானியன்ற – வானில் இலங்குகின்ற. ஆதி – முதற்பொருள்; யாவற்றிற்கும் முதலாயுள்ளவன். தெளிவு – ஞானம்.

Hailed by men on earth, Lord Civan receives alms in a skull denuded of flesh; He is mantled in the hides of the jungle-roving mammoth elephant. He, the sly One, that wears in His crest the sky borne crescent moon; He is the Alpha (the Primordial) that abides joyously in Vali-thaa-yam. One gains liberation if He is adored with large honey filled sweet smelling flowers.

கண்ணிறைந்தவிழி யின்னழலால்வரு காமன்னுயிர்வீட்டிப்
பெண்ணிறைந்தவொரு பான்மகிழ்வெய்திய பெம்மானுறைகோயில்
மண்ணிறைந்தபுகழ் கொண்டடியார்கள் வணங்கும்வலிதாயத்
துண்ணிறைந்தபெரு மான்கழலேத்தநம் முண்மைக்கதியாமே. 7

கண் நிறைந்த விழியின் அழலால் வரு காமன்(ன்) உயிர் வீட்டிப்,
பெண் நிறைந்த ஒருபால் மகிழ்வு எய்திய பெம்மான் உறை கோயில் -
மண் நிறைந்த புகழ் கொண்டு அடியார்கள் வணங்கும் - வலிதாயத்து-
உள்-நிறைந்த பெருமான் கழல் ஏத்த, நம் உண்மைக்கதி ஆமே.

kaN niRainta viziyin2 azalAl varu kAman2(n2) uyir vITTi,
peN niRainta orupAl makizvu eytiya pemmAn2 uRai kOyil--
maN niRainta pukaz koNTu aTiyArkaL vaNagkum--valitAyattu--
uL--niRainta perumAn2 kazal Etta, nam uNmaik kati AmE.

**பொருள்:** வலிதாய நாதன் கழலை ஏத்தினால் வீட்டின்பத்தை அடையலாம் என வினை முடிபு காண்க.

நெற்றி விழியின் அழலால், தேவர் ஏவலால் வந்த காமனது உயிரை அழித்துத் தனது திருமேனியின் பெண்ணிறைந்த இடப்பாகத்தால் மகிழ்வெய்திய பெருமான் உறை கோயிலாய் நிலவுலகெங்கும் நிறைந்த புகழைக் கொண்ட அடியவர்கள் வணங்கும் திருவலிதாயத்துள் நிறைந்து நிற்கும் பெருமான் திருவடிகளை வணங்கினால் வீடு பேறு அடையலாம்.

**குறிப்புரை:** இது ஆன்மாக்கள் என்றும் அடையத்தகும் கதியாகிய வீட்டின்பத்தை வலிதாய நாதன் கழல் ஏத்த அடையலாம் என்கின்றது. கண் நிறைந்த அழல் எனக் கூட்டுக. வருகாமன் – தேவ காரியத்தை முடிப்பதற்காக பிரம்மனுடைய கோபத்திற்கு ஆளாகி இறப்பதைக் காட்டிலும் சிவபெருமான் மறக்கருணையால் உய்வேன் என்று விரும்பி வந்த காமன். வீட்டி – அழித்து. உயிர் வீட்டி என்றது

நித்தியமாகிய உயிரை அழித்ததன்று, அதனைத் தன்னகத் தொடுக்கி, உண்மைக்கதி – என்றும் நிலைத்த முத்தி.

This is the shrine of Lord Civan who is happily concorporate with His consort, and who, by the fire with which His (third) eye is full to the brim did away with (Manmatan-*மன்மதன்*) cupid that confronted Him. It is Vali-thaa-yam that is pervaded full by the presence of the Lord that is adored by the devotees whose renown fills the world. Our true and salvific beatitude lies in hailing His ankleted Feet.

கடலினஞ்சமமு துண்டிமையோர்தொழு தேத்தநடமாடி
அடலிலங்கையரை யன்வலிசெற்றரு ளம்மானமர்கோயில்
மடலிலங்குகமு கின்பலவின்மது விம்மும்வலிதாயம்
உடலிலங்குமுயி ருள்ளளவுந்தொழ வுள்ளத்துயர்போமே. 8

கடலில் நஞ்சம் அமுதுஉண்டு, இமையோர் தொழுது ஏத்த நடம்ஆடி,
அடல் இலங்கை அரையன் வலிசெற்று அருள் அம்மான் அமர் கோயில் -
மடல் இலங்கு கமுகின், பலவின், மது விம்மும் - வலிதாயம்
உடல் இலங்கும் உயிர் உள்ளளவும் தொழ, உள்ளத்துயர் போமே.

kaTalil nanjcam amutu uNTu, imaiyOr tozutu Etta, naTam ATi,
aTal ilagkai araiyan2 vali ceRRu aruL ammAn2 amar kOyil--
maTal ilagku kamukin2, palavin2, matu vimmum--vali tAyam
uTal ilagkum uyir uLLaLavum toza, uLLattuyar pOmE.

**பொருள்:** உடலில் உயிர் உள்ள அளவும் தொழுவாரது மனத்துயரம் கெடும் என வினை முடிபு காண்க.

திருப்பாற்கடலைக் கடைந்தபோது எழுந்த நஞ்சினை அமுதமாக உண்டு தேவர்கள் தொழுது வாழ்த்த நடனம் ஆடி, வலிமை மிக்க இலங்கை மன்னனின் ஆற்றலை அழித்துப் பின் அவனுக்கு நல்லருள் புரிந்த இறைவன் எழுந்தருளிய கோயிலை உடையதும், மடல்கள் விளங்கும் கமுகு பலாமரம் ஆகியவற்றின் தேன் மிகுந்து காணப்படுவதுமாகிய திருவலிதாயத் தலத்தை நினைக்க மனத்துயர் கெடும்.

**குறிப்புரை:** இது வினைக்கீடாகிய உடலில் உயிருள்ள அளவும் தொழுவாரது மனத்துன்பம் மடியும் என்கின்றது. கடல் – பாற்கடல் நஞ்சம் அமுதுண்டு என்றது நஞ்சின் கொடுமை கண்டும் அதனை அமுதாக ஏற்றமையை. இலங்கையரையன் வலி செற்று என்றது அவன் வலிமை காரணமாகவே செருக்கியிருந்தானாகலின், அவனது வலிமை கெடுத்து ஆட்கொண்டார் என்றது.

**குருவருள்:** சிவபூசை எடுத்துக் கொள்பவர் 'என் உடலில் உயிர் உள்ள அளவும் பூசையை விடாது செய்து வருவேன்' என்ற உறுதிமொழி கொடுத்தே எடுத்துக் கொள்வர். அக்கருத்தை இப்பாடலின் இறுதிவரி குறிப்பிடுதலைக் காணலாம். 'பழனஞ்சேர் அப்பனை என்கண் பொருந்தும் போழ்தத்தும் கைவிட நான் கடவேனோ' என்ற அப்பர் தேவாரமும் காண்க.

It is the shrine of the Lord Civan who danced, and was hailed and adored by the celestials, when He quaffed the oceanic venom. He did away with the valour of the King of Sri Lanka (Raavana), and then mercifully graced him. It is Vali-Thaa-yam rich in arecanut trees over which honey drips from jack trees. Heart-corroding misery will cease, so long as life in its embodied state adores Him here.

**Note:** Jack-tree: *Artocarpus integrifolia.*

பெரியமேருவரை யேசிலையாமலை வுற்றாரெயின்மூன்றும்
எரியவெய்தவொரு வன்னிருவர்க்கறி வொண்ணாவடிவாகும்
எரியதாகியுற வோங்கியவன்வலி தாயந்தொழுதேத்த
உரியராகவுடை யார்பெரியாரென வுள்கும்முலகோரே. 9

*பெரிய மேருவரையே சிலையா, மலைவுற்றார் எயில்மூன்றும்
எரிய எய்த ஒருவன்(ன்), இருவர்க்கு அறிவு ஒண்ணா வடிவு ஆகும்
எரிஅது ஆகிஉற ஓங்கியவன், வலிதாயம் தொழுது ஏத்த,
உரியர் ஆக உடையார் பெரியார் என உள்கும் உலகோரே.*

periya mEruvaraiyE cilaiyA, malaivu uRRAr eyil mUn2Rum
eriya eyta oruvan2(n2), iruvarkku aRivu oNNA vaTivu Akum
eri atu Aki uRa Ogkiyavan2, valitAyam tozutu Etta,
uriyar Aka uTaiyAr periyAr en2a uLkum ulakOrE.

**பொருள்:** வலிதாயத்தை வணங்குவாரைப் பெரியார் என உலகோர் உள்குவர் என முடிபு காண்க.

தேவர்களோடு மாறுபட்ட திரிபுர அசுரர்களின் கோட்டைகள் மூன்றையும், மிகப் பெரிய மேருமலையை வில்லாகக் கொண்டு எரியும்படி அழித்த ஒருவனும், திருமால் பிரமன் ஆகிய இருவராலும் அறிய ஒண்ணாத அழல் வடிவாய் உயர்ந்து ஓங்கியவனும் ஆகிய சிவபிரானது திருவலிதாயத்தைத் தொழுது ஏத்தலைத் தமக்குரிய கடமையாகக் கொண்ட உலக மக்கள் பலரும் பெரியார் என நினைந்து போற்றப்படுவர்.

**குறிப்புரை:** இது வலிதாயத்தை வணங்குவோரே பெரியர் என உலகத்தோர் உள்குவர் என்கின்றது. பெரிய மேருவரை என்றது மலைகளில் எல்லாம் பெரியதாய், தலைமையாய் இருத்தலின். சிலை – வில்.

மலைவுற்றார் – சண்டை செய்த திரிபுராதிகள். எய்த ஒருவன் – அம்பு எய்து எரித்த ஒப்பற்றவன். இருவர் – பிரமனும் திருமாலும். எட்டுக் கண்ணும், இருகண்ணும் படைத்திருந்தும் அறிய முடியாத அக்கினிப் பிழம்பாகிய அண்ணாமலையாய் நின்ற இறைவன். தாம் தெய்வம் என்று இறுமாப்பார் இருவராலும் அறிய ஒண்ணாதவன் என்பதாம். ஏத்த உரியராக உடையார் – பணிதலே தமக்கு உரிமையாக உடைய அடியார்கள். உலகோர் – உலகத்தவரே. உள்கும் – நினைப்பீராக.

Lord Civan is the One who with immense Mount Meru as His bow guttered with fire the three sky based hostile citadels. He rose and soared up and up as a column of fire, unknowable unto the two (Brahma and Thirumaal). Men on earth esteem (only) those as great, who hold it as their privilege to adore His Vali-Thaa-yam.

**Note:** The Two: Vishnu and Brahma: Adoration is a privilege. It is a gift from God.

ஆசியாரமொழி யாரமண்சாக்கிய ரல்லாதவர்கூடி
ஏசியீரமில ராய்மொழிசெய்தவர் சொல்லைப்பொருளென்னேல்
வாசிதீரவடி யார்க்கருள்செய்து வளர்ந்தான்வலிதாயம்
பேசுமார்வமுடை யாரடியாரெனப் பேணும்பெரியோரே. 10

*ஆசி ஆர மொழியார் அமண் சாக்கியர் - அல்லாதவர் - கூடி*
*ஏசி, ஈரம் இலராய், மொழிசெய்தவர் சொல்லைப் பொருள் என்னேல்!*
*வாசி தீர அடியார்க்கு அருள்செய்து வளர்ந்தான் வலிதாயம்*
*பேசும் ஆர்வம் உடையார் அடியார் எனப் பேணும் பெரியோரே.*

Aci Ara moziyAr amaN cAkkiyar--allAtavar--kUTi
Eci, Iram ilarAy, moziceytavar collaip poruL en2n2El!
vAci tIra aTiyArkku aruLceytu vaLarntAn2 valitAyam
pEcum Arvam uTaiyAr aTiyAr en2ap pENum periyOrE.

**பொருள்:** மனமார வாழ்த்தும் இயல்பினரல்லாத சமணர் சாக்கியர் ஆகிய புறச்சமயிகள் கூடி இகழ்ந்தும் அன்பின்றியும் பேசும் சொற்களைப் பொருளாகக் கொள்ளாதீர். குற்றம் தீர அடியவர்களுக்கு அருள் செய்து புகழால் ஓங்கிய பெருமானது வலிதாயத்தின் புகழைப் பேசும் ஆர்வம் உடையவர்களுக்கு யாம் அடியர் எனப் பெரியோர்களே பேணுவீர்களாக.

**குறிப்புரை:** இது, ஏற்றத்தாழ்வற அடியார் எல்லார்க்கும் அருள் செய்யும் வலிதாயத்தைப் பேசுபவர்க்கு யாம் அடியர் எனப் பெரியோர்கள் பேணுவார் என்கின்றது. ஆசியார மொழியார் – ஆசிகளை நிரம்பச் சொல்லும் மனப்பண்பற்ற சமணர்கள். அல்லாதவர் – சைவத்திற்குப் புறம்பானவர்கள். ஏசி – இகழ்ந்து,

ஈரம் – அன்பு, பொருள் என்னேல் – உறுதிப் பொருளாகக் கொள்ளாதே. வாசி தீர – வேற்றுமை நீங்க. இறைவன் வாசி தீரக் காசு நல்கும் வள்ளன்மை விளங்கக் கூறியதுமாம். ஆர்வம் – அமையாத காதல். பெரியோர் ஆர்வமுடையார் அடியார் பேணுமின் என இயைத்துப் பொருள் காண்க.

Ignore the pseudo-blessing of the Buddhists and the Jains and others whose hearts are crude and who ever foregather just to denigrate others. Lord Civan always mercifully graces the devotees, leaving out of account the shades of their differences. Such is He the ever-crescent One of Vali-Thaayam! They that glorify Him - the Lord of Vali-Thaayam - with words of praise are indeed worthy of being held as true servitors.
**Note:** The Tamil word "Vaasi" (*வாசி*) means disparity.

வண்டுவைகும்மண மல்கியசோலை வளரும்வலிதாயத்
தண்டவாணனடி யுள்குதலாலருண் மாலைத்தமிழாக
கண்டல்வைகுகடற் காழியுண்ஞானசம் பந்தன்றமிழ்பத்துங்
கொண்டுவைகியிசை பாடவல்லார்குளிர் வானத்துயர்வாரே. 11

*வண்டு வைகும் மணம் மல்கிய சோலை வளரும் வலிதாயத்து*
*அண்டவாணன் அடி உள்குதலால், அருள்மாலைத் தமிழ்ஆக,*
*கண்டல் வைகு கடல் காழியுள் ஞானசம்பந்தன் தமிழ்பத்தும்*
*கொண்டு வைகி இசை பாட வல்லார் குளிர்வானத்து உயர்வாரே.*

vaNTu vaikum maNam malkiya cOlai vaLarum valitAyattu
aNTavANan2 aTi uLkutalAl, aruLmAlait tamiz Aka,
kaNTal vaiku kaTal kAziyuL njAn2acampantan2 tamiz pattum
koNTu vaiki icai pATa vallAr kuLir vAn2attu uyar vArE.

***பொருள்:*** வலிதாய நாதன்மீது பாடிய இத்திருப்பதிகத்தை இசையோடு பாடுவார் குளிர் வானத்துயர்வார் என முடிபு காண்க.

வண்டுகள் மொய்க்கும் மணம் நிறைந்த சோலைகள் வளரும் திருவலிதாயத்தில் விளங்கும் அனைத்துலக நாதனின் திருவடிகளைத் தியானிப்பதால், தாழைகள் வளரும் கடற்கரையை அடுத்துள்ள சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் தமிழ் மாலையாக அருளிச் செய்த இந்தத் திருப்பதிகத்தைச் சிறந்த தோத்திரமாகக் கொண்டு அமர்ந்திருந்து இசையோடு பாட வல்லார் குளிர்ந்த வானுலக வாழ்க்கையினும் உயர்வு பெறுவர்.

*குறிப்புரை:* இது வலிதாயநாதன்மீது பாடிய இப்பத்துப் பாடலையும் மனத்துள் கொண்டு சிந்தித்துத் தெளிந்து இசையோடு பாடவும் வல்லவர்கள் சுவர்க்க போகத்தினும் பெரிய போகம் எய்துவர் என்கின்றது.

மல்கிய – நிறைந்த. அண்டவாணன் – அண்டங்கள் தோறும் ஒன்றாயும் உடனாயுமிருந்து வாழ்பவன். அவன் திருவடியை இடைவிடாது தியானிப்பதால் மாலை போன்ற தமிழாகக் கூறிய ஞானசம்பந்தப் பெருமானது தமிழ்ப் பாடல்கள் பத்தையும் வல்லவர் உயர்வார் எனக் கூட்டுக. கண்டல் – தாழை. கடற்காழி – கடற்கரை நாடாகிய காழி என்பது மட்டும் அன்று. கடலில் மிதந்த காழி என்றதையும் உட்கொண்டு. மாலைத்தமிழ் – ஒரு பொருள் மேல் கூறிய கோவையாகிய பாடல். வலிதாயநாதரை மனமொழி மெய்களான் வணங்கியவர் வினையறுவர் வீடுபெறுவர் என்ற ஒரு பொருளையே கூறுதலின் இது மாலைத் தமிழாயிற்று. இசை பாட வல்லார் வானத்து வைகி உயர்வார் என இயைப்பாரும் உளர். இசை பாட வல்லார்க்கு வானத்தின்பம் ஒரு பொருளாகத் தோன்றாதாதலின் வானத்தினும் உயர்வர் என்பதே அமையுமாறு காண்க.

This garland of Tamil tunefully woven by Gnaana-Sambandan of littoral Kaazhi, abounding in fragrant screwpines, is the graceful outcome of his constant thinking on the Feet of the celestial Lord of Gods, who abides at Vali-Thaayam where flourish for ever, the incense-filled gardens - the habitat of chafers. They that treasure this hymn and sing it melodiously will gain ascension to the cool heavens above.

**Note:** Gardens are productive of honey which is symbolic of bliss. Chafers are symbolic of loving devotees.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*3ஆம் பதிகம் முற்றிற்று*
End of 3rd Hymn

உ
சிவமயம்

# 4. திருப்புகலியும் திரு வீழிமிழலையும்

## திரு-வீழி-மிழலை

### திருத்தலவரலாறு:

திருவீழிமிழலை என்ற திருத்தலமானது சோழவளநாட்டில் காவிரித்தென்கரையில் விளங்கும் 61ஆவது தேவாரத்தலம். நாகை மாவட்டம் நன்னிலம் வட்டத்தில் உள்ளது. மயிலாடுதுறை – திருவாரூர் இருப்புப் பாதையில் பூந்தோட்டம் இரயில் நிலையத்திற்கு மேற்கே 10 கி. மீ. தொலைவில் உள்ளது. திருவாரூர், மயிலாடுதுறை, கும்பகோணம் ஆகிய ஊர்களில் இருந்து பேருந்துகளில் செல்லலாம். இத்தலம் காத்தியாயன மகரிஷியின் யாகத்தில் தோன்றிய உமாதேவியாரைத் திருமணம் செய்து கொண்டு இறைவன் என்றும் மணக்கோலத்தோடு இருக்கும் தலம். திருமால் சக்கரம் பெறும் பொருட்டு, நாள்தோறும் ஆயிரம் தாமரைப் பூக்களைக் கொண்டு அருச்சிக்க, ஒருநாள் ஒரு மலர் குறைய, அதற்காகத் தமது தாமரை மலர்போன்ற கண்ணைப் பிடுங்கி அருச்சித்துச் சக்கரம் பெற்ற தலம். திருநாவுக்கரசு சுவாமிகளும் திருஞான சம்பந்த சுவாமிகளும் படிக்காசு பெற்றுப் பஞ்சம் போக்கிய தலம். இத்தலத்து வடக்கு வீதியில் அப்பர் சம்பந்தர் திருமடங்கள் தனித்தனியே இருக்கின்றன. மூவர் அருளிய தேவாரமும், சேந்தனார் பாடிய திருவிசைப்பாவும், அருணகிரி நாதரின் திருப்புகழும் உள்ளன.

**விமானம்:**

விண்ணிழி விமானம். இது விஷ்ணுவால் ஸ்தாபிக்கப் பெற்றது. மூலத்தானத்துக்குப் பின் பார்வதி பரமேசுவரரது திருஉருவங்கள் உள்ளன. இங்குக் காழிக்கோலத்தைச் சம்பந்த மூர்த்திக்கு இறைவன் காட்டியருளினார்.

**விழா:**

சித்திரைத் திங்களில் பெருவிழா நிகழும்; மணக்கோலத் திருவிழா இங்கு சிறப்பாக நடைபெறுகிறது. மணவாளப் பெருமான் திருவடியில் திருமால் கண்ணைப் பறித்து அருச்சித்த அடையாளம் இன்றும் இருக்கிறது. சுவாமி நேத்திரார்ப்பணேசர்; வீழியழகர் எனவும் வழங்கப் பெறுவர். அம்மை சுந்தரகுசாம்பிகை.

**தீர்த்தம்:** விஷ்ணு தீர்த்தம்

**தலவிருட்சம்:** வீழிச்செடி

**கல்வெட்டு:**

இத்தலத்தில் உள்ள கல்வெட்டுக்கள் 68. வீழிமிழலை என்றே இத்தலம் வழங்கப் பெறுகின்றது. முதற்குலோத்துங்கன் காலத்து உலகுய்யக் கொண்ட சோழவள நாட்டு வேணாட்டுப் பிரமதேயம் திருவீழிமிழலை என வழங்கியது. சுவாமி பெயர் வீழிநாதர், வீழிமிழலைநாதர் என்பன. கோயில் பிராகாரத்தில் சிலரால் பிரதிட்டை செய்யப் பெற்ற நின்றருளிய நாயனார், நெறிவார்குழலி நாச்சியார், திருவேட்டீஸ்வரமுடைய மகாதேவர், திருவேகம்பமுடையார், பார்வதீஸ்வரமுடையார், திருத்தண்டுன்றிய மகாதேவர் கோயில்களும் பிரதிட்டிக்கப் பெற்ற இடங்களும் குறிக்கப் பெறுகின்றன. அம்மை, காமக் கோட்டம் உடைய நாச்சியார் என்று அழைக்கப் பெறுகிறார். திருஞான சம்பந்தருக்கும், திருநாவுக்கரசருக்கும், மாணிக்கவாசகருக்கும் தனித்தனி ஆலயங்கள் அமைந்து இருந்தன. முன்னிருவருடைய மடங்களும் வடக்கு வீதியில் இருந்தன என்பதும் அறியக் கிடக்கின்றன.

ஆதித்தன் மகனாகிய முதற்பராந்தகன் காலத்திலிருந்து பதினொரு சோழமன்னர்களின் காலத்துக் கல்வெட்டுக்களும், சடாவர்மன் சுந்தர பாண்டியன், வீரபாண்டிய தேவன் கல்வெட்டுக்களும், விஜயநகர பரம்பரையைச் சேர்ந்த விருப்பண்ண உடையார் கல்வெட்டு ஒன்றும் பெயரறியப் பெறாதன பதினான்குமாக அறுபத்தெட்டுக் கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றுள் இராஜேந்திர சோழன் திருவீழிமிழலை வடக்கு வீதியில் உள்ள திருநாவுக்கரசர் திருமடத்திற்கு நிலம்விட்ட செய்தி அறியப்படுகிறது. மூன்றாம் இராஜராஜன் திருவீழி மிழலைக் கோயில் மூன்றாம் பிராகாரத்தில் திருவாதவூரர் மாணிக்கவாசகர் படிமத்தைப் பிரதிட்டை செய்தான். சடாவர்மன் சுந்தரபாண்டி தேவன் திருக்கை கொட்டித் திருப்பதியம் விண்ணப்பிக்க ஏற்பாடு செய்தான். முதல் இராஜராஜ சோழன் காலத்தில் ஐப்பசி ஓணத் திருவிழா தரிசனத்திற்காக வரும் அன்பர்களுக்கு அன்னம் வழங்கக் காசு அளிக்கப்பட்ட செய்தியும் இவ்விழா மிகச் சிறப்பாக நடைபெற்றமையும் அறிவிக்கும். முதல் குலோத்துங்கன் தமது ஆட்சி முப்பத்து நான்காம் ஆண்டில் சண்டேஸ்வரப் பிரதிட்டை செய்வித்து நித்திய பூசைக்கு ஏற்பாடு செய்தான். சிறந்த செய்தியொன்று வாணியின் பாதனான அரிகுல கேசரி விழுப்பரையனால் ஸ்ரீகால காலன் என்னும் வாள், வீழிமிழலை நாதருக்கு வழங்கப் பெற்றது. மாப்பிள்ளைச்சாமி எனப்பெறும் மணவாளத் திருக்கோலப் பெருமான் அழகிய

மணவாளப்பெருமான் என்று குறிக்கப் பெறுகின்றார். இந்த மூர்த்தியையும் இராஜேந்திர சோழ அனுக்கப் பல்லவரையர் புதுப்பித்துப் பிரதிட்டை செய்ததாகத் தெரிகிறது. திருவாவடுதுறை ஆதீன அருளாட்சிக்கு உட்பட்டது.

**பதிக வரலாறு:**

திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருப்பேணு பெருந்துறையும், திருத்திலதைப் பதியும் வழிபட்டுத் திருவீழிமிழலைக்கு மீட்டும் எழுந்தருளி அங்கே வீற்றிருந்தார். அப்போது சீகாழிப் பதியில் உள்ள அந்தணர்கள் வீழிமிழலைக்கு வந்து பிள்ளையாரைச் சீகாழிக்கு எழுந்தருளும்படி வேண்டிக் கொள்கின்றனர். சுவாமிகள், 'தோணிநாதர் கழலிறைஞ்ச, நாளைக்கு வீழிநாதன் அருள்பெற்றுப் போகலாம்' என்றருளிச் செய்திருந்தனர். அன்றிரவு சுவாமிகள் கனவில், 'தோணியில் நாம் அங்கிருந்த வண்ணம் தூமறைவீழி மிழலை தன்னுள், சேணுயர் விண்ணின் இழிந்த இந்தச் சீர்கொள் விமானத்துக் காட்டுகின்றோம் பேணும்படியால் அறிதி' என்று காழிநாதர் அறிவுறுத்தினார். இதனை அறிந்த சுவாமிகள் விம்மிதமுற்று, விடிந்ததும் எழுந்து திருமஞ்சனம் முடித்து வீழிக் கோயிலில் விண்ணிழி விமானத்துட் சென்று வணங்கினார். அங்கே திருத்தோணியிற் காணுந் திருவோலக்கத்தைக் கண்டு வியந்து வினாவுரையாக 'மைம்மரு பூங்கழல்' என்ற இத்திருப்பதிகத்தைப் பாடி அருளினார்கள். இத்திருப்பதிகத்தின் ஒன்பதாம் பாடலில் வீழிமிழலையில் பெருமான் 'எறிமழு வோடிள மான்கையின்றி' இருந்த பண்டைய நிலையைக் கூறி மகிழ்கிறார்கள். காழிக்காட்சியாகச் சுவாமிகள் வீழியிற் கண்டதைச் சேக்கிழார் பெருமான் 'மறியுற்ற கையரைத் தோணிமேல் முன் வணங்கும்படி அங்கு கண்டு' என்று குறிப்பிடுகின்றார்கள். இது அறிஞர்க்குப் பெரு விருந்தாகும்.

**வினாவுரை:** காழியில் அம்மையப்பராக எழுந்தருளியிருக்கும் காட்சியை வீழிமிழலையில் காட்ட, தரிசித்த சம்பந்தப் பெருமான் வினாவாக உரைத்தன. இப்பதிகம் இது முதல் பத்துத் திருப்பாடல்களும் புகலி நிலாவிய புண்ணியனே! நீ வீழிமிழலையில் உள்ள விண்ணிழி விமானம் விரும்பியது ஏன் ? என வினவுவதாக அமைந்து உள்ளன.

# 4. THIRU-P-PUKALI AND THIRU-VEEZHI-MIZHALAI

## THIRU-VEEZHI-MIZHALAI

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-veezhi-mizhalai is the 61st sacred site on the south bank of river Cauvery in the Chola country. It is in the Nannilam taluk of Naagappattinam district, at a distance of 10 km west of the Poonthottam railway station in the Mayilaadu-thurai Thiru-vaaroor train route. It can be reached by buses from Nannilam, Mayilaadu-thurai and Kumbakonam.

In this sacred place the Lord always remains in a form as on the day he wed Umaadevi who appeared in the sacrificing fire arranged by Kaaththiyaayana Maharishi here. It is here that Thiru-Gnaana-Sambanda Swamigal and Thiru-Naavuk-karasu Swamigal obtained cash (Padi-k-kaasu) from the Lord to provide relief from famine. There are separate holy mutts of St. Appar and St. Sambandar at the North Street. This temple has been given a place in Thevaaram of the three saints, Thiru-visaippaa of Sendhanaar and Arunagirinaathar's Thiru-p-pugazh.

### Vimaanam

This one is said to have descended from heaven. Behind the sanctum are the holy forms of Paarvathi and Paramesvarar. Here, God bestowed His grace on Sambandhar revealing His form as in Kaazhi.

### Festival

The major festival falls in the month of Chiththirai. The festival of divine wedding is celebrated especially well. God's name is Neththiraarpanesar and Veezhi-Azhagar and that of the Goddess is Sundara-kusaambikai.

### Sacred Ford

Vishnu-theertam

**Tree of the Sacred Place**

Veezhi Plant

**Stone Inscriptions**

There are 68 inscriptions in this temple. The place is denoted as Veezhimizhalai. During the reign of Kuloththungan I, it was known as Ulagu Uyyakkonda Chola Valanaadu Venaattup Piramadeyam Thiruveezhimizhalai. The Lord is known by the names of Veezhinaathar, Veezhimizhalai-naathar etc. Shrines for Ninrarulia Naayanaar, Nerivaar-kuzhazhli Naachchiyaar, Thiru-vetteesvara-mudaiya Mahadevar, Thiru-vekamba-mudaiyar, Paarvathees-varamudaiyaar and Thiruththandoonriya Mahadevar, installed by various persons along the prakaara are noted along with their location. The Mother is called Kaamakkottam Udaiya Naachchiyaar. Separate shrines for Thiru-Gnaana-sambandar, Thiru-Naavuk-karasar and Maanickavaachakar had existed. It is known from the inscriptions that the maths of the first two were situated in the North Street. The 68 inscriptions include those of eleven chola kings, beginning with those from the time of Paraanthakan I, son of Aathiththan; Sataavarman Sundhara-paandiyan, and Veera-paandiyath-thevan; Viruppanna Udaiyaar of Vijayanagar dynasty (one inscription); and fourteen of unknown names. The news of Raajendran's endowment of land to the Thiru-Naavuk-karasar Thirumadam in the North Street is noted among the inscription. Raajaraajan III installed the image of Thiru-vaadha-voorar Maanickavaachakar in the third prakaraa of the Thiru-veezhi-mizhazhai. Sataavarman Sundara Paandiyath-thevan arranged for the recital of Thirup-padhiyam after "Thirukkai kottu". Information is given that during the reign of Raajaraajan I, the Onam festival in the Tamil month of Aippasi was celebrated in a very grand manner and that funds were endowed in order to provide food to the pilgrims attending the festival. Kuloththungan I, in his 34th regnal year, had arranged to install Chandesvarar and also for daily worship services. An interesting piece of news is that one 'Vaaniyin Paadhanaana' Arikula Kesari gifted a sword, Sree Kaalakaalan, to Veezhimizhalai

Naathar. The Lord in the attire and mode of a bridegroom, and known as Maapillai-ch-chaami is denoted as Azhakiya Manavaala-p-perumaan. It is known that one Raajendra Chola Anukkap Pallavaraiyar had renovated and reinstalled this image of the Lord. This temple is one of those within the religious administration of the Thiru-vaavadu-thurai Aadheenam.

## INTRODUCTION TO THE HYMN

Having adored the Lord at Thiru-p-Pēnu-Perun-Thurai and Thiru-th-Thilatai, the child saint once again visited Thiru-Veezhi-Mizhalai. Here, he experienced a vision of God. This hymn was sung during the next day.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 4. திருப்புகலியும் திரு வீழிமிழலையும்

## 4. THIRU-P-PUKALI AND THIRU-VEEZHI-MIZHALAI

பண் : நட்டபாடை
ராகம் : கம்பீரநாட்டை

*Pann: Natta Paadai*
*Raagam : Kambeera Naattai*

மைம்மரு பூங்குழற் கற்றைதுற்ற வாணுதன் மான்விழி மங்கையோடும்
பொய்ம்மொழி யாமறை யோர்களேத்தப் புகலி நிலாவிய புண்ணியனே
எம்மிறை யேயிமை யாதமுக்க ணீசவெ னேசவி தென்கொல்சொல்லாய்
மெய்ம்மொழி நான்மறை யோர்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 1

**மைம் மரு பூங்குழல்கற்றை துற்ற, வாள்நுதல் மான்விழி மங்கையோடும்,**
**பொய்ம் மொழியா மறையோர்கள் ஏத்த, புகலி நிலாவிய புண்ணியனே!**
**எம்இறையே! இமையாத முக்கண் ஈச! என் நேச! இது என்கொல் சொல்லாய் -**
**மெய்ம்மொழி நான்மறை யோர்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே?**

maim maru pUgkuzal kaRRai tuRRa, vALnutal mAn2vizi magkaiyOTum,
poym moziyA maRaiyOrkaL Etta, pukali nilAviya puNNiyan2E!
em iRaiyE! imaiyAta mukkaN Ica! en2 nEca! itu en2kol collAy--
meymmozi nAlmaRaiyOr mizalai viN izi kOyil virumpiyatE?

**பொருள்:** கற்றையாகச் செறிந்து கருமை மருவி வளர்ந்த அழகிய கூந்தலையும், ஒளி சேர்ந்த நுதலையும், மான்விழி போன்ற விழியையும் உடைய உமையம்மையோடு, பொய்ப் பொருளை உயர்த்திப் பேசாத நான்மறையைப் பேசும் அந்தணர்கள் ஏத்தப் புகலியில்

விளங்கும் புண்ணியம் 'திரண்டனைய வடிவினனே, எம் தலைவனே! இமையாத முக்கண்களை உடைய எம் ஈசனே! என்பால் அன்பு உடையவனே! வாய்மையே பேசும் நான்மறையை ஓதிய அந்தணர் வாழும் திருவீழிமிழலையில் திருமாலால் விண்ணிலிருந்து கொண்டு வந்து நிறுவப்பட்ட கோயிலில் விரும்பியுறைதற்குரிய காரணம் என்னையோ? சொல்வாயாக!

**குறிப்புரை:** மை மரு – கருமை சேர்ந்த. பொய்மொழியா மறையோர்கள் – என்றும் பொய்யே சொல்லா வேதியர்கள். புகலி – சீகாழி. நேச – அன்புடையவனே, மெய் மொழி நான்மறை – மெய்ப்பொருளை (இறைவனை) மொழிகின்ற நான்மறை. மங்கையோடும் நிலாவிய, ஏத்த நிலாவிய புண்ணியன் எனக் கூட்டுக.

**குருவருள்:** 'பொய் மொழியா மறையோர்' என்று காழி அந்தணர்களை எதிர்மறையால் போற்றிய ஞானசம்பந்தர் 'மெய்ம்மொழி நான்மறையோர்' என வீழி அந்தணர்களை உடன்பாட்டு முகத்தால் கூறியுள்ள நுண்மை காண்க. 'பொய்யர் உள்ளத்து அணுகானே' என்ற அருணகிரிநாதர் வாக்கினையும் இதனோடு இணைத்து எண்ணுக. சீன யாத்திரீகன் யுவான்சுவாங் என்பவன் தனது யாத்திரைக் குறிப்பில் பொய், களவு, சூது, வஞ்சகம் இல்லாதவர்கள் என இந்தியரின் சிறப்பைக் குறித்துள்ளமை இங்கு ஒப்பு நோக்கத் தக்கதாம். ஞானசம்பந்தர் காலமும் யுவான்சுவாங் காலமும் கி.பி. 7ஆம் நூற்றாண்டு ஆகும்.

Hailed by the Vedic scholars who speak no falsehood, You abide at Pukali concorporate with Thy fawn-eyed consort of bright forehead and fragrant flowery locks, dense and dark. Pray tell us; what may this be? Why is it? You, my Lord God, my beloved Deity of three non-winking eyes, love to abide at the temple endowed with the heaven descended Vimaana, at Veezhi-Mizhalai where true practitioners of the four Vedas dwell?

**Note:** The heaven-descended vimaana was a ritual offering from Vishnu to Lord Civa abiding at Veezhi Mizhalai; Vimaana: The temple tower rising above the sanctum sanctorum. This vimaana is conjured up as a flying machine in mythological literature.

கழன்மல்கு பந்தொடம் மானைமுற்றில் கற்றவர் சிற்றிடைக் கன்னிமார்கள்
பொழின்மல்கு கிள்ளையைச் சொற்பயிற்றும் புகலி நிலாவிய புண்ணியனே
எழின்மல ரோன்சிர மேந்தியுண்டோ ரின்புறு செல்வமி தென்கொல் சொல்லாய்
மிழலையுள் வேதிய ரேத்திவாழ்த்த விண்ணிழி கோயில் விரும்பியதே. 2

கழல் மல்கு பந்தொடு அம்மானை முற்றில் கற்றவர், சிற்றிடைக் கன்னிமார்கள்
பொழில் மல்கு கிள்ளையைச் சொல் பயிற்றும் புகலி நிலாவிய புண்ணியனே!
எழில் மலரோன் சிரம் ஏந்தி உண்டு ஓர் இன்பு உறு செல்வம் இது என்கொல் சொல்லாய் -
மிழலையுள் வேதியர் ஏத்தி வாழ்த்த, விண் இழி கோயில் விரும்பியதே?

kazal malku pantoTu ammAn2ai muRRil kaRRavar, ciRRiTaik kan2n2imArkaL,
pozil malku kiLLaiyaic col payiRRum pukali nilAviya puNNiyan2E!
ezil malarOn2 ciram Enti uNTu or in2pu uRu celvam itu en2 kol collAy--
mizalaiyuL vEtiyar Etti vAztta, viN izi kOyil virumpiyatE?

**பொருள்:** மகளிர்க்குப் பொருந்திய கழங்கு, பந்து, அம்மானை, முற்றில் ஆகிய விளையாட்டுக்களைக் கற்ற சிற்றிடைக் கன்னிமார்கள், சோலைகளில் தங்கியுள்ள கிளிகட்குச் சொற்களைக் கற்றுக் கொடுத்துப் பேசச் செய்யும் திருப்புகலியில் விளங்கும் புண்ணியனே! அழகிய தாமரை மலரில் விளங்கும் பிரமனது தலையோட்டில் பலியேற்றுண்டு இன்புறும் செல்வனே! திருவீழிமிழலையில் வேதியர்கள் போற்றித் துதிக்க விண்ணிழி கோயிலை நீ விரும்பியதற்குக் காரணம் என்ன? சொல்வாயாக!

**குறிப்புரை:** கழல், பந்து, அம்மானை, முற்றில் முதலிய மகளிர் விளையாட்டுப் பொருட்கள் குறிக்கப் பெறுகின்றன. கழல் – கழற்சிக்காய். முற்றில் – முச்சி (சிறுசுளகு), கன்னியர், சோலையில் உள்ள கிளிகட்குச் சொல் கற்றுக் கொடுக்கும் புகலி. எழில் – அழகு. மலரோன் – பிரமன். ஓர் – அசை. விண்ணிழிகோயில் – வீழிமிழலையில் உள்ள கோயிலின் பெயர்.

O Holy One of Pukali in the gardens of which slender-waisted, virgins well-versed in the games of kazhal, ball, ammanai and mutril, train their parrots to articulate in words! You hold the skull of him whose seat is the beautiful lotus flower and rejoice in receiving alms in it and consuming it. Pray tell us; what may this be? Why is it that, You desire to reside in the shrine endowed with the heaven-descended vimaana at Mizhalai, hailed and adored by those that are well-versed in the Vedas?

**Note:** Kazhal, the nut of Guilandina bonduce. Ammaanai: A game played by girls and women. Three balls are tossed into the air, caught and again tossed in quick succession; Mutril/Mucchi: A small winnowing fan used as a toy by girls.

கன்னிய ராடல் கலந்துமிக்க கந்துக வாடை கலந்துதுங்கப்
பொன்னியன் மாட நெருங்குசெல்வப் புகலி நிலாவிய புண்ணியனே
இன்னிசை யாழ்மொழி யாளோர்பாகத் தெம்மிறை யேயிது வென்கொல்சொல்லாய்
மின்னிய னுண்ணிடை யார்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 3

கன்னியர் ஆடல் கலந்து, மிக்க கந்துக வாடை கலந்து, துங்கப்
பொன் இயல் மாடம் நெருங்கு செல்வப் புகலி நிலாவிய புண்ணியனே!
இன்இசை யாழ்மொழியாள் ஓர்பாகத்து எம் இறையே! இது என்கொல் சொல்லாய் -
மின்இயல் நுண்இடையார் மிழலை விண் இழி கோயில் விரும்பியதே?

kan2n2iyar ATal kalantu, mikka kantuka vATai kalantu, tugkap
pon2 iyal mATam nerugku celvap pukali nilAviya puNNiyan2E!
in2 icai yAz moziyAL orpAkattu em iRaiyE! itu en2 kol collAy
min2 iyal nuN iTaiyAr mizalai viN izi kOyil virumpiyatE?

**பொருள்:** கன்னிப் பெண்கள் விளையாட்டை விரும்பிப் பந்தாடுதற்குரிய தெருக்களில் கூடியாட உயர்ந்த பொன்னிறமான அழகுடன் விளங்கும் மாடங்கள் நெருங்கும் செல்வப் புகலி நிலாவிய புண்ணியனே! யாழினது இனிய இசைபோலும் மொழி பேசும் உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்ட எம் தலைவனே! மின்னல் போன்ற நுண்ணிய இடையினை உடைய அழகிய மகளிர் மருவும் திருவீழிமிழலையில் விண்ணிழி விமானத்தை நீ விரும்பியதற்குக் காரணம் என்னையோ? சொல்வாயாக!

**குறிப்புரை:** கன்னியர், விளையாட்டை விரும்பிப் பந்தாடுதற்குரிய வீதியில் கலந்து மாடங்கள் நெருங்குகின்ற செல்வப் புகலி எனக்கூட்டுக. கந்துகம் – பந்து, துங்கம் – உயர்ச்சி. மின் இயல் – மின்னலைப் போலும் இயல்பினை உடைய. யாழ் இன்னிசை மொழியாள் – யாழினது இனிய இசை போலும் மொழியினை உடையாள். புகலியும் கன்னியர் பந்தாடுதற்குரிய வீதிகள் மாடங்கள் நெருங்கும் இயல்பினது. வீழியும் மின்னியல் நுண்ணிடையாரை உடையது. அங்ஙனமாகத் தேவரீர் வீழியை விரும்பியது ஏன்? என்றதில் நயம் கொள்க. கந்துக வாடை – பந்து விளையாடும் இடம். வாடை – சேரி, தெரு என்னும் பொருள்களை உடைய சொல். புகலி நகர் பந்தாடும் இடங்களும் பொன்னியல் மாடம் நெருங்கு வீதிகளையும் உடையது என்றவாறு.

O Holy One of opulent Pukali in whose lofty and dense and golden mansions, young girls dance and romp with Kantukam (ball)! O Lord, concorporate with your consort whose speech is sweet like the tuneful Yaazh! Pray tell us; what may this be?

Why is it that You love to abide at the shrine endowed with the heaven- descended vimaana at Mizhalai where dwell the effulgent thin damsels? Kantukam: A ball.

நாகப ணந்திக ழல்குன்மல்கு நன்னுதன் மான்விழி மங்கையோடும்
பூகவ ளம்பொழில் சூழ்ந்தவந்தண் புகலி நிலாவிய புண்ணியனே
ஏகபெ ருந்தகை யாயபெம்மா னெம்மிறை யேயிது வென்கொல்சொல்லாய்
மேகமு ரிஞ்செயில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 4

நாகபணம்திகழ் அல்குல் மல்கும் நன்நுதல் மான்விழி மங்கையோடும்
பூக வளம்பொழில் சூழ்ந்த அம் தண் புகலி நிலாவிய புண்ணியனே!
ஏக பெருந்தகைஆய பெம்மான்! எம்மிறையே! இது என்கொல் சொல்லாய் -
மேகம் உரிஞ்சு எயில் சூழ் மிழலை விண் இழி கோயில் விரும்பியதே?

nAkapaNam tikaz alkul malkum nan2 nutal mAn2vizi magkaiyOTum
pUka vaLam pozil cUznta am taN pukali nilAviya puNNiyan2E!
Eka peruntakai Aya pemmAn2! em iRaiyE! itu en2kol collAy--
mEkam urinjcu eyil cUz mizalai viN izi kOyil virumpiyatE?

**பொருள்:** பாம்பின் படம் போன்று திகழும் அல்குலையும், அழகு மல்கும் நுதலையும், மான்விழி போன்ற விழியையும் உடைய பார்வதி அம்மையுடன் வளமான கமுகஞ்சோலைகள் சூழ்ந்து விளங்கும் அழகும் தண்மையும் உடைய சீகாழிப்பதியில் விளங்கும் புண்ணியனே! தன்னொப்பார் இன்றித் தானே முதலாய பெருமானே! எம் தலைவனே! மேகங்கள் தோயும் மதில்கள் சூழ்ந்த திருவீழிமிழலையில் விண்ணிழி விமானக் கோயிலை விரும்பியது ஏன்? சொல்வாயாக.

**குறிப்புரை:** புண்ணியனே! என் இறையே! விண்ணிழிகோயில் விரும்பியது என் கொல் சொல்லாய் எனக் கூட்டுக. நாகபணம் – பாம்பின் படம். அல்குலையும், நன்னுதலையும், மான்விழியையும் உடைய மங்கை எனக் கூட்டுக. பூகவனம் – கமுகந்தோட்டம். புகலி – சீகாழி. ஏகபெருந்தகை – பெருந் தகுதியால் தன்னொப்பார் பிறரின்றித் தான் ஒருவனே பெருந் தகையானவன். பெம்மான் – பெருமான் என்பதன் திரிபு. உரிஞ்சு – உராய்ந்து செல்கின்ற.

O Holy One of cool and beautiful Pukali which is girt with fecund groves of areca trees. You are concorporate with the antelope eyed consort and of 'cobra hood' like waist, and whose forehead is fair to behold. Oh our Lord, the sole God! Pray tell us; what may this be? Why is it that you love to reside in the shrine endowed with heaven-descended vimaana at Mizhalai over whose walls clouds do graze?

சந்தள றேறுத டங்கொள்கொங்கைத் தையலொ டுந்தள ராதவாய்மைப்
புந்தியி னான்மறை யோர்களேத்தும் புகலி நிலாவிய புண்ணியனே
எந்தமை யாளுடை யீசவெம்மா னெம்மிறை யேயிது வென்கொல்சொல்லாய்
வெந்தவெண் ணீறணி வார்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 5

*சந்து அளறு ஏறு தடம் கொள் கொங்கைத் தையலொடும், தளராத வாய்மைப்*
*புந்தியின் நால்மறையோர்கள் ஏத்தும், புகலி நிலாவிய புண்ணியனே!*
*எம்தமை ஆள்உடை ஈச! எம்மான்! எம் இறையே! இது என்கொல் சொல்லாய் -*
*வெந்த வெண்நீறு அணிவார் மிழலை விண் இழி கோயில் விரும்பியதே?*

cantu aLaRu ERu taTam koL kogkait taiyaloTum, taLarAta vAymaip
puntiyin2 nAl maRaiyOrkaL Ettum, pukali nilAviya puNNiyan2E!
em tamai AL uTai Ica! emmAn2! em iRaiyE! itu en2kol collAy--
venta veN nIRu aNivAr mizalai viN izi kOyil virumpiyatE?

**பொருள்:** சந்தனக் குழம்பு பூசிய பெரிதான தனங்களை உடைய உமையம்மையோடு, உண்மையில் தவறாத புத்தியினை உடைய நான்மறை அந்தணர்கள் போற்றும் புகலியில் விளங்கும் புண்ணியனே! எம்மை அநாதியாகவே ஆளாய்க் கொண்டுள்ள ஈசனே! எம் தலைவனே! எமக்குக் கடவுளே! வெந்த திருவெண்ணீற்றை அணிந்த அடியவர் வாழும் திருவீழிமிழலையுள் விண்ணிழி கோயிலை நீ விரும்புவதற்குக் காரணம் என்னையோ? சொல்வாயாக!

**குறிப்புரை:** தளராத வாய்மைப் புந்தியின் நான்மறையோர்கள் – வேதங்களைப் பலகாலும் பயின்றதால் உண்மையினின்றும் தளராத புத்தியினை உடைய மறையோர்கள். சந்து அளறு – சந்தனச்சேறு. வெந்த வெண்ணீறு – இனி வேகுதற்கில்லாத – மாற்றமில்லாது ஒருபடித்தான வெண்ணீறு. எந்தமையாளுடையீச – எம்மை அநாதியே வழிவழியாளாக் கொண்ட தலைவ. ஈசன் – செல்வமுடையான். எம்மான் – எமக்கெல்லாம் பெரியோன். இறை – தங்குதலை உடையவன். அணிவார் என்றது அடியார்களை.

Hailed, in unswerving and single-minded devotion by those that are well-versed in the four Vedas, You the Holy One abide at Pukali, concorporate with your consort whose buxom breasts are smeared with the paste of sandalwood. O God Ruler! O Lord God! Pray tell us; what may this be? Why is it that You love to abide at the shrine

endowed with heaven-descended vimaana at Mizhalai where thrive devotees who are adorned with the white (baked) ashes (of cow dung)?

சங்கொளி யிப்பி சுறாமகரந் தாங்கி நிரந்து தரங்கமேன்மேற்
பொங்கொலி நீர்சுமந் தோங்குசெம்மைப் புகலி நிலாவிய புண்ணியனே
எங்கள்பி ரானிமை யோர்கள்பெம்மா னெம்மிறை யேயிது வென்கொல்சொல்லாய்
வெங்கதிர் தோய்பொழில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 6

சங்கு, ஒளி இப்பி, சுறா, மகரம், தாங்கி நிரந்து, தரங்கம் மேல்மேல்
பொங்கு ஒலிநீர் சுமந்து ஓங்கு செம்மைப் புகலி நிலாவிய புண்ணியனே!
எங்கள் பிரான்! இமையோர்கள் பெம்மான்! எம் இறையே! இது என்கொல் சொல்லாய் -
வெங்கதிர் தோய் பொழில் சூழ் மிழலை விண் இழி கோயில் விரும்பியதே?

cagku, oli ippi, cuRA, makaram, tAgki nirantu, taragkam mElmEl
pogku oli nIr cumantu Ogku cemmaip pukali nilAviya puNNiyan2E!
egkaL pirAn2! imaiyOrkaL pemmAn2! em iRaiyE! itu en2kol collAy--
vegkatir tOy pozil cUz mizalai viN izi kOyil virumpiyatE?

**பொருள்:** ஒளி உடைய சங்கு, முத்துச் சிப்பிகள், சுறா, மகரம் முதலிய மீன்கள், ஆகிய இவற்றைத் தாங்கி வரிசை வரிசையாய் வரும் அலைகளால் மேலும் மேலும் பொங்கும் ஒலியோடு கூடிய கடல்நீர் சுமந்து ஓங்கும் செம்மையான புகலியில் விளங்கும் புண்ணியனே! எங்கள் தலைவனே! இமையோர் பெருமானே! எம் கடவுளே! கதிரவன் தோயும் பொழில்களாற் சூழப்பெற்ற விண்ணிழி கோயிலை விரும்பியதற்குக் காரணம் என்னையோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** காழிக்குள்ள பெருமை கடலோரத்தில் தாழாது ஓங்கியிருப்பது என்றது முதலிரண்டடிகளான் உணர்த்தப் பெறுகின்றது. நிரந்து – வரிசையாய். தரங்கம் – அலை; கடல். பிரான் – வள்ளன்மை உடையவன். பெம்மான் – பெருமான் என்பதன் திரிபு. வெங்கதிர் – சூரியன்.

O Lofty One, of Lofty and great Pukali the creek of which is full of swelling and roaring waters, augmented by the billows of the sea where thrive conch, ippi, sura and makara! O our Lord, the Lord God of the celestials! Pray tell us; what may this be? Why is it that You love to abide at the shrine endowed with heaven-descended vimaana at Mizhalai the groves and gardens of which are bathed in the fierce rays of the sun?

**Note:** Ippi: Bivalvular shell-fish. The shell is used as a toy. Sura: Shark fish and its species.

காமனெ ரிப்பிழம் பாகநோக்கிக் காம்பன தோளியொ டுங்கலந்து
பூமரு நான்முகன் போல்வரேத்தப் புகலி நிலாவிய புண்ணியனே
ஈமவ னத்தெரி யாட்டுகந்த வெம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
வீமரு தண்பொழில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 7

*காமன் எரிப்பிழம்பு ஆக நோக்கிக், காம்பு அன தோளியொடும் கலந்து,*
*பூ மரு நான்முகன் போல்வர் ஏத்தப், புகலி நிலாவிய புண்ணியனே!*
*ஈமவனத்து எரிஆட்டு உகந்த எம்பெருமான்! இது என்கொல் சொல்லாய் -*
*வீ மரு தண்பொழில் சூழ் மிழலை விண் இழி கோயில் விரும்பியதே?*

kAman2 erippizampu Aka nOkki, kAmpu an2a tOLiyoTum kalantu,
pU maru nAn2mukan2 pOlvar Etta, pukali nilAviya puNNiyan2E!
Imavan2attu eri ATTu ukanta em perumAn2! itu en2kol collAy--
vI maru taN pozil cUz mizalai viN izi kOyil virumpiyatE?

**பொருள்:** மன்மதன் தீப்பிழம்பாய் எரியுமாறு கண்ணால் நோக்கிய முக்கண்ணனே! மூங்கில் போலும் தோளினை உடைய உமையம்மையோடும் கூடி, தாமரை மலரில் விளங்கும் நான்முகன் போல்வார் போற்றப் புகலியில் விளங்கும் புண்ணியனே! சுடுகாட்டில் எரியாடலை விரும்பும் எம் பெருமானே! மலர்கள் மருவிய குளிர்ந்த பொழில்களால் சூழப்பெற்ற திருவீழிமிழலையில் விண்ணிழி கோயிலை விரும்பியதற்குக் காரணம் என்னையோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** காமன் – விருப்பத்தை விளைவிக்குந் தெய்வம். எரிப்பிழம்பாக – தீயின் திரட்சியாக. நோக்கி என்றதால் விழித்தெரித்தமை குறிக்கப்படுகின்றது. காம்பு – முள்ளில்லாத மூங்கில். நான்முகன் பூ மரு – தாமரைப் பூவைச் சேர்ந்த பிரமன். இந்திரன் முதலியவர்கள் பூசித்த தலமாதலின் நான்முகன் போல்வார் ஏத்த என்றார். ஈமவனம் – சுடுகாடு; என்றது சர்வசங்கார காலத்து எல்லாம் சுடுகாடாதலைக் குறித்தது. வீ – பூ. காமனை எரித்தவர் ஒரு பெண்ணோடு கலந்திருக்கின்றார் என்றது, அவர் கலப்பு எம்போலியர் கலப்புப்போல் காமத்தான் விளைந்ததன்று. உலகம் போகந்துய்க்கத் தான் போகியாயிருக்கின்ற நிலையைத் தெரிவித்தவாறு.

O! Lord! You are Hailed by those who are like unto the four-faced deity (Brahmma) seated on the lotus. You are concorporate with Umaa whose arms are bamboo-like. O Holy One, that in the days of yore, gutted with fire Manmata, by Your look, You abide at Pukali. O One that delights to dance in the fire of the burning ghat! O our Lord! Pray tell us; what may this be? Why is it that You love to dwell in the

shrine endowed with heaven-descended vimaana at Mizhalai girt with cool gardens rich in odoriferous flowers?

இலங்கையர் வேந்தெழில் வாய்த்ததிண்டோள் இற்றல றவ்விர லொற்றியைந்து
புலங்களை கட்டவர் போற்றவந்தண் புகலி நிலாவிய புண்ணியனே
இலங்கெரி யேந்திநின் றெல்லியாடு மெம்மிறை யேயிது வென்கொல்சொல்லாய்
விலங்கலொண் மாளிகை சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 8

இலங்கையர் வேந்து எழில் வாய்த்த திண்தோள் இற்று அலற(வ்) விரல் ஒற்றி, ஐந்து-
புலம் களைகட்டவர் போற்ற, அம் தண் புகலி நிலாவிய புண்ணியனே!
இலங்கு எரி ஏந்தி நின்று எல்லி ஆடும் எம் இறையே! இது என்கொல் சொல்லாய் -
விலங்கல் ஒண்மாளிகை சூழ் மிழலை விண் இழி கோயில் விரும்பியதே?

ilagkaiyar vEntu ezil vAytta tiN tOL iRRu alaRa(v) viral oRRi, aintu--
pulam kaLai kaTTavar pORRa, am taN pukali nilAviya puNNiyan2E!
ilagku eri Enti nin2Ru elli ATum em iRaiyE! itu en2kol collAy--
vilagkal oN mALikai cUz mizalai viN izi kOyil virumpiyatE?

**பொருள்:** இலங்கையர் தலைவனாகிய இராவணன் அழகிய வலிய தோள்கள் ஒடிந்து, அலறுமாறு தன்கால் விரலால் சிறிது ஊன்றிய எம்பெருமானே, ஐம்புல இன்பங்களைக் களைந்தவர்களாகிய துறவியர் போற்ற, அழகிய தண்மையான புகலியில் விளங்கும் புண்ணியனே! விளங்கும் தீப்பிழம்பைக் கையில் ஏந்தி இரவில் இடுகாட்டில் ஆடும் எம் தலைவனே! மலை போன்ற ஒளி பொருந்திய மாளிகைகளால் சூழப் பெற்ற திருவீழிமிழலையில் விண்ணிழி கோயிலை விரும்பியதற்குக் காரணம் என்னையோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** புலங்களை வெல்லாத இராவணனை அலறச் செய்து, புலன்களை வென்றவர்கள் போற்ற இருக்கும் புகலியான் என நயந்தோன்றக் கூறியவாறு, இற்று – ஒடிந்து, விரல் ஒற்றி – காற்பெருவிரலால் சிறிது ஊன்றி, புலன்களை கட்டவர் – புலன்களாகிய களைகளைக் களைந்தவர். எல்லி – இரவு, விலங்கல் – மலை.

You so pressed Your toe that the mighty and stately shoulders of the King of Sri Lanka were altogether crushed. Hailed by those who has quelled their five sense organs, You, the Holy One, abide at Pukali. O our Lord, You dance in the night, holding the blazing fire on Your palm. Pray tell us this; what may this be? Why is it

You love to abide in the shrine endowed with heaven-descended vimaana at Mizhalai of radiant, hill-like mansions?

செறிமுள ரித்தவி சேறியாறுஞ் செற்றதில் வீற்றிருந் தானுமற்றைப்
பொறியர வத்தணை யானுங்காணாப் புகலி நிலாவிய புண்ணியனே
எறிமழு வோடிள மான்கையின்றி யிருந்தபி ரானிது வென்கொல்சொல்லாய்
வெறிகமழ் பூம்பொழில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 9

செறி முளரித்தவிசு ஏறி ஆறும் செற்று அதில் வீற்றிருந்தானும், மற்றைப்
பொறி அரவத்து அணையானும், காணாப் புகலி நிலாவிய புண்ணியனே!
எறிமழுவோடு இளமான் கை இன்றி இருந்த பிரான்! இது என்கொல் சொல்லாய் -
வெறி கமழ் பூம்பொழில் சூழ் மிழலை விண் இழி கோயில் விரும்பியதே?

ceRi muLarittavicu ERi ARum ceRRu atil vIRRirun tAn2um, maRRaip
poRi aravattu aNaiyAn2um, kANAp pukali nilAviya puNNiyan2E!
eRi mazuvOTu iLamAn2 kai in2Ri irunta pirAn2! itu en2kol collAy--
veRi kamaz pUmpozil cUz mizalai viN izi kOyil virumpiyatE?

**பொருள்:** மணம் செறிந்த தாமரைத் தவிசில் அறுவகைக் குற்றங்களையும் விலக்கி ஏறி அதில் வீற்றிருக்கும் நான்முகனும், புள்ளிகளை உடைய பாம்பினைப் படுக்கையாகக் கொண்ட திருமாலும் காண இயலாதவனாய்ப் புகலியில் விளங்கும் புண்ணியனே! பகைவரைக் கொல்லும் மழு ஆயுதமும் இளமானும் கையின்கண் இன்றி விளங்கும் பெருமானே! மணம் கமழும் அழகிய பொழில்களால் சூழப்பெற்ற திருவீழிமிழலையில் உள்ள விண்ணிழி கோயிலை விரும்பியதற்குக் காரணம் என்னையோ! சொல்வாயாக.

**குறிப்புரை:** முளரித் தவிசு – தாமரை ஆசனம்; (பதுமாசனம் என்னும் யோகாசனமுமாம்). ஆறும் செற்று – காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்னும் உட்பகை ஆறையும் அழித்து, அதில் வீற்றிருந்தான் – அந்தத் தாமரையில் வீற்றிருந்த பிரமன், பொறி அரவம் – படப்பொறிகளோடு கூடிய ஆதிசேடன். அணையான் என்றது திருமாலை.

**குருவருள்:** 'எறிமழுவோடிள மான் கையின்றி இருந்த பிரான்' என்றதனால் தனக்குத் திருவீழிமிழலையில் அருள்செய்த பெருமான் மழு ஆயுதமும் மானும் கைகளில் இல்லாமல் சீகாழித் திருத்தோணி மலையில் வீற்றிருந்தருளும் உமாமகேசுவரர் என்பதைக் குறித்தருள்கின்றார் ஞானசம்பந்தர். அங்ஙனம் உள்ள காழிக் கோலத்தை வீழியிலும் காட்டியது என்னே என்று வியந்து பாடுவதாக இப்பாடல் அமைந்துள்ளது.

O Holy One of Pukali unknowable to the One who having quelled the vile serpent, (the six evils) sits enthroned on the densely petalled lotus, and to the One whose bed is the speckled snake, O Lord God when You did not hold in Your hand the throwing hatchet or the fawn, pray tell us; what may this be? Why is it that You love to dwell in the shrine endowed with heaven-descended vimaana at Mizhalai girt with sweet smelling and gorgeous flowery gardens?

**Note:** The six evils: Lust, wealth, miserliness, delusion, egoistic and enmity.

பத்தர்க ணம்பணிந் தேத்தவாய்த்த பான்மைய தன்றியும் பல்சமணும்
புத்தரு நின்றலர் தூற்றவந்தண் புகலி நிலாவிய புண்ணியனே
எத்தவத் தோர்க்குமி லக்காய்நின்ற வெம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
வித்தகர் வாழ்பொழில் சூழ்மிழலை விண்ணிழி கோயில் விரும்பியதே. 10

பத்தர்கணம் பணிந்து ஏத்த வாய்த்த பான்மை அது அன்றியும், பல்சமணும்
புத்தரும் நின்று அலர் தூற்ற, அம் தண் புகலி நிலாவிய புண்ணியனே!
எத்தவத்தோர்க்கும் இலக்குஆய் நின்ற எம்பெருமான்! இது என்கொல் சொல்லாய் -
வித்தகர் வாழ் பொழில் சூழ் மிழலை விண் இழி கோயில் விரும்பியதே?

pattar kaNam paNintu Etta vAytta pAn2mai atu an2Riyum, pal camaNum
puttarum nin2Ru alar tURRa, am taN pukali nilAviya puNNiyan2E!
ettavat tOrkkum ilakku Ay nin2Ra emperumAn2! itu en2kol collAy--
vittakar vAz pozil cUz mizalai viN izi kOyil virumpiyatE?

**பொருள்:** தன்னிடம் பத்திமையுடையோர் பணிந்து போற்றும் பான்மையோடுகூடச் சமணரும், புத்தரும் அவர் தூற்ற, அழகிய குளிர்ந்த புகலியின்கண் விளங்கும் புண்ணியனே! எவ்வகையான தவத்தை மேற்கொண்டோரும் அடைதற்கரிய இலக்காய் நின்ற எம்பெருமானே! சதுரப்பாடுடைய அறிஞர்கள் வாழும் பொழில்கள் சூழ்ந்த திருவீழிமிழலையில் உள்ள விண்ணிழி கோயிலை விரும்பியதற்குக் காரணம் என்னையோ! சொல்வாயாக.

**குறிப்புரை:** பத்தர்கணம் ஏத்த வாய்த்த பான்மையது அன்றியும் – அடியார்கள் தோத்திரிக்கப் பொருந்தியதோடல்லாமல். புறச்சமயத்தார் அலர் தூற்றவும் நிலவிய புண்ணியன் என்க. எத்தவத்தோர்க்கும் – சரியை முதலிய நான்கு நெறிகளுள் எந்நெறியில் நிற்பவர்க்கும் – நான்கும் வழிபாட்டு நெறி. சரியை, கிரியை, யோகம் என்பவற்றால் வருவது ஞானம். இலக்காய் – அவரவர் நிலைக்கேற்பக் குறித்துணரத் தக்க பொருளாய், வித்தகர் – சதுரப்பாடு உடையவர்கள்; ஞானிகள்.

O Holy One of cool and beauteous Pukali who, while being hailed and adored in all humility by the devotee-throngs, is also subject to slander by the Jains and the Buddhists who are in good number. O Lord God who is the sole goal of all Tapaswis of whatever shade. Pray tell us; what may this be? Why is it that You love to get housed in the shrine endowed with heaven-descended vimaana at Mizhalai girt with gardens, where thrive competent pundits galore?

விண்ணிழி கோயில் விரும்பிமேவும் வித்தக மென்கொ லிதென்றுசொல்லிப்
புண்ணிய னைப்புக லிந்நிலாவு பூங்கொடி யோடிருந் தானைப்போற்றி
நண்ணிய கீர்த்தி நலங்கொள்கேள்வி நான்மறை ஞானசம் பந்தன்சொன்ன
பண்ணியல் பாடல்வல் லார்களிந்தப் பாரொடு விண்பரி பாலகரே. 11

*"விண் இழி கோயில் விரும்பி மேவும் வித்தகம் என்கொல் இது!" என்று சொல்லிப்,*
*புண்ணியனை, புகலி(ந்) நிலாவு பூங்கொடியோடு இருந்தானைப் போற்றி,*
*நண்ணிய கீர்த்தி நலம் கொள் கேள்வி நால்மறை ஞானசம்பந்தன் சொன்ன*
*பண் இயல் பாடல் வல்லார்கள் இந்தப் பாரொடு விண் பரிபாலகரே.*

"viN izi kOyil virumpi mEvum vittakam en2kol itu!" en2Ru colli,
puNNiyan2ai, pukali(n) nilAvu pUgkoTiyOTu iruntAn2aip pORRi,
naNNiya kIrtti nalam koL kELvi nAlmaRai njAn2acampantan2 con2n2a
paN iyal pATal vallArkaL intap pAroTu viN paripAlakarE.

***பொருள்:*** விண்ணிழி கோயில் விரும்பிய புண்ணியனைப் போற்றி ஞானசம்பந்தன் சொன்ன பாடலைப் பாட வல்லார்கள் பாரொடு விண்ணகத்தையும் பரிபாலனம் புரிவர். புகலிப்பதியில் விளங்கும் புண்ணியனாய், அழகிய இளங்கொடி போன்ற உமையம்மையோடு விளங்குவானைத் துதித்துத் திருவீழிமிழலையில் விண்ணிழி கோயிலை விரும்பிய வித்தகம் என்னையோ சொல்லாய் என்று கேட்டுப் புகழால் மிக்கவனும் நலம்தரும் நூற்கேள்வி உடையவனும் நான்மறை வல்லவனும் ஆகிய ஞானசம்பந்தன் பாடிய பண்ணிறைந்த இப்பதிகத் திருப்பாடல்களை ஓதுபவர் நிலவுலகத்தோடு விண்ணுலகத்தையும் ஆளும் சிறப்புடையவர் ஆவர்.

***குறிப்புரை:*** நண்ணிய கீர்த்தி நலங்கொள் கேள்வி நான்மறை ஞானசம்பந்தன் எனத் தன்னை வியந்ததாமோ எனின்; அன்று, ஞானசம்பந்தப் பிள்ளையார் இறைவனருள் வழிநின்று, தன் வசமற்று அவனுரை தனதுரையாகப் பாடிய பாடல்களாதலின் இது அவனுரை. ஆதலின் தன்னை வியந்து தான்

கூறியதன்று. பாரொடு விண் என்ற ஒடு உயர்பின் வழித்தாய், பார் கன்ம பூமியாய் வீட்டிற்கு வாயிலாகும் சிறப்புடைமையின் சேர்க்கப் பெற்றது.

Gnaana-Sambandhan of abiding renown who is endowed with the weal-conferring learning and who is well-versed in all the four Vedas, hailed the Lord thus; "Pray tell us this; what may be the speciality of this splendour that caused You to dwell in love in the shrine endowed with heaven-descended vimaana (at Mizhalai). Thus hailed is He, the Holy One at Pukali who is concorporate with His consort who is much like tendril flower. They, who can chant these tuneful hymns, will be blessed to reign in this world and in the supernal world as well.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*4ஆம் பதிகம் முற்றிற்று*
End of 4th Hymn

உ
சிவமயம்

## 5. கீழைத் திருக்காட்டுப் பள்ளி

### திருத்தலவரலாறு:

கீழைத்திருக்காட்டுப்பள்ளி என்ற திருத்தலமானது சோழ நாட்டில் காவிரி வடகரையில் விளங்கும் 12ஆவது தேவாரத்தலம். நாகை மாவட்டம் சீகாழி வட்டத்தில் உள்ளது. பூம்புகாருக்கு வடமேற்கில் திருவெண்காட்டுக்கு மேற்கே 2 கி.மீ. தூரத்தில் உள்ளது. திருவெண்காடு வரை பேருந்து வசதி உள்ளது. விருத்திராசுரனைக் கொன்ற பழிநீங்கத் தேவேந்திரன் பூசித்துத் தேவலோக ஆட்சியை மீண்டும் பெற்ற தலம். இதனை 'இமையோர் பெருமான் நுண்ணறிவால் வழிபாடு செய்யும்' என இத்தலப்பதிகம் நான்காம் பாடல் தெரிவிக்கின்றது. நண்டு பூசித்த விநாயகர் சந்நிதி இருக்கிறது. சுவாமி பெயர் ஆரணிய சுந்தரர். இறைவி பெயர் அகிலாண்ட நாயகி. தீர்த்தம் காவிரி. இத்தலத்தைப்பற்றிக் கல்வெட்டு எதுவும் இருப்பதாக அறியக்கூடவில்லை.

### பதிக வரலாறு:

திருவெண்காடு முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு சீகாழியை வந்தடைந்த பிள்ளையார், கீழ்பாலுள்ள தலங்களாகிய மயேந்திரப்பள்ளி, குருகாவூர் முதலியவற்றையும் வணங்கத் திருவுளங்கொண்டு எழுந்தருளியபோது, தென்கீழ்த் திசையில் உள்ள காழி நகருக்கு 12 கி.மீ. தொலைவில் உள்ள கீழைத் திருக்காட்டுப் பள்ளியை அடைந்து வணங்கினார்கள். வணங்கிய சுவாமிகள் 'செய்யருகே' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 5. KEEZHAI-TH-THIRU-K-KAATU-P-PALLI

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Keezhai-th-thiru-k-kaatu-p-palli is the 12$^{th}$ sacred Thevaaram site on the north bank of river Cauvery in the Chola country. It is in the Seekaazhi taluk of Naaga-p-pattinam district. It is at a distance of 2 km west of Thiru-ven-kaadu and to the north-west of Poompukaar. Buses ply upto Thiru-ven-kaadu. This is the place where Devendiran offered worship in order to regain the lordship of Devalokam by ridding himself of the sin of having killed Viruth-thira-suran. This is revealed by the 4$^{th}$

verse of the temple chronicle (Thalappadikam) as 'imaiyor perumaan nunnarivaal vazhipaadu seiyyum ...". There is a shrine for the Vinaayakar who was worshipped by a crab. The Lord's name is Aaraniya Sundarar and that of the Goddess is Akilaanda Naayaki. The holy ford is Cauvery. There is no evidence of any inscriptions about this temple.

### INTRODUCTION TO THE HYMN

The young saint returned to Seekaazhi after his pilgrimage to Thiru-Venn-Kaadu and other holy places. A few days passed, He was again impelled to undertake another pilgrimage. He visited Mahendra-p-Palli, Kurukaavoor and arrived at Keezhai-th-Thiru-k-Kaatu-p-Palli where he sang the following hymn. The verse number 2 in this hymn is not available.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 5. கீழைத் திருக்காட்டுப் பள்ளி 5. KEEZHAI-TH-THIRU-K-KAATU-P-PALLI

பண் : நட்டபாடை *Pann: Natta Paadai*
ராகம் : கம்பீரநாட்டை *Raagam : Kambeera Naattai*

செய்யரு கேபுனல் பாயவோங்கிச் செங்கயல் பாயச் சிலமலர்த்தேன்
கையரு கேகனி வாழையீன்று கானலெல் லாங்கமழ் காட்டுப்பள்ளிப்,
பையரு கேயழல் வாயவைவாய்ப் பாம்பணை யான்பணைத் தோளிபாகம்
மெய்யரு கேயுடை யானையுள்கி விண்டவ ரேறுவர் மேலுலகே. 1

***செய் அருகே புனல் பாய, ஓங்கிச் செங்கயல் பாய, சில மலர்த்தேன் -***
***கை அருகே கனி வாழை ஈன்று - கானல் எலாம் கமழ் காட்டுப்பள்ளிப்,***
***பை அருகே அழல் வாய ஐவாய்ப்பாம்புஅணையான் பணைத்தோளி பாகம்***
***மெய் அருகே உடையானை உள்கி, விண்டவர் ஏறுவர், மேல்உலகே.***

cey arukE pun2al pAya, Ogkic cegkayal pAya, cila malarttEn2--
kai arukE kan2i vAzai In2Ru--kAn2al elAm kamaz kATTuppaLLi,
pai arukE azal vAya aivAyp pAmpu aNaiyAn2 paNait tOLi pAkam
mey arukE uTaiyAn2ai uLki, viNTavar ERuvar, mEl ulakE.

**பொருள்:** வயலின்கண் நீர் பாய, அதனால் களித்த செங்கயல் மீன்கள் துள்ள, துள்ளிய மீன்கள், வயலின்மீது தொங்கிக் கொண்டு இருந்த பூங்கொம்புகள்மீது உரச, அதனால் சில

மலர்களில் இருந்து தேன் வடிந்து கொண்டிருக்கின்றது. கைக்கெட்டும் தூரத்தில் வாழை மரங்கள் கனிகளை ஈன்று பழங்கள் வெடித்து முதிர்ந்துள்ளன. இதனால் காடெல்லாம் தேன் மணமும் வாழைப்பழ மணமும் திருக்காட்டுப் பள்ளியுள் கமழ்ந்து கொண்டு இருந்தன. நச்சுப்பையினருகே அழலும் தன்மை உடைய ஐந்து வாயை உடைய ஆதிசேடனை அணையாகக் கொண்ட திருமாலையும், உமையம்மையையும் பாகமுமாகக் கொண்டு (அரியர்த்தர், அர்த்தநாரீசுரர்) விளங்கும் இறைவன்மீது பற்றுக் கொண்டு ஏனைய பற்றுக்களை விட்டவர், வீட்டுலகை அடைவர்.

***குறிப்புரை:*** இது, ஆரணிய சுந்தரரைத் தியானித்து நெகிழ்ந்த மனத்தடியவர்கள் மேலுலகடைவர் என்கின்றது. செய் – வயல். வயலருகே நீர்பாய (அதனாற் களித்த) கயல்மீன் ஓங்கிப் பாய, சிலவாகிய மலர்களில் இருந்து தேன், காடெல்லாம் கமழும் காட்டுப்பள்ளி எனவும், கைக்கெட்டும் தூரத்தில் வாழை, கனிகளை ஈன்று கமழ்கின்ற காட்டுப்பள்ளி எனவும் கூட்டிப் பொருள் கொள்க. திருமால் பாம்பணை மேலிருந்து ஆனந்தத் தாண்டவத்தைத் தியானித்து மனம் நெகிழ்ந்தார். ஆதலின், அவ்வரலாற்றை உட்கொண்டு கூறியதாம். பணை – மூங்கில். மெய்யருகே – மெய்யில். அரியர்த்தர் – ஆரணிய சுந்தரர்; இத்தலத்து இறைவனின் பெயர்.

In the town Keezhai-th-Thiru-k-Kaatu-p-Palli, several channels are running, carrying water in plenty to the fields. In the gushing waters of these channels, happy Kaajat fish leap, one over the other. While leaping thus, they dash against flowers that are hanging in their branches just above the water, resulting in the dripping of honey from the flowers. Very close by, plantain trees are many in the garden. Fully ripe and busted bunches of banana fruits are hanging in these plantain trees. The pleasant aroma from the dripping honey and from the plantain fruits fill up the air in Kaattu-p-palli.

Such fertile place is Kaattu-p-palli. Thirumaal rests over the five-hooded snake called Aadhi-seshan whose fiery fangs are situated close to its venomous sacs. This Thirumaal is also concorporated with Lord Civa similar to Umaa Devi whose arms are like bamboo. This posture is known as (Ariyarthar-Artha-Naareeswarar – *அரியர்த்தர் - அர்த்தநாரீஸ்வரர்*). Those who emulate Lord Civan in these forms templed in Kaattu-p-palli, giving up all else will for sure gain ascension.

**Note:** Lord Civan's Sakthi is energy personified as Umaa Devi (and also in many other names) is only ONE entity. She occupies Lord Civan's frame on His left side. This posture is known as (Artha-Naareeswarar – *அர்த்தநாரீஸ்வரர்*). However, when the sakthi (energy) goes into action, the sakthi is taking four different forms as under.

1. During Pleasure - Bhavaani பவானி
2. Interacting with male members - Thirumaal திருமால்
3. In angry mood - Kaali காளி
4. In war - Durgai துர்க்கை

Kayal : Carp fish; The snake: Aadhi-Seshaa, the thousand hooded serpent.

* * * * * * * * * 2

திரைகளெல் லாமல ருஞ்சுமந்து செழுமணி முத்தொடு பொன்வரன்றிக்
கரைகளெல் லாமணி சேர்ந்துரிஞ்சிக் காவிரி கால்பொரு காட்டுப்பள்ளி
உரைகளெல் லாமுணர் வெய்திநல்ல வுத்தம ராயுயர்ந் தாருலகில்
அரவமெல் லாமரை யார்த்தசெல்வர்க் காட்செய வல்ல லறுக்கலாமே. 3

திரைகள் எல்லா மலரும் சுமந்து, செழுமணி முத்தொடு பொன் வரன்றிக்,
கரைகள் எல்லாம் அணி சேர்ந்து உரிஞ்சிக், காவிரி கால் பொரு காட்டுப்பள்ளி,
உரைகள் எல்லாம் உணர்வு எய்தி நல்ல உத்தமராய் உயர்ந்தார் உலகில்,
அரவம் எல்லாம் அரை ஆர்த்த செல்வர்க்கு ஆட்செய, அல்லல் அறுக்கல் ஆமே.

tiraikaL ellA malarum cumantu, cezumaNi muttoTu pon2 varan2Ri,
karaikaL ellAm aNi cErntu urinjci, kAviri kAl poru kATTup paLLi,
uraikaL ellAm uNarvu eyti nalla uttamarAy uyarntAr ulakil,
aravam ellAm arai Artta celvarkku ATceya, allal aRukkal AmE.

**பொருள்:** காவிரியின் வாய்க்கால்கள் எல்லா மலர்களையும் சுமந்தும், செழுமையாக மணிகள் முத்துக்கள் பொன் ஆகியவற்றை வாரிக்கொண்டும் வந்து இருகரைகளிலும் அழகு பொருந்த உராய்ந்து வளம் சேர்க்கும் ஊர் திருக்காட்டுப் பள்ளி ஆகும். பாம்புகளை இடையில் கட்டிய செல்வராய் எழுந்தருளியிருக்கும் சிவபிரானுக்கு, வேதம் முதலான மேம்பட்ட உரைகள் யாவற்றையும் உணர்ந்த நல்ல உத்தமராய்த் தொண்டு செய்யின், அல்லல் அறுக்கலாம்.

**குறிப்புரை:** இது இறைவற்கு ஆட்செய்யின் அல்லல் அறுக்கலாம் என்கிறது. காவிரி கால் திரைகள் எல்லா மலருஞ் சுமந்து, மணி முத்தொடு பொன்வரன்றி, கரைகள் எல்லாம் அணிசேர்ந்து உரிஞ்சி

பொருகாட்டுப்பள்ளி என இயைத்து, காவிரியாற்றின் வாய்க்கால்களின் அலைகள் எல்லா வகையான மலரையும் சுமந்து மணிகளையும் முத்துக்களையும் பொன்னையும் வாரிக்கொண்டு, இரு கரைகளிலும் அழகு பொருந்த மோதிப் பொருதற்கு இடமாகிய காட்டுப்பள்ளி எனப் பொருள் கொள்க. உரைகள் எல்லாம் உணர்வெய்தி – வேதங்கள் யாவற்றையும் உணர்ந்து, நல்ல உத்தமராய் உலகில் உயர்ந்தார் செல்வர்க்கு ஆட்செய அல்லல் அறுக்கலாம் எனக் கூட்டுக.

The wavelets of the channels of the Cauvery carry with them flowers of many kinds, lustrous gems, pearls and gold and leaves them upon the entire stretches of the banks, thus adoring them. Such fertile place is Kaatu-p-Palli. They who have grown lofty and noble in this world by their conscious imbibation of all the scriptures, can, indeed, eliminate their troubles, if they serve the opulent ONE - Lord Civan who wears serpent in His waist.

தோலுடை யான்வண்ணப் போர்வையினான் சுண்ண வெண்ணீறு துதைந்திலங்கு
நூலுடை யானிமை யோர்பெருமான் நுண்ணறி வால்வழி பாடுசெய்யுங்
காலுடை யான்கரி தாயகண்டன் காதலிக் கப்படுங் காட்டுப்பள்ளி
மேலுடை யானிமை யாதமுக்கண் மின்னிடை யாளொடும் வேண்டினானே. 4

தோல் உடையான்; வண்ணப் போர்வையினான்; சுண்ணவெண் நீறு துதைந்து, இலங்கு
நூல் உடையான்; இமையோர் பெருமான்; நுண் அறிவால் வழிபாடு செய்யும்
கால் உடையான்; கரிதுஆய கண்டன்; காதலிக்கப்படும் காட்டுப்பள்ளி -
மேல் உடையான், இமையாத முக்கண்; - மின்இடையாளொடும் வேண்டினானே.

tOl uTaiyAn2; vaNNap pOrvaiyin2An2; cuNNa veN nIRu tutaintu, ilagku
nUl uTaiyAn2; imaiyOr perumAn2; nuN aRivAl vazipATu ceyyum
kAl uTaiyAn2; karitu Aya kaNTan2; kAtalikkappaTum kATTuppaLLi--
mEl uTaiyAn2; imaiyAta mukkaN;--min2 iTaiyALoTum vENTin2An2E.

**பொருள்:** புலித்தோலை ஆடையாக உடுத்தவன். யானைத் தோலை அழகிய போர்வையாகப் போர்த்தவன். திருவெண்ணீறாகிய சுண்ணத்தில் செறிந்து விளங்கும் பூணூலை மார்பகத்தே உடையவன். தேவர்கட்குத் தலைவன். பதிஞானத்தாலே அன்பர்கள் வழிபாடு செய்யும் திருவடிகளை உடையவன். கரிய கண்டத்தை உடையவன். பலராலும் விரும்பப் பெறும் திருக்காட்டுப் பள்ளியில் இமையாத மூன்றாவது கண்ணை நெற்றியில் உடைய அவ்விறைவன் மின்னல் போன்ற இடையினை உடைய உமையம்மையோடு விரும்பி எழுந்தருளியிருந்தான்.

**குறிப்புரை:** இது இறைவன் உமையாளோடு காட்டுப்பள்ளியை விரும்பி மேவினான் என்கின்றது. வண்ணப் போர்வை – அழகிய போர்வை. துதைந்து – செறிந்து, நுண்ணறிவால் வழிபாடு செய்யும் காலுடையான் – சிவஞானத்தால் அருளே வடிவாகக் கொண்டு வழிபடும் திருவடியை உடையவன். நுண்ணறிவால் வழிபடாதவர்க்குத் திருவடி அருளாகக் காட்சியளிக்காது என்பது வெளிப்படை. நுண்ணறிவு – மெய்யறிவு.

He wears the tiger skin in His waist. He covers His body with the lovely elephant's skin. He smears with the bright and white ash in His body; He wears the sacred thread; He is the Lord of celestials; It is through sublime and subtle Gnosis His Feet are to be adored, His throat is dark-blue; He presides over Kaatu-p-Palli which is His beloved shrine. Three are His non-winking eyes; He is happily housed in Kaattu-p-palli with Uma whose waist is as lean as lightning.

சலசல சந்தகி லோடுமுந்திச் சந்தன மேகரை சார்த்தியெங்கும்
பலபல வாய்த்தலை யார்த்துமண்டிப் பாய்ந்திழி காவிரிப் பாங்கரின்வாய்க்
கலகல நின்றதி ருங்கழலான் காதலிக் கப்படுங் காட்டுப்பள்ளிச்
சொலவல தொண்டர்க ளேத்தநின்ற சூலம்வல் லான்கழல் சொல்லுவோமே. 5

*சலசல சந்து அகிலோடும் உந்திச், சந்தனமே கரை சார்த்தி, எங்கும்*
*பலபல வாய்த்தலை ஆர்த்து மண்டிப், பாய்ந்து இழி காவிரிப் பாங்கரின்வாய்க்,*
*கலகல நின்று அதிரும் கழலான் காதலிக்கப்படும் காட்டுப்பள்ளிச் -*
*சொல வல தொண்டர்கள் ஏத்த நின்ற - சூலம்வல்லான் கழல் சொல்லுவோமே!*

calacala cantu akilOTum unti, cantan2amE karai cArtti, egkum
palapala vAyttalai Arttu maNTi, pAyntu izi kAvirip pAgkarin2vAy,
kalakala nin2Ru atirum kazalAn2 kAtalikkappaTum kATTuppaLLi--
cola vala toNTarkaL Etta nin2Ra--cUlam vallAn2 kazal colluvOmE!

**பொருள்:** காவிரி நதி சலசல என்னும் ஒலிக் குறிப்போடு சந்தனம் அகில் முதலியவற்றை அடித்து வந்து, சந்தனத்தைக் கரையில் சேர்த்துப் பற்பல வாய்க்கால்களின் தலைப்பில் ஆரவாரித்து ஓடிப் பாய்ந்து வயல்களில் இழிந்து திருக்காட்டுப் பள்ளிக்கு வளம் சேர்க்கின்றது. கலகல என்னும் ஓசையோடு அதிரும் கழல்களை அணிந்த இறைவனால் விரும்பப்படும் திருக்காட்டுப் பள்ளியை அடைந்து இறைவனது பொருள்சேர் புகழ்பேசும் தொண்டர்களால் துதிக்கப்படும் அச்சூலபாணியின் திருவடிப் பெருமையை நாமும் கூறித் தோத்திரிப்போம்.

**குறிப்புரை:** இது காட்டுப்பள்ளியுள் தொண்டர்கள் துதிக்க இருந்த பெருமான் கழல்களைத் தோத்திரிப்போம் என்கின்றது. சலசல கலகல – ஒலிக்குறிப்பு. சந்து – சந்தனம், உந்தி – செலுத்தி. வாய்த்தலை – வாய்க்காலின் தலைப்புக்கள். ஆர்த்து – ஒலித்து. கழலான் – கழலானாய சிவபெருமான்.

Gurgling runs the Cauvery river carrying with it sandalwood and eaglewood and shoring them up on the banks; The river flows into its many, many channels. Close to the Cauvery river is Kaatu-p-Palli; where Lord Civan's beloved shrine is situated. Here, He dances with His anklets, jingling and tinkling; Joining the devotees who know how to hail Him, Let us laud the ankleted feet of the Trident Holder, Lord Civan.

தளையவிழ் தண்ணிற நீலநெய்த றாமரை செங்கழு நீருமெல்லாங்
களையவி ழுங்குழ லார்கடியக் காதலிக் கப்படுங் காட்டுப்பள்ளித்
துளைபயி லுங்குழ லியாழ்முரலத் துன்னிய வின்னிசை யாற்றுதைந்த
அளைபயில் பாம்பரை யார்த்தசெல்வர்க் காட்செய வல்ல லறுக்கலாமே. 6

*தளை அவிழ் தண் நிற நீலம், நெய்தல், தாமரை, செங்கழுநீரும், எல்லாம்*
*களை அவிழும் குழலார் கடியக், காதலிக்கப்படும் காட்டுப்பள்ளித்,*
*துளை பயிலும் குழல், யாழ், முரலத், துன்னிய இன்இசையால் - துதைந்த*
*அளை பயில் பாம்பு அரை ஆர்த்த செல்வர்க்கு ஆட்செய, அல்லல் அறுக்கலாமே.*

taLai aviz taN niRa nIlam, neytal, tAmarai, cegkazu nIrum, ellAm
kaLai avizum kuzalAr kaTiya, kAtalikkappaTum kATTuppaLLi,
tuLai payilum kuzal, yAz, murala, tun2n2iya in2 icaiyAl--tutainta
aLai payil pAmpu arai Artta celvarkku ATceya, allal aRukkal AmE.

**பொருள்:** திருக்காட்டுப்பள்ளியில் வாழ்கின்ற உழத்தியர் தங்கள் தலைமுடிகள் அவிழும்படியாக வயல்களில் செழித்துள்ள நீலம், நெய்தல், செங்கழுநீர், தாமரை முதலிய மலர்களைக் களைந்து எறிகின்றனர். அத்துணை வளம் உடைய ஊர் திருக்காட்டுப்பள்ளி. இவ்வூர் எல்லாராலும் விரும்பப்படுவது. புல்லாங்குழல் போன்ற துளைக் கருவிகளில் பயிலுகின்றவர்கள் எழுப்புகின்ற ஒலியும், யாழ் வாசிப்போர் எழுப்புகின்ற இன்னிசையும் இவ்வூரில் இடைவிடாது ஒலித்துக் கொண்டே இருக்கின்றன. பாம்புகள் தங்கள் வளையினின்றும் வெளிவராதவைகள். அப்பேர்ப்பட்ட பாம்புகளைத் தன் இடையில் கட்டி எழுந்தருளிய செல்வராகிய சிவபெருமானுக்கு அடியவர்களாய் விளங்கித் தொண்டு செய்யுங்கள். உங்கள் துன்பங்கள் நீங்கும்.

**குறிப்புரை:** இதுவும் ஆரண்ய சுந்தரர்க்கு ஆட்செய்தால் அல்லல் அறுக்கலாம் என்கிறது. தளை – இதழ்களின்கட்டு. அவிழுங் கூந்தலையுடைய கடைசியர்கள் களையாக நீலம் முதலாய மலர்களையும் பிடுங்கி எறிகின்றார்கள். குழலார் களைகடிய எனக்கூட்டுக. துதைந்த ஆர்த்த செல்வர் எனக் கூட்டுக.

In Kaatu-p-Palli - His beloved city, farm wives while removing weeds from the fields, throw them away now and then. Similarly they throw away cool and bright and blooming blue lilies, neytal, lotuses and sengkazhunir and other flowers which come out of their heads. Also the sweet music from hollowed flutes as well as yaazh, wafts around the city. Such fertile and enjoyable place is Kaattu-p-palli. Lord Civan ties a snake round His waist, though the snake's permanent habitat is the hole in the ground. Those who serve Lord Ciyan in this place will be relieved of their misery.

**Note:** Neytal: *Nymphaea alba;* Senkazhuneer: The red lilly.

முடிகையி னாற்றொடு மோட்டுழவர் முன்கைத் தருக்கைக் கரும்பின்கட்டிக்
கடிகையி னாலெறி காட்டுப்பள்ளி காதல்செய் தான்கரி தாயகண்டன்
பொடியணி மேனியி னானையுள்கிப் போதொடு நீர்சுமந் தேத்திமுன்னின்
றடிகையி னாற்றொழ வல்லதொண்ட ரருவினை யைத்துரந் தாட்செய்வாரே. 7

முடி கையினால் - தொடும் மோட்டு உழவர் முன்கைத் தருக்கைக் கரும்புஇன்கட்டிக்
கடிகையினால் எறி காட்டுப்பள்ளி, காதல்செய்தான் கரிதுஆய கண்டன்,
பொடி அணி மேனியினானை உள்கிப், போதொடு நீர் சுமந்து ஏத்தி, முன்நின்று,
அடி கையினால் - தொழ வல்ல தொண்டர் அருவினையைத் துரந்து ஆட்செய்வாரே.

muTi kaiyin2Al--toTum mOTTu uzavar mun2kait tarukkaik karumpu in2 kaTTik
kaTikaiyin2Al eRi kATTuppaLLi kAtalittAn2, karitu Aya kaNTan2,
poTi aNi mEn2iyin2An2ai uLki, pOtoTu nIr cumantu Etti, mun2 nin2Ru,
aTi kaiyin2Al--toza valla toNTar aruvin2aiyait turantu ATceyvArE.

**பொருள்:** திருக்காட்டுப் பள்ளியில் வாழ்கின்ற வலிய உழத்தியர்கள் நெற் பயிர்களின் நாற்றைப் பிடுங்கி எடுக்கும் வேலை செய்யும் பொழுது, வயல் சேற்றில் இருக்கும் நுண் கிருமிகளால் அவர்கள் கைகளின் மணிக்கட்டுகளில் தினவு (ஊரல்) ஏற்படுகின்றது. அந்தத் தினவைப் போக்குவதற்குக் கரும்பின் சுவையுடைய வெல்லக் கட்டியை தங்கள் மணிக்கட்டில் வைத்து உடைத்து நசுக்கி விடுகிறார்கள். தினவு நீங்கி விடுகிறது. இத்துணை வளம் பொருந்திய திருக்காட்டுப் பள்ளியை விரும்பி உறைகின்றான் சிவபெருமான்.

தேவர்களும் அசுரர்களும் திருப்பாற்கடலை கடைந்த பொழுது, அக்கடலில் இருந்து வெளிப்போந்தது, ஆலகால விஷம். அந்த விஷத்திலிருந்து வீசிய நச்சுக் காற்று

உலகனைத்தையும் அழித்து விடும் தன்மையில் விளங்கியது. அந்த விஷத்தை எடுத்து சிவபெருமான் உண்டான். அதனால் அவனது கழுத்து கருநிறமாக மாறியது. அவன் திருமேனியில் திருநீறு அணிந்துள்ளான். இப்பெருமானை நினைந்து அபிடேக நீர் மலர்கள் ஆகியவற்றை எடுத்துச் சென்று அவன் முன் நின்று துதித்து அவன் திருவடிகளைக் கையால் தொழும் திறம் உடைய தொண்டர்கள் தமது அரிய வினைகள் நீங்கப் பெற்று அவனுக்கு அடிமை செய்து வாழ்வர்.

***குறிப்புரை:*** இது பூவும் நீரும் கொண்டு பூசித்துத் தொழும் தொண்டர்கள் வினை நீங்கி ஆட்செய்வர் என்கின்றது. முடி – நாற்று முடி, தொடும் – பறிக்கின்ற. மோட்டுழவர் – வலிய உழவர்கள். நெல் வயல்களில் உள்ள சேற்றில் நின்று கொண்டு உழத்தியர் களைகளைப் பிடுங்குங்காலை; அங்குள்ள நுண்கிருமிகள் தன்வாயிலிருந்து வெளிப்படும் திரவத்தை மணிக்கட்டுகளில் உமிழ்ந்து கடிக்கின்றன. அதனால் தினவு ஏற்படுகின்றது. அருவினை–இறைவனருள் ஒன்றாலன்றி வேறு எவற்றாலும் நீங்காத ஆகாமிய, சஞ்சித வினைகள். எனவே, இறைவற்கு ஆட்செய்யவும் வினை நீக்கம் வேண்டும் என்பது வலியுறுத்தப்பட்டுள்ளது.

In Kaatu-p-Palli, His beloved town, the strong farmers who pluck the weedlings, get rid of the itching of their wrists by breaking and squashing small pieces of jaggery in their wrists. The blue-throated Lord, annulling the mighty karma will rule over them who constantly contemplate on His sacred and ash-smeared person. The devotees carry with them flowers and water, hail Him standing in his presence and adore His Feet with their hands.

**Note:** Itching: The Tamil word '*ஊரல்*' is thus translated. It is a type of paraethesia. The farmers while removing the weeds, find acidic bacteria bite their wrists causing itching sensation in their hands. To get rid of the itching sensation the farmers break small pieces of jaggery and squash it well on their wrists. The calcium content in the jaggery which is alkaline in nature instantaneously neutralises the acidity, relieving the itching sensation.

பிறையுடை யான்பெரி யோர்கள்பெம்மான் பெய்கழ னாடொறும் பேணியேத்த
மறையுடை யான்மழு வாளுடையான் வார்தரு மால்கட னஞ்சமுண்ட
கறையுடை யான்கன லாடுகண்ணாற் காமனைக் காய்ந்தவன் காட்டுப்பள்ளிக்
குறையுடை யான்குறட் பூதச்செல்வன் குரைகழ லேகைகள் கூப்பினோமே. 8

பிறை உடையான், பெரியோர்கள் பெம்மான், பெய் கழல் நாள்தொறும் பேணி ஏத்த
மறை உடையான், மழுவாள் உடையான், வார் தரு மால்கடல் நஞ்சம் உண்ட
கறை உடையான், கனல் ஆடு கண்ணால் காமனைக் காய்ந்தவன், காட்டுப்பள்ளிக்
குறை உடையான், குறள்பூதச்செல்வன், குரைகழலே கைகள் கூப்பினோமே!

piRai uTaiyAn2, periyOrkaL pemmAn2, pey kazal nALtoRum pENi Etta
maRai uTaiyAn2, mazuvAL uTaiyAn2, vArtaru mAl kaTal nanjcam uNTa
kaRai uTaiyAn2, kan2al ATu kaNNAl kAman2aik kAyntavan2, kATTuppaLLik
kuRai uTaiyAn2, kuRaL pUtac celvan2, kurai kazalE kaikaL kUppin2OmE!

**பொருள்:** தலையில் பிறையை அணிந்தவனும், பெரியோர்கள் தலைவனும், வேதங்களை அருளியவனும், மழுவையும் வாளையும் உடையவனும், நீண்ட கரிய கடலிடையே தோன்றிய நஞ்சினை உண்ட கறைக் கண்டனும், கலை சேர்ந்த நுதல் விழியால் காமனைக் காய்ந்தவனும், அன்பர்களின் குறைகளைக் கேட்டறிபவனும், குறட்பூதச் செல்வனுமாகிய திருக்காட்டுப் பள்ளியில் உள்ள இறைவன் திருவடிகளை நாள்தோறும் விரும்பி ஏத்தி அத்திருவடிகளையே கைகூப்பினோம்.

**குறிப்புரை:** இது ஆரண்யசுந்தரரின் அடிகளைக் கைகூப்பி வணங்கினோம் என்கிறது. பிறை – முதற்பிறை. வார்தரு – ஒழுகுகின்ற, மால்கடல் – மால் துயிலுகின்ற கடலாகிற பாற்கடல். கறை – களங்கம். கனலாடு கண்ணால் – நெற்றிக்கண்ணால். காட்டுப் பள்ளிக் குறையுடையான் – காட்டுப் பள்ளியில் நேர்த்திக் குறையை நிறைவித்தலை உடையவன். குறள் – குறுகிய.

He wears a crescent moon on His crest; He is the Lord of the great ones as well as the Vedas. His ankleted Feet are to be hailed in daily worship. He wields an axe and a sword; He quaffed the venom that rose up from the vast sea and his neck bears its mark. He smote Manmata with a look of His fire-abiding eye. He is the Lord of Kaatu-p-Palli who approves of the performance of vows (undertaken in his name), He is the opulent Lord of the diminutive Bhoodha-Hosts. Forever, we fold our palms in adoration of His feet adorned with resounding anklets.

Note: Ankleted Feet: The Tamil original refers to 'pey kazhal'. These are anklets containing grains of gold, pearls or gems.

செற்றவர் தம்மர ணம்மவற்றைச் செவ்வழல் வாயெரி யூட்டிநின்றுங்
கற்றவர் தாந்தொழு தேத்தநின்றான் காதலிக் கப்படுங் காட்டுப்பள்ளி
உற்றவர் தாமுணர் வெய்திநல்ல வும்பருள் ளார்தொழு தேத்தநின்ற
பெற்றம ரும்பெரு மானையல்லாற் பேசுவது மற்றொர் பேச்சிலோமே. 9

*செற்றவர்தம் அரணம்(ம்) அவற்றைச் செவ்அழல்வாய் எரியூட்டி, நின்றும்*
*கற்றவர் தாம் தொழுது ஏத்த நின்றான் காதலிக்கப்படும் காட்டுப்பள்ளி*
*உற்றவர்தாம் உணர்வு எய்தி, நல்ல உம்பர்உள்ளார் தொழுது ஏத்த நின்ற*
*பெற்றமரும் பெருமானை அல்லால், பேசுவதும் மற்று ஓர் பேச்சு இலோமே.*

ceRRavar tam araNam(m) avaRRaic cev azal vAy eriyUTTi, nan2Rum
kaRRavar tAm tozutu Etta nin2RAn2 kAtalikkappaTum kATTuppaLLi
uRRavartAm uNarvu eyti, nalla umpar uLLAr tozutu Etta nin2Ra
peRRamarum perumAn2ai allAl, pEcuvatum maRRu Or pEccu ilOmE!

***பொருள்:*** தேவர்க்குப் பகைவராய திரிபுரத்து அசுரர்களுடைய மூன்று கோட்டைகளையும் செவ்வழலால் எரியூட்டி அழித்துப் பெருவீரத்தோடு விளங்குகின்றான் சிவபெருமான். அவன் கற்றவர்களால் தொழுது ஏத்தி வணங்கப்படுவதால் மேம்பட்டு விளங்குகின்றான். அவன் விரும்பிக் காதலித்து அருளாட்சி செய்துவரும் ஊர் திருக்காட்டுப்பள்ளி ஆகும். மெய்யுணர்வு பெற்ற தேவர்கள் பலரும் இங்கு வந்து இறைவனைத் தொழுது ஏத்தி வணங்குகிறார்கள். அவன் அறவிடை மீது ஏறி அமர்ந்திருப்பவன். அப்பெருமானுடைய புகழை அன்றி மற்றோர் பேச்சுப் பேசுவதில்லை.

***குறிப்புரை:*** இது நாம் ஆரண்யசுந்தரரைப் பற்றியன்றி வேறொன்றையும் பற்றிப் பேசோம் என்கின்றது. செற்றவர் – பகைவர். அரணம் – கோட்டை. உற்றவர்தாம் – மலபரிபாகம் உற்ற ஆன்மாக்கள். உணர்வு – மெய்ஞ்ஞானம். பெற்றம் அமரும் – இடபத்தை ஊர்கின்ற; பெற்றமரும் என அம் ஈறு கெட்டது. அவனையன்றிப் பேசும் பேச்சு மற்றொன்றிலாமையால் மற்றொர் பேச்சிலோம் என்றார். பெற்றம் – இடபம்; அறவிடை.

He destroyed with fire the (three) citadels of the recalcitrant (asuras). He is hailed and adored by the learned in Kaatu-p-Palli which is dear to Him; The bull is the riding mount for Lord Civan. We, the Devas fully grasped in Divine knowledge come over here and worship Him. We do not speak on anything other than the glory of Lord Civan of Kaattu-p-paalli.

ஒண்டுவ ரார்துகி லாடைமெய்போர்த் துச்சிகொ ளாமையுண் டேயுரைக்குங்
குண்டர்க ளோடரைக் கூறையில்லார் கூறுவ தாங்குண மல்லகண்டீர்
அண்டம றையவன் மாலுங்காணா ஆதியி னானுறை காட்டுப்பள்ளி
வண்டம ரும்மலர்க் கொன்றைமாலை வார்சடை யான்கழல் வாழ்த்துவோமே. 10

ஒண் துவர் ஆர் துகில் ஆடை மெய் போர்த்து, உச்சி கொளாமை உண்டே, உரைக்கும்
குண்டர்களோடு அரைக் கூறை இல்லார் கூறுவது ஆம்குணம் அல்லகண்டீர்;
அண்டமறையவன் மாலும் காணா ஆதியினான், - உறை காட்டுப்பள்ளி -
வண்டு அமரும் மலர்க்கொன்றைமாலை வார்சடையான், கழல் வாழ்த்துவோமே!

oN tuvar Ar tukil ATai mey pOrttu, ucci koLAmai uNTE, uraikkum
kuNTarkaLOTu araik kURai illAr kURuvatu AmkuNam allakaNTIr;
aNTa maRaiyavan2 mAlum kANA Atiyin2An2,--uRai kATTuppaLLi--
vaNTu amarum malark kon2Rai mAlai vAr caTaiyAn2, kazal vAzttuvOmE!

**பொருள்:** நிறம் பொருந்திய காவியாடையை மேனியில் போர்த்து, உச்சி வேளையில் வயிறு கொள்ளாத அளவில் தின்று பொய் கூறும் உடல் பருத்த புத்தர், இடையில் உடையில்லாத திகம்பர சமணர் கூறுவன நற்பயனைத் தாராதன என்பதை அறிந்து கொள்ளுங்கள். உலகைப் படைத்த வேதாசாரியனான பிரமனும், மாலுங் காணாத முதல்வன் உறையும் திருக்காட்டுப் பள்ளிக்குச் சென்று வண்டு அமரும் மலர்க் கொன்றை புனைந்த வார் சடையோன் கழல்களை ஏத்தி வாழ்த்துவோம்.

**குறிப்புரை:** இது புத்தரும், சமணரும் கூறுவன குணமற்ற சொற்கள்; அவைகளை உறுதியென நம்பாதீர். இறைவன் கழலை ஏத்துவோம் என்கின்றது. துவர்ஆர் துகில் – காவியாடை. கொள்ளாமை உண்டு – கொள்ளாத அளவு மிகுதியாக உண்டு, குண்டர்கள் – உடல் பருத்த புத்தர்கள், அரைக்கூறையில்லார் – அரையில் ஆடை இல்லாதவர்கள்; திகம்பர சமணர்கள் கூறுவன குணமல்ல. தாம் அசை கண்டீர் – கண்டு தெளியுங்கள். அண்ட மறையவன் – இரண்ய கருப்பனாகிய பிரமன். பிரமன் நீரையே முதலில் படைத்தான் என்பதும், அதில் பொன்மயமான முட்டையாக உலகை ஆக்கினான் என்பதும் புராண வரலாறு. அமரும் – விரும்பும்.

The Buddhist monks who wear Brown-red cloth and having obese frame due to over-eating in the mid-day, as well as Jain monks who roam about naked - both speak ignoble things which will never yield any good for any body. Know this well and avoid them. It is Kaatu-p-Palli where abides, Lord Civan who is unknowable even to Brahma

and Vishnu. Let us hail the ankleted Feet of Him whose long, matted hair is decked with a chaplet of konrai flowers where honey bees come and settle!

**Note:** Uchchi means head. Metaphorically it refers to the brain. Kolaamai refers to not holding / receiving. Uchchi Kolaamai may therefore mean that which is rejected by the brain / that which is not believed in.

பொன்னிய றாமரை நீலநெய்தல் போதுக ளாற்பொலி வெய்துபொய்கைக்
கன்னியர் தாங்குடை காட்டுப்பள்ளிக் காதல னைக்கடற் காழியர்கோன்
துன்னிய வின்னிசை யாற்றுதைந்து சொல்லிய ஞானசம் பந்தனல்ல
தன்னிசை யாற்சொன்ன மாலைபத்துந் தாங்கவல் லார்புகழ் தாங்குவாரே. 11

பொன் இயல் தாமரை, நீலம், நெய்தல், போதுகளால் பொலிவு எய்து பொய்கைக்,
கன்னியர் தாம் குடை காட்டுப்பள்ளிக்காதலனை, கடல் காழியர்கோன் -
துன்னிய இன்இசையால் - துதைந்து சொல்லிய ஞானசம்பந்தன் - நல்ல
தன் இசையால் சொன்ன மாலைப்பத்தும் தாங்க வல்லார் புகழ் தாங்குவாரே.

pon2 iyal tAmarai, nIlam, neytal, pOtukaLAl polivu eytu poykai,
kan2n2iyar tAm kuTai kATTuppaLLik kAtalan2ai, kaTal kAziyarkOn2--
tun2n2iya in2 icaiyAl--tutaintu colliya njAn2acampantan2--nalla
tan2 icaiyAl con2n2a mAlaipattum tAgka vallAr pukaz tAgkuvArE.

**பொருள்:** திருமகள் வாழும் தாமரை. நீலம், நெய்தல் ஆகிய மலர்களால் பகலும் இரவும் பொலிவெய்தும் பொய்கைகள் திருக்காட்டுப்பள்ளியில் மிகுதியாக உள்ளன. அக்குளங்களில் கன்னிப் பெண்கள் குடைந்தாடுகின்றனர். அவ்வூரை விரும்பும் இறைவனைக் கடல்சூழ்ந்த காழி மாநகர்த் தலைவனாகிய ஞானசம்பந்தன் பொருந்திய இன்னிசை கூட்டிச் சொன்ன இத்திருப்பதிகப் பாடலாகிய மாலை பத்தையும் மனத்திடைத் தரிக்க வல்லவர் புகழ் எய்துவர்.

**குறிப்புரை:** இது ஞானசம்பந்தன் இசையாற் சொன்ன இந்த மாலை பத்தும் வல்லார் புகழ் எய்துவர் என இம்மைப்பயன் கூறி, மறுமைப் பயனும் உடன் தோன்றத் தெரிவித்துத் திருக்கடைக் காப்பு அருளிச் செய்கிறது. பொன்னியல் தாமரை – இலக்குமி வசிக்கும் தாமரை. தாமரை பகலில் பொலிவது. நீலமும் நெய்தலும் இரவிற் பொலிவன. இவைகளை உடைமையால் பொய்கை எஞ்ஞான்றும் பொலிகின்றது என்பது குறித்தவாறு. காட்டுப்பள்ளிக் காதலன் – காட்டுப் பள்ளியில் விருப்புடைய பெருமான், துதைந்து – செறிந்து. நல்ல தன் இசையால் சொன்ன – நல்ல தனது மிடற்றிசையால் அமைத்து அருளிய. பத்துத் திருப்பாடல்களும் கூடிய மாலையாகவும், மாலை பத்தும் என்றது. ஒவ்வொரு திருப்பாடலுமே தனித்தனிப்

பயனுடையதாய், வழிபடும் முறைகளை உடையதாய் இருக்கும் சிறப்பு நோக்கி, ஒவ்வொரு பாடலுமே ஒரு மாலை போன்றது. அங்ஙனமாகிய பத்து மாலைகளையும் மனத்தில் தரிக்க வல்லவர் இம்மையிற் புகழ் எய்துவர். எனவே மறுமையில் வீடெய்துவர் என்பது தாமே பெறப்பட்டது.

In Kaatu-p-Palli, there are tanks that are bright both in the day and night because Lotus flowers (seat of goddess Lakshmi) blossom in the day and the blue lillies and neytal blossom at night (ஆம்பல் குவிந்ததே; தாமரையும் மலர்ந்ததே . . . by அன்புப் புலவர்). In these tanks, virgins dive and sport and enjoy. In such a lovely Kaattu-p-palli, Lord Civan is templed. Gnaana-sambandhan, the Prince of Kaazhi which is close to the sea, has hailed this Lord in melodic sweet hymns of his own accord. They that can treasure this melodic hymn - the garland of ten verses - will come by great renown.

**Note:** Poikai: A natural pond / pool unexcavated by human hands.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

5ஆம் பதிகம் முற்றிற்று
End of 5th Hymn

உ
சிவமயம்

# 6. திருமருகலும் திருச்செங்காட்டங்குடியும்

## திரு-மருகல்

### திருத்தலவரலாறு:

திருமருகல் என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலங்களில் 80ஆவது தலம். நாகை மாவட்டம் நன்னிலம் வட்டத்தில் உள்ளது. நன்னிலம், நாகை, திருவாரூர், மயிலாடுதுறை ஆகிய ஊர்களில் இருந்து பேருந்துகளில் செல்லலாம். மருகல் என்பது ஒருவகை வாழை. இது கல்வாழை எனவும் வழங்குகின்றது. கருங்கல் தளத்திலேயே வளர்வதால் இப்பெயர் வந்தது என்கிறார்கள். அதன் பழத்தை இறைவனுக்கு நிவேதிக்கலாமேயன்றி மக்கள் உண்ணல் ஆகாது; உண்டால் வயிற்றுநோய் உண்டாகும் என்பது அவ்வூர் மக்கள் வாய்மொழி. இந்த வாழை தலவிருட்சமாதலின் இத்தலத்திற்கு இப்பெயர் வந்தது. கோச்செங்கட் சோழநாயனார் எழுப்பிய எழுபது மாடக் கோயில்களில் இதுவும் ஒன்று. யானையேறாப் பெருங்கோயில்.

பாண்டிய நாட்டு வணிகனாகிய தாமன் என்பவன் தன்மக்கள் எழுவரில் ஒருத்தியைத் தன் மருமகனுக்குக் கொடுப்பதாக வாக்களித்திருந்தான். அவர்களுக்குப் பருவம் வந்த காலத்து ஒவ்வொருத்தியாகப் பிறருக்கு மணம் செய்து கொடுத்து விட்டான். அதனை உணர்ந்த ஏழாமவள் தாய்தந்தையர் அறியாமல் தன் நன்மாமன் மகனோடு உடன்போக்கு நிகழ்த்தினாள். திருமருகலை அடைந்து இருவரும் ஒரு திருமடத்தில் இராத்–தங்கினார்கள். அன்றிரவு அந்தச் செட்டி குமரன் வினைவயத்தால் பாம்பு தீண்டி இறந்து விட்டான். அவள் இறைவனை நோக்கி முறையிட்டுப் புலம்பினாள். சுவாமி தரிசனத்திற்காக வந்த திருஞான சம்பந்தர் சுவாமிகள் திருஉள்ளத்தை இவள் அழுகை ஒலி, அருள்சுரக்கச் செய்தது. சுவாமிகள் திருப்பதிகம் பாடி அவனை எழுப்பினார். தம் திருமுன்பே அவர்களுக்குத் திருமணம் முடிப்பித்தார் என்பது இத்தலத்தைப் பற்றிய சிறந்த நிகழ்ச்சி. இறைவன் மாணிக்கவண்ணர். இறைவி வண்டுவார்குழலி. தலவிருட்சம் வாழை. தீர்த்தம் மாணிக்க தீர்த்தம். இது கோயில் சந்நிதியிலேயே இருக்கிறது. கிழக்கு பார்த்த சந்நிதி. அம்மன் சந்நிதிக்கு எதிரில் விஷந்தீர்த்த பிள்ளையார் கோயில் இருக்கிறது.

**இடம்:**

நன்னிலம் இரயில் நிலையித்திலிருந்து கிழக்கே 7 கி.மீ. தூரமுள்ள திருப்புகலூரை அடைந்து, அங்கிருந்து மட்சாலை வழியாகக் கிழக்கே 5 கி.மீ. சென்றால் இத்தலத்தை அடையலாம்.

**கல்வெட்டு:** அறியக்கூடவில்லை.

## திருச்-செங்காட்டங்-குடி

**திருத்தலவரலாறு:**

திருச்செங்காட்டங்குடி என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம். நாகை மாவட்டம் நன்னிலம் வட்டத்தில் உள்ளது. திருவாரூரிலிருந்து பேருந்து வசதி உள்ளது. விநாயகப் பெருமான் கஜமுகாசுரனைக் கொன்ற காலத்து அவன் உடலினின்றும் பெருகிய இரத்த வெள்ளத்தால் இவ்விடம் முழுவதும் செந்நிறமாயிற்று. ஆதலால் இத்தலம் செங்காடு, செங்காட்டங்குடி எனப் பெயர் பெற்றது. விநாயகப் பெருமான் கயமுகனைக் கொன்ற கறை நீங்கச் சிவலிங்கப் பெருமானைத் ஸ்தாபித்து வழிபட்டார். அதனால் 'கணபதீச்சரம்' எனத் திருக்கோயில் வழங்கப் பெறுவதாயிற்று. இவ்வரலாற்றைக் கந்தபுராணத்தில்,

ஏடவிழி அலங்கல் திண்டோள் இபமுகத் தவுணன்மார்பில்
நீடிய குருதிச் செந்நீர் நீத்தமாய் ஒழுகும் வேலைப்
பாடுற வருங்கான் ஒன்றிற் பரத்தலின் அதுவே செய்ய
காடெனப் பெயர்பெற் றின்னுங் காண்டக இருந்த தம்மா!

மீண்டும்செங் காட்டில் ஓர்சார் மேவிமெய்ஞ் ஞானத்தும்பர்
தாண்டவம் புரியுந் தாதை தன்னுருத் தாபித்தேத்திப்
பூண்டபேர் அன்பிற்பூசை புரிந்தனன் புவியு ளோர்க்குக்
காண்டகும் அனைய தானம் கணபதீச் சரம தென்பர்

என்ற செய்யுட்களால் அறியலாம்.

மிகப் பழமையான திருவாத்தி விருட்சம் ஒன்று, எழுந்தருள் நாயகர் திருமுன்பு இருக்கின்றது. பிராகாரத்தின் கீழ்ப்பக்கத்தில் இத்தலத்து வாழ்ந்த சிறுத்தொண்டர், திருவெண்காட்டு நங்கை, சீராளன், சந்தனத் தாதியர் இவர்கள் திருவுருவங்கள் இருக்கின்றன. சிறுத்தொண்டர், உத்தராபதியினின்றும் வந்த பைரவ வேடம் தாங்கிய பரமனுக்குத் தம்மகன் சீராளனையே கறி சமைத்திட்டு முத்தி அடைந்தனர் என்பது வரலாறு. அப்பர் மூர்த்திகளும் எழுந்தருளிய காலத்து அவர்கள் நட்பைப் பெற்று அவர்கள் பதிகத்துச் சிறப்பிக்கப் பெறும் தகுதியைப் பெற்றவர். சித்திரைப் பூர்ணிமையில் சிறுத் தொண்டர் திருவமுது படைத்த திருவிழா

நடைபெறும். அமுது படையல் என்றே அது வழங்குகிறது. இறைவன் – கணபதீச்சரத்தார்; இறைவி – திருக்குழல் நன்மாது; விருட்சம் – திருவாத்தி; தீர்த்தம் – சூர்யதீர்த்தம், பைரவ கோலத்துடன் உத்திராபதியார் எழுந்தருளி இருக்கிறார்.

**கல்வெட்டு:**

முதலாம் இராஜராஜன் முதலாக ஏழு சோழ அரசர்கள் காலத்தனவும், பராக்கிரம பாண்டியன் காலத்ததும், வீரவிருப்பண்ண உடையார் முதலிய இரு விஜயநகர அரசர்கள் காலத்தனவும் ஆகிய கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றால் அறியப் பெறும் சில உண்மைகள்: இத்தலம் கயாமாணிக்க வளநாட்டு மருகல் நாட்டுத் திருச்செங்காட்டங்குடி என வழங்கப் பெறுகின்றது. முதல் இராஜராஜன் காலத்திய கல்வெட்டு மும்முடிச் சோழ வளநாட்டு மருகல் நாட்டுத் திருச்செங்காட்டங்குடி எனக் காட்டுகிறது. இறைவன் கணபதீச்சரமுடைய நாயனார் கணபதீச்சரமுடைய நாயகர் எனவும், பைரவமூர்த்தி உத்திராபதி நாயகர் எனவும், சீராளர் சீராள தேவர் எனவும், சிறுத்தொண்டர் சிறுத்தொண்ட நம்பி எனவும், விநாயகப் பெருமான் வாதாபி கணபதி எனவும் குறிக்கப் பெறுகின்றனர்.

சித்திரை மாதத் திருவாதிரையில் சீராள தேவர்க்குத் திருவிழா நடந்ததாக முதல் இராஜராஜன் காலத்துக் கல்வெட்டு கூறுகிறது. மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் சிறுத்தொண்டர் மடத்தில் இருந்து சீராளப் பிள்ளையை எழுந்தருள்வித்த செய்தி தெரிகிறது. உத்தராபதி நாயனாருக்குச் சித்திரா பௌர்ணமி அன்று விழா நடந்தமையை மூன்றாம் இராஜராஜன் கல்வெட்டு தெரிவிக்கிறது. ஒவ்வொரு மாதமும் பரணி விசேடமாகக் கொண்டாடப் பெற்றமை மற்றொரு கல்வெட்டு காட்டுகிறது. இந்த விழாவிற்கு விடப்பட்ட நிலம் திருவோட்டுக் கட்டளை என வழங்கப் பெற்றமை அறிந்து இன்புறுக. சித்திரை, ஐப்பசிப் பரணிகள் மிக விசேஷமானவை. ஆதலால் இவ்விழாவைக் கொண்டாட கி. பி. 1245–1267இல் வாழ்ந்த மூன்றாம் இராஜேந்திரன் நிலம் விட்டான். மூன்றாம் இராஜராஜன் ஆட்சி 24ஆம் ஆண்டில் அரசகாரியம் பார்ப்பவனான அரசூர் உடையார் திருச்சிற்றம்பலம் உடையானான திருச்சிற்றம்பலம் உடைய பல்லவராயன்; உத்தராபதியார் சித்திரா பௌர்ணமி விழாவிற்கு எழுந்தருளும்போது திருமுத்துவிதான் நெறியில் உணவளிக்க ஏற்பாடு செய்தமை ஒரு கல்வெட்டால் அறியப்படுகிறது. மற்றும் சீராள தேவர் விழாவிற்கு வேளாளன் உலகஞ் சிறியவனான தாப்பிள்ளை மூவேந்த வேளாளனும் விழாவிற்கு வரும் அடியார்களுக்கு அமுது படிக்காகத் தாயன் சிற்றம்பலம்

உடையானும் நிவந்தம் அளித்தார்கள். விளக்கிற்கும், நிவேதனத்திற்குமாக மற்றும் பலர் வழங்கி இருக்கின்றனர்.

**பதிக வரலாறு:**

திருஞான சம்பந்தப் பெருமான் வணிகனது விடந்தீர்த்து அவனுக்கு மணவாழ்வு வகுத்துத் திருமருகலில் எழுந்தருளி இருந்தார்கள். அப்போது சிறுத்தொண்ட நாயனார் வந்து மீட்டும் தமது ஊருக்கு (திருச்செங்காட்டங்குடி) வரவேண்டும் என விண்ணப்பித்தார். பிள்ளையார் மற்ற தலங்களையும் சென்று வழிபட வேண்டும் என்ற திருவுள்ளக் குறிப்போடு மருகலான் அடியைப் போற்றத் திருக்கோயிலுள் சென்றார்கள். அப்போது மருகற்பெருமான் திருச்செங்காட்டங்குடிக் கணபதீயீச்சரத்தில் உள்ள திருவோலக்கத்தைக் காட்டி அருள இப்பதிகத்தைப் பாடினார்கள். இங்கேயே அக்கோலத்தைக் காட்டி அருளிய உள்ளக் குறிப்பை உணர்த்திச் சிறுத்தொண்டர்க்கு விடை கொடுத்தனுப்பினார்கள். இப்பதிகம் திருமருகற் பெருமானைக் கணபதீயீச்சரங்காமுறக் காரணம் என்ன? என்று வினாவுவதாக அமைந்தமையின் வினாவுரை ஆயிற்று. திருச்செங்காட்டங்குடியில் உள்ள கோயிலின் பெயர் கணபதியீச்சரம்.

## 6. THIRU-MARU-KAL AND THIRU-CH-CHEN-KAATTAN-KUDI

### THIRU-MARU-KAL

**THE HISTORY OF THE PLACE**

The sacred town of Thiru-marukal is the 80th sacred site on the South bank of river Cauvery in the Chola country. It is in the Nannilam taluk of Naagap-pattinam district. One can get here by bus from Nannilam, Naagap-pattinam, Thiruvaaroor or Mayilaaduthurai. Marukal is a type of plantain. It is also called as 'Kalvaazhai', as this is capable of growing on granite floor. The fruit of this tree can only be offered to the Lord, and not for eating by people, according to local legend. If any person eats it, it will cause stomach pain. Since this tree is the Tree of the Sacred Place, the site of the temple came to be called after it. This is one of the seventy temples with narrow entrance and in raised mounds. They were built raised by Kochchengat Chola

Naayanaar. This great temple is said to belong to the class of temples, not approachable for elephants (யானை உள் புக முடியாத திருக்கோவில்கள்).

A merchant of Paandiya country, Thaaman, had promised that he would give in marriage to his nephew one of his seven daughters. However, as each of his daughters reached marriageable age, he gave each one of them in marriage to others. When the seventh daughter noticed this, she eloped with this nephew of Thaaman, without the knowledge of her parents. In her travel, she reached Thirumarukal and stayed for the night in a pilgrim matam. As fate would have it, her chosen groom was bitten by a snake and died during that night. She cried in her anguish addressing the Lord of this temple. Thiru-Gnaana-sambandar, who had by chance arrived there to offer worship to the Lord, was moved by her lamentation and took pity on her. The saint then sang a hymn and raised the dead man to life. He also had their wedding performed in his presence. This is an interesting event relating to this holy site.

The God's name is Maanickavannar and that of the Goddess is Vanduvaarkuzhali. The tree of the Sacred Place is plantain tree. The holy ford is known as Maanicka Theerththam. This is right in front of the shrine. The shrine is east facing. The shrine for Pillaiyaar "who overcame the venom" is right opposite the shrine of the Goddess.

**Place**

This place can be reached first by getting to Thiruppugaloor, which is at a distance of 7 km to the east of the Nannilam railway station, and from there by taking the mud road for a distance of 5 km.

**Stone Inscriptions**

None to our knowledge.

## THIRU-CH-CHEN-KAATTAN-KUDI

### THE HISTORY OF THE PLACE

This sacred town of Thiru-ch-chengaataangudi is on the South bank of river Cauvery in the Chola country. It is in the Nannilam Taluk of Naagapattinam district. One can get there from Thiruvaaroor by bus. At the time, Lord Vinaayaka killed Gajamukaasuran, the blood that flowed from the latter's body turned all the earth red in this entire area. Thus this place came to be named Sengaadu (red field) or Chengaattangudi. To rid Himself of the stain of Gajamukaasuran's blood, Lord Vinaayaka installed Lord Civa in Lingam form and worshipped Him. Thus, this holy temple came to be known as Ganapatheechchuram.

A very old Thiruvaaththi tree is in front of the shrine of Ezhundarul Naayakar. In the eastern praakaara, there are images of Siruththondar, Thiruvenkaattu Nangai, Seeraalan, and Sandana Nangai, who lived in this place. Legend says that Siruththondar attained salvation by cooking his own son Seeraalan's flesh to feed Lord Civa, who claimed to have arrived from Uththiraapadhi in the disguise of Bairavar. This devotee of the Lord was a contemporary of Saint Thiru-Gnaana-sambandar and Saint Appar, and having gained their friendship had the honour of being mentioned in their poems. A festival to commemorate the event of his feeding the Lord is celebrated on the full-moon day of the month of Chiththirai. This festival is called "The Holy Feeding (Amudhu Padaiyal)".

The Lord is called Ganapathee-ch-charaththaar and the Goddess Thirukkuzhal Nanmaadhu. The Tree of the Sacred Place is Thiruvaaththi. The Holy Ford is Sooriya Theerththam. Lord Uththiraapadhiyaar appears here in the form of Bairavar.

### Stone Inscriptions

There are inscriptions of seven Chola kings, starting with Raajaraajan I, Parakkirama Paandiyan, and two Vijayanagara kings, one of whom was

Veeraviruppanna Udaiyaar. The following facts are revealed by those inscriptions. This place is called Thiru-ch-chengaataangudi, of Marukal Naadu in the Kayaamaanicka Valanaadu. The inscriptions by Raajaraajan I shows the name as Thiru-ch-chengaataangudi of Marukal Naadu in Mummudichchola Valanaadu. The Lord is referred to as Ganapatheechcharamudaiya Naayanaar or Ganapathee-ch-charamudaiya Naayar, the Bairavar as Uththiraapathi Naayakar, Seeralan as Seerala Thēvar, Sirththondar as Siruththonda Nambi, and Lord Vinayaka as Vaathaapi Ganapathi. An inscription of Raajaraajan I says that a festival to honour Seeraala Thēvar was celebrated on the Thiruvaadhirai day in the month of Chiththirai. The information is known that during the reign of Kuloththugan III, procession of Seetaalapillai starting from the Siruththondar Matam took place. The inscription by Raajaraajan III reveals that a festival was celebrated for Uththiraapathi Naayanaar. Another inscription shows that the Barani was celebrated in each month in a special way. It may be interesting to note that the land gifted for this purpose, was called "Thiruvottu-kattalai (Endowment of the Begging Bowl)". The Barani days of the months of Chiththirai and Aippasi are special; hence Raajendran (1245-67 CE) had gifted land to celebrate this festival. It is known from another inscription that a royal official of Raajaraajan III, known as Arasoor Udaiyaar Thiru-ch-chitrambalam Udaiya Pallavaraayan, had made arrangements, in the 24th regnal year, to provide food along the Thirumuththuvidhaana Neri (way) in which the procession of Uththiraapadhiyaar took place on the full-moon day of the month of Chiththirai. In addition, Velaalan Ulakam Siriyavanaana Thaapillai Movendha Velaalan and Thaayan Sirrambalamudaiyaan had made endowments, for Seeraala Thevar and for feeding the devotees attending that festival, respectively. Many others had made endowments for lighting lamps and food offerings to the Gods.

## INTRODUCTION TO THE HYMN

**Interrogative Verses**

Our saint, during his sojourn at Marukal, restored the life of a lad belonging to the mercantile clan who died of a snake-bite. He also had the lad married to his closely related beloved who had eloped with him.

St. Siruth-thondar called on our saint and entreated him to visit once again his town (our saint had visited this place and the shrine Thiru-ch-chen-kaattan-kudi twice earlier). Desirous of proceeding to that sacred town, our saint visited the shrine at Marukal to take leave of the Lord before departure. The Lord of Marukal revealed Himself to our saint as the Lord of Ganapathi-eecharam at Chen-kaattan-kudi. It was then the following decad was sung by our saint.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

### 6. திருமருகலும் திருச்செங்காட்டங்குடியும்

### 6. THIRU-MARU-KAL AND THIRU-CH-CHEN-KAATTAN-KUDI

பண் : நட்டபாடை
ராகம் : கம்பீரநாட்டை

*Pann: Natta Paadai*
*Raagam : Kambeera Naattai*

அங்கமும் வேதமு மோதுநாவர் அந்தணர் நாளு மடிபரவ
மங்குன் மதிதவழ் மாடவீதி மருக னிலாவிய மைந்தசொல்லாய்
செங்கய லார்புனற் செல்வமல்கு சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்
கங்குல் விளங்கெரி யேந்தியாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 1

அங்கமும் வேதமும் ஓதும் நாவர் அந்தணர் நாளும் அடி பரவ
மங்குல்மதி தவழ் மாடவீதி மருகல் நிலாவிய மைந்த! சொல்லாய் -
செங்கயல் ஆர் புனல் செல்வம் மல்கு சீர் கொள் செங்காட்டங்குடி அதனுள்
கங்குல் விளங்கு எரி ஏந்தி ஆடும் கணபதியீச்சுரம் காமுறவே?

agkamum vEtamum Otum nAvar antaNar nALum aTi parava,
magkulmati tavaz mATa vIti marukal nilAviya mainta! collAy--
cegkayal Ar pun2al celvam malku cIr koL cegkATTagkuTi atan2uL
kagkul viLagku eri Enti ATum kaNapatiyIccuram kAmuRavE?

**பொருள்:** நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் ஓதும் நாவினராகிய அந்தணர்கள் நாள்தோறும் மருகற்பெருமான் திருவடிகளை வணங்குகின்றார்கள். வான மண்டலத்தில் உள்ள சந்திரன் தவழ்ந்து செல்லுதற்கு இடமாய் உயர்ந்து விளங்கும் மாடவீதிகளை உடையது திருமருகல். அங்கு எழுந்தருளியுள்ள இறைவனே! செங்கயல்கள் நிறைந்த புனல் சூழ்ந்ததும், செல்வ வளம் நிறைந்ததுமான புகழார்ந்த திருச்செங்காட்டங்குடியில் எரியைக் கையில் ஏந்தி நள்ளிருளில் நட்டம் ஆடுதற்கு இடமாய்க் கணபதியீச்சரத்தைக் காமுறுதல் ஏன்? சொல்வாயாக.

**குறிப்புரை:** அங்கம் – வேதத்தின் அங்கங்களாகிய நிருத்தம், சிட்சை, கற்பம், சந்தஸ், வியாகரணம், ஜோதிஷம் என்ற ஆறு. மங்குல்மதி – வானமண்டலத்துச் சந்திரன், அந்தணர் அடிபரவ மருகல் நிலாவிய மைந்த! கணபதியீச்சரம் காமுறவு சொல்லாய் என இயைக்க. கங்குல் – அர்த்தயாமம். எரி – திருக்கரத்தில் உள்ள தீ.

The Anthanars, (*அந்தணர்கள்*) men of Dharmic disposition are engaged daily in reciting the vedaas and the related angam in adoration of Lord Civan who is templed in the town of Thiru-Marukal and offer obeisance to His Holy Feet. In the streets of Marukal tall mansions are many over which the moon sails in the night. Oh! Lord Civa, You are holding the dazzling Fire in Your hand and dancing at dead of night at Ganapathi-eecharam temple situated in the opulent and glorius Chengaattan-kudi town rich in waters where flourish red carp fishes. Pray tell us what indeed has induced You to select the Ganapathi-eecharam Temple for Your dance at dead of night.

**Note:** Ganapathi-eecharam: The shrine at Chenkaattaan-kudi; Marukal: This town named after the temple tree Marukal, a kind of plantain tree. Chenkaattaan-kudi: It was here Lord Ganapathy smote the asura called gajamukha. The Asuraa's blood coloured the town red, which then came to be known as Chen-kaattan-kudi (The place red with blood). Andhanar: Men of great compassion and virtue and high level of erudition and scholarship.

நெய்தவழ் மூவெரி காவலோம்பு நேர்புரி நூன்மறை யாளரேத்த
மைதவழ் மாட மலிந்தவீதி மருக னிலாவிய மைந்தசொல்லாய்
செய்தவ நான்மறை யோர்களேத்துஞ் சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்
கைதவழ் கூரெரி யேந்தியாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 2

நெய் தவழ் மூஎரி காவல் ஓம்பும் நேர் புரிநூல் மறையாளர் ஏத்த,
மை தவழ் மாடம் மலிந்த வீதி மருகல் நிலாவிய மைந்த! சொல்லாய் -
செய் தவ நால்மறையோர்கள் ஏத்தும் சீர் கொள் செங்காட்டங்குடி அதனுள்
கை தவழ் கூர் எரி ஏந்தி ஆடும் கணபதியீச்சரம் காமுறவே?

ney tavaz mU eri kAval Ompum nEr purinUl maRaiyALar Etta,
mai tavaz mATam malinta vIti marukal nilAviya mainta! collAy--
cey tava nAl maRaiyOrkaL Ettum cIr koL cegkATTagkuTi atan2uL
kai tavaz kUr eri Enti ATum kaNapatiyIccuram kAmuRavE?

**பொருள்:** திருமருகலில் வாழும் அந்நணர்கள் முப்புரிநூல் அணிந்த வேத வித்துக்களாய் விளங்குகிறார்கள். அவர்கள் முத்தீ வளர்த்து அதில் அவிப்பொருளாக நெய்விட்டு ஓம்புகிறார்கள். அந்த யாக குண்டத்தில் தவழ்ந்து எரியும் முத்தீயைப் பாதுகாப்பாக ஓம்பி வருகிறார்கள். திருமருகலில் கரிய மேகங்கள் தவழும் மாடங்கள் நிறைந்த வீடுகள் உடைய வீதிகள் பல உள. இத்தனை சிறப்புகள் வாய்ந்த திருமருகலில் எழுந்தருளிய இறைவனே! தவங்கள் பலவும் செய்யும் நான்மறையோர் போற்றும் புகழ் பொருந்திய ஊர் திருச்செங்காட்டங்குடி ஆகும். அங்குள்ள கணபதீயீச்சரக் கோயில் உனது திருக்கரத்தில் மிக்க தீயை ஏந்தி ஆடுதற்கு இடமாய் காமுறக் காரணம் என்ன? சொல்வாயாக.

**குறிப்புரை:** அக்கினி காரியம் செய்யும் அந்தணர்கள் வழிபடும் மருகல் என்றும், தவமுதியோர்களாகிய மறையோர் போற்றும் செங்காட்டங்குடி என்றும் இரண்டினியல்பும் ஒத்தமை உரைக்கப் பெறுகின்றது. மூஎரி – ஆகவனீயம், காருகபத்யம், தக்ஷிணாக்கினி என்ற முத்தீ. அந்தணர்கள் மணக்காலத்து எடுத்த தீயை அவியாதே பாதுகாக்க வேண்டியது மரபாதலின் மூ எரிகாவல் ஓம்பும் மறையாளர் என்றார். நேர் – நேர்மை, புரிநூல் – மூன்று புரியாகத் திரிக்கப் பெற்ற பூணூல். மை – மேகம், கை தவழ் – திருக்கரத்தில் திகழ்கின்ற. கூர் எரி – மிக்க தீ.

Hailed by the righteous who are well-versed in the Vedas the wearers of the sacred thread who foster that triple fire with pure ghee, O Mighty One, You abide at Marukal in whose streets in the mansions over which clouds graze. O Lord You sport in Your hand the blazing fire and dance; Pray tell us; what indeed has impelled You to abide in love at Ganapathi-eecharam, situated in the renowned Chen-kaattan-kudi, hailed by them who are well-versed in the Vedas and who are poised in tapas?

தோலொடு நூலிழை சேர்ந்தமார்பர் தொகுமறை யோர்கள் வளர்த்தசெந்தீ
மால்புகை போய்விம்மு மாடவீதி மருக னிலாவிய மைந்தசொல்லாய்
சேல்புல்கு தண்வயற் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்
கால்புல்கு பைங்கழ லார்க்கவாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 3

தோலொடு நூல்-இழை சேர்ந்த மார்பர், தொகும் மறையோர்கள், வளர்த்த செந்தீ
மால்புகை போய் விம்மு மாட வீதி மருகல் நிலாவிய மைந்த! சொல்லாய் -
சேல் புல்கு தண்வயல் சோலை சூழ்ந்த சீர் கொள் செங்காட்டங்குடி அதனுள்
கால் புல்கு பைங்கழல் ஆர்க்க ஆடும் கணபதியீச்சரம் காமுறவே?

tOloTu nUl--izai cErnta mArpar, tokum maRaiyOrkaL, vaLartta centI
mAlpukai pOy vimmu mATa vIti marukal nilAviya mainta! collAy--
cEl pulku taN vayal cOlai cUznta cIr koL cegkATTagkuTi atan2uL
kAl pulku paig kazal Arkka ATum kaNapati yIccuram kAmuRavE?

**பொருள்:** மான் தோலோடு கூடிய முப்புரி நூல் அணிந்த மார்பினராய்த் திரளாய் நின்று வேதம் பயிலும் அந்தணர்கள் வளர்த்த செந்தீயிலிருந்து எழுந்த கரிய புகை திருமருகலின் ஆகாயத்தில் மிகவும் மிகுதியாக வெளிப்படுகின்றன. அங்கு மாடங்களோடு கூடிய வீதிகள் பல உள. சேல்கள் நிறைந்த குளிர்ந்த வயல்களை அடுத்த சோலைகளால் சூழப்பட்ட சிறப்புமிக்க ஊர் திருச்செங்காட்டங்குடி ஆகும். இவ்விரு ஊர்களிலும் விளங்கும் இறைவனே, உன் திருவடிகளில் கட்டிய கழல்கள் ஆர்க்க ஆடிக் கொண்டு கணபதீயீச்சரத்தைக் காமுறுதற்குக் காரணம் என்ன? சொல்வாயாக.

**குறிப்புரை:** இது, யாகப்புகை விம்முகிற மருகலில் உள்ள தேவனை, குளிர்ந்த வயலும், சோலையும் சூழ்ந்த செங்காட்டங்குடியை விரும்புவதேன் என்று வினாவுகிறது. தோல் – கிருஷ்ணாஜினம் என்னும் மான்தோல். மால் புகை – கரிய புகை. சேல் புல்கு – சேல்மீன்கள் தழுவிய கால் – திருவடி.

O Mighty One! You abide at Marukal in whose streets are mansions where smoke from the ruddy fire of the yagas spirals up and up, fostered by the assembled vedic scholars whose chests are adorned with strands of sacred thread to which are fastened snippets of dear skin, Oh! Lord Civa - You are dancing so perfectly which creates a sweet rythmic tune from Your anklets.

Pray, tell us; what indeed has goaded You to abide in love and dance at Ganapathi-eecharam, situated in the celebrated Chen-kaattan-kudi girt with gardens and cool fields

Note: Cale - Carnatic carp. Yaga - Vedic sacrifice.

நாமரு கேள்வியர் வேள்வியோவா நான்மறை யோர்வழி பாடுசெய்ய
மாமரு வும்மணிக் கோயின்மேய மருக னிலாவிய மைந்தசொல்லாய்
தேமரு பூம்பொழிற் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்
காமரு சீர்மகிழ்ந் தெல்லியாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 4

நா மரு கேள்வியர் வேள்வி ஓவா நால்மறையோர் வழிபாடு செய்ய,
மா மருவும் மணிக் கோயில் மேய மருகல் நிலாவிய மைந்த! சொல்லாய் -
தே மரு பூம்பொழில்-சோலை சூழ்ந்த சீர் கொள் செங்காட்டங்குடி அதனுள்
காமரு சீர் மகிழ்ந்து எல்லி ஆடும் கணபதியீச்சரம் காமுறவே?

nA maru kELviyar vELvi OvA nAl maRaiyOr vazipATu ceyya,
mA maruvum maNik kOyil mEya marukal nilAviya mainta! collAy--
tE maru pUm pozil--cOlai cUznta cIr koL cegkATTagkuTi atan2uL
kAmaru cIr makizntu elli ATum kaNapatiyIccuram kAmuRavE?

**பொருள்:** நாவிற் பொருந்தியவாய்ப் பயிலப்பட்டு வரும் வேதங்களை ஓதி உணர்ந்தவர்களும், வேள்விகளை இடைவிடாமல் செய்து வருபவர்களுமாகிய நான்மறையாளர் வழிபடச், செல்வம் மருவிய மணிக்கோயிலை உடைய மருகலில் விளங்கும் மைந்தனே! தேன் நிறைந்த அழகிய பொழில்களால் சூழப்பெற்ற சிறப்புமிக்க செங்காட்டங்குடியில் விளங்குகின்ற அழகும் பெருமையும் மிக்க கணபதீயீச்சரத்தைக் காமுற்று இராப்போதில் நடனம் ஆடுதற்குக் காரணம் யாது? சொல்வாயாக.

**குறிப்புரை:** இது, அந்தணர் வேள்வி இடையறாத மருகல் நிலாவிய நீ, பொழிலும் சோலையும் சூழ்ந்த செங்காட்டங்குடியைக் காமுறுதல் ஏன் என்கின்றது. நா மரு கேள்வியர் – நாவிற் பொருந்திய வேதங்களை உடையவர். கேள்வி – வேதம் (சுருதி என்பதன் மொழி பெயர்ப்பு) மா – பெருமை, இலக்குமி. காமுறு – அழகிய.

Hailed by scholars well-versed in four vedas who never cease performing yagas with appropriate vedic mantras, O Mighty One, You abide at the great and gem filled shrine at Marukal! Pray, tell us; what indeed has induced you to abide in love and dance in delight during the night at the beauteous and bewitching Ganapathi-eecharam temple situated in the glorious Chen-kaattan-kudi town girt with flowery gardens and groves divine?

**Note:** Cetakam - A flower.

பாடன் முழவும் விழவுமோவாப் பன்மறை யோரவர் தாம்பரவ
மாட நெடுங்கொடி விண்டடவு மருக னிலாவிய மைந்தசொல்லாய்
சேடக மாமலர்ச் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்
காடக மேயிட மாகவாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 5

*பாடல் முழவும் விழவும் ஓவாப் பல்மறையோர் அவர்தாம் பரவ,*
*மாட நெடுங்கொடி விண் தடவு மருகல் நிலாவிய மைந்த! சொல்லாய் -*
*சேடகம் மா மலர்ச்சோலை சூழ்ந்த சீர் கொள் செங்காட்டங்குடி அதனுள்*
*காடு அகமே இடம்ஆக ஆடும் கணபதியீச்சரம் காமுறவே?*

pATal muzavum vizavum OvAp pal maRaiyOr avartAm parava,
mATa neTugkoTi viN taTavu marukal nilAviya mainta! collAy--
cETakam mA malarc cOlai cUznta cIr koL cegkATTagkuTi atan2uL
kATu akamE iTam Aka ATum kaNapatiyIccuram kAmuRavE?

**பொருள்:** பாடலும், அதற்கிசைந்த முழவு ஒலியும், திருவிழாக்கள் ஒலியும் இடைவிடாமல் நிகழ்வதும் மாடவீடுகளில் கட்டிய கொடிகள் வானைத் தடவுவதும் ஆகிய சிறப்புக்களை உடைய திருமருகலில் வேதங்கள் பலவும் கற்ற அந்தணாளர் பரவ எழுந்தருளிய இறைவனே! உயரமான மணம் மிக்க மலர்ச் சோலைகளால் சூழப்பெற்ற சிறப்புமிக்க செங்காட்டங்குடியில், காட்டிடமே நாடகம் ஆடுதற்கு இடமாக இருக்கவும், நீ நடனம் புரியம் இடமாகக் கணபதியீச்சரத்தைக் காமுறக் காரணம் என்ன? சொல்வாயாக.

**குறிப்புரை:** இது விழவறாத மாடங்களோடுகூடிய மருகலில் உள்ள நீ, காடகமேயிடமாக ஆடும் கணபதீயீச்சரம் காமுறல் ஏன் என்கிறது. பாடலும், முழவும், விழாவும் இடையறாத மருகல் எனவும், மறையோர் பரவ நிலாவிய மைந்த எனவும், கொடி தடவு மருகல் எனவும் இயைத்துப் பொருள் காண்க. சேடகம் – கேடகம் போலும் வட்டமாகிய மலர். ஆடும் – ஆடுதற்கிடமாகிய.

Hailed by vast numbers of scholars, You abide at Marukal where flags fastened to the tall poles in mansions, brush the heavens. At Marukal abound song and beat of drums and festivities. O Lord You are dancing in the temple (*கணபதீச்சரம்*), while there is a specific forest place for dancing in. Pray, tell us; what indeed has induced You to abide in love and dance at the Ganapathi-eecharam temple situated in the glorious Chen-kaattan-kudi town, girt with groves rich in large 'cetaka' flowers?

புனையழ லோம்புகை யந்தணாளர் பொன்னடி நாடொறும் போற்றிசைப்ப
மனைகெழு மாட மலிந்தவீதி மருக னிலாவிய மைந்தசொல்லாய்
சினைகெழு தண்வயற் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்
கனைவளர் கூரெரி யேந்தியாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 6

புனை அழல் ஓம்பு கை அந்தணாளர் பொன் அடி நாள்தொறும் போற்று இசைப்ப,
மனை கெழு மாடம் மலிந்த வீதி மருகல் நிலாவிய மைந்த! சொல்லாய் -
சினை கெழு தண்வயல், சோலை, சூழ்ந்த சீர் கொள் செங்காட்டங்குடி அதனுள்
கனை வளர் கூர் எரி ஏந்தி ஆடும் கணபதியீச்சரம் காமுறவே?

pun2ai azal Ompu kai antaNALar pon2 aTi nALtoRum pORRu icaippa,
man2ai kezu mATam malinta vIti marukal nilAviya mainta! collAy--
cin2ai kezu taN vayal, cOlai, cUznta cIr koL cegkATTagkuTi atan2uL
kan2ai vaLar kUr eri Enti ATum kaNapatiyIccuram kAmuRavE?

**பொருள்:** கிரியைகள் பலவற்றாலும் அழகு செய்யப் பெற்ற முத்தீயை வளர்க்கும் கைகளை உடைய அந்தணர்கள், நாள்தோறும் உன் திருவடிகளைப் போற்றி வருகின்றனர். இல்லங்களில் விளங்கும் மாடங்கள் நிறைந்த வீதிகளை உடையது திருமருகல். அங்கு விளங்கும் இறைவனே! நெற்பயிர்கள் திளைத்து வளரும் தண் வயல்களை அடுத்த சோலைகளால் சூழப்பெற்ற நீர்வளம் மிக்க செங்காட்டங்குடி. அங்குள்ள கணபதீச்சரத்தைக் காமுற்று நீ எரியேந்தி நடனம் புரியக் காரணம் என்ன? சொல்வாயாக.

**குறிப்புரை:** இது அழலோம்பும் அந்தணர்கள் வணங்க மருகலில் எழுந்தருளி உள்ள மைந்தனே! கணபதீச்சரம் காமுறல் ஏன் என்கின்றது. புனையழல் – சாதகன்மம் முதலான பதினாறு கிரியைகளாலும் அழகு செய்யப்பெற்ற யாகாக்கினி. பொன்னடி – பொன்போல அனைவராலும் போற்றப் பெறுகின்ற திருவடி. இயற்கையே ஒளிபெற்று என்றும் மங்காத பொன்னைப் போல, இயற்கையே பாசம் இன்றி அடைந்தாரையும் பாசங்களினின்றும் நீக்குகின்ற திருவருள், கல்லெறிய விலகும் பாசி போல ஒருநாள் ஒருகால் போற்ற, சிவஞானம் சித்திக்கும்; அந்தணர்கள் நாடோறும் போற்றிசைப்பதால் நிலைத்த ஞானத்தை எய்துகின்றனர் என்பதாம். உடன்பிறந்தே கொல்லும் பகையாய், தன்னையும் காட்டாது தலைவனையும் காட்டாது நிற்கின்ற மூலமலப் பகையை வெல்லும் வீரனாதலின் மைந்த என்றார். மைந்து – வலிமை. சினை – கிளை; முளையுமாம். கனை – மிகுதி, ஓசையுமாம்.

Dharmic scholars who foster the ritualistic sacrificial fire, daily hymn and hail Your golden Feet. Thus O Almighty, You abide at Marukal, the streets of which are filled with houses and commodious mansions. Pray, tell us; what indeed has impelled You to abide in love holding in Your hand the fierce and crackling fire and dance at

Ganapathi-eecharam temple situated in the celebrated Chen-kaattan-kudi town, girt with glorious and cool fields of sprouting crops?

* * * * * * 7

பூண்டங்கு மார்பி னிலங்கைவேந்தன் பொன்னெடுந் தோள்வரை யாலடர்த்து
மாண்டங்கு நூன்மறை யோர்பரவ மருக னிலாவிய மைந்தசொல்லாய்
சேண்டங்கு மாமலர்ச் சோலைசூழ்ந்த சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்
காண்டங்கு தோள்பெயர்த் தெல்லியாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 8

பூண் தங்கு மார்பின் இலங்கை வேந்தன் பொன் நெடுந்தோள்வரையால் அடர்த்து,
மாண் தங்கு நூல் மறையோர், பரவ மருகல் நிலாவிய மைந்த! சொல்லாய் -
சேண் தங்கு மா மலர்ச்சோலை சூழ்ந்த சீர் கொள் செங்காட்டங்குடி அதனுள்
காண் தங்கு தோள் பெயர்த்து எல்லி ஆடும் கணபதியீச்சரம் காமுறவே?

pUN tagku mArpin2 ilagkai vEntan2 pon2 neTuntOL varaiyAl aTarttu,
mAN tagku nUl maRaiyOr parava, marukal nilAviya mainta! collAy--
cEN tagku mA malarc cOlai cUznta cIr koL cegkATTagkuTi atan2uL
kAN tagku tOL peyarttu elli ATum kaNapatiyIccuram kAmuRavE?

**பொருள்:** இலங்கை மன்னன் இராவணன் அழகிய பெரிய தோள்களை உடையவன். அவன் மார்பில் அணிகலன்கள் பல அணிந்துள்ளான். அவன் சிவன் வீற்றிருக்கும் கயிலை மலையைத் தூக்கி நகர்த்தி வைக்க முற்பட்டான். சிவன் தன் கால் கட்டை விரலால் சிறிது அழுத்தினான். இராவணன் மலையால் நசுக்கப்பட்டு அலறி மன்னிப்புக் கோரி சாம கீதம் பாடினான். மாட்சிமை பொருந்திய நான்மறையோர்கள் பரவி வணங்கப்படும் சிவபெருமான் திருமருகலில் எழுந்தருளியிருக்கின்றான். அங்கு விளங்கும் இறைவனே! வானளாவிய மணமலர்ச் சோலைகளால் சூழப்பெற்ற சீர்மிக்க செங்காட்டங்குடியில் அழகிய உன் திருத்தோள்களை அசைத்து இரவில் நடமிடுதற்கு இடனாய்க் கணபதீயீச்சரத்தைக் காமுறக் காரணம் யாதோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** பூண் – மதாணி முதலிய மார்பணிகள், மாண் தங்கு – மாட்சிமை தங்கிய. சேண் – ஆகாயம், காண் தங்கு – அழகு தங்கப் பெற்ற. எல்லி – இரவு.

Seated on Mount Kailas, You crushed the big and beautiful shoulders of the King of Sri Lanka, the one adorned with jewels galore in His chest. Hailed by scholars well versed in the sacred scriptures, You, O Almighty abide at Marukal; You dance at night flexing Your beauteous arms. Pray, tell us; what indeed has induced You to abide in

love and dance at Ganapathi-eecharam temple, situated in the famed Chen-kaattan-kudi town girt with flowery and sky-vaulting gardens?

அந்தமு மாதியுந் நான்முகனு மரவணை யானு மறிவரிய
மந்திர வேதங்க ளோதுநாவர் மருக னிலாவிய மைந்தசொல்லாய்
செந்தமி ழோர்கள் பரவியேத்துஞ் சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்
கந்தம கிற்புகை யேகமழுங்கணபதி யீச்சரங் காமுறவே. 9

அந்தமும் ஆதியும், நான்முகனும் அரவு அணையானும், அறிவு அரிய,
மந்திரவேதங்கள் ஓதும் நாவர் மருகல் நிலாவிய மைந்த! சொல்லாய் -
செந்தமிழோர்கள் பரவி ஏத்தும் சீர் கொள் செங்காட்டங்குடி அதனுள்
கந்தம் அகில்புகையே கமழும் கணபதியீச்சரம் காமுறவே?

antamum Atiyum, nAn2mukan2um aravu aNaiyAn2um, aRivu ariya,
mantiravEtagkaL Otum nAvar marukal nilAviya mainta! collAy--
centamizOrkaL paravi Ettum cIr koL cegkATTagkuTi atan2uL
kantam akil pukaiyE kamazum kaNapatiyIccuram kAmuRavE?

**பொருள்:** நான்முகனும் அரவணையானும் ஆதியாய முடியையும் அந்தமாகிய அடியையும் அறிதற்கு அரியவனான சிவனே, மந்திர வடிவான வேதங்களை ஓதும் நாவினரான அந்தணர் பரவி ஏத்தத் திருமருகலில் விளங்கும் இறைவனே! செந்தமிழ் வல்லோர் பரவித் துதிக்கும் சிறப்புமிக்க செங்காட்டங்குடியில் அகில் புகை, மணமே கமழும் கணபதீயீச்சரத்தைக் காமுறக் காரணம் யாதோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** அந்தம் அரவணையானும் ஆதி நான்முகனும் அறிவரிய என எதிர்நிரனிறை. அந்தம் ஆதி – அடிமுடி. மந்திர வேதங்கள் – மந்திர வடிவாகிய வேதங்கள், அவை இருக்கு, யஜுர், சாமம். வேதங்களில் இருக்கு மந்திரங்களும், யஜுர் பிரயோகங்களும், சாமம் கானங்களுமாக அமைந்தன. வேதம் ஓதும் அந்தணர்கள் விளங்கும் மருகலில் இருக்கும் இறைவன், செந்தமிழ் நூலோர் பரவியேத்தும் செங்காட்டங்குடியை விரும்பியதில் நயமிருத்தல் ஓர்க. கந்தமே கமழும் என மாற்றுக.

Vishnu could not find Your Feet, so too Bramha Your Crown. You, O Almighty, who abide at Marukal where dwell those that recite the vedas and chant their mantras! Pray, tell us; what indeed impelled You to abide in love and dance at Ganapathi-eecharam temple - ever pervaded, by the smoke of eaglewood and incense - situated in the renowned Chen-kaattan-kudi town hailed and adored by the scholars of chaste Tamil?

இலைமரு தேயழ காகநாளு மிடுதுவர்க் காயொடு சுக்குத்தின்னும்
நிலையமண் டேரரை நீங்கிநின்று நீதரல் லார்தொழு மாமருகல்
மலைமக டோள்புணர் வாயருளாய் மாசில்செங் காட்டங் குடியதனுள்
கலைமல்கு தோலுடுத் தெல்லியாடுங் கணபதி யீச்சரங் காமுறவே. 10

இலை மருதே அழகு ஆக நாளும் இடு துவர்க்காயொடு சுக்குத் தின்னும்
நிலை அமண் தேரரை நீங்கி நின்று, நீதர் அல்லார் தொழும் மா மருகல்,
மலைமகள் தோள் புணர்வாய்! அருளாய்-மாசு இல் செங்காட்டங்குடி அதனுள்
கலை மல்கு தோல் உடுத்து எல்லி ஆடும் கணபதியீச்சரம் காமுறவே?

ilai marutE azaku Aka nALum iTu tuvarkkAyoTu cukkut tin2n2um
nilai amaN tErarai nIgki nin2Ru, nItar allAr tozum mA marukal,
malaimakaL tOL puNarvAy! aruLAy--mAcu il cegkATTagkuTi atan2uL
kalai malku tOl uTuttu elli ATum kaNapatiyIccuram kAmuRavE?

**பொருள்:** மருத மரத்து இலையின் சாற்றினால் சாயம் பூசிக்கொண்டு, கடுக்காய், சுக்கு இவற்றைத் தின்னும் புத்தர், சமணர் ஆகியோரை விடுத்து, சைவர்கள் தொழத் திருமருகலில் மலைமகளோடு உறையும் மைந்தனே! குற்றமற்ற செங்காட்டங்குடியில் மான் தோலை உடுத்தி நள்ளிருளில் ஆடுதற்கு இடனாய்க் கணபதியீச்சரத்தைக் காமுறுதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** மருது இலை – மருத மரத்தின் இலை. துவர்க்காய் – கடுக்காய், தேரர் – சாக்கியர், நீதர் – இழிந்தோர், நீசர் என்பதன் போலி. கலைமல்கு தோல் – மான் தோலாடை, எல்லி – இரவு. கடுக்காயும் சுக்கும் தின்னுதல் சமணத் துறவியர் இயல்பு போலும். நீதரல்லார் தேரரை நீங்கி நின்று தொழும் மாமருகல் எனக் கூட்டுக.

The robes of the Buddhist monks are dyed with the essence of marutham leaves. The samanars eat daily Kadukkaai (*Chebulic myrobalam*) and dried ginger. Thou, worshipped by those who shun the depraved Jains and Buddhists. Thou abideth at Thiru Marukal, along with the daughter of the Mountain King. Clad in deer skin, O Lord, You are dancing during night at Ganapathi-eecharam temple situated in the flawless Chen-kaattan-kudi town. Pray, tell us; what has induced You to select the above temple to dance?

**Note:** Marutham - A flowering hard big tree. Kadukkaai - Also known as inknut. The botanical name is Terminalia chebula Retz. It has 51 names in all the Indian languages. A very highly effective fruit for good health. The highest edible astringent.

நாலுங் குலைக்கமு கோங்குகாழி ஞானசம் பந்த னலந்திகழும்
மாலின் மதிதவழ் மாடமோங்கு மருகலின் மற்றதன் மேன்மொழிந்த
சேலும் கயலும் திளைத்தகண்ணார் சீர்கொள்செங் காட்டங் குடியதனுள்
சூலம்வல் லான்கழ லேத்துபாடல் சொல்லவல் லார்வினை யில்லையாமே. 11

நாலும் குலைக் கமுகு ஓங்கு காழி ஞானசம்பந்தன், நலம் திகழும்
மாலின் மதி தவழ் மாடம் ஓங்கு மருகலில் மற்று அதன்மேல் மொழிந்த,
சேலும் கயலும் திளைத்த கண்ணார் சீர் கொள் செங்காட்டங்குடி அதனுள்
சூலம் வல்லான் கழல் ஏத்து, பாடல் சொல்ல வல்லார் வினை இல்லைஆமே.

nAlum kulaik kamuku Ogku kAzi njAn2acampantan2, nalam tikazum
mAlin2 mati tavaz mATam Ogku marukalil maRRu atan2mEl mozinta,
cElum kayalum tiLaitta kaNNAr cIr koL cegkATTagkuTi atan2uL
cUlam vallAn2 kazal Ettu, pATal colla vallAr vin2ai illai AmE.

**பொருள்:** தொங்குகின்ற குலைகளோடு பாக்கு மரங்கள் ஓங்கி வளரும் சீகாழிப் பதியினனாய ஞானசம்பந்தன், நலம் திகழ்வதும், மேகமும் பிறையும் தவழும் மாடங்கள் ஓங்கியதுமான திருமருகல் இறைவனையும், சேல் கயல் ஆகிய மீன் வகைகளை ஒத்த கண்களை உடைய மகளிர் வாழ்வதும் சிறப்பு மிக்கதும் ஆகிய செங்காட்டங்குடியில் முத்தலைச் சூலம் ஏந்தியவனாய் விளங்கும் பெருமானையும் புகழ்ந்து ஏத்திய பாடல்களைச் சொல்லித் துதிக்க வல்லார் வினைகள் இல்லையாகும்.

**குறிப்புரை:** நாலும் – தொங்குகின்ற. மாலின் மதி தவழ் மாடம் – மேகத்தோடு பிறையும் தவழ்கின்ற மாடங்கள். திளைத்த – ஒத்த. சூலம் ஞானப்படையாய் மலமாயா கன்மங்களைப் போக்குவதாகலின், சூலம் வல்லான் கழல் ஏத்து பாடல் வல்லார் வினை இல்லையெனக் காரணம் குறிப்பித்தருளினார்கள்.

Gnaana-Sambandhan of Kaazhi where abound tall araca trees in which clusters of flowers and fruits are hanging. He has sung these weal-conferring hymns, hailing the Lord of Marukal. Over the lofty mansions of this place the moon and clouds sail. The Lord of this glorious Chen-kaattan-kudi wields a trident in His hand. Here live damsels whose eyes are as beautiful as those of cale and kayal fish. The Karma of those who recite these verses in devotion and with sincerity will cease to be.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*6ஆம் பதிகம் முற்றிற்று*
End of 6th Hymn

உ
சிவமயம்

# 7. திரு நள்ளாறும் திரு ஆலவாயும்

## திரு-ஆலவாய் (மதுரை)

### திருத்தலவரலாறு:

திரு ஆலவாய் (மதுரை) என்ற திருத்தலத்திற்குத் தமிழகத்தின் அனைத்துப் பெருநகர்களில் இருந்தும் இரயில், பேருந்துகளில் செல்லலாம். இத்தலத்திற்கு மதுரை, நான்மாடக் கூடல், திருஆலவாய், கடம்பவனம், துவாதசாந்தபுரம், பூலோகக் கயிலாயம், சிவராஜதானி, கன்னிபுரீசம், ஜீவன்முத்திபுரம், சிவநகரம் எனப் பல பெயர்கள் தலபுராண நூல்களிற் கூறப் பெற்று உள்ளன. இது பாண்டிய நாட்டின் தலைநகரம். கடைச் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்த தலைநகர். சொக்கலிங்கப் பெருமான் 64 திருவிளையாடல்களை இயற்றிய தனி நகரம். மூர்த்தி நாயனார் விபூதி, உருத்திராக்கம், சடைமுடி என்ற மூன்றனையும் துணைக் கொண்டு மும்மையால் உலகாண்ட தலைநகரம். சைவங்காத்த திருஞானச் செம்மலும், மங்கையர்க்கரசியாரும், குலச்சிறையாரும், நெடுமாறநாயனாரும் எழுந்தருளிய இடம். இந்திரன், வருணன், முருகன், விநாயகர் முதலிய தேவர்கள் வழிபட்டுப் பேரின்பம் எய்திய தலம். மணிவாசகப் பெருந்தகை மந்திரியாக இருந்து, திருவாசகத் தேனை வடித்தெடுத்த திருப்பதி. தருமை ஆதீன முதற்பெருங் குரவர் குருஞான சம்பந்த சுவாமிகள் சொக்க லிங்கப் பெருமானைப் பெற்ற இடம். இவர் திருவுருவம் சொக்கநாதர் சந்நிதிக் கோபுர வாயில் குடவறையில் உள்ளது.

திருநெல்வேலி மாவட்டத்தில் திருநெல்வேலிக்கும் திருச்செந்தூருக்கும் உள்ள நெடுஞ்சாலையில் திருவைகுண்டம் என்ற ஊர் பொருநை (தாமிரவருணி) நதிக்கரையில் உள்ளது. அந்த ஊரின்கண் கைலாசபுரம் என்று ஒரு பகுதி உள்ளது. அங்கு பரம்பரையாகத் தமிழ்ப்புலமையும், முருகக்கடவுளது பக்தியும் வாய்ந்த சைவ வேளாளர் குலத்தில் சண்முகசிகாமணிக் கவிராயர் என்ற ஒருவர் தம் மனைவியாரான சிவகாமசுந்தரி அம்மையாரோடு வாழ்ந்து வந்தார். அவ்விருவருக்கும் அருமகவாக ஒரு ஆண் குழந்தை உதித்தது (1625–1688; 24–06–1625இல் பிறந்தார் என்றும் 8–05–1688இல் முத்தி பெற்றார் என்றும் காசிமடத்தார் கணித்துக் கடைப்பிடித்து வருகின்றனர்). ஐந்து வயது வரை அக்குழந்தை பேசாமல் இருந்ததை அறிந்த பெற்றோர்கள் உளம் நொந்து திருச்செந்தூர் முருகப் பெருமானிடம் குழந்தையைக் கொண்டு விட்டு பாடு கிடந்தனர். முருகப் பெருமான் பேரருளினாலே அருமைப் புதல்வர்க்கு ஆறுமுகச்

செவ்வேளின் அருட்திரு வடிவம் அவர் உள்ளக் கண்ணிற்குப் புலனாயிற்று. அவ்வடிவத்தையே நினைந்து தொழுதிருக்கும் நாளில் ஒரு நாள் குமரவேள் அடிகட்குத் தோன்றி "நீ யார்?" என்று வினவி அருளியவுடன் அக்குழந்தை வாய்திறந்து 'அடியேன்' என்றது. முருகப் பெருமான் அவர்க்குச் சைவ சித்தாந்த உணர்ச்சி நல்கி 'குருபரன்' என்ற திருப்பெயருமிட்டு மறைந்தருளினார். ணஅவரது வாக்கிற்கு எங்கு தடை ஏற்படுகின்றதோ அங்கு பரஞானம் கிட்டுமென்றும் அறிவுறுத்தப் பெற்றார். அத்தருணத்தில் அடிகள் முருகப் பெருமான்மீது கந்தர் கலிவெண்பா என்ற பொருள் வளமும், சாத்திரக் கருத்துக்களும் கொண்ட பாமாலை சாத்தி வழிபட்டார். இறையருள் கிடைத்து விட்டால் அறிவின் துணைக் கொண்டு பெறவேண்டியது அனைத்தும் தாமே வந்துவிடும் என்பதைச் சேக்கிழார் பெருமான் திருஞானசம்பந்தர் புராணத்தில் அற்புதமாக எடுத்துக் காட்டியுள்ளார்.

"உவமையிலாக் கலைஞானம் உணர்வறிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தாம் உணர்ந்தார் அந்நிலையில்" – பெரியபுராணம்

அன்று முதல் பெற்றோர்கள் அக்குழந்தையை 'குமர குருபரன்' என்று அழைக்கலாயினர். அதிலிருந்து அடிகள் தூய தவ வேடத்துடன் துறவு வாழ்க்கை நடத்துவாராயினர்.

குமரகுருபரர் தல யாத்திரை மேற்கொண்டு பல தலங்களையும் தரிசித்து மதுரை வந்து ஆலவாய்ப் பெருமானையும், அங்கயற்கண்ணியையும் தொழுது வணங்கி, மீனாட்சி அம்பாள் மீது பிள்ளைத் தமிழ் பாடி அருளினார்கள். அதுகாலை மதுரையில் திருமலை நாயக்கர் என்பவர் அரசு வீற்றிருந்தார். திருமலை நாயக்கர் கனவிலே மீனாட்சி அம்மை தோன்றி 'என் புதல்வன் திருவருள் பெற்றுப் பாடிய செந்தமிழ்ச் சிறுநூலை நான் கேட்க விரும்புகின்றேன். ஆவன செய்வாயாக' என்று சொல்லி மறைந்தாள். அரசன் அதிகாலை எழுந்து அமைச்சர் முதலியோரை அழைத்து, தான் கனவில் கண்டதைக் கூறி அப்பெரியவர் யார் என்று வினவ, அதற்கு அவர்கள் குமரகுருபர அடிகளைப் பற்றி எல்லா விபரங்களையும் தெரிவித்தனர். அரசன் அவரை அணுகி வணங்கி, தான் கண்ட கனவையுங்கூறி, தானும் அச்சிறு காப்பியத்தைக் கேட்க விரும்புவதாகத் தெரிவித்தான். அடிகள் 'அவ்வாறே ஆகுக' என்று பணித்துத் திருநீறு அளித்தார். நாயக்கர் அதனை ஏற்று அணிந்து நன்னாள் ஒன்று குறித்து, அந்நாளிலே அரங்கேற்றந் தொடங்குவித்தார். அடிகள் அங்கயற்கண் நாயகியை வணங்கி அரசன், அமைச்சர்கள் முதலிய யாவருங்கூடிய பேரவையில் அனைவரும் பெருமகிழ்வெய்தும் வண்ணம் பிள்ளைத் தமிழினை தமது பெருஞ்சொல்லால் விளக்கிக் கொண்டு இருந்தார். ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு பருவமாகப் படித்து வரும் பொழுது, ஒருநாள் வருகைப் பருவம் படித்துக் கொண்டிருந்தார். அச்சமயம் அங்கயற்கண்ணி அம்மை ஒரு

குழந்தை வடிவம் கொண்டு திருமலை நாயக்க மன்னன் மடிமீது வீற்றிருந்தாள். அவ்வருகைப்பருவத்தில் "தொடுக்குங் கடவுட் பழம்பாடல் தொடையின் பயனே" என்ற திருப்பாடலைப் பாடியபொழுது திருமலை நாயக்கர் மடியிலிருந்த குழந்தை எழுந்து முத்துமாலை ஒன்றை அடிகள் கழுத்திலிட்டு மறைந்தருளினாள். ஆலவாயில் இறைவன் இது போன்று நேரடியாகவும் சிவனடியார்கள் மூலமாகவும் செய்த அருட்செயல்கள் பலப்பல.

பாண்டிமாதேவி மங்கையர்க்கரசியார் தன் நாட்டில் சமணம் ஓங்கி வளருவதைக் கண்டு மனம் வருந்தி வாடுகிறார். சைவம் தழைக்க வேண்டி ஆலவாய்ப் பெருமானை உள்ளம் உருகித் தினமும் பிரார்த்தித்து வருகிறார். அதுசமயம், திருஞானசம்பந்தப் பெருமான் திருமறைக்காட்டில் எழுந்தருளி இருப்பதைக் கேள்வியுற்று, அவரை மதுரைக்கு அழைத்து வர ஏற்பாடுகள் செய்து வரவழைத்தார். திருஞான சம்பந்தர் அடியார்களுடன் மதுரைக்கு எழுந்தருளி ஒரு மடத்தில் தங்கினார். சமணர்கள் இதைக் கேள்வியுற்று, மனம் புழுங்கி திருஞான சம்பந்தர் தங்கியிருந்த மடத்திற்குத் தீ வைத்தனர். தீயானது மடத்தில் இருந்தவர்களைப் பாதிக்காமல் ஒரு பகுதி தீப்பற்றி எரிந்தது. இதனை அறிந்த திருஞான சம்பந்தர், 'இத்தீ அரசன் முறை செய்யாமையால் நேர்ந்ததாகும்; ஆதலால், இத்தீ அவனைச் சென்று பற்றுதலே முறையாயினும், மங்கையர்க்கரசியாரின் மங்கல நாணுக்கு ஊறு நேராதவாறு பையச்சென்று பாண்டியனைப் பற்றுவதாகுக' என்று கூறி,

"செய்யனே திருஆலவாய் மேவிய
ஐயனே அஞ்சல் என்று அருள் செய் எனப்
பொய்யராம் அமணர் கொழுவுஞ் சுடர்
பையவே சென்று பாண்டியற்கு ஆகவே"

இப்பதிகம் பாடினார். பாண்டி மன்னன் வெப்பு நோயால் வாடினான். சமண முனிவர்கள் அரசனைக் குணப்படுத்த எவ்வளவோ முயன்றும் அரசன் நோய் தீரவில்லை.

சமணர்களால் குணப்படுத்த முடியாத கூன்பாண்டியனது வெப்பு நோயை திருஞான சம்பந்தப் பெருமான் ஆலவாய் அரன் திருவடிகளைத் தொழுது கீழ்க்கண்ட பதிகத்தைப் பாடி குணப்படுத்தினார்.

"மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு
சுந்தரமாவது நீறு துதிக்கப்படுவது நீறு
தந்திரமாவது நீறு சமயத்தில் உள்ளது நீறு
செந்துவர் வாய் உமை பங்கன் திருஆலவாயான் திருநீறே"

சமண முனிவர்கள் தங்களால் குணப்படுத்த முடியாத வெப்பு நோயை திருஞான சம்பந்தப் பெருமான் குணப்படுத்தி விட்டாரே என்று மனம் புழுங்கினர். இருப்பினும், தருக்க வாதம் புரிவதை

விடுத்துத் தீயிலும் நீரிலும் திருஞான சம்பந்தரை வெல்லலாம் என்று எண்ணி சவால் விடுத்தனர். பிள்ளையாரும் இசைந்தார். சமணர்கள் தங்கள் நூற்பொருள் எழுதப்பெற்ற ஏட்டினைத் தீயில் இட்டனர். அது எரிந்து சாம்பலாயிற்று. திருஞான சம்பந்தர் தாம் அருளிய திருப்பதிகச் சுவடியைக் கொணரச் செய்து, வழிபட்டு, அதில் கயிறு சாத்திப் பார்த்தனர்.

"போகமார்த்த பூண்முலையாள் தன்னோடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண் வெள்ளேற்றண்ணல் பரமேட்டி
ஆகமார்த்த தோலுடையன் கோவண ஆடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே"

என்ற திருநள்ளாற்றுப் பதிகம் உதயமாயிற்று. அந்த ஏட்டினை நள்ளாற்று இறைவனைப் போற்றி அவ்வேடு அனலிடை வேகாதிருக்க வேண்டி 'தளிரிள வளரொளி' என்றதொரு திருப்பதிகம் பாடி எடுத்த ஏட்டைத் தீயில் இட்டார். அவ்வேடு, தீயில் எரியாது முன்னையினும் பச்சென்றிருந்தது. ஆதலால், அப்பதிகம் பச்சைப் பதிகம் என்று போற்றப் பெறுவதாயிற்று.

சமணர்கள் ஓர் வாதினை மும்முறை செய்து முறை காணுதலே முறையாகும் எனக் கூறிப் புனல் வாதம் செய்ய அழைத்தனர். சமணர்கள் தங்கள் சமய உண்மையாகக் கூறும் 'அஸ்தி நாஸ்தி' என்ற வசனத்தை எழுதி வைகை ஆற்றில் இட்டனர். அந்த ஏடு ஆற்று நீரோட்டத்தை எதிர்க்கும் ஆற்றல் இன்றி நீரோடும் நெறியிலேயே விரைந்து ஓடிற்று.

திருஞான சம்பந்தர், 'திருப்பாசுரம்' எனப்படும்

"வாழ்க அந்தணர் வானவர் ஆனினம்
வீழ்க தண்புனல் வேந்தனும் ஓங்குக
ஆழ்க தீயதெல்லாம் அரன் நாமமே
சூழ்க வையகமும் துயர் தீர்கவே"

என்ற திருப்பதிகத்தை அருளிச் செய்து அதனை ஏட்டில் எழுதச் செய்து அந்த ஏட்டை வைகை ஆற்றில் இட்டு அருளினார். ஏடு வைகை ஆற்று வெள்ளத்தைக் கிழித்து எதிர் ஏறிச் சென்றது. 'வேந்தனும் ஓங்குக' என்று அருளிச் செய்தமையால் பாண்டிய மன்னனின் கூன் நிமிர்ந்து நின்றசீர் நெடுமாறன் ஆயினான். மந்திரி குலச்சிறையார் குதிரையின்மீது ஏறி ஏட்டினைத் தொடர்ந்து சென்றார். ஏடு வைகையின் வடகரையில் அமைந்த ஒரு கோவிலின் அருகே சென்று நின்றது. ஏடு நின்ற கோயில் திருவேடகம் எனப் பெயர் பெற்றது. குலச்சிறையார் அதனை எடுத்து திருஞான சம்பந்தரிடம் சேர்ப்பித்தார்.

இவ்வாறு பற்பல அற்புதங்கள் நடந்த இடம் திருஆலவாய் என்னும் திருக்கோவிலை உள்ளடக்கிய மதுரையம்பதி ஆகும். திருஞான சம்பந்தப் பெருமான் 'கூடலாலவாய்க் கோனை' எனக் குறிப்பிடுவதால் கூடல் மதுரை என்பன தலப்பெயராகவும் ஆலவாய் என்பது கோயிற்

பெயராகவும் இருக்கலாமோ என ஐயுற இடமுண்டு. இறைவன் சொக்கலிங்க மூர்த்தி, அம்மை மீனாட்சியம்மை. தலவிநாயகர் சித்திவிநாயகர். தலவிருட்சம் கடம்ப மரம். தீர்த்தம் பொற்றாமரை. எழுகடல், வைகை முதலியன. விமானம் விண்ணிழி விமானமாகிய இந்திர விமானம். இதனை இந்திரன் கொண்டு வந்து வைத்துச் சோம சுந்தரக் கடவுளைப் பூசித்தான். இவ்விமானம் எட்டு யானைகளால் தாங்கப் பெறுவது. மன்று – வெள்ளிமன்று; இரசதசபை என வழங்கும். இங்கே இராசசேகர பாண்டியன் வருந்தி வணங்கி வேண்டியதற்காகப் பெருமான் இடது காலையூன்றி வலது காலைத் தூக்கி மாறி ஆடினார்.

**மண்டபம்:**

'மண்டபங்கள் நாயன்' என்பது. இதனை சாலிவாகனசகம் 1448இல் சென்னப்ப நாயகர் என்பவர் திருப்பணி செய்வித்தார். இன்னும் சுவாமி கோயிலில் அர்த்த மண்டபம், மகா மண்டபம், மணி மண்டபம், அறுகாற்பீடம் முதலியன இருக்கின்றன. இவற்றைக் கட்டுவித்தவன் குலசேகர பாண்டியன். மீனாட்சியம்மன் சந்நிதியில் அஷ்டசித்தி மண்டபம், மீனாட்சி நாயக்கர் மண்டபம் முதலிய மண்டபங்கள் இருக்கின்றன. இவையன்றிக் கல்யாண மண்டபம், ஆயிரங்கால் மண்டபம், வீரவசும்புரானா மண்டபம், ஆடிவீதி நிருதிவீதி மண்டபம், சம்பந்தர் மண்டபம், அறுபத்துமூவர் மண்டபம் முதலியனவும் விளங்குகின்றன. அவற்றுள் ஆயிரங்கால் மண்டபம் சகம் 1494இல் அரசாண்ட கிருஷ்ண வீரப்ப நாயக்கரது திருப்பணி என்று சொல்லுகிறார்கள். சொக்கநாதப் பெருமான் கோயிலின் திருவாயில் முத்தளத்தின் திருவாயில் என்று சொக்கநாதர் உலா கூறுகிறது.

சொக்கலிங்கப் பெருமானுக்கு அட்டாலைச் சேவகன், அடியார்க்கு நல்லான், அதிரவீசி ஆடுவான், அபிடேகச் சொக்கன், பண்ணிசைச் சொக்கன் முதலான பல பெயர்கள் வழங்குகின்றன. அம்மைக்கு அபிஷேகவல்லி, அங்கயற்கண்ணி, தமிழ் அறியும் பெருமாட்டி முதலிய பல நாமங்கள் உள்ளன.

**கல்வெட்டு:**

மதுரை தொன்று தொட்டே வரலாறுடைய தலம். கி.மு.302இல் பாடலிபுத்திரத்தில் அரசாண்ட சந்திரகுப்தன் அவையில் செலுக்கஸின் தூதனாக வந்த மெகஸ்தனிஸ் பாண்டிய நாட்டையும் மதுரையையும் குறிப்பிடுகிறார். கி.பி.140இல் தாலமியும் குறிப்பிடுகிறார். சங்க இலக்கியங்கள் மதுரையின் இயற்கை வளத்தை எடுத்து இயம்புகின்றன. உலகப் பொதுநூலாகிய

திருக்குறள் அரங்கேறிய இடமும் இதுவே. முதலாம் நெடுஞ்செழியன் முதல் பல பாண்டிய மன்னர்களினுடைய நிகழ்ச்சிகள் குறிக்கப் பெறுகின்றன.

இத்தலத்தைப்பற்றிய கல்வெட்டுக்களாக சுந்தரேஸ்வர ஸ்வாமி கோயிலிலும், மதன கோபால சுவாமி கோயிலிலும், கூடல் அழகர் கோயிலிலுமாக 35 கல்வெட்டுக்கள் உள்ளன. 17 தாம்பிர சாஸனங்கள் உள்ளன. அவற்றுள் 36 (1908) கல்வெட்டு எண் கொண்ட பெருமாள் கோயிலில் உள்ளது. 557 எண் கொண்ட முதல் மூன்று கல்வெட்டுக்கள் கூடலழகர் கோயிலைப் பற்றியன. செப்புப் பட்டயங்களில் 6, அந்தணர்களுக்கும் பூந்தோட்டத்துக்குமாக கிருஷ்ணப்ப நாயக்கர் ராணி ரங்கம்மாள் இவர்கள் நிலம் அளித்தமையை அறிவிக்கின்றன. 6 செப்புப் பட்டயங்கள் சேது மன்னர்கள் செய்த அறச்செயல்கள் அறிவிப்பன. ஏனையன சுந்தரேஸ்வரர் கோயிலுக்கும் மீனாட்சியம்மை கோயிலுக்கும் செய்த பல பணிகளை அறிவிக்கின்றன. ஜடாவர்மன் குலசேகர பாண்டியன், மாறவர்மன் சுந்தரபாண்டியன், பராக்கிரம பாண்டியன், வீரபாண்டியன், ஸ்ரீவல்லபன் முதலிய பாண்டிய மன்னர்கள் திருக்கோயிலுக்கு நிலம் அளித்ததையும் வரி தள்ளுபடி செய்ததையும், வரி வசூலித்துக் கொள்ள உரிமை அளித்ததையும் அறிவிக்கின்றன. 507 எண் கொண்ட (1907) கல்வெட்டில் ஸ்ரீவல்லப தேவன் காலத்தில் சோமசுந்தரப் பெருமாளுக்கு இருசந்நிதியிலும் நந்தவனம் அமைத்த செய்தி அறிவிக்கப்படுகின்றது. இவள் ஏழுலகம் முழுதுடையாள் எனவும் வழங்கப்படுகிறாள். கி.பி. 1572 முதல் 1595 வரை அரசாண்ட வீரப்ப நாயக்கர் கம்பத்தடி மண்டபத்தைக் கட்டினார் (35 எண் கொண்ட –1908). ஒரு செப்புப் பட்டயம் ஞானக்கூத்தரான சத்தியஞான தரிசினி மடத்திற்கு நிலம் விட்டதையும், (160) கல்வெட்டு ஆமர்த்த மடம் நந்திகேஸ்வர சந்தானம் சைவ ஆச்சார்யரான ஞானமூர்த்திக்கு மேலக்குடி நாட்டு வடகரை வாரணவாசி பட்டணத்து அண்ணன் விழுப்பாதராசன் மனம் பிரியான் மடம் என ஒன்றைக் கட்டிப் பத்துமா பூதானம் வழங்கினான் என்ற செய்தியையும் குறிக்கிறது. நரலோகசூரியன் திருமடம் என்றும், அன்னதான மடம் என்றும் சில மடங்களின் பெயர்கள் குறிக்கப் படுகின்றன.

## திரு-நள்ளாறு

### திருத்தலவரலாறு:

திருநள்ளாற்றுத் திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம். நாகை மாவட்டத்தில் காரைக்காலை அடுத்து உள்ளது. பேரளம், காரைக்கால், கும்பகோணம், மயிலாடுதுறை, நாகை ஆகிய ஊர்களில் இருந்து பேருந்து வசதி உள்ளது. இது அரசிலாற்றுக்கும் வாஞ்சநதிக்கும் நடுவில் இருப்பதால் நள்ளாறு என்று அழைக்கப்படுவதாயிற்று. தர்ப்பாரணியம்,

நகவிடங்கபுரம், நளேசுரம் என்பன இதன் மறுபெயர்கள். இது சப்த விடங்கத் தலங்களுள் ஒன்று. நளன் வழிபட்ட தலம். இறைவன் பெயர் – நள்ளாறர். இறைவி பெயர் – போக மார்த்த பூண்முலையம்மை. விநாயகர் – கற்பக விநாயகர், சொர்ணவிநாயகர்; தியாகர் – நகவிடங்கத் தியாகர்; அம்மன் – நீலோற்பலாம்பாள்; நடனம் – உன்மத்த நடனம். இத்தலத்தில் சனி பகவான் சந்நிதி மிகச்சிறப்பு உடையது.

**பதிக வரலாறு:**

திருக்கொள்ளம்பூதூரை வழிபட்ட சிரபுரச் செல்வராகிய திருஞானசம்பந்தப் பிள்ளையார், மதுரையில் பாண்டியனது அவைக் களத்திலே, அனல் வாதத்தில் பச்சைப் பதிகமாக இருந்த 'போகமார்த்த' என்னும் பதிகம் பெற்ற தலமாகிய திருநள்ளாற்றை அடைந்து 'பாடக மெல்லடிப் பாவை' என்ற இப்பதிகத்தைப் பாடியருளுகிறார்கள்.

இதில் நள்ளாறுடைய நம்பெருமானே! அமணர் செய்த வாதில் தீயிலிடும் ஏடு பச்சையாக்கி என்னுள்ளத்துணையாகி, திருஆலவாயின்கண் அமர்ந்தவாறு என்னை? என்று வினவி அருளுகின்றார். பச்சைப் பதிகமும் 'போகமார்த்த பூண்முலையாள்' என அம்மையைக் கொண்டு தொடங்குகின்றது. இதுவும் 'பாடக மெல்லடிப் பாவையோடும்' என அம்மையையே நினைவூட்டுவதாகத் தொடங்குகின்றது. இவை ஊன்றி உணர்ந்து இன்புறுதற்கு உரியன. ஒன்று முதல் பத்துப் பாடல்களும் நள்ளாறுடைய நம் பெருமானே! நீ ஆலவாயினை விரும்பியவனாய் அங்கு உறைதற்குக் காரணம் யாதோ சொல்வாயாக என்னும் வினை முடிபுடையன.

## 7. THIRU-NALL-AARU AND THIRU-AALAVAAI

### THIRU-AALAVAAI (MADURAI)

### THE HISTORY OF THE PLACE

This sacred city of Thiru-aalavaai (Madurai) is the capital of Paandi Naadu and can be reached by bus and train from all major towns. This temple town is known by many names, stated in the temple chronicles (Thalapuraanam books) as Madurai, Naanmaadak-koodal, Thiruvaalavaai, Kadambavanam, Dhuvaadha-saandhapuram, Sivanagaram etc. The last of the Thamizh Sangam was situated here and was a centre of learning for Tamil. This is the great city that has the unique distinction of being the

place where Lord Chokkalingaperumaan's divine plays of 64 holy episodes took place. This is the place which was the capital of Moorthi Naayanaar, who ruled the earth with the help of Holy Ashes (Viboothi), Uruththiraakkam (seed of Elaeocarpus), and matted hair. The guardian of Saiva faith, Lord Thiru-Gnaana-sambandar, Mangaiyark-karasiyaar, Kulach-chiraiyaar and Nedumaaranaayanaar had lively stayed in this city. This is the temple in which the gods Indhiran, Varunan, Murugan and Vinayakar worshipped and attained ultimate bliss. It is here the great Maanikkavaachakar was a royal minister and gifted to the world the sweet honey of Thiruvaachakam. The first and great Guru of the Dharmapuram Aadheenam, Guru-gnaana-sambandar obtained the grace of Lord Chokkanaathar here. His image is in the 'kudavarai' of the entrance to the shrine of Chokkanaathar. This place also has the distinction of receiving Kumaragurupara Swaamigal who sang the 'Meenaakshiammai Pillaith-Thamizh', the Goddess Herself listened to it in person.

As Saint Thiru-Gnaana-sambandar denotes this by the names, 'Koodal Aalavaai' and 'Madurai Aalavaai', there is room for the suspicion that Koodal Madhurai might be the name of the town and Aalavaai, the name of the temple. The God's name is Chokkalinga Moorthi and the Goddess, Meenakshi Ammai. The Vinayakar is known as Sidhdhi Vinayakar. The sacred tree of the site is kadamba tree. The Holy Ford is Portaamarai, with Ezhukadal and Vaihai etc. The vimaanam of the temple, Indira Vimaanam, is said to have come down from heaven, 'Vinnizhi Vimaanam'. This was brought down by Indhiran as he worshipped God Somasundarar in this town. This vimaanam is supported by eight elephants. The assembly hall is made up of Silver, known as the 'Silver Assembly Hall'. At this place, the Lord switched His dancing Feet by standing on His Left Foot and lifting up His Right Foot according to the prayers of king Raajasekara Paandiyan.

### Mandapam

The mandapam (pavilion) is known as Mandapangal Naayan. This was renovated by one Chennappa Naayakar in the year 1448 of Saalivaahana Era. Besides

this, there are other mandapams: the ardhamandapam of the God's shrine, the mahaamandapam, manimandapam, Arukaarpeedam etc. These were built by Kulasekara Paandiyan. In the shrine for Goddess Meenakshi, there are mandapams such as Ashtasidhdhi Mandapam, Meenaakshi Naayakkar Mandapam etc. In addition, there are also the Kalyaana Mandapam, Aayirangaal (thousand-pillared) Mandapam, Veeravasumpuraana Mandapam, Aadiveedhi Niruthi Mandapam, Sambandhar Mandapam, and Arupaththumoovar Mandapam, etc. Of these, the thousand-pillared mandapam is said to be due to the endowment by Krishna Veerappa Naayakkar, who ruled in the year 1494 of the Saalivaahana era. The holy entrance to the shrine of Lord Chokkanaathar is called the entrance to the three levels by the Chokkanaathar Ulaa. Lord Chokkalingar is called by many names, such as Attalaich Chevakan, Adiyaarkku Nallan, Adhiraveesi Aaduvaan, Abidekach Chokkan and Pannisaich Chokkan. The Goddess is known by many names too, such as Abishekavalli, Angayarkanni and Thamizh Ariyum Perumaatti.

**Stone Inscriptions**

Madurai is a place with an ancient history. Megastanis, the envoy of Seleucas to Chandhira Guptan who ruled in Paatalipuram in 302 BC, refers to the Paandiyan country and Madurai. Ptolomy also refers to this place in 140 CE. The Sangam literature speaks of nature's bounty in Madurai. It is here that Thirukkural, the universal book, was first presented to the world. Episodes relating to many Paandiyan kings, starting with Nedunjchezhiyan are noted.

There are thirty-five inscriptions about this city in the three temples of Sundaresvarar, Madhanagopaala Swami and Koodal Azhagar. Copper Plate engravings of 17 are in existence. Of the inscriptions, 36 of 1938 are located in Perumaal temple. Three inscriptions, from 557 are about the Koodal Azhagar temple. Of the copper plate engravings, 6 give information on Rangammaal's (Queen of Krishnappa Naayakkar) gift of land for andhanars and for flower gardens and six other various works done for the Sundareswarar temple and Meenakshi Ammai Temple. The endowments,

tax remissions and tax-collection rights granted by many of the Paandiya kings, such as Jatavarman Kulasekara Paandiyan, Maaravarman Sundara Paandiyan, Parakkirama Paandiyan, Veera Paandiyan, and Sri Vallaban are mentioned in these. In the inscription 507 of 1907, the information is given that Sri Vallabadevan arranged to create flower gardens to supply flowers for the two shrines of Lord Somasundarar. Veerappa Naayakkar, who ruled between 1572 and 1595 CE, had the Kambaththadi Mandapam built (35 of 1908). A copper plate speaks of the land gift to the matam of Gnaanakkoththaraana Saththiyagnaana Dharshini and an inscription 160 refers to the information that one Melakkudi Naattu Vadakarai Vaaranavaasi Pattanaththu Annan Vizhuppaadharaasan had built a 'Manam Piriyaan Matam' and gifted ten maa of land to Amarththa Matam Nandhikeswara Santhaanam Saiva Achchaaryar Gnaanamoorthi. Certain other matams are named as Naraola Sooriyan Thirumatam and Annadhaana Matam.

## THIRU-NALLAARU

### THE HISTORY OF THE PLACE

This sacred city of Thiru-nallaaru is on the south bank of river Cauvery in the Chola country. It is in the Naagapattinam district, next to Kaaraikkaal. Buses ply from Peralam, Kaaraikkaal, Kumbakonam, Mayilaaduthurai, Naagapattinam etc. to this place. As this place is situated between two rivers, Arasilaaru and Vaanjchanadhi, it came to be known as Nallaaru. Its other names are Tharppaaranniyam, Nakavidangapuram, and Nalesuram. This is one of the seven 'vidanga' temples. It was here that Nalan offered worship.

The God's name is Nallaarar and that of the Goddess Bogamaarththa Poonmulai Ammai. Vinaayaka here is known as Karpaka Vinaayakar, Sorna Vinaayakar. Thiyaagar is Nakavidangath Thiyaagar and the Mother is Neelorpalaambaal. The dance here is the frenzy (Unmatha) dance. The shrine for Sani (Planet Saturn) is of particular importance here.

## INTRODUCTION TO THE HYMN

In the test by fire, our saint vanquished the samanars. His palm leaf hymn of Nallaaru when consigned to the raging fire, remained not only unburnt but also fadeless and fresh. He returned from Madurai and continued his pilgrimage. After visiting Kollam-puthur, he arrived at Nallaaru and hailed the Lord in the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 7. திரு நள்ளாறும் திரு ஆலவாயும்

## 7. THIRU-NALL-AARU AND THIRU-AALAVAAI

பண் : நட்டபாடை
ராகம் : கம்பீரநாட்டை

*Pann: Natta Paadai*
*Raagam : Kambeera Naattai*

பாடக மெல்லடிப் பாவையோடும் படுபிணக் காடிடம் பற்றிநின்று
நாடக மாடுநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
சூடக முன்கை மடந்தைமார்கள் துணைவ ரொடுந்தொழு தேத்திவாழ்த்த
ஆடக மாட நெருங்குகூடல் ஆலவாயின்க ணமர்ந்தவாறே. 1

பாடக மெல்அடிப் பாவையோடும், படு பிணக்காடு இடம் பற்றி நின்று,
நாடகம்ஆடும், நள்ளாறு உடைய, நம்பெருமான் இது என்கொல் சொல்லாய் -
சூடக முன்கை மடந்தைமார்கள் துணைவரொடும் தொழுது ஏத்தி வாழ்த்த,
ஆடகமாடம் நெருங்கு கூடல் ஆலவாயின் கண் அமர்ந்தஆறே?

pATaka mel aTip pAvaiyOTum, paTu piNakkATu iTam paRRi nin2Ru,
nATakam ATum, naLLARu uTaiya, namperumAn2! itu en2kol collAy--
cUTaka mun2kai maTantaimArkaL tuNaivaroTum tozutu Etti vAztta,
ATakamATam nerugku kUTal AlavAyin2 kaN amarnta ARE?

**பொருள்:** பாடகம் என்னும் அணிகலன் அணிந்த மென்மையான அடிகளை உடைய உமையம்மையோடு, பிணக்காடாகிய இடுகாட்டைப் பற்றி நின்று நாடகம் ஆடும் நள்ளாற்று நம் பெருமானே! கையில் வளையல் அணிந்த மகளிர் தம் துணைவர்களோடும் கூடி வந்து வழிபடும்படியாய்ப் பொன் மாளிகைகள் நிறைந்த கூடல் ஆலவாயின்கண் நீ விரும்பி உறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** பாடகம் – காலணிகளுள் ஒன்று. பாடக, மெல்லடி என்று இணைத்தது பாடகத்தின் வன்மையும் அதனைத் தாங்கல் ஆற்றாத அடியின் மென்மையும் குறித்தவாறு. சூடகம் – வளை. துணைவர் – கணவர். ஆடகமாடம் – பொன் மாளிகைகள்.

**குருவருள்:** பாண்டி நாட்டில் மூன்று வாதங்களிலும் வெற்றி கொண்டு சைவ சமயத்தை நிலைநிறுத்திய பிள்ளையார், பாண்டியன் நெடுமாறன், மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் ஆகிய மூவரும் பிரிவாற்றாது உடன்வர பாண்டி நாட்டுத் தலங்களைத் தரிசித்துப் பதிகம் பாடிப் பாண்டி நாட்டுக்கீழ் எல்லையில் உள்ளதும் குலச்சிறையார் அவதரித்ததுமான மணமேற்குடி வந்து வழிபட்டுச் சுற்றியுள்ள பல பதிகளையும் வணங்கிப் போற்றினார். காவிரி நாடு மீண்டருளத் திருவுள்ளம் பற்றினார். தன்னோடு உடன் வந்த மன்னன் முதலிய மூவரும் பிரிவாற்றாது உடன்வரும் குறிப்பு நோக்கிய பிள்ளையார், 'இங்கு நான் மொழிந்ததனுக்கு இசைந்தீராகில் ஈசர் சிவநெறி போற்றி இருப்பீர்' என்று அவர்கட்கு விடைகொடுத்துப் பொன்னி நாடு அணைந்தார். பாண்டி நாட்டில் அனல்வாதம் செய்தகாலை கயிறு சாத்திப் பார்த்தபோது 'போகமார்த்த பூண்முலையாள்' என்னும் திருநள்ளாற்றுப் பதிகம் கிடைத்தது. அதனால் வெற்றியும் கிடைத்தமையைத் திருவுள்ளம் கொண்டு நள்ளாறு சென்று வழிபட எண்ணினார். வழியில் திருக்கொள்ளம்பூதூர் முதலிய தலங்களை வழிபட்டுத் திருநள்ளாறு சேர்ந்து நம்பெருமானைப் 'பாடக மெல்லடிப் பாவையோடும்' என்னும் பதிகத்தால் பெருமான் நடத்திய நாடகத்தை 'நாடகம் ஆடும் நள்ளாறுடைய நம்பெருமான் இது என்கொல் சொல்லாய்?' என்று வினவினார். பிள்ளையார் இத்தலத்து இறைவனை "நள்ளாறுடைய நம்பெருமான்" என்றே இப்பதிகப் பாடல் அனைத்திலும் குறிப்பிட்டுள்ளார். தர்ப்பாரண்யேசுரர் என்று இன்று வழங்கும் பெயர் குறிக்கப் பெறாமை சிந்திக்கத் தக்கது.

In the town Koodal (Madurai) golden mansions exist everywhere. Ladies wearing bangles in their hands visit the Aalavaai temple with their husbands and offer worship. O Lord, tell us the reason why You had a desire to be entempled at the Aalavaai temple in the city of Koodal. Thou, that danceth in the forests of dead bodies along with Umaa Devi of soft heal bedecked with ornaments.

**Note:** Koodal: Madurai is known as Naan-maada-k-koodal. When Varuna sent the seven great clouds to Madurai to destroy it with their downpour, Siva bade a set of four clouds to form themselves into a foursome palladium (safety towers) nullifying the disastrous downpour. Since that day Madurai came to be known as Naan-maada-k-koodal.

The Lord's desire to stay at *ஆலவாய்* is mentioned by our saint in order to highlight the sanctity of this shrine.

திங்களம் போதுஞ் செழும்புனலும் செஞ்சடை மாட்டயல் வைத்துகந்து
நங்கண் மகிழுநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
பொங்கிள மென்முலை யார்களோடும் புனமயி லாட நிலாமுளைக்கும்
அங்கழ கச்சுதை மாடக்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. 2

*திங்கள் அம்போதும் செழும்புனலும் செஞ்சடைமாட்டு அயல் வைத்து உகந்து*
*நம் கண் மகிழும், நள்ளாறு உடைய நம்பெருமான்! இது என்கொல் சொல்லாய் -*
*பொங்கு இளமென்முலையார்களோடும் புனமயில் ஆட, நிலா முளைக்கும்*
*அம் கழகச் சுதை மாடக் கூடல் ஆலவாயின் கண் அமர்ந்தஆறே?*

tigkaL ampOtum cezumpun2alum cenjcaTaimATTu ayal vaittu ukantu,
nam kaN makizum, naLLARu uTaiya, namperumAn2! itu en2kol collAy--
pogku iLamen2 mulaiyArkaLOTum pun2amayil ATa, nilA muLaikkum
am kaLakac--cutai mATak kUTal AlavAyin2kaN amarnta ARE?

***பொருள்:*** பிறைமதி, அழகிய மலர்கள், வளமான கங்கை நதி ஆகியவற்றைத் தன் செஞ்சடையின்மேல் அருகருகே வைத்து மகிழ்ந்து நம் கண்கள் களிக்குமாறு நள்ளாற்றின்கண் எழுந்தருளிய நம்பெருமானே! பூரித்து எழும் மென்மையான இளைய தனங்களை உடைய மடந்தையரோடு கானகத்தில் வாழும் ஆண் மயில்கள் கூடலில் களித்தாடுகின்றன. பெருமை மிக்க தமிழ்ச் சங்கத்தினையும், நிலவொளி மிகுதியாகப் பிரகாசிக்குமாறு வெண்மையான சுண்ணாம்பினால் கட்டப்பட்ட மாடங்களையும் உடைய கூடல் ஆலவாயின்கண் நீ விரும்பி உறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக.

***குறிப்புரை:*** போது வாடாமைப் புனல் வைப்பார்போல, திங்களும் வாடாத வண்ணம் செழும் புனலைச் சேர வைத்தார் என்பது சிந்தித்தற்குரியது. நங்கண் – நம்மிடத்து. மகளிரோடு மயிலாட என்றது சாயலால் வேற்றுமை தோன்றாமையால். கார் வரவால் களிப்பது மயில். கணவர் வரவால் களிப்பவர் மகளிர். ஆட்டம் ஈரிடத்தும் நிகழ்வது இயல்பு. அம்கழகம் – பெருமை மிக்க தமிழ்ச் சங்கம். நிலா – வெள்ளொளி.

O Lord God of Nallaaru! You are wearing on Your matted crest, the crescent moon, fragrant flowers and the Ganges river with plenty of water - all closeted to each other. We rejoice in seeing You like this by our naked eyes and offer our obeisance to You. The forest bound male peacocks dance with the damsels of Koodal. The famous Tamil Sangam exists here. The mansions in this town built with white slaked lime enhances the brightness of the moon light. O Lord Civa! Now tell us why You longed for and got enthroned at Aalavaai?

**Note:** The terrace(s): It is known as Aramiyam - "a terrace on the top of a house for a walk by moonlight" - Winslow.

தண்ணறு மத்தமும் கூவிளமும் வெண்டலை மாலையும் தாங்கியார்க்கும்
நண்ணல ரியநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
புண்ணிய வாணரும் மாதவரும் புகுந்துட னேத்தப் புனையிழையார்
அண்ணலின் பாட லெடுக்குங்கூடல் ஆலவாயின்க ணமர்ந்தவாறே. 3

தண் நறுமத்தமும் கூவிளமும் வெண் தலைமாலையும் தாங்கி, யார்க்கும்
நண்ணல் அரிய நள்ளாறு உடைய நம்பெருமான் இது என்கொல் சொல்லாய் -
புண்ணியவாணரும் மா தவரும் புகுந்து உடன் எத்த, புனையிழையார்
அண்ணலின் பாடல் எடுக்கும் கூடல் ஆலவாயின்கண் அமர்ந்தஆறே?

taN naRumattamum kUviLamum veN talaimAlaiyum tAgki, yArkkum
naNNal ariya, naLLARu uTaiya, namperumAn2! itu en2kol collAy--
puNNiyavANarum mA tavarum pukuntu uTan2 Etta, pun2aiyizaiyAr
aNNalin2 pATal eTukkum kUTal AlavAyin2kaN amarnta ARE?

**பொருள்:** குளிர்ந்த மணம் வீசும் ஊமத்தை மலர், வில்வம் ஆகியவற்றையும் வெண்மையான தலை மாலையையும் அணிந்துள்ள நம்பெருமானே! உன் அருள் இருந்தாலன்றி உன்னை யாராலும் அடைந்து வழிபடற்கரிய நள்ளாற்றின்கண் எழுந்தருளியவனே! புண்ணிய வாணரும், மாதவர்களும் வந்து ஏத்துவதும், அணிகலன்கள் புனைந்த மகளிர் உனது புகழ் சேர்ந்த பாடல்களைப் பாடுவதுமான கூடல் ஆலவாயின்கண் நீ விரும்பி உறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** தண்ணறு மத்தம் – குளிர்ந்த மணம் வீசுகின்ற ஊமத்தம்பூ. இறைவனுக்கு உன்மத்த சேகரன் என்பதும் ஒரு பெயர். கூவிளம் – வில்வம். தாங்கி உடைய பெருமான் என முடிக்க. யார்க்கும் நண்ணலரிய நள்ளாறு – எவர்க்கும் அணுக முடியாத நள்ளாறு. என்றது நாடிழந்தும் நகரிழந்தும் மனைவியை இழந்தும் உருமாறியும் வினையை நுகர்ந்து கழித்த நளன் போன்றோரன்றி வினைச் சேடமுடைய எவர்க்கும் நணுக முடியாதது என்பதை விளக்க. புண்ணியவாணர் – சென்ற பிறவிகளில் ஈட்டிய புண்ணியம் கொண்டு வாழ்பவர்கள். மாதவர் – இப்பிறவியில் புண்ணியம் ஈட்டுவார். அண்ணலின் பாடல் – இறைவனுடைய புகழ் சேர்ந்த பாடல்கள்.

O Lord God of Nallaaru! You are inaccessible to anyone, whoever he may be, unless he is already endowed with Your grace. You are wearing cool and olent unmattam, koovilam and garland of crania! Holy men and tapaswis enter Your temple and pay obeisance to You. Also bejewelled ladies are singing divine songs in the Aalavaai temple. Pray tell us why You longed for and got enthroned at the Aalavaai temple?

**Note:** Oomattham: Datura. Its flower is dear to Siva.

Koovilam: *Aegle marmelos*. Bael / bel / bhel. The leaves of this tree are used in Siva archana (*வில்வம்*). See Thiru-vaa-chakam - Siva Puraanam - *அவன் அருளாலே அவன் தாள் வணங்கி . . .*

பூவினில் வாசம் புனலிற்பொற்புப் புதுவிரைச் சாந்தினி னாற்றத்தோடு
நாவினிற் பாடனள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
தேவர்க டானவர் சித்தர்விச்சா தரர்கணத் தோடுஞ் சிறந்துபொங்கி
ஆவினி லைந்துகந் தாட்டுங்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. 4

பூவினில் வாசம், புனலில் பொற்பு, புது விரைச்சாந்தினில் நாற்றத்தோடு,
நாவினில் பாடல், நள்ளாறு உடைய நம்பெருமான் இது என்கொல் சொல்லாய் -
தேவர்கள், தானவர், சித்தர், விச்சாதரர், கணத்தோடும் சிறந்து பொங்கி
ஆவினில் ஐந்து உகந்து ஆட்டும் கூடல் ஆலவாயின்கண் அமர்ந்தஆறே?

pUvin2il vAcam, pun2alil poRpu, putu viraiccAntin2il nARRattOTu,
nAvin2il pATal, naLLARu uTaiya, namperumAn2! itu en2kol collAy--
tEvarkaL, tAn2avar, cittar, viccAtarar, kaNattOTum ciRantu pogki,
Avin2il aintu ukantu ATTum kUTal AlavAyin2 kaN amarnta ARE?

**பொருள்:** பூக்களில் வாசனையாய், நீரில் தண்மையாய், புதிய சந்தனத்தில் மணமாய், நாவில் பாடலாய்க் கலந்து விளங்கும் நள்ளாற்று நம் பெருமானே! தேவர்களும், அசுரர்களும், சித்தர்களும், வித்யாதரர்களும் ஆகிய கூட்டத்தினரோடு சிறந்து விளங்குபவனே! பசுவினிடம் தோன்றும் பஞ்சகவ்வியங்களால் ஆட்டி வழிபடக் கூடியவனே! கூடல் ஆலவாயின்கண் நீ விரும்பி உறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** பூவினில் வாசம் போன்று இறைவன் கலந்து நிற்கும் நிலை கூறியன. 'பூவினுள் நாற்றம் நீ தீயினுள் தெறலும் நீ' என்னும் பரிபாட்டாலும் அறிக. புனலில் பொற்பு – நீரில் அழகு. புது விரைச் சாந்து – புதிதாக அரைத்து எண் வகை மணப் பொருள்களும் கூட்டப் பெற்ற சந்தனம். நள்ளாறன் ஐம்பொறிகளுக்கும் இன்பப் பொருளாய் இருக்கும் தன்மையைச் சில சொல்லித் தெரிவிக்கின்றார் பூவினில் வாசம் என்பது முதல் நாவினில் பாடல் என்பது வரை. பொற்பு – அழகு என்றது தட்பமும் தெளிவும். தானவர் – அசுரர். ஆவினில் ஐந்து – பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்பன.

O Lord God of Nallaaru! You are the fragrance in flowers. You are the soothing coolness of water. You are the fresh aroma of sandalwood paste. You are the song in the tongue. Pray, tell us; what may this be? why is it You are enthroned at Aalavaai in Koodal delighting in Your ablutions of pancha-kavvya, and hailed in swelling love by the deva host Taanavas, siddhas and vidhyadaras?

**Note:** Pancha-kavvya: It is compounded of cow's milk, curd, ghee, cow's urine, and cow-dung. This is considered to be very sacred.

செம்பொன்செய் மாலையும் வாசிகையும் திருந்துபு கையும வியும்பாட்டும்
நம்பும் பெருமைநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
உம்பரு நாகரு லகந்தானும் ஒலிகடல் சூழ்ந்த வுலகத்தோரும் 5
அம்புத நால்களா னீடுங்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே.

செம்பொன் செய் மாலையும், வாசிகையும், திருந்து புகையும், அவியும், பாட்டும்,
நம்பும் பெருமை, நள்ளாறு உடைய நம்பெருமான் இது என்கொல் சொல்லாய் -
உம்பரும் நாகர்உலகம்தானும், ஒலிகடல் சூழ்ந்த உலகத்தோரும்,
அம்புதம் நால்களால் நீடும் கூடல் ஆலவாயின்கண் அமர்ந்தஆறே?

cempon2 cey mAlaiyum,. vAcikaiyum, tiruntu pukaiyum, aviyum, pATTum,
nampum perumai, naLLARu uTaiya, namperumAn2! itu en2kol collAy--
umparum, nAkar ulakam tAn2um, oli kaTal cUznta ulakattOrum,
amputam nAlkaLAl nITum kUTal AlavAyin2 kaN amarnta ARE?

**பொருள்:** செம்பொன்னால் செய்த மாலைகள், திருவாசி மாலைகள் ஆகியவற்றுடன் மணப்புகை, நிவேதனம், தோத்திரம், முதலியவற்றையும் விரும்பி ஏற்கும் பெருமை உடைய நள்ளாற்றில் விளங்கும் நம் பெருமானே! விண்ணவரும், நாகர் உலகத்தவரும், ஒலிக்கும் கடலால் சூழப்பட்ட மண்ணுலக மக்களும் உன்னை ஏத்துகின்றனர். நான்கு மேகங்களால் சூழப்பட்ட கூடல் ஆலவாயின்கண் நீ விரும்பி உறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** வாசிகை – திருவாசி (ஒருவகை மாலை). அவி – நைவேத்தியம். பாட்டு – தோத்திரம். விரும்பும் பெருமை – அனைவரும் இவரே எமக்கு அடைக்கலமாவார் என்று நம்பும் பெருமை. உம்பர் – தேவர். அம்புதம் – மேகம். அம்புதம் நால்களான் நீடுங்கூடல் – நான்கு மேகங்கள் கூடிய கூடல் நகர். நால்கள் – நான்கு. நால் – நான்கு. அதன் மேற் பன்மை விகுதி நால்கள். இது அரும்பிரயோகம்.

O Our Lord God of loving kindness of Nallaaru! You are adorned with chains of ruddy gold, and the Thiru-vaachi garland. You love and enjoy the smoke of incense. You accept the oblation and enjoy listening to hymns. Koodal is extensively roofed over with four clouds. You are hailed by the heavenly devas and by the land of Nagas and by the people of this earth girdled with resounding oceans? Pray, tell us; why You longed for and got enthroned at Aalavaai?

**Note:** Thiru-vaachi: A type of garland. அவி (Havis): Oblations offered in the sacrificial fire. The World of Nagas: The nether world serpents.

பாகமுந் தேவியை வைத்துக்கொண்டு பைவிரி துத்திப் பரியபேழ்வாய்
நாகமும் பூண்டநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
போகமு நின்னை மனத்துவைத்துப் புண்ணியர் நண்ணும் புணர்வுபூண்ட
ஆகமு டையவர் சேருங்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. 6

பாகமும் தேவியை வைத்துக்கொண்டு, பை விரி துத்திப் பரிய பேழ்வாய்
நாகமும் பூண்ட, நள்ளாறு உடைய நம்பெருமான் இது என்கொல் சொல்லாய் -
போகமும் நின்னை மனத்துவைத்துப் புண்ணியர் நண்ணும் புணர்வு பூண்ட
ஆகம் உடையவர் சேரும் கூடல் ஆலவாயின்கண் அமர்ந்தஆறே?

pAkamum tEviyai vaittukkoNTu, pai viri tuttip pariya pEzvAy
nAkamum pUNTa, naLLARu uTaiya, namperumAn2! itu en2kol collAy--
pOkamum nin2n2ai man2attuvaittup puNNiyar naNNum puNarvu pUNTa
Akam uTaiyavar cErum kUTal AlavAyin2kaN amarnta ARE?

**பொருள்:** இடப்பாகமாக உமையம்மையை வைத்துக் கொண்டு, படமும் புள்ளிகளும் பெரிதாகப் பிளந்த வாயையும் உடைய நாகத்தைப் பூண்டுள்ள நள்ளாறுடைய நம் பெருமானே! சிவபுண்ணியத்தில் மிக்க அடியவர் நின்னை மனத்தில் வைத்துத் தியானிப்பதனால் போகமும், நண்ணுவதற்குரிய யோக நெறியினை மேற்கொண்டு ஒழுகுதற்கேற்ற உடம்பு உடையவராய் சேர்ந்துறையும் கூடல் ஆலவாயின்கண் நீ அமர்ந்து உறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** பாகமும் தேவியை வைத்துக் கொண்டு நாகமும் பூண்ட என்றது பாம்பைக் கண்டாற் பெரிதும் அஞ்சுகின்ற தேவியை வைத்துக் கொண்டேயும் நாகம் பூணுதல் சாலாது என்ற நயம் தோன்ற நின்றது. பை – படம். துத்தி – படப்பொறி. பேழ்வாய் – பிளந்த வாய். புண்ணியர் நின்னை மனத்து வைத்துப் போகம் நண்ணும் புணர்வு பூண்ட ஆகமுடையவர் என இயைக்க. போகியாய் உமையொரு பாதியாய் இருக்கும் இறைவனைத் தியானிப்பதாலேயே புண்ணியர் போகம் நண்ணுவர் என்பதாம். புணர்வு – சம்பந்தம். ஆகம் – திருமேனி. புணர்வு = யோகம். புணர்வு பூண்ட ஆகம் – யோகத்தில் உறைந்து நிற்பதற்கேற்ற தகுதியுடைய உடம்பு.

O Our Lord God of Nallaaru, You are concorporate with Your consort. You wear a serpent of spotted hood whose large mouth is (ever) agape! Pray, tell us; what may this be? Why is it You are enthroned at Aalavaai in Koodal sought after by the holy ones who entempled You in their Civa consciousness and are in Civa-bhoga?

Note: Bhoga: Bliss. Civa-bhoga - A musical composition of spiritual excellence (from Guru-Gnaana-Sambandhar's Civa Bhoga Saaram).

கோவண வாடையு நீறுப்பூச்சுங் கொடுமழு வேந்தலுஞ் செஞ்சடையும்
நாவணப் பாட்டுநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
பூவண மேனி யிளையமாதர் பொன்னும் மணியும் கொழித்தெடுத்து
ஆவண வீதியி லாடுங்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. 7

கோவண ஆடையும், நீறுப்பூச்சும், கொடுமழு ஏந்தலும், செஞ்சடையும்,
நாவணப் பாட்டும் நள்ளாறு உடைய நம்பெருமான் இது என்கொல் சொல்லாய் -
பூவண மேனி இளைய மாதர், பொன்னும் மணியும் கொழித்து எடுத்து,
ஆவண வீதியில் ஆடும் கூடல் ஆலவாயின்கண் அமர்ந்தஆறே?

kOvaNa ATaiyum, nIRRuppUccum, koTumazu Entalum, cenjcaTaiyum,
nAvaNap pATTum, naLLARu uTaiya, namperumAn2! itu en2kol collAy--
pUvaNa mEn2i iLaiya mAtar, pon2n2um maNiyum kozittu eTuttu,
AvaNa vItiyil ATum kUTal AlavAyin2kaN amarnta ARE?

**பொருள்:** வேதமாகிய கோவண ஆடையும், திருநீற்றுப் பூச்சும், கொடிய மழுவாயுதத்தை ஏந்தலும், சிவந்த சடையும், நாவில் பல்வேறு சந்தங்களில் பாடும் வேதப் பாட்டும் உடையவனாய் இலங்கும் நள்ளாற்றுள் எழுந்தருளிய நம் பெருமானே! பூப்போலும் மெல்லிய மேனியை உடைய இளம் பெண்கள் பொன், மணி முதலியவற்றைக் கொழித்து எடுத்துக் கடைவீதியில் விளையாடும் கூடல் ஆலவாயின்கண் நீ அமர்ந்து விளங்கக் காரணம் யாதோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** இறைவனுக்கு வேதமே கோவணமாதலின் கோவண ஆடையர் என்றார். நீறுப்பூச்சும் எனற்பாலது ஓசை நோக்கி இரட்டாதாயிற்று. இறைவன் நீறுபூசி ஒளிர்தலை மாணிக்க வாசக சுவாமிகளும் 'நீறுபட்டே ஒளிகாட்டும் மேனி' என்பார்கள். நாவணப்பாட்டும் - நாவில் பல்வேறு வண்ணங்களை உடைய பாட்டும், வண்ணம் - பாஅ வண்ணம் முதலிய செய்யுள் வண்ணங்கள், பூவணமேனி - பூப்போலும் மெல்லிய மேனி, ஆவண வீதி - கடை வீதி.

O Our Lord, God of Nallaaru, You are clad in a loin-cloth; You have smeared Your body with the holy ash; You wield a fierce mazhu; Your red hairy crest is matted. Your tongue reverberates in multi-form hymns. Pray, tell us; why is it You longed for and got enthroned at Aalavaai in Koodal in the streets of which young girls of 'flower like', physique sift gold and gems and play in the market street.

இலங்கை யிராவணன் வெற்பெடுக்க வெழில்விர லூன்றி யிசைவிரும்பி
நலங்கொளச் சேர்ந்தநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
புலன்களைச் செற்றுப் பொறியைநீக்கிப் புந்தியி லுந்நினைச் சிந்தைசெய்யும்
அலங்க னல்லார்க ளமருங்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. 8

இலங்கை இராவணன் வெற்பு எடுக்க, எழில் விரல் ஊன்றி, இசை விரும்பி,
நலம் கொளச் சேர்ந்த நள்ளாறு உடைய நம்பெருமான் இது என்கொல் சொல்லாய் -
புலன்களைச் செற்று, பொறியை நீக்கி, புந்தியிலும் நினைச் சிந்தைசெய்யும்
அலங்கல் நல்லார்கள் அமரும் கூடல் ஆலவாயின்கண் அமர்ந்தஆறே?

ilagkai irAvaNan2 veRpu eTukka, ezil viral Un2Ri, icai virumpi,
nalam koLac cErnta, naLLARu uTaiya, namperumAn2! itu en2kol collAy--
pulan2kaLaic ceRRu, poRiyai nIkki, puntiyilum nin2aic cintaiceyyum
alagkal nallArkaL amarum kUTal AlavAyin2kaN amarnta ARE?

**பொருள்:** இலங்கை மன்னன் இராவணன் கயிலை மலையைப் பெயர்த்தபோது, சிவபெருமான் தனது அழகிய கால் விரலை ஊன்றி அடர்த்துப் பின் அவனது இசையை விரும்பிக் கேட்டு, அவனுக்கு நன்மைகள் பலவும் பொருந்துமாறு உளங்கொண்ட நள்ளாறுடைய நம் பெருமானே! ஐம்புல இன்பங்களை வெறுத்து, அவற்றைத் தரும் ஐம்பொறிகளை மடை மாற்றி, புந்தியில் உன்னையே சிந்தனை செய்யும் தூய வாழ்க்கையை உடைய சிவஞானிகள் வாழும் கூடல் ஆலவாயின்கண் நீ அமர்ந்துறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** விரல் ஊன்றி என்றது நிக்கிரகம். விரும்பி என்றது கருணைக்கு ஏது. நலங்கொள் என்றது அநுக்கிரகம். விரலூன்றிய வரலாற்றை மணிவாசகப் பெருந்தகை 'மதிக்குந் திறனுடைய வல்லரக்கன் தோள்நெரிய மிதிக்குந் திருவடி' என்பதைக் காண்க. புலன்களைச் செற்று – விஷயங்களைக் கெடுத்து, பொறியை நீக்கி – இந்திரியங்களைச் சேட்டியாதே செய்து. நினைப்புந்தியிலும் சிந்தை செய்யும் – தேவரீரைப் புத்தியாலும் தியானிக்கின்ற, பொறிகள் புலன்களின் வழிச் செல்லாது அடக்கிய பெரியோர்களின் புத்தியில் சென்றும் பதியும் பொருள், கருவி கரணங்களைக் கடந்து நிற்கும் இறைப் பொருள் ஒன்றுமே யாதலின் இங்ஙனம் கூறினார். அலங்கல் – தாபத வாகைக்குரிய மாலை. நல்லார்கள் – சிவஞானிகள். கூடல் ஆலவாய் என்பது ஒரு பொருட் பன்மொழி.

O Our Lord God of Nallaaru, You crushed with Your beautiful toe Sri Lanka's Raavana who tried to uproot Your abode - the Mount Kailas. Then pleased with his music, You graced him with many good things. Pray, tell us; why is it You longed for and got enthroned at Aalavaai in precious Koodal - the abode of those who are poised

in austerities and who having quelled their senses and sense organs, meditate (forever) on You?

பணியுடை மாலும் மலரினோனும் பன்றியும் வென்றிப் பறவையாயும்
நணுகல ரியநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
மணியொலி சங்கொலி யோடுமற்றை மாமுர சின்னொலி யென்றுமோவா
தணிகிளர் வேந்தர் புகுதுங்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. 9

பணி உடை மாலும் மலரினோனும், பன்றியும் வென்றிப் பறவைஆயும்
நணுகல் அரிய, நள்ளாறு உடைய நம்பெருமான் இது என்கொல் சொல்லாய் -
மணிஒலி சங்குஒலியோடு மற்றை மா முரசின் ஒலி என்றும் ஓவாது
அணி கிளர் வேந்தர் புகுதும் கூடல் ஆலவாயின்கண் அமர்ந்தஆறே?

paNi uTai mAlum malarin2On2um, pan2Riyum ven2Rip paRavai Ayum,
naNukal ariya, naLLARu uTaiya, namperumAn2! itu en2kol collAy--
maNi oli cagku oliyOTu maRRai mA muracin2(n2) oli en2Rum OvAtu
aNi kiLar vEntar pukutum kUTal AlavAyin2kaN amarnta ARE?

**பொருள்:** பாம்பணையானாகிய திருமாலும் தாமரை மலரில் எழுந்தருளிய நான்முகனும் முறையே பன்றியாயும் பறவை இனங்களில் மேம்பட்ட அன்னமாயும், அடிமுடிகளைத் தேடியும் நணுக முடியாத நள்ளாறுடைய நம் பெருமானே! மணி ஒலியும், சங்கொலியும், சிறந்த முரசின் ஒலியும் என்றும் இடையறாது கேட்கும் சிறப்பினதும், மேம்பட்ட வேந்தர்கள் புகுந்து வழிபடும் பெருமையதும் ஆகிய கூடல் ஆலவாயின்கண் நீ எழுந்தருளி விளங்கக் காரணம் யாதோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** பணி – ஆதிசேடன், வென்றிப் பறவை – திருமுடி கண்டேன் என்று பொய் கூறிய பறவையாகிய அன்னம். பாண்டிய மன்னனிடம் கப்பங்கட்ட வரும் மன்னர்கள் பலர். பலவகை ஒலிகள் இடையறாது ஒலிக்கின்ற, கூடல் என்பதாம்.

O Our Lord God of Nallaaru, who is inaccessible to Vishnu whose bed is the snake Aadhi-seshaa and Bramha on the lotus who both pursued You in the assumed forms of a hog and a bird (but neither could see You). Pray, tell us; why You longed for and got enthroned at Aalavaai in Koodal where the noise of bells and shells and commanding drums resounds for ever. Kings decked with lustrous jewells foregather in the temple to pay their tribute to You?

தடுக்குடைக் கையருஞ் சாக்கியருஞ் சாதியி னீங்கிய வத்தவத்தர்
நடுக்குற நின்றநள் ளாறுடைய நம்பெரு மானிது வென்கொல்சொல்லாய்
எடுக்கும் விழவுந் நன்னாள்விழவும் இரும்பலி யின்பினோ டெத்திசையும்
அடுக்கும் பெருமைசேர் மாடக்கூடல் ஆலவா யின்க ணமர்ந்தவாறே. 10

தடுக்கு உடைக் கையரும் சாக்கியரும், சாதியின் நீங்கிய அத் தவத்தர்
நடுக்குஉற நின்ற, நள்ளாறு உடைய நம்பெருமான் இது என்கொல் சொல்லாய் -
எடுக்கும் விழவும் நல்நாள் விழவும் இரும் பலி இன்பினோடு எத்திசையும்
அடுக்கும் பெருமை சேர் மாடக் கூடல் ஆலவாயின்கண் அமர்ந்தஆறே?

taTukku uTaik kaiyarum cAkkiyarum, cAtiyin2 nIgkiya at tavattar
naTukku uRa nin2Ra, naLLARu uTaiya, namperumAn2! itu en2kol collAy--
eTukkum vizavum nan2nAL vizavum irum pali in2pin2OTu etticaiyum
aTukkum perumai cEr mATak kUTal AlavAyin2kaN amarnta ARE?

***பொருள்:*** ஓலைத் தடுக்கைக் கையில் ஏந்தித் திரியும் சமணர்களும் சாக்கியர்களும் மரபு நீங்கிய வீண் தவத்தராவர். அவர்கள் மெய்ந் நெறியாகிய சைவ சமயத்தைக் கண்டும், அச்சமயிகளின் வழிபடு கடவுளைக் கண்டும், நடுக்கம் உறுமாறு திருநள்ளாற்றுள் விளங்கும் நம் பெருமானே! நாள் விழாவும், சிறப்பு விழாவும், நன்கு நடைபெற, அவ்விழாவில் வழங்கும் பெருவிருந்தால் விளையும் மகிழ்வு எத்திசையும் பொருந்திப் பெருமை சேர்க்கும் மாடக் கூடல் ஆலவாயின்கண் நீ மகிழ்ந்துறைதற்குக் காரணம் யாதோ? சொல்வாயாக.

***குறிப்புரை:*** தடுக்கு – ஓலையிருக்கை. சாதியின் நீங்கிய வத்தவத்தர் – தத்தம் மரபின் நீங்கி வீணான தவத்தைச் செய்பவர்கள். எடுக்கும் விழா – நைமித்திகத் திருவிழா, நன்னாள் விழா – நித்தியத் திருவிழா.

O Our Lord God of Nallaaru, the Jain monks who hold mats in their hands and the Buddhist monks (the pseudo tapaswis) have gone astray from their (true) tradition. They shudder even to think of You. Here daily festivals and the special seasonal festivities take place in a grand manner! The joy arising out of the grand feasts, that the people enjoy during those festivities reaches far beyond on all directions and enhances the greatness of the city. Pray tell us why You longed for and got enthroned at Aalavaai in Koodal.

அன்புடை யானை யரனைக்கூடல் ஆலவாய் மேவிய தென்கொலென்று
நன்பொனை நாதனை நள்ளாற்றானை நயம்பெறப் போற்றி நலங்குலாவும்
பொன்புடை சூழ்தரு மாடக்காழிப் பூசுரன் ஞானசம் பந்தன்சொன்ன
இன்புடைப் பாடல்கள் பத்தும்வல்லார் இமையவ ரேத்த விருப்பர்தாமே. 11

அன்புஉடையானை அரனை, "கூடல் ஆலவாய் மேவியது என்கொல்?" என்று,
நன்பொனை, நாதனை, நள்ளாற்றானை, நயம்பெறப் போற்றி நலம் குலாவும்
பொன் புடை சூழ்தரு மாடக் காழிப் பூசுரன் - ஞானசம்பந்தன் - சொன்ன
இன்பு உடைப் பாடல்கள் பத்தும் வல்லார் இமையவர் ஏத்த இருப்பர் தாமே.

an2pu uTaiyAn2ai, aran2ai, "kUTal AlavAy mEviyatu en2kol?" en2Ru,
nan2pon2ai, nAtan2ai, naLLARRAn2ai, nayam peRap pORRi, nalam kulAvum
pon2 puTai cUztaru mATak kAzip pUcuran2--njAn2acampantan2--con2n2a
in2pu uTaip pATalkaLpattum vallAr, imaiyavar Etta iruppar tAmE.

**பொருள்:** எல்லா உயிர்களிடத்தும் அன்புடையவனாம், அரனைக் கூடல் ஆலவாயில் மேவியதற்குக் காரணம் யாதெனக் கேட்டுத் தூய பொன் போன்றவனாகவும், தலைவனாகவும் விளங்கும் திருநள்ளாற்று இறைவனை நயமாகப் போற்றி, நலம் பயக்கும் செம்பொன் நிறைந்த மாடவீடுகளால் சூழப்பட்ட சீகாழிப் பதியில் தோன்றிய பூசுரனாகிய ஞானசம்பந்தன் பாடிய இனிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதவல்லவர், இமையவர் ஏத்தத் தேவருலகில் விளங்குவர்.

**குறிப்புரை:** அன்புடையானை – உலகமே இறைவனுடைய மக்களாதலின் வாற்சல்யம் உடையவனை, நயம் பெறப் போற்றி – போற்றுவதில் ஒரு நயம் உண்டாம்படிப் பணிந்து, அல்லது தாம் நலம் பெறப் போற்றி என்றுமாம். இமையவர் ஏத்த இருப்பர் – தேவர்க்கெல்லாம் தேவராய் அவர்கள் தொழ விளங்குபவர். இந்திரனார் என்றுமாம்.

Gnaana-Sambandhan - truly the Deva on earth - of golden Kaazhi abounding in mansions has in exquisite excellence hailed in weal-conferring hymns the Pure Gold - the Lord of Nallaaru thus: "Wherefore have You, O Hara of abiding love chosen to get entempled at Aalavaai in Koodal?" They that can chant these ten psalms will be hailed by the celestial and abide in heaven.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

7ஆம் பதிகம் முற்றிற்று
End of 7th Hymn

உ
சிவமயம்

## 8. திரு ஆவூர்ப் பசுபதீச்சரம்

### திருத்தலவரலாறு:

திரு ஆவூர்ப் பசுபதீச்சரம் என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம் ஆகும். தஞ்சை மாவட்டம் கும்பகோணத்திற்கு அருகில் உள்ளது. கும்பகோணத்தில் இருந்து பேருந்து வசதி உள்ளது. இப்பெயரமைப்பால் தலத்தின் பெயர் ஆவூர் என்பதும், கோயிலின் பெயர் பசுபதீச்சரம் என்பதும் அறியலாம். இந்திரன், சப்தரிஷிகள், பசுக்கள் பூசித்த தலம். சுவாமி பெயர் – பசுபதீசர்; அம்மை பெயர் – மங்கள நாயகி; தீர்த்தம் – பிரமதீர்த்தம்.

### கல்வெட்டு:

அரசாங்கத்தாரால் படியெடுக்கப்பட்ட கல்வெட்டு ஒன்று கர்ப்பக் கிருகத்துக்கு மேல்தளம் அடிப்பக்கத்தில் இருக்கின்றது. திரிபுவனச் சக்கரவர்த்தியான மூன்றாம் இராஜேந்திர சோழ தேவன் மூன்றாம் ஆட்சி ஆண்டில் நித்தவினோத வளநாட்டு ஆவூர்க்கூற்றத்துப் பசுபதீஸ்வரமுடையார் கோயிலுக்கு நிலங்கள் அளித்தமையைத் தெரிவிக்கிறது.

### பதிக வரலாறு:

திருப்பூவனூர் சென்று வணங்கிய திருஞான சம்பந்தர், சிவனடியார்கள் பலர் ஏத்தொலியெடுப்ப, மிகப்பழம்பதியாகிய ஆவூரை அடைந்தார்கள். அங்குள்ள பசுபதீச்சரம் என்ற கோயிலுக்குச் சென்று வணங்கி இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 8. TIRU-AAVOOR-P-PASU-PATHI-EECH-CHARAM

### THE HISTORY OF THE PLACE

This sacred site is on the south bank of river Cauvery in the Chola country. It is near Kumbakonam in Thanjavoor district. Buses from Kumbakonam ply to this place. From the name of this holy site, it can be seen that the place is known as Avoor and the temple as Pasupatheechcharam. Indhiran, the Saptharishis (Seven Sages) and cows

offered worship here. The Lord's name is Pasupatheesar and the Mother's is Mangala Naayaki. The holy ford is Biramatheerththam.

**Stone Inscriptions**

There is one inscription, copied by the government epigraphists, at the bottom side of the upper deck of the sanctum sanctorum. This informs about the gift of lands to the temple of Niththavinodha Valanaattu Avoork Koorraththup Pasupatheesvara-mudaiyaar by the Chola monarch Thiribuvana Chakkaravarth-thiyaana (Emperor of the Three Worlds) Raajendhira Choladevan III in his third regnal year.

## INTRODUCTION TO THE HYMN

From Tiru-p-poovanoor the Saint arrived at Aavoor where he sang the following hymn. The name of the town is 'Aavoor'. The temple is called 'Pasu-pathi-eech-charam'.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 8. திரு ஆவூர்ப் பசுபதீச்சரம்

## 8. TIRU-AAVOOR-P-PASU-PATHI-EECH-CHARAM

பண் : நட்டபாடை

ராகம் : கம்பீரநாட்டை

*Pann: Natta Paadai*

*Raagam : Kambeera Naattai*

புண்ணியர் பூதியர் பூதநாதர் புடைபடு வார்தம் மனத்தார்திங்கட்
கண்ணிய ரென்றென்று காதலாளர் கைதொழு தேத்த விருந்தவூராம்
விண்ணுயர் மாளிகை மாடவீதி விரைகமழ் சோலை சுலாவியெங்கும்
பண்ணியல் பாடல றாதவாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 1

"புண்ணியர், பூதியர், பூதநாதர், புடைபடுவார் தம் மனத்தார், திங்கள் -
கண்ணியர்!" என்றுஎன்று காதலாளர் கைதொழுது ஏத்த, இருந்த ஊராம் -
விண்உயர்மாளிகை மாட வீதி விரை கமழ்சோலை சுலாவி, எங்கும்
பண் இயல் பாடல் அறாத - ஆவூர்ப் பசுபதியீச்சரம் பாடு, நாவே!

"puNNiyar, pUtiyar, pUta nAtar, puTaipaTuvAr tam man2attAr, tigkaL--
kaNNiyar!" en2Ru en2Ru kAtalALar kaitozutu Etta, irunta Ur Am--
viN uyar mALikai mATa vIti virai kamaz cOlai culAvi, egkum
paN iyal pATal aRAta--AvUrp pacupatiyIccuram pATu, nAvE!

**பொருள்:** புண்ணியம் திரண்டனைய வடிவினர் எனவும், நிறைந்த செல்வம் உடையவர் எனவும், பூத கணங்களின் தலைவர் எனவும், அருகில் வந்து பரவுவாரின் மனத்தார் எனவும், பிறைமதிக் கண்ணியர் எனவும், அன்புடை அடியவர்கள் கூறி நின்று கைதொழுது போற்றச் சிவபிரான் எழுந்தருளிய ஊர் ஆவூர் ஆகும். வானளாவ உயர்ந்த மாட மாளிகைகளோடு கூடியதும், மணம் கமழும் சோலைகளால் சூழப் பெற்றதும், எங்கும் பண்ணியலோடு கூடிய பாடல்கள் இடைவிடாது கேட்கப்படுவதும் ஆகியது ஆவூர். சிவன் அடியார்களே! இத்துணைச் சிறப்புற்ற ஆவூர்ப் பசுபதியீச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானைத் தொழுது உங்கள் நாவால் பாடுவீர்களாக!

**குறிப்புரை:** பூதியர் – செல்வம் உடையார். புடைபடுவார் – பக்கம் நண்ணிப் பரவுவார். கண்ணி – திருமுடியிற் சூடப்பெறும் மாலை.

Aavoor is the place where abides the Lord-God hailed by loving devotees with folded hands as embodiments of virtue, the Righteous One, the One that wears the chaplet of a crescent moon, and the One who abides in His loving servitors as a guiding force. Thus the devotees hail Him standing close to Him. O tongue, hail Pasu-pathi-eech-charam pervaded by ceaseless and tuneful music at Aavoor the streets of which are girt with fragrant gardens and sky-high mansions.

**Notes:** Tongue: It is regarded as sacred. The tongue is the seat of goddes Saraswathi.

Again the tongue is both Gnaanendrya and Kanmendrya.

Addressing the tongue is addressing the devotees.

முத்தியர் மூப்பில ராப்பினுள்ளார் முக்கணர் தக்கன்றன் வேள்விசாடும்
அத்திய ரென்றென் றடியரேத்தும் ஐயன ணங்கொ டிருந்தவூராம்
தொத்திய லும்பொழில் மாடுவண்டு துதைந்தெங்குந் தூமதுப் பாயக்கோயிற்
பத்திமைப் பாடல றாதவாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 2

"முத்தியர், மூப்பு இலர், ஆப்பின் உள்ளார், முக்கணர், தக்கன்தன் வேள்வி சாடும்
அத்தியர்" என்றுஎன்று அடியர் ஏத்தும் ஐயன் அணங்கொடு இருந்த ஊராம் -
தொத்து இயலும் பொழில் மாடு வண்டு துதைந்து எங்கும் தூ மதுப் பாயக், கோயில்
பத்திமைப் பாடல் அறாத - ஆவூர்ப் பசுபதியீச்சரம் பாடு, நாவே!

"muttiyar, mUppu ilar, Appin2 uLLAr, mukkaNar, takkan2 tan2 vELvi cATum
attiyar" en2Ru en2Ru aTiyar Ettum aiyan2 aNagkoTu irunta Ur Am--
tottu iyalum pozil pATu vaNTu tutaintu egkum tU matup pAya, kOyil
pattimaip pATal aRAta--AvUrp pacupatiyIccuram pATu, nAvE!

**பொருள்:** முத்திச் செல்வத்தை உடையவர் என்றும், மூப்பு இலர் என்றும், மாட்டுத் தறியில் விளங்குபவர் என்றும், முக்கண்ணர் என்றும், தம்மை இகழ்ந்து செய்த தக்கனின் வேள்வியை அழித்தவர் என்றும், அடியவர்கள் போற்றித் துதிக்கும் தலைவராகிய சிவபிரான் உமையம்மையாரோடு எழுந்தருளிய ஊர் ஆவூர் ஆகும். இவ்வூரில் பொழில்களில் கொத்தாக மலர்ந்த பூக்களில் வண்டுகள் தோய்தலால் எங்கும் தூயதேன்துளிகள் பாய்கின்றன. கோயிலில் பத்தி பூண்ட அடியவர் பாடும் பாடல் இடைவிடாது கேட்கின்றன.

**குறிப்புரை:** முத்தியர் – முத்தியின்பத்தை உடையவர். ஆப்பு – மாட்டுத்தொழுவத்துள் கன்று கட்டப்படும் முளை அல்லது தறி. கன்றாப்பூர் – நடுதறிநாதர். வேள்வி சாடும் அத்தியர் என்றது தக்கன் வேள்விக்கண் அளிக்கும் அவியை ஏற்கும் இரவலராய் இருந்தும் வேள்வியை அழித்தமை சாலாது என்னும் பழிப்பு தோன்றக் கூறியது. அத்தியர் – இரவலர். ஹத்தி என்பதன் திரிபாகக் கொண்டு கொலை என்பாரும் உளர். அது பொருந்தாமை ஓர்க. தொத்து இயலும் – பூங்கொத்துக்கள் அழகு செய்கின்ற – பத்திமைப் பாடல் – சிவபத்தியைப் பயக்கும் பாடல்கள்.

Aavoor is the place where abides the Lord-God with His consort Uma. He is hailed by the devotees as the One, who is the Conferrer of moksha. He is the One that never ages. He is the One abiding at Aappu. He is the One with three eyes. He is the One who ordered the destruction of Dakshan's yaga as Dakshan did not give due respect to Him. O tongue, hymn thee on the shrine of Pasu-pathi-eech-charam ever pervaded by ceaseless and tuneful music divine in Aavoor. The aroma from the bunches of flowers in the gardens fills the air everywhere in Aavoor. The honeybees fly from one flower to another piercing it to suck the honey resulting the honey to drip on the ground and flow in all directions in Aavoor (such a fertile place is Aavoor).

**Notes:** Moksha: The bliss of release from the cycle of birth and death.

Aappu : The peg to which calf is bounded in a cowshed. In the town called "Thiru-k-kantra-p-poor" (திருக்கன்றாப்பூர்) a saivite girl was married to a vaishnavite boy. Without the knowledge of family members, the girl was worshipping Lord Civan in the peg fixed in the cowshed of their house. One day her husband noticed this and started breaking the peg. Alas! While breaking the peg, Lord Civa appeared as a Civa Lingam out of the peg. That is referred to in this poem as "Aappin-ullaar" (ஆப்பினுள்ளார்).

பொங்கி வரும்புனல் சென்னிவைத்தார் போம்வழி வந்திழி வேற்றமானார்
இங்குயர் ஞானத்தர் வானோரேத்து மிறையவ ரென்றுமி ருந்தவூராம்
தெங்குயர் சோலைசே ராலைசாலி திளைக்கும் விளைவயல் சேரும்பொய்கைப்
பங்கய மங்கை விரும்புமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 3

*பொங்கி வரும் புனல் சென்னி வைத்தார், போம் வழி வந்து இழிவு ஏற்றம் ஆனார்,*
*இங்கு உயர் ஞானத்தர், வானோர் ஏத்தும் இறையவர், என்றும் இருந்த ஊராம் -*
*தெங்கு உயர் சோலை, சேர் ஆலை, சாலி திளைக்கும் விளைவயல், சேரும் பொய்கைப்*
*பங்கயமங்கை விரும்பும் - ஆவூர்ப் பசுபதியீச்சரம் பாடு, நாவே!*

pogki varum pun2al cen2n2i vaittAr, pOm vazi vantu izivu ERRam An2Ar,
igku uyar njAn2attar, vAn2Or Ettum iRaiyavar, en2Rum irunta Ur Am--
tegku uyar cOlai, cEr Alai, cAli tiLaikkum viLai vayal, cErum poykaip
pagkaya magkai virumpum--AvUrp pacupatiyIccuram pATu, nAvE!

***பொருள்:*** சினந்து வந்த கங்கையைத் தம் திருமுடியில் வைத்த சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் ஊர் ஆவூர் ஆகும். திருமகளால் விரும்பப்படும் ஊர் ஆவூர் ஆகும். வானவரும் துதிக்க வருகின்ற சிவபிரான் எழுந்தருளிய ஊர் ஆவூர் ஆகும். பிறப்பு-இறப்பு இவைகளினின்றும் விடுபட்டு முத்தி அடைவதற்கு இப்பூமியில் பிறந்தே ஆகவேண்டும். அவ்வாறு ஆவூரில் பிறந்தவர்களாகிய சிலர் நற்செயல்கள் செய்து ஏற்றம் அடைகிறார்கள்; சிலர் தீய செயல்களைச் புரிந்து இழிவடைகிறார்கள். ஏற்றம் பெற்றவர்களில் சிலர் சிவஞானத்தைப் பெற்றவர்களாய் உள்ளார்கள். இந்த முத்திறத்தார்களும், வானவர்களும் துதிக்க வருகின்ற சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் ஊர் ஆவூர் ஆகும். உயரமாக வளர்ந்த தென்னஞ் சோலைகளும், கரும்பாலைகளும், செந்நெல்பயிர்கள் திளைத்து விளைவு தரும் வயல்களும், பொய்கைகள் சூழ்ந்ததுமாகிய, வளம் சான்ற ஊர் இவ்வூராகும். சிவனடியார்களே அதனைப் பாடுவீர்களாக!

***குறிப்புரை:*** பொங்கி வரும் புனல் – கங்கை. அது வந்த செருக்கினைக் குறிப்பித்தபடி. போம் வழிவந்து – பிறவியினீங்கி உய்ந்து போகக்கூடிய மனிதப் பிறவியில் வந்து, இழிவு ஏற்றம் ஆனார் – தீயன செய்து இழிந்தும் நல்லன செய்து உயர்ந்தும் உய்ந்த மக்கள். இழிவேற்றமானாரும், ஞானத்தரும், வானோரும் ஏத்தும் இறைவர் என்று ஒரு தொடராக்குக. தென்னஞ் சோலைகளும் ஆலைகளும் வயல்களில் நெற்பயிர்களும் சேரும் ஆவூர் எனவும், பங்கய மங்கை விரும்பும் ஆவூர் எனவும் கூட்டுக. 'பொய்கை' மனிதர்களால் உருவாக்கப்படாத இயற்கையான நீர் நிலை.

The temple at Pasu-pathi-eechharam in Aavoor town is very dear to Goddess Lakshmi whose seat is Lotus flower. The town is rich in coconut groves and paddy fields. Sugarcane presses are located near the pools in this town. Here our Lord Civan

controlled and kept the fierce upsurging river ganges on His matted crest. Men have to be born in the earth to get relieved from the cycle of death and birth. Out of those born in Aavoor town some go down in their way of life; some others rise up in their life by virtuous deeds and acquire divine knowledge. All these people and the celestial ones throng to Lord Civan here, to pay their obeisance. Oh! Devotees! Let your tongue sing the praise of Lord Civan templed at Pasu-pathi-eech-charam in Aavoor.

**Notes:** Dear to Lakshmi : Aavoor is the place of opulence and plenty.

தேவியோர் கூறின ரேறதேறுஞ் செலவினர் நல்குர வென்னைநீக்கும்
ஆவிய ரந்தண ரல்லறீர்க்கும் அப்பனா ரங்கே யமர்ந்தவூராம்
பூவிய லும்பொழில் வாசம்வீசப் புரிகுழ லார்சுவ டொற்றிமுற்றப்
பாவியல் பாடல றாதவாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 4

தேவி ஓர் கூறினர், ஏறுஅது ஏறும் செலவினர், நல்குரவு என்னை நீக்கும்
ஆவியர், அந்தணர், அல்லல் தீர்க்கும் அப்பனார், அங்கே அமர்ந்த ஊராம் -
பூ இயலும் பொழில் வாசம் வீசப், புரிகுழலார் சுவடு ஒற்றி, முற்றப்
பா இயல் பாடல் அறாத - ஆவூர்ப் பசுபதியீச்சரம் பாடு, நாவே!

tEvi orkURin2ar, ERu atu ERum celvin2ar, nalkuravu en2n2ai nIkkum
Aviyar, antaNar, allal tIrkkum appan2Ar, agkE amarnta UrAm--
pU iyalum pozil vAcam vIca, purikuzalAr cuvaTu oRRi, muRRap
pA iyal pATal aRAta--AvUrp pacupatiyIccuram pATu, nAvE!

**பொருள்:** சிவபெருமான் உமாதேவியை ஒரு பாதியாக உடையவர். இடப வாகனத்தில் ஏறி வருபவர். வறுமை புகாதவாறு என்னைக் காப்பவர். எனக்கு உயிர் போன்றவர். கருணையர், என் துயர் போக்குதலால் எனக்குத் தந்தையாகவும் விளங்குபவர். அவர் எழுந்தருளிய ஊர் ஆவூர் ஆகும். பூக்கள் நிறைந்த பொழில்களின் வாசனை வீசுவதும், சுருண்ட கூந்தலை உடைய மகளிர் காலாலே தாளமிட்டு ஆடித் தேர்ந்த இசையோடு பாடும் பாடல்கள் இடைவிடாது கேட்கப்படுவதுமாகிய ஊர் இவ்வூரேதான்.

**குறிப்புரை:** நல்குரவு என்னை நீக்கும் ஆவியர் – வறுமை புகுதாதே என்னைக் காக்கும் உயிர் போன்றவர். இதனோடு 'இடரினும் தளரினும் எனதுறுநோய் தொடரினும் உனகழல் தொழுதெழுவேன்' என்று யாகத்துக்குப் பொன் வேண்டிய காலத்து இவர் பாடிய பாடலையும் ஒப்பிடுக. அந்தணர் – முனிவர். புரிகுழலார் சுவடு ஒற்றி – பெண்கள் காற்சுவட்டினாலே தாளமிட்டு, பாவியல் பாடல் – இசையமைந்த பாடல், பா – பரந்துபட்டுச் செல்வதோர் ஓசை.

His consort is part of Him; His carrier is the Bull; He is my very life; He rids me of my indigence; (needs or wants) He is the Andhanar; He quells my troubles and so He is my father; He is entempled in Aavoor. In the pools of Aavoor plenty of flowers blossom. The air is full with the fragrance of these flowers. Damsels having curly hairs sing and dance here. To keep time in their music, instead of using a cymbal, they keep time to their music by stamping their feet on the ground. This tuneful music is always heard in the town. In such an enraptured town, Oh! Devotees! Let your tongue sing the praise of Lord Civan templed at Pasu-pathi-eech-charam in Aavoor.

இந்தணை யுஞ்சடை யார்விடையார் இப்பிறப் பென்னை யறுக்கவல்லார்
வந்தணைந் தின்னிசை பாடுவார்பால் மன்னினர் மன்னி யிருந்தவூராம்
கொந்தணை யுங்குழ லார்விழவிற் கூட்ட மிடையிடை சேரும்வீதிப்
பந்தணை யும்விர லார்தமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 5

*இந்து அணையும் சடையார், விடையார், இப் பிறப்பு என்னை அறுக்க வல்லார்,*
*வந்து அணைந்து இன்னிசை பாடுவார்பால் மன்னினர், மன்னி இருந்த ஊராம் -*
*கொந்து அணையும் குழலார் விழவில் கூட்டம் இடைஇடை சேரும் வீதி,*
*பந்து அணையும் விரலார்தம் - ஆவூர்ப் பசுபதியீச்சரம் பாடு, நாவே!*

intu aNaiyum caTaiyAr, viTaiyAr, ip piRappu en2n2ai aRukka vallAr,
vantu aNaintu in2 icai pATuvAr pAl man2n2in2ar, man2n2i irunta Ur Am--
kontu ?Naiyum kuzalAr vizavil kUTTam iTai iTai cErum vIti,
pantu aNaiyum viralArtam--AvUrp pacupatiyIccuram pATu, nAvE!

**பொருள்:** திங்கள் தங்கும் சடையினரும், விடையை ஊர்தியாக உடையவரும், இப்பிறவியில் என்னைப் பற்றிய வினையை நீக்கி முத்தியளிக்க வல்லவரும், தம்மை வந்தடைந்து இன்னிசையால் பாடி வழிபடுவாரிடம் மன்னியிருப்பவரும் ஆகிய சிவபிரான், நிலைபெற்று விளங்கும் ஊர் ஆவூர் ஆகும். பூங்கொத்தணிந்த கூந்தலை உடைய மங்கல மகளிர் வாழ்வதும், திருவிழாக்களில் மக்கள் கூட்டம் இடையிடையே சேரும் அகன்ற வீதிகளை உடையதும், பந்தாடும் கைவிரல்களினராகிய இளம்பெண்கள் நிறைந்ததுமாகிய ஊரும் இவ்வூரே ஆகும்.

குறிப்புரை: இந்து – சந்திரன்; இப்பிறப்பு அறுக்க வல்லார் என்றது என் வினை முழுவதும் உலர்ந்து போதலின் முத்தி அளிக்க வல்லார் என்பதாம். வந்து அணைந்து – திருக்கோயிலின் திருவணுக்கன்

திருவாயிலை வந்து அடைந்து. மன்னினர் – நிலைபெற்று இருப்பவர். கொந்து – பூங்கொத்து; குழலார் விரலார் என்பன மகளிரைக் குறித்து நின்றன.

Lord Civan sports a crescent moon on His matted hair; the Bull is His mount. He is, capable of bestowing salvation on me by removing the ill effects of my karmaa in this birth. Lord Civan abides with those devotees who approach Him, offer their obeisance, and worship Him with Divine Music. He *is enthroned at Pasu-pathi-eech-charam* temple in Aavoor town. Damsels living here wear big bunches of flowers in their heads. During temple festivals men walk around the broad streets of Aavoor. Young girls are in large number here whose fingers sport the flower balls. Oh! Devotees! Let your tongue sing the praise of Lord Civan templed at Pasu-pathi-eech-charam in Aavoor.

**Notes:** Flower Balls: Girls in ancient Tamilnadu used flower balls at play.

குற்ற மறுத்தார் குணத்தினுள்ளார் கும்பிடு வார்தமக் கன்புசெய்வார்
ஒற்றை விடையினர் நெற்றிக்கண்ணார் உறைபதி யாகுஞ் செறிகொண்மாடம்
சுற்றிய வாசலின் மாதர்விழாச் சொற்கவி பாடநி தானநல்கப்
பற்றிய கையினர் வாழுமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 6

குற்றம் அறுத்தார், குணத்தின் உள்ளார், கும்பிடுவார் தமக்கு அன்பு செய்வார்,
ஒற்றை விடையினர், நெற்றிக்கண்ணார், உறை பதி ஆகும் - செறிகொள் மாடம்
சுற்றிய வாசலில் மாதர் விழாச் சொல் கவி பாட, நிதானம் நல்க,
பற்றிய கையினர், வாழும் - ஆவூர்ப் பசுபதியீச்சரம் பாடு, நாவே!

kuRRam aRuttAr, kuNattin2 uLLAr, kumpiTuvAr tamakku an2pu ceyvAr,
oRRai viTaiyin2ar, neRRikkaNNAr, uRai pati Akum--ceRikoL mATam
cuRRiya vAcalil mAtar vizAc col kavi pATa, nitAn2am nalka,
paRRiya kaiyin2ar, vAzum--AvUrp pacupatiyIccuram pATu, nAvE!

**பொருள்:** அடியவர் செய்யும் குற்றங்களை நீக்கியவரும், நற்குணங்களை உடையோரிடம் வாழ்பவரும், தம்மைக் கும்பிடுவார்க்கு அன்பு செய்பவரும், ஓர் எருதைத் தமக்கு ஊர்தியாகக் கொண்டவரும், பிறர்க்கில்லாத நெற்றிக் கண்ணை உடையவரும் ஆகிய சிவபிரான் உறையும் பதி ஆவூர் ஆகும். செறிந்த மாட வீடுகளைச் சார்ந்துள்ள வாசலில் விழாக் காலங்களில் பெண்கள் புகழ்ந்து கவி பாடக் கேட்டு அவ்வீடுகளில் வாழும்

செல்வர்கள் பொற்காசுகள் வழங்க, அதனைப் பற்றிய கையினராய் மகளிர் மகிழ்ந்துறையும் ஊரும் இதுவே ஆகும்.

**குறிப்புரை:** குற்றம் அறுத்தார் – அடியார்கள் செய்த குற்றங்களை நீக்கியவர். குற்றம் மறுத்தார் – நறுநாற்றத்திலன்றி தீநாற்றத்தில் செல்லாத வண்டுபோல் குற்றங்களில் சென்று பொருந்த மறுத்தவர். மாதர்கள் விழாவின்கண் சொல்லானியன்ற கவிகளைப் பாட, அதனைக் கண்ட மாந்தர்கள் பொன்னளிக்க, அதனை ஏற்ற கையர்களாய் வாழ்கின்ற ஆவூர் என்க. நிதானம் – பொன், நிதானம் – "முற்காரணம் தூய்மை நியமம் நிதி மறைத்துக்கொள் பொருள் கன்றின் கயிறாம்" என்பது நானார்த்ததீபிகை.

He annuls the flaws of His servitors. He is poised in virtue. His mount is the peerless bull. He sports an eye in His forehead. Aavoor is where He resides in the Pasu-pathi-eech-charam temple. During festive days women gather in front of mansions and sing in praise of Lord Civan. Hearing the Divine songs the rich who live in those mansions bestow gold gifts on them. They gladly receive these and live joyfully in Aavoor. Oh! Devotees! Let your tongue sing the praise of Lord Civan templed at Pasu-pathi-eech-charam in Aavoor.

நீறுடை யார்நெடு மால்வணங்கு நிமிர்சடை யார்நினை வார்தமுள்ளம்
கூறுடை யாருடை கோவணத்தார் குவலய மேத்தவி ருந்தவூராம்
தாறுடை வாழையிற் கூழைமந்தி தகுகனி யுண்டுமிண் டிட்டினத்தைப்
பாறிடப் பாய்ந்து பயிலுமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 7

நீறு உடையார், நெடுமால் வணங்கும் நிமிர்சடையார், நினைவார் தம் உள்ளம்
கூறு உடையார், உடை கோவணத்தார், குவலயம் ஏத்த இருந்த ஊராம் -
தாறு உடை வாழையில் கூழைமந்தி தகு கனி உண்டு மிண்டிட்டு, இனத்தைப்
பாறிடப் பாய்ந்து பயிலும் - ஆவூர்ப் பசுபதியீச்சரம் பாடு, நாவே!

nIRu uTaiyAr, neTumAl vaNagkum nimir caTaiyAr, nin2aivAr tam uLLam
kURu uTaiyAr, uTai kOvaNattAr, kuvalayam Etta irunta Ur Am--
tARu uTai vAzaiyil kUzai manti taku kan2i uNTu miNTiTTu, in2attaip
pARiTap pAyntu payilum--AvUrp pacupatiyIccuram pATu, nAvE!

**பொருள்:** திருவெண்ணீற்றை அணிந்தவரும், திருமாலால் வணங்கப் பெறுபவரும், நிமிர்த்துக் கட்டிய சடைமுடி உடையவரும், தம்மை நினைவார் உள்ளத்தில் குடி கொண்டிருப்பவரும், கோவண ஆடை தரித்தவரும் ஆகிய சிவபிரான், மண்ணுலக மக்கள் தம்மைப் புகழ்ந்து போற்ற எழுந்தருளிய ஊர் ஆவூர் ஆகும். குள்ளமான மந்தி பழுத்துள்ள வாழைத் தாற்றில்



திருநள்ளாறு – தர்ப்பாரண்யேசுவரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Darbarannyesrar Temple - Tirunallaru, Tamil Nadu.**



ஆவூர்ப்பசுபதீச்சுரம் – பசுபதீஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Pasupatisurar Temple - Aavur Pasupaticchuram (Aavur), Tamil Nadu**

திருவண்ணாமலை – அண்ணாமலையார் – நடுநாட்டுத் தலம்

**Annamalaiyar Temple - Tiruvannamalai, Tamil Nadu**



திருமுதுகுன்றம் (விருத்தாச்சலம்) – பழமலைநாதர் – நடுநாட்டுத் தலம்

**Pazhamalai Nathar Temple - Tirumuthukuntram (Viruthachalam), Tamil Nadu**

உண்ணத் தகுதியான பழங்களை வயிறார உண்டு, எஞ்சியுள்ள பழங்களை உண்ணவரும் குரங்குகளை அஞ்சுமாறு பாய்ந்து விரட்டும் தோட்டங்களை உடையதும் இவ்வூரே ஆகும்.

**குறிப்புரை:** நீறுடையார் – தாம் தொன்மைக்கெல்லாம் தொன்மையாயிருத்தலைத் தோற்றுவிக்கச் சர்வசங்கார காலத்துத் திருநீற்றினைத் திருமேனியில் அணிந்தவர். உள்ளம் கூறுடையார் – உள்ளத்தில் குடி கொண்டிருப்பர், தாறிட்ட வாழையில் தழைவால் மந்திகள் கனிந்த பழத்தை உண்டு செருக்கி, குரங்கினத்தைக் கலைந்தோடப் பாய்கின்ற ஆவூர் என்றதால் நினைந்து உருகும் அடியார்க்குச் சிவாநுபவ வன்மை யளிக்கும் ஆவூர் என்பது குறிப்பால் போந்த பொருள்.

He smears His body with the holy ash. He, the One, that holds fast His matted hair in an upright position. He is adored by Vishnu; He abides in the minds of devotees who always think of Him. He wears a loincloth. Aavoor is the town where He dwells hailed by all worldly people. In the plantain gardens of Aavoor, monkeys eat the ripe fruits to the fullness of stomach, and chase away the other monkeys that come to eat the residual fruits. Such fertile place is Aavoor. Oh! Devotees! Let your tongue sing the praise of Lord Civan templed at Pasu-pathi-eech-charam in Aavoor.

வெண்டலை மாலை விரவிப்பூண்ட மெய்யுடை யார்விற லாரரக்கன்
வண்டமர் பூமுடி செற்றுகந்த மைந்தரி டம்வள மோங்கியெங்கும்
கண்டவர் சிந்தைக் கருத்தின்மிக்கார் கதியரு ளென்றுகை யாரக்கூப்பிப்
பண்டலர் கொண்டு பயிலுமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 8

**வெண்தலைமாலை விரவிப் பூண்ட மெய் உடையார், விறல் ஆர் அரக்கன்**
**வண்டு அமர் பூ முடி செற்று உகந்த மைந்தர், இடம்-வளம் ஓங்கி, எங்கும்**
**கண்டவர், சிந்தைக் கருத்தின் மிக்கார், "கதி அருள்!" என்று கை ஆரக் கூப்பிப்,**
**பண்டு அலர் கொண்டு பயிலும் - ஆவூர்ப் பசுபதியீச்சரம் பாடு, நாவே!**

veN talai mAlai viravip pUNTa mey uTaiyAr, viRal Ar arakkan2
vaNTu amar pU muTi ceRRu ukanta maintar, iTam--vaLam Ogki, egkum
kaNTavar, cintaik karuttin2 mikkAr, "kati aruL!" en2Ru kai Arak kUppi,
paNTu alar koNTu payilum--AvUrp pacupatiyIccuram pATu, nAvE!

**பொருள்:** வெண்மையான தலைகளை மாலையாகக் கோத்துப் பிற மாலைகளுடன் அணிந்துள்ள திருமேனியை உடையவரும், வண்டுகள் மொய்க்கும் மலர்களைச் சூடிய வலிய இராவணனின் முடியை நெரித்து மகிழ்ந்த வலியரும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள இடம் ஆவூர் ஆகும். எங்கும் வளம் ஓங்கியதும், தரிசித்தவர்கள் சித்தத்தால் உயர்ந்தவர்களாய்த் தமக்குக் கதியருள் என்று கைகளைக் கூப்பிப் பழமைதொட்டுச்

சிவபெருமானுக்கு உரியனவாகிய மலர்களைச் சாத்தி வழிபடும் இயல்பினதும் ஆகியதும் இவ்வூரே ஆகும்.

**குறிப்புரை:** வெண்டலை மாலை உம்மைத் தொகை; வெண் தலைகளையும் மாலை களையும் கலந்து அணிந்த திருமேனி உடையவர். விறல் – வலிமை. நாளும் புதுப்பூச்சூடி, போகம் நுகர்பவனாதலின் இராவணன் முடி வண்டமர் பூமுடி எனப்பட்டது. அதனைச் செற்றுகந்த மைந்தர் என்பதால் வினைப்போகக் கழிவின்கண் ஆட்கொள்ளும் இறைவன் என்பதும் போதரும், சிந்தைக் கருத்து – இடைவிடாத சிந்தனையால் எழுந்த கருத்து.

He wears garland of white skulls and other wreaths. He is the mighty One who crushed the heads of the martial Raakshasa (Raavanan) who wore wreaths of flower buzzed by bees. This fertile Aavoor is the place where seers eye Him everywhere, contemplate on Him with intense concentration, adore Him with folded hands, offer unto Him fruits and flowers and implore Him thus: 'O Lord! Be pleased to bless us with salvation'. Oh! Devotees! Let your tongue sing the praise of Lord Civan templed at Pasu-pathi-eech-charam in Aavoor.

மாலு மயனும் வணங்கிநேட மற்றவ ருக்கெரி யாகிநீண்ட
சீல மறிவரி தாகிநின்ற செம்மையி னாரவர் சேருமூராம்
கோல விழாவி னரங்கதேறிக் கொடியிடை மாதர்கண் மைந்தரோடும்
பாலென வேமொழிந் தேத்துமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 9

மாலும் அயனும் வணங்கி நேட, மற்று அவருக்கு எரியாகி நீண்ட,
சீலம் அறிவு அரிதுஆகி நின்ற, செம்மையினார் அவர் சேரும் ஊராம் -
கோல விழாவின் அரங்கு அது ஏறிக், கொடிஇடை மாதர்கள் மைந்தரோடும்,
பால் எனவே மொழிந்து ஏத்தும் - ஆவூர்ப் பசுபதியீச்சரம் பாடு, நாவே!

mAlum ayan2um vaNagki nETa, maRRu avarukku eri Aki nINTa,
cIlam aRivu aritu Aki nin2Ra, cemmaiyin2Ar avar cErum Ur Am--
kOla vizAvin2 aragku atu ERi, koTi iTai mAtarkaL maintarOTum,
pAl en2avE mozintu Ettum--AvUrp pacupatiyIccuram pATu, nAvE!

**பொருள்:** திருமாலும், பிரமனும் வணங்கித் தேட, அவர்கட்குச் சோதிப் பிழம்பாய் நீண்டு தோன்றியவரும், தமது எளிமை பிறரால் அறிதற்கு அரியராய் விளங்குபவரும் செம்மையாரும் ஆகிய சிவபிரான் எழுந்தருளிய ஊர் ஆவூர் ஆகும். அழகிய விழாக் காலங்களில் கொடி போன்ற இடையினை உடைய பெண்கள் அரங்கின்கண் ஏறி ஆடவர்களோடு கூடிப் பால் போன்று இனிக்கும் மொழிகளால் இறைவனை ஏத்தும் ஊரும் இவ்வூரே ஆகும்.

**குறிப்புரை:** நேட – தேட. மற்று வினைமாற்றுப் பொருளில் வந்தது. சீலம் – எளிமை; இதனைச் சௌலப்யம் என்பர் வடநூலார். சீலமாவது அடியார்க்கு எளியராய் இருக்கும் தன்மை. மாலும் அயனும் தேட அவர்களுக்கு அறிதற்கரிய சோதிப் பிழம்பாய்த் தோன்றியும் பின்னர் அவர்கள் துதித்து நிற்க அருளிய எளிமையை விளக்கியது. அதனைச் சிற்றறிவுடைய ஆன்மாக்கள் அறியமுடியாமையால் அறிவரிதாகிநின்ற என்றார். கோல விழா – அழகிய விழா. மாதரும் மைந்தரும் அரங்கேறியும் பால்போன்ற மொழியால் இறைவனை ஏத்துகிறார்கள் என்பது. இன்பக் காலத்தும் இறைவனையே தியானிக்கும் பெருமை விளக்கியவாறு.

He is the perfect One of incomprehensible excellence, who when searched for by Vishnu and Brahma, soared up as a huge and tall column of fire, beyond their reach. Aavoor is the place where He abides. In this town during festivals, the lean-waisted women ascend the forum with their valiant spouses and hail Lord Civan in words, sweet as milk. Oh! Devotees! Let your tongue sing the praise of Lord Civan templed at Pasu-pathi-eechharam in Aavoor.

**Notes:** An insight into the elaborate festival arrangements glorifying Lord Civa. Also confer St. Appar's "*முத்து விதான மணிப்பொறகவரி ...*
*...*", describing various details of festivities (Appar on return from *ஆதிரை* at *திருவாரூர்*).

பின்னிய தாழ்சடை யார்பிதற்றும் பேதைய ராஞ்சமண் சாக்கியர்கள்
தன்னிய லும்முரை கொள்ளகில்லாச் சைவ ரிடந்தள வேறுசோலைத்
துன்னிய மாதரு மைந்தர்தாமுஞ் சுனையிடை மூழ்கித் தொடர்ந்தசிந்தைப்
பன்னிய பாடல் பயிலுமாவூர்ப் பசுபதி யீச்சரம் பாடுநாவே. 10

**பின்னிய தாழ்சடையார், பிதற்றும் பேதையராம் சமண் சாக்கியர்கள்**
**தன்இயலும்(ம்) உரை கொள்ளகில்லாச் சைவர், இடம் - தளவு ஏறு சோலைத்**
**துன்னிய மாதரும் மைந்தர்தாமும் சுனைஇடை மூழ்கித், தொடர்ந்த சிந்தைப்**
**பன்னிய பாடல் பயிலும் - ஆவூர்ப் பசுபதியீச்சரம் பாடு, நாவே!**

pin2n2iya tAzcaTaiyAr, pitaRRum pEtaiyar Am camaN cAkkiyarkaL
tan2 iyalum(m) urai koLLakillAc caivar, iTam--taLavu ERu cOlait
tun2n2iya mAtarum maintar tAmum cun2ai iTai mUzki, toTarnta cintaip
pan2n2iya pATal payilum--AvUrp pacupatiyIccuram pATu, nAvE!

**பொருள்:** பின்னித் தொங்கவிடப்பட்ட சடையை உடைய சமண இல்லறத்தார்களும் சாக்கியர்களும் தங்களைப் பற்றியும் தாங்கள் சார்ந்த மதங்களின் சிறப்புக்களைப் பற்றியும்

கூற, அவற்றை ஏற்க மறுத்தவராய் விளங்கும் சிவபெருமானாகிய ஆதி சைவன் விரும்பி உறையும் இடம் ஆவூர் ஆகும். முல்லைக் கொடி படர்ந்த சோலைகளில் மாதரும் மைந்தரும் நெருங்கிச் சுனையில் மூழ்கிச் சிவபிரானை மனம் ஒன்றிப் பாடுவதும் இவ்வூரே ஆகும்.

***குறிப்புரை:*** பின்னிய தாழ் சடையார் – பின்னித் தொங்கவிடப் பெற்ற சடையை உடையவர்கள்; சமணரில் இல்லறத்தாராகிய ஆண்கள் தலையைப் பின்னித் தொங்க விடுதல் மரபு. இன்றும் உலகத்தில் பல இனத்து ஆடவரிடையே இந்த மரபைக் காணலாம். சாக்கியர் – புத்தர். தன்னியலும் உரை – தன்னைப் பற்றி அவர்கள் சொல்லும் உரைகள். உரைகொள்ள கில்லாச் சைவர் – அவ்வுரைகளுக்குப் பொருளாகத் தாம் ஆகாத சிவபெருமான் என்றது, சிவத்தைப் பற்றி அவர்கள் கூறும் உரைகள் சிற்றறிவினால் சொல்லப்பட்டன ஆதலின் அவற்றைக் கடந்துநின்ற இயல்பினை உடையவர் என்பதாம். தளவு – முல்லை. மாதரும் மைந்தரும் சுனையில் மூழ்கிப் புறத்தூய்மையோடு அகத்தூய்மையும் கொண்டு வழிபடுகின்றனர் என்றவாறு.

The Jain householders plait their hair and let it hang it on their back. These people and the Buddhists blabber about themselves and their religion. Lord Civan who is beyond these remarks ignores their sayings. He loves to stay in Aavoor. Mullai creepers grow in the pools situated in the gardens where women bathe with their spouses and proceed to the shrine singing psalms, with their mind solely set on the Lord God at Pasu-pathi-eech-charam. Oh! Devotees! Let your tongue sing the praise of Lord Civan templed at Pasu-pathi-eech-charam in Aavoor.

**Notes:** Saint Sambandhar refers to Civa as a Saiva. Civa is indeed the Anaadhi Civa (aeviternal saivite). Mullai: A fragrant flower.

எண்டிசை யாரும்வ ணங்கியேத்து மெம்பெரு மானையெ ழில்கொளாவூர்ப்
பண்டுரி யார்சிலர் தொண்டர்போற்றும் பசுபதி யீச்சரத் தாதிதன்மேல்
கண்டல்கண் மிண்டிய கானற்காழிக் கவுணியன் ஞானசம் பந்தன்சொன்ன
கொண்டினி தாவிசை பாடியாடிக் கூடும வருடை யார்கள்வானே. 11

எண்திசையாரும் வணங்கி ஏத்தும் எம்பெருமானை, எழில் கொள் ஆவூர்ப்
பண்டு உரியார் சிலர் தொண்டர் போற்றும் பசுபதியீச்சரத்து ஆதி தன் மேல்,
கண்டல்கள் மிண்டிய கானல் காழிக் கவுணியன் - ஞானசம்பந்தன் - சொன்ன
கொண்டு, இனிதா இசை பாடி ஆடிக் கூடுமவர் உடையார்கள், வானே

eN ticaiyArum vaNagki Ettum emperumAn2ai, ezil koL AvUrp
paNTu uriyAr cilar toNTar pORRum pacupatiylccurattu Atitan2mEl,
kaNTalkaL miNTiya kAn2al kAzik kavuNiyan2--njAn2acampantan2--con2n2a
koNTu, in2itA icai pATi ATik kUTumavar uTaiyArkaL, vAn2E.

**பொருள்:** எட்டுத் திசையில் உள்ளவர்களும் வணங்கிப் போற்றும் எம் தலைவரும், அழகிய ஆவூரில் பழ அடியார்களால் போற்றப் பெறுபவரும் ஆகிய பசுபதீயீச்சரத்து இறைவர்மேல் தாழை மரங்கள் நிறைந்த கடற்கரைச் சோலைகளால் சூழப்பட்ட சீகாழிப் பதியில் கவுணியர் குடியில் தோன்றிய ஞானசம்பந்தன் பாடிய பாடல்களை இசையோடு பாடி ஆடி வணங்குபவர்கள், வானகத்தைத் தமது உடைமையாகப் பெறுவர்.

**குறிப்புரை:** திசையில் உள்ளார் அனைவரும் வணங்கும் பெருமானை ஆவூரில் வழிவழி உரிமைபூண்ட சிவ அடியார்கள் போற்றுகின்றார்கள் என்பதாம். கண்டல் – தாழை, சொன்ன – சொல்லினவாய பாடல்கள், பாடி – வாய்த்தொண்டு. ஆடி – மெய்த் தொண்டு. கூடுதல் – சிந்தைத் தொண்டு. கூடுமவர் – தியானிப்பவர்.

Gnaana-sambandhan, the Kauniya of litoral Kaazhi rich in fragrant screwpines, hath sung of the Lord God who is hailed by all the gods of the eight fold directions. He who has no Alpha or Omega (the primordial), is enshrined in beautiful Pasu-pathi-eech-charam. He is hailed by the blessed traditional servitors of Aavoor. Heaven is theirs who gather to recite these hymns melodiously, and dance (in glee).

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*8ஆம் பதிகம் முற்றிற்று*
**End of 8th Hymn**

உ
சிவமயம்

# 9. திரு வேணுபுரம்

## திருத்தல வரலாறு:

முதல் பதிகம் பார்க்க.

## பதிக வரலாறு:

மயிலையில் பூம்பாவையை உயிர்ப்பித்த பிள்ளையார், திருவான்மியூர், இடைச்சுரம், கழுக்குன்றம், அச்சிறுபாக்கம், அரசிலி புறவார் பனங்காட்டூர் ஆகிய தலங்களை வழிபட்டு, நற்றவர் குழாத்தோடும், ஆனந்த நடராஜர் ஞானநடஞ்செயும் தில்லையம்பதியின் எல்லையில் வணங்கிக் கொண்டு, திருக்கழுமலம் சென்றடைந்து, சீகாழிப் பதியைத் தூரத்தே கண்டதும், பல்லக்கை விட்டிறங்கி, 'வண்டார் குழல் அரிவை' என்னும் இப்பதிகத்தைப் பாடி அருளுகிறார். இத்திருப்பதிகத்தின் ஒன்று முதல் பத்துப் பாடல்களும் சிவபிரானது ஊர் வேணுபுரம் என உள்ளவாறே பொருள் கொள்ளத் தக்கன. தூரத்தே கண்டதும் பாடினார் என்பதற்கு 'வேணுபுரம் அதுவே' என்றதே அகச் சான்றாயிற்று. வேணுபுரம் என்பது சீகாழியின் 12 பெயர்களில் ஒன்று.

# 9. THIRU-VENU-PURAM

## THE HISTORY OF THE PLACE

See First Hymn.

## INTRODUCTION TO THE HYMN

Returning from his pilgrimage of Thondai Nadu, the young saint reached the outskirts of Seekaazhi, which is Venupuram. He then got down from the palanquin in which he was travelling and sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 9. திரு வேணுபுரம் 9. THIRU-VENU-PURAM

பண் : நட்டபாடை
ராகம் : கம்பீரநாட்டை

*Pann: Natta Paadai*
*Raagam : Kambeera Naattai*

வண்டார்குழ லரிவையொடு பிரியாவகைபாகம்
பெண்டான்மிக வானான்பிறைச் சென்னிப்பெருமானூர்
தண்டாமரை மலராளுறை தவளந்நெடுமாடம்
விண்டாங்குவ போலும்மிகு வேணுபுரமதுவே. 1

*வண்டு ஆர் குழல் அரிவையொடு பிரியா வகை பாகம்*
*பெண்தான் மிக ஆனான், பிறைச் சென்னிப் பெருமான், ஊர் -*
*தண்தாமரை மலராள் உறை தவள(ந்) நெடுமாடம்*
*விண் தாங்குவ போலும்(ம்) மிகு - வேணுபுரம் அதுவே.*

vaNTu Ar kuzal arivaiyoTu piriyA vakai pAkam
peNtAn2 mika An2An2, piRaic cen2n2ip perumAn2, Ur--
taN tAmarai malarAL uRai tavaLa(n) neTumATam
viN tAgkuva pOlum(m) miku--vENupuram atuvE.

**பொருள்:** வண்டுகள் மொய்க்கும் கூந்தலை உடைய பெண்ணாகிய உமையம்மை, தன்னிற் பிரியாதிருக்கத் தன் திருமேனியில் இடப்பாகத்தை அளித்து, அப்பாகம் முழுதும் பெண் வடிவானவனும், பிறையணிந்த திருமுடியை உடையவனும் ஆகிய பெருமானது ஊர், தாமரை மலரில் விளங்கும் திருமகள் வாழும் வெண்மையான பெரிய மாடங்கள் விண்ணைத் தாங்குவன போல உயர்ந்து விளங்கும் வேணுபுரமாகும்.

**குறிப்புரை:** இது உமாதேவியைப் பிரியாதிருக்க ஒரு பாகமே பெண்ணான பெருமான் ஊர் வேணுபுரம் என்கின்றது. வண்டார் குழல் அரிவை – வண்டுகள் மொய்க்கும் கூந்தலை உடைய பெண்ணாகிய உமை. பிரியாவகை – பிரியாதிருக்க. பாகம் – ஒரு பாகத்திலேயே. மிகப் பெண் ஆனான் – முழுதும் பெண் வடிவானவன். தவளம் – வெண்மை. மாடம் விண் தாங்குவ போலும் என்றது உயர்வு நவிற்சியணி.

Lord Civan who sports a crescent moon on His crest is inseparably concorporate with His Consort Umaa whose (flowery) locks are buzzed by honeybees. His left half is wholly of a woman's frame. Venupuram is His town where He is enthroned and from where graces His devotees. Goddess Lakshmi whose seat is Lotus flower lives here in huge, white tall mansion which appears as though they are holding aloft the sky. Such tall mansions are many in Venupuram.

**Note:** Venupuram is one of the twelve names of Seekaazhi. Venu means Bamboo. Scared of Soorapadma, Indira hid himself in a bamboo tree in this place and performed Civa Pooja.

படைப்புந்நிலை யிறுதிப்பயன் பருமையொடுநேர்மை
கிடைப்பல்கண முடையான்கிறி பூதப்படையானூர்
புடைப்பாளையின் கமுகின்னோடு புன்னைமலர்நாற்றம்
விடைத்தேவரு தென்றன்மிகு வேணுபுரமதுவே. 2

*படைப்பு(ந்), நிலை, இறுதிப் பயன், பருமையொடு, நேர்மை,*
*கிடைப் பல்கணம் உடையான், கிறி பூதப்படையான், ஊர் -*
*புடைப் பாளையின் கமுகி(ன்)னோடு புன்னைமலர் நாற்றம்*
*விடைத்தே வரு தென்றல் மிகு - வேணுபுரம் அதுவே.*

paTaippu(n), nilai, iRuti, payan2, parumaiyoTu, nErmai,
kiTaip palkaNam uTaiyAn2, kiRi pUtappaTaiyAn2, Ur--
puTaip pALaiyin2 kamuki(n2)n2oTu pun2n2ai malar nARRam
viTaittE varu ten2Ral miku--vENupuram atuvE.

**பொருள்:** படைத்தல், காத்தல், அழித்தல் ஆகிய முத்தொழில் புரிவோனும், அவற்றின் முடிந்த பயனாய வீட்டின்ப வடிவாய் விளங்குவோனும், பருமை நுண்மை இவற்றிற்கோர் எல்லையாக இருப்பவனும், வேதங்களை ஓதும் கணங்களை உடையோனும், வஞ்சகமான பூதப் படைகளை உடையவனும் ஆகிய சிவபிரானது ஊர், பக்கங்களில் வெடித்து மலர்ந்திருக்கும் கமுகம் பாளையின் மணத்தோடு புன்னை மலர்களின் மணத்தைத் தாங்கி மெல்லெனப் பெருமிதத்தோடு வரும் தென்றல் காற்று மிகுந்து வீசும் வேணுபுரம் ஆகும்.

***குறிப்புரை:*** படைப்பு – சிருஷ்டி. நிலை – திதி. இறுதி – சம்ஹாரம். பயன் – முத்தொழிலின் பயனாகிய வீட்டின்பத்தின் வடிவாய் இருப்பவன். பயன் – பயன் வடிவாகிய இறைவனை உணர்த்திற்று. பருமை – பருப்பொருள். நேர்மை – நுண் பொருள். என்றது அணுவுக்கு அணுவாயும் பெரியவற்றிற்கெல்லாம் பெரிதாயும் நிற்கும் இறைவனின் நிலை உணர்த்தியவாறு. கிடை பல் கணம் உடையான் – வேதத்தை ஓதும் கூட்டமாகிய பல சிவகணங்களை உடையவன். கிடை – வேதம் ஓதும் கூட்டம். 'ஓதுகிடையின் உடன் போவார்' (பெரிய, சண்டே – 17) கிறி – வஞ்சகம். புடைப்பாளை – பக்கங்களில் வெடித்து மலர்ந்திருக்கின்ற பாளைகள். விடைத்தே – வேறுபடுத்திய, கமுகு புன்னைகளின் நாற்றத்தை ஒன்றாகக் காட்டாது மிக்கு வேறு படுத்திக் காட்டுகிறது.

Lord Civan's main threefold activities are creation, sustenance and absorption. He is the ultimate fruit that is moksha. He is ir-reducible speck as well the biggest of all the big. He is the Lord of Hosts of (gobbins) demons (warrior giants) who are reciting

the Vedas. He is also the Lord of deceitful demons. Behold He abides in Venupuram. The areca flower bunches burst out from the sides of the plant, and blossoms. The fragrance emanating from the flowers of mast wood (Punnai trees – *புன்னைமரம்*) trees as well the smell from the areca flowers fill the proud southern wind that gently blows through Venupuram.

**Note:** Punnai: Mast wood - A tree. The oil extracted from its fruit is used to light lamps (*Alexandrian laural*).

கடந்தாங்கிய கரியையவர் வெருவவுரிபோர்த்துப்
படந்தாங்கிய வரவக்குழைப் பரமேட்டிதன்பழவூர்
நடந்தாங்கிய நடையார்நல பவளத்துவர்வாய்மேல்
விடந்தாங்கிய கண்ணார்பயில் வேணுபுரமதுவே. 3

*கடம் தாங்கிய கரியை அவர் வெருவ உரி போர்த்து,*
*படம் தாங்கிய அரவக்குழைப் பரமேட்டி தன் பழ ஊர் -*
*நடம் தாங்கிய நடையார், நல பவளத்துவர்வாய், மேல்*
*விடம் தாங்கிய கண்ணார், பயில் - வேணுபுரம் அதுவே.*

kaTam tAgkiya kariyai,avaL veruva uri pOrttu,
paTam tAgkiya aravakkuzaip paramETTitan2 paza Ur--
naTam tAgkiya naTaiyAr, nala pavaLattuvar vAy, mEl
viTam tAgkiya kaNNAr, payil--vENupuram atuvE.

**பொருள்:** தாருகாவனத்து முனிவர்கள் ஏவிய மதநீர் ஒழுகும் யானையை அம்முனிவர்கள் வெருவுமாறு உரித்துப் போர்த்தவரும், படத்தோடு கூடிய பாம்பைக் குழையாக அணிந்தவரும் ஆகிய சிவபிரானது பழமையான ஊர், நடனத்துக்குரிய சதிகளோடு கூடிய நடையையும், அழகிய பவளம் போன்ற சிவந்த வாயினையும் குளிர்ச்சியான பார்வை உடைய கண்களையும், கொண்டுள்ள அழகிய மகளிர் பலர் வாழும் வேணுபுரம் ஆகும்.

**குறிப்புரை:** கடம் – மதநீர். அவர் வெருவ – யானையை ஏவிய தாருகாவனத்து முனிவர்கள் அஞ்ச, பழவூர் என்றது மகா–ப்–பிரளய காலத்திற்கும் தொன்மையதாதலின். நடந்தாங்கிய நடையார் – நடனத்திற்கு ஏற்ற ஜதிவைப்பைத் தாங்கிய நடையை உடையவர்கள். துவர் – சிவப்பு. விடந்தாங்கிய – குளிர்ச்சி பொருந்திய. விடம் – மிகவும் குளிர்ச்சியான பொருள்.

The Munis of Darukaa Vanam (*தாருகா வனத்து முனிவர்கள்*) commandeered a rutting male elephant to kill Lord Civan. When the tusker approached Lord Civan, He tore its skin and wore it on His body that made all the Munis tremble. Lord Civan wore the hooded serpent as His ear pendant (male ornament). Venupuram is the very old

town where Lord Civa abides. Here live lovely girls of ruddy and coral like lips. Even their ordinary steps follow the rule of dance. Their eyes bear a piercing cool look.

**Note:** Munis: The munis of Tarukaavanam who performed a sacrifice with intent to do away with Civa, in vain.

தக்கன்றன சிரமொன்றினை யரிவித்தவன்றனக்கு
மிக்கவ்வர மருள்செய்தவெம் விண்ணோர்பெருமானூர்
பக்கம்பல மயிலாடிட மேகம்முழவதிர
மிக்கம்மது வண்டார்பொழில் வேணுபுரமதுவே. 4

*தக்கன் தன சிரம் ஒன்றினை அரிவித்து, அவன் தனக்கு*
*மிக்க(வ்) வரம் அருள் செய்த எம் விண்ணோர் பெருமான் ஊர் -*
*பக்கம் பலமயில் ஆடிட, மேகம் முழவு அதிர,*
*மிக்க(ம்) மது வண்டு ஆர் பொழில் - வேணுபுரம் அதுவே.*

takkan2tan2a ciram on2Rin2ai arivittu, avan2 tan2akku
mikka(v) varam aruL ceyta em viNNOr perumAn2 Ur--
pakkam palamayil ATiTa, mEkam muzavu atira,
mikka(m) matu vaNTu Ar pozil--vENu puram atuvE.

**பொருள்:** தக்கனது தலையை வீரபத்திரக் கடவுளைக் கொண்டு அரியச் செய்து, பிழையை உணர்ந்து அவன் வேண்டிய போது அவனுக்கு மிகுதியான வரங்கள் பலவற்றை அளித்தருளிய வானோர் தலைவனாகிய சிவபெருமானது ஊர், மேகங்கள் முழவாக ஒலிக்க, நாற்புறமும் மயில்கள் ஆடுவதும், மிகுதியான தேனை வண்டுகள் அருந்தும் வளமுடையதுமான பொழில்கள் சூழ்ந்த வேணுபுரம் ஆகும்.

**குறிப்புரை:** தக்கன் தன் சிரம் – தக்கன் தலை. தன அகரம் வேண்டாவழிச் சாரியை. அரிவித்து என்றது வீரபத்திரக் கடவுளைக் கொண்டு வெட்டுவித்த வரலாற்றினை உட்கொண்டு. மிக்கவரம் அருள் செய்த என்றது. பின்னர், அவனை மன்னித்து அவன் வெட்டுண்ட தலைக்குப் பதில் ஆட்டுத் தலையை வைத்து அவன் உயிர் பிழைக்கச் செய்ததனையும் அவனைச் சிவகண நாயகனாக்கிப் புனிதப்படுத்தியதனையும் உட்கொண்டு.

Lord Civan commanded Veerabahu to punish Daksha who showed disrespect to Him. Veerabahu cut off Daksha's head. Later, he was excused; his head was replaced by a sheep's (ram's) head. Then, He granted him many a boon; He indeed is the Lord of gods. Behold His town is Venupuram in the skies of which clouds rumble; peacocks dance in ecstasy in all the gardens on the four sides of the town. It is the fertile

Venupuram full of gardens where honeybees galore buzz around and sip honey from the flowers.

**Note:** Daksha was punished by Veera Bhadra under orders of Lord Civa. After the execuse, his head was replaced by a sheep's head and he got back to life.

நானாவித வுருவானமை யாள்வானணுகாதார்
வானார்திரி புரமூன்றெரி யுண்ணச்சிலைதொட்டான்
றேனார்ந்தெழு கதலிக்கனி யுண்பான்றிகழ்மந்தி
மேனோக்கிநின் றிறங்கும்பொழில் வேணுபுரமதுவே. 5

*நானாவித உருவாய், நமை ஆள்வான், நணுகாதார்*
*வான் ஆர் திரி புரம்மூன்று எரியுண்ணச் சிலை தொட்டான், -*
*தேன் ஆர்ந்து எழு கதலிக்கனி உண்பான் திகழ் மந்தி*
*மேல் நோக்கி நின்று இறங்கும் பொழில் - வேணுபுரம் அதுவே.*

nAn2Avita uruvAn2, namai ALvAn2, naNukAtAr
vAn2 Ar tiri puram mUn2Ru eriyuNNac cilai toTTAn2,--
tEr Arntu ezu katalikkan2i uNpAn2 tikaz manti
mEl nOkki nin2Ru iragkum pozil--vENupuram atuvE.

***பொருள்:*** அன்போடு வழிபடும் நாம் எவ்வுருவில் நினைக்கின்றோமோ அவ்வுருவில் தோன்றி நம்மை ஆட்கொள்பவனும், தன்னை நணுகாதவராகிய அசுரர்களின் வானில் திரிந்த மூன்று புரங்கள் வெந்தழியுமாறு வில்லை வளைத்துக் கணை தொடுத்து எரியூட்டியவனும் ஆகிய சிவபிரானது ஊர், மரங்களில் அமர்ந்த மந்திகள் தேனின் சுவை பொருந்தியனவாய்ப் பழுத்துத் தோன்றிய வாழைப் பழங்களைக் கண்டு அவற்றை உண்ணுதற் பொருட்டு மேல் நோக்கியவாறே தாம் ஏறிப்பறிக்க இயலாத தம் நிலைக்கு வருந்தும் பொழில்கள் சூழ்ந்த வேணுபுரம் ஆகும். 'வாழை மரத்தில் குரங்கு ஏறாதன்றோ'.

***குறிப்புரை:*** நானாவித உருவால் நமையாள்வான் – தியானிக்கின்ற அடியார்கள் நினைத்த உருவத்தோடு வெளிப்பட்டு அருள்புரிபவன். அதுவுமல்லாமல் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு தேவைப்படும் பலபல வித்தியாசமான உருவங்களில் தோன்றி அருள்புரிவான். உதாரணமாக தாயாகவும், குழந்தையாகவும், சந்நியாசியாகவும், வேடனாகவும் – இவ்வாறு பல உருவங்களிலும் தோன்றி அருள்புரிந்துவிட்டு உடன் மறைந்தும் விடுவான். நணுகாதார் – பகைவர்களாகிய திரிபுராதிகள். வானார் – வானத்திற்பறந்து திரிகின்ற. சிலை தொட்டான் – வில்லால் அம்பைச் செலுத்தியவன். தொடுதல் – செலுத்துதல். 'கடுங் கணைகள் தம்மைத் தொட்டனன்' (கந்த. சூரபன்மன் வதை 191) சிலை தொட்டான் என்றது சிலையைத் தொட்ட அளவே! திரிபுரங்கள் எரிந்தன என்னும் நயப்பொருள் தோன்ற. தேன் ஆர்ந்து எழு கதலி –

தேன்கதலி என்னும் ஒரு வகை வாழை. மந்தி மேல் நோக்கி ஏறிப்பறிக்க இயலாத நிலைக்கு இரங்குகின்ற (வருந்துகின்ற) இயற்கையை அறிவித்தபடி. இறங்கும் என்றும் பாடம். இதற்கு, குரங்கு மேல் நோக்கியவாறே கீழிறங்கும் என்பது பொருள்.

Lord Civan is our ruler and He assumes a good many forms. In whatever form, His servitors think of Him in their mind and pray, He will be visible to them in that very form. Also, according to the need in a particular situation, He will take that form - say as a mother, as a child, as a mendicant, as a hunter, and so on, and will disappear instantaneously when the mission is over. He touched his bow and gutted with fire the three, hostile citadels that flew in the sky. Behold His town is Venupuram where in its plantain gardens monkeys driven by a longing to eat the ripe banana fruits of lofty plantain trees look up in despondency and climb down facing (upwards).

**Note:** Manthi is a female monkey and Kaduvan is male monkey.

மண்ணோர்களும் விண்ணோர்களும் வெருவிம்மிகவஞ்சக்
கண்ணார்சல மூடிக்கட லோங்கவ்வுயர்ந்தானூர்
தண்ணார்நறுங் கமலம்மலர் சாயவ்விளவாளை
விண்ணார்குதி கொள்ளும்வியன் வேணுபுரமதுவே. 6

*மண்ணோர்களும் விண்ணோர்களும் வெருவி(ம்) மிக அஞ்ச,*
*கண் ஆர் சலம் மூடிக் கடல் ஓங்க(வ்), உயர்ந்தான் ஊர் -*
*தண் ஆர் நறுங்கமலம் மலர் சாய(வ்), இள வாளை*
*விண் ஆர் குதிகொள்ளும் - வியன் வேணுபுரம் அதுவே.*

viNNOrkaLum maNNOrkaLum veruvi(m) mika anjca,
kaN Ar calam mUTik kaTal Ogka(v), uyarntAn2 Ur--
taN Ar naRugka malam malar cAya(v), iLa vALai
viN Ar kutikoLLum--viyan2 vENupuram atuvE.

**பொருள்:** மண்ணுலக மக்களும் விண்ணகத் தேவரும் கண்டு நடுங்கி மிகவும் அஞ்சுமாறு நிலமெல்லாம் நிறைந்த நீர் மூடிக் கடல் ஊழி வெள்ளமாய் ஓங்க, அவ்வெள்ளத்திலும் அழியாது உயர்ந்து தோணியாய்த் தோன்றுமாறு செய்த சிவபிரானது ஊர், தண்ணிய மணம் கமழும் தாமரை மலர்கள் சாயுமாறு இளவாளை மீன்கள் வானிடை எழுந்து குதிக்கும் நீர்வளம் சான்ற பெரிய வேணுபுரம் ஆகும்.

**குறிப்புரை:** கண்ணார் சல மூடி – நிலமெல்லாம் நிறைந்து நீர் மூடி, மூடி ஓங்க உயர்ந்தான் ஊர் எனக் கூட்டுக.

When the great deluge sweeps the entire universe the dwellers of the world and the celestial ones shudder in utter dread. The whole universe sinks under the ocean which spreads out everywhere. Behold His lofty town Venupuram untouched by the deluge! It is indeed the tall Venupuram which by His grace appeared as a boat and was floating. In the pools of Venupuram the cool and fragrant lotus flowers bend down while the young vaalai (fish) leap heavenward and play.

**Note:** Vaalai - Scabbard fish.

* * * * * * * 7

மலையான்மக ளஞ்சவ்வரை யெடுத்தவ்வலியரக்கன்
றலைதோளவை நெரியச்சர ணுகிர்வைத்தவன்றன்னூர்
கலையாறொடு சுருதித்தொகை கற்றோர்மிகுகூட்டம்
விலையாயின சொற்றேர்தரு வேணுபுரமதுவே. 8

மலையான்மகள் அஞ்ச(வ்), வரை எடுத்த(வ்) வலிஅரக்கன்
தலை தோள் அவை நெரியச் சரண் உகிர் வைத்தவன்தன் ஊர் -
கலைஆறொடு சுருதித்தொகை கற்றோர் மிகு கூட்டம்
விலைஆயின சொல்-தேர்தரு - வேணுபுரம் அதுவே.

malaiyAn2 makaL anjca(v), varai eTutta(v) vali arakkan2
talai tOL avai neriyac caraN ukir vaittavan2 tan2 Ur--
kalai ARoTu curutit tokai kaRROr miku kUTTam
vilai Ayin2a col-tErtaru--vENupuram atuvE.

**பொருள்:** மலையரையன் மகளாகிய பார்வதி தேவி அஞ்சுமாறு கயிலை மலையைப் பெயர்த்தெடுத்த வலிமை சான்ற இராவணனின் தலைகள் தோள்கள் ஆகியவை நெரியுமாறு கால் விரலை ஊன்றிய சிவபிரானது ஊர், ஆறு அங்கங்களோடு வேதங்களின் தொகுதியைக் கற்றுணர்ந்தோர் தம்முள் கூடும் கூட்டத்தில் விலை மதிப்புடைய சொற்களைத் தேர்ந்து பேசும் கல்வி நலம் சான்றவர் வாழும் வேணுபுரம் ஆகும்.

**குறிப்புரை:** இராவணனது தலையும் தோளும் நெரிய விரலினது நுனியை ஊன்றி மறக்கருணை காட்டியது வரையை யெடுத்ததற்காக அன்று; உமாதேவிக்கு அச்சம் விளைத்தமையான். பெண்மையின் பொதுமை நோக்கி உரைத்தலாயிற்று. உகிர் – நகம். சுருதித் தொகை – சாகைகளின் கூட்டமாகிய வேதம். விலையாயின சொல் – பெறுமதியுடைய சொற்கள்.

When the king of Sri Lanka, Raavana, tried to uproot the mountain (Kailas) – the abode of Lord Civa, Goddess Uma, the daughter of Himavan (King of Himalayas) grew

scared. The Lord slightly pressed the mount by the tip of His toe. Raavanaa's heads and shoulders got crushed (thereunder). This Lord Civan resides in Venupuram. Here the great assembly of those who are well-versed in the Vedas and its six angas exercise themselves to gain the import of the words of incalculable worth.

**Notes:** The Angas: The six texts that supply the key to the understanding of the Vedas.

வயமுண்டவ மாலும்மடி காணாதலமாக்கும்
பயனாகிய பிரமன்படு தலையேந்தியபரனூர்
கயமேவிய சங்கந்தரு கழிவிட்டுயர்செந்நெல்
வியன்மேவிவந் துறங்கும்பொழில் வேணுபுரமதுவே. 9

*வயம் உண்ட அ(ம்)மாலும் அடி காணாது அலமாக்கும்,*
*பயன் ஆகிய பிரமன்படுதலை ஏந்திய பரன் ஊர் -*
*கயல் மேவிய சங்கம் தரு கழி விட்டு, உயர் செந்நெல்*
*வியல்மேவி, வந்து உறங்கும் பொழில் - வேணுபுரம் அதுவே.*

vayam uNTa a(m)mAlum(m) aTi kANAtu alamAkkum,
payan2 Akiya piraman2 paTutalai Entiya paran2 Ur--
kayam mEviya cagkam taru kazi viTTu, uyar cennel
viyal mEvi, vantu uRagkum pozil--vENupuram atuvE.

***பொருள்:*** உலகை உண்ட திருமாலும் தன் அடிகளைக் காணாது அலமருமாறு செய்தவனும், அச்சம் உடைய பிரமனது கிள்ளப்பட்ட தலையோட்டினை ஏந்தியவனுமாகிய சிவபிரானது ஊர், ஆழ்ந்த கடலில் வாழும் சங்குகள், கடல் தரும் உப்பங்கழியைச் சேர்ந்து, பின்னர் அதை விடுத்துச் செந்நெல் விளைந்த அகன்ற வயலில் வந்து உறங்கும் வேணுபுரம் ஆகும்.

***குறிப்புரை:*** வயம் – வையம் – போலி. வயம் உண் தவம் மாலும் – உலகை உண்ட தவத்தைச் செய்த திருமாலும். அடிகாணாது அலமாக்கும் – திருவடியைக் காணப் பெறாது சுழலும். அலமாக்கும் (அலமருதற்குக் காரணமாயிருந்த) பரன் எனவும், ஏந்திய பரன் எனவும் தனித்தனியே கூட்டுக. பயன் ஆகிய பிரமன் – அச்சத்தை உடையவனாகிய பிரமன். கயம் – ஆழ்ந்த நீர் நிலை. சங்கம் உப்பங்கழியை விட்டுச் செந்நெல் வயலில் வந்து உறங்கும் வேணுபுரம். செந்நெல்வியன் – செந்நெல் விளைந்துள்ள அகன்ற இடம்.

Lord Civa made Vishnu get bewildered for his vain search to reach His holy Feet. People in this world aspire to reach Brahma Loka, the Lord of which is Brahman. One of his five heads was ripped. The dried skull of his ripped head was being used as a begging bowl by Lord Civan. This Lord Civa resides in Venupuram. It is here that

'chanks' (shells) from the deep waters of the sea get uprooted and reach the salt pans. Again they leave the salt pans and reach the wide fields where red paddy grows, and slumber there.

**Notes:** Ruddy paddy: Sennel (Sambha paddy) - paddy with red rice.

மாசேறிய வுடலாரமண் குழுக்கள்ளொடுதேரர்
தேசேறிய பாதம்வணங் காமைத்தெரியானூர்
தூசேறிய வல்குற்றுடி யிடையார்துணைமுலையார்
வீசேறிய புருவத்தவர் வேணுபுரமதுவே. 10

*மாசு ஏறிய உடலார் அமண் குழுக்க(ள்)ளொடு தேரர்,*
*தேசு ஏறிய பாதம் வணங்காமைத் தெரியான் ஊர் -*
*தூசு ஏறிய அல்குல் - துடி இடையார், துணைமுலையார்,*
*வீசு ஏறிய புருவத்தவர், - வேணுபுரம் அதுவே.*

mAcu ERiya uTalAr amaNkuzukka(L)LoTu tErar,
tEcu ERiya pAtam vaNagkAmait teriyAn2 Ur--
tUcu ERiya alkul--tuTi iTaiyAr, tuNaimulaiyAr,
vIcu ERiya puruvattavar,--vENupuram atuvE.

**பொருள்:** அழுக்கேறிய உடலினை உடையவர்களாகிய சமணர் கூட்டத் தினரோடு, புத்த மதத்தினராகிய தேரர்களும் ஒளி பொருந்திய திருவடிகளை வணங்காமையால், அவர்களால் அறியப்பெறாத சிவபிரானது ஊர்; அழகிய ஆடை தோயும் அல்குலையும், உடுக்கை போன்ற இடையையும், பருத்த தனங்களையும், ஆடவர் மேல் தம் குறிப்பு உணர்த்தி நெரியும் புருவங்களையும் உடைய அழகிய மகளிர் வாழும் வேணுபுரம் ஆகும்.

**குறிப்புரை:** மாசு ஏறிய உடல் – தேயாது தோய்வதால் அழுக்கு ஏறிய உடல். தேரர் – புத்த முனிவர். தேசு ஏறிய பாதம் – ஒளியுள்ள திருவடி. வணங்காமைத் தெரியான் – வணங்காதபடி அவர்களால் அறியமுடியாதவன். தூசு – ஆடை, துடி – உடுக்கை. வீசு ஏறிய புருவத்தவர் – ஆடவர் மேல் பார்வையைச் செலுத்தி நெற்றியின்கண் ஏறிய புருவத்தினை உடையார்.

The Jains of dirt-ridden bodies and the Buddhist monks know not how to adore the splendourous Feet of Lord Civan, whose town is Venupuram. Here live beautiful maidens. Their waist is slender like the (shape of the) small drum in Civa's hand, tapering at the middle (Udukkai - உடுக்கை). Their alkul is veiled by choice vestments, their arching eyebrows and their sharp eyes indicate their mind.

**Notes:** Thudi Idai: The waist that is like a small drum resembling an hour glass.

வேதத்தொலி யானும்மிகு வேணுபுரந்தன்னைப்
பாதத்தினின் மனம்வைத்தெழு பந்தன்றனபாடல்
ஏதத்தினை யில்லாவிவை பத்தும்மிசைவல்லார்
கேதத்தினை யில்லார்சிவ கெதியைப்பெறுவாரே. 11

வேதத்து ஒலியானும் மிகு வேணுபுரம் தன்னைப்
பாதத்தினில் மனம் வைத்து எழு பந்தன் தன பாடல்,
ஏதத்தினை இல்லா இவை பத்தும்(ம்), இசை வல்லார்
கேதத்தினை இல்லார், சிவகெதியைப் பெறுவாரே.

vEtattu oliyAn2um miku vENupuram tan2n2aip
pAtattin2il man2am vaittu ezu pantan2tan2a pATal,
Etattin2ai illA ivai pattum(m), icai vallAr
kEtattin2ai illAr, civaketiyaip peRuvArE.

**பொருள்:** மங்கல ஒலிகள் பலவற்றோடு வேத ஒலியாலும் மிக்குத் தோன்றும் வேணுபுரத்துப் பெருமானின் பாதங்களை மனத்துட் கொண்டு பாடப்பெற்ற ஞானசம்பந்தரின் துன்பம் தரல் இல்லாத இப்பதிகப் பாடல்களை இசையோடு பாடவல்லவர் துயர் நீங்குவர்; முடிவில் சிவகதியைப் பெறுவர்.

**குறிப்புரை:** ஞானசம்பந்தரின் ஏதம் இல்லாத இப்பத்துப் பாடல்களையும் இசையோடு பாடுவார் சிவகதி பெறுவார் என வினை முடிபு கொள்க. சென்ற திருப்பாடல்களில் கூறிய முழவதிர்தலும், வாளை குதி கொள்ளுதலும், கற்றோர்கள் சொல்தேர்தலும் ஆகிய இவற்றால் உண்டான ஒலியோடு வேத ஒலியாலும் மிகுந்திருக்கின்ற வேணுபுரம். பாதம் – சிவனது திருவடி. பந்தன் – ஞானசம்பந்தன். ஏதத்தினை இல்லா இவை பத்தும் – துன்பம் தரல் இல்லாத இந்தப் பத்துப் பாடல்களும். துன்பம் நீக்குமாற்றை ஊன்றி நோக்கி இன்புறுக. கேதம் – இன்பம்.

In Venupuram the voice of auspicious music and the voice of scholars chanting the Vedas fill the air forever. Gnaana-sambandan fixing his mind on the holy Feet of the Lord of Venupuram has sung these ten flawless verses. Those who can sing melodiously these ten verses stand freed from misery. Also they will gain salvation, which is the eternity of saivism.

**Notes:** Bandhan: Gnaana-sambandhar.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*9ஆம் பதிகம் முற்றிற்று*
End of 9th Hymn

உ
சிவமயம்

# 10. திரு அண்ணாமலை

## திருத்தலவரலாறு:

திரு அண்ணாமலை என்ற திருத்தலமானது நடுநாட்டுத் தலம் ஆகும். புகழ்பெற்ற தமிழக நகரங்களில் ஒன்று. விழுப்புரம் – காட்பாடி வழியில் இரயில் நிலையம். அனைத்து நகரங்களில் இருந்தும் பேருந்துகள் உள்ளன. நினைக்க முத்தி கிடைக்கும் தலம் ஆகும். இது வட ஆர்க்காடு மாவட்டத்தில் திருவண்ணாமலை கோட்டத்தின் தலைநகரம். சூரியன், பிரதத்தராஜன், அஷ்டவசுக்கள், பிரமதேவன், சந்திரன், திருமால், புள்காதிபன் முதலியோர் பூசித்துப் பேறுபெற்ற தலம் ஆகும். வித்தியாதரர்களாகிய இருவர் ஒரு ரிஷியின் சாபத்தால் பூனையாகவும் குதிரையாகவும் இருந்த நிலை இத்தலத்தை வலம் வந்தமையால் மாறின. இறைவன் பெயர் – அண்ணாமலைநாதர்; அருணாசலேசுவரர் என்றும் கூறுவர். இறைவி பெயர் – உண்ணாமுலையம்மை; அபீதகுஜாம்பாள் என்றும் கூறுவர். விநாயகர் பெயர் ஸ்ரீ சம்பந்த விநாயகர்; முக்குறுணி விநாயகர் என்றுங் கூறுவர். தலவிருட்சம் – மகிழ மரம்.

## தீர்த்தம்:

கோயிலுக்கு உள்ளும் வெளியிலும் மலைப்பகுதியிலுமாக 360 தீர்த்தங்கள் உள்ளன. சிறந்தவை சிவகங்கையும், பிரம தீர்த்தமும், மலைப்பகுதியில் உள்ள அக்னி தீர்த்தமும், இந்திர தீர்த்தமும் ஆகும். இந்திர தீர்த்தத்தில் தெப்ப உற்சவம் நடைபெறும். இத்தலத்தில் நடைபெறும் பெரிய விழா கார்த்திகைத் திருவிழா ஆகும். இது கார்த்திகை மாதத்தில் கார்த்திகை நாளைத் தீர்த்தமாகக் கொண்டு நடைபெறும். சித்திரை மாதத்தில் சித்திரை நட்சத்திரத்தைத் தீர்த்தமாகக் கொண்டு பிரமோற்சவமும், பங்குனி உத்திரத்தில் திருக்கல்யாணமும் ஆறுநாள் விழாவும், மாசி மகத்தில் வல்லாளன் திருவிழாவும், தை மாதம் திருவூடல் விழாவும், ஆனி விழாவும், ஆடியில் அம்பிகை விழாவும், பவித்ரோற்சவம், நவராத்திரி, கந்தசஷ்டி, திருவெம்பாவை உற்சவம், திருவாதிரை முதலியனவும் சிறப்பாகக் கொண்டாடப் பெறுகின்றன.

அயனும் மாலும் அகந்தை கொண்டு, அடிமுடிதேட அன்னமும் வராகமுமாக மாறித்தேடி அயர்சி அடைந்தாராக, அக்கினி வடிவாய் நின்று அருள்செய்தவர் அண்ணாமலைநாதர். முருகன் தாருகனை வதம் செய்து வணங்கிச் சென்ற தலம் பலவற்றுள் இதுவும் ஒன்று. சம்பந்தர், அப்பர், மணிவாசகர் இம்மூவராலும் பாடப் பெற்றது. சுந்தரர் பாடியதாகப் பாடல் இல்லையாயினும்

சேக்கிழார் வரலாற்றால் ஊகிக்க வேண்டி உள்ளது. நக்கீரர், பரணர், கபிலர், பட்டினத்தார் ஆகிய இந்நால்வரும் அண்ணாமலையைப் பற்றிப் பாடிய பாக்கள் பதினொராம் திருமுறையில் உள்ளன. வச்சிராங்கதன் என்னும் பாண்டியன் தினமும் வலம் வந்து திருப்பணி பல செய்து உள்ளான். வல்லாள மகராஜன் அண்ணாமலையை ஆண்டு வந்தான். அருணகிரி நாதர் கோபுரத்தில் இருந்து விழுந்து இறக்க எண்ணி வீழ்ந்தபோது முருகன் தோன்றி அருள் செய்தான். குகை நமச்சிவாயர், குருநமச்சிவாயர் முதலானவர்கள் சித்தி பல செய்தனர்.

கோயிலின் வடகிழக்கு மூலையில் ஆயிரங்கால் மண்டபம் உள்ளது. கிழக்குப் பக்கத்தில் நுழையும்போது உள்ள உட்கோபுரம் வல்லாள மகராஜன் கோபுரம் என்று வழங்கப்படுகிறது. வல்லாள கோபுரத்தின் வடகிழக்கு மூலையில் சக்தி விலாஸமும் உள்ளது. மேற்கு நோக்கி உட்சென்றால் கிளிக்கோபுரம் காணலாம். தலவிருட்சத்திற்கு மேற்கே கல்யாண மண்டபம் உள்ளது.

**கல்வெட்டு:**

பதிவு செய்யப் பெற்ற மொத்தக் கல்வெட்டுக்கள் 119. இவைகளில் பெரும்பாலன சோழர் காலத்தன. திருவிளக்கேற்றல், திருமஞ்சனம், திருநந்தனவனம், திருவமுது, திருவெழுச்சி, அடியார்க்கு அமுதளித்தல் முதலிய பல அறங்களுக்காக நிலம், பொன், கால்நடை முதலியனவற்றை அளித்தமையை அறிவிக்கின்றன. பாண்டியர், பல்லவர், ஹொய்சள மன்னரான வீரவல்லாள தேவர், விஜய நகரத்து ராயர், தஞ்சாவூர் நாயக்கர் மற்றும் வணிகர், வேளாளர் முதலியவர்கள் கல்வெட்டுக்களும் காணக் கிடக்கின்றன.

முதல் இராஜேந்திரனுடைய காலத்தில் (கி.பி.1038) திருவண்ணாமலை, மதுராந்தக வளநாட்டுப் பெண்ணை வடகரைத் திருவண்ணாமலை என்றும், மூன்றாம் குலோத்துங்கன் (கி.பி.1179) காலத்தில் இராஜராஜ வளநாட்டு வாணகோப்பாடி பெண்ணை வடகரை அண்ணா நாட்டுத் திருவண்ணாமலை என்றும், மேற்படி சோழனுடைய 27ஆம் ஆட்சி ஆண்டில் (கி.பி.1204) வாணகோப்பாடிப் பெண்ணை வடகரை அண்ணா நாட்டுத் திருவண்ணாமலை என்றும், விஜயநகர இராயர்கள் காலத்தில் ஜெயங்கொண்ட சோழ மண்டலத்துச் செங்குன்றக் கோட்டத்துப் பெண்ணை வடகரை வாணகோப்பாடி அண்ணா நாட்டுத் தனியூர் திருவண்ணாமலை என்றும் குறிக்கப் பெற்றுள்ளது. இதனால் திருவண்ணாமலையின் உள்ளடங்கிய வளநாட்டுப் பெயர் முதலில் மதுராந்தக வளநாடு என்று இருந்து, பிறகு இராஜராஜ வளநாடு என்று மாறி, இறுதியில் ஜெயங்கொண்ட சோழ மண்டலம் ஆயிற்று என்றும், இம்மண்டலத்தின் உட்பிரிவாகிய செங்குன்றக் கோட்டத்தினுள் அண்ணா நாட்டுத் தனியூராகக் குறிக்கப்பட்டது என்றும் அறியக்கிடக்கும்.

பல்லவர் காலத்திற்கு முந்திய கல்வெட்டொன்றும் இல்லாமையால், கோயில் செங்கற்சுதை மாடமாக இருந்ததென்றும், மலையின் மேல் அண்ணாமலையார் கோயில் கொண்டு இருந்திருக்க வேண்டும் என்றும் யூகிக்க வேண்டி உள்ளது. முதல் பிராகாரத்துச் சுவரில் கங்கை கொண்ட இராஜேந்திரன் கல்வெட்டு (கி.பி.1028) காணப் பெறுவதால், இதற்கு முன்பே கருங்கல் திருப்பணி நடந்திருக்க வேண்டும். முதல் பிராகாரத்தில் விளங்கும் ஏகாம்பர நாதர் கோயில், சிதம்பரேசர் கோயில் ஆகிய இரண்டின் சுவர்களிலும் கி.பி. 12ஆம் நூற்றாண்டுச் சாஸனங்கள் காணப்படுகின்றன. திருக்காமக்கோட்டம் உடைய உண்ணாமுலை நாச்சியார் கோட்டம் தனியாக கி.பி. 12ஆம் நூற்றாண்டில் அமைக்கப் பெற்றது கல்வெட்டுக்களில் திருக்காமக் கோட்டம் எனக் குறிக்கப் பெற்று உள்ளது.

பதின்மூன்றாம் நூற்றாண்டின் நடுப்பகுதியில் எழுந்த கல்வெட்டுக்களில் வீரராகவன் திருமதில், வாணாதிராயன் திருமதில், திருவேகம்பமுடையான் திருமதில் முதலியன குறிக்கப்பட்டு உள்ளன. அம்மையப்பன் சந்நிதிக்கு இடையில் மேற்குப் பக்கத்தில் நங்கையாழ்வீசுவரம் என்னும் கோயில் பல்லவ குடும்பத்தைச் சேர்ந்த ஒரு அரசியால் (கி.பி. 1269) எடுப்பிக்கப் பதினாலடிக் கோலால் பதின்மூன்றரை குழி விற்றுப் பதினாலாயிரம் பொற்காசு பெற்றுக் கட்டிய பகுதி இன்று இல்லை. கிருஷ்ண தேவராயர் (கி.பி. 1516) ஆயிரங்கால் மண்டபத்தையும், எதிரில் உள்ள திருக்குளத்தையும் பதினொரு நிலை உள்ள கோபுரத்தையும், வேறுபல திருப்பணிகளையும் அமைத்தமை அறியப்படுகிறது.

பல்லவ மன்னனான கோப்பெருஞ்சிங்கனும், அவன் மகன் வேணாவுடையானும் செய்த திருப்பணிகள் மிகப்பல. பூஜைக்கும், திருப்பணிக்குமாக அண்ணாமலை நாதர் தேவதானப் பற்றுக்களும் அண்ணா நாட்டு நாற்பாக்கெல்லைக்கு உட்பட்ட நன்செய், புன்செய் ஆக உள்ள நிலத்திற்கு ஆயம் பாடி காவலால் வந்த நெல்லும் காசாயமும் மற்றும் எப்பேர்ப்பட்ட பல்லாயங்களும் இவன் தானமாக ஈந்தான்.

கல்வெட்டுக்களில் காணப்பெறும் கோயில் அதிகாரிகள் ஸ்ரீருத்திரர், ஸ்ரீமாகேசுரர், ஸ்ரீமாகேசுரக் கண்காணி செய்வார், தானத்தார், தானபதி மாகேசுரர், தேவகன்மிகள், கோயிற்கணக்கர், ஸ்ரீகாரியஞ்செய்வார் எனப் பலர் ஆவர். இவரில் ஸ்ரீமாகேசுரர், தர்ம சாசனங்கள் ஒழுங்காக நடைபெறக் காரியம் பார்ப்பவராவர்.

அண்ணாமலை நாதருக்கும் உண்ணாமுலை அம்மைக்கும் பிச்சதேவர் முதலிய மூர்த்திகட்கும் திருப்பள்ளி எழுச்சி, சிறுகாலை சந்தி, உச்சிப்போது, இரவை, அர்த்தசாமம் முதலிய காலங்களில் அமுது முதலியவற்றிற்கு நிலம் அளித்தமை அறியலாம். சில சாஸனங்களில்

பிரமநாயனார் பெரிய மடத்து முதலியார், வையந்தொழுவார் பெரிய மடத்து முதலியார், திருவண்ணாமலை உடையார் திருமுற்றத்தே இராஜேந்திர சோழன் சாலை, காங்கேயன் மடம், அம்மைமடம் முதலியன குறிப்பிடப்பட்டுள்ளன.

நெய், மிளகு, உப்பு, தயிர், அடைக்காய், வெற்றிலை, சீரகம், வாழைப்பழம், வாழையிலை முதலியன நெல்லளந்து பெறப்பட்டவை. மங்கையர்க்கரசி என்னும் நங்கை தன்னாபரணங்களை விற்ற பொருள் கொண்டும், நெல்லைக் கொண்டும் ஏரிபுதுக்கி உதவினாள் என்ற செய்தியும் கல்வெட்டால் அறியப்படுகின்றது.

**பதிக வரலாறு:**

திருஅறையணிநல்லூரை வழிபட்ட பிள்ளையாருக்கு, அன்பர்கள் அண்ணாமலையைக் காட்டினார்கள். அண்ணாமலை, இறைவன் திருவுருவாகவே காட்சி அளித்தது. அதனைக் கண்ணாற்பருகிக் கைதொழுது கலந்து போற்றுங்காதலினால் இப்பதிகத்தை அருளிக் கொண்டே தலத்தை அடைகின்றார்கள். இப்பதிகமும் சேய்மையின் அண்ணாமலையை அன்பர் காட்டக் கண்டு தொழுது பாடியதாகவே சேக்கிழார் தெரிவிக்கின்றார் (பெரிய. திருஞா. 969, 970). இப்பதிகப் பாடல்கள் உள்ளவாறே பொருள் கொள்க.

## 10. THIRU-ANNAAMALAI

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-annaamalai is in Nadunaadu. It is one of the famous towns of Tamil Naadu. It has a railway station on the Kaatpaadi route. Buses ply to this town from all major towns. It is the capital of the Thiruvannamalai taluk in the North Aarkkaadu district. This sacred site gives salvation to those who just contemplate it. Sooriyan, Pirathaththaraajan, the eight Vasus, Biramadevan, Chandhiran, Pulakaadhipan, etc. offered worship and obtained salvation at this temple. Two Viththiyaatharars who had become a cat and a horse as a result of a curse by a rishi (sage), regained their original forms by circumambulating (going around) the temple. The God's name is Annaamalainaathar, also called Arunaachalesvarar. The Goddess is named Unnamulai Ammai, also known as Apeethakujambaal. Vinaayaka here is

known as Sree Sambandha Vinayakar, also called as Mukkuruni Vinayakar. The tree of this sacred place is Makizhamaram.

**Sacred Fords**

There are 360 holy fords inside and outside the temple in the nearby hill area. Of these, the important ones are Sivagangai, Biramatheerththam, and the Agnitheerththam and Indhiratheerththam in the hill area. The 'float festival' takes place in the Indhiratheerththam. The major festival of this temple is the Kaarthigai Festival. This is celebrated in the month of Kaarthigai on Kaarthigai day. The other festivals celebrated with pomp are: the Biramotsavam in the month of Chiththirai, with Chiththirai day as the theerththam. The Divine Wedding (Thirukkalyanam) on the Uththiram day and a six day festival in the month of Panguni; Vallaalan festival on Magam day of the month of Maasi. Thiru-oodal festival in the month of Thai; Festival in Aani; Ambikai festival in Aadi; and the festivals of Pavithrorsavam, Navaraaththiri, Kandhasashti, Thiruvembavai, Thiruvaadhirai etc. This is one of the sacred temples in which Murugan, after killing Dhaarukan, offered worship. Saints Thiru-Gnaana-sambandar, Appar and Maanikavaachakar have sung in adoration of the deity here. Although there is no poem by Sundarar on this deity, one can guess based on the biography of Sekkizhaar. The Eleventh Thirumurai contains songs on Anaamalai by Nakkeerar, Paranar, Kabilar and Pattinaththaar. A Paandiyan king, Vachchiraangathan who was in the habit of circumambulating the temple daily, has caused to perform much renovation of this temple. One Valaala Maharajan was the ruler of Annamalai. When Arunagirinaathar tried to end his life by falling from atop the Gopuram, and God Murugan appeared and saved him by His grace. Gugai Namachchivaayar, Guru Namachchivaayar and such saints have performed feats of supernatural ability (siddhi). There is a thousand pillared Mandapam at the north-east corner of the temple. The inner Gopuram on the East entrance is known as Vallaala Maharajan gopuram. At the north-east corner of Vallala Gopuram Sakthi Vilaasam is situated. Proceeding further

inside towards the west, one can see the Killi (Parrot) Gopuram. A Kalyaana Mandapam is located to the west of the sacred tree of the temple.

**Stone Inscriptions**

There are 119 officially registered inscriptions in this temple. Most of these are from the time of the Cholas. They inform about the gifts of land, gold, cattle etc., for performing such sacred ceremonies as, lamp-lighting, anointing, flower garden, offering of holy food to the divine, feeding the devotees, Thiruvezhuchchi etc. Inscriptions by Paandiyars, Pallavars, Hoysala King Veera Vallaala Thevar, Vijayanagar Rayars, Naayakkar of Thanjavoor are found, besides those by merchants and farmers. During the reign of Raajendran I (1038 CE), Thiruvannaamalai, was called Thiruvannaamalai on the north shore of the Pennai river of Madhuraanthaka Valanaatu; during the reign of Kulothungan III (1179 CE) it was called Anna Naattuth Thiruvannaamalai on the north shore of Pennai river of Vaanakoppaadi in Raajaraaja Valanaatu; in the regnal year 27 of the above Chola King (1204 CE), it was called Annaa Naattuth Thiruvannaamalai on the north shore of Pennai river of Vaanakoppaadi; during the Raayars of Vijayanagar, it was called Annaanaattuth Thaniyoor Thiruvannaamalai on the north shore of Pennai river of Vaanakoppaadi in Sengkunrakk Kottam of Jeyangkonda Cholamandalam. From this it is known that the name of subdivision (Valanaatu) in which Thiruvannaamalai was situated was first Madhuraanthaka Valanaatu, which changed to Raajaraaja Valanaatu later and finally became Jeyangkonda Cholamandalam; and that a subdivision of this mandalam was known as Sengkunrak Kottam within which this place was referred to as Annaa Naattuth Thaniyoor.

As there is no inscription predating the Pallava kings, it has to be presumed that the temple was built of bricks and mortar and that the Annaamalaiyaar shrine might have been located on the hill. As an inscription of Gangai Konda Raajendhiran (1028 CE) is found on the wall of the first piraakaaram (ambulatory), it could be inferred that the temple must have been renovated prior to this time. The walls of the shrines for Ekaambaranaathar and Chidambaresar, located in the first ambulatory, contain

inscriptions of twelfth century CE. The inscription number 33 in the Kili Gopuram reveals that the temple walls were made of granite even before the second regnal year of Veera Raajendhira Chola (1063 CE). The separate shrine for Thiruk Kaama Kottamudaiya Unnaamulai Naachchiyaar was made in the 12th century CE. This is referred to as Thiruk Kaamak Kottam in inscriptions.

In the inscriptions of mid 13th century CE, temple walls are referred to as Veeraraakavan Thirumathil, Vaanaathiraayan Thirumathil, Thiruvekampam-udaiyaan Thirumathil etc. A shrine, known as Nangai Aazhveesuvaram, once located on the west side between the shrines of the God and the Goddess, and which was built with ten thousand gold pieces raised by the sale of thirteen and a half kuzhi (as measured by fourteen-feet measuring rod), is not to be found today. It is known that Krishnadeva Raayar (1516 CE) had arranged for the construction of the thousand-pillared mandapam and the holy tank opposite that, and a gopuram of eleven stages, besides many other such sacred works.

Kopperunjsingan, the Pallava king, and his son Venaavudaiyaan have made endowments for many sacred construction works. He had gifted much paddy and cash, for worship services and construction works. The names of temple officers are given in the inscriptions as Sree Ruththirar, Sree Maakesurar, Sree Maakesurak Kankaani Seivaar, Thaanaththaar, Thaanapathi Maakesurar, Thevakanmikal, Koyirkanakkar, Sree Kaariyanj Seivaar etc. Among these, Sree Maakesurar supervised holy works specified in the endowment inscriptions. It is known that land was endowed for the preparation and presentation of holy food etc., for Annaamalai Naathar, Unnaamulai Ammai and other gods as Pichcha Thevar etc., at the worship services designated as Thiruppalli Ezhuchchi, Sirukaalai, Sandhi, Uchchippodhu, Iravai and Ardhasaamam.

Some inscriptions reveal information on such as Biramanaayanaar Periya Madaththu Mudhaliyaar, Vaiyam Thozhuvaar Periya Madaththu Mudhaliyaar, Oorukkup Periya Madaththu Mudhaliyaar, Thiruvannaamalai Udaiyaar Thirumurraththe Raajendhira Cholan Saalai (road), Kaangkeyan Matam and Ammai

Matam etc. Ghee, pepper, salt, curd, betel nuts, betel leaves, cumin seeds, plantain fruits and plantain leaves were bought in exchange for paddy. It is known from an inscription that a certain lady, Mangkaiyarkkarasi had contributed for the renovation of a reservoir, with money got from selling her jewelry and paddy.

## INTRODUCTION TO THE HYMN

Devotees standing on the hill of Araianinallur (அறை-அணி-நல்லூர்) pointed towards Thiru-annaa-malai. The saintly youth beheld it. To him, it appeared as the very lord. He hailed this and proceeded towards it, singing the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 10. திரு அண்ணாமலை — 10. THIRU-ANNAAMALAI

பண் : நட்டபாடை
ராகம் : கம்பீரநாட்டை

*Pann: Natta Paadai*
*Raagam : Kambeera Naattai*

உண்ணாமுலை யுமையாளொடு முடனாகியவொருவன்
பெண்ணாகிய பெருமான்மலை திருமாமணிதிகழ
மண்ணார்ந்தன வருவித்திரண் மழலைம்முழவதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை வழுவாவண்ணமறுமே. 1

உண்ணாமுலை உமையாளொடும் உடன் ஆகிய ஒருவன்,
பெண்ஆகிய பெருமான், மலை- திரு மா மணி திகழ,
மண் ஆர்ந்தன அருவித்திரள் மழலை(ம்) முழவு அதிரும் -
அண்ணாமலை தொழுவார் வினை வழுவா வண்ணம் அறுமே.

uNNAmulai umaiyALoTum uTan2 Akiya oruvan2,
peN Akiya perumAn2, malai--tiru mA maNi tikaza,
maN Amtan2a aruvittiraL mazalai(m) muzavu atirum--
aNNAmalai tozuvAr vin2ai vazuvA vaNam aRumE.

பொருள்: நமது முழுமுதற் பொருளாகிய சிவபெருமான், உண்ணாமுலை என்னும் திருப்பெயருடைய உமையம்மையாரோடு உடனாக எழுந்தருளியவர். தம் இடப்பாகம் முழுவதும் பெண்ணாகியவர். அவரது மலை திருஅண்ணாமலை. இம்மலையில் இருந்து அருவிகள், சுடர்விடுகின்ற மணிகளைத் தாங்கிக் கொண்டு பேரிரைச்சலோடு மண்ணை நோக்கி வருகின்றன. சிறார்கள் பேசும் பொருள் புரியாத மழலை ஒலியோடு, முழவு ஒலியும்

சேர்ந்து ஒலிக்கின்ற ஒலி போல அமைகின்றது அந்த அருவியின் பேரிரைச்சல். இத்தனை சிறப்பு வாய்ந்த திருஅண்ணாமலையைத் தொழுவார்களுடைய வினைகள் தவறாது கெடும்.

**குறிப்புரை:** உமையாளொடும் உடனாகிய ஒருவன் என்றது உமாதேவியை இடப்பாகத்து இருத்தி இருக்கிற உடனாய நிலையை உணர்த்தியது. பெண்ணாகிய பெருமான் என்றது உமையம்மையோடு ஒன்றாகிய நிலையை உணர்த்தியது. மழலை முழவு – சொற்றூய்மை இல்லாத முழவொலி. சொல் – மத்தளத்தின் ஜதி ஒலி.

Lord Civan, the unique One, is concorporate with His Consort Unnaa-mulai, thus having a feminine structure on the entire left side of His frame. The Lord's hill is Annaa-malai (*அண்ணாமலை*) from where, water is gushing through the falls bringing choice gems along with it. This waterfall creates heavy noise, similar to the lisping of babies in combination with the drum music. They who adore it will, for sure, be freed from their karma.

Note: Annaa-malai: Literally means the mountain which is unapproachable. It is said that it is the very form - less form of Lord. Civan i.e., Civa Lingam (*சிவ லிங்கம்*).

தேமாங்கனி கடுவன்கொள விடுகொம்பொடுதீண்டித்
தூமாமழை துறுகன்மிசை சிறுநுண்டுளிசிதற
ஆமாம்பிணை யணையும்பொழி லண்ணாமலையண்ணல்
பூமாங்கழல் புனைசேவடி நினைவார்வினையிலரே. 2

***தேமாங்கனி கடுவன் கொள விடு கொம்பொடு தீண்டித்,***
***தூ மா மழை துறுகல் மிசை சிறுநுண் துளி சிதற,***
***ஆமாம்பிணை அணையும் பொழில் அண்ணாமலை அண்ணல்***
***பூ மாங் கழல் புனை சேவடி நினைவார் வினை இலரே.***

tEmAgkan2i kaTuvan2 koLa viTu kompoTu tINTi,
tU mA mazai tuRukal micai ciRu nuN tuLi citaRa,
AmAm piNai aNaiyum pozil aNNAmalai aNNal
pU mAg kazal pun2ai cEvaTi nin2aivAr vin2ai ilarE.

**பொருள்:** ஆண் குரங்குகள், மாமரங்களின் கிளைகளை வளைத்து, கனிகளை உண்டபின், அக்கிளைகளை விட்டு விடுகின்றன. அக்கொம்புகள் வேகமாக மேலே செல்லும்போது, அதுசமயம், தவழ்ந்து செல்லும் மழை மேகங்கள்மீது கிளைகள் தீண்டுகின்றன. அவ்வாறு தீண்டுவதால் சிறிய நுண்ணிய மழைத் துளிகள் மலைப் பாறைகளில் சிதறுகின்றன. இதைக் கண்ட காட்டுப் பசுக்கள் மழை எனக் கருதி, மரங்களின் அடியில் போய்ச் சேருகின்றன.

இத்துணை செழிப்பு வாய்ந்த அண்ணாமலை இறைவனின் அழகிய மலர் போன்றனவும், வீரக்கழல் அணிந்தனவுமான சிவந்த திருவடிகளை நினைவார் வினை இலராவர்.

**குறிப்புரை:** கடுவன் – ஆண் குரங்கு. விடுகொம்பு – மாம்பழத்தைப் பறித்தபின் விடப்பட்ட மாங்கொம்பு. தூமாமழை – தூய்மையான கரிய மேகம். துறுகல் – பாறை. ஆமா பிணை – காட்டுப் பசு; பெண் பசுவோடு. ஆமாப்பிணை என்பது எதுகை நோக்கி ஆமாம் பிணை ஆயிற்று. பூமாங்கழல் – அழகிய மாவிலையின் வடிவந்தோன்றப் புனையப் பட்ட காலணி, மான் கழலுமாம். நினைக்க முத்தி தரும் தலம் ஆதலின் நினைவார் வினையிலரே என்றார்.

Male monkeys (Kaduvan) pull down and bend the heavy top branches of the mango trees, pluck and eat the ripe mangoes and release the branches. The branches swiftly spring back dashing against the rain bearing clouds that pass through. Because of the friction, droplets of pure water scatter onthe boulders of the mountain. Seeing this, the wild cows (Bison) think that rain is imminent and move to the shades of nearby trees. Indeed such is Annaa-malai. They who meditate on the flower-bedecked and ankleted Feet of the great Lord of this shrine stand rid of their karma.

**Note:** Pinai: A female animal; Aamaan Pinai: The jungle cow.

பீலிம்மயில் பெடையோடுறை பொழில்சூழ்கழைமுத்தம்
சூலிம்மணி தரைமேனிறை சொரியும்விரிசாரல்
ஆலிம்மழை தவழும்பொழி லண்ணாமலையண்ணல்
காலன்வலி தொலைசேவடி தொழுவாரனபுகழே. 3

பீலி(ம்) மயில் பெடையோடு உறை பொழில் சூழ் கழை முத்தம்
சூலி(ம்) மணி தரைமேல் நிறை சொரியும் விரி சாரல்,
ஆலி(ம்) மழை தவழும் பொழில் அண்ணாமலை அண்ணல்
காலன் வலி தொலை சேவடி தொழுவாரனபுகழே.

plli(m)mayil peTaiyOTu uRai pozil cUz kazai muttam
cUli(m) maNi taraimEl niRai coriyum viri cAral,
Ali(m) mazai tavazum pozil aNNAmalai aNNal
kAlan2 vali tolai cEvaTi tozuvAran2a pukazE.

**பொருள்:** அண்ணாமலையில் சோலைகள் சூழ்ந்துள்ள இடங்களில் தோகைகளோடு கூடிய ஆண் மயில்கள் பெண் மயில்களோடு உறைகின்றன. மூங்கில்கள் சூல்கொண்டு முத்துக்களை உதிர்க்கின்றன. விரிந்த மலைப் பகுதிகளில் நீர்த்துளிகளோடு கூடிய மழை

மேகங்கள் தவழ்ந்து செல்லுகின்றன. காலனைக் காலால் தடிந்த இறைவனின் சிவந்த திருவடிகளைத் தொழுவார் புகழ் பெறுவர்.

**குறிப்புரை:** பீலிம்மயில், ஆலிம்மழை, சூலிம்மணி என்பன விரித்தல் விகாரம். சூலி மணி – சூலிருந்து பெற்ற முத்துக்கள். ஆலி – நீர்த்துளி. திருவடியால் எட்டியுதைத்தார் ஆகலின் காலன் வலிதொலை சேவடி என்றார். காலனைக் காலால் கடிந்தவன் சிவபெருமான். திருக்கடவூரில் மார்க்கண்டேயன் உயிரைக் கவர வந்த யமனைச் (அறக்கடவுளை) சிவன் காலால் உதைத்து அழித்தான். புகழ் தொழுவாரன எனக் கூட்டுக.

In the groves of Thiru-Annaa-malai fan-tailed peacocks live with their hens. The ground here is resplendent with pearls dropped down by bamboos. Rain bearing clouds carrying drops of water crawl over the broad mountain. Such ińdeed is Annaa-malai of the great Lord who kicked down and incapacitated Yama, the god of death. Those who worship this Lord's Feet which became red by kicking the god of death, will become well renowned.

உதிரும்மயி ரிடுவெண்டலை கலனாவுலகெல்லாம்
எதிரும்பலி யுணவாகவு மெருதேறுவதல்லால்
முதிருஞ்சடை யிளவெண்பிறை முடிமேல்கொளவடிமேல் 4
அதிருங்கழ லடிகட்கிட மண்ணாமலையதுவே.

உதிரும் மயிர் இடு வெண்தலை கலனா, உலகுஎல்லாம்
எதிரும் பலி உணவு ஆகவும், எருது ஏறுவது அல்லால்,
முதிரும் சடை இளவெண்பிறை முடிமேல் கொள, அடிமேல்
அதிரும் கழல் அடிகட்கு இடம் - அண்ணாமலை அதுவே.

utirum mayir iTu veNtalai kalan2A, ulaku ellAm
etirum pali uNavu Akavum, erutu ERuvatu allAl,
mutirum caTai iLaveN piRai muTimEl koLa, aTi mEl
atirum kazal aTikaTku iTam--aNNAmalai atuvE.

**பொருள்:** பிரம்மாவின் உடலில் இருந்து பிரிக்கப்பட்ட மயிர்நீங்கிய வெண்மையான தலை ஓட்டை, சிவபெருமான் தனது உண்கலமாகக் கொண்டு உலகெலாம் திரிந்து பலியை ஏற்று வருகிறான். அவன் எருதின்மீது ஏறி வருகிறான். முதிர்ந்த தன் சடை முடியின்மீது வெண் பிறையைச் சூடி உள்ளான். அவன் திருவடிகளில் அதிரும் வீரக்கழல்கள் விளங்குகின்றன. அவனுக்குரிய இடம் திருஅண்ணாமலை ஆகும்.

**குறிப்புரை:** உதிரும் மயிர் இடு வெண்டலை – சதை வற்றிப் போனதால் உதிர்கின்ற மயிரை உடைய காட்டில் இடப்பெற்ற பிரம கபாலம். எதிரும் பலி – வந்து இடப்பெறும் பிச்சை. பிச்சை ஏற்பார் யாசியாது

இத்துணை செழிப்பு வாய்ந்த அண்ணாமலை இறைவனின் அழகிய மலர் போன்றனவும், வீரக்கழல் அணிந்தனவுமான சிவந்த திருவடிகளை நினைவார் வினை இலராவர்.

**குறிப்புரை:** கடுவன் – ஆண் குரங்கு. விடுகொம்பு – மாம்பழத்தைப் பறித்தபின் விடப்பட்ட மாங்கொம்பு. தூமாமழை – தூய்மையான கரிய மேகம். துறுகல் – பாறை. ஆமா பிணை – காட்டுப் பசு; பெண் பசுவோடு. ஆமாப்பிணை என்பது எதுகை நோக்கி ஆமாம் பிணை ஆயிற்று. பூமாங்கழல் – அழகிய மாவிலையின் வடிவந்தோன்றப் புனையப் பட்ட காலணி, மான் கழலுமாம். நினைக்க முத்தி தரும் தலம் ஆதலின் நினைவார் வினையிலரே என்றார்.

Male monkeys (Kaduvan) pull down and bend the heavy top branches of the mango trees, pluck and eat the ripe mangoes and release the branches. The branches swiftly spring back dashing against the rain bearing clouds that pass through. Because of the friction, droplets of pure water scatter onthe boulders of the mountain. Seeing this, the wild cows (Bison) think that rain is imminent and move to the shades of nearby trees. Indeed such is Annaa-malai. They who meditate on the flower-bedecked and ankleted Feet of the great Lord of this shrine stand rid of their karma.

**Note:** Pinai: A female animal; Aamaan Pinai: The jungle cow.

பீலிம்மயில் பெடையோடுறை பொழில்சூழ்கழைமுத்தம்
சூலிம்மணி தரைமேனிறை சொரியும்விரிசாரல்
ஆலிம்மழை தவழும்பொழி லண்ணாமலையண்ணல்
காலன்வலி தொலைசேவடி தொழுவாரனபுகழே. 3

*பீலி(ம்) மயில் பெடையோடு உறை பொழில் சூழ் கழை முத்தம்*
*சூலி(ம்) மணி தரைமேல் நிறை சொரியும் விரி சாரல்,*
*ஆலி(ம்) மழை தவழும் பொழில் அண்ணாமலை அண்ணல்*
*காலன் வலி தொலை சேவடி தொழுவாரனபுகழே.*

pIli(m)mayil peTaiyOTu uRai pozil cUz kazai muttam
cUli(m) maNi taraimEl niRai coriyum viri cAral,
Ali(m) mazai tavazum pozil aNNAmalai aNNal
kAlan2 vali tolai cEvaTi tozuvAran2a pukazE.

**பொருள்:** அண்ணாமலையில் சோலைகள் சூழ்ந்துள்ள இடங்களில் தோகைகளோடு கூடிய ஆண் மயில்கள் பெண் மயில்களோடு உறைகின்றன. மூங்கில்கள் சூல்கொண்டு முத்துக்களை உதிர்க்கின்றன. விரிந்த மலைப் பகுதிகளில் நீர்த்துளிகளோடு கூடிய மழை

மேகங்கள் தவழ்ந்து செல்லுகின்றன. காலனைக் காலால் தடிந்த இறைவனின் சிவந்த திருவடிகளைத் தொழுவார் புகழ் பெறுவர்.

**குறிப்புரை:** பீலிம்மயில், ஆலிம்மழை, சூலிம்மணி என்பன விரித்தல் விகாரம். சூலி மணி – சூலிருந்து பெற்ற முத்துக்கள். ஆலி – நீர்த்துளி. திருவடியால் எட்டியுதைத்தார் ஆகலின் காலன் வலிதொலை சேவடி என்றார். காலனைக் காலால் கடிந்தவன் சிவபெருமான். திருக்கடவூரில் மார்க்கண்டேயன் உயிரைக் கவர வந்த யமனைச் (அறக்கடவுளை) சிவன் காலால் உதைத்து அழித்தான். புகழ் தொழுவாரன எனக் கூட்டுக.

In the groves of Thiru-Annaa-malai fan-tailed peacocks live with their hens. The ground here is resplendent with pearls dropped down by bamboos. Rain bearing clouds carrying drops of water crawl over the broad mountain. Such indeed is Annaa-malai of the great Lord who kicked down and incapacitated Yama, the god of death. Those who worship this Lord's Feet which became red by kicking the god of death, will become well renowned.

உதிரும்மயி ரிடுவெண்டலை கலனாவுலகெல்லாம்
எதிரும்பலி யுணவாகவு மெருதேறுவதல்லால்
முதிருஞ்சடை யிளவெண்பிறை முடிமேல்கொளவடிமேல்
அதிருங்கழ லடிகட்கிட மண்ணாமலையதுவே. 4

உதிரும் மயிர் இடு வெண்தலை கலனா, உலகுஎல்லாம்
எதிரும் பலி உணவு ஆகவும், எருது ஏறுவது அல்லால்,
முதிரும் சடை இளவெண்பிறை முடிமேல் கொள, அடிமேல்
அதிரும் கழல் அடிகட்கு இடம் - அண்ணாமலை அதுவே.

utirum mayir iTu veNtalai kalan2A, ulaku ellAm
etirum pali uNavu Akavum, erutu ERuvatu allAl,
mutirum caTai iLaveN piRai muTimEl koLa, aTi mEl
atirum kazal aTikaTku iTam--aNNAmalai atuvE.

**பொருள்:** பிரம்மாவின் உடலில் இருந்து பிரிக்கப்பட்ட மயிர்நீங்கிய வெண்மையான தலை ஓட்டை, சிவபெருமான் தனது உண்கலமாகக் கொண்டு உலகெலாம் திரிந்து பலியை ஏற்று வருகிறான். அவன் எருதின்மீது ஏறி வருகிறான். முதிர்ந்த தன் சடை முடியின்மீது வெண் பிறையைச் சூடி உள்ளான். அவன் திருவடிகளில் அதிரும் வீரக்கழல்கள் விளங்குகின்றன. அவனுக்குரிய இடம் திருஅண்ணாமலை ஆகும்.

**குறிப்புரை:** உதிரும் மயிர் இடு வெண்டலை – சதை வற்றிப் போனதால் உதிர்கின்ற மயிரை உடைய காட்டில் இடப்பெற்ற பிரம கபாலம். எதிரும் பலி – வந்து இடப்பெறும் பிச்சை. பிச்சை ஏற்பார் யாசியாது

தெருவிற்செல்ல மகளிர் தாமே வந்து இடுதல் மரபாதலின் அதனை விளக்க எதிரும்பலி என்றார். முதிருஞ்சடை இள வெண் பிறை: முரண்.

He receives alms from all over the world in His bowl, of white, hairless, skull of Brahma from willing givers, and pretends as though He is imbibing it as His food. He also rides the bull. In His growing matted hair He gave protection to the young white crescent moon. He is decked with resounding anklets. Behold His place is Annaa-malai!

**Note:** Alms: symbolic of love towards God.

மரவஞ்சிலை தரளம்மிகு மணியுந்துவெள்ளருவி
அரவஞ்செய முரவம்படு மண்ணாமலையண்ணல்
உரவஞ்சடை யுலவும்புன லுடனாவதுமோரார்
குரவங்கமழ் நறுமென்குழ லுமைபுல்குதல்குணமே. 5

மரவம், சிலை, தரளம், மிகு மணி, உந்து வெள்அருவி
அரவம் செய, முரவம் படும் அண்ணாமலை அண்ணல்
உரவம் சடை உலவும் புனல் உடன் ஆவதும் ஓரார்,
குரவம் கமழ் நறுமென் குழல் உமை புல்குதல் குணமே?

maravam, cilai, taraLam, miku maNi, untu veL aruvi
aravam ceya, muravam paTum aNNAmalai aNNal
uravam caTai ulavum pun2al uTan2 Avatum OrAr,
kuravam kamaz naRumen2kuzal umai pulkutal kuNamE?

**பொருள்:** திருஅண்ணாமலையில் வெண்மையான அருவிகள், பறைபோல ஆரவாரம் செய்து கொண்டு, வெண் கடம்ப மரம், சிலை மரம், முத்து, மிக்க மணிகள் ஆகியவற்றை எடுத்து வருகின்றன. சிவபெருமான் சடையில் பாம்பும், கங்கையும் உடனாய் இருந்து உலவுவதை ஓராமல், குறாப்பூ மணம் கமழும் மென்மையான கூந்தலையுடைய உமையம்மையாரைத் தழுவுதல் நன்றோ?

**குறிப்புரை:** சிலை – ஒருவகை மரம். தரளம் – முத்து. மணி – இரத்தினம். அரவம் – ஒலி. உரவம் – பாம்பு, உரகம் என்பதன் திரிபு. உரகமும், கங்கையும் சடையில் உலாவுதலையும் ஓராமல் உமையம்மையைத் தழுவுதல் குணமாகுமா என்று வினவுகிறார். புணர்ச்சிக்குத் தனிமை இனியதாய், நாணங் காப்பாகவும், இவர் பாம்பும் கங்கையும் சடைமீது உலாவப் புல்லல் நன்றன்று என்று நகைபடச் சொல்லிற்றாம்.

In Thiru-annaa-malai, the roaring and white cataracts roll down uproariously with gems and pearls and logs of maravam and silai. Without any consideration that

ganga devi and the serpent are moving about on His matted hair, is it fair for Lord Civan to hug His consort Uma whose soft hair smells sweet by the flowers of Kuravam she is wearing.

**Note:** Maravam: Indian Oak Tree; Silai (Cilai): A Jungle Tree; Kuravum (Kure): Common bottle flower.

பெருகும்புன லண்ணாமலை பிறைசேர்கடனஞ்சைப்
பருகுந்தனை துணிவார்பொடி யணிவாரதுபருகிக்
கருகும்மிட றுடையார்கமழ் சடையார்கழல்பரவி
உருகும்மன முடையார்தமக் குறுநோயடையாவே. 6

பெருகும் புனல் அண்ணாமலை, பிறை சேர், கடல் நஞ்சைப்
பருகும்தனை துணிவார், பொடி அணிவார், அது பருகிக்
கருகும் மிடறு உடையார், கமழ் சடையார், கழல் பரவி
உருகும் மனம் உடையார் தமக்கு உறு நோய் அடையாவே.

perukum pun2al aNNAmalai, piRai cEr, kaTal nanjcaip
parukum tan2ai tuNivAr, poTi aNivAr, atu parukik
karukum miTaRu uTaiyAr, kamaz caTaiyAr, kazal paravi
urukum man2am uTaiyAr tamakku uRu nOy aTaiyAvE.

**பொருள்:** பெருகிவரும் அருவி நீரையுடைய திருஅண்ணாமலையில் வீற்றிருப்பவன் சிவபெருமான். அவன் பிறைமதி தோன்றிய பாற்கடலிடைத் தோன்றிய நஞ்சை உட்கொள்ளும் அளவிற்கு துணிபுடையவன். அந்நஞ்சினை உண்டு கண்டம் கருத்தவன். திருவெண்ணீற்றை அணிந்தவன். மணம் கமழும் சடைமுடியை உடையவன். இவனுடைய திருவடிகளை வாழ்த்தி உருகும் மனம் உடையவர்க்கு மிக்க நோய்கள் எவையும் வாரா.

**குறிப்புரை:** பிறை சேர் கடல் – ஒருகலைப் பிறை உண்டாதற்கு இடமாகிய பாற்கடல். பருகுந்தனை துணிவார் – உட்கொள்ளும் அளவிற்குத் துணிவுடையவர். பொடி – விபூதி. கருகும் மிடறு – கருமை ஒரு காலைக்கு ஒரு கால் மிக்குத் தோன்றும் கழுத்து.

The swelling waters in the waterfalls are flowing forever in the Thiru-Annamalai mountain. In the ocean of milk the crescent moon was born. From the same ocean poison emerged. Lord Civan had courage enough to quaff the poison. As a result His throat became dark blue in colour. He smears the holy ash on His body. His matted

தெருவிற்செல்ல மகளிர் தாமே வந்து இடுதல் மரபாதலின் அதனை விளக்க எதிரும்பலி என்றார். முதிருஞ்சடை இள வெண் பிறை: முரண்.

He receives alms from all over the world in His bowl, of white, hairless, skull of Brahma from willing givers, and pretends as though He is imbibing it as His food. He also rides the bull. In His growing matted hair He gave protection to the young white crescent moon. He is decked with resounding anklets. Behold His place is Annaa-malai!

**Note:** Alms: symbolic of love towards God.

மரவஞ்சிலை தரளம்மிகு மணியுந்துவெள்ளருவி
அரவஞ்செய முரவம்படு மண்ணாமலையண்ணல்
உரவஞ்சடை யுலவும்புன லுடனாவதுமோரார்
குரவங்கமழ் நறுமென்குழ லுமைபுல்குதல்குணமே. 5

*மரவம், சிலை, தரளம், மிகு மணி, உந்து வெள்அருவி*
*அரவம் செய, முரவம் படும் அண்ணாமலை அண்ணல்*
*உரவம் சடை உலவும் புனல் உடன் ஆவதும் ஓரார்,*
*குரவம் கமழ் நறுமென் குழல் உமை புல்குதல் குணமே?*

maravam, cilai, taraLam, miku maNi, untu veL aruvi
aravam ceya, muravam paTum aNNAmalai aNNal
uravam caTai ulavum pun2al uTan2 Avatum OrAr,
kuravam kamaz naRumen2kuzal umai pulkutal kuNamE?

***பொருள்:*** திருஅண்ணாமலையில் வெண்மையான அருவிகள், பறைபோல ஆரவாரம் செய்து கொண்டு, வெண் கடம்ப மரம், சிலை மரம், முத்து, மிக்க மணிகள் ஆகியவற்றை எடுத்து வருகின்றன. சிவபெருமான் சடையில் பாம்பும், கங்கையும் உடனாய் இருந்து உலவுவதை ஓராமல், குறாப்பூ மணம் கமழும் மென்மையான கூந்தலையுடைய உமையம்மையாரைத் தழுவுதல் நன்றோ?

***குறிப்புரை:*** சிலை – ஒருவகை மரம். தரளம் – முத்து. மணி – இரத்தினம். அரவம் – ஒலி. உரவம் – பாம்பு, உரகம் என்பதன் திரிபு. உரகமும், கங்கையும் சடையில் உலாவுதலையும் ஓராமல் உமையம்மையைத் தழுவுதல் குணமாகுமா ஏன்று வினவுகிறார். புணர்ச்சிக்குத் தனிமை இனியதாய், நாணங் காப்பாகவும், இவர் பாம்பும் கங்கையும் சடைமீது உலாவப் புல்லல் நன்றன்று என்று நகைபடச் சொல்லிற்றாம்.

In Thiru-annaa-malai, the roaring and white cataracts roll down uproariously with gems and pearls and logs of maravam and silai. Without any consideration that

ganga devi and the serpent are moving about on His matted hair, is it fair for Lord Civan to hug His consort Uma whose soft hair smells sweet by the flowers of Kuravam she is wearing.

**Note:** Maravam: Indian Oak Tree; Silai (Cilai): A Jungle Tree; Kuravum (Kure): Common bottle flower.

பெருகும்புன லண்ணாமலை பிறைசேர்கடனஞ்சைப்
பருகுந்தனை துணிவார்பொடி யணிவாரதுபருகிக்
கருகும்மிட றுடையார்கமழ் சடையார்கழல்பரவி
உருகும்மன முடையார்தமக் குறுநோயடையாவே. 6

பெருகும் புனல் அண்ணாமலை, பிறை சேர், கடல் நஞ்சைப்
பருகும்தனை துணிவார், பொடி அணிவார், அது பருகிக்
கருகும் மிடறு உடையார், கமழ் சடையார், கழல் பரவி
உருகும் மனம் உடையார் தமக்கு உறு நோய் அடையாவே.

perukum pun2al aNNAmalai, piRai cEr, kaTal nanjcaip
parukum tan2ai tuNivAr, poTi aNivAr, atu parukik
karukum miTaRu uTaiyAr, kamaz caTaiyAr, kazal paravi
urukum man2am uTaiyAr tamakku uRu nOy aTaiyAvE.

**பொருள்:** பெருகிவரும் அருவி நீரையுடைய திருஅண்ணாமலையில் வீற்றிருப்பவன் சிவபெருமான். அவன் பிறைமதி தோன்றிய பாற்கடலிடைத் தோன்றிய நஞ்சை உட்கொள்ளும் அளவிற்கு துணிபுடையவன். அந்நஞ்சினை உண்டு கண்டம் கருத்தவன். திருவெண்ணீற்றை அணிந்தவன். மணம் கமழும் சடைமுடியை உடையவன். இவனுடைய திருவடிகளை வாழ்த்தி உருகும் மனம் உடையவர்க்கு மிக்க நோய்கள் எவையும் வாரா.

**குறிப்புரை:** பிறை சேர் கடல் – ஒருகலைப் பிறை உண்டாதற்கு இடமாகிய பாற்கடல். பருகுந்தனை துணிவார் – உட்கொள்ளும் அளவிற்குத் துணிவுடையவர். பொடி – விபூதி. கருகும் மிடறு – கருமை ஒரு காலைக்கு ஒரு கால் மிக்குத் தோன்றும் கழுத்து.

The swelling waters in the waterfalls are flowing forever in the Thiru-Annamalai mountain. In the ocean of milk the crescent moon was born. From the same ocean poison emerged. Lord Civan had courage enough to quaff the poison. As a result His throat became dark blue in colour. He smears the holy ash on His body. His matted

hair is always fragrant. They who praise this Lord Civan's ankleted Feet with melting hearts will no longer suffer from the malady of rebirth.

கரிகாலன குடர்கொள்வன கழுதாடியகாட்டில்
நரியாடிய நகுவெண்டலை யுதையுண்டவையுருள
எரியாடிய விறைவர்க்கிட மினவண்டிசைமுரல
அரியாடிய கண்ணாளொடு மண்ணாமலையதுவே. 7

கரி காலன, குடர் கொள்வன, கழுது ஆடிய காட்டில்
நரி ஆடிய நகுவெண்தலை உதையுண்டவை உருள,
எரி ஆடிய இறைவர்க்கு இடம் - இனவண்டு இசை முரல,
அரி ஆடிய கண்ணாளொடும் அண்ணாமலை அதுவே.

kari kAlan2a, kuTar koLvan2a, kazutu ATiya kATTil
nari ATiya naku veN talai utaiyuNTavai uruLa,
eri ATiya iRaivarkku iTam--in2avaNTu icai murala,
ari ATiya kaNNALoTum aNNAmalai atuvE.

**பொருள்:** இடுகாட்டில் கரிந்த கால்களை உடையதும் குடரைப் பிடுங்கி உண்பதும் ஆகிய பேய்கள் நடமாடுகின்றன. நரிகள் உருட்டி விளையாடும் வெண் தலை ஓடுகள் உதைக்கப்பட்டு உருள அவைகள் சிரிப்பன போன்ற காட்சியைத் தருகின்றன. சிவபெருமான் கையில் எரி ஏந்தி ஆடுகின்றான். வண்டுக் கூட்டங்கள் இசைபாட செவ்வரி பொருந்திய கண்களை உடைய உமையம்மையோடு எழுந்தருளிய இடம் திருஅண்ணாமலை.

**குறிப்புரை:** கரிகாலன – எரிபிணத்தை நுகர ஏரியில் நிற்பதால் கரிந்து போன கால்களை உடையன. கழுது – பேய். நரியாடிய – நரிகள் உருட்டி விளையாடிய. எரியாடிய – இடுகாட்டில் தீப்பிழம்பில் நின்றாடிய. அரி – செவ்வரி.

Their legs are charred; they eat the entrails; they are the ghouls that dance in the crematory. The skulls are kicked and tossed about by jackals. The exposed teeth in the white skulls will appear as though they are smiling. Group of beetles fly all around creating music in Thiru-Annaa-malai. Lord Civan holding fire in His hand dances. Thiru-Annaa-malai is the place where Lord Civan - abides with His Consort Umaa whose eyes are streaked red.

ஒளிறூபுலி யதளாடைய னுமையஞ்சுதல்பொருட்டால்
பிளிறூகுரன் மதவாரண வதனம்பிடித்துரித்து
வெளிறூபட விளையாடிய விகிர்தன்னிராவணனை
அளறூபட வடர்த்தானிட மண்ணாமலையதுவே. 8

ஒளிறூ புலி அதள் ஆடையன், உமை அஞ்சுதல் பொருட்டால்,
பிளிறூ குரல் மதவாரணம் வதனம் பிடித்து உரித்து,
வெளிறூபட விளையாடிய விகிர்தன்; இராவணனை
அளறூபட அடர்த்தான்; இடம் - அண்ணாமலை அதுவே.

oLiRU puli ataL ATaiyan2, umai anjcutal poruTTAl,
piLiRU kural matavAraNam vatan2am piTittu urittu,
veLiRUpaTa viLaiyATiya vikirtan2; irAvaNan2ai
aLaRUpaTa aTarttAn2; iTam--aNNAmalai atuvE.

**பொருள்:** சிவபெருமான் ஒளிசெய்யும் புலித்தோலை ஆடையாகக் கொண்டவன். உமையம்மை அஞ்சுமாறு பிளிறும் குரலை உடைய மதம் பொருந்திய யானையின் தலையைப் பிடித்து, அதன் தோலை உரித்து எளிதாக விளையாடிய விகிர்தன். இராவணனை மலையின் கீழ் அகப்படுத்தி இரத்த வெள்ளத்தில் அடர்த்தவன். இவனது இடம் திருஅண்ணாமலை.

**குறிப்புரை:** ஒளிறூபுலியதள் – ஒளி செய்யும் புலித்தோல். பிளிறூ வெளிறூ அளறூ என்ப சந்தம் நோக்கி நீண்டன. மதவாரணம் – மதம் பிடித்த யானை. வதனம் பிடித்து உரித்து – முகத்தில் திருவடியை ஊன்றிப் பிடித்துக் கொண்டு உரித்து, வெளிறுபட விளையாடிய – வெள்ளையாக விளையாடிய, வயிரமில்லாத மரத்தை வெளிறு என்றல்போல. கபடமின்றி விளையாடுதலை இங்ஙனம் கூறி இன்புற்றார். அளறுபட – மலைக்கீழகப்பட்டு நசுங்கிச் சேறாக, அடர்த்தான் – நெருக்கியவன்.

Lord Civan is clad in a bright tiger skin; As His Consort Uma once got scared, He, the valourous One, caught the musty and trumpeting tusker by its face, and tore off its hide as though it were child's play. He crushed Raavana to bleed. His abode is indeed Annaa-malai!

விளவார்கனி படநூறிய கடல்வண்ணனும்வேதக்
கிளர்தாமரை மலர்மேலுறை கேடில்புகழோனும்
அளவாவண மழலாகிய வண்ணாமலையண்ணல்
தளராமுலை முறுவல்லுமை தலைவன்னடிசரணே. 9

விளவு ஆர் கனி பட நூறிய கடல் வண்ணனும், வேதக்
கிளர் தாமரை மலர் மேல்உறை கேடுஇல் புகழோனும்,
அளவா வணம் அழல் ஆகிய அண்ணாமலை அண்ணல் -
தளராமுலை, முறுவல்(ல்), உமை தலைவன்(ன்) - அடி சரணே!

viLavu Ar kan2i paTa nURiya kaTalvaNNan2um, vEtak
kiLar tAmarai malarmEl uRai kETu il pukazOn2um,
aLavA vaNam azal Akiya aNNAmalai aNNal--
taLarAmulai, muRuval(l), umai talaivan2(n2)--aTi caraNE!

***பொருள்:*** விளாமரத்தில் கனியை உகுப்பது போல அம்மரவடிவாக நின்ற அரக்கனை அழித்த கருங்கடல் வண்ணனாகிய திருமாலும் நீரில் கிளர்ந்து தோன்றிய தாமரை மலர்மேல் உறையும் குற்றமற்ற புகழ் கொண்ட பிரம்மாவும் அடிமுடிகளைக் காண இயலாதவாறு நெருப்பு வடிவாக நின்ற தலைவனும், தளராத தனபாரங்களையும் மலர்ந்த சிரிப்பையும் உடைய உமையம்மையின் கணவனுமாகிய சிவபெருமானின் திருவடிகளே நமக்குக் காப்பு.

**குறிப்புரை:** விளவு ஆர் கனிபட நூறிய கடல்வண்ணன் – விளா மரமாய் நின்ற கபித்தன் அழியக் கொன்ற கண்ணபிரான்; கேடில் புகழோன் – அழியாப் புகழ் பெற்ற பிரமன். அளவா வண்ணம் – அளந்தறியாதபடி. இது இத்தலத்தில் பிரம விஷ்ணுக்கள் செருக்கிச் செய்த சண்டையைத் தீர்க்கப் பெருமான் தீப்பிழம்பாகிய அண்ணாமலையாய் நின்ற தலவரலாற்றுக் குறிப்பை விளக்குவது. உண்ணத் தளர்தல் நகிற்கு இயல்பாதலின் உண்ணாமுலை என்பார் தளராமுலை என்றார்.

The Lord rose up as a column of fire whose base and top grew beyond the search of Thirumaal whose hue is sea blue and who smote the asura that stood disguised as a wood apple tree, and also beyond the reach of Brahma the master of the Vedas - the one of endless fame whose seat is the resplendent lotus. Such indeed is Lord Civan the Lord God of Annaa-malai who is the consort of Umaa whose face is ever lit with a smile and whose breasts never sag. Indeed His Feet are our refuge.

**Note:** This verse is the Sthala-puraana of Annaa-malai, in short.

வேர்வந்துற மாசூர்தர வெயினின்றுழல்வாரும்
மார்வம்புதை மலிசீவர மறையாவருவாரும்
ஆரம்பர்த முரைகொள்ளன்மி னண்ணாமலையண்ணல்
கூர்வெண்மழுப் படையானல்ல கழல்சேர்வதுகுணமே. 10

*வேர் வந்துஉற, மாசு ஊர் தர, வெயில் நின்று உழல்வாரும்,*
*மார்வம் புதை மலி சீவரம் மறையா வருவாரும்,*
*ஆரம்பர்தம் உரை கொள்ளன்மின்! அண்ணாமலை அண்ணல்,*
*கூர்வெண்மழுப்படையான், நல்ல கழல் சேர்வது குணமே!*



திருவியலூர் – திருவிசநல்லூர் – ஸ்ரீ யோகானந்தீஸ்வரர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Sri Yoganandiswarar Temple, Tiruviyalur, Tamil Nadu**



கொடுங்குன்றம் – கொடுங்குன்றநாதர் – பாண்டியநாட்டுத் தலம் (பிரான்மலை)
**Kodungkundrisar Temple - Kodungkundram (Piran Malai), Tamil Nadu**




திருநெய்த்தானம் – தில்லைஸ்தானம் – ஸ்ரீநெய்யாடியப்பர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Sri Neiyaadiappar Temple - Tiruneitthaanam (Thillaisthaanam) - Tamil Nadu.**




திருப்புள்ளமங்கை (பசுபதி கோயில்) – ஆலந்துறை நாதர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Aalanthurai Naathar Temple - Tirupullamangkai (Pasupati Koyil), Tamil Nadu**

vEr vantu uRa, mAcu Urtara, veyil nin2Ru uzalvArum,
mArvam putai mali cIvaram maRaiyA varuvArum,
Arampartam urai koLLan2min2! aNNAmalai aNNal,
kUr veN mazuppaTaiyAn2, nala kazal cErvatu kuNamE!

**பொருள்:** உடலில் வியர்வை தோன்றவும், அழுக்கேறவும் வெயிலில் நின்று உழல்வதைத் தவமாகக் கொள்வோராகிய சமணரும், மரவுரியால் மார்பை மிகவும் மறைத்து வருபவர் ஆகிய புத்தரும், ஆரம்பவாதிகளாகிய தார்க்கீகர்களும் கூறும் உரைகளைக் கொள்ளாதீர். திருவண்ணாமலையில் உறையும் தலைவனும் கூரிய வெண்மையான மழுவாயுதத்தைக் கைக் கொண்டவனும் ஆகிய சிவபெருமானது நன்மைதரும் திருவடிகளை அடைதலே மேலான குணம்.

**குறிப்புரை:** வேர் – வியர்வை. மாசு – அழுக்கு. சீவரம் – ஒண் செம்பொன் நிற ஆடை. மார்பு புலப்படாத வண்ணம் மறைத்தல் பௌத்தத் துறவியர் இயல்பு. ஆரம்பர் – ஆரம்பவாதிகள்.

They (Jains and Buddhists) roam in the sun, sweat it out, and get unhygenic. They and those that veil their chests with the bark of trees are but ignorant folks - hearken not to their words. To pay obeisance to the weal-conferring Holy Feet of Lord Civan, the Lord of Annaa-malai who wields a sharp white mazhu (weapon) in His hand is the highest virtue for all.

வெம்புந்திய கதிரோனொளி விலகும்விரிசாரல்
அம்புந்திமு வெயிலெய்தவ னண்ணாமலையதனைக்
கொம்புந்துவ குயிலாலுவ குளிர்காழியுன்ஞான
சம்பந்தன தமிழ்வல்லவ ரடிபேணுதறவமே. 11

*வெம்பு உந்திய கதிரோன் ஒளி விலகும் விரிசாரல்,*
*அம்பு உந்தி மூஎயில் எய்தவன் அண்ணாமலை அதனை,*
*கொம்பு உந்துவ, குயில் ஆலுவ, குளிர் காழியுள் ஞான*
*சம்பந்தன தமிழ் வல்லவர் அடி பேணுதல் தவமே.*

vempu untiya katirOn2 oLi vilakum viricAral,
ampu unti mU eyil eytavan2 aNNAmalai atan2ai,
kompu untuva, kuyil Aluva, kuLir kAziyuL njAn2a--
campantan2a tamiz vallavar aTi pENutal tavamE.

**பொருள்:** சிவபெருமான் அம்பைச் செலுத்தி முப்புரங்களையும் எரித்தவன். அவன் எழுந்தருளிய இடம் திருஅண்ணாமலை. இங்கு வெம்மை மிக்க கதிரவன் ஒளி மலையைத்

தாண்டாமல் விலகிச் செல்கின்றது. குளிர்ந்த சீகாழிப்பதியில் கொம்பு என்னும் வாத்தியங்களின் ஒலியைக் கேட்டு குயில்கள் எதிரொலிக்கின்றன. இங்கு தோன்றிய ஞானசம்பந்தன் பாடிய இத்திருப்பதிகத் தமிழை ஓத வல்லவர்களின் திருவடிகளை வணங்குதல் சிறந்த தவமாகும்.

**குறிப்புரை:** வெம்பு உந்திய – வெப்பமிக்க, மலையே இறைவன் திருமேனியாதலின் அவனைத் தீண்டிப் பழியேற்க விருப்பின்றி கதிரோன் விலகிச் சென்றான் என்பதாம். கொம்பு ஒருவகை வாத்திய விசேடம். கொம்பு ஊதிய இனிய ஓசையைக் குயில் ஒலிக்கும் காழி.

**குருவருள்:** இப்பாடலின் இறுதிவரி 'ஞானசம்பந்தன் தமிழ் வல்லவர் அடிபேணுதல் தவமே' என்கின்றது. இத்திருப்பதிகத்தை வல்லவாறு ஓதுவார்களின் அடியை விரும்பிப் போற்றுதலே ஒருவருக்குத் தவமாக அமையும் என்கிறது. இவ்வாறே திருவலஞ்சுழி பற்றிய 'விண்டெலாம்' என்ற பதிகத்தின் திருக்கடைக் காப்பாகிய 'வீடும் ஞானமும் வேண்டுதிரேல்' என்ற பாடலும், 'நாடி ஞானசம்பந்தன செந்தமிழ் கொண்டு இசை பாடும் ஞானம் வல்லார் அடிசேர்வது ஞானமே' என்ற வரிகளால் இப்பதிகத்தை ஓதுவார்களின் அடிசேர்ந்து வாழ்தலே உண்மை ஞானம் கிடைத்தற்கு ஏதுவாம் என்கின்றது. இவ்விரு பாடல்களும் காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுவார் அடிபோற்றின் தவமும் அதன் வழி ஞானமும் உண்டாம் என்பதை வற்புறுத்துவது காணலாம்.

The extensive tree filled slopes of Annaa-malai hill do not let the very hot sun's rays pierce through and fall on the hills. Lord Civan who is entempled in Thiru-Annaa-malai destroyed the three hostile citadels with His arrow. Thiru Gnaanasambandar hails from cool and serene Seekaazhi where the kuyil birds reverberate the sound of the blaring trumpet (Kombu - *கொம்பு வாத்தியம்*). It is indeed a truly virtuous deed (Tapas) - (Penance) to adore the feet of those songsters (*ஓதுவார்*) who have mastered this Tamil hymn sung by Thiru Gnaanasambandar [according to the prescribed tune (பண்)].

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*10ஆம் பதிகம் முற்றிற்று*
**End of 10th Hymn**

உ
சிவமயம்

# 11. திரு வீழிமிழலை

## திருத்தல வரலாறு:

நான்காவது பதிகம் பார்க்க.

## பதிக வரலாறு:

திரும்பாம்புரம் என்னும் தலத்தை வணங்கிக் கொண்டு பிள்ளையார் திருவீழிமிழலைக்கு அப்பருடன் எழுந்தருள அந்தணர்கள் எதிர் கொண்டு அழைத்தார்கள். பிள்ளையார் சிவிகையினின்றிழிந்து அந்தணர்கள் புடைசூழ விண்ணிழிந்த கோயிலை வலங்கொண்டார். வியந்தார். கீழே விழுந்து வணங்கினார். உள்ளத்தில் உணர்ச்சி பொங்கி வழிந்தது. இசை ஆயிற்று. 'சடையார் புனல் உடையான்' என்றெடுத்துச் சந்த இசைத்தமிழைச் சாற்றி மணவாளப் பெருமானது திருவடிக்கீழ் ஆனந்த வெள்ளத்தாடினார். இத்திருப்பதிகத்தின் பத்துப் பாடல்கள், பல்வகைப் பெருமைகளையும் உடைய சிவபிரான் எழுந்தருளியுள்ள இடம் திருவீழிமிழலை என்கின்றது.

# 11. THIRU-VEEZHI-MIZHALAI

## THE HISTORY OF THE PLACE

See Fourth Hymn.

## INTRODUCTION TO THE HYMN

The saintly youth visited Thiru-Veezhi-Mizhalai alongwith saint Appar. It was here that he sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 11. திரு வீழிமிழலை — 11. THIRU-VEEZHI-MIZHALAI

பண் : நட்டபாடை — *Pann: Natta Paadai*
ராகம் : கம்பீரநாட்டை — *Raagam: Kambeera Naattai*

சடையார்புன லுடையானொரு சரிகோவணமுடையான்
படையார்மழு வுடையான்பல பூதப்படையுடையான்
மடமான்விழி யுமைமாதிட முடையானெனையுடையான்
விடையார்கொடி யுடையானிடம் வீழிம்மிழலையே. 1

***சடை ஆர் புனல் உடையான், ஒரு சரி கோவணம் உடையான்,***
***படை ஆர் மழு உடையான், பலபூதப்படை உடையான்,***
***மடமான்விழி உமைமாது இடம் உடையான், எனை உடையான்,***
***விடை ஆர் கொடி உடையான், இடம் - வீழி(ம்)மிழலையே.***

caTai Ar pun2al uTaiyAn2, oru cari kOvaNam uTaiyAn2,
paTai Ar mazu uTaiyAn2, pala pUtappaTai uTaiyAn2,
maTamAn2 vizi umaimAtu iTam uTaiyAn2, en2ai uTaiyAn2,
viTai Ar koTi uTaiyAn2, iTam--vIzi(m)mizalaiyE.

**பொருள்:** சிவபெருமான் தன் சடைமுடியில் கங்கையைத் தரித்தவன். இடையினின்று சரிந்து தழுவும் ஒப்பற்ற கோவண ஆடையை அணிந்தவன். மழுப்படையை உடையவன். பலவகையான பூதங்களைப் படையாகக் கொண்டவன். மடமைத் தன்மை பொருந்திய மான்விழி போன்ற விழிகளை உடைய உமையம்மையாகிய பெண்ணை இடப்பாகத்தில் கொண்டவன். அவன் என்னை ஆளாக உடையவன். அவன் விடைக்கொடி உடையவன். அவன் எழுந்தருளிய இடம் திருவீழிமிழலை.

**குறிப்புரை:** சடையார் புனல் – சடைக்கண் நிறைந்த கங்கை. படையார் மழு என்றது தீப்பிழம்பன்று; எரியாகிய படை என்பதை விளக்க. இடம் – இடப்பாகத்து. எனை உடையான் – என்னை அநாதியே ஆளாக உடையவன். விடையார் கொடி – இடபக்கொடி. இது இறைவனுக்குரிய அடையாளக்கொடி. இறைவன் தருமஸ்வருபியாதலால் அறவடிவான காளை அவன் கொடிக்கண்ணதாயிற்று.

Ganga Devi (River Ganges personified as a celestial woman) abides in the matted hair of Lord Civan. He wears a sliding loin-cloth; His weapon is mazhu. He is the Chief of the different types of Bhuta soldiers (army of servitors) numberless. His bashful, fawn-eyed consort Uma abides in His left half. He owns me. His banner sports the bull. Veezhi-Mizhalai is verily His abode.

ஈறாய்முத லொன்றாயிரு பெண்ணாண்குணமூன்றாய்
மாறாமறை நான்காய்வரு பூதம்மவையைந்தாய்
ஆறார்சுவை யேழோசையொ டெட்டுத்திசைதானாய்
வேறாயுட னானானிடம் வீழிம்மிழலையே. 2

**ஈறு ஆய், முதல் ஒன்று ஆய், இரு பெண் ஆண், குணம் மூன்று ஆய்,**
***மாறா மறைநான்குஆய், வரு பூதம்(ம்) அவை ஐந்து ஆய்,***
***ஆறு ஆர் சுவை, ஏழ்ஓசையொடு, எட்டுத்திசைதான்ஆய்,***
**வேறுஆய், உடன்ஆனான், இடம் - வீழி(ம்)மிழலையே.**

IRu Ay, mutal on2Ru Ay, iru peN AN, kuNam mUn2Ru Ay,
mARA maRai nAn2ku Ay, varu pUtam(m) avai aintu Ay,
ARu Ar cuvai, Ez OcaiyoTu eTTutticai tAn2 Ay,
vERu Ay, uTan2 An2An2, iTam--vIzi(m)mizalaiyE.

***பொருள்:*** ஊழிக்காலத்தில் அனைத்தையும் ஒடுக்கி, அங்ஙனம் ஒடுக்கப்பட்ட உலகைத் தான் ஒருவனே முதற்பொருளாய் நின்று மீளத் தோற்றுவிப்பவன் சிவபெருமான். அவன் சக்தி, சிவம் என இருவகைப்பட்டவன். முக்குணங்களின் வழிநின்று முத்தொழில் செய்யும் கடவுளாய், எக்காலத்தும் மாறுபடாத நான்மறை வடிவினன். ஐம்பெரும் பூதங்கள், ஆறுசுவை, ஏழு ஓசை, எட்டுத் திசை ஆகியவற்றில் நிறைந்தவனாய் உள்ளான். அவன் குணம் மூன்றாய் ஒவ்வொன்றோடும் அவ்வப்பொருளேயாகியும், அவற்றின் வேறாகியும், உடனாகியும் விளங்குகின்றான். அவனது இடம் திருவீழிமிழலை.

***குறிப்புரை:*** ஈறாய் – உலகத்து உயிர்களெல்லாம் தன்னிடத்து ஒடுங்கத் தான் ஒருவனே நிற்றலின் இயங்குவ நிற்பவான எல்லாவற்றிற்கும் தான் இறுதியாய். முதல் ஒன்றாய் – இறுதியாக நிற்பவனே உலக காரணனாய் (முதலாய்) நிற்குந் தன்மையன் ஆதலின் ஒடுங்கிய உலகமெல்லாம் மீளத் தோன்றுதற்குக் காரணமான (முதற்) பொருள் தானொருவனேயாய், பெண், ஆண் இரண்டாய் என்பது இரு பெண் ஆண் (ஆய்) என நின்றது. குணம் மூன்றாய் – சத்துவ முதலிய குணங்கள் மூன்றாய், மாறா மறை நான்காய் – எக்காலத்தும் மாறுபடாத வேதங்கள் நான்குமாய். அவை இருக்கு, யசுர், சாமம், அதர்வணம் என்பன. மாறா மறை – என்றும் ஒரு படித்தான வேதம் எனினுமாம். வருபூதம் அவை ஐந்தாய் – தத்தம் காரணமாகிய தன்மாத்திரைகளிலிருந்து தோன்றுகின்ற பூதம் ஐந்தாய். ஆறு ஆர் சுவை – ஆறாக அமைந்த சுவை (ஆய்); அவை, அறுவகையான நாப்பொறி கவரும் உப்பு, துவர்ப்பு, கார்ப்பு, கைப்பு, புளிப்பு, தித்திப்பு என்பன. ஏழ் ஓசை – சட்சம், ரிஷபம், காந்தாரம், மத்யமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம், என்ற ஓசைகள் ஏழு. குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன தமிழ்நூல் வழக்கு. எட்டுத் திசை – மாயா காரியமான உலகத்தில் காணப்பெறும் எட்டுத் திசை. தானாய் – அப்பொருள் தானேயாய், வேறாய் – அவற்றின் வேறாய், உடனானான் – உடனாய் நிற்பவன். இறைவன் உடலும் உயிரும், கண்ணும்

கதிரவனும், கண்ணொளியும் ஆன்ம போதமும் போல உயிர்களோடு கலந்திருக்கின்ற மூவகை நிலைகளை உணர்த்தியவாறு. இப்பாடல் எண்ணலங்காரம் பட வந்தது.

**குருவருள்:** இப்பாடலில் 'ஈறாய் என்பது முதல் எட்டுத் திசைதானாய்' என்பது முடிய இறைவன் அவையே தானேயேயாய்ப் பிரிப்பின்றி உடலும் உயிரும் போல் ஒன்றாயிருந்து அருள் புரியும் நிலையையும், காணும் ஒளியாகிய கண்ணுக்குக் காட்டும் ஒளியாகிய சூரியன் வேறாயிருந்து உதவுவது போல் இறைவன் வேறாயிருந்து அருள்புரியும் நிலையையும், கண் ஒளி ஒரு பொருளைப் பார்த்தாலும் அக்கண் ஒளியுடன் உடனாய் உயிர் அறிவு கலந்தாலன்றி, கண் காணாதவாறு போல் இறைவன் உயிர்களுடன் உடனாயிருந்து அருள்புரியும் நிலையையும் உணர்த்துகின்றார் ஞானசம்பந்தர்.

Lord Civan is the end; He is the sole beginning. He is two as male and female; His gunas are three; He is the four vedas among which there is no deviation; He is the five evolving elements; He is the sextuple in taste; He is the seven fold music; He is the eight directions; With the souls He is One (*ஒன்றாய்*); He is different (*வேறாய்*); and He is together with (*உடனாய்*). Veezhi-Mizhalai is indeed His abode.

**Note:** The figure employed in this verse is known as 'enn alangaram'. Numbers 1 to 8 are employed in this verse. According to Saiva Siddaantha philosophy the relationship of god to the souls and the material world is a threefold relationship of identification. He is One with the soul (*ஒன்றாய்*); and He is different (*வேறாய்*); He is together with (*உடனாய்*).

வம்மின்னடி யீர்நாண்மல ரிட்டுத்தொழுதுய்ய
உம்மன்பினொ டெம்மன்புசெய் தீசன்னுறைகோயில்
மும்மென்றிசை முரல்வண்டுகள் கெண்டித்திசையெங்கும்
விம்மும்பொழில் சூழ்தண்வயல் வீழிம்மிழலையே. 3

*வம்மின்(ன்), அடியீர், நாள்மலர் இட்டுத் தொழுது உய்ய!
உம் அன்பினொடு எம் அன்பு செய்து, ஈசன்(ன்) உறை கோயில் -
மும்மென்று இசை முரல் வண்டுகள் கெண்டித் திசை எங்கும்
விம்மும் பொழில் சூழ் தண்வயல் - வீழி(ம்)மிழலையே.*

vammin2(n2), aTiyIr, nALmalar iTTut tozutu uyya!
um an2pin2oTu em an2pu ceytu, Ican2(n2) uRai kOyil--
mummen2Ru icai mural vaNTukaL keNTit ticai egkum
vimmum pozil cUz taNvayal--vIzi(m) mizalaiyE.

**பொருள்:** அன்று அலர்ந்த மலர்களைச் சார்த்தி வணங்கி உய்தி பெற அடியவர்களே வாருங்கள். உயர்ந்த உம்முடைய அன்போடு எனது அன்பையும் அவன் ஏற்றருளுகின்றான். அவன் கோயிலில் 'மும்' என்ற ஒலிக் குறிப்போடு வண்டுகள் கிளறுவதால் திசையெங்கும் பூமணம் கமழும் சோலைகளும் தண்ணிய வயல்களும் சூழ்ந்துள்ளது திருவீழிமிழலையாகும்.

**குறிப்புரை:** இது அடியார்களை அழைத்து அறிவித்தது. நாண் மலர் – அன்று அலர்ந்த புதுப்பூ. அடியீர் உம் அன்பினோடு மலரிட்டுத் தொழுதுய்ய வம்மின் எனக்கூட்டுக. அன்றி, உம் அன்பினோடு எம்மன்பு செய்து இட்டுத் தொழுது உய்யவம்மின் என்றுமாம். செய்து செய்ய எனத் திரிக்க. மும்மென்பது ஒலிக்குறிப்பு. முரல் – ஒலிக்கின்ற. கெண்டி – மகரந்தங்களைக் கிளறி. வண்டு முரல் பொழில் சூழ் மிழலை எனவே புதுப்பூவிற்குக் குறைவில்லை. ஆதலால் உம்மன்பினோடு இட்டுத் தொழுவதே வேண்டப்படுவது என்பது குறிப்பு. எம்மன்பு செய்து என்றற்கு, எம்மன்பின் பயனாக எழுந்த திருப்பாடல்களைப் பாடிக் கொண்டே என்பது பொருளாம். பின்னர்த் திருக்கடைக் காப்பில் 'தமிழ்பத்தும் இசை வல்லார் சொலக் கேட்டார் வினைபோயிட வான் அடைவார்' என்று அருள்வாராதலின் இதுவே கருத்தாதல் துணிபாம்.

Lord Civan accepts your love as well as mine; Come ye devotees to gain salvation by adoring the Lord with fresh-bloom flowers. The shrine of Lord is at Veezhi-Mizhalai girt with cool fields and gardens where humming bees kindle the flowers and wing in all the directions.

**Note:** Civa is the only One that remains when the cosmos is swept away by the great deluge. Through this deluge, Civa absorbs everything unto Himself. Since He alone exists at the dissolution of the cosmos, it is He who re-creates it.

Siva is 'Ammai-Appan', the Lord God who is mother as well as father.

பண்ணும்பத மேழும்பல வோசைத்தமிழவையும்
உண்ணின்றதொர் சுவையும்முறு தாளத்தொலிபலவும்
மண்ணும்புன லுயிரும்வரு காற்றுஞ்சுடர்மூன்றும்
விண்ணும்முழு தானானிடம் வீழிம்மிழலையே. 4

பண்ணும், பதம்ஏழும், பலஓசைத் தமிழ் அவையும்,
உள்-நின்றது ஓர் சுவையும்(ம்), உறு தாளத்து ஒலி பலவும்,
மண்ணும், புனல், உயிரும், வரு காற்றும், சுடர் மூன்றும்,
விண்ணும், முழுது ஆனான் இடம் - வீழி(ம்)மிழலையே.

paNNum, patam Ezum, pala Ocait tamiz avaiyum,
uL--nin2Ratu or cuvaiyum(m), uRu tALattu oli palavum,
maNNum, pun2al, uyirum, varu kARRum, cuTar mUn2Rum,
viNNum, muzutu An2An2 iTam--vIzi(m)mizalaiyE.

**பொருள்:** இசையும், அதற்கு அடிப்படையான ஏழு சுரங்களும், வல்லோசை, மெல்லோசை முதலியவற்றையுடைய தமிழும் உள்ளத்து உணர்வாகிய சுவையும் பொருந்திய தாள வேறுபாட்டு ஒலிகளும் மண், புனல், உயிர், காற்று, நெருப்பு, சூரியன், சந்திரன், விண் ஆகிய எண்வகை வடிவங்களும் ஆகியவற்றில் முழுதும் அவையேயாகக் கலந்திருப்பவன் சிவபெருமான். அவனது இடம் திருவீழிமிழலை.

**குறிப்புரை:** பண் – இசை. பதம் ஏழு – ஸ்வரஸ்தானங்கள் ஏழு. பதம் – தானம். பல ஓசைத் தமிழ் – வல்லோசை, மெல்லோசை, இடையோசை முதலிய வேறுபாடுகளை உடைய தமிழ். உள் நின்றது ஓர் சுவை – பண்ணைச் சுரத்தானங்களில் நின்று ஆலத்தி பண்ணி, பல ஓசை பொருந்தப் பாடுங்கால் உண்டாகின்ற உள்ளத்து உணர்வாகிய சுவை. ஊறதாளத்தொலி – அங்ஙனம் சுவையை அனுபவிக்கும்போது உண்டாகின்ற சச்சபுடம் சாசபுடம் முதலான தாளஒத்துக்கள் பலவும், சுடர் மூன்றும் – சூரியன் சந்திரன் அக்கினி என்ற ஒளிப் பொருள் மூன்றும், இப்பகுதி இறைவனுடைய அட்டமூர்த்தம் வடிவம் கூறுகிறது. உயிர் – இயமானனாகிய ஆன்மா. முழுதானான் என்பது அவற்றுடன் வேற்றுமையின்றி அவையேயாகக் கலந்திருத்தலை உணர்த்திற்று. இந்தப்பாடல் சித்தாந்த சைவம் கூறும் அத்துவிதம் இன்னது என்பதைத் தெளிவாக விளக்குகின்றது.

Lord Civa is music, its constituent and basic notes seven, the manifold melody of multifarious Tamil Songs, their truly abiding relish as well as the rhythms galore of taalam (*தாளம்*). His are the forms of earth, water, life, air, fire, sun, moon and the heaven. Veezhi-Mizhalai is verily where He abides.

Note: Civa is not only the Lord of seven-fold dance but He is also the Lord of seven-fold music. Civa is ashtamurthy. Ashtam (octad) comprises the five elements, the soul, as also the sun and the moon.

ஆயாதன சமயம்பல வறியாதவனெறியின்
றாயானவ னுயிர்கட்குமுன் றலையானவன்மறைமுத்
தீயானவன் சிவனெம்மிறை செல்வத்திருவாரூர்
மேயானவ னுறையும்மிடம் வீழிம்மிழலையே. 5

***ஆயாதன சமயம்பல அறியாதவன், நெறியின்
தாய்ஆனவன், உயிர்கட்கு முன் தலைஆனவன், மறை முத்-
தீஆனவன், சிவன், எம் இறை, செல்வத் திரு ஆரூர்
மேயான் அவன், உறையும்(ம்) இடம் - வீழி(ம்)மிழலையே.***

AyAtan2a camayam pala aRiyAtavan2, neRiyin2
tAy An2avan2, uyir kaTku mun2 talai An2avan2, maRai mut--
tI An2avan2, civan2, em iRai, celvat tiru ArUr
mEyAn2 avan2, uRaiyum(m) iTam--vIzi(m)mizalaiyE.

***பொருள்:*** சிவபெருமான், சுருதி, யுக்தி, அனுபவங்களால் ஆராய்ச்சி செய்யாத பல சமயங்களால் அறியப்பெறாதவன். அறநெறிகளின் தாயாய் விளங்குவோன். எல்லா உயிருக்கும் அனாதியாகவே தலைவன். வேத வேள்விகளில் முத்தீ வடிவினன். சிவன் என்னும் திருப்பெயருடையவன். எங்கட்குத் தலைவன். செல்வம் நிறைந்த திருவாரூரில் எழுந்தருளியிருப்பவன். அத்தகையோன் உறையுமிடம் திருவீழிமிழலை.

***குறிப்புரை:*** ஆயாதன சமயம் பல அறியாதவன் – இறை உண்மையையும் இறை இலக்கணத்தையும், அளவையானும், அநுபவத்தானும் உள்ளவாறு ஆராயாதனவாகிய (சித்தாந்த சைவம் ஒழிந்த) ஏனைச் சமயங்களால் சிறப்பியல்பு அறியப் பெறாதவன். நெறி – இறைவனை அடைதற்கு ஏற்ற நான்கு நெறிகள். உயிர்கட்கு முன் தலையானவன் – ஆன்மாக்கட்கு அநாதியே தலைமையாக அமைந்தவன். மறை முத்தீயானவன் – வேத வேள்விக் கேற்ற சிவாக்கினியாகிய முத்தீயானவன். ஆயாதன என்பது முதல் தீயானவன் என்பது வரை இறை இலக்கணம் கூறியது. சிவன் எனச் சிறப்பியல்பு கூறியது. எம்மிறை எனத் தம்மோடு உளதாகிய அநாதித் தொடர்பு கூறியது. செல்வத் திருவாரூர் மேயான் என்றது திருவாரூரின் தொன்மை நோக்கிக் கூறியது.

Lord Civan is unknown to many a philosophical order not founded on actual experience or logical reasoning. He is the mother of the true path, the supreme Lord of souls, He is the triple Vedic fire; He is Siva, our Lord God, the One that favours opulent Tiruvaarur. Veezhi-Mizhalai is indeed His abode.

**Note:** The hymn affirms that any faith should stand the test of experience / logical reasoning.

கல்லானிழற் கீழாயிடர் காவாயெனவானோர்
எல்லாமொரு தேராயயன் மறைபூட்டிநின்றுய்ப்ப
வல்லாயெரி காற்றீர்க்கரி கோல்வாசுகிநாண்கல்
வில்லாலெயி லெய்தானிடம் வீழிம்மிழலையே. 6

"கல்லால் நிழல் கீழாய்! இடர் காவாய்!" என வானோர் -
எல்ஆம் ஒரு தேர் ஆய், அயன் மறை பூட்டி நின்று உய்ப்ப,
வல்லாய் எரி காற்று ஈர்க்கு, அரி கோல், வாசுகி நாண், கல் -
வில்லால், எயில் எய்தான் இடம் - வீழி(ம்)மிழலையே.

"kallAl nizal kIzAy! iTar kAvAy!" en2a vAn2Or--
ellAm oru tEr Ay, ayan2 maRai pUTTi nin2Ru uyppa,
vallAy eri kARRu Irkku, ari kOl, vAcuki nAN, kal--
villAl, eyil eytAn2 iTam--vIzi(m)mizalaiyE.

**பொருள்:** சிவபிரான் கல்லால மரநிழலின் கீழ்யோகியாய் வீற்றிருந்தான். அக்காலத்தில் திரிபுரத்து அசுரர்களால் துன்பமடைந்த வானோர், 'காவாய்' என வேண்டினார்கள். சூரிய சந்திரராகிய சக்கரம் பூட்டிய பூமியைத் தேராகக் கொண்டான். வேதங்களாகிய தேரிற் பூட்டிய குதிரைகளை நான்முகன் செலுத்தினான். அக்னி தேவனை வலிய வாயாகவும், வாயு தேவனை இறகாகவும் கொண்ட திருமாலாகிய அம்பை கையில் ஏந்தினான். வாசுகி என்னும் பாம்பினை நாணாகப் பூட்டி மேரு மலையாகிய வில்லால் அம்பைச் செலுத்தித் திரிபுரங்களை அழித்தான். அவனது இடம் திருவீழிமிழலை.

**குறிப்புரை:** கல் ஆல் நிழற்கீழாய் – இறைவன் யோகியாய்க் கல்லால நிழலின் கீழ் அறம் நால்வர்க்கு உரைத்திருந்த காலத்து. வானோர் காவாய் என – அசுரர்களால் வருந்திய தேவர்கள் காவாய் என்று வேண்டிக் கொள்ள, என்றது வேண்டுதல் வேண்டாமையற்ற சனகாதியர் யாதொரு துன்பமுமின்றி இருந்த காலத்தே வினை வயத்தான் வருந்தும் தேவர்கள் அசுரர் ஒறுத்தற்கு ஆற்றாது வருந்திக் காவாய் என வேண்டினர் என்பதை விளக்கியவாறு காண்க. எல் ஆம் ஒரு தேர் – ஒளிப் பொருளாகிய சூரிய சந்திரர்கள் ஆகிய சக்கரம் பூண்ட ஒரு தேர். அயன் – பிரமன், இங்கே பாகனானான். மறை பூட்டி என்றதால் வேதங்கள் குதிரைகளாயினமை வெளிப்படை. வல்லாய் எரி – விரைந்து பற்றும் நெருப்பு. காற்று ஈர்க்கு – காற்றாகிய இறகு. அரி கோல் – திருமாலாகிய அம்பு. கல் – மேரு மலை. வல்லாய் எரி – வலிய வாயாகிய எரி, வல்லாய் என்று பாடம் ஓதுவாரும் உளர்.

The Lord Civan was poised in yoga under the kallaala tree. The celestials implored Him thus: 'O Lord, save us from troubles" and formed themselves into a

charriot to which the charioteer Brahma yoked the Vedas as its steeds, and drove it on. The Lord held Mount Meru as His bow; Vasuki its string, Vishnu its dart, Wind its feathers, and Agni the tip of the dart. For such a one, Lo Veezhi-Mizhalai is His abode.

**Note:** Kallaala tree: The banian tree that has no stilt-roots, it is peculiarly sacred to Civa. This hymn affirms the truth that all gods serve the supreme Lord Civa.

கரத்தான்மலி சிரத்தான்கரி யுரித்தாயதொர்படத்தான்
புரத்தார்பொடி படத்தன்னடி பணிமூவர்கட்கோவா
வரத்தான்மிக வளித்தானிடம் வளர்புன்னைமுத்தரும்பி
விரைத்தாதுபொன் மணியீன்றணி வீழிம்மிழலையே. 7

*கரத்தால் மலி சிரத்தான்; கரி உரித்து ஆயது ஓர் படத்தான்;*
*புரத்தார் பொடி பட, தன் அடி பணி மூவர்கட்கு ஓவா*
*வரத்தான் மிக அளித்தான்; இடம் - வளர் புன்னை முத்து அரும்பி,*
*விரைத் தாது பொன் மணி ஈன்று, அணி - வீழி(ம்)மிழலையே.*

karattAl mali cirattAn2; kari urittu Ayatu or paTattAn2;
purattAr poTipaTa, tan2 aTi paNi mUvarkaTku OvA
varattAn2 mika aLittAn2; iTam--vaLar pun2n2ai muttu arumpi,
virait tAtu pon2 maNi In2Ru, aNi--vIzi(m)mizalaiyE.

**பொருள்:** பிரம கபாலம் பொருந்திய திருக்கரத்தினன். யானையை உரித்ததால் கிடைத்ததொரு மேற்போர்வையினன். முப்புர அசுரர் அழியத் தன்னடி பணிந்த அம்முப்புரத்தலைவர் மூவர்கட்கும் மிக்க வரங்களை அளித்தவன். அப்பெருமானது இடம், வளர்ந்தோங்கிய புன்னை மரங்கள் முத்துக்கள் போல் அரும்பி மலர்ந்து பொன் தாதுக்களை ஈன்று பச்சை மணிகளைப் போல் காய்த்து அழகு செய்கின்ற திருவீழிமிழலை ஆகும்.

**குறிப்புரை:** சிரத்தான் மலி கரத்தான் என மாற்றிப் பிரம கபாலத்தான் நிறைந்த திருக்கரத்தை உடையவன் எனப் பொருள் காண்க. படம் – மேற்போர்வை, புரத்தர்ர் பொடிபட – முப்புரங்களின் வரிசை பொடியாக, தன்னடிபணி மூவர்கட்கு – தம் திருவடியைப் பணிந்த மேம்பட்ட அடியவர்களான தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்யுன்மாலி என்ற மூவர்கட்கும். ஓவா வரத்தான் மிக அளித்தான் – சுதர்மன், சுநீதி, சுபுத்தி எனப் பெயரீந்து வாயிற்காவலர் ஆகும் வரத்தால் மிக அருள் செய்தவன். புரத்தார் பொடிபட என்பதற்கு முப்புராதிகள் பொடியாயினர் எனப் பொருள் கொள்ளின் 'உய்ந்த மூவரில் இருவர் நின் திருக்கோயிலின் வாய்தல் காவலாளர் என்றேவி' என்பதனோடு மாறு கொள்ளும். அன்றியும் அதிகைப் புராண வரலாற்றோடும் முரணும். ஆதலால் புரத்தார் பொடிபட எனப் பிரித்தலே சால்பு உடைத்து. திரிபுரம் எரிந்த காலத்து அடியவர்கள் மூவர் அழிந்திலர் என்பதைப் புரம் எரிந்த காலத்து இவர்கள் மூவரும் கைலாசத்தில்

துவார பாலகராகும் பதவியைக் கொடுக்க வேண்டும் என வேண்டிக் கொண்டார்கள் என்னும் தர்ம சங்கிதை வசனமும் வலியுறுத்தும். புன்னை முத்துப் போலரும்பி, மலர்ந்து, பொன் தாதுக்களை ஈன்று, காய்த்துப் பச்சை மணிகளையீன்று, அழகு செய்கின்ற மிழலை எனக் கூட்டிப் பொருள் கொள்க.

Lord Civan holds in His hand the skull; He peeled the hide of a tusker and stood mantled in it; He smote the citadels; All perished except three; He conferred many boons on the three that hailed His feet. His abode is indeed Veezhi-Mizhalai, rich in punnai flowers which bloom like pearls, with golden pollen, grow, ripe and yield emerald (aquamarine) like fruits.

**Note:** The three that escaped the destruction of the three citadels are named Taarakaakshan, Kamalaakshan and Vidhyunmaali. They were respectively renamed as Sudharman, Suneeti and Subuddhi when they were made servitors in Mount Kailas.

முன்னிற்பவ ரில்லாமுர ணரக்கன்வடகயிலை
தன்னைப்பிடித் தெடுத்தான்முடி தடந்தோளிறவூன்றிப்
பின்னைப்பணிந் தேத்தப்பெரு வாள்பேரோடுங்கொடுத்த
மின்னிற்பொலி சடையானிடம் வீழிம்மிழலையே. 8

முன் நிற்பவர் இல்லா முரண் அரக்கன், வடகயிலை -
தன்னைப் பிடித்து எடுத்தான், முடி தடந்தோள் இற ஊன்றிப்,
பின்னைப் பணிந்து ஏத்தப், பெரு வாள் பேரோடும் கொடுத்த
மின்னின் பொலி சடையான் இடம் - வீழி(ம்)மிழலையே.

mun2 niRpavar illA muraN arakkan2, vaTakayilai--
tan2n2aip piTittu eTuttAn2, muTi taTantOL iRa Un2Ri,
pin2n2aip paNintu Etta, peru vAL pEroTum koTutta
min2n2in2 poli caTaiyAn2 iTam--vIzi(m)mizalaiyE.

பொருள்: தன்னை எதிர்த்து நிற்பார் யாரும் இல்லாத அரக்கனாகிய இராவணன் வடதிசையில் உள்ள கைலாய மலையைத் தூக்கி நகர்த்தி வைக்க முற்பட்டான். அவன் தலைகள் தோள்கள் ஆகியன நசுக்கப்பட்டு அதனால் துன்பம் அடைந்தான். பின்னர் அவன் சிவபெருமானைப் பணிந்து, சாம கீதம் பாட சிவபெருமான் அவன்மீது அருள் செய்தான். அவனுக்குப் பெரிதாகிய வாள், இராவணன் என்ற பெயர் ஆகியனவற்றைக் கொடுத்தருளினான். மின்னல் போல் பொலிவும், சடைமுடியையும் உடைய சிவபிரானது இடம் திருவீழிமிழலை.

**குறிப்புரை:** முன் நிற்பவர் இல்லா முரண் அரக்கன் – தன்னொடு எதிர்த்து நின்று பொருவார் யாரும் இல்லா வலிமை பெற்ற தசக்கிரீவன். இற – இற்றறும்படி. ஊன்றி – வலக்காற் பெருவிரல் நுனியை ஊன்றி. பெருவாள் – சந்திரகாசம் என்னும் வாள். பேர் – மலைக்கீழ் அகப்பட்டு அழுதமையால் உண்டான இராவணன் என்னும் பெயர்; கீர்த்தியுமாம். இதனால் ஆன்மாக்கள் முனைப்புற்ற காலத்து மறக்கருணை காட்டித் தண்டித்து நற்புத்தி வரச்செய்து 'நின்னல்லது உறுதுணை வேறில்லை' என உணர்ந்து பணிந்த காலத்து அருள் செய்தல் கூறப்பட்டது.

The mighty valourous king of Sri Lanka - Dasakreevan was one of the greatest devotees of Lord Civan having obtained a lot of boons from Him. There is no one who can dare to oppose him. This absolute power corrupted him. Once when he was travelling in his aircraft towards north, Mount Kailas, the abode of Civan was situated on his straight pathway. His aircraft could not fly higher up above the mountain. He, therefore tried to lift and put aside even the abode of Civan - Mount Kailas. Lord Civan slightly pressed the mountain by His toe. Dasakreevan got crushed under the mountain. He repented, begged pardon and proclaimed with conviction "Oh! Lord Civa! There is no real help except You". By saying this he sang a song very melodiously in a particular tune known as 'Saama Gaanam' which pleased Lord Civan. Civan blessed him, gave him a mighty sword for defence (Chandra Haasam - *சந்திர காசம்*) and good life. Also He named him as 'Raavanan' one who wept. Thereafter he is permanently known and addressed as 'Raavanan'. Veezhi-Mizhalai is indeed the abode of the Lord Civan whose matted hair is very effulgent one in His head.

**Note:** It also means an honoured name. Sri Lankan King Dasakreevan came to be known as Raavana as his lamentation was vociferous when he stood crushed by Mount Kailas. The sword he received from Civa is known as Chandrahasa. Raavanaa means one who has wept. The name Raavanan prevailed permanently thereafter. Dasakreevan, one with large head, - large like ten heads put together. *இரா* - Night that is dark. *வண்ணம்* - Colour. Perhaps it refers to (a man of dark complexsion).

பண்டேழுல குண்டானவை கண்டானுமுன்னறியா
ஒண்டீயுரு வானானுறை கோயின்னிறைபொய்கை
வண்டாமரை மலர்மேன்மட வன்னந்நடைபயில
வெண்டாமரை செந்தாதுதிர் வீழிம்மிழலையே. 9

பண்டு ஏழ் உலகு உண்டான், அவை கண்டானும், முன் அறியா
ஒண் தீஉரு ஆனான் உறை கோயில் - நிறை பொய்கை
வண் தாமரை மலர்மேல் மடஅன்னம் நடை பயில,
வெண் தாமரை செந் தாது உதிர் - வீழி(ம்)மிழலையே.

paNTu Ez ulaku uNTAn2, avai kaNTAn2um, mun2 aRiyA
oN tI uru An2An2 uRai kOyil--niRai poykai
vaN tAmarai malar mEl maTa an2n2am naTai payila,
veN tAmarai cen tAtu utir--vIzi(m)mizalaiyE.

**பொருள்:** முன்னொரு காலத்து ஏழுலகையும் தன் வயிற்றில் அடக்கிக் காட்டிய திருமாலும், அவ்வுலகங்களைப் படைத்தருளிய நான்முகனும் தன்னை அறியாதவாறு ஒளி பொருந்திய தீயுருவான சிவபிரான் உறையும் கோயில்; நீர் நிறைந்த பொய்கைகளில் பூத்த செழுமையான தாமரை மலர்மீது இள அன்னம் நடை பயில வெண் தாமரை சிவந்த தாதுக்களை உதிர்க்கும் திருவீழிமிழலை ஆகும். அன்னத்தின் நிறத்தால் செந்தாமரை வெண்தாமரை ஆயிற்று. அதன் கால்களின் செம்மையால் பொன்னிறத் தாதுக்கள் செந்தாதுக்கள் ஆயின.

**குறிப்புரை:** உலகுண்டான் – ஏழுலகையும் தன் வயிற்றில் அடக்கிய திருமால். அவை கண்டான் – அந்த உலகைப் படைத்த பிரமன்.

Behold the shrine of Lord Civan who grew into a lofty column of bright fire beyond the understanding of Thirumaal who devoured the seven worlds and Brahma who created them. His town is verily Veezhi-Mizhalai. In the natural pools around Veezhi-Mizhalai the Red Lotus flowers are blooming, over which the swans practice their stately gait. Because of the whiteness of swans, the red Lotus looked white and the golden pollen looked red because of the redness of the swan's feet.

மசங்கற்சமண் மண்டைக்கையர் குண்டக்குணமிலிகள்
இசங்கும்பிறப் பறுத்தானிட மிருந்தேன்களித்திரைத்துப்
பசும்பொற்கிளி களிமஞ்ஞைக ளொளிகொண்டெழுபகலோன்
விசும்பைப்பொலி விக்கும்பொழில் வீழிம்மிழலையே. 10

மசங்கல் சமண், மண்டைக் கையர், குண்டக் குணம்இலிகள்,
இசங்கும் பிறப்பு அறுத்தான் இடம் - இருந்தேன் களித்து இரைத்து,
பசும்பொன்கிளி களிமஞ்ஞைகள் ஒளி கொண்டு எழு பகலோன்
விசும்பைப் பொலிவிக்கும் பொழில் - வீழி(ம்)மிழலையே.

macagkal camaN, maNTaik kaiyar, kuNTak kuNam ilikaL,
icagkum piRappu aRuttAn2 iTam--iruntEn2 kaLittu iraittu,
pacum pon2kiLi kaLi manjnjaikaL oLi koNTu ezu pakalOn2
vicumpaip polivikkum pozil--vIzi(m)mizalaiyE.

**பொருள்:** மயக்க உணர்வுடையவரும், பிச்சை ஏற்கும் மண்டை என்னும் பாத்திரத்தை கையில் ஏந்தியவரும், நற்குணங்கள் இல்லாதவர்களும் ஆகிய சமணர்களும், புத்தர்களும் திருவீழிமிழலையில் வாழ்கின்றார்கள். அவர்களைப் புறக்கணித்துவிட்டு தன்னை வழிபடும் அன்பர்களுக்கு வினைவயத்தால் பொருந்திய பிறப்பினைப் போக்கியவன் சிவபெருமான். மிகுதியான தேனீக்கள் தேனை உண்டு களித்து ஒலி செய்கின்றன. பசுமை நிற மேனியும், பொன்நிறக் காலுமுடைய கிளிகளும், களிப்புற்ற மயில்களும், இங்குள்ள சோலைகளில் மிகுதியாக உள்ளன. இங்குள்ள சோலைகள் ஒளியோடு தோன்றும் கதிரவன் இருக்கும் வான மண்டலத்தை அழகுறுத்துகின்றன. இத்தகைய சிறப்பு வாய்ந்த திருவீழிமிழலையில் சிவபெருமான் எழுந்தருளி அருள் செய்கின்றான்.

**குறிப்புரை:** மசங்கல், மயங்கல் – மயக்கம், மண்டை – பிச்சையேற்கும் பனையோலைக் குடைப் பாத்திரம். குண்டர் – அறிவற்றவர். இசங்கும் – வினைவயத்தான் பொருந்திய. இருந்தேன் – பெரிய வண்டு; கரிய வண்டுமாம். பசும் பொற்கிளி – பசுமை நிறமும் பொன் போலுஞ் செந்தாளும் உடைய கிளி. திருவீழிமிழலைப் பொழில் விண்ணளவும் ஓங்கி வளர்ந்து பொலிவு செய்யும் என்று உரைத்து அருளியதால் இன்றும் அச்சிறப்பிற் குன்றாது ஒளிர்கின்றது.

The confused minded Jains and Buddhists are devoid of virtuous deeds in their life. They hold a begging bowl in their hands called as 'Mandai'. Leaving these folks aside, Lord Civan graces His devotees by eliminating their re-birth, the outcome of their karma. In Veezhi-Mizhalai a large number of honeybees suck the nectar from flowers and make noise in their joyment. Parrots with their green-feathered body and golden coloured feet as also peacocks are in good number in the town. The various gardens in the town augment the beauty of firmament where shines the resplendent sun.

வீழிம்மிழ லைம்மேவிய விகிர்தன்றனைவிரைசேர்
காழிந்நகர்க் கலைஞானசம் பந்தன்றமிழ்பத்தும்
யாழின்னிசை வல்லார்சொலக் கேட்டாரவரெல்லாம்
ஊழின்மலி வினைபோயிட வுயர்வானடைவாரே. 11

*வீழி(ம்) மிழலை(ம்) மேவிய விகிர்தன் தனை, விரைசேர்*
*காழி(ந்)நகர் கலை ஞானசம்பந்தன் தமிழ்பத்தும்*
*யாழின்(ன்)இசை வல்லார், சொலக் கேட்டார், அவர் எல்லாம்*
*ஊழின் மலி வினை போயிட, உயர்வான் அடைவாரே.*

vIzi(m)mizalai(m) mEviya vikirtan2tan2ai, virai cEr
kAzi(n) nAkar kalai njAn2acampantan2 tamizpattum
yAzin2(n2) icai vallAr, colak kETTAr, avar ellAm
Uzin2 mali vin2ai pOyiTa, uyarvAn2 aTaivArE.

**பொருள்:** வீழிமிழலையுள் எழுந்தருளிய விகிர்தனாகிய இறைவனைப்பற்றி மணம் பொருந்திய சீகாழிப்பதியில் தோன்றி கலைவல்ல ஞானசம்பந்தன் பாடியருளிய பாடல்கள் பத்தினையும் யாழிசையில் பாட வல்லார்களும் சொல்லக் கேட்டார்களும் ஆகிய அனைவரும் ஊழான் வரும் வினைகள் நீங்கச் சிவப்பேறு எய்துவர்.

**குறிப்புரை:** ஊழ் – பிராரத்தம். ஊழின்மலிவினை – பிராரத்த அனுபவத்தால் வந்து நிறைகின்ற ஆகாமிய வினை. போயிட – கழிய. பிராரத்தவினை அனுபவத்தால் உடலூழாய்க் கழிய, ஆகாமிய வினை ஏறாமல் கழிய. இத்திருப்பதிகத்தை யாழிசை வல்லவர் பாடக்கேட்டுச் சிவபக்தியுடன் வழிபட்டவர் எல்லாரும் ஊழ்வினை ஒழியவும் வீட்டுலகம் எய்தவும் பெறுவர் என்றதால், தேவாரத் திருப்பதிகங்களை இசையுடன் பாடல் வேண்டும் என்பதும், அது பத்தியை விளைத்துப் பேரின்ப வீட்டை அருளும் என்பதும் புலனாகும். யாழின் இசை என்றும், யாழ் இன்னிசை என்றும் பிரிக்கலாம். ஊழின்மலி வினை போயிடல் – பாச நீக்கம். உயர் வானடைதல் – சிவப்பேறு.

They, those who can sing and play well on the Yaazh (stringed musical instrument) as well those who have heard the musical rendering of these ten hymns and offer worship to Lord Civan with all sincerity will be rid of the impact of their past karma and will also reach the abode of Lord Civan. These hymns composed by Gnaana-sambandan belonging to incense smelling Kaazhi town. He is well versed in the scriptures and in this hymn has celebrated the 'Vikirthan' of Veezhi-Mizhalai.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*11ஆம் பதிகம் முற்றிற்று*
End of 11th Hymn

உ
சிவமயம்

# 12. திரு முதுகுன்றம்

## திருத்தலவரலாறு:

திருமுதுகுன்றம் என்ற திருத்தலமானது நடுநாட்டுத் தலங்களில் 9ஆவது தலம். விருத்தாசலம் என வழங்கப்படுகிறது. சிதம்பரம், சேலம் முதலிய ஊர்களிலிருந்து பேருந்து வசதிகள் உள்ளன. கடலூர் – சேலம் இருப்புப் பாதையில் இரயில் நிலையம் உள்ளது. சுவாமி பெயர் – முதுகுன்றநாதர்; பழமலை நாதர்; அம்மை பெயர் – பெரியநாயகி.

### தீர்த்தங்கள்:

நித்யானந்தகூபம், அக்கினிதீர்த்தம், சக்கரதீர்த்தம், குபேர தீர்த்தம் என்பன. மணிமுத்தாறு சிறப்புடையது.

### தலவிருட்சம்:

வன்னிமரம். கோயிலின் வடக்குக் கோபுரத்திற்கு நேர்வடக்கேயுள்ள மணிமுத்தாற்றுப் பகுதிக்குப் புண்ணியமடு என்று பெயர். இங்கேதான் இறந்தவர்களின் எலும்புகளை இட்டு முழுகுவது வழக்கம். இங்கே ஆழத்துப் பிள்ளையார் என்பது தலவிநாயகர் திருப்பெயர். முதல் பிராகாரத்திற்குக் கைலாசப் பிராகாரம் என்று பெயர். இந்தப் பிராகாரத்தில் வடமேற்கு மூலையில் இருபத்தெட்டு ஆகமக்கோயில் உள்ளது. அம்மை திருமுக மண்டலம் கிழக்கு நோக்கியது. அம்மையின் திருநாமம் வடமொழியில் விருத்தாம்பிகை, சுவாமி பெயர் விருத்தகிரீசர். கற்பக மரமே வன்னி மரமாக வந்து பழமலை நாதர் திருக்கோயில் திருப்பணியைச் செய்ததாக வரலாறு. உற்சவ மூர்த்தி நாமம் பெரிய நாயகர். இவர் ஆண்டிற்கு ஒருமுறை மாசி மக விழாவில் ஆறாந்திருநாள் மட்டுமே எழுந்தருளிக் காட்சி வழங்குவார். பிரமன் படைப்புக்கு முன் சிவபெருமான் தாமே மலை வடிவாகி நிற்கப் பிரமன் அதனையறியாது, பல மலைகளையும் படைத்து, அவற்றை நிலைபெறுத்த இடமின்றி மயங்கச் சிவபெருமான் தோன்றியருளி தானே பழமலையாதலைத் தெளிவித்தார். ஆதலின் முதுகுன்றம் எனவும், பழமலை எனவும் வழங்குவதாயிற்று.

**வழிபட்டவர்கள்:**

சுக்கிராச்சாரியார், யாக்ஞவல்க்கிய முனிவர், சிகண்டி, கோசிகன், விதர்க்கண–செட்டி, விபசித்து முனிவர், அகத்தியர், சுவேத மன்னர், நாதசர்மா, அநவர்த்தினி முதலியோர். சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருப்பதிகம் பாடிப் பன்னீராயிரம் பொன் பெற்று அதனை மணிமுத்தாற்றில் விட்டுத் திருவாரூரில் பெற்ற அற்புதம் நிகழ்ந்த இடம். இத்தலத்தில் விழா நிகழ ஏற்பாடுகள் செய்தவர் கச்சிராய மன்னர். துறவு பூண்டு உண்மை ஞானியான கன்னட நாட்டு மன்னர் ஒருவர்க்காக இறைவனே தண்ணீர்ப் பந்தல் வைத்துக் காத்ததாகவும், அம்மை அவருக்கு பாலளித்துக் குமாரதேவர் எனத் திருநாமம் சூட்டி அழைத்ததாகவும், குமார தேவர்க்காக அம்மை பாலாம்பிகையாகி அமுது படைத்ததாகவும் வரலாறு. கி. பி. 11ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்த இலிங்கா ரெட்டியாரும், அவர் மகன் அண்ணாமலை ரெட்டியாரும் திருப்பணி செய்து கி.பி. 1623இல் கும்பாபிஷேகம் செய்தனர். அண்மையில் 1994இல் மகா கும்பாபிஷேகம் நிகழ்த்தப் பெற்று உள்ளது.

**கல்வெட்டு:**

இராஜகேசரி வர்மனான குலோத்துங்க சோழன் காலத்தில் இத்தலம் விருதராஜ பயங்கர வளநாட்டு மேற்காநாட்டு இருங்கோளப்பாடியின் ஒரு பகுதியான மருவூர்க் கூற்றத்துத் திருமுதுகுன்றம் எனக் குறிக்கப் பெற்றுள்ளது. சுவாமி பெயர் முதுகுன்றுடைய நாயனார் எனவும், திருமுதுகுன்றத்துடையார் எனவும் வழங்கப் பெறுகின்றது. கோப்பெருஞ் சிங்கன் சுவாமிக்கு ஒரு மாங்காய் மாலையும், விளக்குக்குப் பொன்னும், ஆடுகளும், பசுக்களும் அளித்தான். இராஜராஜன், பரகேசரிவர்மன், குலோத்துங்கன் இவர்களும் பசுக்களையும், பொன்னையும், நிலத்தையும் அளித்தனர்.

இராஜகேசரி வர்மனான குலோத்துங்கனது காலத்து, ஆளப்பிறந்தான் ஏழிசை மோகனான குலோத்துங்க சோழ காடவராதித்தன் இறைவற்கு ஸ்நபன மண்டபம் கட்டினான். புக்கண உடையார், ரங்கப்ப நாயகர், செவ்வப்பநாயகன் இவர்கள் காலத்திய நிபந்தங்களும் மிகுதியாக உள்ளன. சகம் 1545இல் கச்சிராயன் என்பவன் குகை காவலனுக்கு நான்கு கலம் நெல் கொடுக்க ஏற்பாடு செய்திருந்தான். ரங்கப்ப மாவைராயர் என்பவர் அரியலூரர் சந்தைப் பேட்டையில் மூட்டை ஒன்றுக்கு அல்லது ஆள்தூக்கக்கூடிய கைமூட்டை இரண்டுக்கு ஒருகாசு விழுக்காடு வரிவாங்கிக் கொள்ள உரிமை வழங்கி இருக்கிறார். கி.பி. 16ஆம் நூற்றாண்டினனான செவ்வப்ப நாயகன் நான்கு இராச கோபுரங்களையும் கட்டியதாகச் சொல்வர். கி.பி. 1602இல் முத்துக்கிருஷ்ணப்பராயர்

என்பவர் திருமுதுகுன்றமுடையார்க்குப் பஞ்சாவரணப் பிராகாரம் கட்டி வைத்ததாகத் தெரிகின்றது. அப்பிராகாரம், புறமதிலுக்கு வெளியிலிருந்து முகமதியர் கலகத்தில் இடிந்து போனதாகக் கூறுவர். தென்னாற்காடு மாவட்ட ஆட்சியராக இருந்த ஹைட்துரை கைலாசப் பிராகாரத்திற்குத் தளவரிசை போட்டதால் இன்றும் அது ஹைட் தளவரிசையென வழங்குகின்றது.

**பதிக வரலாறு:**

திருஎருக்கத்தம்புலியூரை வணங்கிப் பதிகம்பாடிப் புறப்பட்ட ஆளுடைய பிள்ளையார் இடையிலுள்ள தலங்கள் பலவற்றையும் வணங்கித் துதித்துத் திருமுதுகுன்றம் என்னும் விருத்தாசலத்தை அடைந்தார். போகின்ற வழியிலேயே முதுகுன்ற நாதருடைய அருட்செயல்களும், ஆட்கொள்ளுந் திறனும், தலத்தின் இயற்கை வளமும், நதியின் செலவும் மனத்தைக் கவர அவற்றை அமைத்து 'மத்தாவரை நிறுவி' என்னும் பதிகத்தைத் தொடங்கி 'முத்தாறு வந்தடி சூழ்தரு முதுகுன்றடைவோம்' என அருளிச் செய்கின்றார்.

## 12. THIRU-MUTHU-KUNDRAM

**THE HISTORY OF THE PLACE**

The sacred city of Thirumudhukunram is the 9th one among those in Nadunaadu. It is known as Virudhdhaachalam. It is connected by bus from such places as Chidhambaram and Salem. There is a station in the Kadaloor-Salem railway route. It is an important station in the train route from Trichy to Villupuram. The name of the God is Mudhukunranaathar, or Pazhamalainaathar; that of the Goddess is Periya Nayaki.

**Sacred Fords**

Nithyaanandha Koopam, Akkini Theerththam, Chakkara Theerththam, and Kubera Theerththam are the sacred fords or waterways situated here. The river Manimuthaaru is also considered as a sacred one.

**Tree of the Sacred Place**

Vanni tree. Straight north of the north Gopuram of the temple is a part of the river Manimuththaaru, known as Punniya Madu. It is the custom to bathe here after immersing the cremated remains of the dead. The name of the temple Vinaayakar is Aazhaththup Pillaiyaar. The first ambulatory is known as Kailaasa-p-piraakaaram. At the northwest corner of this ambulatory is a shrine known as the shrine of 28 Aagamas. The Goddess faces towards the east. The Goddess is known in Sanskrit as Vriddhaambika and the God as Vriddha Gireesa. Legend holds that the heavenly 'Karpaka' tree incarnated as the Vanni tree and built the holy temple of Pazhamalai Naathar. The name of the processional deity is Periya Naayakar. He appears only once a year on the sixth day of the Makam festival in the month of Maasi. Before Biraman's creation, Lord Civa Himself became a hill that stood here. Not knowing this, Biraman tried to create many hills but could not find any room to place them. Lord Civa then appeared and revealed that it was He who had become the Pazha Malai (Old Hill). Hence the name Mudhu Kundram or Pazhamalai.

**Devotees Offering Worship**

Those who have adored the Lord here include Yaagjnyavalkkiya Munivar, Sikandi, Kosikan, Vitharkana Chetti, Vipachiththu Munivar, Agaththiyar, Suvetha Mannar, Naatha Sarma, Anavarththini and others. This was where a miracle took place in which Sundhara Moorthi Swaami sang ten songs in praise of the Lord, received twelve thousand gold pieces for that, and after depositing the gold in the Manimuththaaru river, reclaimed it in the holy temple of Thiruvaaroor. The person who made the arrangements for celebration of festivals is Kochchiraaya Mannar. There is a legend that the God Himself established and administered a 'Thanneer-p-pandhal' (place to dispense free drinking water) for the sake of a king of Kannada country who has become a hermit and a truly enlightened sage. It further holds that the Goddess turned the sage into a baby, called him Kumaara Thevar and suckled him with milk, and having become Baalaambikai, fed him with holy food. Lingaa Reddiyaar, who

lived towards the end of the 16th century and his son Annaamalai Reddiyaar renovated the temple and performed the consecration in 1623 CE. Re-consecration was performed in 1994.

## Stone Inscriptions

This temple was referred to as Thirumudhukunram of Maruvoork Koorram, which was a part of Irungkolappaadi in the Merkaanaadu of Virudharaaja Bayangkara Valanaadu. The God's name is known as Mudhukunrudaiya Naayanaar or Thirumudhukunraththudaiyaar. Kopperunjchingan is known to have gifted a necklace of mango-fruit design along with cows, sheep and gold for lighting lamps. Raajaraajan, Parakesarivarman and Kuloththungan also gifted cows, gold and lands.

During the reign of Raajakesarivarman Kuloththungan, one Aalappirandhaan Azhisaimokanan Kuloththunga Chola Kaadavaraadhiththan built a pavilion for giving holy bath (snapana mandapam). There are many endowments from the times of Bukkana Udaiyaar, Rangappa Naayakar and Sevvappa Naayakan. One Kachchiraayan had endowed four kalams of paddy to the watchman of the cave in the year 1545 of Saka era. One Rangappamaavairaayar has gifted the right to collect tax at the rate of one kaasu per sack (or two if they can be lifted by a man) at the market place in Ariyaloor. It is said that Sevvappa Naayakan of the 16th century CE built the four Raaja Gopurams. It is known that in 1602 CE, one Muththuk Krishnappa Raayar built the 'Panjchaavarnap Piraakaaram' (ambulatory for five rounds) for the Lord Thiru Mudhukunramudaiyaar. It is believed that the piraakaaram, outside the outer wall, collapsed during the Muslim rule. The Kailaasa-p-piraakaaram was paved by a collector of South Aarkkaat district by name Hyde and to this day it is known as the Hyde Durai Pavement.

## INTRODUCTION TO THE HYMN

Adoring the Lord at many shrines, the saintly youth proceeded to Thiru-Muthu-Kundram. On his way to this holy place, he sang the following hymn.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 12. திரு முதுகுன்றம் 12. THIRU-MUTHU-KUNDRAM

பண் : நட்டபாடை
ராகம் : கம்பீரநாட்டை

*Pann: Natta Paadai*
*Raagam: Kambeera Naattai*

மத்தாவரை நிறுவிக்கடல் கடைந்தவ்விடமுண்ட
தொத்தார்தரு மணிநீண்முடிச் சுடர்வண்ணனதிடமாம்
கொத்தார்மலர் குளிர்சந்தகி லொளிர்குங்குமங்கொண்டு
முத்தாறுவந் தடிவீழ்தரு முதுகுன்றடைவோமே. 1

மத்தா வரை நிறுவிக், கடல் கடைந்த, (வ்)விடம் உண்ட
தொத்து ஆர்தரு மணி நீள் முடிச் சுடர் வண்ணனது இடம்ஆம் -
கொத்து ஆர் மலர், குளிர்சந்து, அகில், ஒளிர்குங்குமம், கொண்டு
முத்தாறு வந்து அடிவீழ்தரு - முதுகுன்று அடைவோமே.

mattA varai niRuvi, kaTal kaTaintu, av viTam uNT
tottu Artaru maNi nIL muTic cuTar vaNNan2atu iTam Am--
kottu Ar malar, kuLir cantu, akil, oLir kugkumam, koNTu
muttARu vantu aTi vIztaru--mutukun2Ru aTaivOmE.

**பொருள்:** தேவர்கள் எல்லோரும் கூடி மந்தர மலையை மத்தாக நட்டுக் கடலைக் கடைந்தபோது கொடிது எனக் கூறப்பெறும் ஆலகால விடம் தோன்ற அதனை உண்டவன் சிவபெருமான். அவன், தன் அழகிய நீண்ட சடைமுடியில் பூங்கொத்துக்களைச் சூடியவன். அவன் எரிசுடர் வண்ணன். அவன் எழுந்தருளிய இடம் திருமுதுகுன்றம் ஆகும். மலர்க் கொத்துக்கள், குளிர்ந்த சந்தனம், அகில், ஒளி தரும் குங்கும மரம் ஆகியவற்றைத் தன் அலைக்கரங்களால் ஏந்திக் கொண்டு வந்து மணிமுத்தாறு நதி திருமுதுகுன்றத்தில் அடிவீழ்ந்து வணங்குகின்றது. அதனை நாம் அடைவோமாக.

**குறிப்புரை:** வரை மத்தா நிறுவி – மந்தர மலையை மத்தாக நிறுத்தி. கடைந்தவ்விடம் – கடைய எழுந்த விடம். தொத்து – கொத்து. மணிமுத்தாறு மலர், சந்தனம், குங்குமப்பூ முதலிய காணிக்கைகளைக் கொண்டு வந்து சமர்ப்பித்து அடிவணங்குகிறது என்பதாம்.

In the days of yore, when the ocean of milk was churned with the Mountain Manthara serving as the churning stick, venom welled up and Lord Civan quaffed it to

save all others. Behold the shrine of the radiant one whose lofty gem studded crown is decked with flower clusters. Let us reach Muthu-Kundram where the river Mani-Muttaaru pays obeisance to the Feet of the Lord God. The river flows on, carrying with it bunches of flowers, cool sandalwood, eaglewood and also bright logs of kunkumam trees.

**Note:** Muthukundru / Muthukundram: The ancient hill. In Sanskrit, it is known as Virudhdhaachalam. Kunkuma is saffron.

c.f. Vallalar *'பழமலையைக் கிழமலையாய்ப் பகருவதும் ...'*

*பழமலை* - Ancient hill. *முதுகுன்று* was translated into *விருத்தாசலம்* in Sanskrit. Actually *பழமலை* is ancient mount. *முதுகுன்று* not *முதுமையான கிழமலை*.

தழையார்வட வியவீத்னிற் றவமேபுரிசைவன்
இழையாரிடை மடவாளொடு மினிதாவுறைவிடமாம்
மழைவானிடை முழவவ்வெழில் வளைவாளுகிரெரிகண்
முழைவாளரி குமிறும்முயர் முதுகுன்றடைவோமே. 2

*தழை ஆர்வடவியவீதனில் தவமே புரி சைவன்,*
*இழை ஆர் இடை மடவாளொடும், இனிதா உறைவு இடம்ஆம் -*
*மழை வான்இடை முழவ(வ்), எழில் வளைவாள்உகிர், எரிகண்,*
*முழை வாள்அரி குமிறும்(ம்) உயர் - முதுகுன்று அடைவோமே.*

tazai Ar vaTaviTavltan2il tavamE puri caivan2,
izai Ar iTai maTavALoTum, in2itA uRaivu iTam Am--
mazai vAn2 iTai muzava(v), ezil vaLai vAL ukir, eri kaN,
muzai vAL ari kumiRum(m) uyar--mutukun2Ru aTaivOmE.

**பொருள்:** சிவபெருமான் தழைகளுடன் கூடிய ஆலமர நீழலில் யோகியாய் இருந்து தவம் செய்கின்றான். நூல் இழை போன்ற இடையினை உடைய உமையம்மையோடு மகிழ்ந்து திருமுதுகுன்றத்தில் போகியாய் உறைகின்றான். திருமுதுகுன்றத்தில் மேகங்கள் உயர்வானில் இடிகளை உண்டாக்குகின்றன. இந்த ஒலியை யானையின் பிளிறு என அங்கு வாழும் சிங்கங்கள் கருதுகின்றன. அவைகளின் நகங்கள் அழகாய் வளைந்த ஒளியோடு விளங்குகின்றன. அவைகள் எரிபோலும் கண்களை உடையன. அவைகள் குகைகளில் வாழ்ந்து கொண்டு கர்ச்சிக்கின்றன. இத்தகைய சிறப்பு வாய்ந்தது திருமுதுகுன்றம்.

**குறிப்புரை:** வடவிய வீதனில் – ஆலமரத்தினது அகன்ற நீழலில் பதுமாசனத்திலிருந்து தவஞ் செய்கின்ற சைவன் என்றது அநாதி சைவனாகிய சிவனை. இழையார் இடை – நூலிழையை ஒத்த இடை. மழை வானிடைமுழவ – மேகம் வானத்தில் பிளிற. முழவம் என்றும் பெயரடியாக முழவ என்ற வினையெச்சம் பிறந்தது. ஒலிக்க என்பது பொருளாம். எழில் வளை வாள் உகிர் – அழகிய வளைந்த ஒளி பொருந்திய நகத்தையும். எரி கண் – காந்துகின்ற கண்ணையும். முழை – மலைக்குகை. அரி – சிங்கம். சிங்கம் உறுமுதல் மழை ஒலியை யானையின் பிளிறல் என்று எண்ணி. மேரு மலையின் வடபால் தனித்து யோகத்திருந்த இறைவன் முதுகுன்றில் உமையாளொடு போகியாக உறைகின்றான் என்றது.

Lord Civan, the saiva, performs austerities seated under the leafy banyan tree (The Lord observes austerities. He has no need for *தவம்*). He abides here in His shrine in the aspect of Sadaa Civan (*போகி*) with His consort Umaa whose waist is slender like thread. To offer our obeisance to the Lord here we shall proceed to lofty Muthukundram where when rain bearing clouds rumble on the high, the cave dwelling, fiery-eyed lion of bright and beautiful curved toe-nails doth roar aloud.

**Note:** The Saiva: Civa who is known as Anaadhi Saiva. He is the One and only Anaadhi Saiva.

விளையாததொர் பரிசில்வரு பசுபாசவேதனையொண்
டளையாயின தவிரவ்வரு டலைவன்னதுசார்பாம்
களையார்தரு கதிராயிர முடையவ்வவனோடு
முளைமாமதி தவழும்முயர் முதுகுன்றடைவோமே. 3

*விளையாதது ஒர் பரிசில் வரு பசுபாசவேதனை, ஒண்*
*தளைஆயின தவிர(வ்), அருள் தலைவ(ன்) அது சார்புஆம் -*
*களை ஆர்தரு கதிர் ஆயிரம் உடைய(வ்) அவனோடு*
*முளை மா மதி தவழும்(ம்) உயர் - முதுகுன்று அடைவோமே.*

viLaiyAtatu or paricil varu pacu pAcavEtan2ai, oN
taLai Ayin2a tavira(v), aruL talaiva(n2)n2atu cArpu Am--
kaLai Artaru katir Ayiram uTaiya(v) avan2OTu
muLai mA mati tavazum(m) uyar--mutukun2Ru aTaivOmE.

**பொருள்:** உயிர்களுடன் அநாதியாகவே வருகின்ற பசுவேதனை எனப்படும் ஆணவமலத் துன்பம், அத்துன்பத்தை நீக்குவதற்காகக் கூட்டப்படுகின்ற பாசவேதனை எனப்படும் நல்வினை தீவினைகளுக்கு மூலமாகிய கன்மமலத் துன்பம், ஆன்மாவுக்குச் சிறிது

அறிவையும் சிறிது மயக்கத்தையும் தருமாறு கூட்டப்படுகின்ற மாயமலத்துன்பம் ஆகிய இவை நீங்குமாறு, சிவபெருமான் திருமுதுகுன்றத்தில் எழுந்தருளி அருள்புரிந்து வருகின்றான். இங்குள்ள வானளாவிய மலையில் ஒளி பொருந்திய ஆயிரம் கிரணங்கள் கொண்ட சூரியனும், முளைத்தெழுந்து வளரும் சந்திரனும் தவழ்ந்து செல்லுகின்றன. அதனை நாம் அடைவோம்.

**குறிப்புரை:** சார்பு – இடம். களை – தேஜஸ். ஆயிரம் பன்மை குறித்து நின்றது. கதிர் ஆயிரம் உடையவன் – சூரியன். சகத்திர கிரணன் என்னும் பெயருண்மையையும் அறிக. செங்கதிரோடு முளை மாமதி தவழும் முதுகுன்று என்றமையால் பிள்ளையார் கண்ட காலம் வளர்பிறைக் காலத்து மூன்றாம் நாளாகலாம் என்று ஊகிக்கலாம்.

**குருவருள்:** இறை, உயிர், தளை என்ற முப்பொருள்களும் என்றும் உள்ள உண்மைப் பொருள்கள். ஒரு காலத்தே தோன்றியன அல்ல. இவற்றுள் தளை என்பது ஆணவம், கன்மம், மாயை என மூவகைப்படும். இவையும் ஒரு காலத்தில் தோன்றியன அல்ல. இவற்றையே "விளையாததோர் பரிசில் வரும் பசு பாச வேதனை ஒண்தளை" என்றார். விளையாதது – ஒரு காலத்தில் தோன்றாதது. பரிசு – தன்மை. இவற்றுள் பசு வேதனை – பசுத்துவம் எனப்படும் ஆணவ மலத்தால் விளையும் துன்பம். பாசவேதனை – இருவினைக் கட்டு எனப்படும் நல்வினை தீவினைகளுக்கு மூலமாகிய கன்ம மலத்தால் விளையும் துன்பம். வேதனை என்பது பசு என்பதனுடனும் இயையும். ஒண்தளை – மாயை. ஒளியுடைய பாசம். மாயை ஆன்மாவுக்குச் சிறிது அறிவை விளக்கும். ஆதலின் "ஒள்" என்று அடைமொழி கொடுக்கப்பட்டது. எனினும் மயக்க அறிவைத் தருதலால் தளை எனப்பட்டது. இம்மூவகை மலங்களையும் நீக்கி அருள்பவனே இறையாகிய தலைவன் என்று திருஞானசம்பந்தப் பெருமான் இப்பாடலில் குறிப்பிட்டுள்ளார்.

Lord Civan is ever ready here in Thiru-muthu-kundram to grace His devotees by nullifying the effect of the perversely fierce worldly fetters, and cause the souls' recurring misery to end. Let us reach the lofty Muthukundram over which the myriad - rayed sun and sprouting crescent crawls.

**Note:** Fetters: The three malas of Aanavam, Kanmam and Maaya. Paasam, it means literally 'a rope'. The three malas constitute paasam. Aanava mala is chiefly referred to by this word.

சுரர்மாதவர் தொகுகின்னர ரவரோதொலைவில்லா
நரரானபன் முனிவர்தொழ விருந்தானிடநலமார்
அரசார்வர வணிபொற்கல னவைகொண்டுபன்னாளும்
முரசார்வரு மணமொய்ம்புடை முதுகுன்றடைவோமே. 4

சுரர், மா தவர், தொகு கின்னரர் அவரோ, தொலைவு இல்லா
நரர் ஆன பல்முனிவர், தொழ இருந்தான் இடம் - நலம்ஆர்
அரசார் வர அணிபொன்கலன்அவை கொண்டு பல்-நாளும்
முரசு ஆர்வரு மணமொய்ம்பு உடை - முதுகுன்று அடைவோமே.

curar, mA tavar, toku kin2n2arar avarO, tolaivu illA
narar An2a pal mun2ivar, toza iruntAn2 iTam--nalam Ar
aracAr vara aNi pon2kalan2 avai koNTu pal--nALum
muracu Alvaru maNa moympu uTai--mutukun2Ru aTaivOmE.

**பொருள்:** சிவபெருமான் எழுந்தருளிய திருமுதுகுன்றத்தில் தேவர்களும், சிறந்த தவத்தை மேற்கொண்டவர்களும், கின்னரி என்ற வாத்தியத்தை மீட்டி இசைபாடும் தேவ இனத்தவரான கின்னரர்களும் கூட்டமாக வந்து மக்களுலகில் வாழும் மாமுனிவர்களுடன் சேர்ந்து தொழுது செல்லுகின்றார்கள். இங்கு நடக்கும் திருமணத்திற்கு அரசிளங் குமரர்கள் வருகின்றார்கள். அவர்களைப் பொன் அணிகலங்கள் கொண்டு வரவேற்கும் மண முரசு பன்னாளும் ஒலித்துக் கொண்டே இருக்கின்றது. நாமும் அந்த ஊரை அடைவோம்.

**குறிப்புரை:** தொகு கின்னரர் – எப்பொழுதும் கூட்டமாகவே இருந்து கின்னரி பயிலும் தேவ கூட்டத்தார்.

To adore Lord Civan in Thiru-muthu-kundram, gather devas, tapaswis, the celestial kinnarars who always play the instrument 'Kinneri' in groups and the mighty munis on earth. The town is visited by princes who are received with jewels of gold. The drums that proclaim their advent resound here for many many days. Such is Muthukundram to which let us all reach.

Note: Kinnarar: Celestial instrumentalists. They play on the instrument called kinnara in groups.

அறையார்கழ லந்தன்றனை யயின்மூவிலையழகார்
கறையார்நெடு வேலின்மிசை யேற்றானிடங்கருதில்
மறையாயின பலசொல்லியொண் மலர்சாந்தவைகொண்டு
முறையான்மிகு முனிவர்தொழு முதுகுன்றடைவோமே. 5

அறை ஆர் கழல் அந்தன்தனை, அயில் மூஇலை, அழகுஆர் -
கறைஆர் - நெடுவேலின்மிசை ஏற்றான் இடம் கருதில்,
மறை ஆயினபலசொல்லி, ஒண்மலர்சாந்து அவை கொண்டு,
முறையால் மிகும் முனிவர் தொழும் முதுகுன்று அடைவோமே.

aRai Ar kazal antan2tan2ai, ayil mUilai, azaku Ar--
kaRai Ar--neTuvElin2micai ERRAn2 iTam karutil,
maRai Ayin2apala colli, oNmalar cAntu avai koNTu,
muRaiyAl mikum mun2ivar tozum mutukun2Ru aTaivOmE.

**பொருள்:** திருமுதுகுன்றத்தில் எழுந்தருளிய சிவபெருமான், ஒலிக்கின்ற வீரக்கழல் அணிந்த அந்தகாசூரனைக் கூரிய மூவிலை வடிவாய் அமைந்த குருதிக் கறை படிந்த அழகிய நீண்ட வேலின் முனையில் குத்தி ஏந்திக் கொண்டிருக்கின்றான். இங்கு முனிவர்கள் பலரும் வேதங்கள் பலவும் சொல்லி நறுமலர், சந்தனம் முதலான பொருள்களைக் கொண்டு முறைப்படி சார்த்தி வழிபடுகின்றார்கள். நாமும் அங்கு சென்று அவனை வழிபடுவோமாக.

**குறிப்புரை:** இப்பாட்டின் முன்னடியிரண்டிலும், அந்தகனை முத்தலைச் சூலத்தின் உச்சியில் தாங்கிய வரலாறு குறிப்பிடப்படுகிறது. அந்தன் – அந்தகாசுரன். அயில் – கூர்மை. வேலுக்கு அழகு இவ்வண்ணம் தண்டிக்கத் தக்கவர்களைத் தண்டித்தல். முனிவர் மறையாயின சொல்லி, மலர், சாந்து கொண்டு முறையான் தொழு முதுகுன்று எனக் கூட்டுக.

Anthakasuran (*அந்தகாசுரன்*) an Asura who wore the resounding valorous anklets was terrorising, and annoying the Devaas. As commanded by Lord Civan 'Bairavar' (*பைரவர்*) pierced the Asura's body with the furious, radiant long and sharp trident and brought him before Lord Civan. This Lord Civan abides in Thiru-muthu-kundram, where the munis chanting many a vedic mantra, poised in propriety, gather to adore Him with bright flowers and sandal paste. Let us reach this place.

**Note:** Anthakan: An asura who tortured the devas. The devas fled away from him and lived in secret seclusion in the guise of women. In answer to their prayer, Lord

Civa came as Bairava to take on the asura and revealed His identity and the trident. This asura then gained gnosis by His darshan of Civa.

ஏவார்சிலை யெயினன்னுரு வாகியெழில்விசயற்
கோவாதவின் னருள்செய்தவெம் மொருவற்கிடமுலகில்
சாவாதவர் பிறவாதவர் தவமேமிகவுடையார்
மூவாதபன் முனிவர்தொழு முதுகுன்றடைவோமே. 6

*ஏ ஆர் சிலை எயினன்(ன்) உரு ஆகி, எழில் விசயற்கு*
*ஓவாத இன்அருள் செய்த எம் ஒருவற்கு இடம் - உலகில்*
*சாவாதவர், பிறவாதவர், தவமே மிக உடையார்,*
*மூவாத பல்முனிவர், தொழும் - முதுகுன்று அடைவோமே.*

E Ar cilai eyin2an2(n2) uru Aki, ezil vicayaRku
OvAta in2 aruL ceyta em oruvaRku iTam--ulakil
cAvAtavar, piRavAtavar, tavamE mika uTaiyAr,
mUvAta pal mun2ivar, tozum--mutukun2Ru aTaivOmE.

**பொருள்:** திருமுதுகுன்றத்தில் விருப்பத்தோடு எழுந்தருளியுள்ள சிவபெருமான், அம்புகள் பூட்டிய வில்லை ஏந்திய வேடன் உருவந்தாங்கி அருச்சுனனிடம் போர் செய்து அவனைத் தோற்கடித்தான். பின்னர் அவன் இரங்க அவனுக்கு அருள் செய்தான் (அவனுக்கு பாசுபதாஸ்திரமும் கொடுத்தருளினான்). சாவாமை பெற்றவர்களும், மீண்டும் பிறப்பு எய்தாதவர்களும், மிகுதியான தவத்தைப் புரிந்தவர்களும் மூப்பு அடையாத முனிவர் பலரும் இங்கு வந்து இறைவனை வணங்கிச் செல்லுகிறார்கள். நாமும் அவனைச் சென்று அடைவோம்.

**குறிப்புரை:** இதில் இறைவன் வேட உருத்தாங்கிப் பன்றியை எய்து வீழ்த்தி அருச்சுனன் தவங்கண்டு வந்து பாசுபதம் அருளிய வரலாறு குறிக்கப் பெறுகின்றது. ஏ – அம்பு. சிலை – வில். எயினன் – வேடன். விசயற்கு – அருச்சுனற்கு. ஓவாத – கெடாத. சாவாதவர்களும் மீட்டும் பிறப்பெய்தாதவர்களும். ஆகத் தவமிக்க முனிவர்கள்; என்றும் இளமை நீங்காத முனிவர்கள் தொழும் முதுகுன்றம் என்றவாறு.

Lord Civan went in the guise of a hunter and defeated the fair (and valiant) Arjuna who confronted Him, without knowing who He was. Realising this thereafter, Arjuna pleaded, prayed and offered his obeisance to Lord Civan. Civa graced him and gave him the super missile known as Paasupatham (*பாசுபதாஸ்திரம்*). This Lord Civan loves to abide in Thiru-muthu-kundram. Here the deathless and the birthless and also

the great tapaswis and non-aging munis gather to offer worship to Lord Civan. Let us also reach this place. Note the hint of Eternity available to Civa worshippers.

தழல்சேர்தரு திருமேனியர் சசிசேர்சடைமுடியர்
மழமால்விடை மிகவேறிய மறையோனுறைகோயில்
விழவோடொலி மிகுமங்கையர் தகுமாடகசாலை
முழவோடிசை நடமுன்செயு முதுகுன்றடைவோமே. 7

*தழல் சேர்தரு திருமேனியர், சசி சேர் சடைமுடியர்,*
*மழ மால்விடை மிக ஏறிய மறையோன், உறை கோயில் -*
*விழவோடு ஒலி மிகு மங்கையர், தகும் நாடகசாலை,*
*முழவோடு இசை நடம் முன் செயும் - முதுகுன்று அடைவோமே.*

tazal cErtaru tirumEn2iyar, caci cEr caTai muTiyar,
maza mAlviTai mika ERiya maRaiyOn2, uRai kOyil--
vizavOTu oli miku magkaiyar, takum nATakacAlai,
muzavOTu icai naTam mun2 ceyum--mutukun2Ru aTaivOmE.

**பொருள்:** சிவபெருமான் தழலை ஒத்த சிவந்த திருமேனியர். பிறைச் சந்திரனைத் தனது சடைமுடியில் அணிந்தவர். திருமால் இடபமாக வர, அதன்மீது மிகவும் உகந்து ஏறி வருபவர். அவர் வேதங்களை அருளியவர். அவர் எழுந்தருளியுள்ள கோயில் உள்ள ஊர் திருமுதுகுன்றம் ஆகும். அங்கு, கோயில் விழாக்களில் பலவிதமான ஓசைகள் ஒலிக்கின்றன. அழகுமிகு நங்கையர்கள் தக்க நடன சாலைகளில் முழவோசையோடு பாடி நடனம் செய்கிறார்கள். இத்தகைய சிறப்பு வாய்ந்த திருமுதுகுன்றத்தை நாமும் சென்று அடைவோம்.

**குறிப்புரை:** தழல் சேர்தரு திருமேனியர் – தழலை ஒத்த செந்நிற மேனியை உடையவர். தழல் வண்ண வண்ணர் என்றதும் அது நோக்கி. சசி – சந்திரன். மழமால் விடை – இளைய பெரிய இடபம். நாடகசாலை – நடனசாலை.

Lord Civan's divine frame dazzles like flame; His matted crest sports a crescent; He, the author of Vedas, rides cheerfully on the young bull, which is none else than Thirumaal. He is entempled in Thiru-muthu-kundram, where in its dancing halls during festivals, women of jingling anklets sing hymns accompanied by drums and dance. Let us also reach there and offer worship.

செதுவாய்மைகள் கருதிவ்வரை யெடுத்ததிறலரக்கன்
கதுவாய்கள்பத் தலறியிடக் கண்டானுறைகோயில்
மதுவாயசெங் காந்தண்மலர் நிறையக்குறைவில்லா
முதுவேய்கண்முத் துதிரும்பொழின் முதுகுன்றடைவோமே. 8

செது வாய்மைகள் கருதி(வ்) வரை எடுத்த திறல் அரக்கன்
கதுவாய்கள் பத்து அலறியிடக் கண்டான் உறை கோயில் -
மது வாய செங்காந்தண்மலர் நிறையக், குறைவு இல்லா
முதுவேய்கள் முத்து உதிரும் பொழில் - முதுகுன்று அடைவோமே.

cetu vAymaikaL karuti(v) varai eTutta tiRal arakkan2
katuvAykaL pattu alaRIyiTak kaNTAn2 uRai kOyil--
matu vAya ceg kAntaN malar niRaiya, kuRaivu illA
mutuvEykaL muttu utirum pozil--mutukun2Ru aTaivOmE.

**பொருள்:** இலங்கை மன்னனாகிய இராவணன் பொல்லா மொழிகளைக் கருதிக் கயிலை மலையைப் பெயர்த்துத் தள்ளி வைக்க முயன்றான். அவன் வடுவுள்ள வாய்கள் பத்தும் அலறும்படி, தன் விரலால் மலையை ஊன்றி அடர்த்த சிவபெருமானது கோயில் விளங்குவது திருமுதுகுன்றமாகும். இத்தலத்தில் செங்காந்தள் மலர் பூத்திருக்கின்றன. அம்மலர்களின் கைகள் நிறையும்படி அருகில் உள்ள முதிய மூங்கில்கள் குறைவின்றி முத்துக்களை உதிர்க்கும் சோலைகளால் சூழப்பட்டது இவ்வூராகும். அங்கு சென்று நாம் அடைவோம்.

**குறிப்புரை:** செதுவாய்மைகள் கருதி – பொல்லாச் சொல்லை எண்ணி. செதுவாய்மை – பொல்லா மொழி. "செதுமொழி சீத்தசெவி" என்பது போல நின்றது. கதுவாய்கள் – வடுவுள்ளவாய். "கதுவாய் எஃகின்" என்னும் பதிற்றுப்பத்தடி ஒப்பு நோக்குக. மலைப் பிளப்பை ஒத்த வாயுமாம். மதுவாய – தேனை மலரின் முகத்தே உடைய. செங்காந்தள் பூக்களில் நிறைய மூங்கில்கள் முத்தைச் சொரிகின்றன என்பது. செங்காந்தள் கையேந்தி ஏற்போரையும், வேய் வரையாது கொடுப்பாரையும் ஒத்திருக்கின்றன என்று கொள்ள வைத்தவாறு.

Lord Civan caused the mighty Raavanaa's ten mouths suffer scars and made him cry aloud; when impelled by his own arrogance, he tried to lift Mount Kailas. He is entempled in Thiru-muthu-kundram. Let us reach Muthukundru, rich in gardens, where the flawless and ageing bamboos fill the melliferous kaanthal with their pearls and honey.

**Note:** Kaanthal: Glory lilly. In Tamil classics, the human hand is compared to this Kaanthal. The idea suggested in this verse is, bamboos are donors who pour their pearls into the hands (Kaanthal Flowers) that willingly receive them.

இயலாடிய பிரமன்னரி யிருவர்க்கறிவரிய
செயலாடிய தீயாருரு வாகியெழுசெல்வன்
புயலாடுவண் பொழில்சூழ்புனற் படப்பைத் தடத்தருகே
முயலோடவெண் கயல்பாய்தரு முதுகுன்றடைவோமே. 9

இயல் ஆடிய பிரமன்(ன்) அரி இருவர்க்கு அறிவு அரிய,
செயல் ஆடிய தீ ஆர் உரு ஆகி எழு செல்வன் -
புயல் ஆடு வண்பொழில் சூழ் புனல் படப்பைத்தடத்து அருகே
முயல் ஓட, வெண்கயல் பாய்தரு - முதுகுன்று அடைவோமே.

iyal ATiya piraman2(n2) ari iruvarkku aRivu ariya,
ceyal ATiya tI Ar uru Aki ezu celvan2--
puyal ATu vaNpozil cUz pun2al paTappait taTattu arukE
muyal OTa, veN kayal pAy taru--mutukun2Ru aTaivOmE.

**பொருள்:** தற்பெருமை பேசிய பிரம்மன் திருமால் ஆகிய இருவராலும் அறிதற்கு அரிய திருவிளையாடல் செய்து வென்று எரிஉருவில் தீப்பிழம்பாக விளங்கிய சிவபெருமான் விரும்பிய ஊர் திருமுதுகுன்றமாகும். இங்கு மேகங்கள் தோயும் வளமையான சோலைகள் உள்ளன. நீர்வளம் மிக்க நிலப்பரப்புகள் உள்ளன. இந்த நீர்நிலைகட்கு அருகில் வரும் முயல்கள் பயந்து ஓடுமாறு வெள்ளிய கயல் மீன்கள் துள்ளிக் குதிக்கின்றன. இத்தகைய வளமுடைய திருமுதுகுன்றத்தை நாம் அடைவோம்.

**குறிப்புரை:** இயலாடிய பிரமன், இயலாடிய அரி என அடைமொழியை இருவர்க்கும் கூட்டுக. இயல் – தற்பெருமை. செயல் ஆடிய – செயலால் வெற்றி கொண்ட. புயல் – மேகம். புனற் படப்பை – நீர் பரந்த இடம்.

As a sacred sport Lord Civan rose up in a mighty column of fire, before the two arrogant gods Vishnu and Brahma, who could not trace His Holy Feet and Head. This Lord Civan is entempled in Thiru-muthu-kundram. Here the clouds sail over the fertile pools and the vast water spreads. The joyful jumping of the silvery kayal fishes (*கயல் மீன்கள்*) scares away the rabbit that approaches the pools. Let us reach such fertile land and offer our worship to Lord Civan entempled there.

அருகரொடு புத்தரவ ரறியாவரன்மலையான்
மருகன்வரு மிடபக்கொடி யுடையானிடமலரார்
கருகுகுழன் மடவார்கடி குறிஞ்சியதுபாடி
முருகன்னது பெருமைபகர் முதுகுன்றடைவோமே. 10

அருகரொடு புத்தர் அவர் அறியா அரன், மலையான்
மருகன், வரும் இடபக்கொடி உடையான், இடம் - மலர்ஆர்
கருகுகுழல் மடவார் கடிகுறிஞ்சி அது பாடி,
முருக(ன்)அது பெருமை பகர் - முதுகுன்று அடைவோமே.

arukaroTu puttar avar aRiyA aran2, malaiyAn2
marukan2, varum iTapak koTi uTaiyAn2, iTam--malar Ar
karuku kuzal maTavAr kaTikuRinjci atu pATi,
muruka(n2)n2atu perumai pakar--mutukun2Ru aTaivOmE.

**பொருள்:** சமணர்களாலும் புத்தர்களாலும் அறியப் பெறாதவன் சிவபெருமான். அவன் இமவான் மருமகன் ஆவான். அவன் இடபக்கொடியை உடையவன். அவன் விரும்பி எழுந்தருளிய இடம் திருமுதுகுன்றம். இங்கு மலர்சூடிய கரிய கூந்தலை உடைய இளம்பெண்கள் தெய்வத்தன்மை வாய்ந்த குறிஞ்சிப் பண்ணால் முருகப் பெருமானின் பெருமைகளைப் பாடி வணங்குகின்றார்கள். இந்தத் திருமுதுகுன்றத்தை நாம் அடைவோம்.

**குறிப்புரை:** புறச் சமயிகளால் அறியப்படாமை அறிவித்தவாறு. மலையான் மருகன் – இமவானுக்கு மருமகன். வருமிடபம் என்ற சொற்றொடர் இவர் பதிகங்களிற் பலவிடத்தும் வரல் கண்டு இன்புறற்பாலர் முதற்காட்சியதுவாதலின். கருகு குழல் – ஒருகாலைக் கொருகால் கருப்பு ஏறிக்கொண்டே போகின்ற குழல். கடிகுறிஞ்சி – தெய்வத் தன்மை பொருந்திய குறிஞ்சிப் பண். இப்பண்ணே முருகனது பெருமையைக் கூறுதற்கு ஏற்றது என்பது.

The Jains and Buddhists are unable to realise the greatness of our Lord Civan who is presented in puraanaas as the son-in-law of Himavaan, (King of Himaalayaas) and whose flag sports the Bull. This our Lord abides in Thiru-muthu-kundram. Young girls having dense-dark tresses decked with flowers hail Lord Murugan in this town by singing melodiously the Divine songs in the special tune known as 'Kurinji-p-pann' (*குறிஞ்சிப்பண்*). Let us also reach this place and hail our Lord.

முகில்சேர்தரு முதுகுன்றுடை யானைம்மிகுதொல்சீர்ப்
புகலிந்நகர் மறைஞானசம் பந்தன்னுரைசெய்த
நிகரில்லன தமிழ்மாலைக ளிசையோடிவைபத்தும்
பகரும்மடி யவர்கட்கிடர் பாவம்மடையாவே. 11

**முகில் சேர்தரு முதுகுன்று உடையானை(ம்), மிகு தொல்சீர்**
**புகலி(ந்) நகர் மறைஞானசம்பந்தன்(ன்), உரை செய்த**
**நிகர் இல்லன தமிழ்மாலைகள் இசையோடு இவைபத்தும்**
**பகரும்(ம்) அடியவர்கட்கு இடர், பாவம்(ம்), அடையாவே.**

mukil cErtaru mutukun2Ru uTaiyAn2ai(m), miku tol cIr
pukali(n)nAkar maRai njAn2acampantan2(n2), uraiceyta
nikar illan2a tamiz mAlaikaL icaiyOTu ivai pattum
pakarum(m) aTiyavarkaTku iTar, pAvam(m), aTaiyAvE.

***பொருள்:*** மேகங்கள் வந்து தங்கும் திருமுதுகுன்றத்தில் விளங்கும் பெருமானைப் பழமையான மிக்க புகழுடைய புகலி நகரில் தோன்றிய மறைவல்ல ஞானசம்பந்தன் உரைத்த ஒப்பற்ற தமிழ் மாலையாகிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் இசையோடு பகர்ந்து வழிபடும் அடியவர்களைத் துன்பங்களும் அவற்றைத் தரும் பாவங்களும் அடையா.

***குறிப்புரை:*** நிகர் இல்லன தமிழ் மாலை என்றார்; ஒவ்வொரு திருப்பாடலின் முதலிரண்டடிக் கண்ணும் இறைவன் ஆன்மாக்களின் மலத்தை நீக்கி ஆட்கொள்ளும் முறைமையும், உபதேச குருமூர்த்தியாய் வந்தருளும் சிறப்பும், தானே முதல் என உணர்த்தும் தகுதியும் உணர்த்திப் பின்னிரண்டடிகளிலும் இயற்கை அழகுகளின் வழியாக இறை வளத்தை உணர்த்துதலின். இடர் – பாவம்.

Neither trouble nor sin will get attached to the devotees who tunefully recite these ten verses - the peerless garland of Tamil Verses, extolling the Lord of Thiru-muthu-kundram that is ever covered over by clouds, composed by Gnaanasambandan, well versed in the Vedas hailing from Pukali - the hoary city of glory.

**Note:** Marai: The vedas.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*12ஆம் பதிகம் முற்றிற்று*
End of 12th Hymn

உ
சிவமயம்

## 13. திரு வியலூர்

### திருத்தலவரலாறு:

திருவியலூர் என்ற திருத்தலமானது பண்டாரவாடை திருவியநல்லூர் என்று வழங்கப் பெறுகிறது. வியலூர் என்ற பெயரோடு தஞ்சை மாவட்டத்தில் வேறு இரண்டு ஊர்களும் உள்ளன. சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம். தஞ்சை மாவட்டம் கும்பகோணத்திலிருந்து வேப்பத்தூர் வழியாகப் பேருந்து வசதி உள்ளது. சுவாமி பெயர் யோகானந்தீசுவரர். அம்மை பெயர் சாந்த நாயகி. தீர்த்தம் சடாயு தீர்த்தம். இறைவன் புராதனேசுவரர், வில்வாரண்யேசுவரர் எனவும் பெயர் பெறுவர். அம்மை சௌந்தரநாயகி எனவும் வழங்கப் பெறுவர். ஜடாயு வழிபட்டுப் பேரின்பம் எய்திய தலம்.

### கல்வெட்டு:

அரசியலார் படியெடுத்த கல்வெட்டுக்கள் மொத்தம் 94 உள்ளன. இத்தலம் கி.பி. 985–1013இல் அரசாண்ட முதல் இராஜகேசரி வர்மன் காலத்து அவனி நாராயண சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்தவன் என்றும், 1011–1043இல் அரசாண்ட இராஜேந்திர சோழ தேவன் காலத்து வடகரை இராஜேந்திர சிம்மவள நாட்டு மண்ணி நாட்டுப் பிரம்மதேயமான வேப்பத்தூர் சோழ மார்த்தாண்ட சதுர்வேதி மங்கலத்தைச் சேர்ந்தது என்றும் தெரிகிறது. சுவாமி பெயர் சிவயோக நாதர் எனவும், உமாமகேசருக்கு ஆண்ட நாயகர் எனவும், கல்வெட்டுக்கள் பெயர் கூறுகின்றன. இத்தலத்துக் கல்வெட்டுக்களால் குறிக்கப் பெறுகின்ற சோழமன்னர்கள் பன்னிருவர். பாண்டியர் ஒருவர். விஜயநகர கிருஷ்ண தேவராயர் ஒருவர். இவர்களில் கி.பி. 862 முதல் 894 வரை ஆண்ட பாண்டிய மன்னனாகிய வரகுண பாண்டியனது 38ஆம் ஆண்டின் நிகழ்ச்சி ஒன்று குறிக்கப் பெறுவதால் இக்கோயில் அதற்கு முன்பே கற்றிருப்பணியாகச் செய்யப் பெற்றமை தெளிவு. முதலாம் பராந்தகன் கி.பி. 907 முதல் 947 வரை ஆட்சி நடத்தியவன். இவனுடைய ஆட்சியில் விளக்கீட்டிற்காக ஆடுகள் விடப்பெற்றன. பொன்னும் கொடுக்கப் பெற்றன. இவன் மதுரை கொண்ட பரகேசரி வர்மன் எனக் குறிக்கப் பெறுகின்றான்.

முதலாம் மற்றும் இரண்டாம் பராந்தகன் காலங்களில் விளக்குக்காகப் பொன்னும் ஆடுகளும், அபிஷேகத் திரவியங்கட்காக நிலமும் அளிக்கப் பெற்றன. செம்பியன் காரைக்காடு உடையானாலும் பராந்தகப் பல்லவராயன் என்பவனாலும் விளக்கிற்காக ஆடுகளும் பணமும் அளிக்கப் பெற்றன. இவன் தருமங்களில் விளக்கிற்காக அளித்தமையே பெரிதும்

காணப்படுகின்றன. விசலூர் உடைய நாயனாருக்குத் திருமஞ்சன நீர் காவிரியிலிருந்து கொண்டுவர நிலம் விட்டான். இதில் திருவிசலூர் மகாதேவ பட்டாரகர் என இறைவன் திருநாமம் குறிக்கப் பெறுகின்றது.

முதல் இராஜராஜன் கி.பி. 985 முதல் 1013 வரையில் ஆண்டவன். இவன் காலத்தில் கோவில் விளக்குக்குப் பணம் கொடுக்கப்பட்ட செய்திகள் குறிக்கப் பெறுகின்றன. கிராமங்களில் நிலவிற்பனைகளும் பொறிக்கப் பெற்றுள்ளன. இவனுடைய அரசி ஒருத்தி பொன்னளித்து இருக்கின்றாள். திருமஞ்சனத்தில் இடப்பெறுகின்ற ஸ்நான திரவியங்களுக்காகவும், பிராமண போஜனத்திற்காகவும் பொன் அளித்திருக்கிறாள். மிகச் சிறப்பாக இவன் ஆட்சி 29இல் அரசன் துலாபாரம் புக்குத் தானம் செய்தான் என்றும், அரசி தந்திசத்தி விடங்கியாரான லோகமாதேவியார் ஹேமகர்ப்பதானம் செய்தாள் என்றும் குறிக்கப் பெறுகின்றன. பிச்சுதேவன் என்னும் அரசகாரியம் பார்ப்பான் கருப்பக்கிருகப் பணிக்காக நிலம் விட்டமை தெரிகிறது. இராஜேந்திரன், கி.பி. 1011 முதல் 1043 வரை ஆண்டவன். இவன் காலத்திய கல்வெட்டுக்கள் பதின்மூன்று உள்ளன. அவற்றால், திருவிசநல்லூர் உடைய மகாதேவர்க்குத் தங்கக் கச்சை அளித்ததும், சிதாரிக்காக நறும்புகையிட நிலம் அளித்ததும், விளக்கிடப் பணமும் நிலமும் ஆடுகளும் அளித்ததும் அறிவிக்கப் பெறுகின்றன. அவனுடைய மனைவியான அரசியொருத்தியால் வெள்ளிக் கலசம் ஒன்று அபிஷேகத்திற்கு அளிக்கப் பெற்றது. இவன் தனது மூன்றாவது ஆண்டில் திருவிசநல்லூர் மாதேவர் கோயிலையும் கோபுரத்தையும் திருப்பணி செய்தான். இவன் மனைவியான நக்கன் செம்பியன் மாதேவியாரால் விளக்குக்கு ஏற்பாடு செய்யப் பெற்றது. இவனுக்கு உருத்திரன் அருள்மொழியான பிருதி மகாதேவி என்றொரு மனைவியும் இருந்தனள். இவனுக்கு அத்தையும், வல்லவராயர் வந்தியத் தேவர் மனைவியுமான குந்தவை தேவியார் பழையாறையில் இருக்கும்போது நிலம் அளித்தார் என்ற செய்தியை அறிவிக்கும் கல்வெட்டு சரித்திர ஆராய்ச்சியாளர்க்கும் பெரு விருந்தாய் அமைகின்றது.

மூன்றாம் குலோத்துங்கன் கி.பி. 1178 முதல் 1218 வரை ஆண்டவன். இவனுடைய ஆட்சி பதினெட்டாம் ஆண்டில் நில விற்பனையைப் பற்றிக் கூறுவது. அதில் வேம்பத்தூர் எதிரிலிச் சோழச் சதுர்வேதி மங்கலமான வேம்பத்தூர் என அழைக்கப் பெறுகின்றது. ஏனைய முதல் மூன்று கல்வெட்டுக்கள் அரசாங்க நில அளவை முறைகளையும் நில விற்பனைகளையும் அறிவிப்பன. தென்புறப் பிராகாரத்தில் உள்ள கருப்பக்கிருகத்தில் வடக்குச் சுவரில் அந்த மண்டபத்தைக் கட்டியவனான ஆனந்த சிவன் என்பவனுடைய உருவம் இருக்கிறது. அதில் ஒரு பகுதியைச் சுவர் மறைத்து விட்டது.

**பதிக வரலாறு:**

திருமங்கலக்குடியை வணங்கிப் போந்த பிள்ளையார், திருவியலூருக்கு எழுந்தருளி இறைவனை வணங்கிக் குரவங்கமழ் என்னும் இன்னிசை கூடும் இத்தமிழ்ப் பதிகத்தொடை சாத்த, இறைவன் அவருக்கு அருளார் திருவேடங் காட்டியருளினார். பிள்ளையார் வணங்கி உய்ந்தார். இதனைப் பிள்ளையார் இப்பதிக ஐந்தாம் பாட்டில் கண்ணார்தரும் உருவாகிய கடவுள் என்றும், ஒன்பதாம் பாட்டில் உருவம் விளம்பட்டு அருள் செய்தான் என்றும் குறிப்பித்து அருளுகிறார்கள்.

## 13. THIRU-VIYALOOR

**THe HisTORY OF THe PLACE**

The sacred city of Thiru-viyaloor is also called Pandaaravaadai Thiruviyanallur. There are two other villages named Viyaloor in the Thanjai district. This sacred site is on the north bank of river Cauvery in the Chola country. Buses ply here from Kumbakonam in Thanjai district via Veppaththoor. The God's name is Yogaanandheesuvarar and that of the Goddess is Saanthanaayaki. The holy ford is Sataayu Theerththam. The God is also known by the names Puraathanesuvarar or Vilvaaranyesuvarar and the Goddess by the name of Soundharanaayaki also. Jataayu offered worship here and attained the ultimate bliss.

**Stone Inscriptions**

Government epigraphists have copied a total of 94 inscriptions. This holy place was said to belong to Aavani Naaraayana Chathurvedhi Mangalam during Raajakesarivarman I, who ruled during 985 - 1013 CE, and to the Veppaththoor Chozha Maarththaanda Chathurvedhi Mangalam, a Biramatheyam in the Manni Naatu of the Vadakarai Raajendhira Simma Valanaatu during the rule of Raajendhira Chola Thevan, 1011 - 1043 CE. The God's name is given in the inscriptions as Siva Yoga Naathar and as Umaa Mahesarukku Aanda Naayakar. The names of twelve Chola Kings, one Paandiya King, and Krishnadeva Raayar of Vijayanagaram are mentioned in the inscriptions. Among these an incident in the 38th year of the Paandiya King-Varaguna

Paandiyan (862 - 894 CE) is noted, making it clear that this temple would have been built of stone prior to this time. Paraanthakan I ruled during 907 - 947 CE. In the 16th regnal year of his, sheep was gifted for lamp lighting and gold was also given. He is referred to as Parakesari Varman, the conqueror of Madhurai.

During the times of Paraanthakan I and II, gold and sheep were given for lighting of lamps and land was gifted for securing materials for performing holy ablutions. Semibiyan Kaaraikkaadu Udaiyaan and Paraanthaka-p-Pallavaraayan gifted sheep and money for lighting of lamps. Among the latter's gifts most were for lamps. He also gave land for bringing holy water from river Cauvery for Visaloor Udaiya Naayanaar. In this the name of the Lord is given as Thiruvisaloor Mahaadeva Battaarakar.

Raajaraajan I ruled from 985 to 1013 CE. Information is given on the gift of money for lighting of lamps at the temple during his reign. Sale transactions of land in the villages are also noted in the inscriptions. One of his queens had given gold for materials for performing holy ablutions of the Lord's image and for feeding Brahmins. Of special note is the information that the king gave a 'Thulaabaaram' gift (gift of gold or similar item of value of weight equal to that of the giver) in his 29th regnal year and that the queen, Thanthisaththi Vitangkiyaar Lokamahaa-deviyaar, gave a gift of golden icon. A royal official, Pichchu Thevan gave land to finance the renovation of the sanctum. There are thirteen inscriptions of Raajendhiran, who ruled from 1011 to 1043 CE. These inscriptions reveal that he gifted a gold 'kachchai' to the Lord Thiruvisaloor Udaiya Mahaadevar, and gave land for incense offering during worship service and money, sheep and lands for lighting of lamps. One of his queens gave a silver pot for performing holy ablutions. In his third regnal year he had the temple and gopuram of Thiruvisanaloor Maadevar renovated. His wife, Nakkan Sembiyan Maadeviyaar made endowments for lighting of lamps. He also had a wife by name Uruththiran Arulmozhi Piruthi Mahaadevi. The information that his aunt, Kundhavai Theviyaar, wife of Vallavaraayar Vandhiyath Thevar, gifted land while she was in Pazhayaarai, is of special interest to epigraphists and historians. Kuloththungan III ruled from 1178 to

1218 CE. A sale of land during his eighteenth regnal year is noted. In this, Vempaththoor is called Ethirili Chozhach Chathurvethi Mangalamaana Vempaththoor. Other three inscriptions reveal information on the measurement scheme for lands and on the sale of lands. In a shrine located in the southern ambulatory an image of Aanandha Sivan, the builder of the shrine, is engraved on the north wall, but it is partly obscured by a wall.

**INTRODUCTION TO THe HYMN**

Adoring Lord Civa at Thiru-mankalak-kudi, our youthful saint arrived at Thiru-Viyaloor. Here, when he sang the following hymn, Lord Civa revealed to him His person.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 13. திரு வியலூர்

## 13. THIRU-VIYALOOR

பண் : நட்டபாடை
ராகம் : கம்பீரநாட்டை

*Pann: Natta Paadai*
*Raagam: Kambeera Naattai*

குரவங்கமழ் நறுமென்குழ லரிவையவள்வெருவப்
பொருவெங்கரி படவென்றத னுரிவையுடலணிவோன்
அரவும்மலை புனலும்மிள மதியும்நகுதலையும்
விரவுஞ்சடை யடிகட்கிடம் விரிநீர்வியலூரே. 1

குரவம் கமழ் நறுமென்குழல் அரிவைஅவள் வெருவ,
பொருவெங்கரி படவென்று அதன் உரிவை உடல் அணிவோன்,
அரவும்(ம்), அலைபுனலும், இளமதியும், நகுதலையும்,
விரவும் சடை அடிகட்கு இடம் - விரிநீர் வியலூரே.

kuravam kamaz naRu men2 kuzal arivai avaL veruva,
poru vegkari paTa ven2Ru, atan2 urivai uTal aNivOn2,
aravum(m), alaipun2alum, iLamatiyum, nakutalaiyum,
viravum caTai aTikaTku iTam--viri nIr viyalUrE.

**பொருள்:** குரா மலரின் மணம் கமழ்வதும், இயற்கையிலேயே மணம் உடையதுமான மென்மையான கூந்தலை உடைய உமையம்மை, அஞ்சும்படியாகச் சிவபெருமான் தன்னோடு பொருதற்கு வந்த யானையைக் கொன்று அதன் தோலை உரித்துத் தன்

திருமேனியில் போர்த்துக் கொண்டான். அவன் சடையில் பாம்பு, கங்கை, சந்திரன், வெண்தலை ஓடு ஆகியவற்றை அணிந்துள்ளான். அவனுக்கு உரிய இடம் நீர்வளம் மிக்க வியலூர் ஆகும்.

**குறிப்புரை:** குரவம் – குராமலர். அரிவை என்றது உமாதேவியை. சிவனுக்கு உமையம்மை வெருவ யானையை உரித்துப் போர்த்ததாகச் சொல்லுதல் வழக்கம். அரவு முதலியன விரவிய சடை என்பது தம்முள் மாறுபட்ட பல பொருள்களும் பகை நீங்கி வாழ்தற்கிடமாகிய சடை என்றவாறு.

The soft hair locks of Umaa Devi, is sweet smelling by itself. Added to this She has decked her hair with the flower known as 'Kuravam' (*குராமலர்*) which also spreads it fragrance all around. This Umaa Devi got scared when she saw a cruel elephant rushing towards her as though to kill her. Lord Civa faced and killed that elephant, tore off its hide and wore it on His body. Behold the spacious and well-watered Viyaloor - the shrine, of Lord Civa of spreading matted hair in which abide the serpent, the billowy river ganga, the crescent moon and the white skull.

**Note:** Thiru-Viyaloor is now known as Thiru-visaloor.

ஏறார்தரு மொருவன்பல வுருவன்னிலையானான்
ஆறார்தரு சடையன்அன லுருவன்புரிவுடையான்
மாறார்புர மெரியச்சிலை வளைவித்தவன்மடவாள்
வீறார்தர நின்றானிடம் விரிநீர்வியலூரே. 2

*ஏறு ஆர் தரும் ஒருவன், பல உருவன்(ன்), நிலை ஆனான்,*
*ஆறு ஆர்தரு சடையன், அனல் உருவன், புரிவு உடையான்,*
*மாறார் புரம் எரியச் சிலை வளைவித்தவன், மடவாள்*
*வீறு ஆர்தர நின்றான், இடம் - விரிநீர் வியலூரே.*

ERu Artarum oruvan2, pala uruvan2(n2), nilai An2An2,
ARu Artaru caTaiyan2, an2al uruvan2, purivu uTaiyAn2,
mARAr puram eriyac cilai vaLaivittavan2, maTavAL
vIRu Artara nin2RAn2, iTam--viri nIr viyalUrE.

**பொருள்:** சிவபெருமான் எருதின்மேல் ஊர்ந்து வருகின்றான். பல்வேறு மூர்த்தங்களைக் கொண்டவன். அவன் என்றும் நிலையானவன். கங்கை ஆற்றை சடையில் நிறுத்தியவன். அனல் போன்ற சிவந்த மேனியன். பேரன்புடையவன். பகைவராக வந்த அசுரர்களின் முப்புரங்கள் எரியுமாறு வில்லை வளைத்தவன். உமையம்மை பெருமிதம் கொள்ள

பலவகைச் சிறப்புக்களோடு நிற்பவன். இவனுக்கு உரிய இடம் நீர்வளம் மிக்க வியலூர் ஆகும்.

**குறிப்புரை:** ஆர்தருதல் – ஆர்தல். பல உருவன் – அடியார்கள் வேண்டிய வேண்டியாங்குக் கொள்ளும் வடிவங்களை உடையவன். அதாவது எம்போலியர்க்கு வினைவாய்ப்பால் கிடைக்கும் உடல் போல்வதன்று, அவன் வடிவென்பது. நிலையானான் – என்றும் அழியாமல் ஏனைய பொருள்கள் தத்தம் கால எல்லை வரை நிலத்து நிற்க ஏதுவானவன். புரிவுடையான் – அன்புடையான். ஆன்மாக்களிடத்துக் காரணமின்றியே செலுத்தும் அன்புடையவன் என்பது கருத்து. மாறார் – பகைவர். வீறு – பிறிதொன்றற்கில்லாத பெருமை.

Lord Civan is One who rides the Bull; His forms are manifold; He is the ever enduring One; He holds the river ganga in His matted hair; His body is as red as fire; He is full of compassion. He bent His bow and gutted with fire the (three) hostile citadels. Umaa Devi was very proud of Lord Civan's multifaceted splendour.

செம்மென்சடை யவைதாழ்வுற மடவார்மனைதோறும்
பெய்ம்மின்பலி யெனநின்றிசை பகர்வாரவரிடமாம்
உம்மென்றெழு மருவித்திரள் வரைபற்றிடவுரைமேல்
விம்மும்பொழில் கெழுவும்வயல் விரிநீர்வியலூரே. 3

*செம்மென்சடை அவை தாழ்வுஉற, மடவார் மனைதோறும்,*
*"பெய்ம்மின், பலி!" என நின்று இசை பகர்வார் அவர் இடம்ஆம் -*
*உம்மென்று எழும் அருவித்திரள் வரை பற்றிட, உரை மேல்*
*விம்மும் பொழில் கெழுவும், வயல் - விரிநீர் வியலூரே.*

cem men2 caTai avai tAzvu uRa, maTavAr man2ai tORum,
"peymmin2, pali!" en2a nin2Ru icai pakarvAr avar iTam Am--
ummen2Ru ezum aruvittiraL varai paRRiTa, uRai mEl
vimmum pozil kezuvum, vayal--viri nIr viyalUrE.

*பொருள்:* செம்மையும் மென்மையும் உடைய சடை தாழ்ந்து தொங்கும்படியாகத் தாருகவனத்து முனிவர் மனைவியர் வாழும் இல்லங்கள் தோறும் சிவபெருமான் சென்று உணவு இடுங்கள் என்று இசை பாடினான். அவன் உறைகின்ற இடம் திருவியலூர். இங்கு 'உம்' என்ற ஒலிக்குறிப்போடு அருவிகள் குடகு மலை உச்சியிலிருந்து காவிரியாய் வர அந்நீர் வளத்தால் புகழோடு செழித்து வளரும் சோலைகளையும் பொருந்திய வயல்களையும் உடைய நீர்வளம் மிக்கது வியலூர் ஆகும்.

**குறிப்புரை:** செம்மென்சடை – செம்மையாகிய மெல்லிய சடை. மடவார் – கர்ம பிரமவாதிகளான தாருகாவனத்து முனிவர் பெண்கள். பலி – பிச்சை. உம் – ஒலிக்குறிப்பு. உரை – புகழ்.

Lord Civan, with His soft red matted hair dangling, went around singing and visited the homes where the wives of the saints (Rishis) of Tharu-ka-vanam (*தாருகாவனம்*) were residing and implored them to give Him alms. This Civan's abode is Thiru- Viyaloor, where water from the top of Kudagu mountains descend down as waterfalls, creating a noise as 'Um' and runs in the plains as Cauvery river (*காவேரி நதி*). Because of the abundance of water brought by Cauvery, glorious and rich gardens and fertile fields exist in and around Thiru- Viyaloor.

**Note:** Civa, as the Lord Bikshaadana (*பிக்ஷாடனர்*), is celebrated in this verse.

அடைவாகிய வடியார்தொழ வலரோன்றலையதனில்
மடவாரிடு பலிவந்துண லுடையானவனிடமாம்
கடையார்தர வகிலார்கழை முத்தந் நிரைசிந்தி
மிடையார்பொழில் புடைசூழ்தரு விரிநீர்வியலூரே. 4

*அடைவு ஆகிய அடியார் தொழ, அலரோன் தலைஅதனில்*
*மடவார் இடு பலி வந்து உணல் உடையான் அவன் இடம் ஆம் -*
*கடை ஆர்தர அகில், ஆர் கழை முத்தம் நிரை சிந்தி,*
*மிடை ஆர் பொழில் புடை சூழ்தரு - விரிநீர் வியலூரே.*

aTaivu Akiya aTiyAr toza, alarOn2 talai atan2il
maTavAr iTu pali vantu uNal uTaiyAn2 avan2 iTam Am--
kaTai Artara akil, Ar kazai muttam nirai cinti,
miTai Ar pozil puTai cUz taru--viri nIr viyalUrE.

**பொருள்:** அடியவர்கள் தத்தம் அடைவின்படி சிவபெருமானைத் தொழுது வணங்குகிறார்கள். அவன் பிரம்ம கபாலத்தில் மகளிர் இட்ட உணவை உண்பவன். அவன் விரும்பி உறையும் இடம் திருவியலூர். இங்கு உழவர்கள் வயல்களில் நீரைப் பாய்ச்சுகின்றார்கள். அங்கு மூங்கில்கள் முத்துக்களை வரிசையாகச் சொரிகின்றன. ஆற்றில் அகில் மரங்கள் மிதந்து வருகின்றன. சோலைகளில் மரங்கள் அடர்த்தியாக வளர்ந்துள்ளன. இத்தகைய நீர்வளம் மிக்கது வியலூர் ஆகும்.

**குறிப்புரை:** அடைவாகிய அடியார் – தத்தம் நெறியினின்று வழிபடுமடியவர்கள். அடைவு – முறைமை. அலரோன் – பிரமன். கடையார் – பள்ளர்கள். அகில் ஆர் கழை எனப்பிரித்து அகிலும் நிறைந்த மூங்கிலும் எனப் பொருள் காண்க.

Lord Civan is adored by His devotees assembling in their strength as per their respective guidelines (*நெறிகள்*). He consumes the alms dropped by women in His begging bowl which is the skull of Brahma, whose seat is Lotus. The town Viyaloor is endowed with abundant water. Agricultural labourers work in great numbers in the fields. The bamboo trees drop their pearls in rows in the fields. Akil trees (*அகில் மரம்*) are brought by the river and scattered all around. The gardens are rich with closely grown trees. Such a fertile place is Viyaloor that is desired by Lord Civan for His abode.

**Note:** Civa, it is said, used to recieve alms. Alms are symbolic of devotional love and humility. Lord Civa expects all humanity to supplicate for mercy and for gifts of food. He Himself needs no begging bowl but this object is a visible symbol of the act of supplication. Supplicate and be blessed is the message.

**எண்ணார்தரு பயனாயய னவனாய்மிகுகலையாய்ப்**
**பண்ணார்தரு மறையாயுயர் பொருளாயிறையவனாய்க்**
**கண்ணார்தரு முருவாகிய கடவுள்ளிடமெனலாம்**
**விண்ணோரொடு மண்ணோர்தொழும் விரிநீர்வியலூரே.** 5

***எண் ஆர்தரு பயன்ஆய், அயன் அவனாய், மிகு கலை ஆய்,***
***பண் ஆர்தரு மறைஆய், உயர் பொருள்ஆய், இறையவனாய்க்,***
***கண் ஆர்தரும் உரு ஆகிய கடவுள்(ள்) இடம் எனல் ஆம் -***
***விண்ணோரொடு மண்ணோர் தொழும் - விரிநீர் வியலூரே.***

eN Artaru payan2 Ay, ayan2 avan2Ay, miku kalai Ay,
paN Artaru maRai Ay, uyar poruL Ay, iRaiyavan2Ay,
kaN Artarum uru Akiya kaTavuL(L) iTam en2al Am--
viNNOroTu maNNOr tozum viri nIr viyalUrE.

**பொருள்:** சிவபெருமான் தியானத்தின் பயனாய் இருப்பவன். நான்முகனாய் உலகைப் படைப்போனும் அவனே. எண்ணற்ற கலைகளாய்த் திகழ்வோனும் சந்த இசையோடு கூடிய வேதங்களாய் விளங்குபவனும் அவனே. உலகில் மிக உயர்ந்த பொருளாய் இருப்போனும் அவனே. அவன் எல்லோர்க்கும் தலைவன் ஆவான். அவன் கண் நிறைந்த பேரழகு

உடையோன் ஆவான். விண்ணவர்களாகிய தேவர்களும் மண்ணவர்களாகிய மக்களும் வந்து வணங்கும் நீர்வளம் மிக்க வியலூர் அவனது இடமாகும்.

**குறிப்புரை:** எண் – தியானம். எண்ணார் தருபயன் – தியானப்பயன். அயனவனாய் – பிரமனாய் என்றது. பவமலி நினைவொடு பதுமனன் மலரது மேவிய நிலையை. மிகுகலையாய் – ஒன்றினொன்று மிகுந்திருக்கின்ற கலைப்பொருள்களாய். பண் – சந்தம். கண்ணார் தரு உரு – கண்நிறைந்த வடிவம். பேரழகன் என்றபடி.

Lord Civan is the fruit of meditation; He is 'eka Brahmam' (*ஏக பிரம்மம்*). He is indeed the scriptures galore; He is the chandas of the tuneful vedas; He is the supreme beatitude; He is the Lord-God, beautiful to behold. Behold His shrine where dwellers of the earth as well as the celestial adore Him, at spacious and well-watered Viyaloor.

**Note:** Chandas - Metric rhythm that characterises the Vedas.

வசைவிற்கொடு வருவேடுவ னவனாய்நிலையறிவான்
திசையுற்றவர் காணச்செரு மலைவானிலையவனை
அசையப்பொரு தசையாவண மவனுக்குயர்படைகள்
விசையற்கருள் செய்தானிடம் விரிநீர்வியலூரே. 6

வசை வில்கொடு வரு வேடுவன் அவனாய், நிலை அறிவான்,
திசை உற்றவர் காணச், செரு மலைவான் நிலையவனை
அசையப் பொருது, அசையா வணம் அவனுக்கு உயர் படைகள்
விசையற்கு அருள் செய்தான் இடம் - விரிநீர் வியலூரே.

vacai vilkoTu varu vETuvan2 avan2Ay, nilai aRivAn2,
ticai uRRavar kANa, ceru malaivAn2 nilaiyavan2ai
acaiyap porutu, acaiyA vaNam avan2ukku uyar paTaikaL
vicaiyaRku aruL ceytAn2 iTam--viri nIr viyalUrE.

**பொருள்:** சிவபெருமான் வேட்டுவ வடிவம் கொண்டு வளைந்த வில்லை ஏந்தித் தன்னை நோக்கித் தவம் இயற்றும் அர்ச்சுனனின் ஆற்றலை அறிதற்பொருட்டு அவனிடம் போராடினான். எல்லா திசைகளிலும் உள்ளோரும் காண ஒற்றைக் காலில் நின்று தவம் செய்து கொண்டிருந்தான் அர்ச்சுனன். அவனோடு போர் செய்து அவனைத் தோற்கடித்தான். பின்னர் அவனுடைய ஆற்றலைப் பாராட்டி அவன் அழியாதவாறு அவனுக்குப் பாசுபதம் போன்ற படைக்கலங்களை அருளினான் நம் சிவபெருமான். அவனது இடம் நீர்வளம் மிக்க வியலூர் ஆகும்.

**குறிப்புரை:** வசைவில் – வளைந்த வில். நிலையறிவான் – அருச்சுனனுடைய உண்மையான தவநிலையை உணர்த்தும்படி. செரு – போர். நிலையவன் – ஒரு காலில் நின்று தவம் செய்யும் விசயன்.

Lord Civan appeared as a hunter with His bending bow, gauged the might of Arjuna, and engaged Himself in a fight witnessed by men in all the eight directions; He assailed him and shook him to his roots; then He gifted to him invincible weapons. Behold His shrine is in the spacious and well-watered Viyaloor!

**Note:** The fight between Arjuna and Civa is elaborately dealt with by Bhaaravi in his Kiraataarjuniya. 'Design and rhetoric in a sanskrit court epic' by Indira Viswanathan Peterson (State University of New York Press - Albany, 2003) is a well indited thesis on Bhaaravi's opus. Also many Saiva psalms make reference to this confrontation between Arjuna and Lord Civa. *"பார்த்தர்குப் பாசுபதமருள் செய்தவன் பத்தருள்ளீர் ..."* St. Appar *திருமுறை* - IV Verse 494 - *திருவிருத்தம்.*

மானாரர வுடையானிர வுடையான்பகனட்டம்
ஊனார்தரு முயிரானுயர் விசையான்விளைபொருள்கள்
தானாகிய தலைவன்னென நினைவாரவரிடமாம்
மேனாடிய விண்ணோர்தொழும் விரிநீர்வியலூரே. 7

*"மான், ஆர் அரவு உடையான்; இரவு, - உடையான், - பகல் நட்டம்;*
*ஊன் ஆர்தரும் உயிரான்; உயர்வு இசையான்; விளை பொருள்கள்*
*தான் ஆகிய தலைவன்(ன்)"; என நினைவார் அவர் இடம்ஆம் -*
*மேல் நாடிய விண்ணோர் தொழும் - விரிநீர் வியலூரே.*

"mAn2, Ar aravu, uTaiyAn2; iravu,--uTaiyAn2,--pakal naTTam;
Un2 Artarum uyirAn2; uyarvu icaiyAn2; viLai poruLkaL
tAn2 Akiya talaivan2(n2);" en2a nin2aivAr avar iTam Am--
mEl nATiya viNNOr tozum viri nIr viyalUrE.

**பொருள்:** சிவபெருமான் தலைமையான அரவை அணிந்தவன். தலையோட்டில் இரத்தல் தொழில் புரிகின்றவன். பகலில் நட்டம் ஆடுபவன். ஊனிடை உயிராக விளங்குபவன். பசுபோத முனைப்பால் உயர்வாக எண்ணுகின்ற உயிர்களிடத்துப் பொருந்தாதவன். அனைத்து விளைபொருள்களாய் நிற்கும் தலைவன். இவ்வாறு நினைத்தற்கு உரியவனாகிய

சிவபெருமானது இடம் புண்ணியப் பயனால் மேன்மை நாடிய விண்ணவர்களால் தொழப் பெரும் நீர்வளம் சார்ந்த வியலூர் ஆகும்.

***குறிப்புரை:*** மான் – மான்தோல். இரவுடையான் – இரத்தற்றொழில் உடையான். உடையான் என்பது நடுநிலைத் தீவகமாகப் பகல் நட்டம் உடையான் எனப் பின்னதனோடும் சென்றியையும். ஊனார் தரும் உயிரான் – உடம்பினுள் எங்கும் வியாபகமாய் இருக்கும் உயிர்க்குயிராய் இருப்பவன். உயர்வு இசையான் – பசுபோத முனைப்பால் உயர்வாக எண்ணுகின்ற உயிர்களிடத்துப் பொருந்தாதவன். பொருள்கள் எல்லாமாய் இருக்கின்ற இறைவன். மேல்நாடிய விண்ணோர் தொழும் என்றது விண்ணோர்கள் தாம் செய்த புண்ணியப் பயனை நுகர்தலிலேயே மயங்கி நிற்பவராதலின், மேல் நாடற்குரிய சிறப்பு என்றும் இல்லாதவர் என்று குறிப்பித்தவாறு.

Lord Civan wears antelope skin and serpents too; He goes dancing and begging during the day. His valour is of the highest order; He is the producer of all; He is the life of life that animates fleshy embodiments. Thus, even thus, is He contemplated on. Behold His shrine, spacious and well watered, at Viyaloor hailed and worshipped by all the celestial that seek the upper world.

பொருவாரெனக் கெதிராரெனப் பொருப்பையெடுத்தான்றன்
கருமால்வரை கரந்தோளுரங் கதிர்நீண்முடிநெரிந்து
சிரமாயின கதறச்செறி கழல்சேர்திருவடியின்
விரலாலடர் வித்தானிடம் விரிநீர்வியலூரே. 8

***"பொருவார் எனக்கு எதிர் ஆர்!" எனப் பொருப்பை எடுத்தான் தன்***
***கருமால்வரை கரம், தோள், உரம், கதிர் நீள்முடி, நெரிந்து,***
***சிரம் ஆயின கதறச், செறி கழல் சேர் திருவடியின்***
***விரலால் அடர்வித்தான் இடம் - விரிநீர் வியலூரே.***

"poruvAr en2akku etir Ar!" en2ap poruppai eTuttAn2 tan2
karu mAl varai karam, tOL, uram, katir nIL muTi, nerintu,
ciram Ayin2a kataRa, ceRi kazal cEr tiruvaTiyin2
viralAl aTarvittAn2 iTam--viri nIr viyalUrE.

***பொருள்:*** எனக்கு எதிராகப் போர் புரிபவர் யார்? என்ற செருக்கால் கயிலை மலையை நகர்த்த முயன்றவன் இராவணன். அவன் வலிய பெரிய மலைபோலும் கைகள், தோள்கள் மற்றும் மார்புகளை உடையவன். ஒளி பொருந்திய நீண்ட மகுடங்களுடன் கூடிய தலைகளும் உடையவன். அத்தலைகள் நெரிதலால் அவன் கதறுமாறு, செறிந்த

கழல்களுடன் கூடிய திருவடியின் விரலால் சிவபெருமான் மலையை அழுத்தினான். இவனது இடம் நீர்வளம் மிக்க வியலூர் ஆகும்.

**குறிப்புரை:** எனக்கு எதிர் பொருவார் ஆர் என, எனக் கூட்டுக. பொருப்பை எடுத்தான் – இராவணன், கருமால் வரை – வலிய பெரிய மலையை ஒத்த, முடி நெரிந்து – கிரீடம் நெரிதலால், சிரமாயின கதற – சிரங்கள் பத்தும் கதற, அடர்த்தான் என்னாது அடர்வித்தான் என்றது அவனுடைய ஆணவம் குறைந்து பரிபாகம் ஏற்படும்வரை வருத்தி என்ற நயம் தோன்ற நின்றது.

Saying; "Who will dare fight against me?" (King of Sri Lanka) lifted up the Kailas mountain the abode of Civa. With the toe of His ankleted and hallowed foot, He crushed the dark hill-like Raakshasha's long and radiant crowns, his hands and shoulder, and caused his ten mouths to cry aloud. This Lord Civan's shrine is the spacious and well-watered Viyaloor!

வளம்பட்டலர் மலர்மேலயன் மாலும்மொருவகையால்
அளம்பட்டறி வொண்ணாவகை யழலாகியவண்ணல்
உளம்பட்டெழு தழற்றூணத னடுவேயொருவுருவம்
விளம்பட்டருள் செய்தானிடம் விரிநீர்வியலூரே. 9

*வளம்பட்டு அலர் மலர்மேல் அயன், மாலும்(ம்), ஒருவகையால்*
*அளம்பட்டு அறிவு ஒண்ணா வகை அழல் ஆகிய அண்ணல்,*
*உளம்பட்டு எழு தழல் - தூண் அதன் நடுவே ஓர் உருவம்*
*விளம்பட்டு அருள் செய்தான் இடம், - விரிநீர் வியலூரே.*

vaLampaTTu alar malar mEl ayan2, mAlum(m), oru vakaiyAl
aLampaTTu aRivu oNNA vakai azal Akiya aNNal,
uLampaTTu ezu tazal--tUN atan2 naTuvE oru uruvam
viLampaTTu aruL ceytAn2, iTam--viri nIr viyalUrE.

**பொருள்:** வளமையோடு அலர்ந்த தாமரை மலர்மேல் உறையும் நான்முகனும் திருமாலும் தமக்குள் யார் பெரியவர் என்று செறுக்குற்று அலைந்தனர். அப்பொழுது அவர்களின் முன் சோதிப்பிழம்பு ஒன்று தோன்றி நின்றது. அப்பொழுது அசரீரி ஒன்று இதன் அடியினையும் முடியினையும் காணுங்கள் என்று கூறியது. அதன்படி இவர்கள் அச்சோதிப்பிழம்பின் அடியினையும் முடியினையும் காண முனைந்தனர். நான்முகனும் திருமாலும் அன்னமும் பன்றியுமாய் வருந்தி முயன்றும் அறியவொண்ணாதவாறு அழல் உருவாய் நின்றிருந்தான் சிவபெருமான். அவ்விருவரும் தம் செருக்கு அடங்கி வேண்டத் தழல் வடிவான தூணின்

நடுவே ஓர் உருவமாக வெளிப்பட்டு சிவபெருமான் அருள் செய்தான். இவனது இடம் நீர்வளம் மிக்க வியலூர் ஆகும்.

**குறிப்புரை:** வளம்பட்டு அலர்மலர் – திருமாலின் உந்தியினின்றும் தோன்றியது ஒன்றாதலால், வளமான தாமரை மலர். அளம் பட்டு – வருந்தி, உளம் பட்டு – மனம் உடைய; பட என்பது பட்டெனத் திரிந்து நின்றது எதுகை நோக்கி. விளம்பட்டு – வெளிப்பட்டு, விள்ளப்பட்டு என்பது எதுகை நோக்கி விளப்பட்டு ஆகி அது மெலிந்து விளம்பட்டு என நின்றது. விளம் – அகந்தை. செருக்கொழிய என்றுமாம்.

Brahama seated on the rich and well blossomed lotus and Vishnu, quarrelled with each other as to who is superior to the other. They came to a settlement by which they took the form of a boar and swan to reach out to the holy Feet and Head of Lord Civan. They both failed in their attempt to know the growing column of Fire before them that was Lord Civan. When they stood heart-broken Lord Civan graced them with a darshan of His form that manifested in the middle of that column of fire. This Lord Civan's shrine is in Viyaloor, which is spacious and well watered.

தடுக்காலுடன் மறைப்பாரவர் தவர்சீவரமூடிப்
பிடக்கேயுரை செய்வாரொடு பேணார்நமர்பெரியோர்
கடற்சேர்தரு விடமுண்டமு தமரர்க்கருள்செய்த
விடைச்சேர்தரு கொடியானிடம் விரிநீர்வியலூரே. 10

தடுக்கால் உடல் மறைப்பார்அவர், தவர் சீவரம் மூடிப்
பிடக்கே உரை செய்வாரொடு, பேணார் நமர்பெரியோர்;
கடல் சேர்தரு விடம் உண்டு அமுது அமரர்க்கு அருள் செய்த
விடை சேர்தரு கொடியான் இடம் - விரிநீர் வியலூரே.

taTukkAl uTal maRaippAr avar, tavar cIvaram mUTip
piTakkE urai ceyvAroTu, pENAr namar periyOr;
kaTal cErtaru viTam uNTu amutu amararkku aruL ceyta
viTai cErtaru koTiyAn2 iTam--viri nIr viyalUrE.

**பொருள்:** ஓலைப் பாயால் உடலை மறைப்பவராகிய சமண முனிவர்களுடனும், பொன்னிற ஆடையால் உடலை மூடிப் பிடகம் என்னும் நூலைத் தம் மத வேதமாக உரைக்கும் புத்த மதத் தலைவர்களுடனும் நம் பெரியோர் நட்புக் கொள்ளார். கடலில் தோன்றிய நஞ்சைத் தான் உண்டு, அமுதை அமரர்க்களித்தருளிய விடைக்கொடியை உடைய சிவபிரானது இடம் நீர்வளம் மிக்க வியலூராகும். அதனைச் சென்று வழிபடுமின்.

**குறிப்புரை:** தடுக்கு – ஓலைப்பாய். சீவரம் – பொன் நிற ஆடை. பிடக்கு – பிடகம் என்னும் புத்த நூல். நமர் பெரியோர் – நம்மவர்களாகிய பெரியோர். கடல் – பாற்கடல். விடமுண்டு அமுது அமரர்க்கு அருள் செய்த – ஆலகால விடத்தைத் தாம் அருந்தி, இனிய அமுதத்தைத் தேவர்க்கு அளித்த கருணையைக் காட்டியவாறு.

The Jains veil their bodies with woven mats; the Buddhist monks cover their body with brown-red cloth and cite portions from their Pitakas as their Vedas; Our great Ones ignore them. Behold Viyaloor, spacious and well-watered, is the place of our Lord Civan whose flag sports the Bull and who, of Yore, quaffed the oceanic venom and gave the ambrosia to the celestial ones and graced them.

**Note:** Pitakas: They are three in numbers; (i) Sutra Pitaka; (ii) Vinaya Pitaka; (iii) Abidamma Pitaka. These constitute the Buddhist cannon.

விளங்கும்பிறை சடைமேலுடை விகிர்தன்வியலூரைத்
தளங்கொண்டதொர் புகலித்தகு தமிழ்ஞானசம்பந்தன்
துளங்கிற்றமிழ் பரவித்தொழு மடியாரவரென்றும்
விளங்கும்புக ழதனோடுயர் விண்ணும்முடையாரே. 11

விளங்கும் பிறை சடைமேல் உடை விகிர்தன் வியலூரை,
தளம் கொண்டது ஓர் புகலித் தகு தமிழ் ஞானசம்பந்தன்
துளங்கு இல் - தமிழ் பரவித் தொழும் அடியார் அவர், என்றும்
விளங்கும் புகழ் அதனோடு, உயர்விண்ணும்(ம்) உடையாரே.

viLagkum piRai caTai mEl uTai vikirtan2 viyalUrai,
taLam koNTatu or pukalit taku tamiz njAn2acampantan2
tuLagku il--tamiz paravit tozum aTiyAr avar, en2Rum
viLagkum pukaz atan2OTu, uyar viNNum(m) uTaiyArE.

**பொருள்:** விளங்கும் பிறையைச் சடைமேல் உடைய விகிர்தனாய சிவபிரானது வியலூரை, இடமகன்ற ஊராகிய புகலியில் தோன்றிய தக்க தமிழ் ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய துளக்கமில்லாத இத்தமிழ் மாலையைப் பாடிப் பரவித் தொழும் அடியவர், எக்காலத்தும் விளங்கும் புகழோடு உயரிய விண்ணுலகையும் தமதாக உடையவர் ஆவர்.

***குறிப்புரை:*** விகிர்தன் – வேறுபாடு உடையவன். தான் ஒருவனாய் இருந்தே பலவேறு பொருள்களுடன் பலவேறு உருவுடையவனாய் வேறுபட்டுத் தோன்றுபவன். விகிர்தம் – வேறுபாடு. தளம் – இடம். துளங்குஇல் தமிழ் – நடுக்கமில்லாத தமிழ்.

Gnaana-Sambandan of spacious Pukali is adept in Tamil. He hath sung these hymns on the "Vikirthar" Lord Civan who wears a crescent in His matted crest and abides in Viyaloor. Droopless are his Tamil verses; devotees that sing these Tamil verses and adore Lord Civa will get poised in glory and eventually reach the Heavenly abode.

**Note:** In the concluding verse, the saintly youth describes himself as Tamizh Gnaana-Sambandan. He does so in many other hymns as well, highlighting the need to appeal to the masses, using delightful metrical notes.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*13ஆம் பதிகம் முற்றிற்று*
**End of 13th Hymn**

உ
சிவமயம்

# 14. திருக் கொடுங் குன்றம்

## திருத்தலவரலாறு:

திருக்கொடுங்குன்றம் என்ற திருத்தலமானது பாண்டிய நாட்டுத் தலம். இது பிரான்மலை என இக்காலத்து வழங்குகின்றது. மதுரை, மேலூர் சிங்கம்புணரியிலிருந்து பேருந்துகளில் செல்லலாம். திருக்கோயில் அடிவாரத்தில் உள்ளது. மகோதர மகரிஷியும், நாகராஜனும் வழிபட்ட தலம். அருணகிரி நாதர் திருப்புகழ் பெற்ற சுப்பிரமணியத் தலமாகும். மலை மேல் வைரவர் சந்நிதி மிக விஷேசம். சுவாமி சந்நிதியில் திருக்கல்யாணக் கோலம் சிறப்பானது. தேவசபா மண்டபம் என்ற ஒரு மண்டபம் இருக்கின்றது. இறைவன் பெயர் கொடுங்குன்றீசர். தேவியார் குயிலமுதநாயகி. தேவாரம் 'தனிற்பொலி மொழியாள்' எனக் குறிப்பிடுகின்றது. இத்தலம் குன்றக்குடி திருவண்ணாமலை ஆதீன அருளாட்சியில் உள்ளது.

## கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றியனவாக இருபத்தொரு கல்வெட்டுக்கள் அரசியலாரால் கி.பி. 1903ஆம் ஆண்டில் படியெடுக்கப் பெற்றுள்ளன. அவற்றுள் எட்டுக் கல்வெட்டுக்கள் ஆராய்ந்து முடிவு கட்டப்பெற்றன. ஏனையவை அறியப் பெறாதன. நான்கு கல்வெட்டுக்கள் குலசேகர பாண்டியனுடைய ஆட்சி 10, 13ஆம் ஆண்டுகளில் நிகழ்ந்தவை. இவற்றை இங்ஙனம் வரையறுத்து எழுதியவர் ஸெவல் பாதிரியார். இத்தலத்தில் சுந்தர பாண்டியன் மண்டபம் (இது கருப்பக்கிருக வாயிலில் உள்ளது). ஆறுகால் மண்டபம், லக்ஷ்மி மண்டபம் முதலிய மண்டபங்களும், விசுவநாதர் கோயில், சுப்பிரமணிய சுவாமி கோயில் முதலியனவும் கோயிலுக்குள் இருக்கின்றன. பிரான்மலைக் கிராமத்தில் ஸ்ரீ சொக்கநாதர் கோயில் உள்ளது. இறைவன் மங்கைநாதர் எனவும், கொடுங்குன்றமுடைய நாயனார் எனவும், நல்ல மங்கை பாகர் எனவும், குன்றாண்ட நாயனார் எனவும் குறிப்பிடப் பெறுகின்றார்.

பாண்டிய மன்னர்களில் முதலாம் சுந்தரபாண்டியன், இரண்டாம் சுந்தரபாண்டியன், பராக்கிரம பாண்டியன், குலசேகர பாண்டியன், வீரபாண்டியன் இவர்கள் விளக்குக்காகப் பசுக்களும், பொன்னும், சேவார்த்திகட்கு உணவிற்கும், விளக்குத் தண்டு செய்தற்குமாகப் பொன்னும் நிலமும் அளித்த செய்திகளை அறிவிக்கின்றன. பல கல்வெட்டுக்கள் கி.பி.1251 – 1264க்குள் ஆண்ட கோனேரின்மைகண்டான் காலத்தில் துவராபதி வேளார், பிரபாவ புரந்தரன்

ஆகிய இருவரும் நிலம் அளித்தனர். இம்மடி நரசிங்கராயர் காலத்தில் பிரான்மலைச் சீமை என்றும், திருமலை நாட்டுப் பகுதியான பிரான்மலை என்றும் குறிக்கப் பெறுகின்றது. திப்பரசரையன் நன்மைக்காகக் கேரளசிங்க வளநாட்டு இப்புலி நாயகர் நிலம் அளித்தார். இங்கு ஒரு வியாபாரிகள் சங்கம் இருந்ததாகவும் கல்வெட்டு கூறுகிறது.

1924ஆம் ஆண்டில் படியெடுக்கப் பெற்ற கல்வெட்டுக்கள் 16. அவற்றுள் ஐந்து, பாண்டியர்கள் காலத்தன. ஏனையவை விசய நகர அரசர்கள் காலத்தன. சடாவர்மன் வீரபாண்டியன் ஆட்சி 9ஆம் ஆண்டில், திருஞானம் பெற்ற பிள்ளையார் படிமத்தை எழுந்தருளவித்துக் கேரளசிங்க வளநாட்டுக் குலசேகரன் பட்டினத்து அருவியூரானான கொடுங்குன்றமுடையான் ஒருவன் பூசைக்கு நிபந்தமும் அளித்தான். குலசேகர பாண்டியன் காலத்தில் கீழவேம்பு நாட்டு இராசவல்லிபுரத்துக் கொன்றைசேர் முடியானும், திருநெல்வேலி உடையானும் விளக்குக்கு ஆடுகள் அளித்தனர். கண்ண மங்கலமான திருவெங்கா உடைய நல்லூர், அமோக மங்கலமான முதலி நாயக நல்லூர் உடையான் இருவரும் அர்த்தயாம பூசைக்கு நிலம் அளித்தனர். அந்தப் பூசைக்குத் தாழ்வு செய்யாதான் சந்தியென்று பெயர். காரைக்குடியான் ஒருவன் மங்கை நாயகர் வசந்த உற்சவத்திற்காக வானராய நல்லூரை இறையிலி செய்து அளித்தான். விஜயநகர அரசர்கள் வேதபாராயணத்திற்காகவும், உற்சவத்திற்காகவும் கானூர் முதலிய இடங்களை அளித்தனர்.

### பதிக வரலாறு:

பாண்டிய நாடு செல்லத் திருவுளம் பற்றிய ஆளுடைய பிள்ளையார், நதிகள் பலவற்றையும், காடுகள் பலவற்றையும் கடந்து, திருக்கொடுங் குன்றத்தை அடைந்தார்கள். அங்கு எழுந்தருளியுள்ள கொழும் பவளச் செழுங்குன்றை வணங்கி 'வானிற் பொலி' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 14. THIRU-K-KODUNG-KUNDRAM

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-k-kodung-kundram is in the Paandiya Naadu. It is known now as Piraanmalai. It can be reached by bus from Madhurai, Meloor, Singampunari etc. The temple is at the foot of the hill. Mahodhara Maharishi and Naagaraajan offered worship at this sacred place. The Subbiramania Temple is among

those sung by Arunagirinathar. The Vairavar shrine at the top of the hill is of special importance. At the shrine for the Lord, the wedding mode of attire is of especial interest. A pavilion named Devasabaamandapam is in this temple. Name of the God is Kodungkunreesar. His Consort is Kuyilamudha Naayaki. Thevaaram refers to her as 'Thenir Poli Mozhiyaal'. This temple is under the spiritual administration of Kunrakudi Thiruvannaamalai Aadheenam.

**Stone Inscriptions**

Twenty-one inscriptions about this temple have been copied by government epigraphists in 1903. Of these eight could be studied thoroughly and four remain obscure. Four inscriptions pertain to the 10th and 13th regnal years of Kulasekara Paandiyan. Father Sewel has clearly written about them. Inside the temple there are mandapams such as Sundhara Paandiyan Mandapam (at the entrance to the sanctum), six pillared Mandapam, Lakshmi Mandapam, etc., and shrines such as Visuvanaathar Shrine and Subbiramania Suvaami Shrine etc. There is a temple for Sree Chokkanaathar in the village of Piraanmalai. The God is referred to as Mangainaathar, Kodungkunramudaiya Naayanaar, Nallamangaipaakar and Kunraandanaayanaar.

The inscriptions reveal that among the Paandiayan kings, Sundhara Paandiyan I, Sundhara Paandiyan II, Paraakrama Paandiyan, Kulasekara Paandiyan and Veera Paandiyan had gifted cows and gold for lamp lighting, and lands and gold for feeding temple devotees and making a lamp stand. Many inscriptions pertain to the gift of land by Thuvaraapadhi Velaar and Pirabaavapurandharan during the reign of Konerinmaikandaan, who ruled between 1251 and 1264 CE. This place is referred to as Piraanmalaich Cheemai and as Piraanmalai, a part of Thirumalai Naadu in the reign of Immadi Narasinga Raayar. Ippuli Naayakar of Kerala Singa Valanaadu gave land for the benefit of Thipparasaraiyan. An inscription says that there was a guild of merchants here.

Sixteen inscriptions were copied in 1924. Among these, five belong to Paandiyan times. The rest belong to the period of Vijayanagar kings. During the 9th regnal year of

Sataavarman Veerapaandiyan, one Kodungkunramudaiyaan of Aruviyoor, of the Kulasekaran Pattinam in the Keralasinga Valanaadu installed the image of Thirujnaanam Perra Pillaiyaar and made endowments for conducting the worship services. Konraisermudiyaan of Raasavallipuram in Keezhvembu Naadu and Thirunelveli Udaiyaan gifted sheep for lamps during the reign of Kulasekara Paandiyan. Two persons, one from Thiruvengaa Udaiya Nallur of Kannamangalam, and the other from Mudhali Naayaka Nallur of Amogamangalam, gave land for the performance of the 'ardhdhayaama' worship service. This service is named 'Thaazhvu Seiyaadhaan Sandhi'. A person belonging to Kaaraikkudi gifted Vaanaraaya Nallur, after making it tax-free, for the celebration of the Spring festival for Mangainaayakar. Vijayanagar kings gave such places as Kaanoor for the recital of Vedhas and for celebrating festivals.

### INTRODUCTION TO THE HYMN

On his way to the Paandiya country, crossing rivers and jungles, the saintly youth arrived at Kodung-Kundram. It was from here he sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 14. திருக் கொடுங் குன்றம்

## 14. THIRU-K-KODUNG-KUNDRAM

பண் : நட்டபாடை
ராகம் : கம்பீரநாட்டை

*Pann: Natta Paadai*
*Raagam : Kambeera Naattai*

வானிற்பொலி வெய்தும்மழை மேகங்கிழித்தோடிக்
கூனற்பிறை சேருங்குளிர் சாரற்கொடுங்குன்றம்
ஆனிற்பொலி யைந்தும்அமர்ந் தாடியுலகேத்தத்
தேனிற்பொலி மொழியாளோடு மேயான்றிருநகரே. 1

வானில் பொலிவு எய்தும் மழைமேகம் கிழித்து ஓடிக்,
கூனல்பிறை சேரும் குளிர்சாரல் கொடுங்குன்றம் -
ஆனில் பொலிஐந்தும்அமர்ந்து ஆடி, உலகு ஏத்தத்,
தேனில் பொலி மொழியாளோடு மேயான் திரு நகரே.

vAn2il polivu eytum mazai mEkam kizittu OTi,
kUn2al piRai cErum kuLir cAral koTugkun2Ram--
An2il poli aintum amarntu ATi, ulaku Etta,
tEn2in2 poli moziyALoTum mEyAn2 tiru nAkarE.

**பொருள்:** வளைந்த பிறைச் சந்திரன் வானின்கண் விளங்கும் மழை மேகங்களைக் கிழித்து ஓடிச் சென்று சேரும் குளிர்ந்த சாரலை உடையது கொடுங்குன்றம். இது, பசுவிடம் விளங்கும், பால், நெய், தயிர், கோமயம், கோசலம் ஆகிய ஐந்து பொருள்களையும் மகிழ்ந்து ஆடி (அபிஷேகித்துக் கொண்டு) உலகம் போற்றத் தேன் போலும் மொழியினைப் பேசும் உமையம்மையோடு சிவபிரான் மேவிய திருத்தலமாகும்.

**குறிப்புரை:** கூனல்பிறை மேகங்கிழித்து ஓடிச்சேருங் கொடுங்குன்றம் எனக் கூட்டுக. மழை மேகம் – சூல்முற்றி மழை பொழியும் மேகம். தேனில் பொலி மொழியாள் – குயில் அமுதநாயகி. இளம் பிறை கனத்த மேகப்படலத்தைக் கிழித்துச் சென்று சேர்தற்கிடமாகிய குளிர்சாரல் குன்று என்றமையால், ஆன்மாக்கள் அநாதியான ஆணவ மலப் படலத்தைக் கிழித்துச் சென்று எய்தி, திருவடி நிழலாகிய தண்ணிய இடத்தைச் சாரலாம் என்பது குறித்தவாறு.

The curved crescent moon that shines in the sky runs apparently tearing through the clouds and reaches the cool slopes of Kodung-Kundram. Lord Civan who is anointed in the five products of cow i.e., milk, curd (yogurt), ghee (melted butter), cow dung and urine happily abides with His consort Umaa Devi who is hailed by all the world and whose voice is as sweet as honey.

**Note:** Kodung-Kundram, like Kaalatthi, Eengoimalai and Thiru-Vidai-ch-churam, was surrounded by forests during the days of St. Sambandar. Wild animals roamed about here freely. Kodung-Kundram is now known as Piraan Malai. Gnaana-Sambandar describes the goddess as Thenin-Poli-Mazhiyaal. She is also known as Kuil-Amutha-Naayaki. In Sanskrit, her name is 'Amruteswari'.

மயில்புல்குதன் பெடையோடுட னாடும்வளர்சாரல்
குயிலின்னிசை பாடுங்குளிர் சோலைக்கொடுங்குன்றம்
அயில்வேன்மலி நெடுவெஞ்சுட ரனலேந்திநின்றாடி
எயில்முன்பட வெய்தானவன் மேயவ்வெழினகரே. 2

மயில் புல்கு தன் பெடையோடு உடன் ஆடும் வளர் சாரல்,
குயில் இன்(ன்) இசை பாடும் குளிர் சோலைக், கொடுங்குன்றம் -
அயில்வேல் மலி நெடு வெஞ்சுடர் அனல் ஏந்தி நின்று ஆடி,
எயில் முன்பட எய்தான் அவன் மேய(வ்) எழில் நகரே.

mayil pulku taN peTaiyOTu uTan2 ATum vaLar cAral,
kuyil in2(n2)icai pATum kuLir cOlai, koTugkun2Ram--
ayil vEl mali neTu venjcuTar an2al Enti nin2Ru ATi,
eyil mun2paTa eytAn2 avan2 mEya(v) ezil nAkarE.

**பொருள்:** கொடுங்குன்றத்தில் உள் விரிந்த மலைகளில் ஆண் மயில்கள், தண்ணிய தம் பெடைகளைத் தழுவித் தோகை விரித்தாடுகின்றன. அங்குள்ள குளிர்ந்த சோலைகளில் குயில்கள் இன்னிசை பாடுகின்றன. இது கூரிய வேல்போலும் நெடிய வெம்மையான ஒளியோடு கூடிய அனலைக் கையில் ஏந்தி நின்று, ஆடுபவனும் முப்புரங்கள்மீது கணை தொடுத்து அழித்தவனுமாகிய சிவபெருமான் எழுந்தருளிய திருத்தலமாகும்.

**குறிப்புரை:** புல்கு - தழுவிய, தன்பெடை என்றது மயிலுக்குள்ள கற்பின் சிறப்புக் கருதி. குயில் இன்னிசைபாடும் சாரல், மயில் தன் பெடையோடு ஆடும் சாரல் என்பதில், தன்வசமற்றுப் பாடியும் ஆடியும் செல்லும் அன்பர்க்குக் குளிருஞ்சாரல் கொடுங்குன்றம் என்ற கருத்துத் தொனித்தல் காண்க.

In its cool and vast slopes of Kodung-kundram, the peacock hugs and dances with its mate; in its cool gardens Kuyil birds sing sweet music. Lord Civan is entempled in this town and in the days of yore, He destroyed the three citadels holding in His hands the fiercely - raging fire and a sharp spear too, and danced His number.

**Note:** Even today, the town is the habitat of peacocks and peahens.

மிளிரும்மணி பைம்பொன்னொடு விரைமாமலருந்திக்
குளிரும்புனல் பாயுங்குளிர் சாரற்கொடுங்குன்றம்
கிளர்கங்கையொ டிளவெண்மதி கெழுவுஞ்சடைதன்மேல்
வளர்கொன்றையு மதமத்தமும் வைத்தான்வளநகரே. 3

*மிளிரும் மணி பைம்பொன்னொடு விரைமாமலர் உந்திக்,*
*குளிரும் புனல் பாயும் குளிர்சாரல் கொடுங்குன்றம் -*
*கிளர்கங்கையொடு இளவெண்மதி கெழுவும் சடைதன்மேல்*
*வளர் கொன்றையும் மதமத்தமும் வைத்தான் வள நகரே.*

miLirum maNi paim pon2n2oTu virai mAmalar unti,
kuLirum pun2al pAyum kuLir cAral koTugkun2Ram--
kiLar kagkaiyoTu iLa veNmati kezuvum caTai tan2 mEl
vaLar kon2Raiyum mata mattamum vaittAn2 vaLa nAkarE.

**பொருள்:** அருவிகள், ஒளிவீசும் மணிகளையும், பசும்பொன், மணமுள்ள மலர்கள் ஆகியவற்றைத் தள்ளிக் கொண்டு வந்து நீரைச் சொரியும்படியான மலைச்சாரலை உடைய கொடுங்குன்றம், சடைமுடியில் பொங்கி எழும் கங்கை நதியையும், வெண்மையான பிறைச்சந்திரனையும், மணம் கமழும் கொன்றை மலரையும், மதத்தை ஊட்டும் ஊமத்தை மலரையும் அணிந்துள்ள சிவபெருமான் எழுந்தருளி உள்ள வளமையான நகரமாகும்.

***குறிப்புரை:*** கிளர்கங்கை – பொங்கும் கங்காநதி. மதமத்தம் – மதத்தையூட்டும் ஊமத்தம்பூ.

In the cool slopes of Kodung-Kundram, the cataracts descend down and flow; in its cool waters, roll dazzling gems, gold and fragrant flowers. In this Kodung-kundram Lord Civan abides. He sports on His matted hair the roaring Ganga, the young silvery moon and flowers of kondrai and Oo-math-tham flower, (Datura) that causes madness.

**Note:** The cataracts spoken of in this verse, are things of the past.

பருமாமத கரியோடரி யிழியும்விரிசாரல்
குருமாமணி பொன்னோடிழி யருவிக்கொடுங்குன்றம்
பொருமாவெயில் வரைவிற்றரு கணையிற்பொடிசெய்த
பெருமானவ னுமையாளொடும் மேவும்பெருநகரே. 4

*பரு மா மதகரியோடு அரி இழியும் விரிசாரல்,*
*குரு மா மணி பொன்னோடு இழி அருவிக் கொடுங்குன்றம் -*
*பொரு மா எயில் வரைவில் - தரு கணையில் பொடிசெய்த*
*பெருமான் அவன் உமையாளொடும் மேவும் பெரு நகரே.*

paru mA matakariyOTu ari iziyum viricAral,
kuru mA maNi pon2n2OTu izi aruvik koTugkun2Ram--
poru mA eyil varaivil--taru kaNaiyin2 poTi ceyta
perumAn2 avan2 umaiyALoTum mEvum peru nAkarE.

**பொருள்:** கொடுங்குன்றத்தில் பெரிய மலைச் சாரல்கள் உள்ளன. அங்கு பெரிய கரிய மத யானைகளும், சிங்கங்களும், இரை தேடவும், நீர் பருகவும் இறங்கி வருகின்றன. அங்கு, பெரிய மணிகளைப் பொன்னோடு சொரியும் அருவிகள் உள்ளன. இது, எதிர்த்துப் பொர வந்த பெரிய முப்புரக் கோட்டைகளை, மலையாகிய வில்லில் தொடுத்த கணையால் பொடியாக்கின சிவபெருமான் உமையம்மையோடு எழுந்தருளிய தலம் ஆகும்.

**குறிப்புரை:** கரி – யானை. அரி – சிங்கம். இழியும் – இறங்குகின்ற சாரல். எனவே, பகை கொண்ட வலிவுள்ள யானையும் சிங்கமுமாகிய இவ்விரண்டின் வலிமை யடங்க, அருவி கிழித்து வருவது போல, கொடுங்குன்றச் சாரலை அடையின் தம்முள் மாறுபட்ட ஆணவக் களிறும், ஐம்பொறிகளாகிய அரிகளும் தம் வலிமையற்றுக் கருணை யருவியின் வழியே இழுக்கப்பட்டு அமிழ்த்தப்படும் என்பது அறிவித்தவாறாம்.

In the extensive slopes of Kodung-Kundram roam huge, dark and musty elephants and lions in search of food and water. Cataracts flow down with gems and gold, great and bright. Behold this great town of Him who in the days of yore, with His mountain-bow and dart, pulverized the three great, hostile citadels. It is here He abides with Goddess Uma.

மேகத்திடி குரல்வந்தெழ வெருவிவ்வரையிழியும்
கூகைக்குல மோடித்திரி சாரற்கொடுங்குன்றம்
நாகத்தொடு மிளவெண்பிறை சூடிந்நலமங்கை
பாகத்தவ னிமையோர்தொழ மேவும்பழநகரே. 5

மேகத்து இடி குரல் வந்து எழ, வெருவி(வ்) வரை இழியும்
கூகைக்குலம் ஓடித் திரி சாரல் கொடுங்குன்றம் -
நாகத்தொடும் இளவெண்பிறை சூடி(ந்) நல மங்கை
பாகத்தவன் இமையோர் தொழ, மேவும் பழ நகரே.

mEkattu iTi kural vantu eza, veruvi(v) varai iziyum
kUkaikkulam OTit tiri cAral koTugkun2Ram--
nAkattoTum iLa veNpiRai cUTi(n) nala magkai
pAkattavan2 imaiyOr toza mEvum paza nAkarE.

**பொருள்:** கொடுங்குன்றத்தில் பெரிய மலைச் சாரல்கள் உள்ளன. அங்கு, மேகத்திடம் தோன்றும் இடியின் ஓசையைக் கேட்டு, கோட்டான் என்னும் பறவை இனங்கள் அஞ்சி மலையினின்றும் இறங்கி வந்து பறந்து திரிகின்றன. சிவபெருமான் தனது முடியில் நாகத்தையும், இள வெண் பிறையையும் சூடி உள்ளான். அழகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டுள்ளான். தேவர்கள் தன்னை வணங்குமாறு பழமையான கொடுங்குன்றத்தில் எழுந்தருளி உள்ளான்.

**குறிப்புரை:** கூகைக்குலம் – கோட்டான்களின் கூட்டம். கூகைகள் இருள் வாழ்க்கை உடையன. அவைகள் மேக இடிக்குரல் கேட்டு அஞ்சி மலையை விட்டிறங்கிப் புகலிடம் காணாது திரிகின்றன என்றது. அஞ்ஞானமாகிய வாழ்க்கையையுடைய ஆன்மாக்கள் கருணை மழை பொழியும் இறைவனது மறக்கருணை காட்டும் மொழியைக் கேட்டு மலையை அணுக முடியாதே அலைவர் என்று குறிப்பித்தவாறு. நல மங்கை – அழகிய உமாதேவி.

When clouds rumble rock horned owls get scared and fly away helter-skelter in the slopes of Kodung-Kundram. Lord Civan who sports on the crest the serpent and the young moon and who is concorporate with His consort beautiful Umaa abides in this hoary town Kodung-kundram enabling Devaas to worship Him.

**Note:** Owls were not regarded as birds of ill-omen in the past. Their hooting were held auspicious. In Bengal, this bird is hailed as Lakshmi's Vahana. Its cry is a harbinger of fortune.

கைம்மாமத கரியின்னின மிடியின்குரலதிரக்
கொய்ம்மாமலர்ச் சோலைபுக மண்டுங்கொடுங்குன்றம்
அம்மானென வுள்கித்தொழு வார்கட்கருள்செய்யும்
பெம்மானவ னிமையோர்தொழ மேவும்பெருநகரே. 6

கைம்மா மதகரியின்(ன்) இனம் இடியின் குரல் அதிரக்,
கொய்ம் மா மலர்ச்சோலை புக மண்டும் கொடுங்குன்றம் -
"அம்மான்!" என உள்கித் தொழுவார்கட்கு அருள் செய்யும்
பெம்மான் அவன், இமையோர் தொழ, மேவும் பெரு நகரே.

kaim mA mata kariyin2(n2) in2am iTiyin2 kural atira,
koym mA malarc cOlai puka maNTum koTugkun2Ram--
"ammAn2!" en2a uLkit tozuvArkaTku aruL ceyyum
pemmAn2 avan2, imaiyOr toza, mEvum peru nAkarE.

**பொருள்:** கொடுங்குன்றத்தில் கொய்யத்தக்க மண மலர்களைக் கொண்ட சோலைகள் உள்ளன. துதிக்கை உடைய கரிய மத யானைகளின் கூட்டம் இடியின் குரல் அதிரக் கேட்டு அஞ்சி இச்சோலைகளில் புகுந்து ஒளிந்து கொள்ள வருகின்றன. இவரே நம் தலைவர் என இடைவிடாது நினைந்து தொழும் அடியவர்கட்கு அருள் செய்யும் சிவபெருமான் விண்ணோர் தன்னைத் தொழ இக்கொடுங்குன்றத்தில் வீற்றிருந்து அருள் வழங்குகின்றான்.

**குறிப்புரை:** கைம்மா – யானை. வெளிப்படை மொழி. யானை, இடியோசையைக் கேட்டுச் சோலைகளிற் புகுகின்றன. இது நெறி நில்லார் தீயோசை கேட்டு அஞ்சிஓடித் தாணிழல் செல்லும் அன்பரை நினைவூட்டும் நிகழ்ச்சி. அம்மான் – தலைவன். உள்கி – தியானித்து.

When it thunders, the herd of huge and trunked tuskers barge into the gardens rich in great and large fragrant flowers, which are easy to pluck. Such is Kodung-Kundram. The devotees who always worship without any break, chanting that Lord Civan is their only god-head and none else, get His grace. This Lord Civan abides in the big Kodung-kundram enabling the Devaas to worship Him.

**Note:** Ammaan: It means Chief.

மரவத்தொடு மணமாதவி மௌவல்லதுவிண்ட
குரவத்தொடு விரவும்பொழில் சூழ்தண்கொடுங்குன்றம்
அரவத்தொடு மிளவெண்பிறை விரவும்மலர்க்கொன்றை
நிரவச்சடை முடிமேலுடன் வைத்தானெடுநகரே. 7

மரவத்தொடு மணமாதவி மௌவல் அது விண்ட
குரவத்தொடு விரவும் பொழில் சூழ்தண் கொடுங்குன்றம் -
அரவத்தொடும் இளவெண்பிறை விரவும் மலர்க்கொன்றை
நிரவச் சடைமுடிமேல் உடன்வைத்தான், நெடு நகரே.

maravattoTu maNamAtavi mauval atu viNTa
kuravattoTu viravum pozil cUz taN koTugkun2Ram--
aravattoTum iLa veNpiRai viravum malarkkon2Rai
niravac caTai muTi mEl uTan2 vaittAn2, neTu nAkarE.

**பொருள்:** கடம்பு, குருக்கத்தி, முல்லை ஆகியவற்றின் நாள் அரும்புகள் குரவ மலர்களோடு விண்டு மணம் விரவும் பொழில் சூழ்ந்த தண்ணிய கொடுங்குன்றம், அரவு, வெள்ளிய இளம்பிறை, மணம் கமழும் கொன்றை மலர் ஆகியவற்றை நிரம்பத் தன் முடிமேல் அணிந்துள்ள சிவபிரானது நெடு நகராகும்.

**குறிப்புரை:** மரவம் – கடம்பு. மாதவி – குருக்கத்தி. மௌவல் – முல்லை. நிரவ – நிரம்ப. ஒன்ற என்றுமாம்.

Cool Kodung-Kundram is girt with gardens rich in maravam, fragrant maatavi, mourval and burgeoning Kuravam blossoms. Lord Civan who wears abundant Kondrai flowers, a serpent and a young white moon, in His matted crest, abides in this cool Kodung-kundram.

**Note:** Maravam: Indian oak. Maatavi: Common delight of the woods. Mowval: Wild jasmine. Kuravam: Common bottle flower.

முட்டாமுது கரியின்னின முதுவேய்களைமுனிந்து
குட்டாச்சுனை யவைமண்டிநின் றாடுங்கொடுங்குன்றம்
ஒட்டாவரக் கன்றன்முடி யொருபஃதவையுடனே
பிட்டானவ னுமையாளொடு மேவும்பெருநகரே. 8

*முட்டா முது கரியின்(ன்) இனம் முது வேய்களை முனிந்து,*
*குட்டாச் சுனைஅவை மண்டி நின்று ஆடும் கொடுங்குன்றம் -*
*ஒட்டா அரக்கன் தன் முடி ஒருபஃது அவை உடனே*
*பிட்டான் அவன் உமையாளொடும் மேவும் பெரு நகரே.*

muTTA mutu kariyin2(n2) in2am mutu vEykaLai mun2intu,
kuTTAc cun2ai avai maNTi nin2Ru ATum koTugkun2Ram--
oTTA arakkan2 tan2 muTi orupaHtu avai uTan2E
piTTAn2 avan2 umaiyALoTum mEvum peru nAkarE.

**பொருள்:** யானைக் கூட்டங்கள் யாரும் தடுப்பார் இன்றி முதிய மூங்கில்களை உண்டு வெறுத்துப் பிறரால் அகழப்படாது இயற்கையிலேயே ஆழமாக உள்ள சுனைகளில் இறங்கி நின்று நீராடுகின்ற இடம் கொடுங்குன்றம். தன்னோடு மனம் பொருந்தாது கயிலை மலையை எடுத்த அரக்கனாகிய இராவணனின் முடியணிந்த பத்துத் தலைகளையும் அடர்த்து நசுக்கியவன் ஆகிய சிவபெருமான் உமையம்மையோடு மேவும் பெருநகர் ஆகும்.

**குறிப்புரை:** முட்டா – தடையில்லாத. முதுவேய்கள் – முதிர்ந்த மூங்கில்கள். யானைகள் மூங்கிலை உண்டு வெறுத்துப் பின் சுனைகளில் இறங்கி ஆடுகின்றன. குட்டாச்சுனை – தானே ஆழமான சுனை என்பதாம். குட்டம் – ஆழம். குட்டா – ஆழமாக்கப்படாத. ஒட்டா – பொருந்தாத. பிட்டான் – இரண்டாக ஒடித்தான்; நசுக்கினான்.

In Kodung-Kundram, herds of elephants without let or hindrance, break bamboo clusters, gobble them up and getting satiated, invade the deep and natural pools and bathe in them. Lord Civan abides in this great city with His Consort Umaa Devi. It is He, who in the days of yore crushed the ten crowned heads of the King of Sri Lanka.

அறையும்மரி குரலோசையை யஞ்சியடுமானை
குறையும்மன மாகிம்முழை வைகுங்கொடுங்குன்றம்
மறையும்மவை யுடையானென நெடியானெனவிவர்கள்
இறையும்மறி வொண்ணாதவன் மேயவ்வெழினகரே. 9

அறையும்(ம்) அரி குரல் ஓசையை அஞ்சி, அடும் ஆனை
குறையும் மனம் ஆகி(ம்), முழை வைகும் கொடுங்குன்றம் -
மறையும்(ம்) அவை உடையான் என, நெடியான் என, இவர்கள்
இறையும்(ம்) அறிவு ஒண்ணாதவன் மேய(வ்) எழில் நகரே.

aRaiyum(m) ari kural Ocaiyai anjci, aTum An2ai
kuRaiyum man2am Aki(m), muzai vaikum koTugkun2Ram--
maRaiyum(m) avai uTaiyAn2 en2a, neTiyAn2 en2a, ivarkaL
iRaiyum(m) aRivu oNNAtavan2 mEya(v) ezil nAkarE.

**பொருள்:** சிங்கத்தின் கர்ச்சனை ஓசையைக் கேட்டு வெருண்டு, கொல்லும் தன்மையினவாகிய யானைகள் மன எழுச்சி குன்றி மலையிடையே உள்ள குகைப் பகுதிகளில் மறைந்து வைகும் இடம் ஆகிய கொடுங்குன்றம் வேதங்களுக்கு உரியவனான நான்முகன், திருமால் ஆகிய இருவரும் சிறிதும் அறிய முடியாதவனாய் நின்ற சிவபிரான் மேவிய அழகிய நகரம்.

**குறிப்புரை:** அறையும் – முன்கால்களால் அறைந்து கொல்லும். அடும் ஆனை – கொல்லும் தன்மை வாய்ந்த மதயானை. குறையும் மனமாகி – வன்மை குறைந்த மனத்தை உடையனவாகி. முழை – குகை. மறையும் அவை யுடையான் – வேதங்களை யுடையவனாய பிரமன். நெடியான் – திருமால். இறையும் – சிறிதும்.

Kodung-Kundram is His place where the murderous tusker, hearing the roar of a lion, gets scared exhausted, and hides itself in a cave. Both Brahma - the Master of Vedas - and Vishnu, the tall one - were unable to recognise Lord Civan who appeared before them as an endless column of fire. It is in this beauteous city, He is entempled.

மத்தக்களி றாளிவ்வர வஞ்சிம்மலைதன்னைக்
குத்திப்பெரு முழைதன்னிடை வைகுங்கொடுங்குன்றம்
புத்தரொடு பொல்லாமனச் சமணர்புறங்கூறப்
பத்தர்க்கருள் செய்தானவன் மேயபழநகரே. 10

மத்தக்களிறு ஆளி(வ்) வர அஞ்சி(ம்), மலைதன்னைக்
குத்திப் பெரு முழை தன் இடை வைகும் கொடுங்குன்றம் -
புத்தரொடு பொல்லா மனச் சமணர் புறம்கூறப்,
பத்தர்க்கு அருள்செய்தான் அவன் மேய பழ நகரே.

mattakkaLiRu ALi(v) vara anjci(m), malai tan2n2aik
kuttip peru muzaitan2 iTai vaikum koTugkun2Ram--
puttaroTu pollA man2ac camaNar puRam kURa,
pattarkku aruL ceytAn2 avan2 mEya paza nAkarE.

**பொருள்:** மதம் பொருந்திய யானைகள் தம்மின் வலிய சிங்கம் வருதலைக் கண்டு அஞ்சி மலையைக் குத்திப் பெரிய குகையில் தங்கியிருக்கும் கொடுங்குன்றம் புத்தர்களும் பொல்லா மனமுடைய சமணர்களும், புறங்கூறத் தன் பக்தர்கட்கு அருள் செய்பவனாகிய சிவபிரான் மேவிய பழமையான நகராகும்.

**குறிப்புரை:** யானை ஆளிவர அஞ்சி, மலையைக் குத்திக் கொண்டு குகையில் தங்குகின்றது என்பதாம்.

Kodung-Kundram is the place where a musty tusker, scared at the (possible) advent of a lion punches a hill with its tusks and hide itself in the huge cavern thus created. Lord Civan abides at this hoary town and blesses His devotees, ignoring the back-biting of the Buddhists and the evil-minded samanars.

கூனற்பிறை சடைமேன்மிக வுடையான்கொடுங்குன்றைக்
கானற்கழு மலமாநகர் தலைவன்னலகவுணி
ஞானத்துயர் சம்பந்தன நலங்கொடமிழ்வல்லார்
ஊனத்தொடு துயர்தீர்ந்துல கேத்தும்மெழிலோரே. 11

கூனல்பிறை சடைமேல் மிக உடையான் கொடுங்குன்றைக்
கானல் கழுமலமா நகர்த் தலைவன்(ன்) - நல கவுணி,
ஞானத்து உயர் சம்பந்தன - நலம் கொள் தமிழ் வல்லார்,
ஊனத்தொடு துயர் தீர்ந்து, உலகு ஏத்தும் எழிலோரே.

kUn2al piRai caTaimEl mika uTaiyAn2 koTugkun2Raik
kAn2al kazumalamA nAkart talaivan2(n2)--nala kavuNi,
njAn2attu uyar campantan2a--nalam koL tamiz vallAr,
Un2attoTu tuyar tIrntu, ulaku Ettum ezilOrE.

**பொருள்:** வளைந்த பிறைச் சந்திரனைச் சடைமுடி மீது அழகு மிகுமாறு அணிந்துள்ள சிவபிரான் எழுந்தருளப் பெற்றது திருக்கொடுங்குன்றம் ஆகும். கடற்கரைச் சோலைகளால் சூழப்பட்டது கழுமல மாநகர். இவ்வூர்த் தலைவனும், நல்ல கவுணியர் கோத்திரத்தில் தோன்றியவனுமாகிய ஞானசம்பந்தன் திருக்கொடுங்குன்றத்து இறைவனைப் பாடிய தமிழ் மாலைகளை ஓதி வழிபட வல்லவர் தம்மிடமுள்ள குறைபாடுகள் நீங்கித் துன்பங்கள் அகன்று உலகம் போற்றும் புகழ் உடையோர் ஆவர்.

**குறிப்புரை:** கானல் – கடற்கரைச் சோலை. தலைவன் நல்ல கவுணி – தலைவனாகிய நல்ல கவுண்டின்ய கோத்திரத்துண்டானவன். ஊனம் – குறைபாடு. எழில் – எழுச்சி.

Sambandhan, the Chief of Kazhumalam which is girt with littoral gardens, the one of lofty gnosis - hath sung these Tamil verses on the lord of Kodung-Kundram who wears on His matted crest the curved and glorious crescent. They who are well-versed in these Tamil psalms will be rid of their flaws and misery; and get beatific, hailed by all the world.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*14ஆம் பதிகம் முற்றிற்று*
End of 14th Hymn

மத்தக்களி றாளிவ்வர வஞ்சிம்மலைதன்னைக்
குத்திப்பெரு முழைதன்னிடை வைகுங்கொடுங்குன்றம்
புத்தரொடு பொல்லாமனச் சமணர்புறங்கூறப்
பத்தர்க்கருள் செய்தானவன் மேயபழநகரே. 10

மத்தக்களிறு ஆளி(வ்) வர அஞ்சி(ம்), மலைதன்னைக்
குத்திப் பெரு முழை தன் இடை வைகும் கொடுங்குன்றம் -
புத்தரொடு பொல்லா மனச் சமணர் புறம்கூறப்,
பத்தர்க்கு அருள்செய்தான் அவன் மேய பழ நகரே.

mattakkaLiRu ALi(v) vara anjci(m), malai tan2n2aik
kuttip peru muzaitan2 iTai vaikum koTugkun2Ram--
puttaroTu pollA man2ac camaNar puRam kURa,
pattarkku aruL ceytAn2 avan2 mEya paza nAkarE.

**பொருள்:** மதம் பொருந்திய யானைகள் தம்மின் வலிய சிங்கம் வருதலைக் கண்டு அஞ்சி மலையைக் குத்திப் பெரிய குகையில் தங்கியிருக்கும் கொடுங்குன்றம் புத்தர்களும் பொல்லா மனமுடைய சமணர்களும், புறங்கூறத் தன் பக்தர்கட்கு அருள் செய்பவனாகிய சிவபிரான் மேவிய பழமையான நகராகும்.

**குறிப்புரை:** யானை ஆளிவர அஞ்சி, மலையைக் குத்திக் கொண்டு குகையில் தங்குகின்றது என்பதாம்.

Kodung-Kundram is the place where a musty tusker, scared at the (possible) advent of a lion punches a hill with its tusks and hide itself in the huge cavern thus created. Lord Civan abides at this hoary town and blesses His devotees, ignoring the back-biting of the Buddhists and the evil-minded samanars.

கூனற்பிறை சடைமேன்மிக வுடையான்கொடுங்குன்றைக்
கானற்கழு மலமாநகர் தலைவன்னலகவுணி
ஞானத்துயர் சம்பந்தன நலங்கொடமிழ்வல்லார்
ஊனத்தொடு துயர்தீர்ந்துல கேத்தும்மெழிலோரே. 11

கூனல்பிறை சடைமேல் மிக உடையான் கொடுங்குன்றைக்
கானல் கழுமலமா நகர்த் தலைவன்(ன்) - நல கவுணி,
ஞானத்து உயர் சம்பந்தன - நலம் கொள் தமிழ் வல்லார்,
ஊனத்தொடு துயர் தீர்ந்து, உலகு ஏத்தும் எழிலோரே.

kUn2al piRai caTaimEl mika uTaiyAn2 koTugkun2Raik
kAn2al kazumalamA nAkart talaivan2(n2)--nala kavuNi,
njAn2attu uyar campantan2a--nalam koL tamiz vallAr,
Un2attoTu tuyar tIrntu, ulaku Ettum ezilOrE.

**பொருள்:** வளைந்த பிறைச் சந்திரனைச் சடைமுடி மீது அழகு மிகுமாறு அணிந்துள்ள சிவபிரான் எழுந்தருளப் பெற்றது திருக்கொடுங்குன்றம் ஆகும். கடற்கரைச் சோலைகளால் சூழப்பட்டது கழுமல மாநகர். இவ்வூர்த் தலைவனும், நல்ல கவுணியர் கோத்திரத்தில் தோன்றியவனுமாகிய ஞானசம்பந்தன் திருக்கொடுங்குன்றத்து இறைவனைப் பாடிய தமிழ் மாலைகளை ஓதி வழிபட வல்லவர் தம்மிடமுள்ள குறைபாடுகள் நீங்கித் துன்பங்கள் அகன்று உலகம் போற்றும் புகழ் உடையோர் ஆவர்.

**குறிப்புரை:** கானல் – கடற்கரைச் சோலை. தலைவன் நல்ல கவுணி – தலைவனாகிய நல்ல கவுண்டின்ய கோத்திரத்துண்டானவன். ஊனம் – குறைபாடு. எழில் – எழுச்சி.

Sambandhan, the Chief of Kazhumalam which is girt with littoral gardens, the one of lofty gnosis - hath sung these Tamil verses on the lord of Kodung-Kundram who wears on His matted crest the curved and glorious crescent. They who are well-versed in these Tamil psalms will be rid of their flaws and misery; and get beatific, hailed by all the world.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*14ஆம் பதிகம் முற்றிற்று*
End of 14th Hymn

உ
சிவமயம்

# 15. திரு நெய்த்தானம்

## திருத்தலவரலாறு:

திருநெய்த்தானம் என்ற திருத்தலமானது சோழ நாட்டுத் தலம். தஞ்சையை அடுத்துள்ள திருவையாற்றிற்கு மேற்கே 1.5 கி.மீ. தூரத்தில் உள்ளது. திருவையாற்று சப்த ஸ்தான க்ஷேத்திரங்களில் ஏழாவது தலம். இங்கே கலைமகள் வழிபட்டுப் பேறு பெற்றாள். சுவாமி பெயர் நெய்யாடியப்பர். அம்மை பெயர் பாலாம்பிகை. இளமங்கையம்மை எனத் தேவாரம் குறிப்பிடுகின்றது. தீர்த்தம் காவிரி. கிழக்கு பார்த்த சந்நிதி. இப்போது தில்லை ஸ்தானம் என வழங்குகின்றது. வடமொழியில் கிருத ஸ்தானம் ஆயிற்று. இறைவற்குப் பசுநெய் அபிஷேகிப்பது வழக்கம்.

## கல்வெட்டு:

இத்தலத்தில் அரசியலார் படிஎடுத்த வண்ணம் 51 கல்வெட்டுக்கள் உள்ளன. அவற்றுள் இத்தலம் இராஜாதிராஜன் காலத்தில் இராஜராஜ வளநாட்டுப் பைங்கா நாட்டுத் திருநெய்த்தானம் எனக் குறிக்கப் பெறுகின்றது. இத்தலத்து முதலாம் பராந்தகன் முதலாக ஐந்து சோழ அரசர்களின் தானங்களைக் குறிக்கும் நிகழ்ச்சிகளும், நந்திவர்மன் தான நிகழ்ச்சிகளும் குறிக்கப் பெறுகின்றன. செம்பியன் ஈக்காட்டு வேளாளனான பரிசைக் கிழான் மறவன் நக்கன் என்பவன் 13 கழஞ்சு பொன்னைக் கோயில் விளக்கிற்காகக் கொடுத்தான். கூத்தன் அருள்மொழியான வானவன் பேரரையன் நிலத்தை 25 கழஞ்சு பொன்னுக்கு நங்கை வரகுண பெருமானார் வாங்கி விளக்கிற்காக வைத்தாள். சாமரகேசரி தெரிஞ்ச கைக்கோளர், விக்ரமசிங்க தெரிஞ்ச கைக்கோளர், இருவராலும் பைங்கா நாட்டுக் கீழப்பிலாறு கிராமத்தில் நிலம் அளிக்கப் பெற்றது. முற்கூறிய சாமரகேசரி தெரிஞ்ச கைக்கோளருள் ஒருவனான மல்லன் ஆரியனால் நிவந்தம் விடப்பெற்றது. கோயில் காரியத் தலைவனான காமக்கோட நல்லூர் ஆயனால் இரு பொன் பட்டங்கள் கடவுளுக்குக் கொடுக்கப் பெற்றன. சோழப் பெருமானடிகளுடைய காமக் கிழத்தியான நங்கை கூத்தப் பெருமானார் 30 கழஞ்சு பொன்னை விளக்குக்காக வைத்தார். அதனைத் திருநெய்த்தானச் சபையார் சுவாமிக்கு ஸ்நபன மண்டபங்கட்டப் பயன்படுத்தி விட்டனர். அதற்குப் பதிலாகக் கோயில் நிலங்கள் சிலவற்றை ஏற்பாடு செய்தனர். வளவர்கோன் பேரரையன் என்பவனும், செம்பியன் தமிழ்வேளான் விக்கணன் மனைவி கடம்ப மாதேவியும், தென்னவன்

பிரதிமாரார்சனான கட்டி ஒற்றியூரான் பராந்தகனும், இளங்கோ வேண்மான் மனைவியான வரகுணப் பெருமானாரும் விளக்கிற்காகப் பொன்னும், நிலமும் அளித்தனர். முண்டங்குடி உடையானான கண்ணங்குடி நாராயணன் நைவேத்யத்திற்கு நெல் அளித்தான். இது அளித்த காலம் முதலாம் பராந்தகன் காலம். மேளக்காரன், தேவதாசி, வாணிகன் இவர்கள் தருமமும் விளங்கின என்பதை மூன்று கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன. கோப்பரகேசரியான முதலாம் பராந்தகனின் மாமியார் முள்ளூர் நங்கை என்று தெரிகிறது.

**பதிக வரலாறு:**

பெரும்புலியூர் முதலிய தலங்களை வணங்கிப் பிள்ளையார் வீற்றிருக்குங் காலத்தில், மேற்குத் திசைத் தலங்களையும் வணங்கத் திருவுள்ளங் கொண்டு விடைபெற்றுத் திருவருட் குறிப்பின் வழியே செல்லுகின்றார்கள். திருநெய்த்தானத்தை அடைந்தார்கள். மனம் பொருந்த வணங்கினார்கள். 'மையாடிய கண்டன்' என்னும் இப்பதிகத்தைப் பாடினார்கள். இதில் 'நெய்யாடிய பெருமானிடம் நெய்த் தானம் என்னுங்கள்; செல்வன் அடி, சிவகதி சேரலாம்' என்று ஆணை வழங்குகின்றார்கள்.

## 15. THIRU-NEITH-THAANAM

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-neith-thaanam is in Chola Naadu. It is situated 1.5 km to the west of Thiruvaiyaaru, next to Thanjai. Of the 'Sapthasthaana' temples, this is the seventh. Kalaimagal (Sarasvathi) offered worship and got her wish fulfilled here. The Lord's name is Neiyaadiappar and the Goddess is known as Baalambikai, or 'Ilamangaiyammai', as noted in the Thevaaram. The holy ford is Cauvery. The shrine faces east. The place is now known as Thillaisthaanam. It is the custom to use ghee from cow's milk for anointing the God.

### Stone Inscriptions

There are 51 inscriptions in this temple that have been copied by government epigraphists. In the inscriptions of the time of Raajaadhiraajan, this temple is referred to as Thiruneiththaanam of Paingkanaadu in Raajaraaja Valanaadu. Gifts and

endowments by five Chola kings, beginning with Paraanthakan I and Nandhivarman are noted in the inscriptions. A man named Sembiyan Eekkaattu Velaan Parisai Kizhaan Maravan Nakkan, gifted 13 'kazhanju' of gold for lighting lamps in the temple. A lady, Nangai Varaguna Perumaanaar bought the land belonging to Kooththan Arulmozhiyaana Vaanavan Peraraiyan for 25 'kazhanju' gold and gifted it for lamps. Land situated in Keezhappilaaru village of Paingkaanaadu was gifted by two persons, Saamarakesari Therinja Kaikkolar and Vikramasinga Therinja Kaikkolar. Endowments for temple services were made by Mallan Aariyan, of the above-noted Saamarakesari Therinja Kaikkolars. Two gold ornaments for the Lord were given by Kaamakkodanalloor Aayan, who was the manager of the temple. A concubine of Cholap Perumaanadikal, Nangai Kooththap Perumaanaar, gave 30 'kazhanju' of gold for lamps. The Thiruneiththaanam assembly members used that gift for building a bathing pavilion (Snapana Mandapam) for the Lord. In exchange for it they arranged to get some temple lands. One Valavarkon Peraraiyan, Sembiyan Thamizhavelan Vikkanan's wife Kadambamaadevi, Thennavan Biramaadhiraasanaana Katti Orriyooraan Paraanthakan, and Ilangkovennmaan's wife Varagunap Perumaanaar gave land and gold for lamps. Munnadangkudi Udaiyaan Kannangkudi Naaraayanan gave land and gold for lamps. Three inscriptions refer to donations from percussionists, temple dancers (Devadaasi) and traders. It is known from an inscription that the mother-in-law of Kopparakesari Paraanthakan I was one Mulloor Nangai.

## INTRODUCTION TO THE HYMN

It is from Perum-puliyur, the youthful saint arrived at Thiru-neith-thaa-nam. It was here he sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

# 15. திரு நெய்த்தானம் / 15. THIRU-NEITH-THAANAM

பண் : நட்டபாடை
ராகம் : கம்பீரநாட்டை

*Pann: Natta Paadai*
*Raagam : Kambeera Naattai*

மையாடிய கண்டன்மலை மகள்பாகமதுடையான்
கையாடிய கேடில்கரி யுரிமூடியவொருவன்
செய்யாடிய குவளைம்மலர் நயனத்தவளோடும்
நெய்யாடிய பெருமானிடம் நெய்த்தானமெனீரே. 1

மை ஆடிய கண்டன், மலைமகள் பாகம் அது உடையான்,
கை ஆடிய கேடுஇல் கரி உரி மூடிய ஒருவன்,
செய் ஆடிய குவளை(ம்) மலர் நயனத்தவளோடும்
நெய்ஆடிய பெருமான், இடம் நெய்த்தானம் எனீரே!

mai ATiya kaNTan2, malai makaL pAkam atu uTaiyAn2,
kai ATiya kETu il kari uri mUTiya oruvan2,
cey ATiya kuvaLai(m) malar nayan2attavaLOTum
ney ATiya perumAn2, iTam neyttAn2am en2IrE!

**பொருள்:** சிவபெருமான் கருநிறம் அமைந்த கண்டத்தை உடையவன். மலை மகளாகிய பார்வதியை இடப்பாகமாகக் கொண்டவன். துதிக்கையோடு கூடியதாய்த் தன்னை எதிர்த்து வந்த அழிவற்ற புகழ் பெற்ற யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்த தன்னொப்பார் இல்லாத் தலைவன். வயல்களில் முளைத்த குவளை மலர்போலும் கண்களை உடைய உமையம்மையோடும் நெய்யாடிய பெருமான் என்ற திருப்பெயரோடும் விளங்கும் இடமாகிய நெய்த்தானம் என்ற திருப்பெயரைச் சொல்வீராக.

**குறிப்புரை:** மையாடிய கண்டன் – விஷம் பொருந்திய கழுத்தை உடையவன். கையாடிய கரி – கையோடு கூடிய யானை, கேடில்கரி என்றது இறைவன் உரித்துப் போர்த்ததால் நிலைத்த புகழ் கொண்டமையின். செய் – வயல். நெய்யாடிய பெருமான் என்பது இத்தலத்து இறைவன் திருநாமம். நெய்த்தானம் எனத் தலப்பெயரைச் சொல்லுங்கள் போதும் என்கின்றார்கள்.

Lord Civan's throat bears the dark blue mark of venom. His Consort, the daughter of the Himaalayaa 'mountain king', is part of His physical frame. The elephant was fleeced by the peerless One who then wore its skin on His frame. Ye

folks, say Neith-thaa-nam which is the place of the Lord Civan. He is anointed in ghee. He is concorporate with His Consort goddess Umaa Devi whose eyes are verily like the blue lilies of fertile fields.

**Note:** Thiru- neith-thaa-nam is now known as Thillas-thaanam.

*கையாடிய ஒருவன், கரி உரி மூடிய ஒருவன் எனக் கூட்டலும் போலும். கையாடிய கரியுரி மூடிய, கேடில் ஒருவனே.*

பறையும்பழி பாவம்படு துயரம்பலதீரும்
பிறையும்புன லரவும்படு சடையெம்பெருமானூர்
அறையும்புனல் வருகாவிரி யலைசேர்வடகரைமேல்
நிறையும்புனை மடவார்பயி னெய்த்தானமெனீரே. 2

*பறையும், பழிபாவம்; படு துயரம்பல தீரும்;*
*பிறையும், புனல், அரவும், படு சடை எம்பெருமான் ஊர் -*
*அறையும், புனல்வரு காவிரி அலை சேர் வடகரைமேல்,*
*நிறையும், புனை மடவார் பயில் - நெய்த்தானம் எனீரே!*

paRaiyum, pazipAvam; paTu tuyarampala tIrum;
piRaiyum, pun2al, aravum, paTu caTai emperumAn2 Ur--
aRaiyum, pun2al varu kAviri alai cEr vaTakarai mEl,
niRaiyum pun2ai maTavAr payil--neyttAn2am en2IrE!

***பொருள்:*** திருநெய்த்தானம் காவிரியின் வடகரையில் உள்ளது. ஆரவாரத்துடன் வரும் நதியின் அலைகள் இங்கு வந்து மோதுகின்றன. சிவபெருமான், தன் சடையில் சந்திரன், கங்கை, பாம்பு இவைகளைக் கொண்டுள்ளான். இவன் எழுந்தருளி இருப்பது நெய்த்தானம். மனத்தைக் கற்பு நெறியில் நிறுத்தும் நிறை குணத்துடன் தம்மை ஒப்பனை செய்து கொள்ளும் மகளிர் இங்கு விளங்குகின்றார்கள். நெய்த்தானம் என்ற ஊரின் பெயரைச் சொல்லுமின். உங்கள் மீதுள்ள பழி நீங்கும். பாவங்கள், துன்பங்கள் அனைத்தும் தீரும்.

*குறிப்புரை:* பறையும் – கழியும், அறையும் – ஒலிக்கும், நிறையும் புனைமடவார் – மனத்தைக் கற்பு நெறிக்கண் நிறுத்துவதாகிய நிறைக் குணத்தால் தம்மை ஒப்பனை செய்த மடவார்.

Neith-thaa-nam is the abode of our Lord Civan who sports on His matted hair the crescent, the river, and the serpent. Ye folks, say 'Neith-thaa-nam' your blame and sin will perish; your manifold misery will end. This township is situated on the northern bank of the Cauvery river whose waves dash against the banks of this town.

In this town girls adorn themselves well and live around, observing chastity to its core even in their mind.

**Note:** Araiyum: This word means proclaims / will proclaim. It also means 'resounding'. The Cauvery courses its joyous way proclaiming the glories of Lord Civa.

பேயாயின பாடப்பெரு நடமாடியபெருமான்
வேயாயின தோளிக்கொரு பாகம்மிகவுடையான்
தாயாகிய வுலகங்களை நிலைபேறுசெய்தலைவன்
நேயாடிய பெருமானிட நெய்த்தானமெனீரே. 3

***பேய்ஆயின பாட, பெருநடம்ஆடிய பெருமான்,***
***வேய் ஆயின தோளிக்கு ஒருபாகம் மிக உடையான்,***
***தாய் ஆகிய உலகங்களை நிலைபேறுசெய் தலைவன்,***
***நேஆடிய பெருமான், இடம் நெய்த்தானம் எனீரே!***

pEy Ayin2a pATa, peru naTam ATiya perumAn2,
vEy Ayin2a tOLikku orupAkam mika uTaiyAn2,
tAy Akiya ulakagkaLai nilaipERucey talaivan2,
nE ATiya perumAn2, iTam neyttAn2am en2IrE!

***பொருள்:*** சிவபெருமான் பேய்கள் பாட, நடனம் ஆடிய பெரியோன். மூங்கில் போலத் திரண்ட தோள்களை உடைய உமையம்மைக்குத் தன் திருமேனியின் ஒரு பாகத்தை வழங்கியவன். அனைத்து உலகங்களிலும் வாழும் உயிர்களை நிலைபேறு செய்தருளும் தாய் போன்ற தலைவன். அன்பர்களின் அன்பு நீரில் ஆடுபவன். இவன் எழுந்தருளிய நெய்த்தானம் என்ற திருப்பெயரைப் பலகாலும் சொல்லுவீராக.

***குறிப்புரை:*** பெருநடம் – மகாப்பிரளய காலத்துச் செய்யப்பெறும் மகா நடனம். வேய் – மூங்கில். அவ்வுலகங்களைத் தாயாகி நிலைபேறு செய்த தலைவன் எனக் கூட்டுக. நெய்யாடிய என்பது எதுகை நோக்கி நேயாடிய என்றாயிற்று. நே – அன்பு. அன்பே அபிடேக மாதல் ஞானபூசையில் உண்டு.

Lord Civan dances His magnum to the singing of ghouls. His consort goddess Umaa Devi's shoulders are bamboo like and she forms half part of His frame. He is anointed in the love of His devotees. He abides in Neith-thaa-nam. Ye folks, say the name of the town 'Neith-thaa-nam'. He is the chief who protects all lives in all the worlds like a mother.

**Note:** Perunatam: The magnum dance number; Half of His frame: One half is as good as the other. Yet, Uma who forms the left half of Civa, is our merciful Mother. Indian tradition holds that a mother is higher than a father.

சுடுநீறணி யண்ணல்சுடர் சூலம்மனலேந்தி
நடுநள்ளிரு ணடமாடிய நம்பன்னுறையிடமாம்
கடுவாளிள வரவாடுமிழ் கடனஞ்சமதுண்டான்
நெடுவாளைகள் குதிகொள்ளுயர் நெய்த்தானமெனீரே. 4

*சுடுநீறு அணி அண்ணல், சுடர் சூலம்(ம்) அனல் ஏந்தி*
*நடுநள்இருள் நடம் ஆடிய நம்பன்(ன்), உறைவு இடம் ஆம் -*
*கடுவாள் இள அரவு ஆடு உமிழ் கடல் நஞ்சம்அது உண்டான்,*
*நெடுவாளைகள் குதிகொள்(ள்) - உயர் நெய்த்தானம் எனீரே!*

cuTu nIRu aNi aNNal, cuTar cUlam(m) an2al Enti,
naTu naL iruL naTam ATiya nampan2(n2), uRaivu iTam Am--
kaTu vAL iLa aravu ATu umiz kaTal nanjcam atu uNTAn2,
neTuvALaikaL kutikoL(L)--uyar neyttAn2am en2IrE!

***பொருள்:*** சிவபெருமான் சுடப்பட்ட திருநீற்றை அணியும் தலைமையானவன். ஒளி பொருந்திய திரிசூலம், நெருப்பு ஆகியவற்றைக் கைகளில் ஏந்தியவன். இருள் செறிந்த இரவின் நடு யாமத்தில் நடனம் ஆடும் நம்பன். கொடிய ஒளி பொருந்திய இளைய வாசுகியாகிய பாம்பு உமிழ்ந்த நஞ்சோடு, கடலில் தோன்றிய நஞ்சினை உண்டவன். இவன் உறையும் இடம் நெய்த்தானம். இங்கு நீண்ட வாளை மீன்கள் துள்ளி விளையாடும் நீர்வளம் மிக்க குளங்கள் உண்டு. இந்த நெய்த்தானம் என்ற ஊரின் பெயரைச் சொல்லுவீராக.

***குறிப்புரை:*** சுடுநீறு – சுட்ட நீறாகிய விபூதி. நடுநள்ளிருள் – அர்த்த யாமம். நடுநள் – ஒருபொருட் பன்மொழி. நள் – செறிவுமாம். நம்பன் – நம்பப்படத்தக்கவன், விருப்பிற்குரியவன். கடுவாள் இள அரவு ஆடு உமிழ் நஞ்சு – கொடிய ஒளி பொருந்திய இளைய வாசுகியாகிய பாம்பு உமிழ்ந்த அடுதலை உடைய நஞ்சம்.

Lord Civan, the Supreme, wears in His body the holy white ash. Holding in His hands the blazing spear and fire He dances at midnight. He is an exceedingly desirable One. He quaffed the venom spat out by the fierce young bright Vaasuki snake and the venom of the ocean (Thiru-p-paar-kadal) when it was churned. The town Neith-thaa-

nam has abundant water in its pools where silvery fishes leap and play in joy. Ye folks! say Neith-thaa-nam, the name of this place.

**Note:** The serpent referred here is Vaasuki, the divine serpent.

நுகராரமொ டேலம்மணி செம்பொன்னுரையுந்திப்
பகராவரு புனல்காவிரி பரவிப்பணிந்தேத்தும்
நிகரான்மண லிடுதண்கரை நிகழ்வாயநெய்த்தான
நகரானடி யேத்தந்நமை நடலையடையாவே. 5

*நுகர் ஆரமொடு ஏலம் மணி செம்பொன் நுரை உந்தி,*
*பகரா வருபுனல் காவிரி பரவிப் பணிந்து ஏத்தும்,*
*நிகரால் மணல் இடு தண் கரை நிகழ்வு ஆய, நெய்த்தான -*
*நகரான் அடி ஏத்த(ந்), நமை நடலை அடையாவே.*

nukar AramoTu Elam maNi cempon2 nurai unti,
pakarA varupun2al kAviri paravip paNintu Ettum,
nikarAl maNal iTu taN karai nikazvu Aya, neyttAn2--
nAkarAn2 aTi Etta(n), namai naTalai aTaiyAvE.

**பொருள்:** திருநெய்த்தானத்தில் ஓடுகின்ற காவிரி நதி, நுகரத்தக்க பொருளாகிய சந்தனம், ஏலம், மணி, செம்பொன் ஆகியவற்றை நுரையோடு உந்தி விலை பகர்வது போல ஆரவாரித்து வருகின்றது. காவிரி நதி பரவிப் பணிந்து ஏத்துவது போல, ஒரு வகையான மணலையும் தன் கரையில் கொண்டு வந்து சேர்க்கிறது. இவ்வாறு விளங்குகின்ற நெய்த்தானத்துக் கோயிலில் அருள்புரிகின்ற சிவபிரான் திருவடிகளை ஏத்தத் துன்பங்கள் நம்மை அடையா.

**குறிப்புரை:** நுகர் ஆரம் – நுகரத்தக்க பொருளாகிய சந்தனம். பகராவரும் – விலை கூறி வருகின்ற. நிகரான் மணல் – ஒருவிதமான மணல். நடலை – துன்பம்.

The river Cauvery flows down here at Neith-thaa-nam, hawking as it were, its wares sandalwood, cardamom, gems and ruddy gold. It rolls down with these, pays obeisance and hails Lord Civan, all the while showing up bright sands on its cool banks. If we hail the holy feet of the Lord of Neith-thaa-nam misery will not touch us.

**Note:** The Cauvery carries with it sacred articles of civa-puja. The temple priest uses sandal wood paste in the Lord's abisheka. Cardamom is used to add flavour to neivedya. Gems and gold are dropped into the holy water which is used for the

Lord's ablution. Ornaments of gold and gems are used to bedeck the Lord. The suggestion implicit in this verse is that the holy river vicariously performs the services of a priest.

விடையார்கொடி யுடையவ்வணல் வீந்தார்வெளையெலும்பும்
உடையார்நறு மாலைசடை யுடையாரவர்மேய
புடையேபுனல் பாயும்வயல் பொழில்சூழ்ந்த நெய்த்தானம்
அடையாதவ ரென்றும்அம ருலகம்அடையாரே. 6

விடைஆர் கொடி உடைய(வ்) அணல், வீந்தார் வெளை எலும்பும்
உடையார், நறுமாலை சடை உடையார் அவர், மேய,
புடையே புனல் பாயும், வயல் பொழில் சூழ்ந்த, நெய்த்தானம்
அடையாதவர் என்றும் அமருலகம் அடையாரே.

viTai Ar koTi uTaiya(v) aNal, vIntAr veLai elumpum
uTaiyAr, naRumAlai caTai uTaiyAr avar, mEya,
puTaiyE pun2al pAyum, vayal pozil cUznta, neyttAn2am
aTaiyAtavar en2Rum amarulakam aTaiyArE.

***பொருள்:*** இடபக் கொடியை உடைய அண்ணலும், வெள்ளெலும்பு மாலையும், மணம் கமழும் மலர் மாலையும் சடைமேல் அணிந்தவனும் ஆகிய சிவபிரான் மேவியதும், அருகில் உள்ள கண்ணிகளிலும் வாய்க்கால்களிலும் வரும் நீர்பாயும் வயல்களும் பொழில்களும் சூழ்ந்ததும் ஆகிய நெய்த்தானம் என்னும் தலத்தை அடையாதவர் எக்காலத்தும் வீட்டுலகம் அடையார்.

***குறிப்புரை:*** உடைய அண்ணல், உடையவ் வணல் என விரித்தல் தொகுத்தல் விகாரம் வந்தன சந்தம் நோக்கி. வீந்தார் – இறந்தவர்களாகிய பிரமவிஷ்ணுக்களது. வெளை; வெள்ளை என்பதன் தொகுத்தல். நெய்த்தானம் அடையாதவர் அமருலகம் அடையார் என எதிர்மறை முகத்தால் பயன் கூறியவாறு. அமருலகம், தேவருலகம் என்பாரும் உளர். விரும்பிய தலமாகிய வீடென்பதே பொருந்துவதாம். அமரர் உலகு என்னாது அமருலகென்றே இருத்தலின்.

Lord Civa, the supreme, sports the bull on His flag. He wears the white bones of Brahma and Vishnu (whose tenure had ended). His matted hair is fragrant with flower garlands; He abides at Neith-thaa-nam girt with fields and groves beside which flow streams and channels. They who have not visited it, cannot gain access to the celestial world.

**Note:** The Bull, the mount of Lord Civa. His flag also sports this insignia.

*"ஊர்திவால் வெள்ளேறே சிறந்த சீர்கொடியும் அவ்வேறென்ப" - புறநானூறு (பாடல் 1).*

நிழலார்வயல் கமழ்சோலைக ணிறைகின்றநெய்தானத்
தழலானவ னனலங்கையி லேந்தியழகாய
கழலானடி நாளுங்கழ லாதேவிடலின்றித்
தொழலாரவர் நாளுந்துய ரின்றித்தொழுவாரே. 7

நிழல் ஆர் வயல் கமழ்சோலைகள் நிறைகின்ற நெய்தானத்து
அழல் ஆனவன், அனல் அங்கையில் ஏந்தி, அழகுஆய
கழலான் அடி நாளும் கழலாதே, விடல் இன்றித்
தொழலார் அவர் நாளும் துயர் இன்றித் தொழுவாரே.

nizal Ar vayal kamaz cOlaikaL niRaikin2Ra neyttAn2attu
azal An2avan2, an2al agkaiyil Enti, azaku Aya
kazalAn2 aTi nALum kazalAtE, viTal in2Rit
tozalAr avar nALum tuyar in2Rit tozuvArE.

**பொருள்:** திருநெய்த்தானத்தில் உள்ள வயல்கள் பயிர் செழித்து வளர்வதால் ஒளி நிறைந்து விளங்குகின்றன. மணம் கமழும் சோலைகள் அங்கு நிறைந்து உள்ளன. இத்தலத்தில் தழல் உருவில் விளங்குபவனும், அனலைத் தன் கையில் ஏந்தியவனும், அழகிய வீரக் கழல்களை அணிந்தவனும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ளான். இப்பெருமானுடைய திருவடிகளை நாள் தோறும் தவறாமலும், மறவாமலும் தொழுதலை உடைய அடியவர் எந்நாளும் துயரின்றி மற்றவர்களால் தொழத்தக்க நிலையினராவர்.

**குறிப்புரை:** கழலாதே – நீங்காதே. விடல் இன்றி – இடைவிடாமல். தொழலார் அவர் – தொழுதலை உடைய அடியார்கள்.

Neith-thaa-nam is rich in bright fields and fragrant groves; The Lord here, in the days of yore, became a column of fire; His beautiful palm holds the fire. They who hold fast to the ankleted Feet of this handsome One and adore Him uninterruptedly, will be freed from misery; also they will be blessed with access to pay obeisance for ever thereafter.

அறையார்கட லிலங்கைக்கிறை யணிசேர்கயிலாயம்
இறையாரமு னெடுத்தானிரு பதுதோளிறவூன்றி
நிறையார்புன னெய்த்தானனன் னிகழ்சேவடிபரவக்
கறையார்கதிர் வாளீந்தவர் கழலேத்துதல்கதியே. 8

அறை ஆர் கடல் இலங்கைக்கு இறை அணி சேர் கயிலாயம்
இறை ஆர முன் எடுத்தான், இருபது தோள் இற ஊன்றி,
நிறை ஆர் புனல் நெய்த்தானன் நன் நிகழ் சேவடி பரவக்,
கறை ஆர் கதிர் வாள் ஈந்தவர் கழல் ஏத்துதல் கதியே.

aRai Ar kaTal ilagkaikku iRai aNi cEr kayilAyam
iRai Ara mun2 eTuttAn2, irupatu tOL iRa Un2Ri,
niRai Ar pun2al neyttAn2an2 nan2 nikaz cEvaTi parava,
kaRai Ar katir vAL Intavar kazal Ettutal katiyE.

**பொருள்:** ஓசை கெழுமிய கடல் சூழ்ந்த இலங்கை மன்னனாகிய இராவணன், அழகிய கயிலாய மலையை தன் இருபது முன் கரங்களாலும் பெயர்த்துத் தள்ளி வைக்க முயன்றான். சிவபிரான் தன் கால் விரலால் உச்சி மலையின் மீது சிறிது அழுத்தினான். இராவணனது இருபது தோள்களும் நெறிய வருந்தினான். நீர் நிறைந்த நெய்த்தானத்து பெருமானது விளங்கும் திருவடிகளை இராவணன் பரவி வாழ்த்தி வணங்கினான். சிவபிரான் அவனுக்கு முயற் கறையை உடைய சந்திரனின் பெயரைப் பெற்ற 'சந்திரகாசம்' என்ற வாளைக் கொடுத்தருளினான். அப்பெருமான் திருவடிகளை ஏத்துதலே ஒருவற்கு அடையத்தக்க கதியாகும்.

**குறிப்புரை:** அறை – ஓசை. இறை ஆர – மணிக்கட்டுப் பொருந்த, நெய்த்தானன் – நெய்த்தானத்தவனாகிய இறைவன். கறையார் கதிர்வாள் ஈந்த – சந்திரன் பெயரைப் பொருந்திய வாளைத் தந்த என்றது சந்திரகாசம் என்னும் வாளைத் தந்த என்பதாம். அவர் கழல் ஏத்துதல் கதியே – அந்த இறைவனுடைய கழலை ஏத்துதலே மீட்டும் அடையத் தக்க கதியாம்.

Sri Lanka is surrounded by the roaring sea on all its four sides. In the days of yore, the King of Sri Lanka, Dasakreevan, tried to uproot the ornate Kailas with his forearms. The Lord of Neith-Thaa-nam, rich in waters, pressed His toe at the top of the mount, and crushed Sri Lanka King's twenty arms. Dasakreevan repented, for his folly, and begged for pardon. He expressed his sincerity by singing in Saama Gaana tune. At this, the Lord gifted to him the sword, named after the moon that hath in it a murky

patch. Lo, the hailing of His ankletted Feet brings about salvation. (Also c.f. Verse - 8 of *திருவீழிமிழலை*)

**Note:** The sword gifted by Civa bears the name Chandrahasa. Without this, Raavanaa could not have vanquished Jataayu who intercepted him to prevent the kidnapping of Sita.

கோலம்முடி நெடுமாலொடு கொய்தாமரையானும்
சீலம்மறி வரிதாயொளி திகழ்வாயநெய்த்தானம்
காலம்பெற மலர்நீரவை தூவித்தொழுதேத்தும்
ஞாலம்புக ழடியாருட லுறுநோய்நலியாவே. 9

***கோலம் முடி நெடுமாலொடு, கொய் தாமரையானும்***
***சீலம்(ம்) அறிவு அரிதுஆய் ஒளி திகழ்வுஆய நெய்த்தானம்,***
***காலம் பெற மலர்நீர்அவை தூவித் தொழுது ஏத்தும்***
***ஞாலம் புகழ் அடியார் உடல் உறு நோய் நலியாவே.***

kOlam muTi neTu mAloTu, koy tAmarai yAn2um,
cIlam(m) aRivu aritu Ay oLi tikazvu Aya neyttAn2am,
kAlam peRa, malar nIr avai tUvit tozutu Ettum
njAlam pukaz aTiyAr uTal uRu nOy naliyAvE.

**பொருள்:** அழகிய முடியை உடைய திருமாலும், கொய்யத்தக்க தாமரை மலர் மேல் விளங்கும் நான்முகனும், தன் இயல்பை அறிதற்கியலாத நிலையில் ஒளிவடிவாய்த் திகழ்ந்த நெய்த்தானப் பெருமானை விடியற் பொழுதிலே நீராட்டி மலர் சூட்டித் தொழுதேத்தும் உலகு புகழ் அடியவருடைய உடம்பினை மிக்க நோய்கள் துன்பம் செய்ய மாட்டா.

**குறிப்புரை:** கோலம் முடி – அழகிய கிரீடம். சீலம் – சௌலப்யம் என்னும் எளிமைக் குணம். காலம் பெற – விடியலிலேயே. உடலை நோய் நலியா என்க. உறுநோய் – பிராரத்த வினையான் வரும் துன்பம்.

The exalted Vishnu and Bramha of the lotus could not, at all, comprehend the greatness of Lord Civan. In His dazzling and splendorous saivite form He abides at Neith-thaa-nam. The renowned devotees of the world hail and adore Him, at the ordained hour, sprinkling flower soaked holy water on His frame. The malady of physical embodiment will not afflict these devotees hereafter.

**Note:** 'Kolam' is Civa vēdam (*சிவ வேடம்*). 'Kolam mudi' may also refer to the beautiful crown of Vishnu.

மத்தம்மலி சித்தத்திறை மதியில்லவர்சமணர்
புத்தரவர் சொன்னம்மொழி பொருளாநினையேன்மின்
நித்தம்பயி னிமலன்னுறை நெய்த்தானமதேத்தும்
சித்தமுடை யடியாருடல் செறுநோயடையாவே. 10

*மத்தம் மலி சித்தத்து இறை மதிஇல்லவர் சமணர்,*
*புத்தர் அவர், சொன்ன(ம்) மொழி பொருளா நினையேன்மின்!*
*நித்தம் பயில் நிமலன்(ன்) உறை நெய்த்தானம்அது ஏத்தும்*
*சித்தம்(ம்) உடை அடியார் உடல் செறு நோய் அடையாவே.*

mattam mali cittattu iRai mati illavar camaNar,
puttar avar, con2n2a(m) mozi poruLA nin2aiyEn2 min2!
nittam payil nimalan2(n2) uRai neyttAn2am atu Ettum
cittam(m) uTai aTiyAr uTal ceRu nOy aTaiyAvE.

**பொருள்:** சித்தத்தில் செருக்குடையவரும், சிறிதும் மதியில்லாதவரும் ஆகிய சமணர்களும், புத்தர்களும் கூறும் பொருளற்ற உரைகளை ஒரு பொருளாக நினையாதீர். நாள்தோறும் நாம் பழகி வழிபடுமாறு, குற்றமற்ற சிவபிரான் உறையும் நெய்த்தானத்தை வணங்கிப் போற்றும் சித்தத்தை உடைய அடியவர் உடலைத் துன்புறுத்தும் நோய்கள் அடையா.

**குறிப்புரை:** மத்தம் – மதம். இறைமதியில்லார் – கடவுளுணர்ச்சி சிறிதும் இல்லாதவர்கள். செறுநோய் – வருத்தும் நோய்கள்.

The demented Samanars are altogether of muddled brains. The Buddhists blabber in confusion. Ignore their utterances. The devotees, who with all their heart, hail Neith-thaa-nam daily, where the eternal Lord who is free from impurity (Malam) abides, will cease to suffer from the malady of physical ailment.

தலமல்கிய புனற்காழியுட் டமிழ்ஞானசம்பந்தன்
நிலமல்கிய புகழான்மிகு நெய்த்தானனைநிகரில்
பலமல்கிய பாடல்லிவை பத்தும்மிகவல்லார்
சிலமல்கிய செல்வன்னடி சேர்வர்சிவகதியே. 11

*தலம் மல்கிய புனல் காழியுள் தமிழ் ஞானசம்பந்தன்*
*நிலம் மல்கிய புகழால் மிகும் நெய்த்தானனை நிகர் இல்*
*பலம் மல்கிய பாடல்(ல்) இவை பத்தும் மிக வல்லார்,*
*சில மல்கிய செல்வன்(ன்) அடி சேர்வர், சிவகதியே.*

talam malkiya pun2al kAziyuL tamiz njAn2acampantan2
nilam malkiya pukazAl mikum neyttAn2an2ai nikar il
palam malkiya pATal(l) ivai pattum mika vallAr,
cila malkiya celvan2(n2) aTi cErvar, civa katiyE.

**பொருள்:** தலங்களில் சிறந்த புனல் சூழ்ந்த காழிப்பதியுள் தோன்றிய தமிழ் ஞானசம்பந்தன் உலகெங்கும் பரவிய புகழால் மிக்க நெய்த்தானத்துப் பெருமான்மீது பாடிய ஒப்பற்ற பயன்கள் பலவற்றைத் தரும் பாடல்களாகிய இவற்றைக் கற்றுப் பலகாலும் பரவ வல்லவர் சீலம் நிறைந்த செல்வன் அடியாகிய சிவகதியைச் சேர்வர்.

**குறிப்புரை:** பலம் மல்கிய பாடலிவை பத்தும் என்றது, முதல் நான்கு பாடலிலும் நெய்த்தானம் என்னுங்கள், உங்களை நடலையடையா, அமருலகு அடையலாம், துய்ரின்றித் தொழலாம், நோய் நலியா, அடையா, கழலேத்துதல் கதி என இம்மைப் பயனையும், மறுமைப் பயனையும் எய்தலாம் என்கிறார்கள்.

Gnaanasambandan of famed Kaazhi which is adored with the wealth of abundant waters, has sung these ten verses to celebrate the Lord of Neith-thaa-nam whose unbounded glory pervades all the worlds. They who can chant well these ten boon-conferring hymns will gain the godly way and its goal, the Feet of the opulent One who is Civa.

**Note:** 'Sila': perhaps 'sila' is used in this verse to denote 'Seelam' nobility. For the sake of rhyme, 'seela' is shortened into 'sila'.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*15ஆம் பதிகம் முற்றிற்று*
End of 15th Hymn

உ
சிவமயம்

## 16. திருப்புள்ள மங்கை

### திருத்தலவரலாறு:

திருப்புள்ளமங்கை என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம். பசுபதி கோயில் இரயில் நிலையத்தில் இருந்து வடக்கே 3 கி.மீ. தஞ்சையை அடுத்துள்ள ஐயம்பேட்டையில் இருந்து கண்டியூர் செல்லும் பேருந்துச் சாலையில் உள்ளது. ஊர் பெயர் – புள்ளமங்கை. கோயில் பெயர் ஆலந்துறை. தேவர்கள் அமுதம் கடைந்தபொழுது உண்டான விடத்தை அமுது செய்த இடம். ஆதலின் ஆலந்துறை எனத் திருக்கோயில் வழங்கப் பெறுகின்றது. தலம் திருப்புள்ள மங்கை. இன்று பசுபதி கோயில் எனவும் வேளாளப் பசுபதி கோயில் என அடைமொழி சேர்த்தும் வழங்குகிறது. பிரமன் பூசித்த தலம். புள்ளமங்கை என்பதற்கு ஏற்பக் கோபுரத்தில் கழுகுகள் எப்பொழுதும் வசித்து வருகின்றன. பொந்தின் இடை தேனூறிய என்னும் அருளாளர் வாக்கிற்கியையப் பொந்துகளில் எல்லாம் தேனடைகள் காணப்படும். திருச்சக்கரப்பள்ளியின் சப்த ஸ்தானத் தலங்களில் இதுவும் ஒன்று. இறைவன் ஆலந்துறை நாதர். இறைவி அல்லியங்கோதை. பசுபதிநாதர் எனவும் வழங்கும். தீர்த்தம் காவிரி.

### கல்வெட்டு:

அரசியலாரால் கி.பி. 1921இல் படியெடுக்கப்பட்ட 546 முதல் 559 வரையுள்ள பதின்மூன்று கல்வெட்டுக்கள் உள்ளன.

### பதிக வரலாறு:

வேதங்களில் சொல்லப்பட்ட அருங்கருத்துக்களின் உள்ளீடாகிய சிவஞானம் தம்மறிவில் நிரம்பப் பெற்ற பிள்ளையார் திருச்சக்கரப் பள்ளியை வணங்கிக் கொண்டு வயற்கரை வழியாகப் புள்ளமங்கையை அடைந்தார்கள். அங்கேயுள்ள ஆலந்துறை என்னும் திருக்கோயிலுக்குச் சென்றார்கள். இறைவன் திருவடித் தலத்தை அன்போடு வணங்கிப் 'பாலுந்துறுதிரளாயின' என்னும் இத்திருப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

# 16. THIRU-P-PULLA-MANGAI

## THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-p-pulla-mangai is in Chola Naadu on the south bank of river Cauvery. It is situated on the bus route connecting Iyampettai (near Thanjai) and Kandiyoor, at a distance of 3 km to the north of Pasupathikoyil railway station. The name of the village is Pullamangkai and that of the temple is Aalanthurai. The temple is called so as it is here that the Lord swallowed the poison (aalam) that came up when the Devas churned the ocean of milk to get the divine ambrosia that bestows immortality. The sacred place is known as Thiruppullamangkai. Now it is referred to as Pasupathikoyil or Velaalap Pasupathikoyil. Biraman offered worship at this temple. Befitting its name Pullamangkai, vultures always nest in the temple tower. In all the crevices one can see bee hives, consistent with the saying of the saint, "pondhin idai then ooriya". This temple is one of the Saptha Sthaana sites of Thiruchchakkarappalli. The Lord's name is Aalanthurai Naathar and that of the Goddess is Alliyangkodhai. The Lord is also known as Pasupathinaathar. The holy ford is river Cauvery.

### Stone Inscriptions

There are 13 inscriptions, from No. 546 to No. 558, in this temple that have been copied by government epigraphists in 1921.

## INTRODUCTION TO THE HYMN

From Chakkara-p-palli, the saint arrived at Pulla-Mangai where he sang the following hymn. The temple at Pulla-Mangai town is called Aalanthurai. In modern days this town is known as pasu-pathi-koyil and/or Vēllaala-p-pasu-pathi-koyil.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 16. திருப்புள்ள மங்கை
## 16. THIRU-P-PULLA-MANGAI

பண் : நட்டபாடை
ராகம் : கம்பீரநாட்டை

*Pann: Natta Paadai*
*Raagam : Kambeera Naattai*

பாலுந்துறு திரளாயின பரமன்பிரமன்றான்
போலுந்திற லவர்வாழ்தரு பொழில்சூழ்புளமங்கைக்
காலன்றிற லறச்சாடிய கடவுள்ளிடங்கருதில்
ஆலந்துறை தொழுவார்தமை யடையாவினைதானே. 1

*பால் உந்துஉறு திரள் ஆயின பரமன், பிரமன்தான்*
*போலும் திறலவர் வாழ்தரு பொழில்சூழ் புளமங்கை,*
*காலன் திறல் அறச் சாடிய கடவுள்(ள்) இடம் கருதில்,*
*ஆலந்துறை தொழுவார்தமை அடையா, வினைதானே.*

pAl untu uRu tiraL Ayin2a paraman2, piraman2 tAn2
pOlum tiRalavar vAztaru pozil cUz puLa magkai,
kAlan2 tiRal arac cATiya kaTavuL(L) iTam karutil,
AlantuRai tozuvAr tamai aTaiyA, vin2ai tAn2E.

**பொருள்:** திருப்புள்ள மங்கை என்ற ஊரில் உள்ள ஆலந்துறை என்னும் கோவிலில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். அவர், பாலைக் காய்ச்சி, தயிராக்கி, அத்தயிரைக் கடைதலால் விளைந்து வரும் வெண்ணைத் திரள் போன்றவர். காலனது வலிமை முழுவதையும் அழித்தவர். வேதப்புலமையில் நான்முகனைப் போன்ற அந்தணர்கள் வாழ்கின்ற ஊர் திருப்புள்ள மங்கை. இவ்வூரைச் சுற்றி சோலைகள் சூழ்ந்துள்ளன. இவ்வூர்க் கோயிலில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை நினைந்து வழிபடுபவர்களைத் தீய வினைகள் அடையா.

**குறிப்புரை:** பால் உந்து உறுதிரள் – பாலைத் தயிராக்கிக் கடைதலால் விளைந்த வெண்ணெய். பிரமன் தான் போலுந்திறலவர் – பிரமனும் அவன் போலும் தன்மையினராகிய அந்தணரும். ஆலந்துறை – கோயிலின் பெயர்; புள்ளமங்கை – தலத்தின் பெயர். இதனை 'புளமங்கை ஆதியவர் கோயில் திருவாலந்துறை தொழுமின்' என்ற இப்பதிகம் பத்தாம் பாடலால் அறிக. வினையடையா என்றது ஆகாமியங்கள் அடையா என்பதாம்.

The lord is like the mass of butter churned out of curd/yogurt. At Pulla-Mangai sages are living whose skill matches that of Brahma. It is the sacred place of Lord Civa who kicked Yaman (god of death ) to death. This town is surrounded by gardens full of trees. The effect of karma will be lessened to those who offer worship to Lord Civan in the Aalanthurai temple.

**Note:** Butter is symbolic of triumphant Bhakthi. St. Appar affirms this. 'He will manifest Himself when with ceaseless effort, churning yogurt is done with the rod of affinity and the rope of consciousness".

மலையான்மகள் கணவன்மலி கடல்சூழ்தருதண்மைப்
புலையாயின களைவானிடம் பொழில்சூழ்புளமங்கைக்
கலையான்மலி மறையோரவர் கருதித்தொழுதேத்த
அலையார்புனல் வருகாவிரி யாலந்துறையதுவே. 2

மலையான்மகள் கணவன், மலிகடல் சூழ்தரு தண்மைப்
புலைஆயின களைவான், இடம் - பொழில்சூழ் புளமங்கைக்,
கலையால் மலி மறையோர் அவர் கருதித் தொழுது ஏத்த,
அலை ஆர் புனல் வரு காவிரி ஆலந்துறை அதுவே.

malaiyAn2 makaL kaNavan2, mali kaTal cUztaru tan2maip
pulai Ayin2a kaLaivAn2, iTam--pozil cUz puLamagkai,
kalaiyAl mali maRaiyOr avar karutit tozutu Etta,
alai Ar pun2al varu kAviri AlantuRai atuvE.

**பொருள்:** சிவபெருமான் இமவான் மகளாகிய பார்வதி தேவியின் கணவன் ஆவான். அவன் புள்ள மங்கை என்னும் ஊரில் உள்ள ஆலந்துறை என்னும் கோயிலில் எழுந்தருளி உள்ளான். இவ்வூர், அலைகளோடு கூட, நீர் பெருகி வரும் காவிரிக் கரையில் உள்ளது. இவ்வூரைச் சுற்றிச் சோலைகள் நிறைந்துள்ளன. இவ்வூரில் கலைகள் பலவற்றை அறிந்த, அறிவால் நிறைந்த மறையவர்கள் வாழ்கிறார்கள். அவர்கள் இவ்வூர் இறைவனை மனத்தால் கருதி, காயத்தால் தொழுது, வாயால் ஏத்தி வழிபடுகிறார்கள். இப்பூவுலகம் நீர் நிறைந்த கடலால் சூழப்பட்டது. இந்த உலகத்தில் உயிர்கள் பிறவி எடுத்து, இறந்தும், பிறந்தும் மீண்டும் மீண்டும் இப்பிறவிச் சூழலில் உழல்கின்றன. இவ்வாறு உழல்வதைக் களைந்து பிறவா வரம் அளிக்கக் கூடியவன் சிவபெருமான் ஒருவனே. இவ்வூரில் இருக்கின்ற சிவனை வழிபாடு செய்து பிறவிப் பெருங்கடலை நீந்திக் கரை சேருங்கள்.

**குறிப்புரை:** கடல்சூழ்தரு தண்மைப் புலையாயின களைவான் இடம் பொழில்சூழ் புளமங்கை – கடல் சூழ்தலால் வந்த பண்பாகிய குளிர்ச்சியோடு புலால் மணத்தைக் களைகின்ற பெரிய இடம் (மணந்தருகின்ற) பொழில் சூழ்ந்த புள்ளமங்கை என்க. களைவான் என ஒரு சொல்லாக்கி, நிற்பவனாகிய இறைவன் என்பாரும் உளர். புலை களைதல் பொழிலின் செயலேயன்றி இறைவன் செயலாகாமை ஓர்க.

Goddess Parvathi is the daughter of the Himaalayan mountain king. Her consort is Lord Civan. His abode is Alanthurai in the town Pulla-Mangai, which is surrounded by rich gardens full of sweet smelling flowers. The foul smell that pervades the city caused by the dead fish of the sea is nullified by the sw..et smelling flowers in the gardens that surround the city. On the banks of river Cauvery of wavy waters, Vedic scholars meditate and hail Lord Civan who is stationed at Alanthurai in the town Pulla-mangai.

**Note:** Mountain daughter: Paarvathi. 'Parvatham' means mountain. Paarvathi is the offspring of the mountain Chief called Himavaan.

கறையார்மிட றுடையான்கமழ் கொன்றைச்சடைமுடிமேல்
பொறையார்தரு கங்கைப்புன லுடையான்புளமங்கைச்
சிறையார்தரு களிவண்டறை பொழில்சூழ்திருவாலந்
துறையானவ னறையார்கழ றொழுமின்றுதிசெய்தே. 3

*கறை ஆர் மிடறு உடையான், கமழ்கொன்றைச் சடைமுடிமேல்*
*பொறை ஆர் தரு கங்கைப்புனல் உடையான், புளமங்கைச்*
*சிறை ஆர் தரு களிவண்டு அறை பொழில்சூழ் திருஆலந்-*
*துறையான் அவன், நறை ஆர் கழல் தொழுமின், துதி செய்தே!*

kaRai Ar miTaRu uTaiyAn2, kamaz kon2Raic caTai muTi mEl
poRai Ar taru kagkaippun2al uTaiyAn2, puLamagkaic
ciRai Artaru kaLi vaNTu aRai pozil cUz tiru Alan2-
tuRaiyAn2 avan2, naRai Ar kazal tozumin2, tuti ceytE!

**பொருள்:** சிவபெருமான் விடக்கறை பொருந்திய கண்டத்தை உடையவன். மணம் கமழும் கொன்றை மலர் அணிந்த சடைமுடியினை உடையவன். அச்சடையின்மீது சுமையாக அமைந்த கங்கை ஆற்றை அணிந்தவன். இவன் புள்ள மங்கையில் உள்ள ஆலந்துறை என்னும் கோயிலில் எழுந்தருளி உள்ளான். இவ்வூர் சோலைகளால் சூழப்பட்டது. அங்கு

சிறகுகளுடன் கூடிய தேனை உண்ட வண்டுகள் ரீங்காரம் செய்து கொண்டிருக்கின்றன. அக்கோயிலுக்குச் சென்று அப்பெருமானது திருவடிகளைத் துதி செய்து தொழுவீராக.

**குறிப்புரை:** கறை – விடம். மிடறு – கழுத்து. பொறையார்தரு – சுமையாகப் பொருந்திய. நறை – மணம்.

Lord Civa's neck is of dark blue colour. The kondrai flower He has worn on His matted hair spreads sweet smell all around. Also on His head He bears the heavy ganges river. He is the Lord of Thiru-Aalanthurai girt with gardens where the winged bees hum gladly. Hail and adore His fragrant and ankleted Feet.

**Note:** The heavy flood. The infuriated Ganga came down with all her force and with intent to devastate the entire earth. She, however, stood denuded of her might and weight when Lord Civa received her on His matted crest.

தணியார்மதி யரவின்னொடு வைத்தானிடமொய்த்தெம்
பணியாயவ னடியார்தொழு தேத்தும்புளமங்கை
மணியார்தரு கனகம்மவை வயிரத்திரளோடும்
அணியார்மண லணைகாவிரி யாலந்துறையதுவே. 4

தணி ஆர் மதி அரவின்(ன்)னொடு வைத்தான் இடம் - மொய்த்து, எம்
பணி ஆயவன் அடியார் தொழுது ஏத்தும் புளமங்கை,
மணி ஆர் தரு கனகம்(ம்) அவை வயிரத்திரளோடும்
அணி ஆர் மணல் அணை காவிரி - ஆலந்துறை அதுவே.

taNi Ar mati aravin2(n2)n2oTu vaittAn2 iTam--moyttu, em
paNi Ayavan2 aTiyAr tozutu Ettum puLamagkai,
maNi Artaru kan2akam(m) avai vayirattiraLOTum
aNi Ar maNal aNai kAviri--AlantuRai atuvE.

**பொருள்:** சிவபெருமான் தன் முடியின்மீது குளிர்ந்த பிறைச் சந்திரனைச் சூடி உள்ளான். பாம்பையும் தன் முடிமிசை வைத்துள்ளான். இவன் காவிரி நதியின் தென்கரையில் உள்ள புள்ளமங்கையில் உள்ள ஆலந்துறை என்னும் கோயிலில் எழுந்தருளியுள்ளான். இவ்வூரில் உள்ள காவிரி நதியானது, பொன்னையும், வைரக் குவியல்களையும் அழகிய மணியோடு கொண்டு வந்து கரையில் சேர்க்கின்றன. இவ்வூரில் உள்ள அடியவர்கள் எமது தொண்டுகளுக்கு உரியவன் இவனே என்று அங்குள்ள சிவனைத் தொழுது ஏத்தி வணங்குகிறார்கள்.

**குறிப்புரை:** தணிஆர் மதி – குளிர்ந்தபிறை. இகரம் சாரியை. எம் பணி ஆயவன் – எமது தொண்டு விளங்குதற்கு இடமாயவன். எம்மைப் பணிகொள்ளும் தலைவனானவன் என்பாரும் உண்டு. பொன்னும் மணியும் முதலாயின மணலில் அணையும் காவிரி என்றது ஓடும் பொன்னும் ஒக்க நோக்கும் இயல்பு காவிரிக்கு உண்டென்பதால் அடியாரியல்பு விளக்கியவாறு.

Lord Civan gave protection to the cool crescent moon on His matted hair. Also a serpent stays on His head. He is our Lord who accepts our devotional service. The river Cauvery deposits on its banks in Pulla-mangai gems, gold and heaps of diamonds along with the sand.

**Note:** Thani-aar-mati: It means the moon of decreased digits. Also the cool crescent moon.

*தணியார் - தண் சாரியை பெற்று வந்தது.*

மெய்த்தன்னுறும் வினைதீர்வகை தொழுமின்செழுமலரின்
கொத்தின்னொடு சந்தாரகில் கொணர்காவிரிக்கரைமேல்
பொத்தின்னிடை யாந்தைபல பாடும்புளமங்கை
அத்தன்னமை யாள்வானிட மாலந்துறையதுவே. 5

மெய்த் தன் உறும் வினை தீர் வகை தொழுமின்! செழுமலரின்
கொத்தின்(ன்)னொடு சந்து ஆர் அகில் கொணர் காவிரிக் கரைமேல்,
பொத்தின்(ன்) இடை ஆந்தைபல பாடும் புளமங்கை
அத்தன்(ன்), நமை ஆள்வான், இடம் - ஆலந்துறை அதுவே.

meyt tan2 uRum vin2ai tIr vakai tozumin2! cezu malarin2
kottin2(n2)n2oTu cantu Ar akil koNar kAvirik karai mEl,
pottin2(n2) iTai Antai pala pATum puLamagkai
attan2(n2), namai ALvAn2, iTam--AlantuRai atuvE.

**பொருள்:** உயிர் உடலை அடுத்தற்குக் காரணமான வினைகள் நீங்கும் வகையில் பெருமானை நீவீர் வணங்குவீர்களாக. செழுமையான மலர்க் கொத்துக்களை உடைய சந்தனம், அகில் முதலியவற்றைக் கொண்டு வரும் காவிரியாற்றின் கரைமேல் உள்ளதும் பொந்துகளில் ஆந்தைகள் பல தங்கிப் பாடுவதும் ஆகிய புள்ளமங்கையில் அமைந்த ஆலந்துறை என்னும் கோயிலை இடமாகக் கொண்டுள்ள தலைவனாகிய சிவபெருமான் நம்மை ஆள்வான்.

**குறிப்புரை:** மெய் – உண்மையாகவே, அல்லது உடலானது உயிரை அடுத்தற்குக் காரணமாகிய வினைதீரும் வகை என்றுமாம். தொழுதற்கேற்ற சாதனப் பொருள்களைத் தேடிச் செல்ல வேண்டாம்.

காவிரியே சந்தனம், பூங்கொத்து, அகில் முதலியவற்றைக் கொணர்ந்து தருகின்றது. அவற்றைக் கொண்டு நீவிர் தொழ வேண்டும் என்பதுதான் கருத்து.

Ye devotees! You need not go out anywhere else, and search for materials needed to worship Lord Civan in Pulla-mangai. Because the river Cauvery carries sandalwood, eaglewood, bunches of flowers and deposits them on its banks in Pulla-mangai. These things you can utilise to worship our Lord Civan in Pulla-mangai. In this town owls are singing (hoot-screech) from its holes and hollows. Alanthurai is such a sacred place where our Lord Civan abides.

**Note:** The screech of owls, is mistakenly construed as inauspicious sign; but it is truly benedictory.

மன்னானவ னுலகிற்கொரு மழையானவன்பிழையில்
பொன்னானவன் முதலானவன் பொழில்சூழ்புளமங்கை
என்னானவ னிசையானவ னிளஞாயிறின்சோதி
அன்னானவ னுறையும்மிட மாலந்துறையதுவே. 6

மன் ஆனவன், உலகிற்கு ஒரு மழை ஆனவன், பிழையில்
பொன் ஆனவன், முதல்ஆனவன், பொழில்சூழ் புளமங்கை
என்ஆனவன், இசை ஆனவன், இள ஞாயிறின் சோதி
அன்னான் அவன், உறையும்(ம்) இடம் - ஆலந்துறை அதுவே.

man2 An2avan2, ulakiRku oru mazai An2avan2, pizai il
pon2 An2avan2, mutal An2avan2, pozil cUz puLamagkai
en2 An2avan2, icai An2avan2, iLa njAyiRin2 cOti
an2n2An2 avan2, uRaiyum(m) iTam--AlantuRai atuvE.

**பொருள்:** சிவபெருமான் விரும்பி உறையும் இடம் புள்ளமங்கையில் உள்ள ஆலந்துறை ஆகும். இவன் உலகிற்குத், தான் ஒருவனே மன்னனாய் விளங்குபவன். மழையாய்ப் பயிர்களை விளைவிப்பவனும் அவனே. குற்றமற்ற நால்வகைப் பொன்னில் சிறந்ததாகிய சாம்பூநதம் ஆகியவனும் அவனே. அவனே எனக்குத் தலைவன். அவன் இசைவடிவாய் விளங்குபவன். அவன் இள ஞாயிற்றின் ஒளியைப் போன்ற ஒளியை உடையவன். புள்ள மங்கை சென்று ஆலந்துறையில் வீற்றிருக்கின்ற சிவனை வணங்குவீர்களாகுக.

**குறிப்புரை:** உலகிற்கு ஒரு மன்னானவன் மழையானவன் எனக் கூட்டுக. பிழையில் பொன் – குற்றமற ஓடவிட்ட பொன்னாகிய சாம்பூநதம் முதலியன. என் ஆனவன் – எனக்குத் தலைவன் ஆனவன்.

Lord Civan is the king; He is rain unto the earth; He is flawless Gold; He is the beginning and first; He is my very own; He is music; He is like unto the radiance of the rising sun. He is at Aalanthurai in Pulla-Mangai girt with groves, where He abides in Grace.

**Note:** The word 'isai' means both music and renown.

முடியார்தரு சடைமேன்முளை யிளவெண்மதிசூடிப்
பொடியாடிய திருமேனியர் பொழில்சூழ்புளமங்கைக்
கடியார்மலர் புனல்கொண்டுதன் கழலேதொழுதேத்தும்
அடியார்தமக் கினியானிட மாலந்துறையதுவே. 7

முடி ஆர் தரு சடைமேல் முளை இளவெண்மதி சூடி,
பொடி ஆடிய திருமேனியர், பொழில்சூழ் புளமங்கை,
கடி ஆர் மலர் புனல் கொண்டு தன் கழலே தொழுது ஏத்தும்
அடியார் தமக்கு இனியான், இடம் - ஆலந்துறை அதுவே.

muTi Ar taru caTaimEl muLai iLa veNmati cUTi,
poTi ATiya tirumEn2iyar, pozil cUz puLamagkai,
kaTi Ar malar pun2al koNTu tan2 kazalE tozutu Ettum
aTiyAr tamakku in2iyAn2, iTam--AlantuRai atuvE.

**பொருள்:** சிவபெருமான் விரும்பி உறையும் இடம் சோலைகளால் சூழப்பெற்ற புள்ள மங்கையில் உள்ள ஆலந்துறை என்னும் கோயில் ஆகும். இவன் தன் தலைமேல் விளங்கும் சடையின் மீது முளை போன்ற இளம் பிறையைச் சூடி உள்ளான். தன் திருமேனியில் வெள்ளிய திருநீறு அணிந்துள்ளான். மணம் கமழும் மலர்களையும் புனிதமான நீரையும் கொண்டு தன் திருவடிகளை வணங்கி ஏத்தும் அடியார்களுக்கு இனியனாய் விளங்குகின்றான். அவன் இருக்கும் இடம் சென்று அவனை வழிபாடு செய்வீராக.

**குறிப்புரை:** முளைஇளவெண்மதி – முளைவடிவான இளைய பிறை. பொடி – திருநீறு. திருமேனியர், இனியான் என ஒருமை பன்மை மயங்கி வந்தது, செய்யுளாதலின்.

Lord Civan wears on His matted crest the young white crescent moon. His divine body is smeared with the holy ash. He is dear to His devotees of Pulla-Mangai surrounded by groves, who hail nothing but His ankleted Feet, with fragrant flowers and holy water. His sacred shrine is Aalanthurai.

இலங்கைமனன் முடிதோளிற வெழிலார்திருவிரலால்
விலங்கல்லிடை யடர்த்தானிடம் வேதம்பயின்றேத்திப்
புலன்கள்தமை வென்றார்புக ழவர்வாழ்புளமங்கை
அலங்கல்மலி சடையானிட மாலந்துறையதுவே. 8

இலங்கை மனன் முடிதோள் இற, எழில் ஆர் திருவிரலால்
விலங்கல்(ல்) இடை அடர்த்தான் இடம் - வேதம் பயின்று ஏத்திப்,
புலன்கள் தமை வென்றார் புகழவர் வாழ் புளமங்கை,
அலங்கல் மலி சடையான் இடம் - ஆலந்துறை அதுவே.

ilagkai man2an2 muTi tOL iRa, ezil Ar tiruviralAl
vilagkal(l) iTai aTarttAn2 iTam--vEtam payin2Ru Etti,
pulan2kaL tamai ven2RAr pukazavar vAz puLamagkai,
alagkal mali caTaiyAn2 iTam--AlantuRai atuvE.

**பொருள்:** சிவபெருமான் விரும்பி உறையும் இடம் புள்ள மங்கையில் உள்ள ஆலந்துறை என்னும் கோயிலாகும். இவன் மாலைகள் அணிந்துள்ளான். சடை முடியை உடையவன். இவ்வூரில் புலன்களை வென்ற புகழுடைய அந்தணர்கள் வாழ்கின்றனர். வேதங்களை முறையாகக் கற்றறிந்த மறையவர்கள் அவனை ஓதித் துதிக்கின்றார்கள். இலங்கை மன்னனாகிய தசக்கிரீவன் தலைகளும் தோள்களும் நெறிய சிவபெருமான் தன் எழுச்சி பொருந்திய அழகிய கால் விரலால் மலையின் உச்சியில் ஊன்ற, அவனைக் கயிலை மலையிடை அகப்படுத்தி அடர்த்தான். இவன் ஊரை அடைந்து இவனை ஏத்தித் தொழுவீர்களாக.

**குறிப்புரை:** மனன் – மன்னன். தொகுத்தல் விகாரம். எழில் – எழுச்சி. விலங்கலிடை – மலையின் அடியில். புலன்கள் தம்மை வென்றார் – புலன்களாகிய பொறிகளைத் தன்வயமாக்க விடாமல் வென்ற முனிவர்கள். அலங்கல் – மாலை.

The King of Sri Lanka (Dasakreevan) was trying to lift and keep aside mount Kailas, abode of Lord Civan. Civan pressed the mountain with His beautiful toe slightly. The head and shoulders of the King got crushed. Pulla-Mangai is the town where dwell renowned sages, the conquerors of the five sense - organs, who practise the Vedas and hail Him. Behold the shrine at Aalanthurai where abides Lord Civan whose matted crest is decked with plenty of sweet smelling garlands.

செறியார்தரு வெள்ளைத்திரு நீற்றின்றிருமுண்டப்
பொறியார்தரு புரிநூல்வரை மார்பன்புளமங்கை
வெறியார்தரு கமலத்தயன் மாலுந்தனைநாடி
அறியாவகை நின்றானிட மாலந்துறையதுவே. 9

செறி ஆர் தரு வெள்ளைத்திரு நீற்றின் திருமுண்டப்
பொறி ஆர் தரு புரிநூல் வரைமார்பன் புளமங்கை,
வெறி ஆர்தரு கமலத்து அயன் மாலும், தனை நாடி
அறியா வகை நின்றான் இடம் - ஆலந்துறை அதுவே.

ceRi Artaru veLLait tiru nIRRin2 tirumuNTap
poRi Artaru purinUl varai mArpan2 puLamagkai,
veRi Artaru kamalattu ayan2 mAlum, tan2ai nATi
aRiyA vakai nin2RAn2 iTam--AlantuRai atuvE.

**பொருள்:** சிவபெருமானுக்கு உரிய இடம் புள்ள மங்கையில் உள்ள ஆலந்துறையாகும். இவன் வெண்மையான திருநீற்றை மூன்று பட்டைகளாய்ச் செறியப் பூசியவன். உத்தம இலக்கணம் ஆகிய மூன்று வரி பொருந்திய முப்புரி நூல் அணிந்த மலை போன்ற திண்ணிய மார்பினை உடையவன். மணங்கமழும் தாமரை மலர்மேல் உறைகின்ற நான்முகனும், திருமாலும் தன்னைத் தேடி அறியாவகை ஓங்கி அழலாய் நின்றவன். அவன் இருக்கும் இடம் சென்று அவனை வணங்குவீர்களாக.

**குறிப்புரை:** செறி ஆர்தரு – நெருங்குதல் பொருந்திய. திருமுண்டம் – அழகிய திரிபுண்டரம். பொறியார்தரு மார்பன் எனக் கூட்டுக. உத்தம விலக்கணம் பொருந்திய மார்பு (சிந்தாமணி 1462, 1706). வெறி – மணம். அறியாவகை நின்றான் – (அவர்கள்) ஞானக் கண்ணினிற் சிந்தையில் நாடவேண்டிய பதியை ஊனக் கண்ணினிற் காணலுற்றார்களாதலின் அறியா வண்ணம் சோதிவடிவாய் நின்றவன்.

Lord Civan's sacred forehead bears the white and dense strips of the holy ash. The lofty and hill-like chest of the Lord of Pulla-Mangai is adorned with the three strips of sacred thread. Behold the sacred temple at Aalanthurai of the Lord who stood incomprehensible to the questing Brahma of the fragrant lotus and Vishnu.

நீதியறி யாதாரமண் கையரொடுமண்டைப்
போதியவ ரோதும்முரை கொள்ளார்புளமங்கை
ஆதியவர் கோயிறிரு வாலந்துறைதொழுமின்
சாதிம்மிகு வானோர்தொழு தன்மைபெறலாமே. 10

*நீதி அறியாதார் அமண்கையரொடு மண்டைப்*
*போதியவர் ஓதும்(ம்) உரை கொள்ளார் புளமங்கை*
*ஆதிஅவர் கோயில்-திரு ஆலந்துறை தொழுமின்!*
*சாதி(ம்) மிகு வானோர் தொழு தன்மை பெறல் ஆமே.*

nIti aRiyAta amaNkaiyaroTu maNTaip
Otu(m) urai koLLAr puLamagkai
Ati avar kOyil--tiru AlantuRai tozumin2!
cAti(m) miku vAn2Or tozu tan2mai peRal AmE.

***பொருள்:*** நீதி அறியாத அமணராகிய கீழ் மக்களும் பிச்சைப் பாத்திரத்தைக் கையில் ஏந்திப் போதி மரத்தடியில் உறையும் புத்த மதத்தினரும் கூறும் உரைகளை மெய்ம்மை எனக் கொள்ளாது எல்லாப் பொருள்கட்கும் ஆதியானவனாகிய புள்ளமங்கையில் உள்ள ஆலந்துறைக் கோயிலில் உறையும் இறைவனைத் தொழுமின்; பல்வேறு பிரிவினராகிய தேவர்கள் தொழும் தன்மை பெறலாம்.

***குறிப்புரை:*** அமண்கையர் – அமணர்களாகிய கீழ்மக்கள். மண்டைப் போதியவர் – மண்டையை (பிச்சைக் கலத்தை)க் கையிலுடைய புத்தர். சாதி மிகுவானவர் – முப்பத்து மூன்று கோடியாகச் சாதியினையுடைய தேவர்கள்.

The Primal Lord Civan is abiding at Pulla-Mangai. Ignoring the words of the samanars ill-versed in Neeti, and the Buddhists who carry begging-bowls, do adore His sacred shrine at Aalanthurai. If you adore it, you will be adored by celestial folks of a multitudinous order.

**Note:** The just and righteous path, An exhortation addressed to the general public.

பொந்தின்னிடைத் தேனூறிய பொழில்சூழ்புளமங்கை
அந்தண்புனல் வருகாவிரி யாலந்துறையரனைக்
கந்தம்மலி கமழ்காழியுட் கலைஞானசம்பந்தன்
சந்தம்மலி பாடல்சொலி யாடத்தவமாமே. 11

பொந்தின்(ன்) இடைத் தேன் ஊறிய பொழில்சூழ் புளமங்கை
அம் தண்புனல் வரு காவிரி ஆலந்துறை அரனைக்
கந்தம் மலி கமழ் காழியுள் கலை ஞானசம்பந்தன்
சந்தம் மலி பாடல் சொலி, ஆடத், தவம் ஆமே.

pontin2(n2) iTait tEn2 URiya pozil cUz puLamagkai
am taNpun2al varu kAviri AlantuRai aran2aik
kantam mali kamaz kAziyuL kalai njAn2acampantan2
cantam mali pATal coli, ATa, tavam AmE.

**பொருள்:** மரப் பொந்துகளில் தேனீக்கள் சேகரித்த தேன் மிகுதியான அளவில் கிடைக்கும் பொழில்கள் சூழ்ந்ததும், அழகிய தண்மையான நீரைக் கொணர்ந்து தரும் காவிரிக்கரையில் உள்ளதும் ஆகிய புள்ளமங்கையில் உள்ள ஆலந்துறை இறைவனை, மணம் நிறைந்து கமழும் காழிப் பதியில் தோன்றிய கலை நலம் உடைய ஞானசம்பந்தன் பாடிய சந்தம் நிறைந்த இத்திருப்பதிகப் பாடல்களை ஓதிப் பரவசமாய் ஆடத், தவம் கைகூடும்.

**குறிப்புரை:** பொந்து – மரப் பொந்துகள். இப்பதிகச் சந்தம். படிக்குங் காலத்தேயே பரவசமாய் ஆட வருந்தன்மையது என்பது குறித்தவாறு.

Verily does it constitute penance to sing out and dance, to the metrical songs of Gnaanasambandan, the one that had mastered the scriptures. He hails from Kaazhi girt with gardens. His hymns celebrate Hara, entempled in Aalanthurai at Pulla-Mangai on the banks of the cool Cauvery river. Pulla-mangai is rich in honey stored by bees in holes and hollows.

Note: Metrical songs: Songs composed in unison with or conforming to the classical chhandas.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*16ஆம் பதிகம் முற்றிற்று*
End of 16th Hymn

உ
சிவமயம்

# 17. திரு இடும்பாவனம்

## திருத்தலவரலாறு:

திரு இடும்பாவனம் என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம். நாகை மாவட்டம் திருத்துறைப் பூண்டியிலிருந்தும் முத்துப்பேட்டையில் இருந்தும் பேருந்துகளில் செல்லலாம். இடும்பன் பூசித்துப் பேறுபெற்ற தலம் ஆதலின் இப்பெயர் பெற்றது. இடும்பனது தலைநகரமாகிய குன்றளூரும் அருகாமையில் இருப்பது அறியத்தக்கது. இங்கு வெண்மை நிறமுடைய வெள்ளை விநாயகர் விசேஷமானது. இறைவரது மணவாளக் கோலம் மூலத்தானத்தின் பின்புறம் அமைந்துள்ளது. அகத்தியர்க்கு காட்சி கொடுத்த தலம். சுவாமி பெயர் சற்குண நாதர். அம்மை பெயர் மங்கள நாயகி. தீர்த்தம் சமுகபுஷ்கரணி. இத்தலத்தைப் பற்றியதாகக் கல்வெட்டு ஒன்றும் அறியக்கூடவில்லை.

## பதிக வரலாறு:

சிவபெருமான் மிக விரும்பிய தலமாகிய 'திருக்கடிக்குளம்' என்னும் தலத்தை வணங்கிப் பிள்ளையார் இடும்பாவனத்தை எய்தினார்கள். அங்கே எழுந்தருளிய சுவாமிகள் கோயில் கொண்டு எழுந்தருளி இருக்கும் சற்குண நாதரை 'மனமார்தரு' என்னும் பதிகம் பாடி வணங்கினார்கள். இதில் இடும்பன் தலைநகரமாகிய கொடிமாடக் குன்றளூரையும் சேர்த்துக் குறிப்பிட்டிருத்தல் காண்க.

# 17. THIRU-IDUM-BAA-VANAM

## THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-idum-baa-vanam is in Chola Naadu on the south bank of river Cauvery. It is accessible by bus from Thiruththuraippoondi and Muthuppettai in Naagai district. It got its name because Idumban offered worship and got his wish fulfilled here. It may be noted that Idumban's capital of Kunraloor is near here. A white-coloured 'Vellai Vinaayakar' is of special note here. The Lord's wedding scene is seen at the back of the sanctum sanctorum. This is also the sacred place where sage

Agasthiyar had the vision of the Lord. The God's name is Sargunanaathar and that of the Goddess is Mangalanaayaki. The holy ford is known as Samookapushkarani. No stone inscription pertaining to this temple is known.

**INTRODUCTION TO THE HYMN**

Idumban was the leader of Lord Skanda's hosts. His capital is Kodi-maada-k-kundra-loor (கொடிமாடக் குன்றளூர்). This is situated near Idumbaa-vanam (இடும்பாவனம்). Idumban offered worship to Lord Civan in Idumbaa-vanam and was graced by this Lord. Hence, the place is called Idum-baa-vanam. Thiru-k-kadi-k-kulam (திருக்கடிக்குளம்) is one of most desired place for Lord Civan. Our saints Thiru-Gnaanasambandar after offering worship at this shrine came to Thiru-Idum-baa-vanam. Here he offered worship to Lord Civan and sang the above hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 17. திரு இடும்பாவனம் — 17. THIRU-IDUM-BAA-VANAM

பண் : நட்டபாடை
ராகம் : கம்பீரநாட்டை

*Pann: Natta Paadai*
*Raagam : Kambeera Naattai*

மனமார்தரு மடவாரொடு மகிழ்மைந்தர்கள்மலர்தூய்த்
தனமார்தரு சங்கக்கடல் வங்கத்திரளுந்திச்
சினமார்தரு திறல்வாளெயிற் றரக்கன்மிகுகுன்றில்
இனமாதவ ரிறைவர்க்கிட மிடும்பாவனமிதுவே. 1

மனம் ஆர்தரு மடவாரொடு மகிழ் மைந்தர்கள் மலர் தூய்,
தனம் ஆர்தரு சங்கக்கடல் வங்கத்திரள் உந்தி,
சினம் ஆர்தரு திறல் வாள்எயிற்று அரக்கன்மிகு, குன்றில்
இன மா தவர் இறைவர்க்கு இடம் - இடும்பாவனம் இதுவே.

man2am Artaru maTavAroTu makiz maintarkaL malar tUy,
tan2am Artaru, cagkak kaTal vagkattiraL unti,
cin2am Artaru tiRal vAL eyiRRu arakkan2 miku, kun2Ril
in2a mA tavar iRaivarkku iTam--iTumpAvan2am ituvE.

பொருள்: சிவபெருமான் குன்றளூர் என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ளார். வளம் மிக்க குன்றளூர் இடும்பன் என்னும் அரக்கனுக்குரியது. இடும்பன் சினம் மிக்க வலிய ஒளி

பொருந்திய பற்களை உடையவன். கூட்டமாகிய முனிவர் குழாங்கள் இங்குள்ள சிவபெருமானை வணங்குகிறார்கள். சிவபெருமானுக்குரிய இடம் இடும்பாவனமும் ஆகும். இங்குள்ள சிவபெருமானை மகிழ்ச்சி மிக்க இளைஞர்கள், தங்கள் மனத்தால் விரும்பப் பெற்ற மனைவியரோடு மலர் தூவி வழிபாடு செய்கிறார்கள். இறைவன், அவர்கள் பொருட்செல்வம் பெற்றுய்வதற்கு அருள் புரிகின்றான். இங்கு, சங்குகளை உடைய கடலில் கப்பல்கள் வந்து கொண்டிருக்கும். அக்கப்பல்களைக் கடல் அலைகள் உந்தி வந்து கரை சேர்க்கின்றன.

***குறிப்புரை:*** மனம் ஆர்தரு மடவார் – மனம் பொருந்திய சிறு பெண்கள். குன்றில் – குன்றளூரில். இது இடும்பன் தலைநகரம், மத்தியிலுள்ள தனம் ஆர்தரு குன்றில், உந்தி மிகு குன்றில், எனத் தனித்தனிக் கூட்டுக. போக காமிகளாகிய காதலர்கள் அருச்சனை செய்து அதற்குக் காரணமாகிய தனத்தை அடைகின்றனர். கடலில் அலைகள் இருப்பதால் கப்பல்களை உந்தி மிகுகின்றன. அரக்கன் – இடும்பன். சினம் ஆர்தரு, திறல்வாள், எயிறு என்பன அரக்கனுக்குத் தனித்தனியே அடைமொழியுமாம். இனமாதவர் இறைவர் – கூட்டமாகிய முனிவர்களுக்கு இறைவர்; என்றது சிவபெருமானை.

The bright-toothed fierce and mighty Raakshashaa Idumban's capital is Kundraloor. It stands close to Idum-baa-vanam. To this seashore town, ships ply now and then. The sea shells (chunks - *சங்குகள்*) are found in plenty here. Young women with their beloved youthful and joyous husbands hail the Lord here in loving devotion offering flowers. This is Idum-baa-vanam where abides Lord Civan hailed by great tapaswis galore.

**Note:** The Raakshasha: Idumpan; Kundru: Kundralur, the abode of Idumpan.

மலையார்தரு மடவாளொரு பாகம்மகிழ்வெய்தி
நிலையார்தரு நிமலன்வலி நிலவும்புகழொளிசேர்
கலையார்தரு புலவோரவர் காவன்மிகுகுன்றில்
இலையார்தரு பொழில்சூழ்தரு மிடும்பாவனமிதுவே. 2

மலையார் தரு மடவாள் ஒரு பாகம் மகிழ்வு எய்தி,
நிலை ஆர்தரு நிமலன் வலி நிலவும் புகழ்ஒளி சேர்,
கலை ஆர்தரு புலவோர் அவர் காவல் மிகு, குன்றில்
இலை ஆர்தரு பொழில் சூழ்தரும் இடும்பாவனம் இதுவே.

malaiyAr taru maTavAL oru pAkam makizvu eyti,
nilai Artaru nimalan2 vali nilavum pukaz oLi cEr,
kalai Artaru pulavOr avar kAval miku, kun2Ril
ilai Artaru pozil cUzvarum iTumpAvan2am ituvE.

**பொருள்:** சிவபெருமான், குன்றலூரை அடுத்துள்ள இலைகள் அடர்ந்த சோலைகளால் சூழப்பட்ட இடும்பாவனத்தில் எழுந்தருளி உள்ளான். இவன், இமவான் மகளாய் மலையிடைத் தோன்றி வளர்ந்த பார்வதி தேவியை ஒருபாகமாகக் கொண்டு, மகிழ்ந்து நிலையாக வீற்றிருந்து அருள்புரிகின்றான். இவ்வூரில் குற்றமற்ற சிவபெருமானது வெற்றி விளங்குகின்றது. இங்கு கலை வல்ல புலவர்கள் தங்களுடைய புகழால் ஒளிமிக்கவர்களாய் விளங்குகிறார்கள். அவர்கள், இடைவிடாது எல்லாக் கலைகளையும் பயின்று கொண்டிருப்பதால் அவ்வூர் காவல் மிக்கு விளங்குகின்றது.

**குறிப்புரை:** மலையார் – மலையரசனாகிய இமவான். தரு – பெற்ற, மலை ஆர்தரு மடவாள் எனப் பிரித்து மலையிடத்து வசிக்கின்ற உமாதேவி என்பாரும் உளர். நிலையார் தருநிமலன் – என்றும் எங்கும் நிற்றலையுடைய நித்தியப் பொருளாகிய இறைவன். ஒளிசேர் இடும்பாவனம், பொழில் சூழ்தரும் இடும்பாவனம் எனக் கூட்டுக. கலைஆர்தரு புலவோர் – ஒளிமிகுந்த தேவர்கள்.

Lord Civan who is concorporate with His Consort Umaa Devi, daughter of Himaalayan King, is joyfully entempled in Idum-baa-vanam. Pervading everywhere, He is omnipresent and omnipotent (எங்கும் நிற்றலை உடைய நித்தியப் பொருளானவன்). Idum-baa-vanam is surrounded by leafy groves and fostered with care by wise men well-versed in scriptures.

**Note:** Nimalan - The One who is everfree from malas. Siva is so hailed. He is also Amalan, the One who rids others of their malas.

சீலம்மிகு சித்தத்தவர் சிந்தித்தெழுமெந்தை
ஞாலம்மிகு கடல்சூழ்தரு முலகத்தவர்நலமார்
கோலம்மிகு மலர்மென்முலை மடவார்மிகுகுன்றில்
ஏலங்கமழ் பொழில்சூழ்தரு மிடும்பாவனமிதுவே. 3

*சீலம் மிகு சித்தத்தவர் சிந்தித்து எழும் எந்தை,*
*ஞாலம் மிகு கடல் சூழ்தரும் உலகத்தவர் நலம் ஆர்,*
*கோலம் மிகு மலர்மென்முலை மடவார் மிகு, குன்றில்*
*ஏலம் கமழ் பொழில் சூழ்தரும் இடும்பாவனம் இதுவே.*

cIlam miku cittattavar cintittu ezum entai,
njAlam miku kaTal cUz tarum ulakattavar nalam Ar,
kOlam miku malar men2 mulai maTavAr miku, kun2Ril
Elam kamaz pozil cUz tarum iTumpAvan2am ituvE.

**பொருள்:** சிவபெருமான் எழுந்தருளிய இடம் திரு இடும்பாவனம் ஆகும். இங்கு, தவ ஒழுக்கத்தால் மேம்பட்ட முனிவர்கள் எம் தந்தையாகிய சிவபெருமானைச் சிந்தித்து வணங்கி வருகிறார்கள். நிலப்பரப்பைக் காட்டிலும் அதிகப் பரப்பை உடையது கடல். இக்கடலால் சூழப்பட்டது திருஇடும்பாவனம் ஆகும். இங்கு சான்றோர்கள் பலர் வாழ்கின்றனர். நற்குணங்களும், அழகும், மலர் போலும் மென்மையான தனங்களும் உடைய பெண்கள் இவ்வூரில் மிக்கு உள்ளார்கள். இவ்வூர் குன்றளூரைச் சார்ந்து உள்ளது. ஏலமணங் கமழும் சோலைகள் பல இவ்வூரைச் சுற்றி உள்ளன.

**குறிப்புரை:** சீலம் – காட்சிக்கெளியனாந் தன்மை. இயமம் முதலான தவ ஒழுக்கங்களும் ஆம். ஒழுக்கம் என்றும் ஆம். சிந்தித்தெழும் எந்தை என்றது, 'கொழுநற்றொழு தெழுவாள்' போல முனிவர்கள் சிந்தித்துக் கொண்டே எழுவர் என்பதாம். அன்றி ஒழுக்கம் மிக்க மனத்தை உடையவர்களைத் திருவுள்ளத்தடைத்துத் திருவோலக்கம் கொண்டருளுகின்ற எந்தை. ஞாலம் மிகு கடல் – நிலத்தின் பரப்பைக் காட்டிலும் மிகுந்திருப்பதாகிய கடல். நிலப்பரப்புக் கால்பங்கும், நீர்ப்பரப்பு முக்கால்பங்கும் என்பது மரபாகலின். கோலம் – அழகு. நலமார் இடும்பாவனம் எனக் கூட்டுக. உலகத்தவர் நன்மையடைதற்கு (முத்தியின்பத்தை அடைதற்கு) இடமாகிய இடும்பாவனம்.

Our father Lord Civan is invoked when holy men poised in righteousness, rise up and contemplate on Him. He abides at Kundru, the town where beauteous and bashful damsels of flower-soft breasts, dwell. It is by the grace of this Lord, men on this earth which is surrounded by the vast sea receive all wealth. Verily is this Idum-baa-vanam, surrounded by cardamom gardens. The fragrance from these groves fills all around.

**Note:** A saivite should always chant the name of Lord Civa when he wakes up. He should open his day with the key - Lord Civa's name.

பொழிலார்தரு குலைவாழைக ளெழிலார்திகழ்போழ்தில்
தொழிலான்மிகு தொண்டரவர் தொழுதாடியமுன்றில்
குழலார்தரு மலர்மென்முலை மடவார்மிகுகுன்றில்
எழிலார்தரு மிறைவர்க்கிட மிடும்பாவனமிதுவே. 4

பொழில் ஆர்தரு, குலைவாழைகள் எழில் ஆர் திகழ் போழ்தில்,-
தொழிலால் மிகு தொண்டர் அவர் தொழுது ஆடிய முன்றில்,
குழல் ஆர்தரு மலர்மென்முலை மடவார் மிகு, குன்றில்
எழில் ஆர்தரும் இறைவர்க்கு இடம் - இடும்பாவனம் இதுவே.

pozil Artaru, kulai vAzaikaL ezil Ar tikaz pOztil,--
tozilAl miku toNTar avar tozutu ATiya mun2Ril,
kuzal Artaru malar men2 mulai maTavAr miku, kun2Ril
ezil Artarum iRaivarkku iTam--iTumpAvan2am ituvE.

***பொருள்:*** சிவபெருமான், அழகுக்கு அழகு செய்யும் இடும்பாவனத்தில் எழுந்தருளியுள்ளான். அது குன்றளூரை அடுத்துள்ளது. இவ்வூரைச் சுற்றிக் குலைகள் தள்ளிய செழிப்பான வாழைத் தோட்டங்கள் உள்ளன. மிகுதியான சிறப்புடைய தொண்டர்கள் அழகு திகழும் காலையிலும், மாலையிலும் இங்குப் பணி செய்கின்றனர். பணி செய்வதால் உண்டான மகிழ்ச்சியில் இந்தத் தொண்டர்கள் அவரவர்கள் வீட்டின்முன் பக்கத்தில் ஆடிப்பாடி இறைவனைத் தொழுகின்றார்கள். இவ்வூரின்கண் மலர்சூடிய கூந்தலை உடைய மென்முலை மடவார்கள் நிறைந்து விளங்குகின்றார்கள்.

***குறிப்புரை:*** முன்றில் இடும்பாவனம் இது எனக் கூட்டுக. சோலைகளில் விளங்குகின்ற குலை வாழைகள் அழகுமிகுகின்ற காலத்துத் தொண்டர்கள் தொழுது ஆடுகின்ற முன்றிலையுடைய குன்று எனவும், அத்தகைய குன்றில் இறைவர்க்கு இடம் இத்தகைய இடும்பாவனம் எனவும் கொண்டு கூட்டிப் பொருள் கொள்க. குலைவாழைகள் அழகோடுகூடி விளங்கும்போது மஞ்சள் வெயிற்படும் மாலைக் காலம். அப்போது அடியார்கள் தொழுது ஆனந்த மேலீட்டால் ஆடுகின்றார்கள் என்பது. குழலார் தருமலர் மென்முலை மடவார் – குழலின்கண் பொருந்திய மலரையும் மெல்லிய முலையினையுமுடைய மடவார் என்கின்றது வேட்டுவ மகளிரை. எழில் – அழகு. எழுச்சியுமாம்.

At the time, when the banana bunches on the plantain trees ripen with spectacular splendour, servitors - renowned for their excellence, hail Him and dance in the foreyard of Kundru. It is the town where dwell damsels of hunter families with



திருஇடும்பாவனம் – சற்குணநாதர் – சோழநாட்டு தென்கரைத் தலம் (திருவாஞ்சியம்)
**Thiru Idumpavanam Temple - Tiruvaanjiyam, Tamil Nadu.**



திருநின்றியூர் – ஸ்ரீலட்சுமிநாதர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Lakshmi Naathar Temple - Tirunindriyur - Tamil Nadu**



திருச்சிவபுரம் – சிவபுரநாதசுவாமி – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Sivapura Nathar Temple - Thiru-Ch-Chivapuram, Tamil Nadu**



திருமறைக்காடு (வேதாரண்யம்) – வேதாரண்யேசுவரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Vedaranyesurar Temple - Tirumaraikkadu (Vedaranyam), Tamil Nadu**

delicate breasts, and whose locks are decked with fragrant flowers. Veril is the temple at Idum-baa-vanam the place where our splendorous Lord of elegant charm resides.

பந்தார்விர லுமையாளொரு பங்காகங்கைமுடிமேல்
செந்தாமரை மலர்மல்கிய செழுநீர்வயற்கரைமேல்
கொந்தார்மலர் புன்னைமகிழ் குரவங்கமழ்குன்றில்
எந்தாயென விருந்தானிட மிடும்பாவனமிதுவே. 5

"பந்து ஆர் விரல் உமையாள் ஒரு பங்கா! கங்கை, முடிமேல் -
செந்தாமரைமலர் மல்கிய செழுநீர் வயல் கரைமேல்,
கொந்து ஆர் மலர்ப்புன்னை, மகிழ், குரவம், கமழ் குன்றில் -
எந்தாய்!" என, இருந்தான் இடம் - இடும்பாவனம் இதுவே.

"pantu Ar viral umaiyAL oru pagkA! kagkai, muTimEl--
centAmarai malar malkiya cezu nIr vayal karaimEl,
kontu Ar malarppun2n2ai, makiz, kuravam, kamaz kun2Ril--
entAy!" en2a, iruntAn2 iTam--iTumpAvan2am ituvE.

***பொருள்:*** குன்றளூரில் எழுந்தருளி எந்தாய் எனப் போற்றப்படுகின்ற சிவபெருமான் விரும்பி உறையும் இடம் திருஇடும்பாவனம் ஆகும். இவ்வூரில செந்தாமரை மலர்கள் நிறைந்த நீர் நிரம்பிய நிலைகள் உள்ளன. இங்குள்ள வளமான வயல்களின் கரைமேல் கொத்துக் கொத்தாக மலர்ந்த பூக்களைக் கொண்ட புன்னை மரங்கள் பல உள. மகிழ், குராமலர் ஆகியனவும் பூத்துக் குலுங்குகின்றன. இந்த மணம் இவ்வூரைச் சுற்றிக் கமழ்ந்து கொண்டு இருக்கின்றது. இவ்வூரில் எழுந்தருளிய சிவபெருமான், பந்தாடும் கைவிரல்களை உடைய உமையம்மையின் கணவன் ஆவான். அவன்தன் சடைமுடியில் கங்கை நதியை அணிந்துள்ளான். இவனைச் சென்று அடைந்து வழிபடுவீர்களாக.

***குறிப்புரை:*** பந்தார்விரல் உமையாள் ஒரு பங்கா – பந்தணை மெல் விரலி எனவும், அம்மைக்கொரு நாமம் உண்மையைக் குறிப்பித்தவாறு. பங்காக என்பது பங்கா எனச் செயவென்னெச்சத்தீறு கெட்டது. பங்காகக் கரைமேல், குன்றில் இருந்தான் எனக்கூட்டுக. கங்கையை முடிமேற்கொண்டு என ஒரு சொல் வருவித்து முடிக்க. வயற்கரைமேல் புன்னை, மகிழ்குரவம், கமழ்குன்றில் என்றது இடும்பாவனத்தலம் மருத நிலமும் நெய்தல் நிலமும் தம்முள் மயங்கியிருந்தமை புலனாம். குன்று என்பது குன்றளூர் என்பதன் மரூஉ. எந்தாய் என – அனைத்துயிரும் எமது தாயே என்ன. எந்தை என்பதன் விளியுமாம். தாயும் தந்தையுமாக ஓர் உருவிலேயே நின்று அருள்வது இறைவற்குச் சிறப்பியல்பாகலின் எந்தாய் எனச் சொல் ஒன்றானே

நயம்தோன்றக் கூறியவாறு 'தோடுடைய செவியன்' என்றதற்கேற்ப எந்தாய் என இருந்தான் என ஆண்பால் முடிபேற்றவாறு.

Lord Civan who is concorporate with Uma whose fingers sport a ball, bears on His crest the Ganga river. He abides at the balmy kundru in whose watery fields red lotuses bloom in plenty; Their ridges are dotted with 'punnai' trees burgeoning in bunches as well as makiza and kuravam flowers. Behold, verily is this Idum-baa-vanam, the shrine where He abides with all devotees hailing Him thus: "O our Father who is also our Mother!"

**Note:** Makizh - A flower (*Mimusops clengi*) dear to Lord Civa; Enthaai - The word means 'our father'. It also means 'our mother'. Civa is 'Ammai-Appar' - both mother and father.

நெறிநீர்மையர் நீள்வானவர் நினையுந்நினைவாகி
அறிநீர்மையி லெய்தும்மவர்க் கறியும்மறிவருளிக்
குறிநீர்மையர் குணமார்தரு மணமார்தருகுன்றில்
எறிநீர்வயல் புடைசூழ்தரு மிடும்பாவனமிதுவே. 6

*நெறி நீர்மையர், நீள் வானவர், நினையும் நினைவு ஆகி,*
*அறி நீர்மையில் எய்தும்(ம்) அவர்க்கு அறியும்(ம்) அறிவு அருளி,*
*குறி நீர்மையர் குணம் ஆர்தரு மணம் ஆர்தரு குன்றில்,*
*எறி நீர் வயல் புடை சூழ்தரும் இடும்பாவனம் இதுவே.*

neRi nIrmaiyar, nIL vAn2avar, nin2aiyum nin2aivu Aki,
aRi nIrmaiyil eytum(m) avarkku aRiyum(m) aRivu aruLi,
kuRi nIrmaiyar kuNam Artaru maNam Artaru kun2Ril,
eRi nIr vayal puTai cUztarum iTumpAvan2am ituvE.

*பொருள்:* சிவபெருமான் விரும்பி விளங்கும் இடம் இடும்பாவனம் ஆகும். இது குன்றளூரை அடுத்து உள்ளது. இவ்வூரில் தூய சிந்தனையைத் தூண்டும் மணத்தை வீசுகின்ற மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. இடும்பாவனத்தில் உள்ள இறைவர், தவ ஒழுக்கத்தால் சிறந்த முனிவர்கள், உயர்ந்த தேவர்கள் ஆகியோர் நினையும் நினைவுப் பொருளாகி விளங்குகின்றான். ஞானத்தால் தொழும் மேலான ஞானியர்கட்குத் தன்னை அறியும் அறிவை நல்குகின்றான். இவன் சிவலிங்கம் முதலான குறிகளில் இருந்து அருள்புரிகின்றான்.

**குறிப்புரை:** நெறிநீர்மையர் – ஒழுக்கத்தின்கண் நிற்கும் இயல்பினையுடைய முனிவர்கள், முனிவர்க்கும் தேவர்க்கும் தியானப் பொருளாய் இருப்பார் என்பது குறித்தவாறு. இவர்களைக் காட்டிலும் உயர்ந்தவர்கள் ஞானிகள். அவர்களை 'அறிநீர்மையினில் எய்தும் அவர்' எனக் குறித்தார்கள். அதாவது அறிவானும் அறியப்படும் பொருளும் அறிவுமாகிய மூன்றும் தனிநிலையற்று ஒன்றாயிருந்து அறியும் பரமஞானிகளுக்கு அறியும் அறிவருளி – சிவமாகிய தன்னையறியத் தக்க அறிவும் அருள, என்றது இறைவன் அறியுமாறு அறிந்தாலன்றி ஆன்மாக்கள் தாமாக அறிந்து கொள்ளும் ஆற்றல் இல்லாதன என்பது. 'உணருமா உணரே' என்பதும் இப்பொருட்டு. குறிநீர்மையர் – அங்ஙனம் அவனருளே கண்ணாகக் காணும் குறிக்கண் நிற்கும் சிவஞானிகள். குணமார்தரும் – இறைவனுக்குள்ள ஐந்தொழில் ஆற்றுதல் ஒழிந்த ஏனைய குணங்களைப் பொருந்த வைக்கும்.

He becomes the very form meditated upon by those who are poised in the righteous way, and by the supernal beings. Lord Civan confers on sages and seers the supreme knowledge. This will enlighten them to know the Divine path to salvation and finally to reach Him (*ஆன்மா அறிவித்தால் அறியும் பொருள். தானாக அறியும் ஆற்றல் அதற்கில்லை. அறிவானும், அறியப்படும் பொருளும், அறிவும் ஆகிய இம்மூன்றையும் ஒரே பொருளாக உள்ளத்தில் உணரக்கூடிய ஆற்றல் வாய்ந்தவர்கள் பரமஞானிகள். இவர்களுக்குச் சிவபெருமான் தன்னை அறியத்தக்க அறிவை அறிவுறுத்துகிறவன்*). Idum-baa-vanam is surrounded by fields overflowing with waters. Cool fragrant air flows from the hill. In such a sacred and fascinating Idum-baa-vanam Lord Civa graces those saints and seers with spectacular powers (except His five fold activities).

**Note:** His divine symbols: The Civa-linga, the holy ash, the matted hair, the beads of Rudraksha.

நீறேறிய திருமேனியர் நிலவும்முலகெல்லாம்
பாறேறிய படுவெண்டலை கையிற்பலிவாங்கக்
கூறேறிய மடவாளொரு பாகம்மகிழ்வெய்தி
ஏறேறிய விறைவர்க்கிட மிடும்பாவனமிதுவே. 7

*நீறு ஏறிய திருமேனியர், நிலவும்(ம்) உலகு எல்லாம்
பாறு ஏறிய படுவெண்தலை கையில் பலி வாங்க,
கூறு ஏறிய மடவாள் ஒருபாகம் மகிழ்வு எய்தி,
ஏறு ஏறிய இறைவர்க்கு இடம் - இடும்பாவனம் இதுவே.*

nIRu ERiya tirumEn2iyar, nilavum(m) ulaku ellAm
pARu ERiya paTu veN talai kaiyil pali vAgkA,
kURu ERiya maTavAL oru pAkam makizvu eyti,
ERu ERiya iRaivarkku iTam--iTumpAvan2am ituvE.

**பொருள்:** சிவபெருமானுக்குரிய இடம் இடும்பாவனம் ஆகும். இவன் திருமேனியில் நீறு அணிந்துள்ளான். விளங்கும் உலகெங்கணும் சென்று அன்பர்கள் இடும் உணவைப் பிரம கபாலத்தில் பெறுகின்றான். அந்தப் பிரம கபாலம் பருந்து உண்ணவரும் தசையோடு கூடிய காய்ந்த மண்டை ஓடு ஆகும். உமையம்மையைத் தன் திருமேனியின் ஒரு கூறாகிய இடப்பாகத்தில் ஏற்றுக் கொண்டுள்ளான். அவன் விடைமீது ஏறி மகிழ்ந்து அடியார்களுக்கு அருள் செய்ய வருகின்றான். இவனை அடைந்து வணங்குவீர்களாக.

**குறிப்புரை:** ஏறிய – மிகுந்த. பாறு – பருந்து. தலை – பிரமகபாலம். கூறு ஏறிய மடவாள் – தமது திருமேனிக்கண்ணேயே ஒரு பாதியாயமைந்த உமையாளை. ஒருபாகம் மகிழ்வெய்தி – தன்னின் வேறாக இடப்பாகத்து வைத்து மகிழ்ந்து. இதனால் சொற்பொருள் போல அம்மையோடு ஒன்றாய் இருக்குந் தன்மையும் சொல்லும் பொருளும் போல அம்மையை வேறாக வைத்து விரும்பும் தன்மையும் விளக்கியவாறு. ஏறு – இடபம்.

Lord Civan's divine body is smeared with holy ash. He seeks alms all over the world holding in His hand a severed white skull on which hawks are perched. Behold the shrine Idum-baa-vanam, of the Lord whose mount is the Bull, who is joyously concorporate with His bashful consort.

**Note:** The begging bowl of Lord Civa is a skull. It is occasionally described as a skull to which some flesh is sticking. This attracts the sharp-eyed hawk.

தேரார்தரு திகழ்வாளெயிற் றரக்கன்சிவன்மலையை
ஓராதெடுத் தார்த்தான்முடி யொருபஃதவைநெரித்துக்
கூரார்தரு கொலைவாளொடு குணநாமமுங்கொடுத்த
ஏரார்தரு மிறைவர்க்கிட மிடும்பாவனமிதுவே. 8

தேர் ஆர்தரு திகழ் வாள் எயிற்று அரக்கன், சிவன்மலையை
ஓராது எடுத்து ஆர்த்தான், முடி ஒருபஃது அவை நெரித்துக்,
கூர் ஆர்தரு கொலைவாளொடு குணம் நாமமும் கொடுத்த,
ஏர் ஆர்தரும், இறைவர்க்கு இடம் - இடும்பாவனம் இதுவே.

tEr Artaru tikaz vAL eyiRRu arakkan2, civan2 malaiyai
OrAtu eTuttu ArttAn2, muTi orupaHtu avai nerittu,
kUr Artaru kolaivALoTu kuNam nAmamum koTutta,
Er Artarum, iRaivarkku iTam--iTumpAvan2am ituvE.

**பொருள்:** வானவெளியில் தேர்மிசை ஏறிவந்த ஒளிபொருந்திய பற்களையும் உடைய அரக்கனாகிய இராவணன், சிவபிரான் எழுந்தருளிய கயிலை மலையின் சிறப்பை ஓராது, தன் தேர் தடைப்படுகிறது என்ற காரணத்திற்காக மலையைப் பெயர்த்துச் செருக்கால் ஆரவாரம் செய்ய, அவன் பத்துத் தலைமுடிகளையும் நெரித்த பின் அவன் வருந்தி வேண்ட, கருணையோடு கூரிய தெய்வீக வாள், குணத்தைப் புலப்படுத்தும் இராவணன் என்ற பெயர் ஆகியவற்றைக் கொடுத்தருளிய அழகனாகிய இறைவற்கு இடம் இடும்பாவனம் ஆகும்.

**குறிப்புரை:** தேர்ஆர்தரு – ஆகாயத்தின்கண்ணே அமர்ந்துவந்து. அரக்கன் – இராவணன். ஓராது – ஆராயாமல், அரக்கனாகிய ஆர்த்தானது முடி பத்தினையும் நெரித்து என இயைத்துப் பொருள் காண்க. கொலைவாள் – சந்திரஹாசம். இது அரக்கனை நெரித்த பின்னரே இரங்கி அருளப்பெற்றது. குணநாமம் – அழுகைக் குணத்தால் வந்த பெயராகிய இராவணன் என்பது.

When the aerial car of the bright-toothed King of Sri Lanka was blocked, he thoughtlessly tried to uproot Civa's mountain, all the while raising a loud cry. The Lord crushed his ten heads and then relenting, blessed Him with a sharp divine sword and also a characteristic name, Raavanan. Behold, this Lord Civan's beauteous shrine is Idum-baa-vanam.

**Note:** Characteristic name: The name Raavanaa means 'He who cries aloud'.

பொருளார்தரு மறையோர்புகழ் விருத்தர்பொலிமலிசீர்த்
தெருளார்தரு சிந்தையொடு சந்தம்மலர்பலதூய்
மருளார்தரு மாயன்னயன் காணார்மயலெய்த
இருளார்தரு கண்டர்க்கிட மிடும்பாவனமிதுவே. 9

பொருள் ஆர்தரு மறையோர் புகழ் விருத்தர் பொலி மலி சீர்த்
தெருள் ஆர்தரு சிந்தையொடு சந்தம் மலர்பல தூய்,
மருள் ஆர்தரு மாயன்(ன்) அயன் காணார் மயல் எய்த,
இருள் ஆர்தரு கண்டர்க்கு இடம் - இடும்பாவனம் இதுவே.

poruL Artarum maRaiyOr pukaz viruttar poli mali cIrt
teruL Artaru cintaiyoTu cantam malar pala tUy,
maruL Artaru mAyan2(n2) ayan2 kANAr mayal eyta,
iruL Artaru kaNTarkku iTam--iTumpAvan2am ituvE.

**பொருள்:** தருக்கு மிகுந்த மாயனும் அயனும் காணாது மயங்கப் பொருள் நிறைந்த வேதங்களைக் கற்றுணர்ந்த அந்தணர்களால் புகழ்ந்து போற்றப் பெறும் பழமையானவரும், புகழ்மிக்க அம்மறையோர்களால் தெளிந்த சிந்தையோடு பல்வகை நிறங்களுடன் கூடிய மலர்களைத் தூவி வழிபடப் பெறுபவரும் ஆகிய அருள் நிறைந்த கண்டத்தை உடைய சிவபிரானுக்குரிய இடமாக விளங்கும் இடும்பாவனம் இதுவேயாகும்.

**குறிப்புரை:** பொருளார் தரும் மறை – பொருள் நிறைந்த வேதம். புகழ் விருத்தர் – புகழால் பழையவர்கள். தெருள் – தெளிவு. மருளார் தருமாயன் அயன் – தாமே தலையென்னும் தருக்கு நிறைந்த அவரிருவரும். இருளார்தரு – இருளையொத்த. மலர்பல தூய் (தொழும்) இடம் இடும்பாவனம் என ஒருசொல் வருவித்து முடிக்க.

'Maya ridden' Vishnu and Brahma, unable to behold Lord Civan stood amazed. With metric hymns and flowers galore, He is hailed by men of renown - the practitioners of the Vedas rich in import - whose intellect is marked by clarity par excellence. Behold Idum-baa-vanam, the shrine of Lord Civan whose neck has a dark blue patch.

**Note:** Brahma, Vishnu and Guna-Rudran form the trinity. However, neither Brahma nor Vishnu could comprehend Civa's greatness. Civa, the Almighty is Maha-Ṛudran (குணாதீதருத்ரன்).

தடுக்கையுட னிடுக்கித்தலை பறித்துச்சமணடப்பார்
உடுக்கைபல துவர்க்கூறைக ளுடம்பிட்டுழல்வாரும்
மடுக்கண்மலர் வயல்சேர்செந்நெல் மலிநீர்மலர்க்கரைமேல்
இடுக்கண்பல களைவானிட மிடும்பாவனமிதுவே. 10

தடுக்கை உடன் இடுக்கித் தலை பறித்துச் சமண் நடப்பார்,
உடுக்கைபல துவர்க்கூறைகள் உடம்பு இட்டு உழல்வாரும்,
மடுக்கள் மலர் வயல் சேர் செந்நெல் மலி நீர் மலர்க் கரைமேல்
இடுக்கண்பல களைவான் இடம் - இடும்பாவனம் இதுவே.

taTukkai uTan2 iTukkit talai paRittuc camaN naTappAr,
uTukkaipala tuvarkkURaikaL uTampu iTTu uzalvArum,
maTukkaL malar vayal cEr cennel mali nIr malark karaimEl
iTuk kaN pala kaLaivAn2 iTam--iTumpAvan2am ituvE.

**பொருள்:** பனை ஓலையால் செய்த தடுக்கைத் தம் கையில் இடுக்கிக் கொண்டு தலையில் உள்ள உரோமங்களைப் பறித்து முண்டிதமாக நடக்கும் சமணரும், உடுப்பதற்குரிய காவியுடைகளை அணிந்து திரியும் புத்தரும் அறிய இயலாதவனாய், துன்பம் நீக்கி இன்பம் அருளும் இறைவனது இடம், தாமரை செங்கழுநீர் போன்ற மலர்களை உடைய மடுக்களும், செந்நெல் வயல்களும் சூழ்ந்த, நீர்மலர் மிக்க நீர்நிலைகளின் கரைமேல் விளங்கும் இடும்பாவனம் இதுவேயாகும்.

***குறிப்புரை:*** தடுக்கு – பனையோலை மணை. இடுக்கி – தமது அக்குளுள் அடக்கி. உடுக்கை பல துவர்க்கூறைகள் உடம்பு இட்டு – உடுத்துவனவாகப் பல காவியாடைகளை உடம்பில் பூண்டு. மடுக்கள் – ஆழமான நீர்நிலைகள். இடுக்கண் – துன்பம்.

With mats held in armpits the samanars of shaved heads, roam about here and there. So too the Buddhists robed in manifold brown-red vestments. Behold this is Idum-baa-vanam, the shrine of Lord Civan who sets at nought all troubles! It is girt with pools and choice rice fields enclosed by ridges where flowers bloom.

கொடியார்நெடு மாடக்குன்ற ளூரிற்கரைக்கோல
இடியார்கட லடிவீழ்தரு மிடும்பாவனத்திறையை
அடியாயுமந் தணர்காழியு ளணிஞானசம்பந்தன்
படியாற்சொன்ன பாடல்சொலப் பறையும்வினைதானே. 11

*கொடி ஆர் நெடுமாடக் குன்றளூரின் கரைக் கோல*
*இடி ஆர் கடல் அடி வீழ்தரும் இடும்பாவனத்து இறையை,*
*அடி ஆயும் அந்தணர் காழியுள் அணி ஞானசம்பந்தன்*
*படியால் சொன்ன பாடல் சொல, பறையும், வினைதானே.*

koTi Ar neTumATak kun2RaLUrin2 karaik kOla
iTi Ar kaTal aTi vIztarum iTumpAvan2attu iRaiyai,
aTi Ayum antaNar kAziyuL aNi njAn2acampantan2
paTiyAl con2n2a pATal cola, paRaiyum, vin2aitAn2E.

**பொருள்:** கொடிகள் கட்டிய நீண்ட மாடங்களோடு கூடிய குன்றளூரின் கரைமீது இடித்து மோதுகின்ற அலைகளையுடைய அழகிய கடல் தன் அலைகளால் அடிவீழ்ந்து இறைஞ்சும்

இடும்பாவனத்து இறைவனை, திருவடிகளையே சிந்தித்து ஆய்வு செய்யும் அந்தணர்கள் வாழும் காழிப்பதிக்கு அணியாய ஞானசம்பந்தன் முறையோடு அருளிய இப்பாடல்களை ஓத, வினைகள் நீங்கும்.

***குறிப்புரை:*** கொடியார் நெடுமாடக் குன்றளூர் – கொடிகள் கட்டிய நீண்ட மாடங்களோடு கூடிய குன்றளூரினது. குன்றளூர் என்பது இடும்பனது தலைநகரம். இதனையே சுவாமிகள் பெயர்க் குறையாக் குன்றில் என்று குறித்தவாறு பலவிடங்களில் காண்க. கோலக்கரை இடியார் கடல் அடிவீழ்தரும் இடும்பாவனம் – அழகிய கரையை இடித்தலைப் பொருந்திய கடல் அடிக்கண் மடங்கி வீழும் இடும்பாவனம். அடி ஆயும் அந்தணர் – திருவடியின்பத்தைச் சிந்திக்கும் அந்தணர்கள். படியாற் சொன்ன பாடல் – அவர் அவர் பக்குவத்திற்கேற்ப முறையால் சொன்ன பாடல். ஊதப்பறையும் மணல்போலப் பாடல் சொல்லப் பறையும் வினை என்பதாம்.

Gnaanasambandan - the Jewel of Kaazhi where dwell compassionate men of virtue, who, forever, contemplate on the feet of Lord Civa - hath chanted these hymns on the Lord-God of Idum-baa-vanam at Kundralur which is close to the sea whose waves dash against the shore and flow back to the sea. It abounds in huge mansions whence waft flags galore. All Karmas stand annulled if these hymns are sung in propriety.

**Note:** It is good to remember that the singing of the verses of this youthful saint, tones down our karmic sufferings.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*17ஆம் பதிகம் முற்றிற்று*
End of 17th Hymn

உ
சிவமயம்

# 18. திரு நின்றியூர்

## திருத்தலவரலாறு:

திருநின்றியூர் என்ற திருத்தலமானது சோழ நாட்டு காவிரி வடகரைத் தலம். நாகை மாவட்டம் மயிலாடுதுறை, வைத்தீஸ்வரன் கோயில் பேருந்து வழியில் உள்ளது. திருமகள் வழிபட்டு நிலைப்பேறு எய்திய தலம். சோழன் ஒருவன் திருவிளக்கிட்டுத் தினந்தோறும் வழிபட்டு வந்தான். அவன் கொண்டு வந்த திரி ஒருநாள் நின்றுவிடவே, சிவலிங்கத்தினின்றும் ஒரு சோதி தோன்றி, அவன் வழிபாட்டிற்கு இடையூறு உண்டாகாமல் உதவியது. அதனால் திரிநின்றவூர் ஆயிற்று. அது இப்போது திருநின்றவூர் என வழங்குகின்றது என்பது செவி வழிச் செய்தி. பரசுராமன் நின்றியூரை இறைவற்கும், பக்கத்தில் உள்ள 360 வேலி நிலத்தை வேதியர்கட்கும் அளித்து வழிபட்டான் என்பது புராண வரலாறு. இதனையே சுந்தரர் தேவாரம் தக்கேசி மூன்றாம் பாடல் குறிப்பிடுகிறது. அடுத்த பாடலில் பசு பால் சொரிந்து அபிஷேகித்து வந்ததாகவும் ஒரு வரலாறு குறிக்கப் பெற்றுள்ளது. சுவாமி பெயர் லக்ஷ்மிபுரீசுவரர், மகாலட்சுமிநாதர். அம்மை பெயர் உலகநாயகி. தீர்த்தம் நீலதீர்த்தம் (இது அபிதான சிந்தாமணி கூற்று) மகாலக்ஷ்மி தீர்த்தம் எனவும் வழங்கும்.

## கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டு ஒன்றே ஒன்றுதான் உள்ளது. 1921ஆம் ஆண்டில் படியெடுக்கப் பெற்றுள்ளது. திரிபுவன சக்ரவர்த்தி இராஜராஜ தேவர்க்கு ஆண்டு 15ஆவது கும்பரவி அட்டமி ஞாயிறு மூல நட்சத்திரம் என்று தொடங்குகிறது. தருமை ஆதீனக் கோயில்களில் ஒன்று.

## பதிக வரலாறு:

புள்ளிருக்குவேளூரை வணங்கிய புகலிவேந்தர் புகழான் நீண்ட நின்றியூருக்கு எழுந்தருளினார்கள். அங்கே எழுந்தருளியுள்ள சிவபெருமான் திருவடிகளை ஆராக் காதலோடு வணங்கினார்கள். ‘சூலம் படை’ என்னும் பதிகத்தை அருளிச் செய்தார்கள். அதில் நின்றியூர் நிமலரையல்லாது எனது உள்ளம் வேறு ஒருவரையும் உணராது எனவும், பாதம் பணிவார் அச்சம் பழி பாவம் இலராவர் எனவும் குறிப்பிடுவது அன்பருள்ளத்திற்குப் பெருவிருந்து.

## 18. THIRU-NINDRI-OOR

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-nindri-oor is a sacred place in Chola Naadu on the north bank of river Cauvery. It is situated in the bus route between Mayilaaduthurai and Vaiththeeswaran Koyil in the Naagai district. This is sacred place where Kalaimagal offered worship to get salvation. A Chola King is said to have offered worship daily after lighting a lamp. One day, the lamp wick he had brought stopped burning; a light from the Siva Lingam appeared so as not to let the darkness interrupt his worship. From this episode came the name Thirininravoor. That name got corrupted 'Thiruninravoor', according to folklore.

According to Puraana lore, Parasuraaman giftd Ninriyoor to the Lord and 360 'veli' of land situated nearby to Vedhiyar and offered worship. This is also mentioned in the third verse of Thakkesi of Sundharar Thevaaram. The next verse depicts the story of a cow bathing the Lord with its milk. The Lord's name is Lakshmipureesvarar, or Mahaalakshminaathar and the Goddess's name is Ulaganaayaki. The holy ford is Neelatheerththam (As noted in the Abidhaana Chinthaamani). It is also known as Mahaalakshmi Theerththam.

### Stone Inscriptions

There is only one inscription in this temple. It has been copied in 1921. It starts with the words 'In the 15th Year of Thiribuvana Chakravarthi Raajaraaja Thevar, on Kumbaravi Attami Sunday Moolam asterism'. This temple is under the administration of Dharumai Aadheenam.

### INTRODUCTION TO THE HYMN

This shrine is close to Pulli-ruk-ku-veloor also adored by our saint. From Pulli-ruk-ku-veloor, now known as Vaidheeswaran Kovil, our young saint went to Thiru-

Nindri-oor, a holy town celebrated by the Thēvaaram trio (*மூவர் முதலிகள் - திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர்*). It was here he sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 18. திரு நின்றியூர் — 18. THIRU-NINDRI-OOR

பண் : நட்டபாடை — ***Pann: Natta Paadai***
ராகம் : கம்பீரநாட்டை — ***Raagam : Kambeera Naattai***

சூலம்படை சுண்ணப்பொடி சாந்தஞ்சுடுநீறு
பாலம்மதி பவளச்சடை முடிமேலதுபண்டைக்
காலன்வலி காலின்னொடு போக்கிக்கடிகமழும்
நீலம்மலர்ப் பொய்கைநின்றி யூரின்னிலையோர்க்கே. 1

*சூலம் படை; சுண்ணப்பொடி சாந்தம் சுடுநீறு;
பால் அம்மதி பவளச்சடை முடிமேலது - பண்டைக்
காலன் வலி காலி(ன்)னொடு போக்கிக், கடி கமழும்
நீல(ம்)மலர்ப்பொய்கை நின்றியூரின் நிலையோர்க்கே.*

cUlam paTai; cuNNappoTi cAntam, cuTu nIRu;
pAl ammati pavaLac caTai muTi mElatu--paNTaik
kAlan2 vali kAli(n2)n2oTu pOkki, kaTi kamazum
nIla(m) malarp poykai nin2RiyUrin2 nilaiyOrkkE.

**பொருள்:** சிவபெருமான் திருநின்றியூரில் நிலையாக எழுந்தருளியுள்ளான். அவ்வூரில் மணம் கமழும் நீலமலர்கள் மலர்ந்த பொய்கைகள் பல உள்ளன. சிவன் முன்னொரு காலத்தில் காலனின் வலிமையைக் காலால் உதைத்துப் போக்கினவன். இவனுக்குப் படைக்கலம் 'சூலம்'. சுண்ணப்பொடியும், சந்தனமும் 'திருநீறே'. பால்போலும் வெண்மையான பிறைமதி அவனது செந்நிறச் சடைமுடியின் மேல் உள்ளது.

**குறிப்புரை:** காலன் வலிபோக்கி, நின்றியூரின் நிலையோர்க்கு, சூலம் படை, சுண்ணப்பொடி, சாந்தம், சுடுநீறு, மதி முடிமேலது என்க. நிலையோர் – நிலைபெறுதலை உடையார். சுண்ணப் பொடியும் சாந்தமும் நீறேயாம். பால் அம்மதி – பால்போலும் அழகிய மதி. அம்தவிர்வழி வந்த சாரியையுமாம். பண்டைக்காலன் என்றது இப்போது சிவனடியார்மேல் செல்லும் முனைப்பற்று இருக்கின்ற நிலையை உளத்தடைத்து.

Lord Civan's weapon is a trident (Trisool, *மூவிலைச்சூலம்*); Holy ash is His gold-dust as well as sandalwood paste are worn by Him; the milk-white crescent moon adorns His ruddy matted hair; In the days of yore, He kicked Yama to death. He ever abides at Nindri-oor. There are pools all around this place where fragrant blue lilies are all bloom.

**Note:** Thiru-Nindri-oor is not to be confused with Thiru-Nindra-oor which is associated with Poosalaar Naayanaar and is in Tondai Mandalam.

அச்சம்மிலர் பாவம்மிலர் கேடும்மிலரடியார்
நிச்சம்முறு நோயும்மிலர் தாமுந்நின்றியூரில்
நச்சம்மிட றுடையார்நறுங் கொன்றைநயந்தாளும்
பச்சம்முடை யடிகடிருப் பாதம்பணிவாரே. 2

*அச்சம்(ம்) இலர்; பாவம்(ம்) இலர்; கேடும்(ம்) இலர்; அடியார்,*
*நிச்சம்(ம்) உறு நோயும்(ம்) இலர்; தாமும் - நின்றியூரில்*
*நச்சம் மிடறு உடையார், நறுங்கொன்றை நயந்து ஆளும்*
*பச்சம்(ம்) உடை அடிகள், திருப்பாதம் பணிவாரே.*

accam(m) ilar; pAvam(m) ilar; kETum(m) ilar; aTiyAr,
niccam(m) uRu nOyum(m) ilar tAmum--nin2RiyUril
naccam miTaRu uTaiyAr, naRugkon2Rai nayantu ALum
paccam(m) uTai aTikaL, tiruppAtam paNivArE.

***பொருள்:*** திருநின்றியூரில் எழுந்தருளி விளங்கும் சிவபெருமான் நஞ்சை மிடற்றிலே நிறுத்தித் தேவர்களைக் காத்து அருளியவர். மணம் கமழும் கொன்றை மலர்களை விரும்பிச் சூடியவர். தம்மை வழிபடும் அடியவர்களை ஆட்கொண்டருளும் அன்புடையவர். அவரது பாதம் பணிவார் அச்சம், பாவம், கேடு, நாள்தோறும் வரும் நோய் ஆகியன இலராவர்.

**குறிப்புரை:** நின்றியூரில் அடிகள் திருப்பாதம் பணியும் அடியார் அச்சமுதலாயின இலராவர் எனக் கூட்டுக. அச்சம் இலர் என்றது தமக்கு உறுதுணையாவார் ஒருவரைப் பெற்றமையால். இந்நிலையை அப்பர் சுவாமிகளும் 'சுண்ணவெண் சந்தனச் சாந்தும்' என்னும் பதிகத்து 'அஞ்சுவது யாதொன்றும்மில்லை அஞ்சவருவதுமில்லை' என்றமை காண்க. பாவம் இலர் – பிராரத்த நுகர்ச்சிக் கண்ணும் இவர்கள் இது செய்தார் யானிது செய்தேன் என்னும் தருக்கதின்றிச் செய்வார்கள் ஆதலின் மேல்வினைக்கு வித்துமாகும் பாவம் இலர். கேடும் இலர் – அவ்வினை காரணமாக வரும் கேடும் இலராவர். நிச்சம் – நித்யம். நோய் – துன்பங்கள். நச்சம் – நஞ்சு. அம் சாரியை. நறுங்கொன்றை நயந்து – மணம் பொருந்திய

கொன்றைப் பூவை விரும்பி. ஆளும் – அதனை விரும்பி அன்போடு சாத்தும் அடியார்களை ஆளுகின்ற. பச்சம் உடை அடிகள் – பட்சமுடைய பெருமான். பச்சம், பக்ஷம் என்பது எதுகை நோக்கித் திரிந்து நின்றது.

The Lord of Nindri-oor held the venom in His throat and gave protection to devas. He much loves to wear the fragrant Kondrai flower. He confers His grace on His faithful devotees. Those who worship His Feet will get rid of fear, sin, loss, as well as day-to-day sufferings and all diseases and all evil.

**Note:** His special preference: Kondrai garland is Civa's 'Adaiyaala Maalai' – the wreath of identification.

பறையின்னொலி சங்கின்னொலி பாங்காரவுமார
அறையும்மொலி யெங்கும்மவை யறிவாரவர்தன்மை
நிறையும்புனல் சடைமேலுடை யடிகணின்றியூரில்
உறையும்மிறை யல்லதென துள்ளம்முணராதே. 3

*பறையின்(ன்) ஒலி சங்கின்(ன்) ஒலி பாங்கு ஆரவும், ஆர
அறையும்(ம்) ஒலி எங்கும்(ம்) அவை அறிவார் அவர் தன்மை;
நிறையும் புனல் சடைமேல் உடை அடிகள், நின்றியூரில்
உறையும்(ம்) இறை, அல்லது எனது உள்ளம்(ம்) உணராதே!*

paRaiyin2(n2) oli cagkin2(n2) oli pAgku Aravum, Ara
aRaiyum(m) oli egkum(m) avai aRivAr avar tan2mai;
niRaiyum pun2al caTai mEl uTai aTikaL, nin2RiyUril
uRaiyum(m) iRai, allatu en2atu uLLam(m) uNarAtE!

**பொருள்:** திருநின்றியூரில் உறையும் சிவபெருமான் நிறைந்த கங்கைப் புனலைச் சடைமிசை உடையவர். அவ்வூரில் பறையடிக்கும் ஒலி, சங்கு முழங்கும் முழக்கம், ஊரின் எல்லாப் பக்கங்களிலும் மிகவும் ஒலிக்கும் ஏனைய ஒலிகள், ஆகிய யாவும், இறைவனது நாத தத்துவத்தை உணர்த்துகின்றன என்பதை அறிவாளர்கள் உணர்வர். இவ்வூரில் உறையும் சிவபெருமானை அல்லாது என் உள்ளம் வேறு எவரையும் உணராது.

***குறிப்புரை:*** பாங்கு ஆரவும் – பக்கங்களில். மிகவும் = அறையும் ஒலி – மிக அடித்தலால் உண்டாகும் (ஏனைய) ஒலிகள். இவை தோற்கருவி ஒலிகள். அறிவார் அடிகள் இறை அவர் தன்மையல்லது உள்ளம் உணராது என முடிக்க. எங்கும் அவையறிவார் – எவரும் அவ்வொலியினை அறிபவர். என் உள்ளம் உணராது என்பது எங்குங் காண்பது அவனுருவே ஆதலின்.

The sound of drum, the blare of conch, and the various other heavy noise resonating from the sides pervade all space, and these are familiar unto the knowledgeable ones that know of His nature. My soul cognizes nothing but the deity of Nindri-oor, the Lord that sports on His matted crest the abundant flood waters of the river Ganges.

**Note:** Knowledgeable ones - Devotees who are wholly solely and exclusively devoted to Civa. The Naayanmaars adore Civa alone. They leave out of account 'Siru Deivangal' - minor gods.

பூண்டவ்வரை மார்பிற்புரி நூலன்விரிகொன்றை
ஈண்டவ்வத னோடும்மொரு பாலம்மதியதனைத்
தீண்டும்பொழில் சூழ்ந்ததிரு நின்றியதுதன்னில்
ஆண்டகழ றொழலல்லது வறியாரவரறிவே. 4

*பூண்ட(வ்) வரைமார்பில் புரிநூலன் விரிகொன்றை*
*ஈண்ட(வ்) அதனோடு(ம்) ஒரு பால் அம்மதி அதனைத்*
*தீண்டும் பொழில் சூழ்ந்த திரு நின்றிஅதுதன்னில்*
*ஆண்ட கழல் தொழல் அல்லது, அறியார் அவர் அறிவே.*

pUNTa(v) varaimArpil purinUlan2, viri kon2Rai
INTa(v) atan2OTu(m) oru pAl ammati atan2ait
tINTum pozil cUznta tiru nin2Ri atu tan2n2il
ANTa kazal tozal allatu, aRiyAr avar aRivE!

***பொருள்:*** வானளாவிய சோலைகள் சூழ்ந்த திருநின்றியூரில் எழுந்தருளிய சிவபெருமான் தனது மலை போன்ற மார்பில் அணிகலன்களைப் பூண்டுள்ளான். முப்புரி நூலை அணிந்து உள்ளான். விரிந்த கொன்றை மலர் மாலையையும் அணிந்து உள்ளான். அதனோடு பொருந்தப் பால் போன்ற வெண்மையான திங்களைத் தன்சடைமேல் சூடி உள்ளான். அவ்விறைவன் திருவடிகளைத் தொழுதல் அல்லது, அவன் இயல்புகளை அடியவர் எவரும் அறியார்.

***குறிப்புரை:*** பூண்டவரை மார்பு – அணிகளைப் பூண்ட மலை போலத் திண்ணிய மார்பு. பூண்டவ்வரை – விரித்தல் விகாரம். ஈண்ட – செறிய. கொன்றை ஈண்ட மதி அதனைத் தீண்டும் பொழில் சூழ்ந்த திருநின்றி எனக்கூட்டுக. திருவடியைத் தொழுதலல்லது அவர் அறிவான் அறியார் என ஆன்மாக்கள் அருளே கண்ணாகக் காணும் ஆற்றல் விளக்கியவாறு.

The Lord wears on His hill like and well adorned chest the three strands of a sacred thread. In His crest rests the crescent moon, beside the burgeoning kondrai. True devotees know not but the worship of the Lord-God's ankleted Feet enshrined in Nindri-oor girt with gardens the tops of which brush against the beauteous moon.

குழலின்னிசை வண்டின்னிசை கண்டுகுயில்கூவும்
நிழலின்னெழி றாழ்ந்தபொழில் சூழ்ந்தநின்றியூரில்
அழலின்வல னங்கையது வேந்தியனலாடும்
கழலின்னொலி யாடும்புரி கடவுள்களைகண்ணே. 5

குழலின்(ன்) இசை வண்டின்(ன்) இசை கண்டு குயில் கூவும்
நிழலின்(ன்) எழில் தாழ்ந்த பொழில் சூழ்ந்த நின்றியூரில்,
அழலின் வலன் அங்கையது ஏந்தி, அனல் ஆடும்
கழலின்(ன்) ஒலி ஆடும் புரி கடவுள் களைக(ண்)ணே.

kuzalin2(n2) icai vaNTin2(n2) icai kaNTu, kuyil kUvum
nizalin2(n2) ezil tAznta pozil cUznta nin2RiyUril,
azalin2 valan2 agkaiyatu Enti, an2al ATum
kazalin2(n2) oli ATum puri kaTavuL kaLaika(N)NE.

**பொருள்:** திருநின்றியூரில் குழலின் இசை, வண்டின் இசை ஆகியவற்றைக் கேட்டுக் குயில்கள் கூவுகின்றன. அங்குள்ள சோலைகளில் நிழல் அழகாகத் தங்கி உள்ளது. இவ்வாறு சோலைகளால் சூழப்பட்ட திருநின்றியூரில் விளங்கும் சிவபெருமான் தனது வலத் திருக்கரத்தில் அழலை ஏந்தி, அனலிடை நின்று, தனது திருவடிகளில் அணிந்துள்ள வீரக்கழல்களின் ஒலிகள் கேட்குமாறு ஆடுகின்றான். அவ்வாறு ஆடுகின்ற விரும்பத்தக்க சிவன்தான் நமக்கு என்றும் ஆதாரமானவன்.

**குறிப்புரை:** பாடுவாரைப் பார்த்து மற்றவர்க்கும் பாடத் தோன்றுவதுபோலக் குழலிசையும் வண்டிசையும் கேட்டுக் குயில் கூவுகின்றன. நிழலின் எழில் தாழ்ந்த பொழில் – ஒளியும் நிழலும் விரவித் தோன்றும் நிலை சித்திரப் பூம்படாம் விரித்தது போலுமாகலின் நிழலின் எழில் தாழ்ந்த பொழில் என்பர். அழலின் வலன் – வலமாகச் சுற்றியெரியும் மழு. ஆடும்புரி கடவுள் – ஆடுகின்ற விரும்பத்தக்க கடவுள். களைகண் – நமக்கு ஆதாரம்.

Listening to the music of the flute and the humming of bees, Kuyils chirp melodies in the shady charming groves of Nindri-oor where, holding a flame in His

right hand, He dances in fire. It is the resounding ankleted Feet of the Lord that dances in fire, that constitute our sole refuge.

**Note:** The Kuyils (Indian cuckoos) sing in sympathetic reaction.

மூரன்முறு வல்வெண்ணகை யுடையாளொருபாகம்
சாரன்மதி யதனோடுடன் சலவஞ்சடைவைத்த
வீரன்மலி யழகார்பொழின் மிடையுந்திருநின்றி
யூரன்கழ வல்லாதென துள்ளம்முணராதே. 6

மூரன் முறுவல் வெண் நகை உடையாள் ஒருபாகம்
சாரல் மதி அதனோடு உடன் சலவம் சடை வைத்த
வீரன் மலி அழகு ஆர் பொழில் மிடையும் திரு நின்றி -
ஊரன், கழல் அல்லாது எனது உள்ளம்(ம்) உணராதே!

mUral muRuval veN nAkai uTaiyAL oru pAkam,
cAral mati atan2OTu uTan2 calavam caTai vaitta
vIran2, mali azaku Ar pozil miTaiyum tiru nin2Ri--
yUran2, kazal allAtu, en2atu uLLam(m) uNarAtE!

**பொருள்:** அழகு மலிந்த, சோலைகள் செறிந்த திருநின்றியூரில் எழுந்தருளிய வீரம் பொருந்திய சிவபெருமான் புன்முறுவலைத் தரும் வெண்மையான பற்களை உடைய உமையம்மையைத் தன் திருமேனியில் ஒரு பாகமாகக் கொண்டுள்ளான். சடைமுடியில் பிறைமதியை வைத்து உள்ளான். அதைச் சார்ந்து கங்கையையும் வைத்துள்ளான். இவனுடைய திருவடிகளை அல்லாது எனது உள்ளம் வேறு ஒன்றையும் உணராது.

**குறிப்புரை:** மூரல் முறுவல் – மிகச் சிறிய புன்சிரிப்பு, சலவம் – கங்கை. கழலைப் பற்றிய உள்ளத்திற்கு, வேறொன்றையும் உணர முடியாமையானும் உணர்ந்து ஆகவேண்டுவது இன்மையானும் உள்ளம் உணராது என்றார்.

The Lord Hero Civan who is concorporate with Umaa Devi of white teeth and gentle smile, sports on His matted crest the cool moon and the Ganga. It is of Nindri-Yur which abounds in exceedingly beautiful gardens. My soul will cognise nothing but His ankleted Feet.

Note: 'Saaral Mathi' - The word 'Saaral' means slope/drizzle/driven wind. It is best, translated in Shakespeare's phrase 'Moist Moon' - 'Cool Moon', also reflects the idea of *சாரல்* or drizzle.

பற்றியொரு தலைகையினி லேந்திப்பலிதேரும்
பெற்றியது வாகித்திரி தேவர்பெருமானார்
சுற்றியொரு வேங்கையத ளோடும்பிறைசூடும்
நெற்றியொரு கண்ணார்நின்றி யூரின்னிலையாரே. 7

பற்றி ஒரு தலை கையினில் ஏந்திப் பலி தேரும்
பெற்றி அது ஆகித் திரி தேவர்பெருமானார்,
சுற்றி ஒரு வேங்கை அதளோடும் பிறை சூடும்
நெற்றி ஒருகண்ணார் நின்றியூரின் நிலையாரே.

paRRi oru talai kaiyin2il Entip pali tErum
peRRi atu Akit tiri tEvar perumAn2Ar,
cuRRi oru vEgkai ataLOTum piRai cUTum
neRRi oru kaNNAr--nin2RiyUrin2 nilaiyArE.

**பொருள்:** திருநின்றியூரின்கண் நிலையாக எழுந்தருளி உள்ள சிவபெருமான் பிரமனது தலைகளில் ஒன்றைக் கிள்ளி, அதனைக் கையில் ஏந்திப் பலி கேட்கும் இயல்பினனாய்த் திரிகின்றான். தேவர்களுக்குத் தலைவனாக விளங்குகின்றான். புலித்தோலைத் தனது இடுப்பில் ஆடையாகச் சுற்றிக் கட்டி உள்ளான். தனது சடைமுடியில் பிறைச் சந்திரனைச் சூடி உள்ளான். நெற்றியில் மூன்றாவதாக ஒரு கண்ணை உடையவன். அவனை நாம் துதிப்போமாக.

**குறிப்புரை:** தலை கையினில் பற்றி ஏந்தித் தேரும் பெற்றியதுவாகியே திரிகின்ற தேவர் பெருமானார் என இயைக்க. பலி பெற்றியதுவாகி எனவே அப்பெற்றி அவர்க்கு இயல்பன்மையும், தாருகாவனத்து முனிவர்கள்பால் வைத்த தடையிலாக் கருணையே காரணம் என்பதும் வெளிப்படை. சுற்றி – அரையைச் சுற்றி. வேங்கை – புலித்தோல்.

Holding a skull in His hand and seeking alms from the public, the God of the Devas roams about. He is clad in a tiger-skin; He wears a crescent moon and sports an eye on His forehead. He, for ever, abides in Nindri-oor.

* * * * * * * 8

**Note:** According to the Dharmapuram Aadheenam Edition (1953/1997) verse no. 8 of this hymn is not traceable. According to the edition of Institute Francais D' Indologic (1984), this patikam has only ten verses. The eighth verse of

Sambandar's hymn usually refers to Raavanaa's uprooting Mount Kailas. In the present patikam, the last verse makes a reference to Raavanaa, so it is likely that this patikam contains ten verses only.

நல்லம்மலர் மேலானொடு ஞாலமதுவுண்டான்
அல்லரென வாவரென நின்றும்மறிவரிய
நெல்லின்பொழில் சூழ்ந்தநின்றி யூரின்னிலையாரெம்
செல்வரடி யல்லாதென சிந்தையுணராதே. 9

நல்ல(ம்) மலர் மேலானொடு ஞாலம்(ம்) அது உண்டான்
"அல்லர்" என, "ஆவர்" என, நின்றும்(ம்) அறிவு அரிய -
நெல்லின் பொழில் சூழ்ந்த - நின்றியூரில் நிலை ஆர் எம்
செல்வர் அடி அல்லாது, என சிந்தை உணராதே.

nalla(m) malar mElAn2oTu njAlam(m) atu uNTAn2,
"allar" en2a, "Avar" en2a, nin2Rum(m) aRivu ariya--
nellin2 pozil cUznta--nin2RiyUril nilai Ar em
celvar aTi allAtu, en2a cintai uNarAtE!

***பொருள்:*** நெல் வயல்களால் சூழப்பட்ட திருநின்றியூரின்கண் நிலையாக எழுந்தருளி உள்ள சிவபெருமானே முழு முதற்பொருள் ஆவான் என்றும், அல்லன் என்றும் தருக்கிக் கொண்டு நின்றவர்கள் பிரம்மாவும், திருமாலும் ஆவார்கள். பிரம்மா நல்ல தாமரை மலர் மேல் உறைகின்றவன். உலகத்தைத் தன் வயிற்றகத்து அடக்கிக் காட்டியவன் திருமால். இவர்கள் இருவரும் சிவபிரானது அடி, முடியைத் தேடிக் காண முடியாமல் திகைத்தவர்கள். இவர்களால் காண்பதற்கு அரியவராய் விளங்கியவர் சிவபிரான். அவர் எம் செல்வர். அவருடைய திருவடிகளை அன்றி என் சிந்தை வேறு எதையும் உணராது.

***குறிப்புரை:*** நல்ல மலர் நல்லம்மலராயிற்று. மலர்மேலான்பிரமன். ஞாலமது உண்டான் திருமால். அல்லர் என ஆவர் என – தலைவர் அல்லர் எனவும் தலைவர் ஆவர் எனவும் தாமே தருக்கி நின்று.

The Lord is unknowable to Brahma who is seated in the lotus and to Vishnu who swallowed the earth, both of whom doubted His supremacy. (But) My mind will cognise nothing but the Feet of the ever opulent One of Nindri-oor, girt with fields of paddy.

நெறியில்வரு பேராவகை நினையாநினைவொன்றை
அறிவில்சம ணாதருரை கேட்டும்மயராதே
நெறியில்லவர் குறிகள்நினை யாதேநின்றியூரில்
மறியேந்திய கையானடி வாழ்த்தும்மதுவாழ்த்தே. 10

*நெறியில் வரு பேரா வகை நினையா நினைவு ஒன்றை*
*அறிவு இல் சமண் ஆதர் உரை கேட்டும் மயராதே,*
*நெறிஇல்லவர் குறிகள் நினையாதே, நின்றியூரில்*
*மறி ஏந்திய கையான் அடி வாழ்த்தும்(ம்) அது வாழ்த்தே!*

neRiyil varu pErA vakai nin2aiyA nin2aivu on2Rai
aRivu il camaN Atar urai kETTum(m) ayarAtE,
neRi illavar kuRikaL nin2aiyAtE, nin2RiyUril
maRi Entiya kaiyAn2 aTi vAzttum(m) atu vAzttE!

***பொருள்:*** சமணர்கள் நெறியற்ற கீழ்மக்கள். தமக்கென்று உண்மை நெறி எதுவும் இல்லாத புறச்சமயிகள். சமய நெறியில் பயில்வதால் பேராமலும், மறவாமலும் நினைக்கும் முழு முதற் பொருளாகிய சிவபெருமானை அறியக் கூடிய அறிவு இல்லாதவர்கள். இவர்களது அடையாளங்களைக் கருதாமல், திருநின்றியூரில் மான் ஏந்திய கையனாய் விளங்கும் சிவபெருமானின் திருவடிகளை வாழ்த்துவதே வாழ்த்து என்று சொல்லப்படும்.

***குறிப்புரை:*** நெறியில் வரும் – தொன்றுதொட்டுக் குரு காட்டிய நெறியினின்று பயில்வதால் வருகின்ற. பேராவகை நினையா நினைவொன்றை அறிவில் சமண் ஆதர் – பேராதே மறவாதே தன்மயமாய் இருந்து நினைக்கப்படும் ஒரு பொருளை அறியும் அறிவு அற்ற சமணர்களாகிய கீழ்மக்கள். மயராது – மயங்காது. நெறியில்லவர் – தமக்கென்று உண்மை நெறியில்லாதவர்களாகிய புறச்சமயிகள். குறிகள் – அடையாளங்கள். மறி – மான்.

Do not get befuddled on hearing the words of the base and the brainless samanars who cannot apprehend the enlightenment yielded by the righteous and the virtuous way (*பேராவகை*). Ignore the symbols, marks and insignia of those that do not pursue the salvific way. To hail the feet of Him who sports a fawn in His hand and who abides at Nindri-oor, is indeed the true and abiding hailing.

குன்றம்மது வெடுத்தானுட றோளுந்நெரிவாக
நின்றங்கொரு விரலாலுற வைத்தானின்றியூரை
நன்றார்தரு புகலித்தமிழ் ஞானம்மிகுபந்தன்
குன்றாத்தமிழ் சொல்லக்குறை வின்றிநிறைபுகழே. 11

குன்றம்(ம்) அது எடுத்தான் உடல் தோளும் நெரிவு ஆக
நின்று அங்கு ஒருவிரலால் உற வைத்தான் நின்றியூரை
நன்று ஆர்தரு புகலித் தமிழ் ஞானம் மிகு பந்தன்
குன்றாத் தமிழ் சொல்லக் குறைவு இன்றி நிறை புகழே.

kun2Ram(m) atu eTuttAn2 uTal tOLum nerivu Aka
nin2Ru agku oruviralAl uRa vaittAn2 nin2RiyUrai
nan2Ru Artaru pukalit tamiz njAn2am miku pantan2
kun2RAt tamiz collak kuRaivu in2Ri niRai pukazE.

**பொருள்:** கயிலை மலையைத் தூக்கி நகர்த்த முயற்சி செய்த இலங்கை மன்னனாகிய தசக்கிரீவனின் உடல், தோள் ஆகியன நெரியத் தன் கால்விரல் ஒன்றால் கயிலை மலை உச்சியில் இலேசாக அழுத்தியவன் திருநின்றியூரில் எழுந்தருளிய சிவபெருமான். புகலி என்று சொல்லப்பெறும் சீகாழியில் நன்மைகளே செய்யும் மெய்யடியார்கள் பலர் உளர். அப்பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தர். இவர் திருநின்றியூர் இறைவனைப் போற்றிப் பாடிய திருவருள் நலம் குன்றாத இத்திருப்பதிகப் பாடல்களை உரைப்பதனால் குறைவின்றிப் புகழ் நிறையும்.

**குறிப்புரை:** உற – பொருந்த. ஞானம்மிகுபந்தன் – ஞானசம்பந்தன். இச்சொல் ஞானசம்பந்தன் என்பதற்குப் பொருள் காட்டியது போலும். குன்றாத் தமிழ் – எஞ்ஞான்றும் திருவருள் குறையாத தமிழ்.

Gnaanasambandan of profound gnosis of prosperous Pukali well versed in Tamil of never-diminishing value hath hailed the Lord of Nindri-oor, who by pressing His toe, crushed the body and arms of him (Raavana) who lifted the mountain (Kailas). They that recite his ever-enduring verses will gain consummate glory that will never suffer decrease.

**Note:** 'Kundraath Thamizh' – The verses of Tamil which never suffer and decrease in divine grace.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*18ஆம் பதிகம் முற்றிற்று*
End of 18th Hymn

உ
சிவமயம்

# 19. திருக்கழுமலம்

## திருத்தலவரலாறு:

முதலாம் பதிகம் பார்க்க.

## திருஇராகம்:

தடையின்றி முடுகிய ஓசை உடையதாய்ச் செல்லுவது. பழைய காலத்தில் அராகம் என வழங்கினர். பெரும்பாலும் குறிலிணை நிரையாகவே பாடல் முழுவதும் அமைந்திருக்கும். சிறுபான்மை வேறுபட்டு அமையும். பழங்காலத்தில் பரிபாடல் என்னும் இசைப்பாடலில் ஓர் உறுப்பாக அராகம் அமைந்திருந்தது. திருஞானசம்பந்த மூர்த்தி சுவாமிகள் அதனைத் தன் பண்ணிசைப் பாடலுக்குப் பயன்படுத்திக் கொண்டார். முதல் மூன்று திருமுறைகளிலும் மிகப்பல பதிகங்கள் இவ்வோசையுடையனவாக அமைந்துள்ளன. குறிலிணையாகிய சொற்களே வந்த அடி சிறப்புடையது. பிறவகையால் வந்த அடிகளும் ஒரே வகையான சீரமைப்பில் செல்வதனால் அராகம் எனப்படுகின்றது. முதல் திருமுறையில் 10 பதிகங்கள், இரண்டாம் திருமுறையில் 6 பதிகங்கள் மற்றும் மூன்றாம் திருமுறையில் 23 பதிகங்கள் இந்த இராகத்தில் அமைந்துள்ளன.

## THE HISTORY OF THE PLACE

See 1st Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 19. திருக்கழுமலம் — 19. THIRU-K-KAZHU-MALAM

பண் : நட்டபாடை (திருவிராகம்)
ராகம் : கம்பீரநாட்டை

***Pann: Natta Paadai***
***Raagam : Kambeera Naattai***

பிறையணிபடர்சடை முடியிடைபெருகிய புனலுடையவனிறை
இறையணிவளையிணை முலையவளிணைவன தெழிலுடையிடவகை
கறையணிபொழினிறை வயலணிகழுமல மமர்கனலுருவினன்
நறையணிமலர்நறு விரைபுல்குநலமலி கழறொழன்மருவுமே. 1

பிறை அணி படர்சடைமுடி இடை பெருகிய புனல் உடையவன்; நிறை
இறை அணி வளை, இணைமுலையவள், இணைவனது எழில் உடை இட வகை -
கறை அணி பொழில் நிறை வயல் அணி - கழுமலம் அமர் கனல்உருவினன்
நறை அணி மலர் நறுவிரை புல்கு நலம் மலி கழல் தொழல் மருவுமே!

piRai aNi paTar caTai muTi iTaip perukiya pun2al uTaiyavan2; niRai
iRai aNi vaLai, iNai mulaiyavaL, iNaivan2atu ezil uTai iTa vakai--
kaRai aNi pozil niRai vayal aNi--kazumalam amar kan2al uruvin2an2;
naRai aNi malar naRuvirai pulku nalam mali kazal tozal maruvumE!

***பொருள்:*** சிவபெருமான் தனது விரிந்த ஒரு சடையில் பிறையைக் கொண்டுள்ளான். ஒன்பது சடைகளில் மற்றொன்றில் பெருகி வந்த கங்கையையும் உடையவன் அவனே. தனது முன் கைகளில் அழகிய வளையல்களை அணிந்த உமையம்மையின் இரண்டு தனங்களோடு இணைபவனும் அவனே. அவன் திருக்கழுமலத்தில் எழுந்தருளி அடியார்களுக்கு அருள்புரிந்து வருகின்றான். திருக்கழுமலம் அழகிய பல ஊர்களில் ஒன்றாக விளங்குகின்றது. நிழல்மிக்க மரங்களை உடைய சோலைகளை உடையது. நெல் வயல்கள் இந்த ஊரை அணி செய்கின்றன. சிவபெருமான் அழல் போன்ற சிவந்த திருமேனியன். அவனுடைய அழகிய திருவடிகளில் தேன் நிறைந்த மலர்களினின்று தேன் மணமும், மலர்களின் நறுமணமும் பரந்து நல்ல வாசத்தை வீசிக் கொண்டே இருக்கின்றன. உலகீர்! சிவபெருமானுடைய திருவடிகளைத் தொழுதல் செய்து உய்மின்கள்.

***சிறு விளக்கம்:*** பரஞானம், அபரஞானம் என்ற உயர்ந்த இரு மெய்ஞ்ஞானங்களாக விளங்குபவன் சிவபெருமான். அவைகளோடு இணைந்து அவைகளுக்குத் தலைவனாகவும் விளங்குபவனும் அவனே. கண்ணால் காண முடியாத இந்த மெய்ஞ்ஞானங்களைக் குறியீடு மூலமாக விளக்குவதற்கு நம் முன்னோர்கள், பராசக்தியாகிய பார்வதி தேவியின் இருதனங்களை ஒப்புமையாக வைத்துள்ளார்கள். இத்தத்துவத்தை உள்ளத்தில் கொண்டு ஆங்காங்கே வரும் பாடல்களுக்கு இந்த மெய்ப் பொருளை உணர்ந்து கொள்க.

***குறிப்புரை:*** இறை – முன் கை. இணை முலையவள் இணைவனது – பரஞானம் அபரஞானம் என்ற இரண்டு முலைகளையுடைய உமாதேவியோடு இணைபவனாகிய சிவனது. கறையணிபொழில் – நிழல் மிக்க பொழில். நறையணிமலர் – தேனோடு கூடிய அழகிய மலர். உலகீர்! இடமாகிய கழுமலம் அமர் கனல் உருவினனது கழல் தொழுதலை மருவும் எனக் கூட்டுக. மருவும் – பொருந்துங்கள்.

On His crest of spreading matted hair, He sports a crescent moon and the swelling floods of the river Ganges; He shares in His beautiful left-half, the bangle wearing lady of two maiden breasts. He whose form is flame-like, is entempled in Kazhu-Malam rich in fertile fields. His ankleted Feet decked with fragrant and melliferous flowers confer weal and well-being. Adore Him, eh folks!

**Note:** Kazhumalam is one of the twelve names of Seekaazhi. It means the place where malam gets washed away. The double breasted chest. They are symbolic of Para (Godly) knowledge and apara (phenomenal) knowledge (perceptible to the senses).

பிணிபடுகடல்பிற விகளறலெளிதுள ததுபெருகியதிரை
அணிபடுகழுமல மினிதமரனலுரு வினனவிர்சடைமிசை
தணிபடுகதிர்வள ரிளமதிபுனைவனை யுமைதலைவனைநிற
மணிபடுகறைமிட றனைநலமலிகழ லிணைதொழன்மருவுமே. 2

*பிணி படு கடல்பிறவிகள் அறல் எளிது; உளது அது பெருகிய திரை;*
*அணி படு கழுமலம் இனிது அமர் அனல் உருவினன், அவிர் சடைமிசை*
*தணிபடு கதிர்வளர் இளமதி புனைவனை, உமைதலைவனை, நிற*
*மணி படு கறைமிடறனை, நலம் மலி கழல் இணை தொழல் மருவுமே!*

piNi paTu kaTal piRavikaL aRal eLitu; uLatu atu perukiya tirai;
aNi paTu kazumalam in2itu amar an2al uruvin2an2, avir caTai micai
taNipaTu katir vaLar iLamati pun2aivan2ai, umaitalaivan2ai, niRa
maNi paTu kaRaimiTaRan2ai, nalam mali kazal iNai tozal maruvumE!

**பொருள்:** பிறவிப் பெருங் கடல் நீந்துவர்
நீந்தார் இறைவனடி சேராதார்

என்ற திருக்குறளை மனத்தில் கொண்டு இப்பாட்டின் மேல் செல்க. பிறவியாகிய கடல் மிகப் பெரிதாகிய துன்ப அலைகளை உடையது. பிறவியானது இடைவிடாமல் நம்மைப் பிணித்துக் கொண்டே இருக்கும். உலகீர்! பிறப்பு - இறப்பு ஆகியவைகளினின்று நீங்கி விடுதலை பெற சிவபெருமானின் நலம் நிறைந்த திருவடிகளை தொழுதல் செய்மின். அவ்வாறு செய்தால் பிறவிகள் நீங்குவது எளிதாகும். சிவபெருமான் விரும்பி இனிதாக அமர்கின்ற ஊர் அழகிய கழுமலம் ஆகும். அவன் செந்தழல் நிறத்தை உடையவன். விரிந்த சடைமீது குளிர்ந்த கிரணங்களை உடைய பிறைமதியைச் சூடியவன். அவன் உமையம்மையின் மணாளனும் ஆவான். அவனுடைய கழுத்து நீலமணியின் நிறம் போன்றது (அதனால் அவனை நீலகண்டன் என்று சொல்லுவதுண்டு).

**குறிப்புரை:** பிணிபடு கடல் பிறவிகள் – ஆதி ஆன்மீகம் முதலிய பிணிகளோடு தொடக்குண்ட கடல் போன்ற பிறவிகள். தன்னகப் பட்டாரை மீளவிடாதே மேலும் மேலும் பிணிக்கின்ற பிறவிக்கடல் என்றுமாம். அறல் – நீங்குதல். அது பெருகிய திரை உளது. அப்பிறவிக்கடல் மிகப் பெருகுகின்ற அலைகளை உடையது. அனல் உருவினனாகிய மதிபுனைவனை, உமை தலைவனை, கறைமிடறனை, கழலிணை

தொழல் மருவும் எனக் கூட்டுக. புனைவன் – சூடுபவன். நிறமணி படும் கறைமிடறன் – ஒளிபொருந்திய நீலமணி போலும் விடம் பொருந்திய கழுத்தினையுடையவன். நலம் – வீட்டின்பம்.

It is easy to end the fettering, multi-billowed and sea-like embodiments. Lord Civan whose form is flame-like is entempled in resplendent Kazhu-Malam. On His shiny matted crest, He wears the cool young moon of abundant rays. He is the Lord of Uma; His neck displays a lustrous dark blue patch. His ankleted feet confer weal and well-being. Adore Him, ye folks!

**Note:** The ways of the sea typify recurring births and deaths.

வரியுறுபுலியத ளுடையினன்வளர்பிறை யொளிகிளர்கதிர்பொதி
விரியுறுசடைவிரை புரைபொழில்விழவொலி மலிகழுமலமமர்
எரியுறுநிறவிறை வனதடியிரவொடு பகல்பரவுவர்தம
தெரியுறுவினைசெறி கதிர்முனையிருள்கெட நனிநினைவெய்துமதே. 3

*வரி உறு புலி அதள் உடையினன், வளர்பிறை ஒளி கிளர் கதிர் பொதி*
*விரி உறு சடை, - விரை புரை பொழில் விழவு ஒலி மலி - கழுமலம் அமர்*
*எரி உறு நிற இறைவனது அடி இரவொடு பகல் பரவுவர் தமது*
*எரி உறு வினை, செறி கதிர் முனை இருள் கெட, நனி நினைவு எய்தும் அதே.*

vari uRu puli ataL uTaiyin2an2, vaLarpiRai oLi kiLar katir poti
viri uRu caTai,--virai puzai pozil vizavu oli mali--kazumalam amar
eri uRu niRa iRaivan2atu aTi iravoTu pakal paravuvar tamatu
eri uRu vin2ai, ceRikatir mun2ai iruL keTa, nan2i nin2aivu eytumatE.

***பொருள்:*** சிவபெருமான் திருக்கழுமலத்துள் அழல் வண்ணனாய் விளங்குகின்றான். **திருக்கழுமலத்தின்** எல்லா மருங்கிலும் மணம் பொருந்திய சோலைகள் உள்ளன. அவ்வூரின்கண் திருவிழாக்களின் ஒலிநிறைந்து விளங்குகின்றது. அங்கு எழுந்தருளி அருள் பாலித்து வரும் இறைவன் திருவடிகளை இரவும் பகலும் பரவி வாழ்த்துகின்ற அடியார்கள் பலர் உளர். அவர்களை வருத்த இருக்கும் வினைகளும் மிக்க ஒளியை உடைய ஞாயிற்றினையும் வெறுத்து ஓட்டுகின்ற இருள் போன்ற ஆணவமலமும் கெடும்படியாக உலகீரே! அப்பெருமான் திருவடிகளை நன்றாக நினைந்து வழிபாடு செய்வீர்களாக.

***குறிப்புரை:*** வரியுறுபுரி அதள் – கோடுகள் பொருந்திய புலித்தோல். வளர்பிறையையும் கதிரையும் பொதிந்த விரியுறு சடையையுடைய இறைவன், கழுமலம் அமர் இறைவன் எனத் தனித்தனிக் கூட்டுக. எரியுறு நிற இறைவன் – தீவண்ணன். பரவுவர் தமது நினைவெய்தும் எனக் கூட்டுக. எரியுறுவினை –

வருத்துகின்ற நல்வினை தீவினைகள். கதிர்முனை இருள் – ஒளிப்பொருளாகிய சூரியனையும் வெறுத்தோட்டுகின்ற இருள் என்றது ஆணவமலம் என்றவாறு. நனி நினைவெய்தும் – தயிலதாரை போல இடைவிடாது இறைவன் நினைப்பெய்தும்.

Lord Civan is clad in the striped skin of a tiger; His spreading matted hair dazzles with the bright rays of the moon. He whose form is flame-like is enthroned in Kazhu-Malam rich in pools and fragrant gardens. Festive sounds of the town reverberate everywhere. The scorching karma of those that hail Him, and their murky mala will vanish like darkness before the effulgent Sun. May you, for ever, contemplate on Him, ye folks!

**Note:** Irul – Mark which is Aanava malam.

வினைகெடமனநினை வதுமுடிகெனினனி தொழுதெழுகுலமதி
புனைகொடியிடைபொரு டருபடுகளிறின துரிபுதையுடலினன்
மனைகுடவயிறுடை யனசிலவருகுறள் படையுடையவன்மலி
கனைகடலடைகழு மலமமர்கதிர்மதி யினனதிர்கழல்களே. 4

வினை கெட மனநினைவு அது முடிக எனின், நனி தொழுது எழு - குலமதி
புனை கொடி இடை பொருள் தரு படு களிறினது உரி புதை உடலினன்,
மனை குடவயிறு உடையன சில வரு குறள் படை உடையவன், மலி
கனைகடல் அடை கழுமலம் அமர் கதிர் மதியினன், அதிர்கழல்களே!

vin2ai keTa man2a nin2aivu atu muTika en2in2, nan2i tozutu ezu--kulamati
pun2ai koTi iTai poruL taru paTu kaLiRin2atu uri putai uTalin2an2,
man2ai kuTavayiRu uTaiyan2acila varu kuRaL paTai uTaiyavan2, mali
kan2ai kaTal aTai kazumalam amar katir matiyin2an2, atir kazalkaLE!

**பொருள்:** ஆரவாரம் நிறைந்த கடற்கரையை அடுத்துள்ள திருக்கழுமலத்துள் சிவபெருமான், சூரியன், சந்திரன் ஆகியவற்றைக் கண்களாகக் கொண்டு அமர்ந்து அருள்புரிந்து வருகின்றான். அவன் உயர்ந்த ஒற்றைப் பிறைச் சந்திரனைத் தனது ஒரு சடையில் அபயம் கொடுத்து அமர்த்தி உள்ளான் (சிவபெருமான் திருமுடியில் விளங்கும் சந்திரன் நாம் காணும் பிரகிருதி சந்திரன் அல்லன் என்பதைத் தெரிந்து கொள்க). கொடி போன்ற இடையை உடைய கங்கையையும் தன் சடையில் கொண்டுள்ளான். கயாசுரன் என்னும் யானையின் தோலை உரித்துத் தன் உடலைப் போர்த்துக் கொண்டுள்ளான். வீட்டுக்குடம் போலும் வயிற்றினை உடைய பூதகணங்கள் சிலவற்றின் படையை உடையவனாக விளங்குகின்றான். உலகீரே! உங்களுடைய தீய வினைப்பயன்கள் கெட்டு நீங்கவும், உங்கள் மனத்தில்

நினைக்கும் நற்செயல்கள் நிறைவேறவும் சிவபெருமானின் ஒலிக்கும் கழற்சேவடிகளை வணங்குவீர்களாக.

***குறிப்புரை:*** குலமதிபுனை – உயர்ந்த பிறைமதியை அணிந்த. கொடியிடை – சுற்றிக் கொண்டிருக்கின்ற காட்டுக் கொடிகளினிடையே. பொருள்தரு படுகளிறினது – பல பொருள்களைக் கொண்டு வருகின்ற இறந்த யானையினது. உரி – தோல். இவருடைய மேனியின் செவ்வொளியைக் களிற்றின் கருந்தோல் புதைத்தது என்பதாம். மனைகுட வயிறு உடையன குறள் படை – வீட்டுக்குடம் போன்ற வயிறு உடையனவாகிய பூதப்படைகள். கதிர் மதியினன் – சூரியனையும் சந்திரனையும் தமது திருக்கண்களாகப் படைத்தவன். உடலினன், உடையவன். மதியினன், கழல்கள், வினைகெட மனநினைவது முடிகெனின், நனிதொழுது எழு எனக் கூட்டுக. மனநினைவிற்கு எல்லாம் காரணமாகிய வினைகள் கெடவும், மனம் நினைந்தது நிறைவேறவும், விரும்பின், கழல்களைத் தொழுதெழு என்று நெஞ்சை நோக்கி அறிவித்தவாறு. முடிக எனின் என்பது முடிகெனின் எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது. முடியுமாயின் எனப் பொருள் காண்பதும் உண்டு. பொருந்துமேல் கொள்க.

Lord Civan is decked with the lofty crescent moon and the willowy-waisted Ganga. His body is covered by the hide of a tusker, that came out of the Yaaga fire kindled by Munis of Daarukavanam. Among His army are some diminutive and pot-bellied soldiers. He abides in Kazhu-Malam, which is close to the roaring sea. His eyes are the Sun and the Moon. To annul your karma and gain fulfillment of your destiny, adore Him well, ye folks!

**Note:** Soldiers: Bhutas. They are pot-bellied. The verse in Tamil refers to 'Manai kudam' the pot in domestic use.

தலைமதிபுனல்விட வரவிவைதலைமைய தொருசடையிடையுடன்
நிலைமருவவொரிட மருளினனிழன்மழு வினொடழல்கணையினன்
மலைமருவியசிலை தனின்மதிலெரியுண மனமருவினனல
கலைமருவியபுற வணிதருகழுமல மினிதமர்தலைவனே. 5

தலைமதி, புனல், விடஅரவு, இவை தலைமையது ஒரு சடை இடை உடன் -
நிலை மருவ ஓர் இடம் அருளினன்; நிழல் மழுவினொடு அழல் கணையினன்;
மலை மருவிய சிலைதனில் மதில் எரியுண மனம் மருவினன் - நல
கலை மருவிய புறவு அணிதரு கழுமலம் இனிது அமர் தலைவனே.

talaimati, pun2al, viTa aravu, ivai talaimaiyatu oru caTai iTai uTan2--
nilai maruva or iTam aruLin2an2; nizal mazuvin2oTu azal kaNaiyin2an2;
malai maruviya cilaitan2il matil eriyuNa man2am maruvin2an2--nala
kalai maruviya puRavu aNitaru kazumalam in2itu amar talaivan2E.

**பொருள்:** சிவபெருமான், நல்ல கலைமான்கள் வாழ்ந்து வருகின்ற சிறு காடுகளின் புறத்தே அழகு பெற அமைந்துள்ள திருக்கழுமலத்தில் எழுந்தருளி அருள்புரிந்து வருகின்றான். அவன், தன் தலைமையான சடைக்காட்டின் நடுவில், ஒருநாட்பிறை, கங்கை, நஞ்சு பொருந்திய பாம்பு ஆகியவைகள் ஒன்றாக இருக்குமாறு இடம் அருளியவன். ஒளி பொருந்திய மழுவோடு, அழல் வடிவான அம்பினை, மேரு மலையாகிய வில்லில் பூட்டி எய்தலால், திரிபுரங்கள் எரி உண்ணுமாறு மனத்தால் சிந்தித்தவன் (சிந்தித்த அளவில் முப்புரம் எரித்து அழிந்தது. ஒவ்வொரு யுகத்திலும் வெவ்வேறு விதமாக அழித்தான் என்பது புராண வரலாறு). உலகீரே! இத்தலைவனை நினைந்து வழிபாடு செய்மின்.

**குறிப்புரை:** இடமருளினன், கணையினன், மருவினன் தலைவன் எனப் பொருந்த முடிக்க. தலைமதி – ஒருநாட்பிறை. தலைமையது ஒரு சடை இடை – தலைமையதாகிய சடைக்காட்டின் நடுவில். பகைபட்ட பொருளாகிய மதி அரவு ஆகிய இவைகள் பகை நீங்கி வாழ ஓரிடத்து அருளினன் என்பது குறித்தவாறு. நிழல்மழு – ஒளி விடுகின்ற மழு. மலை மருவிய சிலைதனில் – மேருமலையாகிய வில்லில். மதில் – முப்புரங்கள். மனம் மருவினன் – மனம் பொருந்தினன். நலகலை மருவிய புறவு – நல்ல கலைமான்கள் பொருந்திய சிறுகாடு. புறவம் என்ற தலப் பெயர்க் காரணம் புலப்படும்.

Lord Civan holds side by side on His matted crest, the single crescented moon, the Ganges river (Ganga Devi) and the poisonous snake, which are inimical to each other by nature (Here all of them are docile to each other). His hand wields a bright mazhu and a flaming dart. He willed the annihilation of the three walled-citadels by fire, through His mountain bow. He, the Chief of Gods is enthroned in Kazhu-Malam beside woodlands abounding in dotted deers.

வரைபொருதிழியரு விகள்பலபருகொரு கடல்வரிமணலிடை
கரைபொருதிரையொலி கெழுமியகழுமல மமர்கனலுருவினன்
அரைபொருபுலியத ளுடையினனடியிணை தொழவருவினையெனும்
உரைபொடிபடவுறு துயர்கெடவுயருல கெய்தலொருதலைமையே. 6

*வரை பொருது இழி அருவிகள் பல பருகு ஒரு கடல் வரி மணல் இடை,*
*கரை பொரு திரை ஒலி கெழுமிய கழுமலம் அமர் கனல் உருவினன்;*
*அரை பொரு புலி அதள்உடையினன்; அடி இணை தொழ, அருவினை எனும்*
*உரை பொடிபட உறு துயர் கெட, உயர் உலகு எய்தல் ஒருதலைமையே.*

varai porutu izi aruvikaL pala paruku oru kaTal vari maNal iTai,
karai poru tirai oli kezumiya kazumalam amar kan2al uruvin2an2;
arai poru puli ataL uTaiyin2an2; aTi iNai toza, aruvin2ai en2um
urai poTi paTa uRu tuyar keTa, uyar ulaku eytal orutalaimaiyE.

**பொருள்:** சிவபெருமான் கனல் போலும் சிவந்த திருமேனியை உடையவன். அவன் திருக்கழுமலத்தில் எழுந்தருளி அருளாட்சி செய்து வருகின்றான். திருக்கழுமலத்தை அடுதது பெரிய கடல் உள்ளது. மலைகளைப் பொருது இழிகின்ற அருவிகள்பல இக்கடலில் வந்து சங்கமம் ஆகின்றன. கடலின் கரைகளில் வரிகளாக அமைந்த மணற்பரப்புகள் விளங்குகின்றன. இவ்வூரில் கடல்அலைகளின் ஓசை எப்போதும் ஒலித்துக் கொண்டே இருக்கின்றன. இங்குள்ள சிவபெருமான் தன் இடுப்பில் புலித்தோலை ஆடையாகக் கட்டிக் கொண்டுள்ளான். இவனது இரு திருவடிகளைத் தொழுவார்களுடைய, போக்குவதற்கு அரியனவாகிய வினைகள் என்னும் வார்த்தையே பொடிபட்டுவிடும்; அவர்களுடைய துயர்கள் நிரந்தரமாக நீங்க, மேல் உலகமாகிய வீட்டுலகத்தையும் நிச்சயமாகப் பெறுவார்கள்.

**குறிப்புரை:** கழுமலத்தில் எழுந்தருளியுள்ள தீவண்ணப் பெருமானின் திருவடியைத் தொழ, வினையென்னும் சொல்லும் பொடி பட உயர்ந்த உலகத்தை அடைதல் துணிபு என்கின்றது. அருவிகள் பல பருகு ஒரு கடல் – பல அருவிகளைப் பருகுகின்ற பெரிய கடல். திரை ஒலி கெழுமிய கழுமலம் – அலையோசையோடு எப்பொழுதும் கூடியிருக்கிற சீகாழி. உரையும் பொடிபடவே அதன் பொருளாகிய வினை பொடிபடுதல் சொல்லாமலேயமையும் என்பதாம்.

The peerless sea that swallows all the waters flowing from the numberless waterfalls that come crashing down the mountains, has a shrine of streaked sands. Lord Civan is enthroned in Kazhu-malam where resounds the roar of waves that dash against the shore. His waist is covered by a tiger skin. If His twin feet are adored, the

very name of 'Aru Vinai' (Karma - வலியவினை) would be pulverized, and all grieving sorrows would end. Be assured that the attainment of salvation would then be a certainty.

**Note:** 'Aru vinai' - Karma well nigh impossible to vanquish. This phrase recurs in the ninth verse.

முதிருறுகதிர்வள ரிளமதிசடையனை நறநிறைதலைதனில்
உதிருறுமயிர்பிணை தவிர்தசையுடைபுலி யதளிடையிருள்கடி
கதிருறுசுடரொளி கெழுமியகழுமல மமர்மழுமலிபடை
அதிருறுகழலடி களதடிதொழுமறி வலதறிவறியமே. 7

*முதிர் உறு கதிர் வளர் இளமதி சடையனை, நற நிறை தலைதனில்;*
*உதிர்உறு மயிர் பிணை தவிர் தசை உடை புலி அதள் இடை; இருள் கடி*
*கதிர் உறு சுடர் ஒளி கெழுமிய கழுமலம் அமர் - மழு மலி படை,*
*அதிர் உறு கழல், - அடிகளது அடி தொழும் அறிவுஅலது அறிவு அறியேமே.*

mutir uRu katir vaLar iLamati caTaiyan2ai, naRa niRai talaitan2il;
utir uRu mayir piNai tavir tacai uTai puli ataL iTai; iruL kaTi
katir uRu cuTar oLi kezumiya kazumalam amar--mazu mali paTai,
atir uRu kazal,--aTikaLatu aTi tozum aRivu alatu aRivu aRiyamE.

**பொருள்:** சிவபெருமான் திருக்கழுமலத்துள் அமர்ந்து அருள்புரிந்து வருகின்றான். அவன் திருமுடியில் மலர்கள் சூடுவதால் தேன் நிறைந்துள்ளது. உலகில் பயிர்களை முதிர்விக்கும் ஆற்றல் சந்திர கிரணங்கட்கு உண்டு. அக்கிரணங்கள் வளர்கின்ற மதியை இவன் தன் சடையில் வைத்துள்ளான். இவன் தன் இடுப்பில், தசை தவிர்ந்தும் ஆனால் உதிரத்தக்க மயிர் உதிராமல் பிணைந்தும் உள்ள புலித்தோலைக் கட்டி உள்ளான். இருளை நீக்கும் சூரியனின் சுடர் ஒளி போன்ற ஒளி பொருந்திய மழுவாகிய படையை கையில் ஏந்தி உள்ளான். இவனுடைய கழல் அணிந்த திருவடிகளைத் தொழும் அறிவுடையவர்களாக நாம் விளங்குவோம். இந்த அறிவின்றி வேறு எந்த அறிவையும் நாங்கள் அறிய மாட்டோம்.

**குறிப்புரை:** நற நிறை தலைதனில் - தேனிறைந்த திருமுடியில் முதிர் உறுகதிர் வளர் இளமதி - முதிர்ச்சியடையும் கதிர்கள் வளரும் இளைய ஒரு கலைப்பிறைச் சடையை யுடையவனை. உதிர் உறு மயிர்பிணை - உதிரத்தக்க மயிர்கள் உதிராதே பிணைந்திருக்கும், தவிர் தசையுடை புலியதள் - கழன்ற தசையையுடைய புலித்தோலை உடுத்த. இடை - இடையினை யுடையவனை. இடை என்பது

உடையானைக் காட்டி நின்றது. படையையும் கழலையும் உடைய அடிகள். அடிகளின் திருவடியைத் தொழும் அறிவல்லது பிறவற்றை யறியோம் என்று உறைத்த திருத்தொண்டைக் கூறியருளியவாறு.

Lord Civan on His nectarean crust, wears a young moon. The rays of the moon accelerate the growth of vegetation; and these rays grow and grow, dense and bright. He wears in His waist a tiger-skin thick with hair that will not fall, but will stay void of flesh. He is enshrined in Kazhu-Malam and His multi-layered and radiant mazhu chases murk away. Our whole knowledge is the sole knowledge of His resounding and ankleted feet, and nothing else.

**Note:** A young moon: The moon of a single ray.

கடலெனநிறநெடு முடியவனடுதிற றெறவடிசரணென
அடனிறைபடையரு ளியபுகழரவரை யினனணிகிளர்பிறை
விடநிறைமிடறுடை யவன்விரிசடையவன் விடையுடையவனுமை
உடனுறைபதிகடன் மறுகுடையுயர்கழு மலவியனகரதே. 8

*கடல் என நிற நெடுமுடியவன் அடுதிறல் தெற, "அடி சரண்!" என,*
*அடல் நிறை படை அருளிய புகழ் அரவு அரையினன், அணி கிளர் பிறை,*
*விடம் நிறை மிடறு உடையவன், விரி சடையவன், விடை உடையவன், உமை -*
*உடன் உறை பதி - கடல் மறுகு உடை உயர் கழுமல வியல் நகர் அதே.*

kaTal en2a niRa neTumuTiyavan2 aTutiRal teRa, "aTi caraN!" en2a,
aTal niRai paTai aruLiya pukaz aravu araiyin2an2, aNi kiLar piRai,
viTam niRai miTaRu uTaiyavan2, viricaTaiyavan2, viTai uTaiyavan2, umai--
uTan2 uRai pati--kaTal maRuku uTai uyar kazumala viyal nAkar atE.

**பொருள்:** சிவபெருமான் உமையம்மையோடு உறையும் பதி, உயர்ந்த அலைகள் உடைய கடலால் சூழப்பட்ட கழுமலம் எனப்படும் பெரிய நகராகும். கருங்கடல் போன்ற கரிய நிறமுள்ளவன் தசக்கிரீவன். இவன் வலிமை கெடுமாறு செய்தவன் சிவபெருமான். பின்னர் இலங்கை மன்னனாகிய தசக்கிரீவன் சிவன் திருவடிகளே சரண் என வேண்ட, அவனுக்கு வலிமை மிக்க வாட்படையையும், இராவணன் என்ற பெயரையும், நீண்ட வாழ்நாளையும் அருளிய புகழ் உடையவன். சிவபெருமான் பாம்பை இடையில் கச்சாகக் கட்டியவன். அழகு மிக்க பிறையை தன் தலையில் உடையவன். விடம் தங்கிய கண்டத்தை உடையவன். விரிந்த சடையை உடையவன். விடையை ஊர்தியாகக் கொண்டவன். இவனை நாம் போற்றித் துதிப்போமாக.

**குறிப்புரை:** கடல் என நிறநெடு முடியவன் – கடலை ஒத்த நிறத்தையுடைய நீண்ட கிரீடத்தை அணிந்தவனாகிய இராவணன். அடுதிறல் தெற – பிறரை வருத்தும் வலிமை தொலைய என்றுமாம். அடி சரண் என – திருவடியே அடைக்கலமாவது என்று கூற, அடல் நிறை படை – கொலை நிறைந்த படையாகிய சந்திரகாசம் என்னும் வாள். அரவு அரையினன் – பாம்பை இடுப்பில் அணிந்தவன். கடல் மறுகு உடை – கடலுங் கலங்குதலை உடைய காலத்து.

The king of Sri Lanka was wearing a sea-hued lofty crown on his head. He once tried to lift mount Kailas, the abode of Lord Civan, and put it aside. He got crushed under the mountain and was stripped of his might and skill. He realised his folly and implored thus "O! Lord Civa! I seek refuge in your holy feet". Lord Civan pardoned and gifted him a divine sword known as 'Chandrakaasam' (*சந்திரகாசம்*). This glorious Lord Civan's waist is cinctured with a snake. This Lord wears a lustrous crescent. His neck holds up venom; His matted hair spreads. He rides a Bull. Kazhu-Malam close to the sea, in the lofty and spacious town where He abides with Uma.

கொழுமலருறைபதி யுடையவனெடியவ னெனவிவர்களுமவன்
விழுமையையளவறி கிலரிறைவிரைபுணர் பொழிலணிவிழவமர்
கழுமலமமர்கன லுருவினனடியிணை தொழுமவரருவினை
எழுமையுமிலநில வகைதனிலெளிதிமை யவர்வியனுலகமே. 9

கொழு மலர் உறை பதி உடையவன், நெடியவன், என இவர்களும், அவன்
விழுமையை அளவு அறிகிலர், இறை; விரை புணர் பொழில் அணி விழவு அமர்
கழுமலம் அமர் கனல் உருவினன் அடி இணை தொழுமவர் அருவினை
எழுமையும் இல, நில வகைதனில்; எளிது இமையவர் வியன் உலகமே.

kozu malar uRai pati uTaiyavan2, neTiyavan2, en2a ivarkaLum, avan2
vizumaiyai aLavu aRikilar, iRai; virai puNar pozil aNi vizavu amar
kazumalam amar kan2al uruvin2an2 aTi iNai tozumavar aruvin2ai
ezumaiyum ila, nila vakaitan2il; eLitu, imaiyavar viyan2 ulakamE.

**பொருள்:** செழுமையான தாமரை மலரை உறையும் இடமாகக் கொண்ட பிரமன், திருமால் ஆகிய இருவர்களும் சிவபெருமானது சிறப்பைச் சிறிதும் அறியார். அப்பெருமான், மணம் பொருந்திய பொழில்கள் சூழப் பெற்றதும் அழகிய விழாக்கள் பல நிகழ்வதுமாகிய கழுமலத்துள் எழுந்தருளிய அழல் உருவினன். அப்பெருமானுடைய திருவடி இணைகளைத்

தொழுபவர்களின் நீங்குதற்கரிய வினைகள் இப்பூவுலகில் ஏழு பிறப்பின் கண்ணும் இலவாகும். இமையவர்களின் பெரிய உலகத்தை அடைதல் அவர்கட்கு எளிதாகும்.

**குறிப்புரை:** கொழுமலர் உறைபதி உடையவன் – கொழுவிய தாமரை மலரை உறையுமிடமாக உடைய பிரமன். நெடியவன் – திருமால். அவன் – சிவன். விழுமை – பெருமை. இறையளவு அறிகிலர் எனவும், நிலவகைதனில் வினை எழுமையும் இல. இமையவர் வியன் உலகம் எளிது எனவும் இயைத்துப் பொருள் காண்க.

The one seated on fresh and bounteous lotus flower, Brahma and also the tall one, Thirumaal – these two – know nothing about the magnificence of Lord Civan. He is the flame-hued One, enthroned in ever-festive Kazhu-Malam of fragrant gardens. They who adore His Twin Feet will stand freed of 'aru vinai' whatsoever their embodiments be (i.e., certainly freed in all their successive rebirths – rebirths of any). They will gain with ease, the supernal world.

**Note:** Ezhumai: It may also mean embodied lives of seven kinds, they being (1) devas, (2) human beings, (3) animals, (4) birds, (5) reptiles, (6) aquatics and (7) Flora.

அமைவனதுவரிழு கியதுகிலணியுடை யினரமணுருவர்கள்
சமையமுமொருபொரு ளெனுமவைசலநெறி யனவறவுரைகளும்
இமையவர்தொழுகழு மலமமரிறைவன தடிபரவுவர்தமை
நமையலவினைநல னடைதலிலுயர்நெறி நனிநணுகுவர்களே. 10

*அமைவன துவர் இழுகிய துகில் அணி உடையினர், அமண் உருவர்கள்,*
*சமையமும், ஒரு பொருள் எனும் அவை, - சலநெறியன, - அறஉரைகளும்;*
*இமையவர் தொழு கழுமலம் அமர் இறைவனது அடி பரவுவர் தமை*
*நமையல வினை; நலன் அடைதலில் உயர்நெறி நனி நணுகுவர்களே!*

amaivan2a tuvar izukiya tukil aNi uTaiyin2ar, amaN uruvarkaL,
camaiyamum, oru poruL en2um avai,--cala neRiyan2a,--aRa uraikaLum;
imaiyavar tozu kazumalam amar iRaivan2atu aTi paravuvar tamai
namaiyala vin2ai; nalan2 aTaitalil uyarneRi nan2i naNukuvarkaLE!

**பொருள்:** புத்தர்கள் காவி ஆடையை அணிபவர்கள். சமணர்கள் ஆடை தரியாதவர்கள். இவர்கள் ஒரு பொருள் எனக் கூறும் சமய நெறிகளும் அறவுரைகளும் வஞ்சனை மார்க்கத்தை வகுப்பன. இதை உணர்ந்த தேவர்கள் இவர்கள் வழியைப் பின்பற்றாமல் சிவபெருமானைத் தொழுகின்றார்கள். அவ்வாறு தொழப்படுகின்ற சிவபெருமான்



திருக்கோலக்கா – சப்தபுரீசுவரர், ஓசைகொடுத்த நாயகி –
**Thiru-K-Kolakkaa - Sapta-puree-surar, Oosai-kodutha-nayaki, Tamil Nadu.**



திருச்செம்பொன்பள்ளி (செம்பனார் கோயில்) – சொர்ணபுரீஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Sornapuriswarar Temple - Tirucchamponpalli (Cemponar Koyil), Tamil Nadu.**



திருப்புத்தூர் - திருத்தளிநாதர் - பாண்டியநாட்டுத் தலம் சம்பந்தர் அப்பர் பாடல் பெற்றது.

**Tirutthali Nathar Temple - Tiupputthur, South India**



திருப்புன்கூர் – ஸ்ரீ சிவலோகநாதர் – சோழநாட்டு வடகரைத் தலம்

**Sri Sivaloka Nathar Temple, Tiruppunkur, Tamil Nadu**

திருக்கழுமலத்தின்கண் எழுந்தருளி அருள்புரிந்து வருகின்றான். இவனுடைய திருவடிகளைப் பரவுவார்களை வினைகள் வருத்தா. நலன் அடைதலின் உயர் நெறிகளை அவர்கள் அடைவார்கள்.

**குறிப்புரை:** அமைவன – பொருந்துவனவாகிய. துவர் இழுகிய துகிலினர் – மருதந்துவர் ஊட்டின ஆடையராகிய புத்தர். அமண் உருவார்கள் – சமணர்கள். ஒருபொருளெனும் சமயமும், அறவுரைகளும் ஆகிய அவை சலநெறியன – மேற்கூறிய புத்தரும் சாக்கியரும் ஒரு பொருளாகக் கூறும் சமயங்களும், அவற்றில் அவர்கள் கூறும் தர்மோபதேசங்களும் ஆகிய அவைகள் வஞ்சனை மார்க்கத்தை வகுப்பன. நமையல – வருத்தா. 'நமைப்புறுபிறவி நோய்' என்னும் சூளாமணிப் பகுதியும் இப்பொருட்டாதல் காண்க. 'நும்மால் நமைப்புண்ணேன்' என்ற அப்பர் வாக்கும் நினைவுறத் தக்கது. வினை நலன் அடைதலின் நமையல நனி உயர்நெறி நணுகுவார்கள் என இயைக்க.

The faith, the uniform import and the dharmic precepts of the Buddhists duly robed in Ochre vestments, and also those of the samanars, but constitute deceptive ways. But karma will not assail those that hail our Lord's Feet, who is enthroned in Kazhu-Malam which is adored by the supernals; they are already on the path of virtue that will confer them the lofty beautitude.

பெருகியதமிழ்விர கினன்மலிபெயரவ னுறைபிணர்திரையொடு
கருகியநிறவிரி கடலடைகழுமல முறைவிடமெனநனி
பெருகியசிவனடி பரவியபிணைமொழி யனவொருபதுமுடன்
மருவியமனமுடை யவர்மதியுடையவர் விதியுடையவர்களே. 11

***பெருகிய தமிழ்விரகினன், மலி பெயரவன்; - உறை பிணர் திரையொடு***
***கருகிய நிற விரிகடல் அடை - கழுமலம் உறைவுஇடம் என நனி***
***பெருகிய சிவன்அடி பரவிய, பிணை மொழியன ஒருபதும் உடன் -***
***மருவிய மனம்உடையவர் மதிஉடையவர்; விதிஉடையவர்களே.***

perukiya tamiz virakin2an2, mali peyaravan2,--uRai piNar tiraiyoTu
karukiya niRa virikaTal aTai--kazumalam uRaivu iTam en2a nan2i
perukiya civan2 aTi paraviya, piNai moziyan2a, orupatum uTan2--
maruviya man2am uTaiyavar mati uTaiyavar; viti uTaiyavarkaLE.

**பொருள்:** ஞானசம்பந்தன் பரந்துபட்ட நூல்களைக் கொண்டுள்ள தமிழ் மொழியை ஆழ உணர்ந்தவன். மிக்க புகழாளன். நீர்த்துளிகளோடு மடங்கும் அலைகளுடன் கருமை நிறம் வாய்ந்த கடலின் கரையில் விளங்குவது திருக்கழுமலம். மிகவும் புகழ் பரவிய இவ்வூர்

சிவபெருமானின் உறைவிடம் ஆகும். இப்பெருமானின் திருவடிகளைப் போற்றிப் பாடிய அன்பு பிணைந்த இப்பத்துப் பாடல்களையும் ஓதி மனம் பொருந்த வைக்கும் அன்பர்கள் நிறைந்த ஞானமும் நல்ஊழும் உடையவர் ஆவார்கள்.

**குறிப்புரை:** தமிழ் விரகனாகிய பெயரவன் பரவிய மொழிகள் பத்தும் மருவிய மனம் உடையவர் மதியுடையர் விதியுடையவர்கள் எனக் கூட்டுக. மலிபெயரவன் – நிறைந்த புகழ் உடையவன். உறை பிணர் திரையொடு – நீர்த்துளிகளோடு மடங்குகின்ற அலைகளோடு. பிணைமொழியன – அன்பு பூட்டிய மொழிகள்.

**குருவருள்:** இப்பதிகம் ஒருபது பாடல்களையும் மருவிய மனம் உடையவர், நன்மதி உடையவராவர். அவர் நல்விதி உடையவரும் ஆவர். எனவே, இறைநெறி சேராதார் நல்மதியும் நல்விதியும் உடையவராக மாட்டாராய் இடர்ப்படுவர் என்பது குறிப்பெச்சம்.

Adept at the vastness of Tamil, (Thiru-Gnaana-sambandan), the one of spreading renown – hath sung on the Feet of Civa abiding in Kazhu-Malam close to the sea, dark and immense, the waves of which roll on, and return with all the drops of water, intact. They that treasure in their minds these ten hymns of adoration sung in His sanctifying presence are the ones who have mystical knowledge and are blessed with the gift of liberation.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*19ஆம் பதிகம் முற்றிற்று*
End of 19th Hymn

உ
சிவமயம்

# 20. திரு வீழிமிழலை

## திருத்தலவரலாறு:

4ஆம் பதிகம் பார்க்க.

# 20. THIRU-VEEZHI-MIZHALAI

## THE HISTORY OF THE PLACE

See 4th Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 20. திரு வீழிமிழலை 20. THIRU-VEEZHI-MIZHALAI

பண் : நட்டபாடை (திருவிராகம்) *Pann: Natta Paadai*
ராகம் : கம்பீரநாட்டை *Raagam : Kambeera Naattai*

தடநிலவியமலை நிறுவியொர்தழலுமிழ் தருபடவரவுகொ
டடலசுரரொடம ரர்களலைகடல்கடை வுழியெழுமிகுசின
விடமடைதருமிட றுடையவன்விடைமிசை வருமவனுறைபதி
திடமலிதருமறை முறையுணர்மறையவர் நிறைதிருமிழலையே. 1

*தட நிலவிய மலை நிறுவி, ஓர் தழல் உமிழ்தரு பட அரவு கொடு,*
*அடல் அசுரரொடு அமரர்கள், அலைகடல் கடைவுழி எழும் மிகு சின*
*விடம் அடைதரும் மிடறு உடையவன்; விடைமிசை வருமவன்; உறை பதி -*
*திடம் மலிதரு மறை முறை உணர் மறையவர் நிறை திரு மிழலையே.*

taTa nilaviya malai niRuvi, or tazal umiztaru paTa aravukoTu,
aTal acuraroTu amararkaL, alaikaTal kaTaivuzi ezum miku cin2a
viTam aTaitarum miTaRu uTaiyavan2; viTaimicai varumavan2; uRai pati--
tiTam malitaru maRai muRai uNar maRaiyavar niRai tiru mizalaiyE.

**பொருள்:** தேவர்கள் மரணத்தை வெல்லுவதற்கு அமுதம் உண்ண விரும்பினர். அசுரர்களோடு ஒரு ஒப்பந்தம் பேசி, அதன்படி திருப்பாற்கடலில் விசாலமான பெரிய மந்தர மலையை மத்தாக நிறுத்தினர். அழல்போலும் கொடிய நஞ்சை உடைய படத்தோடு கூடிய வாசுகி என்னும் பாம்பைக் கயிறாகக் கொண்டு மந்தர மலையில் சுற்றி இரு பக்கங்களிலும் நீளமாக விட்டுக் கொண்டனர். ஒரு பக்கம் தேவர்களும், மற்றொரு பக்கம் அசுரர்களுமாக நின்று கொண்டு பாம்பாகிய கயிற்றை மாறி மாறி இழுத்துக் கடைந்தனர். வாசுகி என்னும்

பாம்பானது வலிதாங்க முடியாமல் அழல்போலும் தனது கொடிய நஞ்சை உமிழ்ந்தது. திருப்பாற்கடலில் அமுதம் தோன்றுவதற்குப் பதிலாக, அதனினின்றும் மிகக் கொடிய ஆலகாலம் என்னும் நஞ்சு வெளிப்பட்டது. இரண்டு நஞ்சும் சேர்ந்து மிக உக்கிரமாகித் தேவர்களையும் அசுரர்களையும், மற்று உலகில் யாவரையும் அழிக்கும் நிலையில் இருந்தது. சிவபெருமான் அந்த ஆலகாலம் என்னும் விஷத்தை விழுங்கித் தனது கண்டத்தில் நிறுத்தி உலகவர் யாவரையும் அழிந்து போகாமல் காப்பாற்றினார். அவரது கழுத்து கருநீலநிறம் பெற்றது. அவரது வாகனம் விடை (எருது). அவர் அதன்மீது ஏறி வருபவர். இவர் உறையும் தலம் திருவீழிமிழலை. நான்கு வேதங்களையும் முறையாக ஓதி உணர்ந்து உறுதி வாய்ந்த மறையவர் நிறைந்துள்ள பதியும் இந்தத் திருவீழிமிழலையே ஆகும்.

**குறிப்புரை:** தேவர்கள் பாற்கடல் கடைந்த வரலாறு முதல் மூன்று அடிகளில் குறிக்கப் பெறுகிறது. தடம் நிலவிய மலை – விசாலமாகிய மந்தர மலை. அரவுகொடு அடல் அசுரரொடு அமரர்கள் அலை கடல் கடை வழி எனப் பிரிக்க. திடம் – மன உறுதி. மறையவர் என்ற பெயர் மறையை முறையே உணர்தலால் வந்தது எனக் காரணக் குறியாதல் விளக்கியவாறு.

An immense mountain was set up and a hooded serpent spitting fury poison, was fastened thereto and the billowy ocean (*திருப்பாற்கடல்*) was churned by powerful asuraas and devaas, a soaring and fierce venom arose; It was about to destroy the entire universe. Lo, Lord Civan held it in His throat. He comes riding on the Bull; He abides at the shrine of Thiru-Veezhi-mizhalai where dwell vedic scholars that have imbibed the import of scriptures in the ordained way, with firmness of mind.

**Note:** An immense mountain: It is called Mantara. A hooded serpent: It is known as Vaasuki.

தரையொடுதிவிதல நலிதருதகுதிற லுறசலதரனது
வரையனதலைவிசை யொடுவருதிகிரியை யரிபெறவருளினன்
உரைமலிதருசுர நதிமதிபொதிசடை யவனுறைபதிமிகு
திரைமலிகடன்மண லணிதருபெறுதிடர் வளர்திருமிழலையே. 2

*தரையொடு திவிதலம் நலிதரு தகுதிறல் உறு சலதரனது*
*வரை அன தலை விசையொடு வரு திகிரியை அரி பெற அருளினன்;*
*உரை மலிதரு சுரநதி, மதி, பொதி சடையவன்; உறைபதி - மிகு*
*திரை மலி கடல் மணல் அணி தரு பெறு திடர் வளர் திரு மிழலையே.*

taraiyoTu tivitalam nalitaru taku tiRal uRu calataran2atu
varai an2a talai vicaiyoTu varu tikiriyai ari peRa aruLin2an2;
urai malitaru curanati, mati, poti caTaiyavan2; uRai pati--miku
tirai mali kaTal maNal aNitaru peRu tiTar vaLar tiru mizalaiyE.

**பொருள்:** சலந்தரன் என்னும் அசுரன் தனது வலிமையால் மண்ணுலகத்தோரையும், விண்ணுலகத்தோரையும் நலிவுறுத்தி வந்தான். அவனது மலை போன்ற தலையை அறுத்து வீழ்த்தியது சிவபெருமான் தோற்றுவித்த சக்கராயுதம். அதனை பெறுவதற்குத் திருமால் வேண்ட, சிவபெருமான் அவருக்கு அதைக் கொடுத்தருளினார். சிவபெருமானது சடைமுடியில் புகழால் மிக்க கங்கை நதியும், சந்திரனும் பொதிந்துள்ளன. இவன் விரும்பி உறையும் தலம், பெரிய அலைகளை உடைய கடற்கரையையும், மணலால் அழகு பெறும் மணல் மேடுகளையும் நிரம்ப உடைய திருவீழிமிழலை ஆகும்.

**குறிப்புரை:** முதல் இரண்டடிகள் சலந்தரன் சிரங்கொய்த சக்கரத்தைத் திருமாலுக்கு அருளியது குறிக்கப்படுகிறது. திவிதலம் – விண்ணுலகம். சலதரன் – சலந்தராசுரன். வரையன தலை – மலையையொத்த அவனது தலை. திகிரி – சக்கராயுதம், திருமால் ஆயிரம் தாமரை கொண்டு அருச்சித்தமைக்காகச் சக்கராயுதம் அருளினார் என்பது இத்தல வரலாறு. உரைமலிதரு – புகழ் மலிந்த. சுரநதி – தேவகங்கை. கடற்கரை மணல் மேடுகள் நிறைந்த திருவீழிமிழலை என்பது சிந்திக்கத் தக்கது. அவர்கள் காலத்து இத்தலம் நெய்தல் வேலியாக இருந்திருக்கும் போலும்.

Lord Civan graciously gifted to Thirumaal the divine wheel that severed away swiftly the hill-like head of Jalandra whose might put to misery the earth and the deva-loka. He wears on His matted crest the celebrated celestial Ganga and the moon. He abides at the shrine of Thiru-Veezhi-Mizhalai adorned with huge sand dunes shored up by the billowy seas.

**Note:** Jalandara – Civa in the hoary past, cast away His 'Wrath' against Indira into the sea. Lord Civan's wrath transformed itself into a baby in the sea and was brought up by Varunan. This baby, grew up, assumed the form of an asura who came to be called Jalandara. The asura became very mighty in strength and ultimately challenged Lord Civa Himself. At this, Civa drew a diagram of a sprocket wheel on the ground and bade the asura to lift it. As he lifted it above his head, it sliced him into two halves. Instantly he perished and the wheel was added to Lord Civa's weaponry. Vishnu desired to possess it. At Thiru-Veezhi-

mizhalai, Vishnu hailed Lord Civa daily with thousand lotus flowers. One day Lord Civa caused one flower out of the 1000 brought by him that day to vanish. However, Vishnu completed his worship by plucking out one of his own eyes and offered it at Civa's Holy Feet in lieu of the missing lotus flower. Pleased with his devotion, Lord Civa gifted to Vishnu, the 'wheel like weapon'. This wheel came to be known as Sudarsana, which Thirumaal is keeping in his right hand.

மலைமகடனையிகழ் வதுசெய்தமதியறு சிறுமனவனதுயர்
தலையினொடழலுரு வனகரமறமுனி வுசெய்தவனுறைபதி
கலைநிலவியபுல வர்களிடர்களைதரு கொடைபயில்பவர்மிகு
சிலைமலிமதிள்புடை தழுவியதிகழ்பொழில் வளர்திருமிழலையே. 3

*மலைமகள் தனை இகழ்வுஅது செய்த மதி அறு சிறுமனவனது உயர்*
*தலையினொடு அழல் உருவன கரம் அற முனிவு செய்தவன் உறைபதி -*
*கலை நிலவிய புலவர்கள் இடர் களைதரு கொடை பயில்பவர் மிகு,*
*சிலை மலி மதிள் புடை தழுவிய, திகழ் பொழில் வளர், திரு மிழலையே.*

malaimakaL tan2ai ikazvu atu ceyta mati aRu ciRuman2avan2atu uyar
talaiyin2oTu azal uruvan2a karam aRa mun2ivu ceytavan2 uRai pati--
kalai nilaviya pulavarkaL iTar kaLaitaru koTai payilpavar miku,
cilai mali matil puTai tazuviya, tikaz pozil vaLar, tiru mizalaiyE.

**பொருள்:** தக்கன் அறிவற்ற அற்ப புத்தியை உடையவன். அவன் தான் செய்த யாகத்தின் போது மலைமகளாகிய பார்வதி தேவிக்கு உரிய மரியாதை செய்யத் தவறினான். இதனால் சினங்கொண்ட சிவபெருமான் வீரபத்திரரைக் கொண்டு தக்கனைத் தண்டித்தான். தக்கன் தலை அறுபட்டது. அக்கினி தேவனின் கை அறுபட்டது. இவ்வாறு தனது சினத்தை வெளிப்படுத்திய சிவபெருமான் விரும்பி உறையும் தலம் திருவீழிமிழலை. இந்த ஊரைச் சுற்றிப் பெரிய மதில்கள் உள்ளன. செழிப்பான சோலைகள் வளர்ந்தோங்கி விளங்கின. கலைஞானம் நிரம்பிய புலவர்களின் வறுமைத் துன்பம் நீங்க நிறைந்த செல்வத்தை வாரி வழங்கும் கொடையாளர்கள் பலர் இங்கு வாழ்ந்து வந்தனர்.

**குறிப்புரை:** முதல் இரண்டு அடிகளில் தக்கன் சிரங்கொய்த வரலாறும், அக்கினியைக் கையரிந்த வரலாறும் குறிக்கப்படுகின்றன. மதியறு சிறுமனவன் – புத்தி கெட்ட சிறுமனத்தையுடைய தக்கன். உயர்தலை – மனிதத்தலை. அழல் உருவன கரம் – தீவடிவினனாகிய அக்கினியினது கை. சிலை மலி

மதிள் – மலையைப் போன்ற மதில்கள். இத்தலத்திலுள்ள கொடையாளிகள் புலவர்களின் துன்பங்களைக் களைகின்றார்கள்.

The addle-brained Dakshan arranged for a very big yaaga. Though he invited all the celestials to attend, he did not invite Lord Civan or His Consort, daughter of Himalayan King as well of himself to grace the function and to share the oblation first. For this kind of attitude of Dakshan, Lord Civan commandeered Veerabadrar to teach him a lesson. Veerabadrar went to the yaga area and severed the head of Dakshan, cut off the hands of god of fire and did havoc which made all the celestials to run away. This Lord Civan abides at the shrine in Thiru-Veezhi-mizhalai. High walls and bright gardens surround the city. Many munificent patrons are living in this town who by their generosity remove the misery of bards who are well-versed in scriptures.

**Note:** Daksha: Civa married Daksha's daughter called Daakshaayani. Daksha grew extremely haughty. He slighted Lord Civa and to spite Him, he commenced a Yaaga. Neither Lord Civa nor His consort was invited to attend the Yaaga. Yet, His consort insisted on Her attending it, and did attend it. Lord Civa's remonstrances notwithstanding, Daksha ignored and insulted Her, and also Lord Civa. Daakshaayani immolated Herself in the fire of Her chastity. Civa bade Veerabadra to teach him a lesson. This he did. He beheaded Daksha, cut away the hands of Agni and punished all the participants of the Yaaga.

மருவலர்புரமெரி யினின்மடிதரவொரு கணைசெலநிறுவிய
பெருவலியினனல மலிதருகரனுர மிகுபிணமமர்வன
இருளிடையடையுற வொடுநடவிசையுறு பரனினிதுறைபதி
தெருவினில்வருபெரு விழவொலிமலிதர வளர்திருமிழலையே. 4

மருவலர் புரம் எரியினில் மடிதர ஒரு கணை செல நிறுவிய
பெரு வலியினன், நலம் மலிதரு கரன், உரம் மிகு பிணம் அமர் வன
இருள் இடை அடை உறவொடு நட விசை உறு பரன், இனிது உறைபதி -
தெருவினில் வரு பெரு விழவு ஒலி மலிதர வளர் திரு மிழலையே.

maruvalar puram eriyin2il maTitara oru kaNai cela niRuviya
peru valiyin2an2, nalam malitaru karan2, uram miku piNam amar van2a
iruL iTai aTai uRavoTu naTa vicai uRu paran2, in2itu uRai pati--
teruvin2il varu peru vizavu oli malitara vaLar tiru mizalaiyE.

**பொருள்:** தேவர்களுக்குப் பகைவர்களாகிய திரிபுரத்து அசுரர்களுடைய மூன்று கோட்டைகளையும் கணை ஒன்றைச் செலுத்தி அழித்த பெருவலி படைத்தவன் சிவபெருமான். அவன் நன்மைகள் நிறைந்த திருக்கரங்களை உடையவன். வலிய பிணங்கள் நிறைந்த சுடுகாட்டில் நள்ளிருட்போதில் சென்று, அங்குத் தன்னை வந்தடைந்த பேய்களோடு நடனமாடி இசை பாடுபவன். இப்பரமன் மகிழ்ந்து உறையும் பதி, தெருக்கள் தோறும் நிகழும் பெருவிழாக்களின் ஆரவாரம் நிறைந்து வளரும் திருவீழிமிழலை ஆகும்.

***குறிப்புரை:*** இது இறைவனது திரிபுரமெரித்த வீரத்தையும், கை வண்மையையும், சுடுகாட்டில் நடனமாடிய செயலையும் குறிப்பிடுகிறது. மருவலர் – பகைவர்; திரிபுராதிகள். நலம் மலிதரு கரன் – நன்மை மிகுந்த திருக்கரங்களை உடையவன். உரமிகுபிணம் – வலிமைமிக்க பிணங்கள். அமர்வன இருள் இடைஅடை உறவொடு நடைவிசை உறுபரன் எனப்பிரிக்க.

Lord Civan, the One of immense power, fixed a dart to His bow and had the three hostile citadels gutted with fire. His hand confers weal; He the supreme One, dances with Vigour at dead of night, in the crematory, where corpses of the mighty burn. He sweetly abides at Thiru-Veezhi-Mizhalai the streets of which resonate with the great and grand festive uproar.

அணிபெறுவடமர நிழலினிலமர்வொடு மடியிணையிருவர்கள்
பணிதரவறநெறி மறையொடுமருளிய பரனுறைவிடமொளி
மணிபொருவருமர கதநிலமலிபுன லணைதருவயலணி
திணிபொழிறருமண மதுநுகரறுபத முரறிருமிழலையே. 5

*அணி பெறு வடமர நிழலினில், அமர்வொடும் அடிஇணை இருவர்கள்*
*பணிதர, அறநெறி மறையொடும் அருளிய பரன் உறைவு இடம் - ஒளி*
*மணி பொரு வரு மரகதநிலம் மலி புனல் அணை தரு வயல் அணி,*
*திணி பொழில் தரு மணம் மது நுகர் அறுபதம் முரல், திரு மிழலையே.*

aNi peRu vaTa mara nizalin2il, amarvoTum aTi iNai iruvarkaL
paNitara, aRaneRi maRaiyoTum aruLiya paran2 uRaivu iTam--oLi
maNi poruvu aru marakata nilam mali pun2al aNai taru vayal aNi,
tiNi pozil taru maNam matu nukar aRupatam mural, tiru mizalaiyE.

**பொருள்:** சனகாதி முனிவர்கள் நால்வர். சனகர், சனந்தனர், சனாதனர் மற்றும் சனற்குமாரர் ஆகிய இந்நால்வரும் சிவபெருமானை வணங்கி அறத்தை உபதேசிக்குமாறு வேண்டினர். சிவபெருமான் அழகிய கல்லால மரத்தின் நிழலில் எழுந்தருளியிருந்து அறநெறியை வேதங்களோடு அவர்களுக்கு உபதேசித்து அருளினார். முன்னவர்கள் இருவரும் ஒருபுறம்

அமர, பின்னவர்கள் இருவரும் மற்றொருபுறம் அமர்ந்து பணிவோடு கேட்டு மகிழ்ந்தனர். திருவீழிமிழலையில் ஓடுகின்ற நதியின் நீர் நிலமெல்லாம் பரவிச் செல்லுகின்றது. அந்த நதி ஒளி பொருந்திய மணிகளையும், ஒப்பில்லாத மரகதத்தையும் அடித்துக் கொண்டு வந்து இங்குக் கரையில் சேர்க்கின்றது. ஆதலால் அவ்வூரில் எல்லா விதமான வளங்களும் நிறைந்து விளங்குகின்றன. இத்துணை செழிப்பான திருவீழிமிழலையில் சிவபெருமான் விரும்பி உறைந்து அருள்புரிந்து வருகிறார்.

**குறிப்புரை:** இது ஆலின்கீழ் அறம் நால்வர்க்கு உரைத்த வரலாறு அறிவிக்கிறது. வடமரநிழல் – ஆலநிழல். அமர்வு – விருப்பம். இருவர்கள் – சனகர் முதலிய நால்வரும், இடப்பக்கத்தும் வலப்பக்கத்தும் இருவர் இருவராக இருந்தமை கருதற்குரியது. மறை – இருந்ததனை இருந்தபடி இருந்து காட்டும் அநுபவநிலை. பொழில்தரு மணமது நுகர் அறுபதம் முரல் திருமிழலை எனப்பிரிக்க.

Lord Civan, the Supreme One, who seated in the shade of the ornate Banyan tree (*கல்லால மரம்*), graced the two pairs of rishis that hailed His feet and inculcated them with the aims of mankind and about objects of human pursuit such as 'Virtue', 'Wealth', 'Happiness' & 'Salvation' (*அறம், பொருள், இன்பம், வீடு*) and also the explicit meanings of Vedas and Aagamas. He abides at the shrine in Thiru-Veezhi-mizhalai enriched by the river that carries with it ruby and sapphire and fertilises the arable lands. In the groves of Mizhalai the six-legged bees, sip the fragrant honey in flowers and hum in delight.

வசையறுவலிவன சரவுருவதுகொடு நினைவருதவமுயல்
விசையனதிறன்மலை மகளறிவுறுதிற லமர்மிடல்கொடுசெய்து
அசைவிலபடையருள் புரிதருமவனுறை பதியதுமிகுதரு
திசையினின்மலர்குல வியசெறிபொழின்மலி தருதிருமிழலையே. 6

***வசை அறு வலி வனசரஉரு அது கொடு, நினைவு அருதவம் முயல்***
***விசையன திறல் மலைமகள் அறிவுஉறு திறல் அமர் மிடல்கொடு செய்து,***
***அசைவு இல படை அருள் புரிதருமவன் உறைபதி அது - மிகு தரு***
***திசையினில் மலர் குலவிய செறிபொழில் மலிதரு திரு மிழலையே.***

vacai aRu vali van2acara uru atu koTu, nin2aivu arutavam muyal
vicaiyan2a tiRal malaimakaL aRivu uRu tiRal amar miTalkoTu ceytu,
acaivu ila paTai aruL puritarumavan2 uRai pati atu--miku taru
ticaiyin2il malar kulaviya ceRi pozil malitaru tiru mizalaiyE.

**பொருள்:** அருச்சுனன் துரியோதனாதியரைப் போரில் வென்று வெற்றி அடைய சிவபெருமானிடம் இருந்து பாசுபதம் என்னும் அஸ்திரம் பெற விரும்பி, நினைதற்கும் அரிய, கடுந்தவம் புரிந்தான். சிவபெருமான் குற்றமற்ற வலிய வேடர் உருவந்தாங்கி

உமையம்மையோடு அருச்சுனன் முன் தோன்றி, தான் யாரென்று காட்டிக் கொள்ளாமல், அவனுடன் போர் புரிந்து, அவனுடைய வில், அம்புகளை அழித்து மல்யுத்தம் செய்து அவனைத் தரையில் வீழ்த்தித் தோல்வி அடையச் செய்தான். பின்னர் சிவபெருமான் தன் வேட உருவத்தை நீக்கித், தன் சுயரூபத்தைக் காட்டி அவனுக்கு அருள்புரிந்தான். தோல்வி அடையக்கூடாத பாசுபதம் என்ற கணையையும் அவனுக்கு வழங்கினான். இவன் விரும்பி உறையும் ஊர் திருவீழிமிழலை ஆகும். இவ்வூரின் எல்லாத்திசைகளிலும் மரங்கள் செறிந்து வானளாவ வளர்ந்துள்ளன. அங்குள்ள சோலைகளில் மணமுள்ள மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன.

**குறிப்புரை:** இது விசயன் வீரத்தை உமாதேவிக்குக் காட்டிப் பாசுபதம் அருளிய வீரம் குறிப்பிடுகிறது. வசையறு வலி – குற்றமற்ற வலிமை. வனசர உருவு – வேட உருவம். நினைவருதவம் – முனிவர் எவரும் நினைத்தற்கரிய கடுந்தவம். மிடல் – வலிமை. அசைவில படை – தோற்காத பாசுபதம் என்ற அஸ்திரம்.

Arjuna performed inconceivably great penance to get the invincible divine weapon (Paasupatha Astram - *பாசுபதாஸ்திரம்*) from Lord Civan. Lord Civan assumed a flawless guise of a hunter and faced Arjunan; fought against him and defeated. Then Lord Civan showed His real form and blessed him with the divine weapon. This Lord Civan abides in the shrine of Thiru-Veezhi-mizhalai rich in dense gardens the flowers of which burgeon out in bunches in all the expanding directions.

**Note:** The invincible weapon – Paasupata Astra.

நலமலிதருமறை மொழியொடுநதியுறு புனல்புகையொளிமுதல்
மலரவைகொடுவழி படுதிறன்மறையவ னுயிரதுகொளவரு
சலமலிதருமற லிதனுயிர்கெடவுதை செய்தவரனுறைபதி
திலகமிதெனவுல குகள்புகழ்தருபொழி லணிதிருமிழலையே. 7

*நலம் மலிதரு மறைமொழியொடு, நதிஉறுபுனல், புகை, ஒளிமுதல்,*
*மலர் அவைகொடு, வழிபடு திறல் மறையவன் உயிர் அது கொள வரு*
*சலம் மலிதரு மறலிதன் உயிர்கெட, உதைசெய்த அரன் உறைபதி -*
*"திலகம் இது!" என உலகுகள் புகழ்தரு, பொழில் அணி, திரு மிழலையே.*

nalam malitaru maRaimoziyoTu, nati uRupun2al, pukai, oLi mutal,
malar avaikoTu, vazipaTu tiRal maRaiyavan2 uyir atu koLa varu
calam malitaru maRalitan2 uyirkeTa, utaiceyta aran2 uRai pati--
"tilakam itu!" en2a ulakukaL pukaztaru, pozil aNi, tiru mizalaiyE.

**பொருள்:** மறையவனாகிய மார்க்கண்டேயன் இறைவழிபாடு செய்வதற்கு நன்மைகள் பலவும் நிறைந்த வேத மந்திரங்களை ஓதி, ஆற்றுநீர், நறுமணப் புகை, தீபம், மலர்கள் ஆகியவற்றைக் கொண்டு சிவபெருமானை நோக்கி நாடோறும் பூசனை புரிந்து வழிபாடு செய்து வந்தான். இவன் உயிரைக் கவர வந்த வஞ்சகம் மிக்க காலனின் உயிர் கெடுமாறு சிவபெருமான் தன் காலால் உதைத்தான். இவன் விரும்பி உறையும் பதி உலக மக்கள் திலகம் எனப் புகழ்வதும், சோலைகள் சூழ்ந்ததுமான திருவீழிமிழலை ஆகும்.

**குறிப்புரை:** இது மார்க்கண்டேயற்காகக் காலனை உதைத்த வரலாற்றைக் கூறுகிறது. மறைமொழியொடு – வேதமந்திரங்களோடு. நதியுறு புனல் – தேவகங்கையின் திருமஞ்சனதீர்த்தம். புகை ஒளி முதல் – தூபம், தீபம் முதலான ஆராதனைப் பொருள்கள். மறையவன் – மார்க்கண்டேயன். சலம் மலிதரு மறலி – வஞ்சம் மிகுந்த இயமன். உலகுகள் திலகம் இது எனப் புகழ் தரு பொழில் அணிமிழலை என மாறிக் கூட்டுக. "செய்தவன் உறைபதி" என்றும் பாட பேதம் உண்டு.

The young lad Maarkandeyan was well-versed in the scriptures and was an ardent devotee of Lord Civan. He used to hail and adore Lord Civan with weal conferring Vedic mantras, sacred water, incense and ritualistic lighting and with bright flowers. Yama came to snatch the life of Maarkandeyan. Lord Civan kicked Yama (god of death) who died instantly. This Lord Civan abides in the shrine of Thiru-Veezhi-mizhalai abounding in gardens and hailed by all the worlds thus; "This indeed is our tilaka'!

**Note:** Tilak(a): "Mark on Hindu's forehead for sectarian distinction or for beauty".

(The little Oxford Dictionary) Tilaka is the hall mark of auspiciousness.

அரனுறைதருகயி லையைநிலைகுலைவது செய்ததசமுகனது
கரமிருபதுநெரி தரவிரனிறுவிய கழலடியுடையவன்
வரன்முறையுலகவை தருமலர்வளர்மறை யவன்வழிவழுவிய
சிரமதுகொடுபலி திரிதருசிவனுறை பதிதிருமிழலையே. 8

*அரன் உறைதரு கயிலையை நிலைகுலைவு அது செய்த தசமுகனது*
*கரம் இருபதும் நெரிதர விரல் நிறுவிய கழல் அடி உடையவன்;*
*வரல்முறை உலகு அவை தரு, மலர் வளர், மறையவன் வழி வழுவிய*
*சிரம் அது கொடு பலி திரிதரு சிவன்; உறை பதி - திரு மிழலையே.*

aran2 uRaitaru kayilaiyai nilai kulaivu atu ceyta tacamukan2atu
karam irupatum neritara viral niRuviya kazal aTi uTaiyavan2;
varal muRai ulaku avai taru, malar vaLar, maRaiyavan2 vazi vazuviya
ciram atukoTu pali tiritaru civan2; uRai pati--tiru mizalaiyE.

**பொருள்:** சிவபெருமான் உமையம்மையோடு வீற்றிருப்பது கயிலைமலை. இலங்கை மன்னனான தசமுகன் விண் வழி தனது புட்ப விமானத்தில் செல்லும் போது, கயிலை மலை நேர் பாதையில் இருந்தது. அதனைப் பெயர்த்து எடுத்து நகர்த்த முயற்சி செய்தான். சிவபெருமான் தன் கால்விரலால் கயிலை மலையின் உச்சியில் அழுத்தினான். தசமுகனது பத்துத் தலைகளும், இருபது கரங்களும் நெரிந்தன. இவ்வாறு ஊன்றிய சிவபெருமான் திருவடிகளில் வீரக்கழல்கள் அணிந்துள்ளான். வரன் முறையால் உலகைப் படைக்கும் பூவின் நாயகனான பிரமன் தனது ஆணவத்தால் விளைந்த அறியாமையினால் சிவபெருமானை இகழ்ந்தான். அவ்வாறு தவறு இழைத்தவனுக்கு மறக்கருணையால் உண்மை அறிவைப் புகட்ட விரும்பிய சிவபெருமான், ஐந்தாயிருந்த அவன் சிரங்களில் ஒன்றைப் பைரவரை அனுப்பிக் கிள்ளி எடுத்து விட்டான். பிரம்மாவின் அந்த மண்டை ஓட்டினைச் சிவன் தனது பலிப் பாத்திரமாகக் கொண்டு, பலியேற்றுத் திரிகின்றான். அவன் விரும்பி உறையும் பதி திருவீழிமிழலை ஆகும்.

***குறிப்புரை:*** இது வழக்கம்போல இராவணன் வரலாறு கூறுகிறது. தசமுகன் – இராவணன். வரன்முறை உலகவைதரும் மலர்வளர் மறையவன் – அந்தந்த ஆன்மாக்களுக்கு வகுக்கப் பெற்ற நியதி தத்துவத்தின் வழிநின்று உலகம் உடல் போகம் இவற்றைப் படைக்கின்ற பிரமன். வழிவழுவிய – சிவபெருமானை வழிபட்டு நில்லாமல் முனைத்து நின்று இகழ்ந்துரைத்தலாகிய தவறு செய்த.

Lord Civan is the ankleted One who pressed with His toe and crushed the twenty hands of the king of Sri Lanka - Dasakreevan who tried to lift Mount Kailas - abode of Lord Civan. Lord Civa roams about seeking alms (from people) holding in His hand the skull of Brahma, as a begging bowl. Brahma is seated on the lotus. (The skull plucked out when Brahma deviated from the righteous path). Brahma is the Creator of the world.

அயனொடுமெழிலமர் மலர்மகள்மகிழ்கண னளவிடலொழியவொர்
பயமுறுவகைதழ னிகழ்வதொர்படியுரு வதுவரவரன்முறை
சயசயவெனமிகு துதிசெயவெளியுரு வியவவனுறைபதி
செயநிலவியமதின் மதியதுதவழ்தர வுயர்திருமிழலையே. 9

*அயனொடும் எழில் அமர் மலர்மகள் மகிழ் கணன், அளவிடல் ஒழிய, ஓர்*
*பயம் உறு வகை தழல் நிகழ்வது ஓர் படி உரு அது வர, வரல்முறை,*
*"சய சய!" என மிகு துதி செய, வெளி உருவிய அவன் உறைபதி -*
*செயம் நிலவிய மதிள் மதி அது தவழ் தர உயர் திரு மிழலையே.*

ayan2oTum ezil amar malar makaL makiz kaNan2, aLaviTal oziya, or
payam uRu vakai tazal nikazvatu or paTi uru atu vara, varalmuRai,
"caya caya!" en2a miku tuticeya, veLi uruviya avan2 uRai pati--
ceyam nilaviya matil mati atu tavaztara uyar tiru mizalaiyE.

**பொருள்:** திருமாலும் பிரம்மாவும் சிவபெருமானது அடிமுடி தேடிக் காண முடியாத நிலையில் அவன் ஒரு சோதிப் பிழம்பாய்த் தோன்றிய தோற்றத்தைக் கண்டு அஞ்சி, அவ்விருவரும் முறையாக சயசய எனப் போற்றித் துதி செய்தனர். இவ்வாறு வணங்கப்பட்ட அண்டங் கடந்த அச்சிவபெருமான் விரும்பி உறையும் பதி திருவீழிமிழலை ஆகும். இங்குள்ள வெற்றி விளங்கும் உயர்ந்த மதில்களின் மேல் சந்திரன் தோய்ந்து செல்லுகின்றான்.

**குறிப்புரை:** இது அயனும் மாலும் அறியாத அழல் உருவாய் நின்ற வரலாற்றை அறிவிக்கிறது. மலர் மகள் மகிழ் கணன் – திருமகள் மகிழும் கண்ணனாகிய திருமால். தழல் நிகழ்வதொர்படி உருவது வர – தீப்பிழம்பாக ஒளிரும் திருமேனி பொருந்த, வெளி உருவிய அவன் – ஆகாயத்தைக் கடந்த அவன்; செயம் நிலவிய மதில் – வெற்றி விளங்குகின்ற மதில்.

(Once) Brahma, and Vishnu the Consort of the Goddess on the lotus, got scared at the sight of growing pillar of Fire and gave up their quest of the top and the base of the fiery column, the form of which, Lord Civa assumed. Lord Civa penetrated into realms beyond the vault of heaven upon which they both adored Him with the words "His indeed is true victory"! Verily He is enshrined in the sublime Thiru-Veezhi-Mizhalai over whose high and victorious walls, the moon appears and seems to sail.

இகழுருவொடுபறி தலைகொடுமிழிதொழின் மலிசமண்விரகினர்
திகழ்துவருடையுடல் பொதிபவர்கெடவடி யவர்மிகவருளிய
புகழுடையிறையுறை பதிபுனலணிகடல் புடைதழுவியபுவி
திகழ்சுரர்தருநிகர் கொடையினர்செறிவொடு திகழ்திருமிழலையே. 10

இகழ் உருவொடு பறி தலைகொடும் இழிதொழில் மலி சமண்விரகினர்,
திகழ் துவர்உடை உடல் பொதிபவர், கெட, அடியவர் மிக அருளிய
புகழ் உடை இறை உறை பதி - புனல் அணி கடல் புடை தழுவிய புவி
திகழ் சுரர் தருநிகர் கொடையினர் செறிவொடு திகழ் திரு மிழலையே.

ikaz uruvoTu paRi talai koTum izi tozil mali camaNvirakin2ar,
tikaz tuvar uTai uTal potipavar, keTa, aTiyavar mika aruLiya
pukaz uTai iRai uRai pati--pun2al aNi kaTal puTai tazuviya puvi
tikaz curartaru nikar koTaiyin2ar ceRivoTu tikaz tiru mizalaiyE.

**பொருள்:** சமணர்கள் மிகவும் தந்திரசாலிகள். பிறரால் இகழத்தக்க வடிவம் உடையவர்கள். உரோமங்களைத் தலையினின்றும் பறித்து எடுப்பதால் முண்டிதமான (முடி இல்லாத தலை முண்டமாக) தலையோடு திரிபவர்கள். சாக்கியர்கள் எனப்படும் புத்தர்கள், காவி ஆடையை உடலில் போர்த்திக் கொண்டு திரிபவர்கள். இவ்விருதிறத்தார்களின் அறிவற்ற கொள்கைகள் அழிந்தொழிய சிவபெருமான் தன் அடியவர்களுக்கு மிகவும் அருள்புரிபவனும், புகழனுமாக விளங்கினான். இவன் விரும்பி உறையும் பதி திருவீழிமிழலை ஆகும். இப்பதி, நீர் வளம் மிக்கது. கடலாற் சூழப்பட்டது. கற்பக விருட்சத்தைப் போன்ற கொடையாளர் மிக்கு இங்கு வாழ்கின்றனர்.

**குறிப்புரை:** இது சமணர் கெட அடியவர்க்கருளியதை அறிவிப்பது. இகழ் உரு – பிறரால் இகழத்தக்க வடிவம். தவர் உடை உடல் பொதிபவர் – உடல் முழுவதும் போர்த்து மூடும் புத்தர். சுரர்தரு நிகர் கொடையினர் – கற்பக விருட்சத்தை ஒத்த கொடையினை உடையவர்.

Lord Civa is the celebrated Lord who graces abundantly His servitors while He crushes the base deeds of the deceitful samanars - the men of ignoble form, and also the Buddhists who shroud their bodies with ochre vestments. He abides at the shrine of Thiru-Veezhi-mizhalai in the sea-braced land and which is resplendent with the presence of patrons (Philanthropists) like unto the Karpaka.

**Note:** Karpaka - The celestial wish yielding tree.

சினமலிகரியுரி செய்தசிவனுறைதரு திருமிழலையைமிகு
தனமனர்சிரபுர நகரிறைதமிழ்விர கனதுரையொருபதும்
மனமகிழ்வொடுபயில் பவரெழின்மலர்மகள் கலைமகள்சயமகள்
இனமலிபுகழ்மக ளிசைதரவிருநில னிடையினிதமர்வரே. 11

*சினம் மலி கரி உரி செய்த சிவன் உறைதரு திரு மிழலையை, மிகு*
*தன மனர் சிரபுரநகர் இறை - தமிழ்விரகனது - உரைஒருபதும்*
*மன மகிழ்வொடு பயில்பவர், எழில் மலர்மகள், கலைமகள், சயமகள்,*
*இனம் மலி புகழ்மகள், இசைதர, இருநிலன் இடை இனிது அமர்வரே.*

cin2am mali kari uriceyta civan2 uRaitaru tiru mizalaiyai, miku
tan2a man2ar, cirapuranAkar iRai--tamizvirakan2atu--urai orupatum
man2a makizvoTu payilpavar, ezil malar makaL, kalai makaL, caya makaL,
in2am mali pukazmakaL, icai tara, iru nilan2 iTai in2itu amarvarE.

**பொருள்:** தாருகா வனத்து ரிஷிகள் வேள்வி செய்து அதனின்று ஒரு கொடூரமான யானையை உருவாக்கி சிவபெருமானை அழித்து வர ஏவினார்கள். சினவேகத்தோடு வந்த

யானையை சிவபெருமான் மடக்கிப்பிடித்து அதன் தோலை உரித்துத் தன் உடலில் போர்த்துக் கொண்டான். இவன் விரும்பி உறையும் ஊர் திருவீழிமிழலையாகும். மிக்க செல்வங்களால் நிறைந்த மனமகிழ்வுடையவர்கள் வாழ்வது சிவபுரம் என்னும் சீகாழி ஊராகும். இவ்வூரில் அவதரித்த மன்னன் போன்றவனும், தமிழ் விரகனுமாகிய ஞானசம்பந்தன் இத்திருப்பதிகப் பத்துப் பாடல்களையும் பாடி அருளினான். இப்பாடல்களை மனமகிழ்வோடு பயில்பவர்கள், அழகிய திருமகள், கலைமகள், சயமகள் அவர்க்கு இனமான புகழ்மகள் ஆகியோர் தம்பால் பொருந்தப், பெரிய இவ்வுலகின்கண் இனிதாக வாழ்வர்.

**குறிப்புரை:** இது பயன்கூறித் திருக்கடைக் காப்பருளுகிறது. தனம் மிகு மனர் – செல்வம் மிகுந்த மனத்தை உடையவர். சிரபுரம் – சீகாழி. இப்பதிகத்தைப் பரிவொடு பயில்வார் திருமகள் கலைமகள் வெற்றி மகள் புகழ்மகள் பொருந்தப் பூமியில் நீடுவாழ்வார் என்பதாம்.

The adept in Tamil - the Prince of Civapuram where abide spiritual men of opulence - hath sung of the shrine Thiru-Veezhi-Mizhalai of Lord Civa who peeled off the hide of the raging and wrathful elephant. They that cultivate learning these ten verses with joy - pervading minds, will sweetly dwell on this great earth, blessed by the Goddess of the beautiful flower, the Goddess of Arts and Sciences the Goddess of Triumph and the Goddess that confers fame (on men).

**Note:** This verse lists the triad of Lakshmi, Saraswati and Durga and also the transcendental Goddess renowned as Raja Rajeswari.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*20ஆம் பதிகம் முற்றிற்று*
End of 20th Hymn

உ
சிவமயம்

# 21. திருச்சிவபுரம்

## திருத்தலவரலாறு:

திருச்சிவபுரம் என்கின்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரி தென்கரைத் தலம் ஆகும். தஞ்சை மாவட்டம் கும்பகோணத்தில் இருந்து பேருந்துகளில் செல்லலாம். தனபதி அரசன் தன் சாப விமோசனத்திற்காக ஒரு பிராமணக் குழந்தையை வாங்கித் தந்தையும் தாயும் பிடிக்கச் சோமவார சிவராத்திரியில் அறுத்து அபிஷேகிக்க, அம்பாள் வெளிப்பட்டு, அந்தக் குழந்தைக்கு அநுக்கிரகித்தார் என்பது செவிவழிச் செய்தியான வரலாறு. வெள்ளைப் பன்றியாகி திருமால் வழிபாடு செய்த தலம். சுவாமி பெயர் சிவபுர நாதர். அம்மை பெயர் சிங்காரவல்லி. தீர்த்தம் சந்திர புஷ்கரணி. கார்த்திகைச் சோம வாரங்களில் தீர்த்த விசேஷம். கடைசிச் சோம வாரத்தில் உற்சவம். அரசியலார் 1927இல் படியெடுத்த 272 முதல் 281 வரை உள்ள 10 கல்வெட்டுக்கள் உள்ளன.

## பதிக வரலாறு:

திருநறையூர்ச் சித்தீச்சரம் முதலிய தலங்களை வணங்கிப் பதிகப்பணி செய்து, திருஅரிசிற்கரைப்புத்தூரில் இருக்கின்ற காலத்து, திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருச்சிவபுரத்திற்கு எழுந்தருளினார்கள். இத்தலம் திருமால் வெள்ளைப்பன்றியாய்ச் சிவபெருமானை வழிபட்ட தலமாதலின் அங்கே எழுந்தருளியிருக்கின்ற இறைவன் திருவடியை வணங்கிப் 'புவம் வளி' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள். சிவனே ஐந்தொழிலை ஆற்றும் முதல்வன். ஐந்தொழில் பதவிகளில் இருப்பார் அனைவரும் சிவன் அருளைத் தாங்கி நின்றே ஆற்றுகின்றனர். அந்தச் சிவனை அடையும் நெறிகள் தாசமார்க்கம், சற்புத்திர மார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் என்பன. அந்தந்த நெறிகளில் வழுவாது நின்றார் சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் ஆகிய முத்திகளை எய்துகின்றனர். அவனைச் சிவபுரத்தில் வழிபடுகின்றவர்கள் நிலமிசை நிலை பெறுவர். கலைமகள், அலைமகள், வெற்றிமகள் அருள் பெறுவர். எல்லா நன்மையும் பெறுவர். இதனைச் சேக்கிழார் பெருமான் 'வாங்குமிசைத் திருப்பதிகம்' என்பார்கள்.

## 21. THIRU-CH-CHIVA-PURAM

### THE HISTORY OF THE PLACE

Thiru-ch-chiva-puram is a sacred place in Chola Naadu on the south bank of river Cauvery. It can be reached by bus from Kumbakonam in Thanjai district. According to folklore, a king, Danapathi, with a view to get relief from a curse, bought a Brahmin child and cut it up to anoint the deity as it was held by its father and mother on a certain Sivaraaththiri falling on a Monday and that the Goddess showed her Grace to that child. The Lord's name is Sivapuranaathar and the Goddess's is Singaaravalli. The holy ford is Chandhirapushkarani. Mondays in the month of Kaarthigai are considered special for bathing in this ford. The last Monday of that month is celebrated as a festival. There are 10 inscriptions, from No. 272 to 281, which have been copied by the government epigraphists.

### INTRODUCTION TO THE HYMN

Adoring many shrines commencing from Naraiyur Siddheeswaram, the young saint arrived at Chivapuram where he sang the following hymn, which is full of extraordinary significance. This hymn points out that Lord Civan is the Supreme God - Head for the three fold activities, such as creation, sustenance, and dissolution. However Lord Civan, the supreme animates the three gods - Brahma, Vishnu and Rudran to carry out the three activities. He is immanent in the three gods. They invoke the grace of Lord Civan always in their mind and carry out their duties (சிவன் இம்மூவரையும் அதிட்டித்து - நிலைப்படுத்தி அவரவர் தொழிலைச் செய்ய அருள் புரிந்து வருகிறான்). It may be noted that the trinity gods i.e., Brahma, Vishnu and Rudran are entirely three different entities from Lord Civan; but could do their duty only by the grace of Lord Civan. The word 'Rudran' is sometimes wrongly attributed to Lord Civan also. But it must be noted that Civan is 'Gunaa-Theetha-Rudran' (குணாதீத ருத்திரன்) while the trinity Rudran is 'Guna-Rudran' (குண ருத்திரன்). To equate the Supreme God Head

Lord Civan along with Brahma and Vishnu is a very wrong conception. Lord Civan is the Supreme God Head for all these three and other gods.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 21. திருச்சிவபுரம் 21. THIRU-CH-CHIVA-PURAM

பண் : நட்டபாடை (திருவிராகம்) *Pann: Natta Paadai*
ராகம் : கம்பீரநாட்டை *Raagam : Kambeera Naattai*

புவம்வளிகனல்புனல் புவிகலையுரைமறை திரிகுணமமர்நெறி
திவமலிதருசுரர் முதலியர்திகழ்தரு முயிரவையவைதம
பவமலிதொழிலது நினைவொடுபதுமநன் மலரதுமருவிய
சிவனதுசிவபுர நினைபவர்செழுநில னிலனிலைபெறுவரே. 1

*புவம், வளி, கனல், புனல், புவி, கலை, உரை மறை, திரிகுணம், அமர் நெறி,*
*திவம் மலிதரு சுரர் முதலியர் திகழ்தரும் உயிர் அவை, அவைதம*
*பவம் மலி தொழில் அது நினைவொடு, பதுமநல்மலர் அது மருவிய*
*சிவனது சிவபுரம் நினைபவர் செழுநிலனினில் நிலைபெறுவரே.*

puvam, vaLi, kan2al, pun2al, puvi, kalai, urai maRai, tirikuNam, amar neRi,
tivam malitaru curar mutaliyar tikaztarum uyir avai, avaitama
pavam mali tozil atu nin2aivoTu, patuma nalmalar atu maruviya
civan2atu civapuram nin2aipavar cezu nilan2in2il nilaipeRuvarE.

**பொருள்:** விண், தீ, காற்று, நீர், மண் ஆகிய ஐம்பூதங்களைப் பற்றியும், அறுபத்து நான்கு கலைகளைப் பற்றியும் வேதங்கள் விரித்துக் கூறுகின்றன. சத்துவம், இராஜசம், தாமசம் ஆகியவை மூன்று குணங்கள். தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் ஆகியவை விரும்பத்தக்க மார்க்கங்கள் (அல்லது) சரியை, கிரியை, யோகம், ஞானம் ஆகியவை விரும்பத்தக்க மார்க்கங்கள். தேவர் முதலாகத் தாவரம் ஈறாக உள்ள அனைத்து உயிர்களுக்கும், அவைகளுடைய வினைக்கு ஈடாகப் பிறவிகள் அருளப்படுகின்றன. படைக்கும் தொழிலில் நல்ல தாமரை மலரில் விளங்கும் நான்முகனை இடமாகக் கொண்டு (அதிட்டித்து) நின்று சிவபெருமான் உலகைத் தோற்றுவித்து அருளுகிறான். அந்தச் சிவபெருமானுடைய சிவபுரத் தலத்தை நினைப்பவர்கள் வளம் நிறைந்த இந்த உலகில் நிலைபெற்று வாழ்வார்கள்.

**குறிப்புரை:** இது இறைவனே சிருட்டித் தொழில் இடையறாது நிகழ்த்தத் திருவுள்ளங் கொள்கின்றார். அத்தொழிலைச் செய்யும் பிரமன் அந்தப் பாவனையில் இருந்து சிருட்டிக்கின்றான். ஆதலால் பவமலி

தொழிலது நினைவொடு இருக்கும் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் சிவபுரத்தை நினைப்பவர் நிலைபேறான வாழ்வடைவர் என்கின்றது. புவம், வளி, கனல், புனல், புவி – விண்ணாதி மண்ணந்தமாகிய ஐம்பெரும் பூதங்கள். புவம் – வான், கலை – எண்ணெண் கலைகள். உரைமறை – இறைவன் புகழைச் சொல்லும் வேதம். திரி குணம் – சத்துவம் முதலிய மூன்று குணங்கள். அமர்நெறி – விரும்பத்தக்க மார்க்கங்கள். திவம் – தேவலோகம். உயிரவை – தேவர் முதலாகத் தாவரம் ஈறாகச் சொல்லப்பட்ட உயிர்கள். அவைதம பவமலி தொழிலது நினைவொடு – அவ்வவ் ஆன்மாக்களுடைய வினைக்கு ஈடாக அருளப்படுகின்ற பிறவிக்கேற்ற சிருட்டித் தொழிலின் நினைவொடு. எனவே, இறைவன் பிரமனைப் போல விகாரியாய்ப் படைப்பவனல்லன். சங்கற்பத்தால் (நினைவினால்) எல்லாத் தொழிலும் நடைபெறுகின்றன என்பது கருத்து. பதும நன்மலரது மருவிய சிவன் – தாமரை மலர் மேல் வீற்றிருக்கும் சிவன். சிவபெருமான் பிரமன் உருக்கொண்டு வீற்றிருப்பாரல்லர். இத்தகைய திருவுருவத்தைப் பிரமன் தியானித்தலான் சிருட்டி கைவரப் பெறுவன் என்பது.

Brahma is seated on the grand Lotus flower. He sets his concentrated thinking on creation, imaging Lord Civan in his conscience very seriously, He was thus able to acheive his aim. Lord Civan animates in Brahma (*பிரம்மாவை அதிட்டித்து நின்று - பிரம்மாவை நிலைப்படுத்தி*) brought forth into being many many things such as earth, heaven, fire, air, water etc., etc. He proclaimed the Vedas which explain the arts and sciences. He created the triad of Gunas (*சாத்வீகம், தாமஸம், ராஜஸம் - ஆக மூன்று குணங்கள்*) ways for salvation and embodiments for Devas and all other entities. Those who can meditate on Lord Civan's Civapuram will flourish well in this rich earth.

**Note:** The Lord Supreme is Civa. His seat indeed is the Lotus (Heart Lotus - *மலர்மிசை ஏகினான்*). St. Maanickavaachakar hails Him as 'Tamaraicchaivan'. Brahma prays to Civa, in single-minded devotion to animate him and his creation.

மலைபலவளர்தரு புவியிடைமறைதரு வழிமலிமனிதர்கள்
நிலைமலிசுரர்முத லுலகுகணிலைபெறு வகைநினைவொடுமிகும்
அலைகடனடுவறி துயிலமரரியுரு வியல்பரனுறைபதி
சிலைமலிமதிள்சிவ புரநினைபவர்திரு மகளொடுதிகழ்வரே. 2

மலை பல வளர்தரு புவிஇடை மறைதரு வழிமலி மனிதர்கள்,
நிலை மலி சுரர் முதல் உலகுகள் நிலைபெறு வகை நினைவொடு மிகும்
அலைகடல் நடுவு அறிதுயில் அமர் அரி உருவு இயல்பரன் உறைபதி -
சிலை மலி மதில் - சிவபுரம் நினைபவர் திருமகளொடு திகழ்வரே.

malai pala vaLar taru puvi iTai maRai taru vazi mali man2itarkaL,
nilai mali curar mutal ulakukaL, nilai peRu vakai nin2aivoTu mikum
alai kaTal naTuvu aRituyil amar ari uruvu iyal paran2 uRai pati--
cilai mali matil--civapuram nin2aipavar tiru makaLoTu tikazvarE.

**பொருள்:** இந்த மண்ணுலகில் மலைகளும் வளங்களும் வளர்ந்து கொண்டு இருக்கின்றன. வேதங்கள் கூறும் விதிகளின்படி நடந்து காட்டும் மிகுதியான மக்கள் வாழ்கிறார்கள். விண்ணுலகத்தில் வாழும் தேவர்களும் மற்றுமுள்ள உலக உயிர்களும் நிலைபெற்று வாழ்வதற்குரிய காத்தல் தொழில் இன்றியமையாதது. மிகுந்து வரும் அலைகளை உடைய திருப்பாற்கடல் நடுவில் அரிதுயில் கொண்டுள்ள திருமாலைக் காத்தல் தொழில் செய்வதற்காகச் சிவபெருமான் இடமாகக் கொண்டுள்ளான். அவன் வழியாகக் காத்தல் தொழிலைச் சிவபெருமான் செய்தருளுகிறான். கற்களால் கட்டப்பட்ட மதில்கள் சூழ்ந்த திருச்சிவபுரம் சிவபெருமான் உறையும் பதியாகும். அதனை நினைப்பவர் திருமகளோடு திகழ்வர்.

**குறிப்புரை:** இது எல்லா உலகங்களும் தத்தம் கால எல்லை வரையில் நிலைபெறுக என்னும் திருவுள்ளக் குறிப்போடு பாற்கடல் மேல் பள்ளிகொள்ளும் திருமால் உருவின் இயல்போடு அரன் உறையும் பதியினை நினைப்பவர் திருமகளோடு திகழ்வர் என்கின்றது. உலகு நிலைப்பதற்கு மலை இன்றியமையாமையின் மலைபல வளர் தருபுவி எனப்புவியை விசேடித்தார். மறைதரு வழிமலி மனிதர்கள் – வேத விதியின்படி அக ஒழுக்கத்தையும், புறவொழுக்கத்தையும் வரையறுத்த மக்கள். நிலைமலிசுரர் – மக்களைக் காட்டிலும் வாழ்வால் நீடித்த தேவர்கள். முதல் உலகுகள் என்றது, விண்ணும் மண்ணும் கூறவே இடைப்பட்டனவெல்லாம் உணர வைத்தார். அறிதுயில் – யோகநித்திரை.

Thirumaal always sleeps mystically (*அறிதுயில்*) on the Divine Snake, Aathi Sēshan (*ஆதிசேஷன்*) amidst the billowing ocean (*திருப்பாற்கடல்*). He sets his concentrated thinking on sustenance, imaging Lord Civan in his conscience very solemnly. Lord Civan abiding in Thirumaal (*திருமாலை அதிட்டித்து நின்று - நிலைப்படுத்தி*) sustains the entire universe. Men, poised in the Vedic ways, on earth which has many mountains, the Devas of great durability in the celestial worlds and all other living beings in the Universe - all of them are sustained by Lord Civan - animates in Thirumaal (*திருமாலை அதிட்டித்து நின்று - திருமாலை நிலைப்படுத்தி*) those who meditate on this Lord Civan, Supreme One of Civapuram, which is girt with rocky walls will have all the blessings of the goddess of wealth.

**Note:** The Trinity comprises Brahma, Vishnu and Rudra. It is said that Brahma is the creator, Vishnu the sustainer and Rudra the absorber.

பழுதிலகடல்புடை தழுவியபடிமுத லியவுலகுகள்மலி
குழுவியசுரர்பிறர் மனிதர்கள்குலமலி தருமுயிரவையவை
முழுவதுமழிவகை நினைவொடுமுதலுரு வியல்பரனுறைபதி
செழுமணியணிசிவ புரநகர்தொழுமவர் புகழ்மிகுமுலகிலே. 3

*பழுது இல கடல் புடை தழுவிய படி முதலிய உலகுகள், மலி*
*குழுவிய சுரர், பிறர், மனிதர்கள், குலம் மலிதரும் உயிர் அவை அவை*
*முழுவதும் அழி வகை நினைவொடு முதல் உருவு இயல் பரன் உறை பதி -*
*செழு மணி அணி - சிவபுரநகர் தொழுமவர் புகழ் மிகும் உலகிலே.*

pazutu ila kaTal puTai tazuviya paTi mutaliya ulakukaL, mali
kuzuviya curar, piRar, man2itarkaL, kulam malitarum uyir avai avai
muzuvatum azi vakai nin2aivoTu mutal uruvu iyal paran2 uRai pati--
cezu maNi aNi--civapuranAkar tozumavar pukaz mikum, ulakilE.

**பொருள்:** இந்த நிலவுலகம் பழுதுபடாத கடலால் சூழப்பட்டது. இந்த நிலவுலகம் உட்பட எல்லா உலகங்களிலும் மனநிறைவுடன் தேவர்கள், நரகர்கள், மனிதர்கள் சேர்ந்து வாழ்கின்றனர். இவர்கள் அனைவருடைய உயிர்களையும் ஒடுக்கும் நினைவோடு, அதில் உருத்திரனை இடமாகக் கொண்டு (அதிட்டித்து), அவனுடைய உருவில் தானே செய்தருள்கிறான். செழுமையான மணிகளால் அழகு செய்யப்படும் திருச்சிவபுர நகரில் அவன் உறைகிறான். அந்த நகரைத் தொழுபவர்களுடைய புகழ் உலகில் மிகும்.

**குறிப்புரை:** இது நிலம் முதலிய உலகுகள் முழுவதுமழியும்படி ருத்திராம்சத்தோடு எழுந்தருளும் இறைவன் பதியைத் தொழுமவர் புகழ் உலகில் மிகும் என்கின்றது. கடல்புடை தழுவியபடி என்றது சங்கார கிருத்தியத்திற்குப் பயன்படும் தண்ணீரைக் கூறி விசேடித்தபடி. படி – பூமி. படி முதலிய உலகுகள் என்றது ஒடுக்க முறைக்கண் பிருத்வி முதலாயின முறையே தத்தம் காரணமாகிய மாயையில் ஒடுங்கும் முறை பற்றி. உயிரவை அவை முழுவதும் அழிவகை என்றது உயிர்கள் ஒடுங்குதலை; உயிர்களுக்கு என்றும் அழிவின்மையின். முதல் – இறைவனது உருவாகிய உருத்திரவடிவு.

Men live on this earth surrounded by flawless oceans. Devas, Narakas and all such others live in many other worlds. Lord Civan who is Maha Rudran i.e., Gunaa Theetha Rudran (*குணாதீத ருத்திரன்*) thought of dissolving the entire universe. He, therefore, animates in the god of virtue (*குணருத்திரனை - அறக்கடவுளை அதிட்டித்து நின்று*) and absorbs everything. This Lord Civan is entempled in Civapuram which is

surrounded by gem studded walls on all sides. Those who adore Him will gain more and more renown.

**Note: The god of virtue (அறக்கடவுள் or தருமதேவதை) is commonly referred to as Yaman (யமன்). In Theology He is known as Guna Rudran (குண ருத்திரன்) while Lord Civan is known as 'Gunaa Theetha Rudran' (குணாதீத ருத்திரன்). Without knowing this differentiation people get confused and equate Lord Civan along with Brahma and Thirumaal which is a wrong conception. Readers may kindly take note of this and explain this to others.**

நறைமலிதருமள றொடுமுகைநகுமலர் புகைமிகுவளரொளி
நிறைபுனல்கொடுதனை நினைவொடுநியதமும் வழிபடுமடியவர்
குறைவிலபதமணை தரவருள்குணமுடை யிறையுறைவனபதி
சிறைபுனலமர்சிவ புரமதுநினைபவர் செயமகடலைவரே. 4

*நறை மலி தரும் அளறொடு, முகை, நகுமலர், புகை, மிகு வளர் ஒளி,*
*நிறை புனல்கொடு, தனை நினைவொடு நியதமும் வழிபடும் அடியவர்*
*குறைவு இல பதம் அணைதர அருள் குணம் உடை இறை உறை வனபதி -*
*சிறை புனல் அமர் - சிவபுரம் அது நினைபவர் செயமகள் தலைவரே.*

naRai malitarum aLaRoTu, mukai, naku malar, pukai, miku vaLar oLi,
niRai pun2al koTu, tan2ai nin2aivoTu niyatamum vazipaTum aTiyavar
kuRaivu ila patam aNai tara aruL kuNam uTai iRai uRai van2a pati--
ciRai pun2al amar--civapuram atu nin2aipavar ceyamakaL talaivarE.

**பொருள்:** சிவ பரம்பொருளை வழிபடும் அன்பர்கள் மணம் மிகுந்த சந்தனம், நிறைந்த நீர் ஆகியவற்றைக் கொண்டு நன்னீராட்டுவார்கள். அரும்புகள், இதழ் விரிந்த மலர்கள் ஆகியவற்றால் மலர் சூட்டுவார்கள். குங்கிலியம், சீதாரி முதலியவற்றால் நறும்புகை அளிப்பர். ஒளிவளர் தீபங்கள் கொண்டு ஒளி காட்டுவர். இவ்வாறு சிவபெருமானை நாள்தோறும் நினைவோடு வழிபடும் அடியவர்களுக்கு அவன் குறைவில்லாததும், நிறை உடையதுமான சாமீபம் முதலான முத்திகளை அடைய அருள் செய்வான். நீர் நிலைகள் பலவற்றாலும் வளம் நிரம்பி விளங்கும் அழகிய பதி திருச்சிவபுரமாகும். அன்பர்களுக்கு அருள் செய்யும் குணம் உடைய சிவபெருமான் அங்கு உறைகிறான். அந்த ஊரை நினைவில் கொண்டு அங்குள்ள இறைவனை வழிபாடு செய்பவர்கள் வெற்றித் திருமகளின் தலைவர்கள் ஆவார்கள்.

**குறிப்புரை:** இது அபிஷேக ஆராதனைப் பொருள்களோடு நியதியாக வழிபடும் அடியார்களுக்குக் குறைவிலாப் பதத்தைக் கொடுக்கும் மகேச்சுரனது பதியை வழிபடுமவர்கள் செயமகளுக்குத் தலைவராவர்

என்கின்றது. நறை மலிதரும் அளறு – மணம் மிகுந்த சந்தனம். முகை நகுமலர் – முகையும் மலரும், புகை – தூபம். ஒளி – தீபம். நினைவோடு – ஈசுவர தியானத்தோடு, நியதமும் – ஒழுங்காக. குறைவிலபதம் – சாமீபம், வளபதி – அழகிய நகரம். சிறைபுனல் – மதகுகளோடு கூடிய புனல். இது கிரியாவான்கள் பெறுபயன் கூறியது.

Lord Civan, abides in Civapuram, the devotees adore Him daily in all propriety with their thought centred on Him. They perform Abishekam (அபிஷேகம்) with plenty of water; apply fragrant sandal paste; decorate Him with buds, and unfolded flowers. They fumigate the surroundings with sweet smelling incense. They light up bright lamps. Lord Civan graces these people and grants them Saameepam - salvation (சாமீபம் - the state of nearness to Lord Civan) - (One of four positions in salvation). Civapuram is a rich and beautiful town because of availability of plenty of water in pools found all around. This is the place where Lord Civan is entempled. Those who meditate on Lord Civan of this place with intense devotion will be above the goddess of victory.

சினமலியறுபகை மிகுபொறிசிதைதரு வகைவளிநிறுவிய
மனனுணர்வொடுமலர் மிசையெழுதருபொரு ணியதமுமுணர்பவர்
தனதெழிலுருவது கொடுவடைதகுபர னுறைவதுநகர்மதிள்
கனமருவியசிவ புரநினைபவர்கலை மகடரநிகழ்வரே. 5

*சினம் மலி அறுபகை மிகு பொறி சிதைதரு வகை வளி நிறுவிய*
*மனன் உணர்வொடு மலர்மிசை எழுதரு பொருள் நியதமும் உணர்பவர்*
*தனது எழில் உருஅதுகொடு அடை தகு பரன் உறைவது நகர் - மதிள்*
*கனம் மருவிய - சிவபுரம் நினைபவர் கலைமகள் தர நிகழ்வரே.*

cin2am mali aRupakai miku poRi citai taru vakai vaLi niRuviya
man2an2 uNarvoTu malar micai ezutaru poruL niyatamum uNarpavar
tan2atu ezil uru atu koTu aTai taku paran2 uRaivatu nAkar--matil
kan2am maruviya--civapuram nin2aipavar kalaimakaL tara nikazvarE.

**பொருள்:** யோகியர்களுக்குச் சிவபெருமான் அருளும் நிலை கூறப்படுகிறது. காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் எனப்படும் ஆறு பகைகளையும் வென்றவர்கள் யோகியர். மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய ஐம்பொறிகளையும் அடக்கும் வகையில் நிலை நின்றவர்கள் யோகியர். காற்றை நிறுத்தியும், விடுத்தும் செய்யப்படும் பிரணாயாமத்தைப் புரிபவர்கள் யோகியர். ஆழ்ந்து தியானம் செய்வதன் காரணமாக அந்த யோகியர்களுடைய உள்ளத்திலே சிவபெருமான் ஒளிப் பிழம்பாகத்

தோன்றி அருளுகிறார். நாள்தோறும் உணர்பவர்களாகிய அந்த யோகிகளுக்குத் தனது எழில் உருவாகிய சாரூபத்தைத் தந்தருளும் சிவபெருமான் உறைந்தருளும் நகர் திருச்சிவபுரமாகும். அங்கு மேகம் தவழும் மதில்கள் சூழ்ந்து உள்ளன. அந்த நகரை நினைப்பவர்களுக்குக் கலைமகள் தன் அருளைத் தர வாழ்வார்கள்.

***குறிப்புரை:*** இது அகப்பகை ஆறும் வென்று ஐம்பொறி அடக்கி, பிராண வாயுவை ஒழுங்குபடுத்திய யோகியர்க்குச் சாரூபந் தரும் பரசிவன் பதியாகிய சிவபுரத்தை நினைப்பவர் சாரூபர்களாவார்கள் என்கின்றது. சினமலி அறுபகை – கோபம் முதலிய உட்பகையாறும். இதனை அரிஷட்வர்க்கம் என்பர் வடநூலார். பொறி – ஐம்பொறிகள். பொறிகள் புலன்களைச் சென்று பற்றுவதைத் தடுப்பது பிராணாயாமம் ஒன்றே என்பதாம். மனன் உணர்வு – தியானம். மலர் மிசை எழுதரு பொருள் – பிரமரந்தரத்தின் கண்ணதாகிய சகஸ்ரதளத்தையுடைய தாமரை மலரின்மேல் எழுந்தருளியிருக்கும் பேரொளிப் பிழம்பாகிய பொருள். நியதமும் உணர்பவர் – அனவரதமும அறிபவர்கள். தனது எழில் உருவுகொடு – தன்னுடைய அழகிய வடிவத்தைக் கொண்டு. என்றது கண்டக்கறையும் கங்கையும் ஒழிந்த சாரூபத்தை. கனம் – மேகம்.

The devotees of Lord Civan by practising yoga, have nullified the re-actions of the six-fold internal adversaries (passion, wrath, miserliness, delusion, arrogance and envy). They have also subdued the five sensory organs (physical body, mouth, eye, nose and ear) (*ஐம்பொருள்கள் - மெய், வாய், கண், மூக்கு, செவி*). They daily meditate with pure consciousness on Lord Civan who manifests in the Lotus flower. They practise the breathing exercise known as Prana-Yamam (*பிராணாயாமம்*) and control the vital forces of the body by regulating the breath of three modes (Inhalation, Retention and Exhalation). With these rituals, they are able to see the brilliance of the supreme in their mind. The clouds sail over the high walls of Civapuram. The yogis who meditate on the shrine of Civapuram stand blessed by the goddess of wisdom.

Note: Civa blesses the deserving soul with Saarupyam, i.e., confers on it a form almost similar to His own. Civa-yoga: The yoga of breath-control through which supreme serenity is gained. 'Malar misai ezhutharu porull': Beyond the six aadhaaras (psychic centres) is Brahmarantra where burgeons the thousand-

petalled Lotus. Civa is the Yogi par excellence. By His grace, His devotees pursue yoga with ease.

சுருதிகள்பலநல முதல்கலைதுகளறு வகைபயில்வொடுமிகு
உருவியலுலகவை புகழ்தரவழியொழு குமெயுறுபொறியொழி
அருதவமுயல்பவர் தனதடியடைவகை நினையரனுறைபதி
திருவளர்சிவபுர நினைபவர்திகழ்குல னிலனிடைநிகழுமே. 6

சுருதிகள்பல நல முதல் கலை துகள் அறுவகை பயில்வொடு மிகு
உருஇயல் உலகுஅவை புகழ்தர, வழி ஒழுகும் மெய் உறு பொறி ஒழி
அருதவம் முயல்பவர், தனது அடி அடை வகை நினை அரன் உறைபதி
திருவளர் சிவபுரம், நினைபவர் திகழ்குலன் நிலன் இடை நிகழுமே.

curutikaL pala nala mutal kalai tukaL aRu vakai payilvoTu miku
uru iyal ulaku avai pukaztara, vazi ozukum mey uRu poRi ozi
arutavam muyalpavar, tan2atu aTi aTai vakai nin2ai aran2 uRai pati,
tiru vaLar civapuram, nin2aipavar tikaz kulan2 nilan2 iTai nikazumE.

**பொருள்:** அரிய தவத்தை மேற்கொண்ட அடியவர்களின் சிறப்பு இந்தப் பாடலில் சொல்லப் படுகிறது. அரிய தவத்தில் ஒழுகும் அடியவர்கள் வேதங்களையும், பலவித நன்மைகளைத் தரும் தலைமையான கலைகளையும் குற்றமறப் பயின்றவர்கள். உலகியலில் பழிபாவங்களுக்கு அஞ்சுபவர்கள். தூய ஒழுக்க சீலராய் உலகம் புகழ விளங்குபவர்கள். உடலின்கண் உள்ள பொறிகள் வழிஒழுகாது அரிய தவத்தை மேற்கொள்பவர்கள். அந்த அடியவர்கள் தன் திருவடிகளை அடையும் வகையில், அவர்களுக்கு வழிகாட்டும் சிவபெருமான் உறையும் பதி திருச்சிவபுரமாகும். அந்த நகரில் திருவருள் தேங்கியுள்ளது. அந்தத் தலத்தை நினைப்பவர்களுடைய குலம் விளக்கம் அடையும். அந்தக் குலம் உலகில் நிலைபெற்றுத் திகழும். சாயுச்சிய நிலை அளிப்பதை இப்பாட்டு தெரிவிக்கிறது.

**குறிப்புரை:** வேதம் முதலான கலைகளைக் குற்றமறப் பயின்று உலகம் புகழ, பொறிவாயில் அவித்து, அருந்தவம் முயல்வார்கள் திருவடி ஞானத்தைப் பெறத் திருவுளங் கொண்டருள்கின்ற பரமசிவன் உறை பதியைச் சிந்திப்பவர் குலம் நிலத்திடை நீடுவாழும் என்கின்றது. பலநலமுதல்கலை – பலவாகிய நன்மைகளைக் கருதுகின்ற கலை. துகளறுவகை – சந்தேக விபரீதங்கள் அறும்படி. உருவு இயல் – தோற்றத்தின் அழகு. தனது அடி அடை வகை. இது சாயுச்சியம் அளிப்பது அறிவித்தது.

The devotees of Lord Civan learn well all the top true aspects of divine knowledge and the Vedas without any omission. They shun the worldly sins and

wrong doings. They shine in the world due to their good behaviour in conformity with the canons of right conduct laid down for observance. They are never carried away by the five sensory organs. They undertake severe penance. Lord Civan bestows the doctrines to these devotees to enable them to learn the pathway to reach His holy Feet. This Lord Civan abides in Civapuram where His grace is full. The clan of those who think about and adore the place Civapuram will flourish on the earth forever.

**Note:** This verse deals with Saayujyam which is the gaining of oneness with Civa.

கதமிகுகருவுரு வொடுவுகிரிடைவட வரைகணகணவென
மதமிகுநெடுமுக னமர்வளைமதிதிக ழெயிறதனுதிமிசை
இதமமர்புவியது நிறுவியவெழிலரி வழிபடவருள்செய்த
பதமுடையவனமர் சிவபுரநினைபவர் நிலவுவர்படியிலே. 7

*கதம் மிகு கரு உருவொடு உகிர் இடை வடவரை கணகணஎன,*
*மதம் மிகு நெடுமுகன் அமர் வளை மதிதிகழ் எயிறு அதன் நுதிமிசை,*
*இதம் அமர் புவிஅது நிறுவிய எழில் அரி வழிபட, அருள்செய்த*
*பதம் உடையவன் அமர் சிவபுரம் நினைபவர் நிலவுவர், படியிலே.*

katam miku karu uruvoTu ukir iTai vaTavarai kanAkaNa en2a,
matam miku neTumukan2 amar vaLaimati tikaz eyiRu atan2 nutimicai,
itam amar puvi atu niRuviya ezil ari vazi paTa, aruL ceyta
patam uTaiyavan2 amar civapuram nin2aipavar nilavuvar, paTiyilE.

***பொருள்:*** திருமால் வராக அவதாரம் எடுத்தபோது பணிந்த இடம் என்பதை இப்பாட்டு தெரிவிக்கிறது. திருமால் வராக அவதாரம் எடுத்தபோது சினம் மிக்க கரிய உருவத்தோடு விளங்கினான். வராக அவதார உருவம் மிகப் பெரிதாக இருந்தது. அவருடைய நகங்களுக்கு இடையே வடக்கின்கண் உள்ள மேருமலை கணகணவென ஒலி செய்தது. மதம் மிக்க நீண்ட பெரிய உருவமான அந்த வராகத்தின் முகத்தில் பிறைநிலவு போன்ற கோரமான பல் (எயிறு) விளங்கியது. அந்த எயிற்றின் முனையில் பூமி இதமாக அமர்ந்து விளங்கியது. அந்தப் பூமியை உலகின்கண் அழியாது நிறுத்திக் காத்தவர் அழகிய திருமால். அவர் வழிபட, அவருக்கு அருள்புரிந்த திருவடிகளை உடையவனாகிய சிவபெருமான் எழுந்தருளியுள்ள இடம் திருச்சிவபுரம். அந்த ஊரை நினைப்பவர் உலகில் புகழோடு விளங்குவார்.

***குறிப்புரை:*** ஆதிவராகமான அரி வழிபட அருள்செய்தவரது சிவபுரத்தை நினைபவர் என்றும் விளங்குவர் என்கின்றது. கதம் மிகு – கோபம் மிகுந்த. கருவுருவொடு – கறுத்த மேனியோடு. உகிர்இடை – நகங்களின் இடையே. மதம் மிகு நெடுமுகன் அமர் – மதம் மிக்க நீளமான முகத்திலே இருக்கின்ற.

வளைமதி திகழ் எயிறு – பிறை மதியை யொத்த கோரப்பல். நுதி – நுனி. இதம் அமர் புவி – இன்பத்தோடு இருக்கின்ற பூமி. ஆதிவராக உருவெடுத்த திருமாலின் சத்தி பூமியாதலின், அவள் வராகத் தந்தத்தில் இதமாக இருந்தாள் என்றார். பதம் – திருவடி.

In the days of yore Thirumaal took the Avataar of a huge black (cosmic) boar. It was very dark, energetic and had a wrathful appearance. The northern mountain Mēru (மேருமலை) perched between its nails and making a heavy roaring noise as KANA KANA (*கண கண*), the boar held the earth on its crescent shaped awesome tusk beneath its musty and long snout and saved the earth from destruction. The earth had thus a comfortable seating while being protected by Thirumaal. This handsome Thirumaal worshipped and adored Lord Civan residing in Civapuram and stood blessed by Him. Those who meditate on this shrine at Civapuram will thrive on earth in great excellence.

அசைவுறுதவமுயல் வினிலயனருளினில் வருவலிகொடுசிவன்
இசைகயிலையையெழு தருவகையிருபது கரமவைநிறுவிய
நிசிசரன்முடியுடை தரவொருவிரல்பணி கொளுமவனுறைபதி
திசைமலிசிவபுர நினைபவர்செழுநில னிலநிகழ்வுடையரே. 8

*அசைவுஉறு தவமுயல்வினில், அயன் அருளினில், வரு வலிகொடு சிவன்*
*இசை கயிலையை எழுதரு வகை இருபது கரம் அவை நிறுவிய*
*நிசிசரன் முடி உடைதர, ஒருவிரல் பணி கொளுமவன் உறைபதி -*
*திசைமலி - சிவபுரம் நினைபவர் செழுநிலனினில் நிகழ்வு உடையரே.*

acaivu uRu tava muyalvin2il, ayan2 aruLin2il, varu valikoTu civan2
icai kayilaiyai ezutaru vakai irupatu karam avai niRuviya
nicicaran2 muTi uTai tara, oru viral paNi koLumavan2 uRai pati--
ticai mali--civapuram nin2aipavar cezu nilan2in2il nikazvu uTaiyarE.

**பொருள்:** இராவணன், உடலை வருத்திக் கொண்டு நான்முகனை நோக்கித் தவம் செய்தான். அவனுடைய தவத்தை மெச்சி, அவன் விரும்பியபடியே மிகப் பெரிய உடல் வலிமையைக் கொடுத்தான். கிடைத்த வலிமையைக் கொண்டு, சிவபிரான் எழுந்தருளிய கயிலை மலையை, அது பெயரும் வகையில், தன் இருபது கரங்களை இராவணன் அம்மலையின் கீழ்ச் செலுத்தினான். இராவணனுடைய பத்துத் தலைகளில் உள்ள முடிகள் சிதறுமாறு, தனது ஒரு கால்விரலால் அடர்த்துத் தன் வலிமையைச் சிவபிரான் அவனுக்கு உணர்த்தி, அவனைப் பணிகொண்டு அருளினான். அந்தச் சிவபிரான் உறையும் பதி எட்டுத்

திசைகளிலும் புகழ் நிறைந்த திருச்சிவபுரம் ஆகும். அந்தத் தலத்தை நினைப்பவர் வளமான இந்த உலகில் எஞ்ஞான்றும் இன்பமாக வாழ்வர்.

**குறிப்புரை:** இது பிரமன் அருளால் வந்த தவவலிமையைக் கொண்டு இறைவனது கயிலையையெடுத்த இராவணனது முடியை நெரித்த முதல்வன் நகரத்தை நினைபவர் உலகத்தில் என்றும் வாழ்வார் என்கின்றது. அசைவுஉறுதவம் – வருத்தம் மிக்க தவம், முயல் வினில் – முயன்றதால். நிசிசரன் – இராவணன்.

The king of Sri Lanka (Nici Saran - *நிசிசரன்*) disregarding the torture of his physical frame, performed painstaking and prolonged penance and hailed Brahma. Brahma was pleased and blessed the Dasakreevan with extraordinary physical powers. With this unequalled physical strength, he once tried to lift mount Kailas (abode of Lord Civan) to move it aside. Lord Civa pressed His toe on the top of the mountain. The king's decorated crowned head got crushed under the mount, and then he realised the prowess of Lord Civan, who resides in Civapuram which is famed in all eight directions. Those who meditate on Lord Civan in the shrine at Civapuram will flourish well on this prosperous earth.

அடன்மலிபடையரி யயனொடுமறிவரி யதொரழன்மலிதரு
சுடருருவொடுநிகழ் தரவவர்வெருவொடு துதியதுசெயவெதிர்
விடமலிகளநுத லமர்கண துடையுரு வெளிபடுமவனகர்
திடமலிபொழிலெழில் சிவபுரநினைபவர் வழிபுவிதிகழுமே. 9

*அடல் மலி படை அரிஅயனொடும் அறிவு அரியது ஓர் அழல் மலிதரு*
*சுடர் உருவொடு நிகழ்தர, அவர் வெருவொடு துதிஅது செய, எதிர்*
*விடம் மலிகளம் நுதல் அமர் கண் அது உடை உரு வெளிபடுமவன் நகர்*
*திடம் மலி பொழில் எழில் - சிவபுரம் நினைபவர் வழி புவி திகழுமே.*

aTal mali paTai ari ayan2oTum aRivu ariyatu or azal malitaru
cuTar uruvoTu nikaz tara, avar veruvoTu tuti atu ceya, etir
viTam mali kaLam nutal amar kaN atu uTai uru veLipaTumavan2 nAkar--
tiTam mali pozil ezil--civapuram nin2aipavar vazi puvi tikazumE.

**பொருள்:** அறிந்து சொல்வதற்கு இயலாத வகையில் அழல் மிக்க பேரொளிப் பிழம்பாய் சிவபிரான் வெளிப்பட்டருளினார். வலிமைமிக்க சக்கராயுதத்தைப் படைக்கலமாகக் கொண்ட திருமாலும், நான்முகனும் அந்தப் பேரொளிப் பிழம்பைக் கண்டு அச்சம் கொண்டு துதி செய்தனர். துதி செய்த அளவில் அவர்களுக்கு எதிரே விடம் பொருந்திய கண்டமும்,

நெற்றிக் கண்ணும் உடைய தனது உருவத்தோடு சிவபிரான் காட்சி நல்கினான். அந்தச் சிவபிரான் எழுந்தருளிய தலம் உறுதியான மரங்கள் செறிந்த பொழில்களால் எழில்பெற்ற திருச்சிவபுரம் ஆகும். அதனை நினைபவரும், அவருடைய மரபினரும் உலகில் புகழோடு விளங்குவர்.

**குறிப்புரை:** அயன், மால் இவர்களுக்கிடையே அழல் வண்ணராய்த் தோன்றி, அவர்கள் துதி செய்யக் கண்ணுதல் கண்டக் கறையோடு கூடிய தனதுருவத்தைக் காட்டிய இறைவன் நகரத்தை நினைப்பவர் வைத்தபடி உலகம் நடக்கும் என்கின்றது. அடல் மலி படை – வலிமை மிக்க சக்கரம். அவர் வெருவொடு துதி அது செய்ய – அவர்கள் அச்சத்தோடு துதிக்க (அதற்காக இரங்கி) வெளிபடுமவன் எனக் கூட்டுக. விடமலிகளம் – நீலகண்டம். நுதலமலர் – கண் அது உடை உரு – நெற்றிக் கண்ணையுடைய உரு. நினைபவர் வழிபுவி திகழும் எனப்பிரிக்க. வழி – வமிசம்.

Thirumaal is endowed with a mighty weapon known as Sudarsanam (a sprocket wheel like weapon – *சுதர்சனம் - சக்கராயுதம்*). This Thirumaal and Brahma were terrified at sight of the big blazing column of fire, the form taken by Lord Civan, and offered worship in dread. Lord Civan sprang out of the column of fire and revealed to them His natural form, showing the dark blue neck and a third eye on His forehead. This Lord Civan abides in Civapuram which has dense gardens, thick with tall trees. Those who contemplate on and hail the Lord at the shrine in Civapuram will flourish well along with their clans on this earth.

குணமறிவுகணிலை யிலபொருளுரைமரு வியபொருள்களுமில
திணமெனுமவரொடு செதுமதிமிகுசம ணருமலிதமதுகை
உணலுடையவருணர் வருபரனுறைதரு பதியுலகினினல
கணமருவியசிவ புரநினைபவரெழி லுருவுடையவர்களே. 10

*"குணம் அறிவுகள் நிலைஇல, பொருள் உரை மருவிய பொருள்களும் இல,*
*திணம்" எனுமவரொடு, செதுமதி மிகு சமணரும், மலி தமது கை*
*உணல் உடையவர், உணர்வு அரு பரன் உறைதரு பதி - உலகினில் நல*
*கணம் மருவிய - சிவபுரம் நினைபவர் எழில் உரு உடையவர்களே.*

"kuNam aRivukaL nilai ila, poruL urai maruviya poruLkaLum ila,
tiNam" en2umavaroTu, cetumati miku camaNarum, mali tamatu kai
uNal uTaiyavar, uNarvu aru paran2 uRai taru pati--ulakin2il nala
kaNam maruviya--civapuram nin2aipavar ezil uru uTaiyavarkaLE.

**பொருள்:** கேட்டிற்குக் காரணமான அறிவினை உடையவராகிய பௌத்தர்களும், தமது கையில் நிறைந்த உணவினை வாங்கி உண்ணும் சமணர்களும் பின்வருமாறு கூறுகின்றனர். குணங்களும் அறிவும் நிலையில்லாதன. காணப்படும் உலகப் பொருள்களும், உரைக்கும் உரையால் உணர்த்தப்படும் ஏனைய பொருள்களும் அவ்வாறே அழிந்து தோன்றும் இயல்பின. இது திண்ணம். இவ்வாறு கணபங்க வாதத்தைப் பேசும் பௌத்தர்களும், குற்றம் பொருந்திய அறிவுடைய சமணர்களும் உணர்தற்கரிய சிவபிரான் உறையும் பதி திருச்சிவபுரம் ஆகும். இவ்வுலகில் நல்லவர்கள் பலர் வாழும் ஊர் அது. அதனை நினைபவர் அழகிய உருவோடு விளங்குவர்.

**குறிப்புரை:** குணம் அறிவு முதலாயின நிலையில்லாதன. உலகப் பொருள்களும் அங்ஙனமே என்னும் கணபங்க வாதிகளான புத்தர்களும் குற்றம் உள்ள அறிவுடைய சமணர்களும் அறிவரிய அரன்பதியை நினைப்பவர் அழகான வடிவத்தை யடைவர் என்கின்றது. குணம் அறிவுகள் நிலையில எனப்பிரிக்க. செதுமதி – குற்றம் பொருந்தியபுத்தி. கை உணல் உடையவர் – கையில் பிச்சையேற்றுண்ணும் சமணர்.

The Buddhists affirm thus: "Neither gunas nor knowledge can last; things phenomenally beheld, and things talked about as real, are ephemeral; this indeed is the truth". The samanars of flawed intellect stand and eat their food from their cupped palms. Lord Civan, unknowable to these people, abides in Civapuram where virtuous and pious people live in large numbers. They who think on and hail Him at this shrine at Civapuram will shine forth in elegance and fame.

திகழ்சிவபுரநகர் மருவியசிவனடி யிணைபணிசிரபுர
நகரிறைதமிழ்விர கனதுரைநலமலி யொருபதுநவில்பவர்
நிகழ்குலநிலநிறை திருவுருநிகரில கொடைமிகுசயமகள்
புகழ்புவிவளர்வழி யடிமையின்மிகைபுணர் தரநலமிகுவரே. 11

*திகழ் சிவபுர நகர் மருவிய சிவன் அடி இணை பணி சிரபுர -*
*நகர் இறை - தமிழ்விரகனது - உரை நலம் மலி ஒருபதும் நவில்பவர்,*
*நிகழ் குலம், நிலம், நிறை திரு, உரு, நிகர் இல கொடை மிகு சயமகள்*
*புகழ், புவி வளர் வழி அடிமையின் மிகை புணர் தர, நலம் மிகுவரே.*

tikaz civapura nAkar maruviya civan2 aTi iNai paNi cirapura--
nAkar iRai--tamiz virakan2atu--urai nalam mali orupatum navilpavar,
nikaz kulam, nilam, niRai tiru, uru, nikar ila koTai, miku caya makaL;
pukaz, puvi vaLar vazi, aTimaiyin2 mikai puNar tara, nalam mikuvarE.

**பொருள்:** இவ்வுலகில் புகழால் விளங்கும் நகர் திருச்சிவபுரம். அந்த நகரில் எழுந்தருளியுள்ள சிவபிரானடைய திருவடி இணைகளைப் பணிகின்றவர் ஞானசம்பந்தர். அவர் திருச்சிரபுர நகர் எனப்படும் சீகாழித் தலைவனும், தமிழ் விரகனும் ஆவார். அந்த ஞானசம்பந்தன் பாடிய உரைச் சிறப்பு வாய்ந்த இந்தத் திருப்பதிகப் பாடல்கள் பத்தினையும் ஓதி வழிபட வேண்டும். அவ்வாறு ஓதி வழிபடுபவர்கள் குலம், நிலம், நிறைந்த செல்வம், அழகிய வடிவம், ஒப்பற்ற கொடை வண்மை, மிக்க வெற்றித்திரு, இந்த உலகிடை தொடர்ந்து வரும் மரபினர், இறைவனடியார் என்ற பெருமிதம் ஆகியன தம்பால் விளங்க எல்லா நலங்களும் மிகப் பெறுவர்.

**குறிப்புரை:** இதுவரை பாடல்தோறும் சிவனியல்பும், அவர் எழுந்தருளியுள்ள நகரழகும், அவரை அடைவார் அடைந்து வந்த பயன்களும் கூறிவந்த பிள்ளையார் இப்பாட்டில் இப்பதிகத்தைப் படிப்பார் எய்தும் பயனைத் தொகுத்துக் கூறுகின்றார். குலம் (6), நிலம் (8), நிறை திரு (2) உரு (10) சயமகள் (4) கலை மகள் (5) புகழ் (3) புவிவளர்வழி (9) அடிமை (7) இவ்வாறு இப்பதிகப்பயன் ஒவ்வொரு பாடலிலும் இருப்பதை ஓர்ந்து கொள்க.

Civapuram is a well-renowned town where Lord Civan abides. His holy Feet were adored and worshipped by Gnaanasambandan. Gnaanasambandan is an expert in Tamil and the head of Sirapuram i.e., Seekaazhi. Those who recite these ten verses and hail Lord Civan will be blessed with all good things such as family-renown, landed property, abundant wealth, beautiful form, peerless munificence, and divine victory. Their descendants will continue to be traditional devotees.

**Note:** Sirapuram (*சிரபுரம்*) otherwise commonly known as Seekaazhi is the birthplace of Thiru-Gnaanasambandar. This is different from Sivapuram, which is dealt with in this hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*21ஆம் பதிகம் முற்றிற்று*
End of 21st Hymn

உ
சிவமயம்

## 22. திருமறைக்காடு

### திருத்தலவரலாறு:

திருமறைக்காடு சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் திருத்தலம். நாகை மாவட்டம் திருத்துறைப் பூண்டியில் இருந்தும் நாகையில் இருந்தும் பேருந்துகளில் செல்லலாம். திருத்துறைப் பூண்டியில் இருந்து இரயிலிலும் செல்லலாம். இத்தலம் இன்று வேதாரண்யம் என வழங்கப்படுகின்றது. வேதங்கள் வழிபட்டமையால் இப்பெயர் பெற்றது. ஆதி ராமர் இங்கு வந்து அணை கட்டி, இலங்கை சென்று, இராவண வதம் செய்தார். பின்னர் அப்பழி நீங்கப் பூசித்தார். ஆதலால் திருமறைக்காடானது ஆதிசேது எனவும் வழங்கப் பெறும். பிரமதேவர் பூசித்து இறைவன் வாயிலாகவே வேதோபதேசம் பெற்றுச் சிருட்டித் தொழில் கைவரப் பெற்றார். விசுவாமித்திரர் பூசை செய்து பிரம ரிஷியானார். பிந்திய இராமர் பூசித்து வீரஹத்தி தோஷம் நீங்கப் பெற்றார். தென் திசையைச் சமப்படுத்த இறைவன் ஆணையால் வந்த அகத்திய முனிவருக்கு, இறைவன் மணவாளத் திருக்கோலம் காட்டிய திருத்தலம். சுவாமிக்குப் பின்புறம் கருப்பக்கிருகத்துள்ளேயே மணவாளப் பெருமான் திருவுருவம் இருக்கிறது. நெய்யுண்ண வந்த எலி, அபுத்தி பூர்வமாகவே திரியைத் தூண்ட, அதனால் மறுபிறப்பில் அவ்வெலி மாவலிச் சக்கரவர்த்தியாகிப் பேறுபெற்ற திருத்தலம். இதனைத் திருக்குறுக்கைத் தேவாரத்துள் அப்பர் சுவாமிகள் ‘நிறைமறைக் காடுதன்னில்’ என்னும் திருப்பாடலில் விளக்கி இருக்கிறார்கள்.

### மூர்த்திகள்:

இறைவன் பெயர் வேதாரண்யேசுவரர்; தேவாரம் ‘மறைக்காட்டுறையும் மணாளன்’ எனக் குறிக்கின்றது. அம்மை பெயர் யாழைப் பழித்த மொழியம்மை; வீணாகானவிதூஷணி எனவும் வழங்குவர். தலவிருட்சம் வன்னி. சப்த விடங்கத் தலங்களுள் ஒன்றாதலின் தியாகேச மூர்த்தி எழுந்தருளியிருக்கின்றார். அவர் பெயர் புவனி விடங்கர். நடனம் ஹம்ச நடனம்.

### தீர்த்தம்:

மணிகர்ணிகை, வேதபூஷண தீர்த்தம், வேதாமிருதம் (கடல்) முதலியன. திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் இத்தலத்திற்குத் தரிசனத்திற்காக எழுந்தருளிய போது, வேதங்கள் பூசித்த காலத்து அவை அடைத்த நேர்க்கதவம் திறக்கப்படாமலே வழக்காறற்றிருக்க, திருநாவுக்கரசர் திறக்கவும், திருஞான சம்பந்தர் அடைக்கவும் திறக்கவும் பாடி அற்புதம் நிகழ்த்திய

திருத்தலம். சுந்தர மூர்த்திகள் சேரமான் பெருமாளோடு எழுந்தருளி வழிபட்ட திருத்தலம். இங்கு கோடி தீர்த்தம் ஆதிசேது மிக விசேடமானது. உருத்திரகோடி என்னும் இடத்திலும் கடலாடுவது வழக்கம். அது புதை சேற்றுக் கடலாதலின் மிக எச்சரிக்கையாக இருத்தல் வேண்டும். அழகான கோடியக்காடு உண்டு. கோடிக் குழகர் கோயில் விசேடம். தல விநாயகர் சிந்தாமணி விநாயகர். இராவணன் வழிபட்ட விநாயகர் வீரஹத்தி விநாயகர். துர்க்கை சந்நிதி விசேடமானது. வேதாரண்யம் விளக்கழகு என்று ஒரு பழமொழி இத்தலத்தைப் பற்றி வழங்கி வருகிறது. அதனாலே பராந்தகச் சோழர் முதலிய பலர் விளக்குத் தருமமே செய்திருக்கிறார்கள் போலும்.

**கல்வெட்டு:**

இத்திருத்தலத்தில் உள்ள கல்வெட்டுக்களை அரசியலார் கி.பி. 1904ஆம் ஆண்டில் படியெடுத்திருக்கிறார்கள். மொத்தம் 89 கல்வெட்டுக்களும், ஒரு செப்புப் பட்டயமும் இருக்கின்றன. அவற்றுள் சோழ மன்னர்கள் காலத்தன எண்பத்திரண்டு. ஏனையவற்றுள் ஒன்று தஞ்சை துளஸா மகாராஜாவின் மகனான பிரதாபசிம்ம மகாராஜாவினது. மற்றவை இரண்டும் விஜயநகர அரசர்கள் பிரபுடதேவ மகாராயர், தேவ மகாராயர் என்பவர்களுடையன. ஒன்று இன்னாருடையது என்று அறியப்பெறாத செப்புப் பட்டயம். சோழர் காலத்துக் கல்வெட்டுக்கள் முதல் பராந்தகன் காலம் முதல் மூன்றாம் குலோத்துங்கன் காலம் வரை உள்ளன. அவற்றுள் முதல் பராந்தகன் செய்த விளக்கீடுகள் பற்றிய தருமம் 38 கல்வெட்டுக்களால் அறிவிக்கப் பெறுகின்றன.

இத்திருத்தலம் உம்பள நாட்டுக் குன்றூர் நாட்டுத் திருமறைக்காடு எனக் குறிக்கப் பெறுகின்றது. முதல் பராந்தகச் சோழன் காலத்துக் கல்வெட்டுக்கள் அனைத்தும் அவனுடைய ஆட்சி 5ஆம் ஆண்டு முதல் 34ஆம் ஆண்டு வரை ஆண்டு தோறும் விளக்கு வைக்க ஆடுகளும், நிலமும், பொன்னும் அளித்தமையை அறிவிக்கின்றன. இராஜராஜ தேவன், பரகேசரி இராஜராஜன், முதலாம் குலோத்துங்கன், மூன்றாம் குலோத்துங்கன் ஆகியோர் விளக்குக்கு நிலமும் ஆடுகளும் அளித்திருக்கின்றனர். மூன்றாம் இராஜேந்திரன் ஆட்சிக் காலத்தில் 16ஆம் ஆண்டில் நிலம் விட்ட செய்தி அறியப் பெறுகின்றது. மூன்றாம் இராஜராஜன் காலத்தில் சிங்கள தண்ட நாயகனால் கோடிக்குழகர் கோயில் சீரணோத்தாரணம் செய்விக்கப் பெற்றது. கி.பி. 1496ல் அருச்சகருக்குச் சில உரிமைகள் வழங்கப் பெற்றன என்று செப்புப் பட்டயம் கூறுகிறது.

**பதிக வரலாறு:**

பிள்ளையார் திருநாவுக்கரசு சுவாமிகளோடு திருவாய்மூரைத் தரிசித்துக் கொண்டு மீண்டும் திருமறைக்காட்டிற்கு எழுந்தருளினார்கள். அங்கே ‘கண்பயிலும் நெற்றியார்தம்

கழலிணை பணிந்து போற்றிச் 'சிலைதனை நடுவிடை' என்னும் பண்பயில் பதிகம் பாடிப் பரவி எழுந்தருளியிருந்தார்கள்.

## 22. THIRU-MARAI-K-KAADU

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-marai-k-kaadu is on the south bank of Cauvery in Chola Naadu. It is accessible by bus and train from Thiruththuraippoondi of Naagai district, or by bus from Naagai itself. This sacred place is known as Vedhaaranniyam today. Since the Vedhaas offered worship here, it got this name. Lord Raamar came here, built a bridge across the sea to reach Ilangai and killed Raavanan in the Thretha Yuga. Therefore this place is also known as Aadhisethu (the original bridge). Biramadevar worshipped the Lord who taught the Vedhaas and thus he became adept at the work of creation. Visvaamiththirar became a Biramarishi after offering worship here. Latter, Raamar got rid of the sin of killing a hero by worshipping here. This is also the sacred place where the Lord Civa showed Himself in the mode of a marriage attire to sage Agasthyar, who had come to the south to prevent the earth from tilting, after being commanded to do so, by the Lord. The form of the Lord in the guise of a bridegroom is at the back of the sanctum. A rat that got into the sanctum in search of lamp ghee for food, unknowingly pulled the wick and made the lamp burn brighter. As a result of this, the rat was born as Maavali Chakravarthi in its next birth due to the grace of the Lord of this temple. This episode is celebrated in his poem by Saint Appar Svaami in his Thirukkurukkai Thevaaram, 'nirai maraik kaadu thannil'.

The Lord's name is Vedhaaranyesuvarar. Thevaaram refers to Him as 'bridegroom who abides in Maraikkadu'. The Goddess is known as Yaazhaip-pazhiththa Mozhiyammai, also referred to as Veenaagaana Vidhoosini. The sacred tree is Vanni. This is one of the seven 'Vidangka' temples and so Thyaagesa Moorthi is also present here. His name is Bhuvanividangkar and His dance is called the Swan Dance (Hamsa Nadanam).

**Sacred Tank**

The sacred waters here are the Manikarnikai, Vedhabhooshana Theerththam, Vedhaamritham (the sea) etc. This temple is also known for a miracle. After the Vedhaas offered worship, the doors of the temple closed and remained so. When Thiru-Gnaanasambanda swaami and Appar svaami arrived at this temple for adoring the Lord, the doors opened as the latter sang to open them and again closed after the former sang to close them. It is also here that Sundharamoorthi svaami arrived together with Cheramaan Perumaal and worshipped the Lord. The 'Kodi Theerththam Aadhi Sethu' of this place is very special. It is the tradition to bathe in the sea at a place known as Ruththirakodi. However, since the sea is full of quick sands, one has to be very careful. The beautiful Kodiyakkadu and the Kodi Kuzhakar temple are situated nearby.

The Vinaayakar of the temple is known as Chinthaamani Vinayaakar. This Vinaayaka was once worshipped by Raavanan and is known as Veerahaththi Vinaayakar. The Durgai shrine here is of importance. A traditional saying about this temple is that the lamps of the Vedhaaranniyam temple are beautiful, and perhaps it is because of the gift of lamps by Paraanthaka Chola to this temple.

**Stone Inscriptions**

The inscriptions of this temple have been copied by government epigraphists in 1904. A total of 89 inscriptions and one copper plate engraving are extant. Of the inscriptions, 82 belong to the Chola period, one to that of Prathaapasimma Mahaaraaja, son of Thulasaa Mahaaraaja of Thanjai, and two others to two Vijayanagara kings, Pirabudadheva Mahaaraayar and Dheva Mahaaraayar. The copper plate engravings could not be identified with any one. The Chola inscriptions span the period from Paraanthakan I to Kuloththungkan III. Of these, 38 inscriptions pertain to the gift of lamps by Paraanthakan I.

This place is referred to as Thirumaraikkaadu of Kunnoor Naadu in Umbala Naadu. All the inscriptions of Paraanthakan I note the gifts of land, goats and gold by this king annually starting from his 5th through 34th regnal years for lighting lamps.

Raajaraaja Dhevan, Parakesari Raajaraajan, Kuloththungkan I and Kuloththungkan III have also gifted lands and goats for lamps. Information on the endowment of lands in the 16th regnal year of Raajendhiran III is given. The Kodik Kuzhagar temple was renovated by one Singala Dhandanaayakan during the reign of Raajaraajan I. The copper plates note that certain privileges were granted to temple priests in the year 1496 CE.

### INTRODUCTION TO THE HYMN

St. Appar and St. Sambandhar hailed the Lord-God at Thiruvoimoor and returned to Maraik-kaadu. The following decad was sung by the young-saint in the shrine of Maraik-kaadu which is referred to as Veda-vanam in this hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 22. திருமறைக்காடு — 22. THIRU-MARAI-K-KAADU

பண் : நட்டபாடை (திருவிராகம்) — *Pann: Natta Paadai*
ராகம் : கம்பீரநாட்டை — *Raagam: Kambeera Naattai*

சிலைதனை நடுவிடை நிறுவியொர் சினமலி யரவது கொடுதிவி
தலமலி சுரரசு ரர்களொலி சலசல கடல்கடை வுழிமிகு
கொலைமலி விடமெழ வவருடல் குலைதர வதுநுகர் பவனெழில்
மலைமலி மதில்புடை தழுவிய மறைவன மமர்தரு பரமனே. 1

*சிலைதனை நடுஇடை நிறுவி, ஓர் சினம் மலி அரவு அது கொடு, திவி-*
*தலம் மலி சுரர் அசுரர்கள், ஒலி சலசல கடல் கடைவுழி, மிகு*
*கொலை மலி விடம் எழ, அவர் உடல் குலைதர, அது நுகர்பவன் - எழில்*
*மலை மலி மதில் புடை தழுவிய மறைவனம் அமர் தரு பரமனே.*

cilai tan2ai naTu iTai niRuvi, or cin2am mali aravu atu koTu, tivi--
talam mali curar acurarkaL, oli calacala kaTal kaTaivuzi, miku
kolai mali viTam eza, avar uTal kulai tara, atu nukarpavan2--ezil
malai mali matil puTai tazuviya maRaivan2am amar taru paraman2E.

பொருள்: திருப்பாற்கடலைக் கடைந்தபோது நஞ்சு தோன்றியதும், அந்த நஞ்சினை உண்டு சிவபிரான் அனைவரையும் காத்ததும் இப்பாடலில் கூறப்பட்டுள்ளன. திருப்பாற்கடலைக் கடைவதற்காக மந்தர மலையை நடுவிலே நிறுத்தினார்கள். சினம் மிக்க, ஒப்பற்ற வாசுகி

என்னும் பாம்பைக் கயிறாகச் சுற்றினார்கள். விண்ணுலகில் வாழும் தேவர்களும் அசுரர்களும் சலசல என்னும் ஒலி தோன்றுமாறு திருப்பாற்கடலைக் கடைந்தார்கள். கடைகின்ற காலத்தில் கொல்லும் தன்மை வாய்ந்த ஆலகால விடம் அக்கடலில் தோன்றியது. அதனால், தேவர்களும் அசுரர்களும் அஞ்சி நடுங்கி சிவபிரானை நோக்கி ஓலமிட்டார்கள். அந்த அளவில், சிவபிரான் அந்த நஞ்சை உண்டு அவர்களைக் காத்தருளினான். அந்தச் சிவபிரான், அழகிய மலை போன்ற மதில்களால் சூழப்பெற்ற மறைவனத்தில் (திருமறைக்காட்டில்) எழுந்தருளிய பரமன் ஆவான்.

**குறிப்புரை:** இது விடத்தைக் கண்டு விண்ணவர் எல்லாரும் நடுநடுங்க, அதனை நுகர்பவன் மறைக்காட்டுறையும் பரமன் என்கின்றது. சிலை – மந்தரமலை. சினம் மலி அரவு என்றது வாசுகி என்னும் பாம்பை. திவிதலம் = திவி + தலம் = சுவர்க்கம். துவி என்பதன் மரூஉச் சொல் திவி. துவி – இரண்டு. சுரர், அசுரர் ஆகிய இருவேறுபட்டவர்களும் இருவேறு நிலங்களில் இருப்பவர்கள். பண்பினால் வேறுபட்டவர்கள். (தேவர்கள்) சுரர்கள் இருப்பது விண்ணுலகம். அசுரர்கள் இருப்பது கீழுலகம் என்பது பொதுக்கருத்து. திவிதலம் மலிசுரர் அசுரர் எனக்குறித்தார் ஞானசம்பந்தர். சலசல என்பது மத்தைக் கொண்டு கடையும்போது உண்டாகும் ஒலிக்குறிப்பு. அவர் உடல் குலைதர – தேவர்களும் அசுரர்களும் உடல் நடுநடுங்க. மலைமலி மதில் – மலையை ஒத்த மதில். எல்லாத் தேவர்கட்கும் நடுக்கம் தந்த கடுவிடம் இவர்க்கு அமுதாயிற்று என்றது சிவனது அளவிலாற்றலையும் காக்கும் கருணையையும் விளக்கியது.

Devas and Asuras desired to obtain nectar from the Ocean of Milk, with the belief, that those who consume it will never die. They brought the mountain known as Manthara Malai (*மந்தர மலை*) and fixed it in the center of the ocean to serve as a churning rod. They used the huge wrathful serpent known as Vaasuki as the rope for churning. Heavenly Devas standing on one side and the Asuras on the other side started churning the ocean creating a noise 'Chala Chala' in the turbulence. While churning, exceedingly powerful destructive poison arose from the ocean (unable to bear the bodily pain, the serpent also threw up venom). The combined poisons seemed to destroy everybody all around. Devas and Asuras shivered in terror; ran towards Lord Civan; lamented and entreating succour (in distress) prayed Him to save their life. Lord Civan swallowed the poison and saved everybody. This Lord Civan is entempled

in the town called Thiru-Marai-k-kaadu (Marai-vanam). This town is encircled by mountain like imposing walls.

**Note:** Thirumaraikkaadu is one of the three holy towns, which are hailed by the entire Thevaaram, i.e., by Tirumurais 1 to 7.

கரமுத லியவவ யவமவை கடுவிட வரவது கொடுவரு
வரன்முறை யணிதரு மவனடல் வலிமிகு புலியத ளுடையினன்
இரவலர் துயர்கெடு வகைநினை யிமையவர் புரமெழில் பெறவளர்
மரநிகர் கொடைமனி தர்கள்பயின் மறைவன மமர்தரு பரமனே. 2

*கரம் முதலிய அவயவம் அவை கடுவிட அரவுஅது கொடுவரு*
*வரல்முறை அணிதருமவன், அடல் வலி மிகு புலி அதள் உடையினன் -*
*இரவலர் துயர் கெடு வகை நினை இமையவர் புரம் எழில் பெற வளர்*
*மரம் நிகர் கொடை மனிதர்கள் பயில் மறைவனம் அமர் தரு பரமனே.*

karam mutaliya avayavam avai kaTuviTa aravu atu koTu varu
varal muRai aNi tarumavan2, aTal vali miku puli ataL uTaiyin2an2--
iravalar tuyar keTu vakai nin2ai, imaiyavar puram ezil peRa vaLar,
maram nikar koTai, man2itarkaL payil maRaivan2am amartaru paraman2E.

***பொருள்:*** சிவபெருமான் பாம்புகளை அணிகலன்களாக அணிவதை இந்தப் பாடல் தெரிவிக்கிறது. தொன்று தொட்டு வரும் வரைமுறைப்படி வளை, கேயூரம் முதலிய அணிகலன்களை அணிவது போன்று, கைகள் முதலிய உறுப்புக்களில் கொடிய நஞ்சு உள்ள பாம்புகளை அணிந்து கொள்கிறான் சிவபெருமான். பிற உயிர்களைக் கொல்லும் வலிமை மிக்க புலியைக் கொன்று, அதன் தோலை ஆடையாக அணிகிறான் பெருமான். தேவர் உலகம் அழகு பெறுவதற்காக அங்குக் கற்பக மரம் வளருகிறது. அது கேட்டவர்க்குக் கேட்டதை அளிக்கும் கொடைக் குணம் உள்ளது. இரவலர்களின் வறுமைத் துயர் கெடுவதற்குரிய வழிவகைகளை எப்போதும் நினைத்துக் கொண்டிருப்பவர்களாகிய, கற்பக மரம் போன்ற கொடையாளர்கள் வாழ்கின்ற நகர் மறைவனம் என்ற திருமறைக்காடு. அங்குச் சிவபெருமான் மனம் உவந்து உறைகின்றான்.

***குறிப்புரை:*** இது கற்பகம் ஒத்த கொடையாளர்கள் பயில்கின்ற மறைக்காட்டுறையும் பரமனே எங்கும் அரவத்தை அணிந்து புலித்தோலாடை புனைந்து விளங்குபவன் என்கின்றது. இதனால் இறைவனது ஆடையும் அணியுங்கூறி அறிவித்தவாறு. கரம் – கை. கடு விட அரவு அது கொடு – கொடிய விடப் பாம்பைக் கொண்டு வரன்முறையணிதரும் அவன் – முறையாக அவயவங்கட்கேற்றவாறு அணிபவன். அடல் வலி – கொல்லும் வன்மை. துயர் கெடுவகை நினைமனிதர்கள், இமையவர்புரம் எழில் பெற வளர்மரம் எனக் கூட்டுக. மரம் என்றது கற்பகத்தை.

Lord Civan wears on His hands and on other parts of His body wrathful venomous snakes as traditional ornaments such as Valai and Keyuram (*வளை, கேயூரம்*). Lord Civan killed an extremely courageous tiger and wore its skin. For the prosperity of Devas the celestial tree - Karpagatharu (*கற்பக மரம்*) is grown in heaven. This tree is capable of giving to Devas whatever is needed and asked for, by them. With qualities similar to those of this tree, many philanthropists are living in Marai-vanam nullifying the poverty of people. Our Lord Civan abides in this, the much-celebrated place Marai-vanam.

**Note:** The celestial tree is Karpaka-tharu.

இழைவளர் தருமுலை மலைமக ளினிதுறை தருமெழி லுருவினன்
முழையினின் மிகுதுயி லுறுமரி முசிவொடு மெழமுளரி யொடெழு
கழைநுகர் தருகரி யிரிதரு கயிலையின் மலிபவ னிருளுறும்
மழைதவழ் தருபொழி னிலவிய மறைவன மமர்தரு பரமனே. 3

*இழை வளர்தரு முலை மலைமகள் இனிது உறை தரும் எழில் உருவினன்*
*முழையினில் மிகு துயில் உறும் அரிமுசிவொடும் எழ, முளரியொடு எழு*
*கழை நுகர்தரு கரி இரிதரு கயிலையில் மலிபவன் - இருள் உறும்*
*மழை தவழ்தரு பொழில் நிலவிய மறைவனம் அமர் தரு பரமனே.*

izai vaLar tarum mulai malaimakaL in2itu uRaitarum ezil uruvin2an2;
muzaiyin2il miku tuyil uRum ari mucivoTum eza, muLariyoTu ezu
kazai nukar taru kari iri taru kayilaiyil malipavan2--iruL uRum
mazai tavaz taru pozil nilaviya maRaivan2am amar taru paraman2E.

**பொருள்:** அணிகலன்கள் பொருந்திய மார்பகங்களை உடையவள் மலைமகள். அவளைத் தன் இடப்பக்கத்தில் இனிதாகக் கொண்டுள்ள அழகிய திருமேனியை உடையவன் சிவபெருமான். கயிலை மலைக் குகைகளில் நன்கு உறங்கும் சிங்கங்கள், பசி வருகின்ற காரணத்தால் சோம்பல் முறித்து நிமிர்ந்து எழுகின்றன. கயிலை மலையில் தாமரை மலர்களோடு உடன் வளர்ந்து செழித்த கரும்புகளை உண்ணும் யானைக் கூட்டங்கள், விழித்து வெளிவரும் சிங்கங்களைக் கண்டு அஞ்சி ஓடுகின்றன. அவ்வகைப்பட்ட கயிலை மலையில் எழுந்தருளியுள்ளவன் சிவபெருமான். அவன், கரிய மழை மேகங்கள் தவழும் பொழில்களை உடைய மறைவனமாகிய திருமறைக்காட்டில், அமரும் பரமனாக விளங்குகிறான்.

**குறிப்புரை:** இது மறைவனத்துறையும் பரமனே மலைமகள் மணாளன், கயிலையின்பதி என்கின்றது. இழை – ஆபரணம். எழில் – அழகு. முழை – மலைக்குகை. அரி – சிங்கம். முசிவு – மெலிவு. முளரி – தாமரை. கழை – கரும்பு.

The daughter of the Himalayan mountain - Umaa Devi, wearing jewellary on Her breasts happily rests on the beautiful left frame of Lord Civan. Sleeping lions in the caves of Mount Kailas, get up (and) when they feel hungry, shed their slumber and get ready to move about to prey. The elephant herds while eating sumptuous sugarcane that had grown along with lotus flowers, run helter-skelter at the sight of lions coming out of the cave. Lord Civan belonging to Mount Kailas abides in Marai-vanam. Black rain-bearing clouds creep over the rich gardens of Marai-vanam – Thiru-Marai-k-kaadu.
**Note:** The elephant's dread of the lion is proverbial.

நலமிகு திருவித ழியின்மலர் நகுதலை யொடுகன கியின்முகை
பலசுர நதிபட வரவொடு மதிபொதி சடைமுடி யினன்மிகு
தலநில வியமனி தர்களொடு தவமுய றருமுனி வர்கடம
மலமறு வகைமன நினைதரு மறைவன மமர்தரு பரமனே. 4

*நலம் மிகு திரு இதழிஇன்மலர், நகுதலையொடு, கனகியின் முகை-*
*பல சுரநதி, பட அரவொடு, மதி பொதி சடை முடியினன் - மிகு*
*தலம் நிலவிய மனிதர்களொடு தவம் முயல் தரும் முனிவர்கள்தம*
*மலம் அறு வகை மனம் நினைதரு மறைவனம் அமர் தரு பரமனே.*

nalam miku tiru itazi in2malar, naku talaiyoTu, kan2akiyin2 mukai--
pala, cura nati, paTa aravoTu, mati poti caTaimuTiyin2an2--miku
talam nilaviya man2itarkaLoTu tavam muyaltarum mun2ivarkaL tama
malam aRu vakai man2am nin2aitaru maRaivan2am amar taru paraman2E.

**பொருள்:** சிவபிரான் தனது சடைமுடியில் அழகிய கொன்றை மலர், கபாலம், ஊமத்தை, கங்கை நதி, பட அரவு, பிறை ஆகியவற்றைச் சூடியுள்ளான். பெரிய அளவில் இவ்வுலகில் வாழும் மனிதர்கள், தவம் முயலும் முனிவர்கள் ஆகியோர் பெருமானை வழிபட, அவர்கள் மலம் அகன்று உய்யும் வகையைப் பிரான் நினைக்கின்றான். அவ்வகைப்பட்ட பெருமான் மறைவனம் ஆகிய திருமறைக்காட்டில் உறையும் பரமனாக விளங்குகின்றான்.

**குறிப்புரை:** நலம் – பாசங்கள் முற்றும் அழிந்த பிறகு உண்டாகும் திருவருள் அனுபவம் (எல்லாம் இழந்த நலம் சொல்லாய் முருகா) கொன்றைமலரைப் பார்த்தவுடன் ஓங்கார உள்ளொளி பெருகும். பலசுரநதி – மண்ணுலகை பலபட விரிந்து அழிக்கும் வகையில் வன்மையுடன் மேலிருந்து கீழ் நோக்கி விரைந்து வந்த

நதி – கங்கை. இது மக்கள் முனிவர் இவர்கள் மலம் அகன்று உய்யும் வகை திருவுளம் பற்றிய மறைவனத்திறைவனே கொன்றையும், கபாலமும், ஊமத்தமும், கங்கையும், அரவும், பிறையும் பொதிந்த சடைமுடியினன் என்கின்றது. இதழி – கொன்றை, நகுதலை – இறந்த பிரமனது மண்டையோடு. கனகி – ஊமத்தை. முனிவர்கள் தம் மலம் அறுவகை எனப்பிரிக்க. நகுதலை, மதி, அரவு முதலியவற்றின் தீமைகளை நீக்கி அருள் செய்கின்றான் என்பது.

Lord Civan sports in His matted crest the gracious and weal-conferring kondrai flowers, the skull of the dead Brahma, the blossoms of Datura, the celestial river Ganga, the hooded serpent and the crescent moon. Lord Civan is ever contemplating on ways and means of eliminating the Malas (*மலங்கள்*) of men living on this great earth and of the sages who perform prayer and penance and adore Him always.

**Note:** The malas are three in number, they being Aanavam, Kanmam and Maayai.

கதிமலி களிறது பிளிறிட வுரிசெய்த வதிகுண னுயர்பசு
பதியதன் மிசைவரு பசுபதி பலகலை யவைமுறை முறையுணர்
விதியறி தருநெறி யமர்முனி கணனொடு மிகுதவ முயறரும்
அதிநிபு ணர்கள்வழி படவளர் மறைவன மமர்தரு பரமனே. 5

*கதி மலி களிறு அது பிளிறிட உரிசெய்த அதிகுணன்; உயர்பசு -*
*பதி அதன் மிசைவரு பசுபதி - பலகலை அவை முறைமுறை உணர்*
*விதி அறிதரும் நெறி அமர் முனிகணனொடு மிகு தவம் முயல் தரும்*
*அதிநிபுணர்கள் வழிபட வளர் மறைவனம் அமர் தரு பரமனே.*

kati mali kaLiRu atu piLiRiTa uriceyta atikuNan2; uyar pacu--
pati atan2micai varu pacu pati--pala kalai avai muRai muRai uNar
viti aRitarum neRi amar mun2ikaNan2oTu miku tavam muyaltarum
ati nipuNarkaL vazipaTa, vaLar maRaivan2am amar taru paraman2E.

**பொருள்:** நடை அழகுடன், சிவனைக் கொல்ல எதிர்த்து வந்த களிறு, பெருமானது உயர்வு கண்டு அஞ்சிப் பிளிறியது. அதன் தோலை உரித்துப் போர்த்த பெருவீரன் சிவபெருமான். அவன் ஆன்மாக்களாகிய உயர்ந்த பசுக்களின் நாயகன்; விடையாகிய இடபத்தின் மேல் ஏறி வருபவன்; ஆருயிர்களின் தலைவன். இவ்வகைப்பட்ட பெருமான் பலவளங்களைக் கொண்ட மறைவனம் ஆகிய திருமறைக்காட்டில் அமர்ந்து அருளும் பரமனாக இருக்கின்றான். பல கலைகளையும் முறையாகக் கற்றுணர்ந்தவர்களும், தாம் கற்ற நெறிகளையே விதிகளாகக் கருதி, அவற்றின் வழி நிற்போரும் ஆகிய முனிவர் குழாங்களும், மிக்க தவத்தை மேற்கொண்டு ஒழுகும் அதி நிபுணர்களும் தன்னை வழிபடுமாறு மறைவனத்தில் அமர்ந்து அருளுகின்றான்.

**குறிப்புரை:** இது பல கலை ஆகம வேத நூல்களை முறையாகக் கற்று, கற்ற வண்ணம் ஒழுகுகின்ற முனிவர்களும், மிகத் தவஞ்செய்யும் அதி நிபுணர்களும் வழிபடும் மறைவனநாதனே யானையை உரித்துப் போர்த்த பெருவீரன், பசுபதி மேல்வரு பசுபதி என்கின்றது. கதி – நடை. அதிகுணன் – குணங்களான் மிகுந்தவன். பசு – இடபம். பசுபதி – ஆன்மாக்கள் அனைவர்க்கும் தலைவன். விதி – செயல்முறை. உயர் பசுபதி என்றும் மிசை வரு பசுபதி என்றும் இருவகையாகக் கொள்க. ஆன்மாக்கள் மேன்மேல் உயர்வதற்காக ஆன்மாக்களைத் தாங்கி மேலேற்றுகின்றான். இதனை, 'தன் கடன் அடியேனையுந் தாங்குதல்' என்றார். எந்த ஆன்மாக்களைத் தாங்கி மேலேற்றுகின்றானோ அந்த ஆன்மாக்களிலேயே தங்கி அந்த ஆன்மாக்களுக்குத் தலைவன் ஆகிறான். இதனை, 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்றார் அப்பர் அடிகள்.

The elephant that came with a majestic gait to attack Lord Civan, became nervous and trumpeted aloud in fear and agony. Lord Civan full of virtues, killed it and peeled off its skin. He is the Supreme Lord of all living beings, riding on the Supreme Mighty Bull, and is Head of all souls. To enable worship by the sages who underwent a regular course of study of scriptures and other arts, adhering to what they have learnt, and worship by those extra-ordinarily disciplined experts who practice boundless penance, Lord Civan is enshrined in the ever glorious Marai-vanam.

Note: The name Pasupati occurs twice in this verse. The first one refers to Rishaba Deva, the mount of Lord Civa. The second refers to Lord Civa who is the Lord of all souls. Tevaaram refers to the soul by the word Pasu.

கறைமலி திரிசிகை படையடல் கனன்மழு வெழுதர வெறிமறி
முறைமுறை யொலிதம ருகமுடை தலைமுகிழ் மலிகணி வடமுகம்
உறைதரு கரனுல கினிலுய ரொளிபெறு வகைநினை வொடுமலர்
மறையவன் மறைவழி வழிபடு மறைவன மமர்தரு பரமனே. 6

*கறை மலி திரிசிகை படை, அடல் கனல்மழு, எழுதர வெறி மறி,*
*முறைமுறை ஒலி தமருகம், முடைதலை, முகிழ் மலி கணி, வடமுகம்,*
*உறைதரு கரன் - உலகினில் உயர் ஒளி பெறு வகை நினைவொடு மலர்*
*மறையவன் மறைவழி வழிபடும் மறைவனம் அமர் தரு பரமனே.*

kaRai mali tiricikai paTai, aTal kan2al mazu, ezutara veRi maRi,
muRai muRai oli tamarukam, muTaitalai, mukiz mali kaNi, vaTa mukam,
uRaitaru karan2--ulakin2il uyar oLi peRu vakai nin2aivoTu malar
maRaiyavan2 maRaivazi vazipaTum maRaivan2am amartaru paraman2E.

***பொருள்:*** சிவபிரான் படைக்கலங்கள் தாங்கி இருப்பதை இந்தப் பாடல் தெரிவிக்கின்றது. குருதிக்கறை படிந்த முத்தலைச் சூலத்தையும், அழல் வடிவினதாகவும் காண்பாருக்கு வருத்தம் தருவதாகவும் இருக்கும் மழுவாயுதம், கையிலிருந்து துள்ளிக் குதிப்பது போன்ற வெறித்த கண்களை உடைய மான், முறையாக ஒலி செய்யும் உடுக்கை, முடை நாற்றம் கொண்ட பிரம்ம கபாலம், முகிழ்போலும் கூரிய குந்தாலிப்படை, வடவை முகத்தீ ஆகியன உறையும் திருக்கரங்களை உடையவன். வேதாவாகிய நான்முகன், இந்த உலகில் தான் உயர்ந்த புகழோடு விளங்க ஆசைப்பட்டு, வேத விதிப்படி, சிவபிரானை வழிபட்ட இடம் மறைவனம் ஆகிய திருமறைக்காடு ஆகும். சிவபிரான் அந்த இடத்தில் உறையும் பரமனாக விளங்குகிறான்.

***குறிப்புரை:*** இது உலகத்தில் உயர்வதற்காகப் பிரமன் வழிபட்ட மறைவனத்து இருந்தருள் பரமன் திரிசூலம் முதலியவற்றைத் தாங்கிய எட்டுக் கரங்களை உடையவன் என்கின்றது. கறை – இரத்தக்கறை. திரிசிகை – முத்தலைச்சூலம். அடல்கனல் மழு – வருத்தும் தழல்வடிவாகிய மழுப்படை. எழுதர வெறி மறி – திருக்கரத்தை விட்டு எழும்புவது போலும் வெறித்த கண்ணை உடைய மான். முடை தலை – முடை நாற்றம் வீசும் பிரம கபாலம். முகிழ் மலி கணி – முகிழ்போலும் கூரிய குந்தாலிப்படை. வடமுகம் – வடவாமுகாக்கினி. வடவாமுகாக்கினியானது குதிரை போன்ற முகம் உடையது. ஒளி – புகழ். 'ஒளிநிறான்' என்பதும் ஓர்க. மறைவழி – வேதவிதிப்படி.

Lord Civan sports various weapons in His hands; the blood-stained trident, the flaming and powerful-battle axe (mazhu), the wild-eyed antelope poised to leap, the damarukam (drum) that resounds with rhythmic gradations, the stinking skull (Brahma Kapaalam), the kani sharp as mukizh and the fire like unto Vatavaagni. Supreme Lord Civan enshrined in Marai-vanam, hailed and adored in the Vedic way, by Brahma seated on the Lotus, with a view to shine by the loftiest light of wisdom in all the worlds.

**Note:** *Mazhu:* It refers to the flaming rod, a weapon of Lord Civa. It also means the battle-axe of Civa.

*The antelope:* Lord Civa holds this in His hand. Iconography depicts it as a fawn, about to leap.

*The damarukam:* Known as thudi in Tamil. A small drum resembling an hour-glass in shape.

*Kani:* Also known as Kanicchi. This sharp weapon is commonly known as Kuntaali or Kuntam.

*Mukizh:* Bud. Its pointed tip looks sharp.

*Vatavaagni:* The fire abiding in the ocean and maintaining its water-level (வடவைத்தீ). During the Great Dissolution, this Agni which has the form of a mare, acts ferociously and ultimately causes the waters to evaporate. This takes place during the cosmic destruction.

இருநில னதுபுன லிடைமடி தரவெரி புகவெரி யதுமிகு
பெருவளி யினிலவி தரவளி கெடவிய னிடைமுழு வதுகெட
இருவர்க ளுடல்பொறை யொடுதிரி யெழிலுரு வுடையவ னினமலர்
மருவிய வறுபத மிசைமுரன் மறைவன மமர்தரு பரமனே. 7

*இரு நிலன்அது புனல்இடை மடிதர எரிபுக எரிஅது மிகு*
*பெரு வளியினில் அவிதர, வளிகெட, வியன் இடை முழுவது கெட,*
*இருவர்கள் உடல்பொறையொடு திரி எழில் உரு உடையவன் - இனமலர்*
*மருவிய அறுபதம் இசை முரல் மறைவனம் அமர் தரு பரமனே.*

iru nilan2 atu pun2al iTai maTitara, eri puka, eri atu miku
peru vaLiyin2il avitara, vaLi keTa, viyan2 iTai muzuvatum keTa,
iruvarkaL uTal poRaiyoTu tiri ezil uru uTaiyavan2--in2amalar
maruviya aRupatam icai mural maRaivan2am amar taru paraman2E.

**பொருள்:** பெரிய ஊழிக்காலத்தில், இந்தப் பெரிய நிலமாகிய மண் நீரில் ஒடுங்கும். நீர் நெருப்பில் ஒடுங்கும். நெருப்பு காற்றில் ஒடுங்கும். காற்று ஆகாயத்தில் ஒடுங்கும். பரந்து பட்ட இந்த உலகமும், உலகப் பொருட்களும் ஆகிய அனைத்தும் அழியும். அப்போது பிரமன், திருமால் ஆகியோரும் அழிய, அவர்களுடைய முழு எலும்புக் கூட்டை அணிந்து, தான் ஒருவனே தலைவன் எனத்திரியும் அழகுடையவன் சிவபிரான். மறைவனமாகிய திருமறைக்காட்டில் வண்ண மலர்க்கூட்டங்களில் வண்டுகள் இசைமுரலும் செழிப்பு உடையது. சிவபிரான் அங்கு அமரும் பரமன் ஆவான்.

**குறிப்புரை:** இது ஐம்பெரும் பூதங்களும் ஒன்றினொன்று ஒடுங்க, இறுதியில் மால் அயன் இவர்களுடைய உடற்பொறையோடு திரிகின்ற இறைவன், மறைவனநாதன் என்கின்றது. நிலன் நீரில் ஒடுங்க, நீர் எரியில் ஒடுங்க, எரி வளியில் ஒடுங்க வளி ஆகாயத்தில் ஒடுங்க, அப்போது மாலயன் இருவரும் அழிய, அவர்கள்

எலும்பை அணிந்து, தான் ஒருவனே தலைவன் என்பதை உணர்த்தித் திரிபவன் என்பதையும், இத்தகைய சங்கார காரணனையே உலகு முதலாகவுடையது என்பதையும் உணர்த்தி நிற்பன் என்பதாம். இனமலர் – கூட்டமான மலர், அறுபதம் – வண்டு. இது ஒடுக்க முறை கூறியது.

இதனால் மண் முதலிய பூதங்கள் ஒன்றினொன்று தோன்றும் என்பது பெறப்படுகிறது. இதனையே உட்கொண்டு இப்பாடலும் ஒடுக்கமுறை கூறுகிறது. இது காரியத்தின் குணம் காரணத்தினும் உண்டென்பது நியமமாகலின் புடவிக்குரிய ஐந்து குணங்களும் அதற்குக் காரணமென்ற புனலுக்கும் உளவாதல் வேண்டும். அங்ஙனமே ஏனைய பூதங்கட்கும் அஃதின்மையின் ஒரு பூதம் மற்றொரு பூதத்திற்குக் காரணமாகாது, பஞ்சதன் மாத்திரைகளே காரணமாகும் என்பது சைவ சித்தாந்தத் துணிபு. அதனோடு ஒடுக்கமுறை கூறும் இச்செய்யுள் முரணுமெனின், முரணாது. மாதவச் சிவஞான யோகிகள் மாபாடியத்து இச்செய்யுளை எடுத்துக்காட்டிக் கூறுவது:

'அற்றேல், வேதத்துள் அங்ஙனம் ஒன்றினொன்று தோன்று' மென்ற வாக்கியத்தோடும், 'இருநில னதுபுன லிடை மடிதரவெளி புகவெரி யதுமிகு – பெருவெளியினிலவி தரவளி கெடவிய விடைமுழு வதுகெட – விருவர்களுடன் பொறையொடுதிரி யெழிலுரு வுடையவன்' எனச் சங்கார முறைபற்றி வேதவாக்கியப் பொருளை வலியுறுத்தோதிய திருப்பாட்டோடும் முரணுமாலெனின், – அற்றன்று; வேதஞ்சிவாகமம் இரண்டும் செய்த முதற்கருத்தா பரமசிவன் ஒருவனேயாகலின், அவைதம்முள் முரணுமாறின்மையின், ஒரோவழிமுரணுவன போலத் தோன்றியவழி, முரணாகாதவாறு வன்மை மென்மைபற்றித் தாற்பரியங்கோடல் வேண்டும். அற்றாகலினன்றே தேயுமுதன் முப்பூதங்கட்கே தோற்றங்கூறி, "இம்முப்பூதமயமே பிரபஞ்சமெல்லாம்" என விரித்தோதிய சாந்தோக்கிய உபநிடதமும், ஆகாயமுதல் ஐந்திற்குந் தோற்றங்கூறி, "ஐம்பூத மயமே பிரபஞ்சமெல்லாம்" என்னும் தைத்திரீய உபநிடதமும் தம்முண் முரணுவனபோலத் தோன்றுதலின், அங்ஙனம் முரணாமைப் பொருட்டு வன்மை மென்மை நோக்கித் தைத்திரீயத்திற் கூறியதே பிரமாணம் எனவும், சாந்தோக்கியத்திற் கூறும் வாக்கியங்கட்கும் அதுவே தாற்பரியம் எனவும், உத்தர மீமாஞ்சையின் வியத்திகரணத்துள் ஓதியதூஉம். மற்றும் ஆண்டாண்டு முரணாத வண்ணம் ஒன்று முக்கியப் பொருளும், ஒன்று தாற்பரியப் பொருளுமாக வைத்துப் பொருளொருமை யுணர்த்தியதூஉமென்க. ஆதலின் இப்பகுதிக்கு நிலம் இரதத்தோடு கூடி விசிட்டமாய் நின்ற கந்த தன்மாத்திரையில் ஒடுங்கிற்றென்றும், நீர் உருவத்தோடு கூடி விசிட்டமாய் நின்ற இரத தன்மாத்திரையில் ஒடுங்கிற்றென்றும், தீ பரிசத்தோடு கூடி விசிட்டமாய் நின்ற உருவ தன்மாத்திரையில் ஒடுங்கிற்றென்றும், காற்று சத்தத்தோடு கூடி விசிட்டமாய் நின்ற பரிச தன்மாத்திரையில்

*The damarukam:* Known as thudi in Tamil. A small drum resembling an hour-glass in shape.

*Kani:* Also known as Kanicchi. This sharp weapon is commonly known as Kuntaali or Kuntam.

*Mukizh:* Bud. Its pointed tip looks sharp.

*Vatavaagni:* The fire abiding in the ocean and maintaining its water-level (*வடவைத்தீ*). During the Great Dissolution, this Agni which has the form of a mare, acts ferociously and ultimately causes the waters to evaporate. This takes place during the cosmic destruction.

இருநில னதுபுன லிடைமடி தரவெரி புகவெரி யதுமிகு
பெருவளி யினிலவி தரவளி கெடவிய னிடைமுழு வதுகெட
இருவர்க ளுடல்பொறை யொடுதிரி யெழிலுரு வுடையவ னினமலர்
மருவிய வறுபத மிசைமுரன் மறைவன மமர்தரு பரமனே. 7

*இரு நிலன்அது புனல்இடை மடிதர எரிபுக எரிஅது மிகு*
*பெரு வளியினில் அவிதர, வளிகெட, வியன் இடை முழுவது கெட,*
*இருவர்கள் உடல்பொறையொடு திரி எழில் உரு உடையவன் - இனமலர்*
*மருவிய அறுபதம் இசை முரல் மறைவனம் அமர் தரு பரமனே.*

iru nilan2 atu pun2al iTai maTitara, eri puka, eri atu miku
peru vaLiyin2il avitara, vaLi keTa, viyan2 iTai muzuvatum keTa,
iruvarkaL uTal poRaiyoTu tiri ezil uru uTaiyavan2--in2amalar
maruviya aRupatam icai mural maRaivan2am amar taru paraman2E.

**பொருள்:** பெரிய ஊழிக்காலத்தில், இந்தப் பெரிய நிலமாகிய மண் நீரில் ஒடுங்கும். நீர் நெருப்பில் ஒடுங்கும். நெருப்பு காற்றில் ஒடுங்கும். காற்று ஆகாயத்தில் ஒடுங்கும். பரந்து பட்ட இந்த உலகமும், உலகப் பொருட்களும் ஆகிய அனைத்தும் அழியும். அப்போது பிரமன், திருமால் ஆகியோரும் அழிய, அவர்களுடைய முழு எலும்புக் கூட்டை அணிந்து, தான் ஒருவனே தலைவன் எனத்திரியும் அழகுடையவன் சிவபிரான். மறைவனமாகிய திருமறைக்காட்டில் வண்ண மலர்க்கூட்டங்களில் வண்டுகள் இசைமுரலும் செழிப்பு உடையது. சிவபிரான் அங்கு அமரும் பரமன் ஆவான்.

**குறிப்புரை:** இது ஐம்பெரும் பூதங்களும் ஒன்றினொன்று ஒடுங்க, இறுதியில் மால் அயன் இவர்களுடைய உடற்பொறையோடு திரிகின்ற இறைவன், மறைவனநாதன் என்கின்றது. நிலன் நீரில் ஒடுங்க, நீர் எரியில் ஒடுங்க, எரி வளியில் ஒடுங்க வளி ஆகாயத்தில் ஒடுங்க, அப்போது மாலயன் இருவரும் அழிய, அவர்கள்

எலும்பை அணிந்து, தான் ஒருவனே தலைவன் என்பதை உணர்த்தித் திரிபவன் என்பதையும், இத்தகைய சங்கார காரணனையே உலகு முதலாகவுடையது என்பதையும் உணர்த்தி நிற்பன் என்பதாம். இனமலர் – கூட்டமான மலர், அறுபதம் – வண்டு. இது ஒடுக்க முறை கூறியது.

இதனால் மண் முதலிய பூதங்கள் ஒன்றினொன்று தோன்றும் என்பது பெறப்படுகிறது. இதனையே உட்கொண்டு இப்பாடலும் ஒடுக்கமுறை கூறுகிறது. இது காரியத்தின் குணம் காரணத்தினும் உண்டென்பது நியமமாகலின் புடவிக்குரிய ஐந்து குணங்களும் அதற்குக் காரணமென்ற புனலுக்கும் உளவாதல் வேண்டும். அங்ஙனமே ஏனைய பூதங்கட்கும் அஃதின்மையின் ஒரு பூதம் மற்றொரு பூதத்திற்குக் காரணமாகாது, பஞ்சதன் மாத்திரைகளே காரணமாகும் என்பது சைவ சித்தாந்தத் துணிபு. அதனோடு ஒடுக்கமுறை கூறும் இச்செய்யுள் முரணுமெனின், முரணாது. மாதவச் சிவஞான யோகிகள் மாபாடியத்து இச்செய்யுளை எடுத்துக்காட்டிக் கூறுவது:

'அற்றேல், வேதத்துள் அங்ஙனம் ஒன்றினொன்று தோன்று' மென்ற வாக்கியத்தோடும், 'இருநில னதுபுன லிடை மடிதரவெளி புகவெரி யதுமிகு – பெருவெளியினிலவி தரவளி கெடவிய விடைமுழு வதுகெட – விருவர்களுடன் பொறையொடுதிரி யெழிலுரு வுடையவன்' எனச் சங்கார முறைபற்றி வேதவாக்கியப் பொருளை வலியுறுத்தோதிய திருப்பாட்டோடும் முரணுமாலெனின், – அற்றன்று; வேதஞ்சிவாகமம் இரண்டும் செய்த முதற்கருத்தா பரமசிவன் ஒருவனேயாகலின், அவைதம்முள் முரணுமாறின்மையின், ஒரோவழிமுரணுவன போலத் தோன்றியவழி, முரணாகாதவாறு வன்மை மென்மைபற்றித் தாற்பரியங்கோடல் வேண்டும். அற்றாகலினன்றே தேயுமுதன் முப்பூதங்கட்கே தோற்றங்கூறி, "இம்முப்பூதமயமே பிரபஞ்சமெல்லாம்" என விரித்தோதிய சாந்தோக்கிய உபநிடதமும், ஆகாயமுதல் ஐந்திற்குந் தோற்றங்கூறி, "ஐம்பூத மயமே பிரபஞ்சமெல்லாம்" என்னும் தைத்திரீய உபநிடதமும் தம்முண் முரணுவனபோலத் தோன்றுதலின், அங்ஙனம் முரணாமைப் பொருட்டு வன்மை மென்மை நோக்கித் தைத்திரீயத்திற் கூறியதே பிரமாணம் எனவும், சாந்தோக்கியத்திற் கூறும் வாக்கியங்கட்கும் அதுவே தாற்பரியம் எனவும், உத்தர மீமாஞ்சையின் வியத்திகரணத்துள் ஓதியதூஉம். மற்றும் ஆண்டாண்டு முரணாத வண்ணம் ஒன்று முக்கியப் பொருளும், ஒன்று தாற்பரியப் பொருளுமாக வைத்துப் பொருளொருமை யுணர்த்தியதூஉமென்க. ஆதலின் இப்பகுதிக்கு நிலம் இரதத்தோடு கூடி விசிட்டமாய் நின்ற கந்த தன்மாத்திரையில் ஒடுங்கிற்றென்றும், நீர் உருவத்தோடு கூடி விசிட்டமாய் நின்ற இரத தன்மாத்திரையில் ஒடுங்கிற்றென்றும், தீ பரிசத்தோடு கூடி விசிட்டமாய் நின்ற உருவ தன்மாத்திரையில் ஒடுங்கிற்றென்றும், காற்று சத்தத்தோடு கூடி விசிட்டமாய் நின்ற பரிச தன்மாத்திரையில்

ஒடுங்கிற்றென்றும், ஆகாயம் பிரமமாகிய சதா சிவத்தால் அதிட்டிக்கப்படும் சத்த தன்மாத்திரையில் ஒடுங்கிற்றென்றும் பொருள் கோடலே மரபாம்.

At the time of great final deluge - Mahaa Sankaraa Kaalam, the five elements i.e., earth, water, fire, air and ether (sky or space) are all absorbed one into another as under:

Earth is dissolved in water;

Water is dissolved in fire;

Fire is dissolved in air;

Air is dissolved in Ether.

The entire world and the contents are all brought to nothing. Thirumaal and Brahmaa also die. Lord Civan wears the skeleton of these two and stands as the only admirable Supreme Lord. This Lord Civan is enshrined in Marai-vanam where the six-legged (அறுபதம்) bees buzz over flowers in bunches and hum in mellifluous melody.

**Note:** The Two: Vishnu and Brahmaa.

சனம்வெரு வுறவரு தசமுக னொருபது முடியொடு மிருபது
கனமரு வியபுய நெரிவகை கழலடி யிலொர்விர னிறுவினன்
இனமலி கணநிசி சரன்மகிழ் வுறவருள் செய்தகரு ணையனென
மனமகிழ் வொடுமறை முறையுணர் மறைவன மமர்தரு பரமனே. 8

*சனம் வெருஉற வரு தசமுகன் ஒருபதுமுடியொடும் இருபது*
*கனம் மருவிய புயம் நெரி வகை, கழல் அடியில் ஓர் விரல் நிறுவினன் -*
*"இனம் மலி கண நிசிசரன் மகிழ்வு உற அருள் செய்த கருணையன்" என*
*மன மகிழ்வொடு மறைமுறை உணர் மறைவனம் அமர் தரு பரமனே.*

can2am veru uRa varu tacamukan2 orupatu muTiyoTum irupatu
kan2am maruviya puyam neri vakai, kazal aTiyil or viral niRuvin2an2--
"in2am mali kaNa nicicaran2 makizvu uRa aruL ceyta karuNaiyan2" en2a
man2a makizvoTu maRai muRai uNar maRaivan2am amartaru paraman2E.

பொருள்: நிசிசரன் (இராவணன்), மக்கள் அஞ்சுமாறு பத்துத் தலைகளோடு, பெரிதாய இருபது தோள்களும் தெரியுமாறு வருகின்றவன். அவனுடைய தலைகளும், தோள்களும் நெரியுமாறு, தனது வீரக்கழல் அணிந்த திருவடியில் உள்ளதொரு விரலை ஊன்றி, சிவபிரான் அவனை அடர்த்தார். நிசிசரன் (இராவணன்), தன் பிழை உணர்ந்து அடங்கினான். அந்த அளவில் அரக்கர் கூட்டத்தை உடைய அந்த நிசிசரன் (இராவணன்) மனம் மகிழுமாறு வாழ்நாள், தேர், வாள், இராவணன் என்ற பெயர் முதலியன அளித்தருளிய கருணையாளன்

சிவபெருமான். சிவபிரானுடைய இந்தக் கருணையை, மறைவனமாகிய திருமறைக்காட்டில் வாழும் நான்மறைகளை முறையாக உணர்ந்த வேதியர்கள் மனமகிழ்வோடு புகழ்கின்றனர். இந்த மறைவனத்தில் அமர்ந்தருளும் பரமனாகச் சிவபிரான் விளங்குகிறான்.

**குறிப்புரை:** இது இராவணனுக்கு அருள் செய்த கருணையை உடையன் என்று அனைவரும் உணர மறைவனம் அமர்தரு பரமன் இருக்கின்றான் என்கின்றது. சனம் – மக்கள். கனமருவிய புயம் – பருத்த தோள். இராவணன் – அழுதவன். இனம் மலி – அரக்கர் கூட்டத்தால் நிறைந்த, நிசிசரன் – இராவணன். "அரக்கர் என்ற இன உணர்வு மிகுந்தவர்கள் கூட்டம் கூட்டமாக அமர்ந்திருக்க, அத்தகைய கூட்டத்தை உடையவனாய் இரவில் சஞ்சரிக்கும் குணமுடைய இராவணன் மகிழுமாறு அருள் செய்த கருணையை உடையவன்" என்று மனமகிழ்வுடன் மறைவல்லவர்களும், தோத்திரம் (முறை) வல்லவர்களும் அனுபவத்தால் அறிந்து உணர்வதற்குரியவனாய் நின்று மறைக்காட்டில் விரும்பித் தங்கியிருக்கும் பரமன்.

The king of Sri Lanka Dasamukan, whose very appearance terrified the people, once tried to lift Mount Kailas, abode of Lord Civan. Lord Civan pressed the top of the mountain by the toe of His ankleted feet (*வீரக்கழல் அணிந்த கால் விரல்*) and crushed the ten heads and twenty mighty muscular shoulders (of Raavanan). The king repented for his folly. Lord Civan forgave him and gifted him with divine sword, chariot, long life and renamed him as 'Raavanan'. Raavanan happily accepted and paid his gratitude to Lord Civan. Vedic scholars who have mastered the holy scriptures adore Lord Civan enshrined in Marai-vanam for His mercy shown to Raavanan.

**Note:** Nisicharan: The night-rover, a Rakshasa, Raavanan.

அணிமலர் மகடலை மகனய னறிவரி யதொர்பரி சினிலெரி
திணிதரு திரளுரு வளர்தர வவர்வெரு வுறலொடு துதிசெய்து
பணியுற வெளியுரு வியபர னவனுரை மலிகட றிரளெழும்
மணிவள ரொளிவெயின் மிகுதரு மறைவன மமர்தரு பரமனே. 9

*அணி மலர்மகள்தலைமகன், அயன், அறிவு அரியது ஓர் பரிசினில் எரி
திணிதரு திரள் உரு வளர்தர, அவர் வெரு உறலொடு துதிசெய்து
பணிவுஉற, வெளி உருவிய பரன் அவன் - நுரை மலி கடல் திரள் எழும்
மணி வளர் ஒளி வெயில் மிகுதரும் மறைவனம் அமர் தரு பரமனே.*

aNi malar makaL talaimakan2, ayan2, aRivu ariyatu or paricin2il eri
tiNi taru tiraL uru vaLartara, avar veru uRaloTu tuti ceytu
paNivu uRa, veLi uruviya paran2 avan2--nurai mali kaTal tiraL ezum
maNi vaLar oLi veyil mikutarum maRaivan2am amartaru paraman2E.

**பொருள்:** அழகிய மலர் மகள் கேள்வனாகிய திருமாலும், அயனும் அறிதற்கு அரியதொரு காட்சியைக் கண்டனர். அனல் செறிந்த பிழம்பு உருவத்தோடு பிரான் தோன்றினான். அந்த உருவத்தைக் கண்டு அவ்விருவரும் அஞ்சித் துதி செய்தனர். அவனைப் பணிந்தனர். வானவெளியைக் கடந்த பேர் உருவத்தோடு காட்சி நல்கிய பரமனாகிய சிவபிரான் மறைவனமாகிய திருமறைக்காட்டில் அமரும் பரமன் ஆவான். நுரைமிக்க கடல் திரட்சியில் தோன்றும் மணிகளின் வளர் ஒளியினால் சூரியனது ஒளி மிகுந்து தோன்றும் இடமாக பரமன் உறையும் மறைவனம் விளங்குகிறது.

**குறிப்புரை:** மறைவனத்துப் பரமனே அயனும் மாலும் அறியொண்ணாதபடி அண்ணாமலையாய், அவர்கள் அச்சத்தோடு துதி செய்ய வெளிப்பட்டு உருவங்கொண்ட பரன் என்கின்றது. மலர் மகள் தலைமகன் – திருமால். பரிசு – தன்மை. எரி திணிதரு திரள் உரு – செறிவான தீப்பிழம்பின் வடிவு. வெளி உருவிய – ஆகாயத்தைக் கடந்த, நுரை மலிகடல் – நுரை மலிந்த கடல். பரமனே வெளி உருவிய பரன் அவன் எனக் கொள்க.

Lord Civan, the Supreme God grew into a dense and soaring column of fire, passing beyond the vault of heaven, unknowable to the consort of the bejewelled goddess of the Lotus, namely - Thirumaal and also unknowable to Brahmaa. Utterly scared, when these two bowed and paid obeisance to Him, He manifested Himself before them and graced them. This Supreme Lord is entempled in Marai-vanam where the rays of the sun, mingling with the dazzle of the gems tossed up by the billows of the foamy sea, shine in splendour.

இயல்வழி தரவிது செலவுற வினமயி லிறகுறு தழையொடு
செயன்மரு வியசிறு கடமுடி யடைகையர் தலைபறி செய்துதவம்
முயல்பவர் துவர்பட முடல்பொதி பவரறி வருபர னவனணி
வயலினி வளைவள மருவிய மறைவன மமர்தரு பரமனே. 10

*இயல்வு அழிதர, விது செலவுஉற, இனமயில் இறகு உறு தழையொடு*
*செயல் மருவிய சிறுகடம் முடி அடை கையர், தலை பறிசெய்து தவம்*
*முயல்பவர், துவர்படம் உடல் பொதிபவர், அறிவுஅரு பரன் அவன் - அணி*
*வயலினில் வளை வளம் மருவிய மறைவனம் அமர் தரு பரமனே.*

iyalvu azitara, vitu celavu uRa, in2amayil iRaku uRu tazaiyoTu
ceyal maruviya ciRu kaTam muTi aTai kaiyar, talai paRiceytu tavam
muyalpavar, tuvarpaTam uTal potipavar, aRivu aru paran2 avan2--aNi
vayalin2il vaLai vaLam maruviya maRaivan2am amartaru paraman2E.

**பொருள்:** சமண, பௌத்தர்களுடைய இயல்புகள் இப்பாடலில் கூறப்படுகின்றன. சமணர்கள், உலக இயல்பு கெடுமாறு நடைஉடை பாவனைகளால் வேறுபடத் தோன்றுகிறார்கள். பல மயில்களின் தோகைகளைக் கொண்டு செல்லும் வழிகளில் உள்ள உயிரினங்களுக்கு ஊறு வாராதபடி தூய்மை செய்து நடத்தலைச் செய்கிறார்கள். சிறிய குண்டிகை வைக்கப்பட்ட உறியை ஏந்திய கையராய் உள்ளனர். தலைமுடியைப் பறித்து முண்டிதமாக்கிக் கொண்டு, தவம் முயல்பவர்களாக் காணப்படுகிறார்கள். பௌத்தர்கள், துவராடையில் உடலை மூடிக்கொண்டிருக்கிறார்கள். சமணர்களும், பௌத்தர்களும் அறிதற்கு அரிய பரமனாகச் சிவபிரான் இருக்கிறான். அழகிய வயல்களில் சங்குகள் ஈன்ற முத்துக்கள் நிறைந்துள்ள மறைவனமாகிய திருமறைக்காட்டில் அமர்ந்துறையும் பரமனாகச் சிவபெருமான் விளங்குகின்றான்.

**குறிப்புரை:** இது புறச்சமயத்தாரால் அறியமுடியாத பரன் மறைவன நாதன் என்கின்றது. இயல்வு அழிதர – உலகவியற்கை கெட. விதுசெலவுற – காற்று வீச. மயில் இறகு தழையொடு – மயிற்பீலிக் கற்றையொடு செயல் மருவிய சிறுகடம் முடி – வேலைப்பாடமைந்த குண்டிகை வைக்கப்பட்ட உறி. துவர்படம் – கல்லாடை – காவியாடை. வளை வளம் – சங்கு தந்த முத்தாகிய வளப்பங்கள்.

Samanaas who pursue repugnant ways carry in their hands slings containing Kamandalas and go about sweeping their paths with bunches of peacock-feather; they pluck out their hair and attempt to perform penance. Buddhists are heavily robed in ochre vestments. Unto these, the Supreme One is unknowable. This Supreme God is entempled in Marai-vanam, the fields of which teem with pearl-yielding chunks.

**Note:** The ways of the Samanaas and the Buddhists are advisedly repugnant to the Vedas. Such repugnance forms the basis of their faiths. Again, these are confirmed atheists.

வசையறு மலர்மக ளிலவிய மறைவன மமர்பர மனைநினை
பசையொடு மிகுகலை பலபயில் புலவர்கள் புகழ்வழி வளர்தரு
இசையமர் கழுமல நகரிறை தமிழ்விர கனதுரை யியல்வல
இசைமலி தமிழொரு பதும்வல வவருல கினிலெழில் பெறுவரே. 11

வசை அறு மலர்மகள் நிலவிய மறைவனம் அமர் பரமனை நினை
பசையொடு, மிகு கலைபல பயில் புலவர்கள் புகழ் வழி வளர்தரு
இசை அமர் கழுமலநகர் இறை, தமிழ்விரகனது உரை இயல் வல
இசை மலி தமிழ் ஒருபதும் வலஅவர் உலகினில் எழில் பெறுவரே.

vacai aRu malarmakaL nilaviya maRaivan2am amar paraman2ai nin2ai
pacaiyoTu, miku kalaipala payil pulavarkaL pukaz--vazi vaLartaru
icai amar--kazumala nAkar iRai, tamizvirakan2atu urai iyal vala
icai mali tamiz orupatum vala avar ulakin2il ezil peRuvarE.

**பொருள்:** குற்றமற்ற திருமகள் நிலவும் நகராக மறைவனம் என்ற திருமறைக்காடு விளங்குகிறது. அங்கு அமர்ந்துள்ள பரமனை அன்போடு நினைபவர்கள் மிகுந்த கலைகளில் வல்ல புலவர்கள் பலர் உளர். அந்தப் புலவர்களின் புகழோடு வளரும் ஞானசம்பந்தர், அவர் கழுமல நகர்த் தலைவரும், தமிழ் விரகரும் ஆவார். அந்த ஞானசம்பந்தர் இயற்றிய இந்தத் திருப்பதிகம் மேம்பட்ட இசை மலிந்த பாடல்கள் ஆகும். இந்தப் பாடல்கள் பத்தையும் இசைக்க வல்லவர்கள் உலகினில் மேன்மை எய்துவார்கள்.

**குறிப்புரை:** இது மறைவனநாதனை மனத்தெண்ணிய அன்போடு, கற்றார் பயிலும் காழி ஞானசம்பந்தன் சொன்ன இப்பத்துப் பாடல்களையும் பாட வல்லவர்கள் உலகில் மேன்மை எய்துவர் என்கின்றது. வசையறு மலர்மகள் – குற்றமற்ற திருமகள். திருமகளுக்குக் குற்றம் ஓரிடத்தும் நில்லாமையும், தக்காரிடத்துச் செல்லாமையும் போல்வன. மறைவனத்து அங்ஙனம் இல்லாமையின் குற்றமற்றவள் ஆயினள்.

Adept in Tamil, - the Prince of Kazhumalam where thrive famous poets well-versed in glorious scriptures, has in abundant love, sung this hymn on the Supreme Lord Civan who is enshrined in Marai-vanam - also the abode of the flawless goddess on the Lotus. They who are well-versed in these melodious ten verses which are of high literary merit will flourish on earth in great splendour.

**Note:** Virakan: The skilled one, an adept. The saint thus refers to himself, as in many other stanzas.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*22ஆம் பதிகம் முற்றிற்று*
End of 22nd Hymn

உ
சிவமயம்

# 23. திருக்கோலக்கா

## திருத்தலவரலாறு:

திருக்கோலக்கா என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். சீகாழிக்கு மேற்கே ஒரு கி.மீ. தூரத்தில் உள்ளது. இத்தலம் திருத்தாளமுடையார் கோயில் என வழங்கப் பெறுகிறது. திருஞான சம்பந்த சுவாமிகள் திருமுலைப்பால் உண்டருளிய மறுநாள், இத்தலத்திற்கு எழுந்தருளிக் கையினால் தாளம் இட்டுப் பாடினார். அப்போது இறைவன் திருவருளால் திருவைந்தெழுத்து எழுதப்பெற்ற பொற்றாளம் இவர் கைவந்தருளப் பெற்றது. சுவாமியின் பெயர் சப்தபுரீசுவரர். அம்மையின் பெயர் ஓசை கொடுத்த நாயகி. கிழக்குப் பார்த்த சந்நிதி. கோயில் வாயிலில் அழகான தீர்த்தம் இருக்கிறது. சீகாழி திருமுலைப்பால் விழா அன்று மாலை ஞானசம்பந்த சுவாமி இங்கு எழுந்தருளுவார்.

## பதிக வரலாறு:

ஞானபோனகராகிய பிள்ளையார் தம்முடைய காழித் தந்தையாரையும் ஞானப்பால் தந்த தாயாரையும் வணங்கிப் பக்கத்தில் உள்ள திருக்கோலக்காவிற்கு வழிபடச் சென்றார். அங்கே கோயில் கொண்டு எழுந்தருளி இருக்கும் செம்பொருளாகிய வேதவிழுப்பொருளை, நீலகண்டப் பெருமானைப் பொருளாகக் கொண்டு 'மடையில் வாளைபாய' என்னும் பதிகத்தால் கைத்தாளம் இட்டுப்பாடி அருளினார். கோலக்கா இறைவன் பிள்ளையார் கைகள் சிவப்பதைக் கண்டு மனம் பொறாது திருவைந்தெழுத்து எழுதப் பெற்ற செம்பொன் தாளத்தை ஈந்தருளினார். திருத்தாளம் வையம் எல்லாம் உய்யவரும் மறைச்சிறுவர் கைத்தலத்து வந்தது. அதனைப் பிள்ளையார் கையேற்றுத் திருமுடிமேல் வைத்து ஏழிசையும் தழைத்து ஓங்க இன்னிசைப் பதிகம் பாடி நிறைவு செய்து அருளினார். இப்பதிகத்தின் திருக்கடைக்காப்புச் செய்யுளைச் சேக்கிழார் பெருமான் 'தக்கதிருக்கடைக்காப்பு' என்கிறார்கள். இப்பதிகப் பாடலில், திருத்தாளம் பெற்றமைக்கு நேர்ச்சான்று இல்லை. ஆனால், திருக்கடைக்காப்பினுள் 'தக்க திருக்கடைக்காப்பு' என்றதனால் தாளம் பெற்றமைக்கு ஒரு சான்று உள்ளதாகச் சேக்கிழார் கருதுகின்றார். "வலங்கொள் பாடல்" என்றார். வலம் = வெற்றி. ஞானசம்பந்தரின் அருளிய அனுபவம் திருத்தாளத்தினால் வரையறை செய்து கொடுக்கப்பெறுகிறது. பரந்து செல்லும் இசையானது தாள ஒத்தினால்தான் வரையறை செய்யப்பெறும். அதனால் அனுபவ வெற்றி அமையும் என்பது உட்கிடக்கை.

## 23. THIRU-K-KOLA-K-KAA

### THE HISTORY OF THE PLACE

This sacred place, on the north bank of Cauvery in Chola Naadu, is 1 km to the west of Seekaazhi. This temple is also known by the name of Thiruth Thaalamudaiyaar Koyil. The day after he had the grace of drinking the Goddess's breast milk, Saint Thiru-Gnaanasambanda Swaami came to this temple and sang while keeping the rhythm by clapping his hands. By the grace of the Lord, a pair of golden cymbals, with the holy five-lettered mantra inscribed on it, appeared into his hands. The Lord's name is Sabthapureesvarar and that of the Goddess is Osai Koduththa Naayaki. The shrine faces east. A pretty pond in front of the temple entrance is a sacred place. The deity of Thiru-Gnaanasambandar is brought to this temple on the evening of the day of the festival of holy breast milk celebrated in Seekaazhi.

### INTRODUCTION TO THE HYMN

Thiru-k-kola-k-kaa is the holy place which the young saint visited the day after he drank the milk given by Umaa Devi, consort of Lord Civan of See-Kaazhi. While he started singing in front of Lord Civan at Thiru-k-kola-k-kaa, the Lord noticed the redness of the tender palm of the child saint due to his clapping of hands (beating time). Lord Supreme was much moved by this sight. He wished to help, and Lo! a pair of golden cymbals inscribed with the Five Letter Holy Mantra (ஐந்தெழுத்து மந்திரம்) reached the flowery hands of the child saint. Astonished by this event, he placed the cymbals on his head and paid obeisance to the Lord. Thereafter using the cymbals, he completed the following hymn. The goddess of this place created sound in the golden cymbals (normally golden cymbals will not produce any sound). This goddess is, therefore, known as 'Oosai Koduththa Naayaki' (ஓசை கொடுத்த நாயகி) (ஓசை - Sound).

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 23. திருக்கோலக்கா

## 23. THIRU-K-KOLA-K-KAA

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையுஞ் சாம்பற் பூச்சுங்கீழ்
உடையுங் கொண்ட வுருவ மென்கொலோ. 1

*மடையில் வாளை பாய, மாதரார்*
குடையும் பொய்கைக் கோலக்கா உளான்
*சடையும், பிறையும், சாம்பல்பூச்சும், கீழ் -*
உடையும் கொண்ட உருவம் என்கொலோ?

maTaiyil vALai pAya, mAtarAr
kuTaiyum poykaik kOlakkA uLAn2
caTaiyum, piRaiyum, cAmpal pUccum, kIL--
uTaiyum, koNTa uruvam en2kolO?

**பொருள்:** நீரைத் தேக்கி வெளியிடும் மடையில் வாளைமீன்கள் துள்ளிப் பாயுமாறு, பெண்கள் கையால் குடைந்து நீராடுகின்ற வளமான பொய்கைக் கரையில் அமைந்துள்ளது திருக்கோலக்கா. அந்தத் திருக்கோலக்காவில் எழுந்தருளியுள்ள சிவபிரான் சடைமுடியையும் அதன்கண் பிறையையும் கொண்டிருக்கிறான். திருமேனி முழுவதும் திருநீற்றுப் பூச்சையும், இடையில் ஆடையாகக் கோவண உடையையும் கொண்ட உருவம் உடையவனாக இருப்பது ஏனோ?

**குறிப்புரை:** இது மாதர் நீராடுவதால் வாளைமீன்கள் துள்ளும் பொய்கைக் கரையில் உள்ள கோலக்காவில் உள்ளவன், சடையும் பிறையும் தாங்கி, சாம்பலைப் பூசி, கீள் உடுத்து இருக்கின்ற வடிவத்தைக் கொண்டது ஏனோ என்கின்றது. தலமோ மாதர் நீராட, வாளை மடையில் பாயும் வளம் பொருந்திய தலம். அதற்கேற்ப இவர் அணியணிந்து, சாந்தம்பூசி, பட்டுடுத்து வாழாது இங்ஙனமாய திருக்கோலத்தைக் கொண்டதேன்? கீளுடை – கீளோடு கட்டின கோவண ஆடை.

**குருவருள்:** இப்பாடலில் கீள் உடை என்பதே சரியான பாடம். கீள் என்பது கீளப்பட்ட அஃதாவது கிழிக்கப்பட்ட வாராகும். 'கீளார் கோவணமும்' என்ற சுந்தரர் தேவாரமும் காண்க. சடை இறைவனது எண்குணங்களுள் அளவிலாற்றலுடைமையைக் குறித்தது. 'கடுத்து வரும் கங்கைதனைக் கமழ்சடை ஒன்று ஆடாமே தடுத்தவர்' என்ற பிள்ளையார் வாக்கும் காண்க. எண்குணங்களுள் பிறை, பெருமான்

கருணையாளன் என்பதை நினைவுறுத்துகிறது. தவறு செய்தவன் உணர்ந்தால் மன்னித்து அருள் வழங்கும் கருணை இதில் புலப்படுதல் காணலாம். சாம்பற்பூச்சும், கீள் உடையும் பரமனின் பற்றற்ற நிலையைக் குறிப்பன. எல்லாம் இருந்தும் தான் ஒன்றும் அநுபவியாமல் யோகியாயிருந்து உயிர்கட்கு யோகநெறி காட்டி விடுதலை செய்பவன் என்பதைக் குறிப்பது.

Lord Civan is enshrined at the temple in the town of Tiru-k-kolak-kaa (திருக்கோலக்கா). There are pools with plenty of water in which young women dive and sport, causing the 'Vaalai' fish leap over the sluice. His crest is matted on which rests the crescent moon. His body is smeared with the holy ash. He is clad in 'Kovanam' (கோவணம்) in His loins. Why indeed is such a form assumed by Lord Civan?

**Note:** Vaalai: Scabbard-fish. Keell: Strip of cloth used as waist-band.

பெண்டான் பாக மாகப் பிறைச்சென்னி
கொண்டான் கோலக் காவு கோயிலாக்
கண்டான் பாதங் கையாற் கூப்பவே
உண்டா னஞ்சை யுலக முய்யவே. 2

பெண்தான் பாகம்ஆகப், பிறைச் சென்னி
கொண்டான், கோலக்காவு கோயிலாக்
கண்டான், பாதம் கையால் கூப்பவே
உண்டான் நஞ்சை, உலகம் உய்யவே.

peNtAn2 pAkam Aka, piRaic cen2n2i
koNTAn2, kOlakkAvu kOyilAk
kaNTAn2, pAtam kaiyAl kUppavE,
uNTAn2 nanjcai, ulakam uyyavE.

**பொருள்:** சிவபிரான், உமையன்னையைத் தன்னுடைய திருமேனியில் இடப்பாகமாகக் கொண்டான். கலைகள் ஒவ்வொன்றாகக் குறைந்து வந்த இளம்பிறையைச் சடைமுடிமீது ஏற்றுக் கொண்டான். திருப்பாற்கடலில் நஞ்சு தோன்றியபோது 'காவாய்' என அனைவரும் கைகூப்பி வணங்க, உலகம் உய்யுமாறு அந்த நஞ்சினை உண்டு அருள் செய்தான். இவ்வளவு சிறப்புக்களை உடைய சிவபிரான் திருக்கோலக்காவினைத்தன் இருப்பிடமாகக் கொண்டவன்.

**குறிப்புரை:** இது கோலக்காவிற் கோயில் கொண்ட இறைவன், எல்லாருந்தொழ, உலகம் உய்ய, கடல் நஞ்சை உண்டான் என்கின்றது. நஞ்சுண்டது தம் வீரத்தை வெளிப்படுத்தற்கன்று; உலகம் உய்ய எழுந்த பெருங்கருணையைத் தெரிவித்தவாறு.

Lord Civan has chosen the temple in Kolak-kaa as His abode. He is having His consort Umaa Devi on the left portion of His body. He wears the crescent moon in His crest. When the venom came out of Thiru-p-paar-kadal, all celestial beings ran to and adored Lord Civan with folded palms, moaned and begged for protection from the wrath of the poison (ஆலகாலவிஷம்). Lord Civan quaffed the poison and saved the celestials and others.

**Note:** The Venom: known as Halahalaa in Sanskrit. Its Tamil equivalent is Aala-halam.

பூணற் பொறிகொ ளரவம் புன்சடை
கோணற் பிறையன் குழகன் கோலக்கா
மாணப் பாடி மறைவல் லானையே
பேணப் பறையும் பிணிக ளானவே. 3

பூண் நல் பொறி கொள் அரவம், புன்சடை
கோணல்பிறையன், குழகன், கோலக்கா
மாணப் பாடி, மறை வல்லானையே
பேணப், பறையும், பிணிகள் ஆனவே.

pUN nal poRi koL aravam, pun2caTai,
kONal piRaiyan2, kuzakan2, kOlakkA
mANap pATi, maRai vallAn2aiyE
pENa, paRaiyum, piNikaL An2avE.

**பொருள்:** சிவபிரான் அழகிய புள்ளிகளை உடைய பாம்பை அணியாகக் கொண்டவன். அவன், சிவந்த சடையின் மேல் வளைந்த பிறையைச் சூடியவன். என்றும் மாறாத இளமைத் தன்மையை உடைய அந்தச் சிவபிரான் திருக்கோலக்காவில் எழுந்தருளியுள்ளான். வேதங்களை அருளிய அந்தப் பெருமானைப் பேணியும், திருக்கோலக்காவின் மாட்சிமை தங்கப் பாடியும் தொழுதால் பிணிகள் யாவும் நீங்கும்.

**குறிப்புரை:** கோலக்காவில் குழகனைப் பேணப் பிணிகள் நீங்கும் என்கின்றது. பூண் நல்பொறிகொள் அரவம் - நற்பொறிகொள் அரவம் பூண் என மாற்றுக. குழகன் - இளமை உடையவன். மாண - மாட்சிமை மிக. பேண - மனத்துள் இடைவிடாது தியானிக்க. பறையும் - ஒன்றொன்றாக உருவமின்றிக் கெடும்.

Lord Civan uses the fair speckled snake as His ornament in His body. He wears the curved crescent moon on His red matted hair. Lord Civan the ever-young One,

author of Vedas, is enshrined in Kola-k-kaa. Ye folks sing about the celebrated Kola-k-kaa and worship the Lord therein; all your illness will vanish.

**Note:** Kuzhakan: Lord Siva is Azhakan (the handsome One) as well as Kuzhakan (the ever-young One).

தழுக்கொள் பாவந் தளர வேண்டுவீர்
மழுக்கொள் செல்வன் மறிசே ரங்கையான்
குழுக்கொள் பூதப் படையான் கோலக்கா
இழுக்கா வண்ண மேத்தி வாழ்மினே. 4

*தழுக் கொள் பாவம் தளர வேண்டுவீர்!*
*மழுக் கொள் செல்வன், மறி சேர் அம் கையான்,*
*குழுக் கொள் பூதப்படையான், கோலக்கா*
*இழுக்கா வண்ணம் ஏத்தி வாழ்மினே!*

tazuk koL pAvam taLara vENTuvIr!
mazuk koL celvan2, maRi cEr am kaiyAn2,
kuzuk koL pUtappaTaiyAn2, kOlakkA
izukkA vaNNam Etti vAzmin2E!

**பொருள்:** பல்வேறு காலங்களிலும் செய்த பாவங்களை நீக்க வேண்டும் என்று விரும்புகின்றவர்களே! மழு ஆயுதத்தைப் படைக்கலனாகக் கொண்ட செல்வன் சிவபிரான். அவன் மானை ஏந்திய அழகிய கைகளை உடையவன்; பல்வேறு குழுக்களாக அமைந்துள்ள பூதங்களின் படையை உடையவன். இவ்வளவு சிறப்புக்களைத் தாங்கிய சிவபிரானுடைய திருக்கோலக்காவைத் தவறாமல் சென்று தரிசித்து வாருங்கள். உங்களுடைய பாவங்கள் அகலும்.

**குறிப்புரை:** பாவங்கள் தளர வேண்டுபவர்களே! கோலக்காவில் இறைவனைக் கும்பிட்டு வாழ்த்துங்கள் என்கின்றது. தழுக்கொள் பாவம் – ஆணவ முனைப்போடு கூடிய ஆன்ம போதத்தால் தழுவிக் கொள்ளப்பட்ட பாவங்கள். இழுக்கா வண்ணம் – தவறாதபடி.

Ye folks who desire to get rid of your entrenched sins, committed in the past on various occasions, hail the Lord of Kola-k-kaa without fail, the opulent One that wields a mazhu in one of His hands. He is the One whose beauteous hand sports a fawn. He is the Lord of the Bhuta-Hosts (army of servitors), your sins will then vanish.

Note: Thazhu: scar. Tazhukkoll paavam: Sins entrenched in scars.

மயிலார் சாயல் மாதோர் பாகமா
எயிலார் சாய வெரித்த வெந்தைதன்
குயிலார் சோலைக் கோலக் காவையே
பயிலா நிற்கப் பறையும் பாவமே. 5

*மயில் ஆர் சாயல் மாது ஓர்பாகமா,*
*எயிலார் சாய எரித்த எந்தைதன்*
*குயில் ஆர் சோலைக் கோலக்காவையே*
*பயிலா நிற்கப், பறையும், பாவமே.*

mayil Ar cAyal mAtu Or pAkamA,
eyilAr cAya eritta entai tan2
kuyil Ar cOlaik kOlakkAvaiyE
payilA niRka, paRaiyum, pAvamE.

***பொருள்:*** சிவபிரான், ஆண் மயில் போலும் ஒளி வீசும் நடையை உடைய உமையம்மையை ஒரு பாகமாக உடையவன். அவன், அரக்கர்களுடைய முப்புரங்கள் கெடுமாறு எரித்தவன். அவன் எங்கள் தந்தையாவான். குயில்கள் நிறைந்து வாழும் சோலைகளை உடைய திருக்கோலக்காவை விரும்பி உறைகிறான். அந்தத் திருக்கோலக்காவைப் பலகாலும் நினைக்கப் பாவங்கள் நீங்கும்.

***குறிப்புரை:*** திரிபுரம் எரித்த செல்வன் எழுந்தருளியுள்ள கோலக்காவை இடைவிடாது நினைக்கப் பாவம் பறையும் என்கின்றது. மாது – உமாதேவி. நோக்கினார் கண்ணுக்கு இனிமையும், பிறவியால் வரும் மயக்கம் அறுக்கும் மருந்தும் ஆகலின் இறைவி மயிலார் சாயலள் ஆயினள். எயிலார் – திரிபுராதிகள். பயிலா நிற்க – இடைவிடாது தியானிக்க.

Lord Civan who is concorporate with goddess Umaa Devi of peacock like bearing is enshrined in Kola-k-kaa. The kuyil birds abound in the gardens of Kola-k-kaa. He is our Father who gutted with fire the three hostile citadels of Asuras. If you constantly adore Kola-k-kaa and venerate Lord Civa therein all your sins will vanish.

**Note:** Kuyil: The Indian Cuckoo. It is symbolic of Siva-yogi.

வெடிகொள் வினையை வீட்ட வேண்டுவீர்
கடிகொள் கொன்றை கலந்த சென்னியான்
கொடிகொள் விழவார் கோலக் காவுளெம்
அடிகள் பாத மடைந்து வாழ்மினே. 6

*வெடிகொள் வினையை வீட்ட வேண்டுவீர்!*
*கடி கொள் கொன்றை கலந்த சென்னியான்,*
*கொடி கொள் விழவு ஆர் கோலக்காவுள் எம்*
*அடிகள் பாதம் அடைந்து வாழ்மினே!*

vETikoL vin2aiyai vITTa vENTuvIr!
kaTi koL kon2Rai kalanta cen2n2iyAn2,
koTi koL vizavu Ar kOlakkAvuL em
aTikaL, pAtam aTaintu vAzmin2E!

**பொருள்:** ஒன்றிலிருந்து பிறிதொன்றாகக் கிளைக்கும் வினைப்பகையை நீக்கிக் கொள்ள விரும்புகின்றவர்களே! கொடிகள் கட்டப்பட்டு, விழாக்கள் பலவும் நிகழ்த்தப்பெறும் தலம் திருக்கோலக்கா. அங்கு விரும்பித் தங்கும் எம் தலைவன் ஆகிய சிவபிரான், மணம் பொருந்திய கொன்றை மலர் விரவிய சென்னியை உடையவன். அத்தகைய பெருமானுடைய திருப்பாதங்களை அடைந்து வாழ்வீர்களாக.

**குறிப்புரை:** இது வினைகெட வேண்டுவீர் கோலக்காவின் அடிகளை அடைந்து வாழுங்கள் என்கின்றது. வெடிகொள்வினை – வாழை சிங்கம் வெடித்தது என்றாற்போல ஒரு முதலிலிருந்து பலவாகப் பல்கும்வினை. கடி – மணம்.

Ye that are desirous of routing your bursting loads of karma! Reach the feet of our Lord-God - the One that wears on His head the fragrant kondrai, the One whose shrine is Kolakkaa marked by festoons, flying flags, feasts and festivities. Hailing His Feet, ye shall flourish well.

**Note:** Thiru-k-kola-k-kaa is ever pervaded by a festive atmosphere.

நிழலார் சோலை நீல வண்டினங்
குழலார் பண்செய் கோலக் காவுளான்
கழலான் மொய்த்த பாதங் கைகளால்
தொழலார் பக்கற் றுயர மில்லையே. 7

*நிழல் ஆர் சோலை நீலவண்டு இனம்,*
*குழல் ஆர் பண்செய் கோலக்கா உளான்*
*கழலால் மொய்த்த பாதம் கைகளால்*
*தொழலார் பக்கல் துயரம் இல்லையே.*

nizal Ar cOlai nIlavaNTu in2am,
kuzal Ar, paN cey kOlakkA uLAn2
kazalAl moytta pAtam kaikaLAl
tozalAr pakkal--tuyaram illaiyE.

*பொருள்:* கோலக்காவில் நிழல் செறிந்த சோலைகள் உள்ளன. அங்கு நீலநிறம் பொருந்திய வண்டினங்கள் வேய்ங்குழல் போல இசை வழங்கும். அவ்வகைப்பட்ட திருக்கோலக்காவில் சிவபிரான் விளங்கி உறைகிறான். அவனுடைய வீரக்கழல் செறிந்த திருவடிகளைக் கைகூப்பித் தொழுபவர் பக்கம் துயரம் வாராது.

**குறிப்புரை:** இது கோலக்காவுளான் பாதம் தொழுவார்க்குத் துயரமில்லை என்கின்றது. குழலார் – குழல்போல, கழலான் மொய்த்த பாதம் – வீரக்கழலோடு செறிந்த சேவடி.

Lord Civan is entempled in Kola-k-kaa rich in shade-giving gardens where honeybees hum tunes of the flute made of bamboo. Misery comes nowhere near unto them who adore His ankleted feet with folded palms.

எறியார் கடல்சூ ழிலங்கைக் கோன்றனை
முறியார் தடக்கை யடர்த்த மூர்த்திதன்
குறியார் பண்செய் கோலக் காவையே
நெறியாற் றொழுவார் வினைக ணீங்குமே. 8

எறி ஆர் கடல் சூழ் இலங்கைக்கோன் தனை
முறி ஆர் தடக்கை அடர்த்த மூர்த்திதன்
குறி ஆர் பண்செய் கோலக்காவையே
நெறியால் தொழுவார் வினைகள் நீங்குமே.

eRi Ar kaTal cUz ilagkaik kOn2tan2ai
muRai Ar taTakkai aTartta mUrtti tan2
kuRi Ar paN cey kOlakkAvaiyE
neRiyAl--tozuvAr vin2aikaL nIgkumE.

**பொருள்:** அலைகள் எறியும் கடலால் சூழப்பட்ட இலங்கைக்கு மன்னன் இராவணன். அவன் கயிலை மலையைப் பெயர்க்க முயன்றான். அதனால், அவனுடைய நீண்ட கைகள் முரிந்து போகும்படிச் சிவபிரான் அடர்த்தான். அவ்வகைப்பட்ட சிவபிரானைச் சுரத்தானங்களைக் குறித்த பண்ணிசையால் திருக்கோலக்காவில், சிவாகம நெறிகளின்படி வழிபடுவார்களுக்கு வினைகள் நீங்கும்.

**குறிப்புரை:** கோலக்காவைத் தொழுவார் வினை நீங்கும் என்கின்றது. எறியார்கடல் – எறிதலைப் பொருந்துகின்ற கடல். அதாவது கரையொடு மோதுகின்ற கடல். முறியார் தடக்கை – முரிதல் அமைந்த தடக்கை என்றது அவனது இருபது தோள்களையும். குறியார் பண் 'குறிகலந்த இன்னிசை' என்பது போலக் கொள்க. நெறியால் தொழுவார் – சிவாகம நெறிப்படியே வணங்குகின்றவர்கள். வினைகள் நீங்கும் என்றது வினைகள் தாமே கழலும் என்பதை விளக்கிற்று.

Lord Civan is the 'Murti' (the glorious One) that broke the mighty arms of the King of Lanka, which is surrounded by a sea of billows. Those who duly adore Lord Civan in Kola-k-kaa by singing those particular songs that relate to Him, in the proper tune (Pann) and according to the prescribed Sivaagama ways (சிவாகம நெறிகளின் படி), will stand freed of their karma.

**Note:** The word "Kuri" refers to swara-sthaanas. Swara is the base of music. It is also known as sruti.

நாற்ற மலர்மே லயனு நாகத்தில்
ஆற்ற லணைமே லவனுங் காண்கிலாக்
கூற்ற முதைத்த குழகன் கோலக்கா
ஏற்றான் பாத மேத்தி வாழ்மினே. 9

*நாற்றமலர்மேல் அயனும், நாகத்தில்*
*ஆற்றல் அணைமேலவனும், காண்கிலாக்,*
*கூற்றம் உதைத்த, குழகன் - கோலக்கா*
*ஏற்றான் பாதம் ஏத்தி வாழ்மினே!*

nARRamalarmEl ayan2um, nAkattil
ARRal aNai mElavan2um, kANkilA,
kURRam utaitta, kuzakan2--kOlakkA
ERRan2--pAtam Etti vAzmin2E!

**பொருள்:** மணம் பொருந்திய தாமரை மலர்மேல் விளங்கும் நான்முகனும், ஆற்றல் பொருந்திய ஆதிசேடனாகிய அணையில் உறங்கும் திருமாலும் காண்பதற்கு இயலாதவன் சிவபெருமான். அவன் இயமனை உதைத்த குழகன். அத்தகைய சிவபெருமான் திருக்கோலக்காவில் விரும்பி உறைகிறான். அந்த இறைவனுடைய திருவடிகளைப் போற்றி வாழ்வீர்களாக.

**குறிப்புரை:** அயனும் மாலுங் காணாத, கூற்ற முதைத்த குழகன் பாதத்தை ஏத்தி வாழுங்கள் என்கின்றது. நாற்றம் – மணம். நாகத்தில் – ஆதிசேடனிடத்தில். ஏற்றான் – இடமாக ஏற்றுக் கொண்டவன்.

Lord Civan is the ever-young One, incomprehensible to Brahmaa who is seated on a fragrant Lotus, and to Vishnu reclining on his bed of powerful snake; He kicked to death Yama, the very messenger of Death. Hail His Holy Feet and thrive well! He has the bull as His vehicle and is enshrined in Kola-k-kaa.

**Note:** The snake: Aadi-seshaa with a thousand hood.

பெற்ற மாசு பிறக்குஞ் சமணரும்
உற்ற துவர்தோ யுருவி லாளருங்
குற்ற நெறியார் கொள்ளார் கோலக்காப்
பற்றிப் பரவப் பறையும் பாவமே. 10

*பெற்ற மாசு பிறக்கும் சமணரும்,*
*உற்ற துவர்தோய் உருவுஇலாளரும்,*
*குற்றநெறியார் கொள்ளார் கோலக்காப்*
*பற்றிப் பரவப், பறையும் பாவமே.*

peRRa mAcu piRakkum camaNarum,
uRRa tuvar tOy uru ilALarum,
kuRRa neRiyAr koLLAr kOlakkAp
paRRip parava, paRaiyum, pAvamE.

**பொருள்:** நீராடாமல் தம் உடலில் சேர்ந்த மாசுடன் தோன்றும் சமணரும், தம் உடலில் பொருந்திய துவராடையால் தம்முடைய உருவத்தை மறைத்துக் கொள்ளும் பௌத்தர்களும் குற்றமுடைய சமய நெறிகளை மேற்கொண்டவர் ஆவர். அவர்கள் தம்முடைய தெய்வம் என்று ஏற்றுக்கொள்ளாத திருக்கோலக்கா இறைவனைப் பற்றுங்கள். போற்றி வழிபடுங்கள். பாவங்கள் தீரும்.

**குறிப்புரை:** சமணர்களும், புத்தர்களும் சொல்வனவற்றைக் கொள்ளாத பெரியோர்கள் எனவும் கொள்ளலாம். பெற்றமாசு பிறக்கும் சமணர் – பெற்ற அழுக்குகளை மறையாது (கழுவாது) தாங்களாகவே வெளிப்படுத்திக் கொள்ளும் சமணர்கள். துவர்தோய் உருவிலாளர் – காவியாடையால் உருவந்தோன்றாதே மறைத்த புத்தர்கள் ஆகிய இருவரும், குற்ற நெறியார் – குற்றப்பட்ட சமயநெறியை உடையவர்கள்.

Samanars move about with their unwashed dirt ridden bodies. Buddhists cover their bodies with yellowish brown colour garments (காவி ஆடை). These two adhere to their sinful actions. They do not therefore accept Lord Civan as their Supreme God. But those who adore this Supreme Lord Civan in Kola-k-kaa will get rid of their sins.

நலங்கொள் காழி ஞானசம் பந்தன்
குலங்கொள் கோலக் காவு ளானையே
வலங்கொள் பாடல் வல்ல வாய்மையார்
உலங்கொள் வினைபோ யோங்கி வாழ்வரே. 11

நலம் கொள் காழி ஞானசம்பந்தன்,
குலம் கொள் கோலக்கா உளானையே
வலம் கொள் பாடல் வல்ல வாய்மையார்,
உலம் கொள் வினை போய் ஓங்கி வாழ்வரே.

nalam koL kAzi njAn2acampantan2,
kulam koL kOlakkA uLAn2aiyE
valam koL pATal valla vAymaiyAr,
ulam koL vin2ai pOy, Ogki vAzvarE.

**பொருள்:** திருவருள் நலங்கள் யாவும் நிறைந்த சீகாழிப்பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தர். பண்பால் உயர்ந்த குலத்தினரைக் கொண்டது திருக்கோலக்கா. அங்கு விளங்கும் இறைவனை ஞானசம்பந்தர் திருவருள் வென்றியைக் கொண்ட இந்தத் திருப்பதிகப் பாடல்களால் பாடினார். இந்தத் திருப்பாடல்களை ஓதி வழிபட வல்ல வாய்மையாளர்கள், அவர்களுடைய மலைபோன்ற திண்ணிய வினைகள் நீங்கப் பெற்றுச் சிறந்து வாழ்வார்கள்.

**குறிப்புரை:** கோலக்காவைப் பற்றிய இப்பாடல் பத்தையும் வல்லவர் மலைபோன்ற தம்வினையும் மாள ஓங்கிவாழ்வார்கள் என்கின்றது. வலங்கொள்பாடல் – திருவருள் வன்மையைக் கொண்ட பாடல் அல்லது வலமாகக் கொண்ட பாடல் என்றுமாம்.

**குருவருள்:** உலம் – மலை. மலையளவு பாவம் செய்திருப்பினும் நெறியாக இப்பதிகத்தை ஓதினால், மலையளவு வினைகளும் பொடியாக, உயர்ந்த வாழ்வு பெறுவர். முடிவான பேரின்ப வாழ்வு பெறுவர் என்பதை உணர்த்துகின்றது. மேலும் ஞானசம்பந்தர் 'மந்தரம் மன பாவங்கள் மேவிய, பந்தனையவர் தாமும் பகர்வரேல், சிந்தும் வல்வினை செல்வமும் மல்குமால், நந்திநாமம் நமச்சிவாயவே' என்ற பாடலாலும் இக்கருத்தை வலியுறுத்துவார்.

Gnaanasambandan hails from See-Kaazhi town which is rich in all goodness of nature. Men of lofty ideals belonging to highly reputed families live in Kola-k-kaa. Gnaanasambandan has sung this hymn, extolling the grace of Lord Civan of Kola-k-kaa. Those who sing this hymn with sincere devotion, will get rid of their hill-like karma and will have a dignified life.

**Note:** The resultant of deeds get piled up day-by-day. Karma is therefore described as hill-like.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*23ஆம் பதிகம் முற்றிற்று*
End of 23rd Hymn

உ
சிவமயம்

# 24. சீகாழி

## திருத்தலவரலாறு:

முதல் பதிகம் பார்க்க.

# 24. SEE KAAZHI

## THE HISTORY OF THE PLACE

See First Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 24. சீகாழி

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

## 24. SEE KAAZHI

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

பூவார் கொன்றைப் புரிபுன் சடையீசா
காவா யெனநின் றேத்துங் காழியார்
மேவார் புரமூன் றட்டா ரவர்போலாம்
பாவா ரின்சொற் பயிலும் பரமரே. 1

“பூ ஆர் கொன்றைப் புரிபுன்சடை ஈசா!
காவாய்” என நின்று ஏத்தும் காழியார்,
மேவார் புரம்மூன்று அட்டார் அவர் போல்ஆம் -
பாஆர் இன்சொல் பயிலும் பரமரே.

"pU Ar kon2Raip puripun2 caTai IcA!
kAvAy!" en2a nin2Ru Ettum kAziyAr,
mEvAr puram mUn2Ru aTTAr avarpOl Am--
pA Ar in2col payilum paramarE.

**பொருள்:** பாடல்களின் சொல்லும் பொருளுமாகக் கலந்து நிற்கும் பரமன் சிவபிரான். அவரைச் சீகாழிப் பதியினர், ‘கொன்றைப் பூக்கள் பொருந்திய, முறுக்கேறிய செஞ்சடையினை உடைய ஈசா! எங்களைக் காவாய்’ என நின்று துதித்துப் போற்றுகிறார்கள். அந்தச் சிவபிரானே, மனம் ஒன்றாத அரக்கர்களின் மூன்று புரங்களையும் அழித்தார்.

**குறிப்புரை:** இது பாக்களின் சொற்பொருளாய்ப் பயிலும் பரமர் திரிபுரம் எரித்த சீகாழியார் போலும் என்கின்றது. புரிபுன் சடை – புரியாக முறுக்கேறிய புல்லிய சடை. ஏத்தும் – மக்களாலும் தேவர்களாலும் ஏத்தப்படுகின்ற. மேவார் – பகைவர்களாகிய திரிபுராதிகள். பாவார் இன்சொல் – பாக்களில் நிறைந்த இனியசொல், பயிலுதல் – சொற்கள் தோறும் பொருளாய் அமைதல்.

Lord Civan is verily the import of the holy hymns, compact of sweet words; In the days of yore, He burnt down the triforts of the three recalcitrant Asuras; "O Lord whose strands of ruddy matted hair are decked with bunches of cassia flowers! Save us!" Thus is He, of Kaazhi, hailed and implored.

எந்தை யென்றங் கிமையோர் புகுந்தீண்டிக்
கந்த மாலை கொடுசேர் காழியார்
வெந்த நீற்றர் விமல ரவர்போலாம்
அந்தி நட்ட மாடும் மடிகளே.

"எந்தை!" என்று, அங்கு இமையோர் புகுந்து ஈண்டிக்,
கந்த மாலைகொடு சேர் காழியார்,
வெந்தநீற்றர், விமலர் அவர் போல்ஆம் -
அந்தி நட்டம் ஆடும் அடிகளே. 2

"entai!" en2Ru, agku imaiyOr pukuntu INTi,
kantamAlai koTu cEr kAziyAr,
venta nIRRar, vimalar avar pOl Am--
anti naTTam ATum aTikaLE.

**பொருள்:** சிவபிரான் அந்திக் காலத்தில் நடனம் ஆடும் அடிகள் ஆவார். தேவர்கள், 'எந்தையே' என்று அன்போடு அழைப்பர். ஆலயத்துள் புகுந்து குழுமுவர். மணம் மிக்க மாலைகளை அணிவித்தல் பொருட்டுச் சேருவர். அவர்களால் மாலை அணிவிக்கப் பெறும் சிவபிரான்தான் சீகாழிப்பதியார் ஆவார். குற்றமற்றவரான அவரே நன்றாகச் சுட்டு எடுத்த திருநீற்றை அணிந்தவர் ஆவார்.

**குறிப்புரை:** அந்திக்காலத்து நடமாடும் அடிகளே மாலையும் சாந்தும் கொண்டு தேவர்கள் வழிபடும் காழியார்போலாம் என்கின்றது. இமையோர் – தேவர்கள். எந்தை என்று – எம் உயிர்த் தந்தையே என்று. அந்திநட்டம் – சந்தியாதாண்டவம்.

The celestials foregather and hail Lord Civan thus: "O Our Father!" He is of Kaazhi and He indeed is the immaculate holy God. He is decked with fragrant garlands. He smears His body with fully-burnt holy ash. He is the Lord-God who enacts a special dance at the time of the great deluge known as Santyaa Natanam (சந்தியா தாண்டவம்).

**Note:** Santyaa Natanam: This dance is enacted by Civa during the hour of Pradosham for the upliftment of all. This is witnessed by all the heavenly Gods too.

தேனை வென்ற மொழியா ளொருபாகங்
கான மான்கைக் கொண்ட காழியார்
வான மோங்கு கோயி லவர்போலாம்
ஆன வின்ப மாடும் மடிகளே. 3

தேனை வென்ற மொழியாள் ஒருபாகம்
கானமான் கைக் கொண்ட காழியார்
வானம் ஓங்கு கோயிலவர் போல்ஆம்
ஆன இன்பம் ஆடும் அடிகளே.

tEn2ai ven2Ra moziyAL orupAkam,
kAn2amAn2 kaik koNTa kAziyAr,
vAn2am Ogku kOyilavar pOl Am--
An2a in2pam ATum aTikaLE.

**பொருள்:** சிவபிரான் முற்றிய இன்பத்தோடு ஆடுகின்றார். இனிப்பில் தேனை வென்று விளங்கும் மொழிகளைப் பேசுகின்ற உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டவர். காட்டில் திரியும் இயல்பினதாகிய மானைக் கையில் ஏந்தி அவர் விளங்குகிறார். அவரே சீகாழிப்பதியில் உறையும் இறைவன் ஆவார். அவர் வானளாவிய உயர்ந்த திருக்கோவிலில் விளங்குபவர் ஆவார்.

**குறிப்புரை:** இது உமையாளை ஒருபாகம் வைத்து மானைக் கையேந்திய காழியார் இன்பத்தோடு நடமாடும் இறைவர் என்கின்றது. தேனை வென்ற மொழியாள் – வாய்வழிபுகுந்து முன் இனிப்பாய்ப் பின் புளிக்கும் தேனை, செவிவழியாகச் சிந்தையுள் புகுந்து பின்னும் இனிக்கும் மொழி வென்றது என்பது குறிப்பு. கான மான் சாதியடை. இறைவன் கையில் உள்ளது காட்டு மான் அன்று. ஆன இன்பம் ஆடும் – முற்றிய இன்பத்தோடு ஆடுகின்ற. ஆனநெய் என்பதுபோல் பசுவினால்வரும் இன்பமாகிய பால் முதலியனவுமாம்.

**பொருள்:** திருவருள் நலங்கள் யாவும் நிறைந்த சீகாழிப்பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தர். பண்பால் உயர்ந்த குலத்தினரைக் கொண்டது திருக்கோலக்கா. அங்கு விளங்கும் இறைவனை ஞானசம்பந்தர் திருவருள் வென்றியைக் கொண்ட இந்தத் திருப்பதிகப் பாடல்களால் பாடினார். இந்தத் திருப்பாடல்களை ஓதி வழிபட வல்ல வாய்மையாளர்கள், அவர்களுடைய மலைபோன்ற திண்ணிய வினைகள் நீங்கப் பெற்றுச் சிறந்து வாழ்வார்கள்.

**குறிப்புரை:** கோலக்காவைப் பற்றிய இப்பாடல் பத்தையும் வல்லவர் மலைபோன்ற தம்வினையும் மாள ஓங்கிவாழ்வார்கள் என்கின்றது. வலங்கொள்பாடல் – திருவருள் வன்மையைக் கொண்ட பாடல் அல்லது வலமாகக் கொண்ட பாடல் என்றுமாம்.

**குருவருள்:** உலம் – மலை. மலையளவு பாவம் செய்திருப்பினும் நெறியாக இப்பதிகத்தை ஓதினால், மலையளவு வினைகளும் பொடியாக, உயர்ந்த வாழ்வு பெறுவர். முடிவான பேரின்ப வாழ்வு பெறுவர் என்பதை உணர்த்துகின்றது. மேலும் ஞானசம்பந்தர் 'மந்தரம் மன பாவங்கள் மேவிய, பந்தனையவர் தாமும் பகர்வரேல், சிந்தும் வல்வினை செல்வமும் மல்குமால், நந்திநாமம் நமச்சிவாயவே' என்ற பாடலாலும் இக்கருத்தை வலியுறுத்துவார்.

Gnaanasambandan hails from See-Kaazhi town which is rich in all goodness of nature. Men of lofty ideals belonging to highly reputed families live in Kola-k-kaa. Gnaanasambandan has sung this hymn, extolling the grace of Lord Civan of Kola-k-kaa. Those who sing this hymn with sincere devotion, will get rid of their hill-like karma and will have a dignified life.

Note: The resultant of deeds get piled up day-by-day. Karma is therefore described as hill-like.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*23ஆம் பதிகம் முற்றிற்று*
End of 23rd Hymn

உ
சிவமயம்

# 24. சீகாழி

## திருத்தலவரலாறு:

முதல் பதிகம் பார்க்க.

# 24. SEE KAAZHI

## THE HISTORY OF THE PLACE

See First Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 24. சீகாழி

## 24. SEE KAAZHI

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

பூவார் கொன்றைப் புரிபுன் சடையீசா
காவா யெனநின் றேத்துங் காழியார்
மேவார் புரமூன் றட்டா ரவர்போலாம்
பாவா ரின்சொற் பயிலும் பரமரே. 1

"பூ ஆர் கொன்றைப் புரிபுன்சடை ஈசா!
காவாய்" என நின்று ஏத்தும் காழியார்,
மேவார் புரம்மூன்று அட்டார் அவர் போல்ஆம் -
பாஆர் இன்சொல் பயிலும் பரமரே.

"pU Ar kon2Raip puripun2 caTai IcA!
kAvAy!" en2a nin2Ru Ettum kAziyAr,
mEvAr puram mUn2Ru aTTAr avarpOl Am--
pA Ar in2col payilum paramarE.

**பொருள்:** பாடல்களின் சொல்லும் பொருளுமாகக் கலந்து நிற்கும் பரமன் சிவபிரான். அவரைச் சீகாழிப் பதியினர், 'கொன்றைப் பூக்கள் பொருந்திய, முறுக்கேறிய செஞ்சடையினை உடைய ஈசா! எங்களைக் காவாய்' என நின்று துதித்துப் போற்றுகிறார்கள். அந்தச் சிவபிரானே, மனம் ஒன்றாத அரக்கர்களின் மூன்று புரங்களையும் அழித்தார்.

**குறிப்புரை:** இது பாக்களின் சொற்பொருளாய்ப் பயிலும் பரமர் திரிபுரம் எரித்த சீகாழியார் போலும் என்கின்றது. புரிபுன் சடை – புரியாக முறுக்கேறிய புல்லிய சடை. ஏத்தும் – மக்களாலும் தேவர்களாலும் ஏத்தப்படுகின்ற. மேவார் – பகைவர்களாகிய திரிபுராதிகள். பாவார் இன்சொல் – பாக்களில் நிறைந்த இனியசொல், பயிலுதல் – சொற்கள் தோறும் பொருளாய் அமைதல்.

Lord Civan is verily the import of the holy hymns, compact of sweet words; In the days of yore, He burnt down the triforts of the three recalcitrant Asuras; "O Lord whose strands of ruddy matted hair are decked with bunches of cassia flowers! Save us!" Thus is He, of Kaazhi, hailed and implored.

எந்தை யென்றங் கிமையோர் புகுந்தீண்டிக்
கந்த மாலை கொடுசேர் காழியார்
வெந்த நீற்றர் விமல ரவர்போலாம்
அந்தி நட்ட மாடும் மடிகளே.

**"எந்தை!" என்று, அங்கு இமையோர் புகுந்து ஈண்டிக்,**
**கந்த மாலைகொடு சேர் காழியார்,**
**வெந்தநீற்றர், விமலர் அவர் போல்ஆம் -**
**அந்தி நட்டம் ஆடும் அடிகளே.** 2

"entai!" en2Ru, agku imaiyOr pukuntu INTi,
kantamAlai koTu cEr kAziyAr,
venta nIRRar, vimalar avar pOl Am--
anti naTTam ATum aTikaLE.

**பொருள்:** சிவபிரான் அந்திக் காலத்தில் நடனம் ஆடும் அடிகள் ஆவார். தேவர்கள், 'எந்தையே' என்று அன்போடு அழைப்பர். ஆலயத்துள் புகுந்து குழுமுவர். மணம் மிக்க மாலைகளை அணிவித்தல் பொருட்டுச் சேருவர். அவர்களால் மாலை அணிவிக்கப் பெறும் சிவபிரான்தான் சீகாழிப்பதியார் ஆவார். குற்றமற்றவரான அவரே நன்றாகச் சுட்டு எடுத்த திருநீற்றை அணிந்தவர் ஆவார்.

**குறிப்புரை:** அந்திக்காலத்து நடமாடும் அடிகளே மாலையும் சாந்தும் கொண்டு தேவர்கள் வழிபடும் காழியார்போலாம் என்கின்றது. இமையோர் – தேவர்கள். எந்தை என்று – எம் உயிர்த் தந்தையே என்று. அந்திநட்டம் – சந்தியாதாண்டவம்.

The celestials foregather and hail Lord Civan thus: "O Our Father!" He is of Kaazhi and He indeed is the immaculate holy God. He is decked with fragrant garlands. He smears His body with fully-burnt holy ash. He is the Lord-God who enacts a special dance at the time of the great deluge known as Santyaa Natanam (சந்தியா தாண்டவம்).

**Note:** Santyaa Natanam: This dance is enacted by Civa during the hour of Pradosham for the upliftment of all. This is witnessed by all the heavenly Gods too.

தேனை வென்ற மொழியா ளொருபாகங்
கான மான்கைக் கொண்ட காழியார்
வான மோங்கு கோயி லவர்போலாம்
ஆன வின்ப மாடும் மடிகளே. 3

தேனை வென்ற மொழியாள் ஒருபாகம்
கானமான் கைக் கொண்ட காழியார்
வானம் ஓங்கு கோயிலவர் போல்ஆம்
ஆன இன்பம் ஆடும் அடிகளே.

tEn2ai ven2Ra moziyAL orupAkam,
kAn2amAn2 kaik koNTa kAziyAr,
vAn2am Ogku kOyilavar pOl Am--
An2a in2pam ATum aTikaLE.

**பொருள்:** சிவபிரான் முற்றிய இன்பத்தோடு ஆடுகின்றார். இனிப்பில் தேனை வென்று விளங்கும் மொழிகளைப் பேசுகின்ற உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டவர். காட்டில் திரியும் இயல்பினதாகிய மானைக் கையில் ஏந்தி அவர் விளங்குகிறார். அவரே சீகாழிப்பதியில் உறையும் இறைவன் ஆவார். அவர் வானளாவிய உயர்ந்த திருக்கோவிலில் விளங்குபவர் ஆவார்.

**குறிப்புரை:** இது உமையாளை ஒருபாகம் வைத்து மானைக் கையேந்திய காழியார் இன்பத்தோடு நடமாடும் இறைவர் என்கின்றது. தேனை வென்ற மொழியாள் – வாய்வழிபுகுந்து முன் இனிப்பாய்ப் பின் புளிக்கும் தேனை, செவிவழியாகச் சிந்தையுள் புகுந்து பின்னும் இனிக்கும் மொழி வென்றது என்பது குறிப்பு. கான மான் சாதியடை. இறைவன் கையில் உள்ளது காட்டு மான் அன்று. ஆன இன்பம் ஆடும் – முற்றிய இன்பத்தோடு ஆடுகின்ற. ஆனநெய் என்பதுபோல் பசுவினால்வரும் இன்பமாகிய பால் முதலியனவுமாம்.

Lord Civan is concorporate with His consort, Umaa Devi, whose words excel honey in their sweetness; He, the Lord of Kaazhi sports in His hand a sylvan antelope. His abode is the sky-vaulting shrine. He is the Lord-God who enacts the Dance of Bliss.

**Note:** The Aananda Taandavam: The Dance of Bliss. This can be enacted by Lord Civa alone.

மாணா வென்றிக் காலன் மடியவே
காணா மாணிக் களித்த காழியார்
நாணார் வாளி தொட்டா ரவர்போலாம்
பேணார் புரங்க ளட்ட பெருமானே. 4

*மாணா வென்றிக் காலன் மடியவே*
*காணா மாணிக்கு அளித்த காழியார்,*
*நாண் ஆர் வாளி தொட்டார் அவர் போலாம்*
*பேணார் புரங்கள் அட்ட பெருமானே.*

mANA ven2Rik kAlan2 maTiyavE
kANA mANikku aLitta kAziyAr,
nAN Ar vALi toTTAr avar pOl Am--
pENAr puragkaL aTTa perumAn2E.

***பொருள்:*** சிவபிரான், தம்மைப் பேணி வழிபடாத அசுரர்களின் முப்புரங்களை அழித்தவர். மாட்சிமை இல்லாத வெற்றியை உடைய காலனை மடியுமாறு செய்தவர். தம்மை அன்றி வேறொன்றையும் காணாத மார்க்கண்டேய முனிவருக்கு என்றும் பதினாறு ஆண்டோடு விளங்கும் வரத்தை அளித்து அருளியவர். அவரே, சீகாழிப் பதியில் உறையும் இறைவன் ஆவார். அந்தச் சிவபிரானே, முப்புரங்களை அழித்தற்பொருட்டு நாணில் பூட்டிய அம்பைத் தொடுத்தவரும் ஆவார்.

***குறிப்புரை:*** சரந்தொடுத்துப் புரம் அட்ட பெருமான் காலனை உதைத்த காழியார்போலாம் என்கின்றது. மாணாவென்றி – மாட்சிமைப்படாத வெற்றி. காணாமாணிக்கு – இறைவனையன்றி வேறொன்றையும் காணாத பிரமசாரியாகிய மார்க்கண்டருக்கு. பேணார் – பகைவர்.

The bachelor sage Maarkandeya was a staunch devotee of Lord Civan. He would never think or observe in his mind anything else other than Lord Civan. Yaman the god of death came to take away his life at the appropriate time. At that moment the

sage was embracing the Civa Lingam (*சிவலிங்கம்*) which he was worshipping. Without any respect to Lord Civan or to His devotee, Yama plunged forth to take away the life of the saint. Lord Civan of Seekaazhi kicked Yama to death and gave permanent life to Markandeya with sixteen years of age forever. He indeed is the Lord who unleashed the dart from His bow and smote the three hostile citadels of Asuras.

மாடே யோத மெறிய வயற்செந்நெற்
காடே றிச்சங் கீனுங் காழியார்
வாடா மலராள் பங்க ரவர்போலாம்
ஏடார் புரமூன் றெரித்த விறைவரே. 5

*மாடே ஓதம் எறிய, வயல் செந்நெல்*
*காடு ஏறிச் சங்கு ஈனும் காழியார்,*
*வாடா மலராள் பங்கர் அவர் போல்ஆம்*
*ஏடார் புரம்மூன்று எரித்த இறைவரே.*

mATE Otam eRiya, vayal cennel
kATu ERic cagku In2um kAziyAr,
vATA malarAL pagkar avarpOl Am--
ETAr puram mUn2Ru eritta iRaivarE.

**பொருள்:** குற்றம் பொருந்திய அசுரர்களின் புரங்கள் மூன்றையும் எரித்து அருளியவர் சிவபிரான். அருகில் உள்ள கடல்நீரின் அலைகளால் எறியப்பட்ட சங்குகள், வயல்களில் விளைந்த செந்நெற்பயிர்களுடைய செறிவில் ஏறி முத்துக்களை ஈனும். அந்த அளவு சீகாழி செழிப்புள்ளது. அங்குச் சிவபிரான் சீகாழிப் பதியினராக விளங்குகிறார். அவர் வாடாமலர்களைச் சூடி விளங்கும் பார்வதி தேவியைத் தம் திருமேனியின் ஒரு பங்காக உடையவர் ஆவார்.

**குறிப்புரை:** புரம் எரித்த இறைவரே காழியில் உள்ள உமைபாகர் போலும் என்கின்றது. கடல் ஓதத்தால் பக்கங்களில் எறியப்பட்ட சங்குகள் வயலில் உள்ள செந்நெற்காட்டில் ஏறி முத்தீனும் காழி என்றது திருவருள் வாய்ப்பிருக்குமானால் மடுவிலிருந்த ஒன்றும் காழிக் கரையேறிக் கடவுள் கருணையெய்தி இன்பமுறும் என்று குறிப்பித்தவாறு. வாடாமலராள் என்றது தெய்வக் கற்புடையாள் என்பதைத் தெரிவிக்க. ஏடு – குற்றம்.

'Chanks' (seashells) thrown up on to the seashore by the waves, crawl into the paddy fields of Kaazhi and deliver their pearls. The Lord of Kaazhi is concorporate with His consort Paarvathi Devi who forms part of His body frame. She wears on Her head flowers which never fade; He is the Lord-God who burnt the three flawed citadels of Asuras.

கொங்கு செருந்தி கொன்றை மலர்கூடக்
கங்கை புனைந்த சடையார் காழியார்
அங்க ணரவ மாட்டு மவர்போலாஞ்
செங்க ணரக்கர் புரத்தை யெரித்தாரே. 6

கொங்கு செருந்தி கொன்றை மலர்கூடக்
கங்கை புனைந்த சடையார் காழியார்
அம் கண் அரவம் ஆட்டுமவர் போல்ஆம்
செங்கண் அரக்கர் புரத்தை எரித்தாரே.

kongku cerunti kon2Raimalar kUTak
kangkai pun2ainta caTaiyAr, kAziyAr,
am kaN aravam ATTumavar pOl Am--
cegkaN arakkar purattai erittArE.

**பொருள்:** சிவபிரான், சிவந்த கண்களை உடைய அரக்கர் மூவருடைய திரிபுரங்களை எரித்தார். அவர் கோங்கு, செருந்தி கொன்றை மலர் இவற்றுடன் தம்முடைய சடைமுடியில் கங்கையை அணிந்துள்ளார். சீகாழி நகரில் விரும்பி உறைந்த காரணத்தால் அவரே காழியார் எனப்படுவார். அச்சிவபிரான் சீகாழியில் விருப்பமாகத் தங்கி, தாம் அணிந்துள்ள பாம்புகளை உடல் உறுப்புக்களில் வைத்து ஆட்டி வருபவராகவும் உள்ளார்.

**குறிப்புரை:** புரமெரித்த பெருமானே காழியாராகிய பாம்பாட்டி போலும் என்கின்றது. அங்கண் அரவம் ஆட்டுமவர் - அவ்விடத்துப் பாம்பை அவயவங்களிலணிந்து ஆட்டுவர். (அம்கண் - அழகிய கண் கொண்ட அரவு எனலும் கூடும் போலும்).

The Lord of Kaazhi wears on His matted crest Kongku, Serunti and Kondrai flowers, along with the river Ganga. He indeed is the One that causes the snake of bewitching eyes, which dons His body to dance. Lo, He burnt the three citadels of the red-eyed Asuras.

**Note:** Konku: Hopea parviflora
Serunti: Ochua squarrosa
Kondrai: Indian laburnum

கொல்லை விடைமுன் பூதங் குனித்தாடுங்
கல்ல வடத்தை யுகப்பார் காழியார்
அல்ல விடத்து நடந்தா ரவர்போலாம்
பல்ல விடத்தும் பயிலும் பரமரே. 7

கொல்லை விடைமுன் பூதம் குனித்து ஆடும்
கல்லவடத்தை உகப்பார் காழியார்
அல்ல இடத்தும் நடந்தார் அவர் போல்ஆம்
பல்லஇடத்தும் பயிலும் பரமரே.

kollai viTaimun2 pUtam kun2ittu ATum
kallavaTattai ukappAr kAziyAr,
alla iTattum naTantAr avarpOl Am--
palla iTattum payilum paramarE.

**பொருள்:** பரமராகிய சிவபிரான் எல்லா இடங்களிலும் நிறைந்து விளங்கும் பெருமானார் ஆவார். முல்லை நிலத்துக்குரிய ஆன் ஏற்றில் ஊர்ந்து, அதன் முன்னே பூதகணங்கள் வளைந்து நெளிந்து ஆடிச் செல்லக் கல்லவடம் என்றொரு வகைப் பறையின் ஒலியை விரும்புபவர். சீகாழியில் விரும்பி உறைகின்ற காரணத்தால் அவர் காழியார் ஆவார். தம்மை அறிந்து போற்றுநர் அல்லாதார் இருக்கும் இடங்களிலும் தோன்றி, உயர்வு தாழ்வு கருதாது அருள் வழங்கும் இயல்பினர்.

**குறிப்புரை:** கொல்லைவிடை – முல்லைக் கடவுளாகிய திருமாலாகிய விடை. கல்லவடம் – ஒருவகைப்பறை. அல்லவிடத்தும் – தம்மையறிந்து போற்றற்குரியார் அல்லாத இடத்தும். பல்லவிடத்தும் – உயர்வு தாழ்வு கருதாதே பல இடங்களிலும்.

Lord Civan rides the Bull. His Bhutas bend, roll-over and dance before the Bull (Thirumaal) which is characteristic of the Mullai land; He of Kaazhi relishes the resonance of the drum known as Kallavatam. The Supreme One visits all places including the ones where He is not welcome; such indeed is His grace!

**Note:** Mullai: The pastoral region (Forest and adjoining areas).

Kallavatam: A kind of drum.

Thirumaal is considered as the god of forests and adjoining areas.

எடுத்த வரக்க னெரிய விரலூன்றிக்
கடுத்து முரிய வடர்த்தார் காழியார்
எடுத்த பாடற் கிரங்கு மவர்போலாம்
பொடிக்கொ ணீறு பூசும் புனிதரே. 8

எடுத்த அரக்கன் நெரிய, விரல் ஊன்றி,
கடுத்து, முரிய அடர்த்தார், காழியார்;
எடுத்த பாடற்கு இரங்குமவர் போல்ஆம்
பொடிக் கொள் நீறு பூசும் புனிதரே.

eTutta arakkan2 neriya, viral Un2Ri,
kaTuttu, muriya aTarttAr, kAziyAr;
eTutta pATaRku iragkumavar pOl Am--
poTik koL nIRu pUcum pun2itarE.

***பொருள்:*** சிவபிரான், பொடியாக அமைந்த திருநீற்றைப் பூசும் தூயவர். கயிலை மலையை இராவணன் எடுத்தான். அவனுடைய முடிகள் நெரியுமாறு தம் கால் விரலை ஊன்றிச் சினந்தார். அவனுடைய ஆற்றல் அழியுமாறு அடர்த்தவர்; காழியாராகிய சிவபெருமான். ஆனால், இராவணன் எடுத்த பாடலாகிய சாமகானத்துக்கு இரங்கி அருள்செய்தவர் ஆவார்.

***குறிப்புரை:*** இராவணனை நெரித்த காழியார் கானத்திற்கிரங்கும் கருணையாளர் போலாம் என்கின்றது. கடுத்து – கோபித்து. பாடல் – சாமகானம்.

The Immaculate Lord Civan smears His body over with the fine powder of holy (white) ash. He resides in Mount Kailas with His consort Paarvathi. The Raakshasaa king of Lankaa once tried to lift Mount Kailas and put it aside. Civan, the Lord of See Kaazhi pressed the top of Mount Kailas by His toe, whereby the king's head and shoulders got crushed. His energy and egoism faded away. He repented and appeased Lord Civan by singing Saama Gaanam (*சாமகானம்*). The Lord of See Kaazhi was pleased, forgave him and graced him with boons.

**Note:** He did relent: Lord Civa punishes men for their transgression. When sinners rue their conduct, Lord Civan showers His grace on them. Lord Civan is supremely merciful. *'அன்பே சிவமாவ தாரு மறிகிலர்'* - *திருமந்திரம்.*

ஆற்ற லுடைய வரியும் பிரமனுந்
தோற்றங் காணா வென்றிக் காழியார்
ஏற்ற மேறங் கேறு மவர்போலாங்
கூற்ற மறுகக் குமைத்த குழகரே. 9

ஆற்றல் உடைய அரியும் பிரமனும்
தோற்றம் காணா வென்றிக் காழியார்,
ஏற்றம் ஏறு அங்கு ஏறுமவர் போல்ஆம்
கூற்றம் மறுகக் குமைத்த குழகரே.

ARRal uTaiya ariyum piraman2um
tORRam kANA ven2Rik kAziyAr,
ERRam ERu agku ERumavar pOl Am--
kURRam maRukak kumaitta kuzakarE.

**பொருள்:** வாழ்நாளைக் கூறுபடுத்திக் கணக்கிட்டு உயிர் கொள்ளும் இயமன் அஞ்சுமாறு அவனை உதைத்து மார்க்கண்டேயருக்கு அருள் செய்த குழகர் சிவபிரான் ஆவார். ஆற்றல் உடைய திருமாலும், பிரமனும் அவருடைய அடிமுடிகள் தோன்றும் இடங்களைக் காணாதவாறு வானுற ஓங்கிய வெற்றியை உடையவர். அவர் விருப்பத்துடன் காழிப்பதியில் எழுந்தருளியுள்ளார். அவர் மிக உயர்ந்த ஆன் ஏற்றில் ஏறி, உலா வந்து அருள் புரிபவர் ஆவார்.

**குறிப்புரை:** கூற்றங் குமைத்த குழகராகிய காழியார் இடபம் ஏறும் கருணையாளர் போலாம் என்கின்றது. ஆற்றலுடைய என்றது ஆற்றல் இருந்தும் இறைவனைக் காணப் பயன்பெற்றில என்பதைத் தெரிவிக்க. ஏற்றம் ஏறு – உயர்ந்த இடபம்.

The form of the victorious Lord Civan of Kaazhi is unknowable to the mighty Hari and Brahmaa. He indeed is the Rider of the lofty Bull; He is the ever-young One who (reprimanded and) kicked Yamaa to death (and saved the life of Maarkandeya).

பெருக்கப் பிதற்றுஞ் சமணர் சாக்கியர்
கரக்கு முரையை விட்டார் காழியார்
இருக்கின் மலிந்த விறைவ ரவர்போலாம்
அருப்பின் முலையாள் பங்கத் தையரே. 10

பெருக்கப் பிதற்றும் சமணர் சாக்கியர்
கரக்கும் உரையை விட்டார் காழியார்
இருக்கின் மலிந்த இறைவர் அவர் போல்ஆம்
அருப்பின் முலையாள் பங்கத்து ஐயரே.

perukkap pitaRRum camaNar cAkkiyar
karakkum uraiyai viTTAr, kAziyAr,
irukkin2 malinta iRaivar avarpOl Am--
aruppin2 mulaiyAL pagkattu aiyarE.

**பொருள்:** தாமரை மலரின் அரும்பு போன்ற தன பாரங்களை உடைய உமையம்மையை ஒரு பங்காகக் கொண்டுள்ளவர் தலைவராகிய சிவபிரான். காழியில் எழுந்தருளியுள்ள அவர், உண்மையின்றி மிகப் பிதற்றுகின்ற சமணர் சாக்கியர்களின் வஞ்சக உரைகளைக் கொள்ளாதவர். அவரே, இருக்கு வேதத்தில் நிறைந்துள்ள இறைவரும் ஆவார்.

**குறிப்புரை:** உமையொருபாகனாகிய காழியார் இருக்குவேதத்தில் நிறைந்த இறைவர் போலாம் என்கின்றது. பெருக்கப்பிதற்றும் – உண்மையில்லாமல் மிகப் பிதற்றுகின்ற. கரக்கும் உரை – வஞ்சக உரை. அருப்பின் முலையாள் – அரும்பு போன்ற முலையை உடைய பார்வதி.

Lord Civan is untouched by the deceitful words of the Samanaas and the Buddhists - who prattle incoherently. This great Civan is concorporate with His consort Umaa of lotus like breasts; He is indeed the sum and substance of the Rig Veda.

காரார் வயல்சூழ் காழிக் கோன்றனைச்
சீரார் ஞான சம்பந் தன்சொன்ன
பாரார் புகழப் பரவ வல்லவர்
ஏரார் வானத் தினிதா விருப்பரே. 11

கார்ஆர் வயல்சூழ் காழிக் கோன்தனைச்
சீர்ஆர் ஞானசம்பந்தன் சொன்ன
பாரார் புகழப் பரவ வல்லவர்
ஏர்ஆர் வானத்து இனிதா இருப்பரே.

kAr Ar vayal cUz kAzik kOn2tan2aic
cIr Ar njAn2acampantan2 con2n2a
pArAr pukazap parava vallavar
Er Ar vAn2attu in2itA irupparE.

**பொருள்:** கோமானாகிய சிவபிரான், நீர்வளத்தால் கருஞ்சேறு பட்டு விளங்கும் வயல்களால் சூழப்பட்ட சீகாழிப்பதியில் விளங்குகிறார். அவர்மீது, சிறப்புப் பொருந்திய ஞானசம்பந்தன் பாடல்களை அருளிச் செய்துள்ளார். அவற்றை ஓதிப் போற்றித் துதிக்க வல்ல உலகோர், அழகிய வானகத்தில் இனிதாக இருப்பர் (உலகர் போற்றிப் புகழுமாறு பரவ வல்லவர்கள்).

**குறிப்புரை:** காழிநாதனைப்பற்றி ஞானசம்பந்தன் சொன்னவைகளை உலகோர் புகழ உரைக்க வல்லவர்கள் வானத்து இனிதாய் இருப்பர் என்கின்றது. ஏர் – அழகு.

The town of See Kaazhi is prosperous with plenty of water. It is surrounded by black muddy fields. Lord Civan is entempled here on whom the glorious Gnaanasambandan has sung this hymn. Those who recite this hymn drawing aprobation from everybody in the world, will pleasantly abide in heaven.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*24ஆம் பதிகம் முற்றிற்று*
End of 24th Hymn

உ
சிவமயம்

# 25. திருச் செம்பொன் பள்ளி

## திருத்தலவரலாறு:

திருச் செம்பொன்பள்ளி என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம் ஆகும். மயிலாடுதுறையில் இருந்து பேருந்து வசதி உள்ளது. இத்தலம் செம்பொனார் கோயில் என இக்காலத்து வழங்கப் பெறுகின்றது. இந்திரன் விருத்திராசுரனைக் கொல்வதன் பொருட்டுப் பூசித்து வழிபட்டான். அதனால் இந்திரபுரி எனவும் வழங்கப் பெறும். முருகப் பெருமான் தாரகாசுரவதத்தின் பொருட்டுப் பூசித்தமையின் ஸ்கந்தபுரி எனவும் வழங்கும். அகத்தியர் வழிபட்டுப் புருஷார்த்தங்களைப் பெற்றார். பிரமன் பூசித்துப் படைப்புத் தொழில் கைவரப் பெற்றான். இரதி பூசித்துத் தன் பதியாகிய காமனை அடைந்தாள். நாக கன்னியர்கள் வழிபட்டு நல்ல கணவரை அடைந்தனர். இந்திரன், தக்ஷன் யாகத்தில் கலந்து கொண்ட குற்றத்திற்குப் பரிகாரம் தந்தருளிய தலமும் இதுவே. வசிட்டர், திக்பாலகர்கள், காவிரி, சமுத்திரம் முதலியவர்களும் பூசித்துப் பேறு பெற்றனர். வீரபத்திரர் தக்ஷயாகத்திற்காக அவதரித்த தலமும் இதுதான். இத்தலத்திற்கு அருகாமையில் ஓடும் காவிரியில் இட்ட எலும்புகள் பூமரங்களாய் இறைவனுக்குச் சாத்தப் பயன்பெறும். சுவாமி பெயர் சுவர்ணபுரீசுவரர். அம்மை பெயர் சுகந்தவன நாயகி, மருவார்குழலி. தலவிருட்சம் வன்னி. தீர்த்தம் இந்திர தீர்த்தம், காவிரி முதலியன. கிழக்குப் பார்த்த சந்நிதி. அம்மை தென்பாகத்தில் மேற்கு முகமாக எழுந்தருளி இருக்கின்றார்.

### கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றியனவாக 6 கல்வெட்டுக்கள் உள்ளன. அவை 1925இல் படியெடுக்கப் பெற்றுள்ளன. இராஜாதிராஜன் ஆட்சி ஐந்தாமாண்டில் திருவாலங்காடு உடையார்க்கு விளநகரான நித்த விநோத சதுர்வேதி மங்கலத்து விளநாட்டுச் சபையார் நிலம் விட்ட செய்தியை அறிவிப்பது. அதே ஆண்டில் இராஜாதிராஜ வளநாட்டு திருஇந்தளூர் நாட்டு மணற்குடியான உத்தமசோழ சதுர்வேதி மங்கலத்துச் சபையார், ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து ஆக்கூர் நாட்டு ஆக்கூரான இராஜேந்திர சிம்ம சதுர் வேதி மங்கலத்து மேல்பாதி அபிமானமநல்லூரில் அரசற்கு நன்றாக, வழிபட வருவோர்க்கு உணவிற்காக நிலம் வழங்கப் பெற்றுள்ளது. மூன்றாம் குலோத்துங்கன் காலத்து இராஜேந்திர சிம்ம நாடாகிய ஆக்கூரில் தூண்டா விளக்கெரிக்க நாற்பது பொற்காசுக்கு நிலம் வாங்கி உழவரிடம் ஒப்படைக்கப்பட்டது. 6ஆம் ஆண்டில் அரசியலில் சிறந்த செய்தி ஒன்று அறிவிக்கப்படுகிறது. சிங்களவர்களைத் துணைக் கொண்டு பாண்டியர்கள் படையெடுத்து வந்த

படையேறு கலகத்தில் செம்பொன்னார் கோயிலில் உள்ள தேவரடியாரும் கோயில் நியாயத்தாருமாகச் சேர்ந்து எல்லாத் திருவுருவங்களையும் திருவிடைக்கழி இளைய பிள்ளையார் கோயிலில் கொண்டு போய் வைத்துப் பாதுகாத்தனர். மேலும் அவ்வாண்டில் பெரிய புயற்காற்று அடித்திருக்கின்றது. அதனால் தப்பாத வேதியன் திருவாசல் வடக்குச் சுவரும் தேரடி இரண்டும் வீழ்ந்தன. இன்னார் என்று அறியப்படாத இராஜகேசரி வர்மன் ஆறாம் ஆண்டில் பூசைக்கும் பணிக்குமாகத் தலைச் செங்காட்டுச் சபையார் ஒருவனிடமிருந்து நிலம் வாங்கி அரசற்கு நன்றாக அளித்தனர். இதில் இராஜ சுந்தரன் வீதி என்ற ஒரு தெருப்பெயர் குறிப்பிடப்படுகின்றது. சரபோஜிராஜா கலி 4821–இல் செம்பொன்னாதர் கோயிலுக்குத் தலைச்சங்காடு சபையார் கிராமங்களின் நன்மைக்காக ஆண்டுக்கு ஒருமுறை வரியோடுகூட தறிகளின் உற்பத்தியளவையொட்டி ஆயம் வசூலித்துக் கொள்ளவும் காவேரிப்பட்டினம் அய்யாவையனும் தாண்டவராய முதலியாரும் வசூலிப்பாளராயிருக்கவும் ஆணை தரப்பட்டுள்ளது.

### பதிக வரலாறு:

ஆளுடைய பிள்ளையார் திருமயிலாடுதுறை என்னும் மாயூரத்தை வணங்கிப் பதிகம்பாடி வழியில் விளநகரை வணங்கித் திருச்செம்பொன்பள்ளியை அடைந்தார். அங்கு அணிகிளர் சூலக் கைத்தலப் படைவீரராகிய செம்பொன்பள்ளியாரை வணங்கி 'மருவார் குழலி' என்னும் திருப்பதிகத்தைப் பாடினார். இப்பதிகத்தில் மருவார் குழலி என அம்மையின் திருநாமமும், செம்பொன்பள்ளி மேயான் எனச் சுவாமியின் திருநாமமும் அறிவிக்கப்படுகின்றன. ஏழாம் திருப்பாடலில் வரும் 'கையார் சூலமேந்தும் கடவுளை' என்பதைச் 'சூலக் கைத்தலப் படைவீரர்' எனச் சேக்கிழார் பெருமான் சொல்லிக் காட்டுகிறார்.

## 25. THIRU-CH-CHEMPON PALLI

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-ch-chempon-palli is on the south shore of Cauvery in Chola Naadu, accessible by bus from Mayilaaduthurai. This place is called Semponaarkoyil these days. Indhiran offered worship in order to be able to kill the demon Viruththiraasuran. Therefore it is known also as Indhirapuri. Since Lord Murugan worshipped here for successful killing of demon Thaarakaasuran, it is also known as Skandhapuri. Sage Agasthyar offered worship here to obtain the aims of life,

i.e., Purushaarththams. Biraman offered worship and obtained the ability for creation. Rathi got back her husband Kaaman as a result of worshipping here. The Naaga maidens got good husbands by offering worship here. This is also the place where Indhiran got expiation from the sin of having participated in the sacrifice of Dhakshan. Vasittar, Dhikpaalakars, River Cauvery and the Sea all offered worship and got what they wanted. This is where Lord Civa created and commanded Veerabadhrar the to destroy the sacrifice of Dhakshan. Human bones, deposited into the Cauvery river that flows next to the temple, turn into flowering trees which are used for decorating the Lord. The God's name is Suvarnapureesvarar and that of the Mother is Suganthavananaayaki, also called Maruvaarkuzhali. The sacred tree is Vanni and the sacred ford is Indhira Theerththam and Cauvery. The Lord's shrine faces east and the Goddess faces west with the shrine to the south of the Lord's.

**Stone Inscriptions**

There are six inscriptions about this temple and they have been copied in 1925. One of them informs about the grant of land by the assembly of Vilanaadu of Niththavinodha Chathurvedhi Mangalam which was the Vilanagar for the Lord of Thiruvaalangkadu, in the 5th regnal year of Raajaadhiraajan. In the same year, the assembly of Uththama Chola Chathurvedhi Mangalam, Manarkkudi of Thiru Indhaloor Naadu in Raajaadhiraaja Valanaadu, gifted land 'in favour of the king' for feeding the devotees, that land being situated in Abimaananalloor, the upper half of Raajendhirasimma Chathurvedhi Mangalam, Aakkoor of Aakkoor Naadu, in Seyangkonda Chola Mandalam. During the reign of Kuloththungkan III, land in Aakkoor of Raajendhirasimma Naadu was purchased for forty gold pieces and given to farmers for the perpetual lighting of lamps. An interesting piece of political news of the 6th regnal year is revealed. When the Paandiyars made war with Singkalavars for allies, in the ensuing chaos of war, the temple officials and temple dancers (Thevaradiyaar) of Semponnaarkoyil took with them all the icons of deities and deposited them for safekeeping in the Ilaiya Pillaiyaar temple of Thiruvidaikkazhi, and ensured their

safety. In that year there was also a great wind storm from which the north wall of the Thappaadha Vedhiyan Thiruvaasal and the temple car stand collapsed. During the 6th regnal year of an unidentifiable king with the title of Raajakesarivarman, the assembly of Thalaichchengkaadu bought land from someone and gifted it 'in favour of the king', for worship and maintenance of the temple. A street named Raajasundharan Veedhi is noted in this inscription. In the Kali year 4821, Sarafoji Raajaa issued an order to collect for the benefit of the Sempon Naathar temple and the assembly of villages of Thalaichchangkaadu, annual taxes and levies proportionate to the product of the looms. The order authorizes Kaaverippattinam Ayyaavaiyan and Thaandavaraaya Mudhaliaar to collect these taxes.

### INTRODUCTION TO THE HYMN

The saint chanted Adoration hymns to the Lord in Mayiladuthurai and on the way worshipped the Lord in Vila Nahar (விளநகர்), and then proceeded to Thiru-ch-Chempon Palli where he compiled the following songs of glory to Lord Civan who is known here as Swarna Pureeswarar. He is the presiding deity.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 25. திருச் செம்பொன் பள்ளி

## 25. THIRU-CH-CHEMPON PALLI

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

மருவார் குழலி மாதோர் பாகமாய்த்
திருவார் செம்பொன் பள்ளி மேவிய
கருவார் கண்டத் தீசன் கழல்களை
மருவா தவர்மேன் மன்னும் பாவமே. 1

மரு ஆர் குழலிமாது ஓர்பாகம்ஆய்த்
திரு ஆர் செம்பொன்பள்ளி மேவிய
கரு ஆர் கண்டத்து ஈசன் கழல்களை
மருவாதவர்மேல் மன்னும் பாவமே.

maru Ar kuzalimAtu Or pAkam Ay,
tiru Ar cempon2 paLLi mEviya,
karu Ar kaNTattu, Ican2 kazal kaLai
maruvAtavar mEl man2n2um, pAvamE.

**பொருள்:** சிவபெருமான், மணம் பொருந்திய கூந்தலை உடையவளாகிய பார்வதி தேவியை ஒரு பாகமாய் உடையவர். கருநீலம் பொருந்திய கழுத்தை உடைய சிவபிரான், திருமகள் வாழும் செம்பொன்பள்ளி என வழங்கும் திருத்தலக் கோயிலில் எழுந்தருளியுள்ளார். அவருடைய திருவடிகளை வணங்கி, அவற்றைத் தம் மனத்தே பொருந்த வையாதவரைப் பாவங்கள் பற்றும்.

**குறிப்புரை:** இது செம்பொன்பள்ளி ஈசன் கழல்களை அடையாதவரைப் பாவம் அடையும் என்கின்றது. மருவார்குழலி, இத்தலத்து அம்மையின் திருநாமம். வடமொழியில் சுகந்தவனப் பாவை என வழங்குவர். கருவார்கண்டம் – நீலகண்டம். இறைவன் அடைந்தார் இன்னல் தீர்க்க அடையாளமாக நீலகண்டத்தைக் காட்டியும் அவன் கழல்களை மருவாதவரைப் பாவம் மருவும் என்ற நயந்தோன்ற நின்றது.

The impact of sin will ever stay on, in those who do not get attached in adoration to the ankleted Feet of the Lord Civan - This Lord is entempled in Thiru-ch-Chempon Palli. The throat of the Lord is dark (with the venom of churned ocean). This Lord is concorporated with His consort Paarvathi Devi; Her locks are always fragrant. This Lord abides in the grace-abounding Chempon-palli where Goddess Lakshmi also resides.

**Note:** Chempon Palli is currently known as Chemponaar Kovil. The message of this hymn is this.

"Unless one gets freed from the impact of one's karma, one cannot hope for salvation at all. The Lord is infinitely merciful. He shows us the way. It is upto us to travel on it in cheerful godliness". The way is to get attached to the Lord's feet.

*Maruvaar Kuzhali*: The Goddess of the shrine is so named. It means "She of fragrant locks".

வாரார் கொங்கை மாதோர் பாகமாய்ச்
சீரார் செம்பொன் பள்ளி மேவிய
ஏரார் புரிபுன் சடையெம் மீசனைச்
சேரா தவர்மேற் சேரும் வினைகளே. 2

வார் ஆர் கொங்கை மாது ஓர்பாகம்ஆய்ச்
சீர்ஆர் செம்பொன்பள்ளி மேவிய
ஏர் ஆர் புரிபுன்சடை எம் ஈசனைச்
சேராதவர் மேல் சேரும் வினைகளே.

vAr Ar kogkai mAtu OrpAkam Ay,
cIr Ar cempon2 paLLi mEviya,
Er Ar puripun2caTai, em Ican2aic
cErAtavar mEl cErum, vin2aikaLE.

**பொருள்:** சிவபெருமான், கச்சணிந்த தனங்களை உடைய உமையம்மையை ஒருபாகமாக உடையவர். அழகிய முறுக்கேறிய சடைமுடியை உடைய எம் ஈசனாகிய சிவபிரான், சிறப்புப் பொருந்திய செம்பொன்பள்ளியில் எழுந்தருளியுள்ளார். அந்தச் சிவபிரானைச் சென்று வணங்கி இடைவிடாது மனத்தில் நினையாதவர்களிடம் வினைகள் சென்று சேரும்.

**குறிப்புரை:** இதுவுமது. சேராதவர் – இடைவிடாது தியானியாதவர். வினைகள் எனப் பன்மையாற் கூறியது வெடிக்கும் வினைகளாய் இருத்தலின்.

Lord Civan has concorporated in His left frame, His consort Umaa Devi. Her breasts are tightened by the corset. His matted hair is twisted, red and good-looking. This Lord resides at the glorious shrine of Chemponpalli. Bad karmic consequences will its prey on those who do not reach this Lord, by having Him in their minds, and do not offer worship without any break.

வரையார் சந்தோ டகிலும் வருபொன்னித்
திரையார் செம்பொன் பள்ளி மேவிய
நரையார் விடையொன் றூரு நம்பனை
உரையா தவர்மே லொழியா வூனமே. 3

வரை ஆர் சந்தோடு அகிலும் வரு பொன்னித்
திரை ஆர் செம்பொன்பள்ளி மேவிய
நரை ஆர் விடை ஒன்று ஊரும் நம்பனை
உரையாதவர் மேல் ஒழியா ஊனமே.

varai Ar cantOTu akilum varu pon2n2it
tirai Ar cempon2 paLLi mEviya,
narai Ar viTai on2Ru Urum, nampan2ai
uraiyAtavar mEl oziyA, Un2amE.

**பொருள்:** சிவபிரான், செம்பொன்பள்ளியில் எழுந்தருளியுள்ளார். செம்பொன்பள்ளி பொன்னி நதிக் கரையில் அமைந்துள்ளது. மலைகளில் செழித்து வளர்ந்த சந்தன மரங்களோடு, அகில் மரங்களையும் பொன்னி நதி அடித்துக் கொண்டு வந்து, கரையில் இருக்கும் செம்பொன் பள்ளியில் சேர்க்கும். அத்தகைய வளம் பொருந்திய அந்த ஊரில் எழுந்தருளியிருக்கும் சிவபிரான் வெண்ணிறம் பொருந்திய விடை ஒன்றில் ஊர்ந்து வருகிறான். அவனுடைய புகழை உரையாதவர்களைப் பற்றியுள்ள குற்றங்கள் ஒழியா.

**குறிப்புரை:** செம்பொன்பள்ளி நம்பனைப் புகழ்ந்து பாடாதவர், தோத்திரியாதவர் மேலுள்ள ஊனம் ஒழியாதென்கின்றது. வரை – மலை. நரை – வெள்ளை. உரையாதவர் – புகழாதவர்.

Crimes will never leave those who do not chant on the glories of our Lord Civan, the Lord who rides on the white bull. This Lord abides at Chemponpalli on the banks of the billowy Ponni river that flows rolling down carrying in its current sandalwood trees and eaglewood trees from the hills.

**Note:** The Ponni: The Cauvery. The Greeks referred to this river as the golden river.

மழுவா ளேந்தி மாதோர் பாகமாய்ச்
செழுவார் செம்பொன் பள்ளி மேவிய
எழிலார் புரிபுன் சடையெம் மிறைவனைத்
தொழுவார் தம்மேற் றுயர மில்லையே. 4

மழுவாள் ஏந்தி மாது ஓர்பாகம்ஆய்ச்
செழு ஆர் செம்பொன்பள்ளி மேவிய
எழில் ஆர் புரிபுன்சடை எம் இறைவனைத்
தொழுவார் தம்மேல் - துயரம் இல்லையே.

mazuvAL Enti, mAtu Or pAkam Ay,
cezu Ar cempon2 paLLi mEviya,
ezil Ar puripun2caTai, em iRaivan2ait
tozuvAr tammEl--tuyaram illaiyE.

**பொருள்:** செம்பொன்பள்ளியில் எழுந்தருளிய சிவபெருமான் மழுவாள் ஏந்தியும், உமையொரு பாகனாகவும், காட்சி தருகிறான். அந்த ஊர் வளம் பொருந்தியது. மேலும்,

சிவபிரான் அழகு பொருந்தியதும், முறுக்கேறியதுமான சிவந்த சடைமுடியை உடையவனாகவும் இருக்கிறான். அவ்வகைப்பட்ட எம் இறைவனைத் தொழுபவர்களுக்குத் துயரம் இல்லை.

**குறிப்புரை:** தொழுவார்க்குத் துயரமில்லை என்கின்றது. துயரம் இல்லாமைக்கு இரண்டு ஏது. ஒன்று பகையும் பிணியும் தடுத்தல். மற்றொன்று இன்பம் பெருக்கல். இவ்விரண்டையும் பெற இறைவன் மழுவாள் ஏந்திப் பகையும் பிணியும் தடுத்தும், மாதோர் பாகமாய்த் தான் இருந்து இன்பம் பெருக்கியும் காக்கின்றார் என்று உணர வைத்தவாறு.

Those who adore our Lord Civan will have no worry in their life. This Lord Civan with beauteous strands of ruddy and twisted matted hair wields a shining 'mazhu' (axe like weapon). He is concorporate with His consort Umaa Devi and abides at Chempon-palli.

மலையான் மகளோ டுடனாய் மதிலெய்த
சிலையார் செம்பொன் பள்ளி யானையே
இலையார் மலர்கொண் டெல்லி நண்பகல்
நிலையா வணங்க நில்லா வினைகளே. 5

மலையான் மகளோடு உடன்ஆய் மதில் எய்த
சிலை ஆர் செம்பொன் பள்ளியானையே
இலை ஆர் மலர் கொண்டு எல்லிநண்பகல்
நிலையா வணங்க நில்லா வினைகளே.

malaiyAn2 makaLOTu uTan2 Ay matil eyta
cilai Ar cempon2 paLLiyAn2aiyE
ilai Ar malar koNTu, elli naNpakal,
nilaiyA vaNagka, nillA, vin2aikaLE.

**பொருள்:** செம்பொன்பள்ளியில் விளங்கும் சிவபிரான் மலையரையன் மகளாகிய பார்வதி தேவி உடனாய்க் காட்சி தருகிறான். அவன் அசுரர்களின் மும்மதில்களை எய்து அழித்த மலை வில்லை உடையவன். அந்தச் சிவபிரானையே இலைகளையும் மலர்களையும் கொண்டு இரவிலும், நண்பகலிலும், வேறொன்றிலும் மனம் சென்று பற்றாது, அவனிடமே சென்று நிலைத்து நிற்குமாறு வணங்குவார்மேல் வினைகள் நில்லா.

**குறிப்புரை:** இலையும் பூவுங்கொண்டு இரவும் பகலும் வணங்குவார்க்கு வினைகள் இல்லை என்கின்றது. மதில் எய்து மறத்தைக் காட்டினாலும் அதுவும் கருணையாய் முடிந்தது என்பார் மலையான்

மகளோடுடனாய் மதில் எய்த என்றார். எல்லி – இரவு. நிலையா வணங்க – வேறொன்றிலும் மனம் சென்று பற்றாது இறைவனிடத்தேயே நிலைத்து வணங்க.

Lord Civan abides in Thiru-ch-Chempon Palli along with His consort Paarvathi Devi, daughter of the King of Himaalayan mountain. He destroyed the three citadels of Asuraas using the Mountain Meru as His bow. The evil effects of bad karma will not be there on those who worship this Lord day and night with fresh leaves and flowers and having oneness in their minds.

அறையார் புனலோ டகிலும் வருபொன்னிச்
சிறையார் செம்பொன் பள்ளி மேவிய
கறையார் கண்டத் தீசன் கழல்களை
நிறையால் வணங்க நில்லா வினைகளே. 6

அறை ஆர் புனலோடு அகிலும் வரு பொன்னிச்
சிறை ஆர் செம்பொன் பள்ளி மேவிய
கறை ஆர் கண்டத்து ஈசன் கழல்களை
நிறையால் வணங்க நில்லா வினைகளே.

aRai Ar pun2alOTu akilum varu pon2n2ic
ciRai Ar cempon2 paLLi mEviya,
kaRai Ar kaNTattu, Ican2 kazalkaLai
niRaiyAl vaNagka, nillA, vin2aikaLE.

**பொருள்:** பொன்னியாற்றங்கரையில் அமைந்த செம்பொன்பள்ளியில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளான். அந்த ஆறு, பாறைகளில் பொருந்திவரும் நீரில் அகில் மரங்களை அடித்து வந்து கரைசேர்க்கும். அங்கு எழுந்தருளிய சிவபிரான் விடக்கறை பொருந்திய கழுத்தை உடைய ஈசன். அவனுடைய திருவடிகளை மன ஒருமைப்பாட்டோடு வணங்க, வினைகள் நில்லா.

**குறிப்புரை:** மனத்தை ஒரு நெறிக்கண் நிறுத்தும் வன்மையோடு வணங்க வினைநில்லா என்கின்றது. அறையார் புனல் – பாறைகளைப் பொருந்தி வருகின்ற புனல். சிறை – கரை. கறை – விடம். நிறை – மகளிர்க்குள்ள நிறையென்னுங்குணம் போல் மக்களுக்கு அமைய வேண்டிய இவன் அல்லாது இறைவன் இல்லை என்ற உறைப்பு.

The evil effects of bad karma will leave those who in deep devotion hail the ankleted Feet of Lord Civan. His throat holds the venom (of the ocean) and the snake. He is enshrined in Chemponpalli on the banks of the Ponni river that rolls down carrying eaglewood and other forest materials.

**Note:** Rolls uproariously: The Cauvery river bed of the olden times was very vast and its current very forceful.

பையா ரரவே ரல்கு லாளொடும்
செய்யார் செம்பொன் பள்ளி மேவிய
கையார் சூல மேந்து கடவுளை
மெய்யால் வணங்க மேவா வினைகளே. 7

பை ஆர் அரவு ஏர் அல்குலாளொடும்
செய் ஆர் செம்பொன்பள்ளி மேவிய
கை ஆர் சூலம் ஏந்து கடவுளை
மெய்யால் வணங்க மேவா வினைகளே.

pai Ar aravu Er alkulALoTum
cey Ar cempon2 paLLi mEviya,
kai Ar cUlam Entu, kaTavuLai
meyyAl vaNagka, mEvA, vin2aikaLE.

**பொருள்:** சிவபிரான், அரவின்படம் போன்ற அழகிய அல்குலை உடைய உமையம்மையைப் பாகமாக உடையவன். அவன் வயல்கள் சூழ்ந்த செம்பொன்பள்ளியில் வீற்றிருக்கிறான். கையில் பொருந்திய சூலத்தை ஏந்தி விளங்கும் சிவபிரானை, உடம்பால் வணங்க வினைகள் மேவா.

**குறிப்புரை:** மெய்யால் வணங்கினாலும் போதும்; வினை மேவா என்கின்றது. பையார் அரவு – படம் பொருந்திய நாகம். செய் – வயல். மெய்யால் வணங்க – உடம்பால் வணங்க. உண்மையோடு வணங்க என்பாரும் உளர். இப்பொருள் நிலையா வணங்க, நிறையால் வணங்க என்றவிடத்தும் போந்தமையின் இறைவனது எளிமைக் குணந்தோன்ற உள்ளம் பொருந்தாது உடம்பால் வணங்கினாலும் போதும்; வினைகள் மேவா, ஆதலால் பொருந்துமாறு ஓர்க.

Lord Civan abides in Thiru-ch-Chempon Palli, which is surrounded by fertile fields, along with His consort Umaa Devi. Her beautiful waist resembles the hood of a

serpent. He wields the trident in one of His hands. Those who prostrate and offer worship to this Lord will not get affected by the bad effects of their evil karma.

வானார் திங்கள் வளர்புன் சடைவைத்துத்
தேனார் செம்பொன் பள்ளி மேவிய
ஊனார் தலையிற் பலிகொண் டுழல்வாழ்க்கை
ஆனான் கழலே யடைந்து வாழ்மினே. 8

வான் ஆர் திங்கள் வளர்புன்சடை வைத்துத்
தேன் ஆர் செம்பொன் பள்ளி மேவிய
ஊன் ஆர் தலையில் பலி கொண்டு உழல் வாழ்க்கை
ஆனான் கழலே அடைந்து வாழ்மினே.

vAn2 Ar tigkaL vaLar pun2 caTai vaittu,
tEn2 Ar cempon2 paLLi mEviya,
Un2 Ar talaiyil pali koNTu uzal vAzkkai
An2An2 kazalE aTaintu vAzmin2E!

**பொருள்:** சிவபிரான், இனிமை பொருந்திய செம்பொன்பள்ளியில் எழுந்தருளியுள்ளான். அவன் வானத்தில் விளங்கும் பிறைமதியை வளர்ந்துள்ள தன்னுடைய சிவந்த சடைமீது வைத்துள்ளான். சிவபிரான், புலால் பொருந்திய பிரமனுடைய தலையோட்டில் பலியேற்று உழல்வதையே தன் வாழ்வின் தொழிலாகக் கொண்டவன். அந்தச் சிவபிரான் திருவடிகளையே அடைந்து வாழ்வீர்களாக.

**குறிப்புரை:** பலி ஏற்றுண்ணும் வாழ்க்கையான் தாளை வணங்கி உய்யுங்கள் என்கின்றது. வானார் திங்கள் – ஒருகலைப் பிறை; வானில் பொருந்தாதாயினும் பொதுமையின் கூறப்பட்டது.

Lord Civan abides in luxuriant Thiru-ch-Chempon Palli. He has in His red matted hanging hair crescent moon that moves along in the sky. He roams all around with the aim of collecting alms. He uses the skull of Brahmaa to which is flesh smelling, as His begging bowl. Ye folks! Go and worship at the holy feet of this Lord Civan at Thiru-ch-Chempon Palli and thrive well.

காரார் வண்ணன் கனக மனையானும்
தேரார் செம்பொன் பள்ளி மேவிய
நீரார் நிமிர்புன் சடையெந் நிமலனை
ஓரா தவர்மே லொழியா வூனமே. 9

கார் ஆர் வண்ணன், கனகம் அனையானும்,
தேரார் செம்பொன் பள்ளி மேவிய
நீர் ஆர் நிமிர்புன்சடை எம் நிமலனை
ஓராதவர் மேல் ஒழியா ஊனமே.

kAr Ar vaNNan2, kan2akam an2aiyAn2um,
tErAr--cempon2 paLLi mEviya,
nIr Ar nimirpun2 caTai,--em nimalan2ai
OrAtavarmEl oziyA, Un2amE.

**பொருள்:** செம்பொன்பள்ளியில் சிவபிரான் இனிது அமர்ந்துள்ளான். நீலமேகம் போன்ற நிறமுடையோனாகிய திருமாலும், பொன்னிற மேனியனாகிய பிரமனும் தேடிக் காண முடியாதவனாகிய சிவபிரான் அங்கு உள்ளான். குற்றமற்ற எம் இறைவன் கங்கை அணிந்ததும், நிமிர்ந்து கட்டியதுமான சிவந்த முடியை உடையவன். அவனை மனம் உருகித் தியானிக்காதவர்கள் மேல் உளதாகும் குற்றங்கள் நீங்கா.

**குறிப்புரை:** மலர் போன்ற தூய்மையான இறைவனைத் தியானியாதவர்களின் ஊனம் ஒழியா என்கின்றது. கனகம் அனையான் – பொன் நிறமான பிரமன்; ஓராதவர் – மனமுருகித் தியானியாதவர்.

Our Lord Civan who is ever free from bondage abides in Thiru-ch-Chempon Palli. He has in His erect strands of red matted hair the river Ganges. He is beyond perception even for the sky-blue coloured Thirumaal and the golden coloured Brahmaa, in spite of their serious efforts to see Him. Those who cannot offer worship with melted hearts (minds) to this Lord Civan in Thiru-ch-Chempon Palli cannot get rid of their infinities.

Note: The strands of the Lord's matted hair are so bound that they constitute his crown.

மாசா ருடம்பர் மண்டைத் தேரரும்
பேசா வண்ணம் பேசித் திரியவே
தேசார் செம்பொன் பள்ளி மேவிய
ஈசா வென்ன நில்லா விடர்களே. 10

மாசு ஆர் உடம்பர், மண்டைத் தேரரும்,
பேசா வண்ணம் பேசித் திரியவே,
தேசு ஆர் செம்பொன்பள்ளி மேவிய
ஈசா! என்ன, நில்லா, இடர்களே.

mAcu Ar uTampar, maNTait tErarum,
pEcA vaNNam pEcit tiriyavE,
tEcu Ar cempon2 paLLi mEviya
IcA! en2n2a, nillA, iTarkaLE.

**பொருள்:** அழுக்கேறிய உடலினராகிய சமணரும், மண்டை என்ற உண்கலத்தை ஏந்தித் திரிபவர்களாகிய பௌத்தர்களும் பேசக் கூடாதவைகளைப் பேசித் திரிகின்றனர். ஆனால், பக்தர்களான அன்பர்கள் 'ஒளிபொருந்திய செம்பொன்பள்ளியில் மேவிய ஈசா!' என்று கூற, அவர்களுடைய இடர்கள் பலவும் நில்லா.

**குறிப்புரை:** 'ஈசா' என்று வேண்ட, இடர் நில்லா என்கின்றது. மாசார் உடம்பர் – அழுக்கேறிய உடம்பை உடையவர்கள். மண்டை – உண்கலம். பேசா வண்ணம் – பேசக்கூடாதபடி, பேசித்திரிய – வாய்க்கு வந்தவற்றைப் பேசித்திரிய. தேசு – ஒளி.

The Samanars of dirty bodies and the Buddhaas holding begging bowls keep indulging in unbecoming speech. Ignoring their utterances, chant thee thus: "Thou art the only True One indeed, that abides in Chempon-palli". Then all troubles will cease to those who can chant "O! Lord Civa abiding in luxuriant Thiru-ch-Chempon Palli - You are our Supreme Lord" and offer worship to Him.

நறவார் புகலி ஞான சம்பந்தன்
செறுவார் செம்பொன் பள்ளி மேயானைப்
பெறுமா றிசையாற் பாட லிவைபத்தும்
உறுமா சொல்ல வோங்கி வாழ்வரே. 11

நறவு ஆர் புகலி ஞானசம்பந்தன்
செறு ஆர் செம்பொன்பள்ளி மேயானைப்
பெறும் ஆறு இசையால் பாடல் இவை பத்தும்
உறுமா சொல்ல, ஓங்கி வாழ்வரே.

naRavu Ar pukali njAn2acampantan2
ceRu Ar cempon2 paLLi mEyAn2aip
peRum ARu icaiyAl pATal ivaipattum
uRumA colla, Ogki vAzvarE.

**பொருள்:** ஞானசம்பந்தன் தேன்நிறைந்த பொழில்களால் சூழப்பட்ட புகலிப்பதியில் தோன்றியவர். வயல்கள் சூழ்ந்த செம்பொன்பள்ளி சிவபிரான் அருளைப் பெறுமாறு பதிகப்பாடல்களைப் பாடினார். இப்பதிகப் பாடல்கள் பத்தையும் இசையோடு தமக்கு வந்த அளவில் ஓதவல்லவர்கள் ஓங்கி வாழ்வர்.

**குறிப்புரை:** செம்பொன்பள்ளியில் மேவிய இறைவனைப் பெறுதற்காக ஞானசம்பந்தன் சொன்ன பாடல் பத்தும் சொல்லுவார் ஓங்கி வாழ்வார். நறவு – தேன். செறுஆர் – வயல்கள் பொருந்திய. உறுமா சொல்ல – உள்ளத்துப் பொருந்தும்படி சொல்ல.

The town Puhali is surrounded by fertile gardens with a good supply of honey from flowers that are in plenty there. From this place hails Gnaanasambandan. He sang these divine songs to gain the grace of Lord Civan of Thiru-ch-Chempon Palli which is surrounded by fertile fields. Those who can chant these hymns tunefully according to their abilities will prosper magnificently.

**Note:** Singing hymns on the Lord is always an elevating exercise.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*25ஆம் பதிகம் முற்றிற்று*
End of 25th Hymn

உ
சிவமயம்

# 26. திருப்புத்தூர்

## திருத்தலவரலாறு:

திருப்புத்தூர் என்ற திருத்தலம் பாண்டிய நாட்டுத் தலம் ஆகும். தஞ்சை, மதுரை பேருந்து வழித்தடத்தில் உள்ளது. மதுரை, புதுக்கோட்டை, காரைக்குடி, சிவகங்கை ஆகிய ஊர்களில் இருந்து பேருந்து வசதிகள் உள்ளன. இத்தலம் திருப்புத்தூர் எனவும், கோயில் திருத்தளி எனவும் வழங்கும். அப்பர் சுவாமிகள் 'திருப்புத்தூரில் திருத்தளியான் காண்' என அறிவிப்பார்கள். உமா தேவியும், இலக்குமியும் பூசித்துப் பேறு பெற்ற தலம். இறைவன் அம்மை சந்நிதிகளுக்கு இடையில் பைரவர் சந்நிதி இருக்கிறது. பைரவர் சிறப்புடையவர். ஆனந்தக் கூத்தப் பெருமான், சிவகாமியம்மை திருவுருவங்கள் கற்சிலையாலான கண்கவரும் வனப்பின. விஷ்ணுவுக்கும் சந்நிதி உண்டு. சுவாமி பெயர் புத்தூரீசர்; திருத்தளிநாதர். அம்மை சிவகாமி அம்மையார். தீர்த்தம் திருத்தளித் தீர்த்தம். சிவகங்கை முதலியன. தலவிருட்சம் கொன்றை.

### கல்வெட்டு:

அரசியலாரால் 1908ஆம் ஆண்டில் படியெடுக்கப் பெற்ற கல்வெட்டுக்கள் 51 உள்ளன. இறைவன் திருப்பெயர் திருக்கற்றளிப்பட்டாரர், ஸ்ரீதளி பரமேஸ்வரர், திருத்தளி உடைய பரமேஸ்வரர், திருத்தளி ஆண்ட நாயனார் என வழங்கப் பெறுகின்றார். அம்மை திருக்காமக் கோட்டமுடைய நாச்சியார், திருப்பள்ளியறை நாச்சியார் எனவும் வழங்கப்படுகின்றார். இவர்களேயன்றிக் கோயிலுக்குள்ளே கைலாசமுடைய நாயனார், அகஸ்தீஸ்வரம் உடையார் கோயில்களும் இருந்தனவாக அறியப்படுகின்றன. பைரவர் கோயில் மிகப் பிரசித்தமானது. விஜயநகரத்தை அரசாண்ட வீரப்பிரதாப அச்சுததேவ மகாராயர் நன்மைக்காகப் பெரிய ராமப்ப நாயக்கரால் பைரவருக்கு நிலம் அளிக்கப் பட்டதாகத் தெரிகிறது. இதைப்பற்றிய குறிப்புக்கள் விஜய நகர அரசர்கள் கல்வெட்டுக்களில் இதற்கு முந்தியதில் இல்லை.

கைலாசமுடைய நாயனார் கோயில் தேவரடியாளான ஒருத்தி திருநாவுக்கரசு நாயனார் படிவத்தைப் பிரதிட்டை செய்யவும், நைவேத்தியத்திற்காகவும் பொன் அளித்த செய்தியைத் திரிபுவன சக்கரவர்த்தி விக்கிரமபாண்டியன் 12ஆம் ஆட்சியாண்டு கல்வெட்டு ஒன்று காட்டுகின்றது. கோவில் அடியாளுக்கிருந்த அடியார் பக்தி என்னே! திருஞானசம்பந்தர் திருமடமும் திருத்தொண்டத் தொகைத் திருமடமும் சைவ மடம் ஒன்றும் இருந்தன. இவற்றுள்

திருஞான சம்பந்தர் திருமடத்தில் ஸ்ரீகண்ட சிவாச்சாரியார் இருந்ததாகவும் சோழ தேசத்தில் இருந்த நிலத்தை விற்று அவருக்குக் கொடுக்கப் பெற்றது என்றும் அதே கல்வெட்டு அறிவிக்கின்றது. *இக்கல்வெட்டு முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன் (கி.பி. 1214–1235) காலத்தது.*

இவையன்றிக் கிராம தேவதைகளாக அங்காளம்மன் கோயில், நின்ற நாராயணப் பெருமாள் கோயில் இவைகளும் திருப்புத்தூர் கிராமங்களில் இருந்தனவாகக் குறிக்கப் படுகின்றன. பெருமாள் கோயில், திருத்தளி உடையார் கோயிலிலேயே இருந்ததாக குறிக்கப் பெறாமை ஊன்றி அறிதற்குரியது. இத்தலத்து நிகழ்ச்சிகள் யாவும் பாண்டியர் காலத்துக் கல்வெட்டுக்களாகவே பெரும்பாலும் அமைந்து இருக்கின்றன. ஸ்ரீவல்லப பாண்டியன் காலத்தில் இராஜேந்திர சோழ கேரளனான நிச்சலராஜனால் கேரளசிங்க வளநாட்டில் விளக்கிற்காக 50 ஆடு கொடுக்கப் பெற்றிருக்கிறது. அரசனாலேயே 25 பசுக்களும் ஒரு காளையும் விளக்கிற்காகக் கொடுக்கப் பெற்றிருக்கின்றன. சோழ தேசத்தில் கயாமாணிக்க வளநாட்டு மருகல் நாட்டுப் புத்தனூரில் வசித்த ஒருவர் 25 பசுக்களையும் ஒரு காளையையும் விளக்கிற்காகக் கொடுத்தார். காளிங்க ராயன் வேண்டு கோளுக்காக இரண்டு கிராமங்கள் அளிக்கப் பெற்றன. உலக முழுதுடையாள் என்னும் அரசியால் மடைப்பள்ளித் திருப்பணி செய்யப்பெற்றது.

**பராக்கிரம பாண்டியன்:**

இவன் காலத்திய கல்வெட்டுக்கள் 4 உள்ளன. அவற்றால் இவன் ஆட்சி பதினோராம் ஆண்டில் புறமலை நாட்டுப் பொன்னமராவதியான இராஜேந்திர சோழ நிஷதராயன் என்பவனால் திருத்தளி உடையார் கோயில் உற்சவத்திற்காக நெல் அளிக்கப் பெற்றது. திருப்புத்தூர்ச் சபையார்கூடி நரலோக வீரன் சந்தி என்னும் விழாவிற்காக நிலம் விற்றுக் கொடுத்த வரலாறு அறிவிக்கப் பெறுகிறது. ஓர் அந்தணனால் திருப்பள்ளி அறை நாச்சியார் நிவேதனத்திற்காக பொன் அளிக்கப் பெற்றது. உய்ய வந்தான் கண்டி தேவனான காங்கேயன் என்பவனால் கோயிலுக்கு அளிக்கப் பெற்ற சாசனங்கள் பட்டியலாகக் குறிக்கப் பெற்றிருக்கின்றன.

**குலசேகர பாண்டியன்:**

நியமம் என்னும் ஊரான் ஒருவனால் விளக்குத் தண்டுக்காகப் பொன்னும், தேனாற்றுப் பாசன வசதியும் செய்து கொடுக்கப் பெற்றதாக அறியப்படுகின்றது. அதிசயப் பாண்டிய நல்லூரான குட்டக்குடியில் கண்டன் உய்யவந்தானான காங்கேயனால் திருப்பதியம் விண்ணப்பிப்பார்க்கு

இறையிலியாக நிலம் அளிக்கப் பெற்றது. இந்த நிலம், வீரகுணப் பெருமாள் என்பவரால் திருப்புத்தூர் திருத்தளியில் உள்ள கூத்தாடு தேவரான நடராஜ தேவருக்கு அளிக்கப் பெற்றிருந்தது. அதே கோயிலில் உள்ள சைவ மடம் ஒன்றிற்குத் திருவாலந்துறை உடையானான திருக்கொடுங்குன்றம் உடையான் நிஷத ராஜனால் சில வரிகள் வசூலித்துக் கொள்ள உரிமை அளிக்கப் பெற்றது. திருப்புத்தூர் மூலபரிஷத் என்னும் சபையார் மதுரை சென்று கோயில் நிலங்களுக்கு வரிகட்டி வரவேண்டியதற்காக வழிப்பயணச் செலவான ஒரு குறிப்பிட்ட தொகையைத் தள்ளுபடி செய்து கொடுத்திருக்கிறான்.

கைலாச–மலை–நாதர் கோயில் திருவிழாவிற்காகச் சம்வத்சர வாரியமாக வரி தள்ளுபடி செய்தமை குறிக்கப் பெற்றுள்ளது. தயாபஞ்சகம் என்று அழைக்கப்படும் மண்டபத்தில் மூலச்சபையார் கூடிச் சில கொடுக்கல் வாங்கல்கள் செய்த செய்தியும், திருத்தொண்டத் தொகையான் திருமடமும் குறிக்கப் பெறுகின்றன. சோழ பாண்டிய வளநாட்டு குலசேகர நாட்டு பிராமணி ஒருவனால் கோயிலில் நான்கில் மூன்று பங்கு விளக்குகளை ஏற்றப் பொன் வழங்கப் பெற்றது. கண்டியத் தேவரால் திருக்காமக் கோட்டம் உடைய நாச்சியாரை மருந்து சாத்திப் பிரதிட்டை செய்யத் தம்முடைய நிலக்குடி வார உரிமை விற்றுக் கொடுக்கப்பட்ட செய்தி அறியப் பெறுகிறது. கோயில் கணக்கர்களால் தவறிழைக்கப் பெற்ற கோயில் நிலங்களைத் திரும்பவும் அளந்து கட்டி மீண்டும் கோயிலுக்கே உரிமையாக்கியதாக இவனுடைய 23ஆம் ஆண்டு கல்வெட்டு அறிவிக்கிறது. தேவரகண்டன் மனைவியான அவனிமுழுதுடையாளால் திருமஞ்சன தீர்த்தத்திற்காக நான்கு தண்ணீர்ப் பானைகள் அளிக்கப் பெற்றன.

**மாறன் சடையான்:**

இவன் காலத்தில் 40 கழஞ்சு பொன் அளிக்கப் பெற்ற செய்தி அறிவிக்கப் பெறுகிறது. முதல் நாகராஜதேவன் (கி.பி. 985 – 1013) திருப்புத்தூர் சபையார் உறங்காப்புளி அடியில் கூடி ஏதோ தீர்மானித்ததாகத் தெரிகிறது. சிதிலமாதலின் முழுவரலாற்றுக் குறிப்பும் தெரியவில்லை.

**வீரபாண்டியன்:**

திருத்தொண்டத் தொகை திருமடத்திற்குத் திருப்புத்தூர்ச் சபையார் கூடி இறையிலி செய்ததை அறிவிக்கிறது. தயாபஞ்சகம் என்னும் மண்டபத்தைத் திருப்பணி செய்த வரலாறும் குறிக்கப் பெறுகிறது. தேனாற்றுப் பாசனமான கொறைக்குடியான் அவையன் பெரிய நாயனாரான விசயாலய தேவனால், யவனர்கள் ஆக்கிரமித்த கோயிலை வென்று திரும்பவும் பெற்றுப்

புனிதப்படுத்தப் பெற்றது. இது நடைபெற்ற நாள் 2–8–1339 திங்கட்கிழமை என்று எபிகிராபிகா இண்டிகா பகுதி – 2 பக். 138 கூறுகிறது. 2–12–1339இல் அவையன் சொரக்குடி மாளவச் சக்கரவர்த்தியினால் பாடிக்காவல் உரிமைகள் விற்கப் பெற்றன. சில கோயில் நிலங்கள் அருச்சகருக்கு மானியமாக அளிக்கப் பெற்றன.

விஜயநகர அரசரான கிருஷ்ணப்ப தேவமகாராஜன் காலத்து சகம் 1432இல் பாண்டி மண்டலத்து கேரள சிங்க வளநாட்டுக் கிராமங்களான நாரணமங்கலம், காரையூர் என்ற இரண்டையும் நரசிம்ம ராய செல்லப்பரது சந்நிதிக்காகக் கோயிலுக்கு அளித்தான். அவை இரண்டும் இப்பொழுது செல்லப்பாபுரம் என்று வழங்கப்படுகின்றன. அச்சுததேவ மகாராயர் காலத்தில் அருவியூர் நகரமான குலசேகரப் பட்டினத்தான் ஒருவனால் விளக்கிற்காக நிலம் அளிக்கப் பெற்றிருக்கிறது. பெரிய ராமப்ப நாயக்கருக்கு நன்மை உண்டாக வயிரவருக்கு நிலம் அளிக்கப் பெற்றது. கிருஷ்ணராயர் காலத்து வீரநரசிம்மராய நாயக்கரான செல்லப்பர் நன்மைக்காகத் திருப்புத்தூர் உடையான் சிங்கம நாயக்கனால் நிலம் வழங்கப் பெற்றது. நாகம நாயக்கர் மகனான விசுவநாத நாயக்கர் நன்மைக்காக ஒரு கிராமம் (வரகுண புத்தூர்) வழங்கப்பட்டது. இவையன்றி நின்ற நாராயண பெருமாள் கோயிலுக்கும் அங்காளம்மன் கோயிலுக்கும் நிவந்தங்கள் அளிக்கப் பெற்றிருப்பதை அறிவிப்பன மூன்று கல்வெட்டுக்கள். இங்ஙனம் திருப்புத்தூர்க் கோயில் பல பாண்டிய மன்னர்களுடைய சமய உணர்ச்சிக்கு அரணாக இருந்தமை அறிந்து இன்புறுதற்குரியது.

**பதிக வரலாறு:**

பாண்டி நாட்டுப் பதிகள் பலவற்றையும் வணங்கத் திருவுளங்கொண்ட பிள்ளையார் அணியாப்பனூர் அணைந்து பணிந்து பாடியபின் ஏறணிந்த வெல்கொடியார் வீற்றிருந்தருளும் திருப்புத்தூரை அடைந்து சிலநாள் வீற்றிருந்தார்கள். அப்போது 'வெங்கள் விம்மு' என்னும் இத்திருப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 26. THIRU-P-PUTTOOR

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-p-puttoor is in Paandiya Naadu, situated in the bus route from Thanjai to Madurai. It is well connected by bus to Madurai, Pudhukkottai, Kaaraikkudi, Sivagangai etc. The name of the place is Thiruppuththoor and that of the

temple is Thiruththali. Saint Appar Swaami sings of 'Thiruththaliaan of Thiruppuththoor'. Umaa Dhevi and Ilakkumi offered worship here. There is a shrine for Bairavar in between those of the God and the Goddess. This Bairavar is of importance. Stone images of Aanandhak Kooththap Perumaan and Mother Sivakaami are of exquisite beauty. There is also a shrine for Vishnu. The God is known by the names of Puththooreesar and Thiruththalinaathar and the Goddess, Mother Sivakaami. The sacred fords are Thiruththali Theerththam and Sivagangai. The sacred tree is Konrai.

## Stone Inscriptions

Fifty-one inscriptions were copied by the government epigraphists in 1908. The Lord's names are given variously as Thirukkarralippattaarar, Sreethali Paramesvarar, Thiruththali Udaiya Paramesvarar and Thiruththali Aanda Naayanaar. The Mother is called Thiruk Kaamakottam Udaiya Naachchiyaar and as Thirup-palliarai-naachchiyaar. Besides these, shrines for Kailaasamudaiya Naayanaar and Agastheesvaram Udaiyaar are known to have been situated inside the temple. The Bairavar shrine is quite famous. One Periya Raamappa Naayakkar donated land to the Bairavar for the benefit of a ruler of Vijayanagaram, Veerap Pirathaapa Achchutha Theva Mahaaraayar. There have been no prior note of this in inscriptions by Vijayanagaram kings.

One of the dancers (Thevaradiyaar) of the Kailaasamudaiya Naayanaar temple, gifted gold for installing the icon of Saint Thirunaavukkarasu Naayanaar and for food offering. This news is revealed by an inscription of the 12th regnal year of Thirubuvana Chakkaravarthi Vikkirama Paandiyan. How profound was her devotion to the saint! There were monasteries (Mutts) for Thiru-Gnaanasambandar, Thiruththondaththogai, and Saivites. Sreekanta Sivaachchaariyaar is reported to have been at the Thiru-Gnaanasambandar Mutt according to an inscription, which also states that this was given to him after land in Chola Naadu was sold. This inscription belongs to the reign of Sundhara Paandiyan I (1214 - 35 CE).

Apart from these, other temples, one for the guardian deity of the village, Angkaalamman and another for Ninra Naaraayanap Perumall are reported to have been in existence in Thiruppuththoor villages. It may be noted in particular that the Perumaal shrine is not reported to have been inside the Thiruththali Udaiyaar temple. Most episodes pertaining to this temple are reported in the inscriptions of the reign of the Paandiyaars. During the reign of Sree Vallaba Paandiyan, one Raajendhira Chola Keralan Nichchalaraajan, of Kerala Singa Valanaadu gifted 50 sheep for lamps. The king himself made a donation of a bull and 25 cows for lamps.

## Inscriptions of *Paraakkirama Paandiyan*

There are four inscriptions of the period of this king. From these it is known that the following two grants were made: In his 11th regnal year, one Raajendhira Chola Nishaadharaayan of Ponnamaraavathi in Perumalai Naadu gave paddy for celebrating a festival for Thiruththali Udaiyaar temple and the village assembly of Thiruppuththoor raised funds by selling some land to celebrate a festival known as Naralokaveeran Sandhi. An Andhanan gifted gold for food offering to Thiru-p-pallaiarai Naachiyaar. One Uyaavandhaan Kandidhevan Gaangkeyan's grants to the temple are tabulated.

## Inscriptions of Kulasekara Paandiyan

A resident of the village called Niyamam gave gold for the lamp-stand and for bringing water from Thennaru river. Uyyavandhaan Gaangkeyan of Adhisayapp Paandiya Nalloor Kuttakkudi made a land tax-free for the hymnists of the temple. This land had been gifted earlier by a Veeragunap Perumaal to the dancing Lord Nataraaja Thevar of the Thiruppuththoor Thiruththali. A saivite monastery of the temple had been given the right to collect taxes by Nishaadharaajan, known as Thiruvaalandhurai Udaiyaan Thirukkodun-kunramudaiyaan. An assembly known as Thiruppuththoor Moolaparishadh had arranged for payment of specified expenses for travel of Madhurai for paying taxes on the temple lands.

Tax remission as 'Samvathsara Vaariyam' for celebrating the festival of Kailaasamalainaathar temple is noted. Information on the meeting at a pavilion known as Dhayaapanjchakam, of the original assembly to transact trading business is given, as also about Thiruththondaththokaiyaan Thirumadam. A certain Piraamani of Kulasekaranaadu in Chola Paandiya Valanaadu gave gold for lighting three-fourths of the lamps in the temple. One Kandiya Thevar sold his tenancy rights to finance the installation ritual of Thirukkaama Kottamudaiya Naachchiyaar. An inscription of the 23rd regnal year of Kulasekaran reveals that temple lands that were lost due to the transgression by temple accountants were re-measured and reclaimed for the temple. Four water pots were gifted by Avanimuzhudhudaiyaal, wife of Thevarakandan, for use at times of ceremonial bathing of the deities.

**Inscriptions of Maaran Sadaiyan**

During his reign, 40 'kazhanju' gold was given to the temple. An inscription of Naagaraajadevan I (985 - 1013 CE) tells of a meeting of the Thiruppuththoor assembly under an 'ever-awake' tamarind tree to settle some matter, but since this inscription is fragmented the full details could not be determined.

**Inscriptions of Veerapaandiyan**

These give, note of the meeting of the assembly of Thiruppuththoor to remit taxes for the benefit of the monastery of Thiruththondaththokai. The history of renovation of the pavilion known as Dhayaapanjchakam is also recorded. The temple which had been occupied by foreigners (Yavanars) was re-consecrated after it was won from them by Avaiyan Periya Naayanaar Visayaalaya Thevan of Koraikkudiyan. Epigraphica Indica states that this event took place on 2-8-1339 (Page 138 of Section 11). On 2-12-1339, certain village watch rights were sold by Avaiyan Sorakkudi Maalavachchakkaravarthi. Some temple lands were gifted to the priests.

Vijayanagaram king Krishnappa Dheva Mahaaraajan, in Sakam year 1432, gave to the temple two villages, Naaranamangkalam and Kaaraiyoor in the Kerala Singka

Valanaadu of Paandimandalam, for Narasimmaraaya Sellappar shrine. These two villages are now called Sellappaapuram. During the reign of Achchutha Dheva Mahaaraayar a resident of Kulasekarap Pattinam of Aruviyoor, gave land for lamps. Vairavar was gifted land for the benefit of one Periya Raamappa Naayakar. One Thiruppuththoor Udaiyaan Singkama Naayakkan gave land for the benefit of Veera Narasimma Raaya Sellappar during the reign of Krishnaraayar. A village, Varaguna Puththoor, was gifted for the benefit of Visuvanaatha Naayakkar, son of Naagama Naayakkar. Besides, three inscriptions speak of grants to Ninra Naaraayanap Perumaal temple and Angkaalamman temple. Thus it is pleasing to know that the Thiruppuththoor temple was like a fortress in enhancing the religious faith of many Paandiyan kings.

## INTRODUCTION TO THE HYMN

Adoring the Lord at many shrines in the Pandya realm, the Saint arrived at Aniaappanur and eventually came to Thiru-P-Puttoor where he sang the following hymn.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 26. திருப்புத்தூர்

## 26. THIRU-P-PUTTOOR

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

வெங்கள் விம்மு வெறியார் பொழிற்சோலை
திங்க ளோடு திளைக்குந் திருப்புத்தூர்க்
கங்கை தங்கு முடியா ரவர்போலும்
எங்க ளுச்சி யுறையு மிறையாரே. 1

வெங் கள் விம்மு வெறி ஆர் பொழில் சோலை
திங்களோடு திளைக்கும் திருப்புத்தூர்,
கங்கை தங்கும் முடியார் அவர் போலும்
எங்கள் உச்சி உறையும் இறையாரே.

veg kaL vimmu veRi Ar pozil--cOlai
tigkaLOTu tiLaikkum tirupputtUr,
kagkai tagkum muTiyAr avarpOlum--
egkaL ucci uRaiyum iRaiyArE.

**பொருள்:** திருப்புத்தூர் வளம் நிறைந்தது. அங்கு விரும்பத்தக்க தேன் விம்மிச் சுரக்கின்ற, மணம் நிறைந்த சோலைகள் உள்ளன. சோலைகளில் உள்ள மரங்கள் வானளாவ உயர்ந்துள்ளன. உயர்ந்த மரங்கள் அங்குத் தவழும் திங்களோடு பழகித் திளைக்கின்றன. அவ்வளவு வளமுடைய திருப்புத்தூரில் எழுந்தருளிய சிவபெருமானார் கங்கை தங்கிய சடைமுடியினராகக் காட்சி தருகிறார். அவர் எங்கள் உச்சியில் உறையும் இறைவர் ஆவார்.
**குறிப்புரை:** எங்கள் சிரமேல் தங்கிய இறைவன் திருப்புத்தூர் நாதர் என்கின்றது. வெம் கள் – விரும்பத்தக்க தேன். வெறி – மணம். கள்ளுண்ட வெறியால் சோலை தனக்குத் தகாத திங்களோடு திளைக்கின்றதென்று வேறும் ஒரு பொருள் தோன்ற நின்றது காண்க. உச்சி – தலை.

Lord Civan is entempled in the lush town of Thiru-p-puttoor and abides in our minds. The river Ganges stays on His matted hair. The town Thiru-p-puttoor is surrounded by gardens where trees are sky tall. The flowering trees are many in the garden. The flowers emit plenty of honey spreading a pleasing smell all around, besides their fragrance. The trees are so tall that they appear as comrade-in-arms with the crawling moon in the sky.

வேனல் விம்மு வெறியார் பொழிற்சோலைத்
தேனும் வண்டுந் திளைக்குந் திருப்புத்தூர்
ஊன மின்றி யுறைவா ரவர்போலும்
ஏன முள்ளு மெயிறும் புனைவாரே. 2

வேனல் விம்மு வெறி ஆர் பொழில் சோலைத்
தேனும் வண்டும் திளைக்கும் திருப்புத்தூர்,
ஊனம் இன்றி உறைவார் அவர் போலும்
ஏனமுள்ளும் எயிறும் புனைவாரே.

vEn2al vimmu veRi Ar pozil--cOlait
tEn2um vaNTum tiLaikkum tirupputtUr,
Un2am in2Ri uRaivAr avar pOlum--
En2amuLLum eyiRum pun2aivArE.

**பொருள்:** பன்றி வடிவம் எடுத்த திருமால் உலகை அழிக்கத் தொடங்கினார். அதனைக் கண்ட தேவர்கள் அஞ்சினார்கள். சிவபெருமானிடம் தங்களையும் உலகையும் காப்பாற்ற வேண்டும் என்று வேண்டினார்கள். அவர்களுடைய வேண்டுகோளைப் பெருமான் ஏற்றார்.

திருச்சோற்றுத்துறை – தொலையாச்செல்வர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Tolaiyaacchelvar - Tiruchotrutturai, Tamil Nadu**

திருநறையூர்ச்சித்தீச்சரம் (திருநறையூர்) – சித்தநாதேஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Siddhanathesurar Temple - Naraiyur Chiddheecchuram (Tirunaraiyur), Tamil Nadu.**



குரங்கணில்முட்டம் – வாலீஸ்வரர் – தொண்டை நாட்டுத் தலம்

**Valisurar Temple - Kurangkanil Muttam, Tamil Nadu.**



திருவிடைமருதூர் – மகாலிங்கேஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்

**Mahalingesurar Temple - Tiruvidaimaruthur, Tamil Nadu.**

பன்றியை அடக்கி, அதன் பல்லையும் கொம்பையும் தம் மார்பில் அணிந்து கொண்டார். திருப்புத்தூரில் பொழில்கள் அதிகம் உண்டு. அவைகள் வேனிற்காலத்தில் மணத்தை வெளிப்படுத்தும். சோலைகளும் நிறைய உள்ளன. அவைகளில் வாழும் வண்டுகள் தேனை உண்டு திளைத்து ஒலி செய்யும். அவ்வாறு வளம் நிறைந்த திருப்புத்தூரில் சிவபிரான் குறைவின்றி உறைந்துள்ளார்.

***குறிப்புரை:*** இது இறைவன் பன்றியின் முள்ளையும் பல்லையும் புனைபவர் என்கின்றது. வேனல் – வேனிற்காலம். வண்டு, தேன் இவை வண்டின் வகைகள். ஊனம் – குறைபாடு. ஏனம் – ஆதிவராகம். ஆதிவராகம் செருக்குற்று உலகத்தை அழிக்கத் தொடங்கிய காலத்துத் தேவர்கள் வேண்டுகோளுக்கு இரங்கி, அதை அடக்கி, அதனுடைய முள்ளையும், பல்லையும் தம் மார்பில் அணிந்து கொண்டார் என்பது வரலாறு.

Thirumaal took the form of a Hog and started destroying the universe. Devas got frightened and prayed to Lord Civan to protect them from destruction. Lord Civan of Thiru-p-puttoor restrained the action of the Hog, pulled out its teeth and tusks and wore them on His chest. In Thiru-p-puttoor during the summer season, the fragrance of flowers from the fertile gardens and forests spreads alround. The honeybees living in these gardens suck the honey from the flowers to their full satisfaction and joyfully make music. In such a luxuriant Thiru-p-puttoor, our Lord Civan abides without any want.

**Note:** The Hog: The Cosmic Boar. It was an avataar of Vishnu. However, when the boar grew exceedingly haughty, Civa quelled it. He restrained it and wore on His person its tusks and teeth. This stanza once again affirms the supremacy of Lord Civa.

பாங்கு நல்ல வரிவண் டிசைபாடத்
தேங்கொள் கொன்றை திளைக்குந் திருப்புத்தூர்
ஓங்கு கோயி லுறைவா ரவர்போலும்
தாங்கு திங்க டவழ்புன் சடையாரே. 3

பாங்கு நல்ல வரிவண்டு இசை பாடத்,
தேம் கொள் கொன்றை திளைக்கும் திருப்புத்தூர்,
ஓங்கு கோயில் உறைவார் அவர் போலும்
தாங்கு திங்கள் தவழ் புன்சடையாரே.

pAgku nalla varivaNTu icai pATa,
tEm koL kon2Rai tiLaikkum tirupputtUr,
Ogku kOyil uRaivAr avarpOlum--
tAgku tigkaL tavaz pun2caTaiyArE.

**பொருள்:** சிவபிரான், தம்மை அடைக்கலமாக அடைந்த திங்களைத் தவழவிட்ட செந்நிற முடியினை உடையவர். சிவபிரான், தம்முடியின்மிசை தேன்நிறைந்த கொன்றை மலர்களைச் சூடியுள்ளார். நல்ல வரிகளை உடைய வண்டுகள் பக்கங்களில் இருந்து இசைபாடிக் கொண்டே, பெருமான் சூட்டியுள்ள கொன்றை மலரில் திளைக்கின்றன. திருப்புத்தூரில் ஓங்கி உயர்ந்துள்ள கோவிலில் சிவபிரான் எழுந்தருளிய பெருமானார் ஆவார்.

**குறிப்புரை:** இது திங்கள் திகழும் சடையார் திருப்புத்தூர்' நாதர் என்கின்றது. வரிவண்டு இசைபாட, கொன்றை திளைக்கும் திருப்புத்தூர் எனக் கூட்டுக. பாங்கு - பக்கங்களில். கொன்றை மரம் - திருப்புத்தூர் தலவிருட்சம்.

Lord Civan gave protection to the crescent moon who came as a refugee, on His red matted hair. The striped bees sing near His matted hair where cassia flower full of honey abounds and swings to and fro. This Lord Civan is the One who abides in the tall magnificent temple in Thiru-p-puttoor (The cassia is the temple tree of Thiru-p-puttoor).

நாற விண்ட நறுமா மலர்கவ்வித்
தேறல் வண்டு திளைக்குந் திருப்புத்தூர்
ஊறல் வாழ்க்கை யுடையா ரவர்போலும்
ஏறு கொண்ட கொடியெம் மிறையாரே. 4

நாற விண்ட நறுமாமலர் கவ்வித்,
தேறல் வண்டு திளைக்கும் திருப்புத்தூர்,
ஊறல் வாழ்க்கை உடையார் அவர் போலும்
ஏறு கொண்ட கொடி எம் இறையாரே.

nARa viNTa naRumAmalar kavvi,
tERal vaNTu tiLaikkum tirupputtUr,
URal vAzkkai uTaiyAr avar pOlum--
ERu koNTa koTi em iRaiyArE.

**பொருள்:** சிவபிரான், ஆன் ஏற்றுக் கொடியைத் தனதாகக் கொண்டவர். திருப்புத்தூர் வளம்மிக்கது. மணம் வீசுமாறு சிறந்த நறுமலர்கள் மலர்ந்துள்ளன. வண்டுகள் அவைகளைத் தம் வாயால் கவ்வித் தேனை உண்டு திளைக்கின்றன. சிவபிரான் அந்தத் திருப்புத்தூரில் பலகாலம் தங்கிய வாழ்க்கையினை உடையவர் ஆவார்.

***குறிப்புரை:*** நாற – மணம்வீச. விண்ட – மலர்ந்த. வண்டு மலர் கவ்வித் தேறல் திளைக்கும் திருப்புத்தூர் என்க. ஊறல் வாழ்க்கை – ஊறிப்போன வாழ்க்கை.

Our Lord Civan whose flag sports the insignia of the Bull resides in Thiru-p-puttoor. Here honeybees seizing by their mouth the large and fragrant flowers, suck the honey and swing to and fro. In this luxuriant Thiru-p-puttoor, our Lord Civan abides in Eternity.

இசைவி ளங்கு மெழில்சூழ்ந் தியல்பாகத்
திசைவி ளங்கும் பொழில்சூழ் திருப்புத்தூர்
பசைவி ளங்கப் படித்தா ரவர்போலும்
வசைவி ளங்கும் வடிசேர் நுதலாரே. 5

***இசை விளங்கும் எழில் சூழ்ந்து, இயல்புஆகத்***
***திசை விளங்கும் பொழில் சூழ் திருப்புத்தூர்,***
***பசை விளங்கப் படித்தார் அவர் போலும் -***
***வசை விளங்கும் வடி சேர் நுதலாரே.***

icai viLagkum ezil cUzntu, iyalpu Akat
ticai viLagkum pozil cUz tirupputtUr,
pacai viLagkap paTittAr avar pOlum--
vacai viLagkum vaTi cEr nutalArE.

***பொருள்:*** திருப்புத்தூர் புகழ் வாய்ந்தது. அது புகழால் விளக்கம் பெற்றது. இயல்பாக அழகு சூழ்ந்து விளங்குவது. நான்கு திசைகளிலும் பொழில்கள் சூழ்ந்தது. இவ்வகைப்பட்ட திருப்புத்தூரில் சிவபிரான் எழுந்தருளியுள்ளார். கங்கையாகிய பெண் விளங்கும் அழகிய சென்னியை உடையவர். அவர், தம்மை வழிபடுவோர்க்கு அன்பு வளருமாறு பழகும் பெருமானார் ஆவார்.

***குறிப்புரை:*** இசை – புகழ். பசை – அன்பு. படித்தார் – பழகுபவர். வசை – பெண்; ஈண்டு கங்கை. வடி – அழகு. நுதல் – சென்னி. 'குடுமி களைந்த நுதல்' என்ற புறப்பகுதியும் இப்பொருளாதல் ஓர்க.

Lord Civan holds the river Ganges on His lovely matted head. Thiru-p-puttoor is by itself a glorious and imposing town having lush gardens on all its four sides. Lord Civan of this place lets His devotees, who worship Him, expand their devotion towards Him and to augment the love of others to.

**Note:** Vasai: Woman. Here the reference is to the Gangaa.

வெண்ணி றத்த விரையோ டலருந்தித்
தெண்ணி றத்த புனல்பாய் திருப்புத்தூர்
ஒண்ணி றத்த வொளியா ரவர்போலும்
வெண்ணி றத்த விடைசேர் கொடியாரே. 6

வெண் நிறத்த விரையோடு அலர் உந்தித்,
தெண் நிறத்த புனல் பாய் திருப்புத்தூர்,
ஒண் நிறத்த ஒளியார் அவர் போலும்
வெண் நிறத்த விடை சேர் கொடியாரே.

veN niRatta viraiyOTu alar unti,
teN niRatta pun2al pAy tirupputtUr,
oN niRatta oLiyAr avar pOlum--
veN niRatta viTai cEr koTiyArE.

**பொருள்:** திருப்புத்தூர் தண்ணீர் வளம் மிக்கது. அங்குள்ள மலர்கள் வெள்ளிய நிறம் உடையனவாய் உள்ளன. அவை மணம் பொருந்தியவை. அங்குத் தெளிந்த தன்மை உடையதாய் உள்ள தண்ணீர், அந்த மலர்களை அடித்துக் கொண்டு பாயும் வளம் வாய்ந்தது. அந்தத் திருப்புத்தூரில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் பேரொளிப் பிழம்பானவர். இவர் வெண்மை நிறமுடைய விடை உருவம் எழுதிய கொடியை உடையவரும் ஆவர்.

**குறிப்புரை:** வெண்ணிறத்த விரையோடு அலர் உந்தி – வெண்மையாகிய நிறமுடையவையாய் மணம் பொருந்திய மலர்களை அடித்துக்கொண்டு. ஒள்நிறத்தஒளியார் – பேரொளிப் பிழம்பானவர்.

Lord Civan sports the white bull on His flag as His insignia. He is enshrined in Thiru-p-puttoor. Here flows the river with crystal clear water carrying sweet smelling white flowers. Lord Civan residing here is our Supreme Lord radiating white bright light all around.

Note: Civa is always hailed as the white effulgent light.

நெய்த லாம்பல் கழுநீர் மலர்ந்தெங்கும்
செய்கண் மல்கு சிவனார் திருப்புத்தூர்த்
தையல் பாக மகிழ்ந்தா ரவர்போலும்
மையு ணஞ்ச மருவு மிடற்றாரே. 7

நெய்தல், ஆம்பல், கழுநீர், மலர்ந்து எங்கும்
செய்கள் மல்கு சிவனார் திருப்புத்தூர்த்,
தையல் பாகம் மகிழ்ந்தார் அவர் போலும்
மையுண் நஞ்சம் மருவும் மிடற்றாரே.

neytal, Ampal, kazunIr, malarntu egkum
ceykaL malku civan2Ar tirupputtUr,
taiyal pAkam makizntAr avar pOlum--
maiyuN nanjcam maruvum miTaRRArE.

**பொருள்:** திருப்புத்தூர் வயல்வளம் நிறைந்தது. அங்கு நெய்தல், ஆம்பல், செங்கழுநீர் ஆகிய மலர்கள் வயல்களில் எங்கும் மலர்ந்து, நிறைந்து விளங்கும். சிவபிரான், கருநீலம் பொருந்திய நஞ்சு மருவும் கழுத்தை உடையவர். இவர் திருப்புத்தூரில் உமையொரு பாகம் மகிழ்ந்த சிவனாய் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** நீலகண்டராயும் நேரிழைபாகம் மகிழ்ந்தார் என்கின்றது. மைஉண்நஞ்சம் – கரியவிடம்.

Lord Civan's neck is dark blue in colour due to swallowing the oceanic poison. He is happily enshrined along with His consort Umaa Devi in Thiru-p-puttoor. This town is surrounded by fields where blossomed flowers such as Neithal, Aambal and Chengazhuneer (*நெய்தல், ஆம்பல் மற்றும் செங்கழுநீர்*) are to be seen everywhere in the field.

**Note:** Neithal: Water Lilly.
Aambal: Lilly
Kazhuneer: Purple Blue Water Lilly.

கருக்க மெல்லாங் கமழும் பொழிற்சோலைத்
திருக்கொள் செம்மை விழவார் திருப்புத்தூர்
இருக்க வல்ல விறைவ ரவர்போலும்
அரக்க னொல்க விரலா லடர்த்தாரே. 8

கருக்கம் எல்லாம் கமழும் பொழில் சோலைத்
திருக் கொள் செம்மை விழவு ஆர் திருப்புத்தூர்
இருக்க வல்ல இறைவர் அவர் போலும்
அரக்கன் ஒல்க விரலால் அடர்த்தாரே.

karukkam ellAm kamazum pozil--cOlait
tiruk koL cemmai vizavu Ar tirupputtUr
irukka valla iRaivar avar pOlum--
arakkan2 olka viralAl aTarttArE.

**பொருள்:** திருப்புத்தூர் செல்வம் நிறைந்த செம்மையாளர்கள் வாழும் இடம். திருவிழாக்கள் பல நிகழும் இடம். இங்குள்ள சிவபெருமான், இராவணனாகிய அரக்கனைக் கால்விரலால் தளர அடர்த்தவர். அவர் திருப்புத்தூரில் எழுந்தருளி இருக்கும் வல்லவரான இறைவராவார்.

**குறிப்புரை:** இராவணனின் ஆணவத்தை அழித்த இறைவன் திருப்புத்தூரில் இருப்பவன் என்கின்றது. கருக்கம் – மேகம். அரக்கன் – இராவணன். ஒல்க – வருந்த.

Lord Civan of Thiru-p-puttoor crushed the head and shoulders of the King of Lanka by pressing His toe at the top of Mount Kailas. Thiru-p-puttoor is surrounded by flower gardens and forests full of various flowering trees. The fragrance of these flowers fills the entire sky of this affluent town. People of high rectitude live here. A good number of festivals take place in this town now and then. In such a place (Thiru-p-puttoor) the able Lord Civan abides and gracing all.

**Note:** Karukkam: It means (i) cloud and (ii) ilanthai tree. Translation conveys the first meaning. If the second meaning is preferred, the idea conveyed is that Thiru-P-Puttur is rich in jujube trees.

மருவி யெங்கும் வளரும் மடமஞ்ஞை
தெருவு தோறுந் திளைக்குந் திருப்புத்தூர்ப்
பெருகி வாழும் பெருமா னவன்போலும்
பிரமன் மாலு மறியாப் பெரியோனே. 9

*மருவி எங்கும் வளரும் மடமஞ்ஞை
தெருவுதோறும் திளைக்கும் திருப்புத்தூர்ப்
பெருகி வாழும் பெருமான் அவன் போலும்
பிரமன் மாலும் அறியாப் பெரியோனே.*

maruvi egkum vaLarum maTamanjnjai
teruvu tORum tiLaikkum tirupputtUrp
peruki vAzum perumAn2 avan2pOlum--
piraman2 mAlum aRiyAp periyOn2E.

**பொருள்:** திருப்புத்தூரில், எங்கும் பொருந்தியனவாய் வளரும் இளமயில்கள் தெருக்கள் தோறும் உலவிக் களிக்கின்றன. அங்கு எழுந்தருளியுள்ள இறைவன், பிரமனும் திருமாலும் அறியமுடியாத பெரியோன் ஆவான். அவன் திருப்புத்தூரில் பெருமை பெருகியவனாய் வாழும் பெருமான் ஆவான்.

**குறிப்புரை:** பிரமன் மால் அறியாப் பெருமான் திருப்புத்தூரில் பெருகி வாழ்கின்றான் என்கின்றது. மஞ்ஞை – மயில்கள்.

Lord Civan is the Great One unperceivable to Brahmaa and Vishnu. He is Omnipresent. He is the Supreme One abiding in Thiru-p-puttoor where pea fowls move about joyfully in the streets. In such a place Lord Civan abides in ever ascending glory.

கூறை போர்க்குந் தொழிலா ரமண்கூறல்
தேறல் வேண்டா தெளிமின் றிருப்புத்தூர்
ஆறு நான்கு மமர்ந்தா ரவர்போலும்
ஏறு கொண்ட கொடியெம் மிறையாரே. 10

கூறை போர்க்கும் தொழிலார், அமண், கூறல்
தேறல் வேண்டா; தெளிமின்! திருப்புத்தூர்,
ஆறும் நான்கும் அமர்ந்தார் அவர் போலும்
ஏறு கொண்ட கொடி எம் இறையாரே.

kURai pOrkkum tozilAr, amaN, kURal
tERal vENTA; teLimin2! tirupputtUr,
ARum nAn2kum amarntAr avarpOlum--
ERu koNTa koTi em iRaiyArE.

**பொருள்:** மேல் ஆடையைப் போர்த்துத் திரிதலைத் தொழிலாகக் கொண்ட பௌத்தர், சமணர் ஆகியோருடைய உரைகளை நம்பாதீர்கள். ஆனேறு எழுதிய கொடியினை உடையவராய்த் திருப்புத்தூரில் நான்கு வேதங்களாகவும், ஆறு அங்கங்களாகவும் விளங்கும் சிவபெருமானைத் தெளிமின்கள்.

**குறிப்புரை:** இது இடபக்கொடி கொண்ட இறைவர் நான்கு வேதத்தினும் ஆறங்கத்தினும் அமர்ந்திருக்கின்றார் என்கின்றது. கூறை – ஆடை. தேறல்வேண்டா – தெளியவேண்டா. ஆறும் நான்கும் அமர்ந்தார் – வேத அங்கங்கள் ஆறினையும் வேதங்கள் நான்கினையும் விரும்பியவர். ஆறுநான்கும் என்று ஒரு சொல்லாகக் கொண்டு நிரலே நிறுத்தி, அறுபத்துநான்கு கலை ஞானங்களில் அமர்ந்தார் எனவுங் கொள்ளலாம். அன்றி ஆறாறாக அடுக்கப்பட்டு வருகின்ற அகம், அகப்புறம், புறம், புறப்புறம் ஆகிய சமயங்களின் பொருளாய் அமர்ந்திருப்பவர் என்றுமாம்.

Our Lord Civan's flag sports the insignia of the Bull; The Lord of Thiru-P-Puttoor is indeed the six angaas and the four vedaas; Ye folks! ignore the utterances of the heavily - clad Budhists and the (naked) Samanars and be clear in your minds that Lord Civan is the only one Supreme Lord of ours.

**Note:** The Six Angas: (1) Mantraa; (2) Vyakaranam (Grammar); (3) Nikandu (Glossary); (4) Chhandopisitam (Metres); (5) Niruktam (Etymology); and (6) Jyotisham (Astronomy).

நல்ல கேள்வி ஞான சம்பந்தன்
செல்வர் சேட ருறையுந் திருப்புத்தூர்ச்
சொல்லல் பாடல் வல்லார் தமக்கென்றும்
அல்ல றீரு மவல மடையாவே. 11

நல்ல கேள்வி ஞான சம்பந்தன்
செல்வர் சேடர் உறையும் திருப்புத்தூர்ச்
சொல்லல் பாடல் வல்லார் தமக்கு என்றும்
அல்லல் தீரும்; அவலம் அடையாவே.

nalla kELvi njAn2acampantan2
celvar cETar uRaiyum tirupputtUrc
collal pATal vallAr tamakku en2Rum
allal tIrum; avalam aTaiyAvE.

**பொருள்:** செல்வரும், உயர்ந்தவருமான சிவபெருமான் உறையும் திருப்புத்தூரை, நன்மை தரும் வேதங்களை உணர்ந்த ஞானசம்பந்தன் அடைந்து, வழிபட்டுச் சொல்லிய பத்துப் பாடல்களையும் ஓத வல்லவர்களுக்குத் துன்பங்கள் நீங்கும். எக்காலத்திலும் அவர்களை அவலம் அடையா.

**குறிப்புரை:** இது இப்பாடல் பத்தும் வல்லார்க்கு அல்லல் தீரும் என்கின்றது. நல்லகேள்வி – நல்ல கேள்வியால் விளைந்த அறிவு. அன்றிக் கேள்வி என்பதனைச் சுருதி என்பதன் மொழி பெயர்ப்பாகக் கொண்டு வேதம் வல்ல ஞானசம்பந்தன் என்றுமாம். சேடர் – எல்லாம் தத்தம் காரணத்துள் ஒடுங்க, அவை தமக்குள் ஒடுங்கத், தாம் ஒன்றினும் ஒடுங்காது, ஒடுங்கியவைகள் மீண்டும் உதிக்க மிச்சமாய் இருப்பவர்; பெருமையையுடையவர் என்றுமாம். அல்லல் – துன்பம். அவலம் – வறுமை.

Gnaanasambandan is blessed with profound knowledge of the great Vedas. He went to Thiru-p-puttoor, worshipped the Lord Civan therein and sang this hymn. Those who can chant these songs will stand freed from all troubles; grief will not touch them.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*26ஆம் பதிகம் முற்றிற்று*
End of 26th Hymn

உ
சிவமயம்

# 27. திருப்புன்கூர்

## திருத்தலவரலாறு:

திருப்புன்கூர் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். வைத்தீஸ்வரன் கோயிலில் இருந்து 3 கி.மீ. தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி உண்டு. இது புன்க மரத்தைத் தலவிருட்சமாகக் கொண்டதாகலின் திருப்புன்கூர் எனப்படுவதாயிற்று. வடமொழியில் காஞ்சாரண்யம் என வழங்கும். இத்தலத்திற்குப் பக்கத்தில் உள்ள ஆதனூரில் அவதரித்த திருநாளைப்போவார் என்னும் நந்தனார் பக்திக்காக நந்தியை விலகும்படிச் செய்த தலம். இவர் வெட்டிய திருக்குளம் ஒன்று இப்பொழுதும் இவ்வூரில் இருக்கின்றது. இதற்கு வடக்கே உள்ள திருப்பெருமங்கலத்தில் வசித்த ஏயர்கோன் கலிக்காம நாயனார் திருக்கோயிலைப் புதுக்கிப் பல திருப்பணிகளைச் செய்திருக்கிறார். கலிக்காமர் வேண்டுகோளுக்காக இறைவன் 12 வேலி நிலங்களைப் பெற்றுக்கொண்டு மழை பெய்வித்து உலகை உய்வித்தார். இதனைச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் பதிகத்து 'வையகம் முற்றும் மாமழை' என்ற பாடலால் குறிப்பிடுகின்றார்கள். இச்செய்தி கோயில் திருப்பண்ணியர் விருத்தத்திலும் கூறப்பெறுகிறது. இறைவன் பெயர் சிவலோக நாதர்; இறைவி பெயர் சொக்க நாயகி. தீர்த்தம் கணபதி தீர்த்தம். விருட்சம் புன்க மரம்.

## கல்வெட்டு:

411 முதல் 415 வரையில் உள்ள ஐந்து கல்வெட்டுக்கள் உள்ளன. 1918இல் படியெடுக்கப் பெற்றன. இறைவன் சிவலோகம் உடைய நாதர் என்று வழங்கப் பெறுகின்றார். இராஜராஜன் ஆட்சி 11ஆம் ஆண்டில் சிவலோகமுடையார் கோயிலிலேயே வடக்கு இரண்டாம் பிராகாரத்து விக்கிரம சோழீச்சுரமுடைய நாயனார் கோயிலைக்கட்ட விக்கிரம சோழனான வயநாட்டரையன் மருதூர் உடையான் நிலமளித்து இருக்கிறான். கோப்பெருஞ்சிங்கன் 2ஆம் ஆண்டில் இத்தலம் இராஜாதிராஜ வளநாட்டு திருவாலிநாட்டுத் திருப்புன்கூர் எனக் குறிப்பிடப் பெற்றுள்ளது. பாண்டிய குலாசனி வளநாட்டுக் கீழையூர் நாட்டுக் குறிச்சியான் ஒருவன் சிவலோகமுடைய மாதேவர் திருமஞ்சனத்திற்கும் திருமாலைக்குமாக நிலமளித்து இருக்கிறான். ஏனைய கல்வெட்டுக்கள் விளக்கிற்காக நிலமளித்த செய்தியை அறிவிப்பன.

**பதிக வரலாறு:**

திருநின்றியூர், திருநீடூர் என்னும் தலங்களை வணங்கிக் கொண்டு திருப்புன்கூரை அடைந்த பிள்ளையார் 'முந்தி நின்ற' என்னும் பதிகத்தைப் பாடியருளினார். திருப்புன்கூர்ச் சிவலோகநாதர் கூத்தப் பெருமான் கோலத்தில் காட்சி கொடுத்திருக்கலாம். இப்பதிகம் முழுவதும் அடிகள் என்றே குறிப்பிடுகின்றார். மேலும், மாதொரு பாகன் என்ற வழக்கும் காணப் பெறவில்லை. வாய்மூரில் அவ்வாறு காட்சி கொடுத்துள்ளார். அதனை ஒன்பதாம் திருப்பாட்டில் 'ஆடவல்ல அடிகள் அவர்போலும்' என்று குறிப்பிடுகிறார். இதனைச் சேக்கிழார் பெருமான் 'திருப்புன்கூர் நண்ணி ஆடிய பாதம் இறைஞ்சி அருந்தமிழ் பாடியமர்ந்தார்' என விளக்கிக் காட்டுகிறார்.

## 27. THIRU-P-PUN-KOOR

**THE HISTORY OF THE PLACE**

This sacred place is to the north of river Cauvery in Chola Naadu. It is 3 km away from Viaththeesvaran Koyil. It is accessible by bus. As the sacred tree of this temple is the 'Punka' tree, the place came to be called Thiruppunkoor. In Sanskrit it is known as Kaanchaaranyam. It is in this temple that Nandhanaar, who was born in the nearby village of Aadhanoor and is also known as Thirunaalaippovaar, through his intense devotion made the nandhi (divine bull) move out of the way so that he can have the vision of the Lord. There is a tank here that was caused to be dug by him. Eyarkon Kalikkaama Naayanar, who lived in Thirupperumangkalam to the north of this place, renovated the temple and has performed many services for the temple. God, granting Kalikkaamar's wish, accepted 12 'veli' of lands and caused it to rain and saved the country. Saint Sundharamoorthi Swaami sings of this episode in the verse "vaiyakam murrum maamazhai'. This episode is also mentioned in the Thiruppanniyar Viruththam. The Lord's name is Sivalokanaathar and that of the Goddess is Chokkanaayaki. The sacred ford is Ganapathi Theerththam and the sacred tree is 'Punka'.

**Stone Inscriptions**

Five inscriptions, numbered from 411 to 415, are extent and they were copied in 1918. The Lord is called Sivalokamudaiyanaathar in the inscriptions. Vikkirama-chozhan Vayanaattaraiyan Marudhoor Udaiyaan gave land to build a shrine for Vikkirama Chozheechchuramudaiya Naayanar in the north second piraakaaram in the Sivalokamudaiyaar temple itself, during the 11th regnal year of Raajaraajan. During the second regnal year of Kopperunjchingan, this temple is referred to as Thiruppunkoor of Thiruvaalinaadu in Raajaadhiraaja Valanaadu. One Kurichchiyaan of Keezhaiyoor of Thiruvaalinaadu in Paandiya Kulaachani Valanaadu gifted land for the ceremonial bathing and flower garlands for Sivalokamudaiya Maadhevar. Other inscriptions give information on the gift of lands for lamps.

**INTRODUCTION TO THE HYMN**

After hailing the Lord at Thiru-Nindriyoor and Needoor, the Saint arrived at Thiru-P-Pun-koor where he sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 27. திருப்புன்கூர்

## 27. THIRU-P-PUN-KOOR

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

முந்தி நின்ற வினைக ளவைபோகச்
சிந்தி நெஞ்சே சிவனார் திருப்புன்கூர்
அந்த மில்லா வடிக ளவர்போலும்
கந்த மல்கு கமழ்புன் சடையாரே. 1

முந்தி நின்ற வினைகள் அவை போகச்
சிந்தி, நெஞ்சே! சிவனார் திருப் புன்கூர்;
அந்தம் இல்லா அடிகள் அவர் போலும் -
கந்தம் மல்கு கமழ் புன்சடையாரே.

munti nin2Ra vin2aikaL avai pOkac
cinti, nenjcE! civan2Ar tirup pun2kUr;
antam illA aTikaL avar pOlum--
kantam malku kamaz pun2 caTaiyArE.

**பொருள்:** முற்பிறவிகள் பலவற்றில் செய்த ஆகாமிய வினைகளும் சஞ்சிதமும் ஆகியவற்றுள் உழன்று பக்குவப்பட்டு, அதன் பின்னர், பிராரத்தம் வரும் காலையில், ஆன்மாக்கள் இப்பிராரத்த வினைகளைப் புசிக்கும் நிலை எய்தும். அந்நிலையில் இப்புசிப்பிற்கு முற்பட்டவை எல்லாம் நீங்குதற்குரிய வழியொன்றுண்டு. திருப்புன்கூரில் சிவபிரான் ஆதி அந்தம் இல்லாத தலைவராயும் மணம் நிறைந்து கமழும் செந்நிறச் சடைமுடி உடையவராகவும் எழுந்தருளியுள்ளார். அவரை, நெஞ்சே நீ சிந்தை செய்வாயாக. இதுவே வழி, என்றவாறு.

**குறிப்புரை:** இது பழவினையற, நெஞ்சே! திருப்புன்கூர்ச் சிவனாரைச் சிந்தி, என்கின்றது. முந்திநின்ற வினைகள் – நுகர்ச்சிக்குரியனவாகப் பரிபக்குவப் பட்டுநிற்கும் ஆகாமிய சஞ்சித வினைகள். அந்தம் – முடிவு. கந்தம் – மணம்.

O! Heart!! To get rid of the evil effects of your past karmaa, which confronts you in this life as Praarartha karmaa (*பிராரத்த வினை*) culminating from the sum total of Sanchitha karmaa (*சஞ்சித வினை*) and from Aahaamiya karmaa (*ஆகாமிய வினை*) of all your deeds in the past several births you had been in so far, there is a way. Meditate single minded on Lord Civan who abides in Thiru-P-Pun-koor who has neither a beginning nor an end. He has red matted hair which always emits a very pleasant natural fragrance.

**Note:** Odoriferous: The fragrance is known as Civa Manam. It is sanctifying and soul uplifting fragrance.

மூவ ராய முதல்வர் முறையாலே
தேவ ரெல்லாம் வணங்குந் திருப்புன்கூர்
ஆவ ரென்னு மடிக ளவர்போலும்
ஏவி னல்லா ரெயின்மூன் றெரித்தாரே. 2

மூவர்ஆய முதல்வர் முறையாலே
தேவர் எல்லாம் வணங்கும் திருப் புன்கூர்
ஆவர், என்னும் அடிகள் அவர் போலும் -
ஏவின் அல்லார் எயில் மூன்று எரித்தாரே.

mUvar Aya mutalvar, muRaiyAlE
tEvar ellAm vaNagkum tirup pun2kUr
Avar, en2n2um aTikaL avar pOlum--
Evin2 allAr eyil mUn2Ru erittArE.

**பொருள்:** பகைமை பூண்டவராய அரக்கர்களின் மூன்று அரண்களைக் கணை ஒன்றால் சிவபிரான் எரித்து அழித்தார். அவர், பிரமன், திருமால், உருத்திரன் ஆகிய மூவராயும், அவர்களுக்கு முதல்வராயும் விளங்குகிறார். தேவர்கள் எல்லோரும் முறையாக வந்து வணங்குபவராகவும், திருப்புன்கூரில் எழுந்தருளியுள்ள அடிகள் ஆவார்.

**குறிப்புரை:** இது முப்பெருந் தேவராய், எல்லாத் தேவராலும் வணங்கப்பெறும் தேவதேவராய் நின்ற இறைவன் திருப்புன்கூர்நாதன் என்கின்றது. மூவர் ஆய முதல்வர் – திருச்சிவபுரப் பதிகத்துக் குறித்தவண்ணம் பிரமன் மால் உருத்திரன் என்ற முத்தேவராயும், அவர்க்கு முதல்வராயும் உள்ளவர். அடிகள் ஆவர் என்னும் அவர் போலும் எனக்கூட்டுக. ஏ – அம்பு. அல்லார் – பகைவர்.

Lord Civan abiding in Thiru-P-Pun-koor destroyed with fire, the three citadels belonging to the hostile Asuraas. The three minor gods - Brahmaa, Vishnu and Rudran (Trinity) - are all truly but indirectly Lord Civan Himself (These minor gods could do nothing unless Lord Civan delegates power to them). At the same time Lord Civan is the Supreme Chief and stands above these three minor gods. All the Devaas arrive in their respective ranks and adore Lord Civan. This Lord Civan is entempled in Thiru-P-Pun-koor and graces His devotees.

**Note:** The Three: Brahmaa, Vishnu and Rudraa. Civan acts as these three. Civan animates these and appoints them to perform their ordained tasks. This is called anupaksha.

பங்க யங்கண் மலரும் பழனத்துச்
செங்க யல்க டிளைக்குந் திருப்புன்கூர்க்
கங்கை தங்கு சடையா ரவர்போலும்
எங்க ளுச்சி யுறையும் மிறையாரே. 3

பங்கயங்கள் மலரும் பழனத்துச்
செங்கயல்கள் திளைக்கும் திருப் புன்கூர்க்,
கங்கை தங்கு சடையார் அவர் போலும் -
எங்கள் உச்சி உறையும் இறையாரே.

pagkayagkaL malarum pazan2attuc
cegkayalkaL tiLaikkum tirup pun2kUr,
kagkai tagku caTaiyAr avar pOlum--
egkaL ucci uRaiyum iRaiyArE.

**பொருள்:** எங்கள் உச்சியில் உறையும் இறையவர் யாவர்? திருப்புன்கூரில், தாமரை மலர்கள் மலரும் வயல்களில் சிவந்த கயல்மீன்கள் திளைத்து மகிழும். அப்படிப்பட்ட திருப்புன்கூரில் கங்கை தங்கிய சடைமுடியராகிய சிவபிரான் எழுந்தருளியுள்ளார். அவரே எம் தலைமேல் உள்ளார்.

**குறிப்புரை:** திருப்புன்கூர் நாதனே எங்கள் முடிமீது உறையும் இறைவன் என்கின்றது. பழனம் – வயல். இவர் கங்கை தங்கும் சடையாராதலின் நீர்வளம் மிகுந்து பழனங்களில் செங்கயல்கள் திளைக்கின்றன என்பதாம். தாமரை இறைவியின் கண் போல் மலரும், அதைப் பார்த்து, வயல்களில் உள்ள மீன்கள் மகிழும் எனவும் கொள்ளலாம்.

Thiru-P-Pun-koor is surrounded by fields where lotus flowers bloom in plenty. The red Kayal fish (*கயல்மீன்*) joyfully leap and swing to and fro, in the water filled fields. In this luxuriant Thiru-P-Pun-koor, Lord Civan, who has the river Ganges on His matted hair, is entempled. This sane Lord Civan resides in our heads also and graces us.

**Note:** Our Heads: When the heart is upright and pure, the head becomes the shrine.

கரையு லாவு கதிர்மா மணிமுத்தம்
திரையு லாவு வயல்சூழ் திருப்புன்கூர்
உரையி னல்ல பெருமா னவர்போலும்
விரையி னல்ல மலர்ச்சே வடியாரே. **4**

*கரை உலாவு கதிர் மா மணிமுத்தம்*
*திரை உலாவு வயல் சூழ் திருப் புன்கூர்*
*உரையின் நல்ல பெருமான் அவர் போலும் -*
*விரையின் நல்ல மலர்ச்சேவடியாரே.*

karai ulAvu katir mA maNimuttam
ulAvu vayal cUz tirup pun2kUr,
uraiyin2 nalla perumAn2 avar pOlum--
viraiyin2 nalla malarc cEvaTiyArE.

பொருள்: திருப்புன்கூர் வளம் மிக்க வயல்கள் சூழ்ந்த ஊர். ஒளி பொருந்திய சிறந்த மாணிக்கங்கள் கரைகளில் அங்கே திகழ்கின்றன. மேலும், அங்கு முத்துக்கள் நீர்த்திரைகளில் உலாவுகின்றன. அவ்வகைப்பட்ட திருப்புன்கூரில் மணத்தால் மேம்பட்ட

தாமரை மலர் போன்ற சிறந்த திருவடிகளை உடைய சிவபிரான் எழுந்தருளியுள்ளார். அவர் புகழ்மிக்க நல்ல பெருமானார் ஆவார்.

**குறிப்புரை:** இது பெருமான் மணம்நாறும் மலர்ச்சேவடியார் என்கின்றது. கதிர்மாமணி கரையுலாவும், முத்தம் திரை உலாவும் வயல் எனக்கூட்டுக. உரை – புகழ். விரை – மணம்.

Lord Civan's red holy Feet resemble the red Lotus flower with it's pleasing fragrance of the highest degree. Thiru-P-Pun-koor is surrounded by fertile fields. Bright pure ruby abound in the ridges of these fields. Pearls are wafted about here and there in the waves of these fields. In such a luxuriant town Graceful Lord Civan resides gloriously.

பவள வண்ணப் பரிசார் திருமேனி
திகழும் வண்ண முறையுந் திருப்புன்கூர்
அழக ரென்னு மடிக ளவர்போலும்
புகழ நின்ற புரிபுன் சடையாரே. 5

*பவளவண்ணப் பரிசு ஆர் திருமேனி*
*திகழும் வண்ணம் உறையும் திருப் புன்கூர்*
*அழகர் என்னும் அடிகள் அவர் போலும் -*
*புகழ நின்ற புரி புன்சடையாரே.*

pavaza vaNNap paricu Ar tirumEn2i
tikazum vaNNam uRaiyum tirup pun2kUr
azakar en2n2um aTikaL avar pOlum--
pukaza nin2Ra puripun2 caTaiyArE.

**பொருள்:** திருப்புன்கூரில் உறையும் சிவபிரான் அழகர் என்னும் அடிகள் ஆவார். உலகோர் புகழும்படி நிலைபெற்றதும், முறுக்கிய சிவந்த முடியையும் உடையவராய் இறைவர் திகழ்கிறார். தமது பவளம் போன்ற மேனியில் செவ்வண்ணம் திகழுமாறு திருப்புன்கூரில் உறைகிறார்.

**குறிப்புரை:** இது பவளமேனி யழகரே அனைவராலும் புகழநின்ற பெருமான் என்கின்றது. பரிசு – தன்மை. திகழும் வண்ணம் உறையும் – மிக்கு விளங்கும் வண்ணம் என்றும் உறையும். அழகர் – அழகு பண்பு. அழகர் பண்பி. அம்மையப்பர் ஆதலின் இத்தலத்து அம்மை திருநாமம் சொக்க நாயகி; அழகிய நாயகி. ஆதலால் இவர் அழகர் எனக் குறிப்பிடப் பெற்றார்.

The handsome Lord Civan abides in Thiru-P-Pun-koor in all splendour. His ruby like divine frame blazes like coral. His red matted hair is well twisted. This Lord Civan is hailed by one and all in the world.

Note: Azhakar: The Goddess of Thiru-P-Punkur bears the name Chokkanaayagi (The Lady who is beautiful), Her Consort is Chokkanaathan (The Lord who is handsome). Chokkar and Azhagar are synonymous. The beauty of the Lord knows no fading.

தெரிந்தி லங்கு கழுநீர் வயற்செந்நெல்
திருந்த நின்ற வயல்சூழ் திருப்புன்கூர்ப்
பொருந்தி நின்ற வடிக ளவர்போலும்
விரிந்தி லங்கு சடைவெண் பிறையாரே. 6

தெரிந்து இலங்கு கழுநீர் வயல், செந்நெல்
திருந்த நின்ற வயல் சூழ் திருப் புன்கூர்ப்
பொருந்தி நின்ற அடிகள் அவர் போலும் -
விரிந்து இலங்குசடை வெண்பிறையாரே.

terintu ilagku kazunIr vayal, cennel
tirunta nin2Ra vayal, cUz tirup pun2kUrp
porunti nin2Ra aTikaL avar pOlum--
virintu ilagku caTai veN piRaiyArE.

பொருள்: திருப்புன்கூர், கண்களுக்குப் புலனாகும்படி அழகோடு திகழும் செங்கழுநீர் மலர்ந்த வயல்களாலும், செந்நெற்கதிர்கள் அழகோடு நிறைந்து நிற்கும் வயல்களாலும் சூழப்பெற்றது. அந்தத் திருப்புன்கூரில் விரிந்து விளங்கும் சடைமுடியில் வெண்பிறை அணிந்த சிவபிரான் எழுந்தருளியுள்ள அடிகளாவார்.

குறிப்புரை: அழகர் சடையில் வெண்பிறையுடையார் போலும் என்கின்றது. கழுநீர் வயல்களும், செந்நெல் வயல்களும் சூழ்ந்த புன்கூர் என்க. பொருந்தி – தமக்கு இதுவே சிறந்த தலம் என அமைந்து.

Thiru-P-Pun-koor is surrounded on one side by fields full of blossomed attractive Kazhuneer (கழுநீர்) flowers that are pleasing to the eyes. On the other side, fertile paddy fields are there where ears of sound paddy grass stand erect delightfully.

In such a luxuriant Thiru-P-Pun-koor, Lord Civan abides. He wears on His wide matted hair a white crescent moon.

பாரும் விண்ணும் பரவித் தொழுதேத்தும்
தேர்கொள் வீதி விழவார் திருப்புன்கூர்
ஆர நின்ற வடிக ளவர்போலும் 7
கூர நின்ற வெயின்மூன் றெரித்தாரே.

பாரும் விண்ணும் பரவித் தொழுது ஏத்தும்
தேர் கொள் வீதி விழவு ஆர் திருப் புன்கூர்,
ஆர நின்ற அடிகள் அவர் போலும் -
கூரம் நின்ற எயில் மூன்று எரித்தாரே.

pArum viNNum paravit tozutu Ettum
tEr koL vIti vizavu Ar tirup pun2kUr,
Ara nin2Ra aTikaL avar pOlum--
kUram nin2Ra eyil mUn2Ru erittArE.

**பொருள்:** திருப்புன்கூர், மண்ணக மக்களும் விண்ணகத் தேவரும் பரவித் தொழுது ஏத்துமாறு தேரோடும் வீதிகளை உடையது. அது, எந்நாளும் திருவிழாக்களால் சிறந்து திகழ்வது. கொடியனவாய்த் தோன்றி, இடர் விளைத்து நின்ற முப்புரங்களையும் எரித்து அழித்த இறைவர் திருப்புன்கூரில் பொருந்தி நின்ற அடிகளாய் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** தேர்விழாத்திகழும் திருப்புன்கூர் அடிகள் முப்புரம் எரித்த முதல்வன் போலும் என்கின்றது. பார், விண் – ஆகு பெயராக முறையே மக்களையும் தேவரையும் உணர்த்தின. ஆர – பொருந்த. கூரம் – க்ரூரம், கொடுமை. மூன்றும் என்பதனுள் நின்ற முற்றும்மை தொக்கது. ஆரநின்ற – ஆர்தல் – அனுபவித்தல். அனைத்து உயிர்களும் கண்டு ஆனந்தித்து அனுபவிக்குமாறு நின்ற. கூர்தல் – மேன்மேற் பெருகுதல். கேட்டவுடனேயே அல்லது நினைத்தவுடனேயே அச்சத்தை மிகுவிக்கின்ற.

Lord Civan is the great One who beamingly abides at Thiru-P-Pun-koor, where temple festivals can be seen on all days. In the streets of this town, temple chariots keep plying during festive days. To enable men and celestials to worship Him, He is enshrined in this town. Lo, verily He is the Lord who burnt down the three citadels of the recalcitrant Asuras who were inflicting miseries on Devas.

**Note:** Veedhi: That indeed is the Veedhi where chariots ply. It is different from Theru.

மலைய தனா ருடைய மதின்மூன்றும்
சிலைய தனா லெரித்தார் திருப்புன்கூர்த்
தலைவர் வல்ல வரக்கன் றருக்கினை
மலைய தனா லடர்த்து மகிழ்ந்தாரே. 8

மலை அதனார் உடைய மதில் மூன்றும்
சிலை அதனால் எரித்தார் - திருப் புன்கூர்த்
தலைவர், வல்ல அரக்கன் தருக்கினை
மலை அதனால் அடர்த்து மகிழ்ந்தாரே.

malai atan2Ar uTaiya matil mUn2Rum
cilai atan2Al erittAr--tirup pun2kUrt
talaivar, valla arakkan2 tarukkin2ai
malai atan2Al aTarttu makizntArE.

**பொருள்:** சிவபிரான், வலிமை பொருந்திய இராவணனுடைய செருக்கைப் போக்க, அவனைக் கயிலை மலையின் கீழ் அடர்த்தார். இராவணன் தன் செயலுக்கு வருந்தி, மன்னிப்புக் கோரி, வணங்கிப் போற்றிப் பாடினான். அவன் பாடலில் மகிழ்ந்த சிவபெருமான் மன்னித்து அவனுக்கு அருள் வழங்கினார். தேவர்களோடு சண்டையிட்டு, அவர்களை அழிக்கும் குணம் உடையவராய அசுரர்களின் முப்புரங்களை வில்லால் எரித்து அழித்தவராய சிவபிரான் திருப்புன்கூரின் தலைவர் ஆவார்.

**குறிப்புரை:** புரமெரித்த வீரத்தையும், இராவணன் வலியடக்கி ஆண்ட கருணையையும் விளக்குகின்றது. மலையதனார் – மலைதற்குரியராகிய முப்புராதிகள். மலைதல் – சண்டையிடுதல். மலை – கைலைமலை. அடர்த்து – நெருக்கி. இதனாற் கருணை அறிவிக்கப் பெறுகின்றது.

Lord Civan of Thiru-P-Pun-koor burnt with a bow the three citadels of the Asuras who were bent upon fighting and ruining the Devas. This same Lord suppressed the pride of the valiant king of Sri Lanka (Raavanan) and crushed him by pressing His toe on the mountain under which he was lying. The king repented for his action, and appealed to Lord Civan by singing songs of adoration. Civan was pleased to hear his music and graced him with boons. This Civan is the Supreme Chief of Thiru-P-Pun-koor.

**Note:** Civan was happy when the sinner showed remorse. Not only that, He even blessed the sinner, with rare gifts.

நாட வல்ல மலரான் மாலுமாய்த்
தேட நின்றா ருறையுந் திருப்புன்கூர்
ஆட வல்ல வடிக ளவர்போலும்
பாட லாடல் பயிலும் பரமரே. 9

நாட வல்ல மலரான், மாலும்ஆய்த்
தேட நின்றார் உறையும் திருப் புன்கூர்
ஆட வல்ல அடிகள் அவர் போலும் -
பாடல் ஆடல் பயிலும் பரமரே.

nATa valla malarAn2, mAlum Ayt
tETa nin2RAr, uRaiyum tirup pun2kUr
ATa valla aTikaL avar pOlum--
pATal ATal payilum paramarE.

**பொருள்:** எதனையும் ஆராய்ந்து அறிதலில் வல்லவர்களான நான்முகனும் திருமாலும் தேடி அறிய இயலாதவராய் ஓங்கி நின்றவர் சிவபிரான். அவ்வகைச் சிவபிரான் பாடல் ஆடல் ஆகிய இரண்டிலும் வல்லவராய், அவற்றைப் பழகும் மேலான இறைவர் ஆவார். அப்பெருமான் திருப்புன்கூரில் உறையும் ஆடல்வல்ல அடிகள் ஆவார்.

**குறிப்புரை:** ஆடவல்ல அடிகளே பாடலாடல் பயிலும் பரமர் போலும் என்கின்றது. நாடவல்ல மலரான் – பிரமனுக்கு நான்கு முகங்களாதலின் ஏனைய தேவர்களைப் போலத் திரும்பித் திரும்பித் தேட வேண்டிய அவசியம் இல்லை என்று நகைச்சுவை தோன்றக் கூறியது. அதிலும் துணையாகத் தன் தந்தையையுஞ் சேர்த்துக் கொண்டு தேடினான் என அச்சுவையை மிகுத்தவாறு.

Civan is the most efficient Lord who is the author of both music and dance. As the Chief architect of these arts He practises (practices - U.S.A. spelling) it always. Brahmaa is an expert in analysing and knowing about things. This Brahmaa along with Thirumaal could not perceive Lord Civan who stood as a big, tall column of fire. This Lord Civan who is well versed in the art of dance abides in Thiru-P-Pun-koor.

Note: Civa is Nataraaja (Aadal Vallaan in Tamil): It is through His dance he enacts the five fold activities (பஞ்சகிருத்தியம்).

குண்டு முற்றிக் கூறை யின்றியே
பிண்ட முண்ணும் பிராந்தர் சொற்கொளேல்
வண்டு பாட மலரார் திருப்புன்கூர்க்
கண்டு தொழுமின் கபாலி வேடமே. 10

*குண்டு முற்றிக் கூறை இன்றியே*
*பிண்டம் உண்ணும் பிராந்தர் சொல் கொளேல்!*
*வண்டு பாட மலர் ஆர் திருப் புன்கூர்க்*
*கண்டு தொழுமின், கபாலி வேடமே!*

kuNTu muRRik kURai in2RiyE
piNTam uNNum pirAntar col koLEl!
vaNTu pATa malar Ar tirup pun2kUrk
kaNTu tozumin2, kapAlivETamE!

**பொருள்:** கீழ்மையான தன்மை மிகுந்து, ஆடையின்றி, வீதிகளில் வந்து பிச்சைக் கேட்டுப் பெற்று, அவ்வுணவை விழுங்கி வாழும் மயக்க அறிவினராகிய சமணர்கள் கூறும் சொற்களைக் கேளாதீர். தேன் உண்ண வந்த வண்டுகள் பாடுமாறு மலர்கள் நிறைந்து விளங்கும் திருப்புன்கூர் சென்று, அங்கு விளங்கும் கபாலியாகிய சிவபிரானின் வடிவத்தைக் கண்டு தொழுவீர்களாக.

**குறிப்புரை:** மயக்க அறிவினராகிய புறச்சமயத்தார் புன்சொல் கேளாதே 'கபாலியைக் கைதொழுமின்' என்கின்றது. குண்டு – உடற்பொறை. கூறையின்றி என்றது திகம்பர சமணரை பிண்டமுண்ணுதல் – சுவைத்து மென்று தின்னாது விழுங்குதல். பிராந்தர் – மயக்க அறிவினர்.

The Samanars low in intellect roam about in the streets without any clothing on their body. They beg for food and eat it. O! Companions! Do not listen to the words of these people. Their minds are confused. They know nothing about real divine knowledge. Come to Lord Civan who has taken the garb of 'Kaabaali' and abides in Thiru-P-Pun-koor and offer worship to Him.

**Note:** The tenth verse usually debunks both the Samanars and Buddhists to pillory and derision. However, in this decad, the Buddhist is not even mentioned.

மாட மல்கு மதில்சூழ் காழிமன்
சேடர் செல்வ ருறையுந் திருப்புன்கூர்
நாட வல்ல ஞான சம்பந்தன்
பாடல் பத்தும் பரவி வாழ்மினே. 11

மாடம் மல்கு மதில் சூழ் காழி மன்,
சேடர் செல்வர் உறையும் திருப் புன்கூர்
நாட வல்ல ஞானசம்பந்தன்,
பாடல் பத்தும் பரவி வாழ்மினே!

mATam malku matil cUz kAzi man2,
cETar celvar uRaiyum tirup pun2kUr
nATa valla njAn2acampantan2,
pATalpattum paravi vAzmin2E!

**பொருள்:** ஞானசம்பந்தப் பெருமான் மாடவீடுகளால் நிறையப் பெற்றதும், மதில்கள் சூழ்ந்ததுமான சீகாழிப் பதிக்குத் தலைவர். அவர் எதையும் நாடி ஆராய வல்லவர். அவர், பெரியோர்களும் செல்வர்களும் வாழும் திருப்புன்கூரில் எழுந்தருளி இருக்கும் இறைவர்மீது பாடிய பாடல்கள் பத்தையும் பரவி நல்வாழ்வு வாழ்வீர்களாக.

**குறிப்புரை:** இது இப்பதிகத்தை ஓதின் வாழலாம் என்கின்றது. சேடர்க்கு முன்னுரைத்தாங்கு உரைக்க. பத்தும் பரவி – பத்தாலும் தோத்திரித்து.

Gnaanasambandan is a versatile sage who can analyse anything and every thing, and know its real nature. He hails from Sree Kaazhi which is encircled by high walls and abounds in storeyed buildings everywhere. He has sung these hymns on Lord Civan of Thiru-P-Pun-koor where noble and affluent people are living. Ye Companions! Chant these ten verses and lead a happy righteous life.

**Note:** The decad ends with an exhortation which is a veritable blessing. Every one is born indebted, in more ways that one. One such debt is called Rishi-K-Katan. This debt is discharged when one cultivates the companionship of sages, saints and seers.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*27ஆம் பதிகம் முற்றிற்று*
End of 27th Hymn

உ
சிவமயம்

# 28. திருச்சோற்றுத்துறை

## திருத்தலவரலாறு:

திருச்சோற்றுத்துறையானது சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் திருத்தலம். தஞ்சாவூர் – கண்டியூரிலிருந்து பேருந்து வசதி உள்ளது. அருளாளர் என்னும் அந்தண அன்பருக்கு அட்சயபாத்திரம் அளித்துப் பஞ்சகாலத்தில் அடியார்களுக்கு அன்னமிட்டுக் காத்த திருத்தலம். கௌதம முனிவர் தவம் செய்து முத்தி பெற்றமையால் கௌதமாஸ்ரமம் என்றும் வழங்கப்படும். இந்திரன், சூரியன் முதலியோர் வழிபட்டு உய்ந்தனர். சூரியன் வழிபட்ட செய்தியைச் 'செங்கதிரோன் வணங்கும் திருச்சோற்றுத்துறைநாதன்' என்னும் நேரிசையால் அறியலாம். திருவையாற்று சப்த ஸ்தானத் திருத்தலங்களில் இதுவும் ஒன்று. இறைவன் பெயர் 'தொலையாச் செல்வர்'. இறைவியின் பெயர் ஒப்பிலாம்பிகை. வடமொழியில் முறையே 'ஓதவனேசுவரர்', 'அன்னபூரணி' எனவும் வழங்கப் பெறுவர். தீர்த்தம் காவிரி.

## கல்வெட்டு

இத்தலத்தைப் பற்றியதாக அரசியலார் படி எடுத்த கல்வெட்டுக்கள் 12; எம். எஸ். எஸ். எடுத்தன 27; வி. ரங்காச்சாரியா அவர்கள் எடுத்தவை 25 ஆக 64 கல்வெட்டுக்கள் உள்ளன. இவை பராந்தகன், முதலாம் இராஜராஜன், இன்னான் என்று கணித்தறிய முடியாத கோராஜகேசரி, பரகேசரி, கோநேரின்மை கொண்டான். குலோத்துங்கன் காலத்தன. இவை பெரும்பாலும் சிதைவுற்றிருத்தலின் நிகழ்ச்சிகளை நன்கு அறிந்து கொள்ளக்கூட இல்லை. ஆயினும், விளக்குகளுக்காகவும், நிவேதனத்துக்காகவும், விழாவிற்காகவும் நிலமும் பொன்னும் அளித்த செய்திகள் குறிக்கப் பெறுகின்றன. ஒரு கல்வெட்டு நடன மாதிற்குச் சர்வ மான்யம் விட்ட செய்தியைத் தெரிவிக்கிறது. நலமல்லூர் தேவர் என்பவர் தொலையாச் செல்வருக்கு விளக்குத் தண்டு செய்ய நிலமளித்த செய்தி தெரிகிறது. கடவுள் 'தொலையாச் செல்வர்' என்றும், 'திருச்சோற்றுத்துறை நாயனார்' என்றுங் குறிப்பிடப் பெறுகிறார்.

## பதிக வரலாறு:

திருக்கண்டியூரை வணங்கிய திருஞானசம்பந்தப் பிள்ளையார், வெண்ணீற்றப்பர் சோற்றுத்துறையை வணங்கத் திருவுளங்கொண்டு எழுந்தருளுகின்றபோது, வழிநடையில்,

'செப்பநெஞ்சே' என்னும் திருப்பதிகத்தை அருளிச் செய்தார்கள். இப்பதிகத்தைச் சேக்கிழார் 'ஒப்பில் வண்தமிழ் மாலை' எனச் சிறப்பிக்கின்றார். இப்பதிகத்தில் 'ஒளிவெண்ணீற்றப்பர் உறையும் செல்வம் உடையார்' என இறைவன் திருநாமமாகிய 'தொலையாச் செல்வர்' என்பது தோற்றுவிக்கப்படுகிறது.

## 28. THIRU-CH-CHOTTRU-TH-THURAI

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-ch-chottru-th-thurai is to the south of river Cauvery in Chola dominion and is accessible by bus from Thanjavoor and Kandiyoor. This holy site is where Arulaalar, a Brahmin devotee was given an akshyapaaththiram (அக்ஷய பாத்திரம்) with which to feed the devotees during a famine. It is also known as Gowthamaasramam since Sage Gowthamar performed 'penance' here. Indhiran and Sooriyan are among those who attained salvation by offering worship here. That Sooriyan worshipped here may be known from the quote "... seng kathiron vanangkum Thiruchchorruththurai naathan ...". This is one of the seven 'sacred places' of Thiruvaiyaaru. The Lord's name is Tholaiyaachchelvar and that of the Goddess is Oppilaambikai. In Sanskrit they are respectively known as Odhavanesvarar and Annapoorani. The holy ford is river Cauvery.

### Stone Inscriptions

Of the 64 inscriptions here, 12 have been copied by the government epigraphists, 27 by M.S.S. and 25 by V. Rangaachaariayar, M.A. These are ruling period of Paraanthakan, Raajaraajan I, and an unidentifiable king Koraajakesari Parakesari Konerinmaikondaan Kuloththungkan. Most of these are so fragmented that the events described could not be clearly known. However, they note the donation of land and gold for lamps, food offering and festivals. One inscription informs about the endowment of land as 'sarvamaanyam' for a noutch woman. A Nalamalloor Thevar gave land in order to make a lamp stand for Tholaiyaachchelvar. The God is referred to as Tholaiyaachchelvar and Thiruchchorruththruai Naayanaar.

**INTRODUCTION TO THE HYMN**

Having adored the Lord at Kandiyur, the saint proceeded to Thiru-ch-chottru-th-thurai. The following hymn was sung by him on his way to the holy shrine.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 28. திருச்சோற்றுத்துறை 28. THIRU-CH-CHOTTRU-TH-THURAI

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

செப்ப நெஞ்சே நெறிகொள் சிற்றின்பம்
துப்ப னென்னா தருளே துணையாக
ஒப்ப ரொப்பர் பெருமா னொளிவெண்ணீற்
றப்பர் சோற்றுத் துறைசென் றடைவோமே. 1

செப்பம் நெஞ்சே, நெறி கொள் சிற்றின்பம்
துப்பன் என்னாது, அருளே துணை ஆக,
ஒப்பர் ஒப்பர் பெருமான், ஒளி வெண் நீற்று
அப்பர், சோற்றுத்துறை சென்று அடைவோமே.

ceppa nenjcE, neRi koL! ciRRin2pam
tuppan2 en2n2Atu, aruLE tuNai Aka,
oppar oppar perumAn2, oLi veN nIRRu
appar, cORRuttuRai cen2Ru aTaivOmE.

**பொருள்:** நடுவுநிலையுடைய நெஞ்சே! முறையான சிற்றின்பத்தைத் தன்முனைப்போடு, 'யான் துய்ப்பேன்' என்று நினையாதே 'அருளே துணையாகக் கொண்டு நுகர்வேன்' என்று கூறினால், இறைவன் அதனை ஏற்பர். அத்தகைய பேரருளாளர், ஒளி பொருந்திய திருவெண்ணீறு அணிந்த மேனியராயும், தலைவராகவும் விளங்கும் திருச்சோற்றுத் துறையைச் சென்றடைவோம்.

**குறிப்புரை:** நெஞ்சே! நெறிகொள் சிற்றின்பம் துப்பன் என்னாது அருளே துணையாகச் செப்ப ஒப்பர் என முடிவு செய்க. நெறிகொள் சிற்றின்பம் – இல்லறத்தானுக்கு ஓதிய முறைப்படி நுகரப்படும் சிற்றின்பம். துப்பன் – நுகர்வோன். பொறிகளான் நுகரப்படும் சிற்றின்பத்தை நுகருங்கால் தன்முனைப்பின்றி அவனருளே துணையாக நுகர்கின்றேன் என்று புத்தி பண்ணிச் சொல்ல அவர் நம் சிறுமைகண்டு

இகழாது ஒப்புவர் என்றவாறு. 'ஒளிவெண்ணீற்று அப்பர்' என்பது தொலையாச் செல்வர் என்னும் இறைவன் திருநாமத்தை நினைவூட்டியது. தொலையாச் செல்வம் – விபூதி (திருநீறு). ஒப்பர் ஒப்பர் என்பதற்குத் தமக்குத்தாமே ஒப்பு ஆனவர் என்றும் உரை காண்பர். துய்ப்பன் என்ற சொல்லானது துப்பன் என நின்றது. துப்பு என்பது பெயர்ச் சொல்லாயின் உணவு, வலிமை என்ற பொருள் தரும். துப்பு என்பது வினைச்சொல்லாயில் எச்சில் முதலியவைகளைத் துப்புதல் என்ற பொருள் தரும்.

O! Heart! Do not say that I will enjoy the earthly pleasures on my own accord; say that by god's grace, I am able to enjoy it. If you say thus, God will admit it. This Supreme Lord Civan smears on His body the bright holy ashes and abides in Thiru-ch-chottru-th-thurai as its Chief. Let us reach this place and worship Him.

**Note:** Dharma, wealth, love life and liberation are the four ordained goals of life. Married felicity is not to be condemned. However, they that enjoy this, should remember with gratitude that it is a boon vouched by His Grace.

பாலு நெய்யுந் தயிரும் பயின்றாடித்
தோலு நூலுந் துதைந்த வரைமார்பர்
மாலுஞ் சோலை புடைசூழ் மடமஞ்ஞை
ஆலுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. 2

பாலும் நெய்யும் தயிரும் பயின்று ஆடி,
தோலும் நூலும் துதைந்த வரைமார்பர்,
மாலும் சோலை புடை சூழ் மடமஞ்ஞை
ஆலும் சோற்றுத்துறை சென்று அடைவோமே.

pAlum neyyum tayirum payin2Ru ATi,
tOlum nUlum tutainta varaimArpar,
mAlum cOlai puTai cUz maTamanjnjai
Alum cORRuttuRai cen2Ru aTaivOmE.

**பொருள்:** சிவபிரான் பாலையும் நெய்யையும் தயிரையும் விரும்பியாடுபவர். புலித்தோலும் முப்புரிநூலும் பொருந்திய மலைபோன்று விரிந்த மார்பினராய் விளங்குபவர். அத்தகைய சிவபிரான் எழுந்தருளியிருக்கும் திருச்சோற்றுத்துறையானது மயக்கும் சோலைகளால் சூழப்பெற்றதும், இளமயில்கள் ஆரவாரிக்கும் இடங்களைக் கொண்டதுமாகும். அத்தகைய திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

**குறிப்புரை:** பாலும் நெய்யும் தயிரும் ஆடி என்றது. பஞ்சகவ்யங்களில் தனித்தனியாக இறைவனுக்கு அபிஷேகிக்கத்தக்கன இம்மூன்றுமே எனக் குறித்தபடி. தோல் – புலித்தோல், மான் தோலுமாம். மாலும் – மயக்கும். ஆலும் – ஒலிக்கும்.

Lord Civan loves to be ablution by milk, ghee and curd (the three products of cow out of five). He wears on His hill like broad chest the sacred thread to which a small piece of deer skin is fastened. Civan is enshrined in Thiru-ch-chottru-th-thurai which is surrounded by enchanting groves, wherein young peacocks stroll majestically growling a peculiar sound called Ahavuthal (*அகவுதல்*). Let us reach this Thiru-ch-chottru-th-thurai and pay obeisance to Lord Civan enshrined therein.

**Note:** The snippet of deer - skin attached to the sacred thread is an indication of authenticity. When a person is duly invested with the sacred thread, the priest fastens a snippet of deer skin to the sacred thread.

If the word "Thol" is taken as referring to the tiger skin, then it conveys the meaning that the waist of Lord Civa is covered with the tiger skin.

செய்யர் செய்ய சடையர் விடையூர்வர்
கைகொள் வேலர் கழலர் கரிகாடர்
தைய லாளொர் பாக மாயவெம்
ஐயர் சோற்றுத் துறைசென் றடைவோமே. 3

செய்யர், செய்யசடையர், விடை ஊர்வர்,
கை கொள் வேலர், கழலர், கரிகாடர்,
தையலாள் ஓர்பாகம் ஆய எம்
ஐயர், சோற்றுத்துறை சென்று அடைவோமே.

ceyyar, ceyyacaTaiyar, viTai Urvar,
kai koL vElar, kazalar, karikATar,
taiyalAL or pAkam Aya em
aiyar, cORRuttuRai cen2Ru aTaivOmE.

**பொருள்:** சிவபிரான் சிவந்த மேனியர்; செம்மை நிறம் உடைய சடைமுடியினர்; விடை ஊர்ந்து வருபவர்; கையில் பற்றிய சூலத்தவர்; வீரக்கழல் அணிந்தவர்; இடுகாட்டில் விளங்குபவர்; உமையம்மையைத் தம்மேனியில் ஒருகூறாகக் கொண்டவர். இவ்வளவு

சிறப்புக்களைக் கொண்டவராயும், எம் தலைவராயும் உள்ள சிவபிரான் எழுந்தருளியுள்ள திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

**குறிப்புரை:** வேல் – சூலம். கரிகாடர் – சுடுகாட்டில் நடிப்பவர். ஐயர் – தலைவர். கழலர் – வீரக்கழலை உடையவர்.

The complexion of Lord Civan's body frame is bright red colour. His matted hair is also of the same red colour. He rides the Bull. In one of His hands He holds the war weapon Trisool (திரிசூலம்). He wears (in His ankle) the anklet of heroism and dances in the burning ground. He embeds His consort Umaa Devi in the left half of His body. He is our Supreme Chief. Let us reach Thiru-ch-chottru-th-thurai where he is enshrined and offer worship to Him.

பிணிகொ ளாக்கை யொழியப் பிறப்புளீர்
துணிகொள் போரார் துளங்கு மழுவாளர்
மணிகொள் கண்டர் மேய வார்பொழில்
அணிகொள் சோற்றுத் துறைசென் றடைவோமே. 4

**பிணி கொள் ஆக்கை ஒழியப், பிறப்புஉளீர்!**
**துணி கொள் போரார், துளங்கும் மழுவாளர்,**
**மணி கொள் கண்டர், மேய வார் பொழில்**
**அணி கொள் சோற்றுத்துறை சென்று அடைவோமே.**

piNi koL Akkai oziya, piRappu uLIr!
tuNi koL pOrAr, tuLagkum mazuvALar,
maNi koL kaNTar, mEya vAr pozil
aNi koL cORRuttuRai cen2Ru aTaivOmE.

**பொருள்:** நோய்களுக்கு இடமான இந்த உடலுடன் பிறத்தல் ஒழியுமாறு இந்தப் பிறப்பையே பயன்படுத்த வேண்டும் என்ற எண்ணத்தை உடைய அறிவுடைய ஞானிகளே! சிவபிரான், துணித்தலைச் செய்வதும், போர் செய்வதற்கு உரியதாக விளங்குவதும் ஆகிய மழு ஆயுதத்தைக் கையில் ஏந்தியுள்ளார். அவர் நீலமணி போன்ற கழுத்தை உடையவர். அவ்வகைப்பட்ட சிவபெருமான் விருப்பமுடன் எழுந்தருளியுள்ள நீண்ட பொழில்கள் சூழ்ந்த அழகிய திருச்சோற்றுத்துறையைச் சென்றடைந்து அவரை வழிபடுவோமாக.

**குறிப்புரை:** பிணிகொள் ஆக்கை – நோயுற்ற உடல். பிறப்புளீர் – நோயுற்ற இவ்வுடல் ஒழிக்க எடுத்த இப்பிறவியையே பயன்படுத்தும் ஞானிகளே!

O! Companions! This human frame is subject to all sorts of diseases. You learned savants! You would therefore wish to get rid of the cycle of birth, and death for which this human birth has been taken. Go and reach Thiru-ch-chottru-th-thurai where Lord Civan is enshrined and offer worship to Him. This is the only way to achieve your object. Lord Civan does daring acts. He holds in one of His hands the war weapon Mazhu (மழு). His neck is of dark blue in colour, resembling a sapphire, I repeat, let us go and reach Thiru-ch-chottru-th-thurai and offer worship to Lord Civan enshrined therein, to get rid of our cycle of births and deaths.

பிறையு மரவும் புனலுஞ் சடைவைத்து
மறையு மோதி மயான மிடமாக
உறையுஞ் செல்வ முடையார் காவிரி
அறையுஞ் சோற்றுத் துறைசென் றடைவோமே. 5

பிறையும் அரவும் புனலும் சடை வைத்து,
மறையும் ஓதி, மயானம் இடம்ஆக
உறையும் செல்வம் உடையார், காவிரி
அறையும் சோற்றுத்துறை சென்று அடைவோமே.

piRaiyum aravum pun2alum caTai vaittu,
maRaiyum Oti, mayAn2am iTam Aka
uRaiyum celvam uTaiyAr, kAviri
aRaiyum cORRuttuRai cen2Ru aTaivOmE.

**பொருள்:** சிவபிரான், இளம்பிறையையும் பாம்பையும் கங்கையையும் சடையில் அணிந்து கொண்டுள்ளார். அவர் நான்கு மறைகளை ஓதிக்கொண்டுள்ளார். வீடுபேறாகிய செல்வத்தைத் தம்மிடம் கொண்டுள்ள சிவபிரான் விரும்பித் தங்கியுள்ள இடமாகிய காவிரி நீர் ஒலி செய்யும் திருச்சோற்றுத்துறை சென்று அடைவோம். அவர் மயானத்தில் விளங்குபவர். மகாப்பிரளய ஊழிக் காலத்தில் பிரபஞ்சம் அனைத்தும் சிவனிடத்தில் ஒடுங்கும். மீண்டும் பிரபஞ்சம் உற்பத்தி தொடங்கும் காலம் வரை, சிவன் ஒருவரே தனித்தன்மையாக விளங்குவார். இதை உருவகமாக, 'சிவன் மயானத்தில் உறைகிறார்' என்று சொல்லப்படுகிறது.

**குறிப்புரை:** அணியல்லாத பாம்பு, மதி இவற்றைப் பூண்டு, கரிகாடு இடமாகக் கொண்டும், செல்வம் உடையார் என்றது சுவைபடக் கூறியது. அறையும் – மோதும்.

Lord Civan gave protection to the young crescent moon on His matted hair. Also the snake finds a place on His head. The river Ganges personified as a lady - Ganga Devi - abides on His head. He is chanting the Vedas which He had authored. He will be in sight in the burning ghat. He is the Supreme and sole owner of the priceless wealth of heavenly bliss. He abides in Thiru-ch-chottru-th-thurai where the uproaring Cauvery river flows. Let us go and reach this place and offer worship to Lord Civan enshrined therein!

**Note:** At the time of final great deluge, the entire universe undergoes Involution. Nothing exists in the universe then, except Lord Civan. He is the sole entity in the universe until the Evolution starts again. This event is metaphorically described as "Lord Civan living in the crematory ground".

துடிக ளோடு முழவம் விம்மவே
பொடிகள் பூசிப் புறங்கா டரங்காகப்
படிகொள் பாணி பாடல் பயின்றாடும் 6
அடிகொள் சோற்றுத் துறைசென் றடைவோமே.

துடிகளோடு முழவம் விம்மவே,
பொடிகள் பூசி புறங்காடு அரங்குஆக,
படி கொள் பாணி பாடல் பயின்று ஆடும்
அடி கொள் சோற்றுத்துறை சென்று அடைவோமே.

tuTikaLOTu muzavam vimmavE,
poTikaL pUci, puRagkATu aragku Aka,
paTi koL pANi pATal payin2Ru ATum
aTikaL cORRuttuRai cen2Ru aTaivOmE.

**பொருள்:** சிவபெருமானுடைய நிலை இப்பாடலில் கூறப்படுகிறது. சிவபெருமான் தம் மேனிமீது திருநீற்றுப் பொடி பூசிக் காட்சி தருகிறார். அவர், புறங்காடாகிய சுடுகாட்டை அரங்காகக் கொண்டு, பொருத்தமான தாளச்சதிகளோடு பாடல்கள் பாடி ஆடுகிறார். அவருடைய ஆடலுக்குப் பொருத்தமாக உடுக்கைகள் பலவற்றோடு, முழவங்கள்

ஒலிக்கின்றன. இவ்வாறான சிவபிரான் எழுந்தருளிய திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

**குறிப்புரை:** துடி – உடுக்கை. புறங்காடு – சுடுகாடு. அரங்கு – கூத்து மேடை. பாணி – தாளம்.

Lord Civan smears His body with holy ashes. To the appropriate rhythmic beat of cymbals He sings and dances in the forum of the burning ghat to the accompaniment of small drum (Tudi - துடி) and Muzhavam (*முழவம்*). This Lord Civan abides in Thiru-ch-chottru-th-thurai. Let us reach this place and offer worship to Lord Civan enshrined therein.

**Note:** Muzhavam: A kind of drum (A heroe's shoulders are often likened to the 'Muzhavam' in shape).

சாடிக் காலன் மாளத் தலைமாலை
சூடி மிக்குச் சுவண்டாய் வருவார்தாம்
பாடி யாடிப் பரவு வாருள்ளத்
தாடி சோற்றுத் துறைசென் றடைவோமே. 7

*சாடிக் காலன் மாளத், தலைமாலை*
*சூடி, மிக்குச் சுவண்டுஆய் வருவார், தாம்*
*பாடி ஆடிப் பரவுவார் உள்ளத்து*
*ஆடி, சோற்றுத்துறை சென்று அடைவோமே.*

cATik kAlan2 mALa, talaimAlai
cUTi, mikkuc cuvaNTu Ay varuvAr, tAm
pATi ATip paravuvAr uLLattu--
ATi, cORRuttuRai cen2Ru aTaivOmE.

**பொருள்:** சிவபிரான் காலன் அழியுமாறு அவனைக் காலால் உதைத்தார். தலை-மாலைகளை அணிந்துள்ளார். பொருத்தம் உடையவராய் வருகிறார். தம்மீது பாடல்கள் பாடி ஆடிப் பரவுவார்களுடைய உள்ளங்களில் சிவபிரான் நடனம் புரிகின்றார். அந்தச் சிவபிரான் எழுந்தருளியுள்ள திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

**குறிப்புரை:** காலன் மாளச் சாடி என மாறுக. சுவண்டாய் – பொருத்தமாய், பரவுவார் உள்ளத்து ஆடி – தியானிப்பவர் உள்ளத்து ஆடுபவன்.

Lord Civan kicked the God of death and killed. Wearing garlands on His head He walks majestically. He merrily dances in the souls (*உள்ளம்*) of those who hail Him by singing and dancing. Let us reach Thiru-ch-chottru-th-thurai where this Lord Civan is enshrined and offer worship to Him.

பெண்ணோர் பாக முடையார் பிறைச்சென்னிக்
கண்ணோர் பாகங் கலந்த நுதலினார்
எண்ணா தரக்க னெடுக்க வூன்றிய
அண்ணல் சோற்றுத் துறைசென் றடைவோமே. 8

பெண் ஓர்பாகம் உடையார், பிறைச் சென்னிக்
கண் ஓர்பாகம் கலந்த நுதலினார்,
எண்ணாது அரக்கன் எடுக்க ஊன்றிய
அண்ணல், சோற்றுத்துறை சென்று அடைவோமே.

peN OrpAkam uTaiyAr, piRaic cen2n2ik
kaN OrpAkam kalanta nutalin2Ar,
eNNAtu arakkan2 eTukka Un2Riya
aNNal, cORRuttuRai cen2Ru aTaivOmE.

**பொருள்:** சிவபிரான் உமையம்மையை ஒரு பாகமாக உடையவர்; பிறை அணிந்த சென்னியர்; தமது நெற்றியில் விளங்கும் மூன்றாவது கண்ணை உடையவர். இராவணன், பின் விளையும் தீமையை எண்ணாது, கயிலை மலையைப் பெயர்க்க முயன்ற பொழுது, அவனுடைய முனைப்பை அடக்க தன் கால்விரலை ஊன்றிய தலைமைத் தன்மை உடையவர். அவ்வகைச் சிவபிரானுடைய திருச்சோற்றுத்துறையைச் சென்றடைவோம்.

**குறிப்புரை:** பிறைச்சென்னி – பிறையை அணிந்த சிரம். எண்ணாது – பின்வரும் தீமையை ஆராயாமல். அண்ணல் – பெருமையிற் சிறந்தவன்.

Lord Civan has His consort Umaa Devi on the left part of His body frame. He gave protection to the moon on His head. He has a third eye on His forehead, which forms part of His body. Without realising the harmful consequences, the king of Sri Lanka, Dasakreevan (Raavana) tried to lift mount Kailas, Civan's abode. Lord Civan pressed the top of the mountain by His toe crushing the king and suppressed his

audacity. This Lord, Chief Civan, abides in Thiru-ch-chottru-th-thurai where we shall go and offer worship.

தொழுவா ரிருவர் துயர நீங்கவே
அழலா யோங்கி யருள்கள் செய்தவன்
விழவார் மறுகில் விதியான் மிக்கவெம்
எழிலார் சோற்றுத் துறைசென் றடைவோமே. 9

தொழுவார் இருவர் துயர நீங்கவே
அழல்ஆய் ஓங்கி அருள்கள் செய்தவன்,
விழவுஆர் மறுகில் விதியால் மிக்க எம்
எழில்ஆர் சோற்றுத்துறை சென்று அடைவோமே.

tozuvAr iruvar tuyaram nIgkavE
azal Ay Ogki aruLkaL ceytavan2,
vizavu Ar maRukil vitiyAl mikka em
ezil Ar cORRuttuRai cen2Ru aTaivOmE.

**பொருள்:** தம் செருக்கு அடங்கிச் சிவபிரானாகிய தம்மைத் தொழுத திருமால், பிரமன் ஆகிய இருவருக்கும், அழல் உருவாய் ஓங்கி நின்று அருளைச் செய்தார். சிவபிரான் விரும்பி உறையும் திருச்சோற்றுத்துறையில் திருவிழாக்கள் மிகுதியாக நிகழும். விழாக்கள் நிகழும் வீதிகளில் வேதவிதிகளை ஒழுங்காகப் பின்பற்றும் மக்கள் வாழ்கின்றார்கள். அவ்வாறு இறைவன் உறையும் திருச்சோற்றுத்துறையை நாம் சென்றடைவோம்.

**குறிப்புரை:** தொழுவார் இருவர் – தம் செருக்கு அடங்கித் தொழுத அயனும் திருமாலும். மறுகு – வீதி. விதி – வேதவிதி.

Shedding their vanity Thirumaal and Brahmaa worshipped Lord Civan who stood as a tall column of fire. Later He graced them and removed their sorrow. This Lord Civan likes to dwell in Thiru-ch-chottru-th-thurai. Here, in this town people who follow the Vedic ways of life, live in streets where temple festivals are many. Let us go and reach this town and offer worship to Lord Civan who is enshrined therein.



அன்பிலாலந்துறை (அன்பில்) – சத்தியவாகீஸ்வரர் – சோழநாட்டு வடகரைத் தலம்

**Sri Satya Vackisurar Temple - Anbilaalanthurai (Anbil) - Tamil Nadu.**



திருவையாறு – பஞ்சநதேஸ்வரர் – சோழநாட்டு வடகரைத் தலம்

**Sri Aiyaarappar Temple - Tiruvaiyaaru - Tamil Nadu.**



திருப்பனையூர் – சௌந்தரேஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Soundariya Nathar Temple - Tiruppanaiyur, Tamil Nadu**



மயிலாடுதுறை – மாயூரநாதர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Mayuranathar Temple - Mayiladuthurai (Mayavaram), Tamil Nadu.**

கோது சாற்றித் திரிவா ரமண்குண்டர்
ஓது மோத்தை யுணரா தெழுநெஞ்சே
நீதி நின்று நினைவார் வேடமாம்
ஆதி சோற்றுத் துறைசென் றடைவோமே. 10

கோது சாற்றித் திரிவார், அமண்குண்டர்,
ஓதும் ஒத்தை உணராது எழு, நெஞ்சே!
நீதி நின்று நினைவார் வேடம்ஆம்
ஆதி சோற்றுத்துறை சென்று அடைவோமே.

kOtu cARRit tirivAr, amaN kuNTar,
Otum Ottai uNarAtu ezu, nenjcE!
nIti nin2Ru nin2aivAr vETam Am
Ati cORRuttuRai cen2Ru aTaivOmE.

**பொருள்:** மனமே! குற்றங்களையே பலகாலும் சொல்லித் திரிபவராகிய சமண் குண்டர்கள் ஓதுகின்ற வேதத்தை அறிய முயல வேண்டாம். சிவாகம நெறி நின்று, நினைப்பவர் கருதும் திருவுருவோடு வெளிப்பட்டருளும் முதல்வனாகிய சிவபிரானது திருச்சோற்றுத்துறையை நாம் சென்றடைவோம்.

**குறிப்புரை:** கோது – குற்றம். ஓதும் ஒத்தை – ஓதுகின்ற பிடக வேதத்தை. நீதி நின்று – சிவாகம நெறிக்கண் நின்று. நினைவார் வேடம் ஆம் ஆதி – தியானிப்பவர்கள் தியானித்த உருவிற்சென்று அருளும் முதல்வன்.

The Samanars roam about preaching falsehood and chanting their own Vedic Texts (Peedakam - பீடக வேதம்). O! Companions!! do not try to understand their utterances. People who follow the principles of Saiva Aagamaas and pray to Lord Civa will get the very vision they desire. This Lord Civan resides in Thiru-ch-chottru-th-thurai. Let us go and reach this place and offer worship to Lord Civan who is enshrined therein.

அந்தண் சோற்றுத் துறையெம் மாதியைச்
சிந்தை செய்ம்மி னடியா ராயினீர்
சந்தம் பரவு ஞான சம்பந்தன்
வந்த வாறே புனைதல் வழிபாடே. 11

அம் தண் சோற்றுத்துறை எம் ஆதியைச்
சிந்தை செய்ம்மின், அடியார் ஆயினீர்!
சந்தம் பரவு ஞானசம்பந்தன்
வந்தஆறே புனைதல் வழிபாடே.

am taN cORRuttuRai em Atiyaic
cintai ceymmin2, aTiyar Ayin2Ir!
cantam paravu njAn2acampantan2
vanta ARE pun2aital vazipATE.

**பொருள்:** அடியார்களாக உள்ளவர்களே! அழகு, தண்மை ஆகியவற்றோடு விளங்கும் திருச்சோற்றுத்துறையில் எழுந்தருளிய எம் முதல்வனாகிய சிவபிரானை மனத்தால் தியானம் செய்யுங்கள். சந்த இசையில் ஞானசம்பந்தன் பாடிய இந்தத் திருப்பதிகத்தைப் (அவர்) பிள்ளையார் பாடியவாறு பாடிப் பரவுதலே சிவபிரானுக்கு நாம் செய்யும் வழிபாடு ஆகும்.

**குறிப்புரை:** அடியாராகவுள்ளீர்! சோற்றுத்துறை ஆதியைத் தியானியுங்கள். அதற்குரிய வழிபாடாவது ஞானசம்பந்தன் திருவுள்ளத்து வந்தவாறு அமைந்த இப்பதிகத்தைப் பாடிப் புனைதலே என்பது. வந்தவாறே என்றது, இவை இறைவன் திருவுள்ளத்து நின்று உணர்த்த எழுந்த உரைகள் என்பதை விளக்கியவாறு.

O! Ye devotees!! Contemplate on the primal Lord enshrined in the cool and serene Thiru-ch-chottru-th-thurai and sing this hymn, in metrical notes as was done by Gnaanasambandan. This indeed constitutes true adoration to Lord Civan.

**Note:** Chhandas – Metre.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*28ஆம் பதிகம் முற்றிற்று*
End of 28th Hymn

உ
சிவமயம்

# 29. திருநறையூர்ச்சித்தீச்சரம்

## திருத்தலவரலாறு:

திருநறையூர்ச்சித்தீச்சரம் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரி தென்கரைத் தலம் ஆகும். கும்பகோணம் நாச்சியார் கோவில் பேருந்தின் வழியே நறையூரை அடையலாம். தலத்தின் பெயர் திருநறையூர். ஆலயத்தின் பெயர் சித்தீச்சரம். சித்தர்கள் வழிபட்டுப் பேறுபெற்ற இடமாதலின் இப்பெயர் பெற்றது. இறைவன் சித்தி நாதர். அம்மை அழகம்மை. பிள்ளையார் ஆண்ட பிள்ளையார். இங்கு வழிபட்டுய்ந்தோர் குபேரன், தேவர்கள், கந்தருவர்கள் ஆகியோர். தீர்த்தம் பிரம தீர்த்தம். இது கோயிலுக்கு வடபால் உள்ளது. தேன்சித்தி தீர்த்தம் என்ற ஒன்றும் உள்ளது என்பர்.

## கல்வெட்டு:

இத்தலத்தில் அரசியலார் படியெடுத்த கல்வெட்டுக்கள் 24 உள்ளன. அவற்றுள், முதல் இராஜராஜன் காலம் முதல் மூன்றாம் குலோத்துங்கன் காலம் வரையில் உள்ள சோழ மன்னர்களின் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. கி.பி. 1118 முதல் 1135 வரை ஆண்ட விக்கிரமனே இத்தலத்தில் மிக ஈடுபாடுடையவன் என்பது தெரிகின்றது. இங்குக் குறிக்கப் பெற்ற அரசர்கள் முதலாம் இராஜராஜன், இரண்டாம் வீரராஜேந்திரன், முதலாம் குலோத்துங்கன், இரண்டாம் குலோத்துங்கன், மூன்றாம் குலோத்துங்கன், விக்ரம சோழன், இரண்டாம் இராஜராஜன், இரண்டாம் இராஜாதிராஜன். இவைகளில், இவ்வூர் க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுத் திருநறையூர் நாட்டுத் திருநறையூர் எனவும், அருண்மொழித் தேவவள நாட்டுத் திருநறையூர் எனவும், விக்கிரமன், முதலாம் குலோத்துங்கன் இவர்கள் காலத்துக் குலோத்துங்க சோழவள நாட்டுத் திருநறையூர் எனவும் பஞ்சவன் மாதேவியான சதுர்வேதி மங்கலத்துத் திருநறையூர் எனவும் குறிக்கப் பெற்றுள்ளது.

சுவாமி பெயர் சித்தநாதேஸ்வரமுடைய தேவர் எனவும், சித்தநாதேஸ்வரமுடையார் எனவும் வழங்கும். இங்குள்ள பிக்ஷாடன தேவர் சிறப்புடையார். இவருக்குத் திருநறையூர்ச் சிவப்பிராமணர் ஒருவர் 30 காசு பொன்னை நிவேதனத்திற்காக அளித்தார். இங்கு வழிபாட்டிற்காக வரும் சிவயோகிகட்கு உணவுக்காக மண்ணி நாட்டுக்கருப்பூர் உடையான் ஒருவர் நிலம் விட்டார். இத்தலத்துள்ள பிடாரிக் கோயிலுக்கு நிலம் விட்ட செய்தியும் குறிக்கப் பெறுகிறது. ஏனைய

கல்வெட்டுக்கள் விளக்குக்காகவும் நிவேதனத்திற்காகவும் பலர் நிலமும் பொன்னும் அளித்ததை அறிவிக்கின்றன.

**பதிக வரலாறு:**

குடவாயிலை வணங்கிப் பதிகம் பாடிய பிள்ளையார் 'ஊருலாவு' என்னும் நீடுதமிழ்த் தொடை புனைந்துகொண்டே வழிநடந்து திருநறையூரை அடைந்தார்கள். இதில் நறையூர் என்பது தலத்தின் பெயராகவும், சித்தீச்சரம் என்பது கோயிலின் பெயராகவும் குறிக்கப்பெறுகிறது. 'சித்தன் சித்தீச்சரம்' என இறைவன் திருநாமம் சித்தன் எனக் குறிக்கப் பெறுகிறது.

## 29. THIRU-NARAIYOOR – CHITH-THEECH-CHARAM

### THE HISTORY OF THE PLACE

The sacred place Thiru-naraiyoor - Chith-theech-charam is to the south of river Cauvery in Chola Naadu and can be reached by the Kumbakonam - Naachchiyaarkoyil bus. This place is known as Thirunaraiyoor and the temple is called Siddheechcharam. It got this name since Siddhars attained salvation by worshipping here. The God's name is Siddhinaathar and that of the Goddess is Azhakammai. The Vinaayakar here is known as Aanda Pillaiyaar. Kuberan, Dhevas and Gandharvas are among those who attained salvation by offering worship here. The holy ford is Birama Theerththam, which lies to the north of the temple. A Thensiddhi Theerththam is also said to exist.

### Stone Inscriptions

There are 24 inscriptions here, copied by the government epigraphists. These are seen to bring to the period of the reigns of Chola monarchs from Raajaraajan I through Kuloththungkan III. Vikkiraman, who ruled from 1118 to 1135 CE, is seen to be the king with the utmost interest in this temple. The inscriptions refer to the kings, Raajaraajan I, Veera Raajendhiran II. This site is named variously as: Thirunaraiyoor of Thirunaraiyoor Naadu in Kshaththiriya Sikaamani Valanaadu, Thirunaraiyoor of Arunmozhiththeva Valanaadu, Thirunaraiyoor of Kuloththungka Chola Valanaadu

during the reign of Vikkiraman and Kuloththungkan I, Thirunaraiyoor of Chathurvedhi Mangkalam in Panchavan Maadhevi.

The Lord's name is given as Siddhanaathesvaramudaiya Thevar and Siddhanaathesvaramudaiyaar. The Bhikshaatana Thevar here is of special importance. A Sivappiraamanar gifted 30 gold 'kaasu' for food offering to this deity. A Udaiyaan of Karuppoor in Manni Naadu gave land for feeding Sivayogis who come to offer worship here. The gift of land to the Pidaari temple here is also noted. Other inscriptions give information on the gift of lands and gold by many for lamps and food offering.

## INTRODUCTION TO THE HYMN

The saint hailed the Lord at Kudavaayil. Then, he proceeded to Naraiyoor - Chith-theech-charam.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 29. திருநறையூர்ச்சித்தீச்சரம்

## 29. THIRU-NARAIYOOR – CHITH-THEECH-CHARAM

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

ஊரு லாவு பலிகொண் டுலகேத்த
நீரு லாவு நிமிர்புன் சடையண்ணல்
சீரு லாவு மறையோர் நறையூரில்
சேருஞ் சித்தீச் சரஞ்சென் றடைநெஞ்சே. 1

ஊர் உலாவு பலி கொண்டு உலகு ஏத்த
நீர் உலாவு நிமிர் புன்சடை அண்ணல்,
சீர் உலாவு மறையோர் நறையூரில்
சேரும் சித்தீச்சரம் சென்று அடை - நெஞ்சே!

Ur ulAvu pali koNTu, ulaku Etta,
nIr ulAvum nimir pun2 caTai aNNal,
cIr ulAvum maRaiyOr naRaiyUril,
cErum cittIccuram cen2Ru aTai--nenjcE!

**பொருள்:** என்னுடைய நெஞ்சே! சிவபிரான், ஊர்கள்தோறும் உலாவுவதால் கிடைக்கும் உணவைப் பெற்றுக் கொள்கிறார். உலக மக்கள் போற்றி வழிபடக் கங்கைநீரைத் தம்

திருமுடியில் ஏற்றுள்ளார். கங்கை நீர் உலாவுகின்ற திருமுடியானது மேல்நோக்கிய சிவந்த முடியாக உள்ளது. திருநறையூரில் விளங்கும் சித்தீச்சரத்தில் தலைமைத் தன்மையுள்ள சிவபிரான் எழுந்தருளி இருக்கிறார். அந்த நகரில் சீருடைய மறையவர்கள் வாழ்கின்றனர். இவற்றை உணர்ந்து நெஞ்சே திருநறையூர்ச் சித்தீச்சரத்தைச் சென்றடைவாயாக.

**குறிப்புரை:** இப்பதிகம் நெஞ்சை நோக்கிச் சித்தீச்சரம் சென்றடை; சிந்தி; தெளி என்று அறிவுறுத்தியது. ஊர் உலாவு பலிகொண்டு – ஊரின்கண் உலாவுதலைச் செய்து பிச்சையேற்று. உலாவு என்பது முதனிலைத் தொழிற்பெயர். தலப் பெயர் நறையூர்; கோயிற் பெயர் சித்தீச்சரம்.

Lord Civan who gave protection to the river Ganges on His head is hailed by all the world. His matted hair is upraised and ruddy. He goes about begging for food in all towns. He is our Chief. O! Heart!! Go and reach Naraiyoor where He abides in the Chith-theech-charam temple and offer worship. In this town Vedic scholars abide in good numbers.

**Note:** Civan in this shrine is known as Siddhan. Vide verse 11, Eecchuram means shrine.

**காடு நாடுங் கலக்கப் பலிநண்ணி**
**ஓடு கங்கை யொளிர்புன் சடைதாழ**
**வீடு மாக மறையோர் நறையூரில்**
**நீடுஞ் சித்தீச் சரமே நினைநெஞ்சே.** **2**

***காடும் நாடும் கலக்கப் பலி நண்ணி,***
***ஓடு கங்கை ஒளிர்புன்சடை தாழ,***
***வீடும் ஆக மறையோர் நறையூரில்,***
***நீடும் சித்தீச்சரமே நினை - நெஞ்சே.***

kATum nATum kalakkap pali naNNi,
OTu kagkai oLir pun2 caTai tAza,
vITum Aka maRaiyOr naRaiyUril,
nITum cittIccuramE nin2ai--nenjcE!

**பொருள்:** நெஞ்சே! சிவபிரான், காட்டின்கண் முனிவர் குடில்களிலும், நாட்டின்கண் இல்லறத்தார் வீடுகளிலும் விரும்பிப் பலி ஏற்கிறார். ஓடிவரும் கங்கை தங்கிய ஒளிவீசும் சிவந்த சடைகள் தாழக் காட்சி அருளுகிறார். வினைவயத்தால் வந்த உடல்களை விடுத்து, முத்திப் பேற்றை அடைய விரும்பும் அந்தணர்கள் திருநறையூரில் வாழ்கின்றனர்.

அவ்வகைப்பட்ட திருநறையூரில் புகழால்நீடிய சித்சீச்சரத்தில் விளங்கும் பெருமானை நினைவாயாக.

**குறிப்புரை:** காடும் நாடும் கலக்க – காட்டிடமும், நாடும் தம்முட் கலக்க. ஆகம் வீடும் மறையோர் எனக்கூட்டி வினைவயத்தான் வந்த உடலைவிட்டு முத்தியெய்தும் அந்தணர் எனப் பொருள் கொள்க.

The rushing river Ganges dashes against the ruddy and radiant matted hair of Lord Civan bending it downwards. This Lord Civan goes about begging both in the cottages of sages living in the forests and in the houses of family people living in towns. In the town Naraiyoor - Chith-theech-charam, Vedic scholars who want to shed their worldly attachment and their physical body with an aim to attain heavenly bliss are living in good numbers. O! Heart!! Contemplate on Naraiyoor - Chith-theech-charam where Lord Civan abides.

கல்வி யாளர் கனகம் மழன்மேனி
புல்கு கங்கை புரிபுன் சடையானூர்
மல்கு திங்கட் பொழில்சூழ் நறையூரில்
செல்வர் சித்தீச் சரஞ்சென் றடைநெஞ்சே. 3

கல்வியாளர் கனகம் அழல் மேனி
புல்கு கங்கை புரி புன்சடையான் ஊர்,
மல்கு திங்கள் பொழில் சூழ், நறையூரில்
செல்வர் சித்தீச்சரம் சென்று அடை - நெஞ்சே!

kalviyALar, kan2akam azal mEn2i
pulku kagkai puri pun2 caTaiyAn2 Ur,
malku tigkaL pozil cUz, naRaiyUril
celvar cittIccuram cen2Ru aTai--nenjcE!

**பொருள்:** என்னுடைய நெஞ்சமே! திருநறையூர் பொன்னையும் தீயையும் ஒத்த திருமேனியை உடைய சிவபிரானுடைய ஊர். அந்தச் சிவபிரான் கங்கை தங்கும் முறுக்கேறிய சிவந்த சடையினை உடையவராய் விளங்குகிறார். மேலும், திருநறையூர் கல்வியாளர் நிறைந்ததாய் விளங்குகிறது. திங்கள் தங்கும் பொழில்கள் சூழ்ந்ததாய் விளங்குகிறது. அவ்வூரில் செல்வர் வணங்கும் சித்தீச்சரத்தைச் சென்றடைவாயாக.

**குறிப்புரை:** கனகம் அழன்மேனி – பொன்னையும் தீயையும் ஒத்த திருமேனி. கல்வியாளர் மல்கும் நறையூர் என இயைக்க.

Lord Civan's bodily frame is bright as Fire and Gold. His matted hair is twisted and ruddy where rests the Ganges river. He belongs to Naraiyoor - Chith-theech-charam. Vedic scholars are living in this town. It is surrounded by groves full of tall trees where the moon crawls through. O! Heart!! Go and reach Chith-theech-charam temple in the town of Naraiyoor where affluent people are worshipping Lord Civan of this temple.

நீட வல்ல நிமிர்புன் சடைதாழ
ஆட வல்ல வடிக ளிடமாகும்
பாடல் வண்டு பயிலு நறையூரில்
சேடர் சித்தீச் சரமே தெளிநெஞ்சே. 4

*நீட வல்ல நிமிர் புன்சடை தாழ*
*ஆட வல்ல அடிகள் இடம் ஆகும்,*
*பாடல் வண்டு பயிலும் நறையூரில்*
*சேடர் சித்தீச்சரமே தெளி - நெஞ்சே!*

nITa valla nimir pun2caTai tAza
ATa valla aTikaL iTam Akum,
pATal vaNTu payilum, naRaiyUril
cETar cittIccuramE teLi--nenjcE!

***பொருள்:*** நெஞ்சே! சிவபிரான் மேல்நோக்கி நீண்டு வளரவல்ல செஞ்சடைகள் தாழுமாறு ஆடுதலில் வல்ல அடிகள் ஆவார். திருநறையூரில் பாடுதலில் வல்ல வண்டுகள் நிறைந்து வாழும் வளமான சோலைகள் உள்ளன. அவ்வகைப்பட்ட திருநறையூரில் சிவபிரான் விரும்பி உறைகிறார். அங்கு சித்தீச்சரத்தைத் தெளிவாயாக.

**குறிப்புரை:** நீடவல்ல – மிகமேலும் வளரவல்ல. சேடர் – பெருமை உடையவர்.

Lord Civan's matted ruddy hair normally grows upwards and will stand erect. But it now hangs downwards even as He dances skillfully. In the lush gardens of Naraiyoor the bees proficient in music are living in good numbers. O! Heart!! Be clear in your mind about Lord Civan enshrined in nobility filled Chith-theech-charam temple.

Note: The Tamil word "Theli" is a verb. The noun form of this word is 'Thelivu'. 'Thelivu' is Nitchaya Buddhi; It is clarified consciousness. Thelivu leads to Civa-Gnaanam (Godly Knowledge).

உம்ப ராலு முலகின் னவராலும்
தம்பெ ருமைய ளத்தற் கரியானூர்
நண்பு லாவு மறையோர் நறையூரில்
செம்பொன் சித்தீச் சரமே தெளிநெஞ்சே. 5

உம்பராலும் உலகின்(ன்) அவராலும்
தம் பெருமை அளத்தற்கு அரியான் ஊர்,
நம்பு உலாவும் மறையோர் நறையூரில்
செம்பொன் சித்தீச்சரமே தெளி - நெஞ்சே!

umparAlum ulakin2(n2) avarAlum
tam perumai aLattaRku ariyAn2 Ur,
nampu ulAvum maRaiyOr, naRaiyUril
cempon2 cittIccuramE teLi--nenjcE!

***பொருள்:*** நெஞ்சே! சிவபிரான் தேவர்களாலும், உலகிடை வாழும் மக்களாலும் தனது பெருமை அளவிட்டுக் கூறுதற்கு அரியவர். அவருடைய ஊர் திருநறையூர். அங்கு நட்புத் தன்மையில் மேம்பட்ட மறையவர்கள் வாழுகின்றனர். அந்தத் திருநறையூரில், சிவபிரான் எழுந்தருளிய செம்பொன் மயமான சித்தீச்சரத்தையே தெளிவாயாக.

***குறிப்புரை:*** உம்பர் – தேவர். உலகின்னவர் – மக்கள். உம்பர்கள் மலத்தான் மறைப்புண்டு இன்பத்துள் மயங்கி இறைவனை மறந்து, தம் பெருமை ஒன்றையே நினைத்திருப்பவராதலின் அவர்களால் இவன் பெருமை அளக்க முடியாததாயிற்று; மக்கள் மலத்தான் கட்டுண்டு ஆன்ம போதமிக்கிருத்தலின் மக்களால் அளக்க முடியாததாயிற்று.

Devas as well as people living in this world could not comprehend, elucidate or codify the glory of Lord Civan. Vedic scholars who are having high companionship feelings are living in good number in Naraiyoor. In such a place Lord Civan manifests Himself in the dazzling golden atmosphere of the Chith-theech-charam temple. O! Heart!! Stand clear in your mind about Chith-theech-charam where Lord Civan abides.

**Note:** The first word of the third line (in Tamil verse) is nambu. According to Panditha Vidwan T.V. Gopala Iyer, the word used by other editors is 'natpu' (friendship, friendliness). Nambu means love/desire.

கூரு லாவு படையான் விடையேறி
போரு லாவு மழுவா னனலாடி
பேரு லாவு பெருமா னறையூரில்
சேருஞ் சித்தீச் சரமே யிடமாமே. 6

கூர் உலாவு படையான், விடை ஏறி,
போர் உலாவு மழுவான், அனல்ஆடி,
பேர் உலாவு பெருமான், நறையூரில்
சேரும் சித்தீச்சரமே இடம் ஆமே.

kUr ulAvu paTaiyAn2, viTai ERi,
pOr ulAvu mazuvAn2, an2al ATi,
pEr ulAvu perumAn2, naRaiyUril
cErum cittIccuramE iTam AmE.

**பொருள்:** சிவபிரான், கூர்மைமிக்க சூலப்படையை உடையவன். அவன் விடைமீது ஏறிப் போருக்குப் பயன்படும் மழுவாயுதத்தை ஏந்தியுள்ளான். அனல்மீது நின்றாடுகிறான். ஏழுலகிலும் தன்புகழ் விளங்க நிற்கிறான். பெருமைமிக்க அந்தச் சிவபிரான் திருநறையூரில் விளங்கும் சித்தீச்சரமே நாம் வழிபடுவதற்குரிய இடமாகும்.

**குறிப்புரை:** கூர் உலாவு படை – கூர்மை மிக்க சூலப்படை. பேர் – புகழ். நறையூரில் சேரும் இடம் சித்தீச்சரம் ஆம் எனக்கூட்டுக.

Lord Civan rides the Bull. He holds in His hand the sharp trident. He also holds the war weapon Mazhu (*மழு ஆயுதம்*) in another hand. He dances in the fire. He is hailed in all the seven worlds. He abides in Naraiyoor - Chith-theech-charam temple which is verily the right place for worship.

அன்றி நின்ற வவுணர் புரமெய்த
வென்றி வில்லி விமலன் விரும்புமூர்
மன்றில் வாச மணமார் நறையூரில்
சென்று சித்தீச் சரமே தெளிநெஞ்சே. 7

அன்றி நின்ற அவுணர் புரம் எய்த
வென்றி வில்லி விமலன் விரும்பும் ஊர்,
மன்றில் வாச மணம் ஆர் நறையூரில்
சென்று சித்தீச்சரமே தெளி - நெஞ்சே!

an2Ri nin2Ra avuNar puram eyta
ven2Ri villi--vimalan2--virumpum Ur,
man2Ril vAca--maNam Ar, naRaiyUril
cen2Ru cittIccuramE teLi--nenjcE!

**பொருள்:** நெஞ்சே! சிவபெருமான் தன்னோடு வேறுபட்டு நிற்கும் அவுணர்களின் முப்புரங்களையும் எய்தழித்தவன். அந்த வெற்றியோடு கூடிய வில்லை உடையவன். குற்றமற்றவன். அவன் விரும்பும் ஊர் திருநறையூர். அது மணம் நிலைபெற்று வீசும் பொது மன்றங்களை உடையது. திருநறையூருக்குச் சென்று, அங்குப் பெருமான் எழுந்தருளிய சித்தீச்சரத்தைத் தெளிந்து வழிபடுக.

**குறிப்புரை:** அன்றி – வேறுபட்டு. மன்றில் – பொதுச்சபைகளில்.

Lord Civan is Vimalan (*விமலன்*) (embodiment of purity and blemishless state). He with His victorious bow destroyed the three citadels of the die-hard Asuraas who differ from Civan's concepts. This Lord Civan loves to abide in the temple Chith-theech-charam in the town of Naraiyoor where fragrance pervades permanently in the public forum.

**Note:** Vimalan - the One who is free for ever from three 'malams'.

அரக்க னாண்மை யழிய வரைதன்னால்
நெருக்க வூன்றும் விரலான் விரும்புமூர்
பரக்குங் கீர்த்தி யுடையார் நறையூரில்
திருக்கொள் சித்தீச் சரமே தெளிநெஞ்சே. **8**

*அரக்கன் ஆண்மை அழிய வரை தன்னால்*
*நெருக்க ஊன்றும் விரலான் விரும்பும் ஊர்,*
*பரக்கும் கீர்த்தி உடையார், நறையூரில்-*
*திருக் கொள் சித்தீச்சரமே தெளி - நெஞ்சே!*

arakkan2 ANmai aziya varaitan2n2Al
nerukka Un2Rum viralAn2 virumpum Ur,
parakkum kIrtti uTaiyAr, naRaiyUril--
tiruk koL cittIccuramE teLi--nenjcE!

**பொருள்:** நெஞ்சே! சிவபிரான் இராவணனுடைய வலிமை கெடுமாறு கால்விரலை ஊன்றி கயிலை மலையால் அடர்த்தவன். அவன் விரும்புவதும், பரவிய புகழார் வாழ்வதும் ஆகிய திருநறையூரில் விளங்கும் சிவபிரானது சித்தீச்சரத்தைத் தெளிவாயாக.

**குறிப்புரை:** பரக்குங்கீர்த்தி – மேலும் மேலும் பரவும் புகழ். திரு – சிவஞானம்.

Lord Civan has that strong toe by which He pressed the top of mount Kailas and destroyed the valour of the king of Sri Lanka. This Lord Civan gracefully manifests Himself in the temple Chith-theech-charam situated in Naraiyoor where famed people are living in good numbers. O! Heart!! Go into the details of the glory of Lord Civan enshrined therein.

ஆழி யானு மலரி னுறைவானும்
ஊழி நாடி யுணரார் திரிந்துமேல்
சூழு நேட வெரியா மொருவன்சீர்
நீழல் சித்தீச் சரமே நினைநெஞ்சே. 9

*ஆழியானும் அலரின் உறைவானும்*
*ஊழி நாடி உணரார் திரிந்து, மேல்*
*சூழும் நேட, எரி ஆம் ஒருவன் சீர்*
*நீழல் சித்தீச்சரமே நினை - நெஞ்சே!*

AziyAn2um alarin2 uRaivAn2um
Uzi nATi uNarAr tirintu, mEl
cUzum nETa, eri Am oruvan2 clr
nlzal cittlccuramE nin2ai--nenjcE!

***பொருள்:*** நெஞ்சே! சக்கராயுதத்தை உடைய திருமாலும், மலரின் மேல் உறையும் நான்முகனும் சிவபிரானை உணரவில்லை. ஓர் ஊழிக்காலம் அளவும் திரிந்தனர். சுற்றும் முற்றும் மேலும் கீழுமாய்த் தேடினர். சிவபிரான் எரியுருவாய் ஓங்கி நின்றார். அவருடைய சிறப்புமிக்க இடமாகிய திருநறையூர்ச் சித்தீச்சரத்தை நினைவாய்.

***குறிப்புரை:*** ஊழி நாடி – ஒரூழிக்காலம் தேடி என்றது நீண்ட காலம் தேடியும் என்று அவர்கள் முயற்சியின் பயனற்ற தன்மையை விளக்கியவாறு. சூழும் – சுற்றிலும். நேட – தேட.

Both Thirumaal who wields the circular weapon (*ஆழி; சக்கராயுதம்*) and Brahmaa who is seated on the Lotus flower were unable to contemplate on (make out) Lord Civa, who stood as a big and tall column of fire, in spite of their serious search for aeon over the sky and down the earth. This Lord Civan manifests Himself in the highly glorious temple of Chith-theech-charam in Naraiyoor. O! Heart!! Think of Lord Civan of this hallowed place and meditate on Him.

மெய்யின் மாசர் விரிநுண் டுகிலிலார்
கையி லுண்டு கழறு முரைகொள்ளேல்
உய்ய வேண்டி லிறைவன் னறையூரில்
செய்யுஞ் சித்தீச் சரமே தவமாமே. 10

மெய்யின் மாசர் விரி நுண்துகில் இலார்,
கையில் உண்டு கழறும் உரை கொள்ளேல்!
உய்ய வேண்டில் இறைவன் நறையூரில்
செய்யும் சித்தீச்சரமே தவம் ஆமே.

meyyin2 mAcar, viri nuN tukil ilAr,
kaiyil uNTu kazaRum urai koLLEl!
uyya vENTil, iRaivan2 naRaiyUril
ceyyum cittIccuramE tavam AmE.

**பொருள்:** சமணர்கள் உடம்பில் அழுக்கு உடையவர்கள். விரித்துக் கட்டும் நுண்ணிய ஆடைகளை அணியாதவர்கள். கைகளில் பலியேற்று உண்டு திரிபவர்கள். அவர்கள் இடித்துக்கூறும் உரைகளைக் கொள்ளாதீர். நீர் இப்பிறப்பில் உய்திபெற விரும்பினால் சிவபிரான் எழுந்தருளிய திருநறையூரில் செய்தமைத்த சித்தீச்சரத்தைச் சென்று வழிபடுமின். அதுவே சிறந்த தவமாம்.

**குறிப்புரை:** மாசர் – அழுக்குடையவர். துகிலிலார் – திகம்பரர். சித்தீச்சரமே தவமாம் செய்யும் எனக்கூட்டுக.

Ye companions! Do not listen to the vigorous preaching of Samanars who roam about with dirt on their body and without any proper dress. They move about begging for alms, receive the food in their hands and eat it. If you aspire to have salvation in this very birth itself, go to Chith-theech-charam in Naraiyoor and worship Lord Civan who manifests Himself there. This indeed is the right penance one can do.

மெய்த்து லாவு மறையோர் நறையூரில்
சித்தன் சித்தீச் சரத்தை யுயர்காழி
அத்தன் பாத மணிஞான சம்பந்தன்
பத்தும் பாடப் பறையும் பாவமே. 11

மெய்த்து உலாவும் மறையோர் நறையூரில்
சித்தன் சித்தீச்சரத்தை உயர் காழி
அத்தன் பாதம் அணி ஞானசம்பந்தன்
பத்தும் பாடப், பறையும் பாவமே.

meyttu ulAvum maRaiyOr naRaiyUril
cittan2 cittIccurattai uyar kAzi
attan2 pAtam aNi njAn2acampantan2
pattum pATa, paRaiyum, pAvamE.

**பொருள்:** திருநறையூரில் வாய்மையே பேசி வாழும் மறையவர்கள் இருக்கிறார்கள். அங்குச் சித்தன் என்ற திருநாமத்தோடு சிவபிரான் விளங்குகிறார். மேலான காழிமாநகரில் விளங்கும் சிவபிரானுடைய திருப்பாதங்களைத் தமது திருமுடிக்கு அணியாகக் கொண்ட ஞானசம்பந்தன் மேலான சித்தீச்சரத்தைப் பாடிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் பாடிப் பரவினால் பாவங்கள் நீங்கும்.

**குறிப்புரை:** மெய்த்து – உண்மையான வாழ்வுடன். உண்மை கூறி என்றுமாம். சித்தன் இத்தலத்து இறைவன் திருநாமம். காழியத்தன் பாதம் அணி ஞானசம்பந்தன் – சீகாழியில் தோணியப்பரது திருவடி ஞானம் பெற்ற சம்பந்தன்.

Vedic scholars who are morally upright who never cheat, lie or break the law are living in Naraiyoor. The Lord's name in this place is known as Chith-than (*சித்தன்*). Gnaanasambandan bears, as a gem-wear for his head, the Holy Feet of Lord Civan, who manifests Himself in the glorious Seekaazhi temple. Those who can chant these ten verses of Thiru Gnaanasambandan and pay obeisance to Lord Civan can get rid of their sins.

**Note:** Siddhan (Siddhaa in Sanskrit): Civa is the siddhas par excellence - vide Ellaam Valla Siddharaana Patalam" in his Thiru-Vilaiyaadal-Puraanam by Paranjothi Munivar.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*29ஆம் பதிகம் முற்றிற்று*
**End of 29th Hymn**

உ
சிவமயம்

# 30. திருப்புகலி

## திருத்தலவரலாறு:

முதல் பதிகம் பார்க்க.

# 30. THIRU-P-PUKALI

## THE HISTORY OF THE PLACE

See First Hymn.

## INTRODUCTION TO THE HYMN

Maark-kandeyar (மார்க்கண்டேயர்) was born of Mrikandu ascetic (மிருகண்டு முனிவர்) and his wife Maruthu-vathi (மருத்துவதி). He came to know from his parents that his life period was only sixteen years. As a staunch devotee of Lord Civan, he used to perform severe penance and prayer regularly everyday. On the appointed day of the end of his life, he performed his routine worship of Lord Civan without caring for his fate. Yamaa came to snatch away Maarkandeyar's life (as per his fate) and threw the special rope known as Paasa-k-kayir (பாசக்கயிறு) at him. It fell over the Civa Lingam. The Civa Lingam burstout and Lord Civa came out of it and kicked Yaman to death. Also He graced Maarkandeyar with a boon that he will live forever without ageing beyond the level of 16 years.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 30. திருப்புகலி

## 30. THIRU-P-PUKALI

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

விதியாய் விளைவாய் விளைவின் பயனாகிக்
கொதியா வருகூற் றையுதைத் தவர்சேரும்
பதியா வதுபங் கயநின் றலரத்தேன்
பொதியார் பொழில்சூழ் புகலிந் நகர்தானே. 1

**விதிஆய், விளைவுஆய், விளைவின் பயன்ஆகிக்,**
**கொதியா வரு கூற்றை உதைத்தவர் சேரும்**
**பதிஆவது-பங்கயம் நின்று அலரத் தேன்**
**பொதிஆர் பொழில் சூழ் புகலி(ந்) நகர்தானே.**

viti Ay, viLaivu Ay, viLaivin2 payan2 Aki,
kotiyA varu kURRai utaittavar cErum
pati Avatu--pagkayam nin2Ru alara, tEn2
poti Ar pozil cUz pukali(n) nAkartAn2E.

***பொருள்:*** மார்க்கண்டேயருக்கு வயது பதினாறு என்பது விதித்த விதியாக இருந்தது. அதன் காரணமாக மரணநேரம் நெருங்கியது. அவர் இறைவழிபாடு செய்ததன் காரணமாக, விதியின் பயனாய்ச் சிவபிரான் தானே வெளிப்பட்டார். வெளிப்பட்டு மார்க்கண்டேயரை இழுத்துச் செல்லச் சினந்து வந்த கூற்றுவனை உதைத்து அருளினார். அவ்வகைப்பட்ட சிவபிரான் எழுந்தருளிய தலம் திருப்புகலி. அந்தத் தலம் தாமரை மலர்கள் மலர்ந்த நீர் நிலைகளும், தேன் கூடுகள் நிறைந்த பொழில்களும் சூழ்ந்தது ஆகும்.

***குறிப்புரை:*** இது கூற்றுதைத்தார் பதியாவது புகலிநகர் என்கின்றது. விதியாய் – மார்க்கண்டற்கு வயது பதினாறு என்ற விதியாய். விளைவாய் – அவ்விதியின் விளைவாகிய மரணமாய். விளைவின் பயன் ஆகி – மரணத்தின் பயனாகித் தான் வெளிப்பட்டு. கொதியா – சினந்து. கொதியாவருகூற்றை உதைத்தவர் என்றது, இங்ஙனம் விதியென்னும் நியதியைத் துணைபற்றி வந்த கூற்றுவன் அந்நியதிக்கும் காரணம் இறைவன் என்பதை உணர்ந்துகொள்ள வைத்த பெருங்கருணை.

The fate for Maarkandeyar was only 16 years of life on this earth. As the outcome of this fate, Yaman came to snatch away his life. Ultimately Lord Civan appeared and kicked Yaman, who came driven or impelled by soaring wrath, to cause

death. This Lord Civan manifests Himself in Thiru-p-pukali. This city is surrounded by pools full of bloomed lotus flowers as well as forests full of blue lilies.

**Note:** Maarkandeyar was destined to live for only sixteen years. Yaman came to snatch his life at the ordained hour. The boy lived a life of total surrender unto Civan. Yet, Yaman proceeded to act undaunted. This ended in the death of Death.

ஒன்னார் புரமூன் றுமெரித் தவொருவன்
மின்னா ரிடையா ளொடுங்கூ டியவேடந்
தன்னா லுறைவா வதுதண் கடல்சூழ்ந்த
பொன்னார் வயற்பூம் புகலிந் நகர்தானே. 2

ஒன்னார் புரம் மூன்றும் எரித்த ஒருவன்
மின் ஆர் இடையாளொடும் கூடிய வேடம்-
தன்னால் உறைவுஆவது-தண்கடல் சூழ்ந்த
பொன் ஆர் வயல் பூம் புகலி(ந்) நகர் தானே.

on2n2Ar puram mUn2Rum eritta oruvan2
min2 Ar iTaiyALoTum kUTiya vETam--
tan2n2Al uRaivu Avatu--taNkaTal cUznta
pon2 Ar vayal pUm pukali(n) nAkartAn2E.

**பொருள்:** சிவபிரான், பகைவராய் மாறிய அசுரர்களின் முப்புரங்களையும் எரித்து அழித்தார். மின்னல் போன்ற இடையினை உடைய உமையன்னையோடு கூடியவர். அவர் அன்னை உமையோடு சேர்ந்த திருவுருவாய் எழுந்தருளிய இடம் திருப்புகலியாகும். அந்தத் தலம் குளிர்ந்த கடல் ஒரு புறம் சூழ, பொன் போன்ற நெல்மணிகள் நிறைந்த வயல்களை உடையது.

**குறிப்புரை:** இது திரிபுரம் எரித்த பெருமான் தேவியோடு எழுந்தருளியிருக்கும் இடம் புகலி என்கின்றது. ஒன்னார் – பகைவர். வேடந்தன்னால் – வேடத்தோடு. உறைவாவது – உறையும் இடமாவது புகலி நகர் என்க.

Lord Civan destroyed by fire the three fortresses built in the sky by Asuraas who turned hostile towards him. He manifests Himself in Thiru-p-pukali along with His consort Umaa Devi whose waist is thin and narrow like a lightning. On one side of the town there exists the sea with its cool waters. There are paddy fields all around the area where plenty of sumptuous paddy glitters like gold.

வலியின் மதிசெஞ் சடைவைத் தமணாளன்
புலியின் னதள்கொண் டரையார்த் தபுனிதன்
மலியும் பதிமா மறையோர் நிறைந்தீண்டிப்
பொலியும் புனற்பூம் புகலிந் நகர்தானே. 3

*வலிஇல் மதி செஞ்சடை வைத்த மணாளன்,*
*புலியின் அதள் கொண்டு அரை ஆர்த்த புனிதன்,*
*மலியும் பதி - மா மறையோர் நிறைந்து ஈண்டிப்*
*பொலியும் புனல் பூம் புகலி(ந்) நகர் தானே.*

vali il mati cenjcaTai vaitta maNALan2,
puliyin2 ataL koNTu arai Artta pun2itan2,
maliyum pati–mA maRaiyOr niRaintu INTip
poliyum pun2al pUm pukali(n) nAkartAn2E.

**பொருள்:** சிவபிரான், கலைகளாகிய வலிமை குறைந்த பிறைமதியைச் செஞ்சடைமீது வைத்துள்ள மணாளன் ஆவார். அவர் புலியின் தோலை இடையில் கட்டிய புனிதன் ஆவார். அவ்வகைப் பட்ட சிவபிரான் விரும்பும் பதி அழகிய திருப்புகலி நகராகும். அங்கு மேம்பட்ட வேதியர்கள் நிறைந்துள்ளனர். மேலும், அது செறிந்து பொலியும் நீர்வளம் சான்றது.

**குறிப்புரை:** இது மதிசூடிய மணாளனாகிய, புலித்தோலரையார்த்த பெருமான் பதி புகலி என்கின்றது. வலியில் மதி – தேய்ந்து வலி குன்றிய பிறைமதி. தளர்ந்தாரைத் தாங்குதல் இறைவனியல்பு என்பது உணர்த்தியவாறு. அதள் – தோல்.

He is the handsome One who had placed on His ruddy, matted crest the weak and weaning moon; He is the holy One whose waist is covered over with a tiger-skin. He abides in the lovely Pukali endowed with plenty of water, where the modest Vedic scholars (*மாமறையோர்*) assemble in strength and perfection.

கயலார் தடங்கண் ணியொடும் மெருதேறி
அயலார் கடையிற் பலிகொண் டவழகன்
இயலா லுறையும் மிடமெண் டிசையோர்க்கும்
புயலார் கடற்பூம் புகலிந் நகர்தானே. 4

*கயல்ஆர் தடங்கண்ணியொடும்(ம்) எருது ஏறி*
*அயலார் கடையில் பலி கொண்ட அழகன்*
*இயலால் உறையும்(ம்) இடம் - எண்திசையோர்க்கும்*
*புயல் ஆர் கடல் பூம் புகலி(ந்) நகர்தானே.*

kayal Ar taTagkaNNiyoTum erutu ERi
ayalAr kaTaiyil pali koNTa azakan2
iyalAl uRaiyum(m) iTam--eN ticaiyOrkkum
puyal Ar kaTal pUm pukali(n) nAkartAn2E.

**பொருள்:** சிவபிரான், கயல்மீன் போன்ற பெரிய கண்களை உடைய உமையம்மையோடும் விடைமீது ஏறி காட்சி தருவார். அவர் அயலார் இல்லங்களில் பலிகொண்டருளும் அழகன் ஆவார். சிவபிரான் விரும்பித் தங்கும் இடம் திருப்புகலி நகராகும். அந்த நகர் எட்டுத் திசைகளில் உள்ளோரும் செவி சாய்த்துக் கேட்கும் இடிஓசையை எழுப்புகின்ற கார்மேகங்கள் தங்கும் கடலை அடுத்துள்ளதாகும்.

**குறிப்புரை:** இடபவாகனத்தில் அம்மையப்பராய், அயலார் மனை வாயிலில் பலிகொள்ளும் இறைவன் பதி புகலி என்கின்றது. கயலார் தடங்கண்ணி – மீனாட்சி. அயலார் – கன்மப் பிரமவாதிகளான தாருகாவனத்து ரிஷிகள். கடை – மனைவாயில். இயலால் – அழகோடு.

This charming Lord Civan along with His consort Umaa Devi, whose eyes are big and beautiful like the carp fish (*கயல்மீன்*) rides on the bull and receives alms from strangers' houses. Lord Civan manifests Himself in the well formed Pukali which is adjacent to the sea. Here in the seaside, black clouds gather, causing heavy rain and thunder. People living on all sides of this sea, listen to the noise of thunder with awe.
**Note:** Civa's consort is Meenaakshi (She whose eyes roll like carp fish).

காதார் கனபொற் குழைதோ டதிலங்கத்
தாதார் மலர்தண் சடையே றமுடித்து
நாதா னுறையும் மிடமா வதுநாளும்
போதார் பொழிற்பூம் புகலிந் நகர்தானே. 5

காதுஆர் கன பொன்குழை தோடு அது இலங்கத்,
தாதுஆர் மலர் தண்சடை ஏற முடித்து,
நாதான் உறையும் இடம் ஆவது - நாளும்
போது ஆர் பொழில் பூம் புகலி(ந்) நகர்தானே.

kAtu Ar kan2a pon2 kuzai tOTu atu ilagka,
tAtu Ar malar taN caTai ERa muTittu,
nAtAn2 uRaiyum iTam Avatu--nALum
pOtu Ar pozil pUm pukali(n) nAkartAn2E.

**பொருள்:** சிவபிரானுடைய காதுகளில் கனவிய பொன்னால் இயன்ற குழை, தோடு ஆகியன இலங்குகின்றன. அவர், மகரந்தம் மருவிய மலர்களைத் தண்ணிய சடையின்கண் பொருந்தச்

சூடியுள்ளார். மேலும் அவர், எல்லா உயிர்கட்கும் நாதனாக விளங்குகிறார். நாள்தோறும் புதிய பூக்கள் நிறைந்து விளங்கும் பொழில்கள் சூழ்ந்த புகலி நகரே சிவபிரான் உறையும் இடமாகும்.

**குறிப்புரை:** குழையுந் தோடுங் காதிற் கலந்திலங்கச் சடையை ஏறமுடித்தநாதன் உறையும் இடம் புகலி என்கின்றது. கன பொன்குழை – பொன்னாலாகிய கனவியகுழை. தாதார் மலர் – மகரந்தம் பொருந்திய மலர். ஏறமுடித்து – உயரத் தூக்கிக் கட்டி. நாதன் என்ற சொல் எதுகை நோக்கி நாதான் என நீண்டது. தண்சடை என்றமையால் குழையணிந்த பாகத்திற்கேற்பக் கங்கையணிந்து தண்ணிய சடையான செம்பகுதிச் சடையை உணர்த்தியது.

Lord Civan wears dazzling earrings made of solid gold in His ears (Kuzhai in His right ear - *குழை வலது காதிலும்;* Thodu in His left ear - *தோடு இடது காதிலும்*). He appropriately decorates His coll matted hair with pollen padded flowers. He manifests Himself in Pukali which is surrounded by lush gardens where daily new flowers blossom.

வலமார் படைமான் மழுவேந் தியமைந்தன்
கலமார் கடனஞ் சமுதுண் டகருத்தன்
குலமார் பதிகொன் றைகள்பொன் சொரியத்தேன்
புலமார் வயற்பூம் புகலிந் நகர்தானே. 6

வலம் ஆர் படை மான் மழு ஏந்திய மைந்தன்,
கலம் ஆர் கடல் நஞ்சு அமுது உண்ட கருத்தன்,
குலம் ஆர் பதி - கொன்றைகள் பொன் சொரியத், தேன்
புலம் ஆர் வயல் பூம் புகலி(ந்) நகர்தானே.

valam Ar paTai mAn2 mazu Entiya maintan2,
kalam Ar kaTal nanjcu amutu uNTa karuttan2,
kulam Ar pati--kon2RaikaL pon2 coriya, tEn2
pulam Ar vayal pUm pukali(n) nAkartAn2E.

**பொருள்:** சிவபிரான் வெற்றி பொருந்திய சூலப்படை, மான், மழு ஆகியவற்றை ஏந்திய வலிமை உடையவன் ஆவான். அவன் மரக்கலங்கள் உலாவும் கடலிடைத் தோன்றிய நஞ்சினை அமுதாக உண்டவன். அவ்வகைப்பட்ட சிவபிரான் அடியார் குழாத்தோடு உறையும் பதி திருப்புகலி நகராகும். அந்நகர் கொன்றை மலர்கள் பொன் போன்ற இதழ்களையும், மகரந்தங்களையும் சொரியத் தேன் நிலத்தில் பாயும் வயல்கள் உடையது.

**குறிப்புரை:** இது மான் மழுவேந்திய மைந்தன், கடல் நஞ்சமுண்ட தலைவன் பதி புகலி என்கின்றது. வலம் ஆர்படை – வெற்றி பொருந்திய சூலப்படை. கலம் – மரக்கலம். கருத்தன் – தலைவன். குலமார் பதி – மக்கள் கூட்டம் செறிந்த நகரம். புலம் – அறிவு.

The valorous Lord Civan holds in His hands victorious weapons such as the Trident and Battle axe (சூலப்படை and மழு). He holds a deer in another hand. He swallowed the poison which came out of the sea where ships are moving to and fro. This Lord Civan, along with His devotees, abides in Pukali. This town has lush gardens where Kondrai flowers having petals shining like gold, drop their pollen grains on the ground and their honey on the nearby fields.

கறுத்தான் கனலான் மதின்மூன் றையும்வேவச்
செறுத்தான் றிகழுங் கடனஞ் சமுதாக
அறுத்தா னயன்றன் சிரமைந் திலுமொன்றைப் 7
பொறுத்தா னிடம்பூம் புகலிந் நகர்தானே.

கறுத்தான், கனலால் மதில் மூன்றையும் வேவச்
செறுத்தான், திகழும் கடல் நஞ்சு அமுதாக;
அறுத்தான் அயன்தன் சிரம் ஐந்திலும் ஒன்றைப்
பொறுத்தான் இடம் பூம் புகலி(ந்) நகர்தானே.

kaRuttAn2, kan2alAl matil mUn2Raiyum vEva;
ceRuttAn2, tikazum kaTal nanjcu amutu Aka;
aRuttAn2, ayan2tan2 ciram aintilum on2Rai;
poRuttAn2; iTam--pUm pukali(n) nAkartAn2E.

**பொருள்:** சிவபிரான் மும்மதில்களும் கனலால் வெந்தழியுமாறு சினந்தான். அவன் கடலிடை விளங்கித் தோன்றிய நஞ்சை அமுதாக உண்டு, கழுத்தில் தரித்தவன். மேலும் அவன் பிரமனது ஐந்து தலைகளில் ஒன்றை அறுத்து, அதனைக் கையில் தாங்கியவன். அந்தச் சிவபிரான் எழுந்தருளிய இடம் அழகிய திருப்புகலி நகராகும்.

**குறிப்புரை:** புரம் எரித்து, நஞ்சுண்டு, பிரமன் சிரங்கொய்து வீரம் விளக்கிய தலைவன் பதி புகலி என்கின்றது. இப்பாட்டு அடிதோறும் பொருள் முற்றி வந்துள்ளது. கறுத்தான் – சினந்தவன். செறுத்தான் – கண்டத்தில் அடக்கியவன். வேவச்செறுத்தான், அமுதாகச் செறுத்தான். ஒன்றையறுத்தான், அதைப் பொறுத்தான் இடம் புகலி என முடிவு செய்க.

Lord Civan got angry and destroyed the three fortresses of the Asuraas. He swallowed the poison that came out of the sea, as though it was nectar and retained it in

His gullet. He cut off one of the five heads of Brahmaa and held it in His hand. This Lord Civan manifests Himself in the magnificent Pukali.

தொழிலான் மிகுதொண் டர்கடோத் திரஞ்சொல்ல
எழிலார் வரையா லன்றரக் கனைச்செற்ற
கழலா னுறையும் மிடங்கண் டல்கண்மிண்டிப்
பொழிலான் மலிபூம் புகலிந் நகர்தானே. 8

*தொழிலால் மிகு தொண்டர்கள் தோத்திரம் சொல்ல,*
*எழில்ஆர் வரையால் அன்று அரக்கனைச் செற்ற*
*கழலான் உறையும் இடம் - கண்டல்கள் மிண்டிப்,*
*பொழிலால் மலி பூம் புகலி(ந்) நகர்தானே.*

tozilAl miku toNTarkaL tOttiram colla,
ezil Ar varaiyAl an2Ru arakkan2aic ceRRa
kazalAn2 uRaiyum iTam--kaNTalkaL miNTi,
pozilAl mali pUm pukali(n) nAkartAn2E.

**பொருள்:** தாம் செய்யும் பணிகளால் மேம்பட்ட தொண்டர்கள் கயிலை மலையில் சிவபிரானைத் தோத்திரம் சொல்லிப் போற்றுகின்றனர். அந்தக் கயிலை மலையில் முன்னொரு காலத்தில் இராவணனைச் செற்ற திருவடிகளை உடையவன். அந்தச் சிவபிரான் உறையும் இடம் திருப்புகலி நகராகும். அது தாழை மரங்கள் செறிந்து விளங்கும் பொழில்கள் சூழ்ந்த நகராகும்.

**குறிப்புரை:** தொண்டர் தோத்திரஞ்சொல்ல இராவணனைச் செற்ற திருவடியை உடைய சிவன் பதி புகலி என்கின்றது. தொழிலால் மிகு தொண்டர்கள் – சரியை, கிரியை யாதிகளால் மிக்க அடியார்கள். எழில் – எழுச்சி; அழகுமாம். கண்டல் – தாழை.

Lord Civan's servitors (attendants), held in high state, because of their sincere services, hail Him by praying to Him and singing divine songs. Long ago, He crushed the king of Sri Lanka under the mount Kailas by pressing the mountain with the toe of His holy Feet. This Lord Civan manifests Himself in Pukali town surrounded by groves where screw pines have grown densely.

மாண்டார் சுடலைப் பொடிபூ சிமயானத்
தீண்டா நடமா டியவேந் தன்றன்மேனி
நீண்டா னிருவர்க் கெரியா யரவாரம்
பூண்டா னகர்பூம் புகலிந் நகர்தானே. 9

மாண்டார் சுடலைப் பொடி பூசி, மயானத்து
ஈண்டா, நடம்ஆடிய ஏந்தல், தன் மேனி
நீண்டான் இருவர்க்கு எரிஆய், அரவுஆரம்
பூண்டான் நகர் பூம் புகலி(ந்) நகர்தானே.

mANTAr cuTalaip poTi pUci, mayAn2attu
INTA, naTam ATiya Ental, tan2 mEn2i
nINTAn2 iruvarkku eri Ay, aravu Aram
pUNTAn2, nAkar--pUm pukali(n) nAkartAn2E.

**பொருள்:** சிவபிரான் இறந்தவர்களை எரிக்கும் சுடலையில் விளையும் சாம்பலை உடலில் பூசிக் கொள்கிறார். அந்த மயானத்தில் ஆடும் தலைவராகவும் இருக்கிறார். அவர் திருமால், பிரமன் பொருட்டுத் தம்மேனியை அழல் உருவாக்கி ஓங்கி நின்றார். பாம்பை மாலையாகத் தரித்துள்ள சிவபிரானுடைய நகர் அழகிய திருப்புகலிப் பதியாகும்.

**குறிப்புரை:** சுடலைப் பொடி பூசி, மயானத்தாடி, மாலயனுக்காக அக்கினி மலையாய் நீண்டு, அரவை யாரமாகப் பூண்டு விளங்கும் இறைவன் பதி புகலி என்கின்றது. மாண்டார் – இறந்தவர். பொடிபூசி, மயானத்தாடி என்றது எல்லாரும் அந்தம் எய்த, தாம் அந்தம் இல்லாதிருப்பவன் என்பதை விளக்கியது. ஏந்தல் – தலைவன். தன்மேனி இருவர்க்கு எரியா நீண்டான் எனக்கூட்டுக. அரவு ஆரம் பூண்டான் – பாம்பை மார்பில் மாலையாக அணிந்தவன்.

Lord Civan, who is our Chief, smears on His body the ashes of the dead in the cremation ground. He also stays and dances there. He soared up as a tall and big column of fire when Thirumaal and Brahmaa started to reach His Head and Feet. He wears the snake as garland on His body. This Lord Civan manifests Himself in the magnificent town Pukali.

உடையார் துகில்போர்த் துழல்வார் சமண்கையர்
அடையா தனசொல் லுவரா தர்களோத்தைக்
கிடையா தவன்றன் னகர்நன் மலிபூகம்
புடையார் தருபூம் புகலிந் நகர்தானே. 10

உடையார் துகில் போர்த்து உழல்வார், சமண்கையர்,
அடையாதன சொல்லுவர் - ஆதர்கள் - ஓத்தைக்
கிடையாதவன் தன் நகர் - நன் மலி பூகம்
புடை ஆர்தரு பூம் புகலி(ந்) நகர்தானே.

uTaiyAr tukil pOrttu uzalvAr, camaNkaiyar,
aTaiyAtan2a colluvar--AtarkaL--Ottaik
kiTaiyAtavan2 tan2 nAkar--nal mali pUkam
puTai Artaru pUm pukali(n) nAkartAn2E.

**பொருள்:** பௌத்தர்கள் கீழ் உடையோடு மெல்லிய ஆடையைப் போர்த்துத் திரிவார்கள். அவர்களும், சமணர்களும் கீழ்மக்கள். அவர்கள் பொருந்தாதவற்றைக் கூறுவார்கள். அந்தக் கீழோரின் வேதங்களுக்கு அகப்படாதவன் சிவபிரான். நன்கு செறிந்த பாக்கு மரச்சோலைகள் சூழ்ந்த திருப்புகலி நகரே அந்தச் சிவபிரானது நன்னகர்.

**குறிப்புரை:** புறச்சமயிகளாகிய சமணர், புத்தர் இவர்களின் வேதங்கட்குக் கிடையாத சிவனார் பதி புகலி என்கின்றது. உடையார் துகில் – உடுக்கத்தக்க துகில். போர்த்து – போர்வையாகப் போர்த்து. கையர் – கீழ்மக்கள். அடையாதன சொல்லுவர் – பொருந்தாதவற்றைச் சொல்லுவார்கள். ஆதர்கள் – கீழ்மக்கள். ஓத்து – வேதத்தை; என்றது பிடகம் முதலியவற்றிற்கு. வேற்றுமை மயக்கம். கிடையாதவன் – அகப்படாதவன். பூகம் – பாக்கு மரம்.

The Buddhists, covering their body with a cloth and roaming about here and there, are of low state. They and the low state Samanars will preach wrong doctrines. Lord Civan is beyond their reach. This Lord Civan manifests Himself in Pukali which is surrounded by dense arecanut groves.

**Note:** The scriptures of the Buddhists and the Samanars are not scriptures at all. These deny God.

இரைக்கும் புனல்செஞ் சடைவைத் தவெம்மான்றன்
புரைக்கும் பொழிற்பூம் புகலிந் நகர்தன்மேல்
உரைக்குந் தமிழ்ஞான சம்பந் தனொண்மாலை
வரைக்குந் தொழில்வல் லவர்நல் லவர்தாமே. 11

இரைக்கும் புனல் செஞ்சடை வைத்த எம்மான்தன்-
புரைக்கும் பொழில் பூம் புகலி(ந்) நகர் தன்மேல்
உரைக்கும் தமிழ் ஞானசம்பந்தன் ஒண்மாலை
வரைக்கும் தொழில் வல்லவர் நல்லவர் தாமே.

iraikkum pun2al cenjcaTai vaitta emmAn2 tan2--
puraikkum pozil--pUm pukali(n)nAkar tan2 mEl
uraikkum tamiz njAn2acampantan2 oN mAlai
varaikkum tozil vallavar nallavar tAmE.

**பொருள்:** சிவபிரான் ஆரவாரிக்கும் கங்கை நீரைத் தமது சிவந்த சடைமீது வைத்துள்ளார். அவர் எம் தலைவர். உயர்ந்த சோலைகளால் சூழப்பட்ட அழகிய திருப்புகலிப் பதி சிவபிரானுக்குரியது. அந்தப் பதியைக் குறித்துத் தமிழ்ஞானசம்பந்தன் உரைத்த அழகிய இப்பதிக மாலையைத் தமதாக்கி ஓதும் தொழில் வல்லவர் நல்லவர் ஆவர்.

**குறிப்புரை:** இம்மாலை பத்தும் தனக்கே உரியதாக்க வல்லவர் நல்லவராவர் என்கின்றது. புரைக்கும் – உயர்ந்திருக்கும். வரைக்கும் தொழில் – தம்மளவினதாக்கிக் கொள்ளுந் தொழில். எழுதுவிக்கும் தொழில் என்றுமாம். அளவுபடுத்தி யுரைக்கும் தொழில் எனவுமாம்.

The roaring Ganges river abides on our Lord Chief, Civan's red matted hair. Tamil Gnaanasambandan has sung this awe-inspiring hymn on Lord Civan of Pukali town. If eminent professional people could make this garland of verses as their own and chant them, they will be righteous in their life.

**Note:** Gnaanasambandan is the only Naayanaar whose name is prefixed with the word 'Tamizh'. He is known as Tamizh Aakarar. Aakaram is source / seat / abode / storehouse.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*30ஆம் பதிகம் முற்றிற்று*
End of 30th Hymn

உ
சிவமயம்

# 31. திருக்குரங்கணில்முட்டம்

## திருத்தலவரலாறு:

திருக்குரங்கணில்முட்டம் என்ற திருத்தலம் தொண்டை நாட்டுத் திருத்தலங்களில் ஒன்று. காஞ்சிபுரத்தில் இருந்து வந்தவாசி செல்லும் பேருந்துகளில் ஏறி, பாலாற்றைக் கடந்தவுடன் தூசி என்னும் இடத்தில் இறங்கி கிழக்கே 2 கி.மீ. சென்றால் கோயிலை அடையலாம். குரங்காகிய வாலியும், அணிலும், காகமும் வழிபட்டதால் இப்பெயர் பெற்றது. முட்டம் – காகம். இறைவன் திருநாமம் வாலி வழிபட்டதைக் காட்டும் சான்று, காக்கைமேடு, காக்கை வழிபட்டதைக் காட்டுவது. மூன்றின் உருவங்களும் சுதையால் ஆலய வாயிலில் அமைக்கப் பெற்றிருக்கின்றன. இறைவன் திருநாமம் வாலீசுவரர்; இறைவி பெயர் இறையார் வளையம்மை. இதனையே, 'இறையார் வளையாளை ஓர்பாகத்தடக்கி' எனப் பதிகம் அறிவிக்கிறது. தீர்த்தம் வாலி தீர்த்தம். இத்தலம் காஞ்சிபுரம் ஏகாம்பர நாதர் கோயிலில் இருந்து தெற்கே 12 கி.மீ. தூரத்தில் பாலாற்றின் தென்கரையில் இருக்கிறது.

## கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றியனவாக 6 கல்வெட்டுக்கள் உள்ளன. அவை கோநேரின்மை கொண்டான், குலோத்துங்கன், இராஷ்டிரகூட கன்னர தேவன், கிருஷ்ண தேவராயர் இவர்கள் காலத்தன. அவற்றால் இத்தலம் காளியூர்க் கோட்டத்து இருகழி நாட்டு மாவண்டூர்ப் பற்றத்துப் பல்லவபுரமான திருக்குரங்கணில் முட்டம் என்று குறிப்பிடப் பெறுகிறது. கடவுள் திருக்குரங்கணில் முட்டமுடைய நாயனார் என்றும், கொய்யாமலரீசுவர தேவர் என்றும் குறிப்பிடப் பெறுகிறார். பூஜா விருத்திக்காகச் சகம் 1451இல் கிருஷ்ண தேவ மகாராயர் பல்லவபுரம் கிராமத்தை அளித்தார். இராஷ்டிரகூட கன்னர தேவன் ஸ்ரீபலி பூசைக்காக நிலம் அளித்தான். சம்புவராயரால் சத்திமங்கலமாகிற அம்ம நல்லூர் கிராமத்தை நிவந்தமாகவிட நீறணிந்தான் சேதுராயனுக்கு உத்தரவிட்டான்.

## பதிக வரலாறு:

பிள்ளையார், திருவோத்தூரில் ஆண்பனையைப் பெண் பனையாக்கி, அமணர்களைச் சைவர்களாக்கித் திருமாகறல் என்னும் தலத்தை வணங்கியபின், குரங்கணின் முட்டத்தைச்

சேர்ந்தார். அங்கு, ஆதிமுதல்வர் தாளைவணங்கிக் 'குரங்கணில் முட்டம் தொழுநீர்மையர் துன்பமிலரே' எனச் சிறப்பித்து 'விழுநீர் மழுவாள்' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 31. THIRU-K-KURANGU-ANNIL-MUTTAM

### THE HISTORY OF THE PLACE

Thiru-k-kurangu-annil-muttam is one of the sacred places of Thondai Naadu. It can be reached by going two km east from Thoosi, which is in the Kaanchipuram to Vandhavaasi bus route, just past the Paalaaru bridge. It lies on the south bank of Paalaaru at 12 km south of Kaanchipuram. The temple got its name because Vaali the monkey (kurangu), a squirrel (anil) and a crow (muttam) offered worship here. The name of the God, Valeesvarar, is indicative of Vaali's worship and the name Kaakkai Madu' comes from the crow's worship. The temple entrance has the plaster images of the three. Valeesvarar is the God's name and Iraiyaar Valaiyammai is that of the Goddess. The verse 'iraiyaar valaiyaalai or paakaththadakki' signifies this. The sacred ford is called Vaali Theerththam.

### Stone Inscriptions

There are 6 inscriptions here, from the times of Konerinmaikondaan, Kuloththungkan, Raashtrakoota Kannara Thevan, and Krishnadeva Raayar. In the inscriptions, the temple is named as Thirukkurangkanilmuttam which is Pallavapuram of Maavandoorp Parram in Irukazhi Naadu of Kaaliyoork Kottam and the Lord as Thirukkurangkanil Muttamudaiya Naayanaar and Koyyaamalreesvara Thevar. Krishnadeva Raayar gifted the village of Pallavapuram in the Saka year 1451 for worship services. Raashtrakoota Kannara Thevan gave land for the service known as Sreebali Poojai. Sambuvaraayan issued an order to Neeranindhaan Sethuraayan to gift the village of Saththimangalam Ammanalloor.

**INTRODUCTION TO THE HYMN**

At Thiru-Votthur, the young-saint hailed Lord Civan, transformed male-palmyrah trees into female trees, converted the Samanars of that town to saivism and reached Thiru-marukal where he hailed Civa. Then he arrived at Kurang-kanil-muttam where the following hymn was sung by him.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 31. திருக்குரங்கணில்முட்டம் — 31. THIRU-K-KURANGU-ANNIL-MUTTAM

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

விழுநீர் மழுவாட் படையண் ணல்விளங்கும்
கழுநீர் குவளைம் மலரக் கயல்பாயும்
கொழுநீர் வயல்சூழ்ந் தகுரங் கணின்முட்டம்
தொழுநீர் மையர்தீ துறுதுன் பமிலரே. 1

விழுநீர் மழுவாள்படை, அண்ணல் விளங்கும் -
கழுநீர் குவளை(ம்) மலரக் கயல் பாயும்
கொழுநீர் வயல் சூழ்ந்த - குரங்கணில்முட்டம்
தொழும் நீர்மையர் தீதுஉறு துன்பம் இலரே.

vizunIr, mazuvAL paTai, aNNal viLagkum--
kazunIr kuvaLai(m) malarak kayal pAyum
kozunIr vayal cUznta--kuragkaNil muTTam
tozum nIrmaiyar tItu uRu tun2pam ilarE.

**பொருள்:** சிவபிரான், பெருமைக்குரிய கங்கையை முடிமிசை அணிந்தவர். மழுவாட் படையைக் கையில் ஏந்தியவர். அவர் உறைவது திருக்குரங்கணில் முட்டம் ஆகும். அத்தலம் கழுநீர், குவளை ஆகியன மலர்ந்தும், கயல்மீன்கள் துள்ளுமாறும் விளங்கும் நீர் நிலைகளை உடையது; செழுமையான வயல்களால் சூழப்பட்டது. இத்தனை சிறப்பு வாய்ந்தது திருக்குரங்கணில்முட்டம் ஆகும். இத்தலத்தைத் தொழுபவர் தீமையால் வரும் துன்பம் இல்லாதவர்கள் ஆவார்கள்.

**குறிப்புரை:** கங்கையை அணிந்தவரும், மழுவேந்தியவருமாகிய இறைவன் விளங்கும் இத்தலத்தைத் தொழுபவர் துன்பமிலர் என்கின்றது. விழுநீர் – பெருமையையுடை நீர், கங்கை. கொழுநீர் – வளமான நீர்.

தீதுறு துன்பம் – தீமையான்வரும் துன்பம்; பாவகன்மத்தான்வரும் துன்பம் என்பதாம். தீதுகழுவி ஆட்கொள்ளக் கங்கையையும், துன்பந்துடைக்க மழுப்படையையும் உடைய பெருமானாதலின் துன்பம் இலர் என்றார்.

The celebrated river Ganges abides in Lord Civan's hair. He holds the battle-axe in one of His hands. Lord Civan manifests Himself in Kurangu-anil-muttam where a good number of pools full of water exist; well-blossomed Kuwalai (குவளை) and other flowers have densely grown in these pools. The carp fishes leap and play in the water. The town is surrounded by fertile fields. All those that adore this shrine are freed from troubles brought about by evil deeds.

**Note:** Kurangu is monkey. Anil is squirrel. Muttam (Skt. Mushnam) is crow. A triad of these adored the Lord Civan in this town and gained salvation. In memory of this, the town came to be called Kurangu-anil-muttam.

Kuvalai: Water lily.

விடைசேர் கொடியண் ணல்விளங் குயர்மாடக்
கடைசேர் கருமென் குளத்தோங் கியகாட்டில்
குடையார் புனன்மல் குகுரங் கணின்முட்டம்
உடையா னெனையா ளுடையெந் தைபிரானே. 2

விடை சேர் கொடி அண்ணல் - விளங்கு, உயர் மாடக்
கடை சேர், கரு மென் குளத்து ஓங்கிய காட்டில்
குடை ஆர் புனல் மல்கு குரங்கணில்முட்டம்
உடையான்; எனை ஆள்உடை எந்தை பிரானே.

viTai cEr koTi aNNal--viLagku, uyar mATak
kaTai cEr, karu men2 kuLattu Ogkiya kATTil
kuTai Ar pun2al malku, kuragkaNil muTTam
uTaiyAn2; en2ai AL uTai entai pirAn2E.

**பொருள்:** சிவபிரான், திருக்குரங்கணில் முட்டத்தை உடையவன். அங்கு உயர்ந்து விளங்கும் மாடங்கள் உள்ளன. அவைகளின் கடைவாயிலைச் சேர்ந்து கரிய குளிர்ந்த (மெல்லிய) காடுகள் உள்ளன. அக்காடுகளின் இடையே குடைந்து ஆடுதற்குரிய நீர்நிலைகள் நிறைந்து உள்ளன. இவ்வளவு சிறப்புக்கள் நிறைந்த திருக்குரங்கணில் முட்டத்தை உடையவன்,

விடைக்கொடி அண்ணலாகிய சிவபிரான். அவன் என்னை ஆளாக உடைய தலைவன் ஆவான்.

**குறிப்புரை:** இது இத்தலமுடைய பெருமானே என்னையாளுடைய பிரான் என்கின்றது. மாடக்கடைசேர் கருமென்குளத்து ஓங்கிய காட்டில் – மாடங்களின் கடைவாயிலைச் சேர்ந்துள்ள கரிய மெல்லிய குளத்தால் சிறந்த காட்டிலே. குடையார் புனல் மல்கு – குடைதற்குரிய நீர்நிறைந்த; அணில் முட்டம் என்க. ஆளுடைபிரான் என்பதால் எனக்கும் அவனுக்கும் உள்ள தொடர்பு, அநாதியேயான ஆண்டான் அடிமைத் தன்மையென அறிவித்தது. எந்தை என்றது ஆதியாயிருந்து, அடித்தும் அணைத்தும் அருள் வழங்கலின். பிரான் என்றது தன்வழிநின்று ஏவல்கொள்ளுந் தலைவனாக இருத்தலின்.

Lord Civan is my father as well as my Supreme God. I am His servitor. He is the great Lord. The figure of the Bull in the flag is the insignia (Emblem or symbol) of Lord Civan. He manifests Himself in Kurangu-anil-muttam. In the backyard of the tall and shining mansions of this town, are dense dark forests. In these forests deep and cool pools, full of water exist, with facilities for diving and bathing.

**Note:** In the olden days, the backyard of any mansion was like a woodland.

சூலப் படையான் விடையான் சுடுநீற்றான்
காலன் றனையா ருயிர்வவ் வியகாலன்
கோலப் பொழில்சூழ்ந் தகுரங் கணின்முட்டத்
தேலங் கமழ்புன் சடையெந் தைபிரானே. 3

*சூலப்படையான், விடையான், சுடுநீற்றான்,*
*காலன்தனை ஆர்உயிர் வவ்விய காலன் -*
*கோலப் பொழில் சூழ்ந்த குரங்கணில்முட்டத்து*
*ஏலம் கமழ் புன்சடை எந்தை பிரானே.*

cUlappaTaiyAn2, viTaiyAn2, cuTu nIRRAn2,
kAlan2 tan2ai Ar uyir vavviya kAlan2--
kOlap pozil cUznta kuragkaNil muTTattu
Elam kamaz pun2caTai entai pirAn2E.

**பொருள்:** திருக்குரங்கணில்முட்டம் அழகிய சோலைகளால் சூழப்பெற்றது. அங்கு எழுந்தருளிய சிவபிரான் மணம் கமழும் சடைமுடியை உடையோனாகிய எந்தை பிரான்.

அவன் சூலப்படையையும், விடை ஊர்தியையும் உடையவன். அவன் திருவெண்ணீறு பூசியவன். காலனின் உயிரை வவ்வியதால் காலகாலன் எனப்படுபவன்.

**குறிப்புரை:** இது இத்தலத்திறைவன் சூலப்படையான், விடையான், நீற்றான், காலகாலன் என அடையாளமும், அருளுந்திறமும் அறிவிக்கின்றது. கோலம் – அழகு. ஏலம் – மயிர்ச்சாந்து.

Lord Civan holds a trident in one of His hands. He has the Bull as His Mount. He smears His body with holy ashes. He is called Kaalakaalan (*காலகாலன்*) because He kicked off Yaman, the god of death. The town Kurangu-anil-muttam is surrounded by enchanting forests where abides my Father Lord Civan whose matted hair emits pleasant fragrance.

**Note:** Yama is the god of death. Death suffered death even as Lord Civan kicked down Yaman with His Foot.

Lord Civan's banner (flag or standard) sports a White Bull. His mount is also a valiant White Bull. Confer புறநானூறு Verse 1 – *ஊர்திவால்வெள் ஏறே, சிறந்த சீர் கெழு கொடியும் அவ்வேறு என்ப.*

வாடா விரிகொன் றைவலத் தொருகாதில்
தோடார் குழையா னலபா லனநோக்கிக்
கூடா தனசெய் தகுரங் கணில்முட்டம்
ஆடா வருவா ரவரன் புடையாரே. 4

வாடா விரிகொன்றை, வலத்து ஒரு காதில்-
தோடு ஆர் குழையான், நல பாலனம் நோக்கிக்,
கூடாதன செய்த குரங்கணில்முட்டம்
ஆடா வருவார் அவர் அன்புஉடையாரே.

vATA viri kon2Rai, valattu oru kAtil-
tOTu Ar kuzaiyAn2, nala pAlan2am nOkki,
kUTAtan2a ceyta kuragkaNil muTTam
ATA varuvAr avar an2pu uTaiyArE.

**பொருள்:** திருக்குரங்கணில் முட்டத்தில் எழுந்தருளியுள்ள சிவபிரான் வாடாது விரிந்துள்ள கொன்றை மாலையைச் சூடியவன்; வலது காதில் குழையையும், இடது காதில் தோட்டையும் அணிந்துள்ளவன்; அனைத்து உயிர்களையும் நன்றாகக் காத்தலைத் திருவுள்ளம் கொண்டவன்; தேவர்கள் எவரும் செய்யமுடியாத அரிய செயல்களைச் செய்பவன். இவ்வனைத்துச் செயல்களையும் செய்யும் சிவபிரான் திருக்குரங்கணில்

முட்டத்துள் திருநடனம் புரியும் இறைவன் ஆவான். அவன் எல்லோரிடத்திலும் அன்பு உடையவன்.

**குறிப்புரை:** இத்தலத்து ஆடிவரும் பெருமானாகிய அவரே அடியேன் மாட்டு அன்புடையார் என்கின்றது. வாடாவிரி கொன்றை – வாடாத விரிந்த கொன்றை மலர்மாலையையும் தேவர்கட்கே அணிந்த மாலை வாடாது; அங்ஙனமாகத் தேவதேவனாகிய சிவபெருமான் அணிந்த மாலை வாடாமை இயல்பு ஆதலின் இங்ஙனம் கூறப்பட்டது. வலத்துக் குழையும், ஓர்காதில் தோடும் உடையான் எனக் கொள்க. நல்ல பாலனம் நோக்கி – நன்றாகக் காத்தலைத் திருவுளங்கொண்டு. கூடாதன செய்த – வேறுதேவர் எவரும் செய்யக்கூடாத அரிய காரியங்களைச் செய்த. ஆடாவருவார் – திருநடனம் செய்து வருவார்.

Lord Civan wears on His head fully blown Kondrai flowers (*விரிந்த கொன்றைப்பூ*), which never wither. He wears a ring called Kuzhai (*குழை*) in His right ear and Thōdu (*தோடு*) of palm leaf scroll in His left ear. He contemplates ever on methods to sustain all the souls in the universe. For this He enacts such deeds as required which no Devas can do. This Lord Civan who manifests Himself and dances in Kurangu-anil-muttam loves one and all.

**Note:** Civa performs deeds which are ostensibly impossible for others to perform. During the churning of the ocean when the dreaded venom arose from the churned ocean, it was Civa who quaffed it.

இறையார் வளையா ளையொர்பா கத்தடக்கிக்
கறையார் மிடற்றான் கரிகீ றியகையான்
குறையார் மதிசூ டிகுரங் கணின்முட்டத்
துறைவா னெமையா ளுடையொண் சுடரானே. 5

இறைஆர் வளையாளை ஓர் பாகத்து அடக்கிக்,
கறை ஆர் மிடற்றான்; கரி கீறிய கையான்;
குறை ஆர் மதி சூடி குரங்கணில்முட்டத்து
உறைவான்; எமை ஆள்உடை ஒண்சுடரானே.

iRai Ar vaLaiyALai or pAkattu aTakki,
kaRai Ar miTaRRAn2; kari kIRiya kaiyAn2;
kuRai Ar mati cUTi--kuragkaNil muTTattu
uRaivAn2; emai AL uTai oN cuTarAn2E.

**பொருள்:** திருக்குரங்கணில் முட்டத்தில் உறையும் இறைவனான சிவபிரான், 'இறையார் வளையாள்' என்னும் திருப்பெயர் கொண்ட உமையம்மையை ஒரு பாகத்தே கொண்டவன், நீலகண்டன், யானையின் தோலை உரித்துப் போர்த்த் கையினன், ஆதிப்பிறையை முடியில் சூடியவன். அந்த இறைவனாகிய சிவபிரான், எம்மை ஆளாக உடைய ஒண்சுடராவான்.

**குறிப்புரை:** சிவனே எம்மை யாளுடைய சோதி வடிவன் என்கின்றது. இறையார் வளையாள் இத்தலத்து அம்மையின் திருநாமம். முன்கையில் வளையல் அணிந்தவள் என்பது பொருள். கரி கீறிய கையான் – யானையையுரித்த கையையுடையவன். குறையார் மதி – இனிக்குறையக் கூடாத அளவு குறைந்த பிறைமதி. ஒண்சுடரான் – ஒள்ளிய சோதிவடிவன்.

Lord Civan's consort of this place is known at this shrine as 'Iraiyaar Valaiyaal' (*இறையார் வளையால்*). She forms the left part of His body and is on His left side. His gullet is dark blue in colour. His hands once peeled off the skin of an elephant. He holds on His matted hair the crescent moon that has waned to the utmost, and cannot therefore wane any more. This radiant Lord Civan manifests Himself in Kurangu-anil-muttam. He owns us as His servitors.

பலவும் பயனுள் ளனபற் றுமொழிந்தோம்
கலவம் மயில்கா முறுபே டையொடாடிக்
குலவும் பொழில்சூழ்ந் தகுரங் கணின்முட்டம்
நிலவும் பெருமா னடிநித் தனினைந்தே. 6

*பலவும் பயன் உள்ளன பற்றும் ஒழிந்தோம் -*
*கலவம்மயில் காமுறு பேடையொடு ஆடிக்*
*குலவும் பொழில் சூழ்ந்த குரங்கணில்முட்டம்*
*நிலவும் பெருமான் அடி நித்தல் நினைந்தே.*

palavum payan2 uLLan2a paRRum ozintOm--
kalavammayil kAmuRu pETaiyoTu ATik
kulavum pozil cUznta kuragkaNil muTTam
nilavum perumAn2 aTi nittal nin2aintE.

**பொருள்:** சிவபிரான் உறையும் திருக்குரங்கணில் முட்டத்தில், தோகைகளை உடைய ஆண் மயில்கள், தாம் விரும்பும் பெண் மயில்களோடு கூடிக் களித்தாடும் பொழில்களால் சூழப்பட்டது. அங்கு உறையும் பெருமான் திருவடிகளை நாள்தோறும் நினைந்து, உலகப் பொருள்கள் பலவற்றில் இருந்த பற்றொழித்தோம்.

**குறிப்புரை:** இது இறைவனடியை நித்தலும் நினைந்ததன் பயன் உள்ளன பலவற்றிலும் இருந்த பற்றும் ஒழிந்தோம் என்கின்றது. பயன் உள்ளன – பொறிகட்கும் பிறவற்றிற்கும் பயன்படுவனவாகிய தனுகரண புவனபோகங்கள். கலவம் – தோகை. 'பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப் பற்றுக பற்று விடற்கு' என்ற குறட்கருத்து அமைந்திருத்தல் காண்க.

The town Kurangu-anil-muttam is surrounded by lush groves where feather-tailed male peacocks dance and dally with their female mates whom they like. By daily meditating on the holy Feet of Lord Civan of this place we are able to abstain from aspirations regarding the many worldly things.

**Note:** Things of the world are but transient in nature. By attaching ourselves to the Lord, we are free from all attachment to worldly things.

மாடார் மலர்க்கொன் றைவளர் சடைவைத்துத்
தோடார் குழைதா னொருகா திலிலங்கக்
கூடார் மதிலெய் துகுரங் கணின்முட்டத்
தாடா ரரவம் மரையார்த் தமர்வானே. 7

*மாடுஆர் மலர்க்கொன்றை வளர்சடை வைத்து,*
*தோடுஆர் குழைதான் ஒரு காதில் இலங்க,*
*கூடார் மதில் எய்து குரங்கணில்முட்டத்து*
*ஆடு ஆர் அரவம் அரை ஆர்த்து அமர்வானே.*

mATu Ar malarkkon2Rai vaLarcaTai vaittu,
tOTu Ar kuzaitAn2 oru kAtil ilagka,
kUTAr matil eytu, kuragkaNil muTTattu,
ATu Ar aravam arai Arttu, amarvAn2E.

**பொருள்:** சிவபிரான் பொன்னை ஒத்த கொன்றை மலர்மாலையைச் சடைமீது அணிந்துள்ளான். காதணியாகிய குழை ஒரு காதில் இலங்கத் திரிபுரத்தை எரித்து அழித்தான். ஆடும் பாம்பை இடையிலே வரிந்து கட்டின திருக்குரங்கணில் முட்டத்தில் எழுந்தருளியுள்ளான்.

**குறிப்புரை:** கொன்றையணிந்து குழையுந்தோடுங் காதில் தாழ, திரிபுரமெரித்த பெருமான் குரங்கணில் முட்டத்து அமர்வான் என இறைவனுடைய மாலை, அணி, வீரம் இவற்றைக் குறிப்பிக்கின்றது. மாடு ஆர்

மலர்க்கொன்றை – பொன்னை ஒத்த நிறமுடைய கொன்றைமலர். கூடார் – பகைவர். ஆடுஆர் அரவம் – ஆடுதலைப் பொருந்திய அரவம்.

Lord Civan wears in His matted hair Kondrai flowers glittering like gold. The ear-ring (Kuzhai - குழை) in His right ear and Thōdu (தோடு) in His left ear shine brightly. He destroyed the three fortresses of the recalcitrant Asuraas. He wears tightly a snake moving about in His waist. He abides in Kurangu-anil-muttam.

மையார் நிறமே னியரக் கர்தங்கோனை
உய்யா வகையா லடர்த்தின் னருள்செய்த
கொய்யார் மலர்சூ டிகுரங் கணின்முட்டம்
கையாற் றொழுவார் வினைகாண் டலரிதே. 8

*மை ஆர் நிற மேனி அரக்கர்தம் கோனை*
*உய்யா வகையால் அடர்த்து, இன்அருள் செய்த*
*கொய் ஆர் மலர் சூடி குரங்கணில்முட்டம்*
*கையால் தொழுவார் வினை காண்டல் அரிதே.*

mai Ar niRa mEn2i arakkar tam kOn2ai
uyyA vakaiyAl aTarttu, in2 aruL ceyta
koy Ar malar cUTi kuragkaNil muTTam
kaiyAl--tozuvAr vin2ai kANTal aritE.

**பொருள்:** கரிய மேனியை உடைய அரக்கர் தலைவன் ஆகிய இராவணனைப் பிழைக்க முடியாதபடி அடர்த்துப்பின் அவனுக்குச் சிவபிரான் இனிய அருளை வழங்கினான். மேலும், சிவபிரான், அடியவர் செய்து அணிவித்த மலர்மாலைகளுடன் திருக்குரங்கணில் முட்டத்தில் எழுந்தருளியுள்ளான். அவனைக் கைகளால் தொழுபவர் வினைப்பயன்களைக் காணுதல் இலராவர்.

**குறிப்புரை:** இத்தலத்தைத் தொழுவார் வினைகாண்டல் அரிது என்கின்றது. மையார்மேனி – கரியமேனி. அரக்கன் – இராவணன். உய்யா வகையால் – தப்பாதவண்ணம். கொய்ஆர் மலர் – கொய்தலைப் பொருந்திய மலர். வினை – வினைப்பயனாகிய துன்ப இன்பங்களை.

Lord Civan crushed Raavanaa, the king of Sri Lanka of the dark-hued Raakshasaa. The king had no way to escape (from his predicament). Then Lord Civan

graced him. They who hail the Lord of Kurangu-anil-muttam with flowers plucked afresh, and adore Him with folded hands can seldom be subject to bad karmaa.

**Note:** Civa is to be adored with fresh flowers. These are known as 'Naall malar' in Tamil.

வெறியார் மலர்த்தா மரையா னொடுமாலும்
அறியா தசைந்தேத் தவோரா ரழலாகும்
குறியா னிமிர்ந்தான் றன்குரங் கணின்முட்டம்
நெறியாற் றொழுவார் வினைநிற் ககிலாவே. 9

வெறி ஆர் மலர்த்தாமரையானொடு மாலும்
அறியாது அசைந்து ஏத்த, ஓர் ஆர் அழல் ஆகும்
குறியால் நிமிர்ந்தான்தன் குரங்கணில்முட்டம்
நெறியால் தொழுவார் வினை நிற்ககிலாவே.

veRi Ar malart tAmaraiyAn2oTu mAlum
aRiyAtu acaintu Etta, Or Ar azal Akum
kuRiyAl nimirntAn2 tan2 kuragkaNil muTTam
neRiyAl--tozuvAr vin2ai niRkakilAvE.

**பொருள்:** மணம் கமழும் தாமரை மலரில் உறையும் நான்முகனும், திருமாலும் அடிமுடி அறிய முடியாது வருந்தி சிவபிரானை வணங்குமாறு அழல் உருவாய் ஓங்கி நின்றருளியவன். அவ்வாறான சிவபெருமான் விளங்கும் திருக்குரங்கணில் முட்டத்தை முறையாக வணங்குவார் வினைகள் இலராவர்.

**குறிப்புரை:** இது தொழுவார் வினை, நிற்கும் ஆற்றல் இல்லாதன என்கின்றது. வெறி – மணம். அறியாது அசைந்து – முதற்கண் இறைவன் பெருமையை அறியாமல் சோம்பி இருந்து. ஏத்த – பின்னர் அறிந்து துதிக்க. ஓர் ஆர் அழலாகும் குறியான் – ஒப்பற்ற நெருங்குதற்கரிய அழலாகிய திருவுருவை உடையவன். நெறி – ஆகமவிதி.

When Brahmaa whose seat is the fragrant lotus, and Vishnu were unable to perceive Lord Civan's holy Feet and Head, they grieved in distress and hailed Him. Lord Civa soared as a tall column of blazing fire. Karmaa will have no effect on those who are poised in the righteous way and who hail the Lord of Kurangu-anil-muttam.

கழுவார் துவரா டைகலந் துமெய்போர்க்கும்
வழுவாச் சமண்சாக் கியர்வாக் கவைகொள்ளேல்
குழுமின் சடையண் ணல்குரங் கணில்முட்டத்
தெழில்வெண் பிறையா னடிசேர் வதியல்பே. 10

கழுவார் துவர்ஆடை கலந்து மெய் போர்க்கும்
வழுவாச் சமண், சாக்கியர் வாக்கு அவை கொள்ளேல்!
குழு மின்சடை அண்ணல் குரங்கணில்முட்டத்து
எழில் வெண்பிறையான் அடி சேர்வது இயல்பே.

kazuvAr, tuvar ATai kalantu mey pOrkkum,
vazuvAc camaN cAkkiyar vAkku avai koLLEl!
kuzu min2caTai aNNal kuragkaNil muTTattu
ezil veN piRaiyAn2 aTi cErvatu iyalpE.

**பொருள்:** தோய்க்கப்பட்ட துவராடையை உடலிற் போர்த்தித் திரியும் பௌத்தர்கள், தம் கொள்கையில் வழுவாத சமணர்கள் ஆகியோர் உரைகளைக் கொள்ளாதீர். திருக்குரங்கணில் முட்டத்து இறைவனாகிய சிவபிரான், மின்னல்போலத் திரண்டுள்ள சடைமுடியை உடையவன்; அழகிய வெண்பிறையை அணிந்தவன். அவனுடைய திருவடிகளை வணங்குவதே நம் கடமை ஆகும்.

**குறிப்புரை:** இத்தலத்துள்ள இறைவனடி சேர்வதே இயல்பு என்கின்றது. கழுவார் – உடையைத் தோய்த்து அலசாதவராய். வழுவாச் சமண் – தம் கொள்கையில் வழுவாத சமணர். குழுமின்சடை – கூட்டமாகிய மின்னலை ஒத்த சடை.

Ye companions! Pay no heed to the preachings of the obstinate Samanars, as well as the Buddhists who cover their body with brown-red cloth. It is our bounden duty to applaud the Holy Feet of Lord Civan abiding in Kurangu-anil-muttam. The strands of His matted hair resemble a cluster of lightning rays.

கல்லார் மதிற்கா ழியுண்ஞான சம்பந்தன்
கொல்லார் மழுவேந் திகுரங் கணின்முட்டம்
சொல்லார் தமிழ்மா லைசெவிக் கினிதாக
வல்லார்க் கெளிதாம் பிறவா வகைவீடே. 11

கல் ஆர் மதில் காழியுள் ஞானசம்பந்தன்
கொல் ஆர் மழுஏந்தி குரங்கணில்முட்டம்
சொல் ஆர் தமிழ்மாலை செவிக்கு இனிது ஆக
வல்லார்க்கு எளிதுஆம், பிறவா வகை வீடே.

kal Ar matil kAziyuL njAn2acampantan2
kol Ar mazu Enti kuragkaNil muTTam
col Ar tamiz mAlai cevikku in2itu Aka
vallArkku eLitu Am, piRavA vakai vITE.

**பொருள்:** கல்லால் இயன்ற மதில்களால் சூழப்பட்டது சீகாழிப்பதி. அங்குத் தோன்றியவர் ஞானசம்பந்தர். சிவபிரான் கொல்லும் தன்மையுடைய மழுவாயுதத்தைக் கையில் ஏந்தி, திருக்குரங்கணில் முட்டத்தில் எழுந்தருளியுள்ளான். அந்த இறைவ[illegible]து ஞானசம்பந்தர் பாடிய சொல்மாலையாகிய இத்திருப்பதிகத்தைச் செவிக்கு இ[illegible]தி ஏத்த வல்லார்க்குப் பிறவா நெறியாகிய வீடு எளிதாகும்.

**குறிப்புரை:** இப்பதிகத்தைச் செவிக்கினிதாகச் சொல்லவல்லவர்களுக்கு வீடு எளிது என்கின்றது. கல்ஆர் மதில் – மலையை ஒத்த மதில். பிறவாவகை வீடு எளிதாம் எனக் கூட்டுக. கொல்லார்மழு கொற்றொழில் நிறைந்த மழு (திருக்கோவையார் – 231).

Gnaanasambandan hails from Seekaazhi which is fortified with granite stone walls. He has sung this hymn on Lord Civan of Kurangu-anil-muttam, who holds in His hand the battle-axe forged in a smithy. Those who can sing this enchanting garland of words (hymn) in a pleasant voice, adore Him and offer worship, will easily reach heaven and will be relieved from the cycle of birth and death.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*31ஆம் பதிகம் முற்றிற்று*
**End of 31st Hymn**

உ
சிவமயம்

# 32. திருவிடைமருதூர்

## திருத்தலவரலாறு:

திருவிடைமருதூர் என்ற திருத்தலம் மத்தியார்ச்சுனம் எனவும் வழங்கப் பெறும். வடக்கே ஸ்ரீபர்ப்பதமாகிய மல்லிகார்ச்சுனமும், தெற்கே அம்பாசமுத்திரத்திற்கு அருகாமையில் உள்ள திருப்புடை மருதூராகிய புடார்ச்சுனமும் விளங்க இவற்றின் இடையில் இது விளங்குதலின் இப்பெயர் பெற்றது. அர்ச்சுனம் – மருது. இம் மூன்று தலங்களுமே மருதைத் தல விருட்சமாகக் கொண்டு இருப்பது அறியத்தக்கது. இது சோழ நாட்டில் காவிரிக்குத் தென்கரையில் அமைந்துள்ள தலம். மயிலாடுதுறை – கும்பகோணம் இருப்புப் பாதையில் இரயில் நிலையம். மயிலாடுதுறை – கும்பகோணம் பேருந்துச் சாலையில் உள்ளது. வழிபட்டோர் உமாதேவியார், விநாயகர், முருகன், விஷ்ணு, காளி, இலக்குமி, சரஸ்வதி, வேதங்கள், மூன்று கோடி உருத்திரர், பன்னிரு சூரியர், வசிஷ்டர், அயிராவதம் என்னும் யானை, சிவவாக்கியர், கபிலர், அகத்தியர், வரகுணதேவர், பட்டினத்தடிகள் முதலியோர்.

வரகுணதேவ பாண்டிய மன்னனுக்குப் பிரமகத்தி நீங்கிய தலம். இப்பிரமகத்தி இரண்டாங் கீழக்கோபுரத்து வாயிலில் வலப்பக்கத்தில் இருக்கின்றது. கிழக்கு வாயிலில் பட்டினத்தடிகளும் மேற்கு வாயிலில் பத்திரகிரியாரும் எழுந்தருளி இருந்தனர். அம்மை மௌனமாய் இருந்து தவம் செய்த மூகாம்பிகை சந்நிதி, அம்பாள் கோயில் வாசலில் தனியே இருக்கிறது. பெரிய பிராகாரத்திற்கு அஸ்வ மேத பிராகாரம் எனப் பெயர். அதனை வலம் வரின் அஸ்வமேத யாகம் செய்த பலன் சித்திக்கும் என்பது மரபு. பேய் பிடித்தவர்களும் பைத்தியம் பிடித்தவர்களும் வலம் வந்தால் அவை நீங்குகின்றன என்பது இன்றும் கண்கூடு. இத்தலம் மகாலிங்கத் தலமாக, இதனைச் சுற்றி சிதம்பரம் நடராஜர் சந்நிதியாகவும், ஆலங்குடி தட்சணாமூர்த்தி சந்நிதியாகவும், சூரியனார் கோயில் நவக் கிரகங்களின் சந்நிதியாகவும், திருவலஞ்சுழி விநாயகர் சந்நிதியாகவும், சுவாமிமலை முருகன் சந்நிதியாகவும், சீகாழி வயிரவர் சந்நிதியாகவும், சேய்ஞலூர் சண்டேசுவரர் சந்நிதியாகவும் விளங்குகிறது என்பர். இத்தலத்துத் தைப்பூச விழா மிகச் சிறந்தது. காவிரி அயிராவணத்துறையில் சுவாமி சென்று தீர்த்தம் அருளுவர்.

**கல்வெட்டு:**

இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுக்கள் 149. அவை முதலாம் பராந்தகன் (கி.பி. 905 – 947), மூன்றாம் குலோத்துங்கன் வரையிலுள்ள சோழ பரம்பரையினர் காலத்திலும் வரகுணன், சுந்தர பாண்டியன் முதலிய பாண்டிய மன்னர்கள் காலத்திலும் வெட்டப்பெற்ற கல்வெட்டுக்கள். இவற்றால் அறியப்படும் மிகச்சிறந்த நிகழ்ச்சிகள்: இத்தலம் உய்யக் கொண்ட சோழவள நாட்டு திரைமூர் நாட்டு திருவிடைமருதூர் என வழங்கப் பெறுகிறது. பரகேசரி வர்மனான முதல் இராஜேந்திரன் மூன்றாம் ஆண்டில் ஏகநாயகன் திருவாசலுக்கு விளக்கு ஏற்றி வர ஆடுகள் அளித்தமை அறியப்படுகிறது. இதனால் மகாலிங்க சுவாமிக்கு ஏகநாயகர் என்ற பெயருண்மை அறியலாம்.

இத்தலத்து எழுந்தருளியுள்ள சோமாஸ்கந்தர் ஆடல் விடங்க தேவர் என்று அழைக்கப் பெறுகிறார். இத்தேவர் இங்கநாடு பல்லவராயனால் பிரதிட்டை செய்விக்கப் பெற்றவர். முதல் பராந்தகன் 37ஆம் ஆட்சியாண்டில் திருவாதிரை, சதயம், அமாவாசை ஆகிய இந்த நாட்களைக் கொண்டாட மான்யம் விட்டிருக்கிறான். திருவிடைமருதூர் மூலஸ்தானம் தெற்குப் பக்கத்தில் உள்ள பூர்ண கணபதி கருப்பக் கிருகத்திற்கு 8 இலைக் காசு கொடுத்தான். இதனால் மூலஸ்தானக் கணபதி பூர்ண கணபதி என வழங்கப் பெற்றமை அறியலாம். தைப்பூச விழாவைப் பற்றிச் சில கல்வெட்டுக்கள் அறிவிக்கின்றன. மகாலிங்க சுவாமிக்கு செண்பகப்பூ நித்தியம் சாத்தி வருவதற்காகத் திருவெண்காடு பிச்சனால் நிவந்தம் அளிக்கப் பெற்றது. சோழன் இராஜகேசரி வர்மன் காலத்தில் (கி.பி. 985 – 1113) 10ஆவது ஆண்டில் 278ஆம் நாளில் அரசி பஞ்சவன் மாதேவியாரால் உமா சகிதருடைய தங்க உருவம் அமைக்கப் பெற்றது. திருக்காமக் கோட்டமுடைய நாச்சியாருக்கு இராஜகேசரி வர்மன் 9ஆம் ஆண்டில் (கி.பி. 994) நம்பிராட்டியார் பஞ்சமா தேவியாரால் 9 கழஞ்சு பொன் அளிக்கப் பெற்றது. பல கல்வெட்டுக்களால் திருமஞ்சனம் கொண்டுவர மண்குடங்கள் அளிக்கப் பெற்றமை அறியப்படுகின்றது. இதனால் அபிஷேகத்திற்கு மண் குடங்களினாலேயே தீர்த்தம் கொண்டு வந்தமை அறியலாம். விக்கிரம சோழன் 5ஆம் ஆண்டில் மாணிக்கக் கூத்தர் கோயில் குறிக்கப் பெறுகிறது. இது நடராஜர் கோயிலோ இல்லையோ என்பது அறியக்கூட வில்லை. சோழர்கள் காலத்துச் சமயாச்சாரியரிடம் உள்ள அன்பை விளக்கும் அறிகுறியாக அமைந்த அடையாளங்கள் பல. அவற்றுள் ஜெயங்கொண்ட சோழ வளநாட்டில் திருவழுந்தூர் நாட்டின் விக்கிரம சோழன் ஆறலூரில் உள்ள வாணாதிராயன் என்பவன் ஆளுடைய பிள்ளையார் படிவத்தை அமைக்கப் பணம் கொடுத்தான். மேலும் ஆளுடைய பிள்ளையார், ஆளுடைய நம்பி இவர்களுடைய படிவத்திற்காக நிவேதிக்க வரியில்லாத நிலத்தை உய்யக்

கொண்டான் வளநாட்டில் இருமரபுந்தூய பெருமான் சதுர்வேதி மங்கலத்தில் அளித்தான். விக்கிரம பாண்டியன் சாந்திவிழா என்ற ஒன்று விக்கிரம பாண்டியன் காலத்தில் கொண்டாடப் பெற்றதாக அறிவிக்கிறது. சிறப்பில் சிறப்பாக நாலாவது பிராகாரத்தில் உள்ள மூகாம்பிகை பிடாரி, யோகிருந்த பரமேஸ்வரி என வழங்கப் பெறுகிறார். ஏனைய கல்வெட்டுக்கள் விளக்கீட்டிற்காக அரசனும் அரசியும் நிலமும், பொன்னும், ஆடும் அளித்தமை அறிவிப்பன.

**பதிக வரலாறு:**

திருஞானசம்பந்தப் பிள்ளையார், திருநாகேச்சரத்து இனிதமரும் செங்கனகத் தனிக்குன்றை வணங்கி, நாகநாதப் பெருமானின் பிணிதீர்க்கும் பெருங்கருணையைப் போற்றித் திருவிடைமருதூருக்கு வழிக்கொள்கின்றவர் 'ஓடேகலன்' என்னும் இத்திருப்பதிகத்தையருளிச் செய்தார்கள். போகும் போது அளவிலாப் பெருமகிழ்ச்சி திருவுள்ளத்தெழ 'என்னையாளுடைய பிரான் உறைகின்ற இடைமருது ஈதோ' என்று அமைத்து இன்னிசைப் பதிகம் அருளிக்கொண்டே இடைமருதிற்கு எழுந்தருளினார்கள்.

## 32. THIRU-IDAI-MARU-THOOR

### THE HISTORY OF THE PLACE

The sacred place Thiru-idai-maru-thoor is also known as Maththiyaarchchunam, as it lies in between Mallikaarchchunam (Sree Parvatham) of the north and Putaarchchunam (Thiruppudaimarudhoor near Ambasamuththiram) of the south. These three temples all have marudhu (archchunam) tree for their sacred tree. This temple is located on the south bank of Cauvery in Chola Naadu. It has a rail route and a bus route connecting Mayiladuthurai and Kumbakonam.

Those who offered worship here includes Uma Dheviyaar, Vinaayakar, Murugan, Vishnu, Kaali, Ilakkumi, Sarasvathi, Vedhaas, three crores of Uruththirars, twelve Sooriyars, Vasishtar, an elephant named Ayiraavatham, Sivavaakkiyar, Kapilar, Agasthiyar, Varaguna Thevar, Saint Pattinaththu Adikal etc.

It is in this temple that the king Varaguna Paandiyan got rid of 'biramahaththi' (the sin of having killed a Brahmin), which is situated on the right of the entrance at the

second eastern gopuram. Pattinaththu Adikal and Paththiragiriyaar resided at the east and west entrances, respectively. A separate shrine for Mookambikai, where the Goddess performed thavam, is located at the entrance to the shrine of the Goddess. The large ambulatory (piraakaaram) is known as the Asvamedha Pirakaaram as circumambulating in it is said to give the same benefit as performing an Asvamedha sacrifice. One can see even today that persons who are mentally-ill or possessed by ghosts are rid of such afflictions if they circumambulate the temple. With this temple as the central Mahaalinga shrine, Chidhambaram becomes the shrine of Nataraajar, Aalangkudi of Dhashinaamoorthi, Sooriyanaar Koyil of Navagrahas, Thirvalanjchuzhi of Vinaayaka, Suvaamimalai of Murugan, Seekaazhi of Vayiravar, and Seinjaloor that of Chandesuvarar. The festival of Thaippoosam is of importance here and the Lord visits the river Cauvery at the Ayiraavanaththurai.

**Stone Inscriptions**

There are 149 inscriptions pertaining to this temple. They belong to the periods of Chola monarchs from Paraanthakan I (905 - 947 CE) to Kuloththungkan III and of Paandiya kings Varagunan and Sundhara Paandiyan. From these we know that this place was known as Thiruvidaimarudhoor of Thiraimoor Naadu in Uyyakkonda Chola Valanaadu. Parakesari Varman Raajendhiran I gifted sheep in his 3rd regnal year for lighting lamps at the Ekanaayakan Thiruvaasal. This indicates that Lord Mahaalingar was known as Ekanaayakar.

The Somaskandhar of this temple is named Aadal Vidangka Thevar. This deity was installed by a Pallavaraayan of Inga Naadu. Paraanthakan I has given grants, in his 37th regnal year, for celebrating the Thiruvaadhirai, Sadhayam and New Moon days. He also gave 8 'ilaikkaasu' for the shrine of Poornaganapathi, located to the south of the sanctum at Thiruvidaimarudhoor. From this we know that the Ganapathi at the sanctum was known as Poornaganapathi. Some of the inscriptions give information about the Thaippoosam festival. One Thiruvenkaadu Pichchan provided a grant for

adorning the Lord Mahaalingar with Senbagam flowers everyday. On the 9th regnal year, Chola King Raajakesari Varman's (985 - 1113 CE) queen, Panjchavan Maadhevi, caused to install a golden image of Umaasakithar. In the 9th regnal year of the same king (994 CE), Nampiraattiyaar Panjchamaadheviyaar gave nine 'kazhanju' of gold to the Goddess, Naachchiyaar of Thirukkamakkottam.

Many inscriptions make note of the fact that earthen pots were donated for bringing water for the holy bathing, from which we know that it was customary to use earthen pots for that purpose. An inscription of the 5th year of Vikkirama Cholan refers to a Maanikkak Kooththar temple. It is not known whether this is a Nataraaja shrine. There are many indications to show the prevalence of love for saints during the Chola times. Among these the following may be noted: One Vaanaadhiraayan of Vikkirama Cholan Aaraloor in the Thiruvazhundhoor Naadu of Jayangkonda Chola Valanaadu gave money to make an image of Aaludaiya Pillaiyaar. Irumarabum Thooya Perumaal gave tax-exempted land in Uyaakkondaan Valanaadu for food offering to icons of Aaludaiya Pillaiyaar and Aaludaiya Nambi. We also know from the inscriptions that during the reign of Vikkirama Paandiyan a festival known as Vikkirama Paandiyan Saanthi was celebrated. Also we come to know that the Mookaambikai Pidaari, in the fourth ambulatory was known as Yogirundha Paramesvari. Other inscriptions inform of the gifts by kings and queens, of land, gold and sheep for lamps.

## INTRODUCTION TO THE HYMN

Thiru-Gnaanasambandar proceeded from Thiru-Naakē-ch-charam (திருநாகேச்சரம்) to Thiru-idai-maru-thoor (திருஇடைமருதூர்). As he came close to this holy town, he saw the temple tower. His joy welled up in him and he sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 32. திருவிடைமருதூர் / 32. THIRU-IDAI-MARU-THOOR

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

ஓடே கலனுண் பதுமூ ரிடுபிச்சை
காடே யிடமா வதுகல் லானிழற்கீழ்
வாடா முலைமங் கையுந்தா னுமகிழ்ந்
தீடா வுறைகின் றவிடை மருதீதோ. 1

ஓடே கலன்; உண்பதும் ஊர் இடு பிச்சை;
காடே இடம் ஆவது கல்லால்நிழல் கீழ்
வாடாமுலைமங்கையும் தானும் மகிழ்ந்து,
ஈடா உறைகின்ற இடைமருது ஈதோ.

OTE kalan2; uNpatum Ur iTu piccai;
kATE iTam Avatu; kallAl nizal kIz
vATA mulai magkaiyum tAn2um makizntu,
ITA uRaikin2Ra iTai marutu ItO.

**பொருள்:** சிவபிரானுக்கு உண்ணும் பாத்திரம் பிரம கபாலம் ஆகும். அவர் உண்ணும் உணவோ ஊர் மக்கள் இடும் பிச்சையாகும். அவர் வாழும் இடமோ இடுகாடாகும். அத்தகைய சிவபிரான் கல்லால மரநிழற்கீழ் நன்முலை நாயகியும் தானுமாய் மகிழ்ந்து பெருமையோடு விளங்கும் திருத்தலமாகிய இடைமருது இதுதானோ?

**குறிப்புரை:** ஓடு எடுத்து ஊர்ப்பிச்சை ஏற்றுக் காடிடங்கொள்ளும் பெருமான் பெருமுலைநாயகியோடு எழுந்தருளும் இடைமருதீதோ என்று வினாவுகிறது இப்பதிகம். ஓடு – பிரமகபாலம். வாடாமுலை மங்கை என்பது பெருமுலைநாயகி என்னும் அம்மையின் திருநாமத்தைக் குறித்தது. ஈடா – பெருமையாக.

Lord Civan utilizes the skull of Brahma as His begging bowl. He consumes the food given by town folks as alms. The crematory is His pastime place. He is happily seated under the shadow of Kallaala tree (a specie of Banyan tree but without stilt roots) along with His consort Nan-mulai Naayaki (நன்முலைநாயகி) with self-esteem. Is this the famed Idai-maru-thoor where Lord Civan is entempled?

**Note:** The goddess of this shrine is called Vaadaa Mulai Mangai. She is also hailed as Nan-mulai Naayaki.

Kallaall: The Banyan tree that has no stilt roots.

At the close of an age, all elements merge one in another and finally in Lord Civan. Then Lord Civan alone remains and will be insight in the entire universe. The universe then will appear as cemetery. This event is metaphorically sung as "காடே இடமாவது" literally meaning as He abides in the burning ghat (Cemetry).

தடங்கொண் டதொர்தா மரைப்பொன் முடிதன்மேல்
குடங்கொண் டடியார் குளிர்நீர் சுமந்தாட்டப்
படங்கொண் டதொர்பாம் பரையார்த் தபரமன்
இடங்கொண் டிருந்தான் றனிடை மருதீதோ. 2

தடம் கொண்டது ஓர் தாமரைப்பொன் முடி தன்மேல்
குடம் கொண்டு அடியார் குளிர்நீர் சுமந்து ஆட்டப்,
படம் கொண்டது ஓர் பாம்பு அரை ஆர்த்த பரமன்
இடம் கொண்டு இருந்தான் தன் இடைமருது ஈதோ.

taTam koNTatu or tAmaraip pon2 muTi tan2 mEl
kuTam koNTu aTiyAr kuLir nIr cumantu ATTa,
paTam koNTatu or pAmpu arai Artta paraman2
iTam koNTu iruntAn2 tan2 iTai marutu ItO.

**பொருள்:** சிவபிரான் பெரிய குளங்களில் பறித்த பெரிய தாமரை மலர்களை தம் அழகிய திருமுடியில் சூடி இருக்கிறார். அடியவர்கள் குடங்களைக் கொண்டு குளிர்ந்த நீரை முகந்து சுமந்து வந்து திருமுடியில் திருமுழுக்கு ஆட்டுகின்றனர். படம் எடுத்தாடும் நல்ல பாம்பை இடையிலே கட்டிக் கொண்டிருக்கும் பரமனாகிய சிவபிரான் தாம் விரும்பிய இடமாகக் கொண்டுறையும் இடைமருது இதுதானோ?

**குறிப்புரை:** தடம் – குளம். தாமரைக் பொன்முடி. தாமரைசூடிய அழகிய சிரம்.

The devotees of Lord Civan bring cool water in their pots to give Him sacred bath and pour on His beautiful head. He has worn on His head big lotus flowers plucked from pools. He has tied round His waist the hooded snake as His belt. This Lord Civan loves to abide in Idai-maru-thoor. Is Idai-maru-thoor the place where God likes to reside?

வெண்கோ வணங்கொண் டொருவெண் டலையேந்தி
அங்கோல் வளையா ளையொர்பா கமமர்ந்து
பொங்கா வருகா விரிக்கோ லக்கரைமேல்
எங்கோ னுறைகின் றவிடை மருதீதோ. 3

வெண்கோவணம் கொண்டு ஒரு வெண்தலை ஏந்தி,
அம் கோல்வளையாளை ஓர் பாகம் அமர்ந்து,
பொங்கா வரு காவிரிக் கோலக்கரை மேல்,
எம் கோன் உறைகின்ற இடைமருது ஈதோ.

veN kOvaNam koNTu, oru veN talai Enti,
am kOlvaLaiyALai or pAkam amarntu,
pogkA varu kAvirik kOlak karaimEl,
em kOn2 uRaikin2Ra iTaimarutu ItO.

***பொருள்:*** சிவபிரான் வெண்மையான கோவணத்தை அணிந்துள்ளார். அவர் ஒப்பற்ற வெள்ளிய பிரம கபாலத்தைக் கையில் ஏந்தியுள்ளார். அழகியதாய்த் திரண்ட வளையல்களை அணிந்த உமாதேவியை ஒரு பாகமாக அவர் விரும்பி ஏற்றுள்ளார். பொங்கி வரும் காவிரியாற்றின் அழகிய கரைமீது எம் தலைவராய் உள்ள சிவபிரான் எழுந்தருளிய இடைமருதூர் இதுதானோ?

***குறிப்புரை:*** அம்கோல் வளையாளை – அழகிய திரண்ட வளையல்அணிந்த உமாதேவியை. அமர்ந்து – விரும்பி ஏற்று.

Lord Civan wears a white loin cloth (Kōvanam - *கோவணம்*). He holds in His hand the white skull of Brahma. He cherishes in sharing His left portion of His body to His consort Umaa Devi. The river Cauvery gracefully runs and its waters surge on it's banks where Idai-maru-thoor is situated; is this the place where Lord Civan is enshrined?

அந்தம் மறியா தவருங் கலமுந்திக்
கந்தங் கமழ்கா விரிக்கோ லக்கரைமேல்
வெந்த பொடிப்பூ சியவே தமுதல்வன்
எந்தை யுறைகின் றவிடை மருதீதோ. 4

அந்தம்(ம்) அறியாத அருங்கலம் உந்திக்
கந்தம் கமழ் காவிரிக் கோலக்கரை மேல்
வெந்தபொடிப் பூசிய வேதமுதல்வன் -
எந்தை-உறைகின்ற இடைமருது ஈதோ.

antam(m) aRiyAta arug kalam untik
kantam kamaz kAvirik kOlak karai mEl,
venta poTip pUciya vEta mutalvan2--
entai--uRaikin2Ra iTaimarutu ItO.

**பொருள்:** காவிரியாறு அரிய அணிகலன்களைக் கரையில் வீசி, மணம் கமழ்ந்து வருகிறது. அதன் அழகிய கரைமீது திருவெண்ணீறு அணிந்தவனாய், முடிவறியாத வேதமுதல்வனாய் விளங்கும் எம் தந்தையாகிய சிவபிரான் உறைகின்ற இடைமருது இதுதானோ?

**குறிப்புரை:** அந்தம் அறியாத வேதமுதல்வன் எனக் கூட்டுக. அருங்கலம் உந்தி - அரிய ஆபரணங்களைக் கரையில் வீசி.

River Cauvery carries rare gems and throws them on its banks. Our father Lord Civan smears holy ashes over His body. He is the Chief of Vedas. He has no end. Is this the place Idai-maru-thoor where Lord Civan is enshrined?

வாசங் கமழ்மா மலர்ச்சோ லையில்வண்டே
தேசம் புகுந்தீண் டியொர்செம் மையுடைத்தாய்ப்
பூசம் புகுந்தா டிப்பொலிந் தழகாய
ஈச னுறைகின் றவிடை மருதீதோ. 5

வாசம் கமழ் மா மலர்ச்சோலையில் வண்டே
தேசம் புகுந்து ஈண்டி ஓர் செம்மை உடைத்து ஆய்ப்,
பூசம் புகுந்து ஆடிப் பொலிந்து அழகுஆய
ஈசன் உறைகின்ற இடைமருது ஈதோ.

vAcam kamaz mA malarc cOlaiyil vaNTE
tEcam pukuntu INTi or cemmai uTaittu Ay,
pUcam pukuntu ATip polintu azaku Aya
Ican2 uRaikin2Ra iTaimarutu ItO.

**பொருள்:** மணம் கமழும் சிறந்த மலர்களை உடைய சோலைகள் வண்டுகளைக் கொண்டன. உலக மக்கள் பலரும் பல இடங்களில் சுற்றிச் செம்மையாளராய் இருப்பர். அவர்கள் தைப்பூசத் திருநாளில் நீராடி வணங்குவர். பொலிவும் அழகும் உடையவனாய்ச் சிவபிரான் எழுந்தருளி விளங்குவான். இவ்வளவு சிறப்புக்களை உடைய திருவிடைமருதூர் என்னும் தலம் இதுதானோ?

**குறிப்புரை:** வண்டு புகுந்து ஈண்டி செம்மையுடைத்தாய் இருக்க. பூசம் புகுந்து ஆடி அழகாய ஈசன் உறைகின்ற இடைமருது என வினைமுடிவு செய்க. தேசம் புகுந்து – பல இடங்களிலும் சுற்றி, செம்மை உடைத்தாய் – குரலின் இனிமை படைத்து. இத்தலத்தில் தைப்பூசத் திருநாள் அன்று இறைவன் காவிரியில் தீர்த்தங் கொள்வர்.

Is this the place Idai-maru-thoor where lovely and handsome Lord Civan manifests and shines. In this town fragrant and attractive flowers thrive in splendour in the flower gardens where the bees are humming. People all over the world gather in this town as devotees, take their bath, and adore Lord Civan of this place on the festive day that falls on the eight star day on the tenth month known as Thai Poosam Day (*தைப் பூசத் திருவிழா*).

**Note:** The idol of Lord Civa is carried to the Cauvery during the month of Thai (January – February), on the Pusam-day. Pusam is the star called Castor. On this day the Lord has His ablutions in the sacred river. This verse also speaks of the bees that hum in the flowery gardens. These have had their ablutions in the pollen of flowers. They too shine like the Lord after His ablutions.

வன்புற் றிளநா கமசைத் தழகாக
என்பிற் பலமா லையும்பூண் டெருதேறி
அன்பிற் பிரியா தவளோ டுமுடனாய்
இன்புற் றிருந்தான் றனிடை மருதீதோ. 6

வன் புற்று இள நாகம் அசைத்து அழகுஆக
என்பில் பலமாலையும் பூண்டு, எருது ஏறி
அன்பில் பிரியாதவளோடும் உடன்ஆய்
இன்புஉற்று இருந்தான் தன் இடைமருது ஈதோ.

van2 puRRu iLa nAkam acaittu, azaku Aka
en2pil palamAlaiyum pUNTu, erutu ERi,
an2pil piriyAtavaLOTum uTan2 Ay
in2pu uRRu iruntAn2 tan2 iTaimarutu ItO.

**பொருள்:** சிவபிரான், வலிய புற்றுக்களில் வாழும் இள நாகங்களை இடையிலே அழகாகக் கட்டிக் கொண்டுள்ளான். அவன், எலும்பால் இயன்ற மாலைகள் பலவற்றையும் அணிகலன்களாகப் பூண்டுள்ளான். அவ்வகைச் சிறப்புடைய சிவபிரான், அன்பிற் பிரியாத

உமையம்மையோடும் உடனாய் எருதேறி இன்புற்றுறையும் திருவிடைமருதூர் என்பதும் இதுதானோ?

**குறிப்புரை:** வல்புற்று இளநாகம் – வலிய புற்றில் வாழும் இளநாகம் அவைகளை அவயங்களிலே அணியாகக் கட்டி. அன்பில் பிரியாதவள் – பிரியாவிடையாகிய பார்வதி.

Is this the place called Idai-maru-thoor where Lord Civan riding on the Bull along with His consort, the ever devoted Paarvathi Devi happily manifests? He dons His waist by young snakes that live in strong ant-hills and binds it nicely. He wears on His body as many as possible garlands made of bones.

**Note:** Civa never parts from Uma. "Aanaiyin neekam indri nirkum" are the words of St. Meykandaar.

தேக்குந் திமிலும் பலவுஞ் சுமந்துந்திப்
போக்கிப் புறம்பூ சலடிப் பவருமால்
ஆர்க்குந் திரைக்கா விரிக்கோ லக்கரைமேல்
ஏற்க விருந்தான் றனிடை மருதீதோ. 7

தேக்கும் திமிலும் பலவும் சுமந்து உந்திப்,
போக்கிப் புறம் பூசல் அடிப்ப வருமால்
ஆர்க்கும் திரைக் காவிரிக் கோலக் கரைமேல்
ஏற்க இருந்தான் தன் இடைமருது ஈதோ.

tEkkum timilum palavum cumantu unti,
pOkkip puRam, pUcal aTippa varumAl
Arkkum tiraik kAvirik kOlak karaimEl
ERka iruntAn2 tan2 iTaimarutu ItO.

**பொருள்:** தேக்கு, வேங்கை, பலா ஆகிய மரங்களைக் காவிரியாறு சுமந்து வருகிறது. அம்மரங்களை இரு கரைகளிலும் எடுத்து வீசுகிறது. ஆரவாரித்து வரும் அலைகளை உடையதாய் வரும் காவிரியாற்றின் அழகிய கரைமீது சிவபிரான் பொருந்த உறையும் திருவிடை மருதூர் என்னும் தலம் இதுதானோ?

**குறிப்புரை:** திமில் – வேங்கைமரம். பல – பலாமரம். புறம் போக்கி – இம்மரங்களை இருகரைமருங்கும் எடுத்துவீசி. பூசல் அடிப்ப – கரையுடன் மோத. ஆல் – அசை. ஆர்க்கும் திரை – ஆரவாரிக்கின்ற அலை. ஏற்க – பொருந்த.

Is this the place called as Idai-maru-thoor where Lord Civan is enshrined in the temple on the gorgeous banks of river Cauvery. This river carried teak, kino and jack trees and leaves them on both sides of its banks. The waves of the river gush forth-making heavy noise along its course.

**Note:** Vengkai: Kino tree

Palaa: Jack tree

பூவார் குழலா ரகில்கொண் டுபுகைப்ப
ஓவா தடியா ரடியுள் குளிர்ந்தேத்த
ஆவா வரக்கன் றனையாற் றலழித்த
ஏவார் சிலையான் றனிடை மருதீதோ. 8

*பூ ஆர் குழலார் அகில் கொண்டு புகைப்ப,*
*ஓவாது அடியார் அடி உள் குளிர்ந்து ஏத்த,*
*ஆவா! அரக்கன்தனை ஆற்றல் அழித்த*
*ஏஆர் சிலையான் தன் இடைமருது ஈதோ.*

pU Ar kuzalAr akilkoNTu pukaippa,
OvAtu aTiyAr aTi uL kuLirntu Etta,
AvA! arakkan2 tan2ai ARRal azitta
E Ar cilaiyAn2 tan2 iTai marutu ItO.

***பொருள்:*** மலர் சூடிய கூந்தலை உடைய மங்கல மகளிர் அகில் தூபம் இடுகிறார்கள். அடியவர்கள் இடையீடு இன்றிச் சிவபிரானுடைய திருவடிகளை மனம் குளிர்ந்து ஏத்துகின்றனர். பரிதாப நிலையை நேரில் கண்டவர் 'ஆ ஆ' என்று இரங்குமாறு, இராவணனுடைய ஆற்றலை அழித்தவர் சிவபிரான். அவர் அம்பு பொருத்தற்கேற்ற மலைவில்லைக் கையில் கொண்டவர். அவ்வகைப் பெருமை கொண்ட சிவபிரான் இருக்கும் திருவிடைமருதூர் என்னும் தலம் இதுதானோ?

***குறிப்புரை:*** இது மகளிரும் அடியாரும் அவரவர்கள் பரிபாகத்திற்கேற்ப வழிபடுகின்றார்கள் என்கின்றது. ஓவாது – இடைவிடாமல். ஆவா; இரக்கக் குறிப்பிடைச் சொல். ஏ ஆர் சிலை – பெருக்கத்தோடு கூடிய கைலை மலை. 'ஏபெற்றாகும்' என்பது தொல். சொல். உரி (பெற்று – பெருக்கம்) 'ஏகல் அடுக்கம்' என்னும் நற்றிணையும் (116) காண்க.

Is this the place called Idai-maru-thoor where Lord Civan having in His hand the mountain bow to which a dart is fixed, abides. He suppressed the indomitable bravery of the Asura - the king of Sri Lanka, while people witnessed it shouted Ah! Aa!! Young girls dry their flower decked wet hair by the smoke of eaglewood. Devotees adore Holy Feet of Lord Civan of this place uninterruptedly and with all sincerity in their heart.

**Note:** The word 'Silai' means (1) mountain and (2) bow.

முற்றா தஹொர்பான் மதிசூ டுமுதல்வன்
நற்றா மரையா னொடுமா லயந்தேத்தப்
பொற்றோ ளியுந்தா னும்பொலிந் தழகாக
எற்றே யுறைகின் றவிடை மருதீதோ. 9

முற்றாதது ஓர் பால்மதி சூடும் முதல்வன்,
நல்-தாமரையானொடு மால் நயந்து ஏத்தப்,
பொன்-தோளியும் தானும் பொலிந்து அழகுஆக
எற்றே உறைகின்ற இடைமருது ஈதோ.

muRRAtatu or pAlmati cUTum mutalvan2,
nal--tAmaraiyAn2oTu mAl nayantu Etta,
pon2--tOLiyum tAn2um polintu azaku Aka
eRRE uRaikin2Ra iTai marutu ItO.

**பொருள்:** சிவபிரான், முற்றாத பால்போன்ற இளம் பிறையை முடிமிசைச் சூடிய முதல்வனாய் இருக்கிறான். நல்ல தாமரை மலர்மேல் உறையும் நான்முகனும், திருமாலும் விரும்பித் தொழுகிறார்கள். உமையம்மையும், தானுமாய்ச் சிவபிரான் பொலிந்து உறைகின்ற திருவிடை மருதூர் என்னும் தலம் இதுதானோ?

**குறிப்புரை:** பால்மதி – பால்போல் வெள்ளியபிறை. மால் நயந்து ஏத்த எனப்பிரிக்க. உறைகின்ற இடைமருது ஈதோ எற்றே எனக் கூட்டுக. எற்று – எத்தன்மைத்து; என வியந்து கூறியவாறு.

Is this the place called Idai-maru-thoor where Lord Civan manifests and shines aesthetically along with His consort Umaa Devi? He has on His head the young milky white moon which is not fully grown. Brahma who is seated on the lotus flowers and Thirumaal obediently worship Lord Civan here.

**Note:** The word 'etrē' occurring in the last line of the Tamil verse, is an interjection indicating a marvel. It literally means: "What may this be!".

சிறுதே ரருஞ்சில் சமணும் புறங்கூற
நெறியே பலபத் தர்கள்கை தொழுதேத்த
வெறியா வருகா விரிக்கோ லக்கரைமேல்
எறியார் மழுவா ளனிடை மருதீதோ. 10

*சிறுதேரரும் சில்சமணும் புறம்கூற,*
*நெறியே பல பத்தர்கள் கைதொழுது ஏத்த,*
*வெறியா வரு காவிரிக் கோலக் கரைமேல்*
*எறி ஆர் மழு வாளன் இடைமருது ஈதோ.*

ciRu tErarum cil camaNum puRam kURa,
neRiyE pala pattarkaL kai tozutu Etta,
veRiyA varu kAvirik kOlak karaimEl
eRi Ar mazuvALan2 iTai marutu ItO.

**பொருள்:** சிறுமதியாளராகிய பௌத்தர்களும், சிற்றறிவினராகிய சமணர்களும் புறம் கூறித் திரிகிறார்கள். சிவபக்தர்கள் பலர் முறையாலே கைகளால் தொழுது துதிக்கின்றனர். பகைவரைக் கொன்றொழிக்கும் மழுவை ஏந்திய சிவபிரான் எழுந்தருளியுள்ளதும், மணம் கமழ்ந்து வரும் காவிரியாற்றின் அழகிய கரைமேல் உள்ளதும் ஆகிய திருவிடைமருதூர் என்னும் தலம் இதுதானோ?

**குறிப்புரை:** புறச்சமயிகள் புறங்கூறுகிறார்கள்; பக்தர்கள் கைதொழுது பயன்கொள்ளுகிறார்கள் என்று இறைவனுடைய வேண்டுதல் வேண்டாமையையும், ஆன்மாக்கள் அவர் அவர் பரிபாகத்திற்கேற்பப் பலன் கொள்ளுகிறார்கள் என்பதையும் அறிவித்தபடி. தேரர் – புத்தர். எறியார் மழுவாளன் – எறியுந் தன்மைவாய்ந்த மழுவைத் தாங்கியவன்.

Is this the place called Idai-maru-thoor where Lord Civan is entempled? This town is situated on the attractive banks of river Cauvery, which spreads fragrant aroma along its course. Lord Civan holds in His hand the battleaxe, which can destroy enemies. The narrow minded Buddhists and the Samanars with the imperfect knowledge are backbiting on others. But all the sincere devotees worship Lord Civa here in this place with folded hands in the proper manner.

கண்ணார் கமழ்கா ழியுண்ஞா னசம்பந்தன்
எண்ணார் புகழெந் தையிடை மருதின்மேல்
பண்ணோ டிசைபா டியபத் தும்வல்லார்கள்
விண்ணோ ருலகத் தினில்வீற் றிருப்பாரே. 11

கண் ஆர் கமழ் காழியுள் ஞானசம்பந்தன்
எண் ஆர் புகழ் எந்தை இடைமருதின்மேல்
பண்ணோடு இசை பாடிய பத்தும் வல்லார்கள்
விண்ணோர் உலகத்தினில் வீற்றிருப்பாரே.

kaN Ar kamaz kAziyuL njAn2acampantan2
eN Ar pukaz entai iTaimarutin2mEl
paNNOTu icai pATiya pattum vallArkaL
viNNOr ulakattin2il vIRRiruppArE.

***பொருள்:*** இடம் அகன்றதும், மணம் கமழ்வதுமான சீகாழிப் பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தன். அவருடைய எண்ணத்தில் நிறைந்துள்ளதும் புகழை உடையதும் சிவபிரானுக்கு உரியதுமான திருவிடைமருதூர்மீது பண்ணோடியன்ற இசையில் பத்துப்பாடல்களைப் பாடியுள்ளார். இப்பாடல்களைப் பாட வல்லவர்கள் விண்ணோர் உலகில் வீற்றிருக்கும் சிறப்பைப் பெறுவார்கள்.

**குறிப்புரை:** கண்ணார் இடமகன்ற, எண்ணார்புகழ் – எண்ணத்தைப் பொருந்திய புகழ். வீற்றிருப்பார் – பிறதேவர்க்கில்லாத பெருமையோடு இருப்பார்கள்.

Gnaanasambandan hails from the broad city of Seekazhi where fragrance smell fills the air all around. He has sung in tuneful harmony this ten verses, what all he had in mind about Idai-maru-thoor where Lord Civan gloriously resides. Those who can chant these ten verses with sincere devotion will have the rich benefit of abiding in the world of Devas.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*32ஆம் பதிகம் முற்றிற்று*
End of 32nd Hymn

உ
சிவமயம்

## 33. திருஅன்பிலாலந்துறை

### திருத்தலவரலாறு:

திருஅன்பிலாலந்துறை என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். திருச்சிராப்பள்ளிக்கு அருகே லால்குடிக்குக் கிழக்கே 5 கி.மீ. தூரத்தில் கொள்ளிடத்தின் வடகரையில் உள்ளது. திருச்சிராப்பள்ளி, லால்குடி ஆகிய ஊர்களில் இருந்து பேருந்துகள் உள்ளன.

அன்பில் என்பது தலப்பெயர். ஆலந்துறை என்பது கோயில் பெயர். பிரமதேவர், வாகீச முனிவர் முதலியோர் பூசித்த தலம். இது கொள்ளிடக் கரையில் உள்ளது. திருஞான சம்பந்தப் பெருமான் இத்தலத்து எழுந்தருளியிருந்த போது, கொள்ளிடம் நீர்ப்பெருக்காய் இருந்ததாகவும், இக்கரையில் இருந்தே பாடியதாகவும், இறைவன் ஆணையின் வண்ணம் விநாயகர் காதைச் சாய்த்துக் கேட்டதாகவும், ஒரு கர்ண பரம்பரைச் செய்தி உண்டு. அதற்கேற்ப தல விநாயகர் திருவுருவம் முடிசாய்த்துச் செவி சாய்த்துக் கேட்கின்ற பாவனையில் அமைந்து இருக்கிறது. இறைவன் பெயர் சத்யவாகீசர்; இறைவியின் பெயர் சௌந்தர நாயகி. சத்தியலோகவாசியாகிய பிரமனும், வாகீசரும் பூசித்தமையால் சத்திய வாகீசர் என்ற பெயர் போலும். தீர்த்தம் கொள்ளிடநதி.

### கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றியனவாக 1902இல் படியெடுக்கப் பட்டவை 13 கல்வெட்டுக்களும், 1938இல் எடுக்கப்பட்டவை 6ம் உள்ளன. அவற்றில் ஏழு கல்வெட்டுக்கள் திருமால் கோயிலில் உள்ளவை. ஏனையவை சத்தியவாகீசரைப் பற்றியன. கல்வெட்டுக்களில் இறைவன் பெயர் பிரமபுரீசுவரர் என வழங்கப் பெறுகிறது. மாறவர்மன் குலசேகர பாண்டியன், மூன்றாம் இராஜேந்திர சோழன், ஹொய்சள வீரராமநாத தேவர், மதுரை கொண்ட பரகேசரிவர்மன், இராஜராஜதேவன் முதலியோர்கள் காலத்தனவாகக் காணப்படுகின்றன. இவையெல்லாம் பெரும்பாலும் நிவந்தம் அளிக்கப் பெற்றமையை அறிவிக்கின்றன.

**பதிக வரலாறு:**

திருக்கானூரை வணங்கிப் பதிகத்தொண்டு பாலித்துப் போந்த காழிப்பிள்ளையார் அன்பிலாந்துறைக்கு எழுந்தருளினார்கள். அங்கே 'முன்னவனைத் தொழுது பதம்நிறை செந்தமிழ்' பாடினார்கள்.

## 33. THIRU-ANBIL-AALANTHURAI

**THE HISTORY OF THE PLACE**

The sacred city of Thiru-anbil-aalanthurai is to the north of river Cauvery in Chola Naadu. It is located on the north bank of river Kollidam, at a distance of 5 km from Lalgudi near Thiruchchiraappalli. It is accessible by bus from Lalgudi and Thiruchchiraappalli. The name of the place is Anbil and that of the temple is Aalanthurai. Piramadevar, Vaageesa Munivar etc., offered worship at this temple. According to legends, when Saint Thirujnaanasambandhar came to this temple, the river Kollidam was in spate, and the saint sang of the Lord from the other shore to which Vinaayakar listened by turning his ear towards the saint, as ordered by the Lord. As if to confirm this story, the Vinaayakar at this temple has his head turned to one side in the posture of listening.

The Lord's name is Saththiyaavageesar, perhaps because He was worshipped by Piraman of Saththiyalokam and Vaageesar. Soundharanaayaki is the name of the Goddess. The holy ford is the river Kollidam.

**Stone Inscriptions**

Thirteen inscriptions in this temple were copied in 1902 and six in 1938. Of these, seven are in the Perumaal temple. The rest pertain to Saththiyavaageesar, who is referred to in the inscriptions as Piramapureesuvarar. They are of the times of Maaravarman Kulasekara Paandiyan, Raajendhira Cholan III, Hoysala Veera Raamanaatha Thevar, Madhurai Konda Parakesarivarman, and Raajaraaja Thevan. They mostly contain information about grants to the temple.

## INTRODUCTION TO THE HYMN

From Thiru-k-kaanur, our saint came to the town of Anbil the shrine of which is known as Aalanthurai and sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 33. திருஅன்பிலாலந்துறை 33. THIRU-ANBIL-AALANTHURAI

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

கணைநீ டெரிமா லரவம் வரைவில்லா
இணையா வெயின்மூன் றுமெரித் தவிறைவர்
பிணைமா மயிலுங் குயில்சேர் மடவன்னம்
அணையும் பொழிலன் பிலாலந் துறையாரே. 1

*கணை நீடு எரி, மால் அரவம், வரை வில்லா,*
*இணையா எயில் மூன்றும் எரித்த இறைவர் -*
*பிணை மா மயிலும் குயில், சேர் மட அன்னம்,*
*அணையும் பொழில் அன்பில் ஆலந்துறையாரே.*

kaNai nITu eri, mAl, aravam, varai villA,
iNaiyA eyil mUn2Rum eritta iRaivar--
piNai mA mayilum, kuyil, cEr maTa an2n2am,
aNaiyum pozil an2pil Alan tuRaiyArE.

**பொருள்:** சிவபிரான், நீண்டு எரிகின்ற தீயையும், திருமாலையும் அம்பாகக் கொண்டு பூட்டினார். அவர் வாசுகி என்னும் பாம்பை நாணாக் கட்டினார். மேரு மலையை வில்லாக வளைத்து முப்புரங்களையும் பெருமான் எரித்தார். தத்தம் பெடைகளோடு கூடிய பெரிய மயில்களும், குயில்களும் சேர்ந்தும் மற்றும் அன்னங்களும் உறையும் பொழில் சூழ்ந்த அன்பிலாலந்துறையில் சிவபிரான் விளங்குகிறார்.

**குறிப்புரை:** இது திரிபுரம் எரித்த இறைவர் ஆலந்துறையார் என அறிவிக்கின்றது. நீடு எரி மால் கணை – மேலோங்கி எழுகின்ற தீயையும், திருமாலையும் கணையாகவும். அரவம் வரை வில்லா – வாசுகி என்னும் பாம்பை நாணாகக் கொண்ட மேருமலையை வில்லாகவும். இணையா – இணைத்து. பிணை – தத்தம் பெட்டைகளோடு கூடிய.

Lord Civan burnt the three citadels of Asuras by using - Mēru mountain (மேருமலை) as Bow; the snake Vāsuki (வாசுகி) as string; Thirumaal (திருமால்) as arrow; and the upsoaring Agni (நீண்டு எரிகின்ற தீ) as the tip of the arrow. This Civan belongs to and shines at the temple called Aalanthurai (ஆலந்துறை) in the town of Anbil (அன்பில்). This town is surrounded by lush forests where big peacocks along with their mates, the kuils (குயில்கள்) and swans live and thrive in harmony.

**Note:** Mountain-bow: Mount Mēru. Its string was Vaaṣuki, the serpent. Vishnu became the arrow the tip of which was Agni, the Fire-God.

சடையார் சதுரன் முதிரா மதிசூடி
விடையார் கொடியொன் றுடையெந் தைவிமலன்
கிடையா ரொலியோத் தரவத் திசைகிள்ளை
அடையார் பொழிலன் பிலாலந் துறையாரே. 2

*சடை ஆர் சதுரன், முதிரா மதி சூடி,*
*விடை ஆர் கொடி ஒன்று உடை எந்தை, விமலன் -*
*கிடை ஆர் ஒலி ஒத்து அரவத்து இசை கிள்ளை*
*அடை ஆர் பொழில் அன்பில் ஆலந்துறையாரே.*

caTai Ar caturan2, mutirA mati cUTi,
viTai Ar koTi on2Ru uTai entai, vimalan2--
kiTai Ar oli Ottu aravattu icai kiLLai
aTai Ar pozil an2pil AlantuRaiyArE.

**பொருள்:** சிவபிரான், சடைமுடிகளோடு கூடிய சதுரப்பாடு உடையவர். இளம்பிறையை முடிமிசைச் சூடியவர்; இடபக்கொடி ஒன்றை உடைய எந்தையராகிய விமலர் ஆவார். வேதம் பயிலும் இளம் சிறார்கள் கூடியிருந்து ஓதும் வேதஒலியைக் கேட்டு, அவ்வோசையாலேயே அவற்றை இசைக்கின்ற கிளிகள் அடைதல் பொருந்திய சோலைகளால் சூழப்பெற்ற அன்பிலாலந்துறை இறைவராவார்.

**குறிப்புரை:** இது கிளிகள் வேத இசையைச் சொல்லும் ஆலந்துறை இறைவனே எந்தை விமலன் என்கின்றது. சதுரன் – சாமர்த்தியம் உடையவன். கிடை ஆர் ஒலி – மாணவர்கள் கூட்டமாயிருந்து ஒலிக்கும் வேத ஒலி. இதனைச் சந்தைகூறுதல் என்ப. ஒத்து அரவத்து இசை கிள்ளை – வேத ஒலியை இசைக்கின்ற கிளி. அடை ஆர் பொழில் – அடைதல் பொருந்திய சோலை.

Lord Civan wears the young moon in His matted hair. The bull is the insignia of His flag. He is my immaculate father (*தந்தையாகிய விமலன்*). Young Vedic learners jointly recite the Vedas in a particular special tune in the Vedic school. Parrots listening to these voices, make the same noise and live in the forest trees which encircle the town Anbil. Lord Civan is the Supreme God of this place.

**Note:** The Vedas are taught to the well-chosen young boys. The inculcation takes place with rigour and vigour. Thanks to their purva-punya, parrots listen to the vedic chanting. In time, these too become well-versed in the art of chanting. On occasions, it is said, they even correct the alumni that err.

ஊரும் மரவஞ் சடைமே லுறவைத்துப்
பாரும் பலிகொண் டொலிபா டும்பரமர்
நீருண கயலும் வயல்வா ளைவராலோ
டாரும் புனலன் பிலாலந் துறையாரே. 3

ஊரும் அரவம் சடை மேல் உற வைத்து,
பாரும் பலி கொண்டு ஒலி பாடும் பரமர் -
நீர் உண் கயலும், வயல் வாளை, வராலோடு
ஆரும் புனல் அன்பில் ஆலந்துறையாரே.

Urum aravam caTaimEl uRa vaittu,
pArum pali koNTu oli pATum paramar--
nIr uN kayalum, vayal vALai, varAlOTu
Arum pun2al an2pil AlantuRaiyArE.

**பொருள்:** சிவபிரான், ஊர்ந்து செல்லும் பாம்பைச் சடைமுடிமேல் பொருந்த அணிந்துள்ளார். உலகம் முழுதும் சென்று பலியேற்று, இசை பாடி மகிழும் பரமனாக அவர் இருக்கிறார். நீரின் வழி உணவு உண்ணும் கயல் மீன்களை, வயல்களிடத்திலுள்ள வாளை மற்றும் விரால் ஆகிய மீன்கள் உண்ணும் புனல் வளம் மிக்க அன்பிலாலந்துறையாராகப் பெருமான் விளங்குகிறார்.

**குறிப்புரை:** இது பலிகொள்ளும் பரமர் அன்பிலாலந்துறையார் என்கின்றது. அடியார்களது ஓடும் மனத்தை ஓரிடத்து நிறுத்தி வைப்பதுபோல ஊரும் பாம்பைச் சடைமேல் உறவைத்தார் என்ற நயம் உணர்க.

Lord Civan wears properly the crawling snake on His matted hair and goes all over the world singing songs and receiving alms and takes pleasure in that way of life.

This Lord Civan belongs to Anbil-Aalanthurai which has copious water always. The Vaalai and Varaal fishes (*வாளை மற்றும் வரால் மீன்கள்*) living in the watery fields eat the Kayal fish (*கயல் மீன்கள்*) which survives in aquatic fields.

**Note:** Carp

Vaalai: Scaffard-fish

Varaal: Mirel.

பிறையும் மரவும் முறவைத் தமுடிமேல்
நறையுண் டெழுவன் னியுமன் னுசடையார்
மறையும் பலவே தியரோ தவொலிசென்
றறையும் புனலன் பிலாலந் துறையாரே. 4

பிறையும்(ம்) அரவும்(ம்) உற வைத்த முடிமேல்
நறை உண்டு எழு வன்னியும் மன்னு சடையார் -
மறையும் பலவேதியர் ஓத, ஒலி சென்று
அறையும் புனல் அன்பில் ஆலந்துறையாரே.

piRaiyum(m) aravum(m) uRa vaitta muTimEl
naRai uNTu ezu van2n2iyum man2n2u caTaiyAr--
maRaiyum palavEtiyar Ota, oli cen2Ru
aRaiyum pun2al an2pil AlantuRaiyArE.

**பொருள்:** சிவபிரான், பிறைமதி பாம்பு ஆகியவற்றை பகைநீக்கி, ஒருங்கே பொருந்த வைத்த முடியை உடையவர். அந்த முடியின்மீது நறுமணத்துடன் தோன்றும் வன்னித்தளிர்களும் மன்னிய சடையினர். வேதியர் பலர் வேதங்களை ஓத, அந்த ஒலி பல இடங்களிலும் ஒலிக்கும் நீர்வளம் மிக்க அன்பிலாலந்துறை இறைவராவார்.

**குறிப்புரை:** இது இத்தலத்திறைவன் பகைநீக்கி ஆளும் பண்பினன் என்கின்றது. உறவைத்த – பகைநீக்கி ஒருங்கே பொருந்த வைத்த. நறை – நல்ல மணம். வன்னி – வன்னிப் பத்திரம். வேதியர் மறைபலவும் ஓத அவ்வொலிசென்று அறையும் ஆலந்துறை எனக் கூட்டுக.

Lord Civan fairly keeps both the snake and the moon together on His matted hair by nullifying their hostile nature against each other. He also wears on His hair the young shoots of Vanni (*வன்னிமரத் தளிர்கள்*). Vedic scholars chant the Vedas, the sounds

of which reverberate all around. Lord Civan belongs to this fertile city of Anbil-Aalanthurai which is rich with abundant water.

**Note:** Vanni: Indian mesquit tree.

நீடும் புனற்கங் கையுந்தங் கமுடிமேல்
கூடும் மலையா ளொருபா கமமர்ந்தார்
மாடும் முழவம் மதிரம் மடமாதர்
ஆடும் பதியன் பிலாலந் துறையாரே. 5

நீடும் புனல் கங்கையும் தங்க முடிமேல்,
கூடும் மலையாள் ஒரு பாகம் அமர்ந்தார் -
மாடு(ம்) முழவம் அதிர(ம்), மடமாதர்
ஆடும் பதி அன்பில் ஆலந்துறையாரே.

nITum pun2al kagkaiyum tagka muTimEl,
kUTum malaiyAL orupAkam amarntAr--
mATu(m) muzavam atira(m), maTa mAtar
ATum pati an2pil AlantuRaiyArE.

***பொருள்:*** சிவபிரான், முடிமேல் பெருகிவரும் நீரை உடைய கங்கையாற்றையும் தங்குமாறு அணிந்துள்ளார். தம்மைத் தழுவிய மலைமகளை ஒரு பாகமாகக் கொண்டுள்ளார். பல இடங்களிலும் முழவுகள் ஒலிக்க, இளம் பெண்கள் பலர் நடனங்கள் புரியும் அன்பிலாலந்துறை இறைவர் ஆவார்.

***குறிப்புரை:*** இது அன்பிலாலந்துறை இறைவர், கங்கையை முடி மேல் வைத்து உமையாளை ஒரு பாகம் வைத்துள்ளார் என்கின்றது. இவர் போகியாய் இருப்பதற்கேற்ற தலம், முழவம் அதிர மடமாதர் ஆடும் பதியாய்ப் போகபூமியாய் இருப்பதைக் குறித்தவாறு. மாடு – பக்கம்.

Lord Civan permits the gushing river Ganges to stay on His matted hair. He is concorporate with His consort, the daughter of the King of the Himaalayan mountain who embraced Him. In many places of Anbil young girls dance to the beat of drums. He who owns this Anbil-Aalanthurai is our Lord Civan.

நீறார் திருமே னியரூ னமிலார்பால்
ஊறார் சுவையா கியவும் பர்பெருமான்
வேறா ரகிலும் மிகுசந் தனமுந்தி
ஆறார் வயலன் பிலாலந் துறையாரே. 6

நீறு ஆர் திருமேனியர், ஊனம் இலார்பால்
ஊறு ஆர் சுவை ஆகிய உம்பர் பெருமான் -
வேறு ஆர் அகிலும், மிகு சந்தனமும், உந்தி
ஆறு ஆர் வயல் அன்பில் ஆலந்துறையாரே.

nIRu Ar tirumEn2iyar, Un2am ilArpAl
URu Ar cuvai Akiya umpar perumAn2--
vERu Ar akilum, miku cantan2am, unti
ARu Ar vayal an2pil AlantuRaiyArE.

**பொருள்:** சிவபிரான், திருநீறு அணிந்த திருமேனியர். குற்றம் அற்றவர்களின் உள்ளங்களில் பொருந்திய சுவையாக இனிப்பவர். அவர் தேவர் தலைவர். தனியாகப் பெயர்ந்து வரும் அகில் மரங்களையும், உயர்ந்த சந்தன மரங்களையும் அடித்துவரும் காவிரி ஆற்று நீர் பாயும் வயல்களை உடைய திரு அன்பிலாலந்துறை இறைவராகச் சிவபிரான் விளங்குகிறார்.

**குறிப்புரை:** இது குற்றமே இல்லாத நற்றவர்பால் ஊறுஞ் சுவையாய் விளங்குபவர் என்கின்றது. ஊனம் இல்லார்பால் ஊறு ஆர் சுவை ஆகிய எனப் பிரிக்க. ஆர் சுவை – அரிய அமுதம். வேறு ஆ – வேறாகப் பெயர்ந்த.

Lord Civan's beautiful body is smeared with holy ashes. He is as sweet as nectar in the hearts of His unblemished devotees. He is the Chief of Devas. He is the Lord Supreme of Anbil-Aalanthurai which is surrounded by fertile fields into which the river water flows. The uprooted eaglewood trees and good quality sandalwood trees are carried on by this river.

செடியார் தலையிற் பலிகொண் டினிதுண்ட
படியார் பரமன் பரமேட் டிதன்சீரைக்
கடியார் மலரும் புனல்தூ விநின்றேத்தும்
அடியார் தொழுமன் பிலாலந் துறையாரே. 7

செடி ஆர் தலையில் பலி கொண்டு இனிது உண்ட
படி ஆர் பரமன் பரமேட்டி - தன் சீரைக்,
கடி ஆர் மலரும் புனல் தூவி நின்று, ஏத்தும்
அடியார் தொழும் அன்பில் ஆலந்துறையாரே.

ceTi Ar talaiyil pali koNTu in2itu uNTa
paTi Ar paraman2, paramETTi--tan2 cIrai,
kaTi Ar malarum pun2al tUvi nin2Ru, Ettum
aTiyAr tozum an2pil AlantuRaiyArE.

**பொருள்:** சிவபிரான், முடை நாற்றம் உடைய தலையோட்டில் பலியேற்று, அதனை இனிதாக உண்டருளும் தன்மையினைக் கொண்ட பரமனாகிய பரம்பொருளாக இருக்கிறார். அவர், மணம் பொருந்திய மலர்களையும், நீரையும் தூவி, நின்று, தன் புகழைத் துதிக்கும் அடியார்களால் தொழப்படும் திரு அன்பிலாலந்துறை இறைவர் ஆவார்.

**குறிப்புரை:** இது இறைவன் புகழைச் சொல்லி அடியார்கள் வழிபடும் ஆலந்துறையார் என்கின்றது. செடி – முடைநாற்றம். செடியார் தலையில் பிச்சை ஏற்று இனிதுண்டார் என்பது இறைவன் வேண்டுதல் வேண்டாமையிலான் என்பதை உணர்த்தியது. படி – தன்மை. அடியார். சீரைத் தூவிநின்று ஏத்தித் தொழும், ஆலந்துறையார் என்க.

Lord Civan metaphorically is immaculate and has no likes and dislikes. Out of Supreme mercy and consideration for the elevation of souls Lord Civan commands them to get rid of their ignorance and egoism so as to enable them to achieve the goal of their life, which is enjoyment of Bliss in the pervasion of the Supreme and to have ineffable union with Him.

**Note:** God is above qualities. Odour and malodour are one and the same to Him.

விடத்தார் திகழும் மிடறன் னடமாடி
படத்தா ரரவம் விரவுஞ் சடையாதி
கொடித்தே ரிலங்கைக் குலக்கோன் வரையார
அடர்த்தா ரருளன் பிலாலந் துறையாரே. 8

விடத் தார் திகழும் மிடறன், நடம்ஆடி,
படத்து ஆர் அரவம் விரவும் சடை ஆதி,
கொடித்தேர் இலங்கைக் குலக்கோன் வரை ஆர
அடர்த்தார் - அருள் அன்பில் ஆலந்துறையாரே.

viTat tAr tikazum miTaRan2, naTam ATi,
paTattu Ar aravam viravum caTai Ati,
koTittEr ilagkaik kulakkOn2 varai Ara
aTarttAr--aruL an2pil AlantuRaiyArE.

***பொருள்:*** சிவபிரான், ஆலகால விடக் கறை விளங்கும் கரிய கண்டத்தினர். நடனம் ஆடுபவர். படத்தோடு கூடிய அரவம் விரவும் சடையினை உடைய முதற்கடவுள். அவர் கொடிய தேரைக் கொண்ட இலங்கையர் குலத் தலைவனாகிய இராவணனை, மலையின் கீழ் அகப்படுத்தி அடர்த்தவர். இவ்வகைய சிவபிரான், அன்பர்கள் அருள் பெறுவதற்குரிய இடமாக விளங்கும் திரு அன்பில் ஆலந்துறை என்னும் தலத்தில் எழுந்தருளியுள்ளார்.

***குறிப்புரை:*** இது நீலகண்டனாய் அரவம் அணிந்து இராவணனை அடர்த்தவன் ஆலந்துறையான் என்கின்றது. விடத்தார் திகழும் மிடறன் – 'கறைமிடறு அணியலும் அணிந்தன்று' என்ற கருத்தை ஒப்புநோக்குக. படத்து ஆர் அரவம் – படம் பொருந்திய பாம்பு. ஆதி – முதல்வனே; அண்மைவிளி.

Lord Civan's gullet is dark blue in colour due to swallowing of the cruel poison that came out of the sea. He is the king of dancing and a supreme dancer by Himself. He is the Supreme Lord who keeps the hooded snake on His matted hair. He crushed the head and shoulders of Raavana who is the head of Sri Lankans as well the king of Sri Lanka, whose chariot sports a flag. This Lord Civan is enshrined in Anbil-Aalanthurai to enable His devotees to be blessed by His grace.

வணங்கிம் மலர்மே லயனுந் நெடுமாலும்
பிணங்கி யறிகின் றிலர்மற் றும்பெருமை
சுணங்கும் முகத்தம் முலையா ளொருபாகம்
அணங்குந் நிகழன் பிலாலந் துறையாரே. 9

***வணங்கி(ம்) மலர் மேல் அயனும், நெடுமாலும்,***
***பிணங்கி அறிகின்றிலர், மற்றும் பெருமை -***
***சுணங்கு(ம்) முகத்து அம் முலையாள் ஒருபாகம்***
***அணங்கும் நிகழ் அன்பில் ஆலந்துறையாரே.***

vaNagki(m) malarmEl ayan2um, neTumAlum,
piNagki aRikin2Rilar, maRRum perumai;--
cuNagku(m) mukattu am mulaiyAL orupAkam
aNagkum tikaz an2pil AlantuRaiyArE.

***பொருள்:*** தாமரை மலர்மேல் விளங்கும் அயனும், திருமாலும் சிவபிரானுடைய பெருமையை வணங்கி அறியாது, தம்முட் பிணங்கித் தேடி அறியாதவராயினர். அச்சிவபிரான், சுணங்கு பொருந்திய உமையம்மையை ஒருபாகத்தே அணங்காகக் கொண்டுள்ள திருஅன்பில் ஆலந்துறை இறைவர் ஆவார்.

**குறிப்புரை:** இது உமையொருபாகர் ஆலந்துறையார் என்கின்றது. வணங்கி மலர்மேல் என்பது சந்தம் நோக்கி மகரம் மிகுந்தது. பிணங்கி உம் பெருமையறிகின்றிலர் எனக்கூட்டுக. மற்று அசை – சுணங்கு முகத்து முலையாளாகிய அணங்கு ஒரு பாகம் நிகழ் ஆலந்துறையார் எனக் கூட்டுக. ஒரு பாகம் இருந்தும் சுணங்கு பூக்கும் முலையாள் என்றது அம்மையின் மாறாத காதலை அறிவித்தவாறு. சுணங்கு பெண்களுக்குண்டாகும் தேமல். அணங்கு – தெய்வப்பெண்.

Both Brahma (who is seated on the Lotus) and Thirumaal challenged one another as to who was superior between them. They knew neither the glory of Lord Civan nor paid any obeisance to know about Him. They both went in search of His head and Holy Feet but in vain. Lord Civan is concorporate with His lovely divine consort Umaa Devi whose attractive breasts have yellow spots (Freckle - *சுணங்கு, தேமல்*). This Lord Civan belongs to Anbil-Aalanthurai.

**Note:** Any contention is an indicant of the assertion of ego. It is egolessness that earnestly invites the bestowal of grace.

தறியார் துகில்போர்த் துழல்வார் சமண்கையர்
நெறியா வுணரா நிலைக்கே டினர்நித்தல்
வெறியார் மலர்கொண் டடிவீ ழுமவரை
அறிவா ரவரன் பிலாலந் துறையாரே. 10

***தறியார், துகில் போர்த்து உழல்வார், சமண்கையர்,***
***நெறியா உணரா நிலை கேடினர்; நித்தல்***
***வெறி ஆர் மலர் கொண்டு அடி வீழுமவரை***
***அறிவார் அவர் அன்பில் ஆலந்துறையாரே.***

taRiyAr, tukil pOrttu uzalvAr, camaNkaiyar,
neRiyA uNarA nilai kETin2ar; nittal
veRi Ar malar koNTu aTi vIzumavarai
aRivAr avar--an2pil AlantuRaiyArE.

**பொருள்:** தறிபோல ஆடையின்றி உள்ள சமணர்கள், நெய்த ஆடையினை உடலில் போர்த்து உழலும் பௌத்தர்கள் ஆகியோர், சிவ பரம்பொருளை முறையாக உணராததோடு, நிலையான கேடுகளுக்கு உரியவர்களாய் உள்ளனர். அவர்களைச் சாராது, நாள்தோறும்

மணமலர்களைச் சூட்டித் தம் திருவடிகளில் வீழ்ந்து தொழும் அடியார்களை நன்கு அறிந்து அருளும் சிவபெருமானார் திருஅன்பில் ஆலந்துறை இறைவர் ஆவார்.

**குறிப்புரை:** இது அன்போடு பூவும் நீரும் கொண்டு அடிபணிவாரை அறிபவர் ஆலந்துறையார் என்கின்றது. தறியார் துகில் – தறியில் நெய்த ஆடை. நெறியா உணரா – முறைமைப்படி உணர்ந்து கொள்ளாத, நிலைக்கேடினர் – கெட்ட நிலையை யுடையவர்கள். வீழுமவர் – விரும்பித் தொழுமடியார்.

Samanars wear no cloth on their body while the Buddhists cover their body with woven cloth and roam around. They both never realize about the Supreme Being according to scriptures. They indulge in evil ways of life. Devotees of Civan never approach these people, but they decorate Civan with fragrant flowers and prostrate before His Holy Feet daily and offer worship to Him. Lord Civan knows all about His devotees well and graces them. He is the Supreme Lord of Anbil-Aalanthurai.

**Note:** Jainism and Buddhism are Godless cults. It is an error to call them faiths.

அரவார் புனலன் பிலாலந் துறைதன்மேல்
கரவா தவர்கா ழியுண்ஞா னசம்பந்தன்
பரவார் தமிழ்பத் திசைபா டவல்லார்போய்
விரவா குவர்வா னிடைவீ டெளிதாமே. 11

அரவு ஆர் புனல் அன்பில் ஆலந்துறைதன்மேல்
கரவாதவர் காழியுள் ஞானசம்பந்தன்
பரவு ஆர் தமிழ்பத்து இசை பாட வல்லார் போய்
விரவு ஆகுவர் வான் இடை வீடு எளிது ஆமே.

aravu Ar pun2al an2pil AlantuRai tan2 mEl
karavAtavar kAziyuL njAn2acampantan2
paravu Ar tamiz pattu icai pATa vallAr pOy
viravu Akuvar, vAn2 iTai; vITu eLitu AmE.

**பொருள்:** வஞ்சனை இல்லாத மக்கள் வாழும் சீகாழிப் பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் சிவபிரானைப் பாடினார். பாம்பு நெளிந்து விரைந்து வருவது போன்ற தோற்றமுடைய நீர்வளம் உடையதாயும் உள்ள திருஅன்பில் ஆலந்துறை இறைவனாகிய சிவபிரான் மேல் பரவிப் பாடிய இப்பத்துப் பாடல்களையும் இசையோடு பாடவல்லவர் மறுமையில் வானக இன்பங்களுக்கு உரியவர்கள் ஆவர். அவர்களுக்கு வீட்டின்பம் எளிதாம்.

**குறிப்புரை:** இப்பாடல் பத்தினையும் இசையோடு பாடவல்லார் விண்ணின்பத்தை மேவுவர்; அவர்க்கு வீட்டின்பமும் எளிதாம் என்கின்றது. கரவாதவர் காழி – வஞ்சனை இல்லாத தவத்தவர் மேவியுள்ள காழி. ஆலந்துறை தன்மேல் பரவு ஆர், தமிழ் எனக்கூட்டுக. வானிடை விரவு ஆகுவர் – விண்ணிற்கலப்பர். அரவார் புனல் – பாம்பை ஒத்த புனல் (நெளிந்து விரைந்து வருதல்).

Anbil-Aalanthurai has plenty of waterways where the water gushes crawling and warping like snake's movement. Gnaanasambandan hails from Seekaazhi where live people of nobility without any jealous nature. He sang these ten verses with profound intensity on Lord Civan of Anbil-Aalanthurai. Those who can sing these ten verses with proper musical notes will be eligible to attain celestial bliss in their next birth. Also it will be easy for them to reach Civan's Holy Feet.

**Note:** Paradise is gained by Pasa-punya and Moksha by Pati-punya.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*33ஆம் பதிகம் முற்றிற்று*
End of 33rd Hymn

உ
சிவமயம்

# 34. சீகாழி

## திருத்தலவரலாறு:

முதல் பதிகம் பார்க்க.

# 34. SEE KAAZHI

## THE HISTORY OF THE PLACE

See First Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 34. சீகாழி

## 34. SEE KAAZHI

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

அடலே றமருங் கொடியண்ணல்
மடலார் குழலா ளொடுமன்னுங்
கடலார் புடைசூழ் தருகாழி
தொடர்வா ரவர்தூ நெறியாரே. 1

அடல் ஏறு அமரும் கொடி அண்ணல்
மடல் ஆர் குழலாளொடு மன்னும்,
கடல் ஆர் புடை சூழ்தரு, காழி
தொடர்வார் அவர் தூ நெறியாரே.

aTal ERu amarum koTi aNNal
maTal Ar kuzalALoTu man2n2um,
kaTal Ar puTai cUz taru, kAzi
toTarvAr avar tU neRiyArE.

**பொருள்:** சிவபிரான், வலிமை பொருந்திய இடபம் பொறிக்கப்பட்ட கொடியைத் தனதாகக் கொண்ட தலைவராவார். கடலால் சூழப்பட்ட சீகாழிப் பதியில், மலர்சூடிய கூந்தலை உடைய உமையம்மையோடு எழுந்தருளி இருக்கிறார். அந்தத் தலத்தை இடைவிடாது சென்று வழிபடுபவர் தூயநெறியில் நிற்பவர் ஆவார்.

**குறிப்புரை:** இது இறைவன் உமையோடு எழுந்தருளியிருக்கும் சீகாழியைப் பரவுவார் தூநெறியார் என்கின்றது. அடல் ஏறு – வலிமை பொருந்திய இடபம். மடல் – பூ. தொடர்வார் – இடைவிடாது தியானிப்பவர்.

The Supreme Lord Civan has the strong bull as the insignia of His flag. He is enshrined at Seekaazhi along with His consort Umaa Devi whose hair locks have been decked with flowers. This town is close to the sea. Those devotees who visit Seekaazhi city uninterruptedly and offer worship to the Lord are the pursuers of the pure and holy way.

**Note:** Civa is the way as well as the Goal.

திரையார் புனல்சூ டியசெல்வன்
வரையார் மகளோ டுமகிழ்ந்தான்
கரையார் புனல்சூழ் தருகாழி
நிரையார் மலர்தூ வுமினின்றே. 2

*திரை ஆர் புனல் சூடிய செல்வன்,*
*வரையார் மகளோடு மகிழ்ந்தான்,*
*கரை ஆர் புனல் சூழ்தரு, காழி*
*நிரை ஆர் மலர் தூவுமின் நின்றே!*

tirai Ar pun2al cUTiya celvan2,
varaiyAr makaLOTu makizntAn2,
karai Ar pun2al cUztaru, kAzi
nirai Ar malar tUvumin2, nin2RE!

**பொருள்:** சிவபிரான், அலைகளோடு கூடிய கங்கையை முடிமிசைச் சூடிய செல்வனாக விளங்குகிறார். கரையை உடைய நீர்நிலைகளால் சூழப்பட்ட சீகாழிப்பதியில் சிவபிரான் மலைமகளோடு மகிழ்ந்து எழுந்தருளியுள்ளான். அந்தச் சீகாழிப்பதியை வரிசையான பூக்களைக் கொண்டு நின்று தூவி வழிபடுமின்.

**குறிப்புரை:** காழியை இன்றே மலர்தூவி வணங்குங்கள் என்கின்றது. நிரையார் மலர் – வரிசையான பூக்கள்.

Lord Civan sports on His head the billowing river Ganges. He is happily enshrined in Seekaazhi along with His consort who is the daughter of the King of the

Himalayan mountain. This town is encircled by pools having proper banks. Ye folks! Carrying flowers, form a line and offer worship placing the flowers at His Holy Feet.
**Note:** 'Nilai aar malar' is Kondrai.

இடியார் குரலே றுடையெந்தை
துடியா ரிடையா ளொடுதுன்னுங்
கடியார் பொழில்சூழ் தருகாழி
அடியா ரறியா ரவலம்மே. 3

இடி ஆர் குரல் ஏறு உடை எந்தை
துடி ஆர் இடையாளொடு துன்னும்,
கடி ஆர் பொழில் சூழ்தரு, காழி
அடியார் அறியார், அவல(ம்)மே.

iTi Ar kural ERu uTai entai
tuTi Ar iTaiyALoTu tun2n2um,
kaTi Ar pozil cUztaru, kAzi
aTiyAr aRiyAr, avala(m)mE.

**பொருள்:** இறைவனாகிய சிவபிரான், இடியை ஒத்த குரலை உடைய இடபத்தைத் தனது வாகனமாகக் கொண்ட எம் தந்தையாவான். மணம் பொருந்திய பொழில்களால் சூழப்பட்ட சீகாழிப் பதியில் துடிபோலும் இடையை உடைய உமையம்மையோடு எழுந்தருளி இருக்கிறான். அந்த சீகாழிப் பதியை வணங்கும் அடியவர்கள் துன்பத்தை அறியார்கள்.

**குறிப்புரை:** இது காழி அடியார் அவலம் அறியார் என்கின்றது. இடியார் குரல் ஏறு – இடியையொத்த குரலுடைய இடபம். துடி – உடுக்கை. எந்தை துன்னும் காழி அடியார் அவலம் அறியார் எனக்கூட்டுக.

Lord Civan who is my father has for His vehicle the vociferous bull which makes noise like thunder. He is enshrined in Seekaazhi along with His consort Umaa Devi whose waist is as narrow as the centre portion of the small drum (துடி) which He holds in His hand. This town is encircled by lush forests with fragrant flowers. Those devotees who offer worship to Lord Civan of this place will never be confronted by any sadness.
**Note:** Tudi: A small drum shaped like an hourglass.

ஒளியார் விடமுண் டவொருவன்
அளியார் குழன்மங் கையொடன்பாய்க்
களியார் பொழில்சூழ் தருகாழி
எளிதா மதுகண் டவரின்பே. 4

ஒளி ஆர் விடம் உண்ட ஒருவன்,
அளி ஆர் குழல் மங்கையொடு அன்புஆய்க்,
களி ஆர் பொழில் சூழ்தரு, காழி
எளிதுஆம். - அது கண்டவர் - இன்பே.

oLi Ar viTam uNTa oruvan2,
aLi Ar kuzal magkaiyoTu an2pu Ay,
kaLi Ar pozil cUztaru, kAzi
eLitu Am,--atu kaNTavar--in2pE.

**பொருள்:** ஒப்பற்றவனாகிய சிவபிரான், நீலநிற ஒளியோடு கூடிய ஆலகால விடத்தை உண்டருளியவன். பொழில்கள் சூழ்ந்த சீகாழிப் பதியில் உமையம்மையோடு அன்புடன் களிக்கின்றான். அந்த உமையம்மை, வண்டுகள் மணத்தைத் தேடிவந்து நாடும் கூந்தலை உடையவள். உமையம்மையுடன் பெருமான் உறையும் சீகாழிப் பதியைக் கண்டவர்க்கு இன்பம் எளிதாம்.

**குறிப்புரை:** இது காழி கண்டவர்க்கு இன்பம் எளிதாம் என்கின்றது. ஒளியார் விடம் – நீலஒளியோடுகூடிய விடம். அளி – வண்டு. ஒருவன் மங்கையோடு அன்பாய்க் களி ஆர் காழி கண்டவர் இன்பம் எளிதாம் என முடிவு செய்க.

The incomparable Lord Civan swallowed the cruel dark blue poison and happily stayed in Seekaazhi along with His consort Umaa Devi. Her hair is so fragrant that bees fly towards Her hair to enjoy the smell and suck honey if available. The devotees who have visited this place will gain bliss easily.

பனியார் மலரார் தருபாதன்
முனிதா னுமையோ டுமுயங்கிக்
கனியார் பொழில்சூழ் தருகாழி
இனிதா மதுகண் டவரீடே. 5

பனி ஆர் மலர் ஆர்தரு பாதன்,
முனி தான், உமையோடு முயங்கிக்,
கனி ஆர் பொழில் சூழ்தரு, காழி
இனிதுஆம், - அது கண்டவர் - ஈடே.

pan2i Ar malar Ar taru pAtan2,
mun2i tAn2, umaiyOTu muyagki,
kan2i Ar pozil cUztaru, kAzi
in2itu Am,--atu kaNTavar--ITE.

**பொருள்:** சிவபிரான், தண்மை பொருந்திய தாமரை மலர்போன்ற திருவடிகளை உடையவன். அவன், உமையம்மையோடு கூடி உலக உயிர்கட்குப் போகத்தைப் புரிந்தருளினும், தான் முனிவனாகவே விளங்குகிறான். கனிகள் குலுங்கும் பொழில்கள் சூழ்ந்த சீகாழிப் பதியில் சிவபிரான் எழுந்தருளியுள்ளான். அந்தப்பதியைச் சென்று கண்டவர்க்குப் பெருமை எளிதாக வந்தடையும்.

**குறிப்புரை:** இது காழி கண்டவர் பெருமை எய்துவர் என்கின்றது. பனி – குளிர்மை. பனியார் மலர் – தாமரை மலர். ஆர்தரு – ஒத்த. உமையோடு முயங்கி முனிதான் – ஒருத்தியோடு கூடியிருந்தும் தான் முனிவனாய் இருப்பவன். பாதன் முனி காழி கண்டவர் ஈடு இனிதாம் என முடிக்க.

Lord Civan's Holy Feet are as cool and charming\ as Lotus flower. Though He is in union with His consort Umaa Devi and imparts all knowledge about family life to all the souls in the world, He remains an ascetic maintaining celibacy.

**Note:** Gender has no relevance when Civa and Umaa are described. The Sivagnaana Siddhiyaar says: "Civa is a Bachelor and Umaa whose words are sweet like milk is a virgin".

கொலையார் தருகூற்ற முதைத்து
மலையான் மகளோடு மகிழ்ந்தான்
கலையார் தொழுதேத்தி யகாழி
தலையாற்றொ ழுவார் தலையாரே. 6

*கொலை ஆர்தரு கூற்றம் உதைத்து*
*மலையான் மகளோடு மகிழ்ந்தான்,*
*கலையார் தொழுது ஏத்திய, காழி*
*தலையால்-தொழுவார் தலையாரே.*

kolai Artaru kURRam utaittu
malaiyAn2 makaLOTu makizntAn2,
kalaiyAr tozutu Ettiya, kAzi
talaiyAl--tozuvAr talaiyArE.

***பொருள்:*** சிவபிரான், கொலைத் தொழில் நிறைந்த எமனை உதைத்து அழித்தான். அவன் மலையரையன் மகளாகிய உமையம்மையோடு மகிழ்ந்து உறைபவன். அத்தகைய சிவபெருமான் விரும்புவதும், மெய்ஞ்ஞானியர்கள் தொழுது ஏத்துவதும் ஆகிய சீகாழிப் பதியைத் தலையால் வணங்குவார் தலையாயவர் ஆவார்.

***குறிப்புரை:*** இது காழிக்குச் சிரம் பணிவார் மேலானவர் என்கின்றது. கலையார் – கலைஞானிகள்.

Lord Civan kicked to death Yama (*யமன்*) the god of death whose sole duty is killing. He happily dwells with His consort Umaa Devi, daughter of the king of Himalayan Mountain. He craves to be entempled in Seekaazhi. Also men of true wisdom (*மெய்ஞ்ஞானியர்*) offer worship and adore Lord Civan of this place. Those who prostrate before the temple of this city and the Lord therein will become leaders of the world.

**Note:** Servitors devoted to Civa are true spiritual leaders.

திருவார் சிலையாலெ யிலெய்து
உருவாரு மையோடு டனானான்
கருவார் பொழில்சூழ் தருகாழி
மருவாத வர்வான் மருவாரே. 7

*திரு ஆர் சிலையால் எயில் எய்து,*
*உரு ஆர் உமையோடு உடன்ஆனான்,*
*கரு ஆர் பொழில் சூழ்தரு, காழி*
*மருவாதவர் வான் மருவாரே.*

tiru Ar cilaiyAl eyil eytu,
uru Ar umaiyOTu uTan2 An2An2,
karu Ar pozil cUztaru, kAzi
maruvAtavar vAn2 maruvArE.

***பொருள்:*** சிவபிரான், அழகிய வில்லால் மூவெயில்களையும் எய்தழித்தார். எழில் தவழும் உமையம்மையோடு சீகாழிப் பதியில் எழுந்தருளியுள்ளார். இருண்ட அடர்த்தியான சோலைகளால் சூழப்பெற்ற சீகாழிப் பதியை அடையாதவர்கள், விண்ணுலக இன்பங்களை அடையாதவர் ஆவார்கள்.

**குறிப்புரை:** இது காழியடையார் வான் அடையார் என்கின்றது. திருவார் சிலை – அழகிய வில்; என்றது பொன் வில்லாதலின். உரு – அழகு. கருவார் பொழில் – கருமையாகிய சோலை. மருவாதவர் – அடையாதவர்.

Lord Civan destroyed the three citadels of Asuraas with His divine strong bow. He dwells with His lovely and affectionate consort Umaa Devi. He is entempled in Seekaazhi which is encircled by dense dark gardens. Those who have not gone to this city and offered worship to the Lord therein cannot enjoy the heavenly bliss.

அரக்கன் வலியொல் கவடர்த்து
வரைக்கும் மகளோடு மகிழ்ந்தான்
சுரக்கும் புனல்சூழ் தருகாழி
நிரக்கும் மலர்தூவு நினைந்தே. 8

அரக்கன் வலி ஒல்க அடர்த்து,
வரைக்கு(ம்) மகளோடு மகிழ்ந்தான்,
சுரக்கும் புனல் சூழ்தரு, காழி
நிரக்கும் மலர் தூவும், நினைந்தே!

arakkan2 vali olka aTarttu,
varaikku(m) makaLOTu makizntAn2,
curakkum pun2al cUztaru, kAzi
nirakkum malar tUvum, nin2aintE!

**பொருள்:** சிவபிரான், இராவணனுடைய வலிமை சுருங்குமாறு, அவனைத் தளரச் செய்து அடர்த்தார். அவர் மலைமகளோடு மகிழ்ந்து சீகாழிப் பதியில் விளங்குகின்றார். மேலும் மேலும் பெருகிவரும் நீர் சூழ்ந்த சீகாழிப் பதியை நினைந்து, வரிசையாக மலர்களைத் தூவுமின்.

**குறிப்புரை:** இது காழிக்கு மலர் தூவுங்கள் என்கின்றது. அரக்கன் வலி அடர்த்து வரைக்குமகளோடு மகிழ்ந்தான் என்பது. அரக்கன் மலையெடுக்க, உமையாள் எய்திய அச்சத்தைப் போக்கியதும், அவன் செய்த தவற்றிற்காக அவள் காணத் தண்டித்ததையும் விளக்கி நின்றது. ஒல்க – சுருங்க. நிரக்கும் – ஒழுங்கான.

Lord Civan subdued Raavanaa's vigor by crushing him under the mountain. He happily dwells in Seekaazhi with His consort who is the daughter of the Himalayan

mountain king. This town has many waterways, where water ever flows and overflows. Ye! Companions!! Contemplate on this town and offer plenty of flowers at the Holy Feet of Lord Civan therein.

இருவர்க் கெரியாகி நிமிர்ந்தான்
உருவிற் பெரியாளொடு சேருங்
கருநற் பரவை கமழ்காழி
மருவப் பிரியும் வினைமாய்ந்தே. 9

இருவர்க்கு எரி ஆகி நிமிர்ந்தான்
உருவில் பெரியாளொடு சேரும்,
கரு நல் பரவை கமழ், காழி
மருவ, பிரியும், வினை மாய்ந்தே.

iruvarkku eri Aki nimirntAn2
uruvil periyALoTu cErum,
karu nal paravai kamaz, kAzi
maruva, piriyum, vin2ai mAyntE.

**பொருள்:** திருமால் பிரமன் ஆகிய இருவர் பொருட்டு எரி உருவாகி நிமிர்ந்தான் சிவபிரான். அழகிற் சிறந்த பெரியநாயகி அம்மையோடு சீகாழிப் பதியில் எழுந்தருளியிருக்கிறான். கரிய நல்ல கடலின்மணம் கமழும் சீகாழிப் பதியை மனத்தால் நினைய நம் வினைகள் மாய்ந்து பிரியும்.

**குறிப்புரை:** இது காழியையடைய வினைகெடும் என்கின்றது. இருவர் – மாலுமயனும். உருவிற் பெரியாள் – பெரியநாயகி என்னும் திருத்தோணிச் சிகரத்திருக்கும் அம்மையார். பரவை – கடல்.

Lord Civan took the form of tall and big column of fire for the sake of Thirumaal and Brahma. He is enshrined in Seekaazhi with His most beautiful consort Periya Naayaki (the name of goddess of this place - *பெரிய நாயகி*). Fragrant air blowing from the dark blue unspoiled sea fills up the air in this town. Those devotees who contemplate on their minds the Seekaazhi city and the Lord Civan therein will get their karma nullified and it will leave them finally.

Note: Her form is full of immense grace: The Goddess of the holy shrine (Tonipuram) is called Periya Naayaki. She indeed is the Magna Mater.

சமண்சாக்கியர் தாமலர் தூற்ற
அமைந்தா னுமையோடு டனன்பாய்க்
கமழ்ந்தார் பொழில்சூழ் தருகாழி
சுமந்தார்மலர் தூவுதல் தொண்டே. 10

*சமண்சாக்கியர் தாம் அலர் தூற்ற,*
*அமைந்தான் உமையோடு உடன் அன்புஆய்க்;*
*கமழ்ந்து ஆர் பொழில் சூழ்தரு, காழி*
*சுமந்தார், மலர் தூவுதல் தொண்டே.*

camaN cAkkiyar tAm alar tURRa,
amaintAn2, umaiyOTu uTan2 an2pu Ay;
kamazntu Ar pozil cUztaru kAzi
cumantAr, malar tUvutal toNTE.

**பொருள்:** சமணர்களும், சாக்கியர்களும் புறம் கூறுகின்றனர். அவர்களை ஏறிடாமல் சிவபிரான் உமையம்மையோடு அன்பாய் ஒருசேரச் சீகாழியார் எழுந்தருளி இருக்கின்றான். மணம் கமழ்ந்து நிறையும் பொழில்கள் சூழ்ந்த சீகாழிப் பதியைத் தம்மனத்தே தியானித்து, மலர் தூவித் தொழுதலே சிறந்த தொண்டாகும்.

**குறிப்புரை:** இது சமண் முதலியோர் அலர் தூற்ற அடியார் மலர் தூவுதல் தொண்டு என்கின்றது. அலர்தூற்ற – பழிசொல்ல. உமையோடு உடன் அன்பாய் அமர்ந்தான் – அம்மையொடு ஒருசேர ஆசனத்து அன்பாய் அமர்ந்தான் என்க. காழி சுமந்தார் – காழியைச் தம் மனத்துத் தியானித்தவர்கள்.

The Samanars and Buddhists backbite about Lord Civan and His followers without minding slander. Lord Civan dwells in Seekazhi with His consort Umaa Devi with all love and affection. This city Seekaazhi is encircled by forests full of fragrance. To contemplate on the city and adore Lord Civan therein with flowers will be considered as the true spiritual service.

**Note:** 'Sumanthaar' means bearers. They are the bearers who bear the Lord in their consciousness.

நலமா கியஞான சம்பந்தன்
கலமார் கடல்சூழ் தருகாழி
நிலையாக நினைந்த வர்பாடல்
வலரான வர்வான டைவாரே. 11

நலம் ஆகிய ஞானசம்பந்தன்
கலம் ஆர் கடல் சூழ்தரு காழி
நிலைஆக நினைந்தவர் பாடல்
வலர் ஆனவர் வான் அடைவாரே.

nalam Akiya njAn2acampantan2
kalam Ar kaTal cUz taru kAzi
nilai Aka nin2aintavar pATal
valar An2avar vAn2 aTaivArE.

**பொருள்:** சீகாழிப்பதி, நன்மையை மக்கட்கு நல்கும். அந்த நகர் மரக்கலங்களை உடைய கடலால் சூழப் பெற்றது. அந்தச் சீகாழிப் பதியை உறுதியாக நினைந்தவர்களும், ஞானசம்பந்தருடைய பாடல்களில் வல்லவராய் ஓதி வழிபட்டவர்களும் விண்ணக இன்பங்களை அடைவர்.

**குறிப்புரை:** காழியைத் தமது நிலைத்த இடமாக நினைந்த பெருமானது பாடலில் வல்லவர்கள் வானடைவர் என முடிக்க.

Seekaazhi will yield all goodness to people. It is encircled by the sea where ships move. Those who contemplate on this city with firmness in their minds, sing the hymn of Gnaanasambandan and offer worship to Lord Civan therein will get the celestial Bliss.

**Note:** 'Nalamaakiya Gnaanasambandan': The very presence of the boy-saint ushers weal, welfare and well-being. His hymns indicate on reciters salvation.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*34ஆம் பதிகம் முற்றிற்று*
End of 34th Hymn

உ
சிவமயம்

# 35. திருவீழிமிழலை

## திருத்தலவரலாறு:

நான்காம் பதிகம் பார்க்க.

## பதிக வரலாறு:

பிள்ளையார் எழுந்தருளுவதைத் திருநாவுக்கரசு சுவாமிகளாலும், அடியார்களாலும் அறிந்து கொண்ட திருவீழிமிழலை அந்தணர்கள், நிறைகுடம் முதலிய அட்டமங்கலங்களுடன் வரவேற்க, பிள்ளையார் முத்துச் சிவிகையினின்றும் கீழிறங்கி அந்தணரும், அடியாரும் புடைசூழ எழுந்தருளுகின்றார்கள். அப்போது 'அரையார் விரிகோவண ஆடை' என்னும் ஒப்புரைக்க இயலாத இப்பதிகத்தை இசையுடன் ஓதிக்கொண்டே சிவஞானச் செந்தாமரையில் வீற்றிருக்கும் விடையேறும் பிரான் திருக்கோயிலை அடைந்து உச்சிமேற் கரங்குவித்து வணங்கினார்கள்.

## THE HISTORY OF THE PLACE

See 4th Hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 35. திருவீழிமிழலை
## 35. THIRU-VEEZHI-MIZHALAI

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

அரையார் விரிகோ வணவாடை
நரையார் விடையூர் திநயந்தான்
விரையார் பொழில் வீழிம்மிழலை
உரையா லுணர்வா ருயர்வாரே. 1

அரை ஆர் விரி கோவணஆடை,
நரை ஆர் விடைஊர்தி, நயந்தான்,
விரை ஆர் பொழில், வீழி(ம்)மிழலை
உரையால் உணர்வார் உயர்வாரே.

arai Ar viri kOvaNa ATai,
narai Ar viTai Urti, nayantAn2,
virai Ar pozil, vIzi(m)mizalai
uraiyAl uNarvAr uyarvArE.

**பொருள்:** சிவபிரான் இடையில் விரிந்த கோவண ஆடையை கட்டியுள்ளார். அவர் வெண்மை நிறம் பொருந்திய விடையூர்தியை விரும்பி ஏற்றுக் கொண்டுள்ளார். மணம் பொருந்திய பொழில்களால் சூழப்பட்டதாகிய திருவீழிமிழலையில் சிவபிரான் உறைகிறார். அந்தப் பதியின் புகழை நூல்களால் உணர்வார் உயர்வடைவார்.

***குறிப்புரை:*** வீழிமிழலையைத் தியானிப்பவர்கள் உயர்வர் என்கின்றது. கோவண ஆடையையும் ஊர்தியையும் நயந்தான் என முடிக்க. நரை – வெண்மை. உரையால் – வேதாகமங்களில் சொல்லப்பட்ட சொற்களால். விரிகோவணம் – படம் விரியும் பாம்பாகிய கோவணம், 'அற்றம் மறைப்பது முன்பணியே' 'ஐந்தலைய மாகணங்கொண்டு அரையார்க்குமே' என்ற பகுதிகள் இதற்கு ஒப்பு.

Lord Civan likes much to wear the brood loincloth known as Kōvanam (**கோவணம்**). He also loves to have the white coloured bull as His carrier. He abides in Thiru-Veezhi-mizhalai which is surrounded by fragrant lush forests. Those who conceive and contemplate on Thiru-Veezhi-mizhalai as explained in the scriptures such as Vedas and Aagamaas will gain glory.

**Note:** Kovanam: Loincloth. The Lord's Kovanam is a snake. The Lord has no limbs like ours. His frame is the form of grace. Snake is symbolic of this Kundalini Yoga.

**புனை தல்புரிபுன் சடைதன்மேல்**
**கனை தல்லொரு கங்கைகரந்தான்**
**வினை யில்லவர் வீழிம்மிழலை**
**நினை வில்லவர் நெஞ்சமுநெஞ்சே.** **2**

***புனைதல் புரிபுன்சடை தன்மேல்***
***கனைதல்(ல்) ஒரு கங்கை கரந்தான்,***
***வினை இல்லவர், வீழி(ம்)மிழலை***
***நினைவு இல்லவர் நெஞ்சமும் நெஞ்சே?***

pun2aital puri pun2caTai tan2 mEl
kan2aital(l) oru kagkai karantAn2,
vin2ai illavar, vIzi(m)mizalai
nin2aivu illavar nenjcamum nenjcE?

**பொருள்:** சிவபிரான், மலரால் அலங்கரிக்கப்பட்ட முறுக்குகளை உடைய சிவந்த சடைமுடியை உடையவர். அந்த முடியின்மீது ஆரவாரித்து வந்த ஒப்பற்ற கங்கையாற்றை மறைத்து வைத்துள்ளார். சிவபிரான் உறையும் திருவீழிமிழலை தீவினை இல்லாத மக்கள் வாழும் தலம் ஆகும். அந்தத் தலத்தை நினையாதவர் நெஞ்சமும் ஒரு நெஞ்சமோ?

**குறிப்புரை:** வீழிமிழலையை நினையாதவர் நெஞ்சம் நெஞ்சா என்கின்றது. புனைதல் – முடித்தல். கனைதல் – ஒலித்தல். வினையில்லவர் – இயல்பாகவே வினையில்லாதவர். நெஞ்சத்தின் தொழில் நினைய வேண்டியவற்றை நினைவதாயிருக்க, அது செய்யாமையின் நெஞ்சமும் நெஞ்சே என இகழ்ந்து கூறியவாறு.

Lord Civan conceals the uproarious and peerless river Ganges in His ruddy and curly matted hair. His braided hair is decorated with flowers. He abides in Thiru-Veezhi-mizhalai where people who are freed from evil karma are living.

அழவல் லவரா டியும்பாடி
எழவல் லவரெந்தை யடிமேல்
விழவல் லவர்வீழிம் மிழலை
தொழவல் லவர்நல்ல வர்தொண்டே. 3

அழ வல்லவர் ஆடியும் பாடி
எழ வல்லவர், எந்தை அடிமேல்
விழ வல்லவர், வீழி(ம்)மிழலை
தொழ வல்லவர், நல்லவர்; தொண்டே!

aza vallavar, ATiyum pATi
eza vallavar, entai aTimEl
viza vallavar, vIzi(m)mizalai
toza vallavar, nallavar; toNTE!

**பொருள்:** திருவீழிமிழலைத் தலத்தில் அடியவர்கள் நிறைந்துள்ளனர். அவர்கள் அழவல்லவரும், ஆடியும் பாடியும் எழவல்லவரும், எந்தையாகிய இறைவன் திருவடிமேல் விழ வல்லவரும் ஆகிய அடியார்கள் ஆவர். அந்தத் தலத்தைத் தொழவல்லவரே நல்லவர். அவர் தொண்டே நற்றொண்டாம்.

**குறிப்புரை:** இது அழுதும், ஆடியும், பாடியும், விழுந்தும் தொழ வல்லவர் தொண்டில் நல்லராம் என்கின்றது. வல்லவர் என்பன நான்கும் அருமை விளக்கி நின்றன. அடிமேல் விழுதல் – தன்வசமற்று ஆனந்தமேலீட்டால் விழுதல்.

In Thiru-Veezhi-mizhalai devotees of Lord Civan are in large numbers, they melt in love, weep, dance, sing and prostrate at the Holy Feet of Lord Civan who is my father and adore Him. Those who can offer worship like this are really good souls. Their service is genuine spiritual service to Lord Civan.

உரவம் புரிபுன்சடை தன்மேல்
அரவம் மரையார்த் தவழகன்
விரவும் பொழில்வீழிம் மிழலை
பரவும் மடியாரடி யாரே. 4

உரவம் புரிபுன்சடை தன் மேல்
அரவம்(ம்) அரை ஆர்த்த அழகன்,
விரவும் பொழில், வீழி(ம்)மிழலை
பரவும்(ம்) அடியார் அடியாரே!

uravam puri pun2 caTai tan2mEl
aravam(m) arai Artta azakan2,
viravum pozil, vIzi(m)mizalai
paravum(m) aTiyAr aTiyArE!

**பொருள்:** அழகனாகிய சிவபிரான், வலிமையை வெளிப்படுத்தி நிற்கும் சிவந்த சடைமுடிமீது பாம்பை அணிந்தும், அதனை இடையில் கட்டியும் உள்ளார். அவர் திருவீழிமிழலையில் எழுந்தருளியுள்ளார். அத்தலம் பொழில்கள் விரவிச் சூழ்ந்துள்ளது. அதனைப் பரவித் துதிக்கும் அடியவரே அடியவர் ஆவார்.

**குறிப்புரை:** இது வீழிமிழலையைத் தொழும் அடியாரே அடியார் என அடியார் இயல்பை விளக்குகின்றது. உரவம் – வலிமை.

The handsome Lord Civan wears and binds a snake in His ruddy matted hair which exposes it's mightiness. He also wears and binds a snake in His waist. He is enshrined in Thiru-Veezhi-mizhalai which is surrounded here and there by lush gardens. Those devotees who can adore and worship the Lord in Thiru-Veezhi-mizhalai are the genuine servitors of Civan.

கரிதா கியநஞ் சணி கண்டன்
வரிதா கியவண் டறை கொன்றை
விரிதார் பொழில்வீ ழிம்மிழலை
உரிதா நினைவா ருயர்வாரே. 5

கரிது ஆகிய நஞ்சு அணி கண்டன்,
வரிது ஆகிய வண்டு அறை கொன்றை
விரி தார் பொழில், வீழி(ம்)மிழலை
உரிதா நினைவார் உயர்வாரே.

karitu Akiya nanjcu aNi kaNTan2,
varitu Akiya vaNTu aRai kon2Rai
viri tAr pozil, vIzi(m)mizalai
uritA nin2aivAr uyarvArE.

**பொருள்:** நீலகண்டனாகிய சிவபெருமான், கரிதாகிய நஞ்சினை உண்டு, அதனை அணியாக நிறுத்தித் திருவீழிமிழலையில் எழுந்தருளியுள்ளார். அங்கு, வரிகளை உடைய வண்டுகள் ஒலி செய்யும் கொன்றை மரங்கள் நிறைந்த சோலைகள் உள்ளன. அந்த மரங்களில் விரிந்த மாலைகளைப் போலக் கொத்தாகக் கொன்றை மலர்கள் மலர்ந்துள்ளன. இத்தகைய சிறப்பு வாய்ந்த திருவீழிமிழலையைத் தமக்குரிய தலமாகக் கருதுவோர் சிறந்த அடியவர் ஆவார்.

**குறிப்புரை:** இது இத்தலத்தை உரிமையோடு நினைவார் உயர்வார் என்கின்றது. வரிதாகிய வண்டு – வரிகளையுடையதாகிய வண்டு. 'பொறிவரி வண்டினம்' என்பது காண்க. உரியதா என்பது உரிதா எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது, உரித்து உரிது போலவும், வரிது வரிது போலவும் என்க.

Lord Civan also known as 'Neelakanntan' (*நீலகண்டன்*) consumed the black cruel poison and held it as an ornament in His gullet. This town is surrounded by gardens where the blossomed Kondrai flowers hang from their trees looking like garlands. The stripped bees making noise, fly here and there in the garden in search of honey. Those who consider Thiru-Veezhi-mizhalai as their own suitable place for worship will be highly renowned as servitors of Lord Civan.

சடையார் பிறையான் சரிபூதப்
படையான் கொடிமேல தொர்பைங்கண்
விடையா னுறைவீழிம் மிழலை
அடைவா ரடியாரவர் தாமே. 6

*சடை ஆர் பிறையான், சரி பூதப் -*
*படையான், கொடிமேலது ஓர் பைங்கண்*
*விடையான், உறை வீழி(ம்)மிழலை*
*அடைவார் அடியார் அவர் தாமே.*

caTai Ar piRaiyAn2, cari pUtap--
paTaiyAn2, koTi·mElatu or paigkaN
viTaiyAn2, uRai vIzi(m) mizalai
aTaivAr aTiyAr avar tAmE.

**பொருள்:** சிவபிரான், சடைமிசைச் சூடிய பிறைமதியை உடையவன். இயங்கும் பூதப் படைகளை உடையவன். கொடிமேல் பசிய கண்களை உடைய ஒற்றையேற்றை உடையவன். இத்தகைய சிவபிரான் உறையும் திருவீழிமிழலையை அடைபவர்கள் சிறந்த அடியவர்கள் ஆவர்.

**குறிப்புரை:** இது இத்தலத்தை அடைவாரே அடியார் என்கின்றது. சரி – இயங்குகின்ற. பைங்கண் – பசியகண். பசுமை ஈண்டு இளமை குறித்து நின்றது.

Lord Civan wears the crescent moon on His matted hair. He is the Lord of active material Bhuta hosts (பூதகணங்கள்). The insigne of His flag is the single large bull whose eyes are radiant. He abides in Thiru-Veezhi-mizhalai. Those who can reach this place will become renowned devotees of Lord Civan.

செறியார் கழலுஞ் சிலம்பார்க்க
நெறியார் குழலா ளொடுநின்றான்
வெறியார் பொழில்வீ ழிம்மிழலை
அறிவா ரவலம் மறியாரே. 7

*செறி ஆர் கழலும் சிலம்பு ஆர்க்க*
*நெறி ஆர் குழலாளொடு நின்றான்,*
*வெறி ஆர் பொழில் வீழி(ம்)மிழலை*
*அறிவார் அவலம் அறியாரே.*

ceRi Ar kazalum cilampu Arkka
neRi Ar kuzalALoTu nin2RAn2,
veRi Ar pozil, vIzi(m) mizalai
aRivAr avalam aRiyArE.

**பொருள்:** சிவபெருமானின் கால்களில் செறிந்த கழலும் சிலம்பும் ஆகிய அணிகள் ஆர்க்கின்றன. அம்மை சுருண்ட கூந்தலை உடையவர். அம்மையோடு நின்றருளும் சிவபிரான் திருவீழிமிழலைத் தலத்தில் எழுந்தருளியுள்ளார். அத்தலம் மணம் கமழும் பொழில்களால் சூழப்பெற்றது. அத்தலத்தைத் தியானிப்பவர் அவலம் அறியார்.

**குறிப்புரை:** இது இத்தலத்தை யறிவார், துன்பர் அறியார் என்கின்றது. செறி – வளை. செறி ஆர் கழலும் சிலம்பு ஆர்க்க என்பதில் எண்ணும்மையை ஏனையவிடத்தும் கூட்டுக. நெறியார் குழல் – சுருண்ட கூந்தல். அறிவார் – தியானிப்பார்கள்.

Lord Civan wears anklets such as the vibrant Veera-k-kazhal (*வீரக்கழல்*) and Silambu (*சிலம்பு*) in His legs. He along with His consort Umaa Devi whose hair is twisted, abides in Thiru-Veezhi-mizhalai which is surrounded by gardens full of fragrance. Those who contemplate on Thiru-Veezhi-mizhalai know not what woe is.

**Note:** Veerakkazhal: It is a small bell attached to a cord that is festened below the right knee.

உளையா வலியொல் கவரக்கன்
வளையா விரலூன் றியமைந்தன்
விளையார் வயல்வீ ழிம்மிழலை
அளையா வருவா ரடியாரே. 8

*உளையா வலி ஒல்க, அரக்கன்,*
*வளையா விரல் ஊன்றிய மைந்தன்,*
*விளை ஆர் வயல் வீழி(ம்)மிழலை*
*அளையா வருவார் அடியாரே.*

uLaiyA vali olka, arakkan2,
vaLaiyA viral Un2Riya maintan2,
viLai Ar vayal, vIzi(m)mizalai
aLaiyA varuvAr aTiyArE.

**பொருள்:** இராவணன் மிக வருந்திக் கயிலை மலையைப் பெயர்த்தான். அவனுடைய வலிமை கெடுமாறு சிவபிரான் தன் காலை வளைத்து விரலால் ஊன்றினார். அவ்வாறு, வலிமை வாய்ந்த சிவபிரான் திருவீழிமிழலைத் தலத்தில் எழுந்தருளியுள்ளார். விளைவு மிகுந்த வயல்களை உடைய அத்தலத்தை நினைந்து வருபவர் சிறந்த் அடியவர் ஆவார்.

**குறிப்புரை:** இத்தலத்தை நெருங்குவாரே அடியார் என்கின்றது. உளையா – வருந்தி. அளையா – அளைந்து; பொருந்தி. உளையா வலி – பண்டு வருந்தா வலிமையுமாம்.

Raavanan the king of Sri Lanka, with much labour, was trying to lift and move aside the mount Kailas, abode of Lord Civan. Lord Civan bent His foot and pressed the top of the mountain with His toe. Raavanan got crushed under the mountain and lost His mightiness. This valiant Lord Civan is enshrined in Thiru-Veezhi-mizhalai endowed with plenty of fertile fields which yield plenty. Those who contemplate always on Thiru-Veezhi-mizhalai will become highly renowned servitors.

**Note:** It is Civa-consciousness which is the theme of this verse.

மருள்செய் திருவர் மயலாக
அருள்செய் தவனா ரழலாகி
வெருள்செய் தவன்வீ ழிம்மிழலை
தெருள்செய் தவர்தீ வினைதேய்வே. 9

*மருள்செய்து இருவர் மயல் ஆக*
*அருள்செய்தவன் ஆர் அழல் ஆகி*
*வெருள்செய்தவன், வீழி(ம்)மிழலை*
*தெருள்செய்தவர் தீவினை தேய்வே.*

maruL ceytu iruvar mayal Aka
aruL ceytavan2, Ar azal Aki
veruL ceytavan2, vIzi(m)mizalai
teruL ceytavar tIvin2ai tEyvE.

***பொருள்:*** திருமால் பிரமன் ஆகிய இருவரும் அஞ்ஞானத்தினால் அடிமுடி காணாது மயங்கினர். சிவபிரான் அரிய அழல் உருவாய் வெளிப்பட்டு நின்று வெருட்டினார். பின்பு, அவரே அவர்களுக்கு அருள் செய்தார். அப்பிரான் எழுந்தருளிய திருவீழிமிழலையைச் சிறந்த தலம் என்று தெளிந்தவர்களுடைய தீவினைகள் தேய்தல் உறும்.

***குறிப்புரை:*** இத்தலத்தைத் தெளிந்தவர்களது தீவினை தேயும் என்கின்றது. இருவர் மருள்செய்து மயலாக – மாலும் அயனும் அஞ்ஞானத்தால் மயங்க. வெருள் செய்தவன் – வெருட்டியவன். தெருள் செய்தவர் – தெளிந்தவர்கள்.

Both Thirumaal and Brahma were unable to see the Holy Feet and head of Lord Civan due to their spiritual ignorance and got perplexed. Lord Civan appeared before them as a rare soaring flame. On seeing this, they both stupefied but later recognised His greatness. Later Lord Civan graced them. This Lord Civan is enshrined in Thiru-Veezhi-mizhalai. Those who realize that this Thiru-Veezhi-mizhalai is the well-renowned spiritual place, will get their bad karma wiped out.

துளங்குந் நெறியா ரவர்தொன்மை
வளங்கொள் ளன்மின்புல் லமண்டேரை
விளங்கும் பொழில்வீ ழிம்மிழலை
உளங்கொள் பவர்தம் வினையோய்வே. 10

துளங்கும் நெறியார் அவர் தொன்மை
வளம் கொள்ளன்மின், புல் அமண்தேரை!
விளங்கும் பொழில் வீழி(ம்)மிழலை
உளம் கொள்பவர் தம் வினை ஓய்வே.

tuLagkum neRiyAr avar ton2mai
vaLam koLLan2min2, pul amaN tErai!
viLagkum pozil vIzi(m)mizalai
uLam koLpavar tam vin2ai OyvE.

**பொருள்:** தடுமாற்றம் உள்ள கொள்கைகளை மேற்கொண்டுள்ள அற்பமானவராகிய அமணர், தேரர் ஆகியோரின் சமயத் தொன்மைச் சிறப்பைக் கருதாதீர். விளங்கும் பொழில்கள் சூழ்ந்த திருவீழிமிழலையை நினைப்பவர்களுடைய வினைகள் ஓய்தல் உறும்.

**குறிப்புரை:** இத்தலத்தைத் தியானிப்பவர்களின் வினை ஓயும் என்கின்றது. துளங்கும் நெறியார் – அளவைக்கும் அநுபவத்திற்கும் நிலைபெறாது அசையும் சமய நெறியை உடையவர்கள். தேரை – தேரரை என்பதன் சிதைவு.

Samanars and Buddhists have inconsistency in their doctrine. They are very base and mean minded. Ye! Companion!! Do not give any consideration to the antiquity of their religious fame. Those who contemplate on the greatness of Thiru-Veezhi-mizhalai, surrounded by lush gardens will get their bad karma eliminated.

**Note:** All faiths differing from that of the Vedas, were founded on something intrinsically good. As years passed on, they stood forfeited of their intrinsic value.

Emerson said "In ancient Greece, every stoic was a stoic. What is the Christian in Chris tendam?"

When Saivism too begins to decline, Civa sends His servitors to set things straight.

நளிர்காழி யுள்ஞா னசம்பந்தன்
குளிரார் சடையா னடிகூற
மிளிரார் பொழில்வீ ழிம்மிழலை
கிளர்பா டல்வல்லார்க் கிலைகேடே. 11

*நளிர் காழியுள் ஞானசம்பந்தன்*
*குளிர் ஆர் சடையான் அடி கூற,*
*மிளிர் ஆர் பொழில், வீழி(ம்)மிழலை*
*கிளர் பாடல் வல்லார்க்கு இலை, கேடே.*

naLir kAziyuL njAn2acampantan2
kuLir Ar caTaiyAn2 aTi kURa,
miLir Ar pozil, vIzi(m)mizalai
kiLar pATal vallArkku ilai, kETE.

**பொருள்:** குளிர்ந்த காழிப்பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தன். தண்மையான சடைமுடியை உடைய சிவபிரானுடைய திருவடிப் பெருமைகளைக் கூறத் தொடங்கினார். விளக்கமான பொழில்கள் சூழ்ந்த திருவீழிமிழலைப் பெருமான் புகழ் கூறும் இப்பதிகப் பாடல்களை ஓதவல்லார்க்குக் கேடு இல்லை.

**குறிப்புரை:** இது இப்பாடலை வல்லார்க்குக் கேடு இல்லை எனப்பயன் கூறுகிறது. நளிர் – குளிர்.

Gnaanasambandan hails from cool Kaazhi town. He sang the glory of the Holy Feet of Lord Civan whose matted hair is moist and cool. Those who can sing with sincerity this hymn about the glory of Lord Civan in Thiru-Veezhi-mizhalai will have no adversity.

**Note:** Coolness is welcome to the east, as warmth to the west.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*35ஆம் பதிகம் முற்றிற்று*
End of 35th Hymn

உ
சிவமயம்

# 36. திருவையாறு

## திருத்தலவரலாறு:

திருவையாறு என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். தஞ்சாவூர், கும்பகோணம் ஆகிய ஊர்களில் இருந்து பேருந்து வசதிகள் உள்ளன. இத்தலம் ஐயாறு, பஞ்சநதம், பூலோகக் கயிலாயம் என வழங்கப் பெறும். ஐந்து தெய்வீக ஆறுகள் தம்முட் கலப்பதால் வந்த பெயர் என்று நூல்கள் கூறும். ஐந்து ஆறுகளாவன: சூரியபுஷ்கரிணி, சந்திரபுஷ்கரிணி, கங்கை, பாலாறு, நந்திவாய்நுரை என்னும் நந்தி தீர்த்தம் என்பன. கோயிலுக்குக் காவிரிக் கோட்டம் என்பது திருமுறைகளில் வழங்கும் பெயர். "காவிரிக் கோட்டத்து ஐயாறுடைய அடிகளோ" என்பது அதற்குப் பிரமாணம். இதற்குக் காவிரிக் கரைக் கண்ணதாகிய ஐயாறு எனப் பொருள் காண்பாரும் உளர். சுவாமி அம்மன் சந்நிதிகள் கிழக்குப் பார்த்தவை. சோமாஸ் கந்தர் கோயில் தனியாக இருக்கின்றது. ஜபேசம் என்னும் முக்தி மண்டபம், நூற்றுக்கால் மண்டபம், உற்சவ மண்டபம் முதலிய சிறந்த மண்டபங்கள் உள்ளன. ஆலயம் தருமை ஆதீன அருளாட்சிக்கு உட்பட்டது.

இறைவன் பெயர் ஐயாறப்பர், செம்பொற்சோதீசுவரர் என்பது திருமுறைகளில் வழங்கும் பெயர். இன்றும் ஐயாறுடைய அடிகள், ஐயாற்றின் பெருமான் எனவும் அவை வழங்குகின்றன. புராணத்தில் கைலாய நாதர், ஜபேசர், பிரணதார்த்திஹரர் எனவும் வழங்கப் பெறுவர். இறைவி பெயர் அறம் வளர்த்த நாயகி. திரிபுர சுந்தரி, தருமாம்பிகை, தரும சம்வர்த்தினி என வழங்கும். வல்லபை விநாயகர், ஓலமிட்ட விநாயகர், ஆதி விநாயகர் முதலான விநாயக வடிவங்களும், வில்வேள் நாயனார் என்ற வில்லேந்திய சுப்பிரமணியர் வடிவமும் உள்ளன. இங்குள்ள தட்சிணாமூர்த்தித் திருவுருவம் தனிச்சிறப்புடையது. திருவடியில் ஆமையை மிதித்திருப்பது அறிந்து இன்புறுதற்குரியது. இவருக்கு அரிகுரு சிவயோக தட்சிணாமூர்த்தி என்பது பெயர். ஆட்கொண்டார் சந்நிதி மிக விஷேசமானது. எப்போதும் குங்குலியப்புகை கமழ்ந்து கொண்டே இருக்கும்.

தீர்த்தங்கள் காவிரி, சந்திரபுஷ்கரிணி, சூரியபுஷ்கரிணி, தேனாமிர்த தீர்த்தம், நந்தி தீர்த்தம் முதலியன. தலவிருட்சம் வில்வம்.

ஐயாறப்பர் ஆதி சைவர் வேடந்தாங்கித் தன்னையே பூசித்துக் கொண்டார். இதனைத் திருவாசகம் 'ஐயாறதனிற் சைவனாகியும்' எனக் குறிப்பிடுகிறது. இதனை ஆத்மபூசை என்பர். திருநந்திதேவர் சிலாத முனிவர்க்கு மகனாக அவதரித்த தலம். அகத்தியர் பூசித்துக் கயிலை

காட்சி பெற்ற தலம். சுசரிதன் என்னும் அந்தணச் சிறுவன் இறுதியெய்தாத வண்ணம் இறைவன் ஆட்கொண்டார் திருமேனி தாங்கிக் காத்தனர்.

முதன்முதல் பிரியவிருதன் திருப்பணி செய்தான். அடுத்துக் கரிகாலன் திருப்பணி செய்தான். அடுத்து வேங்கி நாட்டு விமலாதித்தன் இதனைப் புதுப்பித்தான். முதல் இராஜராஜன் மனைவி உத்தர கயிலாயத்தைப் புதுப்பித்து ஒலோகமாதேவீச்சரம் எனத் தன் பெயரை இட்டாள்.

சித்திரையில் திருவிழா நடைபெறுகிறது. அதில் 5ஆம் திருநாள் ஆத்மபூஜை. சித்திரைப் பூரணிமையில் சப்தஸ்தானத் திருவிழா நடக்கும். நந்தியும், அவர் மனைவியான சுயம்பிரகாச அம்மையாரும் எழுந்தருளுவர்.

திருநாவுக்கரசு சுவாமிகள் கயிலைநாதனைக் காணவேண்டும் என்ற விருப்பால், கயிலை நோக்கிச் செல்கிறார். இறைவர் அவர் முன் ஓர் அந்தணராகத் தோன்றி ஒரு பொய்கையை உண்டாக்கி, அதிலே மூழ்கி திருவையாற்றில் எழுந்து நம் கயிலைக் காட்சியைக் காண்பாயாக என்று கூறி மறைந்தருளினார். திருநாவுக்கரசரும் அவ்வாறு இமயத்தில் உள்ள பொய்கையில் மூழ்கி, திருவையாற்றில் உள்ள குளத்தில் எழுந்தார். மலர்மாரி பொழிந்தன (முழு விபரம் 88–ஆவது தலத்தில் பார்க்கவும்).

**கல்வெட்டு:**

இக்கோயில் முதன்முதல் பல்லவ காலப் படைப்பாக இருக்கலாம் என்பது துவார பாலகர், கொடுங்கை, தூண் இவற்றைக் கொண்டு துணிகின்றனர். மூன்றாம் பிராகாரத்துக் கீழ்க்கோபுரம் விக்ரமசோழன் திருப்பணி. கி.பி. 1381இல் செந்தலைக் கருப்பூர் கச்சிவீரப் பெருமாள் மகனால் கோயில் திருமதில் மண்டபம் சீர்திருத்தப் பெற்றன. மேலக் கோபுரம், முதல் பிராகாரத்துத் திருமாளிகைப்பத்தி, மூன்றாம் பிராகாரத்துக்குத் தெற்குக் கோபுரம், இடைமருதூர் ஆனையப்பப் பிள்ளையாலும், அவர் தம்பி வைத்யநாத அண்ணன் என்பவராலும் எடுப்பிக்கப் பெற்றன. காவிரி பூசப்படித் துறை கட்டியவர்களும் இவர்களே. படித்துறைக்கு அவர்கள் வைத்த பெயர் கல்யாண சிந்து என்பதாம்.

அம்மை பெயர் திருக்காமக் கோட்டத்து ஆளுடைய நாச்சியார், உலகுடைய நாச்சியார் என்பன. இத்தலம் முதல் இராஜராஜன் காலத்து இராஜேந்திர சிங்கவள நாட்டுப் பொய்கை நாட்டுத் திருவையாறு எனவும், மூன்றாங் குலோத்துங்கன் காலத்தில் புவனமுழுதுடையான் வளநாட்டுப் பொய்கை நாட்டைச் சேர்ந்ததாகவும், சடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்து இராஜராஜ

வளநாட்டுப் பொய்கை நாட்டைச் சேர்ந்ததாகவும் குறிக்கப் பெறுகின்றது. இது இன்ன கூற்றத்தைச் சார்ந்தது எனக் குறிக்கப் பெறாமையின் தனியூராக இருக்கலாம் எனத் தெரிகிறது.

ஒலோகமாதேவீச்சுரம்: இது உத்தர கைலாசம் எனவும் வழங்கும். இதனைக் கட்டியவர் முதலாம் இராஜராஜனது மனைவியாராகிய தந்தி–சத்தி–விடங்கியாரான ஒலோகமாதேவியார். ஆதலால் இக்கோயில் கி.பி. 1006இல் கட்டப் பெற்றிருக்கலாம். இங்குள்ள சோமாஸ்கந்தர்க்கு ஒலோக வீதி விடங்கர் எனப் பெயர். இதில் சித்திரைப் பெருவிழா, சதய விழா கொண்டாடப் பெற்றன.

தென் கயிலாயம்: இதனைத் திருப்பணிச் செய்தவர் முதலாம் இராஜேந்திரன் மனைவியான பஞ்சவன்மாதேவியார். இறைவன் பெயர் பஞ்சநதிவாணன். இறைவி அஞ்சலை.

முதலாம் பராந்தகன் விளக்குப்பல இட்டு வரவும் பொன், வெள்ளி விளக்குகள் வைக்கவும், நிவந்தங்கள் அளித்தான். முதலாம் இராஜராஜன், முதலாம் இராஜேந்திரன், முதலாம் இராஜாதிராஜன், பரகேசரி இராஜேந்திரன் ஆகியோரது தருமங்களும் பல உள்ளன.

**பதிக வரலாறு:**

திருப்பூந்துருத்தியை வணங்கிப் பதிகம் பாடி, அப்பர் சுவாமிகளிடம் விடைபெற்றுக் கொண்டு, காவிரியாற்றைக் கடந்து, திருநெய்த்தானத்து நெய்யாடிய பெருமானைப் போற்றி, திருவையாற்றை அடைந்த பிள்ளையார் ‘கலையார் மதி’ என்னும் இப்பதிகத்தை அருளினார்கள்.

## 36. THIRU-VAI-YAARU

### THE HISTORY OF THE PLACE

The sacred place Thiru-vai-yaaru is to the north of river Cauvery in Chola Naadu. It is connected by buses from Thanjchaavoor and Kumbakonam. This place is known by the names Iyaaru, Panjchanadham and Booloka Kayilaayam. The name comes from the belief that five sacred rivers join together in confluence here: Sooriya Pushkarani, Chandhira Pushkarini, Gangai, Paalaaru, and Nandhivaainurai alias Nandhi Theerththam.

The temple is known as Kaavirikkottam in the Saivite canon, as evidenced by the expression, "Kaavirikkottaththu Iyaarudaiya adikalo". Some hold that this simply means Iyaaru on the bank of river Cauvery. The shrines for the God and Goddess face

east. There is a separate shrine for Somaaskandhar. There are also exclusive mandapams (pavilions) such as Japesam or Mukthi Mandapam, the Hundred-pillared Mandapam, Festival Mandapam etc. The temple is under the spiritual administration of Dharumai Aadheenam.

The Lord's name is Iyaarappar. In canonical literature He is known as Semporchotheesuvarar. To this day names such as Iyaarudaiya Adigal and Iyaarrin Perumaan are in usage. In the Puraanam the names, Kailaayanaathar, Japesar and Pranathaarthiharar are used. The Goddess is known by the names Aram Valartha Naayaki, Thiripurasundhari, Dharumaambikai and Dharuma Samvardhini. Vinayakar appears in different forms, Vallabai Vinaayakar, Olamitta Vinaayakar, and Aadhi Vinaayakar. The icon of Dakshinaamoorthi here is of special note, as He is depicted with foot resting on a tortoise and has the name Ariguru Sivayoga Dakshinaamoorthi. The shrine of Aatkondaar is of special importance. It is redolent of the incense of 'kungkiliyam' smoke. The sacred fords at this temple are the river Cauvery, Chandhira Pushkarini, Sooriya Pushkarini, Thenaamirtha Theerththam, Nandhi Theerththam etc. The sacred tree is 'Vilvam'.

Lord Iyaarappar, in the guise of an Aadhisaiva is stated to have worshipped Himself here. This episide is noted in the Thiruvaachakam by expression, 'Iyaarathanil saivan aagiyum'. This kind of worship is called Aathmapoojai. This sacred temple is also the place where Thiru Nandhi Thevar is incarnated as the son of Silaatha Munivar; Agaththiyar attained Kayilai by offering worship here; the Lord Himself saved Susarithan, an Andhanar boy, by preventing his death and protecting his body.

The temple was continuously being renovated by many kings, the first being Piriyaviruthan, followed by Karikaalan, and Vimalaadhiththan of Vengi Naadu. A queen of Raajaraajan I renovated Uttara Kailaayam and named it after hei own self as Olokamaadheveechcharam. The major festival falls in the month of Chiththirai. Athmapoojai takes place on the 5th day of this festival. On the full moon day of this month the Sapthasthaanam festival is celebrated. Nandhi and his consort Suyampirakaasa Ammai are taken in procession on this occasion.

**Stone Inscriptions**

From the style of the Dhuvaarapaalakas, cornice (Kodungkai) and pillars, it is held that this temple may have originally been the creation of the Pallava dynasty. The eastern gopuram in the third ambulatory was the work of Vikkirama Cholan. A son of Kachchiveerap Perumaan of Sendhalaik Karuppoor had renovated the compound wall in 1381 CE. The west gopuram, the colonnade in the first ambulatory, and the south gopuram of the third ambulatory were caused to be built by one Aanaiyappa Pillai of Idaimarudhoor and his younger brother Vaidhyanaatha Annan. The same brothers also had the bathing ghat in the river Cauvery built up. They named this bathing ghat 'Kalyaana Sindhu'.

The Goddess is here known by the names of Thiruk Kaamakottaththu Aaludaiya Naachchiyaar and Ulagudaiya Naachchiyaar. This place was known as Thiruvaiyaaru in Poigai Naadu of Raajendhira Singa Valanaadu during the reign of Kuloththungkan III, and in Poigai Naadu of Raajaraaja Valanaadu during the reign of Sataavarman Sundhara Paandiyan. As the administrative subdivision of Kooram is not mentioned, this village might have been an autonomous entity. As Olokamaadheveechcharam or Uththarakailaasam was built by the queen of Raajaraajan I, it may be surmised that the temple was built in 1006 CE. The Somaskandhar here has the name of Oloka Veedhi Vidangkar. It is known that a major festival in Chiththirai and the Sadhayam festival were celebrated here.

The Thenkailaayam was renovated by another queen of Raajaraajan I, Panjchavan Maadheviyaar. The Lord's name is Panjchanadhivaanan and that of the Goddess is Anjchalai. Paraanthakan I made grants for installing many lamps and also for golden and silver lamps. Many charitable endowments were instituted also by Raajaraajan I, Raajendhiran I, Raajaadhiraajan I, and Parakesari Raajendhiran.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 36. திருவையாறு 36. THIRU-VAI-YAARU

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

கலையார் மதியோ டுரநீரும்
நிலையார் சடையா ரிடமாகும்
மலையா ரமுமா மணிசந்தோ
டலையார் புனல்சே ருமையாறே. 1

கலை ஆர் மதியோடு உரநீரும்
நிலை ஆர் சடையார் இடம் ஆகும்
மலை ஆரமும் மா மணி சந்தோடு
அலை ஆர் புனல் சேரும் ஐயாறே.

kalai Ar matiyOTu ura nIrum
nilai Ar caTaiyAr iTam Akum--
malai Aramum mA maNi cantOTu
alai Ar pun2al cErum aiyARE.

**பொருள்:** சிவபிரான், ஒருகலைப் பிறைமதியோடு, வலிய கங்கைநீரும் நிலையாகப் பொருந்திய சடையை உடையவர். மலையில் இருந்து கொணர்ந்த முத்துக்கள் சிறந்த மணிகள், சந்தனம் ஆகியவற்றை அள்ளிவரும் அலைகளை உடைய காவிரியாறு பாயும் திருவையாறு சிவபிரானுடைய இடமாகும்.

**குறிப்புரை:** இப்பதிகப்பாடல் பத்தும் இறைவன் இடம் திருவையாறு என்கின்றது. பாடல்கள்தோறும் இறைவனது மதி, கொன்றை, கங்கை, வன்னி, கொக்கிறகு, தலைமாலை முதலிய அணிவகைகளும் அவர் வீரமும் அறிவிக்கப் பெறுகின்றன. உரநீர் – வலியநீர். மலையாரம் – மலையிற்பிறந்த முத்துக்கள்.

Lord Civan gave protection to the first phase of the crescent moon on His matted hair. Also the mighty river Ganges occupies His hair. Lord Civan enshrines in Thiru-vai-yaaru where the river Cauvery flows carrying along with its waves, pearls of the hill, rare gems, sandalwood trees and leaves them along it's banks.

மதியொன் றியகொன் றைவடத்தன்
மதியொன் றவுதைத்த வர்வாழ்வு
மதியின் னொடுசேர் கொடிமாடம்
மதியம் பயில்கின் றவையாறே. 2

**மதி ஒன்றிய கொன்றைவடத்தன்,**
**மதி ஒன்ற உதைத்தவர் வாழ்வும் -**
**மதியி(ன்)னொடு சேர் கொடி மாடம்**
**மதியம் பயில்கின்ற ஐயாறே.**

mati on2Riya kon2Rai vaTattan2,
mati on2Ra utaittavar vAzvu--
matiyi(n2)n2oTu cEr koTi mATam
matiyam payilkin2Ra aiyARE.

**பொருள்:** சிவபிரான், பிறைமதி பொருந்திய சடையில் கொன்றை மாலையை அணிந்தவன். தக்க யாகத்தில் வீரபத்திரரை ஏவிச் சந்திரனைக் காலால் பொருந்த உதைத்தவன். மதியோடு சேரும் கொடிகளைக் கொண்டதும், மதி தங்குமாறு உயர்ந்த மாடவீடுகளை உடையதுமான திருவையாறு சிவபிரான் வாழும் இடமாகும்.

**குறிப்புரை:** நான்கடிகளிலும் உள்ள மதி என்ற சொல் சந்திரனையே குறிப்பதாகும். வடம் – மாலை. மதி ஒன்ற உதைத்தது, தக்க யாகத்தில் தம் திருவடியால் தேய்த்ததை.

Lord Civan decorates His matted hair with Kondrai flowers along with the crescent moon. Lord Civan commanded Veerabadran to teach Dakshan a lesson for his ill treatment of his daughter Dakshaayini. Veerabadrar went to the hall of sacrifice where Dakshan was celebrating the ritual, played havoc and kicked down and rubbed the moon. Lord Civan who commanded Veerabadran, is enshrined in Thiru-vai-yaaru where the crawling moon in the sky mingles with the flags that fly over the high mansions of this place and also rests therein.

**Note:** Veerabadran was created by Lord Civan from a bit of His matted hair.

கொக்கின் னிறகின் னொடுவன்னி
புக்க சடையார்க் கிட மாகும்
திக்கின் னிசைதே வர்வணங்கும்
அக்கின் னரையா ரதையாறே. 3

**கொக்கின்(ன்) இறகி(ன்)னொடு வன்னி**
**புக்க சடையார்க்கு இடம் ஆகும் -**
**திக்கின்(ன்) இசை தேவர் வணங்கும்**
**அக்கின்(ன்) அரையாரது ஐயாறே.**

kokkin2(n2) iRaki(n2)n2oTu van2n2i
pukka caTaiyArkku iTam Akum--
tikkin2(n2) icai tEvar vaNagkum
akkin2(n2) araiyAratu aiyARE.

**பொருள்:** சிவபிரான், எட்டுத்திசைகளிலும் வாழும் தேவர்களால் வணங்கப் பெறுபவர். அவர் சங்கு மணிகள் கட்டிய இடையினை உடையவர். கொக்கிறகு என்னும் மலரோடு, வன்னிப் பச்சிலைகளும் பொருந்திய சடைமுடியை உடைய அப்பெருமானுக்கு உரிய இடம் திருவையாறு ஆகும்.

**குறிப்புரை:** கொக்கின் இறகு – கொக்கிறகம்பூ; கொக்கினது இறகுமாம். வன்னி – வன்னியிலை. திக்கின் இசை தேவர் – எட்டுத் திக்கிலும் பொருந்தியிருக்கின்ற தேவர்கள். அக்கு – சங்குமணி.

Lord Civan decorates His matted hair with a flower called Kokkirakam (கொக்கிறகம்பூ) along with the green leaves of Vanni tree. He is enshrined in Thiru-vai-yaaru and is adored and worshipped by the Devas occupying the eight directions. He wears on His waist the garland made of chanks.

**Note:** An Asura, in the form of a stork, was done away with by Civa. Civa wears a feather of that stork in His head. Kokkiraku also denotes a flower called Kokku-manthaarai. Civa is also described as a wearer of this flower.

The word 'akku' means (1) Rudrakasha bead, (2) a ring of chank and (3) bare.

சிறைகொண் டபுரம் மவைசிந்தக்
கறைகொண் டவர்கா தல்செய்கோயில்
மறைகொண்ட நல்வா னவர்தம்மில்
அறையும் மொலிசே ருமையாறே. 4

சிறை கொண்ட புரம் அவை சிந்தக்
கறை கொண்டவர் காதல்செய் கோயில் -
மறை கொண்ட நல் வானவர் தம்மில்
அறையும்(ம்) ஒலி சேரும் ஐயாறே.

ciRai koNTa puram avai cintak
kaRai koNTavar kAtal cey kOyil--
maRai koNTa nal vAn2avar tammil
aRaiyum(m) oli cErum aiyARE.

**பொருள்:** சிறகுகளோடு கூடிய முப்புரங்களும் அழியச் சினந்தவராகிய சிவபிரான் விரும்பும் கோயில் திருவையாறு ஆகும். அங்கு மக்களுடைய கண்களுக்குப் புலனாகாது மறைந்து இயங்கும் நல்ல தேவர்கள் தங்களுக்குள் பேசிக்கொள்ளும் ஒலி நிறைந்துள்ள இடமாக அத்தலம் இருக்கிறது.

**குறிப்புரை:** சிறைகொண்டபுரம் – சிறகோடு கூடிய முப்புரங்கள். கறைகொண்டவர் – கோபித்தவர். மறைகொண்ட நல் வானவர் – மக்கள் கண்ணுக்கு மறைந்து வதியும் தேவர்கள். தம்மில் அறையும் ஒலி – தமக்குள் பேசிக்கொள்ளும் ஒலி.

Lord Civan got wild and destroyed the three winged citadels of the Asuras. He desires to be enshrined in Thiru-vai-yaaru. The Devas who are invisible to men on earth discuss among themselves and this noise fills the air in the temple at Thiru-vai-yaaru.

Note: Thiru-vai-yaaru is dear to the gods who frequently visit it, remain invisible.

உமையா ளொருபா கமதாகச்
சமைவா ரவர்சார் விடமாகும்
அமையா ருடல்சோர்த ரமுத்தம்
அமையா வருமந் தணையாறே. 5

உமையாள் ஒருபாகம் அதுஆகச்
சமைவார் அவர் சார்வு இடம் ஆகும் -
அமையார் உடல் சோர்தர முத்தம்
அமையா வரும் அம் தணை ஐயாறே.

umaiyAL oru pAkam atu Akac
camaivAr avar cArvu iTam Akum--
amaiyAr uTal cOrtara muttam
amaiyA varum am taN aiyARE.

**பொருள்:** உமையம்மையை ஒரு பாகத்தே விளங்கப் பொருந்தியவரான சிவபெருமான் சாரும் இடம் திருவையாறு என்ற தலமாகும். அது மலையிடையே உள்ள மூங்கில்கள் முத்துக்களைச் சொரிய, அவை காவிரியாற்றில் பொருந்தி வரும் குளிர்ந்த தலமாகும்.

**குறிப்புரை:** சமைவார் – பொருந்தியவர். அமையார் உடல் சோர்தர – மூங்கிலினது உடல் வெடிக்க. அமையா – பொருந்தி.

Goddess Umaa Devi shines from on the left portion of Lord Civan, who desires to be enshrined in Thiru-vai-yaaru wherein flows the cool Cauvery river carrying with it pearls dropped by the bamboo trees of the mountain, and then leaves them on the banks in Thiru-vai-yaaru during its course.

**Note:** A special type of bamboo, it is said, produces pearls.

தலையின் றொடைமா லையணிந்து
கலைகொண் டதொர்கை யினர்சேர்வாம்
நிலைகொண் டமனத் தவர்நித்தம்
மலர்கொண் டுவணங் குமையாறே. 6

*தலையின் தொடை-மாலை அணிந்து*
*கலை கொண்டது ஓர் கையினர் சேர்வுஆம்-*
*நிலை கொண்ட மனத்தவர் நித்தம்*
*மலர் கொண்டு வணங்கும் ஐயாறே.*

talaiyin2 toTai--mAlai aNintu
kalai koNTatu or kaiyin2ar cErvu Am--
nilai koNTa man2attavar nittam
malar koNTu vaNagkum aiyARE.

***பொருள்:*** தலையோட்டினால் தொகுக்கப்பட்டுள்ள மாலையை அணிந்து, மானைக் கையிலே கொண்டவராகிய சிவபிரானுடைய இடம் திருவையாறு என்ற தலமாகும். அது, இறைவனுடைய திருவடிக்கண் நிலைத்த மனமுடையவராகிய அடியவர்கள் நாள்தோறும் மலர்கொண்டு, தூவி, வழிபாடு செய்யும் திருத்தலமாகும்.

***குறிப்புரை:*** கலை – மான். நிலைகொண்ட மனத்தவர் என்றது. இறைவனது திருவடியின் கண் நிலைத்த மனமுடைய அடியார்களை.

Lord Civan wears a garland made out of skulls and holds a deer in His left hand. He loves to be enshrined in Thiru-vai-yaaru where men with steadfast mind on the Holy Feet of Civan, adore Him daily with flowers.



திருவேட்களம் – ஸ்ரீபாசுபதேஸ்வரர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Passupatesuvarar Temple, Tiruvetkalam, Tamil Nadu.**



திருவாழ்கொளிப்புத்துதூர் (திருவாளப்புத்தூர்) – ஸ்ரீமாணிக்கவண்ணர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Sri Maanickavannar Temple - Tiruvallolipputthur - Tamil Nadu.**

வரமொன் றியமா மலரோன்றன்
சிரமொன் றையறுத் தவர்சேர்வாம்
வரைநின் றிழிவார் தருபொன்னி
அரவங் கொடுசே ருமையாறே. 7

வரம் ஒன்றிய மா மலரோன் தன்
சிரம் ஒன்றை அறுத்தவர் சேர்வுஆம் -
வரை நின்று இழி வார்தரு பொன்னி
அரவம்கொடு சேரும் ஐயாறே.

varam on2Riya mA malarOn2 tan2
ciram on2Rai aRuttavar cErvu Am--
varai nin2Ru izi vAr taru pon2n2i
aravam koTu cErum aiyARE.

**பொருள்:** வரங்கள் பல பெற்றுத் தாமரை மலர்மேல் விளங்கும் பிரமனின் தலைகளில் ஒன்றை அறுத்த சிவபிரானுக்குரிய இடம் திருவையாறு என்ற தலமாகும். அது, மலையினின்று பொங்கிப் பெருகிவரும் காவிரியாறு ஓசையோடு ஆரவாரித்து வரும் திருத்தலம் ஆகும்.

**குறிப்புரை:** வரம் ஒன்றிய – வரம் பெற்ற. மேன்மை பொருந்திய என்றுமாம். சேர்வு – இடம். வரை நின்று இழிவார்தரு பொன்னி எனப்பிரிக்க. வார்தரு – ஒழுகுகின்ற. அரவம் – ஒலி. பொன்னி – காவிரி.

Lord Civan sliced away one of the heads of Brahma who had obtained several boons and seated on a Lotus flower. Thiru-vai-yaaru is the place where Lord Civan is enshrined, and where the river Ponni (another name of Cauvery) after descending from the mountain flows uproariously.

வரையொன் றதெடுத் தவரக்கன்
சிரமங் கநெரித் தவர்சேர்வாம்
விரையின் மலர்மே தகுபொன்னித்
திரைதன் னொடுசே ருமையாறே. 8

வரை ஒன்று அது எடுத்த அரக்கன்
சிரம் மங்க நெரித்தவர் சேர்வுஆம் -
விரையின் மலர் மேதகு பொன்னித்
திரை தன்னொடு சேரும் ஐயாறே.

varai on2Ru atu eTutta arakkan2
ciram magka nerittavar cErvu Am--
viraiyin2 malar mEtaku pon2n2it
tirai tan2n2oTu cErum aiyARE.

**பொருள்:** கயிலை மலையைப் பெயர்த்த இராவணனுடைய சிரங்களும், பிற உறுப்புகளும் சிதறுமாறு நெரித்த சிவபிரான் எழுந்தருளிய இடம் திருவையாறு என்ற தலமாகும். அது மணம் பொருந்திய மலர்களைக் கொண்டு, புண்ணிய ஆறாகிய காவிரி அலைகளோடு கூடிப் பாய்ந்து வளம் சேர்க்கும் திருத்தலம் ஆகும்.

**குறிப்புரை:** விரை – மணம். சிரம் அங்கம் – தலையும் பிற அங்கங்களும்.

Raavanan tried to lift and put aside mount Kailas, the abode of Lord Civan. Lord Civan pressed down the mountain and crushed Raavana's head and other parts of his body. The sacred Cauvery river carrying fragrant flowers flows with its waves through Thiru-vai-yaaru, and makes it fertile. In such a fertile town of Thiru-vai-yaaru, Lord Civan loves to be entempled.

சங்கக் கயனு மறியாமைப்
பொங்குஞ் சுடரா னவர்கோயில்
கொங்கிற் பொலியும் புனல்கொண்டு
அங்கிக் கெதிர்காட் டுமையாறே. 9

*சங்கக் கயனும்(ம்) அறியாமைப்*
*பொங்கும் சுடர் ஆனவர் கோயில் -*
*கொங்கில் பொலியும் புனல் கொண்டு*
*அங்கிக்கு எதிர் காட்டும் ஐயாறே.*

cagkak kayan2um aRiyAmaip
pogkum cuTar An2avar kOyil--
kogkil poliyum pun2al koNTu
agkikku etir kATTum aiyARE.

**பொருள்:** சங்கத்தைக் கையின்கண் கொண்ட திருமாலும், அறியாதவாறு பொங்கி எழும் சுடராகத் தோன்றிய சிவபிரான் கோயில் கொண்ட இடம் திருவையாறு ஆகும். அது, காவிரி மகரந்தம், தேன் ஆகிய பொலியும் நீரைக் கொண்டு வந்து, அழல் வடிவான இறைவன் திருமுன் அர்க்கியமாகக் காட்டும் திருத்தலம் ஆகும்.

**குறிப்புரை:** சங்கக்கயன் – சங்கத்தைக் கையிலேயுடைய திருமால். கொங்கு – தேன். அங்கிக்கு எதிர்காட்டும் – காலையில் அக்கினி காரியம் செய்வோர் அர்க்கியம் சமர்ப்பிக்கும்.

Thirumaal who holds the Paancha Sanyam (*பாஞ்ச சன்னியம்*) in his left hand, could not conceive of Lord Civan who soared as a tall column of fire. This Lord Civan

is enshrined at the temple in Thiru-vai-yaaru, where the waters of the Cauvery river get mixed up with the pollen grain and honey. This water flows past Lord Civan who was then a tall column of fire, as 'Arkkiyam' (அர்க்கியம் - sacred water offered to gods).

**Note:** Arghya: Water offered to gods or guests.

துவரா டையர்தோ லுடையார்கள்
கவர்வாய் மொழிகாதல் செய்யாதே
தவரா சர்கள்தா மரையானோ
டவர்தா மணையந் தணையாறே. 10

துவர்ஆடையர், தோல்உடையார்கள்,
கவர் வாய்மொழி காதல் செய்யாதே,
தவராசர்கள் தாமரையானோடு
அவர்தாம் அணை அம் தண் ஐயாறே.

tuvar ATaiyar, tOl uTaiyArkaL,
kavar vAymozi kAtal ceyyAtE,
tavarAcarkaL tAmaraiyAn2OTu
avartAm aNai am taN aiyARE.

**பொருள்:** துவராடை தரித்த பௌத்தர்கள், ஆடையின்றித் தோலைக்காட்டும் சமணர்கள் ஆகியவர்களின் மாறுபட்ட வாய்மொழிகளை கேட்காமல், தவத்தால் மேம்பட்டவர்கள், பிரமன் முதலிய தேவர்கள் வந்து அணைந்து வழிபடும் தலமாகிய திருவையாறு சென்று வழிபடுமின்.

**குறிப்புரை:** கவர்வு - கபடம். தவராசர்கள் - தவத்தான் மிக்க முனிவர்கள். தாமரையான் என்றது பிரமனை.

Ye companions! Go to Thiru-vai-yaaru and worship the Lord Civan therein, by discarding the deceitful words of the nude Samanars and the ochre-robed Buddhists, as is being done by the Holy men famed by sacrifice, Brahma and other devas.

**Note:** Clad in their skin (only); Samanars go about naked. Samana sannyasins are digambaras and lay-samanas are svetambaras (clad in white cloth).

கலையார் கலிக்கா ழியர்மன்னன்
நலமார் தருஞா னசம்பந்தன்
அலையார் புனல்சூ ழுமையாற்றைச்
சொலுமா லைவல்லார் துயர்வீடே. 11

*கலை ஆர் கலிக்காழியர் மன்னன் -*
*நலம் ஆர்தரு ஞானசம்பந்தன் -*
*அலை ஆர் புனல் சூழும் ஐயாற்றைச்*
*சொலும் மாலை வல்லார் துயர் வீடே.*

kalai Ar kalikkAziyar man2n2an2--
nalam Artaru njAn2acampantan2--
alai Ar pun2al cUzum aiyARRaic
colum mAlai vallAr tuyar vITE.

**பொருள்:** கலைவல்லவர்களின் ஆரவாரம் மிக்க சீகாழிப் பதியில் உள்ளவர்களுக்குத் தலைவனாக நன்மை அமைந்த ஞானசம்பந்தன் விளங்குகிறார். அவர், அலைகளை உடைய காவிரியில் சூழப்பட்ட திருவையாற்றைப் போற்றிப் பாடிய இத்தமிழ்ப்பாடல்கள், பாடுவோரின் துயர் நீங்கும்.

**குறிப்புரை:** இது ஐயாற்றைப் பற்றிய இம்மாலையைச் சொல்ல வல்லார் துன்பத்தினின்று வீடுபெறுவர் என்கின்றது. கலை – கலை ஞானங்கள். கலி – ஒலி.

The good natured Gnaanasambandan is the chief of scholars and artists who abide in Seekaazhi making busting noise due to their chanting of the Vedas. He sang this hymn adoring Thiru-vai-yaaru which stands on the banks of the billowing Cauvery river, and Lord Civan entempled therein. Those who can sing this hymn will get rid of their distress.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*36ஆம் பதிகம் முற்றிற்று*
End of 36th Hymn

உ
சிவமயம்

# 37. திருப்பனையூர்

## திருத்தலவரலாறு:

திருப்பனையூர் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம் ஆகும். பேரளம் – திருவாரூர் பேருந்து வழியில் சன்னா நல்லூரை அடுத்துள்ளது. இங்கு சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்கு இறைவன் நடன தரிசனம் காட்டி அருளினார். பராசரமுனிவர் பூசித்துப் பேறு பெற்றார். கரிகால் வளவன் இங்கு வளர்ந்தான் என்றும், அவனுக்கு விநாயகர் துணை இருந்தார் என்றும் சொல்லப்படுகிறது. இறைவன் பெயர் சௌந்தரநாதர்; இறைவி பெயர் பெரிய நாயகி. தீர்த்தம் அமுதபுஷ்கரிணி. இது மகாலட்சுமி தீர்த்தம் எனவும் வழங்கும். விநாயகர் துணையிருந்த பிள்ளையார். தலவிருட்சம் பனைமரம். நன்னிலம் இரயில் நிலையத்தில் இருந்து தென் கிழக்கே தரை மார்க்கமாக ஒரு கி.மீ. தொலைவில் இருக்கிறது.

## பதிக வரலாறு:

திருவாரூரை வணங்கி வருகின்ற திருஞானசம்பந்தப் பெருமான், யானையை உரித்துப் போர்த்த பெருமான் எழுந்தருளிய திருப்பனையூரை வணங்கி, 'அரவச்சடை' என்னும் வேதப் பொருள் நிறைந்த இசைப்பதிகமாகிய இதனை அருளிச் செய்தார்கள்.

# 37. THIRU-P-PANAIOOR

## THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-p-panaioor is to the south of river Cauvery in Chola Naadu. It is next to Sanaaanalloor on the Peralam - Thiruvaaroor bus route. It is located southeast of Nannilam railway station, 1 km along the riverbank. The Lord's name here is Soundharanaathar and the Goddess is known as Periyanaayaki. The sacred ford is Amudhapushkarini, also known as Mahaalakshmi Theerththam. Vinaayakar is known as Thunaiyirundha Pillaiyaar. The sacred tree of this shrine is the Palm.

Saint Sundharamoorthi Svaami had the vision of the Lord's dance here. Sage Paraasarar offered worship here to attain salvation. According to legends, Karikaal

Valavan grew up here and offered worship to Lord Vinaayakar who bestowed His grace on him by helping him.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 37. திருப்பனையூர் 37. THIRU-P-PANAIOOR

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

அரவச் சடைமேன் மதிமத்தம்
விரவிப் பொலிகின்ற வனூராம்
நிரவிப் பலதொண் டர்கள்நாளும்
பரவிப் பொலியும் பனையூரே.

*அரவச் சடைமேல் மதி, மத்தம்,*
*விரவிப் பொலிகின்றவன் ஊர்ஆம் -*
*நிரவிப் பலதொண்டர்கள் நாளும்*
*பரவிப் பொலியும் பனையூரே.*

aravac caTai mEl mati, mattam,
viravip polikin2Ravan2 Ur Am--
niravip pala toNTarkaL nALum
paravip poliyum pan2aiyUrE.

**பொருள்:** சிவபிரான், சடைமுடிமேல் அரவம் மதி ஊமத்தம் மலர் ஆகியன கலந்து விளங்குமாறு அணிந்துள்ளார். தொண்டர்கள் பலரும் நாள்தோறும் கலந்து வணங்கி மகிழ்வுறும் திருப்பனையூரே சிவபிரானது தலமாகும்.

**குறிப்புரை:** இது, சடைமேல் மதியும் ஊமத்தமும் கலந்து விளங்குகின்ற இறைவனூர் பனையூர் என்கின்றது. மத்தம் – ஊமத்தம். நிரவி – கலந்து. பரவி – வணங்கி.

Lord Civan nicely wears on His matted hair snake, a crescent moon, and datura flower (*ஊமத்தம்பூ*), which are bright and stand close to each other. He is enshrined in Thiru-p-panaioor where all His servitors gather daily together and offer worship and glow in the bliss of grace.

**Note:** The town of palm-trees.

எண்ணொன் றிநினைந்த வர்தம்பால்
உண்ணின் றுமகிழ்ந் தவனூராம்
கண்ணின் றெழுசோ லையில்வண்டு
பண்ணின் றொலிசெய் பனையூரே. 2

எண் ஒன்றி நினைந்தவர் தம்பால்
உள்-நின்று மகிழ்ந்தவன் ஊர்ஆம் -
கள்-நின்று எழு சோலையில் வண்டு
பண் நின்று ஒலிசெய் பனையூரே.

eN on2Ri nin2aintavar tampAl
uL--nin2Ru makizntavan2 Ur Am--
kaL--nin2Ru ezu cOlaiyil vaNTu
paN nin2Ru oli cey pan2aiyUrE.

***பொருள்:*** சிவபிரான், மனம் ஒன்றி நினைந்த அடியார்களின் உள்ளத்தே இருந்து, அவர்தம் வழிபாட்டை ஏற்று மகிழ்கின்றான். தேன்பொருந்திய மலர்களோடு உயர்ந்துள்ள சோலைகளில் வண்டுகள் பண் ஒன்றிய ஒலி செய்யும் திருப்பனையூரே அந்தச் சிவபிரானுடைய தலமாகும்.

***குறிப்புரை:*** மனம் ஒன்றி நினைக்கும் அடியார்களிடத்து உள்நின்று மகிழும் இறைவனூர் பனையூர் என்கின்றது. எண் – எண்ணம். ஒன்றி – விஷய சுகங்களில் சென்று பற்றாது திருவடியிலேயே பொருந்தி. மகிழ்ந்தவன் – தான்மகிழ, தன்னைச் சார்ந்த ஆன்மாவும் மகிழுமாதலின் மகிழ்வித்தவன் என்னாது மகிழ்ந்தவன் என்றார். மகிழ்தற்குரிய சுதந்திரமும் ஆன்மாவுக்கு இல்லை என்றபடி. கள் நின்று – தேன் பொருந்தி.

Lord Civan indwells in the hearts of those devotees who contemplate on Him with single-minded devotion. He happily accepts and admires their adoration. He is enshrined in Thiru-p-panaioor where honeybees hum tunefully according to the relevant Pann (*பண்*), and fly around from one honeyed flower to another. These flowers blossom in the tall gardens that are found everywhere in the town.

அலரும் மெறிசெஞ் சடைதன்மேல்
மலரும் பிறையொன் றுடையானூர்
சிலரென் றுமிருந் தடிபேணப்
பலரும் பரவும் பனையூரே. 3

அலரும் எறி செஞ்சடைதன்மேல்
மலரும் பிறை ஒன்று உடையான் ஊர் -
சிலர் என்றும் இருந்து அடி பேணப்,
பலரும் பரவும் பனையூரே.

alarum eRi cenjcaTai tan2 mEl
malarum piRai on2Ru uTaiyAn2 Ur--
cilar en2Rum iruntu aTi pENa,
palarum paravum pan2aiyUrE.

**பொருள்:** சிவபிரான், எரிபோல விளங்கும் சிவந்த சடைமுடிமீது வளரும் பிறை ஒன்றை உடையவன். அடியவர்களில் சிலர் என்றும் இருந்து திருவடிகளைப் பரவிப் பூசனை செய்து போற்றவும், பலர் பலகாலும் வந்து வணங்க, விளங்கும் திருப்பனையூரே அந்தப் பெருமானின் திருத்தலம் ஆகும்.

**குறிப்புரை:** பிறையணிந்த பெருமானூர் பனையூர் என்கின்றது. எறி – அர்ச்சிக்கப்படுகின்ற. மலரும் பிறை – வளரும் பிறை. சிலர் – அணுக்கத் தொண்டர்களாகிய அடியார்கள். பலர் – வழிபடும் அடியார்கள்.

Lord Civan wears on His ruddy matted hair that blazes like fire, the waxing crescent moon. Some of His servitors who render service as personal attendants to Lord Civan (*அணுக்கத்தொண்டர்*) stay in Thiru-p-panaioor and carry out the rituals daily. Many other devotees do come and offer worship at all times in this place. In such Thiru-p-panaioor Lord Civan is entempled.

**Note:** Some servitors: These are 'anukkatthondar'. They are permanently attached to the temple service.

இடியார் கடனஞ் சமுதுண்டு
பொடியா டியமே னியினானூர்
அடியார் தொழமன் னவரேத்தப்
படியார் பணியும் பனையூரே. 4

இடி ஆர் கடல் நஞ்சு அமுதுஉண்டு
பொடி ஆடிய மேனியினான் ஊர் -
அடியார் தொழ மன்னவர் ஏத்த,
படியார் பணியும் பனையூரே.

iTi Ar kaTal nanjcu amutu uNTu
poTi ATiya mEn2iyin2An2 Ur--
aTiyAr toza, man2n2avar Etta,
paTiyAr paNiyum pan2aiyUrE.

***பொருள்:*** சிவபிரான், கரைகளை மோதுதல் செய்யும் கடலிடைத் தோன்றிய நஞ்சை அமுதாக உண்டார். அவர், தமது மேனிமீது திருநீற்றுப் பொடியை நிரம்பப் பூசியுள்ளார். அடியவர்கள் தொழ, மன்னவர்கள் ஏத்த, உலகில் வாழும் பிறமக்கள் பணியும் திருப்பனையூர், அந்தப் பெருமானது ஊராகும்.

***குறிப்புரை:*** இது, நீறுபூசிய இறைவனூர் பனையுர் என்கின்றது. இடியார் கடல் – கரைகளை மோதுகின்ற கடல். பொடி – விபூதி. படியார் – பூமியில் உள்ள பிறமக்கள்.

Lord Civan lavishly smears on His body with holy ashes. He swallowed the poison, (as though it was nectar) that came out of the sea from where the waves dash against the shores. Thiru-p-panaioor is verily His town where His devotees offer worship, the kings adore, and other people in the world pay obeisance to Him.

**Note:** Civa is alike hailed by the ruler and the ruled.

அறையார் கழன்மே லரவாட
இறையார் பலிதேர்ந் தவனூராம்
பொறையார் மிகுசீர் விழமல்கப்
பறையா ரொலிசெய் பனையூரே. 5

அறை ஆர் கழல் மேல் அரவு ஆட,
இறை ஆர் பலி தேர்ந்தவன் ஊர்ஆம் -
பொறையார் மிகு சீர் விழ மல்க,
பறையார் ஒலிசெய் பனையூரே.

aRai Ar kazal mEl aravu ATa,
iRai Ar pali tErntavan2 Ur Am--
poRaiyAr miku cIr viza malka,
paRaiyAr olicey pan2aiyUrE.

**பொருள்:** சிவபிரான், ஒலிக்கின்ற வீரக்கழல்மேல், அரவு ஆட, முன்கைகளில் பலியேற்றுத் திரியும் பிட்சாடனராக விளங்குகின்றார். மண்ணுலகில் சிறந்த புகழை உடைய திருவிழாக்கள் நிறைய நடப்பனவால், பறைகளின் ஒலி இடைவிடாது பயிலும் திருப்பனையூர் அந்தப் பிட்சாடனரின் ஊராகும்.

**குறிப்புரை:** இது பிட்சாடன மூர்த்தியின் ஊர் பனையூர் என்கின்றது. அறை – ஒலி. இறை – முன்கை. பொறையியார் மிகுசீர் விழமல்க – பூமியிற் சிறந்த புகழினையுடைய திருவிழா நிறைய.

A snake dances above the resounding anklet worn by (*வீரக்கழல்*) Lord Civan in one of His legs. He implores the souls to give up their egoism and ignorance so as to enable them to be eligible to receive His grace and to move on towards the goal of life. This is metaphorically said in this verse as though He begs by assuming the form of Bishaadanar (*பிட்சாடனர்*), which is one of His manifestations.

**Note:** At Panaioor, each day is a holy day.

அணியார் தொழவல் லவரேத்த
மணியார் மிடறொன் றுடையானூர்
தணியார் மலர்கொண் டிருபோதும்
பணிவார் பயிலும் பனையூரே. 6

*அணியார் தொழ வல்லவர் ஏத்த,*
*மணி ஆர் மிடறு ஒன்று உடையான் ஊர் -*
*தணி ஆர் மலர் கொண்டு இருபோதும்*
*பணிவார் பயிலும் பனையூரே.*

aNiyAr toza vallavar Etta,
maNi Ar miTaRu on2Ru uTaiyAn2 Ur--
taNi Ar malar koNTu iru pOtum
paNivAr payilum pan2aiyUrE.

**பொருள்:** சிவபிரான், தம்மைப் பூசனை செய்து தொழவல்ல அடியவர்களுக்கு அண்மையில் இருப்பவர். அவர், அடியவர்கள் அருகிருந்து ஏத்துமாறு உள்ள நீலமணி போன்ற கழுத்தை

உடையவர். தன்னைப் பணியும் அடியவர்கள் குளிர்ந்த மலர்களைக் கொண்டு, இருபோதும் தூவி வழிபடும் இடமான திருப்பனையூர் அந்தச் சிவபிரானுடைய ஊராகும்.

**குறிப்புரை:** நீலகண்டனது உறைவிடம் பனையூர் என்கின்றது. தொழவல்லவர் அணியார் ஏத்த என மாறுக. அணியார் – அண்மையில் உள்ளவர்கள். மணி – நீலமணி. தணிஆர் மலர் கொண்டு – குளிர்ந்த மலரையுங்கொண்டு. 'பூவும் நீரும் கொண்டு' என்பதனை நினைவு கூர்க. தணி – தண்மை.

Lord Civan abides in close proximity those devotees who standby Him and offer worship by performing the daily rituals. His neck looks like sapphire gem. Thiru-p-panaioor is His town where His servitors worship Him twice a day with cool flowers.

**Note:** Close to Him: The Sivaachaaryas are referred to here. They are the privileged that can enter the sanctum sanctorum to adore the Lord.

அடையா தவர்மூ வெயில்சீறும்
விடையான் விறலார் கரியின்தோல்
உடையா னவனொண் பலபூதப்
படையான வனூர் பனையூரே. 7

*அடையாதவர் மூஎயில் சீறும்*
*விடையான், விறல் ஆர் கரியின் தோல்*
*உடையான் அவன், ஒண் பலபூதப்-*
*படையான் அவன், ஊர் - பனையூரே.*

aTaiyAtavar mU eyil cIRum
viTaiyAn2, viRal Ar kariyin2 tOl
uTaiyAn2 avan2, oN palapUtap--
paTaiyAn2 avan2, Ur--pan2aiyUrE.

**பொருள்:** சிவபிரான், தன்னை வணங்காத பகைவர்களான அசுரர்களின் மூன்று அரண்களையும் அழித்தவர். விடையில் ஊர்ந்து வருபவர். வலிய யானையை உரித்து, அதன் தோலை மேல் ஆடையாகக் கொண்டவர். எண்ணற்ற பூதப்படைகளை உடையவர். இவ்வளவு சிறப்புள்ள சிவபெருமானுடைய ஊர் திருப்பனையூராகும்.

**குறிப்புரை:** இது வீரன் மேவும் ஊர் பனையூர் என்கின்றது. அடையாதவர் – பகைவராகிய திரிபுராதிகள்; சீறும் என்ற பெயரெச்சம் விடை உடையானை விசேடித்தது. விறல் – வலிமை.

Lord Civan destroyed the three citadels of the recalcitrant Asuraas who did not pay obeisance to Him. He rides on His vehicle, the Bull. He tore the skin of the ferocious elephant and used it as His upper cloth. He is the Lord of numberless Bhuta warriors. His town is Thiru-p-panaioor.

இலகும் முடிபத் துடையானை
அலல்கண் டருள்செய் தவெம்மண்ணல்
உலகில் லுயிர்நீர் நிலமற்றும்
பலகண் டவனூர் பனையூரே. 8

இலகும் முடிபத்து உடையானை
அலல் கண்டு அருள் செய்த எம் அண்ணல்,
உலகில்(ல்) உயிர் நீர் நிலம் மற்றும்
பல கண்டவன், ஊர் - பனையூரே.

ilakum muTipattu uTaiyAn2ai
allal kaNTu aruL ceyta em aNNal,
ulakil(l) uyir nIr nilam maRRum
pala kaNTavan2, Ur--pan2aiyUrE.

***பொருள்:*** சிவபிரான், விளங்கும் முடிபத்தை உடைய இராவணனை அடர்த்தவர். அவன் படும் அல்லல் கண்டு அவனுக்கு அண்ணல் அருள் செய்தார். உலகின்கண் உள்ள உயிர்களுக்கு நீர் நிலம் முதலான பலவற்றையும் படைத்து அளித்த சிவபிரானுடைய ஊர் திருப்பனையூர் ஆகும்.

***குறிப்புரை:*** ஐம்பூதங்களையும் ஆக்கிய இறைவனூர் பனையூர் என்கின்றது. அலல் – துன்பம்; அல்லல் என்பதன் திரிபு மற்றும் பல என்றமையான் நுண்பூதங்களும். தன்மாத்திரைகளும் ஆகிய அனைத்தையுங் கண்டவன்.

Lord Civan who is our Supreme Lord crushed the shining ten heads of Raavanan; later took pity on His suffering and graced him. He created and bestowed the primary elements such as water, earth, fire, air and ether; also all other wants of all the souls in the world.

Note: Civa is the Provider. It is He who provides tanu, karanam, bhuvanam and bhogam to all living beings in accordance with their past karma.

வரமுன் னிமகிழ்ந் தெழுவீர்காள்
சிரமுன் னடிதா ழவணங்கும்
பிரமன் னொடுமா லறியாத
பரமன் னுறையும் பனையூரே. 9

*வரம் முன்னி மகிழ்ந்து எழுவீர்காள்!*
*சிரம் முன் அடி தாழ வணங்கும் -*
*பிரம(ன்)னொடு மால் அறியாத*
*பரமன்(ன்) உறையும் பனையூரே!*

varam mun2n2i makizntu ezuvIrkAL!
ciram mun2 aTi tAza vaNagkum--
pirama(n2)n2oTu mAl aRiyAta
paraman2(n2) uRaiyum pan2aiyUrE!

***பொருள்:*** சிவபிரானிடம் வரங்களைப் பெறுவதற்காக மகிழ்வோடு புறப்பட்டு வரும் அடியவர்களே! அப்பெருமானின் திருமுன் தலைதாழ்த்தி வணங்குகின்றவர்கள் எளிதில் நல்ல வரம் பெறலாம். பிரமனும், திருமாலும் அவனை அறிய மாட்டாத நிலையினன். அப்பரமன் உறையும் ஊர் திருப்பனையூர் ஆகும்.

***குறிப்புரை:*** இது வரம் வேண்டியவர்கள் பனையூரைச் சிரந்தாழ வணங்குங்கள் என்கின்றது. முன்னி – எண்ணி. வணங்கும் – வணங்குங்கள்; செய்யுமேன் முற்று.

Ye Devotees! Coming merrily to get boons from Lord Civan, who is above Brahma and Thirumaal. Bow before Lord Civa and worship Him. This Lord abides in Thiru-p-panaioor.

அழிவல் லமண ரொடுதேரர்
மொழிவல் லனசொல் லியபோதும்
இழிவில் லாதொர்செம் மையினானூர்
பழியில் லவர்சேர் பனையூரே. 10

*அழி வல் அமணரொடு தேரர்*
*மொழி வல்லன சொல்லியபோதும்,*
*இழிவு இல்லாது ஓர் செம்மையினான் ஊர் -*
*பழிஇல்லவர் சேர் பனையூரே.*

azi val amaNaroTu tErar
mozi vallan2a colliya pOtum,
izivu illatu or cemmaiyin2An2 Ur--
pazi illavar cEr pan2aiyUrE.

**பொருள்:** அழிவில் வல்ல அமணர்களும், பௌத்தர்களும் வாய்த்திறனால் புறங்கூறுகிறார்கள். அதனால், சிறிதும் குறைவுறாத செம்மையன் ஆகிய சிவபிரானது ஊர் திருப்பனையூர் என்ற தலமாகும். அத்தலத்தில் பழியற்றவர்கள் சேர்ந்து வாழ்கிறார்கள்.

**குறிப்புரை:** இது புறச்சமயிகள் பொருந்தாதன சொல்லியபோதும் அவற்றால் இழிவுபடாத இறைவனூர் பனையூர் என்கின்றது. அழிவல் அமணர் – அழிதலில் வல்ல சமணர்கள். தேரர் – புத்தர். மொழி வல்லன – வாய் வன்மையாற் சொல்லும் புன்மொழிகளை. இழிவு – குறைபாடு.

The destructive minded Samanars and Buddhists, with their habit of backbite utter unbecoming words about Lord Civan. Unmindful of these, Lord Civan is well-renowned and with undiminishing fame abides in Thiru-p-panaioor where flawless people assemble to offer worship to Him.

பாரார் விடையான் பனையூர்மேல்
சீரார் தமிழ்ஞா னசம்பந்தன்
ஆரா தசொன்மா லைகள்பத்தும்
ஊரூர் நினைவா ருயர்வாரே. 11

*பார் ஆர் விடையான் பனையூர்மேல்*
*சீர் ஆர் தமிழ் ஞானசம்பந்தன்*
*ஆராத சொல்மாலைகள் பத்தும்*
*ஊர்ஊர் நினைவார் உயர்வாரே.*

pAr Ar viTaiyAn2 pan2aiyUr mEl
cIr Ar tamiz njAn2acampantan2
ArAta col mAlaikaL pattum
Ur Ur nin2aivAr uyarvArE.

**பொருள்:** விடையூர்தியைக் கொண்ட சிவப்பிரானை நினைத்தால் மண்ணுலகில் பொருந்தி வாழலாம். அப்பெருமான் உறையும் திருப்பனையூரின்மேல், புகழால்மிக்க தமிழ் ஞானசம்பந்தன், மென்மேலும் விருப்பத்தைத் தருவனவாகப் போற்றிப் பாடிய சொல்மாலைகளான இப்பத்துப் பாடல்களையும் ஒவ்வோர் ஊரிலும் இருந்து கொண்டு நினைவார் உயர்வெய்துவர்.

**குறிப்புரை:** பனையூர் மாலை பத்தையும் வல்லவர்கள் உயர்வார் எனப் பயன்கூறுகிறது. பார் – பூமி. ஆராத – கேட்டு அமையாத; அதாவது மேன்மேலும் விருப்பத்தை விளைவிக்கக் கூடிய. ஊர் ஊர் நினைவார் – பொலிகின்றவன் ஊர், மகிழ்ந்தவன் ஊர் என்பன முதலியவாக முடிவனவற்றை நினைவார்.

The well renowned Tamizh Gnaanasambandan hath sung this hymn with insatiable love of Lord Civan at the shrine in Thiru-p-panaioor. He has the Bull as His carrier which is the most appropriate vehicle to move about on this earth to grace people. If the dwellers of each and every town on this earth could contemplate on this garland of ten verses, they will rise up to great heights.

**Note:** The child-saint is every inch a Tamil saint. His hymns constitute the Tamil Veda and are set to divine musical metres.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*37ஆம் பதிகம் முற்றிற்று*
End of 37th Hymn

உ
சிவமயம்

## 38. திருமயிலாடுதுறை

### திருத்தலவரலாறு:

திருமயிலாடுதுறை என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம் ஆகும். சிதம்பரம் – கும்பகோணம் பேருந்து வழியில் உள்ள நகரம். சென்னை – திருச்சி நேர்வழி இருப்புப் பாதையில் இரயில் சந்திப்பு நிலையம். இரயில் நிலையத்தில் இருந்து ஆலயம் கிழக்கே 2 கி.மீ. தூரத்தில் உள்ளது. அம்மை மயில் உருக்கொண்டு இறைவனை வழிபட்ட தலம். இங்கு அம்மையின் வேண்டுகோளுக்காக இறைவன் மயில் உருக்கொண்டு தாண்டவம் ஆடினார். இதற்குக் கௌரீ தாண்டவம் என்று பெயர். தலம் கௌரீதாண்டவபுரம் ஆயிற்று.

இறைவன் பெயர் மாயூரநாதர்; கல்வெட்டுக்களும் தேவாரமும் மயிலாடுதுறையார், மயிலாடுதுறையரன் எனக் குறிக்கின்றன. இறைவியின் பெயர் அஞ்சல் நாயகி, அபயாம்பிகை என்பன. தீர்த்தம்: காவிரியில் இடப தீர்த்தத் துறை விசேடம். துலாமாதம் முழுவதும் இங்கு நீராட்டு விழா நடைபெறும்.

### கல்வெட்டு:

இத்தலத்தைப்பற்றிப் படியெடுக்கப்பட்டதாக 16 கல்வெட்டுக்கள் உள்ளன. பணி செய்த அரசர்கள் முதலாம் குலோத்துங்கன், இரண்டாம் இராஜாதிராஜன், மூன்றாம் குலோத்துங்கன், மூன்றாம் இராஜராஜன், சடையவர்மன் சுந்தரபாண்டியன் ஆகியோர் ஆவர். இக்கல்வெட்டுக்களால் நிலம் பொன் அளிக்கப் பெற்றமை அறியப்பெறுகின்றது. இறைவன் திருமயிலாடுதுறை உடையார் எனவும் குறிக்கப் பெறுவர். இக்கல்–வெட்டுக்களில் ஐந்து போக ஏனையவை ஐயாறப்பரைப் பற்றியன. இத்தலத்து ஐயாறப்பர் கோயில் தனியே மாயூரநாதர் கோயிலுக்குத் தென்மேற்கில் உள்ளது. இந்த ஐயாறப்பர் ஐயங்கொண்ட சோழவள நாட்டுத் திருவழுந்தூர் நாட்டு குலோத்துங்க சோழன் குற்றாலமாகிய திருவையாறு உடையார் எனக் குறிக்கப் பெறுவர். இத்தலத்து விக்கிரம சோழன் திருமடம் என ஒன்றிருப்பதாகக் குறிக்கப் பெறுகின்றது. முதல் குலோத்துங்கன் சுங்கம் தவிர்த்த சோழன் எனப்படுகின்றான். ஐயாறப்பர் கோயில் ஐயாறப்பரைப் பிரதிட்டை செய்தது போன்ற சிறந்த நிகழ்ச்சிகள் அறிவிக்கப் பெறுகின்றன.

## பதிக வரலாறு:

மூவலூரைக் காதலோடு வணங்கிப் போற்றிய பின்னர் பிள்ளையார் திருமயிலாடுதுறை என்னும் மாயூரதலத்தை அடைந்தார்கள். அப்போது அவ்வூர் அந்தணர்கள் அடியார்களோடு எதிர்கொள்ள எழுந்தருளி, மானேந்திய பெருமானைத் திருக்கோயிலிற் சென்று வணங்கினார்கள். எல்லையில்லாததோர் ஆனந்தம் அடைந்தார்கள். 'கரவின்றி நன்மாமலர்' என்னும் இப்பதிகத்தைத் தெளிந்த இசையோடு ஓதியருளினார்கள்.

## 38. THIRU-MAYIL-AADUTHURAI

### THE HISTORY OF THE PLACE

The sacred place, Thiru-mayil-aaduthurai, is to the south of river Cauvery in Chola Naadu. It lies in the Chidambaram - Kumbakonam bus route. It has a railwy station in the main line connecting Chennai - Thiruchchi. The temple is at a distance of about 2 km from the station. Lord Mayooranaathar is referred to as Mayilaaduthuraiyaar or Mayilaaduthuraiyaran in Thevaaram and the many inscriptions. The Goddess is Anjchalnaayaki or Abayaambikai. The sacred ford is the Idaba Theerththam ghat in the river Cauvery, the ritual of bathing here is celebrated through out the month of Thula.

Once the Goddess assumed the form of a peahen during her worship of the Lord, who obliged her by dancing in the form of peacock. This dance is known as Gowree Thaandavam and the place became known as Gowree Thaandavapuram. The sixteen inscriptions here are of the period of Chola monarchs Kuloththungkan I to Raajaraajan III and Sadaiyavarman Sundhara Paandiyan, and speak of grants of gold and lands. Eleven of these pertain to the Iyaarappar temple, which is to the southwest of Mayooranaathar temple.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 38. திருமயிலாடுதுறை 38. THIRU-MAYIL-AADUTHURAI

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

கரவின் றிநன்மா மலர்கொண்டே
இரவும் பகலுந் தொழுவார்கள்
சிரமொன் றியசெஞ் சடையான்வாழ்
வரமா மயிலா டுதுறையே. 1

*கரவு இன்றி நல்மாமலர் கொண்டே*
*இரவும் பகலும் தொழுவார்கள் -*
*சிரம் ஒன்றிய செஞ்சடையான் வாழ்*
*வர மா மயிலாடுதுறையே.*

karavu in2Ri nalmAmalar koNTE
iravum pakalum tozuvArkaL--
ciram on2Riya cenjcaTaiyAn2 vAz
vara mA mayilATutuRaiyE.

***பொருள்:*** சிவபிரான், திருமயிலாடுதுறையில் உறைகிறான். நெஞ்சில் வஞ்சனை இன்றி, மணம் மிக்க சிறந்த மலர்கள் பலவற்றையும் பறித்துக் கொண்டு வந்து, இரவும் பகலும் தொழும் அடியார்களுக்கு திருமயிலாடுதுறை மிகச சிறந்த தலமாகும். தலை மாலை பொருந்தும் செஞ்சடை உடையவரும், வள்ளன்மை உடையவருமான சிவபிரான் உகந்தருளும் தலம் திருமயிலாடுதுறை ஆகும். அடியார்களுடைய சிரத்தின்கண் ஒன்றி நிற்கும் பெற்றியனான செஞ்சடையெம்பெருமான் எனவும் பொருள் கோடலாம்.

***குறிப்புரை:*** இது மயிலாடுதுறை, இரவும் பகலுந்தொழும் அடியார்கட்குச் சிவன்வாழும் இடம் என்று அறிவிக்கிறது. கரவு – வஞ்சனை. சிரம் – தலைமாலை.

**குருவருள்:** வரம் என்ற சொல் வழங்குதலைக் குறிக்கும். இங்குள்ள பெருமான் வள்ளற் பெருமானாகலின் வரம் என்ற சொல்லால் அவ்வள்ளலைக் குறித்துள்ளார். அப்பர், வள்ளல் என்று குறிப்பிட்டுள்ளதும் காண்க. மயிலாடுதுறையரன் அடியார்களுக்கு வள்ளலாக அருள் வழங்குகிறான் என்பது குறிப்பு.

The unique Lord Civan wears a special head garland (தலைமாலை) on His ruddy matted hair. He is enshrined in Mayil-aaduthurai. This place is considered as the most sacred one by the devotees who have no ill will in their hearts. They pluck and bring fragrant and luxurious flowers of different varieties to this temple and offer worship both day and night.

**Note:** Mayil-aaduthurai means the place where peacocks dance. சிரமொன்றிய செஞ்சடையான் – The Lord with ruddy matted hair who is immanent in the heads of devotees abides in Mayilaaduthurai.

உரவெங் கரியின் னுரிபோர்த்த
பரமன் னுறையும் பதியென்பர்
குரவஞ் சுரபுன் னையும்வன்னி
மருவும் மயிலா டுதுறையே. 2

உர வெங்கரியின்(ன்) உரி போர்த்த
பரமன்(ன்) உறையும் பதி என்பர் -
குரவம், சுரபுன்னையும், வன்னி,
மருவும் மயிலாடுதுறையே.

ura vegkariyin2(n2) uri pOrtta
paraman2(n2) uRaiyum pati en2par--
kuravam, curapun2n2aiyum, van2n2i,
maruvum mayilATutuRaiyE.

**பொருள்:** வலிமை பொருந்திய கொடிய யானையைக் கொன்று, அதன் தோலைப் போர்த்த பரமனாகிய சிவபிரான் உறையும் பதி திருமயிலாடுதுறை என்னும் திருத்தலமாகும். அங்குக் குராமரம் சுரபுன்னை வன்னி ஆகிய மரங்கள் செறிந்துள்ளன.

**குறிப்புரை:** யானைத்தோல் போர்த்த பரமன் உறையும்பதி மயிலாடுதுறை என்கின்றது. உரம் – வலிமை. குரவம் – குராமலர். சுரபுன்னை – இது இக்காலத்து நாகலிங்கப் பூ என வழங்குகிறது.

Lord Civan stripped the skin of the mighty and ferocious elephant and covered His body with that skin. This Lord Civan is enshrined in Mayil-aaduthurai, where Kuravam, Surapunnai and Vanni trees are in plenty (குரா மலர், சுரபுன்னை மற்றும் வன்னி மரங்கள் அடர்த்தியாக உள்ள ஊராகும்).

**Note:** Kuravam: Common bottle-flower.

Surapunnai: Gamfoge

Vengkai: Kino tree.

ஊனத் திருள்நீங் கிடவேண்டில்
ஞானப் பொருள் கொண் டடிபேணும்
தேனொத் தினியா னமருஞ்சேர்
வானம் மயிலா டுதுறையே. 3

ஊனத்து இருள் நீங்கிட வேண்டில்,
ஞானப்பொருள் கொண்டு அடி பேணும் -
தேன் ஒத்து இனியான் அமரும் சேர்வு
ஆன(ம்) மயிலாடுதுறையே.

Un2attu iruL nIgkiTa vENTil,
njAn2apporuL koNTu aTi pENum--
tEn2 ottu in2iyAn2 amarum cErvu
An2a(m) mayilATutuRaiyE!

**பொருள்:** தேனை ஒத்த இனியனாய் விளங்கும் சிவபிரான், தனக்குச் சேர்வான திருமயிலாடுதுறையில் விரும்பி உறைகிறான். பக்தர்களே! இப்பிறப்பில் நமக்குள்ள குறைபாடாகிய ஆணவம் என்னும் இருள் நம்மைவிட்டு நீங்க வேண்டுமானால், முத்தியில் தேனைப் போன்று இனியவனாய் விளங்கும் திருமயிலாடு துறையில் எழுந்தருளியிருக்கும் ஞானப் பொருளாய் உள்ள சிவபிரானின் திருவடிகளை வணங்குங்கள்.

**குறிப்புரை:** உயிர்களை அணுவாக்கும் ஆணவமலம் நீங்க வேண்டில் ஞானப்பொருளைத் துணைக்கொண்டு மயிலாடுதுறையைப் பேணுங்கள் என்கின்றது. ஊனத்து இருள் – குறைபாட்டை உண்டாக்கும் மலம். குறைபாடாவது சிவத்தோடொன்றிச் சிவமாகும் ஆன்மாவை மறைத்து அணுவாக்கும் குறைபாடு. தேன் ஒத்து இனியான் – முத்தியில் ஒன்றிய காலத்துத் தேனை ஒத்த இனியவன். 'தேனைப் பாலையொத்திருப்பவன் முத்தியினிற் கலந்தே' என்றதும் காண்க. அமரும், சேர்வு ஆன. மயிலாடுதுறையை அடிபேணும் எனக் கூட்டுக.

If you aspire to get rid of your egoism (Aanavam - *ஆணவம்*) in this birth, worship the Holy Feet of Lord Civan who is the personification of Supreme knowledge. At the

time of ineffable union with Him, He will be as sweet as honey. This Lord Civan loves to be entempled in Mayil-aaduthurai.

**Note:** The murk of mala: The murky mala: The Aanava mala. It is dame darkness according to St. Umapati. It abides with the soul even at the beginning. It is the denigrating principle from which the soul suffers. The effect of this mala will become null and void, if one worships the Holy Feet of Lord Civan.

அஞ்சொண் புலனும் மவைசெற்ற
மஞ்சன் மயிலா டுதுறையை
நெஞ்சொன் றிநினைந் தெழுவார்மேல்
துஞ்சும் பிணியா யினதானே. 4

அஞ்சு ஒண் புலனும்(ம்) அவை செற்ற
மஞ்சன் மயிலாடுதுறையை
நெஞ்சு ஒன்றி நினைந்து எழுவார் மேல்-
துஞ்சும், பிணி ஆயின தானே.

anjcu oN pulan2um(m) avai ceRRa
manjcan2 mayilATutuRaiyai
nenjcu on2Ri nin2aintu ezuvArmEl –
tunjcum, piNi Ayin2atAn2E.

**பொருள்:** சிவபிரான், ஐம்பொறிகளைப் பற்றும் ஒள்ளிய புலன்களாகிய அவைகளைக் கெடுத்த பெருவீரன். அந்தப் பெருமான் விரும்பி எழுந்தருளிய தலம் திருமயிலாடுதுறை ஆகும். அந்தத் தலத்தில் எழுந்தருளிய இறைவனை மனம் ஒன்றி நினைத்து, வழிபட எழுவார்மேல், இனிவரும் பிறவி முதலாகிய பிணிகள் அழிந்து ஒழியும்.

**குறிப்புரை:** பொறிவாயிலைந்தவித்த வீரன் மேவிய மயிலாடுதுறையை மனமொன்றித் தியானிப்பவர்களின் பிணிகள் அழியும் என்கின்றது. அஞ்சு ஒண்புலனும் – தத்தமக்கேற்ற பொறிகளைக் கவரும் ஒள்ளிய ஐந்து புலன்களையும். செற்ற – கெடுத்த. மஞ்சள் – இது மைந்தன் என்பதன் போலி. வலிமையுடையோன் என்பதாம். நினைந்து எழுவார் – துயில்விட்டு எழும்போதே தியானித்து எழுபவர்கள். பிணி – பிறவிப்பிணி.

Lord Civan is the sagacious and mighty One who subdued the five sensory organs. He is entempled in Mayil-aaduthurai. Those who rise up contemplating with

single mindedness of devotion and offer worship to the Lord in Mayil-aaduthurai will get rid of their next birth and other ills associated with it.

**Note:** Pentad of senses: Sound, touch, form, essence and smell (Sabda, Sprisa, Roopa, Rasa and Gandham).

தணியார் மதிசெஞ் சடையான்றன்
அணியார்ந் தவருக் கருளென்றும்
பிணியா யினதீர்த் தருள்செய்யும்
மணியான் மயிலா டுதுறையே. 5

*தணி ஆர் மதி செஞ்சடையான் தன்*
*அணி ஆர்ந்தவருக்கு அருள், என்றும்*
*பிணி ஆயின தீர்த்து அருள்செய்யும்*
*மணியான், மயிலாடுதுறையே.*

taNi Ar mati cenjcaTaiyAn2tan2
aNi Arntavarukku aruL, en2Rum
piNi Ayin2a tIrttu aruL ceyyum
maNiyAn2, mayilATutuRaiyE.

***பொருள்:*** சிவபெருமான், குளிர்ந்த பிறைமதியை அணிந்துள்ளவன். சிவந்த சடைமுடியை உடையவன். அப்பெருமானை அணுகியவர்க்கு என்றும் அருள் உளதாம். பிறவிப் பிணி முதலானவற்றைப் போக்கி அருள்புரியும் மணி போன்றவனாய் உள்ள அப்பெருமான் மயிலாடுதுறையில் உள்ளார்.

***குறிப்புரை:*** இது மயிலாடுதுறையைச் சேர்ந்தவருக்கு என்றும் அருள் உளதாம் என்கின்றது. தணியார் மதி – குளிர்ந்த மதி. அணியார்ந்தவர் – அணுகியவர். மணியான் – மணி போன்றவன். பிணிதீர்ப்பன மணி மந்திரம் ஔஷதம் என்ற மூன்றுமாதலின் அவற்றுள் ஒன்றாய மணிபோன்றவன் என்றார். பிணியாயின தீர்த்து அருள்செய்யும் மணியான்.

Lord Civan wears on His ruddy matted hair the cool crescent moon. Those who approach Him with devotion will get His grace forever. He is like ruby. He graces His devotees by annihilating their illness of birth and death cycle. This Lord is enshrined in Mayil-aaduthurai.

தொண்ட ரிசைபா டியுங்கூடிக்
கண்டு துதிசெய் பவனூராம்
பண்டும் பலவே தியரோத
வண்டார் மயிலா டுதுறையே. 6

தொண்டர் இசை பாடியும் கூடிக்
கண்டு துதிசெய்பவன் ஊர்ஆம் -
பண்டும் பலவேதியர் ஓத,
வண்டுஆர் மயிலாடுதுறையே.

toNTar icai pATiyum kUTik
kaNTu tuti ceypavan2 Ur Am--
paNTum pala vEtiyar Ota,
vaNTu Ar mayilATutuRaiyE.

**பொருள்:** தொண்டர்களாய் உள்ளவர்கள் கூடி இசைபாடியும், தரிசித்தும், துதித்தும் சிவபெருமானை வழிபடுகின்றனர். முற்காலத்தும் இக்காலத்தும் வேதியர்கள் வேதங்களை ஓதித் துதிக்கவும் வண்டுகள் ஒலிக்கும் சோலைகள் சூழ்ந்ததும் ஆகிய திருமயிலாடுதுறை சிவபிரானது ஊராகும்.

**குறிப்புரை:** தொண்டர்கள் கூடித் துதிபாடும் ஊர் என்கின்றது. துதி செய்பவன் – துதி செய்யப்படுமவன். பண்டும் – முன்பும்.

Lord Civan is enshrined in Mayil-aaduthurai. His servitors gather at the temple here, have His darshan, sing and pay obeisance to Him. In the olden days and even now Vedic scholars chant Vedas and adore Him here in Mayil-aaduthurai which is surrounded by lush gardens.

அணங்கோ டொருபா கமமர்ந்து
இணங்கி யருள்செய் தவனூராம்
நுணங்கும் புரிநூ லர்கள்கூடி
வணங்கும் மயிலா டுதுறையே. 7

அணங்கோடு ஒருபாகம் அமர்ந்து
இணங்கி அருள்செய்தவன் ஊர்ஆம் -
நுணங்கும் புரிநூலர்கள் கூடி
வணங்கும் மயிலாடுதுறையே.

aNagkOTu orupAkam amarntu
iNagki aruL ceytavan2 Ur Am--
nuNagkum purinUlarkaL kUTi
vaNagkum mayilATutuRaiyE.

**பொருள்:** சிவபிரான் உமையம்மையை ஒரு பாகமாக விரும்பி ஏற்று வீற்றிருந்து அருள் புரிபவன். அவனுடைய ஊர் திருமயிலாடுதுறை என்னும் தலமாகும். அத்தலத்தில் உள்ள சிவபிரானை முப்புரி நூல் துவளும் அந்தணர்கள் கூடி வணங்குகிறார்கள்.

**குறிப்புரை:** இது மயிலம்மையை ஒருபாகங்கொண்டு அருள் செய்த ஊர் என்கின்றது. அணங்கு – மயிலம்மை. இணங்கி – பொருந்தி. நுணங்கும் – துவளும். புரிநூலவர்கள் – முப்புரி நூலை உடைய அந்தணர்கள்.

Lord Civan with love and affection has His consort Umaa Devi on the left portion of His body. He is enshrined in Mayil-aaduthurai and graces His devotees. Vedic scholars (Anthanar - *அந்தணர்கள்*) gather at the temple in Mayil-aaduthurai and pay obeisance to Him.

சிரங்கை யினிலேந் தியிரந்த
பரங்கொள் பரமேட் டிவரையால்
அரங்கவ் வரக்கன் வலிசெற்ற
வரங்கொள் மயிலா டுதுறையே. 8

***சிரம் கையினில் ஏந்தி இரந்த***
***பரம் கொள் பரமேட்டி, வரையால்***
***அரங்க(வ்) அரக்கன் வலி செற்ற, -***
***வரம் கொள் - மயிலாடுதுறையே.***

ciram katiyin2il Enti iranta
param koL paramETTi, varaiyAl
aragka(v) arakkan2 vali ceRRa,--
varam koL--mayilATutuRaiyE.

**பொருள்:** சிவபிரான், பிரம கபாலத்தைக் கையில ஏந்திப் பலர் இல்லங்களுக்கும் சென்று இரந்த மேன்மையைக் கொண்டவன். கயிலைமலையால் இராவணனை நெரியுமாறு அடர்த்த நன்மையாளன் சிவபிரான். அப்பெருமானை அடியவர்கள் வணங்கி நன்மைகளைப் பெறும் தலம் திருமயிலாடுதுறை.

**குறிப்புரை:** இது பிரம கபாலத்தைத் தாங்கி இரந்த பரமேட்டியின் இடம் என்கின்றது. பரம் கொள் பரமேட்டி – மேன்மையைக் கொண்ட சிவன். வரையால் அரங்க – கைலையால் நசுங்க.

Lord Civan crushed Raavanan's ten heads and shoulders under mount Kailas and quelled his might. Devotees worship this Lord Civan in Mayil-aaduthurai and get boons from Him (Lord Civan holding the skull of Brahmaa as His begging bowl goes to many houses and collects alms given by the householders. He is such a One).

ஞாலத் தைநுகர்ந் தவன்தானும்
கோலத் தயனும் மறியாத
சீலத் தவனூர் சிலர்கூடி
மாலைத் தீர்மயிலா டுதுறையே. 9

ஞாலத்தை நுகர்ந்தவன் தானும்,
கோலத்து அயனும், அறியாத
சீலத்தவன் ஊர் - சிலர் கூடி
மாலைத் தீர் மயிலாடுதுறையே.

njAlattai nukarntavan2 tAn2um,
kOlattu ayan2um, aRiyAta
cIlattavan2 Ur--cilar kUTi
mAlait tIr mayilATutuRaiyE.

**பொருள்:** சிவபிரான், உலகை விழுங்கித் தன்னுடைய வயிற்றகத்தே வைத்த திருமாலும், அழகிய நான்முகனும் அறிய இயலாத தூயவனாவார். அவர் விரும்பி உறையும் ஊர் திருமயிலாடுதுறை ஆகும். அத்தலம் அடியவர்கள் ஒருங்குகூடி வழிபட்டுத் தம் அறியாமை நீங்கப்பெற்ற சிறப்புடையதாகும்.

**குறிப்புரை:** இது அயனும் மாலும் அறியாதவனூர் என்கின்றது. ஞாலத்தை நுகர்ந்தவன் – பூமியைவிழுங்கித் தன் வயிற்றகத்து அடக்கிய மாயன். சீலம் – எளிமை. மால் – மயக்கம்.

Lord Civan was unknowable to Thirumaal who swallowed the earth and kept it in His stomach and to the four headed Brahma of impressive bearing. His place of manifestation is the sacred Mayil-aaduthurai where devotees gather, offer worship and get their ignorance removed.

நின்றுண் சமணும் நெடுந்தேரர்
ஒன்றும் மறியா மையுயர்ந்த
வென்றி யருளா னவனூராம்
மன்றன் மயிலா டுதுறையே. 10

*நின்று உண் சமணும், நெடுந் தேரர்*
*ஒன்றும் அறியாமை உயர்ந்த*
*வென்றி அருள் ஆனவன் ஊர் ஆம் -*
*மன்றல் மயிலாடுதுறையே.*

nin2Ru uN camaNum, neTun tErar,
on2Ru aRiyAmai uyarnta
ven2Ri aruL An2avan2 Ur Am--
man2Ral mayilATutuRaiyE.

**பொருள்:** நின்று உண்பவர்களாகிய சமணர்களும், நெடிது உயர்ந்த பௌத்தர்களும் சிவபிரானை ஒரு சிறிதும் அறியாதவர்களாய் ஒழிந்தார்கள். சிவபிரான், உயர்ந்த வெற்றி மற்றும் அருள் ஆகியவைகளைக் கொண்டுள்ளவன். அப்பிரானுடைய ஊர், நறுமணம் கமழும் திருமயிலாடுதுறை ஆகும்.

**குறிப்புரை:** புறச்சமயத்தார்க்கு அறியொண்ணாதபடி உயர்ந்தோனிடம் இது என்கின்றது. வென்றி அருளான் – வெற்றியை விளைவிக்கும் அருளையுடையவன். மன்றல் – நறுமணம்.

The Samanars who take food in the standing posture as well as the tall Buddhists, live meaninglessly, knowing nothing about the greatness of Lord Civan. However, Lord Civan who is the personification of lofty and triumphant grace, manifests Himself in a place where fragrant air fills the town, which is Mayil-aaduthurai.

நயர்காழியுள் ஞான சம்பந்தன்
மயல்தீர் மயிலாடு துறைமேல்
செயலா லுரைசெய்தன பத்தும்
உயர்வாமி வையுற் றுணர்வார்க்கே. 11

நயர் காழியுள் ஞானசம்பந்தன்
மயல் தீர் மயிலாடுதுறைமேல்
செயலால் உரை செய்தனபத்தும்
உயர்வு ஆம், இவை உற்று உணர்வார்க்கே.

nayar kAziyuL njAn2acampantan2
mayar tIr mayilATutuRaimEl
ceyalAl urai ceytan2a pattum
uyarvu Am, ivai uRRu uNarvArkkE.

**பொருள்:** ஞானத்தினால் மேம்பட்டவர்கள் வாழும் சீகாழிப்பதியில் வாழ்பவர் திருஞான சம்பந்தர். மயிலாடுதுறையில் எழுந்தருளியுள்ள சிவபெருமான், தன்னை வழிபடுபவரின் மயக்கத்தைத் தீர்த்தருளுபவன். அப்பெருமானைப் பற்றித் திருவருள் உணர்த்தும் செயலால் ஞானசம்பந்தர் உரைத்தனவாகிய இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தும் உற்று உணர்வார்க்கு உயர்வைத் தரும்.

**குறிப்புரை:** இவைபத்தும் உணர்வார்க்கு உயர்வாம் என்கின்றது. நயர் காழி – நயம் உணர்ந்த பெரியோர்கள் உறைகின்ற காழி. மயல் – மயக்கம். செயலால் – திருவருள் உண்ணின்று செய்தலால்.

Gnaanasambandan hails from Sree Kaazhi where scholars of spiritual knowledge reside. Gnaanasambandan has sung this hymn of ten verses on Lord Civan of Mayil-aaduthurai who annuls the bewilderment of His devotees. Those who cultivate and comprehend the significance of these ten verses which propagate His grace will become praiseworthy people.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*38ஆம் பதிகம் முற்றிற்று*
End of 38th Hymn

உ
சிவமயம்

# 39. திருவேட்களம்

## திருத்தலவரலாறு:

திருவேட்களம் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். சிதம்பரத்துக்கு கிழக்கே 2 கி.மீ. தூரத்தில் உள்ளது. அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தின் கீழ்பால் உள்ளது, சிதம்பரத்தில் இருந்து பேருந்து வசதி உள்ளது. இத்தலம் மூங்கில்வனம் எனவும் கூறப்பெறும். அர்ச்சுனனுக்குப் பாசுபதம் கொடுத்த தலம். பாசுபதாஸ்திரம் ஏந்திய இறைவன் திருவுருவமும், அர்ச்சுனன் தவநிலையைக் காட்டும் திருவுருவமும் இருக்கின்றன. இறைவன் வேடனாக வந்து அர்ச்சுனனுக்கு அருள் வழங்கினார் என்பது வரலாறு. இதனை 'வேடனார் உறை வேட்களம்' என்ற அப்பர் வாக்கும் நன்கு விளங்கும். இறைவன் பெயர் பாசுபதேசுவரர். இறைவி பெயர் நல்ல நாயகி. கோயிலுக்கு எதிரில் தீர்த்தம் உண்டு. புதிய திருப்பணி. திருஞான சம்பந்த சுவாமிகள் சிதம்பரத்தில் இருப்பதற்கு அஞ்சி, இத்தலத்திலேயே தங்கிச் சிதம்பரத்தைத் தரிசித்தார் என்பது பெரிய புராண வரலாறு (பாடல் 165 திருஞானசம்பந்தர் புராணம்).

*பெரியபுராணம் பாடல் 2063 காண்க. சிதாகாசம், இதயக்கமலம் எனச் சிதம்பரம் போற்றப்படுவதால் 'அவண் இரவில்' தங்குதல் தகாது எனக் கொண்டு 'அவண் அல்கும் திறன்' அஞ்சினார் எனக் கொள்க* – C.K.S. பெரியபுராண உரை.

## கல்வெட்டு:

சகம் 1488இல் (கி.பி. 1556) சிதம்பரேசுவர சிவகாமி கோயிலுக்குத் திருவேட்களங் கிராமத்தை அச்சுதப்ப நாயக்கர் அளித்த வரலாறு அறியப்படுகிறது.

## பதிக வரலாறு:

திருஞானசம்பந்த சுவாமிகள் ஆனந்தக் கூத்தப் பெருமான் எழுந்தருளியிருக்கின்ற கனகசபையைத் தொழுது, வெளியே போகின்றவர்கள், திருமுன்னிலையையும், திருவாயிலையும் அடியாருடன் வணங்கித், திருவீதிகளையும் தொழுது தலத்தின் பெருமை நோக்கி அங்கே இராத்தங்க அஞ்சுவார்களாகத் திருவேட்களத்தை அடைந்தார்கள். அங்கே பாசுபத நாதரைக் கைதொழுது 'அந்தமும் ஆதியுமாகிய' என்னும் இந்தச் சொற்பதிகத்தை அருளிச் செய்து, அத்தலத்தையே தங்குமிடமாகக் கொண்டு தில்லையைத் தரிசித்து வருவாராயினர்.

## 39. THIRU-VETKALAM

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-vetkalam is to the north of the river Cauvery in Chola Naadu, and is situated 2 km east of Chidhambaram. It can be reached by bus from Chidhambaram. The temple is also known as Moongkilvanam. The name of the God at this shrine is Paasupathesuvarar, and that of the Goddess is Nallanaayaki. Archchunan performed thavam here and the Lord came in the guise of a hunter to bestow His grace on him and gave him the Paasupathaasthiram. Sage Appar sings of this as 'vedanaar urai vetkalam'. Images of Archchunan as a hermit and the Lord carrying the Paasupathaasthiram can be seen. Afraid of staying in Chidhambaram, Sage Thiru-Gnaanasambandar is said to have stayed here and had the vision of Chidhambaram. The sage avoided night halt at Chidambaram with due deference to the unique status of this shrine which is hailed as Chithaahaasam.

An inscription here reveals the gift of the village (Thiruvetkalam) to the temple by Achchuthappa Naayakkar in 1556 CE.

### INTRODUCTION TO THE HYMN

Having adored the Lord of Thillai, afraid to stay there at night, the child-saint proceeded to Thiru-vetkalam. The following hymn was sung in this holy place.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 39. திருவேட்களம்

## 39. THIRU-VETKALAM

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

அந்தமுமாதியு மாகியவண்ணல் ஆரழலங்கை யமர்ந்திலங்க
மந்தமுழவ மியம்ப மலைமகள் காணநின்றாடிச்
சந்தமிலங்கு நகுதலைகங்கை தண்மதியம் மயலேததும்ப
வெந்தவெண் ணீறுமெய்பூசும் வேட்கள நன்னகராரே. 1

அந்தமும் ஆதியும் ஆகிய அண்ணல் - ஆர் அழல் அங்கை அமர்ந்து இலங்க;
மந்த முழவம் இயம்ப; மலைமகள் காண, நின்று ஆடி;
சந்தம் இலங்கு நகுதலை, கங்கை, தண்மதியம், அயலே ததும்ப;
வெந்த வெண்நீறு மெய் பூசும் - வேட்கள நன்நகராரே.

antamum Atiyum Akiya aNNal--Ar azal agkai amarntu ilagka;
manta muzavam iyampa; malaimakaL kANa, nin2Ru ATi;
cantam ilagku nakutalai, kagkai, taNmatiyam, ayalE tatumpa;
venta veN nIRu mey pUcum--vETkaLa nan2 nakarArE.

**பொருள்:** சிவபிரான், உலகங்களைப் படைப்பவரும், இறுதி செய்பவருமாகிய தலைமைத் தன்மை உடையவர். பிறரால் பொறுத்தற்கரிய தீ அவர் கையின்கண் விளங்குகிறது. மலைமகளாகிய பார்வதிதேவி காணுமாறு, மெல்லென ஒலிக்கும் முழவம் இயம்பத் திருநடம் புரிகிறார். அழகு விளங்கும் கபால மாலை, கங்கை, குளிர்ந்த பிறை ஆகியன அவருடைய தலையில் விளங்குகின்றன. அவர் வெந்த வெண்ணீற்றைத் தம் மெய்யில் பூசியுள்ளார். இத்தகைய பெருமான் திருவேட்கள நன்னகரில் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** அழல் அங்கையில் தயங்க, கங்கையும் கபாலமும் மதியமும் விளங்க, மலைமகள் காண நின்றாடுபவர் வேட்களநாதர் என்கின்றது. அந்தமும் ஆதியும் ஆகிய அண்ணல் – காணப்பட்ட பிரபஞ்சத்திற்கெல்லாம் இறுதி செய்பவனும், முதலாய் நின்று படைப்பவனும் ஆகிய பெருமையிற் சிறந்தவன். 'அந்தம் ஆதி' சிவஞான போதம், ஆரழல் – பிறரால் பொறுத்தற்கரிய தீ, மந்த முழவம் – மந்த ஸ்தாயியில் அடிக்கப் பெறுகின்ற மத்தளம். மலைமகள் – உமாதேவி. இறைவனது ஆனந்தத் தாண்டவத்தை மலைமகள் கண்டு ஆன்மாக்களின் பக்குவத்திற்கு ஏற்பப் பயன் கொள்ளச் செய்கின்றாள் ஆதலின் உமை காண நின்றாடி என்றார். நகரார் ஆகிய அண்ணல், இலங்க, இயம்ப, ஆடி, ததும்ப, பூசும் என முடிக்க.

**குருவருள்:** 'வேட்கள நன்னகராரே' என்பதற்கு ஏற்ப அவ்வருள் வாக்கின்படி இன்று இத்தலம் பல்கலைக்கழகத்துடன் அண்ணாமலை நகராக விளங்குவது காண்க.

Lord Civan is the creator and dissolver of all the worlds. As the Supreme Being He holds in one of His hands the fierce fire which no one can dare to handle. He dances to be seen by His consort Paarvathi devi, the mountain child. He wears in His matted ruddy hair a garland made out of skulls, the river Ganges and the cool crescent moon. This Lord Civan abides in the sacred Thiru-vetkalam.

**Note:** The Lord is 'Antam-Aadi' according to St. Meykandaar. Civa is the ultimate Resolver of the cosmos. It is He who re-evolves it into being.

சடைதனைத்தாழ்தலு மேறமுடித்துச் சங்கவெண்தோடு சரிந்திலங்கப்
புடைதனிற் பாரிடஞ்சூழப் போதருமா றிவர்போல்வார்
உடைதனில் நால்விரற் கோவணவாடை யுண்பதுமூரிடு பிச்சைவெள்ளை
விடைதனை யூர்திநயந்தார் வேட்கள நன்னகராரே. 2

*சடைதனைத் தாழ்தலும் ஏற முடித்து, சங்கவெண்தோடு சரிந்து இலங்கப்,*
*புடைதனில் பாரிடம் சூழ, போதரும் ஆறு இவர் போல்வார் -*
*உடைதனில் நால்விரல் கோவணஆடை, உண்பதும் ஊர் இடு பிச்சை, வெள்ளை-*
*விடைதனை ஊர்தி நயந்தார் - வேட்கள நன்நகராரே.*

caTaitan2ait tAztalum ERa muTittu, cagka veNtOTu carintu ilagka,
pAriTam cUza, pOtarum ARu ivar pOlvAr--
uTaitan2il nAlviral kOvaNa ATai, uNpatum Ur iTu piccai, veLLai--
viTai tan2ai Urti nayantAr--vETkaLa nan2 nakarArE.

**பொருள்:** திருவேட்கள நன்னகரில் எழுந்தருளியுள்ள இறைவனாகிய சிவபிரான், தாழ்ந்து தொங்கும் சடைமுடியை எடுத்துக் கட்டியுள்ளார். சங்கால் இயன்ற வெள்ளிய தோடு காதில் சரிந்து விளங்குகிறது. அவர், அருகில் பூதங்கள் சூழ்ந்து வரப் போதருகின்றார். அவருடைய உடையோ, நால்விரல் அகலம் உடைய கோவண ஆடையாகும். அவர் உண்பதோ ஊரார் இடும் பிச்சையாகும். அவர் விரும்பி ஏறும் ஊர்தியோ வெண்ணிறமுடைய விடையாகும்.

**குறிப்புரை:** இறைவன் சடைமுடித்து, சங்க குண்டலந்தாழ, பூதந்தாழப் போதருவர்; அவருக்கு உடை கோவணம்; உண்பது பிச்சை; ஊர்தி இடபம் என்கின்றது. ஏறமுடித்து – எடுத்துக்கட்டி, சரிந்து – தாழ்ந்து. பாரிடம் – பூதம். போல்வார் – ஒப்பில் போலி. ஊர்தி – வாகனம். கோவணம் நால்விரல் அகல முடையதாயிருத்தல் வேண்டும் என்பது மரபு ஆதலின் நால் விரல் கோவணம் என்றார்.

Lord Civan of the sacred Thiru-vetkalam has nicely bound His hanging matted hair to form a crown over His head. He wears ear-ring made of white chank which shines and dangles below His ear. He goes about surrounded by Bhuta warriors all around Him. His dress is only a loin cloth which is only four inches wide. His food is the alms He gets from the householders. He loves to ride on His bull mount.

பூதமும்பல்கண மும்புடைசூழப் பூமியும்விண்ணு முடன்பொருந்தச்
சீதமும்வெம்மையு மாகிச்சீரொடுநின் றவெஞ்செல்வர்
ஓதமுங்கானலுஞ் சூழ்தருவேலை உள்ளங்கலந்திசை யாலெழுந்த
வேதமும் வேள்வியு மோவாவேட்களை நன்னகராரே. 3

பூதமும் பல்கணமும் புடை சூழப், பூமியும் விண்ணும் உடன்பொருந்தச்,
சீதமும் வெம்மையும் ஆகி, சீரொடு நின்ற எம் செல்வர் -
ஓதமும் கானலும் சூழ்தரு வேலை, உள்ளம் கலந்து இசையால் எழுந்த
வேதமும் வேள்வியும் ஓவா - வேட்களை நன்நகராரே.

pUtamum pal kaNamum puTai cUza, pUmiyum viNNum uTan2 porunta,
cItamum vemmaiyum Aki, cIroTu nin2Ra em celvar--
Otamum kAn2alum cUztaru vElai, uLLam kalantu icaiyAl ezunta
vEtamum vELviyum OvA, vETkaLa nan2 nakarArE.

***பொருள்:*** திருவேட்களை நன்னகர், கடல்நீர்ப் பெருக்கும் சோலையும் சூழ்ந்தது. அந்தணர்கள் மனம் கலந்து பாடும் இசையால் எழுந்த வேத ஒலியும், அவர்கள் இயற்றும் வேள்விகளும் அந்த நகரில் இடையறாது நிகழும் இயல்பின. அந்தத் திருவேட்களை நன்னகர் இறைவனான சிவபிரான், பூதங்களும் சிவகணங்களும் அருகில் சூழ விளங்குகின்றார். விண்ணும் மண்ணும் அவர்பால் பொருந்தத் தண்மையும் வெம்மையும் ஆகி, அந்தப் பெருமான் புகழோடு விளங்கும் எம்முடைய செல்வராவார்.

***குறிப்புரை:*** இது விண்ணும் மண்ணும் கலந்து தட்பமும் வெப்பமுமாகிப் புகழோடு நின்ற செல்வர் வேட்களை நன்னகரார் என்று அறிவிக்கின்றது. உடன்பொருந்த – எங்குமாயிருக்க. உள்ளங்கலந்து இசையால் எழுந்த வேதம் – மனத்தில் நின்று ஊதி இசையோடு எழுந்த வேதம். ஓவா – இடையறாத.

Civan of the sacred Thiru-vetkalam is our resplendent Lord. He is the earth; He is the sky; He is coolness; He is heat. Closely surrounded by Bhutas and Civaganas (*பூதங்களும் சிவகணங்களும் புடைசூழ*), He is gloriously entempled in this place. The town flourishes with pools and lush gardens close to the sea. Holy sacrifices and the chanting of the Vedas in soulful music will never cease in this town.



திருக்கற்குடி – உய்யக்கொண்டான் மலை – ஸ்ரீ உச்சிநாதர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Ucchinathar Temple - Karkudi, Tamil Nadu.**

திருப்பாச்சிலாச்சிராமம் (திருவாசி) – மாற்றறிவரதர் – சோழநாட்டு வடகரைத் தலம்
**Sri Matrarivarathar Temple - Thiruppaachilaacchiraamam (Tiruvasi) Tamil Nadu**

அரைபுல்குமைந்தலை யாடலரவ மமையவெண்கோவணத் தோடசைத்து
வரைபுல்குமார்பி லொராமை வாங்கியணிந் தவர்தாந்
திரைபுல்குதெண்கடல் தண்கழியோதந் தேனலகானலில் வண்டுபண்செய்ய
விரைபுல்குபைம்பொழில் சூழ்ந்த வேட்கள நன்னகராரே. 4

அரை புல்கும் ஐந்தலை ஆடல் அரவம் அமைய வெண்கோவணத்தோடு அசைத்து,
வரை புல்கு மார்பில் ஓர் ஆமை வாங்கி அணிந்தவர் தாம் -
திரை புல்கு தெண்கடல் தண்கழி ஓதம் தேன் நல் கானலில் வண்டு பண்செய்ய,
விரை புல்கு பைம்பொழில் சூழ்ந்த வேட்கள நன்நகராரே.

arai pulkum aintalai ATal aravam amaiya veN kOvaNattOTu acaittu,
varai pulku mArpil or Amai vAgki aNintavar tAm--
tirai pulku teN kaTal taN kazi Otam tEn2 nal am kAn2alil vaNTu paNceyya,
virai pulku paimpozil cUznta vETkaLa nan2 nakarArE.

**பொருள்:** சிவபிரான், இடையில் பொருந்தியதும், ஐந்து தலைகளை உடையதுமான ஆடும் பாம்பை, வெண்மையான கோவணத்தோடும் பொருந்தக் கட்டியுள்ளார். அவர், மலை போன்று அகன்ற மார்பின்கண் ஒப்பற்ற ஆமை ஓட்டை விரும்பி அணிந்தவராய் விளங்குகிறார். திருவேட்கள நன்னகர் அலைகளை உடைய தெளிந்த கடல்நீர் பெருகிவரும் உப்பங்கழிகளை உடையது. அது, வண்டுகள் இசைபாடும் தேன்பொருந்திய கடற்கரைச் சோலைகளை உடையது. மேலும் அது, மணம் கமழும் பைம்பொழில்கள் சூழ்ந்தது. சிவபிரான், இவ்வளவு சிறப்புக்கள் பொருந்திய திருவேட்கள நன்னகரில் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** அரைபுல்கும் – அரையைத் தழுவிய. அசைத்து – இறுக உடுத்து. வரைபுல்கு – மலையையொத்த. ஆமை – ஆதி கூர்மம். ஓதம் – பைம்பொழில் சூழ்ந்த வேட்களம் என்க. என்றது நெய்தலோடு தழுவிய நகர் என அறிவித்தவாறு.

Lord Civan wears a white loincloth on His waist and it is tightened with a five-headed snake. He loves to wear on His mountain like broad chest the rare tortoise shell. He is enshrined in Thiru-vetkalam. In this town the clear waters of the sea where roaring waves dash against the shores - flow into the saltpans. In the seaside gardens honey drips from flowers towards which the bees fly creating a musical sound. This town is surrounded by lush groups where fragrance fills the air.

பண்ணுறுவண்டறை கொன்றையலங்கல் பால்புரைநீறுவெண் நூல்கிடந்த
பெண்ணுறுமார்பினர் பேணார் மும்மதிலெய்த பெருமான்
கண்ணுறுநெற்றி கலந்தவெண்டிங்கட் கண்ணியர்விண்ணவர் கைதொழுதேத்தும்
வெண்ணிறமால்விடை யண்ணல் வேட்கள நன்னகராரே. 5

*பண் உறு வண்டு அறை கொன்றை அலங்கல், பால் புரை நீறு, வெண் நூல், கிடந்த*
*பெண் உறு மார்பினர்; பேணார் மும்மதில் எய்த பெருமான்;*
*கண் உறு நெற்றி கலந்த வெண் திங்கள் கண்ணியர்; விண்ணவர் கைதொழுது ஏத்தும்*
*வெண் நிற மால்விடை அண்ணல் - வேட்கள நன் நகராரே.*

paN uRu vaNTu aRai kon2Rai alagkal, pAl purai nIRu, veNnUl, kiTanta
peN uRu mArpin2ar; pENAr mummatil eyta perumAn2;
kaN uRu neRRi kalanta veN tigkaL kaNNiyar; viNNavar kaitozutu Ettum
veN niRa mAlviTai aNNal--vETkaLa nan2 nakarArE.

**பொருள்:** திருவேட்கள நன்னகருடைய இறைவனான சிவபிரான், இசைபாடும் வண்டுகள் சூழ்ந்த கொன்றை மாலையை அணிந்தவர். அவர், பால் போன்ற வெண்ணீறு பூசியவர். முப்புரிநூலும் உமையம்மையையும் பொருந்திய மார்பினர். அவர், பகைவர்களாகிய அசுரர்களின் மும்மதில்களையும் எய்து அழித்த தலைவர். அவர் நெற்றிக் கண்ணராகவும், பிறைமதிக் கண்ணியராகவும், விண்ணவர் கைதொழுது ஏத்தும் வெண்மையான பெரிய விடைமீது ஊர்ந்து வருபவராயும் விளங்கும் தலைவர் ஆவார்.

**குறிப்புரை:** இது கொன்றைமாலை, பூணூல் இவற்றையணிந்து உமை ஒரு பாதியராகத் திரிபுரமெரித்த பெருமான் இவர் என்கின்றது. பண் உறு வண்டு – இசையை எழுப்புகின்ற வண்டுகள். அறை – ஒலிக்கின்ற. அலங்கல் – மாலை. கண்ணுறு நெற்றி – அக்கினிக்கண் பொருந்திய நெற்றி. வெண்திங்கள் கண்ணியர் – பிறையைத் தலை மாலையாய் அணிந்தவர். பிறையைக் கண்ணியாகச் சூடுதல் மரபு. 'மாதர்ப் பிறைக்கண்ணியானை' என்பதை நோக்குக. மால்விடை – பெரிய இடபம்.

Lord Civan of the sacred Thiru-vetkalam city wears on His matted hair, the garland made of cassia flowers (*கொன்றைப்பூ*) around which bees fly, raising a musical note. He smears on His body the milk-white holy ashes. He wears the sacred thread on His chest where His consort Umaa Devi also abides. He is the Lord who destroyed with His bow the three citadels of the hostile Asuras. He has a fierce third eye on His forehead. He holds as garland a white crescent moon in His matted hair. The Devas

worship Him with folded hands. He is the Supreme Lord who rides on the big white bull and moves about.

கறிவளர்குன்ற மெடுத்தவன்காதற் கண்கவரைங்கணை யோனுடலம்
பொறிவள ராரழலுண்ணப் பொங்கிய பூதபுராணர்
மறிவளரங்கையர் மங்கையொர்பங்கர் மைஞ்ஞிறமானுரி தோலுடையாடை
வெறிவளர் கொன்றையந் தாரார் வேட்கள நன்னகராரே. 6

*கறி வளர் குன்றம் எடுத்தவன் காதல் கண் கவர் ஐங்கணையோன் உடலம்*
*பொறி வளர் ஆர் அழல் உண்ணப் பொங்கிய பூதபுராணர்,*
*மறி வளர் அம்கையர், மங்கை ஓர்பங்கர், மைஞ்ஞிறமான் உரி-தோல்உடை ஆடை*
*வெறி வளர் கொன்றைஅம்தாரார் - வேட்கள நன்நகராரே.*

kaRi vaLar kun2Ram eTuttavan2 kAtal kaN kavar aigkaNaiyOn2 uTalam
poRi vaLar Ar azal uNNap pogkiya pUtapurANar,
maRi vaLar am kaiyar, magkai or pagkar, mainjnjiRamAn2 uri--tOl uTai ATai
veRi vaLar kon2Rai amtArAr--vETkaLa nan2nakarArE.

**பொருள்:** திருவேட்கள நன்னகருடைய இறைவரான சிவபிரான் மரன் ஏந்திய கரத்தினர். மங்கை பங்கர். கருநிறமுடைய யானையின் தோலை உரித்து ஆடையாகப் போர்த்தவர். மணம் கமழும் கொன்றை மாலையை அணிந்தவர். இவ்வகைப்பட்ட சிவபிரான், மிளகுக் கொடிகள் வளர்ந்து செறிந்த கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்த திருமாலுடைய அன்பு மகனும், அழகு மிக்கவனும், ஐங்கணைகளை உடையவனுமாகிய மன்மதனுடைய உடல் பொறி பரக்கும் அரிய அழல் உண்ணும்படி சினந்த பழையோர் ஆவார்.

**குறிப்புரை:** இது மன்மதனை எரித்த மங்கைபங்கர் திருத்தலம் இவ்வூர் என்கின்றது. கறி – மிளகு. குன்றம் என்றது கோவர்த்தனம். எடுத்தவன் – கண்ணன். காதல் கண்கவர் ஐங்கணையோன் – மகனாகிய பேரழகனாகிய மன்மதன். ஆர் அழல் உண்ண – தீப்பற்றி எரிய. பொங்கிய – கோபித்த. மறி – மான். வெறி – மணம்.

Thirumaal holds the mountain known as 'Kovardan' (*கோவர்த்தன கிரி*) as an umbrella. On this mountain, pepper vines grow lavishly. His loving son Manmathan (*திருமாலின் மனதில் பிறந்தவன் - மன்மதன்*) is a very handsome person. He holds in His hand a bow and five flowered arrows (Aravindam - *அரவிந்தம்,* Ashokam - *அசோகம்,* Mango flower - *மாம்பூ,* Mullai - *முல்லை,* and Neelam - *நீலம். இந்த ஐந்து பூக்களை அம்புகளாகக் கொண்டவர்*). Lord Civa burnt Manmathan with a fierce fire from His third

eye. He holds in one of His hands the doe (பெண்மான்). He holds His consort on one side of His body. He stripped the skin of the black coloured elephant and used it as a cloth to cover His body. He is the One who wears the fragrant cassia flower garland.

**Note:** Bhuta Puranar: The Primal Lord of all living beings, i.e., Civa.

மண்பொடிக் கொண்டெரித் தோர்சுடலை மாமலைவேந்தன் மகள்மகிழ
நுண்பொடிச்சேர நின்றாடி நொய்யன செய்யலுகந்தார்
கண்பொடிவெண்டலை யோடுகையேந்திக் காலனைக்காலாற் கடிந்துகந்தார்
வெண்பொடிச் சேர்திருமார்பர் வேட்கள நன்னகராரே. 7

மண் பொடிக்கொண்டு எரித்து ஓர் சுடலை, மாமலைவேந்தன்மகள் மகிழ,
நுண்பொடிச் சேர நின்று ஆடி, நொய்யன செய்யல் உகந்தார்,
கண் பொடி வெண்தலைஓடு கை ஏந்திக் காலனைக் காலால் கடிந்து உகந்தார்,
வெண்பொடிச் சேர் திருமார்பர் - வேட்கள நன்நகராரே.

maN poTikkoNTu erittu Or cuTalai, mAmalai vEntan2 makaL makiza,
nuN poTic cEra nin2Ru ATi, noyyan2a ceyyal ukantAr,
kaN poTi veN talai OTu kai Entik kAlan2aik kAlAl kaTintu ukantAr,
veN poTic cEr tirumArpar--vETkaLa nan2nakarArE.

***பொருள்:*** திருவேட்கள நன்னகரின் இறைவரான சிவபிரான்,. மண்ணும் பொடியாகுமாறு உலகை அழித்தார். அவர் ஒப்பற்ற அந்தச் சுடலையில் சிறப்புத் தன்மையை உடைய இமவான் மகளாகிய பார்வதி தேவி கண்டு மகிழ, சுடலையின் நுண் பொடிகள் தம் உடலில் படிய நின்று ஆடினார். அந்தத் திருக்கூத்து வாயிலாக நுட்பமான பஞ்ச கிருத்தியங்கள் செய்ய அவர் உகந்தார். அந்தச் சிவபிரான், கண் பொடிந்து போன வெள்ளிய தலையோட்டினைக் கையில் ஏந்தியவர். காலனைக் காலால் கடிந்து உகந்தவர். வெள்ளிய திருநீறு சேர்ந்த அழகிய மார்பினர் ஆவார்.

***குறிப்புரை:*** உலகத்தைச் சங்கரித்த சுடலையில் மலைமகள் மகிழ ஆடி நுட்பமான செயலைச் செய்பவர் இந்நகரார் என்கின்றது. பொடிக்கொண்டு – பொடித்தன்மையைக் கொள்ள. நுண்பொடிச் சேர – துகள் திருமேனியில் பொருந்த. நொய்யன செய்யல் உகந்தார் – மிகவும் நுட்பமான பஞ்சகிருத்தியங்களைச் செய்யத் திருவுளம் பற்றினார். செய்தார் என்னாது செய்யல் உகந்தார் என்பதில் சிறப்பிருத்தல் நோக்குக. செய்தல் பிரமனாதியர் தொழில். கண்பொடி வெண்தலை – கண் பொடிந்து போனதலை. பொடிதல் – இல்லையாதல்.

At the close of an aeon (Yugantam in Sanskrit) the entire universe is dissolved and the elements merge into one another, and lastly everything merges into Sakthi, and Sakthi merges with Civan. Civan alone will be in existence in the Universe. In that rare scenario, Lord Civan performs His widely acclaimed Pancha Kritya Dance (பஞ்சகிருத்திய நடனம்), symbolising His fivefold activities - Creation, Sustenance, Dissolution, Abstraction or Involution and Benediction. This dance was enjoyed with great joy by Goddess Paarvathi, daughter of the king of the mighty Himalayas. During this dance, fine white ashes from the burning ghat rise and settle down on Lord Civan's body. By gladly performing this dance, He portrays the three different activities to be performed by the respective demigods (Brahmaa, Vishnu, Rudran) under His overall command. The Supreme Lord Civan commanding the three demigods, holds in one hand, a white skull in which the eyes had been destroyed. He kicked down Yamaa the very god of death, to death. His auspicious chest is smeared over with white holy ashes (திருமார்பு).

**Note:** In the dance pose of Lord Civa (Nataraja Form) we notice His physical frame signifying the five fold acts. The drum in His right hand symbolises creation; sustenance is indicated by the other right hand; fire in the left hand signifies dissolution; right foot abstraction and the left foot shows benediction or the haven of refuge as pointed out by the other left hand. Thus the order of the five fold activities is implicit in the dance pose of Lord Civa.

"நொய்யன செய்யல் உகந்தார்" this verse, has a special significance. 'நொய்யன' refers in a subtle way to the five fold activities. For details, one can refer to சிவஞானபோதம், 6ஆம் சூத்திரம், 2ஆம் அதிகரணம் (சூட்சும ஐந்தொழில்). The five fold activities in themselves are subtle. This takes place between the Samharam and the Re-creation of the Universe. 'உகந்தார்' implies that the wish of the Lord is being carried out by His agents (Brahmaa, Vishnu and Rudran). தூலபஞ்சகிருத்தியம், the gross five fold activities (Creation, Sustenance, Dissolution, Abstraction or Involution and Benediction), go on endlessly, as indicated by the dancing posture of Lord Civa.

ஆழ்தருமால்கட னஞ்சினையுண்டா ரமுதமமரர்க் கருளிச்
சூழ்தருபாம்பரை யார்த்துச் சூலமோடொண் மழுவேந்தித்
தாழ்தருபுன்சடை யொன்றினைவாங்கித் தண்மதியம்மய லேததும்ப
வீழ்தருகங்கை கரந்தார் வேட்கள நன்னகராரே. 8

ஆழ்தரு மால்கடல் நஞ்சினை உண்டு ஆர்அமுதம் அமரர்க்கு அருளிச்,
சூழ்தரு பாம்பு அரை ஆர்த்துச், சூலமோடு ஒண்மழு ஏந்தித்,
தாழ்தரு புன்சடை ஒன்றினை வாங்கித் தண்மதியம் அயலே ததும்ப
வீழ்தரு கங்கை கரந்தார் - வேட்கள நன்நகராரே.

Az taru mAl kaTal nanjcin2ai uNTu Ar amutam amararkku aruLi,
cUz taru pAmpu arai Arttu, cUlamOTu oNmazu Enti,
tAz taru pun2caTai on2Rin2ai vAgkit taNmatiyam ayalE tatumpa
vIztaru kagkai karantAr--vETkaLa nan2nakarArE.

**பொருள்:** திருவேட்கள நன்னகருடைய இறைவனான சிவபிரான், ஆழமான பெரிய கடலிடத்தில் தோன்றிய அமுதத்தைத் தேவருக்கு அளித்தருளினார். நஞ்சினைத் தாம் உண்டார். அவர், சுற்றிக் கொள்ளும் இயல்பினதாய பாம்பினை இடையில் கட்டிக் கொண்டார். அவர் சூலம், ஒளி பொருந்திய மழு ஆகியவற்றைக் கையில் ஏந்தியவர். உலகையே அழிக்கும் ஆற்றலோடு பெருகி வந்த கங்கை நீரைத் தம்பிறை அயலில் விளங்கத் தலையிலிருந்து தொங்கும் மெல்லிய சடை ஒன்றினை எடுத்து, அதன்கண் சுவறுமாறு செய்தவரும் ஆவார்.

**குறிப்புரை:** நஞ்சினைத் தாம் உண்டு, அமுதத்தைத் தேவர்க்கருளி, பாம்பு, சூலம், மழு இவற்றைத் தரித்துச் சடையில் கங்கையை மறைத்து வைத்தவர் இவர் என்கின்றது. புன்சடை – மெல்லிய சடை. உயிரைக் கொல்லும் விடத்தைத் தான் உண்டு சாவாமையை அளிக்கும் அமுதினைத் தேவர்க்களித்து இவர் பெருங்கருணையைத் தெரிவிக்கிறது.

Lord Civan of the sacred Thiru-vetkalam blessed the Devas by giving them the nectar that came out of the big deep sea while He swallowed the poison, which also came out of the same sea. He binds the creeping snake on to His waist. He holds in His hands the Trident and the battle-axe. The Ganges river which came down from the sky so swiftly as to suggest it might destroy the entire earth was allowed to abide in one of His hair strands, a little apart was the crescent moon which was already there on His matted hair.

Note: Mazhu means (1) a battle-axe and (2) a burning rod.

திருவொளி காணிய பேதுறுகின்ற திசைமுகனுந் திசைமேலளந்த
கருவரையேந்திய மாலுங் கைதொழ நின்றதுமல்லால்
அருவரையொல்க வெடுத்தவரக்க னாடெழிற்றோள்க ளாழத்தழுந்த
வெருவுறவூன்றிய பெம்மான் வேட்கள நன்னகராரே. 9

*திருவொளி காணிய பேதுறுகின்ற திசைமுகனும் திசைமேல் அளந்த*
*கருவரை ஏந்திய மாலும், கைதொழ நின்றதும் அல்லால்,*
*அரு வரை ஒல்க எடுத்த அரக்கன் ஆடு ஏழில்-தோள்கள் ஆழத்து அழுந்த*
*வெருஉற ஊன்றிய பெம்மான் - வேட்கள நன்நகராரே.*

tiru oLi kANiya pEtuRukin2Ra ticaimukan2um, ticai mEl aLanta
karuvarai Entiya mAlum, kaitoza nin2Ratum allAl,
aru varai olka eTutta arakkan2 ATu Ezil--tOLkaL Azattu azunta
veru uRa Un2Riya pemmAn2--vETkaLa nan2nakarArE.

***பொருள்:*** அழகிய பேரொளிப் பிழம்பைக் காணும் பொருட்டு மயங்கிய நான்முகனும், எண் திசைகளையும் அளந்தவனாய்ப் பெரிதான கோவர்த்தன மலையைக் குடையாக ஏந்திய திருமாலும் சிவபிரானுடைய அடிமுடி காண இயலாது கைதொழுது நின்றனர். அத்தகைய திருவேட்கள நன்னகர் உறை இறைவனான சிவபிரான், கயிலை மலை தளருமாறு, அதனை எடுத்த இராவணனுடைய ஆற்றலும், அழகு மிக்க தோள்களும் ஆழத்து அழுந்தவும் அவன் அஞ்சி நடுங்கவும் தம் கால் விரலை ஊன்றிய பெருமான் ஆவார்.

***குறிப்புரை:*** இறைவனுடைய பேர் ஒளித் திருமேனியைக் காண வருந்திய அயனும் மாலும் அறியமுடியாமல் வணங்க நின்றதோடு இராவணனை ஆழத்தழுத்திய பெருமான் இந்நகரார் என அறிவிக்கின்றது. திருவொளி – அழல்தூணின் பேரொளி. திசைமேல் அளந்த – திக்குகள் அனைத்தையுமளந்த. கருவரை – கோவர்த்தனகிரி. அருவரை – கைலைமலை. ஆடு எழில் தோள் – வெற்றியோடு கூடிய எழுச்சிமிக்க தோள்.

**Thirumaal measured the eight directions of the Universe with his two steps. He was holding the mountain 'Goverdhan' (*கோவர்த்தன கிரி*) as his umbrella (vide his incarnations). This Thirumaal and Brahma were unable to see the holy Feet and Head of Lord Civan. They were bewildered and worshipped with folded hands, Lord Civan who was then standing before them as a tall column of fire. When Raavanan, the king of Lanka tried to lift and put aside mount Kailas, it started shaking. Lord Civan then pressed the mountain with His toe. Raavanan's strength vanished; his mighty**

shoulders got crushed under the mountain; he got frightened and trembled. Of such glory is our Lord Civan of Thiru-vetkalam.

அத்தமண்தோய்துவ ராரமண்குண்டர் யாதுமல்லாவுரை யேயுரைத்துப்
பொய்த்தவம் பேசுவதல்லாற் புறனுரையாதொன்றுங் கொள்ளேன்
முத்தனவெண்மு றுவல்லுமையஞ்சமூரி வல்லானையினீருரிபோர்த்த
வித்தகர்வேத முதல்வர் வேட்கள நன்னகராரே. 10

***அத்தம் மண் தோய் துவரார், அமண் குண்டர், ஆதும் அல்லா உரையே உரைத்துப்***
***பொய்த்தவம் பேசுவது அல்லால் புறன் உரை யாதொன்றும் கொள்ளேல்;***
***முத்து அன வெண்மு றுவல்(ல்) உமை அஞ்ச, மூரி-வல்ஆனையின் ஈர்உரி போர்த்த***
***வித்தகர், வேதமுதல்வர் - வேட்கள நன்நகராரே.***

attam maN tOy tuvarAr, amaNkuNTar, Atum allA uraiyE uraittup
poyttavam pEcuvatu allAl puRan2 urai yAton2Rum koLLEl;
muttu an2a veN muRuval(l) umai anjca, mUri--val An2aiyin2 Ir uri pOrtta
vittakar, vEta mutalvar--vETkaLa nan2 nakarArE.

**பொருள்:** சிவந்த நிறமான காவி மண் தோய்ந்த ஆடைகளை அணிந்த பௌத்தர்கள், சமணர் குண்டர்கள் ஆகியோர் பொருளற்ற சொற்களை உரைக்கின்றனர். அவர்கள் பொய்த்தவம் பேசுவதோடு, சைவத்தைப் புறனுரைத்துத் திரிவர். அவர்கள்தம் உரை எதனையும் கொள்ளாதீர். முத்துப் போன்ற வெண்முறுவல் உடைய உமையம்மை அஞ்சுமாறு, வலிய யானையின் தோலை உரித்துப் போர்த்த வித்தகரும், வேத முதல்வருமாகிய திருவேட்கள நன்னகர் இறைவனை வணங்குமின்.

**குறிப்புரை:** இது யானைத்தோல் போர்த்த வித்தகர் இவ்வூரார் என்கின்றது. அத்தம் மண் – செந்நிறமான மண். 'ஆடுநீரன அத்துமண்களும்' சிந்தாமணி, 2418. யாதும் அல்லா உரை – பொருளற்ற உரை. முறுவல் – பல். மூரி – வலிமை.

The Buddhists wearing brown red cloth and the Samanars very low in their character preach meaningless words and about their false penance. They also speak ill about Saivism and indulge in calumny. Ye companions! Do not listen to any of their sermons. Worship Lord Civan of Thiru-vetkalam who is the author of the Vedas. Goddess Umaa, whose teeth are as white as pearls, got freightened 'at the sight' of a mighty elephant. Lord Civan then stripped the elephant of its skin and covered His body with it. He is the Supreme One of Thiru-vetkalam.

விண்ணியன்மாடம் விளங்கொளிவீதி வெண்கொடியெங்கும் விரிந்திலங்க
நண்ணியசீர்வளர் காழிநற்றமிழ் ஞானசம்பந்தன்
பெண்ணினல்லாளொரு பாகமமர்ந்து பேணியவேட்கள மேன்மொழிந்த
பண்ணியல்பாடல் வல்லார்கள் பழியொடு பாவமிலாரே. 11

*விண் இயல் மாடம் விளங்கு ஒளி வீதி வெண்கொடி எங்கும் விரிந்து இலங்க,*
*நண்ணிய சீர் வளர் காழி நல்-தமிழ் ஞானசம்பந்தன்*
*பெண்ணின் நல்லாள் ஒரு பாகம் அமர்ந்து பேணிய வேட்களம் மேல் மொழிந்த*
*பண்இயல் பாடல் வல்லார்கள் பழியொடு பாவம் இலாரே.*

viN iyal mATam viLagku oLi vIti veNkoTi egkum virintu ilagka,
naNNiya cIr vaLar kAzi nal--tamiz njAn2acampantan2
peNNin2 nallAL orupAkam amarntu pENiya vETkaLam mEl mozinta
paN iyal pATal vallArkaL paziyoTu pAvam ilArE.

**பொருள்:** சீர்வளரும் சீகாழிப் பதி விண்ணுற ஓங்கிய மாடவீடுகளையும், வெண்மையான கொடிகள் எங்கும் விரிந்து விளங்குவதும் ஒளி தவழும் வீடுகளையும் உடையது. அந்த ஊரில் தோன்றியவர் நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன். அவர், பெண்ணில் நல்லவளான நல்லநாயகியை ஒருபாகமாக விரும்பி, ஏற்று, எழுந்தருளியுள்ள திருவேட்களத்து இறைவர்மீது பாடியருளிய, பண் பொருந்திய இப்பதிகப் பாடல்களை ஓதவல்லவர் பழிபாவம் இலராவர்.

**குறிப்புரை:** இது திருவேட்களப்பதிகத்தை ஓத வல்லவர்கட்குப் பழி பாவம் இல்லை என்கின்றது. புகழுக்கு அடையாளமாக வெண்கொடி எடுத்தல் மரபு. பெண்ணின் நல்லாள் – இது இத்தலத்து அம்மையின் பெயராகிய நல்ல நாயகி என்பதை நினைவூட்டுகின்றது.

The young-saint Gnaanasambandan is a scholar in chaste Tamil (He calls himself *நற்றமிழ் வல்ல ஞானசம்பந்தன்*). He hails from See Kaazhi. This city has many mansions that soar into the sky. The white flags fly aloft on the top of these mansions. The moonlight brightens the streets. In short everything in this town is plentiful and is still expanding. Gnaanasambandan has sung these ten verses in tuneful music on Lord Civan of Thiru-vetkalam who has accepted His consort on the left side of His physical frame. Those who can sing these melodies will be freed from sin and blame.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*39ஆம் பதிகம் முற்றிற்று*
End of 39th Hymn

உ
சிவமயம்

# 40. திரு வாழ்கொளிபுத்தூர்

## திருத்தலவரலாறு:

திரு வாழ்கொளிபுத்தூர் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். மயிலாடுதுறையில் இருந்து பேருந்து வசதி உள்ளது.

இன்று திருவாளபுத்தூர் என வழங்குகிறது. தேவாரத்தில் வாழ்கொளி புத்தூர் எனவும், வாள்ஒளி புற்றூர் எனவும் வழங்கப் பெறுகின்றது. திருமால் மாணிக்க லிங்கத்தைத் தாபித்து வழிபட்டார். வடமொழியில் அரதனபுரம் என வழங்கும். வண்டு, அருச்சுனன் பூசித்த தலம். அருச்சுனன் செய்த பூசைக்கு உகந்த பெருமான் அவன் வாளைப் புற்றில் ஒளித்து வைத்திருந்து, மீட்டும் அவன் அத்தினாபுரி திரும்பும் போது அளித்தார் என்பது வரலாறு. இதனாலேயே வாள்ஒளிபுற்றூர் ஆயிற்று என்பது புராணம். ‘உன் கரவாள் நின்ற வாகையின் அயல்புற்றொளித்தான்’ என்பது தலபுராணப் பாடற்பகுதி. இறைவன் திருமேனி மாணிக்கம் ஆதலின் வாள்ஒளிபுத்தூர் என்பது இங்ஙனமெல்லாம் மாறிற்றோ என்று எண்ணவும் இடம் உண்டு. வாள் ஒளி – மிக்க ஒளி.

## பதிக வரலாறு:

திருஓமாம்புலியூரை வணங்கி எழுந்தருளிய பிள்ளையார் திருவாழ்கொளிபுத்தூரை அடைந்தார்கள். கார் வளர்கண்டர் தாள் பணிந்தார்கள். பார்புகழ் பதிகமாகிய ‘பொடியுடை’ என்னும் இப்பதிகத்தை அருளினார்கள்.

# 40. THIRU-VAAZH-KŌLI-PUTHOOR

## THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-vaazh-kōli-puthoor is to the north of river Cauvery in Chola Naadu, and is reachable by bus from Mayilaaduthurai. The village, known by the names of Vaazhkolipuththoor and Vaal Oli Putrroor in Thevaram, is called Thiruvaalaputhur today. The Lingam is made of ruby.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 40. திரு வாழ்கொளிபுத்தூர் 40. THIRU-VAAZH-KŌLI-PUTHOOR

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

பொடியுடைமார்பினர் போர்விடையேறிப் பூதகணம் புடைசூழக்
கொடியுடையூர்திரிந் தையங் கொண்டு பலபலகூறி
வடிவுடைவாணெடுங் கண்ணுமைபாக மாயவன்வாழ்கொளி புத்தூர்
கடிகமழ் மாமலரிட்டுக் கறைமிடற்றானடி காண்போம். 1

பொடி உடை மார்பினர் போர் விடை ஏறி, பூதகணம் புடை சூழக்,
கொடி உடை ஊர் திரிந்து ஐயம் கொண்டு, பலபல கூறி,
வடிவு உடை வாள் நெடுங்கண் உமை பாகம் ஆயவன் வாழ்கொளிபுத்தூர்,
கடி கமழ் மா மலர் இட்டு, கறைமிடற்றான் அடி காண்போம்.

poTi uTai mArpin2ar, pOr viTai ERi, pUtakaNam puTai cUza,
koTi uTai Ur tirintu aiyam koNTu, palapala kURi,
vaTivu uTai vAL neTugkaN umai pAkam Ayavan2 vAzkoLiputtUr,
kaTi kamaz mA malar iTTu, kaRaimiTaRRAn2 aTi kANpOm.

***பொருள்:*** சிவபிரான் திருநீறு அணிந்த மார்பினன். அவர் வீரம் மிக்க விடைமீது ஏறி வருவார். பூத கணங்கள் அவரைப் புடை சூழ்ந்து வரும். கொடிகள் கட்டிய ஊர்களில் திரிந்து பற்பல வாசகங்களைக் கூறிப் பலியேற்பது அவர் வழக்கம். அவர் அழகிய வாள் போன்ற நெடிய கண்களை உடைய உமையம்மையைத் தனது இடப்பாகத்தில் கொண்டுள்ளார். அவர் வாழ்கொளிபுத்தூரில் எழுந்தருளி அருள் ஆட்சி செய்து வருகிறார். அவ்வூர் சென்று மணம் கமழும் சிறந்த மலர்களால் அவரை அருச்சித்து அக்கறைமிடற்று அண்ணலைக் காண்போமாக.

***குறிப்புரை:*** இது பலிகொண்டு உமையொரு பாகனாய் எழுந்தருளியிருக்கும் நீலகண்டனது திருவடியை, வாழ்கொளி புத்தூரில் சென்று மலரிட்டு வணங்குவோம் என்கின்றது. ஐயம் – பிச்சை. பிச்சை ஏற்பார் வாகனத்திலேறிப் பலர் புடைசூழச் செல்லுதல் அழகியது என நயந்தோன்ற நின்றது. வடிவு – அழகு. புத்தூர் மிடற்றான் அடி மலரிட்டுக் காண்போம் எனக் கூட்டுக.

Lord Civan smears His body with holy ashes. He rides on the valiant bull, followed by Bhuta warriors. Along with them He goes to various towns where His

flags fly and deliver different kinds of sermons and receives alms. His consort Umaa Devi abides on the left portion of His body. She has attractive, long and sharp eyes that are like a sword. He is entempled in Vaazh-kōli-puthoor. Ye companions! Let us go to Vaazh-kōli-puthoor and offer worship to the Lord whose neck is dark blue in colour, and take with us elegant and fragrant flowers as our offerings and rejoice at sight of His Holy Feet.

அரைகெழுகோவண வாடையின்மேலோ ராடரவம்மசைத் தையம்
புரைகெழுவெண்டலை யேந்திப் போர்விடை யேறிப்புகழ
வரைகெழுமங்கைய தாகமொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்
விரைகமழ் மாமலர்தூவி விரிசடையானடி சேர்வோம். 2

அரை கெழு கோவண ஆடையின் மேல் ஓர் ஆடு அரவம்(ம்) அசைத்து, ஐயம்
புரை கெழு வெண்தலை ஏந்திப், போர் விடை ஏறிப், புகழ
வரை கெழு மங்கையது ஆகம் ஓர்பாகம்ஆயவன் வாழ்கொளிபுத்தூர்,
விரை கமழ் மா மலர் தூவி, விரிசடையான் அடி சேர்வோம்.

arai kezu kOvaNa ATaiyin2mEl Or ATu aravam(m) acaittu, aiyam
purai kezu veN talai Enti, pOr viTai ERi, pukaza
varai kezu magkaiyatu Akam orpAkam Ayavan2 vAzkoLiputtUr,
virai kezu mA malar tUvi, viricaTaiyAn2 aTi cErvOm.

**பொருள்:** சிவபெருமான் தனது இடையில் கட்டிய கோவண ஆடையின் மேல் ஆடுகின்ற அரவம் (பாம்பு) ஒன்றைக் கட்டிக் கொண்டுள்ளார். அவர் துளை பொருந்திய வெண்மையான தலைஓட்டைக் கையில் ஏந்திப் பலியேற்கிறார். அவர் சினம் பொருந்திய விடைமேல் ஏறிப் பலரும் புகழ வருகிறார். இமவான் மகளாகிய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டுள்ளார். சிவபிரான் எழுந்தருளிய திருவாழ்கொளிபுத்தூர் செல்வோம். அங்கு மணம் கமழும் சிறந்த மலர்களைத் தூவி, அவ்விரி சடையானின் திருவடிகளைச் சேர்வோம்.

**குறிப்புரை:** பிரம கபாலத்தில் பிச்சை ஏற்ற பெருமானை மலர் தூவித் தியானிப்போம் என்கின்றது. புரை – ஓட்டை. மங்கையது ஆகம் – உமையின் திருமேனி.

Lord Civan tightens His loincloth (Kōvanam - *கோவணம்*) with the hooded snake. He holds in one of His hands the holy white skull and receives alms in it. He rides on the ferocious bull and goes round when all people pay obeisance to and praise Him. He

is entempled in Vaazh-kōli-puthoor. Ye companions! Let us carry elegant and fragrant flowers, reach Vaazh-kōli-puthoor and offer them at the Holy Feet of Lord Civan who has matted hair (Viri-Chady-yan – *விரிசடையான்*) and get His grace.

**Note:** Civa is subtle as the scent in flowers. He is therefore fittingly hailed with fragrant blossoms.

பூணெடுநாக மசைத்தனலாடிப் புன்தலையங்கையி லேந்தி
ஊணிடுபிச்சையூ ரைய முண்டியென்று பலகூறி
வாணெடுங்கண்ணுமை மங்கையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்த்
தாணெடு மாமலரிட்டுத் தலைவனதாணிழல் சார்வோம். 3

"பூண் நெடுநாகம் அசைத்து, அனல்ஆடி, புன்தலை அங்கையில் ஏந்தி ,
ஊண் இடு பிச்சை, ஊர் ஐயம் உண்டி" என்று பல கூறி,
வாள் நெடுங்கண் உமைமங்கை ஒர்பாகம்ஆயவன் வாழ்கொளிபுத்தூர்,
தாள் நெடு மா மலர் இட்டு, தலைவன தாள்நிழல் சார்வோம்.

"pUN neTunAkam acaittu, an2al ATi, pun2talai agkaiyil Enti,
UN iTu piccai, Ur aiyam uNTi" en2Ru pala kURi,
vAL neTugkaN umaimagkai or pAkam Ayavan2 vAzkoLiputtUr,
tAL neTu mA malar iTTu, talaivan2a tALnizal cArvOm.

***பொருள்:*** சிவபெருமான் நெடிய பாம்பை அணிகலனாகப் பூண்டுள்ளார். அனலைக் கையில் ஏந்தி ஆடிக்கொண்டிருக்கிறார். அவர் பிரம்மாவின் தலையோட்டை தனது அழகிய கைகளில் ஏந்திக் கொண்டுள்ளார். பல ஊர்களில் திரிந்து, பலவாறு கூறிக்கொண்டு மக்கள் உணவாகத் தரும் பிச்சையை தனக்கு உணவாக ஏற்றுக் கொள்ளுகிறார். உமையம்மையைத் தனது ஒரு பாகமாக ஏற்றிருக்கும் சிவபிரான் எழுந்தருளிய திருவாழ்கொளிபுத்தூர் செல்வோம். அங்கு அப்பெருமானின் திருவடிகளில் சிறந்த மலர்களைத் தூவுவோம். நம் தலைவனாக விளங்கும் அவன் திருவடி நிழலில் சேர்வோம்.

***குறிப்புரை:*** இது இறைவனுக்கு மலரிட்டு வணங்கி அவன்தாள் நிழலைச் சார்வோம் என்கின்றது. பூண் அசைத்து – ஆபரணமாகக் கட்டி. இடுபிச்சை ஊண் உண்டி ஊர் ஐயம் என்று பலகூறி என்றது. பிச்சைதான் உணவு என்பதைப் பலமுறையாகச் சொல்லி. தலைவன தாள் – தலைவனுடைய திருவடிகள். அகரம் ஆறாம் வேற்றுமைப் பன்மை உருபு (ஆறனொருமைக்கு அதுவும் ஆதுவும் பன்மைக்கு அவ்வும் உருபாம் – நன்னூல்).

Lord Civan wears a long snake in His body as an ornament. He holds in one of His hands the fire and dances. He preaches sermons wherever He goes. This Lord Civan is entempled in Vaazh-kōli-puthoor. Ye companions! Let us reach Vaazh-kōli-puthoor and offer worship to the Lord therein by offering elegant flowers on His Holy Feet and get from Him liberation from the cycle of birth and death. He is our Supreme Lord.

**Note:** Thaall Nizhal: The shade of the Lord's Feet. "Eesan enthai inai adi neezhal" (the shade of the Feet twain of Lord-Father) are the words of St. Appar.

தாரிடுகொன்றையொர் வெண்மதிகங்கை தாழ்சடை மேலவைசூடி
ஊரிடுபிச்சைகொள் செல்வ முண்டியென்று பலகூறி
வாரிடுமென்முலை மாதொருபாக மாயவன்வாழ்கொளி புத்தூர்க்
காரிடு மாமலர்தூவிக் கறைமிடற்றானடி காண்போம். 4

"தார் இடு கொன்றை, ஒர் வெண்மதி, கங்கை, தாழ்சடை, மேல் அவை சூடி,
ஊர் இடு பிச்சை கொள் செல்வம் உண்டி" என்று பல கூறி,
வார் இடுமென்முலை மாது ஒருபாகம்ஆயவன் வாழ்கொளிபுத்தூர்க்,
கார் இடு மா மலர் தூவிக், கறைமிடற்றான் அடி காண்போம்.

"tAr iTukon2Rai, or veNmati, kagkai, tAzcaTaimEl avai cUTi,
Ur iTu piccai koL celvam uNTi" en2Ru pala kURi,
vAr iTumen2mulai mAtu oru pAkam Ayavan2 vAzkoLiputtUr,
kAr iTu mA malar tUvi, kaRai miTaRRAn2 aTi kANpOm.

**பொருள்:** சிவபெருமான் கொன்றை மாலையையும், வெண்மதியையும், கங்கையையும், தனது தாழ்ந்து தொங்கும் சடைமுடியில் சூடியவன். ஊர்மக்கள் இடும் பிச்சையை ஏற்றுக் கொண்டு அதுவே தனக்கு செல்வம், உணவு என்று பலவாறு கூறிக்கொண்டிருப்பவன். அவன் கச்சணிந்த மென்மையான தனங்களை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவன். சிவபிரான் எழுந்தருளிய திருவாழ்கொளிபுத்தூர் செல்வோம். கார்காலத்தே மலரும் சிறந்த கொன்றை மலர்களைத் தூவிக் கறைமிடறனாகிய அப்பெருமானின் திருவடிகளைக் காண்போம்.

**குறிப்புரை:** கார்காலத்துப் பூவைத் தூவித் திருவடியைத் தரிசிப்போம் என்கின்றது. நமக்கு உணவு ஊர்ப்பிச்சைதான் என்று சொல்லிக் கொண்டு ஒரு பெண்ணை ஒரு பாகமாகக் கொண்டிருக்கிறானென நயச்சுவை காண்க. வார் – கச்சு. கார் இடுமாமலர் – கார் காலத்துப் பூவாகிய கொன்றை.

Lord Civan wears on His dangling matted hair, garland of cassia flowers, the white crescent moon, and the river Ganges. He accepts the alms given by the village folks and blesses them by telling them that the alms they have given is His real asset and His food. This Lord Civan whose neck is dark blue in colour (*கறைமிடற்றான்*) is entempled in Vaazh-kōli-puthoor. Ye companions! Let us collect the elegant cassia flowers which will blossom in the rainy season (October to November) and go to Vaazh-kōli-puthoor and offer them at the holy Feet of Lord Civan therein and get His grace.

கனமலர்க்கொன்றை யலங்கலிலங்கக் காதிலொர் வெண்குழையோடு
புனமலர்மாலை புனைந்தூர் புகுதியென்றே பலகூறி
வனமுலைமாமலை மங்கையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்
இனமல ரேய்ந்தனதூவி யெம்பெருமானடி சேர்வோம். 5

"கன மலர்க்கொன்றை அலங்கல் இலங்கக், காதில் ஒர் வெண்குழையோடு
புன மலர்மாலை புனைந்து, ஊர் புகுதி" என்றே பல கூறி,
வனமுலை மாமலைமங்கை ஒர்பாகம்ஆயவன் வாழ்கொளிபுத்தூர்,
இனமலர் ஏய்ந்தன தூவி, எம்பெருமான் அடி சேர்வோம்.

"kan2a malarkkon2Rai alagkal ilagka, kAtil or veNkuzaiyOTu
pun2a malarmAlai pun2aintu, Ur pukuti" en2RE pala kURi,
van2amulai mAmalai magkai orpAkam Ayavan2 vAzkoLiputtUr,
in2amalar Eyntan2a tUvi, emperumAn2 aTi cErvOm.

**பொருள்:** சிவபெருமான் கார்காலத்து மலராகிய கொன்றை மலர்மாலையை தன் திருமேனியில் அணிந்தவன். ஒரு காதில் வெண் குழை அணிந்தவன். முல்லை நிலத்து மலர்களால் தொடுக்கப்பெற்ற மாலைகளைச் சூடியவன். பல ஊர்களுக்கும் சென்று பற்பல கூறிப் பலியேற்பவன். அழகிய தனங்களை உடைய மலைமகளாகிய பார்வதியைத் தனது ஒரு பாகமாகக் கொண்டவன். அந்த எம்பிரான் எழுந்தருளிய திருவாழ்கொளிபுத்தூர் செல்வோம். நமக்குக் கிட்டிய இனமான மலர்களைத் தூவி அவனது அடிகளைச் சேர்வோம்.

**குறிப்புரை:** கனமலர் – பொன்போலுமலர். அலங்கல் – மாலை. புனமலர் – முல்லைநிலத்துப் பூக்கள். புகுதி – புகுவாய் – ஏய்ந்தன – அருச்சிக்கத்தகுந்தன.

Wearing garlands of cassia flowers of the rainy season in His sacred body Lord Civan shines bright. He wears white ear-ring (வெண்குழை) in one of His ears. He decorates His hair with garlands of forest flowers and travels over different places. There He makes many sermons and gets alms from them. Lord Civan's consort Paarvathi, daughter of the king of the Himalayan mountains having lovely breasts, abides on the left half of His body frame. This Lord Civan is entempled in Vaazh-kōli-puthoor. Ye companions! Let us go to this place with available elegant flowers and offer them at His holy Feet and get His blessings.

அளைவளர்நாக மசைத்தனலாடி யலர்மிசை யந்தணனுச்சிக்
களைதலை யிற்பலிகொள்ளுங் கருத்தனே கள்வனேயென்னா
வளையொலிமுன்கை மடந்தையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்த்
தளையவிழ் மாமலர்தூவித் தலைவனதாளிணை சார்வோம். 6

"அளை வளர் நாகம் அசைத்து, அனல்ஆடி, அலர்மிசை அந்தணன் உச்சிக்
களை தலையில் பலி கொள்ளும் கருத்தனே! கள்வனே!" என்னா,
வளை ஒலி முன்கை மடந்தை ஓர்பாகம்ஆயவன் வாழ்கொளிபுத்தூர்த்,
தளை அவிழ் மா மலர் தூவி, தலைவன தாள்இணை சார்வோம்.

"aLai vaLar nAkam acaittu, an2al ATi, alarmicai antaNan2 uccik
kaLai talaiyil pali koLLum karuttan2E! kaLvan2E!" en2n2A,
vaLai oli mun2kai maTantai orpAkam Ayavan2 vAzkoLiputtUr,
taLai aviz mA malar tUvi, talaivan2a tAL iNai cArvOm.

**பொருள்:** புற்றின்கண் வாழும் பாம்பினை இடையில் கட்டியவனே! சுடுகாட்டில் ஆடுபவனே! தாமரை மலர்மேல் உறையும் பிரமனின் உச்சித் தலையைக் கொய்தவனே! அத்தலை ஓட்டில் பலிகொள்ளும் தலைவனே! நம் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளும் கள்வனே என்று கூறுவோம். தனது முன்கைகளில் வளையல்கள் ஒலிக்கும் பார்வதி தேவியை ஒரு பாகமாகக் கொண்ட சிவபெருமான் உறையும் திருவாழ்கொளிபுத்தூர் செல்வோம். மொட்டவிழ்ந்த நறுமலர்களைத் தூவி அப்பெருமானின் தாளிணைகளைச் சார்வோம்.

**குறிப்புரை:** கருத்தனே! கள்வனே! என்று மலர்தூவித் தாழ்ந்து சார்வோம் என்கின்றது. அளை – புற்று. அலர்மிசை அந்தணன் – பிரமன். உச்சி களை தலையில் – உச்சியிலிருந்து களையப்பட்ட தலையில். தளை – முறுக்கு.

Lord Civan ties on His waist a snake which normally lives in ant hills. He dances in the universal cremation ground. He is our Supreme Lord who plucked off the top head of the Lotus seated Brahma and uses His skull as a begging bowl. He is the elusive One who has captured our minds. He accommodates on the left portion of His body Goddess Paarvathi Devi who wears on her forearms jingling bangles. This Lord Civan is entempled in Vaazh-kōli-puthoor. Ye companions! Let us go to this place and offer, fully blossomed fragrant flowers on Lord Civan and be under His Holy Feet to get liberation.

அடர்செவிவேழத்தி னீருரிபோர்த்து வழிதலையங்கையி லேந்தி
உடலிடுபிச்சையோ டைய முண்டியென்று பலகூறி
மடனெடுமாமலர்க் கண்ணியொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்த்
தடமல ராயினதூவித் தலைவனதாணிழல் சார்வோம். 7

"அடர் செவி வேழத்தின் ஈர்உரி போர்த்து, அழிதலை அங்கையில் ஏந்தி,
உடல் இடு பிச்சையோடு ஐயம் உண்டி" என்று பல கூறி,
மடல் நெடு மா மலர்க்கண்ணி ஓர்பாகம்ஆயவன் வாழ்கொளிபுத்தூர்த்,
தட மலர் ஆயின தூவி, தலைவன தாள் நிழல் சார்வோம்.

"aTar cevi vEzattin2 Ir uri pOrttu, azitalai agkaiyil Enti,
uTal iTu piccaiyOTu aiyam uNTi" en2Ru pala kURi,
maTal neTu mA malarkkaNNi or pAkam Ayavan2 vAzkoLiputtUr,
taTa malar Ayin2a tUvi, talaivan2a tAL nizal cArvOm.

**பொருள்:** சிவபெருமான் பரந்த காதுகளை உடைய யானையைக் கொன்றவன். அதன் உதிரப் பசுமை கெடாத தோலை உரித்துப் போர்த்திருப்பவன். கிள்ளிய பிரமன் தலையோட்டைக் கையில் ஏந்தியிருப்பவன். தாருகா வனத்து முனிவர் மகளிர் தம் கைகளால் இட்ட பிச்சையோடு ஐயம், உண்டி என்று பலகூறப் பலியேற்பவன். மடப்பம் வாய்ந்த நீல மலர் போன்ற கண்களை உடைய உமாதேவியை ஒருபாகமாகக் கொண்டவன். அந்தத் திருவாழ்கொளிபுத்தூர் இறைவனை விரிந்த மலர்கள் பலவற்றால் அருச்சிப்போம். அப்பெருமான் தாள் நிழலைச் சார்வோம்.

**குறிப்புரை:** ஐயமும் பிச்சையுமே உண்பவன் என்று கூறி உமையோடிருக்குந் தலைவன்தாளை மலர்தூவிச் சார்வோம் என்கின்றது. அடர்செவி – பரந்த காது. அழி தலை – இறந்தார் தலை. என்றது பிரம கபாலம். பிச்சை – இரவலனாகச் சென்று ஏற்பது. ஐயம் – இடுவானாக அழைத்திடுவது. இவ்வேற்றுமை

தோன்றவே ஸ்ரீஆண்டாள் திருப்பாவையில் 'ஐயமும் பிச்சையும் ஆந்தனையும் கைகாட்டி' என்றார். ஆத்திச்சூடியில் 'ஐயம் இட்டுண்' என்று இடுவார் மேலேற்றிச் சொன்னதும் இக்கருத்து நோக்கி, 'பிச்சைபுகினும் கற்கை நன்றே' என்பது இதனை வலியுறுத்தல் காண்க. உடலிடு பிச்சை – தன்வசமிழந்து தாருகாவனத்து மாதர் உடலாலிட்ட (பரவசமாகிய) பிச்சை, மாறுபட்ட என்றுமாம். உடனிடு என்றொரு பாடமும் உண்டு. அங்ஙனமாயின் உடனேயிட்ட பிச்சை என்பதாம். பிச்சையிடுவார் இரவலரைக் காக்க வைத்தலாகாது என்பது மரபு. போர்த்து, ஏந்தி, உண்டி என்று கூறி ஆயவன் புத்தூர்த்தலைவன் தாணிழல் தூவிச் சார்வோம் என வினை முடிவு செய்க.

Lord Civan is the one who killed the broad-eared elephant and ripped off its skin. He then covered His body with the same blood dripping fresh from the skin. He held in His hand the skull of the snipped head of Brahma and used it as His begging bowl. He solicited alms. Also He received alms given by the ladies of saintly folks living in the Daaruka forests. Wherever He goes, He preaches many kinds of sermons. He accommodates on the left half of His body Umaa Devi whose beautiful eyes look like long blue lily flowers. This our Lord Civan is enshrined in Vaazh-kōli-puthoor. Ye companions! Let us go to this place taking fully blossomed flowers of different varieties and offer worship by reciting the Lord's names and get liberation by joining in the shadow of His holy Feet.

உயர்வரையொல்க வெடுத்தவரக்க னொளிர்கடகக்கை யடர்த்து
அயலிடுபிச்சையோ டைய மார்தலையென்றடி போற்றி
வயல்விரிநீல நெடுங்கணிபாக மாயவன்வாழ்கொளி புத்தூர்ச்
சயவிரி மாமலர்தூவித் தாழ்சடையானடி சார்வோம். 8

"உயர்வரை ஒல்க எடுத்த அரக்கன் ஒளிர் கடகக் கை அடர்த்து,
அயல் இடு பிச்சையோடு ஐயம் ஆர்தலை" என்று அடி போற்றி,
வயல் விரி நீல நெடுங்கணி பாகம்ஆயவன் வாழ்கொளிபுத்தூர்ச்,
சய விரி மா மலர் தூவித், தாழ்சடையான் அடி சார்வோம்.

"uyarvarai olka eTutta arakkan2 oLir kaTakak kai aTarttu,
ayal iTu piccaiyOTu aiyam Artalai" en2Ru aTi pORRi,
vayal viri nIla neTugkaNi pAkam Ayavan2 vAzkoLiputtUr,
caya viri mA malar tUvi, tAzcaTaiyAn2 aTi cArvOm.

**பொருள்:** சிவபெருமான் உறைகின்ற உயர்ந்த கயிலை மலையை அசையுமாறு பெயர்த்தவன் இராவணன். அந்த இராவணனது ஒளி பொருந்திய கடகத்தோடு கூடிய தோள் வலிமைய நெருக்கிய பெருமானே! ஊர் மக்கள் இடும் பிச்சை ஐயம் ஆகியவற்றை உண்ணும் தலைவனே! வயலின்கண் தோன்றி மலர்ந்த நீலமலர் போன்ற நீண்ட கண்களையுடைய உமையம்மையின் பாகனே! திருவாழ்கொளிபுத்தூர் இறைவனே! என்று போற்றுவோம். என்றும் வெற்றியோடு மலர்ந்த சிறந்த மலர்களைத் தூவுவோம்! அத்தாழ் சடையன் அடிகளைச் சார்வோம்.

**குறிப்புரை:** ஒல்க – அசைய. அடர்த்து – நெருக்கி. ஆர்தல் ஐ என்று – உண்டலை உடைய தலைவன் என்று சயவிரி – வெற்றியோடு விரிந்த. அடர்த்து, ஆர்தலை உடையவன் என்று, பாகம் ஆயவன் தாழ்சடையான் அடிமலர்தூவிப் போற்றிச் சார்வோம் எனப் பொருள் முடிக்க. சயவிரிமலர் – வாகை மலர்.

Raavanan the king of Lanka, having shining braceleted hands and shoulders, tried to lift mount Kailas which then started shaking. Lord Civan, by pressing the top of the mountain with His toe crushed the mighty of Raavanan. Lord Civan, the Supreme, consumes the alms asked for and/or alms given by village folks. He shares the left portion of His body with His consort Umaa Devi whose eyes are long as the blue lily flower, that blossoms in the fields. Ye companions! Let us extol Lord Civan by offering elegant flowers on His holy Feet and get refuge in them.

**Note:** ஐயம் இரவலர்கள் கேளாமல் தாங்களாகக் கொடுப்பது.

பிச்சை இரவலர்கள் கேட்டபின் கொடுப்பது.

ஐயம் People offering alms by themselves without any request from any one.

பிச்சை Alms given to those who asks for it.

கரியவன்நான்முகன் கைதொழுதேத்தக் காணலுஞ்சாரலு மாகா
எரியுருவாகியூ ரையமிடு பலியுண்ணியென் றேத்தி
வரியரவல்குன் மடந்தையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்
விரிமல ராயினதூவி விகிர்தனசேவடி சேர்வோம். 9

"கரியவன் நான்முகன் கைதொழுது ஏத்தக், காணலும் சாரலும் ஆகா
எரிஉரு ஆகி, ஊர் ஐயம் இடு பலி உண்ணி" என்று ஏத்தி,
வரிஅரவு அல்குல் மடந்தை ஓர்பாகம்ஆயவன் வாழ்கொளிபுத்தூர்,
விரிமலர் ஆயின தூவி, விகிர்தன சேவடி சேர்வோம்.

"kariyavan2 nAn2mukan2 kaitozutu Etta, kANalum cAralum AkA
eri uru Aki, Ur aiyam iTu pali uNNi" en2Ru Etti,
vari aravu alkul maTantai orpAkam Ayavan2 vAzkoLiputtUr,
virimalar Ayin2a tUvi, vikirtan2a cEvaTi cErvOm.

**பொருள்:** சிவபெருமானைத் திருமாலும் நான்முகனும் கைகளால் தொழுதேத்திக் காணவும் சாரவும் இயலாதவனே! எரி உரு ஆகியவனே! பல ஊர்களிலும் திரிந்து ஐயம், பிச்சை ஆகியவற்றை உண்பவனே! என்று போற்றுவோம். பொறிகளோடு கூடிய பாம்பின் படம் போன்ற அல்குலை உடைய உமையம்மையை ஒரு பாகமாக உடையவன் நம் வாழ்கொளிபுத்தூர் இறைவன். அவனை விரிந்த மலர்களைக் கொண்டு தூவி வழிபடுவோம். விகிர்தவனாகிய அவன் சேவடிகளைச் சேர்வோம்.

**குறிப்புரை:** மால் அயன் இருவர்க்கும் அறியலாகா விகிர்தன் அடி சேர்வோம் என்கின்றது. கரியவன் – திருமால். கரியவன் சாரலும், நான்முகன் காணலுமாகா எனக் கூட்டுக. எரியுரு – அக்னிமலையின் வடிவு. வரி யரவு – பொறிகளோடு கூடிய பாம்பின் படம். விகிர்தன – சதுரப்பாடுடையவனது.

Ye companions! Let us hail Lord Civan as the One who rose up as a tall column of fire, the base and top of which could neither be seen nor reached by the dark coloured Thirumaal or by the four faced Brahma, who both adored Him with folded hand. He is the One who roams about in many towns and consumes food asked for and/or given by people living therein. He is the One who concorporates His consort Umaa Devi whose forelap is like unto the hood of speckled serpent. Let us worship this Lord Civan of Vaazh-kōli-puthoor, offering blooming flowers and gain His salvific Feet.

**Note:** The dark One: Vishnu

Vikirthan: He who is pre-eminent Supreme Lord.

குண்டமணர்துவர்க் கூறைகள்மெய்யிற் கொள்கையினார் புறங்கூற
வெண்டலையிற்பலி கொண்டல் விரும்பினையென்று விளம்பி
வண்டமர்பூங்குழன் மங்கையொர்பாக மாயவன்வாழ்கொளி புத்தூர்த்
தொண்டர்கண் மாமலர்தூவத் தோன்றிநின்றானடி சேர்வோம். 10

"குண்டு அமணர், துவர்க்கூறைகள் மெய்யில் கொள்கையினார், புறம்கூற,
வெண் தலையில் பலி கொண்டல் விரும்பினை" என்று விளம்பி,
வண்டு அமர் பூங்குழல் மங்கை ஓர்பாகம்ஆயவன் வாழ்கொளிபுத்தூர்த்,
தொண்டர்கள் மா மலர் தூவத், தோன்றி நின்றான் அடி சேர்வோம்.

"kuNTu amaNar, tuvarkkURaikaL meyyil koLkaiyin2Ar, puRam kURa,
veNtalaiyil pali koNTal virumpin2ai" en2Ru viLampi,
vaNTu amar pUgkuzal magkai or pAkam Ayavan2 vAzkoLiputtUr,
toNTarkaL mA malar tUva, tOn2Ri nin2RAn2 aTi cErvOm.

**பொருள்:** சிவபெருமானைக் கொழுத்த அமணர்களும், துவராடைகள் போர்த்த புத்தர்களும் புறம் பேசுவர். வெண்மையான தலையோட்டின்கண் பலியேற்றலை விரும்பியவனே என்று அடியவர்கள் புகழ்ந்து போற்றுவார்கள். வண்டுகள் மொய்க்கும் அழகிய கூந்தலை உடைய உமையம்மையை ஒரு பாகமாக உடையவன் அவன். அவன் எழுந்தருளிய வாழ்கொளிபுத்தூர் செல்வோம். அங்கு அடியவர்கள் சிறந்த மலர்களைத் தூவி வழிபட அவர்களுக்குக் காட்சி அளிப்பவனாகிய சிவனடிகளைச் சேர்வோம்.

**குறிப்புரை:** அமணர் புறங்கூற, பிச்சையேற்பவன் என்றுகூறி மலர்தூவ நின்றான் அடி சேர்வோம் என்கின்றது. புறச்சமயத்தார் பொருந்தாதன கூறவும், நம்போல்வார்க்கு வெளிப்பட்டு அருள் செய்யும் அண்ணலாதலின் அடிசேர்வோம் என்றார். துவர்க்கூறை – மருதந் துவர் தோய்ந்த ஆடை.

The obese Samanars and Buddhists who wear saffron cloth speak ill of Lord Civan behind His back. Without minding their ill will, He is the One who likes to get alms in the white skull. He concorporates with His consort Umaa Devi in whose lovely hair-lock bees are humming. Devotees gather in Vaazh-kōli-puthoor and worship Lord Civan with elegant flowers and reach the holy Feet of the Lord who gives them His divine vision.

கல்லுயர்மாக்கட னின்றுமுழங்குங் கரைபொரு காழியமூதூர்
நல்லுயர் நான்மறைநாவின் நற்றமிழ் ஞானசம்பந்தன்
வல்லுயர்சூலமும் வெண்மழுவாளும் வல்லவன்வாழ்கொளி புத்தூர்ச்
சொல்லியபாடல்கள் வல்லார் துயர்கெடுதல்லெளி தாமே. 11

கல் உயர் மாக்கடல் நின்று முழங்கும் கரை பொரு காழி அ(ம்) மூதூர்
நல்உயர் நால்மறை நாவின் நல்-தமிழ் ஞானசம்பந்தன்
வல்உயர் சூலமும் வெண்மழுவாளும் வல்லவன் வாழ்கொளிபுத்தூர்ச்,
சொல்லிய பாடல்கள் வல்லார் துயர் கெடுதல் எளிது ஆமே.

kal uyar mAkkaTal nin2Ru muzagkum karai poru kAzi a(m) mUtUr
nal uyar nAlmaRai nAvin2 nal--tamiz njAn2acampantan2
val uyar cUlamum veNmazuvALum vallavan2 vAzkoLiputtUr,
colliya pATalkaL vallAr tuyar keTutal eLitu AmE.

**பொருள்:** மலைபோல உயர்ந்து வரும் அலைகளை உடைய பெரிய கடல், பெரிய கரையோடு மோதி முழங்குவது காழிப் பழம்பதி. அங்கு தோன்றியவன், உயர்ந்த நான்மறைகள் ஓதும் நாவினை உடைய நற்றமிழ் ஞானசம்பந்தன். வலிதாக உயர்ந்த சூலம், வெண்மையான மழு, வாள் ஆகியவற்றைப் பயன்படுத்துவதில் வல்லவன் சிவபிரான். அந்தச் சிவபிரான் விளங்கும் வாழ்கொளிபுத்தூரைப் போற்றிச் சொல்லிய பாடல்களை ஓத வல்லவர்களுக்கு துயர்கள் எளிதில் கெடும்.

**குறிப்புரை:** பாடல்வல்லார் துயர்கெடுதல் எளிதாம் என்கின்றது. கல்லுயர் மாக்கடல் – மலைபோலத் திரையுயர்ந்துவரும் கரிய கடல். வல்லுயர் சூலம் – வலிய உயர்ந்த சூலம் – துயர்கெடுதல் எளிதாம் என்றது வாதநோய்க்குச் சரப செந்தூரம் போலப் பிறவித்துயருக்குச் சிறந்த மருந்தாதலின் எளிதாம் என்றவாறு.

The elegant Tamil Gnaanasambandan, the articulator of the lofty four Vedas hails from See Kaazhi. Here the high waves of the sea rise to mountain heights and dash against the shores making heavy noise. Gnaanasambandan has sung ten verses on Lord Civan of Vaazh-kōli-puthoor who is adept at using the weapons of valour - the trident, the white battle-axe and the sword. Those who can sing these ten verses will easily get rid of their lives' misery.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*40ஆம் பதிகம் முற்றிற்று*
End of 40th Hymn

உ
சிவமயம்

# 41. திருப்பாம்புரம்

## திருத்தலவரலாறு:

திருப்பாம்புரம் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். பேரளம் – கும்பகோணம் பேருந்து வழியில் உள்ளது. பாம்பு புரம் என்பது பாம்புரம் என மருவியது. நாகராஜன் பூசித்த தலம். ஆதிசேடனுடைய மூல விக்கிரகமும் உற்சவ விக்கிரகமும் கோயிலில் உள்ளன. இறைவன் பெயர் பாம்புரேஸ்வரர். இறைவி வண்டார் குழலி. தலவிருட்சம் வன்னி. தீர்த்தம் ஆதிசேஷ தீர்த்தம்.

## கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுக்கள் 15 உள்ளன. அவை இராஜராஜன், இராஜேந்திரன், திரிபுவனவீரதேவன், மூன்றாம் குலோத்துங்கன், சுந்தரபாண்டியன், சரபோஜி மன்னர்கள் காலத்தன. இத்தலம் உய்யக்கொண்டார் வளநாட்டுத் திருப்பாம்புரம் என வழங்கப்படுகிறது. இறைவன் திருப்பாம்புரம் உடையார் எனவும், இறைவி மாமலை– யாட்டியாள் எனவும் வழங்கப் படுகின்றனர்.

இராஜராஜதேவன் காலத்தில் சோழிய–தரைய–வேளான் தாமோதரையனால் கோயில் 2ஆம் பிராகாரத்தில் மண்டபம் கட்டவும் இதனைப் பராமரிக்கவும் நிலமளிக்கப்பட்டது. வசந்த மண்டபத்தை சரபோஜி மன்னனுடைய பிரதிநிதியான சுபேதார் ரகுபண்டிதராயன் கட்டினான். கி.பி. 1209இல் திருப்பாம்புரத்தில் கடும்பஞ்சம் நிலவியது. ஒரு பொற்காசுக்கு 3 படி நெல் விற்றது. பஞ்சத்தால் வாடிய ஒரு வேளாளன் தன்னுடைய இரண்டு பெண்களை நூறு பொற்காசுக்குக் கோயிலுக்கு அடிமையாக விற்றான்.

## பதிக வரலாறு:

ஆக்கூர் தான்தோன்றி மாடத்து இறைவனை வணங்கிப் பதிகம்பாடிப் போற்றி, வழியிலுள்ள பிறதலங்களையும் வணங்கிக் கொண்டு திருமீயச்சூரை அடைந்த பிள்ளையார், அங்கும் அவ்வாறு பணிந்தெழுந்து, திருப்பாம்புரம் சென்று சேர்ந்தார்கள். பாம்புரநாதரைப் பதிக இன்னிசையால் பாடத் திருவுளம்பற்றி, சீரணி திகழ் என்னும் இப்பதிகத்தை யருளிச் செய்தார்கள்.

## 41. THIRU-P-PAAM-PURAM

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-p-paam-puram is to the north of river Cauvery in Chola Naadu, and is in the bus route between Peralam and Kumbakonam. The name Paampuram seems to be a corrupted form of Paambu Puram. The Lord God is known by the name of Paampuresuvarar and the Goddess as Vandaarkuzhali. In the inscriptions, the names are given as Thiruppaampuramudaiyaar for the Lord and Maamalaiyaattiyaal for the Goddess. The sacred tree is Vanni and the sacred ford is known as Aadhisesha Theerththam. Vinaayakar is called Raajaraajap Pillaiyaar. Naagaraajan offered worship here. Both the fixed and the processional images of Aadhiseshan are seen in the temple.

The fifteen inscriptions here are from the period of Chola kings from Raajaraajan to Kuloththungkan III, Sundharapaandiyan and Sarafoji. During the reign of Raajaraajan, a grant was made for building and maintaining a mandapam in the second ambulatory. The Vasantha Mandapam was built by Subedhaar Raghu Panditharaayan, a representative of King Sarafoji.

A sad piece of information from the inscription is that in the year 1209 CE a severe famine occurred here and the price of paddy rose to three measures for one gold 'kaasu'. Driven to destitution by the famine, a farmer sold his two daughters to the temple for the price of 100 gold 'kaasus'.

### INTRODUCTION TO THE HYMN

Adoring the Lord-God at His many shrines the boy Saint arrived at Meeyacchur whence he came to Paampuram and sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 41. திருப்பாம்புரம்

## 41. THIRU-P-PAAM-PURAM

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

சீரணிதிகழ்திரு மார்பில்வெண்ணூலர் திரிபுரமெரிசெய்த செல்வர்
வாரணிவனமுலை மங்கையோர்பங்கர் மான்மறியேந்திய மைந்தர்
காரணிமணிதிகழ் மிடறுடையண்ணல் கண்ணுதல் விண்ணவரேத்தும்
பாரணிதிகழ்தரு நான்மறையாளர் பாம்புர நன்னகராரே. 1

சீர் அணி திகழ் திருமார்பில் வெண்நூலர், திரிபுரம் எரிசெய்த செல்வர்,
வார் அணி வனமுலை மங்கை ஓர் பங்கர், மான் மறி ஏந்திய மைந்தர்,
கார் அணி மணிதிகழ் மிடறு உடை அண்ணல், கண்ணுதல், விண்ணவர் ஏத்தும்
பார் அணி திகழ்தரு நால்மறையாளர் - பாம்புர நன்நகராரே.

cIr aNi tikaz tirumArpil veNnUlar, tiripuram ericeyta celvar,
vAr aNi van2amulai magkai Or pagkar, mAn2maRi Entiya maintar,
kAr aNi maNi tikaz miTaRu uTai aNNal, kaNNutal, viNNavar Ettum
pAr aNi tikaz taru nAlmaRaiyALar--pAmpura nan2nakarArE.

**பொருள்:** விண்ணவர் போற்றும் திருப்பாம்புர நன்னகரில் வீற்றிருப்பவர் சிவபெருமான். இவர் சிறந்த அணிகலன்கள் விளங்கும் அழகிய மார்பில் முப்புரிநூல் அணிந்தவர். திரிபுரங்களை எரித்த வீரச்செல்வர். கச்சணிந்த அழகிய தனங்களையுடைய உமையம்மையை ஒரு பாகமாகப் பொருந்தியவர். மான்குட்டியை கையில் ஏந்தியவர் நீலமணிபோலும் திகழ்கின்ற கண்டத்தையுடைய தலைவர். உலகில் அழகிய புகழோடு விளங்கும் மறைகளை அருளிய நெற்றிக் கண்ணர் இவர் ஆவார்.

**குறிப்புரை:** பாம்புர நன்னகரார் இயல்புகள் இவை என்கின்றது. சீர் அணி திகழ் – புகழ் அழகு இவைகள் விளங்கும் செல்வர் என்றது தம்கையிலிருந்து ஒன்றையும் ஏவாதே. இருந்த நிலையில் இருந்தே விளைக்கப் பெற்ற வீரச்செல்வத்தையுடையவர். வார் – கச்சு. மான்மறி – மான்குட்டி. கார் அணி மணி திகழ் மிடறு – கரிய அழகிய நீலமணி போலும் மிடறு.

Lord Civan of Thiru-p-paam-puram is adored by all celestials. He wears a three-ply sacred thread in His jewels decorated handsome chest. He is the valiant Lord who destroyed the Asura's three citadels without using any war weapon. He

accommodated Umaa Devi, who wears a corset over her soft breasts, on the left half of His frame. He is the Lord whose dazzling neck is of the colour of the sapphire gem. He is the author of the admirable four Vedas that are world famous. He has a third eye in His forehead.

கொக்கிறகோடு கூவிளமத்தங் கொன்றையொ டெருக்கணிசடையர்
அக்கினொடாமை பூண்டழகாக அனலது வாடுமெம்மடிகள்
மிக்கநல்வேத வேள்வியுளெங்கும் விண்ணவர்விரைமலர் தூவப்
பக்கம்பல்பூதம் பாடிடவருவார் பாம்புர நன்னகராரே. 2

கொக்குஇறகோடு கூவிளம் மத்தம் கொன்றையொடு எருக்கு அணி சடையர்,
அக்கினொடு ஆமை பூண்டு அழகுஆக அனல்அது ஆடும்எம்அடிகள்,
மிக்க நல்வேதவேள்வியுள் எங்கும் விண்ணவர் விரைமலர் தூவப்,
பக்கம் பல்பூதம் பாடிட, வருவார் - பாம்புர நன்நகராரே.

kokku iRakOTu kUviLam mattam kon2RaiyoTu erukku aNi caTaiyar,
akkin2oTu Amai pUNTu azaku Aka an2al atu ATum em aTikaL,
mikka nal vEta vELviyuL egkum viNNavar viraimalar tUva,
pakkam pal pUtam pATiTa, varuvAr--pAmpura nan2 nakarArE.

**பொருள்:** சிவபெருமான் திருப்பாம்புர நன்னகர் இறைவராவார். இவர் கொக்கிறகு என்னும் மலர், வில்வம், ஊமத்தம்பூ, கொன்றை மலர் எருக்க மலர் ஆகியவைகளைத் தனது சடைமுடியில் அணிந்தவர். எம் தலைவராகிய இவர் சங்கு மணிகளோடு ஆமை ஓட்டைப் பூண்டு அழகாக அனலின்கண் ஆடுபவர். விண்ணோர்கள் மணம் கமழும் மலர்களால் அருச்சிக்கவும் அருகில் பூதங்கள் பல பாடவும் வருவார்.

**குறிப்புரை:** இது அவருடைய அணிகளை அறிவிக்கின்றது. கொக்கிறகு – ஒருவகைப்பூ. கொக்கின் இறகுமாம். கூவிளம் – வில்வம். மத்தம் – ஊமத்தம்பூ. அக்கு – சங்குமணி. வேதவேள்வி – வைதிக யாகம். விரை – மணம்.

Lord Civan wears in His matted hair kokkirahu flower, Bael tree, Datura flower, cassia flower and madar flower (கொக்கிறகு, வில்வம், ஊமத்தம், கொன்றை மற்றும் எருக்கு). Our Lord God is decorated with tortoise and conch shells. He dances enchantingly in the fire. The celestial gods chanting the Vedas and performing sacrifices adore Lord Civan with elegant and fragrant flowers. He goes around accompanied by the singing Bhuta hosts. His is the grand town Paampuram.

**Note:** Kokkiraku: The stork's feather. Kokku also refers to an Asura who played havoc, assuming the form of a cruel crane. Civa did away with him and wore a feather of his.

Mattham: The Datura plant.

Kuvilam: The Vilva tree / Bael tree.

Erukku: Madar.

துன்னலினாடை யுடுத்ததன்மேலோர் சூறைநல்லரவது சுற்றிப்
பின்னுவார்சடைகள் தாழவிட்டாடிப் பித்தராய்த்திரியும்மெம் பெருமான்
மன்னுமாமலர்கள் தூவிடநாளும் மாமலையாட்டியுந் தாமும்
பன்னுநான்மறைகள் பாடிடவருவார் பாம்புர நன்னகராரே. 3

துன்னலின் ஆடை உடுத்து, அதன் மேல் ஓர் சூறை நல் அரவு அது சுற்றிப்,
பின்னுவார்சடைகள் தாழவிட்டு ஆடிப், பித்தர்ஆய்த் திரியும் எம்பெருமான்,
மன்னு மா மலர்கள் தூவிட, நாளும் மாமலையாட்டியும் தாமும்,
பன்னும் நால்மறைகள் பாடிட, வருவார் - பாம்புர நன்நகராரே.

tun2n2alin2 ATai uTuttu, atan2mEl Or cURai nal aravu atu cuRRi,
pin2n2uvAr caTaikaL tAzaviTTu ATi, pittar Ayt tiriyum emperumAn2,
man2n2u mA malarkaL tUviTa, nALum mAmalaiyATTiyum tAmum,
pan2n2um nAlmaRaikaL pATiTa, varuvAr--pAmpura nan2nakarArE.

**பொருள்:** திருப்பாம்புர நன்னகர் இறைவர் கோவண ஆடையை அணிந்திருப்பவர். அதன்மேல் காற்றை உட்கொள்ளும் நல்ல பாம்பு ஒன்றைச் சுற்றி இருப்பவர். பின்னிய நீண்ட சடைகளைத் தாழவிட்டுக் கொண்டு பித்தராய் ஆடித் திரிபவர் எமது பெருமான். அவர் மேல் மணம் நிறைந்த சிறந்த மலர்களைத் தூவி ஒவ்வொரு நாளும் நாம் வழிபட வேண்டும். அப்போது மலையரசன் மகளாகிய பார்வதியும் தாமுமாய், நான்மறைகளை அடியவர் புகழ்ந்து போற்றிப் பாடிக்கொண்டுவர, நம்முன் காட்சி தருவார்.

**குறிப்புரை:** கோவணமுடுத்துப் பாம்பைச் சுற்றிச் சடைதாழ நின்றாடும் பித்தர்; அன்பர்கள் மலர்தூவி வழிபட உமையும் தானும் வருவார். அவரே பாம்புரநகரார் என்கின்றது. துன்னலின் ஆடை – கோவண ஆடை. சூறை நல் அரவு – காற்றையுட்கொள்ளும் பாம்பு.

Lord Civan of Paampuram wears a loincloth in His waist and to hold it fast, tightens it with cobra, which inhales air. His plaited strands of matted hair is hanging on His back. With this external appearance, He roams about dancing like a demented

one. He is our Lord. Let us worship Him daily with elegant and fragrant flowers. Accompanied by Devas who were chanting the four Vedas and along with His consort Paarvathi Devi daughter of the king of Himalayas, He will give us His divine appearance.

**Note:** As a snake can live without food for many days, it is supposed to subsist on air.

துஞ்சுநாள்துறந்து தோற்றமுமில்லாச் சுடர்விடுசோதியெம் பெருமான்
நஞ்சுசேர்கண்ட முடையவென்நாதர் நள்ளிருள்நடஞ் செயுந்நம்பர்
மஞ்சுதோய்சோலை மாமயிலாட மாடமாளிகைதன்மே லேறிப்
பஞ்சுசேர்மெல்லடிப் பாவையர்பயிலும் பாம்புர நன்னகராரே. 4

துஞ்சுநாள் துறந்து தோற்றமும் இல்லாச் சுடர்விடு சோதி எம்பெருமான்,
நஞ்சு சேர் கண்டம் உடைய என் நாதர், நள்இருள் நடம்செயும் நம்பர் -
மஞ்சு தோய் சோலை மா மயில் ஆட மாடமாளிகைதன்மேல் ஏறி,
பஞ்சு சேர் மெல்அடிப் பாவையர் பயிலும் - பாம்புர நன்நகராரே.

tunjcu nAL tuRantu tORRamum illAc cuTarviTu cOti emperumAn2,
nanjcu cEr kaNTam uTaiya en2 nAtar, naL iruL naTam ceyum nampar--
manjcu tOy cOlai mA mayil ATa, mATamALikai tan2mEl ERi,
panjcu cEr mel aTip pAvaiyar payilum pAmpura nan2nakarArE.

***பொருள்:*** மேகங்கள் தோயும் சோலைகளில் சிறந்த மயில்கள் ஆடுகின்றன. மாடமாளிகைகளில் ஏறி, செம்பஞ்சு தோய்த்த சிவந்த மெல்லிய பாதங்களை உடைய பெண்கள் ஆடுகின்றனர். சிவபெருமான் இவ்வித சிறப்புக்களைக் கொண்ட திருப்பாம்புர நன்னகரின் இறைவர் ஆவார். எம்பெருமான் இறக்கும் நாள் இல்லாதவராய், தோற்றமும் இல்லாதவராய் ஒளி பெற்று விளங்கும் சோதி வடிவினராய்த் திகழ்பவர். இவர் விடம் பொருந்திய கண்டத்தை உடையவர். நள்ளிருளில் நடனம் புரியும் நம்பப்படத்தக்க கடவுளாவார்.

***குறிப்புரை:*** இறப்பு பிறப்பு இல்லாத சோதியாய், சர்வசங்கார காலத்து நள்ளிருளில் நட்டமாடும் நம்பர் இவர் என்கின்றது. துஞ்சுநாள் துறந்து – இறக்கும்நாள் இன்றி. நள் இருள் – நடு இரவு. நம்பர் – நம்பப்படத் தக்கவர். மஞ்சு – மேகம். பஞ்சுசேர் – செம்பஞ்சக் குழம்பு பூசப்பெற்ற.

Lord Civan is birthless and deathless and has only a subtle body. He took the form of brilliant and dazzling fire. He is our Lord whose neck is coloured like that of sapphire gem because He swallowed poison. He loves to dance in the midnight.

Paampuram is surrounded by gardens over which clouds move and where the beautiful peacocks dance. In this town damsels go to the top of the mansions and sing. Their soft rosy feet are smeared with red-cotton dye. This gorgeous Paampuram is our God's place.

நதியதனயலே நகுதலைமாலை நாண்மதிசடைமிசை யணிந்து
கதியதுவாகக் காளிமுன்காணக் கானிடைநடஞ்செய்த கருத்தர்
விதியதுவழுவா வேதியர்வேள்வி செய்தவரோத்தொலி யோவாப்
பதியதுவாகப் பாவையுந்தாமும் பாம்புர நன்னகராரே. 5

நதிஅதன் அயலே நகுதலைமாலை, நாள்மதி, சடைமிசை அணிந்து,
கதிஅதுஆக, காளி முன் காணக், கான்இடை நடம் செய்த கருத்தர்;
விதி அது வழுவா வேதியர் வேள்வி செய்தவர் ஓத்து ஒலி ஓவாப்
பதிஅது ஆகப் பாவையும் தாமும் - பாம்புர நன்நகராரே.

nati atan2 ayalE nakutalai mAlai, nALmati, caTaimicai aNintu,
kati atu Aka, kALi mun2 kANa, kAn2 iTai naTam ceyta karuttar;
viti atu vazuvA vEtiyar vELvi ceytavar Ottu oli OvAp
pati atu Akap pAvaiyum tAmum--pAmpura nan2nakarArE.

**பொருள்:** விதிமுறை வழுவாமல் வேதியர்கள், வேள்விகள் பல செய்து வருகின்றனர். அதனால் வேத ஒலி நீங்காத பதி அது என விரும்பி உமையம்மையும் தாமுமாய்த் திருப்பாம்புர நன்னகரில் விளங்குகிறார் நம் இறைவர். தம் சடைமுடிமீது கங்கையின் பக்கத்தில் சிரிக்கும் தலைமாலையையும் பிறைமதியையும் அணிந்துள்ளார். இந்த அணிகள் நடனத்திற்குரிய கதி அதுவே என்னும்படி, காளி முன்னே இருந்து காண, இடுகாட்டுக்குள் நடனம் செய்த தலைவர் இவர் ஆவார்.

**குறிப்புரை:** தலையில் கங்கை, கபாலம், பிறை முதலியன அணிந்து காளியோடு நடனமாடிய நாதர் இவர் என்கின்றது. நதி – கங்கை. நகுதலை – உடலைச் சதம் என்றிருக்கின்ற பிறரைப் பார்த்துச் சிரிக்கின்ற தலை. கதியதுவாக – நடனகதி அதுவாக. கான் – இடுகாடு. ஒத்துஒலி – வேத ஒலி. ஓவா – நீங்காத.

Lord Civan wears on His matted hair the crescent moon, the river Ganges and the garland of skulls which seems to smile. He is the Lord who dances in measured steps as per the rules of dancing, in the cremation ground witnessed by Kaali, goddess of war. His is the great town Paampuram where He abides with His consort Umaa

Devi. This place resounds with the chanting of the Vedas since the virtuous perform the sacrifical fire (*வேள்வி*) according to the rules ordained.

ஓதிநன்குணர்வார்க் குணர்வுடையொருவ ரொளிதிகழுருவஞ்சே ரொருவர்
மாதினையிடமா வைத்தஎம்வள்ளல் மான்மறியேந்திய மைந்தர்
ஆதிநீயருளென் றமரர்கள்பணிய அலைகடல்கடையவன் றெழுந்த
பாதிவெண்பிறைசடை வைத்தவெம்பரமர் பாம்புர நன்னகராரே. 6

ஓதி நன்கு உணர்வார்க்கு உணர்வு உடை ஒருவர்; ஒளி திகழ் உருவம் சேர் ஒருவர்;
மாதினை இடமா வைத்த எம் வள்ளல்; மான்மறி ஏந்திய மைந்தர்;
"ஆதி, நீ அருள்!" என்று அமரர்கள் பணிய, அலை கடல் கடைய, அன்று எழுந்த
பாதிவெண்பிறை சடை வைத்த எம் பரமர் - பாம்புர நன்நகராரே.

Oti nan2ku uNarvArkku uNarvu uTai oruvar; oLi tikaz uruvam cEr oruvar;
mAtin2ai iTamA vaitta em vaLLal; mAn2maRi Entiya maintar;
"Ati, nI aruL!" en2Ru amararkaL paNiya, alaikaTal kaTaiya, an2Ru ezunta
pAti veNpiRai caTai vaitta em paramar--pAmpura nan2nakarArE.

**பொருள்:** திருப்பாம்புர நன்னகர் இறைவர் கல்வி கற்றுத் தெளிந்த ஞானியர்களால் உணரப்படும் ஒருவராவார். ஒளியாக விளங்கும் சோதி உருவினராவார். உமையம்மையை இடப்பாகமாகக் கொண்டவர் எம் வள்ளல் ஆவார். இளமான் மறியைக் கையில் ஏந்திய மைந்தர் ஆவார். திருப்பாற்கடலைக் கடைந்த பொழுது எழுந்த ஆலகால விடத்திற்கு அஞ்சிய தேவர்கள், 'ஆதியாக விளங்கும் தலைவனே, நீ எம்மைக் காத்தருள்க' என வேண்டினர். அந்த வேண்டுகோளுக்கு இணங்கி நஞ்சினை உண்டும், கடலினின்று எழுந்த பிறை மதியைச் சடையிலே வைத்தும் அருள் புரிந்தவர் எம் மேலான தலைவராகிய சிவபிரான் ஆவார்.

**குறிப்புரை:** ஓதியுணர்வார்க்கு ஞானமாக இருக்கும் நாதனாகிய பிறைசூடிய பெருமான் இவர் என்கின்றது. உணர்தல் – கல்வியைத் துணையாகக் கொண்டு கற்றுத் தெளிந்து அறிதல். உணர்வுடை ஒருவன் – உணரத்தக்க ஒப்பற்றவன். ஒளிதிகழ் உருவம் – ஒளியாக விளங்கும் சோதியுருவம். வள்ளல் என்றது சத்தியொடு கூடிய வழியே சிவம் கருணையை மேவி வள்ளன்மை பூணுதலின். ஆதி – முதலுக்கெல்லாம் முதற்பொருளாய் இருப்பவன். கடலில் எழுந்த பொருள்கள் ஆகிய இலக்குமி, விஷம், பிறை, உச்சை சிரவம் (இந்திரன் குதிரை), கௌத்துவம் (திருமால் மார்பில் அணியும் மணி) முதலிய பொருள்களில் ஒன்றாகிய பிறை.

Lord Civan is the peerless One who can be understood and known only by those mature scholars who meticulously acquire the real knowledge, cultivate, develop and adhere to it. He takes the form of a dazzling fire. He is our Patron who keeps His consort Umaa Devi in His left part of His body. He is our young, strong and powerful One who holds a young female deer in one of His hands. While churning the sea of milk, the cruel poison came out of the sea. Frightened by the poison, the Devas ran to Lord Civan and begged Him saying "O! Beginningless! Thou the first Supreme Lord! Protect us from death". Lord Civan graced them by swallowing the poison and keeping the moon which also came out of the sea, in His matted hair. He is our Supreme Lord.

**Note:** A slice of the white (full) moon: The word 'Paathi' does not mean half. Paathi means part. It is cem-paathi which is half. The full moon arose from the milky ocean. It began to wane by reason of a curse. Civan saved it from its impending and total disaster by wearing it in its crescent-form. Without invoking the aid of Civa, Devas and Asuras took to the churning of the ocean, all in vain. Then is dawned on them that their mighty venture would only prove to be a futile exercise. So, they sincerely prayed to Civan and started afresh.

மாலினுக்கன்று சக்கரமீந்து மலரவற்கொருமுக மொழித்து
ஆலின்கீழறமோர் நால்வருக்கருளி யனலதுவாடுமெம் மடிகள்
காலனைக்காய்ந்து தங்கழலடியாற் காமனைப்பொடிபட நோக்கிப்
பாலனுக்கருள்கள் செய்தவெம்மடிகள் பாம்புர நன்னகராரே. 7

மாலினுக்கு அன்று சக்கரம் ஈந்து, மலரவற்கு ஒரு முகம் ஒழித்து,
ஆலின் கீழ் அறம் ஓர் நால்வருக்கு அருளி, அனல் அதுஆடும் எம் அடிகள்;
காலனைக் காய்ந்து தம் கழல்அடியால் காமனைப் பொடிபட நோக்கி,
பாலனுக்கு அருள்கள் செய்த எம் அடிகள் - பாம்புர நன்நகராரே.

mAlin2ukku an2Ru cakkaram Intu, malaravaRku oru mukam ozittu,
Alin2 kIz aRam Or nAlvarukku aruLi, an2al atu ATum em aTikaL;
kAlan2aik kAyntu tam kazal aTiyAl, kAman2aip poTipaTa nOkki,
pAlan2ukku aruLkaL ceyta em aTikaL--pAmpura nan2nakarArE.

**பொருள்:** திருப்பாம்புர நன்னகர் இறைவர் முன்பு திருமாலுக்குச் சக்கராயுதம் அளித்தவர். தாமரை மலர் மேல் உறையும் பிரமனது ஐந்தலைகளில் ஒன்றைக் கொய்தவர். சனகாதி முனிவர்கள் நால்வருக்குக் கல்லாலின் கீழிருந்து அறம் அருளியவர். தீயில் நடனமாடுபவர்.

தமது கழலணிந்த திருவடியால் காலனைக் காய்ந்தவர். காமனைப் பொடிபட நோக்கியவர். உபமன்யு முனிவருக்குப் பாற்கடல் அளித்து அருள்கள் செய்த தலைவர் ஆவார்.

**குறிப்புரை:** இது வீரச்செயலை விளக்குகின்றது. சக்கரமீந்தது திருவீழிமிழலையில் நடந்த செய்தி. ஒரு முகம் ஒழித்தது திருக்கண்டியூர்ச் செய்தி. காலனைக் காய்ந்தது கடவூர்ச் செய்தி. காமனை எரித்தது குறுக்கைச் செய்தி. நால்வர் – சனகாதியர். அறம் – சிவாநுபவத் திறம். பாலன் – உபமன்யு.

In the days of yore Lord Civan gifted a Disc (a war weapon - *சக்ராயுதம்*) to Vishnu. Brahma is normally seated in lotus flower. Lord Civan snipped off one of the five heads of Brahmaa. Seated under the Banyan tree, which has no stilt roots, (*கல்லால மரம்*), He imparted the Divine knowledge (*சிவானுபவத் திறம்*) to the four saints Chanakar, Chanandanar, Chanaadarar and Chanarkumaarar (*சனகர், சனந்தனர், சனாதரர், சனத்குமாரர்*). He turned His eyes upon Kaaman (*காமன்*) and burnt him to ashes instantaneously. He is our Supreme Lord who graced the child Upamanyu (*உபமன்யு* - son of Vyakrapaadar *வியாக்கிரபாதர்*) by bringing the sea of milk from Devaloka to earth.

**Note:** The Disc: This sprocket wheel was gifted to Vishnu at Tiruveezhimizhalai: Civa severed one of the heads of Brahma at Kandiyur.

Civa explicated the dharma to the four sages seated under the Banyan tree at Mount Kailash.

Civa kicked Yama (God of Death) at Kadavur.

**Kaama**: The god of love. He was reduced to ashes by the fire of Civa's third eye at Kailash. According to the Tamil tradition, this event took place in Kurukkai.

The Child: Upamanyu the son of St. Vyaakrapaadar.

விடைத்தவல்லரக்கன் வெற்பினையெடுக்க மெல்லியதிருவிர லூன்றி
அடர்த்தவன்றனக்கன் றருள்செய்தவடிக ளனலதுஆடுமெம் மண்ணல்
மடக்கொடியவர்கள் வருபுனலாட வந்திழியரிசிலின் கரைமேல்
படப்பையிற்கொணர்ந்து பருமணிசிதறும் பாம்புர நன்னகராரே. 8

*விடைத்த வல்அரக்கன் வெற்பினை எடுக்க மெல்லிய திருவிரல் ஊன்றி,*
*அடர்த்த அவன்தனக்கு அன்று அருள்செய்த அடிகள்; அனல்அது ஆடும்எம்அண்ணல்*
*மடக்கொடி அவர்கள் வருபுனல் ஆட, வந்து இழி அரிசிலின் கரைமேல்*
*படப்பையில் கொணர்ந்து பரு மணி சிதறும் - பாம்புர நன்நகராரே.*

viTaitta val arakkan2 veRpin2ai eTukka, melliya tiruviral Un2Ri,
aTarttu avan2 tan2akku an2Ru aruL ceyta aTikaL; an2al atu ATum em aNNal--
maTakkoTi avarkaL varupun2al ATa, vantu izi aricilin2 karaimEl
paTappaiyil koNarntu paru maNi citaRum pAmpura nan2nakarArE.

**பொருள்:** இளங்கொடி போன்ற பெண்கள் அரிசிலாற்றில் நீராட வருகின்றனர். அந்த நதி, ஆற்றங்கரைத் தோட்டங்களில், பெரிய மணிகளை அடித்து வந்து சேர்க்கின்றன. திருப்பாம்புர நன்னகர் இறைவர் இங்கு வீற்றிருக்கிறார். செருக்குற்ற வலிய இராவணன் கயிலை மலையைப் பெயர்த்து எடுத்தபோது மெல்லிய திருவடி விரல் ஒன்றை ஊன்றி அவனை நெருக்கினார். பின்னர் இராவணன் தன் பிழையை உணர்ந்து வருந்தி இறைவனைப் போற்றினான். அதன்பின் அவனுக்கு அருள்பல செய்தவர் நம் தலைவர் ஆவார்.

**குறிப்புரை:** கைலையை அசைத்த இராவணனை வலியடக்கிய அடிகள், அரிசிலாற்றங்கரையில் பருமணி சிதறும் பாம்புர நகரார் என்கின்றது. விடைத்த – செருக்குற்ற. அடர்த்து – நெருக்கி. அடர்த்து அருள்செய்த என்றது மறக்கருணையும் அறக்கருணையும் காட்டி ஆட்கொண்டது. அனல் – ஊழித்தீ. அரிசிலின் கரைமேல் (புனல்) மணிசிதறும் நகர் எனப் பொருள் முடிக்க. படப்பை – தோட்டம்.

Civan of Paampuram is our noble Lord who dances on fire. Creeper-like damsels go to the river known as Arisilaaru (*அரிசிலாறு*) for their daily bath. This river brings along the water gems of different varieties and strew them in the gardens which are on the banks of the river. The Lord of Paampuram pressed the mountain (Kailas) with His soft toe when it was uprooted by the haughty Raavanan. Civan granted him boons when he regretted and graced him.

கடிபடுகமலத் தயனொடுமாலுங் காதலோடடிமுடி தேடச்
செடிபடுவினைக டீர்த்தருள்செய்யுந் தீவணரெம்முடைச் செல்வர்
முடியுடையமரர் முனிகணத்தவர்கள் முறைமுறையடிபணிந் தேத்தப்
படியதுவாகப் பாவையுந்தாமும் பாம்புர நன்னகராரே. 9

கடி படு கமலத்து அயனொடு மாலும், காதலோடு அடிமுடி தேடச்,
செடி படு வினைகள் தீர்த்து அருள் செய்யும் தீவணர்; எம்முடைச் செல்வர்;
முடி உடை அமரர் முனிகணத்தவர்கள் முறைமுறை அடிபணிந்து ஏத்தப்,
படிஅது ஆகப் பாவையும் தாமும் - பாம்புர நன்நகராரே.

kaTi paTu kamalattu ayan2oTu mAlum, kAtalOTu aTimuTi tETa,
ceTi paTu vin2aikaL tIrttu aruL ceyyum tIvaNar; emmuTaic celvar;
muTi uTai amarar mun2ikaNattavarkaL muRai muRai aTi paNintu Etta,
paTi atu Akap pAvaiyum tAmum--pAmpura nan2nakarArE.

**பொருள்:** முடிசூடிய அமரர்களும் முனிகணத்தவர்களும் முறையாகத் சிவபெருமான் திருவடிகளைப் பணிந்து ஏத்துதற்கு உரிய தகுதி வாய்ந்த நல்ல இடம் திருப்பாம்புரம். இந்த நன்னகரத்தில் உமையம்மையும் தாமுமாய் எழுந்தருளி இருக்கிறார். மணம் பொருந்திய தாமரை மலர் மேல் விளங்கும் பிரமனும் திருமாலும் அன்போடு அடிமுடி காண முடியாமல் திகைத்து நின்றனர். அப்போது தீவண்ணராய்த் தோன்றிய சிவனார் தூறாக மண்டிக் கிடக்கும் வினைகள் பலவற்றையும் தீர்த்து அவர்களுக்கும் அருள் செய்தார். இவர் எம் செல்வர் ஆவார்.

**குறிப்புரை:** அடிமுடிதேடிய அயனுக்கும் மாலுக்கும் அருள்செய்த செல்வர் இவர் என்கின்றது. கடி – மணம். செடிபடுவினைகள் – தூறாக மண்டிக் கிடக்கும் வினைகள். படி – தகுதி.

Brahma of the fragrant Lotus flower and Vishnu, both in all eagerness went in search of the head and the Holy Feet of Lord Civan and failed. This resplendent Lord of ours annulled the entire evil effects of their bad karma and graced them. He abides along with His consort Umaa Devi in Paampuram which deserves to be the place for celestial gods and saintly ganaas (*முனிகணத்தவர்கள்*) to visit and adore His Holy Feet in an orderly manner.

**Note:** The punishment meted out to Brahmaa is also an act of grace. Says the Sivagnaana Siddhiyaar "Viewed anywise the act of God is but an act of grace".

குண்டர்சாக்கியருங் குணமிலாதாருங் குற்றுவிட்டுடுக்கையர் தாமுங்
கண்டவாறுரைத்துக் கானிமிர்த்துண்ணுங் கையர்தாமுள்ளவா றறியார்
வண்டுசேர்குழலி மலைமகணடுங்க வாரணமுரிசெய்து போர்த்தார்
பண்டுநாஞ்செய்த பாவங்கள்தீர்ப்பார் பாம்புர நன்னகராரே. 10

குண்டர், சாக்கியரும், குணம் இலாதாரும், குற்றுவிட்டு, உடுக்கையர்தாமும்,
கண்டஆறு உரைத்துக் கால் நிமிர்த்து உண்ணும் கையர் தாம் உள்ளஆறு அறியார்;
வண்டு சேர் குழலி மலைமகள் நடுங்க வாரணம் உரிசெய்து போர்த்தார்;
பண்டு நாம் செய்த பாவங்கள் தீர்ப்பார் - பாம்புர நன்நகராரே.

kuNTar, cAkkiyarum, kuNam ilAtArum, kuRRuviTTu uTukkaiyar tAmum,
kaNTa ARu uraittuk kAl nimirttu uNNum kaiyartAm uLLa ARu aRiyAr;
vaNTu cEr kuzali malaimakaL naTugka vAraNam uriceytu pOrttAr;
paNTu nAm ceyta pAvagkaL tIrppAr--pAmpura nan2nakarArE.

**பொருள்:** பரு உருவம் படைத்த சமணர்களாலும் புத்தர்களாலும், மிகச் சிறிய ஆடையை அணிந்தும் கண்டபடி பேசிக் கொண்டும், நின்றபடியே உண்ணும் சமணத் துறவியராலும், உள்ளபடி அறியப்படாதவராகிய சிவபெருமான் திருப்பாம்புர நன்னகரின் இறைவர் ஆவார். வண்டுகள் மொய்க்கும் கூந்தலை உடைய மலைமகளாகிய பார்வதி தேவி நடுங்க யானையை உரித்துப் போர்த்தவர். நாம் முற்பிறவிகளில் செய்த பாவங்களைத் தீர்ப்பவர்.

**குறிப்புரை:** புறச்சமயிகட்கு அறியப் பெறாதவர் என்கின்றது. குண்டர் – பருஉடல் படைத்த சமணர்கள். சாக்கியர் – புத்தர். குற்றுவிட்டு உடுக்கையர் – மிகச்சிறிய ஆடையை உடையவர்கள். கானிமிர்த்து உண்ணும் கையர் – நின்றபடியே உண்ணும் கீழ்மக்கள். இவர்களை 'நின்றுண் சமணர்' என்பர். வண்டு சேர்குழலி மலைமகள் நடுங்க என்றது. அம்மையின் மென்மை அறிவித்தது. வாரணம் – யானை. பண்டு – முன்பு.

The Samanars are obese and eat in the standing posture. Buddhists wear minimum cloth. They both do not realise and know the greatness of Lord Civan. He stripped the skin of an elephant and covered His body, the sight of which made Paarvathi Devi daughter of the king of Himalayan mountain to scare. Lord Civan will annul all our sins done in our previous births.

பார்மலிந்தோங்கிப் பருமதில்சூழ்ந்த பாம்புரநன்னக ராரைக்
கார்மலிந்தழகார் கழனிசூழ்மாடக் கழுமலமுதுபதிக் கவுணி
நார்மலிந்தோங்கு நான்மறைஞான சம்பந்தன்செந்தமிழ் வல்லார்
சீர்மலிந்தழகார் செல்வமதோங்கிச் சிவனடி நண்ணுவர்தாமே. 11

பார் மலிந்து ஓங்கிப் பரு மதில் சூழ்ந்த பாம்புர நன் நகராரைக்
கார் மலிந்த அழகு ஆர் கழனி சூழ் மாடக் கழுமல முது பதிக் கவுணி -
நார் மலிந்து ஓங்கு நால்மறை ஞானசம்பந்தன் - செந்தமிழ் வல்லார்
சீர் மலிந்து அழகுஆர் செல்வம்அது ஓங்கிச் சிவன்அடி நண்ணுவர்தாமே.

pAr malintu Ogkip paru matil cUznta pAmpura nan2 nakarAraik
kAr malintu azaku Ar kazan2i cUz mATak kazumala mutu patik kavuNi--
nAr malintu Ogkum nAl maRai njAn2acampantan2--centamiz vallAr
cIr malintu azaku Ar celvam atu Ogki, civan2 aTi naNNuvar tAmE.

**பொருள்:** உலகில் புகழ் நிறைந்து ஓங்கியதும் பெரிய மதில்களால் சூழப்பெற்றதுமான நன்னகரம் திருப்பாம்புரம். இங்கு வீற்றிருக்கும் இறைவனை, மழை வளத்தால் சிறந்து அழகியதாய் விளங்கும் வயல்கள் சூழப்பெற்றதும், மாடவீடுகள் உடையதும், கழுமலம் என்னும் பெயர் பெற்ற பழம்பதியில், கவுணியர் கோத்திரத்தில் அன்பிற் சிறந்தவனாகவும், புகழால் ஓங்கி விளங்கும் நான்மறை வல்ல ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இந்த செந்தமிழ்ப் பதிகத்தை ஓதவல்லவர் புகழும் அழகும் மிகுந்தவராய்ச் செல்வத்தால் சிறந்து வாழ்ந்து, முடிவில் சிவனடியை அடைவார்.

**குறிப்புரை:** பாம்புரப் பதிகம் வல்லவர் செல்வத்திற் சிறந்து சிவனடி சேர்வர் என்கின்றது. கழனி – வயல். கவுணி – கவுண்டின்ய கோத்திரத்தவன். நார் – அன்பு. சீர் – புகழ்.

Gnaanasambandan belonging to Kounya gotram hails from the grand old city known also as Kazhu Malam (*கழுமலம்*). This city has copious rainfall by which the surrounding fields are fertile. There are many magnificent mansions all around the city. He is very loveable to one and all and well versed in the far-famed four Vedas. The grand town Paampuram is well renowned in the world and fortified by big walls all around. Gnaanasambandan adored and sang in chaste Tamil on the Lord of Paampuram. Those who can chant this chaste Tamil hymn will become handsome and famous. They will lead a happy life in the earth and at the end will be liberated and reach the Holy Feet of Lord Civan.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*41ஆம் பதிகம் முற்றிற்று*
End of 41st Hymn

உ
சிவமயம்

# 42. திருப்பேணுபெருந்துறை

## திருத்தலவரலாறு:

திருப்பேணுபெருந்துறை என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம் ஆகும். கும்பகோணம் – காரைக்கால் பேருந்து வழியில் நாச்சியார் கோயிலை அடுத்துள்ளது. இது திருப்பந்துறை என இன்று வழங்குகிறது. அம்மை, முருகன், பிரமன் இவர்கள் பூசித்த தலம். இறைவன் சிவானந்தர். அம்மை மலையரசி. தீர்த்தம் மங்கள தீர்த்தம். விருட்சம் வன்னி. முருகனுக்கு ஊமை நீங்கியதாக வரலாறு.

## கல்வெட்டு:

அரசியலார் 1932இல் படியெடுத்த கல்வெட்டுக்கள் ஐந்து உள்ளன. மதுரை கொண்ட பரகேசரி 22ஆம் ஆண்டுக் கல்வெட்டில் திருநறையூர் நாட்டுக் கிராமமான பேணு பெருந்துறை எனவும், இறைவன் பெயர் பேணு பெருந்துறை மகாதேவர் எனவும் குறிக்கப் பெற்றுள்ளன. இராஜராஜன் ஆட்சி 14ஆம் ஆண்டில் பாண்டிய குலாசனி வளநாட்டு ஆர்க்காட்டுக் கூற்றத்து அரைசூராள் ஒருத்தியால், அமாவாசையில் சுவாமி அம்மன் பெரிய தேவர் அஸ்திரதேவர் வீதி உலா போதவும், அரிசிலாற்றில் தீர்த்தம் கொடுக்கவும் நிலம் அளித்தாள். வீரபாண்டியன் ஆட்சி 6ஆம் ஆண்டில், நல்லுடையான் வழுதுரரானால் சுவாமி படிமம் செய்து கொடுக்கப் பெற்றது.

## பதிக வரலாறு:

திருஞானசம்பந்தப் பிள்ளையார், திருவீழிமிழலையில் எழுந்தருளியிருக்கின்ற காலத்து, பெருகுபுனல் சூழ்ந்த திருப்பேணுபெருந்துறையை வழிபடத் திருவுளங் கொண்டார்கள். அங்ஙனம் சென்று வழிபட்ட காலத்துப் 'பைம்மா நாகம்' என்னும் இத்திருப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

# 42. THIRU-P-PENU-PERUN-THURAI

## THE HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu, and is next to Naachchiyaar Koyil in the bus route from Kumbakonam to Kaaraikkaal. It is known as Thiruppandhurai these days. God is known here by the name of Sivaanandhar and the

Goddess as Malaiyarasi. The sacred tree is Vanni and the sacred ford is known as Mangkala Theerththam. The Goddess and Piraman are among those who offered worship here and according to legend, Murugan got rid of muteness by worshipping here.

The five inscriptions here speak of grants by a woman for the processional deity to be taken around the town and to offer the sacred water. The gift of the processional deity by a man in the reign of Veerapaandiyan.

## INTRODUCTION TO THE HYMN

Impelled by a strong desire to adore the Lord of Perunthurai, the child-saint came from Veezhimizhalai to this holy town where he sang the following hymn.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 42. திருப்பேணுபெருந்துறை 42. THIRU-P-PENU-PERUN-THURAI

பண் : தக்கராகம் *Pann: Thakka Raagam*

ராகம் : காம்போதி *Raagam: Kaambothi*

பைம்மா நாகம் பன்மலர் கொன்றை பன்றிவெண் கொம்பொன்று பூண்டு
செம்மாந் தையம் பெய்கென்று சொல்லிச் செய்தொழில் பேணியோர் செல்வர்
அம்மா னோக்கி வந்தளிர் மேனி யரிவை யோர்பாக மமர்ந்த
பெம்மா னல்கிய தொல்புக ழாளர் பேணுபெருந்து றையாரே. 1

பைம் மா நாகம், பல்மலர்க்கொன்றை, பன்றிவெண்கொம்பு ஒன்று, பூண்டு,
செம்மாந்து, "ஐயம் பெய்க!" என்று சொல்லி, செய் தொழில் பேணியோர்; செல்வர்;
அம் மான் நோக்கு இயல், அம் தளிர்மேனி, அரிவை ஓர்பாகம் அமர்ந்த
பெம்மான்; நல்கிய தொல்புகழாளர் - பேணுபெருந்துறையாரே.

paim mA nAkam, palmalark kon2Rai, pan2Ri veN kompu on2Ru, pUNTu,
cemmAntu, "aiyam peyka!" en2Ru colli, cey tozil pENiyOr; celvar;
am mAn2 nOkku iyal, am taLirmEn2i, arivai OrpAkam amarnta
pemmAn2; nalkiya tolpukazALar--pENu peruntuRaiyArE.

**பொருள்:** திருப்பேணுபெருந்துறையில் உறையும் சிவபெருமான் படம் பொருந்திய பெரிய நாகம், பல மலர்களோடு இணைந்த கொன்றை மலர், வெண்மையான பன்றிக் கொம்பு ஆகியவற்றை தலையில் அணிந்தவர். அகமலர்ச்சி உடையவர். பலர் இல்லங்களுக்கும் சென்று 'ஐயம் இடுக' என்று கேட்பவர். கடமை தவறாதவர்களுக்குச் செல்வத்துட்

செல்வமாய் இருக்கின்றவர். அழகிய மான்விழி போன்ற கண்களையும், தளிர் போன்ற மேனியையும் உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்ட தலைவர் இவர். நிலைத்த பழமையான புகழை உடையவர்.

**குறிப்புரை:** இது உடம்பெடுத்த பிறவியின் பயனாக, செய்ய வேண்டிய தொழில்களைத் தவறாது செய்யும் அடியார்களுக்கு, ஒரு செல்வம் போன்றவர் பேணுபெருந்துறையார் என்கின்றது. பை – படம். பல்மலர் – தும்பை, மத்தம் முதலாயின. செம்மாந்து – இறுமாந்து. ஐயம்பெய்க என்று சொல்லி – பிச்சையிடுக என்று கூறி. பிச்சையிடுக என்பார் இரங்கிய முகத்துடன் தாழ்ந்து சொல்ல வேண்டியிருக்க, இவர் இறுமாந்து சொல்கின்றார் என்றது. ஏலாமல் ஏற்கின்ற இறைமை தோன்ற, கடமை தவறாதவர்க்குச் செல்வத்துட் செல்வமாய் இருக்கின்றார் என்பார், தொழில் பேணியோர்க்குச் செல்வர் என்றார். தமது அருள் வழங்குந் தொழிலைப் பேணியோர் எனலுமாம். அம்மான் நோக்கி – அழகிய மான் போன்ற கண்ணையுடையவள். அந்தளிர் மேனி – அழகிய தளிர் போன்ற மேனியை உடையவள்.

Lord Civan wears in His matted hair, a great hooded snake, good many flowers including cassia flower and a white horn of the hog. He abides in Thiru-p-penu-perun-thurai. He goes majestically to many houses and begs for alms (ஐயம் இடுக). He is the resplendent Lord to all those who give Him alms. He is our Lord who concorporates Umaa Devi on the left half of His body. Her eyes are like that of a deer and the body is as soft as tender leaves. His glory is very hoary and perpetual.

**Note:** The Hog: The Cosmic Boar / Vishnu.

மூவரு மாகி யிருவரு மாகிமுதல்வனு மாய்நின்ற மூர்த்தி
பாவங்கள் தீர்தரநல்வினை நல்கிப் பல்கண நின்று பணியச்
சாவம தாகிய மால்வரை கொண்டு தண்மதிண் மூன்றுமெ ரித்த
தேவர்கள் தேவ ரெம்பெரு மானார் தீதில்பெ ருந்துறையாரே. 2

*மூவரும்ஆகி, இருவரும்ஆகி, முதல்வனும்ஆய், நின்ற மூர்த்தி -*
*பாவங்கள் தீர்தர நல்வினை நல்கிப், பல்கணம் நின்று பணியச்,*
*சாவம் அது ஆகிய மால்வரை கொண்டு தண் மதில் மூன்றும் எரித்த*
*தேவர்கள்தேவர் எம்பெருமானார் - தீது இல் பெருந்துறையாரே.*

mUvarum Aki, iruvarum Aki, mutalvan2um Ay, nin2Ra mUrtti--
pAvagkaL tIrtara nalvin2ai nalki, palkaNam nin2Ru paNiya,
cAvam atu Akiya mAlvarai koNTu taN matil mUn2Rum eritta
tEvarkaL tEvar, emperumAn2Ar--tItu il peruntuRaiyArE.

**பொருள்:** சிவபெருமான் குற்றமற்ற பேணுபெருந்துறையில் விளங்குபவர். அரி, அயன், அரன் ஆகிய முத்தொழிலைச் செய்யும் மூவரையும் அதிட்டித்து நின்று அவரவர் தொழிலைத் திறம்பட ஆற்றச் செய்பவர். தன்னிடத்து ஒடுங்கிய உலகம் முதலிய யாவற்றையும் மீளவும் தோற்றுவிக்கும்போது, சிவம், சத்தி என்னும் இருவராகி நிற்பவர். இவர்களில் வேறாய் பரசிவமுமாகி நிற்பவர். நம் பாவங்கள் தீர, நல்வினைகளை செய்வதற்குத் தனு, கரண, புவன போகங்களைக் கொடுத்துச் சிவபுண்ணியம் அடையச் செய்பவர். பதினெண்கணங்களுக்குத் தலைவராக நின்று அவர்களைத் தமக்குப் பணிய வைப்பவர். மேரு மலையை வில்லாகக் கொண்டு, மும்மதில்களையும் எரித்த தேவதேவர் ஆவார்.

**குறிப்புரை:** மூவருமாய் இருவருமாய் முதல்வனுமாய் நின்று பணிவார்கள் பாவங்கள் தீர நல்வினைகளை நல்கி நிற்கும் தேவதேவர் இவர் என்கின்றது. மூவருமாகி – அயன், மால், உருத்திரன் என முத்தொழிலைச் செய்யும் மூவரையும் அதிட்டித்து நின்று அவரவர் தொழிலைத் திறம்பட ஆற்றச் செய்தும், இருவருமாகி – தன்னிடத்து ஒடுங்கிய உலகம் முதலான யாவற்றையும் புனருற்பவம் செய்யுங்காலைச் சிவம் சத்தியென்னும் இருவரும் ஆகி, முதல்வனும் ஆகி – இவர்களின் வேறாய்நின்று இயக்கும் பரசிவமுமாகி, வினை ஒய்ந்து ஆன்மாக்கள் பெத்த நிலையில் நில்லா ஆகையால் தீவினைகள் நீங்கி நிற்கப் பரங்கருணைத் தடங்கடலாகிய பரமன் நல்வினைகளை அவைகள் ஆற்ற அருள்கின்றார் என்பது. சாவம் – வில். வரை – மேருமலை.

Lord Civan who is our Lord presides over the flawless Perundurai.

He is an immanentist Supreme over Brahma, Vishnu, and Rudran, and commands them to do their respective duties by getting His grace. It is therefore said He is Three.

After the great deluge and when He plans about the reappearance of the cosmos (புனருத்பவம்) He does it with Sakthi. It is therefore said He is Two.

He gets disunited from all the above and becomes the Primal One as One entity and activates all of them (இவைகளின் வேறாய் நின்று பரசிவமுமாகி இயக்குகின்றான்) He is then said to be the One.

To uplift the souls in bondage He helps them to do virtuous deeds by giving them body, implements, world and objects to possess and enjoy (தனு, கரண, புவன, போகங்களைக் கொடுத்து பெத்த ஆன்மாக்களை ஈடேறச் செய்கிறார்).

He is the Lord Supreme of all other demigods who gutted with fire the three citadels of the Asuras.

**Note:** The Three: Brahma, Vishnu and Rudra.

The Two: Civa and Sakthi

The Primal One: The One and only Activernal Civa.

Mountain Bow: Mount Meru.

செய்பூங் கொன்றை கூவிள மாலைசென்னியுட் சேர்புனல் சேர்த்திக்
கொய்பூங் கோதை மாதுமை பாகங் கூடியோர் பீடுடை வேடர்
கைபோ னான்ற கனிகுலை வாழை காய்குலை யிற்கமு கீனப்
பெய்பூம் பாளை பாய்ந்திழி தேறல் பில்குபெ ருந்துறையாரே. 3

**செய் பூங்கொன்றை, கூவிளமாலை, சென்னியுள் சேர் புனல், சேர்த்திக்,**
**கொய்பூங்கோதை மாதுஉமை பாகம் கூடி ஓர் பீடு உடை வேடர் -**
**கை போல் நான்ற கனிகுலைவாழை காய்குலையின் கமுகு ஈனப்,**
**பெய் பூம்பாளை பாய்ந்து இழி தேறல் பில்கு பெருந்துறையாரே.**

cey pUgkon2Rai, kUviLamAlai, cen2n2iyuL cEr pun2al, cErtti,
koypUgkOtai mAtu umai pAkam kUTi Or pITu uTai vETar--
kai pOl nAn2Ra kan2ikulaivAzai kAykulaiyin2 kamuku In2a,
pey pUmpALai pAyntu izi tERal pilku peruntuRaiyArE.

**பொருள்:** யானையின் கைபோன்ற நீண்ட வாழைக் குலையில் பழுத்த பழங்களிலும், காய்த்த குலைகளிலும், கமுக மரங்களின் பூம்பாளைகளிலும் ஒழுகும் தேன் பாய்ந்து பெருகும் பெருந்துறையில் வீற்றிருப்பவர் சிவபெருமான். இவர் கொன்றைப் பூமாலையையும் கூவிள மாலையையும் தம் தலையில் அணிந்திருப்பவர். கங்கையை ஏற்றிருப்பவர். பூமாலை சூடிய உமையைத் தன் உடலின் ஒருபாகமாகக் கொண்ட பெருமை பெற்ற வேடத்தை உடையவர். அதனால் ஒப்பற்ற அம்மையப்பர் என்ற பெருமை உடைய உருவினர் ஆவார்.

**குறிப்புரை:** உமையொருபாகம் வைத்த வேடர் இவர் என்கின்றது. செய்மாலை எனக் கூட்டிப் புனையப்பெற்ற மாலை என்க. சென்னி – தலை. கொய் பூங்கோதை – கொய்யப்பட்ட பூவால் இயன்ற மாலை. பீடு உடை வேடர் – பெருமை பெற்ற வேடத்தை உடையவர். கை – யானையின் துதிக்கை. வாழைக்குலைக்கு யானையின் கையை ஒப்பிடுதல் மரபு. தேறல் – தேன், வாழைக்குலையில் கமுகு ஈன என்றது இரண்டும் ஒத்த அளவில் வளர்ந்திருக்கின்றன என்று உணர்த்தியவாறு.

Lord Civan is the majestic hunter who concorporates His consort Umaa Devi, on the left portion of His body frame. She is wearing plucked flower garlands. By this rare

single physical frame of a male and female, He became glorious and He is known as Ammaiappar (*அம்மையப்பர்* - i.e., mother and father). He adorns His matted hair with cassia flowers and trifoliate Bael leaves (*வில்வதளம்*), where He has accommodated also the river Ganges.

There are plantain gardens in Penu-perun-thurai where long banana clusters looking like the trunk of an elephant hang. In these raw and ripe banana clusters honey drips from the tender flower spates of arecanut trees which grow side by side along with the plantain trees. In this fertile town of Penu-perun-thurai, Lord Civan is enshrined.

**Note:** Vetar: Hunter/Forester

Vetam also means the salvific form. Vide Sutra 12, Sivagnaana Botham.

நிலனொடு வானு நீரொடு தீயும்வாயுவு மாகியோ ரைந்து
புலனொடு வென்று பொய்ம்மைகள் தீர்ந்த புண்ணியர் வெண்பொடிப் பூசி
நலனொடு தீங்குந் தானல தின்றி நன்கெழு சிந்தைய ராகி
மலனொடு மாசு மில்லவர் வாழு மல்குபெ ருந்துறையாரே. 4

*நிலனொடு வானும் நீரொடு தீயும் வாயுவும் ஆகி, ஓர் ஐந்து-*
*புலனொடு வென்று, பொய்ம்மைகள் தீர்ந்த புண்ணியர்-வெண்பொடிப் பூசி,*
*நலனொடு தீங்கும் தான்அலது இன்றி, நன்கு எழு சிந்தையர்ஆகி,*
*மலனொடு மாசும் இல்லவர் வாழும் மல்கு பெருந்துறையாரே.*

nilan2oTu vAn2um nIroTu tIyum vAyuvum Aki, Or aintu--
pulan2oTu ven2Ru, poymmaikaL tIrnta puNNiyar--veNpoTip pUci,
nalan2oTu tIgkum tAn2 alatu in2Ri, nan2ku ezu cintaiyar Aki,
malan2oTu mAcum illavar vAzum malku peruntuRaiyArE.

**பொருள்:** நிலம், வானம், நீர், தீ, காற்று ஆகிய ஐம்பூதங்களின் வடிவினர். ஐம்புலன்களையும் வென்றவர். பொய்மைகள் இல்லாத புண்ணியராய் வாழுபவர் சிவபெருமான். திருவெண்ணீறு அணிந்திருப்பவர். நன்மையும் தீமையும் சிவனாலின்றி வருவதில்லை என்ற நல்லுள்ளங்கள் கொண்டு ஆணவம், கன்மம், மாயைகள் தீர்ந்தவராய் வாழும் சிவனடியார்கள் நிறைந்த பேணுபெருந்துறையார் ஆவார்.

**குறிப்புரை:** பூதங்கள் ஐந்தாய்ப் புலன்வென்ற புண்ணியர் இவர் என்கின்றது. பூதங்கள் ஐந்துமாகி, தன்மாத்திரைகளாகிய ஐம்புலன்களையும் வென்று, பொய்ம்மை நீங்கிய புண்ணியர் பெருந்துறையார் என முடிக்க. அன்றி, புண்ணியராகிப் பொடி பூசி, இறை சிந்தையராகி மாசில்லாதவர் வாழும் பெருந்துறை

எனவும் முடிக்கலாம். இப்பொருளில் நிலனொடு வாயுவுமாகிய ஓர் ஐந்து புலன் – ஐம்பூதங்களும் அவற்றிற்குக் காரணமாகிய தன்மாத்திரைகள் ஐந்தும், பொய்ம்மைகள் தீர்ந்த – அழியுந்தன்மையவாகிய விஷயசுகங்களில் பற்றற்ற, நலனொடு தீங்கும் தானலது இன்றி – நன்மையும் தீமையும் இறைவனையன்றி வேறொன்று இன்று என எண்ணி, 'நன்றே செய்வாய் பிழை செய்வாய் நானோ இதற்கு நாயகமே' என்ற நினைவு. நன்கெழு சிந்தையராகி – இறைவன் திருப்பாத கமலங்களை நன்றாக இறுகத் தழுவிய மனமுடையராகி. மலன் – ஆணவம். மாசு – மாயையும் கன்மமும்.

The righteous and holy Civan Himself is Earth, Water, Fire, Wind and Space. He surpasses and is outside the reach of the five senses of the body (*கீழ்க்கண்ட ஐம்புலன்களுக்கு அப்பாற்பட்டவன் - சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம்* – Taste, Light, Sense of touch, Sound and Smell). He is virtuous and without any falsities. He has smeared on His body holy white ashes. He abides in the flourishing Penu-perun-thurai. A good number of devotees live here. They are all broadminded; they believe that good and bad will never come without the will of Civan; they are not afflicted with egoism; they are all flawless people. In this place Lord Civan is enshrined.

பணிவா யுள்ள நன்கெழு நாவின் பத்தர்கள் பத்திமை செய்யத்
துணியார் தங்க ளுள்ளமி லாத சுமடர்கள் சோதிப் பரியார்
அணியார் நீல மாகிய கண்ட ரரிசிலு ரிஞ்சுக ரைமேல்
மணிவாய் நீலம் வாய்கமழ் தேறன் மல்குபெ ருந்துறையாரே. 5

*பணிவுஆய் உள்ள நன்கு எழு நாவின் பத்தர்கள் பத்திமை செய்ய,*
*துணியார் - தங்கள் உள்ளம் இலாத சுமடர்கள்-சோதிப்ப(அ)ரியார்;*
*அணிஆர் நீலம் ஆகிய கண்டர்-அரிசில் உரிஞ்சு கரைமேல்*
*மணி வாய் நீலம்வாய் கமழ் தேறல் மல்கு பெருந்துறையாரே.*

paNivu Ay uLLa nan2ku ezu nAvin2 pattarkaL pattimai ceyya,
tuNiyAr--tagkaL uLLam ilAta cumaTarkaL--cOtippa(a)riyAr;
aNi Ar nIlam Akiya kaNTar--aricil urinjcu karaimEl
maNi vAy nIlamvAy kamaz tERal malku peruntuRaiyArE.

**பொருள்:** சிவபெருமான் அரிசிலாற்றின் அலைகள் மோதும் கரையில் அமைந்துள்ள பேணுபெருந்துறையில் எழுந்தருளி உள்ளவர். நீலமணி போலும் நிறம் அமைந்த குவளை மலர்களில் இருந்து வெளிப்படும் தேன் இங்கு கமழ்ந்து நிறைகிறது. பணிவுடைய துதிப்பாடல்கள் பாடும் நன்மை தழுவிய நாவினுடைய பக்தர்கள் அன்போடு வழிபட எளியராய் இருப்பவர் இவர். துணிவற்றவர்களாய்த் தங்கள் மனம் பொருந்தாத அறியாமை

உடையவர்களாய் உள்ளவர்கள் பகுத்தறிவதற்கு அரியவர். அழகிய நீலநிறம் பொருந்திய கண்டத்தை உடையவர்.

**குறிப்புரை:** அன்பர்க்கணியராய், அல்லவர்க்குச் சேயராய் இருப்பவர் இவர் என்கின்றது. பணிவாய் உள்ள – துதிப்பாடல்களைப் பாடிப் பணியும், துணியார் – அன்பர்களைவிட்டு வேறுபடாதவர். துணிதல் – வேறாதல். சுமடர் – அறிவற்றவர்கள். சோதிப்பு அரியார் – சோதித்து அறிதற்கும் அரியவர். சோதித்தல் – அளவைகளால் சோதித்தல். அணி – அழகு. மணி – நீலமணி. நீலம் – நீலப்பூ. தேறல் – தேன்.

Lord Civan is enshrined in Penu-perun-thurai on the banks of river Arisilaaru (அரிசிலாறு) where its waves dash against the shores. His neck is attractive and dark blue in colour. The air in Penu-perun-thurai is filled with the aroma of honey that spills from the blue lilies that look like sapphire. He is easily accessible to those humble devotees who are endowed with disciplined tongues that adore Him by singing submissive prayer songs. But He is a rarity to those who have different ideas against their conscience and who have no reasoning.

எண்ணார் தங்கள் மும்மதிள் வேவ ஏவலங் காட்டிய வெந்தை
விண்ணோர் சாரத் தன்னருள் செய்த வித்தகர் வேத முதல்வர்
பண்ணார் பாட லாட லறாத பசுபதி யீசனோர் பாகம்
பெண்ணா ணாய வார்சடை யண்ணல் பேணுபெ ருந்துறையாரே. 6

எண்ணார்தங்கள் மும்மதிள் வேவ ஏ வலம் காட்டிய எந்தை,
விண்ணோர் சாரத் தன் அருள் செய்த வித்தகர், வேதமுதல்வர்,
பண்ஆர் பாடல் ஆடல் அறாத பசுபதி, ஈசன், ஓர்பாகம்
பெண் ஆண் ஆய வார்சடை அண்ணல் - பேணுபெருந்துறையாரே.

eNNAr tagkaL mummatil vEva E valam kATTiya entai,
viNNOr cArat tan2 aruL ceyta vittakar, vEta mutalvar,
paN Ar pATal ATal aRAta pacupati, Ican2, Or pAkam
peN AN Aya vArcaTai aNNal--pENu peruntuRaiyArE.

**பொருள்:** சிவபெருமான் திருப்பேணுபெருந்துறை இறைவர் ஆவார். தம்மை மதியாதவர்களான அசுரர்களின் முப்புரங்களை எரித்து அழித்தவர். அவற்றை அழிக்க வில் வன்மை காட்டிய எம் தந்தை ஆவார். தேவர்கள் வழிபட அவர்கட்கு தமது அருளை நல்கிய வித்தகர் ஆவார். வேதங்களின் தலைவர். இசை நலம் நிறைந்த பாடல்களோடு ஆடி மகிழும் பசுபதியாய ஈசனும் ஆவார். ஒரு பாகம் பெண்ணுமாய், ஒருபாகம் ஆணுமாய் விளங்கும் நீண்ட சடைமுடியை உடைய தலைவர் ஆவார்.

**குறிப்புரை:** முப்புரம் எரித்த வீரர். தேவர்க்கருளிய தேவதேவர்; பெண்ணாணாய பரமர் இவர் என்கின்றது. எண்ணார் – பகைவர். ஏவலம் – அம்பின் வன்மை. வார் சடை – நீண்ட சடை.

Lord Civan our Father displayed His prowess by using the bow and arrow gutted with fire the three citadels of the hostile Asuras who did not respect Him. He is the adept who graced the Devas who worshipped Him. He is the author of the Vedas. He is Pasupathi i.e., Lord of all souls (*பசுபதி - எல்லா உயிர்களுக்கும் தலைவன்*). He is the Eesan (*ஈசன்*), i.e., Lord of the Universe. He sings tunefully and dances merrily and enjoys these. He is male on one half of His body and female on the other half and has long matted hair. He is our Supreme Lord.

விழையா ருள்ள நன்கெழு நாவில் வினை கெடவேத மாறங்கம்
பிழையா வண்ணம் பண்ணிய வாற்றாற் பெரியோ ரேத்தும் பெருமான்
தழையார் மாவின் றாழ்கனி யுந்தித் தண்ணரி சில்புடை சூழ்ந்து
குழையார் சோலை மென்னடை யன்னங் கூடுபெ ருந்துறையாரே. 7

*விழைஆர் உள்ளம் நன்கு எழு நாவில் வினை கெட, வேதம் ஆறு அங்கம்*
*பிழையா வண்ணம் பண்ணிய ஆற்றால், பெரியோர் ஏத்தும் பெருமான் -*
*தழைஆர் மாவின் தாழ்கனி உந்தித் தண்அரிசில் புடை சூழ்ந்து*
*குழைஆர் சோலை மென் நடை அன்னம் கூடுபெருந்துறையாரே.*

vizai Ar uLLam nan2ku ezu nAvil vin2ai keTa, vEtam ARu agkam
pizaiyA vaNNam paNNiya ARRal, periyOr Ettum perumAn2--
tazai Ar mAvin2 tAz kan2i untit taN aricil puTai cUznta
kuzai Ar cOlai men2 naTai an2n2am kUTu peruntuRaiyArE.

**பொருள்:** செழித்த மாமரத்திலிருந்து உதிர்ந்த பழங்களை குளிர்ச்சியுடைய அரிசிலாறு உருட்டிக் கொண்டு வருகிறது. அந்த ஆற்றங்கரையருகே சூழ்ந்து விளங்கும் தளிர்கள் நிறைந்த சோலைகளில் மெல்லிய நடையை உடைய அன்னங்கள் கூடுகின்றன. இங்கு திருப்பேணுபெருந்துறை இறைவராகிய சிவபெருமான் வீற்றிருக்கின்றார். விருப்பம் பொருந்திய உள்ளத்தோடு நன்மை அமைந்த நாவின்கண் தம்வினை கெட, நான்கு வேதங்களையும் ஆறு அங்கங்களையும் பிழையின்றி முன்னோர் ஓதி வரும் முறையில் பெரியோர் ஓதி ஏத்தும் பெருமானார் இவர்.

**குறிப்புரை:** கனிந்த உள்ளத்தடியார் வேதமோதி ஏத்தும் பெருமான் இவர் என்கின்றது. விழை ஆர் உள்ளம் – விரும்புதலைப் பொருந்திய உள்ளத்தோடு. நாவில் வேதம் ஆறங்கம் பிழையாவண்ணம் வினை கெடப் பண்ணிய ஆற்றால் எனக் கூட்டுக. அரிசில் – அரிசிலாறு.

Lord Civan is enshrined in Penu-perun-thurai on the banks of the river Arisilaaru (*அரிசிலாறு*) which carries fruits that falling from the prolific mango trees. On the banks of this river, trees with tender leaves grow in the gardens. In these gardens swans walk graciously all around.

Lord Civan is worshipped here by great scholars who gladly chant the Vedas with their desirable tongue to eliminate their bad karma. They chant the four Vedas and the six parts (Angas) (*நால்வேதம், ஆறு அங்கம்*) wholeheartedly in flawless manner and tune much as their ancestors did.

பொன்னங் கானல் வெண்டிரை சூழ்ந்த பொருகடல் வேலி யிலங்கை
மன்ன னொல்க மால்வரை யூன்றி மாமுரணாகமுந் தோளும்
முன்னவை வாட்டிப் பின்னருள் செய்த மூவிலை வேலுடை மூர்த்தி
அன்னங் கன்னிப் பேடை யொடாடி யணவு பெருந்துறை யாரே. 8

*பொன்அம் கானல் வெண்திரை சூழ்ந்த பொருகடல்வேலி இலங்கை*
*மன்னன் ஒல்க மால்வரை ஊன்றி, மா முரண் ஆகமும் தோளும்*
*முன்அவை வாட்டி, பின் அருள் செய்த மூஇலைவேல் உடை மூர்த்தி -*
*அன்னம் கன்னிப்பேடையொடு ஆடி அணவு பெருந்துறையாரே.*

pon2 am kAn2al veN tirai cUznta porukaTal vEli ilagkai
man2n2an2 olka mAlvarai Un2Ri, mA muraN Akamum tOLum
mun2 avai vATTi, pin2 aruL ceyta mUilaivEl uTai mUrtti--
an2n2am kan2n2ippETaiyoTu ATi aNavu peruntuRaiyArE.

**பொருள்:** ஆண் அன்னம் கன்னிமையுடைய பெண் அன்னத்தோடு ஆடியும் கூடியும் மகிழும் இடத்தில் இருப்பவர் பேணுபெருந்துறை சிவபெருமான் ஆவார். இலங்கை மாநகர் அழகிய கடற்கரைச் சோலைகளை உடையது. வெண்மையான கடல் அலைகளால் சூழ்ந்துள்ளது. நாற்புரங்களிலும் கடலையே வேலியாக உடையது. இந்நகரின் மன்னனாகிய இராவணன் தளர்ச்சி அடையுமாறு பெரிய கயிலை மலையைக் கால்விரலால் ஊன்றி, அவனுடைய சிறந்த வலிமையுடைய மார்பும், தோள்களும் வலிமை குன்றுமாறு செய்தார் சிவபெருமான்.

பின்னர் அவனது சாமகானம் கேட்டு அவனுக்கு அருள்பல செய்தவர். இவர் மூவிலை வேலையுடைய மூர்த்தியாவார்.

**குறிப்புரை:** உயிர்களின் முனைப்படக்கி ஆட்கொண்டு அருள் வழங்கும் பெருமானிவர் என்கின்றது. பொன் – அழகு. மன்னன் – இராவணன். இவன் தன் மார்பையும் தோளையுமே நம்பித் தருக்கி இருந்தான். ஆதலின், அவற்றைப் பயனற்றனவாக, இறைவன் காட்டவே, தனது மாட்டாமையையும், தலைவன் ஆற்றலையும் உணர்ந்தான். சாமம் பாடினான். இறைவன் அருளினார் என்பது. அணவு – கலக்கின்ற.

Lord Civan is enshrined in Penu-perun-thurai. Here the male swans join their virgin female swans and dance happily moving all around. Lanka is encircled on all it's four sides by the sea which forms a natural fence for the land. The white waves of the sea dash against the beautiful groves that exist near the shores. Lord Civan who holds the three leaved trident in one of His hands, pressed the huge mount Kailash with His toe and crushed the chest and shoulders of the King of Lanka and nullified his mightiness. Raavana's spirit got depressed. Later he repented and begged for pardon and Lord Civan graced him with boons.

புள்வாய் போழ்ந்து மாநிலங் கீண்ட பொருகடல் வண்ணனும் பூவின்
உள்வா யல்லி மேலுறை வானு முணர்வரி யானுமை கேள்வன்
முள்வாய் தாளின் தாமரை மொட்டின் முகமலரக் கயல்பாயக்
கள்வாய் நீலங் கண்மல ரேய்க்குங் காமர்பெ ருந்துறை யாரே. 9

***புள் வாய் போழ்ந்து மா நிலம் கீண்ட பொருகடல்வண்ணனும், பூவின்***
***உள் வாய் அல்லிமேல் உறைவானும், உணர்வு அரியான்; உமைகேள்வன் -***
***முள் வாய் தாளின் தாமரை மொட்டு இன்முகம் மலர, கயல் பாய,***
***கள் வாய் நீலம் கண்மலர் ஏய்க்கும் காமர் பெருந்துறையாரே.***

puL vAy pOzntu mA nilam kINTa porukaTal vaNNan2um, pUvin2
uL vAy allimEl uRaivAn2um, uNarvu ariyAn2; umaikELvan2--
muL vAy tALin2 tAmaraimoTTu in2mukam malara, kayal pAya,
kaL vAy nIlam kaNmalar Eykkum kAmar peruntuRaiyArE.

**பொருள்:** முட்களையுடைய தண்டின்மேல் தாமரை மொட்டு இனிய முகம்போல் மலருகிறது. அதன்கண் கயல்மீன்கள் பாய்கின்றன. தேனை உடைய நீலமலர், கண்மலரை ஒத்துள்ளது. இந்த இயற்கை அழகு மாதர்களின் மலர்ந்த முகங்களைப் போலத் தோற்றம் தருகின்றன. இவ்வாறு வளம் பெற்ற பேணுபெருந்துறையில் நம் இறைவராகிய சிவபெருமான் வீற்றிருக்கிறார். கொக்கு வடிவங் கொண்ட பகாசுரனின் வாயைப் பிளந்தவரும் நிலவுலகைத்

தோண்டிய கடல் வண்ணனும் ஆகிய திருமாலும், தாமரை மலரின் அகஇதழ்கள் மேல் உறையும் நான்முகனும் உணர்ந்து அறிதற்கரியவர்; உமையம்மையின் கணவர் ஆவார்.

**குறிப்புரை:** பதவிகளால் மயங்கிய ஆன்மாக்களால் அறியொணாத பெருமான் இவர் என்கின்றது. புள் – கொக்கு. பகாசுரன் என்பவனைக் கிருஷ்ணாவதார காலத்தில் வாயைப் பிளந்து கொன்ற வரலாறு குறிக்கப் பெறுகின்றது. நிலங்கீண்டது – வராக அவதார வரலாறு. அல்லி – அகவிதழ். தாமரை மொட்டு இன்முகம் மலர – தாமரை அரும்பு இனியமுகம் போல மலர. இப்பகுதி தாமரைப் போது முகம்போல மலர, நீலம் கண்ணை ஒக்க. கயல் விழியையொக்க எல்லாமாக மாதர் முகம் போல முற்றும் மகிழ் செய்யும் அழகிய பெருந்துறை என அறிவித்தவாறு.

Lord Civan is enshrined in Penu-perun-thurai. In the pools of Penu-perun-thurai lotus bud looking like pleasant human face blossom on their thorny stalk over which Kayal fish leap and play. The honeyed blue lilies growing all around are as sweet as the blooming eyes and faces of maids. Penu-perun-thurai known for such an enchanting scene of nature is our Lord's place. An Asura known as Bahan (பகன்) took the form of a Heron and came to kill Krishnan (one of the incarnations of Thirumaal). Krishna tore off the beak of the bird and killed him. In another incarnation as a Hog Thirumaal killed Iranyaakshan (இரண்யாக்ஷன்) and recovered the earth from him. Even this Lord of the seas Thirumaal and Lord Brahma who is seated in the internal petals of the Lotus flower could not know and realise the glory of Lord Civan, who is the consort of Umaa Devi.

**Note:** The Bird: The Asura called Bhagasura who assumed the form of a stork. Vishnu killed him.

குண்டுந் தேருங் கூறைக ளைந்துங் கூப்பிலர் செப்பில ராகி
மிண்டும் மிண்டர் மிண்டவை கண்டு மிண்டுசெயாது விரும்பும்
தண்டும் பாம்பும் வெண்டலை சூலந் தாங்கிய தேவர் தலைவர்
வண்டுந் தேனும் வாழ்பொழிற் சோலை மல்குபெ ருந்துறை யாரே. 10

குண்டும் தேரும், கூறை களைந்தும் கூப்பிலர் செப்பிலர் ஆகி
மிண்டும் மிண்டர் மிண்டுஅவை கண்டு மிண்டுசெயாது விரும்பும்!
தண்டும் பாம்பும் வெண்தலைசூலம் தாங்கிய தேவர் தலைவர் -
வண்டும் தேனும் வாழ் பொழில் - சோலை மல்கு பெருந்துறையாரே.

kuNTum tErum, kURai kaLaintum kUppilar ceppilar Aki
miNTum miNTar miNTu avai kaNTu miNTu ceyAtu virumpum!
taNTum pAmpum veNtalai cUlam tAgkiya tEvar talaivar--
vaNTum tEn2um vAz pozil--cOlai malku peruntuRaiyArE.

**பொருள்:** சிவபெருமானை, பருஉடல் கொண்ட சமணர்களும் தேரர்களாகிய புத்தர்களும் அறிகிலர். அவர்கள் தங்களுடைய ஆடைகளைக் களைந்தும், பல்வகை விரதங்களை மேற்கொண்டும், கைகூப்பி வணங்காதவர்கள். திருப்பெயர்களைக் கூறாதவர்கள். வம்பு செய்யும் இயல்பினர். வீண்தவம் புரிகின்றவர்கள். அவர்களின் மாறான செய்கைகளைக் கண்டு அவற்றை மேற்கொள்ளக் கூடாது. சிவநெறியை விரும்புமின். யோகம், தண்டம், பாம்பு, தலைமாலை, சூலம் ஆகியவற்றை ஏந்திய தேவர் தலைவராகிய நம் இறைவர், வண்டுகளும், தேனும் நிறைந்து வாழும் சோலைகள் நிறைந்த பேணுபெருந்துறையில் உள்ளார்.

**குறிப்புரை:** புத்தர் சமணர் பொய்யுரை கண்டு புந்தி மயங்காது போற்றுங்கள் என அறிவிக்கின்றது. குண்டு – குண்டர். தேர் – தேரர். கூப்பிலர் – வணங்காதவர்களாய். செப்பிலர் – தோத்திரியாதவர்கள் ஆகி. மிண்டர் – வம்பர். மிண்டு – குறும்பு.

The obese Samanars and Buddhists throw away their clothing, undertake penance of different kinds. They neither worship Lord Civan by folding their hands nor chant His name. They are mischievous people in nature and do worthless penance. Ye companions! Do not follow their incongruous way of life. Pray, adore Lord Civan and learn Divine knowledge from Him. Our Civan is the Lord of the Devas. He carries the staff of Yogi (*யோகதண்டம்*), trident and adorns His head with head garland (*தலைமாலை*) and the snake. He is enshrined in Penu-perun-thurai which is surrounded by groves and gardens where the honeybees hum and where the honey laden flowers blossom.

கடையார் மாட நன்கெழு வீதிக் கழுமல வூரன் கலந்து
நடையா ரின்சொல் ஞானசம் பந்தன் நல்லபெ ருந்துறை மேய
படையார் சூலம் வல்லவன் பாதம் பரவிய பத்திவை வல்லார்
உடையா ராகி யுள்ளமு மொன்றி யுலகினின் மன்னுவர் தாமே. 11

கடை ஆர் மாடம் நன்கு எழு வீதிக் கழுமல ஊரன்-கலந்து
நடை ஆர் இன்சொல் ஞானசம்பந்தன்-நல்ல பெருந்துறை மேய
படை ஆர் சூலம்வல்லவன் பாதம் பரவிய பத்துஇவை வல்லார்
உடையார் ஆகி, உள்ளமும் ஒன்றி, உலகினில் மன்னுவர்தாமே.

kaTai Ar mATam nan2ku ezu vItik kazumala Uran2--kalantu
naTai Ar in2col njAn2acampantan2--nalla peruntuRai mEya
paTai Ar cUlam vallavan2 pAtam paraviya pattu ivai vallAr
uTaiyAr Aki, uLLamum on2Ri, ulakin2il man2n2uvartAmE.

**பொருள்:** வாயில்களை உடைய மாடவீதிகளையும் நன்கமைந்த வீதிகளையும் உடைய கழுமலம் என்னும் ஊரில் தோன்றி, அன்போடு கலந்து இன்சொல் நடையோடு பாடுபவர் ஞானசம்பந்தன். நல்ல பேணுபெருந்துறை மேவிய வலிய சூலப்படையை உடைய இறைவன் திருவடிகளைப் பரவிப் போற்றிய இப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓதுபவர். எல்லா நன்மைகளும் உடையவராய் மனம் ஒன்றி உலகில் நிலையான வாழ்வினைப் பெறுவர்.

**குறிப்புரை:** இப்பதிகம் வல்லவர் எல்லா வளமும் உடையவராகி மன ஒருமைப்பாட்டுடன் வாழ்வர் என்கின்றது. கடை – வாயில். மன்னுவர் – வினைப்போகத்திற்கு உரிய காலம் வரையில் பூதவுடலோடும், அதற்குப்பின் புகழுடலோடும் நிலை பெறுவர்.

Gnaanasambandan hails from Kazhumalam wherein the well laid out streets many mansions with proper thresholds are a sight to see. Gnaanasambandan praised, worshipped, and adored with sincere love the Holy Feet of Lord Civan who is holding in one of His hands, a mighty trident and abides in Thiru-p-penu-perun-thurai, Gnaanasambandan sang this hymn in a gentle tune and in a sweet tempered manner. Those who can recite these ten verses in all sincerity and oneness of mind will become prosperous with all goodness and will have a permanent and peaceful life in this world.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*42ஆம் பதிகம் முற்றிற்று*
End of 42nd Hymn

உ
சிவமயம்

# 43. திருக்கற்குடி

## திருத்தலவரலாறு:

திருக்கற்குடி என்னும் இத் திருத்தலம் சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். திருச்சிராப்பள்ளிக்கு அருகில் மேற்றிசையில் உள்ளது. நகரப் பேருந்து வசதிகள் உள்ளன. இன்று உய்யக் கொண்டான் மலை என வழங்குகிறது. நந்திவர்ம பல்லவனால் திருப்பணி செய்விக்கப் பெற்றமையின் நந்திவர்ம மங்கலம் எனக் கல்வெட்டுக்கள் வழங்குகின்றன. மேற்கு நோக்கிய சந்நிதி. அம்மன் சந்நிதிகள் இரண்டு. இறைவன் பெயர் உச்சி நாதர். முத்தீசர், கற்பக நாதர், உச்சீவநாத சுவாமி, உய்யக் கொண்ட நாயனார், விழுமியார், ஆள்வார் விழுமிய தேவர், விழுமிய நாயனார் எனக் கல்வெட்டுக்களிலும், புராணங்களிலும் வழங்கப் பெறுகின்றன. அம்மை, அஞ்சனாட்சி. தீர்த்தங்கள் பொன்னொளி ஓடை, குடமுருட்டி, ஞானவாவி, எண்கோணக் கிணறு, நாற்கோணக் கிணறு என்பன. மார்க்கண்டர் வழிபட்டு அருள் பெற்ற தலம். முனிவர்கட்குக் குருமூர்த்தியாக இருந்து பெருமான் விழுமிய நூல்களை உபதேசித்த தலம். கரனும், ஈழ நாட்டரசனும் வழிபட்ட தலம். தருமை ஆதீன அருளாட்சியில் விளங்குவது.

### கல்வெட்டு:

இத்தலம் இராஜராஜன் காலத்து, பாண்டிய குலாசனி வளநாட்டு ராஜாஸ்ரய சதுர்வேதி மங்கலத்துக் கற்குடி எனவும், குலோத்துங்கன் காலத்து, இராஜமகேந்திர வளநாட்டு உறையூர்க் கூற்றத்துப் பிரமதேயமான மேற்படி சதுர்வேதி மங்கலத்துக் கற்குடி எனவும், முதலாம் இராஜேந்திரன் காலத்து கேரளாந்தக வளநாட்டு உறையூர்க் கூற்றத்துக் கற்குடி எனவும், மல்லிகார்ச்சுன மகாராஜா காலத்து இராஜகம்பீர வளநாட்டுப் பிரமதேயம் ஆன உய்யக் கொண்டான் திருமலை எனவும் வழங்கப் பெறுகின்றது.

தருமம் ஆற்றிய மன்னர்கள்: முதலாம் பராந்தகன், கண்டராதித்தன் மனைவி, பராந்தகன் மாதேவ அடிகளாராகிய செம்பியன் மாதேவியார், உத்தம சோழன், முதலாம் இராஜராஜன், முதலாம் பரகேசரி இராஜேந்திரன், வீர இராஜேந்திரன், முதலாம் குலோத்துங்கன், மல்லிகார்ச்சுன மகாராஜா, மயிலைத் திண்ணன் முதலியோர் அளித்தன பெரும்பாலும் விளக்கிற்காகப் பொன்னும் ஆடும், நிவேதனத்திற்காக நிலமும் ஆகும்.

**பதிக வரலாறு:**

திருப்பராய்த்துறையை வழிபட்டு வந்தருள்கின்ற காழிப்பிள்ளையார், திருக்கற்குடி மலையை அடைந்தார்கள். அம்மலைமேல் எழுந்தருளியுள்ள கனகக்கொழுந்தை – திரிபுரம் எரித்த வீரரை – விடையாளியைப் போற்றி 'வடந்திகழ்' என்னும் இப்பதிகத்தையருளிச் செய்தார்கள்.

## 43. THIRU-K-KARKUDI

### THE HISTORY OF THE PLACE

This sacred place is to the north of the river Cauvery in Chola Naadu, and is near Thiruchchirappalli, from where town buses ply to this place. The place is known today as Uyyakkondaan Malai. Inscriptions call this place Nandhivarma Mangalam, this name stemming from the fact of renovations made by Nandhivarma Pallavan.

The Lord has been known by the names of Uchchinaathar, Muththeesar, Karpakanaathar, Uchcheevanaatha Suvaami, Uyyakkonda Naayanaar, Vizhumiyaar, Azhvaar Vizhumiya Thevar, and Vizhumiya Naayanaar, in inscriptions and puraanaas. The shrine faces west. The Goddess is known as Anjchanaatchi. The sacred fords comprise Ponnoli Odai, Kudamurutti, Jnaanavaavi, Octogonal Well and the Four-cornered Well. The Lord in the form of a guru seated before the sages and taught them books of great holiness. Maarkkandar, Karan and a king of Eezham are among those who worshipped the Lord here. This temple is under the spiritual administration of Darumai Aadheenam.

Many Chola kings from Paraanthakan-I to Kuloththungkan-I and other kings had gifted gold and sheep for lighting lamps and land for holy food offerings.

### INTRODUCTION TO THE HYMN

The child-saint adored the Lord in Thiru-p-paraai-t-thurai and came to Karkudi where he sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 43. திருக்கற்குடி

## 43. THIRU-K-KARKUDI

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

வடந்திகழ் மென்முலை யாளைப் பாகம தாக மதித்துத்
தடந்திரை சேர்புனல் மாதைத் தாழ்சடை வைத்த சதுரர்
இடந்திகழ் முப்புரி நூலர் துன்பமொ டின்பம தெல்லாம்
கடந்தவர் காதலில் வாழுங் கற்குடி மாமலை யாரே. 1

வடம் திகழ் மென்முலையாளைப் பாகம்அதுஆக மதித்து,
தடந் திரை சேர் புனல் மாதைத் தாழ்சடை வைத்த சதுரர்;
இடம் திகழ் முப்புரிநூலர்; துன்பமொடு இன்பம் அது எல்லாம்
கடந்தவர்-காதலில் வாழும் கற்குடி மா மலையாரே.

vaTam tikaz men2 mulaiyALaip pAkam atu Aka matittu,
taTan tirai cEr pun2almAtait tAzcaTai vaitta caturar;
iTam tikaz muppuri nUlar; tun2pamoTu in2pam atu ellAm
kaTantavar--kAtalil vAzum kaRkuTi mA malaiyArE.

**பொருள்:** சிவபெருமான், திருக்கற்குடி மாமலையை விரும்பி அதன்கண் வாழும் இறைவர் ஆவார். முத்துவடம் விளங்கும் மெல்லிய தனங்களை உடைய உமையம்மையை மதித்து இடப்பாகமாகக் கொண்டவர். பெரிய அலைகள் வீசும் கங்கை நங்கையை தாழ்கின்ற சடைமிசை வைத்துள்ள சதுரப்பாடு உடையவர். திருமேனியில் விளங்கும் முப்புரி நூலை அணிந்தவர். இன்ப துன்பங்களைக் கடந்தவர்.

**குறிப்புரை:** ஒருமாதை முடியிலும், ஒருமாதைப் பாகத்திலும் வைத்தும், பிரமசாரியாயிருப்பவர் கற்குடியார் என்கின்றது. முப்புரி நூலர் என்றது 'பவன் பிரமசாரியாகும்' என்பதை விளக்க. வினையின் நீங்கிய முதல்வன் ஆதலின், வினைபற்றி நிகழ்வனவாகிய துன்ப இன்பங்கள் அவரைப் பாதிக்காது என்பது விளக்கக் 'கடந்தவர்' என்றார்.

**குருவருள்:** 'துன்பமொடு இன்பம தெல்லாம் கடந்தவர் காதலில் வாழும் கற்குடி மாமலையாரே' என்ற தொடர் கடவுள் என்ற சொல்லின் பொருளை விளக்குதல் காண்க. கடவுள் என்ற சொல் வேறாய் உடனாய் இருந்து அருள் செய்தலை உணர்த்துவது. கட – கடந்தது. வேறாய் என்பதை உணர்த்துவது. உள் – ஒன்றாய் என்பதை உணர்த்துவது. கடவு என்று பார்க்கும்போது உடனாயிருந்து இயக்குவதைக் காணலாம்.

Civan, the ingenious Lord who had a high esteem for Umaa Devi, accommodated her on the left portion of His body. Her delicate soft breasts are adorned by bright pearl chains. Simultaneously He kept the river Ganges with its billowy waves dashing in the hanging strands of His matted hair. He wears the three ply sacred thread on the His body. He is far beyond happiness and misery and He resides at the hill-Karkudi.

**Note:** In the past, Karkudi was surrounded by forests. It was a settlement of foresters. It is very near Kumaara Vayalur so dear to St. Arunagirinathar.

அங்கமொ ராறுடை வேள்வி யான வருமறை நான்கும்
பங்கமில் பாடலோ டாடல் பாணி பயின்ற படிறர்
சங்கம தார்குற மாதர் தங்கையின் மைந்தர்கள் தாவிக்
கங்குலின் மாமதி பற்றுங் கற்குடி மாமலை யாரே. 2

அங்கம்ஓர்ஆறொடு ஐவேள்வி ஆன அருமறை நான்கும்
பங்கம் இல் பாடலோடு ஆடல் பாணி பயின்ற படிறர் -
சங்கம் அதுஆர் குறமாதர்தம் கையின் மைந்தர்கள் தாவிக்
கங்குலில் மா மதி பற்றும் கற்குடி மா மலையாரே.

agkam or ARoTu aivELvi An2a arumaRai nAn2kum
pagkam il pATalOTu ATal pANi payin2Ra paTiRar--
cagkam atu Ar kuRamAtar tam kaiyin2 maintarkaL tAvik
kagkulil mA mati paRRum kaRkuTi mA malaiyArE.

**பொருள்:** சங்கு வளையல்களைக் குறப்பெண்கள் அணிந்துள்ளனர். அவர்கள் கைகளில் இருக்கும் பிள்ளைகள் இரவு நேரத்தில் தாவிப் பெரிய சந்திரனைக் கைகளால் பற்ற முயற்சிக்கின்றனர். இப்படிப் பட்ட உயரமான திருக்கற்குடி மாமலையில் சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். இவர் வேள்விகட்குரிய விதிகளை விளக்குபவர். ஆறு அங்கங்களுடன் கூடிய அரிய வேதங்கள், நான்காகிய குற்றமற்ற பாடல், ஆடல், தாளச் சதிகள் ஆகியவற்றைப் பழகியவர்.

**குறிப்புரை:** வேதம் பாடியும் படிறர் இவர் என்கின்றது. வேள்வியான அருமறை – யாகவிதிகளை விளக்கும் வேதம். பாணி – கை. ஈண்டு தாளத்தை உணர்த்தியது. படிறர் – பொய்யர். சங்கம் – சங்கு வளையல். கங்குல் – வானம். குறமாதர் கையிலுள்ள பிள்ளைகள் எட்டி மாமதியைப் பற்றுகின்றனர் என்று கற்குடி மலையின் உயரமும் கவினும் உரைத்தவாறு.

Lord Civan is the exponent of the following

Four rare Vedas

The six auxiliaries of the Vedas known as Angas (ஆறு அங்கம்)

Rules for conducting the spiritual discipline - sacrificial fire

Flawless music

Dancing

Agreement in Time measure by hand or cymbols (தாளச் சதி).

This Lord Civan is enshrined in the tall mountain of Karkudi. Here the women of hill tribes wearing conch shell bangles in their hands carry their young male babies in their hands. During night hours when the moon shines in the sky, these babies jump from their mother's hands as if to catch the big moon by their hands.

**Note:** Paani: This Tamil word means hand. In olden days, as now, musicians kept time, clapping hands. So Paani also means taalam.

நீரக லந்தரு சென்னி நீடிய மத்தமும் வைத்துத்
தாரகை யின்னொளி சூழ்ந்த தண்மதி சூடிய சைவர்
போரக லந்தரு வேடர் புனத்திடை யிட்ட விறகில்
காரகி லின்புகை விம்முங் கற்குடி மாமலை யாரே. 3

நீர் அகலம் தரு சென்னி நீடிய மத்தமும் வைத்து,
தாரகையின் ஒளி சூழ்ந்த தண்மதி சூடிய சைவர் -
போர் அகலம் தரு வேடர் புனத்துஇடை இட்ட விறகில்
கார் அகிலின் புகை விம்மும் கற்குடி மா மலையாரே.

nIr akalam taru cen2n2i nITiya mattamum vaittu,
tArakaiyin2 oLi cUznta taNmati cUTiya caivar--
pOr akalam taru vETar pun2attu iTai iTTa viRakil
kAr akilin2 pukai vimmum kaRkuTi mA malaiyArE.

**பொருள்:** வேடர்கள் போர் செய்வதற்கு ஏற்ற அகன்ற மார்பினைக் கொண்டுள்ளவர்கள். அவர்கள் காடுகளிலிருந்து அகில் மரங்களை வெட்டிக் கொணர்ந்து எரிக்கின்றனர். அதினின்று வரும் கரிய அகிலின் புகை மணம் வீசும் திருக்கற்குடி மாமலையின் இறைவர் சிவபெருமான். அவர் பரந்து விரிந்து வந்த கங்கை நதியை உடைய முடிமீது நீண்டு மலர்ந்த ஊமத்தை மலரை அணிந்துள்ளார். அவர் விண்மீன்களின் ஒளி சூழ்ந்து விளங்கும் குளிர்ச்சியான பிறைமதியைச் சூடியுள்ள இறைவர் ஆவர் (திருக்கற்குடி மலையில் அகில்மரங்களே இருக்கின்றன என்பதாம்).

**குறிப்புரை:** கங்கை வைத்த திருமுடிக்கண் மத்தமும் மதியமும் சூடியிருக்கிற இறைவர் இவர் என்கின்றது. அகலந்தரும் – பரந்த. தாரகை – நட்சத்திரம். திருமுடிக்கண் வைத்த அந்த பிராகிருதமதிக்குத் தாரகைகள் சூழ்தல் இல்லையாயினும் மதி என்ற பொதுமை பற்றியருளிய அடைமொழி. போர் அகலம் தரு வேடர் – பொருதற்கு ஏற்ற மார்பினையுடைய வேடர்கள். வேடர்கள் அகிற்காட்டைக் கொளுத்திப் புனம் செப்பனிடுகின்றார்கள் என்பதாம். அம்பெய்திப் பயில்வதால் வலுவடைந்த மார்பு (அகலம்) சிலைசெலமலர்ந்த மார்பு.

The martial race of hunters whose chests are broad enough to wage wars split the eagle wood trees in their forests, bring the logs and burn them. The black smoke arising out of the fire swells up and expands in the air with fragrance of agil (*அகில்*) in the tall mountain of Karkudi. The Lord of this mountain dons His matted hair with the broad and swollen river Ganges along with long and fully blossomed Datura flowers. He is the chief accommodating the cool moon with it's bright and shining stars all around (It is to be understood that there are no trees other than the eagle wood in the mountain forest of Karkudi).

**Note:** Civa is referred to as a Saivaite. Indeed He is the One and only Anaadi-Saiva. The modern temple-priests are Aadi-saivas.

ஒருங்களி நீயிறை வாவென் றும்பர்க ளோல மிடக்கண்
டிருங்கள மார விடத்தை யின்னமு துண்ணிய ஈசர்
மருங்களி யார்பிடி வாயில் வாழ்வெ திரின்முளை வாரிக்
**கருங்களி யானை** கொடுக்குங் கற்குடி மாமலை யாரே. 4

*"ஒருங்கு அளி, நீ இறைவா!" என்று உம்பர்கள் ஓலம் இடக் கண்டு,*
*இருங்களம் ஆர விடத்தை இன்அமுது உண்ணிய ஈசர் -*
*மருங்கு அளி ஆர் பிடி வாயில் வாழ் வெதிரின்முளை வாரி,*
*கருங்களியானை கொடுக்கும் கற்குடி மா மலையாரே.*

"orugku aLi, nI iRaivA!" en2Ru umparkaL Olam iTak kaNTu,
irugkaLam Ara viTattai in2 amutu un2n2iya Icar--
marugku aLi Ar piTi vAyil vAz vetirin2 muLai vAri,
karugkaLiyAn2ai koTukkum kaRkuTi mA malaiyArE.

**பொருள்:** பசுமையோடு முளைத்து வரும் மூங்கில்களை, மதம் கொண்ட கரிய யானை, தானுண்ணாது, அன்பு காட்டி வரும் பெண் யானையின் வாயில் வாரிக்கொடுத்து ஊட்டுகின்றது. அதுபோலவே, கற்குடியில் வீற்றிருக்கும் சிவபெருமான், தேவர்கள்

ஒன்றுகூடி, இறைவா! நீ அனைவரையும் ஒருங்கு காத்தளிப்பாயாக என ஓலமிடுவதைக் கேட்டு, அமுதத்தை அவர்களுக்கு அளித்துவிட்டுத் தாம் நஞ்சினை உண்டார்.

**குறிப்புரை:** தேவர் வேண்ட விடத்தைத் திருவமுது செய்தருளிய ஈசர் சிவம் என்கின்து. **இறைவா! நீ** ஒருங்கு அளி என்று உம்பர்கள் ஓலம் இட எனக் கூட்டுக. இரும் களம் ஆர – பெரிய கண்டம் நிறைய. உண்ணிய – உண்ட. இது ஒரு அரும் பிரயோகம். உண் என்ற பகுதி அடியாகப் பிறக்கும் இறந்தகாலப் பெயரெச்சம் உண்ட என்பதே. உண்ணிய எனவருதல் மிக அருமை. அளியார் பிடி வாயில் – அன்பு செறிந்த பெண் யானையின் வாயில். வெதிர் – மூங்கில். வலிய மதக்களிப்போடு கூடிய யானை தானுண்ணாது, பிடியின் வாயில் அமுதம் போன்ற மூங்கில் முளைகளை வாரிக்கொடுக்கின்ற கற்குடி நாதர், தேவர்கள் வேண்டத் தாம் விடமுண்டு, அவர்கட்கு அமுதம் அளித்தார் என்ற நயம் காண்க.

The Devas lamentingly appealed to Lord Civan "O! Our Lord, kindly protect us all from Death". He pitied them for their distress and swallowed the poison that came out of the sea of milk as though it was nectar. Owing to this, His neck became dark blue in colour. This Lord Civan is enshrined in the big mountain of Karkudi. On this mountain gleeful black male elephants collect young tender shoots of bamboo trees and feed the females that come near them, with love and affection.

போர்மலி திண்சிலை கொண்டு பூதக ணம்புடை சூழப்
பார்மலி வேடுரு வாகிப் பண்டொரு வர்க்கருள் செய்தார்
ஏர்மலி கேழல் கிளைத்த வின்னொளி மாமணி யெங்கும்
கார்மலி வேடர் குவிக்குங் கற்குடி மாமலை யாரே. 5

*போர் மலி திண் சிலை கொண்டு, பூதகணம் புடை சூழப்,*
*பார் மலி வேடுஉருஆகி, பண்டுஒருவர்க்கு அருள்செய்தார் -*
*ஏர் மலி கேழல் கிளைத்த இன்ஒளி மா மணி எங்கும்*
*கார் மலி வேடர் குவிக்கும் கற்குடி மா மலையாரே.*

pOr mali tiN cilai koNTu, pUtakaNam puTai cUza,
pAr mali vETu uru Aki, paNTu oruvaRku aruL ceytAr--
Er mali kEzal kiLaitta in2oLi mA maNi egkum
kAr mali vETar kuvikkum kaRkuTi mA malaiyArE.

**பொருள்:** அழகிய பன்றிகள் நிலத்தைக் கிளைக்கின்றன. அதிலிருந்து இனிய ஒளியோடு கூடிய சிறந்த மணிகள் வெளிப்படுகின்றன. அந்த மணிகளைக் கரிய நிறமுள்ள வேடர்கள் பல இடங்களில் குவித்துள்ளனர். அப்படிக் குவித்துள்ள திருக்கற்குடி மாமலையில் சிவபெருமான் வீற்றிருக்கின்றார். இவர் போர் செய்யத்தக்க வலிய வில்லைக் கையில்

கொண்டு வேடர் உருவம் தாங்கி, பூதகணங்கள் புடைசூழ்ந்து வர, மண்ணுலகத்திற்கு வந்து அருச்சுனனுக்கு பாசுபதம் அளித்து அருள் செய்தார். ஒருவர் என்றது அருச்சுனனைக் குறிப்பதாயிற்று.

***குறிப்புரை:*** வேடரான பெருமான் இவர் என்கின்றது. வேட்டுவ உருவானது அருச்சுனற்குப் பாசுபதம் அருளித்தருள் செய்ய. ஒருவர் – அருச்சுனன். ஏர் – அழகு. கேழல் – பன்றி. கார்மலி வேடர் – கருமை நிறமிகுந்த வேடர்கள். இனம் இனத்தோடு சேரும் என்பதுபோல வேடர் ஆகி வேடரோடு வாழும் மாமலையர் என்ற நயம் ஓர்க.

In ancient times, Lord Civan assumed the guise of a hunter, armed Himself with a martial mighty bow, and surrounded by Bhuta hosts came to earth. Here He confronted Arjunan and in incognito fought with him, and defeated him. Thereafter He unfolded, and showed His real form and graced him with a divine arrow (*பாசுபதாஸ்திரம்*), the chosen weapon of Lord Civa.

In the great mountain of Karkudi brave hogs dug out the earth in search of roots for their food. While burrowing thus, gems of purest rays come out of the earth and get scattered nearby. The dark skinned hunters collect these gems and pile them up conically all around. On this great mountain of Karkudi Lord Civan is enshrined.

உலந்தவ ரென்ப தணிந்தே வூரிடு பிச்சைய ராகி
விலங்கல்வில் வெங்கன லாலே மூவெயில் வேவ முனிந்தார்
நலந்தரு சிந்தைய ராகி நாமலி மாலையி னாலே
கலந்தவர் காதலில் வாழுங் கற்குடி மாமலை யாரே. 6

*உலந்தவர் என்பு அது அணிந்தே, ஊர் இடு பிச்சையர் ஆகி,*
*விலங்கல்வில் வெங்கனலாலே மூஎயில் வேவ முனிந்தார் -*
*நலம் தரு சிந்தையர் ஆகி நா மலி மாலையினாலே*
*கலந்தவர் காதலில் வாழும் கற்குடி மா மலையாரே.*

ulantavar en2pu atu aNintE, Ur iTu piccaiyar Aki,
vilagkalvil vegkan2alAlE mU eyil vEva mun2intAr--
nalam taru cintaiyar Aki, nA mali mAlaiyin2AlE
kalantavar kAtalil vAzum kaRkuTi mA malaiyArE.

***பொருள்:*** சிவபெருமான் எழுந்தருளிய திருக்கற்குடி மாமலையில், நன்மை தரும் எண்ணங்கள் உடையவர்களும், நாவினால் புகழும் சொல் மாலைகளினாலே இறைவன் திருவருளில் ஒருமைப்பட்டவர்களும் வாழ்கின்றார்கள். இங்குள்ள சிவபெருமான்

இறந்தவர்களின் எலும்பை அணிந்து ஊர் மக்கள் இடும் பிச்சையை ஏற்பவர். மேரு மலையாகிய வில்லிடைத் தோன்றிய கொடிய கனலால் முப்புரங்களும் வெந்து அழியுமாறு முனிந்தவர்.

**குறிப்புரை:** பிட்சாடன மூர்த்தியாய் மூவெயிலை முனிந்தவர் இவர் என்கின்றது. உலந்தவர் – இறந்தவர் என்பது. அணிந்து – எலும்புகளைச் சூடி. விலங்கல் – மேருமலையாகிய வில். நாமலி மாலை – நாவில் மலிந்த தோத்திரப் பாமாலை. நலந்தரு சிந்தை – காமம் வெகுளி மயக்கம் முதலிய மூன்றும் கெட்ட மனம். கலந்தவர் – ஒருமைப்பட்டவர்கள். மனம் ஒன்றிய முனி புங்கவர்கள் வாழும் கற்குடி மலை என்றதால் யோகியர் இடம் இது என அறிவித்தவாறு.

Virtuous devotees always hold good thoughts in their minds. They adore the Lord with garlands of words of salutation pronounced by the tongue. These persons of true spiritual wisdom, the yogis with single mindedness, choose to live in Karkudi. The Lord of this place adorns Himself with the bones of the dead and taking the form of a mendicant (*பிட்சாடனர்*) roams around the town and accepts the alms given by the town-folks. He got angry with the Asuras and destroyed their three citadels with the fire that arose from mountain Meru which was used as his bow.

மானிட மார்தரு கையர் மாமழு வாரும் வலத்தார்
ஊனிடை யார்தலை யோட்டி லுண்கல னாக வுகந்தார்
தேனிடை யார்தரு சந்தின் திண்சிறை யாற்றினை வித்திக்
கானிடை வேடர் விளைக்குங் கற்குடி மாமலை யாரே. 7

*மான்இடம் ஆர்தரு கையர், மா மழு ஆரும் வலத்தார்,*
*ஊன்இடை ஆர் தலைஓட்டில் உண்கலன்ஆக உகந்தார் -*
*தேன் இடை ஆர்தரு சந்தின் திண் சிறையால்-தினை வித்திக்,*
*கான்இடை வேடர் விளைக்கும் கற்குடி மா மலையாரே.*

mAn2 iTam Artaru kaiyar, mA mazu Arum valattAr,
Un2 iTai Ar talai OTTil uNkalan2 Aka ukantAr--
tEn2 iTai Ar taru cantin2 tiN ciRaiyAl--tin2ai vitti,
kAn2 iTai vETar viLaikkum kaRkuTi mA malaiyArE.

**பொருள்:** சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கற்குடி மாமலையானது, தேனடைகள் பொருந்திய சந்தன மரங்கள் இடையே, வேடர்கள் கரைகளைக் கட்டி, தினைகளை விதைத்துப் பயிர்களை விளைவிக்கும் இடமாகும். இவர் மானை இடக்கையிலும், மழுவை வலக்கையிலும் தரித்தவர். ஊன்பொருந்திய தலை ஓட்டை உண் கலனாக உகந்தவர்.

**குறிப்புரை:** மானையும் மழுவையும் ஏந்தி, கபாலத்தை உண்கலமாக உகந்தவர் இவர் என்கின்றது. சந்து – சந்தனம், வேடர் சந்தன மரத்தின் நடுவில் தினைவித்தி விளைக்கின்றார்கள் என்பது. ஆன்மாக்கள் வினைப்போகம் தடையாய் இருப்பினும் அவற்றை நீக்கிச் சிவபோகத்தை வித்தி விளைக்கும் புண்ணியபூமி எனக் குறிப்பித்தவாறு.

Lord Civan holds a deer in His left hand and a battleaxe in His right hand. He likes to possess the flesh-sticking skull as His alms-bowl. On the great mountain of Karkudi, honeybees have built their honeycombs in the sandalwood trees. In between the rows of these trees hunters have built strong ridges and sowed Thinai seeds (*தினைவிதைகள்*) - (similar to Ragi, millet etc.,) and develop their agriculture. Our Lord Civan abides in this Karkudi.

**Note**: Honey and millet - powder form part of their basic food of the foresters.

வாளமர் வீர நினைந்த விராவணன் மாமலை யின்கீழ்த்
தோளமர் வன்றலை குன்றத் தொல்விர லூன்று துணைவர்
தாளமர் வேய்தலை பற்றித் தாழ்கரி லிட்ட விசை போய்க்
க்ாளம தார்முகில் கீறுங் கற்குடி மாமலை யாரே. 8

*வாள் அமர் வீரம் நினைந்த இராவணன் மாமலையின்கீழ்க்*
*தோள் அமர் வன்தலை குன்றத் தொல்விரல் ஊன்று துணைவர் -*
*தாள் அமர் வேய் தலை பற்றித் தாழ் கரி விட்ட விசை போய்க்,*
*காளம்அது ஆர் முகில் கீறும் கற்குடி மா மலையாரே.*

vAL amar vIram nin2ainta irAvaNan2 mAmalaiyin2 kIz
tOL amar van2talai kun2Rat tolviral Un2Ru tuNaivar--
tAL amar vEy talai paRRit tAz kari viTTa vicai pOy,
kALam atu Ar mukil kIRum kaRkuTi mA malaiyArE.

**பொருள்:** அடிமரத்தோடு கூடிய மூங்கிலினது நுனித் தழையைப் பற்றி வளைத்து உண்ட யானையானது, மீதமுள்ள அடிமரத்தை வேகமாக வீசுகின்றது. அம்மூங்கில் விசையோடு சென்று கரிய நிறம் பொருந்திய மேகங்களைக் கீறுகிறது. சிவபெருமான் அந்த திருக்கற்குடி மாமலையில் வீற்றிருக்கின்றார். இவர், வாட்போரில் வல்லவனும், தனது பெருவீரத்தை நினைந்தவனும் ஆகிய இராவணனைக் கயிலை மலையின்கீழ் அவன் தோள்களும், வலிய தலைகளும் நெரியுமாறு தமது பழம்புகழ் வாய்ந்த கால்விரலால் ஊன்றிய துணைவர் ஆவார்.

**குறிப்புரை:** இராவணனை விரல் ஊன்றி அடக்கியவர் இவர் என்கின்றது. வேய் – மூங்கில். தாள் – அடி. கரி – யானை. காளம் – கருமை நிறம். யானை மூங்கிலினது நுனியைப் பற்றிவிட்ட விசையால்

கருமுகிலின் வயிறு கீறப்படும் மலை என்றது. திருவருள் துணையிருப்பின் ஆணவமான படலத்தையும் கீறிக் கருணை மழையைக் காணலாம் எனக் குறிப்பித்தவாறு.

Elephants in the great mountain of Karkudi roam about in the bamboo forests and after eating the tender portion of bamboo throws away the remaining portion, which swiftly flies into the sky and dashes against the dark clouds that move over the forest trees. Raavanan, the valiant sword fighter was very proud of his irresistible bodily strength. This haughtiness was nullified by Lord Civan who crushed his shoulders and mighty heads under the reputed great Kailai mountain by pressing it with His toe of Eternal glory. This Lord Civan is our soul mate.

தண்டமர் தாமரை யானுந் தாவியிம் மண்ணை யளந்து
கொண்டவ னும்மறி வொண்ணாக் கொள்கையர் வெள்விடை யூர்வர்
வண்டிசை யாயின பாட நீடிய வார்பொழில் நீழல்
கண்டமர் மாமயி லாடுங் கற்குடி மாமலை யாரே. 9

தண்டு அமர் தாமரையானும், தாவி இம் மண்ணை அளந்து
கொண்டவனும், அறிவு ஒண்ணாக் கொள்கையர்; வெள்விடை ஊர்வர் -
வண்டு இசை ஆயின பாட, நீடிய வார் பொழில் நீழல்,
கண்டு அமர் மா மயில் ஆடும் கற்குடி மா மலையாரே.

taNTu amar tAmaraiyAn2um, tAvi im maNNai aLantu
koNTavan2um, aRivu oNNAk koLkaiyar; veLviTai Urvar--
vaNTu icai Ayin2a pATa, nITiya vAr pozil nIzal,
kaNTu amar mA mayil ATum kaRkuTi mA malaiyArE.

**பொருள்:** வண்டுகள் இசைபாட, நீண்ட பொழிலின் நிழலைக் கண்டு, சிறந்த மயில்கள் மகிழ்ந்து ஆடும் திருக்கற்குடி மாமலையில் சிவபெருமான் வீற்றிருக்கின்றார். குளிர்ந்த தாமரை மலர்மேல் உறையும் நான்முகனாலும், உயர்ந்த இவ்வுலகை அளந்த திருமாலாலும் இவர் அறிய ஒண்ணாத இயல்பினர். இவர் வெண்ணிறமான விடைமீது ஊர்ந்து வருபவர்.

**குறிப்புரை:** அயனும் மாலும் அறியவொண்ணாதார் இவர் என்கின்றது. வார் பொழில் – நீண்ட சோலை. பொழிலின் நீழலில் வண்டு பாடக்கண்டு மயிலாடும் கற்குடி என்றது திருவடி நிழலில் திளைத்திருக்கும் சிவயோகியர் பரநாத இன்னிசை கேட்டு ஆனந்தக் கூத்தாடுகின்ற இடம் என அறிவித்தவாறு.

On the great mountain of Karkudi, peacocks dance cheerfully attracted by the shades of the extensive mountain forests, and groves while bees hum all around. Here abides our Lord Civan whose stature and glory are unknowable to Brahma who is

seated in the cool Lotus flower and also to Thirumaal who measured this earth with giant strides of his feet. He rides on a White Bull.

மூத்துவ ராடையி னாரும் மூசு கடுப்பொடி யாரும்
நாத்துவர் பொய்ம்மொழி யார்கள் நயமில ராமதி வைத்தார்
ஏத்துயர் பத்தர்கள் சித்தரி றைஞ்ச அவரிட ரெல்லாங்
காத்தவர் காமரு சோலைக் கற்குடி மாமலை யாரே. 10

மூத் துவர்ஆடையினாரும், மூசு கடுப்பொடியாரும்,
நாத் துவர் பொய்ம்மொழியார்கள், நயம் இலரா மதி வைத்தார்;
ஏத்து உயர் பத்தர்கள் சித்தர் இறைஞ்ச, அவர் இடர் எல்லாம்
காத்தவர் - காமரு சோலைக் கற்குடி மா மலையாரே.

mUt tuvar ATaiyin2Arum, mUcu kaTuppoTiyArum,
nAt tuvar poymmoziyArkaL, nayam ilarA mati vaittAr;
Ettu uyar pattarkaL cittar iRainjca, avar iTam ellAm
kAttavar--kAmaru cOlaik kaRkuTi mA malaiyArE.

**பொருள்:** காவியாடை அணிந்தவர்கள் புத்தர்கள். கடுக்காய்ப் பொடியை நிரம்ப உண்ணுபவர்கள் சமணர்கள். இவர்கள் வெறுப்பை உண்டாக்கும் பொய்மொழி பேசுபவர்கள். நேயமற்றவர்களாகவும், அறிவில்லாதவர்களாகவும் இருப்பவர்கள். அழகிய சோலைகள் நிறைந்த திருக்கற்குடி மாமலையில் விளங்கும் சிவபெருமான், அவர்களை விடுத்துத், தம்மை ஏத்தி வாழ்த்தி உயரும் பக்தர்களும் சித்தர்களும் வணங்க, அவர்கட்கு வரும் இடர்களை அகற்றிக் காத்தவர்.

**குறிப்புரை:** சமணரும் புத்தரும் அறியமுடியாத பிறை சூடிய பெருமான் என்கின்றது. மூதுவர் ஆடை – முதிர்ந்த காவியாடை. கடு – கடுக்காய்த்துவர். நா துவர் பொய்ம்மொழி – நாக்கிற்குத் துவர்ப்பை உண்டு பண்ணும் பொய்.

The Buddhists who wear ochre robes and the Jains who excessively consume the powder of Chebulic myrabalam (*கடுக்காய்* - Terminalia chebula) utter false words that are sour to their own tongues. Their intellect is so poor that they have neither piety nor devotion. Ye companions! Do not listen to them; leave them alone to have their own way. Lord Civan protects, removes miseries and graces those devotees and siddhars who adore, praise and worship Him. His is the great mountain of Karkudi, which is surrounded by lush gardens.

காமரு வார்பொழில் சூழுங் கற்குடி மாமலை யாரை
நாமரு வண்புகழ்க் காழி நலந்திகழ் ஞானசம் பந்தன்
பாமரு செந்தமிழ் மாலை பத்திவை பாடவல் லார்கள்
பூமலி வானவ ரோடும் பொன்னுல கிற்பொலி வாரே. 11

காமரு வார் பொழில்சூழும் கற்குடி மா மலையாரை
நா மரு வண் புகழ்க் காழி நலம் திகழ் ஞானசம்பந்தன்
பா மரு செந்தமிழ்மாலை பத்துஇவை பாட வல்லார்கள்
பூ மலி வானவரோடும் பொன்னுலகில் பொலிவாரே.

kAmaru vAr pozil cUzum kaRkuTi mA malaiyArai
nA maru vaNpukazk kAzi nalam tikaz njAn2acampantan2
pA maru centamiz mAlai pattu ivai pATa vallArkaL
pU mali vAn2avarOTum pon2n2ulakil polivArE.

**பொருள்:** அழகிய பரந்த பொழில்களால் சூழப்பட்ட திருக்கற்குடி மாமலையில் வீற்றிருப்பவர் சிவபெருமான். இப்பெருமானை நாவிற் பொருந்திய வண்புகழால் போற்றப் பெறும் சீகாழிப் பதியில் தோன்றிய நன்மை அமைந்த ஞானசம்பந்தன் செந்தமிழ் மாலையாகிய இத்திருப்பதிகத்தைப் பாடினார். இப்பாடல்கள் பத்தையும் ஓத வல்லவர்கள் பொலிவுடன் கூடிய தேவர்களோடும் பொன்னுலகின்கண் செழித்து வாழ்வார்கள்.

**குறிப்புரை:** இத்தலத்திறைவனை ஏத்தவல்லவர்கள் தேவராய்த் திகழ்வர் என்கின்றது. காமரு – அழகிய. நாமரு – நாவிற் பொருந்திய.

The benevolent Gnaanasambandan hails from the well renowned and glorious Seerkaazhi which is praised by all tongues (by all people in the earth). He has sung this Tamil heritage garland of ten verses on this Lord of the great mountain of Karkudi that is surrounded by extensive forests. Those who can recite these ten verses with sincerity will abide with the splendorous Devas in the golden heaven.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*43ஆம் பதிகம் முற்றிற்று*
End of 43rd Hymn

உ
சிவமயம்

## 44. திருப்பாச்சிலாச்சிராமம்

### திருத்தலவரலாறு:

திருப்பாச்சிலாச்சிராமம் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். திருச்சி – முசிறி பேருந்து வழித்தடத்தில் உள்ளது. பாச்சில் கூற்றத்து ஆச்சிராமம் ஆதலின், பாச்சிலாச்சிராமம் என வழங்கப்படுகிறது. கல்வெட்டுக்களில் கொள்ளிடத்தின் வடபகுதி பாச்சில்கூற்றம், வடகரை மழபாடி நாடு, இராஜாதிராஜ வளநாடு எனப்பல பெயர்களால் வழங்கப் பெற்றதாகத் தெரிகின்றது. கொல்லி மழவன் புதல்விக்கு உற்ற முயலகன் என்னும் நோயைத் திருஞான சம்பந்த சுவாமிகள் நீக்கி அருளிய தலம். இங்குள்ள நடராஜர் திருவுருவிலும் முயலகன் உருவம் இல்லாமை அறியத் தக்கது. திருவடியின்கீழ் அதற்குப் பதில் ஒரு பெரும் பாம்பு இருக்கிறது. சுந்தரமூர்த்தி சுவாமிகள் 'இவரலாதில்லையோ பிரான்' என இகழ்ந்து பேசிப் பொருள் மிகப் பெற்ற தலம். இறைவனே ஒரு வைசியன் பெண்ணை மணம் செய்து கொண்ட தலம்.

இறைவன் பெயர் மாற்றறிவரதர், சமீவனேசுவரர்; அம்மை பெயர் பாலசௌந்தரி; தீர்த்தம் அன்னமாம்பொய்கை, சிலம்புநதி. பொய்கை, அம்பாள் கோயிலுக்கு எதிரில் உள்ளது. இதன் கரையில் தலவிருட்சமாகிய வன்னிமரம் இருக்கின்றது. சிலம்புநதி ஊருக்கு வடக்கில் ஓடுகின்றது. அது பங்குனியாறு என்றும், அமலையாறு என்றும் சொல்வர்.

கோயிலுக்கு எதிரில் மிக உக்கிர தேவதைகளான தேரடிக் கருப்பண்ண சாமியும், மதுரை வீரன் கோயிலும், அடைக்கலம் காத்தான் கோயிலும் இருக்கின்றன. பார்வதி, பிரமன், இலக்குமி, அகத்தியர் முதலியோர் வழிபட்ட தலம். வைகாசி மாதம் பெருவிழா நடக்கும்.

### கல்வெட்டு:

1891ஆம் ஆண்டில் எடுக்கப் பெற்ற 34 எண்ணுள்ள கல்வெட்டு ஒன்று உள்ளது. ஏனைய எடுக்கப் பெறவில்லை போலும். இது ஹொய்ஸள மன்னன் வீரசோமேஸ்வரன் காலத்தது. இதனால் இக்கோயிலுக்குப் பதினாயிரங்கலம் அரிசி கிடைத்ததாகத் தெரிகின்றது. இவன் கி.பி. 1253இல் சமயபுரத்தைத் தலைநகராகக் கொண்டு ஆண்டு வந்தான். சோழ அரசர்களில் குலோத்துங்கன் விளக்கு எரிக்க நிவந்தம் அளித்து இருக்கிறான்.

## பதிக வரலாறு:

காழிப்பிள்ளையார் திருஅன்பிலாந்துறை, திருமாந்துறை முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு திருப்பாச்சிலாச்சிராமத்திற்கு எழுந்தருளினார்கள். இத்தலம் மழநாட்டைச் சார்ந்தது. அந்நாட்டு மன்னன் கொல்லி மழவன் என்பவன். அவன் மகளுக்கு 'முயலகன்' என்னும் நோயிருந்தது. அது எவ்வாற்றானும் தீருமாறில்லாமையை உணர்ந்த அரசன், தம் மரபில் வழக்கப்படி பாச்சிலாச்சிராமத்து இறைவன் திருமுன் கொண்டுவந்து பாடுகிடத்தி வைத்திருந்தான். அப்போது ஒருநாள் பிள்ளையார் வருகையைத் திருச்சின்ன ஒலிகேட்டு உணர்ந்தான். எல்லா மரியாதைகள் உடனும் எதிர்கொண்டு அழைத்து வந்தான். திருவடியில் வீழ்ந்து வணங்கினான். திருக்கோயிலுக்கு அழைத்துச் சென்றான். திருக்கோயிலை வலம் வந்த பிள்ளையார், உணர்வு அழிந்து நிலத்தில் சோர்ந்து கிடக்கின்ற இளங்கொடியை ஒத்த கன்னியை இறைவன் திருமுன்பு கண்டார். 'இது என்ன ?' என்று மழவனை வினாவினார். அரசன் அவரடியில் வீழ்ந்து இறைஞ்சி 'இவள் என் மகள்; நெடுநாள் முயலகன் என்னும் நோயால் வருந்துகின்றாள். தீர்க்கும் உபாயம் தெரியாமல் சிவபெருமான் திருமுன்பு சேர்ப்பித்திருக்கிறேன்' என்று தெரிவித்துக் கொண்டான். பிள்ளையார் மனமிரங்கி மாற்றறி வரதரை நோக்கி, பிணி தவிர்க்கும் பெரும்பதிகமாகிய 'துணி வளர் திங்கள்' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார். இறைவனைப் போற்றி நின்றார். மழவன் மகள் உடன் பிணிநீங்கி எழுந்து தந்தையின் பக்கம் சார்ந்தாள். எல்லாரும் பிள்ளையார் பெருங்கருணைக்கும் பெருமான் திருவருளுக்கும் இலக்கானார்கள். சுவாமிகள் சிலநாள் அங்கு எழுந்தருளியிருந்து திருப்பைஞ்ஞீலியை அடைந்தார்கள்.

## 44. THIRU-P-PAACHILAA-CH-CHIRAAMAM

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-p-paachilaa-ch-chiraamam is to the north of river Cauvery in Chola Naadu, and is in the Thiruchchi – Musiri bus route.

The Lord is known by the names of Maarrarivaradhar and Sameevanesuvarar and the Goddess, Baalasoundhari. The sacred fords (waterways) are Annamaam Poygai and Silambu river, with the former in front of the Goddess shrine and the latter running to the north of the village. The river is also called Pangkuniyaaru and Amalaiyaaru. The sacred tree is Vanni, standing next to the Poygai. In front of the

temple are other temples for the 'angry gods' Theradi Karuppannasaami, Madhuraiveeran and Adikkalam Kaaththaan.

This temple has the following distinctions: Saint Thirujnaanasambandhar suvaami cured the daughter of one Kolli Mazhavan, the local king, of a disease known as Muyalakan. The image of Natarajar here does not have the usual form of Muyalakan under His foot, and instead has a great snake. Saint Sundharamoorthi Swaami sang sarcastically of the Lord as 'ivaralladhu illaiyo piraan' (is there no Lord other than Him?) and thus obtained wealth from the Lord. Paarvathi, Brahma, Ilakkumi and Agaththiyar offered worship at this temple. The major festival falls in the month of Vaikaasi.

From an inscription of the time of Hoysala King Veera Somesvaran, who ruled over this region with Samayapuram as his capital, it is known that the temple received ten thousand kalams of paddy. Kulohthungkan is known to have made grants for lighting the lamps.

## INTRODUCTION TO THE HYMN

Adoring Civa at Anpillaalanthurai and Maanthurai the child-saint arrived at Thiru-p-paachilaa-ch-chiraamam. There the local chieftain received our Saint in all propriety. He implored our Saint to cure his daughter of the great malady with which the lass was afflicted. At this he sang the following hymn in the shrine of the Lord-God. Lo and behold! The lass stood cured instantaneously.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 44. திருப்பாச்சிலாச்சிராமம் 44. THIRU-P-PAACHILAA-CH-CHIRAAMAM

பண் : தக்கராகம் *Pann: Thakka Raagam*

ராகம் : காம்போதி *Raagam: Kaambothi*

துணிவளர்திங்கள் துளங்கிவிளங்கச் சுடர்ச்சடை சுற்றிமுடித்துப்
பணிவளர்கொள்கையர் பாரிடஞ்சூழ வாரிடமும் பலிதேர்வர்
அணிவளர்கோல மெலாஞ்செய்துபாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
மணிவளர்கண்டரோ மங்கையைவாட மயல்செய்வதோ விவர்மாண்பே. 1

துணி வளர் திங்கள் துளங்கி விளங்கச், சுடர்ச்சடை சுற்றி முடித்துப்,
பணி வளர் கொள்கையர், பாரிடம் சூழ, ஆர் இடமும் பலி தேர்வர்;
அணி வளர் கோலம்எலாம் செய்து பாச்சிலாச்சிராமத்து உறைகின்ற
மணி வளர் கண்டரோ, மங்கையை வாட மயல் செய்வதோ இவர் மாண்பே.

tuNi vaLar tigkaL tuLagki viLagka, cuTarccaTai cuRRi muTittu,
paNi vaLar koLkaiyar, pAriTam cUza, Ar iTamum pali tErvar;
aNi vaLar kOlam elAm ceytu, pAccilAccirAmattu uRaikin2Ra
maNi vaLar kaNTarO, magkaiyai vATa mayal ceyvatO ivar mANpE?

**பொருள்:** சிவபெருமான் முழுமதியினது பாகமாக விளங்கும் ஒரு கலைச்சந்திரனை தம் ஒளி பொருந்திய சடையில் விளங்கித் திகழுமாறு சுற்றிக் கட்டியுள்ளார். அவர் பாம்புகளை அணிந்துள்ளார். பூதங்கள் தம்மைச் சூழ்ந்துவர எல்லோரிடமும் சென்று பலியேற்பவராய் இருக்கின்றார். அழகிய தோற்றத்துடன் விளங்கும் திருப்பாச்சிலாச்சிராமத்தில் தங்கியிருக்கின்ற நீலமணி போன்ற கழுத்துடையவரே! கொல்லி மழவன் மகளாகிய இப்பெண்ணை இவ்வாறு மயங்கச் செய்வது உமக்கு மகிமையாகுமோ என்று பாடியருளினார்.

**குறிப்புரை:** தவறிழைத்த தண்மதியைத் தலையிற்சூடி விடத்தை அமுது செய்த பெருமானோ இவள்வாட மயக்குவது என்கின்றார். துணி–கீறு. பணி வளர் கொள்கையர் – பாம்புகள் வளர்வதைக் கொள்ளுகின்ற திருக்கரங்களை உடையவர். பாரிடம் – பூதம். ஆரிடமும் – ஏற்பார் ஏலாதார் என்கின்ற வேறுபாடில்லாமல் எல்லாரிடமும். மங்கை என்றது கொல்லி மழவனது மகளை.

Lord Civan keeps in His shining matted hair, the single phase crescent moon well bounded and brightly exposed along with the snakes. Surrounded by Bhuta hosts, He abides in Paachilaa-ch-chiraamam, goes to everybody and seeks alms. He is decked

with bright ornaments and His neck is dark blue in colour like that of sapphire. Is it not below His dignity for Lord Civan to see this young girl suffer an incurable malady?

**Note:** The first ten verses are cast in the form of a rhetorical question. Obviously, the answer is 'No'.

கலைபுனைமானுரி தோலுடையாடை கனல்சுட ராலிவர்கண்கள்
தலையணிசென்னியர் தாரணிமார்பர் தம்மடிகள் ளிவரென்ன
அலைபுனல்பூம்பொழில் சூழ்ந்தமர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
இலைபுனைவேலரோ வேழையைவாட இடர்செய்வதோ விவரீடே. 2

கலை புனை மான் உரி-தோல்உடை ஆடை; கனல் சுடரால் இவர் கண்கள்;
தலை அணி சென்னியர்; தார் அணி மார்பர்; தம் அடிகள் இவர் என்ன,
அலை புனல் பூம்பொழில் சூழ்ந்து அமர் பாச்சிலாச்சிராமத்து உறைகின்ற
இலை புனை வேலரோ, ஏழையை வாட இடர் செய்வதோ இவர் ஈடே?

kalai pun2ai mAn2uri-tOl uTai ATai; kan2al cuTarAl ivar kaNkaL;
talai aNi cen2n2iyar; tAr aNi mArpar; tam aTikaL ivar en2n2a,
alai pun2al pUm pozil cUzntu amar pAccilAccirAmattu uRaikin2Ra
ilai pun2ai vElarO, Ezaiyai vATa iTar ceyvatO ivar ITE?

***பொருள்:*** மான்தோலை இடையில் ஆடையாக உடுத்தி இருக்கின்றவர், நெருப்பு, சூரியன், சந்திரன் இவைகளைக் கண்களாகக் கொண்டுள்ளார். தலைமாலை அணிந்துள்ளார். மார்பில் மாலை அணிந்துள்ளார். உயிர்களுக்குத் தலைவர் இவர் என்று சொல்லத் தக்கவராய் இருக்கின்றார். நீர்வளம் நிரம்பிய சோலைகள் சூழ்ந்த பாச்சிலாச்சிராமத்தில் எழுந்தருளி, இலை வடிவமான வேலை ஏந்திய சிவபெருமானாகிய இவர், இந்தப் பெண் வாடுமாறு துன்பப்படுத்துவது இவரது பெருமைக்குப் பொருந்துவதாமோ?

***குறிப்புரை:*** இறைவனது கலை, ஆடை, கண் முதலியன இவை என உணர்த்தி. இவற்றையுடைய இவரோ இவளை இடர் செய்வது என்று வினாவுகின்றது. மானுரி புனைகலை. தோலுடை ஆடை, கனல்சுடர் இவர் கண்கள் என இயைக்க. கலை – மேலாடை. உடை ஆடை – உடுத்தலையுடைய ஆடை. இலை புனை வேலர் – இலைவடிவாகப் புனையப் பெற்ற வேலினை உடையவர். ஏழை – பெண்.

Lord Civan wears in His waist the skin of a deer. His three eyes are the fire, the sun and the moon. In His head He puts on the skull bones. His chest is adorned with garlands. He is the Lord of all souls in the universe. He holds in one of His hands the trident looking like a leaf. He abides in Thiru-p-paachilaa-ch-chiraamam, which has abundant supply of water and is surrounded by natural lush forests. Is it not below His

dignity for Lord Civan to allow the daughter of the king Kolli Mazhavan (கொல்லிமழவன்) to suffer in such a languishing condition?

**Note:** Three are the eyes of Civa, they being the sun, the moon and the Fire-God (Agni).

வெஞ்சுடராடுவர் துஞ்சிருள்மாலை வேண்டுவர்பூண்பது வெண்ணூல்
நஞ்சடைகண்டர் நெஞ்சிடமாக நண்ணுவர் நம்மைநயந்து
மஞ்சடைமாளிகை சூழ்தரு ரச்சி லாச்சிரா மத்துறைகின்ற
செஞ்சுடர்வண்ணரோ பைந்தொடிவாடச் சிதைசெய்வதோ விவர்சீரே. 3

வெஞ்சுடர்ஆடுவர், துஞ்சுஇருள்; மாலை வேண்டுவர்; பூண்பது வெண்நூல்;
நஞ்சுஅடை கண்டர்; நெஞ்சுஇடம்ஆக நண்ணுவர், நம்மை நயந்து;
மஞ்சு அடை மாளிகை சூழ்தரு பாச்சிலாச்சிராமத்து உறைகின்ற
செஞ்சுடர் வண்ணரோ, பைந்தொடி வாடச் சிதைசெய்வதோ இவர் சீரே?

venjcuTar ATuvar, tunjcu iruL; mAlai vENTuvar; pUNpatu veNnUl;
nanjcu aTai kaNTar; nenjcu iTam Aka naNNuvar, nammai nayantu;
manjcu aTai mALikai cUztaru pAccilAccirAmattu uRaikin2Ra
cenjcuTar vaNNarO, paintoTi vATac citai ceyvatO ivar cIrE?

**பொருள்:** சிவபெருமானார் உலகமெல்லாம் அழிந்து ஒழியும் ஊழிக்காலத்து இருளில் கொடிய தீயில் நடனம் ஆடுபவர். தலைமாலை முதலியவற்றை விரும்புபவர். வெண்ணூல் பூணுபவர். நஞ்சை உண்டதால் அவர் கழுத்து நீலநிறமாயிற்று. அன்போடு அவரை விரும்பி நினைத்தவர்கள் நெஞ்சை இடமாகக் கொண்டு எழுந்தருள்பவர். மேகங்கள் தவழ்ந்து வரும் மாளிகைகள் சூழ்ந்த திருப்பாச்சிலாச்சிராமத்தில் எழுந்தருளியவர். செழுமையான தீயின் நிறத்தை உடையவர். இவருடைய புகழுக்கு, தங்க வளையல் அணிந்த மழவன் மகளாகிய இப்பெண்ணை வருத்துவது பொருந்துவதோ?

**குறிப்புரை:** உலகமெல்லாந்துஞ்சும் பிரளய காலத்திருளில் தீயாடுவார். மாலை வேண்டுவார், வெண்ணூல் பூண்பர், நஞ்சடை கண்டர், ஆன்மாக்களாகிய நம்மை எளிவந்த கருணையால் நண்ணுவார் என்கின்றது. துஞ்சு இருள் – அண்டமெல்லாம் இறக்குங்காலமாகிய இருள். இருள் ஆடுவர் என இயைபு படுத்துக. நெஞ்சிடமாக நம்மை நயந்து நண்ணுவர் எனவும் இயைக்க. ஆன்மாக்கள் தற்போதமிழந்து நம்மை நண்ணட்டும் ஆட்கொள்வோம் என்றிராது, சென்று பயன்படும் கால்போலத்தாமே வலியவந்து அணுகுவர் என்பதாம். மஞ்சு – மேகம். சிதை செய்வது – வருத்துவது. இவர் சீர் – இவர் புகழ்.

At the close of an aeon (eon) the entire universe is dissolved when Lord Civan dances alone blazing a trail of fire in the enveloping darkness. He loves to wear the

garland of skulls. He wears the white sacred thread in His chest and His neck is dark blue in colour because He swallowed poison. He loves to abide in the hearts of those who remember Him lovingly. His body frame is as red in colour as that of fire and He is enshrined in Thiru-p-paachilaa-ch-chiraamam. Will it match His honour for Lord Civan to allow to suffer this young girl who is wearing golden bracelet in her hands and is the daughter of Mazhavan?

**Note:** The dance referred to here is the one enacted by Civa in the great crematory after the dissolution of the cosmos.

கனமலர்க்கொன்றை அலங்கலிலங்கக் கனல்தரு தூமதிக்கண்ணி
புனமலர்மாலை யணிந்தழகாய புனிதர்கொ லாமிவரென்ன
வனமலிவண்பொழில் சூழ்தருபாச்சி லாசிரா மத்துறைகின்ற
மனவலிமைந்தரோ மங்கையைவாட மயல்செய்வதோ விவர்மாண்பே. 4

கனமலர்க்கொன்றை அலங்கல் இலங்க, கனல்தரு தூ மதிக்கண்ணி
புன மலர்மாலை அணிந்து, அழகுஆய புனிதர்கொல்ஆம் இவர் என்ன,
அனம் மலி வண்பொழில் சூழ்தரு பாச்சிலாசிராமத்து உறைகின்ற
மனம் வலி மைந்தரோ, மங்கையை வாட மயல் செய்வதோ இவர் மாண்பே?

kan2a malarkkon2Rai alagkal ilagka, kan2al taru tU matikkaNNi
pun2a malar mAlai aNintu, azaku Aya pun2itar kol Am ivar en2n2a,
an2am mali vaNpozil cUz taru pAccilAccirAmattu uRaikin2Ra
man2am mali maintarO, rnagkaiyai vATa mayal ceyvatO ivar mANpE?

**பொருள்:** சிவபெருமானார் கார்காலத்தில் மலரும் கொன்றை மலர் மாலையைத் திருமேனியில் அணிந்தவர். பிரிந்து வாழும் கணவன் / மனைவிகளுக்குத் துன்பந்தரும் தூய பிறைச் சந்திரனைத் தலையில் சூடியவர். அழகாய புனிதர் என்று சொல்லும் படியானவர். எழிலார்ந்த அழகிய சோலைகள் சூழ்ந்த திருப்பாச்சிலாச்சிராமத்து அடியவர்களுக்கு மனநிறைவு தருபவர். இப்பெருமானுக்கு ஒரு பெண் வாடும்படி செய்து மயக்குறுத்துவது மாண்பாகுமோ?

**குறிப்புரை:** கொன்றை மாலை விளங்க. பிறைக்கண்ணியை அணிந்து அழகாய புனிதர் இவர் என அறிவிக்கின்றது. கனமலர் – கார் காலத்து மலரும் கொன்றை மலர். கனம் – மேகம். தூமதி – ஒருகலைப் பிறையாதலின் களங்கமில்லாத மதி. இறைவன் அணிந்தமையின் தூமதி எனலுமாம். வனம் –

அழகு. இங்ஙனம் பிறர் உற்ற துன்பம் போக்குதற்கு அறிகுறியாகப் பிறையை அணிந்த பெருமான் ஒருபெண் வாட மயல்செய்வது மாண்பாகுமா என்று வினாவியவாறு. கனல்தரு – மதிக்கு அடை.

Lord Civan's chest is brightly adorned with the garland made of cassia flowers that blossom in the rainy season. He accommodates the pure bright crescent moon in His head, the moon that causes the parted couples to grieve, when they are away from each other. He is a handsome pure holy person wearing garlands of flowers blossomed in forests. He endowed comfort in the minds of His devotees who live in Thiru-p-paachilaa-ch-chiraamam, which is surrounded by lush forests. Is it not below His dignity for Lord Civan to allow this young girl to suffer in an incurable delusional condition?

மாந்தர்தம்பானறு நெய்மகிழ்ந்தாடி வளர்சடை மேற்புனல்வைத்து,
மோந்தைமுழாக்குழல் தாளமொர்வீணை முதிரவோர் வாய்மூரிபாடி
ஆந்தைவிழிச்சிறு பூதத்தர் பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
சாந்தணிமார்பரோ தையலைவாடச் சதுர்செய்வதோ விவர்சார்வே. 5

*மாந்தர்தம் பால் நறுநெய் மகிழ்ந்து ஆடி, வளர்சடை மேல் புனல் வைத்து,,*
*மோந்தை, முழா, குழல், தாளம், ஓர் வீணை, முதிர ஓர் வாய்மூரி பாடி,*
*ஆந்தைவிழிச் சிறு பூதத்தர்; பாச்சிலாச்சிராமத்து உறைகின்ற*
*சாந்து அணி மார்பரோ தையலை வாடச் சதுர் செய்வதோ இவர் சார்வே?*

mAntar tam pAl naRuney makizntu ATi, vaLarcaTai mEl pun2al vaittu,
mOntai, muzA, kuzal, tALam, or vINai, mutira Or vAy mUri pATi,
Antaivizic ciRu pUtattar; pAccilAccirAmattu uRaikin2Ra
cAntu aNi mArparO, taiyalai vATac catur ceyvatO ivar cArvE?

**பொருள்:** சிவபிரான், மண்ணுலகில் அடியார்களால் பால், நறுமணமுள்ள நெய் ஆகியவற்றைக் கொண்டு அபிஷேகம் செய்வதை விரும்புகின்றார். வளர்ந்த சடைமுடியின் மேல் கங்கை நதியைச் சூடியவர். மொந்தை, முழா, குழல், தாளம், வீணை முதலான வாத்தியங்கள் முழங்க வீற்றிருப்பவர். ஆந்தை போன்ற விழிகளை உடைய சிறு பூதகணங்கள் இவரைச் சூழ்ந்து இருக்கின்றன. இவர் சந்தனக் கலவையை அணிந்த மார்பினர். திருப்பாச்சிலாச்சிராமத்தில் உறைகின்றவர் இவர். இந்தப் பெண்ணை வாடச் செய்து தம் வலிமையைக் காட்டுவது ஏற்புடையதோ?

**குறிப்புரை:** அடியார்கள் ஆட்டும் பால், நெய் முதலானவற்றில் ஆடிக் கங்கையைச் சடைமேல் வைத்து மொந்தை முதலான வாத்தியங்கள் முழங்கப்பாடும் பூதகணநாதர் இவர் என்கின்றது. மோந்தை; மொந்தை என்பதன் நீட்டல் விகாரம். முதிர – ஒலிக்க. ஒருமாதைத் தலையில் வைத்த இவரோ இம்மாது வாடச் சதுர்செய்வது என நயந்தோன்ற உரைத்தவாறு.

Lord Civan likes and enjoys the sacred bath given to Him by devotees on the earth, using milk and pure ghee. He accommodates the river Ganga on His growing matted hair. To the accompaniment of music from 'Monthai-muzha-kuzal – cymbals – Veenai' He sings in melodious tone (*வாய்முரிபாடி*). He is surrounded by Bhutas with eyes like those of owls and His chest is decorated with sandal paste. Is it not below His ability for Lord Civan to allow this young girl to suffer such a swoon?

**Note:** Montai: It is a special type of pot used as a percussion instrument. Today, it goes by the name of Gatam.

Muzhaa: Akin to Mrudangkam. Kuzhal: Flute. Taalam: Cymbals.

Veena: The Indian Lute.

நீறுமெய்பூசி நிறைசடைதாழ நெற்றிக்கண் ணாலுற்று நோக்கி
ஆறதுசூடி யாடரவாட்டி யைவிரற் கோவணவாடை
பாறருமேனியர் பூதத்தர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
ஏறதுவேறிய ரேழையைவாட இடர்செய்வதோ விவரீடே. 6

*நீறு மெய் பூசி, நிறைசடை தாழ, நெற்றிக்கண்ணால் உற்று நோக்கி,*
*ஆறுஅது சூடி, ஆடுஅரவு ஆட்டி, ஐவிரல்கோவணஆடை*
*பால் தரு மேனியர்; பூதத்தர்; பாச்சிலாச்சிராமத்து உறைகின்ற*
*ஏறுஅது ஏறியர்; ஏழையை வாட இடர் செய்வதோ இவர் ஈடே?*

nIRu mey pUci, niRai caTai tAza, neRRikkaNNAl uRRu nOkki,
ARuatu cUTi, ATu aravu ATTi, aiviral kOvaNa ATai
pAl taru mEn2iyar; pUtattar; pAccilAccirAmattu uRaikin2Ra
ERu atu ERiyar; Ezaiyai vATa iTar ceyvatO ivar ITE?

*பொருள்:* சிவபிரான் திருநீற்றை உடல் முழுவதும் பூசியவர். நிறைந்த சடைகள் தாழ்ந்தவாறு விளங்குபவர். தமது நெற்றிக் கண்ணினால் மறக்கருணை காட்டி பாவங்களை போக்குபவர். கங்கையைத் தலையில் அணிந்தவர். ஆடுகின்ற பாம்பைக் கையில் எடுத்து ஆட்டிக் கொண்டு இருப்பவர். ஐந்து விரல் அளவுள்ள கோவண ஆடை அணிந்தவர். பால் போன்ற

வெள்ளிய மேனி உடையவர். பூதகணங்கள் தம்மைச் சூழ திருப்பாச்சிலாச்சிராமத்தில் விடை ஊர்தியாக உறைகின்றவர். இந்தச் சிவபிரான் இப்பெண்ணை வாடுமாறு செய்து இவளுக்குத் துன்பம் செய்வது அவருக்குப் பெருமை தருவது ஒன்றா?

**குறிப்புரை:** அருளும் மறமும் உடையவர் இவர் என அறிவிக்கின்றது. நெற்றிக்கண்ணால் உற்றுநோக்கி என்றது மறக்கருணை காட்டிச் சம்ஹரித்தலைச் சொல்லியது. ஐவிரல் கோவணம் என்பது கோவணத்தின் அகலம் கூறியது. ஏழை – பெண். ஈடு – பெருமை.

Holy ash has been spread all over the body of Lord Civan. His dense matted hair dangles (in the air). He stared through His third eye on His forehead and chastised Kaaman, the god of love (*காமதகனம்*), but nullified Kaaman's evil karma. He accommodates the river Ganges on His head. By catching the dancing snake in His hand, He rattles it. He wears loincloth of five inches width (*கோவணம்*). He shines bright white like milk. Accompanied by Bhuta servitors He abides in Thiru-p-paachilaa-ch-chiraamam. Is it not below His honour for Lord Civan not to care about the sufferings of this young girl who is in incurable affliction?

பொங்கிள நாகமொ ரேகவடத்தோ டாமைவெண் ணூல்புனைகொன்றை
கொங்கிளமாலை புனைந்தழகாய குழகர்கொ லமிவரென்ன
அங்கிளமங்கையோர் பங்கினர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
சங்கொளிவண்ணரோ தாழ்குழல்வாடச் சதிர்செய்வதோ விவர்சார்வே. 7

*பொங்கு இளநாகம், ஓர் ஏகவடத்தோடு, ஆமை, வெண்நூல், புனை கொன்றை,*
*கொங்கு இளமாலை புனைந்து அழகுஆய குழகர்கொல்ஆம் இவர் என்ன,*
*அங்கு இளமங்கை ஓர்பங்கினர்; பாச்சிலாச்சிராமத்து உறைகின்ற*
*சங்குஒளிவண்ணரோ, தாழ்குழல் வாடச் சதிர் செய்வதோ இவர் சார்வே?*

pogku iLa nAkam, or EkavaTattOTu, Amai, veNnUl, pun2ai kon2Rai,
kogku iLa mAlai, pun2aintu azaku Aya kuzakarkol Am ivar en2n2a,
agku iLamagkai Or pagkin2ar; pAccilAccirAmattu uRaikin2Ra
cagku oLi vaNNarO, tAzkuzal vATac catir ceyvatO ivar cArvE?

**பொருள்:** சிவபெருமான் சினம் பொங்கும் இளநாகத்தைப் பூண்டவர். ஒற்றை மாலை அணிந்தவர். ஆமை ஓட்டையும், வெண்மையான பூணூலையையும் அணிந்தவர். தேன் நிறைந்த புதிய கொன்றை மலர்மாலை அணிந்த அழகிய இளைஞர் இவர். இளநங்கையான உமையம்மையை ஒருபாகமாக உடையவர். திருப்பாச்சிலாச்சிராமத்தில் உறைபவர்.

சங்கொலி போல திருநீறு அணிந்த திருமேனியை உடைய இறைவர் இவர். இவரோ இத்தாழ்குழலாள் வருந்தச் சாமர்த்தியமான செயல் செய்வது! இது இவர் பெருமைக்குப் பொருந்துமோ?

**குறிப்புரை:** நாகம், ஆமையோடு, பூணூல், கொன்றைமாலை புனைந்தவர் இவர் என்கின்றது. ஏகவடம் – ஒற்றைமாலை. குழகர் – இளமையுடையவர். சதிர் – சாமர்த்தியம். இளமங்கையைப் பக்கத்தில் உடைய இவர் இவ்வாறு சதிர் செய்தல் ஆகாது என்பது குறிப்பு.

Lord Civan wears the wrathful young raging snake over His chest along with a single garland of gems (*மணிவடம்*). He adorns His body with the tortoise shell and sacred thread. Devotees praise Him by saying "What a young handsome appearance our Lord has with the garland of cassia flowers on His neck and keeping Umaa Devi on the left portion of His body". He smears His body with holy ashes which is as white as the pure white conch shell and is entempled in Thiru-p-paachilaa-ch-chiraamam. Is it a tactful deed of Lord Civan to blink at the suffering of this young virgin, whose hair is dangling in the air, and who is undergoing this swoon?

**Note:** Eka Vatam: A single row (of chain).

ஏவலத்தால்விச யற்கருள்செய்து இராவண னையீடழித்து
மூவரிலும்முத லாய்நடுவாய மூர்த்தியை யன்றிமொழியாள்
யாவர்களும்பர வும்மெழிற்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
தேவர்கள்தேவரோ சேயிழைவாடச் சிதைசெய்வதோ விவர்சார்வே. 8

*ஏ வலத்தால் விசயற்கு அருள் செய்து, இராவணன் தன்னை ஈட அழித்து,*
*மூவரிலும் முதல்ஆய் நடுஆய மூர்த்தியை அன்றி மொழியாள்;*
*யாவர்களும் பரவும் எழில் பாச்சிலாச்சிராமத்து உறைகின்ற*
*தேவர்கள்தேவரோ, சேயிழை வாடச் சிதைசெய்வதோ இவர் சார்வே?*

E valattAl vicayaRku aruLceytu, irAvaNan2tan2n2ai ITu azittu,
mUvarilum mutal Ay naTu Aya mUrttiyai an2Ri moziyAL;
yAvarkaLum paravum ezil pAccilAccirAmattu uRaikin2Ra
tEvarkaL tEvarO, cEyizai vATac citaiceyvatO ivar cErvE?

*பொருள்:* சிவபெருமான் தனது அம்பின் வலிமையால் அருச்சுனனோடு போரிட்டு வென்று அவனுக்கு பாசுபதாஸ்திரம் வழங்கி அருள் செய்தவர். இராவணனின் தற்பெருமையை அழித்தவர். மும்மூர்த்திகளுக்கும் தலைவராம் அவர்கட்கு நடுவே நின்று படைத்தல்,

காத்தல், அழித்தல் தொழிலைப் புரிய அருள் செய்பவர். எல்லோராலும் துதிக்கப்பெறுபவர். திருப்பாச்சிலாச்சிராமத்தில் உறையும் மகாதேவராகிய சிவபெருமான் திருப்பெயரை-யன்றி வேறு வார்த்தைகள் பேசுவதற்கு இப்பெண் அறியாள். இப்பெண்ணை வாடச் செய்தல் இவருடைய தொடர்புக்கு அழகிய செயல் ஆகுமோ?

**குறிப்புரை:** அண்டினாரைக் காத்து மிண்டினாரை அழிக்கும் பெருமையர் இவர் என்கின்றது. ஏ வலத்தால் – அம்பின் வலிமையால். ஈடு – வலிமை. 'இராவணன் தன்னை' என்றும் பாடம்.

Lord Civan with the dominance of His mighty bow fought against and defeated Arjuna, graced Him thereafter by giving Him, what he needed - the mighty divine arrow (*பாசுபதாஸ்திரம்*). It is He who annulled the fame of Raavana as a great warrior. Lord Civan is the Immanent Supreme Lord of the three demigods - Brahma, Vishnu and Rudran, controlling and commanding them to execute their responsibility through His grace. He is entempled in Thiru-p-paachilaa-ch-chiraamam where He is worshipped by one and all. The young daughter of the local king 'Kolli Mazhavan' was averse to speak the name of any god other than our Lord Civan. Is it fair for Lord Civan to allow this girl to suffer from delusional affliction?

மேலதுநான்முக னெய்தியதில்லை கீழது சேவடிதன்னை
நீலதுவண்ணனு மெய்தியதில்லை யெனவிவர் நின்றதுமல்லால்
ஆலதுமாமதி தோய்பொழிற்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
பாலதுவண்ணரோ பைந்தொடிவாடப் பழிசெய்வதோ விவர்பண்பே. 9

மேலது நான்முகன் எய்தியது இல்லை, கீழது சேவடி தன்னை
நீல்அதுவண்ணனும் எய்தியது இல்லை, என இவர் நின்றதும் அல்லால்,
ஆல்அது மா மதி தோய் பொழில் பாச்சிலாச்சிராமத்து உறைகின்ற
பால்அது வண்ணரோ, பைந்தொடி வாடப் பழி செய்வதோ இவர் பண்பே?

mElatu nAn2mukan2 eytiyatu illai, kIzatu cEvaTi tan2n2ai
nIl atu vaNNan2um eytiyatu illai, en2a ivar nin2Ratum allAl,
Al atu mA mati tOy pozil pAccilAccirAmattu uRaikin2Ra
pAl atu vaNNarO, paintoTi vATap pazi ceyvatO ivar paNpE?

**பொருள்:** சிவபெருமான் தீப்பிழம்பாய் நின்ற பொழுது அவன் திருமுடியை நான்முகன் தேடி அடைந்ததுமில்லை. கீழே உள்ள அவருடைய திருவடியை நீல நிறத்தனாகிய திருமால் அடைந்ததுமில்லை என்று உலகம் புகழுமாறு தீ உருவாக நின்றவர் சிவபெருமான்.

ஆலமரங்களின் உச்சியில் பெரிய முழுநிலா சென்று தோயும் சோலைகள் சூழ்ந்த திருப்பாச்சிலாச்சிராமத்தில் உறைந்திருக்கின்றார் பால்வண்ணரான சிவபெருமான். இப்பைந்தொடியாள் வாடுமாறு வஞ்சித்தல் இவர் பண்புக்கு ஏற்ற செயல் ஆகுமோ?

***குறிப்புரை:*** அயனும் திருமாலும் மேலும் கீழும் அறியாதபடி மயங்கச் செய்த பெருமான் இவர் என்கின்றது.

The entire world wondered and praised Lord Civan as He appeared as a tall and huge flame of fire. Lord Civan's head at the top of the fire column could not be reached and seen by the four-faced Brahma. Similarly His Holy Feet at the bottom of the fire column could not be reached and seen by the blue hued Thirumaal. The search and efforts of these two went in vain. Lord Civan having the pure blazing white body as that of milk is enshrined in Thiru-p-paachilaa-ch-chiraamam, which is surrounded by thick forest of banyan trees over which the full moon rests while passing through the sky. Is it His true nature for Lord Civan to allow this young girl to weaken and languish in her stupefied condition?

நாணொடுகூடிய சாயினரேனு நகுவ ரவரிருபோதும்
ஊணொடுகூடிய வுட்குநகையா லுரைக ளவைகொளவேண்டா
ஆணொடுபெண்வடி வாயினர்பாச்சி லாச்சிரா மத்துறைகின்ற
பூணெடுமார்பரோ பூங்கொடிவாடப் புனைசெய்வதோ விவர்பொற்பே. 10

*நாணொடு கூடிய சாயினரேனும் நகுவர், அவர் இருபோதும்;*
*ஊணொடு கூடிய உட்கும் தகையார் உரைகள் அவை கொள வேண்டா;*
*ஆணொடு பெண்வடிவு ஆயினர், பாச்சிலாச்சிராமத்து உறைகின்ற*
*பூண் நெடு மார்பரோ, பூங்கொடி வாடப் புனைசெய்வதோ இவர் பொற்பே?*

nANoTu kUTiya cAyin2arEn2um nakuvar, avar irupOtum;
UNoTu kUTiya uTkum takaiyAr uraikaL avai koLa vENTA;
ANoTu peNvaTivu Ayin2ar, pAccilAccirAmattu uRaikin2Ra
pUN neTu mArparO, pUgkoTi vATap pun2ai ceyvatO ivar poRpE?

***பொருள்:*** சமணர்கள் நாணத்தோடு கூடிய செயல்களை மறந்து ஆடையின்றித் திரிவதோடு எல்லோராலும் பரிகசிக்கத் தக்கவர்கள். புத்தர்கள் இருவேளை உண்டு அஞ்சத்தக்க நகையோடு திரிகின்றனர். அவர்களுடைய சொற்களை உண்மை எனக் கொள்ள வேண்டாம். திருப்பாச்சிலாச்சிராமத்தில் சிவபெருமான் ஆணோடு பெண் வடிவினராய், அணிகலன்கள்

திருமார்பில் பூண்டவராய் விளங்குகின்றார். இப்பெருமான் இப்பூங்கொடியாளை வாடச் செய்து பழிப்புரை கொள்ளுவது இவரது அழகுக்கு ஏற்ற செயலாகுமோ?

***குறிப்புரை:*** புறச்சமயிகள் புல்லுரை கொள்ள வேண்டா என உலகவர்க்கு அறிவுறுத்திப், பின்னர் ஆணோடு பெண் வடிவானவர் இவர் என்கின்றது. நாணொடு கூடிய – நாணத்தோடு சேர்ந்த பிறவற்றையும். சாயினரேனும் – இழந்தவர்களாயினும். நகுவர் – பரிகசிக்கத் தக்கவர்கள். ஆதலால் இருவேளை உண்ணுகின்ற அவருடைய அஞ்சத்தக்க சிரிப்பால் அவர்களைக் கொள்ள வேண்டா என முதல் இரண்டடிகட்கும் பொழிப்புரை காண்க. பெண்ணொருபாதியான பெருமான் ஒரு பெண்ணை வாடச் செய்யார் என்பது குறிப்பு.

Ye companions! Do not heed to the malicious exhortations of the Jains and Buddhists. The Jains roam about nude, forsaking the sense of shame. The Buddhists eat twice a day and move about cachinnating awfully. Lord Civan with His chest decorated with jewels is entempled in Thiru-p-paachilaa-ch-chiraamam having His consort in one part of His body. Does it speak well of Lord Civan to leave the young girl to weaken and languish in stupor? Will it not bring ignoring to Him?

அகமலியன்பொடு தொண்டர்வணங்க வாச்சிரா மத்துறைகின்ற
புகைமலிமாலை புனைந்தழகாய புனிதர்கொ லாமிவரென்ன
நகைமலிதண்பொழில் சூழ்தருகாழி நற்றமிழ் ஞானசம்பந்தன்
தகைமலிதண்டமிழ் கொண்டிவையேத்தச் சாரகி லாவினைதானே. 11

அகம் மலி அன்பொடு தொண்டர் வணங்க, ஆச்சிராமத்து உறைகின்ற
புகை மலி மாலை புனைந்து அழகுஆய புனிதர்கொல்ஆம் இவர் என்ன,
நகை மலி தண்பொழில் சூழ்தரு காழி நல்-தமிழ் ஞானசம்பந்தன்
தகை மலி தண்தமிழ் கொண்டு இவை ஏத்த, சாரகிலா, வினைதானே.

akam mali an2poTu toNTar vaNagka, AccirAmattu uRaikin2Ra
pukai mali mAlai pun2aintu azaku Aya pun2itar kol Am ivar en2n2a,
nakai mali taNpozil cUztaru kAzi nal-tamiz njAn2acampantan2
takai mali taN tamiz koNTu ivai Etta, cArakilA, vin2aitAn2E.

***பொருள்:*** உள்ளம் நிறைந்த அன்போடு தொண்டர்கள் வணங்கும் ஆச்சிராமம் என்னும் ஊரில் உறைகின்றவர் சிவபெருமான். அன்பர்கள் காட்டும் நறுமணப் புகை நிறைந்த மாலைகளைச் சூடியவர். அழகும் தூய்மையும் உடையவருமான சிவபெருமானை, மலர்ந்த குளிர்ச்சியான சோலைகள் சூழ்ந்த சீகாழிப் பதியில் தோன்றிய நற்றமிழ் வல்ல

ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இன்றைக்கும் ஓதுவாரது நோய் தீர்க்கும் இந்தத் தமிழ் மாலையை ஏத்திப் பரவி வழிபடுவோரை வினைகள் சாரா.

**குறிப்புரை:** இப்பாடல் பத்தும் வல்லாரை வினைசாரா என்கிறது. அகமலி அன்பு – மனம் நிறைந்த அன்பு. தகைமலி தண் தமிழ் – இன்றைக்கும் ஓதுவாரது நோய் தீர்க்கும் தகுதி வாய்ந்த தமிழ்.

Lord Civan who is enshrined in Thiru-p-paachilaa-ch-chiraamam is worshipped by His servitors with heartfelt love. He dons His body with garlands made more fragrant with the smoke of the incense. He is known for His purity and beauty. Gnaanasambandan who is well versed in chaste Tamil hails from Seekazhi which is surrounded by cool forests full of flowers. With adoration to Lord Civan who is entempled in Thiru-p-paachilaa-ch-chiraamam he sang this hymn. It is capable to ward off all ailments. It ranks the highest in sublimity. It creates peace and happiness in the minds. Those who can adore and worship Lord Civan with this Tamil garland of ten verses will not be affected by the ill effects of their bad karmaa.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*44ஆம் பதிகம் முற்றிற்று*
End of 44th Hymn

உ
சிவமயம்

# 45. திருவாலங்காடு

## திருத்தலவரலாறு:

திருவாலங்காடு என்ற திருத்தலம் தொண்டை நாட்டுத் தலம் ஆகும். திருவள்ளூர் – அரக்கோணம் பேருந்து வழியில் உள்ளது. திருவாலங்காடு இரயில் நிலையத்திலிருந்து வடக்கே 5 கி.மீ. தூரத்தில் உள்ளது. நடராஜப் பெருமான் நடனம் செய்யும் சபை ஐந்தனுள் இது இரத்தின சபையாகும். இறைவன் காளியை ஊர்த்துவ தாண்டவத்தால் தோற்கச் செய்த தலம். இதனைத் தேவாரம் 'ஆடினார் காளிகாண ஆலங்காட்டடிகளாரே' என்று சொல்லும். பதஞ்சலி கார்க்கோடகன் என்ற பெயரோடும், வியாக்கிரபாதர் முஞ்சிக்கேசர் என்ற பெயரோடும் எப்பொழுதும் நடன தரிசனம் செய்வர். கைலைக்குத் தலையாலே நடந்து சென்ற காரைக்கால் அம்மையார் என்றும் திருவடிக்கீழ் ஆனந்த தாண்டவ தரிசனத்தோடு அமர்ந்து இருக்கின்றார். திருஞான சம்பந்த சுவாமிகள், அம்மையார் தலையாலே நடந்த தலமென்று மிதித்தற்கு அஞ்சிப் புறம்போக, இறைவன் கனவில் 'எம்மை பாட மறந்தனையோ' என்று கேட்டுப் பாடல் பெற்ற தலம். இங்கே வாழ்ந்த வேளாளர்கள் பழையனூர் நீலிக்குக் கொடுத்த வாக்குப்படி உயிர் கொடுத்து, உண்மையை நிலை நாட்டினார்கள். இதனைத் 'துஞ்ச வருவாரும்' என்னும் பதிகத்தில் ஞானசம்பந்த சுவாமிகள் விளக்கியுள்ளார்கள்.

சுவாமி பெயர் தேவரசிங்கப் பெருமான், ஊர்த்துவ தாண்டவேசுவரர். அம்மை பெயர் வண்டார்குழலி. தீர்த்தம் முத்தி தீர்த்தம். தலவிருட்சம் பலா.

## கல்வெட்டு:

அரசியலார் படியெடுத்த கல்வெட்டுக்கள் 52 உள்ளன. இத்தலம் வடகரை மணவிற் கோட்டத்து மேல் மாலை பழையனூர் நாட்டுத் திருவாலங்காடு என்றும், ஜெயங்கொண்ட சோழ மண்டலத்து மேல் மாலையாகிய பழையனூர் நாட்டுத் திருவாலங்காடு என்றும் வழங்கப்படுகின்றது. பெருமான் திருவாலங்காடு உடைய நாயனார் எனக் குறிப்பிடப் படுகின்றார். இத்தலத்துள் ஏதோ ஒரு மண்டபத்தை மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் இருந்த அம்மையப்பன் பழியஞ்சிய பல்லவராயன் கட்டினான். நடராஜப் பெருமான் திருவரங்கில் அண்டம் உற நிமிர்ந்தருளிய நாயனார் எனக் குறிப்பிடப் படுகிறார். இவருக்கு இலத்தூர் நாட்டு அரும்பாக்கத்துக் குன்றத்தூர்க் கோட்டத்து அறநிலை விசாரகன் திரைலோக்கிய மன்னன் வத்ஸராஜன் என்பவன் விளக்குக்காக

நிலமளித்தான். அம்மை வண்டார் குழலி நாச்சியார் எனவும், பிரமராம்பாள் எனவும் குறிப்பிடப்படுகிறார்.

ஏனைய கல்வெட்டுக்கள் நிலம் விற்றதையும், தண்ட நாயகருக்கு உத்தரவு இட்டதையும் அறிவிப்பன. 477, 476 என்ற விஜயநகர அரசர் கல்வெட்டுக்கள் இம்மடி தர்மசிவாச்சாரியார், பொன்னம்பல சிவாச்சாரியார், அனந்தசிவாச்சாரியார், இவர்களுக்கு விழா நடத்த உத்தரவு அளித்துப் பொன் கொடுத்ததையும் உணர்த்துகின்றன. முதலாம் பராந்தக சோழன் காலம் முதல் விஜய நகர அரசர் காலம் வரையுள்ள இக்கல்வெட்டுகளால் இத்தலத்தின் தொன்மையை அறியலாம்.

**பதிக வரலாறு:**

புகலியாண்டகையார் தக்கோலம் என்னும் திருத்தலத்தை அடைந்து திருஊறலை வணங்கிப் பதிகம்பாடிப் பழையனூர், திருவாலங்காட்டிற்கு அருகே வருகின்றார்கள். அப்போது இத்தலம் எம்மையாளும் அம்மை திருத்தலையாலே நடந்து போற்றும் அம்மையப்பரின் அணிநகரல்லவா ? என்ற எண்ணம் உண்டாயிற்று. அதனை மிதிக்க அஞ்சி அடுத்துள்ள ஊரிற்சென்று இரவு பள்ளி கொண்டார்கள். இடையாமத்திலே பிள்ளையார் கனவிலே பெருமான் எழுந்தருளி 'எம்மைப் பாட மறந்தனையோ' என்று வினாவினார். அதனை உணர்ந்த பிள்ளையார் வியந்தெழுந்து கருணையைப் போற்றித் 'துஞ்ச வருவாரும்' என்ற இத்திருப்பதிகத்தை அருளிச்செய்தார்கள். இதில் பழையனூர் நீலி வரலாற்றையும், கனவில் வந்தருளிச் செய்ததையையும் முதல் திருப்பாடலில் சிறப்பித்திருக்கின்றார்கள். இச்செய்தியை மறுநாட்காலையில் எல்லாருக்கும் அறிவித்துத் திருவாலங்காடு சென்று ஆலங்காட்டப்பரை வழிபட்டுத் திருப்பாசூருக்கு வழிக் கொண்டார்கள்.

**குருவருள்:** இத்திருப்பதிகத்தைப் பண் – தக்கராகம் என்று தொன்று பதிப்பித்து வருகிறார்கள். ஆனால் சேக்கிழார் 'பஞ்சமரம் பழையதிறம் கிழமை கொள்ளப் பாடினார் ஞானசம்பந்தர்' என்பதால் இது பழம் பஞ்சுரப்பண்ணாகும். பழம் பஞ்சுரப் பண் வரிசையில் மூன்றாம் திருமுறையில் இடம் பெறத் தக்கதே முறையாகும். ஓதுவார்கள் இது விவரம் தெரிந்து பழம் பஞ்சுரப் பண்ணாகப் பாடுதல் நலம்.

## 45. THIRU-AALANG-KAADU

### THE HISTORY OF THE PLACE

This sacred place is in Thondai Naadu, in the Thiruvalloor - Arakkonam bus route. It is at a distance of 5 km from the railway station of the same name.

The God is known by the names of Thevarasingapperumaan and Oordhdhuva Thaandavesuvarar. The Goddess has the name Vandaarkuzhali. The sacred ford is Muththi Theerththam. The sacred tree is 'Palaa'.

The special significance of this temple is as follows: Of the five pavilions (sabhai) in which the Lord Natarajar dances, this one is known as the Raththina Sabhai (Diamond Pavilion). In a dancing competition the Lord got the better of Kaali by adopting a pose with an uplifted leg known as 'Oordhdhuva Thaandavam'. This is referred to by the Thevaaram, 'aadinaar kaali kaana Aalangkaattadikalaare' (the Lord of Aalangkaadu danced as Kaali watched). This dance is always watched by Pathanjchali (known as Kaarkkotakan) and Viyaagrapaadhar (known as Munjchikesar). Kaaraikkaal Ammaiyaar, who walked to Kaiyilai on her head, sits at the feet of the Lord, watching the dance of bliss. Saint Thirujnaanasambandhar tried to avoid setting foot into this temple, out of respect for Ammaiyaar. But the Lord appeared in his dream and asked him whether he had forgotten to adore Him with his songs, after which the saint gave the Lord his songs. This is also the place where the farmers of the village gave their lives in order to keep their word to one Pazhaiyanoor Neeli. This episode was sung by the saint Thirujnaanasambandhar in the decad, 'thunja varuvaarum'.

The inscriptions in this temple range from the time of Chola Paraanthakan I to the kings of Vijayanagaram. They reveal how the name of the administrative subdivisions within which this village is situated changed from time to time. Different names for the God and Goddess are given in different inscriptions. The inscriptions speak of grant of land for lighting the lamps and gold for holding temple festivals.

## INTRODUCTION TO THE HYMN

Our young saint adored Civa at Takkolam and Thiru Ural and proceeded onward. When he came near Thiru-vaalan-kaadu, he did not consider it proper to enter this holy town on foot as St. Kaaraikkal Ammaiyaar had earlier arrived at this holy town not by walking but moving on her head as support. Therefore our Saint stayed one night in a nearby village. During midnight Civa appeared in his dream and said "Wherefore have you forgotten to hail us?" Our Saint had a mystic experience; when the day broke he proceeded to the temple and sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 45. திருவாலங்காடு — 45. THIRU-AALANG-KAADU

பண் : பழம்பஞ்சுரம்
ராகம் : சங்கராபரணம்

*Pann: Pazhampanjuram*
*Raagam: Sankaraabaranam*

துஞ்சவருவாருந் தொழுவிப்பாரும் வழுவிப்போய்
நெஞ்சம்புகுந்தென்னை நினைவிப்பாரு முனைநட்பாய்
வஞ்சப்படுத்தொருத்தி வாணாள்கொள்ளும் வகைகேட்
டஞ்சும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 1

துஞ்ச வருவாரும், தொழுவிப்பாரும், வழுவிப் போய்
நெஞ்சம் புகுந்து என்னை நினைவிப்பாரும் - முனை நட்புஆய்
வஞ்சப்படுத்து ஒருத்தி வாழ்நாள் கொள்ளும் வகை கேட்டு,
அஞ்சும் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளே.

tunjca varuvArum, tozuvippArum, vazuvip pOy
nenjcam pukuntu en2n2ai nin2aivippArum--mun2ai naTpu Ay
vanjcapaTuttu orutti vAznAL koLLum vakai kETTu,
anjcum pazaiyan2Ur AlagkATTu em aTikaLE.

**பொருள்:** சிவபெருமான் யான் தூங்கும் பொழுது என் கனவில் எழுந்தருளுவார். தம்மைத் தொழுமாறு செய்விப்பார். உயிர்களுடைய முனைப்புக் காலத்தில் மறைந்திருப்பார். அன்பு செய்யும் காலத்தில் என் நெஞ்சம் புகுந்து தம்மை நினையுமாறு செய்பவர். நவஞானி என்ற பார்ப்பனியை அவள் கணவன் கொன்றான். அவள் அவனைப் பழிவாங்க எண்ணி மறுபிறவியில் அவன் மனைவி போல் நடித்து, அவனை வஞ்சித்துக் கொன்றாள். அவள்

கணவனுக்குப் பிணை கொடுத்த இவ்வூரில் வாழ்ந்த எழுபது வேளாளர்களும் தீப்புகுந்து உயிர் துறந்தனர். (குறிப்புரையில் முழு விபரம் காண்க).

**குறிப்புரை:** அடியேனை எல்லாம் செய்விப்பவர் இவர் என்கின்றது. துஞ்சவருவார் – யான் தூங்க என்கனவில் எழுந்தருளுவார். இவன் இறைவன் என்று உணரச் செய்த இறைவனே தொழச் செய்தாலன்றித் தொழும் உரிமையும் ஆன்மாக்களுக்கு இல்லையாதலின் தொழுவிப்பாரும் என்றார். வழுவிப்போய் – உயிர்களுடைய முனைப்புக் காலத்து மறைந்து நின்று, முனைநட்பாய் – முன்னமே இருந்த நட்பினை உடையவளைப் போலாகி, ஒருத்தி யென்றது நீலியை. நவஞானியென்னும் பார்ப்பனியை அவள் கணவன் கொன்றான். அவள் அவனைப் பழிவாங்க எண்ணி மறுபிறவியில் புரிசைக் கிழார் என்னும் வேளாளர்க்குப் புத்திரியாகப் பிறந்திருந்தாள். தோற்றத்தைக் கண்டு அவளைப் பேயென்று ஊரார் புறக்கணித்தனர். முற்பிறப்பின் கணவனாகிய பார்ப்பான் தரிசனச் செட்டி என்னும் பெயரோடு பிறந்திருந்தான். அவனைக் கண்டதும் இவள் அவன் மனைவிபோல நடித்துப் பழிவாங்கத் தலைப்பட்டபோது அவன் அஞ்சியோடி அவ்வூர் வேளாளர் எழுபது பேரிடம் அடைக்கலம் புகுந்தான். அவர்கள் பிணை கொடுத்தனர். இருந்தும் இவள் செட்டியை வஞ்சித்துக் கொன்றாள். பிணை கொடுத்த வண்ணம் எழுபது வேளாளரும் தீப்புகுந்து உயிர் துறந்தனர். இதனைக் கேட்ட அயலார் அனைவரும் அஞ்சினர் என்று தொண்ட மண்டல வரலாற்றில் குறிக்கப் பெற்றுள்ளது.

Lord Civan manifests Himself in my dream while I am sleeping; He graces me and enables me to worship Him, when I am awake. When egoism overpowers me He hides Himself away from me. When I show my real love, He abides in my heart and makes me remember Him and offer worship to Him. A lady who was killed by her husband wanted to take revenge on him. In her next birth she recognized her husband of past birth and killed him. The seventy Vēlaalars belonging to this Aalangadu village who guaranteed to safeguard the life of her husband, sacrificed their lives by entering into fire in lieu of their inability to save the life of her husband as promised by them (See footnote for full story). In this Thiru-aalang-kaadu our Lord is enshrined.

**Note:** That woman: She was known as Neeli. In her previous birth she was the wife of a wastrel and a debauchee who eventually killed her and her son. She became a ghoul and could assume any form. Assuming her earlier form, she appealed to

the Assembly of Vellaalaas (seventy in number), for restitution of her conjugal rights. The Assembly granted her prayer, in spite of her husband's protest. He had with him a magical sword. Neeli appealed to the Assembly to cause her husband part with it. To this the Assembly assented. They assured him that their lives would save as forfeit, should any harm befall him. That very night, the woman killed him and vanished. Coming to know of this, the next day, the seventy Vellaalaas immolated themselves in fire. Even that day Vellaalaas shudder to hear the dreadful name of Neeli.

கேடும்பிறவியு மாக்கினாருங் கேடிலா
வீடுமாநெறி விளம்பினாரெம் விகிர்தனார்
காடுஞ்சுடலையுங் கைக்கொண்டெல்லிக் கணப்பேயோங்
டாடும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 2

கேடும் பிறவியும் ஆக்கினாரும், கேடுஇலா
வீடுமாநெறி விளம்பினார், எம் விகிர்தனார் -
காடும் சுடலையும் கைக்கொண்டு, எல்லிக் கணப்பேயோடு
ஆடும் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளே.

kETum piRaviyum Akkin2Arum, kETu ilA
vITumAneRi viLampin2Ar, em vikirtan2Ar--
kATum cuTalaiyum kaikkoNTu, ellik kaNappEyOTu
ATum pazaiyan2Ur AlagkATTu em aTikaLE.

**பொருள்:** சிவபெருமான் பிறப்பு இறப்புக்களை உயிர்களுக்குத் தந்து அருளியவர். அழிவற்ற வீட்டு நெறியை அடைதற்குரிய நெறிகளையும் உயிர்கள் அறியச்செய்தவரும் அவரே. சிவபெருமான் நம்மிலும் வேறுபட்ட இயல்புடையவர். இடுகாடு, சுடலை ஆகியவற்றை இடமாகக் கொண்டவர். இராப்பொழுதில் பேய்க் கணங்களோடு நடனமாடும் பழையனூரைச் சேர்ந்தவர். இவர் எம் அடிகள் ஆவார்.

**குறிப்புரை:** தோற்ற நரகங்களைத் தந்த இவரே வீட்டு நெறியையும் விளம்பினார் என்கின்றது. கேடு – அழிவு. கேடிலா – என்றும் அழிதலில்லாத. அந்நெறியை யுணர்த்துதலே இறைவனருளிச் செயல், நெறிக்கண் சென்று வீடடைதல் ஆன்மாவின் கடன் என்பது காட்டியவாறு. எல்லி – இரவு. கணப்பேய் – கூட்டமாகிய பேய்.

Lord Civan is the sole and Supreme Lord commanding the many demigods and ordering them to perform their duty, of creation and dissolution (birth and death) of beings. He is the chief who has explained the pathway to the salvation of souls. He is a different entity from us. He dances during the night on the burning ground and in the burning ghat accompanied by hosts of ghouls. This Lord Civan is entempled in Thiru-aalang-kaadu alias Palayanoor (பழையனூர்).

**Note:** Vikirthan: One whose deportment is very strange.

கந்தங்கமழ்கொன்றைக் கண்ணிசூடிக் கனலாடி
வெந்தபொடிநீற்றை விளங்கப்பூசும் விகிர்தனார்
கொந்தண்பொழிற்சோலை யரவிற்றோன்றிக் கோடல்பூத்
தந்தண்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 3

கந்தம் கமழ்கொன்றைக் கண்ணி சூடி, கனல்ஆடி,
வெந்தபொடி-நீற்றை விளங்கப் பூசும் விகிர்தனார் -
கொந்து அம்தண் பொழில்-சோலை அரவின் தோன்றிக் கோடல் பூத்த
அம் தண் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளே.

kantam kamaz kon2Raik kaNNi cUTi, kan2al ATi,
ventapoTi-nIRRai viLagkap pUcum vikirtan2Ar--
kontu aN pozil-cOlai aravin2 tOn2Rik kOTal pUtta,
am taN pazaiyan2Ur AlagkATTu em aTikaLE.

**பொருள்:** சிவபெருமான் மணம் கமழும் கொன்றை மலர் மாலையைச் சூடியவர். தீயில் நின்று ஆடி, சுடுகாட்டில் வெந்த சாம்பலை உடல் முழுதும் விளங்கப் பூசுபவர். நம்மிலும் அவர் வேறுபட்ட இயல்பினர். கொத்துக் கொத்தாகப் பூக்கள் நிறைந்த இயற்கையாய் வளர்ந்த காடுகளும், வைத்து வளர்க்கப்பட்ட பூங்காக்களும் (சோலைகளும்) இவ்வூரில் உள்ளன. பாம்பின் படம் போலக் காந்தள் மலர் மலர்ந்து விளங்கும் அழகிய குளிர்ந்த பழையனூரைச் சேர்ந்தவர் எம் அடிகளான திருவாலங்காட்டுச் சிவபெருமான்.

**குறிப்புரை:** கொன்றையணிந்து, கனலாடி நீறுபூசும் நிமலர் இவர் என்கின்றது. கண்ணி – திருமுடியிற் சூடப்பெறும் மாலை. கொந்து அண் – கொத்துக்கள் நெருங்கிய. பொழில் – இயற்கையே வளர்ந்த காடு. சோலை – வைத்து வளர்க்கப் பெற்ற பூங்கா. கோடல் – செங்காந்தள். கோடல் அரவில் தோன்றிப் பூத்து எனக் கூட்டுக. செங்காந்தள் பூத்திருப்பது பாம்பு படம் எடுத்ததை ஒக்குமாதலின் இவ்வாறு கூறினார்.

Lord Civan wears garland of cassia flowers and dances in the fire surrounding atmosphere. He smears His body with the ashes of burning ghat. He is a different entity from us. He is enshrined in the cool and delightful Thiru-aalang-kaadu of Palayanoor (*பழையனூர்*). Here Kodal flowers (*காந்தள் மலர்*) resembling the hood of snake and bunches of different kinds of flowers blossom in the forest area as if they are a form of garden encircling this town.

பாலமதிசென்னி படரச்சூடி பழியோராக்
காலனுயிர்செற்ற காலனாய கருத்தனார்
கோலம்பொழிற்சோலைப் பெடையோடாடி மடமஞ்ஞை
ஆலும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 4

*பாலமதி சென்னி படரச் சூடிப், பழி ஓராக்*
*காலன் உயிர் செற்ற காலன் ஆய கருத்தனார் -*
*கோலம் பொழில்-சோலைப் பெடையோடு ஆடி மடமஞ்ஞை*
*ஆலும் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளே.*

pAlamati cen2n2i paTarac cUTi, pazi OrAk
kAlan2 uyir ceRRa kAlan2 Aya karuttan2Ar--
kOlam pozil-cOlaip peTaiyOTu ATi maTamanjnjai
Alum pazaiyan2Ur AlagkATTu em aTikaLE.

***பொருள்:*** சிவபெருமான் இளம்பிறையைத் தனது முடிமீது பொருந்தச் சூடியவர். தனக்கு வரும் பழியை ஆராயாத இயமனது உயிரை வென்ற காலகாலராய இறைவர் நம் சிவபெருமான். அவரே, அழகிய இயற்கைக் காடுகளிலும் சோலைகளிலும் ஆண் இள மயில்கள் பெண் மயில்களோடு கூடிக் களித்து ஆரவாரிக்கும் பழையனூரைச் சேர்ந்த எம் அடிகளான திருவாலங்காட்டுச் சிவபெருமான் ஆவார்.

***குறிப்புரை:*** கால காலனாய கருத்தா இவர் என்கின்றது. பாலமதி – இளம்பிறை. பழியோரா – தனக்கு வரும் பழியை ஆராயாத. பழியாவது சிவனடியாரைப் பிடிக்க முயன்ற தீங்கு காலன் பிறவற்றின் உயிர்களைப் பறிப்பதும் இறைவன் அருளாணைவழி நின்றே என்பது விளங்கக் காலகாலனாய கருத்தனார் என்றார். கோலம் – அழகு. ஆலும் – ஆரவாரிக்கும். இது மயில் ஒலியைக் குறிக்கும் மரபுச் சொல்.

Lord Civan keeps the young crescent moon on His matted hair shining brightly. Without anticipating the serious consequences of his action the god of death met with his own death at the feet of Lord Civan who is known as Kaala Kaalan (*காலகாலன்*).

This, our Lord Civan is of Palayanoor Aalangaadu (பழையனூரைச் சார்ந்த ஆலங்காடு) where in its fertile and lush forests and gardens, peacocks dance with their bashful mates making lovely and lively din.

ஈர்க்கும்புனல்சூடி யிளவெண்டிங்கள் முதிரவே
பார்க்குமரவம்பூண் டாடிவேடம் பயின்றாரும்
கார்க்கொள்கொடிமுல்லை குருந்தமேறிக் கருந்தேன்மொய்த் 5
தார்க்கும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே.

ஈர்க்கும் புனல் சூடி, இளவெண் திங்கள் முதிரவே
பார்க்கும் அரவம் பூண்டு ஆடி, வேடம் பயின்றாரும் -
கார்க் கொள் கொடிமுல்லை குருந்தம் ஏறிக், கருந்தேன் மொய்த்து,
ஆர்க்கும் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளே.

Irkkum pun2al cUTi, iLaveN tigkaL mutiravE
pArkkum aravam pUNTu ATi, vETam payin2RArum--
kArk koL koTi mullai kuruntam ERi, karuntEn2 moyttu,
Arkkum pazaiyan2Ur AlagkATTu em aTikaLE.

**பொருள்:** சிவபெருமான் தனது திருமுடியில் இழுத்துச் செல்லும் வலிய கங்கை நதியைச் சூடியுள்ளார். இளம்பிறையை விழுங்க அதன் வளர்ச்சியைப் பார்த்திருக்கும் பாம்பை அணிகலனாகப் பூண்டுள்ளார். நடனம் ஆடிப் பல்வேறு வேடங்களில் தோன்றி அருள்புரிபவர். கார்காலத்தில் முல்லைக் கொடிகள் மலருகின்றன. அந்தக் கொடிகள் குருந்த மரத்தில் ஏறிப் படருகின்றன. அம்மலர்களில் உள்ள தேனை உண்ண வரும் கரிய வண்டுகள் மலர்களை மொய்த்து ஆரவாரிக்கும் இடமான பழையனூரைச் சேர்ந்தவர் எம் அடிகளான திருவாலங்காட்டுச் சிவபெருமான் ஆவார்.

**குறிப்புரை:** இளவெண் திங்கள் முதிரும்வரை பார்த்திருக்கும் அரவம் பூண்டாடிய பெருமான் இவர் என்கின்றது. ஈர்க்கும் – இழுத்துச் செல்லும். திருமுடிக்கண் உள்ள அரவம் உடனிருக்கும் இளம்பிறையை முதிரட்டும்; உண்போம் என்று பார்த்திருக்கின்றது என்பதை விளக்கியவாறு. கார்க்கொள் – கார் காலத்தைக் கொண்ட. கருந்தேன் – கரிய வண்டு.

Lord Civan holds and controls on His head the swift flowing Ganges river. He keeps a snake also on His matted hair which seems to be waiting to swallow the moon and therefore watches its growth. He dances in various postures and bestows His grace. Our Lord of Palayanoor Aalangaadu where during the rainy season, the Mullai

vine (முல்லைக்கொடி - Liana) creeps over the Kuruntha tree (குருந்த மரம்) and where the bussing of black beetles that come to consume honey is heard.

**Note:** Portrayal of the moon being swallowed by the snake on Lord Civa's head, is seen in several works of Saivite literature - St. Kumara Guruparar paints a similar scene involving a crescent, a snake and the river on Lord Civan's matted hair.

Vetam: A holy form. Kuruntam: Wild lime.

பறையுஞ்சிறுகுழலும் யாழும்பூதம் பயிற்றவே
மறையும்பலபாடி மயானத்துறையும் மைந்தனார்
பிறையும்பெரும்புனல்சேர் சடையினாரும் பேடைவண்
டறையும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 6

பறையும் சிறு குழலும் யாழும் பூதம் பயிற்றவே,
மறையும் பல பாடி, மயானத்து உறையும் மைந்தனார்,
பிறையும் பெரும்புனல் சேர் சடையினாரும்-பேடைவண்டு
அறையும் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளே.

paRaiyum ciRu kuzalum yAzum pUtam payiRRavE,
maRaiyum pala pATi, mayAn2attu uRaiyum maintan2Ar,
piRaiyum perumpun2al cEr caTaiyin2Arum--pETaivaNTu
aRaiyum pazaiyan2Ur AlagkATTu em aTikaLE.

**பொருள்:** சிவபெருமானைச் சுற்றி உறையும் பூதங்கள் பறை, சிறுகுழல், யாழ் முதலிய கருவிகளை இயக்குகின்றன. இவர் வேதங்களைப் பாடிக் கொண்டு மயானத்தில் உறைகிறார். பிறைச்சந்திரன், பெருகிவரும், கங்கை ஆகியவற்றை தம் சடையில் அணிந்துள்ளார். அவரே பெண் வண்டுகளோடு கூடிய ஆண் வண்டுகள் ஒலிக்கும் சோலைகள் சூழ்ந்த பழையனூரைச் சேர்ந்த எம் அடிகளான திருவாலங்காட்டுச் சிவபெருமான் ஆவார்.

**குறிப்புரை:** பறை குழல் யாழ் முதலியவற்றைப் பூதகணம் வாசிக்க, திருவாலங்காட்டுறையும் பெருமானிவர் என்கின்றது. பயிற்ற – தம்முடனுறை பூதங்கள் பலகால் முழக்க. பேடை வண்டு – பெண் வண்டு. அறையும் – ஒலிக்கும்.

Lord Civan the beloved, by singing the Vedas to the orchestration of His Bhuta hosts that play drums, small flute and Yazz (பறை; சிறு குழல் மற்றும் யாழ்) goes to the burning ghat. Our Lord in whose crest rests the crescent moon, and the fast flowing

river Ganges is of Palayanoor of Aalangaadu where male and female beetles buzz around in search of honey in the groves that encircle the town.

நுணங்குமறைபாடி யாடிவேடம் பயின்றாரும்
இணங்குமலைமகளோ டிருகூறொன்றா யிசைந்தாரும்
வணங்குஞ்சிறுத்தொண்டர் வைகலேத்தும் வாழ்த்துங்கேட் 7
டணங்கும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே.

நுணங்குமறை பாடி ஆடி வேடம் பயின்றாரும்,
இணங்கும் மலைமகளோடு இரு கூறு ஒன்றுஆய் இசைந்தாரும் -
வணங்கும் சிறுத்தொண்டர் வைகல் ஏத்தும் வாழ்த்தும் கேட்டு
அணங்கும் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளே.

nuNagkumaRai pATi ATi vETam payin2RArum,
iNagkum malaimakaLOTu iru kURu on2Ru Ay icaintArum--
vaNagkum ciRuttoNTar vaikal Ettum vAzttum kETTu,
aNagkum pazaiyan2Ur AlagkATTu em aTikaLE.

**பொருள்:** சிவபெருமான் நுட்பமான ஒலிக்கூறுகளை உடைய வேதங்களைப் பாடியும், ஆடியும் வருபவர். பல்வேறு திருஉருவங்களைக் கொள்பவர். தம்மோடு இணைந்த பார்வதி தேவியுடன் இருவேறு உருவுடைய ஒருவராக இசைந்தவர். தம்மை வணங்கும் அடக்கமுடைய தொண்டர்கள் நாள்தோறும் பாடும் வாழ்த்துக்களைக் கேட்பவர். தெய்வத்தன்மை மிகுந்து தோன்றும் பழையனூரைச் சேர்ந்த எம் அடிகளான திருவாலங்காட்டுச் சிவபெருமான் ஆவார்.

**குறிப்புரை:** உமையொரு கூறனாக, இருவேறுருவின் ஒரு பெரியக் யாக்கையோடு எழுந்தருளிய பெருமான் இவர் என்கின்றது. இருகூறு – சத்தியின்கூறும் சிவத்தின்கூறும் ஆகிய இரண்டு கூறு, வைகல் – நாடோறும். அணங்கும் – தெய்வத்தன்மை மிகும்.

Lord Civan poses in various forms according to needs and as necessitated by the circumstances to grace the souls. He dances and sings the Vedas replete with subtle and rhythmic variations. His body is of two halves - one half is His consort Paarvathi Devi and the other half is Himself. Thus He is one but with two different shapes. Our Lord abides in Palayanoor of Thiru-aalang-kaadu, which became a renowned holy place because the servitors worship Him with all humility and sing daily divine songs in the temple and elsewhere.

கணையும்வரிசிலையு மெரியுங்கூடிக் கவர்ந்துண்ண
இணையிலெயின்மூன்று மெரித்திட்டாரெம் மிறைவனார்
பிணையுஞ்சிறுமறியுங் கலையுமெல்லாங் கங்குல்சேர்ந்
தணையும்பழையனூரா லங்காட்டெம் மடிகளே. 8

*கணையும் வரிசிலையும் எரியும் கூடிக் கவர்ந்து உண்ண,*
*இணை இல் எயில்மூன்றும் எரித்திட்டார், எம் இறைவனார் -*
*பிணையும் சிறுமறியும் கலையும் எல்லாம் கங்குல் சேர்ந்து*
*அணையும் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளே.*

kaNaiyum varicilaiyum eriyum kUTik kavarntu uNNa,
iNai il eyil mUn2Rum erittiTTAr, em iRaivan2Ar--
piNaiyum ciRumaRiyum kalaiyum ellAm kagkul cErntu
aNaiyum pazaiyan2Ur AlagkATTu em aTikaLE.

***பொருள்:*** சிவபெருமான் ஒப்பற்ற முப்புரங்களை அம்பும் வில்லும் தீயும் கூடி கவர்ந்து உண்ணுமாறு எரித்தவர் ஆவார். அவரே பெண்மான் அதன் குட்டிகள் மற்றும் ஆண்மான் ஆகியன இரவில் சென்று ஒதுங்கும் பழையனூரைச் சேர்ந்த எம் அடிகளான திருவாலங்காட்டுச் சிவபெருமான் ஆவார்.

***குறிப்புரை:*** முப்புரங்களை வில்லும் அம்பும் தீயும்கூடி எரிக்கச் செய்த இறைவன் இவர் என்கின்றது. இணை – ஒப்பு. பிணை – பெண்மான். மறி – மான்குட்டி. கலை – ஆண்மான். கங்குல் – இரா.

Our Lord Civan burnt the three matchless citadels using the combined action of the bow and fire tipped arrow. He is our Lord enshrined in Palayanoor of Thiru-aalang-kaadu where the female deer, male deer and their young ones all join together during the night for a get-together'.

கவிழமலைதரளக் கடகக்கையா லெடுத்தான்தோள்
பவழநுனைவிரலாற் பையவூன்றிப் பரிந்தாரும்
தவழுங்கொடிமுல்லைப் புறவஞ்சேர நறவம்பூத்
தவிழும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 9

*கவிழ மலை, தரளக் கடகக் கையால் எடுத்தான் தோள்*
*பவழ நுனைவிரலால் பைய ஊன்றிப் பரிந்தாரும் -*
*தவழும் கொடிமுல்லை புறவம் சேர நறவம் பூத்து*
*அவிழும் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளே.*

kaviza malai, taraLak kaTakak kaiyAl eTuttAn2 tOL
pavaza nun2iviralAl paiya Un2Rip parintArum--
tavazum koTimullai puRavam cEra naRavam pUttu
avizum pazaiyan2Ur AlagkATTu em aTikaLE.

**பொருள்:** முத்துக்கள் பதித்த வீரக்கடகம் அணிந்த தன் கைகளால் கயிலை மலையை நிலைகுலையுமாறு பெயர்த்தவன் இராவணன். அவனது தோள் வலிமையைத் தமது பவளம் போன்ற கால் விரல் நுனியால் மெல்ல ஊன்றி நெருக்கினார் சிவபெருமான். பின்னர் அவனுக்கு இரங்கி அருள்புரிந்தவரும் அவரே முல்லைக் கொடிகள் முல்லை நிலத்தின்மேல் படர, நறவக் கொடிகள் மலர்களைப் பூத்து விரித்து நிற்கும் பழையனூரைச் சேர்ந்தவர் எம் அடிகளான திருவாலங்காட்டுச் சிவபெருமான்.

**குறிப்புரை:** இராவணனைப் பைய நெரித்த பெருமான் இவர் என்கின்றது. மலை – கயிலை மலை. தரளக்கடகம் கை – முத்துக் கடகம் செறிந்த கை. பவழநுனை விரல் – பவழம் போன்ற நுனியை உடைய விரல். பைய – மெதுவாக. பரிந்தார் – கருணை செய்தவர். புறவம் – முல்லை நிலம். நறவம் – நறவு மலர்.

Raavanan wears pearl-inlaid bracelets on his hands. He once tried to uproot mount Kailash, the abode of Lord Civan, who then gently pressed the mountain with His coral like toe and nullified his shoulder's strength and his haughtiness. Later when he repented, Lord Civan forgave him and graced him with boons. This Lord Civan abides in Palayanoor of Thiru-aalang-kaadu where the Mullai vines (முல்லைக் கொடி), crawl and spread in the forest lands while the vines of Naravam flowers (நறவப்பூக்களின் கொடிகள்) spread and the flowers therein unfold their petals and blossom all around.

**Note:** Naravam: A fragrant creeper. Mayil Kondrai (Peacock's crest).

பகலுமிரவுஞ்சேர் பண்பினாரும் நண்போரா
திகலுமிருவர்க்குமெரி யாய்த்தோன்றி நிமிர்ந்தாரும்
புகலும்வழிபாடு வல்லார்க்கென் றுந்தீயபோய் 10
அகலும்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே.

பகலும் இரவும் சேர் பண்பினாரும் நண்பு ஓராது
இகலும் இருவர்க்கும் எரிஆய்த் தோன்றி நிமிர்ந்தாரும் -
புகலும் வழிபாடு வல்லார்க்கு என்றும் தீய போய்
அகலும் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளே.

pakalum iravum cEr paNpin2Arum, naNpu OrAtu
ikalum iruvarkkum eri Ayt tOn2Ri nimirntArum--
pukalum vazipATu vallArkku en2Rum tIya pOy
akalum pazaiyan2Ur AlagkATTu em aTikaLE.

***பொருள்:*** நான்முகனும், திருமாலும் பகல், இரவு போன்ற வெண்மை மற்றும் கருமை நிறம் கொண்டவர்கள். அவர்கள் தங்களிடையே தந்தையும் மகனும் என்ற உறவு முறை கருதாது, யார் பெரியவர் என்பதில் மாறுபட்டு நின்றனர். அவர்கள் இருவருக்கும் இடையே எரியுருவாய்த் தோன்றி ஓங்கி நின்றவர் சிவபெருமான். அவரே ஆகம நூல்களில் சொல்லப் பெற்ற வழிபாடுகளில் தலைநிற்கும் அடியவர்களை என்றைக்கும் பாவம் அணுகாத வண்ணம் பாதுகாக்கும் எம் அடிகளான பழையனூர் திருவாலங்காட்டுச் சிவபெருமான் ஆவார்.

***குறிப்புரை:*** தந்தையும் மகனும் என்ற முறையையும் பாராதே முனிந்த அயனுக்கும் மாலுக்கும் இடையே எரியாய் நிமிர்ந்த பெருமான் இவர் என்கின்றது. நண்பு – தந்தையும் மகனுமான முறையன்பு. இகலும் – மாறுபட்ட. புகலும் – விதிநூல்களாய ஆகமங்களிற் சொல்லப்பெற்ற. உண்ணும்வரை நோய்தடுக்கும் உலக மருந்துகள் போலாது என்றைக்கும் பாவம் அணுகாத வண்ணம் பாதுகாக்கும் அடிகள் என்பதை விளக்குதல் காண்க.

Brahma is white in colour as the daylight; but Vishnu is as dark as nighttime. Without realizing the relationship among themselves (Thirumaal and Brahma as father and son) they contended with each other as to who was the superior of the two. At that moment Lord Civan stood in between them as a tall and big flame of fire; Lord Civan nullifies the evil effects of His devotees and graces them who are highly well versed in the Aagamaas, and who strictly adhere to the rules regarding oblations and rituals as described therein. He is our Lord who is enshrined in Palayanoor of Thiru-aalang-kaadu.

போழம்பலபேசிப் போதுசாற்றித் திரிவாரும்
வேழம்வருமளவும் வெயிலேதுற்றித் திரிவாரும்
கேழல்வினைபோகக் கேட்பிப்பாருங் கேடிலா
ஆழ்வர்பழையனூ ராலங்காட்டெம் மடிகளே. 11

போழம்பல பேசிப் போது சாற்றித் திரிவாரும்,
வேழம் வரும்அளவும் வெயிலே துற்றித் திரிவாரும்,
கேழல் வினை போகக் கேட்பிப்பாரும்; கேடுஇலா
ஆழ்வர்-பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளே.

pOzampala pEcip pOtu cARRit tirivArum,
vEzam varum aLavum veyilE tuRRit tirivArum,
kEzal vin2ai pOkak kETpippArum; kETu ilA
Azvar--pazaiyan2Ur AlagkATTu em aTikaLE.

**பொருள்:** புறச்சமயத்தார் மாறுபட்ட சொற்களைப் பேசுபவர்கள். காலத்திற்கு ஏற்றவாறு உண்மையல்லாதவைகளைச் சொல்லித் திரிபவர்கள். நன்மையல்லாதவற்றை உபதேசங்களாகக் கூறுபவர்கள். யானைத்தீ என்னும் நோய் வரும் அளவும் வெயிலிடை உண்டு திரிபவர்கள். இவர்களைச் சாராது அழிவற்ற ஆளுமையுடைய பழையனூர் திருஆலங்காட்டுச் சிவபெருமான், தம்மைச் சேர்ந்த அடியவர்களின் வினைகள் அகலுமாறு அவர்களுக்குப் புரியும்படியாக உபதேசங்களைச் செய்பவர். அவரது ஆளுமை அழிவற்றது.

**குறிப்புரை:** போழம் – மாறுபட்ட சொல். போது சாற்றி – காலம் பார்த்துச் சொல்லி. திரிவார் என்றது புறச்சமயிகளை. வேழம் – யானைத்தீ என்னும் நோய். துற்றி – உண்டு. கேழல் வினை – கெழுவுதலை உடைய வினை. போக – கெட. கேழ்பவர் – நன்மை உடையார். கேழ்பு – நன்மை. கேழ் அல் – நன்மை அல்லாத.

Adherents of other religions (புறச்சமயத்தார் – Jains and Buddhists) always speak in controversy. They roam about prattling deceptive messages according to the circumstances. They deliver sermons which are base and do no good. They stand and eat their food under the scorching sun until they are afflicted by Yaanai-th-thee (யானைத்தீ என்னும் கொடிய வியாதி). Those who refuse to follow these people, are the devotees of Lord Civan and they will be blessed by Him. He will advise them on how to get to know things to ward off the evil effects of their sins in their lives. He is the flawless ruler and He abides in Palayanoor of Thiru-aalang-kaadu.

**Note:** There are twelve verses in this hymn as against 11 verses that are normally found in many other hymns.

சாந்தங்கமழ்மறுகிற் சண்பைஞான சம்பந்தன்
ஆந்தண்பழையனூ ராலங்காட்டெம் மடிகளை
வேந்தனருளாலே விரித்தபாட லிவைவல்லார் 12
சேர்ந்தஇடமெல்லாந் தீர்த்தமாகச் சேர்வாரே.

சாந்தம் கமழ் மறுகில் சண்பை ஞானசம்பந்தன்
ஆம் தண் பழையனூர் ஆலங்காட்டு எம் அடிகளை
வேந்தன் அருளாலே, விரித்த பாடல்இவை வல்லார்
சேர்ந்த இடம் எல்லாம் தீர்த்தம் ஆகச் சேர்வாரே.

cAntam kamaz maRukil caNpai njAn2acampantan2
Am taN pazaiyan2Ur AlagkATTu em aTikaLai,
vEntan2 aruLAlE, viritta, pATal ivai vallAr
cErnta iTam ellAm tIrttam Akac cErvArE.

**பொருள்:** சந்தனம் கமழும் திருவீதிகளை உடைய சண்பைப் பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தன். அழகிய தண்ணிய ஆலங்காட்டு வேந்தனாக விளங்கும் சிவபெருமான் திருவருளாலே இதைப் போற்றி விரித்து ஓதினார். இந்தத் திருப்பதிகத்தை பாட வல்லவர்கள் அவர்கள் சேர்ந்த இடமெல்லாம் புனிதமானவைகளாய்ப் பொருந்தப் பெறுவர்.

**குறிப்புரை:** இறைவனருளால் பாடிய இதை வல்லார் சேர்ந்த இடமெல்லாம் புனிதமாம் எனப் புகல்கின்றது. சாந்தம் – சந்தனம். தீர்த்தமாக – புனிதமாக. சேர்வார் – பொருந்துவார். இந்தத் திருப்பதிகத்தில் 12 பாக்கள் உள்ளன என்பதை நோக்குக.

Gnaanasambandan hails from the town Seekaazhi also known as Shanby (சண்பை) where the aroma of sandalwood spreads all over the streets. Animated by the grace of the sovereign Lord of Thiru-aalang-kaadu Gnaanasambandan composed these hymns. Those who recognize the importance of these make the place pure and holy wherever they go.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*45ஆம் பதிகம் முற்றிற்று*
**End of 45th Hymn**

உ
சிவமயம்

# 46. திருவதிகைவீரட்டானம்

## திருத்தலவரலாறு:

திருவதிகைவீரட்டானம் என்ற திருத்தலம் நடு நாட்டுத் தலம் ஆகும். கடலூர் – சென்னை இருப்புப் பாதையில் பண்ணுருட்டி இரயில் நிலையத்திற்கு அருகில் உள்ளது. சென்னை, கடலூர், விருத்தாசலம், சிதம்பரம் நகர்களில் இருந்து பேருந்துகளில் பண்ணுருட்டி வரலாம். அப்பர் அருள் பெற்ற தலம்.

இது அட்ட வீரட்டங்களுள் ஒன்று. முப்புரங்களை எரித்த தலம். கருடன், பிரமன், விஷ்ணு, பஞ்ச பாண்டவர்கள் பூசித்துப் பேறு பெற்றனர். பல்லவ அரசன் திருநாவுக்கரசரை நீற்றறையில் இட்ட தலமும் இதுவே. இது இப்போது ஓடையாக இருக்கிறது. சக்கர தீர்த்தம் என வழங்குகிறது. குணதரேச்சுரம் என்ற ஒரு கோயிலும் உண்டு. அது குணதரப் பல்லவனால் பாடலிபுரத்துக் கோயிலை அழித்துக் கட்டப் பெற்றது என்பது வரலாறு. திருஞான சம்பந்தர் சுவாமிகளுக்குச் சித்தவட மடத்தில் திருவடி தீட்சை அளித்த இடமும் இதுவே. மெய்கண்ட தேவர் மாணாக்கராகிய மனவாசகம் கடந்தார் உண்மை விளக்கம் செய்து அருளிய தலமும் இதுவே. இறைவன் பெயர் திருவதிகை வீரட்டானேசுவரர், திரிபுராந்தகேசுவரர். அம்மை திரிபுரசுந்தரி. தீர்த்தம் கெடிலம், சூலகங்கை, சக்கர தீர்த்தம் என்பன. தலவிருட்சம் சரக்கொன்றை.

## கல்வெட்டு:

இத்தலத்தில் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் 34. இவற்றில் ஏழு கல்வெட்டுக்கள் சாரநாராயணக் கோயிலைப் பற்றியவை. ஏனையவை திருவதிகை வீரட்டானமுடையார் கோயிலில் உள்ளவை. அவற்றுள், தெள்ளாற்றுப் போர் எறிந்த நந்திபோத்தரையன் விளக்கிற்காக வைத்த நிவந்தம், கோப்பெருஞ்சிங்கன் விளக்கிற்காகப் பசுவும் காளையும் அளித்தமை, பரமேசுவரப் போத்தரையன் பொன் அளித்தமை ஆகிய பல்லவ பரம்பரை நிகழ்ச்சிகள் அறிவிக்கப் பெறுகின்றன. அவ்வாறே சோழர்களில் முதலாம் குலோத்துங்கன், இரண்டாம் குலோத்துங்கன், மூன்றாம் குலோத்துங்கன், இராஜேந்திர சோழன், இரண்டாம் பராந்தகன், இராஜாதிராஜன் முதலிய சோழ அரசர்களும், விக்கிரம பாண்டியன், வீரபாண்டியன் முதலிய பாண்டிய மன்னர்களும், காளிங்கராயன், காடவராயன், கங்கபல்லவன் முதலியோர்களும் உணவு, நிவேதனம் மற்றும் விழாக்கள் ஆகியவற்றிற்காக நிலம் அளித்தமையைக் காட்டும் கல்வெட்டுக்கள் பல.

சகம் 1235–இல் சேர அரசனான இரவிவர்ம வீரராஜ குலசேகர தேவனால் கோயில் முழுவதும் தூய்மைப்படுத்தப் பெற்ற செய்தி தெரிகிறது. வாகீசமடம் என்ற பெயருடன் ஒன்று இத்தலத்தில் இருந்திருக்க வேண்டும். இதற்கு முதலாம் குலோத்துங்கன் தன் ஆட்சிக் காலத்தில் நிலம் அளித்து உள்ளான்.

**பதிக வரலாறு:**

திருவக்கரை முதலிய பதிகளை வணங்கிய பிள்ளையார், அடியார் கூட்டத்துடன் திருவதிகைக்கு எழுந்தருளுகின்ற காலத்து, சிவபெருமான் தம் திருநடனத்தைப் புலப்படும்படிக் காட்டியருள 'குண்டைக் குறட்பூதம்' என்னும் இத்திருப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 46. THIRU-VATHIKAI-VEE-RAT-TAANAM

### THE HISTORY OF THE PLACE

This sacred place is in Nadu Naadu, near Pannurutti railway station, which lies in Kadaloor - Chennai train route. Buses from Chennai, Kadaloor, Virudhdhaachalam and Chidhambaram ply to Pannurutti.

The Lord's names are Thiruvadhikai Veerattaanesuvarar and Thiripuraantha-kesuvarar. That of the Goddess is Thiripurasundhari. The sacred fords are Kedilam, Soolagangkai, and Chakkara Theerththam. The sacred tree is 'Sarakkonrai'.

This is one of the eight 'Veerattam' temples. This is from where the Lord destroyed with fire the demonic 'triple-cities'. The five Paandava brothers, Piraman, Vishnu and Garudan etc., attained salvation by worshipping here. This is where Saint Appar received the Lord's grace. It is also where he was subjected to torture by immersion in a lime kiln by a Pallava king. The place where this happened is now a creek named Chakkara Theerththam. The Lord showed a vision of his dance to Saint Thirujnaanasambandhar at this temple and it is also here that Saint Sundharamoorthi Suvaami received initiation from the Lord, by having his head touched by the Lord's holy foot at the 'Sidhdhavatamatam'. Manavaasagam Kadandhaar, a disciple of



சத்யகிரிநாதர் திருக்கோயில் (சேங்கனூர்)

**Sathyakirinathar Temple** **-Seyankanur, Tamil Nadu.**



திருவலிவலம் – மனத்துணைநாதர் – சோழநாட்டு தென்கரைத் தலம்

**Manathunai Nathar Temple - Thiru - Valivalam, Tamil Nadu**

திருச்சோபுரம்/தியாகவல்லி – திருச்சோபுரநாதர் – நடு நாட்டுத் தலம்
**Chopura Nathar Temple - Thiruchopuram, Tamil Nadu**

திருநெடுங்களம் – ஸ்ரீநித்யசுந்தரேஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம் (திருநாட்டான்குளம்)
**Sri Nityasundarar - Tirunedungkalam - Tirunattangkulam, Tamil Nadu.**

Meikanda Thevar, composed the treatise, Exposition of Truth (Unmai Vilakkam), at this sacred place.

There is also a shrine of the name Gunatharechchuram, which is said to have been built by Gunadhara Pallavan after destroying the Paatalipuram temple.

There are 27 inscriptions in this temple, including the one from the Pallava dynasty kings Nandhi Poththaraiyan, conqueror of the Thellaaru war, (grant for lamps), Kopperunjchingan (gift of cow and calf for lamps), and Paramesuvarap Poththaraiyan (grant of gold). The inscriptions also pertain to the reigns of Chola kings, Kuloththungkan I, II and III, Raajendhira Cholan and Paraanthakan Raajaadhiraajan II; Paandiyan kings Vikkirama Paandiyan and Veera Paandiyan and others. They give information on various grants of land for feeding the devotees, food-offering to the deity and for holding festivals. Kuloththungkan I has given land for a monastery known as Vaageesamatam. In the Saka year 1235, the Chera king Ravi Varma Veeraraaja Kulasekara Thevan, had arranged to clean and renew the whole temple.

### INTRODUCTION TO THE HYMN

Adoring the Lord at Thiruvakkarai and other shrines, the young saint arrived at Thiruvatikai. Here he had a darshan of Civa's dance and composed the following hymn.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 46. திருவதிகைவீரட்டானம்

## 46. THIRU-VATHIKAI-VEE-RAT-TAANAM

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

குண்டைக் குறட்பூதங் குழும அனலேந்திக்
கெண்டைப்பிறழ் தெண்ணீர்க் கெடில வடபக்கம்
வண்டு மருள்பாட வளர்பொன் விரிகொன்றை
விண்ட தொடையலா ணாடும்வீரட் டானத்தே. 1

குண்டைக் குறள் பூதம் குழும, அனல் ஏந்தி,
கெண்டைப் பிறழ் தெண் நீர்க் கெடில வடபக்கம்
வண்டு மருள் பாட, வளர் பொன்விரி கொன்றை
விண்ட தொடையலான் ஆடும், வீரட்டானத்தே.

kuNTaik kuRaL pUtam kuzuma, an2al Enti,
keNTai piRaz teN nIrk keTila vaTapakkam,
vaNTu maruL pATa, vaLar pon2 viri kon2Rai
viNTa toTaiyalAn2 ATum, vIraTTAn2attE.

**பொருள்:** சிவபெருமானைப் பருத்த குள்ளமான பூதகணங்கள் சூழ்ந்து இருக்கின்றன. அவர்தம் கையில் அனல் ஏந்தியிருக்கின்றார். வண்டுகள் மருளிய இந்தளம் என்னும் பண்ணைப் பாடுகின்றன. அவர் பொன் போன்று விரிந்து மலர்ந்த கொன்றை மலர் மாலையை அணிந்திருக்கின்றார். கெண்டை மீன்கள் துள்ளி விளையாடும் தெளிந்த நீரை உடைய, கெடில நதியின் வடகரையில் உள்ள, திருவதிகை வீரட்டானத்தில் இப்பெருமான் ஆடுகின்றார்.

**குறிப்புரை:** கெடில நதியின் வடபக்கத்து, கொன்றை மாலை அணிந்த பெருமான் அனல் ஏந்தி வீரட்டானத்து ஆடும என்கின்றது. குண்டை – பருத்த. குறள் – குள்ளமான. குழும – கூடியிருக்க. மருள் பாட – மருளிந்தளம் என்னும் பண்ணைப் பாட. இது குறிஞ்சிப்பண் திறம் எட்டனுள் ஒன்று. பொன்விரிகொன்றை – பொன்னிறமாக விரிந்த கொன்றை. தொடையலான் – மாலையை அணிந்த இறைவன். தொடையலான் ஏந்தி வீரட்டானத்து ஆடும் எனப் பொருத்துக.

Lord Civan dances holding fire in one of His hands in Thiru-vathikai-vee-rat-taanam which is situated on the northern bank of Kedila river (கெடிலநதி) where Barbus fishes (கெண்டை மீன்கள்) leap and jump in the crystal clear water. Lord Civan wears garland made of fully blown gold like Kondrai flowers. Beetles hum round these flowers. Their tune resembles the tune called Marul Inthala-p-pann (மருள் இந்தளப் பண்). The Lord is surrounded by short and stout Bhuta hosts.

**Note:** Veerattaanam: A holy place sanctified by the enactment of Civa's heroic deed.

Marull: Marull Indalam: One of the eight of Kurinji-p-pann tiram.

Kendai: A freshwater fish. Barbus.

அரும்புங்குரும்பையு மலைத்த மென்கொங்கைக்
கரும்பின் மொழியாளோ டுடன்கை யனல்வீசிச்
சுரும்புண் விரிகொன்றைச் சுடர்பொற் சடைதாழ
விரும்பு மதிகையு ளாடும்வீரட் டானத்தே. 2

அரும்பும் குரும்பையும் அலைத்த மென்கொங்கைக்
கரும்பு இன்மொழியாளோடு உடன் கை அனல் வீசிச்,
சுரும்பு உண் விரிகொன்றைச் சுடர்பொன்சடை தாழ,
விரும்பும் அதிகையுள் ஆடும், வீரட்டானத்தே.

arumpum kurumpaiyum alaitta men2 kogkaik
karumpu in2moziyALOTu uTan2 kai an2al vlci,
curumpu uN virikon2Raic cuTar pon2 caTai tAza,
virumpum atikaiyuL ATum, vIraTTAn2attE.

**பொருள்:** தாமரை அரும்பு, குரும்பை ஆகியவற்றை தன் அழகால் வென்ற மென்மையான தனங்களையும், கரும்பு போன்ற இனிய மொழிகளையும் உடைய உமையம்மையோடு சிவபெருமான் கூடியிருக்கின்றார். கையில் அனல் ஏந்தி ஆடிக் கொண்டிருக்கின்றார். வண்டுகள் தேன் உண்ணும் இதழ் விரிந்த கொன்றை மலர் மாலை அணிந்திருக்கின்றார். இத்தகைய சிவபெருமான் ஒளி மயமான பொன் போன்ற சடைகள் தாழத் தன்னால் பெரிதும் விரும்பப்படும் அதிகை வீரட்டானத்தே ஆடுகிறார்.

**குறிப்புரை:** இறைவர் உமையம்மையாரோடு திருவதிகை வீரட்டானத்து ஆவர் என்கின்றது. அரும்பு – தாமரை அரும்பு. அலைத்த – அழகின்மிகுதியால் வருத்திய; கரும்பு – ஒரு சாதி வண்டு. அதிகை – தலப்பெயர். வீரட்டானம் – கோயில் பெயர்.

Umaa Devi's breasts are soft and more beautiful than the Lotus bud and the coconut fruit bud (குரும்பை). Her melodious voice is as sweet as sugarcane juice. Lord Civan wears on His radiant and dangling matted hair (looking like gold), the garland of elegant cassia flowers. The honeybees hum around these flowers to consume the honey therein. This Lord Civan very much loves to abide in Thiru-vathikai-vee-rat-taanam. He dances here in the company of Umaa Devi, holding fire in one of His hands.

**Note:** Arumpu: Here, refers to the lotus-bud.

Kurumpai: Immature coconut fruit bud.

ஆடலழல்நாக மரைக்கிட் டசைத்தாடப்
பாடன்மறைவல்லான் படுதம் பலிபெயர்வான்
மாட முகட்டின்மேன் மதிதோ யதிகையுள்
வேடம் பலவல்லா னாடும்வீரட் டானத்தே. 3

ஆடல் அழல்நாகம் அரைக்கு இட்டு அசைத்து ஆடப்,
பாடல் மறை வல்லான் படு தம் பலி பெயர்வான்,
மாட முகட்டின்மேல் மதி தோய் அதிகையுள்,
வேடம்பல வல்லான் ஆடும், வீரட்டானத்தே.

ATal azal nAkam araikku iTTu acaittu ATa,
pATal maRai vallAn2 paTutam pali peyarvAn2,
mATa mukaTTin2 mEl mati tOy atikaiyuL,
vETam pala vallAn2 ATum, vIraTTAn2attE.

**பொருள்:** சிவபெருமான், வெற்றியையும், அழல்போலும் கொடிய தன்மையையும் கொண்ட நாகத்தை தம் இடையில் பொருந்தக் கட்டி அதை ஆடுமாறு செய்கிறார். அவர் வேதங்களில் பாட வல்லவர். படுதம் என்னும் கூத்தினை ஆடிக்கொண்டு பலிதேடித் திரிகிறார். இத்தகைய சிவபெருமான், மதி தோய்ந்து செல்லுமாறு உயர்ந்த மாடவீடுகளை உடைய திருவதிகை வீரட்டானத்தில், பல்வேறு வேடங்களில் வல்லவனாக ஆடுகிறார்.

**குறிப்புரை:** நாகம் முதலியவற்றைக் கட்டி, வேடம் பலவல்ல இறைவர் வீரட்டானத்து ஆடுவர் என்கின்றது. ஆடல் அழல் நாகம் – வெற்றியோடு கூடிய கொடிய பாம்பு. இட்டு – அணியாக இட்டு. படுதம் பலி பெயர்வான் – படுதம் என்னும் கூத்தினை ஆடிக் கொண்டு பலிக்காகத் திரிபவன். வேடம் பலவல்லான் என்றது நினைந்த வடிவை நினைந்த வண்ணம் அடையும் வல்லமை உடையனாதலின்.

Lord Civan binds His waist with a fiery and cruel natured cobra and makes it dance. He is an adept in chanting the Vedas. He dances in a particular mode known as 'Padutham' (*படுதம் என்னும் கூத்து*) and goes about for alms. He is skilful in acquiring any figure He wants to in a fraction of a moment and also can dissolve and disappear from that figure momentarily. He thus dances in Thiru-vathikai-vee-rat-taanam where the moon mingles and crawls over the tall mansions therein.

**Note:** Patutham: A type of dance.

எண்ணா ரெயிலெய்தா னிறைவ னனலேந்தி
மண்ணார் முழவதிர முதிரா மதிசூடிப்
பண்ணார் மறைபாடப் பரம னதிகையுள்
விண்ணோர் பரவநின்றா டும்வீரட் டானத்தே. 4

எண்ணார் எயில் எய்தான்; இறைவன்; அனல் ஏந்தி;
மண் ஆர் முழவு அதிர, முதிரா மதி சூடிப்,
பண் ஆர் மறை பாட, - பரமன் - அதிகையுள்,
விண்ணோர் பரவ நின்று ஆடும், வீரட்டானத்தே.

eNNAr eyil eytAn2; iRaivan2; an2al Enti;
maN Ar muzavu atira, mutirA mati cUTi,
paN Ar maRai pATa,--paraman2--atikaiyuL,
viNNOr parava, nin2Ru ATum, vIraTTAn2attE.

**பொருள்:** சிவபெருமான் பகைவரது திரிபுரங்களை எரித்தருளிய இறைவர்; இளம்பிறையை முடியில் சூடியிருக்கிறார். அத்தகைய இறைவன் கையில் அனல் ஏந்தி கருஞ்சாந்து இடப்பட்ட முழவு முழங்க, பண்ணமைப்புடைய வேதங்களைச் சான்றோர் ஓத, தேவர்கள் போற்ற திருவதிகை வீரட்டானத்தே நின்று ஆடுகின்றார்.

**குறிப்புரை:** பகைவரது திரிபுரத்தை எரித்தருளிய இறைவர் அனலேந்தி. மதிசூடி, மறைபாட அதிகை வீரட்டானத்து ஆடுவர் என்கின்றது. எண்ணார் – பகைவர். மண் – மார்ச்சனை. முதிரா மதி – இளம்பிறை.

Lord Civan destroyed the enemy's three citadels. He wears the young crescent moon on His matted hair. To the accompaniment of large loud sounding drum (*முழவு*) which is smeared with black paste on its sides (*மண் - மார்ச்சனை*) and to the chanting of Vedas in the appropriate time by scholars, Lord Civan holding fire in one of His holy hands, dances at Thiru-vathikai-vee-rat-taanam while He is adored by Devas there.

**Note**: Mann: Maarcchanai: The black paste applied to a mridangam. It enhances the instruments resonance. Muzhavu: A percussion instrument; mridangam.

கரிபுன் புறமாய கழிந்தா ரிடுகாட்டில்
திருநின் றொருகையாற் றிருவா மதிகையுள்
எரியேந் தியபெருமா னெரிபுன் சடைதாழ
விரியும் புனல்சூடி யாடும்வீரட் டானத்தே. 5

கரிபுன்புறம் ஆய கழிந்தார் இடுகாட்டில்,
திரு நின்று ஒரு கையால், - திரு ஆம் அதிகையுள்,
எரி ஏந்திய பெருமான், எரிபுன்சடை தாழ,
விரியும் புனல் சூடி, ஆடும், வீரட்டானத்தே.

karipun2puRam Aya kazintAr iTukATTil,
tiru nin2Ru oru kaiyAl,--tiru Am atikaiyuL,
eri Entiya perumAn2, eripun2 caTai tAza,
viriyum pun2al cUTi, ATum, vIraTTAn2attE.

**பொருள்:** கரிந்த புல்லிய ஊர்ப்புறமாகிய இறந்தவர்களை எரிக்கும் சுடுகாட்டில், ஒரு திருக்கரத்தில் எரி ஏந்தி சிவபெருமான் ஆடுகிறார். திருமகள் நிலைபெற்ற திருவதிகையில் உள்ள வீரட்டானத்தில் எரிபோன்று சிவந்த தன் சடைகள் தாழ்ந்து விரிய தலையில் கங்கையைச் சூடிக் கொண்டு ஆடுகிறார்.

**குறிப்புரை:** எரியேந்திய பெருமான் சடைதாழப் புனல்சூடி இடுகாட்டில் ஆடுவார் என்கின்றது. கரி புன்புறம் ஆய – கரிந்த புல்லிய ஊர்ப்புறமாகிய. திருநின்று – திருமகள் நிலைபெற்று. ஒருகையால் – ஒழிதலால். அஃதாவது பிற இடங்கட்குச் செல்லுதலை ஒழிதலால் இது திரு அதிகை என்பதற்குப் பொருள் காட்டியவாறு.

Lord Civan holding fire in one of His holy hands dances in the charred neglected burning ghat lying on the outskirts of the town where corpses are burnt. Also accommodating the river Ganges on His dangling fire like ruddy matted hair, He dances in Thiru-vathikai-vee-rat-taanam where the goddess of wealth - Thiru Magal (திருமகள்) has established herself well.

**Note:** Thiru: Sri: The Goddess of Wealth known as Lakshmi.

துளங்குஞ் சுடரங்கைத் துதைய விளையாடி
இளங்கொம் பனசாய லுமையோ டிசைபாடி
வளங்கொள் புனல்சூழ்ந்த வயலா ரதிகையுள்
விளங்கும் பிறைசூடி யாடும்வீரட் டானத்தே. 6

துளங்கும் சுடர் அங்கைத் துதைய விளையாடி,
இளங்கொம்பு அன சாயல் உமையோடு இசை பாடி,
வளம் கொள் புனல் சூழ்ந்த வயல் ஆர் அதிகையுள்,
விளங்கும் பிறைசூடி ஆடும், வீரட்டானத்தே.

tuLagkum cuTar agkait tutaiya viLaiyATi,
iLagkompu an2a cAyal umaiyOTu icai pATi,
vaLam koL pun2al cUznta vayal Ar atikaiyuL,
viLagkum piRaicUTi ATum, vIraTTAn2attE.

**பொருள்:** சிவபெருமான் அசைந்து எரியும் அனலை அழகிய கையில் பொருந்தி ஏந்தி விளையாடுகிறார். இளங்கொம்பு போன்ற உமையம்மையோடு இசை பாடுகிறார். வளமை

உள்ள புனல் சூழ்ந்த வயல்களை உடைய திருவதிகை வீரட்டானத்தில் முடிமிசை விளங்கும் பிறைசூடிய பெருமான் ஆடுகின்றார்.

**குறிப்புரை:** உமையோடு இசைபாடி ஆடுவார் என்கின்றது. துளங்கும் – அசைந்து (எரிகின்ற). துதைய – நெருங்க. சாயல் – மென்மை.

Lord Civan firmly holding on His dainty hand sports with the fluttering and blazing fire. With the crescent moon on His head He sings along with Umaa Devi who is like a tender shoot and dances at Veerattaanam temple in Thiru-vathikai which is surrounded by fertile fields with copious supply of water.

பாதம் பலரேத்தப் பரமன் பரமேட்டி
பூதம் புடைசூழப் புலித்தோ லுடையாகக்
கீத முமைபாடக் கெடில வடபக்கம்
வேத முதல்வனின் றாடும்வீரட் டானத்தே. 7

*பாதம் பலர் ஏத்தப், - பரமன், பரமேட்டி-*
*பூதம் புடைசூழ, புலித்தோல் உடைஆகக்,*
*கீதம் உமை பாடக், கெடில வடபக்கம்*
*வேதமுதல்வன் நின்று ஆடும், வீரட்டானத்தே.*

pAtam palar Etta,--paraman2, paramETTi--
pUtam puTai cUza, pulittOl uTai Aka,
kItam umai pATa, keTila vaTapakkam,
vEta mutalvan2 nin2Ru ATum, vIraTTAn2attE.

**பொருள்:** பரம்பொருளாகிய பரமன் தன் திருவடிகளைப் பலரும் பரவி ஏத்தி வணங்கவும், பூதகணங்கள் புடை சூழவும், புலித்தோலை உடையாகக் கொண்டும் இருக்கிறார். உமையம்மை கீதம் பாடக் கெடில நதியின் வடகரையில் வேதமுதல்வனாய் வீரட்டானத்தில் ஆடுகின்றார்.

**குறிப்புரை:** இது உமையவளே இசைபாட வேதமுதல்வன் ஆடுகிறான் என்கின்றது. பலர் என்றது பாதத்தைத் திருவருளாகவே எண்ணிப்பணியும் சிவஞானியரும், உறுப்பென எண்ணிப் போற்றும் உலக ஞானியரும் ஆகிய பலரையும்.

The Supreme God, Lord Civan's Holy Feet are worshipped by many sages and saints (*பலர்*). They are:

a) Saints of true spiritual wisdom who adore Civan's Holy Feet as divine grace in themselves (*சிவஞானியர்*).

b) Worldly sages who adore Civan's Holy Feet as part of His body (உலக ஞானியர்).

Wearing the tiger skin and accompanied by a host of goblins Civan, the chief author of the Vedas dances to the singing of Umaa Devi at Veerattaanam on the northern bank of the Kedila river.

கல்லார் வரையரக்கன் றடந்தோள் கவின்வாட
ஒல்லை யடர்த்தவனுக் கருள்செய்த திகையுள்
பல்லார் பகுவாய நகுவெண் தலைசூடி
வில்லா லெயிலெய்தா னாடும்வீரட் டானத்தே. 8

*கல் ஆர் வரை அரக்கன் தடந்தோள் கவின் வாட,*
*ஒல்லை அடர்த்து, அவனுக்கு அருள் செய்து, அதிகையுள்,*
*பல் ஆர் பகுவாய நகுவெண்தலை சூடி,*
*வில்லால் எயில் எய்தான் ஆடும், வீரட்டானத்தே.*

kal Ar varai arakkan2 taTantOL kavin2 vATa,
ollai aTarttu, avan2ukku aruLceytu, atikaiyuL,
pal Ar pakuvAya naku veNtalai cUTi,
villAl eyil eytAn2 ATum, vIraTTAn2attE.

***பொருள்:*** கற்கள் பொருந்திய கயிலை மலையை எடுத்த இராவணனின் பெரிய தோள்களின் அழகு வாடுமாறு அவற்றை நெரித்தவர் சிவபெருமான் பின்னர் அவனுக்கு அருள்பல செய்தவர். முப்புரங்களை வில்லால் எய்து அழித்துத் தனது பெருவீரத்தைப் புலப்படுத்தியவர். இவ்வாறான இறைவர் பற்கள் பொருந்திய பிளந்த வாயை உடைய வெள்ளிய தலை ஓட்டை மாலையாகச் சூடி திருவதிகை வீரட்டானத்தில் ஆடுகின்றார்.

***குறிப்புரை:*** இராவணனது தோளழகுகெட அடர்த்து அவனுக்கு அருள் செய்தவர். அதிகையுள் ஆடுகிறார் என்கின்றது. கல்லார் வரை என்றது கயிலையை. கயிலை கல்லில்லாததாயினும் மலையென்ற பொதுமை பற்றிக் கூறியது. கவின் – அழகு. ஒல்லை – விரைவாக. காலந்தாழ்க்க அடர்ப்பின் அவனிறந்தேபடுவான் என்னுங் கருணையால். பல்ஆர் பகுவாய – பற்கள் பொருந்திய பிளவுபட்ட வாயையுடைய.

Lord Civan crushed the large shoulders of Raavanan to wilt. Raavanan tried to uproot the rocky-mount Kailash. Later Raavana repented. Thereafter Lord Civan graced him with many boons. He destroyed the three citadels of His Asura enemies, by His bow and proved His prowess. He wears a white skull, the mouth of which is wide

open showing the teeth, He thus dances at Veerattaanam on the northern banks of the river Kedila.

நெடியா னான்முகனு நிமிர்ந்தானைக் காண்கிலார்
பொடியாடு மார்பானைப் புரிநூ லுடையானைக்
கடியார் கழுநீலம் மலரும் மதிகையுள்
வெடியார் தலையேந்தி யாடும்வீரட் டானத்தே. 9

நெடியான், நான்முகனும், நிமிர்ந்தானைக் காண்கிலார்;
பொடிஆடு மார்பானை, புரிநூல் உடையானைக்,
கடி ஆர் கழுநீலம் மலரும்(ம்) அதிகையுள்,
வெடி ஆர் தலை ஏந்தி ஆடும், வீரட்டானத்தே.

neTiyAn2 nAn2mukan2um nimirntAn2aik kANkilAr;
poTi ATu mArpAn2ai, purinUl uTaiyAn2ai,
kaTi Ar kazu nIlam malarum atikaiyuL,
veTi Ar talai Enti, ATum, vIraTTAn2attE.

**பொருள்:** தீப்பிழம்பாய் ஓங்கி நிமிர்ந்தவனும், திருநீற்றை அணிந்தவனும், முப்புரிநூலை அணிந்து பேருருக் கொண்ட சிவபெருமானைப் திருமாலும், நான்முகனும் காண முடியவில்லை. மணம் கமழும் நீலப்பூக்கள் திருவதிகையில் மலர்ந்து விளங்குகின்றன. முடை நாற்றமுடைய தலையோட்டைக் கையில் ஏந்திக் கொண்டு திருவீரட்டானத்தில் சிவபெருமான் ஆடுகின்றான்.

**குறிப்புரை:** அயனும் மாலும் அறிய முடியாதவர் என்கின்றது. கடி – மணம். கழுநீலம் – நீலப்பூ. வெடி – முடைநாற்றம். நெடியானும் நான்முகனும் நிமிர்ந்தானை. மார்பானை, உடையானை, காண்கிலார்; அவன் அதிகையுள் வீரட்டானத்து ஆடும் என முடிக்க.

Lord Civan smears His chest with holy ashes, He wears on His body a sacred thread with three strands. But when He stood as a tall and big flame of fire in front the big sized Thirumaal and the four faced Brahma, He could not be seen by them. This Lord Civan holding the mal-odorous skull in His hand dances at the Veerattaanam temple in Thiru-vathikai where fragrant blue lilies blossom.

அரையோ டலர்பிண்டி மருவிக் குண்டிகை
சுரையோ டுடனேந்தி யுடைவிட் டுழல்வார்கள்
உரையோ டுரையொவ் வாதுமையோ டுடனாகி
விரைதோ யலர்தாரா னாடும்வீரட் டானத்தே. 10

அரையோடு அலர் பிண்டி மருவிக் குண்டிகை
சுரைஒடு உடன் ஏந்தி, உடை விட்டு உழல்வார்கள்
உரையோடு உரை ஒவ்வாது; உமையோடு உடன்ஆகி,
விரை தோய் அலர்தாரான் ஆடும், வீரட்டானத்தே.

araiyOTu alar piNTi maruvik kuNTikai
curai OTu uTan2 Enti, uTai viTTu uzalvArkaL
uraiyOTu urai ovvAtu; umaiyOTu uTan2 Aki,
virai tOy alartArAn2 ATum, vIraTTAn2attE.

**பொருள்:** புத்தர்கள் அரச மரத்தையும், தழைத்த அசோக மரத்தையும் புனித மரமாகக் கொண்டு, குண்டிகையாகச் சுரைக்குடுக்கையை ஏந்தித் திரிகின்றனர். சமணர்கள் ஆடையின்றித் திரிகின்றனர். அவர்களின் பொருந்தாத வார்த்தைகளைக் கேளாதீர்கள். மணம் கமழும் மாலை அணிந்த சிவபிரான் உமையம்மையோடு உடனாய் அதிகை வீரட்டானத்தில் ஆடுகிறான். அவனை வணங்குங்கள்.

**குறிப்புரை:** அரை – அரச மரம். புத்தர் சமணர் உரைகள் ஒன்றோடு ஒன்று ஒவ்வா என்கின்றது. சுரைக்குடுக்கையை ஏந்தித் திரிபவர் ஆதலின் இங்ஙனம் கூறினார். விரை – மணம்.

The Buddhists consider the Asoka trees and leafy Peepul (Pipol) tree as sacred. They roam about carrying the dried bottle gourd as water jug. Jains roam about without any dress on their body. Ye companions! Do not listen to the useless words of these people. Lord Civan decorated with garlands of fragrant flowers dances along with His consort Umaa devi at Veerattaanam temple in Thiru-vathikai. Ye folks! Adore and worship Him.

ஞாழல் கமழ்காழி யுள்ஞான சம்பந்தன்
வேழம்பொரு தெண்ணீ ரதிகைவீரட் டானத்துச்
சூழுங் கழலானைச் சொன்ன தமிழ்மாலை
வாழுந் துணையாக நினைவார் வினையிலரே. 11

ஞாழல் கமழ் காழியுள் ஞானசம்பந்தன்
வேழம் பொரு தெண் நீர் அதிகை வீரட்டானத்துச்
சூழும் கழலானைச் சொன்ன தமிழ்மாலை,
வாழும் துணை ஆக நினைவார் வினை இலரே.

njAzal kamaz kAziyuL njAn2acampantan2,
vEzam poru teN nIr atikai vIraTTAn2attuc
cUzum kazalAn2aic con2n2a tamizmAlai,
vAzum tuNai Aka nin2aivAr vin2ai ilArE.

**பொருள்:** புலிநகக் கொன்றைச் செடிகளின் மலர்களின் மணம் கமழும் சீகாழிப் பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தன். நாணல்களால் கரைகள் அரிக்கப்படாமல் காக்கப்படும் தெளிந்த நீர்வளம் உடையது திருவதிகை வீரட்டானம். அங்கே, பாதங்களில் சிலம்பு அணிந்து ஆடும் சிவபெருமானைப் போற்றிப் பாடினார் ஞானசம்பந்தன். இத்தமிழ் மாலையை வாழ்விற்குத் துணையாகக் கொண்டவர்களுக்கு வினை இல்லை.

**குறிப்புரை:** இப்பதிகத்தைத் தமது வாழ்விற்குத் துணையாகக் கொண்டவர்கட்கு வினையில்லை என்கின்றது. ஞாழல் – புலிநகக் கொன்றை. வேழம் – கொறுக்காந்தட்டை. கரை – கரையாமலிருக்க நாணல் இடுவது மரபு.

Gnaanasambandan hails from Seekaazhi, which is pervaded by the fragrance of the tiger nailed cassia flower (புலிநகக் கொன்றை மலர்). He adored the Lord and sang this hymn on Lord Civan who wearing anklets at His feet, dances at Veerattaanam in Thiruvathikai. Here copious crystal clear water is available in the pools, the banks of which are protected by reeds of grass to prevent erosion. Those who consider this garland of Tamil verses as their life support will find their karma considerably reduced.

**Note:** Gnaazhal: Pulinakkondrai

Vezham: Korukkai (European bamboo reed). It also refers to spiny bamboos and kaus (a large and coarse grass).

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*46ஆம் பதிகம் முற்றிற்று*
End of 46th Hymn

உ
சிவமயம்

# 47. திருச்சிரபுரம்

## திருத்தலவரலாறு:

முதல் பதிகம் பார்க்க.

# 47. THIRU-C-CHIRA-PURAM

## THE HISTORY OF THE PLACE

See First Hymn.

## INTRODUCTION TO THE HYMN

Adoring at Thiruvakkarai and other shrines, the boy-saint arrived at Thiru-c-chira-puram. Here he had a darshan of Civa's dance and composed the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 47. திருச்சிரபுரம்

## 47. THIRU-C-CHIRA-PURAM

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

பல்லடைந்த வெண்டலையிற் பலிகொள்வ தன்றியும்போய்
வில்லடைந்த புருவநல்லாண் மேனியில் வைத்தலென்னே
சொல்லடைந்த தொல்மறையோ டங்கங் கலைகளெல்லாஞ்
செல்லடைந்த செல்வர்வாழுஞ் சிரபுர மேயவனே. 1

பல் அடைந்த வெண்தலையிற் பலி கொள்வது அன்றியும், போய்,
வில் அடைந்த புருவ நல்லாள் மேனியில் வைத்தல் என்னே -
சொல் அடைந்த தொல்மறையோடு அங்கம்கலைகள் எல்லாம்
செல் அடைந்த செல்வர் வாழும் சிரபுரம் மேயவனே?

pal aTainta veN talaiyil pali koLvatu an2Riyum, pOy,
vil aTainta puruva nallAL mEn2iyil vaittal en2n2E--
col aTainta tol maRaiyOTu agkam kalaimakaL ellAm
cel aTainta celvar vAzum cirapuram mEyavan2E?

**பொருள்:** பொருள் பொதிந்த சொற்கள் நிரம்பி இருப்பது பழமையான வேதங்கள். அவற்றின் அங்கங்களையும் பிற கலைகளையும் கற்றுணர்ந்த சான்றோர்கள் வாழும் இடமானது திருச்சிரபுரம் என்னும் சீகாழிப் பதியாகும். இங்கு எழுந்தருளிய இறைவனான சிவபெருமானே! பற்கள் பொருந்திய வெண்மையான தலையோட்டில் பல இடங்களுக்கும் சென்று பலியேற்கிறீர். அது மட்டுமின்றி வில் போன்ற புருவத்தை உடைய உமையம்மையை உமது திருமேனியில் வைத்திருக்கின்றீர். இதற்குக் காரணம் யாதோ?

**குறிப்புரை:** வேதம், அங்கம், கலைகள் எல்லாவற்றினும் செல்லும் கலைச் செல்வர்கள் வாழும் சிரபுரமேயவனே! வெண்தலையிற் பலி கொள்வதோடன்றி உமையவளை ஒரு பாகத்து வைத்தது என்னே என வினவுகின்றார். வில் அடைந்த புருவம் – வில்லை ஒத்த புருவம். செல் அடைந்த செல்வர் – வேத முதலியவற்றில் செல்லுதலைப் பெற்ற கலைச் செல்வர்கள்.

The old Vedas are full of meaningful words and ideas. They have six auxiliaries. Many scholars who are well versed in these two arts as well in other arts and sciences are living in Seekaazhi, which is also known as Chira-puram. Oh! Lord Civa You are enshrined in this celebrated town! Tell me why You roam about and accept alms in the white human skull with the teeth clinging to it, despite the fact that You are sharing Your body frame with Your consort Umaa Devi whose eye-brows resemble a bow?

**Note:** Chirapuram is Seekaazhi. It is not to be confused with Civapuram, also a famous Tevaaram shrine.

கொல்லைமுல்லை நகையினாளோர் கூறதுவன் றியும்போய்
அல்லல்வாழ்க்கைப் பலிகொண்டுண்ணு மாதரவென் னைகொலாஞ்
சொல்லநீண்ட பெருமையாளர் தொல்கலை கற்றுவல்லார்
செல்லநீண்ட செல்வமல்கு சிரபுர மேயவனே. 2

கொல்லை முல்லைநகையினாள் ஓர்கூறுஅது அன்றியும், போய்,
அல்லல் வாழ்க்கைப் பலி கொண்டு உண்ணும் ஆதரவு என்னைகொல் ஆம் -
சொல்ல நீண்ட பெருமையாளர், தொல்கலை கற்று வல்லார்,
செல்ல நீண்ட செல்வம் மல்கு சிரபுரம் மேயவனே?

kollai mullai nakaiyin2AL Or kURu atu an2Riyum, pOy,
allal vAzkkaip pali koNTu uNNum Ataravu en2n2aikol Am--
colla nINTa perumaiyALar, tolkalai kaRRu vallAr,
cella nINTa celvam malku cirapuram mEyavan2E?

**பொருள்:** அளவிட முடியாத பெருமையாளர்களும், பழமையான கலைகளில் வல்லவர்களுமாகிய அறிஞர்களும் வாழ்கின்ற பெரும் செல்வ வளத்தை உடைய சிரபுரத்தில் எழுந்து அருளும் சிவபெருமானே! முல்லை நிலத்தில் தோன்றிய முல்லை அரும்பு போன்ற பற்களை உடைய உமையம்மையை ஒரு பாகத்தில் வைத்திருக்கின்றீர். ஆயினும் துன்ப வாழ்க்கையாகிய பலியை ஏற்றுத் திரிவது ஏனோ?

**குறிப்புரை:** இதுவும் பெண்பாகராகிய தேவரீர் பலிதேர்வது ஏன் என்கின்றது. கொல்லை – முல்லை நிலம். முல்லை நகை – முல்லையரும்பு போன்ற பல் நகை; தொழிலாகுபெயர். ஓர் கூறு – ஒரு பங்கில் உள்ளாள். அல்லல்வாழ்க்கைப் பலி – துன்ப வாழ்வாகிய பலி. இரத்தலின் இன்னாதது இல்லை என்ற வள்ளுவர் குறளும் நோக்குக.

Highly renowned mortals who are beyond description, as well scholars who are proficient in the age-old arts and sciences have a meaningful existence in Chira-puram which has undiminishing abundant economic resources. Oh! Lord enshrined in such a comprehensive city, kindly let me know why You have a liking for such painful act of begging, getting alms and consuming it, forgetting that Your consort Umaa Devi is abiding in the left half of Your body, whose teeth are getting like glittering forest flowers (Mullai) Arabian jasmine growing in forest tracts.

**Note:** Kollai: The mullai region / woodland.

நீரடைந்த சடையின்மேலோர் நிகழ்மதி யன்றியும்போய்
ஊரடைந்த வேறதேறி யுண்பலி கொள்வதென்னே
காரடைந்த சோலைசூழ்ந்து காமரம் வண்டிசைப்பச்
சீரடைந்த செல்வமோங்கு சிரபுர மேயவனே. 3

*நீர் அடைந்த சடையின்மேல் ஓர் நிகழ்மதி அன்றியும், போய்,*
*ஊர் அடைந்த ஏறுஅது ஏறி உண் பலி கொள்வது என்னே -*
*கார் அடைந்த சோலை சூழ்ந்து காமரம் வண்டு இசைப்பச்,*
*சீர் அடைந்த செல்வம் ஓங்கு சிரபுரம் மேயவனே?*

nIr aTainta caTaiyin2mEl Or nikazmati an2Riyum, pOy,
Ur aTainta ERu atu ERi uN pali koLvatu en2n2E--
kAr aTainta cOlai cUzntu kAmaram vaNTu icaippa,
cIr aTainta celvam Ogku cirapuram mEyavan2E?

**பொருள்:** சிரபுரத்தில் வண்டுகள் சீகாமரம் என்னும் பண்ணைப் போல் பாடி இசைக்கின்றன. மேகங்கள் தவழும் சோலைகளால் சூழப்பெற்றது சிரபுரம். அறநெறியில் ஈட்டிய செல்வம் பெருகி விளங்குவது சிரபுரம். அந்த சிரபுரத்தை விரும்பிய சிவபெருமானே! கங்கையை அணிந்த சடைமுடியின்மேல் விளங்கும் பிறைமதி ஒன்றை அணிந்திருந்தும், பல ஊர்களுக்கும் சென்று அடைவதற்கு ஏதுவாக இடபத்தில் ஏறிச்சென்று, பலரிடம் பலி ஏற்பது ஏனோ?

**குறிப்புரை:** மதிசூடிய நீர் பலிகொள்வது ஏன் என்கின்றது. கார் – மேகம். வண்டு காமரம் இசைப்ப எனக் கூட்டுக. அறவழி ஈட்டப்பெற்ற செல்வமாதலின், நீர் அடைந்த செல்வம் என்றார்.

Oh! Lord Civa! You are enshrined in Chira-puram of great glory and prosperity; where beetles are humming in the flower gardens. Their humming noise is comparable to the tune known as Seekaamaram (*சீகாமரப்பண்*). The clouds are crawling over the trees in the groves encircling this town. The economic growth of people residing here is due to their acquiring wealth by honest means only. He is having the crescent moon on His matted hair. Oh Lord! Please let us know the reason why You go about many towns riding in Your bull and accept for alms.

**Note:** Kaamaram: A Tamil Pann.

கையடைந்த மானினோடு காரரவன் றியும்போய்
மெய்யடைந்த வேட்கையோடு மெல்லியல் வைத்தலென்னே
கையடைந்த களைகளாகச் செங்கழு நீர்மலர்கள்
செய்யடைந்த வயல்கள் சூழ்ந்த சிரபுர மேயவனே. 4

கை அடைந்த மானினோடு கார்அரவு அன்றியும், போய்,
மெய் அடைந்த வேட்கையோடு மெல்லியல் வைத்தல் என்னே -
கை அடைந்த களைகள் ஆகச் செங்கழுநீர்மலர்கள்
செய் அடைந்த வயல்கள் சூழ்ந்த சிரபுரம் மேயவனே?

kai aTainta mAn2in2OTu kAr aravu an2Riyum, pOy,
mey aTainta vETkaiyOTu melliyal vaittal en2n2E--
kai aTainta kaLaikaL Akac cegkazunIr malarkaL
cey aTainta vayalkaL cUznta cirapuram mEyavan2E?

**பொருள்:** களையெடுப்போர் கைகளில், மிக அதிகமான களைகளாகச் செங்கழுநீர் மலர் வந்தடைகின்றன. இத்தகைய செழுமையான வயல்களால் சூழப்பெற்ற சிரபுரம் மேவிய

சிவபெருமானே! கையில் மானை வைத்திருக்கின்றீர். கரிய பாம்பை வைத்திருக்கின்றீர். அதுவன்றி திருமேனியில் பெருவிருப்போடு உமையம்மையை இடப்பாகமாக கொண்டுள்ளீர். இது ஏனோ?

**குறிப்புரை:** கையில் மானையும் அரவையும் அணிந்திருப்பதோடு அன்றி, மெல்லியலையும் வைத்திருப்பது ஏன் என்கின்றது. கார் அரவு – கரும்பாம்பு. வேட்கை – பற்றுள்ளம். கையடைந்த களைகள் – பக்கங்களை அடைந்த களைகள். செய் அடைந்த வயல்கள் – நேர்த்தி அமைந்த வயல்கள்.

The town Chira-puram is surrounded by fertile fields where Chen-galu-neer flowers also grow in plenty along with the rice seedlings. While farm workers remove the weeds, these flowers also get collected in their hands (This shows the fertility of the soil and availability of copious water supply). Oh! Lord Civa! You are enshrined in such a fertile Chira-puram town holding a deer in one of Your hands and a black snake in another hand. With this stature, You are accommodating Your consort Umaa Devi in the left side of Your body frame! What may this be!

**Note:** Chen-galu-neer: Purple water lily.

புரமெரித்த பெற்றியோடும் போர்மத யானைதன்னைக்
கரமெடுத்துத் தோலுரித்த காரண மாவதென்னே
மரமுரித்த தோலுடுத்த மாதவர் தேவரோடுஞ்
சிரமெடுத்த கைகள் கூப்புஞ் சிரபுரமேயவனே. 5

புரம் எரித்த வெற்றியோடும் போர் மதயானை தன்னைக்
கரம் எடுத்துத் தோல் உரித்த காரணம் ஆவது என்னே -
மரம் உரித்த தோல் உடுத்த மா தவர் தேவரோடும்
சிரம் எடுத்த கைகள் கூப்பும் சிரபுரம் மேயவனே?

puram eritta veRRiyOTum pOr matayAn2ai tan2n2aik
karam eTuttut tOl uritta kAraNam Avatu en2n2E--
maram uritta tOl uTutta mA tavar tEvarOTum
ciram eTutta kaikaL kUppum cirapuram mEyavan2E?

பொருள்: மரத்தை உரித்ததால் ஆன மரவுரி என்னும் ஆடையை அணிந்த முனிவர்களும், தேவர்களும் கைகளைத் தலைமிசைக் கூப்பி வணங்கும் சிரபுரம் மேவிய இறைவனே! திரிபுரங்களை எரித்து அழித்த பெரு வீரத்தோடு, போர் செய்ய வந்த மத யானையைக் கையால் தூக்கி அதன் தோலை உரித்துப் போர்த்த, காரணம் யாதோ?

**குறிப்புரை:** திரிபுரம் எரித்த தேவரீர் யானையை உரித்தது ஏன் என்கின்றது. பெற்றி – தன்மை. கரம் எடுத்து – கையால் தூக்கி. மரம் உரித்த தோல் – மரவுரி. தேவரும் முனிவரும் **கை தலைமேல் கூப்பி** வணங்கும் சிரபுரமேயவன் என்க.

The highly regarded ascetics who wear the bark peeled from trees, as well the Devas adore You, with hands folded above their heads. You destroyed the three citadels of Asuras. While You are having such a prowess, why You lifted the exhilarated elephant, peeled off its skin and covered Your body with that skin?

கண்ணுமூன்று முடையதன்றிக் கையினில் வெண்மழுவும்
பண்ணுமூன்று வீணையோடு பாம்புடன் வைத்தலென்னே
எண்ணுமூன்று கனலுமோம்பி யெழுமையும் விழுமியராய்த்
திண்ணமூன்று வேள்வியாளர் சிரபுர மேயவனே. **6**

*கண்ணுமூன்றும் உடையது அன்றிக், கையினில் வெண்மழுவும்*
*பண்ணுமூன்று வீணையோடு பாம்பு உடன் வைத்தல் என்னே -*
*எண்ணும் மூன்றுகனலும் ஓம்பி எழுமையும் விழுமியர் ஆய்த்,*
*திண்ணம் மூன்றுவேள்வியாளர் சிரபுரம் மேயவனே?*

kaNNu mUn2Rum uTaiyatu an2Ri, kaiyin2il veNmazuvum
paNNu mUn2Ru vINaiyOTu pAmpu uTan2 vaittal en2n2E--
eNNum mUn2Ru kan2alum Ompi, ezumaiyum vizumiyar Ay,
tiNNam mUn2Ru vELviyALar cirapuram mEyavan2E?

**பொருள்:** சான்றோர்கள், ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணாக்கினி என்று சொல்லப்படும் முத்தீயையும் வேட்பவர்கள் சிரபுரத்தில் வாழ்கின்றார்கள். அவர்கள் எழுபிறப்பிலும் தூயவராய் உறுதிப்பாட்டுடன் தேவயாகம், பிதுர்யாகம், இருடியாகம் எனப்படும் மூன்று வேள்விகளையும் புரிபவர்கள் ஆவர். அப்படிப்பட்ட சான்றோர்கள் வாழும் சிரபுரம் மேவிய சிவபெருமானே! முக்கண்களை உடையவராய் இருக்கின்ற நீர் கைகளில் வெண்மழுவும், பண் மூன்று உடைய வீணை பாம்பு ஆகியவற்றை வைத்திருக்கும் காரணம் யாதோ?

**குறிப்புரை:** மூன்று கண்ணுடைய முதல்வராகிய தேவரீர் மழு, வீணை, பாம்பு இவற்றை வைத்தது ஏன் என்கின்றது. பண் மூன்று – பண், திறம், திறத்திறம் என்பன. இறைவன் திருக்கரத்தில் வீணையுள்ளமை எம்மிறை நல்வீணை வாசிக்குமே, என்ற பகுதியாலும் அறிக. எண்ணும் – எண்ணப்படுகின்ற. மூன்று கனல் – ஆகவனீயம், தட்சிணாக்கினி, காருகபத்தியம் என்பன. மூன்று வேள்வியாளர் – தேவயஞ்ஞும், பிதிர்யஞ்ஞும், ருஷியஞ்ஞும் என்னும் மூன்று வேள்விகளையும் செய்பவர்கள்.

Men of virtue perform the ritual of raising the three fires - Aahavaneeyam (ஆகவனீயம்), Dakshinaakkini (தட்சிணாக்கினி), Kaarugapathyam (காருகபத்தியம்) and accomplish three sacrifices with purity and firmness in their mind in all their seven births. The three sacrifices are Deva Yaagam (தேவயாகம்), Pithir Yaagam (பிதிர்யாகம்), Irudi Yaagam (இருடியாகம்). Such famed people are living in Chira-puram. Oh! The three eyed Lord Civa! What is the reason for You to possess in Your hands, the white battleaxe, the Veena with three musical modes, and a snake?

**Note:** The triad of fires: Aahavaniyam, Gaaruhapathyam and Daakshinaagni.

The triad of sacrifices: Yagas for (1) Devas, (2) Manas and (3) Rishis.

குறைபடாத வேட்கையோடு கோல்வளை யாளொருபாற்
பொறைபடாத இன்பமோடு புணர்தரு மெய்ம்மையென்னே
இறைபடாத மென்முலையார் மாளிகை மேலிருந்து
சிறைபடாத பாடலோங்கு சிரபுர மேயவனே. 7

குறைபடாத வேட்கையோடு கோல்வளையாள் ஒருபால்
பொறை படாத இன்பமோடு புணர்தரும் மெய்ம்மை என்னே -
இறை படாத மென்முலையார் மாளிகைமேல் இருந்து,
சிறை படாத பாடல் ஓங்கு சிரபுரம் மேயவனே?

kuRaipaTAta vETkaiyOTu kOlvaLaiyAL orupAl
poRai paTAta in2pamOTu puNartarum meymmai en2n2E--
iRai paTAta men2mulaiyAr mALikaimEl iruntu,
ciRai paTAta pATal Ogku cirapuram mEyavan2E?

**பொருள்:** சிறிதும் சாயாத மெல்லிய தனங்களை உடைய இளமகளிர் மாளிகைகளின் மேல் இருந்து குற்றமற்ற பாடல்களைப் பாடும் மகிழ்ச்சி மிகுந்துள்ள சிரபுரம் மேவிய இறைவனே! குன்றாத வேட்கையோடு திரண்ட கை வளைகளை உடைய உமையம்மையை ஒரு பாகமாக அளவற்ற இன்பத்துடன் ஏற்றுக் கொண்டிருப்பதற்குக் காரணம் என்னையோ?

**குறிப்புரை:** தேவரீரைக் குறையாக் காதலோடும், பொறுக்கலாற்றாத இன்பத்தோடும் பெரிய பிராட்டி புணர்வதென் என்கின்றது. வேட்கை - பொருளை அடையாத காலத்து அதன் கண்ணிகழும் பற்றுள்ளமாதலின் அடைந்தவழி நுகர்ந்தவழிக் குறையுமன்றே அங்ஙனம் குறையாமல் என்பது வலியுறுத்தக் குறைபடாத வேட்கை என்றார். கோல் வளை – திரண்ட வளையல். பொறைபடாத இன்பம் –

பொறுக்க முடியாத அளவுகடந்த இன்பம். மெய்ம்மை – தத்தும். இறைபடாத – சிறிதும் தளராத. சிறை – குற்றம்.

Lord Civan is enshrined in Chira-puram where young girls having ever firm and soft breasts sing happily divine songs from the top of their mansions. His consort Umaa Devi forms part of His body. Her hands are well formed and decorated with heavy bangles. Oh! Lord Civa! What is the reason for You to accommodate within You, Your consort with immeasurable bliss?

**Note:** Civa's form is androgynic - both male, female, neuter and neither male, female, neuter (ஆணாகிப் பெண்ணாகி ... ஆணுமல்லன், பெண்ணுமல்லன், அலியுமல்லன்). Civa experiences transcendental bliss. Indeed this Sakthi is Bliss. No mortal can contain this bliss. Human beings, at best, can come by a fleeting glimpse of bliss. Civa is the Killer of Kaaman (the God of Love). Civa stands beyond gender. His very nature has transcended sex. He is neither male nor female, nor is He of neuter gender. His is verily infinite bliss. This indeed is a mystery par excellence.

மலையெடுத்த வாளரக்க னஞ்சவொரு விரலால்
நிலையெடுத்த கொள்கையானே நின்மல னேநினைவார்
துலையெடுத்த சொற்பயில்வார் மேதகு வீதிதோறுஞ்
சிலையெடுத்த தோளினானே சிரபுர மேயவனே. 8

*மலை எடுத்த வாள் அரக்கன் அஞ்ச, ஒருவிரலால்*
*நிலை எடுத்த கொள்கையானே! நின்மலனே! நினைவார்*
*துலை எடுத்த சொல் பயில்வார் மேதகு வீதிதோறும்*
*சிலை எடுத்த தோளினானே! சிரபுரம் மேயவனே!*

malai eTutta vAL arakkan2 anjca, oruviralAl
nilai eTutta koLkaiyAn2E! nin2amalan2E! nin2aivAr
tulai eTutta col payilvAr mEtaku vItitORum
cilai eTutta tOLin2An2E! cirapuram mEyavan2E!

**பொருள்:** திருச்சிரபுரத்தில் மேன்மைமிக்க வீதிதோறும் சிவனடியார்கள் வாழ்கின்றார்கள். அவர்கள் சிவனை எப்பொழுதும் தங்கள் நெஞ்சத்தில் நினைந்து போற்றித் துதிப்பவர்கள். அவர்கள் "கேடும், ஆக்கமும் கெட்ட திருவினர்; ஓட்டையும் செம்பொன்னையும் ஒக்கவே

நோக்குவர்". இருவினை ஒப்பு என்ற பக்குவ நிலையை அடைந்தவர்கள். இன்பத்திலும் துன்பத்திலும் ஒரே மனநிலை கொண்டவர்கள். அருச்சுனனுக்காக தனது தோளில் வில்லைச் சுமந்தவன் சிவபெருமான். முன் ஒரு காலத்தில் கயிலை மலையை தூக்க முயற்சித்த வாள்வலி உடைய இராவணன் அஞ்சுமாறு கால்விரல் ஒன்றினால் அடர்த்துத் தன் நிலையை எடுத்துக் காட்டிய செயலைப் புரிந்த குற்றமற்றவனே! இச்செயலைச் செய்து காட்டிய உனது உள் நோக்கம் - செயல் என்னே!

**குறிப்புரை:** இது இறைவனை நின்மலனே! கொள்கையானே! தோளினானே! மேயவனே! என விளிக்கின்றது. அரக்கன் – இராவணன். நிலையெடுத்த – இறைத்தன்மையின் நிலையை எடுத்துக் காட்டிய; நிலைக்கச் செய்த எனலுமாம். துலையெடுத்த சொல் பயில்வார் – இருவினையொப்பொடு கூடிய தோத்திரிக்கும் அன்பர்கள். மேதகு வீதி – மேவுதல் தக்கவீதி. அதாவது அவர்கள் வாழ்கின்ற வீதி. சிலை எடுத்த – வில்லைச் சுமந்த.

The devotees of Lord Civa reside in all the well-formed clean streets of Chirapuram. They are famed for their attitude of perfect equanimity in the midst of meritorious or sinful deeds - good and bad events in life (இருவினை ஒப்பு). They always think of and adore Lord Civan in their minds. Lord Civan carried the bow and arrow on His shoulders on account of Arjunan (vide the archery battle with Arjunan). In the days of yore Raavanan, the mighty king adept in sword fighting, tried in vain to lift and keep aside mount Kailash. Lord Civan pressed the mountain by His toe and Raavanan trembled and got crushed under the mountain and repented. Oh! Flawless Lord Civa enshrined in Chirapuram, what is Your nature in exhibiting Your prowess in the handling of Raavanans affair?

மாலினோடு மலரினானும் வந்தவர் காணாது
சாலுமஞ்சப் பண்ணிநீண்ட தத்துவ மேயதென்னே
நாலுவேத மோதலார்க ணந்துணை யென்றிறைஞ்சச்
சேலுமேயுங் கழனி சூழ்ந்த சிரபுர மேயவனே. 9

மாலினோடு மலரினானும் வந்தவர் காணாது
சாலும் அஞ்சப்பண்ணி நீண்ட தத்துவம் மேயது என்னே -
நாலுவேதம் ஓதலார்கள் நம் துணை என்று இறைஞ்சச்,
சேலு மேயும் கழனி சூழ்ந்த சிரபுரம் மேயவனே?

mAlin2OTu malarin2An2um vantavar kANAtu
cAlum anjcappaNNi nINTa tattuvam mEyatu en2n2E--
nAlu vEtam OtalArkaL nam tuNai en2Ru iRainjca,
cElu mEyum kazan2i cUznta cirapuram mEyavan2E?

**பொருள்:** நான்கு வேதங்களையும் ஓதும் அந்தணர்கள் நம் துணைவனே என்று போற்றி இறைஞ்சச் சேல் மீன்கள் மேயும் வயல்கள் சூழ்ந்த சிரபுரம் மேவிய இறைவனே! தாமே பெரியர் என வந்த திருமாலும் தாமரை மலரில் உறையும் நான்முகனும் அடிமுடி காண இயலாது அவர்கள் மிகவும் அஞ்சுமாறு செய்த மிக நீண்ட திருவுருவைக் கொண்டது ஏன்?

**குறிப்புரை:** அயனும் மாலுங் காணாத வண்ணம் நீண்டதன் தத்துவம் என்ன என்கின்றது. சாலும் – மிகவும். ஓதலார்கள் – ஓதுதலை உடையவர்கள். சேலு மேயும் கழனி – சேல் மீன்கள் மேயும் வயல். சேலு என்பதில் உகரம் சாரியை.

The town Chirapuram is surrounded by lush paddy fields where cale fish pasture in the waters of the field. In this town virtuous scholars chant always the four Vedas and adore Civa by saying that He is their sole help. Thirumaal declared that he was superior to the four-headed Brahma who was seated in the Lotus, who then challenged Thirumaal and declared that he was superior to Thirumaal. When these two approached Lord Civan He took the form of an imposing and big flame of fire, the very sight of which frightened the two and made them surrender and accept that Civan is the Supreme Lord for all. Oh! Civa, why You took such a stretching divine form is mysterious.

புத்தரோடு சமணர் சொற்கள் புறனுரை யென்றிருக்கும்
பத்தர்வந்து பணியவைத்த பான்மைய தென்னைகொலாம்
மத்தயானை யுரியும்போர்த்து மங்கையொ டும்முடனே
சித்தர்வந்து பணியுஞ்செல்வச் சிரபுர மேயவனே. 10

புத்தரோடு சமணர் சொற்கள் புறன்உரை என்று இருக்கும்
பத்தர் வந்து பணிய வைத்த பான்மைஅது என்னை கொல்ஆம் -
மத்தயானை உரியும் போர்த்து மங்கையொடு(ம்) உடனே,
சித்தர் வந்து பணியும் செல்வச் சிரபுரம் மேயவனே?

puttarOTu camaNar coRkaL puRan2 urai en2Ru irukkum
pattar vantu paNiya vaitta pAn2mai atu en2n2ai kol Am--
mattayAn2ai uriyum pOrttu magkaiyoTum(m) uTan2E,
cittar vantu paNiyum celvac cirapuram mEyavan2E?

**பொருள்:** மதம் பொருந்திய யானையின் தோலைப் போர்த்து சித்தர்கள் பலரும் பணியச் செல்வச் சிரபுரநகரில் உமையம்மையாருடன் மேவிய இறைவனே! புத்தர்கள் சமணர்கள் ஆகிய புறச்சமயிகளின் வார்த்தைகள் புறனுரை என்று கருதும் பத்தர் வந்து பணியுமாறு செய்த பான்மை யாதோ? உரியும் - உம்மை இசை நிறை.

**குறிப்புரை:** புத்தர் சமணராகிய புறச்சமயிகள் வார்த்தை புறம்பானது என்றெண்ணும் அன்பர்கள் வணங்க இருப்பதேன்? என்கின்றது. சித்தர் – யோகநெறியில் நின்று சித்தி பெற்றவர்கள்.

Oh Lord Civa! You are enshrined in the famed city of Chirapuram, where a huge number of ascetics in the company of Your consort Umaa Devi reach You and offer worship. You peeled the skin of the exhilarated elephant and covered yourself with it. Those devotees who consider the sermons of the Jains and Buddhists as falsehood come to You to adore You. We wonder how You brought these servitors over to You and made them pay obeisance to You!

தெங்குநீண்ட சோலைசூழ்ந்த சிரபுர மேயவனை
அங்கநீண்ட மறைகள்வல்ல அணிகொள்சம் பந்தனுரை
பங்கநீங்கப் பாடவல்ல பத்தர்கள் பாரிதன்மேற்
சங்கமோடு நீடிவாழ்வர் தன்மையி னாலவரே. 11

தெங்கம் நீண்ட சோலை சூழ்ந்த சிரபுரம் மேயவனை
அங்கம் நீண்ட மறைகள் வல்ல அணி கொள் சம்பந்தன் உரை
பங்கம் நீங்கப் பாடவல்ல பத்தர்கள் பார் இதன்மேல்
சங்கமோடு நீடி வாழ்வர், தன்மையினால் அவரே.

tegkam nINTa cOlai cUznta cirapuram mEyavan2ai
agkam nINTa maRaikaL valla aNi koL campantan2 urai
pagkam nIgkap pATa valla pattarkaL pAr itan2 mEl
cagkamOTu nITi vAzvar, tan2maiyin2Al avarE.

**பொருள்:** தென்னைகள் நீண்டு வளர்ந்து பயன்தரும் சோலைகள் சூழ்ந்த சிரபுரம் மேவிய இறைவனை ஆறு அங்கங்களுடன் விரிந்துள்ள வேதங்களை அறிந்துணர்ந்த அழகிய

ஞானசம்பந்தன் போற்றிப் பாடிய இப்பதிக வாசகங்களைக் குற்றமறப் பாடவல்ல பக்தர்கள் இவ்வுலகில் அடியவர் கூட்டங்களோடு வாழும் தன்மையினால் வாழ்நாள் பெருகி வாழ்வர்.

**குறிப்புரை:** இப்பதிகத்தைக் குற்றமறப் பாடவல்லார் இவ்வுலகில் சத்சங்கத்தோடு நீடுவாழ்வார் எனப் பயன்கூறுகிறது. அங்கம் நீண்ட மறைகள் – சிக்ஷை முதலிய ஆறு அங்கங்களால் நீண்ட வேதங்கள். பங்கம் – மலமாயாபந்தத்தால் விளைந்த குற்றங்கள். சங்கம் – அடியார் கூட்டம். தன்மையினால் நீடிவாழ்வார் எனக் கொண்டு கூட்டுக.

Lord Civan is enshrined in Chirapuram which is surrounded by fruit-yielding tall coconut trees. Gnaanasambandan who had a deep knowledge of the four Vedas and its six auxiliaries adored Lord Civan of Chirapuram and sang this hymn. Those devotees who are capable of singing these hymns will get rid of their sins. Also they will have longevity in union with the congregation of sages in this world.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*47 ஆம் பதிகம் முற்றிற்று*
End of 47th Hymn

உ
சிவமயம்

# 48. திருச்சேய்ஞலூர்

## திருத்தலவரலாறு:

திருச்சேய்ஞலூர் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். கும்பகோணம் – திருப்பனந்தாள் பேருந்து வழியில் உள்ளது. முருகன் திருக்கைலையில் இருந்து, சூரசம்காரத்தின் பொருட்டு, வீரமகேந்திரத்திற்கு எழுந்தருளிய பொழுது, வழிநடையில் இங்கு வந்து சிவபூசை செய்தருளினார் என்பது கந்தபுராண வரலாறு. சண்டேசுவர நாயனார் திருஅவதாரம் செய்தருளிய தலம். இவ்வரலாறு இவ்வூர்ப் பதிகத்து ஏழாம் பாடலில் விளங்கக் காணலாம். சண்டேஸ்வர அவதாரஸ்தலம் என்று சம்பந்த சுவாமிகள் சிவிகையினின்றும் இறங்கி நடந்து சென்று வழிபட்டார்கள் என்று பெரிய புராணம் கூறுகிறது. முருகன் வழிபட்ட தலம் ஆதலின் சேய் நல்லூர் என்பது சேய்ஞலூர் என்றாயிற்றுப் போலும். இத்தலம் இக்காலத்து சேங்கனூர் என வழங்குகிறது.

சுவாமி பெயர் சத்தகிரீசுவரர். அம்மை பெயர் சகிதேவியார். தீர்த்தம் மண்ணியாறு.

## கல்வெட்டு:

1932இல் எடுத்த 89ஆம் கல்வெட்டு ஒன்றே ஒன்றுதான் உள்ளது.

## பதிக வரலாறு:

திருப்புறம்பயத்தை வணங்கி எழுந்தருளுகின்ற காழிநாதர் திருச்சேய்ஞலூரை, அணுகுகின்றகாலத்து, அவ்வூர் அந்தணர்கள் சண்டேசப் பிள்ளையாரே எழுந்தருளியதாக எண்ணி வணங்கி வரவேற்றுப் பாராட்டினர். பிள்ளையார், சண்டேசர் அவதரித்த தலம் ஆகையால் சிவிகையிற் செல்லல் ஆகாதென்று எண்ணித் திருவடி நோவ நடந்து திருக்கோயிலை அடைந்தார். இறைவனை வணங்கினார். 'நூலடைந்த கொள்கை' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார். முருகன் வழிபட்ட தலம் என்பதைக் காட்ட, 'சேயடைந்த சேய்ஞலூர்' என்றும், சண்டேசர் வரலாற்றைத் தெரிவிக்க 'பீரடைந்த பாலதாட்ட' என்றும் தல வரலாற்றுப் பகுதிகளைக் குறிப்பித்து அருளுகிறார்கள்.

# 48. THIRU-CH-CHEIGNALOOR

## THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-ch-cheignaloor is to the north of river Cauvery in Chola Naadu, and is in the Kumbakonam - Thiruppanandhaal bus route. The name perhaps is derived from Sei-nalloor that is the sacred plaçe (nalloor) where the child Murugan (Sei) offered worship to the Lord. According to the Kandhapuraanam, as Murugan was on his way from Thirukayilai to Veeramahendhiram to slay in battle the demon Soora, He stopped here and worshipped at this temple. It is called Sengkanoor these days.

The Lord's name is Saththagireesuvarar and that of the Goddess is Sakidheviyaar. The sacred ford is Manniyaaru.

Chandesvara Naayanaar was born in this place. This episode is described in the seventh verse of the decad pertaining to this temple. According to Periya Puraanam, Saint Thirujnaanasambandhar, got down from his palanquin as he was being carried through this village, out of respect for Chandeesvarar and walked to the temple to offer worship. There is a single inscription in this temple.

## INTRODUCTION TO THE HYMN

After adoring at the shrine of Thiruppurampayam, the boy-saint arrived at the outskirts of Cheignaloor where he was received by its pious residents in joy. As Cheignaloor was the birthplace of Chandesura Naayanar, the boy-saint stepped out of his palanquin and proceeded to the shrine on foot. Here the following hymn was sung by him.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 48. திருச்சேய்ஞலூர் 48. THIRU-CH-CHEIGNALOOR

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

நூலடைந்த கொள்கையாலே நுன்னடி கூடுதற்கு
மாலடைந்த நால்வர்கேட்க நல்கிய நல்லறத்தை
ஆலடைந்த நீழல்மேவி யருமறை சொன்னதென்னே
சேலடைந்த தண்கழனிச்சேய் செய்ஞலூர் மேயவனே. 1

நூல் அடைந்த கொள்கையாலே நுன் அடி கூடுதற்கு
மால் அடைந்த நால்வர் கேட்க, நல்கிய நல்அறத்தை,
ஆல் அடைந்த நீழல் மேவி, அருமறை சொன்னது என்னே -
சேல் அடைந்த தண் கழனிச்சேய் செய்ஞலூர் மேயவனே?

nUl aTainta koLkaiyAlE nun2 aTi kUTutaRku
mAl aTainta nAlvar kETka, nalkiya nal aRattai,
Al aTainta nIzal mEvi, arumaRai con2n2atu en2n2E--
cEl aTainta taN kazan2ic cEynjalUr mEyavan2E?

**பொருள்:** சேல் மீன்கள் நிறைந்த குளிர்ந்த வயல்களால் சூழப்பட்ட திருச்சேய்ஞலூரில் அமர்ந்திருக்கும் சிவபெருமானே! வேதம் முதலிய நூல்களில் விதிக்கப்பட்ட முறைகளினால், உன் திருவடிகளை அடைய முயன்றும் சனகாதி முனிவர்களாகிய நால்வருக்கும் அஞ்ஞானம் நீங்கவில்லை. அதனால் அவர்கள் உன்னை அடைந்து உண்மைப் பொருளைக் கேட்டனர். அவர்கள் தெளிவு பெறுமாறு, கல்லால மர நிழலில் வீற்றிருந்து, அரிய அநுபூதி நிலையாகிய இரகசியத்தை, எவ்வாறு அவர்களுக்கு உணர்த்தி அருளினாய்? கூறுவாயாக.

**குறிப்புரை:** பலநூல் கற்றும் மயக்கம் தெளியாமையாலே வந்து கேட்ட சனகாதியர் நால்வர்க்கும் உபதேசப் பொருளை உரைத்ததென்னே என வினாவியதாக அமைந்தது இப்பாடலும் பிறவும். நூல் – வேதாகம முதலிய நூற்பிரமாணங்கள். மால் – மயக்கம். நால்வர் – சனகாதியர் நால்வர். அருமறை – அரிய அநுபூதி நிலையாகிய இரகசியத்தை.

Thiru-ch-cheignaloor is surrounded by cool fields where carnatic carp fish move about in large numbers. The four celestial saints – Sanakar, Sananthanar, Sanaathanar and sanarkumarar (*சனகர், சனந்தனர், சனாதரர், சனற்குமாரர்*) tried their level best to reach

Your Holy Feet through the knowledge acquired from the Vedas and other scriptures. They were unsuccessful and became destitute regarding spiritual knowledge. Therefore they approached You to know real knowledge. Sitting under the stone-banyan tree (*கல்லால மரம்*) You explained to them, to their fullest satisfaction, the mysterious spiritual knowledge contained in the sacred scriptures. Pray tell us how You were able to clear their doubts.

**Note:** The Four: The four sages collectively called Sanakaadi Munivergal.

The Banyan tree: It is known as Kallaala, in Tamil. It is of the type of *Ficus indica* and has no stilt roots. Seated under this at Kailash, Civa explicated the Truth to this Four, in silence, through the Cin-mudhra.

நீறடைந்த மேனியின் கணேரிழை யாளொருபால்
கூறடைந்த கொள்கையன்றிக் கோல வளர்சடைமேல்
ஆறடைந்த திங்கள்சூடி யரவம ணிந்ததென்னே
சேறடைந் தண்கழனிச் சேய்ஞலூர் மேயவனே. 2

நீறு அடைந்த மேனியின்கண் நேரிழையாள் ஒருபால்
கூறு அடைந்த கொள்கை அன்றிக், கோல வளர்சடை மேல்
ஆறு அடைந்த திங்கள் சூடி, அரவம் அணிந்தது என்னே -
சேறு அடைந்த தண்கழனிச் சேய்ஞலூர் மேயவனே?

nIRu aTainta mEn2iyin2 kaN nErizaiyAL orupAl
kURu aTainta koLkai an2Ri, kOla vaLar caTaimEl
ARu aTainta tigkaL cUTi, aravam aNintatu en2n2E--
cERu aTainta taN kazan2ic cEynjalUr mEyavan2E?

**பொருள்:** சேறு மிகுந்த குளிர்ந்த வயல்களால் சூழப்பட்ட திருச்சேய்ஞலூரில் எழுந்தருளிய சிவபெருமானே! திருநீறணிந்த நின் திருமேனியின் ஒருபாகமாக உமையம்மை இருக்கின்றபோது, அழகியதாய் நீண்டு வளர்ந்த சடைமேல் கங்கையையும், காமத்தால் கலை குறைந்த சந்திரனையும், போகியாகிய பாம்பையும் அணிந்துள்ள காரணம் யாதோ?

**குறிப்புரை:** ஒருபாகமாக உமையைக் கொண்டிருத்தலேயன்றிக் கங்கை முதலியவற்றையும் அணிந்ததென்னே என்கின்றது. கோலம் – அழகு. பெண்ணொரு பாதியராக இருந்தும், மற்றொரு பெண்ணாகிய கங்கையையும், காமத்தாற் கலைகுறைந்த மதியையும், போகியாகிய பாம்பையும் அணிதல் தகுமா என வினாவியதன் நயம் ஓர்க.

Lord Civa! You are entempled in Thiru-ch-cheignaloor encircled by muddy cool fields. You have accommodated Your consort goddess Umaa Devi in Your handsome sacred body, smeared by holy ash. Despite this, in Your long matted hair You have also accommodated the Ganga Devi (the river Ganges, personified as a lady), and the moon that surrendered to You, and also a snake. Pray tell us the reason for this strange (weird) combination.

ஊனடைந்த வெண்தலையி னோடுப லிதிரிந்து
கானடைந்த பேய்களோடு பூதங்க லந்துடனே
மானடைந்த நோக்கிகாண மகிழ்ந்தெரி யாடலென்னே
தேனடைந்த சோலைமல்கு சேய்செய்ஞலூர் மேயவனே. 3

*ஊன் அடைந்த வெண்தலையினோடு பலி திரிந்து,*
*கான் அடைந்த பேய்களோடு பூதம் கலந்து உடனே,*
*மான் அடைந்த நோக்கி காண, மகிழ்ந்து எரிஆடல் என்னே -*
*தேன் அடைந்த சோலை மல்குசேய் செய்ஞலூர் மேயவனே?*

Un2 aTainta veN talaiyin2OTu pali tirintu,
kAn2 aTainta pEykaLOTu pUtam kalantu uTan2E,
mAn2 aTainta nOkki kANa, makizntu eri ATal en2n2E--
tEn2 aTainta cOlai malku cEynjalUr mEyavan2E?

**பொருள்:** வண்டுகள் நிறைந்த சோலைகள் செறிந்த திருச்சேய்ஞலூரில் எழுந்தருளிய சிவபெருமானே! ஊன் பொருந்திய வெண்மையான தலையோட்டைக் கையில் ஏந்தி பலியேற்றுத் திரிகின்றாய். அதோடு காட்டில் பேய்களோடு பூதங்களும் கலந்து சூழ, மான்போன்ற கண்களை உடைய உமையம்மை காணும்படி, மகிழ்வோடு இடுகாட்டில் எரியாடுதல் ஏன்?

**குறிப்புரை:** பலியேற்று, பேயும் பூதங்களும் புடைசூழ, மலையரசன் மகள் காண எரியாடுதல் ஏன் என வினவுவதை விளக்குகிறது. கான் – காடு. மான் அடைந்த நோக்கி – மான் பார்வையைக் கற்றுக் கொள்வதற்காக வந்தடைந்த நோக்கினையுடையாளாகிய உமாதேவி.

Lord Civan! You abide in Thiru-ch-cheignaloor wherein the groves beetles hum in large numbers. You are holding the white human skull with the flesh particles still sticking to it and are roaming about to get alms. You are dancing in the burning ghat, holding fire in Your hands, accompanied by a host of goblins and devils. Your joyful

dance is seen and enjoyed by Your consort Umaa Devi whose eyes are as attractive as those of a deer. Pray tell us why You are dancing in the burning ghat like this.

வீணடைந்த மும்மதிலும் வின்மலை யாஅரவின்
நாணடைந்த வெஞ்சரத்தா நல்லெரி யூட்டலென்னே
பாணடைந்த வண்டுபாடும் பைம்பொழில் சூழ்ந்தழகார்
சேணடைந்த மாடமல்கு சேய்ஞலூர் மேயவனே. 4

வீண் அடைந்த மும்மதிலும், வில் மலையா, அரவின்
நாண் அடைந்த வெஞ்சரத்தால், நல் எரியூட்டல் என்னே -
பாண் அடைந்த வண்டு பாடும் பைம்பொழில் சூழ்ந்து அழகுஆர்
சேண் அடைந்த மாடம் மல்கு சேய்ஞலூர் மேயவனே?

vIN aTainta mummatilum, vil malaiyA, aravin2
nAN aTainta venjcarattAl, nal eriyUTTal en2n2E--
pAN aTainta vaNTu pATum paimpozil cUzntu azaku Ar
cEN aTainta mATam malku cEynjalUr mEyavan2E?

**பொருள்:** பண்ணிசையோடு வண்டுகள் பாடும் பசுமையான பொழில் சூழ்ந்ததும், அழகியதாய் வானுயர்ந்த மாடவீடுகள் நிறைந்ததுமான திருச்சேய்ஞலூரில் எழுந்தருளிய இறைவனே! மும்மதில்களும் வீணடையுமாறு மலையை வில்லாகவும் அரவை அவ்வில்லின் நாணாகவும் கொண்டு கொடிய அம்பால் பெரிய எரியை அம்முப்புரங்களுக்கு ஊட்டியது ஏன்?

**குறிப்புரை:** மலை வில்லாக, பாம்பு நாணாகக் கொண்டு முப்புரத்தைத் தீ வைத்தது என்னே என வினாவுகிறது இத்திருப்பாடல். வீண் அடைந்த – பயனற்றுப் போன, நல்லெரி என்றது பூத எரிபோலாது, புண்ணியப் பொருளாகிய சிவபெருமானுடைய சிரிப்பினின்றெழுந்த சிவாக்கினி என்பதைக் குறிப்பித்தது. பாண் – பாட்டு. சேண் – ஆகாயம்.

Lord Civan is enshrined in Thiru-ch-cheignaloor, which is surrounded by thick green vegetation where the bees keep on humming; this humming sounds like musical notes. Here imposing, tall mansions are found. You improvised and used the Meru mountain as the bow and the snake as its arrow, with fire at the tip of the arrow and destroyed the three citadels of the Asuras. Pray tell us why You indulged in such an activity.

பேயடைந்த காடிடமாப் பேணுவ தன்றியும்போய்
வேயடைந்த தோளியஞ்ச வேழமு ரித்ததென்னே
வாயடைந்த நான்மறையா றங்கமோ டைவேள்வித்
தீயடைந்த செங்கையாளர் சேய்ஞலூர் மேயவனே. 5

*பேய் அடைந்த காடு இடமாப் பேணுவது அன்றியும், போய்,*
*வேய் அடைந்த தோளி அஞ்ச, வேழம் உரித்தது என்னே -*
*வாய் அடைந்த நால்மறை ஆறு அங்கமோடு ஐவேள்வித்*
*தீ அடைந்த செங்கையாளர் சேய்ஞலூர் மேயவனே?*

pEy aTainta kATu iTamAp pENuvatu an2Riyum, pOy,
vEy aTainta tOLi anjca, vEzam urittatu en2n2E--
vAy aTainta nAlmaRai ARu agkamOTu aivELvit
tI aTainta cegkaiyALar cEynjalUr mEyavan2E?

**பொருள்:** சேய்ஞலூரில் வாழும் அந்தணர்கள் வாயினால் ஓதப்படும் நான்கு வேதங்களுடன் ஆறு அங்கங்களையும் கற்றவர்கள். ஐவகை வேள்விகளை இயற்றி தீப்பொருந்திய சிவந்த கையினராக விளங்குபவர்கள். அந்த மறையோர்கள் வாழும் சேய்ஞலூரில் எழுந்தருளிய சிவபெருமானே! பேய்கள் விளங்கும் சுடுகாட்டை விரும்பி அமர்ந்ததுமன்றி மூங்கில் போன்ற தோளையுடைய உமையம்மை அஞ்சும்படி யானையை உரித்தது ஏனோ?

**குறிப்புரை:** சுடுகாட்டை இடமாகக் கொண்டு ஆடுதலேயன்றி அம்மையஞ்ச ஆனை உரித்ததென்னே என்கின்றது. பேணுவது – 'விரும்பியமர்வது. வேய் அடைந்த தோளி – மூங்கிலை ஒத்த தோள்களை உடைய உமையம்மை. வாயடைந்த – ஓதப்பெறுகின்ற; உண்மை செறிந்த என்றுமாம். ஐவேள்வி – தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்ற ஐவருக்கும் செய்யப்பெறும் வேள்வி. தீ அடைந்த செங்கையாளர் – தீப்பொருந்திய வலக்கரத்தை உடைய அந்தணர்கள்.

Lord Civa! You are enshrined in Thiru-ch-cheignaloor where the virtuous scholars incessantly chant the four Vedas and the six auxiliaries and orally propagated for generations together. These scholars abiding here perform the rituals of five different kinds of sacrifice. Their hands are reddish owing to the sacrifice performed constantly. Besides performing an ecstatic dance in the burning ghat You peeled the skin of an elephant and covering Your body with that skin caused Umaiyammai whose shoulders are beautiful like the bamboo, to tremble. Let us know why all this was done?

காடடைந்த ஏனமொன்றின் காரண மாகிவந்து
வேடடைந்த வேடனாகி விசயனொ டெய்ததென்னே
கோடடைந்த மால்களிற்றுக் கோச்செங் கணாற்கருள்செய்
சேடடைந்த செல்வர்வாழுஞ் சேய்ஞலூர் மேயவனே. 6

காடு அடைந்த ஏனம் ஒன்றின் காரணம்ஆகி வந்து,
வேடு அடைந்த வேடன் ஆகி, விசயனொடு எய்தது என்னே -
கோடு அடைந்த மால்களிற்றுக் கோச்செங்கணாற்கு அருள்செய்
சேடு அடைந்த செல்வர் வாழும் சேய்ஞலூர் மேயவனே?

kATu aTainta En2am on2Rin2 kAraNam Aki vantu,
vETu aTainta vETan2 Aki, vicayan2oTu eytatu en2n2E--
kOTu aTainta mAlkaLiRRuk kOccegkaNARku aruLcey
cETu aTainta celvar vAzum cEynjalUr mEyavan2E?

**பொருள்:** கோடுகளோடு கூடிய பெரிய யானைப் படைகளை உடைய கோச்செங்கட் சோழனுக்கு அருள் செய்தவனும், பெருமை பொருந்திய செல்வர்கள் வாழும் திருச்சேய்ஞலூரில் மேவியவனுமாகிய இறைவனே! வில்லடிபட்டுக் காட்டுக்குள் சென்று பதுங்கிய பன்றி ஒன்றின் காரணமாக, தான் வேடன் உருத்தாங்கி வந்து அருச்சுனனோடு போர் புரிந்தது ஏனோ?

**குறிப்புரை:** பன்றியைத் துரத்தி வந்து வேடனாகி விசயனோடு சண்டையிட்டது ஏன் என்கின்றது. ஏனம் – பன்றி. இது விசயன் தவத்தைக் கெடுத்துக் கொல்ல வந்த மூகாசுரன் என்னும் பன்றி. இதனைத் திருவுள்ளம் பற்றிய சிவபெருமான் பன்றியைக் கொன்று விசயனைக் காத்தனர் என்பது வரலாறு. கோடு – கொம்பு. மால் – பெரிய; மயக்கமுமாம். கோச்செங்கண்ணான் செய்த கோயில்களில் ஒன்றாதலின் அவற்கு அருள்செய் சேய்ஞலூர் மேயவனே என்றார். சேடு – பெருமை.

Oh Lord Civa! You are enshrined in Thiru-ch-cheignaloor where prosperous and famed people live. You graced the Chola King 'Ko-chengat-cholan', who had in his garrison a large elephant force with tusks. A hog struck by an arrow, ran into the forest and hid itself fearing death. On account of this event, You took the form of a hunter and clashed with Arjunan. What for this unnecessary clash?

**Note:** Kochenkanaan: A Chola Sovereign. He is one of the 63 Naayanmaars. He pioneered the building of Maadakkoyil (Shrine built on a raised platform). He had built and consecrated over 70 such temples.

The Hog: Arjuna undertook the performance of a severe tapas to gain the Paasupata Astra through the grace of Civa. Duryodana, the inveterate enemy of the Paandavas commanded an Asura called Mukaasura to kill Arjuna. He assumed the form of a wild hog, to attack and kill Arjuna. Civa, pleased with the tapas of Arjuna appeared as a hunter in the forest, and killed the hog. Then He gifted the Astra coveted by Arjuna.

பீரடைந்த பாலதாட்டப் பேணாத வன்றாதை
வேரடைந்து பாய்ந்ததாளை வேர்த்தடிந் தான்றனக்குத்
தாரடைந்த மாலைசூட்டித் தலைமைவ குத்ததென்னே
சீரடைந்த கோயில்மல்கு சேய்ஞலூர் மேயவனே. 7

பீர் அடைந்த பால்அது ஆட்டப், பேணாது, அவன் தாதை
வேர் அடைந்து பாய்ந்த தாளை வேர்த் தடிந்தான் தனக்குத்
தார் அடைந்த மாலை சூட்டித் தலைமை வகுத்தது என்னே -
சீர் அடைந்த கோயில் மல்கு சேய்ஞலூர் மேயவனே?

pIr aTainta pAl atu ATTa, pENAtu, avan2 tAtai
vEr aTaintu pAynta tALai vErt taTintAn2 tan2akkut
tAr aTainta mAlai cUTTit talaimai vakuttatu en2n2E--
cIr aTainta kOyil malku cEynjalUr mEyavan2E?

**பொருள்:** சிறப்பு மிக்க மாடக் கோயிலாய் விளங்கும் திருச்சேய்ஞலூரில் விளங்கும் சிவபெருமானே! பசுவின் முலைக்காம்பின் வழியே தானாகச் சுரந்த பாலை விசார சருமன், தான் மணலால் உருவாக்கிய சிவலிங்கத்திற்கு அபிஷேகம் செய்தார். அதனை விரும்பாத அவனது தந்தை எச்ச தத்தன் சினந்து, பாற்குடத்தை தன் காலால் இடறினான். அந்தக் காலை வெட்டிய விசார சருமரின் பக்தியை மெச்சி அவருக்கு சிவன் தாரையும் தனக்குச் சூட்டப்பட்ட மாலையையும் சூட்டி அவரைச் சிவகணங்களுக்கும் தலைவனாக ஆக்கியது ஏன்?

**குறிப்புரை:** தந்தையின் தாளை வெட்டிய சண்டீசற்கு மாலை சூட்டித் தலைமை தந்ததென்னே என்கின்றது. பீர் – சுரப்பு. பேணாது – அது சிவார்ப்பணம் ஆன அருமைப் பாட்டை அகங்கொள்ளாது. அவன் என்றது விசார சருமனை. தாதை – எச்ச தத்தன். வேர் அடைந்து பாய்ந்த தாளை – வேரூன்றிப் பாற்குடத்தின் மேல் பாய்ந்த தாளை; அதாவது இடறிய காலை என்பதாம். வேர் அடைந்து என்பதற்குச்



திருவோத்தூர் – வேதநாதர் – தொண்டை நாட்டுத் தலம்
**Veda Naathar Temple - Tiruotthur, Tamil Nadu.**



திருஅம்பர் மாகாளம் – காலகண்டேஸ்வரர் – சோழநாட்டு தென்கரைத் தலம்
**Kalakantesurar Temple - Anbar Makalam (Koyil Tiru Makalam), Tamil Nadu.**

திருவல்லம் – வல்லநாதர் – தொண்டை நாட்டுத் தலம்

**Vallanathar Temple - Tiruvallam, Tamil Nadu**



திருப்பருப்பதம் (ஸ்ரீசைலம்) – பர்பதநாதர் – வடநாட்டுத் தலம்

**Paruppatha Nathar Temple - Tirupparuppatham (Sri Sailam), Andhra Pradesh**

சினத்தால் வேர்த்து எனலுமாம். வேர்த்தடித்தான் – நிலையை அறுத்தவன். அடைந்த தார் மாலை சூட்டி – தாம் சூட்டிய தாரையும் மாலையையும் சூட்டி.

Oh Lord Civa! You are enshrined in the very famous temple at Thiru-ch-cheingnaloor built on a mound with narrow passage so as to avoid elephants entering the temple. Visarasarumar (*விசார சருமர்*) used to give sacred bath of milk to the Civalinga he made of sand. He got the milk from the cows, which he tended. His father Echa-thath-than (*எச்சதத்தன்*) got wild with his son, for misusing the milk. Therefore he kicked the Civalinga. Visarasarumar, before knowing that it was his father's action, gave a severe blow to his leg. Highly pleased with his action, Lord Civa conferred on him the title known as Chandeesan (*சண்டீசம் என்ற பதவி*) and also bestowed on him a sacred cloth and a garland. We wonder at this conferment.

மாவடைந்த தேரரக்கன் வலிதொலை வித்தவன்றன்
நாவடைந்த பாடல்கேட்டு நயந்தருள் செய்ததென்னே
பூவடைந்த நான்முகன்போற் பூசுரர் போற்றிசெய்யும்
சேவடைந்த வூர்தியானே சேய்ஞலூர் மேயவனே. 8

மா அடைந்த தேர் அரக்கன் வலி தொலைவித்து அவன்தன்
நா அடைந்த பாடல் கேட்டு நயந்து, அருள் செய்தது என்னே -
பூ அடைந்த நான்முகன் போல் பூசுரர் போற்றிசெய்யும்
சே அடைந்த ஊர்தியானே, சேய்ஞலூர் மேயவனே?

mA aTainta tEr arakkan2 vali tolaivittu avan2tan2
nA aTainta pATal kETTu nayantu, aruL ceytatu en2n2E--
pU aTainta nAn2mukan2 pOl pUcurar pORRi ceyyum
cE aTainta UrtiyAn2E, cEynjalUr mEyavan2E?

**பொருள்:** தாமரை மலரில் விளங்கும் நான்முகன் போன்ற அந்தணர்கள் போற்றும், விடையை ஊர்தியாகக் கொண்டவனே! திருச்சேய்ஞலூரில் மேவிய இறைவனே! குதிரைகள் பூட்டப்பட்ட தேரை உடைய இராவணனது வலிமையை அழித்து அவன் நாவினால் பாடிய பாடலைக் கேட்டு விரும்பி அவனுக்கு அருள்கள் பல செய்தது ஏனோ?

***குறிப்புரை:*** இராவணனது வலி தொலைத்து, அவன் பாடல் கேட்டு அருளியதேன் என்கின்றது. இராவணன் தேர் புஷ்பகமாயினும் மா அடைந்ததேர் என்றது தேர் என்ற பொதுமை நோக்கி. மா – குதிரை; வண்டுமாம். பாடல் – சாமகீதம். பூசுரர் – அந்தணர். சே – இடபம்.

Lord Civan, using the bull as His vehicle, is hailed by the virtuous scholars who do the rituals as Brahma do. He resides in Thiru-ch-cheignaloor. He destroyed the strength of Raavanan who had a chariot of horses. But Oh! Lord You were enticed by the song sung by Raavanan and bestowed Your grace on him; tell us why?

காரடைந்த வண்ணனோடு கனகம னையானும்
பாரிடந்தும் விண்பறந்தும் பாதமு டிகாணார்
சீரடைந்து வந்துபோற்றச் சென்றருள் செய்ததென்னே
தேரடைந்த மாமறுகிற் சேய்ஞலூர் மேயவனே. 9

*கார் அடைந்த வண்ணனோடு கனகம் அனையானும்,*
*பார் இடந்தும் விண் பறந்தும் பாதம் முடி காணார்,*
*சீர் அடைந்து வந்து போற்றச், சென்று அருள்செய்தது என்னே -*
*தேர் அடைந்த மா மறுகின் சேய்ஞலூர் மேயவனே?*

kAr aTainta vaNNan2OTu kan2akam an2aiyAn2um,
pAr iTantum viN paRantum pAtam muTi kANAr,
cIr aTaintu vantu pORRa, cen2Ru aruL ceytatu en2n2E--
tEr aTainta mA maRukin2 cEynjalUr mEyavan2E?

***பொருள்:*** தேர் ஓடும் அழகிய வீதிகளை உடைய திருச்சேய்ஞலூர் மேவிய சிவனே! கருமை நிறம் பொருந்திய திருமால் பொன் வண்ணனாகிய பிரமன் ஆகியோர் உலகத்தை அகழ்ந்தும் விண்ணில் பறந்தும் சென்று அடிமுடிகளைக் காணாராய்த் தம் தருக்கொழிந்து பின் அவர்கள் போற்ற அவர்பால் சென்று அருள் செய்தது ஏனோ?

***குறிப்புரை:*** அயனும் மாலும் பறந்தும் தோண்டியும் காணக் கிடையாத தேவரீர் அவர்கள் திருந்தி வந்த காலத்து அருள் வழங்கியது ஏன் என்கின்றது. கார் – கருமை நிறம். கனகம் அனையான் – பொன் நிறமுடைய பிரமன். சீர் அடைந்து – தாம் முதலல்ல 'என்றும் மீளா ஆளாவோம்' என்ற உண்மை உணர்ந்து. மறுகு – வீதி.

Civan is entempled in Thiru-ch-cheignaloor, which consists of broad streets in which chariots ply. The dark complexioned Thirumaal and gold-complexioned

Brahma, delving deep and flying high, have failed in their attempt to find the crown and feet of Lord Civa. Flouted in their attempt they shed their arrogance and later glorified the Lord. Oh Lord! You bestowed Your grace on them. Why?

மாசடைந்த மேனியாரும் மனந்திரி யாதகஞ்சி
நேசடைந்த வூணினாரு நேசமிலாததென்னே
வீசடைந்த தோகையாட விரைகம ழும்பொழில்வாய்த்
தேசடைந்த வண்டுபாடுஞ் சேய்ஞலூர் மேயவனே. 10

*மாசு அடைந்த மேனியாரும், மனம் திரியாத கஞ்சி*
*நேசு அடைந்த ஊணினாரும், நேசம் இலாதது என்னே -*
*வீசு அடைந்த தோகை ஆட, விரை கமழும் பொழில்வாய்த்,*
*தேசு அடைந்த வண்டு பாடும் சேய்ஞலூர் மேயவனே?*

mAcu aTainta mEn2iyArum, man2am tiriyAta kanjci
nEcu aTainta UNin2Arum, nEcam ilAtatu en2n2E--
vIcu aTainta tOkai ATa, virai kamazum pozilvAy,
tEcu aTainta vaNTu pATum cEynjalUr mEyavan2E?

**பொருள்:** வீசி ஆடுகின்ற தோகைகளை உடைய மயில்கள் ஆடுவதும், மணம் கமழும் பொழில்களில் ஒளி பொருந்திய வண்டுகள் பாடுவதும் செய்யும் திருச்சேய்ஞலூரில் மேவிய இறைவனே! அழுக்கேறிய உடலினரும், மனத்தில் வெறுப்பின்றிக் கஞ்சியை விரும்பி உணவாகக் கொள்வோரும் ஆகிய சமண புத்தர்கள் உன்பால் நேசம் இல்லாததற்குக் காரணம் யாதோ?

***குறிப்புரை:*** புத்தரும் சமணரும் தேவரீரிடத்து அன்பு கொள்ளாதது என்னே என்கின்றது. மாசு – அழுக்கு. நேசடைந்த – அன்பு கொண்ட. வீசடைந்த தோகை – வீசியாடுகின்ற மயில். தேசு – ஒளி.

Lord Civan resides in Thiru-ch-cheignaloor in which peacocks with stretched out their feather and dance. Beetles hum in gardens and groves filled with aroma. Men with bodies of accumulated dirt and men with minds bearing no revulsion for taking porridge as their food, the Jains and Buddhists move about without love for the Lord Civa. Oh Lord! What is the reason behind this?

சேயடைந்த சேய்ஞலூரிற் செல்வன சீர்பரவித்
தோயடைந்த வண்வயல்சூழ் தோணிபு ரத்தலைவன்
சாயடைந்த ஞானமல்கு சம்பந்த னின்னுரைகள்
வாயடைந்து பாடவல்லார் வானுல காள்பவரே. 11

**சேய் அடைந்த சேய்ஞலூரில் செல்வன சீர் பரவி,**
**தோய் அடைந்த தண்வயல் சூழ் தோணிபுரத்தலைவன் -**
**சாய் அடைந்த ஞானம் மல்கு சம்பந்தன்-இன்உரைகள்**
**வாய் அடைந்து பாட வல்லார் வான்உலகு ஆள்பவரே.**

cEy aTainta cEynjalUril celvan2a clr paravi,
tOy aTainta taNvayal cUz tONi purat talaivan2--
cAy aTainta njAn2am malku campantan2--in2 uraikaL
vAy aTaintu pATa vallAr vAn2 ulaku ALpavarE.

**பொருள்:** முருகப் பெருமான் வழிபட்ட சிறப்புமிக்கத் தலம் திருச்சேய்ஞலூர். இத்தலத்தில் விளங்கும் செல்வனான சிவபிரானது புகழைப் போற்றிப் பாடினார் ஞானசம்பந்தன். இவர், நீர்வளம் மிக்க வளமையான வயல்களால் சூழப்பட்ட தோணிபுரத்தின் தலைவர். நுட்பமான ஞானம் கொண்டவர். அவர் பாடிய இந்த இனிமையான பதிகத்தை வாயினால் பாடி வழிபட வல்லவர்கள் வானுலகை ஆள்வர்.

**குறிப்புரை:** நுணுகிய ஞானத்தோடு கூடிய இப்பதிகத்தை வாயினால் பாடி வழிபட வல்லவர்கள் வானுலகு ஆள்வர் என்கின்றது. சேய் – முருகன். முருகன் சூரபன்மாவைக் கொல்லப் படை எடுத்த காலத்து இத்தலத்தில் தங்கி இறைவனை வழிபட்டார் என்பது கந்த புராண வரலாறு. ஆதலின் 'சேயடைந்த சேய்ஞலூர்' என்றார். தோயடைந்த – நீர் நிறைந்த தேயம் என்பது தோய் என ஈறு குறைந்தது. சாய் – நுணுக்கம்.

Thiru-ch-cheignaloor is specially known as the place of worship of Lord Civa by Lord Muruga portrayed as His son. Gnaanasambandan, belonging to Thonipuram (*தோணிபுரம்*) which is well-known a place of plenty of water availability and fertile fields, and possessing intricate wisdom, has sung pleasant verses in praise of Civan. Those who can sing his verses are sure to reach the eternal world.

**Note:** His Son: Muruga. He visited this holy place and worshipped Civa. So, this town came to be known as Cheignaloor. Chei: Child/son. Naloor: The good city.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*48ஆம் பதிகம் முற்றிற்று*
End of 48th Hymn

உ
சிவமயம்

# 49. திருநள்ளாறு

## திருத்தலவரலாறு:

ஏழாம் பதிகம் பார்க்க.

## பதிக வரலாறு:

திருத்தருமபுரத்தை வழிபட்டுத் திருநள்ளாறடைந்த காழிவேந்தர் அன்புறு காதலினால் உள்ளுருகி இறைவனை வணங்கி, பொருவில் திருப்பதிகமாகிய 'போகமார்த்த' என்னுமிதனை எடுத்துப் பாடி, திருக்கடைக்காப்புமிட்டு, திருநீலகண்ட யாழ்ப்பாணரை யாழில் வைத்து வாசிக்கச் செய்து, தாமும்பாடி, எல்லோரையும் மகிழ்வித்தார். இப்பதிகமே சமணருடன் செய்த அனல்வாதத்தில் வெற்றி கண்ட பச்சைப் பதிகம்.

# 49. THIRU-NALLAARU

## THE HISTORY OF THE PLACE

See Seventh Hymn.

## INTRODUCTION TO THE HYMN

From Dharmapuram, the boy-saint arrived at Thiru-nallaaru and sang the following peerless decad. This is known as 'Pacchai-p-pathikam', which secured success for our Saint in his encounter with the Samanars at Madurai.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 49. திருநள்ளாறு

## 49. THIRU-NALLAARU

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

போகமார்த்த பூண்முலையாள் தன்னோடும் பொன்னகலம்
பாகமார்த்த பைங்கண்வெள் ளேற்றண்ணல் பரமேட்டி
ஆகமார்த்த தோலுடையன் கோவண வாடையின்மேல்
நாகமார்த்த நம்பெருமான் மேயது நள்ளாறே. 1

*போகம் ஆர்த்த பூண்முலையாள் தன்னோடும் பொன்அகலம்*
*பாகம் ஆர்த்த பைங்கண் வெள்ஏற்று அண்ணல், பரமேட்டி,*
*ஆகம் ஆர்த்த தோல்உடையன், கோவணஆடையின்மேல்*
*நாகம் ஆர்த்த நம்பெருமான், மேயது நள்ளாறே.*

pOkam Artta pUN mulaiyAL tan2n2OTum pon2 akalam
pAkam Artta paigkaN veL ERRu aNNal, paramETTi,
Akam Artta tOl uTaiyan2, kOvaNa ATaiyin2 mEl
nAkam Artta namperumAn2, mEyatu naLLARE.

***பொருள்:*** நம் பெருமானாகிய சிவபெருமான், இன்பத்திற்கு நிலைக்களனாய் உள்ளனவும், அணிகலன்கள் பொருந்தியதுமான தனங்களை உடைய உமையம்மையை, தம்முடைய அழகிய திருமேனியின் இடப்பாகத்தில் நிறைந்து இருக்கச் செய்தவர். குளிர்ந்த கண்களையும் வெண்மையான நிறத்தையும் உடைய எருதைத் தனது வாகனமாகக் கொண்ட தலைவர். மேலானவர். திருமேனியில் தோல் ஆடையைப் போர்த்தவன். இடுப்பில் உள்ளாடையாகக் கட்டிய கோவண ஆடையின்மேல் நாகத்தைக் கச்சாக இறுக்கிக் கட்டியவர். இந்த நம்பெருமான் எழுந்தருளி இருக்கும் இடம் திருநள்ளாறு.

***குறிப்புரை:*** இப்பதிகம் முழுவதுமே பெருமான் விரும்பி இருக்கும் இடம் நள்ளாறு என்கின்றது. ஆர்த்த – நிறைந்த. அம்மையின் திருநாமம் போகமார்த்த பூண்முலையாள் என்பது. தன்னோடும் என்றது அம்மையைத் தன்னின் வேறாக இடப்பாகத்துக்கு எழுந்தருளச் செய்த நிலையைக் குறித்தது. பொன் அகலம் பாகம் ஆர்த்த என்பது தன்னோடு ஒரு திருமேனியில் இருக்கும் நிலையைக் குறித்தது. அகலம் – மார்பு. ஆகம் – மார்பு.

***குருவருள்:*** அனல் வாதத்தின்போது ஞானசம்பந்தர் தாம் அருளிய பாடல் தொகுப்பில் கயிறு சார்த்திப் பார்த்தபோது இந்த 'போகமார்த்த பூண்முலையாள்' என்னும் பதிகம் கிடைத்தது. திருமுறையில் கயிறு சார்த்திப் பார்க்கும் மரபை ஞானசம்பந்தரே தொடங்கி வைத்துள்ளதை இதனால் அறியலாம். 'போகமார்த்த பூண்முலையாள்' என்னும் இத்தொடரால் இன்பதுன்ப அநுபவங்களாகிய போகத்தைத் தன்மார்பகத்தே தேக்கி வைத்து உயிர்களாகிய தம் பிள்ளைகட்குப் பாலாக ஊட்டுகிறாள் அம்மை என்ற குறிப்பும் கிடைக்கிறது. உலகில் தாய்மார்கள் தங்கள் மார்பகத்தே திருவருளால் சுரக்கின்ற தாய்ப்பாலைத் தங்கள் குழந்தைகட்குக் கரவாது கொடுத்து வரவேண்டும் என்பதையும் இது உணர்த்துகிறது. தாய்ப்பாலே குழந்தைகட்குச் சிறந்த உணவு. நோய்த்தடுப்பு மருந்து. தாய்க்கும் சேய்க்கும் நலம் பயப்பது என்பது உணர்க.

Thiru-nallaaru is a shrine much desired by Lord Civa. He has accommodated on the left part of His body goddess Umaa Devi who is known here as Bhogam-aartha-poonn-mulaiyaal (*போகமார்த்த பூண்முலையாள்*). He uses the bull with cool eyes and white complexion as His vehicle. He, the Supreme, has covered His divine body with the skin of an animal and has tied the snake over His loincloth. This Lord is entempled in Thiru-nallaaru.

**Note:** Bhogam-aarttha-poonn-mulaiyaal is the name of the Goddess of Thiru-nallaaru.

Bhogam: Bliss; aarttha: compact of; poonn-mulaiyaal: She has bejeweled breasts. Umaa is hailed as a virgin by the Sivagnaana Siddhiyaar. This bliss granted by Civa-Sakthi is non-physical. It is spiritual and endless.

Kovanam: loincloth.

தோடுடைய காதுடையன் தோலுடை யன்தொலையாப்
பீடுடைய போர்விடையன் பெண்ணுமோர் பாலுடையன்
ஏடுடைய மேலுலகோ டேழ்கட லுஞ்சூழ்ந்த
நாடுடைய நம்பெருமான் மேயது நள்ளாறே. 2

*தோடு உடைய காது உடையன், தோல் உடையன், தொலையாப்*
*பீடு உடைய போர்விடையன், பெண்ணும் ஓர்பால் உடையன்,*
*ஏடு உடைய மேல்உலகோடு ஏழ்கடலும் சூழ்ந்த*
*நாடு உடைய நம்பெருமான், மேயது நள்ளாறே.*

tOTu uTaiya kAtu uTaiyan2, tOl uTaiyan2, tolaiyAp
pITu uTaiya pOr viTaiyan2, peNNum OrpAl uTaiyan2,
ETu uTaiya mEl ulakOTu EzkaTalum cUznta
nATu uTaiya nam perumAn2, mEyatu naLLARE.

**பொருள்:** சிவபெருமான், உமையம்மை பாகத்தே உள்ள இடது காதில் தோடணிந்தவர். தோலை ஆடையாகக் கொண்டவர். குன்றாத பெருமை உடையதும் போர் செய்தலில் வல்லதுமான விடை ஊர்தியர். மலை மகளை ஒரு பாகமாகக் கொண்டவர். அடுக்குகளாக அமைந்த மேல் உலகங்களோடு ஏழு கடல்களாலும் சூழப்பட்ட இந்த நிலவுலகத்தையும் உடையவர். இந்த நம் பெருமான் விரும்பிய இடம் திருநள்ளாறு ஆகும்.

**குறிப்புரை:** தோடுடைய காது – அம்மையின் காது. பீடு – பெருமை. ஏடு உடைய மேலுலகு – ஒன்றின்மேல் ஒன்றாக எடுத்தலை உடைய மேலுலகங்கள். இவ்விரண்டடிகளாலும் இறைவனுடைய தனியரசிற்கு உரிய நாட்டுப்பரப்பு சொல்லப்பட்டது.

Lord Civa, having accepted His consort at the left portion of His body wears a stud at His left ear. He uses the skin of an animal as His robe. His vehicle is a bull of endless fame and valorous deeds in war. His consort forms part of His body. He is a lord of tiered upper worlds, as well as this world, the earth, engirdled by the seas. His beloved shrine is this Thiru-nallaaru.

ஆன்முறையா லாற்றவெண்ணீ றாடி யணியிழையோர்
பான்முறையால் வைத்தபாதம் பத்தர் பணிந்தேத்த
மான்மறியும் வெண்மழுவுஞ் சூலமும் பற்றியகை
நான்மறையான் நம்பெருமான் மேயது நள்ளாறே. 3

*ஆன் முறையால் ஆற்ற வெண்நீறு ஆடி, அணியிழை ஓர்-*
*பால் முறையால் வைத்த பாதம் பத்தர் பணிந்து ஏத்த,*
*மான்மறியும், வெண்மழுவும் சூலமும் பற்றிய கை*
*நால்மறையான் நம்பெருமான், மேயது நள்ளாறே.*

An2 muRaiyAl ARRa veN nIRu ATi, aNiyizai Or--
pAl muRaiyAl vaitta pAtam pattar paNintu Etta,
mAn2maRiyum veNmazuvum cUlamum paRRiya kai
nAl maRaiyAn2, namperumAn2, mEyatu naLLARE.

***பொருள்:*** சிவபெருமான் பசுவிடமிருந்து முறையாக எடுக்கப்பட்ட திருவெண்ணீற்றை மேனி முழுவதும் பூசியவர். அழகிய அணிகலன்களைத் தரித்த உமையம்மையை ஒரு பாகமாக வைத்துள்ளவர். தன் திருவடிகளை பக்தர்கள் பணிந்து போற்றத்தக்க மேன்மையானவர். இளமையான மான், வெண்மையான மழு, சூலம் ஆகியவற்றை ஏந்திய கையினர். நான்மறைகளையும் அருளியவர். இந்த நம் பெருமான் விரும்பிய தலம் திருநள்ளாறு ஆகும்.

***குறிப்புரை:*** ஆன்முறையால் – பசுவினிடமிருந்து விதிப்படி எடுக்கப்பட்ட. ஆற்ற ஆடி எனக் கூட்டுக. ஆற்ற – மிக. அணியிழை – உமாதேவியார்.

Civaperuman has smeared on His body the white ash made out of the cow-dung properly processed; He retains at His side Umaiammai who wears beautiful jewels. In His hands He holds the cub of a deer, white axe and trident. He is the author of the four Vedas and resides at Thiru-nallaaru.

புல்கவல்ல வார்சடைமேற் பூம்புனல் பெய்தயலே
மல்கவல்ல கொன்றைமாலை மதியோ டுடன்சூடிப்
பல்கவல்ல தொண்டர் தம்பொற் பாதநி ழற்சேர
நல்கவல்ல நம்பெருமான் மேயது நள்ளாறே. 4

புல்க வல்ல வார்சடைமேல் பூம்புனல் பெய்து, அயலே
மல்க வல்ல கொன்றைமாலை மதியோடு உடன்சூடிப்,
பல்க வல்ல தொண்டர் தம் பொன்பாதநிழல் சேர,
நல்க வல்ல நம்பெருமான் மேயது நள்ளாறே.

pulka valla vArcaTaimEl pUmpun2al peytu, ayalE
malka valla kon2Rai mAlai matiyOTu uTan2 cUTi,
palka valla toNTar tam pon2pAta nizal cEra,
nalka valla namperumAn2 mEyatu naLLARE.

**பொருள்:** சிவபெருமான் தனது நீண்ட சடையின் மேல் கங்கையை வைத்துள்ளார். அதன் அருகில் கொன்றை மாலையையும் பிறைச்சந்திரனையும் ஒரு சேரச் சூடியுள்ளார். தன்னை இறுகப் பற்றிக் கொண்டு வழிபடுபவர்க்குத் தனது திருவடி நிழலைச் சேரும் பேற்றை நல்குபவர். இப்பெருமான் மேவிய தலம் திருநள்ளாறு ஆகும்.

**குறிப்புரை:** புல்கவல்ல – தழுவவல்ல. மல்க – நிறைய. பல்க – இறுக. இது அடியார்களுக்குத் திருவடி நிழலைத் தருகின்றார் என்று பயன் கூறுகின்றது.

In Thiru-nallaaru resides our Lord who holds on His long matted hair the splendorous river Ganges, the garland of cassia flowers and the crescent moon in close proximity to each other. He blesses His servitors - ever increasing in number with the salvific shade of His Golden Feet. Such is the nature of the Lord of Thiru-nallaaru.

ஏறுதாங்கி யூர்திபேணி யேர்கொ ளிளமதியம்
ஆறுதாங்குஞ் சென்னிமேலோர் ஆடர வஞ்சூடி
நீறுதாங்கி நூல்கிடந்த மார்பி னிரைகொன்றை
நாறுதாங்கு நம்பெருமான் மேயது நள்ளாறே. 5

ஏறு தாங்கி ஊர்தி பேணி, ஏர் கொள் இளமதியம்
ஆறு தாங்கும் சென்னிமேல் ஓர் ஆடுஅரவம்சூடி,
நீறு தாங்கி நூல் கிடந்த மார்பில் நிரை கொன்றை
நாறு தாங்கு நம்பெருமான் மேயது நள்ளாறே.

ERu tAgki, Urti pENi, Er koL iLamatiyam
ARu tAgkum cen2n2imEl Or ATu aravam cUTi,
nIRu tAgki nUl kiTanta mArpil nirai kon2Rai
nARu tAgku namperumAn2 mEyatu naLLARE.

**பொருள்:** சிவபெருமான் தனது கொடியாக இடபத்தைக் கொண்டுள்ளார். அதனையே தனது வாகனமாகவும் விரும்பி ஏற்றுள்ளார். அழகிய இளம்பிறைச் சந்திரன், கங்கை ஆகியன பொருந்திய சடைமுடியின் மேல் ஆடுகின்ற பாம்பைச் சூடியுள்ளார். திருநீறுபூசியுள்ளார். பூணூலோடு விளங்கும் மார்பில் மணம் கொண்ட மாலையை அணிந்துள்ளார். இந்த நம்பெருமான் விரும்பிய தலம் திருநள்ளாறு ஆகும்.

**குறிப்புரை:** ஏறுதாங்கி – கொடியின்கண் இடபத்தைத் தாங்கி. ஊர்தி பேணி – இடபவாகனத்தின்மீது ஆரோகணித்து. ஏர் – அழகு. நிரைகொன்றை – ஒழுங்கான கொன்றை. நாறு – மணம்.

The bull is the insignia of Lord Civan's flag. The real bull is His vehicle on which He rides majestically. His matted hair holds the beautiful, young, crescent moon and the river Ganges and a dancing snake. Having applied the sacred ashes to His body He wears the sacred thread on His chest from which arises the fragrance of cassia garland. It is in Thiru-nallaaru that our Lord Civan is entempled.

திங்களுச்சி மேல்விளங்குந் தேவனி மையோர்கள்
எங்களுச்சி யெம்மிறைவ னென்றடி யேயிறைஞ்சத்
தங்களுச்சி யால்வணங்குந் தன்னடி யார்கட்கெல்லாம்
நங்களுச்சி நம்பெருமான் மேயது நள்ளாறே. 6

*திங்கள் உச்சிமேல் விளங்கும் தேவன் -இமையோர்கள்,*
*"எங்கள் உச்சி எம் இறைவன்!" என்று அடியே இறைஞ்சத்,*
*தங்கள் உச்சியால் வணங்கும் தன் அடியார்கட்கு எல்லாம்*
*நங்கள் உச்சி நம்பெருமான் மேயது நள்ளாறே.*

tigkaL uccimEl viLagkum tEvan2--imaiyOrkaL,
"egkaL ucci em iRaivan2!" en2Ru aTiyE iRainjca,
tagkaL ucciyAl vaNagkum tan2 aTiyArkaTku ellAm
nagkaL ucci namperumAn2--mEyatu naLLARE.

**பொருள்:** சிவபெருமான் தன் திருமுடியின் உச்சிமீது பிறைச்சந்திரனை வைத்துள்ளார். எங்கள் தலைவனாய் உள்ள எம்பெருமானே! என்று தேவர்கள் அடிபரவி இறைஞ்சுவர். தங்கள் தலையால் தன்னை வணங்கும் அடியவர்களும் 'எங்கள் முடிமீது விளங்கும்

நம்பெருமானே' என்று போற்றுவர். இந்தச் சிவபெருமான் மேவிய தலம் திருநள்ளாறு ஆகும்.

**குறிப்புரை:** உச்சி – தலை. எங்கள் உச்சியின்மேல் இருக்கின்றார் எம்மிறைவன் என்று தேவர்கள் வணங்க. தலைவணங்கும் அடியார்களும் நமது உச்சியில் உள்ளான் (எனக்கூற இருக்கும்) நம் பெருமான் மேயது நள்ளாறு என இயைத்துப் பொருள் காண்க.

Lord Civan is the Supreme God in whose crest the bright moon abides. The Devaas adore His holy feet by saying "Oh Lord! You are our Chief". The devotees who worship Him by placing their heads on His holy feet proclaim that He abides on their heads. It is in Thiru-nallaaru where He is entempled.

வெஞ்சுடர்த்தீ யங்கையேந்தி விண்கொண் முழவதிர
அஞ்சிடத்தோ ராடல்பாடல் பேணுவ தன்றியும்போய்ச்
செஞ்சடைக்கோர் திங்கள்சூடித் திகழ்தரு கண்டத்துள்ளே
நஞ்சடைத்த நம்பெருமான் மேயது நள்ளாறே. 7

*வெஞ்சுடர்த்தீ அயங்கை ஏந்தி விண்கொள் முழவு அதிர,*
*அஞ்சு இடத்து ஓர் ஆடல் பாடல் பேணுவது அன்றியும், போய்ச்,*
*செஞ்சடைக்கு ஓர் திங்கள் சூடித், திகழ்தரு கண்டத்துள்ளே*
*நஞ்சு அடைத்த நம்பெருமான் மேயது நள்ளாறே.*

venjcuTart tI agkai Enti, viN koL muzavu atira,
anjcu iTattu Or ATal pATal pENuvatu an2Riyum, pOy,
cenjcaTaikku Or tigkaL cUTi, tikaztaru kaNTattuLLE
nanjcu aTaitta namperumAn2 mEyatu naLLARE.

**பொருள்:** சிவபெருமான் கொடிய ஒளிபொருந்திய நெருப்பைக் கையில் ஏந்தியவர். விண்ணளாவும் ஒலிக்கும் முழவு முழங்கப் பலரும் அஞ்சும் சுடுகாட்டில் ஆடுவதையும் பாடுவதையும் விரும்புபவர். தலையில் ஓர் இளம்பிறையைச் சூடியவர். பிரகாசிக்கின்ற தன் கழுத்தில் நஞ்சினை நிறுத்தியவர். இந்த நம்பெருமான் விரும்பிய தலம் திருநள்ளாறு ஆகும்.

**குறிப்புரை:** விண் கொள் முழவு – மேகத்தை ஒத்த முழவம்; அல்லது ஆகாயத்தின் தன்மையாகிய சப்தத்தைக் கொண்டிருக்கின்ற முழவுமாம். அஞ்சிடம் – அஞ்சத்தக்க இடமாகிய மயானம்.

Lord Civa holding the fierce and bright rayed flame in His hand; He sings and dances in the dreadful burning ghat to the beat of the drum that resonates even to the

skies. He wears in His ruddy matted hair the crescent moon. He has stayed (stalled) the poison at His splendorous throat. This Lord Civan is enshrined in Thiru-nallaaru.

சிட்டமார்ந்த மும்மதிலுஞ் சிலைவரைத் தீயம்பினால்
சுட்டுமாட்டிச் சுண்ண வெண்ணீ றாடுவ தன்றியும்போய்ப்
பட்டமார்ந்த சென்னிமேலோர் பான்ம தியஞ்சூடி
நட்டமாடு நம்பெருமான் மேயது நள்ளாறே. 8

*சிட்டம் ஆர்ந்த மும்மதிலும் சிலைவரைத் தீஅம்பினால்*
*சுட்டு மாட்டிச், சுண்ணவெண் நீறுஆடுவது அன்றியும், போய்ப்*
*பட்டம் ஆர்ந்த சென்னிமேல் ஓர் பால்மதியம் சூடி,*
*நட்டம் ஆடு நம்பெருமான் மேயது நள்ளாறே.*

ciTTam Arnta mummatilum cilaivarait tI ampin2Al
cuTTu mATTi, cuNNa veN nIRu ATuvatu an2Riyum, pOyp
paTTam Arnta cen2n2imEl Or pAl matiyam cUTi,
naTTam ATum namperumAn2 mEyatu naLLARE.

**பொருள்:** சிவபெருமான், பெருமை மிக்க முப்புரங்களையும் வில்நாணில் பூட்டிய தீயாகிய அம்பினால் சுட்டு அழித்தவர். திருவெண்ணீற்றுப் பொடியில் திளைத்து விளங்குபவர். நெற்றியில் பட்டம் என்னும் அணிகலன் கட்டித் தலைமுடிமேல் பால்போன்ற நிறமுடைய பிறைமதியைச் சூடி நடனம் ஆடுபவர். இந்த நம் சிவபெருமான் மேவிய தலம் திருநள்ளாறு ஆகும்.

**குறிப்புரை:** சிட்டம் – பெருமை. மாட்டி – மாளச்செய்து. தீயில் விறகை மாட்டி என்ற வழக்குண்மையும் அறிக. பட்டம் – நெற்றியில் அணியும் அணி.

The three famous citadels were reduced to ashes by Lord Civan with arrows of huge flames; He smeared the holy ashes on His body, and danced about. With His head decorated by an ornament called 'Pattam' along with the milk-white crescent moon, He went about dancing. This Perumaan of such activities resides at Thiru-nallaaru.

உண்ணலாகா நஞ்சுகண்டத் துண்டுட னேயொடுக்கி
அண்ணலாகா வண்ண னீழலாரழல் போலுருவம்
எண்ணலாகா வுள்வினையென் றெள்க வலித்திருவர்
நண்ணலாகா நம்பெருமான் மேயது நள்ளாறே. 9

உண்ணல் ஆகா நஞ்சு கண்டத்து உண்டு உடனே ஒடுக்கி,
"அண்ணல் ஆகா அண்ணல் நீழல் ஆர்அழல் போல் உருவம்
எண்ணல் ஆகா, உள்வினை" என்று எள்க வலித்து, இருவர்
நண்ணல் ஆகா நம்பெருமான் மேயது நள்ளாறே.

uNNal AkA nanjcu kaNTattu uNTu, uTan2E oTukki,
"aNNal AkA aNNal nIzal Ar azal pOl uruvam
eNNal AkA, uL vin2ai" en2Ru eLka valittu, iruvar
naNNal AkA namperumAn2 mEyatu naLLARE.

**பொருள்:** சிவபெருமான் யாராலும் உண்ண முடியாத நஞ்சினை உண்டு அதன் வலிமையைக் கெடுத்து, அதனைத் தம் கழுத்தில் நிறுத்தியவர். யாராலும் அணுக இயலாத தலைவர். ஒளி பொருந்திய அழல் போன்ற திருஉருவினர். அநாதியாகவே உள்ள வினையால் உண்மையை உணரமுடியவில்லையே எனச் சோர்ந்து வருந்திய திருமால் பிரமர்களாலும் அணுக முடியாதவர் நம்பெருமான். இவர் விரும்பிய தலம் திருநள்ளாறு ஆகும்.

**குறிப்புரை:** உண்ணலாகா நஞ்சு – எந்தத் தேவராலும் உண்ண முடியாத விஷம். ஒடுக்கி – அதன் வலியைக் கெடுத்து. அண்ணலாகா – அணுகமுடியாத. உள் வினை எண்ணலாகா என்று எள்க வலித்து இருவர் நண்ணலாகா நம் பெருமான். அநாதியே பற்றியுள்ள வினையால் உள்ளபடியே உணரமாட்டாது இகழ, வருந்தி அயனாலும் மாலாலும் அணுக முடியாத பெருமான்.

Our Perumaan is unique. He consumed the poison which could not be eaten by anybody else and stayed (stalled) it in His throat. He is the lord who is not accessible to anybody. His divine shape appears like a bright blaze. He is inaccessible to Vishnu and Brahma who sorely grieved that they could not think of Him, standing disabled, as it were by their beginningless karma. This our Lord is enshrined in Thiru-nallaaru.

**Note:** Beginningless karma: This is known as mula karma. Karma mala, it is said, is adventitious. This does not negate the beginninglessness of karma. Mula karma is the innate propensity of the soul which is subject to likes and dislikes.

மாசுமெய்யர் மண்டைத்தேரர் குண்டர்கு ணமிலிகள்
பேசும்பேச்சை மெய்யென்றெண்ணி யந்நெறி செல்லன்மின்
மூசுவண்டார் கொன்றைசூடி மும்மதி லும்முடனே
நாசஞ்செய்த நம்பெருமான் மேயது நள்ளாறே. 10

*மாசு மெய்யர், மண்டைத் தேரர், குண்டர் குணம்இலிகள்*
*பேசும் பேச்சை மெய் என்று எண்ணி, அந்நெறி செல்லன்மின்!*
*மூசு வண்டு ஆர் கொன்றை சூடி, மும்மதிலும்(ம்) உடனே*
*நாசம் செய்த நம்பெருமான் மேயது நள்ளாறே.*

mAcu meyyar, maNTait tErar, kuNTar kuNam ilikaL
pEcum pEccai mey en2Ru eNNi, an neRi cellan2 min2!
mUcu vaNTu Ar kon2Rai cUTi, mummatilum(m) uTan2E
nAcam ceyta nam perumAn2 mEyatu naLLARE.

**பொருள்:** சமணர்கள் அழுக்கேறிய உடம்பினர். புத்தர்கள் மண்டை ஓட்டை உண்கலமாகக் கொண்டு கையில் ஏந்தித் திரிபவர்கள். இவர்கள் தடித்த உடம்புடன் விளங்குபவர்கள். நற்குணமும் இல்லாதவர்கள். அவர்கள் பேச்சை உண்மை என்று எண்ணி, அவர்கள் சமயங்களில் செல்ல வேண்டாம். வண்டுகள் மொய்த்துப் பொருந்தும் கொன்றை மலர் மாலையைச் சூடி, மும்மதில்களையும் ஒருசேர அழித்து, தேவர்களைக் காத்தவர் நம் சிவபெருமான். அவர் விரும்பிய தலம் திருநள்ளாறே.

The Jains are exceedingly dirty and the Buddhists holding alms-bowls called 'Mandai' in their hands roam about here and there. They are obese and lacking in virtue. Ye companions! do not join them treating their speech as true. Instead go to Thiru-nallaaru where resides our Lord and worship Him. He is the One who destroyed the three fortresses at one stroke and rescued the Devaas. He wears the garland of Kondrai flowers around which beetles throng.

**Note:** The destruction of the citadels was at once simultaneous and instantaneous.

தண்புனலும் வெண்பிறையுந் தாங்கிய தாழ்சடையன்
நண்புநல்லார் மல்குகாழி ஞானசம் பந்தன்நல்ல
பண்புநள்ளா றேத்துபாடல் பத்து மிவைவல்லார்
உண்புநீங்கி வானவரோ டுலகி லுறைவாரே. 11

தண்புனலும் வெண்பிறையும் தாங்கிய தாழ்சடையன்,
நண்பு நல்லார் மல்கு காழி ஞானசம்பந்தன், நல்ல
பண்பு நள்ளாறு ஏத்து பாடல் பத்தும்இவை வல்லார்
உண்பு நீங்கி வானவரோடு உலகில் உறைவாரே.

taNpun2alum veNpiRaiyum tAgkiya tAzcaTaiyan2,
naNpu nallAr malku kAzi njAn2acampantan2, nalla
paNpu naLLARu Ettu pATal pattum ivai vallAr
uNpu nIgki, vAn2avarOTu ulakil uRaivArE.

**பொருள்:** நட்புக்கு ஏற்ற நல்லோர் வாழும் சீகாழிப் பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தன். குளிர்ந்த கங்கையையும் வெண்மையான பிறையையும் தாங்கிய தாழ்ந்த சடைமுடியை உடைய சிவபெருமான் எழுந்தருளிய, நல்ல இயல்பு வாய்ந்தோர் வாழும் திருநள்ளாற்றைப் போற்றிப் பாடினார். இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓத வல்லவர்கள் பிராரத்த கன்ம வலிமை குறைந்து, வானவர்களோடு தேவருலகில் வாழ்வர்.

**குறிப்புரை:** இப்பாடல் பத்தும் வல்லார் இறைவனோடு ஒன்றி இருப்பார் என்கின்றது. பொன்னிநாடன் – காவிரி நாட்டிற் பிறந்தவன். மன்னுசோதி – நிலைபெற்ற சோதி வடிவானவன்.

Gnaanasambandan hails from Seekaazhi where abound dwellers that foster goodly fellowship. He has sung on the Lord whose dangling matted hair bears the cool river Ganges and the white crescent moon. Those who are well versed in these ten verses that hail Nallaaru which is great and virtuous will be liberated to a great extent from their karma. They will also abide in the celestial world with supernal folks.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*49ஆம் பதிகம் முற்றிற்று*
End of 49th Hymn

உ
சிவமயம்

# 50. திருவலிவலம்

## திருத்தலவரலாறு:

திருவலிவலம் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம் ஆகும். திருவாரூரிலிருந்து பேருந்து வசதிகள் உள்ளன. இது வலியன் பூசித்த தலம் ஆதலின் இப்பெயர் பெற்றது. வலியன் என்பது கரிக்குருவி. சூரியனும், காரணிரிஷியும் பூசித்துப் பேறு பெற்றனர். சுவாமி சந்நிதி கட்டு மலைமேல் இருக்கின்றது. கோயிலைச் சுற்றிக் கிழக்குப் பக்கந்தவிர அகழி சூழ்ந்திருக்கிறது. மாடக்கோயிலுள் ஒன்று. சுந்தரமூர்த்தி நாயனார், திருஞானசம்பந்தரும், திருநாவுக்கரசரும் 'சொல்லியவே சொல்லி ஏத்துகப்பான்' என இருவர் பாடல் சிறப்பையும் எடுத்துக் காட்டுகிறார்.

சுவாமி பெயர் மனத்துணை நாதர். அம்மை பெயர் மாழையங் கண்ணி. தலவிருட்சம் புன்னை. தீர்த்தம் காரணர் கங்கை.

## கல்வெட்டு:

படியெடுத்தன ஒன்பது உள்ளன. மூன்றாம் இராஜேந்திரன் காலத்தன மூன்று. குலோத்துங்கன் காலத்தன இரண்டு. மூன்றாம் இராஜராஜன் காலத்தன இரண்டு. சுந்தர பாண்டியன் காலத்தன இரண்டு. இத்தலம் அருமொழித் தேவ வளநாட்டு வலிவலக் கூற்றத்து உபயகுல சுத்த சதுர்வேதி மங்கலமான வலிவலம் என்று வழங்கப்பட்டது. இறைவன் மனத்துள் தேவர் என்றே கல்வெட்டுக்களில் அழைக்கப்படுகிறார். உடையார் மனத்துள் நாயனாரது கோயில் காரியம் பார்ப்பார் சிலரால் தேவப் பெருமாள் திருமடத்து எதிர் ஒப்பிலாதார் சோமநாத தேவ முதலியாருக்கு நிலம் மாற்றிக் கொடுக்கப்பட்டது. இந்தத் திருமடம் மனத்துள் நாயனார் கோயிலுக்குத் தெற்குப் பக்கத்தில் இருக்கிறது. தென் விடங்கலூர், குலோத்துங்க சோழ நல்லூர் திரிசூலம், பொன் வேய்ந்த பெருமான் நல்லூர் முதலிய கிராமங்கள் பல்வேறு காரியங்களுக்குத் தானமாக அளிக்கப் பெற்றமை அறியப் பெறுகின்றன. திருமூல தேவர் திருமடத்தில் இருந்த கோயில் அருச்சகர் ஒருவருக்கு நிலம் விற்கப் பெற்றது என்பதால் திருமூல தேவர் மடம் என்பது ஒன்று இருந்தமை புலனாகும்.

**பதிக வரலாறு:**

திருவாரூர்ப் புற்றிடங்கொண்ட பெருமானைச் சேவித்துச் சிலநாள் தங்கியிருந்த திருஞானசம்பந்தப் பிள்ளையார் வளமிகுந்த வலிவலத்தை அடைந்தார்கள். மனத்துணைநாதரை வணங்கி இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 50. THIRU-VALI-VALAM

### THE HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu, and can be reached by bus from Thiruvaaroor. Valian is a kind of sparrow, also known as Karikkuruvi. The name of the temple derives from the legend that a valiant offered worship here. A sage, Kaaranarishi, also attained salvation by worshipping here.

The Lord's name is Manaththunainaathar and that of the Goddess is Maazhaiyangkanni. The sacred ford is Kaaranar Gangkai. The sancred tree is Punnai.

The Lord's shrine is on top of a built-up hill. A moat surrounds the temple on all sides except the east. This is one of the storeyed templed (maadakkoyil). Saint Sundharamoorthi Naayanaar, appreciates the verses of both Saint Thiru-Gnaanasambandar and Saint Thirunaavukkarasar in 'solliyave solli eththukappaan'.

There are nine copies inscriptions here, of the reigns of Chola monarchs Raajendhiran III, Kuloththungkan, Raajaraajan III, and the Paandiyan king Sundharapaandiyan. These inscriptions reveal that many villages surrounding the temple had been gifted to the temple for various services.

### INTRODUCTION TO THE HYMN

After his sojourn at Thiruvaarur, the boy-saint visited this holy place where he sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 50. திருவலிவலம்

## 50. THIRU-VALI-VALAM

பண் : தக்கராகம்
ராகம் : காம்போதி

*Pann: Thakka Raagam*
*Raagam: Kaambothi*

ஒல்லையாறி யுள்ளமொன்றிக் கள்ளமொழிந்து வெய்ய
சொல்லையாறி த்தூய்மை செய்து காமவினை யகற்றி
நல்லவாறே யுன்றனாம நாவில் நவின்றேத்த
வல்லவாறே வந்து நல்காய் வலிவலமேயவனே. 1

ஒல்லை ஆறி, உள்ளம் ஒன்றிக், கள்ளம் ஒழிந்து, வெய்ய
சொல்லை ஆறித், தூய்மை செய்து, காமவினை அகற்றி,
நல்லஆறே உன்தன் நாமம் நாவில் நவின்று ஏத்த,
வல்லஆறே வந்து நல்காய் - வலிவலம் மேயவனே!

ollai ARi, uLLam on2Ri, kaLLam ozintu, veyya
collai ARi, tUymai ceytu, kAmavin2ai akaRRi,
nalla ARE un2tan2 nAmam nAvil navin2Ru Etta,
valla ARE vantu nalkAy--valivalam mEyavan2E!

**பொருள்:** திருவலிவலம் என்ற ஊரின்கண் எழுந்தருளிய சிவபெருமானே! எனது பரபரப்பு அடங்கி, மனம் ஒன்றி, வஞ்சம் நீங்கி, வெஞ்சொல் தவிர்த்து, தூய்மையோடு காமம் முதலிய குற்றங்களைக் கடிந்து, மனதைத் தூய்மை செய்து, நல்ல முறையில் உனது நாமமாகிய திருவைந்தெழுத்தை என் வல்லமைக்குத் தக்கவாறு ஓதி வழிபடுகின்றேன். தேவரீர் வந்து அருள வேண்டும்.

**குறிப்புரை:** வலிவலம் மேயவனே! மனம் ஒன்றி, வஞ்சம் நீங்கி இனிய கூறி, காமமாதிகடிந்து, உனது நாமத்தைச் சொல்ல, தேவரீர் வந்து அருளவேண்டும் என்கின்றது. ஒல்லை – வேகம். அதாவது பரபரப்பு. கள்ளம் – வஞ்சனை. வெய்ய சொல் – கொடுஞ்சொல். தூய்மை செய்து – மனத்தைப் பண்படுத்தி. நாமம் – திருவைந்தெழுத்து. வல்லவாறு – அடியேனுடைய தகுதி ஏற்க வல்லவாறு. இறைவற்கு வல்லவாறு என்று உரைப்பாரும் உளர்.

Oh Lord of Thiru-vali-valam! Without any excitement, with single-mindedness, avoiding violence and wrathful words, shedding weakness like lust, retaining only purity, I utter the five lettered holy word, 'Namasivaya', Your name in a perfect way,

within the limits of my capacity. I worship You in the possible way known to me. Kindly bless me.

இயங்குகின்ற இரவிதிங்கள் மற்றுநற்றே வரெல்லாம்
பயங்களாலே பற்றிநின்பாற் சித்தந்தெளி கின்றிலர்
தயங்குசோதி சாமவேதா காமனைக் காய்ந்தவனே
மயங்குகின்றேன் வந்து நல்காய் வலிவலமேயவனே. 2

இயங்குகின்ற இரவி, திங்கள், மற்றும் நல்-தேவர்எல்லாம்,
பயங்களாலே பற்றி, நின்பால் சித்தம் தெளிகின்றிலர்;
தயங்குசோதி! சாமவேதா! காமனைக் காய்ந்தவனே!
மயங்குகின்றேன்! வந்து நல்காய் - வலிவலம் மேயவனே!

iyagkukin2Ra iravi, tigkaL, maRRum nal-tEvar ellAm,
payagkaLAlE paRRi, nin2pAl cittam teLikin2Rilar;
tayagku cOti! cAmavEtA! kAman2aik kAyntavan2E!
mayagkukin2REn2! vantu nalkAy--valivalam mEyavan2E!

**பொருள்:** வானவெளியில் இயங்குகின்ற சூரியன், சந்திரன் மற்றும் நல்ல தேவர்கள் எல்லோரும் பயத்தால் பந்தப்பட்டு உன்னைப் பரம்பொருள் என்று தம் சித்தம் தெளியாதவர்களாய் உள்ளனர். விளங்கும் சோதி வடிவினனே! சாம வேதம் பாடி மகிழ்பவனே! காமனை எரித்தவனே! உன்னை எவ்வாறு தெளிவது என்று தெரியாமல் அடியேனும் மயங்குகின்றேன். திருவலிவலம் மேவிய சிவபெருமானே! வந்து அருள் புரிவாயாக.

**குறிப்புரை:** தேவர் எல்லோரும் பயத்தால் பற்றப்பட்டுச் சித்தம் தெளிகிலார்கள். நானோ மயங்குகின்றேன். வந்தருள் செய் என்கின்றது. இரவி – சூரியன். திங்கள் – சந்திரன். பயங்களாலே பற்றி – அச்சத்தால் பற்றப்பட்டு.

The heavenly bodies – the sun and the moon – and the good Devaas, all these out of fear in their confused minds are unable to comprehend You as the Supreme Lord. Oh Civa! You, who appear in the form of a blaze, You who sing and enjoy 'Saama Vedam' (சாமவேதம்), You who burnt the god of lust, might be aware that I too am stupefied, bewildered as to how to understand You. Oh Lord! Kindly come to bless me.

பெண்டிர்மக்கள் சுற்றமென்னும் பேதைப் பெருங்கடலை
விண்டுபண்டே வாழமாட்டேன் வேதனை நோய்நலியக்
கண்டுகண்டே யுன்றனா மங்காதலிக் கின்றதுள்ளம்
வண்டுகிண்டிப் பாடுஞ்சோலை வலிவல மேயவனே. 3

பெண்டிர், மக்கள், சுற்றம், என்னும் பேதைப்பெருங்கடலை
விண்டு, பண்டே வாழமாட்டேன்; வேதனைநோய் நலியக்,
கண்டு கண்டே உன்தன் நாமம் காதலிக்கின்றது, உள்ளம்; -
வண்டு கிண்டிப் பாடும் சோலை வலிவலம் மேயவனே!

peNTir, makkaL, cuRRam, en2n2um pEtaip perugkaTalai
viNTu, paNTE vAza mATTEn2; vEtan2ai nOy naliya,
kaNTu kaNTE un2tan2 nAmam kAtalikkin2Ratu, uLLam;-
vaNTu keNTip pATum cOlai valivalam mEyavan2E!

**பொருள்:** வண்டுகள் தேனுண்ணற் பொருட்டு மலர்களைக் கிண்டி இசைபாடும் சோலைகள் சூழ்ந்த திருவலிவலம் என்ற ஊரின்கண் எழுந்தருளுகின்ற சிவபெருமானே! அடியேன் மனைவி, மக்கள், சுற்றம் முதலான பாசப் பெருங்கடலில் பந்தப்பட்டு அதனின்று பிரிய முடியாமல் வருந்துகின்றேன். வேதனை நோய் ஆகியன நலிய உலகியல் பாசங்கள் துன்பம் தருவன என்பதைக் கண்டேன். உன் திருநாமம் சொல்லுவது ஒன்றே இன்பமாவது எனக் கண்டு கொண்டேன். அதனைச் சொல்ல உள்ளம் விரும்புகின்றது. அருள்புரிவாயாக.

**குறிப்புரை:** பெண்டிர் முதலாகிய பாசப் பெருங்கடலில் பற்றி, விட்டுப் பிரிய கில்லாது வருந்துகின்றேன். உனது நாமத்தைச் சொல்ல உளம் விழைகின்றது என அறிவிக்கின்றார். பேதைப் பெருங்கடல் – அறியாமைக் கடல். விண்டு – பிரிந்து. கண்டு கண்டு – இவை துன்பம் உன்நாமம் சொல்வது இன்பம் எனப் பலகாலும் கண்டு.

Oh! Lord of Thiru-vali-valam, that is encircled by groves in which beetles keep on stirring the cups in the flowers to drink honey. I was unable to be detached from the big ocean of folly that bound me with my wife, children, and other kith and kin (Gnaanasambandar's utterances in this verse are not applicable to him but only to us). Now I realise that this worldly attachment is a turmoil causing suffering disease teeming with agony. I am fully convinced that the chanting of Your name alone can redeem me from this coil and bring bliss to me. I long to chant Your name for that alone is real joy. Kindly bless me so that I could derive that divine bliss.

மெய்யராகிப் பொய்யைநீக்கி வேதனையைத் துறந்து
செய்யரானார் சிந்தையானே தேவர்குலக் கொழுந்தே
நைவனாயே னுன்றனாம நாளுந் நவிற்றுகின்றேன்
வையம் முன்னே வந்து நல்காய் வலிவல மேயவனே. 4

மெய்யர் ஆகிப் பொய்யை நீக்கி, வேதனையைத் துறந்து,
செய்யர் ஆனார் சிந்தையானே! தேவர் குலக்கொழுந்தே!
நைவன், நாயேன்; உன்தன் நாமம் நாளும் நவிற்றுகின்றேன்;
வையம்முன்னே வந்து நல்காய் - வலிவலம் மேயவனே!

meyyar Akip poyyai nIkki, vEtan2aiyait tuRantu,
ceyyar An2Ar cintaiyAn2E! tEvar kulakkozuntE!
naivan2, nAyEn2; un2tan2 nAmam nALum naviRRukin2REn2;
vaiyam mun2n2E vantu nalkAy--valivalam mEyavan2E!

**பொருள்:** தத்துவ உணர்ச்சி உடையராய், பொய்மையை விலக்கி, உண்மையை மேற்கொண்டு பந்த பாசங்களால் வரும் ஆசை பற்றி எழும் துன்பங்களைத் துறந்து, செம்மையான மனமுடையோராய் வாழும் அன்பர்களின் சிந்தையுள் இருப்பவனே! தேவர்களின் குலக்கொழுந்தே! நான் வருந்தி நிற்கிறேன். உன்றன் திருநாமத்தை நாள்தோறும் ஓதி வருகின்றேன். வலிவலம் மேயும் சிவபெருமானே! இவ்வுலகத்தில் பலரும் காண வந்து உய்ய வேண்டியவற்றைக் காட்டி அருள்செய்வாயாக.

**குறிப்புரை:** செம்மனச் செல்வர் சிந்தையுள் இருப்பவனே! அடியேன் அவலத்தால் நைகின்றேன். வந்து அருள் செய் என்கின்றது. மெய்யராகி எனவே பொய்யை நீக்கி என்பது பெறப்படவும் மீட்டுங்கூறியது வற்புறுத்த. அல்லது மெய்யராகி – தத்துவஞான உணர்ச்சி உடையராய் – பொய்யை நீக்கி என்றுமாம். வேதனை – ஆசைபற்றி எழும் துன்பம். செய்யர் – செம்மையான அடியார்கள். நைவன் – வருந்துவேன். வையம் – முன்னே வந்து நல்காய் – இவ்வுலகத்து என்போலியரும் அறிந்துய்ய வேண்டி மானைக் காட்டி மானைப் பிடிப்பார்போல் வந்து அருள்செய்வாய்.

Oh! Lord Civa of Valivalam! You reside in the hearts of

a) those who shun falsehood
b) those who entertain only the truth in their lives
c) those who renounce all worldly attachment and escape from its evil effects
d) those who live with purity of mind
e) those who lead virtuous lives.

Oh! Lord Civa! the illustrious Chief of Devaas! I stand afflicted. I am chanting Your sacred name (Namasivaaya - *நமசிவாய*) daily. Oh Lord! Kindly shower Your grace on me and make all the earthly folk witness it.

**Note:** The word 'Kozhuntu' means shoot, twig, scim and the like. In literature it is used as a very endearing expression. Civa is hailed as Civakkozhunthu by the Tēvaram Trio.

துஞ்சும் போதுந்துற்றும் போதுஞ்சொல் லுவனுன்திறமே
தஞ்ச மில்லாத் தேவர்வந்துன் தாளிணைக் கீழ்ப்பணிய
நஞ்சை யுண்டாய்க்கென் செய்கேனோ நாளுநினைந்தடியேன்
வஞ்சமுண்டென் றஞ்சுகின்றேன் வலிவல மேயவனே. 5

துஞ்சும்போதும் துற்றும்போதும் சொல்லுவன், உன் திறமே;
தஞ்சம் இல்லாத் தேவர் வந்து, உன் தாள் இணைக்கீழ்ப் பணிய,
நஞ்சை உண்டாய்க்கு என் செய்கேனோ? நாளும் நினைந்து, அடியேன்,
"வஞ்சம் உண்டு" என்று அஞ்சுகின்றேன் - வலிவலம் மேயவனே!

tunjcum pOtum tuRRum pOtum colluvan2, un2 tiRamE;
tanjcam illAt tEvar vantu, un2 tAL iNaikklzp paNiya,
nanjcai uNTAykku en2 ceykEn2O? nALum nin2aintu, aTiyEn2,
"vanjcam uNTu" en2Ru anjcukin2REn2--valivalam mEyavan2E!

**பொருள்:** உறங்கும்போதும் உண்ணும்போதும் உன்றன் புகழையே சொல்லுகின்றேன். தேவர்கள் வேறு புகலிடம் இல்லாது உன்பால் வந்து உன் திருவடிகளின்கீழ்ப் பணிந்தனர். அவர்களைக் காக்கும் பொருட்டு நஞ்சை உண்ட உன் கருணையை எந்நாளும் நினைப்பதை அல்லாமல் வேறு என்ன செய்ய வல்லேன். உன் அருளைப் பெறுதற்குத் தடையாக என்னிடம் வஞ்சம் உண்டென்று அஞ்சுகின்றேன். திருவலிவலம் மேவிய சிவபெருமானே! அதனைப் போக்கி எனக்கு அருள் செய்வாயாக.

**குறிப்புரை:** உறங்கும்போதும் உண்ணும்போதும் உன்புகழே பேசுகின்றேன். என்னிடம் வஞ்சம் இருப்பதால் ஏற்பாயோ மாட்டாயோ என அஞ்சுகின்றேன் என்கின்றது. துஞ்சும்போதும் – தூங்கும்போதும். துற்றும்போதும் – உண்ணும்போதும். தஞ்சம் – அடைக்கலத்தானம். "ஓடிவந்தெல்லாம் ஒருங்கிய தேவர்கள் –" எனத் தொடங்கும் திருமந்திரக் குறிப்பும் காண்க.

Lord! I will utter only Your fame while sleeping and eating. When the Devaas, not finding refuge anywhere else, sought Your feet, as the last resort and prostrated

before You, You gulped the poison. What else could I, Your servitor, do other than thinking of Your compassion! I am afraid perhaps deceit is harboured in my heart and that becomes the barrier to Your grace. Kindly destroy my deception and shower Your grace on me.

**Note:** Deception: A prayer tends to create a bargain-counter. It is therefore not absolutely pure. It is to this (recondite) impurity reference is made by our Saint.

புரிசடையாய் புண்ணியனே நண்ணலார் மூவெயிலும்
எரியவெய்தா யெம்பெருமானென் றிமையோர்பரவும்
கரியுரியாய் காலகாலா நீலமணிமிடற்று
வரியரவா வந்துநல்காய் வலிவல மேயவனே. 6

"புரிசடையாய்! புண்ணியனே! நண்ணலார் மூஎயிலும்
எரிய எய்தாய்! எம்பெருமான்!" என்று இமையோர் பரவும்
கரிஉரியாய்! காலகாலா! நீலமணிமிடற்று
வரிஅரவா! - வந்துநல்காய் - வலிவலம் மேயவனே!

"puricaTaiyAy! puNNiyan2E! naNNalAr mUeyilum
eriya eytAy! emperumAn2!" en2Ru imaiyOr paravum
kari uriyAy! kAlakAlA! nIlamaNi miTaRRu
vari aravA!--vantu nalkAy--valivalam mEyavan2E!

**பொருள்:** திருவலிவலம் மேவிய இறைவனே! முறுகிய சடையை உடையவனே! புண்ணிய வடிவினனே! பகைவர் தம் முப்புரங்களும் எரியுமாறு அம்பெய்தவனே என்று தேவர்கள் பரவுவர். யானையின் தோலை அணிந்தவனே! காலனுக்குக் காலனே! நீலமணிபோலும் கண்டத்தையும் வரித்து கட்டப் பெற்ற பாம்பினையும் உடையவனே! என்பால் வந்து அருள் புரிவாயாக.

**குறிப்புரை:** புண்ணியனே! காலகாலா! நீலகண்டா! வந்து அருள் செய் என்கின்றது. நண்ணலார் – பகைவர். வரி அரவு – வரிந்து கட்டப்பட்ட பாம்பு.

Oh! Lord of Thiru-vali-valam with strands of twisted matted hair! You are an embodiment of virtue and You wear the skin of an elephant. You are hailed by the Devaas as one who with a dart burnt the three hostile citadels. You put to death the god of death (காலனுக்கு காலன்). Your throat reflects blue colour like sapphire and You have wound the snake around Your waist. Oh Lord! Do come and bless me.

தாயுநீயே தந்தைநீயே சங்கரனே யடியேன்
ஆயுநின் பாலன்பு செய்வானா தரிக்கின்ற துள்ளம்
ஆயமாய காயந்தன் னுளைவர்நின் றொன்றலொட்டார்
மாயமே யென்றஞ்சுகின்றேன் வலிவல மேயவனே. 7

தாயும் நீயே! தந்தை நீயே! சங்கரனே! - அடியேன்
ஆயும் நின்பால் அன்பு செய்வான் ஆதரிக்கின்றது, உள்ளம்
ஆயம் ஆய காயம் தன்னுள் ஐவர் நின்று ஒன்றல் ஒட்டார்;
மாயமே என்று அஞ்சுகின்றேன் - வலிவலம் மேயவனே!

tAyum nIyE! tantai nIyE! cagkaran2E!--aTiyEn2
Ayum nin2pAl an2pu ceyvAn2 Atarikkin2Ratu, uLLam;
Ayam Aya kAyam tan2n2uL aivar nin2Ru on2Ral oTTAr;
mAyamE en2Ru anjcukin2REn2--valivalam mEyavan2E!

**பொருள்:** திருவலிவலம் மேவிய இறைவனே! சங்கரனே! எனக்குத் தாயும் தந்தையும் நீயே ஆவாய். அடியேன் உள்ளம் சிவஞானிகளால் ஆய்ந்துணரப்படும் நின்பால் அன்பு செய்ய விரும்புகின்றது. எனக்குப் படைத்தளிக்கப்பட்ட இவ்வுடலிடைப் பொருந்திய ஐம்பொறிகள் உன்னைப் பொருந்த வொட்டாமல் தடுக்கின்றன. இம்மாயத்தைக் கண்டு யான் அஞ்சுகின்றேன். அருள்புரிவாயாக.

**குறிப்புரை:** சுற்றமும் மற்றெல்லாமும் நீயே என்கின்றது. ஆயும் – சிவஞானம் கைவரப்பெற்ற ஆன்மாவினால் ஆராயப்படுகின்ற. ஆயம் ஆய – படைக்கப்பெற்ற. ஐவர் – பஞ்சேந்திரியங்கள். ஒன்றல் ஒட்டார் – நின்னொடு பொருந்தவிடார்.

Oh! Lord Sankara! God of Thiru-vali-valam! You are my father and mother too. **You are the giver** of all pleasure in my life (Sankaranē – *சங்கரனே*). I am Your servitor. Your ascetics realised Your greatness after prolonged research. My soul longs to intensely love You as the ascetics did. But alas! The five senses created and bestowed on me, which form part of my body restrict me from doing so. I am afraid of this treachery caused by illusion. Oh! Lord Civa protect me from this dissimulation and shower Your grace on me.

**Note:** Sankara: The name 'Sankara' means 'One who confers weal' (சுகம் கொடுப்பவன்).

The Five: The pentad of senses.

26

நீரொடுங் குஞ்செஞ் சடையாய் நின்னுடைய பொன்மலையை
வேரொடும் பீழ்ந்தேந்த லுற்றவேந் தனிராவணனைத்
தேரொடும் போய்வீழ்ந்த லறத்திரு விரலாலடர்த்த
வாரொடுங்குங் கொங்கை பங்கா வலிவல மேயவனே. 8

நீர் ஒடுங்கும் செஞ்சடையாய்! நின்னுடைய பொன்மலையை
வேரொடும் பீழ்ந்து ஏந்தல்உற்ற வேந்தன் இராவணனைத்
தேரொடும் போய் வீழ்ந்து அலறத், திருவிரலால் அடர்த்த
வார் ஒடுங்கும் கொங்கை பங்கா! வலிவலம் மேயவனே!

nIr oTugkum cenjcaTaiyAy! nin2n2uTaiya pon2malaiyai
vEroTum pIzntu Ental uRRa vEntan2 irAvaNan2ait
tEroTum pOy vIzntu alaRa, tiruviralAl aTartta
vAr oTugkum kogkai pagkA! valivalam mEyavan2E!

**பொருள்:** திருவலிவலம் எழுந்தருளிய சிவபெருமானே! தருக்கி வந்த கங்கை தன் செயல் இழந்து ஒடுங்கிய செஞ்சடை உடையவனே! உன்னுடைய பொன்மயமான கயிலை மலையை நகர்த்து வைக்கத் தொடங்கிய இலங்கை வேந்தன் இராவணனைத் தேரோடும் வீழ்ந்து அலறுமாறு உன் கால் விரலால் நெரித்தவனே! கச்சு அணிந்த பெருத்த தனங்களை உடைய உமை பங்கனே! வந்து அருள்புரிவாயாக.

**குறிப்புரை:** ஆணவத்தால் மிஞ்சிய இராவணனையும் அடக்கி ஆட்கொண்ட அம்மையப்பா! அடியேனை ஆட்கொள்ள வேண்டும் என்கின்றது. நீர் ஒடுங்கும் – தருக்கி வந்த கங்கைதன் வலி ஒடுங்கும். பொன்மலை – அழகிய கயிலைமலை. பீழ்ந்து – பிடுங்கி. வார் ஒடுங்கும் – கச்சு தன் வலியழியும்.

Oh! Lord enshrined in Thiru-vali-valam! You controlled the river Ganges and compressed it in Your ruddy matted hair. The King of Sri Lanka who dared to uproot Your golden mount Kailash was overcome by You when You pressed the mount with Your toe. Falling along with the chariot he yelled. Umaadevi wearing corset over her breasts is Your consort. Oh Lord! Do come and bless me.

ஆதியாய நான்முகனு மாலுமறிவரிய
சோதியானே நீதியில்லேன் சொல்லு வனின்திறமே
ஓதிநாளு முன்னையேத்து மென்னைவினைய வலம்
வாதியாமே வந்துநல்காய் வலிவல மேயவனே. 9

ஆதிஆய நான்முகனும் மாலும் அறிவு அரிய
சோதியானே! நீதிஇல்லேன் சொல்லுவன், நின் திறமே;
ஓதி நாளும் உன்னை ஏத்தும் என்னை வினை அவலம்
வாதியாமே வந்து நல்காய் - வலிவலம் மேயவனே!

தாயுநீயே தந்தைநீயே சங்கரனே யடியேன்
ஆயுநின் பாலன்பு செய்வானா தரிக்கின்ற துள்ளம்
ஆயமாய காயந்தன் னுளைவர்நின் றொன்றலொட்டார்
மாயமே யென்றஞ்சுகின்றேன் வலிவல மேயவனே. 7

தாயும் நீயே! தந்தை நீயே! சங்கரனே! - அடியேன்
ஆயும் நின்பால் அன்பு செய்வான் ஆதரிக்கின்றது, உள்ளம்
ஆயம் ஆய காயம் தன்னுள் ஐவர் நின்று ஒன்றல் ஒட்டார்;
மாயமே என்று அஞ்சுகின்றேன் - வலிவலம் மேயவனே!

tAyum nIyE! tantai nIyE! cagkaran2E!--aTiyEn2
Ayum nin2pAl an2pu ceyvAn2 Atarikkin2Ratu, uLLam;
Ayam Aya kAyam tan2n2uL aivar nin2Ru on2Ral oTTAr;
mAyamE en2Ru anjcukin2REn2--valivalam mEyavan2E!

**பொருள்:** திருவலிவலம் மேவிய இறைவனே! சங்கரனே! எனக்குத் தாயும் தந்தையும் நீயே ஆவாய். அடியேன் உள்ளம் சிவஞானிகளால் ஆய்ந்துணரப்படும் நின்பால் அன்பு செய்ய விரும்புகின்றது. எனக்குப் படைத்தளிக்கப்பட்ட இவ்வுடலிடைப் பொருந்திய ஐம்பொறிகள் உன்னைப் பொருந்த வொட்டாமல் தடுக்கின்றன. இம்மாயத்தைக் கண்டு யான் அஞ்சுகின்றேன். அருள்புரிவாயாக.

**குறிப்புரை:** சுற்றமும் மற்றெல்லாமும் நீயே என்கின்றது. ஆயும் – சிவஞானம் கைவரப்பெற்ற ஆன்மாவினால் ஆராயப்படுகின்ற. ஆயம் ஆய – படைக்கப்பெற்ற. ஐவர் – பஞ்சேந்திரியங்கள். ஒன்றல் ஒட்டார் – நின்னொடு பொருந்தவிடார்.

Oh! Lord Sankara! God of Thiru-vali-valam! You are my father and mother too. You are the giver of all pleasure in my life (Sankaranē – *சங்கரனே*). I am Your servitor. Your ascetics realised Your greatness after prolonged research. My soul longs to intensely love You as the ascetics did. But alas! The five senses created and bestowed on me, which form part of my body restrict me from doing so. I am afraid of this treachery caused by illusion. Oh! Lord Civa protect me from this dissimulation and shower Your grace on me.

Note: Sankara: The name 'Sankara' means 'One who confers weal' (*சுகம் கொடுப்பவன்*).

The Five: The pentad of senses.

26

நீரொடுங் குஞ்செஞ் சடையாய் நின்னுடைய பொன்மலையை
வேரொடும் பீழ்ந்தேந்த லுற்றவேந் தனிராவணனைத்
தேரொடும் போய்வீழ்ந்த லறத்திரு விரலாலடர்த்த
வாரொடுங்குங் கொங்கை பங்கா வலிவல மேயவனே. 8

நீர் ஒடுங்கும் செஞ்சடையாய்! நின்னுடைய பொன்மலையை
வேரொடும் பீழ்ந்து ஏந்தல்உற்ற வேந்தன் இராவணனைத்
தேரொடும் போய் வீழ்ந்து அலறத், திருவிரலால் அடர்த்த
வார் ஒடுங்கும் கொங்கை பங்கா! வலிவலம் மேயவனே!

nIr oTugkum cenjcaTaiyAy! nin2n2uTaiya pon2malaiyai
vEroTum pIzntu Ental uRRa vEntan2 irAvaNan2ait
tEroTum pOy vIzntu alaRa, tiruviralAl aTartta
vAr oTugkum kogkai pagkA! valivalam mEyavan2E!

**பொருள்:** திருவலிவலம் எழுந்தருளிய சிவபெருமானே! தருக்கி வந்த கங்கை தன் செயல் இழந்து ஒடுங்கிய செஞ்சடை உடையவனே! உன்னுடைய பொன்மயமான கயிலை மலையை நகர்த்து வைக்கத் தொடங்கிய இலங்கை வேந்தன் இராவணனைத் தேரோடும் வீழ்ந்து அலறுமாறு உன் கால் விரலால் நெரித்தவனே! கச்சு அணிந்த பெருத்த தனங்களை உடைய உமை பங்கனே! வந்து அருள்புரிவாயாக.

**குறிப்புரை:** ஆணவத்தால் மிஞ்சிய இராவணனையும் அடக்கி ஆட்கொண்ட அம்மையப்பா! அடியேனை ஆட்கொள்ள வேண்டும் என்கின்றது. நீர் ஒடுங்கும் – தருக்கி வந்த கங்கைதன் வலி ஒடுங்கும். பொன்மலை – அழகிய கயிலைமலை. பீழ்ந்து – பிடுங்கி. வார் ஒடுங்கும் – கச்சு தன் வலியழியும்.

Oh! Lord enshrined in Thiru-vali-valam! You controlled the river Ganges and compressed it in Your ruddy matted hair. The King of Sri Lanka who dared to uproot Your golden mount Kailash was overcome by You when You pressed the mount with Your toe. Falling along with the chariot he yelled. Umaadevi wearing corset over her breasts is Your consort. Oh Lord! Do come and bless me.

ஆதியாய நான்முகனு மாலுமறிவரிய
சோதியானே நீதியில்லேன் சொல்லு வனின்திறமே
ஓதிநாளு முன்னையேத்து மென்னைவினைய வலம்
வாதியாமே வந்துநல்காய் வலிவல மேயவனே. 9

ஆதிஆய நான்முகனும் மாலும் அறிவு அரிய
சோதியானே! நீதிஇல்லேன் சொல்லுவன், நின் திறமே;
ஓதி நாளும் உன்னை ஏத்தும் என்னை வினை அவலம்
வாதியாமே வந்து நல்காய் - வலிவலம் மேயவனே!

Ati Aya nAn2mukan2um mAlum aRivu ariya
cOtiyAn2E!--nIti illEn2 colluvan2, nin2 tiRamE;
Oti nALum un2n2ai Ettum en2n2ai vin2ai avalam
vAtiyAmE vantu nalkAy--valivalam mEyavan2E!

***பொருள்:*** திருவலிவலம் மேவிய இறைவனே! உலகங்களைப் படைத்துக் காத்தலில் ஆதியானவர்களாகிய நான்முகனும், திருமாலும் அறிதற்கரிய சோதிப் பிழம்பாய்த் தோன்றியவனே! யான் நீதியில்லாதேன் ஆயினும் உன் புகழையே சொல்லுகின்றேன். நாள்தோறும் உன்புகழையே ஓதி உன்னையே ஏத்தும் என்னை வினைகளும் அவற்றின் பயனாய துன்பங்களும் வந்து தாக்காமல் வந்து அருள் புரிவாயாக.

***குறிப்புரை:*** இடைவிடாது உன்னையே தோத்திரிக்கின்றேன். ஆதலால் அடியேனை அவல வினைகள் அடையாவண்ணம் அருள் செய்க என்கின்றது. வினை அவலம் – வினையும் அதனால் வரும் துன்பமும். வாதியாமே – துன்புறுத்தாதபடி.

Oh! Civa! You are the Light beyond the knowledge of the four-faced Brahma and to Thirumaal, the originator of creation and sustenance. Though I lack justice in my actions, I keep on uttering only Your fame. I daily go on reciting Your name and fame and glorifying Your gracefulness. Kindly ensure that karma and its subsequent afflictions do not affect me, Your slave. Oh! Lord Civa! shower Your grace on me.

பொதியிலானே பூவணத்தாய் பொன்திகழுங்கயிலைப்
பதியிலானே பத்தர் சித்தம் பற்றுவிடாதவனே
விதியிலாதார் வெஞ்சமணர் சாக்கிய ரென்றிவர்கள்
மதியிலா தாரென் செய்வாரோ வலிவல மேயவனே. 10

*பொதியிலானே! பூவணத்தாய்! பொன் திகழும் கயிலைப்-*
*பதியிலானே! பத்தர் சித்தம் பற்று விடாதவனே !*
*விதிஇலாதார் வெஞ்சமணர் சாக்கியர் என்று இவர்கள்*
*மதிஇலாதார் என் செய்வாரோ? - வலிவலம் மேயவனே!*

potiyilAn2E! pUvaNattAy! pon2 tikazum kayilaip--
patiyilAn2E! pattar cittam paRRu viTAtavan2E!
viti ilAtAr venjcamaNar cAkkiyar en2Ru ivarkaL
mati ilAtAr en2 ceyvArO?--valivalam mEyavan2E!

**பொருள்:** திருவலிவலம் மேவிய இறைவனே! பொதிய மலையைத் தனக்கு இடமாகக் கொண்டவனே! திருப்பூவணம் என்னும் தலத்தில் உறைபவனே! தன்பால் பக்தி செய்யும்

அன்பர்களின் சித்தங்களில் எழுந்தருளி இருப்பவனே! கொடிய சமணர்களும், சாக்கியர்களும் உன்னை அடையும் புண்ணியம் இல்லாதவர்கள். அறிவற்ற அவர்கள் தங்கள் சமய நெறியில் என்ன பயனைக் காண்பார்களோ?

**குறிப்புரை:** புறச்சமயிகள் என்செய்வார்களென, அவர்கட்காக இரங்குகின்றது. பொதியிலான் – பொதிய மலையைத் தனக்கு இடமாகக் கொண்டவன். பொதியிலும், திருப்பூவணமும், கயிலையும், அன்பர் உள்ளமும் அவன் உறையும் இடங்கள் என அறிவிக்கப் படுகின்றது.

Oh! Lord of Thiru-vali-valam, You reside on mount Pothigai as well in Thiru-p-puvanam and also on mount Kailash that glitters like gold. You are enshrined also in the hearts of those devotees who venerate You. The fierce Jains and Buddhists are lacking in virtuous deeds. How could these people, lacking in wisdom, benefit by following their religions.

வன்னிகொன்றை மத்தஞ்சூடும் வலிவல மேயவனைப்
பொன்னிநாடன் புகலிவேந்தன் ஞானசம்பந்தன் சொன்ன
பன்னுபாடல் பத்தும்வல்லார் மெய்த்தவத் தோர்விரும்பும் 11
மன்னுசோதி யீசனோடே மன்னியிருப்பாரே.

வன்னி, கொன்றை, மத்தம், சூடும் வலிவலம் மேயவனைப்
பொன்னிநாடன் - புகலி வேந்தன், ஞானசம்பந்தன் - சொன்ன
பன்னு பாடல்பத்தும் வல்லார் மெய்த்தவத்தோர் விரும்பும்
மன்னு சோதி ஈசனோடே மன்னி இருப்பாரே.

van2n2i, kon2Rai, mattam, cUTum valivalam mEyavan2aip
pon2n2i nATan2--pukali vEntan2, njAn2acampantan2--con2n2a
pan2n2u pATal pattum vallAr meyttavattOr virumpum
man2n2u cOti Ican2OTE man2n2i iruppArE.

**பொருள்:** வன்னி, கொன்றை மலர் ஊமத்தம்பூ ஆகியவற்றைச் சூடும் திருவலிவலத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமானை, காவிரி நாட்டில் உள்ள புகலி என்னும் சீகாழிப் பதிக்கு வேந்தனான ஞானசம்பந்தன் புகழ்ந்து பாடியுள்ளார். இவைகள் எக்காலத்தும் ஓதத்தக்கன. இத்திருப்பதிகப் பாடல்கள் பத்தையும் ஓத வல்லவர்கள் உண்மைத் தவமுடையோர் விரும்பும் நிலைபெற்ற சோதி வடிவான ஈசனோடு நிலைபெற்றிருப்பர்.

**குறிப்புரை:** இப்பாடல் பத்தும் வல்லார் இறைவனோடு ஒன்றியிருப்பார் என்கின்றது. பொன்னி நாடன் – காவிரி நாட்டில் பிறந்தவன். மன்னுசோதி – நிலைபெற்ற சோதி வடிவானவன்.

These verses have been sung by Gnaanasambandan who has been the Chief of Puhali also known as Seekaazhi, a place in the land of river Cauvery. The King of Puhali has written these verses in praise of the Lord of Thiru-vali-valam who wears in His head flowers like Suma leaves, Cassia and Datura flower (*வன்னி, கொன்றை, ஊமத்தை*). These verses sung by Gnaanasambandan are suitable to be sung at all times. Those who recite these ten verses will with sincere love be in unison with the eternal blaze of god and attain salvation, which is aspired for, by all those who really perform true penance.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*50ஆம் பதிகம் முற்றிற்று*
End of 50th Hymn

உ
சிவமயம்

# 51. திருச்சோபுரம்

## திருத்தலவரலாறு:

திருச்சோபுரம் என்ற திருத்தலம் நடுநாட்டுத் தலம் ஆகும். சிதம்பரம் – கடலூர் இருப்புப் பாதையில் ஆலப்பாக்கம் இரயில் நிலையத்துக்குக் கிழக்கே உள்ளது. இவ்வழியில் பேருந்துகளிலும் ஆலப்பாக்கம் வரலாம். ஆலப்பாக்கத்திற்குக் கிழக்கே 2 கி.மீ. தூரத்தில் சோபுரம் உள்ளது. சாலை வசதி உள்ளது.

இது இப்பொழுது தியாகவல்லி என வழங்குகிறது. முதல் குலோத்துங்கன் மனைவி மூவருள் பட்டத்து மனைவியாகிய தியாகவல்லியால் திருப்பணி செய்யப் பெற்றமையின் இப்பெயர் பெற்றது போலும். அகத்தியர் பூசித்த தலம். சமீபகாலம் வரையில் கடற்கரை மணலால் மூடப்பட்டு மேடாய் இருந்தது. ஒரு துறவி கருப்பக் கிருகத்தின் கல் ஸ்தூபி மணலில் காணப்படத் தோண்டி, ஊரவர் உதவியைக் கொண்டு இக்கோயிலை வெளிப்படுத்தினார். பரிவாரங்களுடன் ஆலயம் முழுவதும் மணலில் இருந்து தோண்டப்பட்டது. சில அறிகுறிகளால் நகரமே புதையுண்டிருக்க வேண்டும் என்று தெரிகிறது.

சுவாமி பெயர் சோபுர நாதர். அம்மை பெயர் சோபுர நாயகி. தீர்த்தம் பரம தீர்த்தம்.

## கல்வெட்டு:

கல்வெட்டுக்கள் 5 உள்ளன. இங்கே நர்த்தன கணபதி கோயில் இருந்ததாகவும், அதற்குச் சுந்தர பாண்டியன் நிலம் அளித்ததாகவும் அறியப்படுகிறது. இராஜராஜ தேவர், சாரிபுத்த பண்டிதர், முதலாம் மாறவர்மன் சுந்தர பாண்டியன், கோநேரின்மை கண்டான், சுந்தர பாண்டிய தேவர் முதலியவர்கள் பெயர்கள் குறிப்பிடப் பெறுகின்றன.

## பதிக வரலாறு:

சம்பந்தர் தமது நான்காம் முறைத் தலயாத்திரையில் தில்லையை வணங்கித் திருத்தினை நகருக்கு எழுந்தருளியிருக்க வேண்டும். அங்கே 'வெங்கணானை' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள். இவ்வரலாறு பெரிய புராணத்தில் அறியக் கூடவில்லை.

## 51. THIRU-CHOO-PURAM

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-choo-puram is in Nadu Naadu, at 2 km east of the Aalappaakkam railway station, which is in the Chidhambaram - Kadaloor railway route. Aalappakkam can also be reached by bus from where there is a road to Chopuram. This place is known as Thiyaagavalli now, perhaps because it was renovated by Thiyagavalli, the queen and one of the three wives of Kuloththungkan I.

Until recently the temple lay buried in sand, appearing like a mound. A monk accidentally discovered one of the pillars of the sanctum and had the villagers excavate the temple. The entire temple has now been excavated. Indications are that the whole village had been buried. The name of the God is Chopuranaathar and that of the Goddess is Chopuranaayaki. The holy ford is Parama Theerththam. Sage Agasthiyar worshipped here.

The five inscriptions mention the names of Raajaraaja Thevar, Saaripuththa Pandithar, Maaravarman Sundhara Paandiyan, Konerinmaikandaan and Sundhara Paandiya Thevar. They also reveal the existence of a shrine for dancing Ganapathi for which Sundhara Paandiyan donated land.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

**51. திருச்சோபுரம்** **51. THIRU-CHOO-PURAM**

பண் : பழந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakka Raagam*
*Raagam: Aarabi*

வெங்கணானை யீருரிவை போர்த்து விளங்குமொழி
மங்கைபாகம் வைத்துகந்த மாண்பது என்னைகொலாம்
கங்கையோடு திங்கள்சூடிக்கடி கமழுங்கொன்றைத்
தொங்கலானே தூயநீற்றாய் சோபுர மேயவனே. 1

வெங் கண் ஆனை ஈர்உரிவை போர்த்து, விளங்கும் மொழி
மங்கை பாகம் வைத்து உகந்த மாண்புஅது என்னைகொல்ஆம்? -
கங்கையோடு திங்கள் சூடி, கடி கமழும் கொன்றைத்-
தொங்கலானே! தூயநீற்றாய்! சோபுரம் மேயவனே!

veg kaN An2ai Ir urivai pOrttu, viLagkum mozi
magkai pAkam vaittu ukanta mANpu atu en2n2ai kol Am?--
kagkaiyOTu tigkaL cUTi, kaTi kamazum kon2Rait--
togkalAn2E! tUya nIRRAy! cOpuram mEyavan2E!

**பொருள்:** கங்கை நதியுடன் பிறைச் சந்திரனையும் சூடி, மணம் கமழும் கொன்றை மலர் மாலையை அணிந்து, தூய திருநீறு பூசித் திருச்சோபுரத்தில் விளங்கும் சிவபெருமானே! கொடிய யானையை உரித்து அதன் தோலைப் போர்த்தி, விளக்கமான மொழிகளைப் பேசும் மலை மங்கையை இடப்பாகத்தே கொண்டு மகிழும் உனது செயலின் மாண்பு எத்தகையதோ?

**குறிப்புரை:** சோபுரம் மேயவனே! யானைத் தோல் போர்த்து, ஒரு பாகத்து உமையையும் வைத்துக் கொண்டது என்னவோ என்கின்றது. வெங்கண் – கொடுமை. ஈர் உரி – கிழிக்கப் பெற்ற தோல். ஈரமாகிய தோல் என்றுமாம். கடி – மணம். தொங்கல் – மாலை.

Oh! Lord Civa enshrined in Thiru-choo-puram. You have in Your matted hair the river Ganges and the crescent moon closeted together. You wear the fragrant garland of cassia flowers. You have smeared Your body with the holy ashes. You killed the fierce elephant and with its skin You have covered Your body. On the left half of Your body, You have happily accommodated Your consort, the delightful and sweet voiced Umaa Devi. What for You had this glory?

விடையமர்ந்து வெண்மழு வொன்றேந்தி விரிந்திலங்கு
சடையொடுங் கத்தண்புனலைத் தாங்கிய தென்னைகொலாம்
கடையுயர்ந்த மும்மதிலுங் காய்ந்தன லுள்ளழுந்தத்
தொடை நெகிழ்ந்த வெஞ்சிலையாய் சோபுரமேயவனே. 2

விடை அமர்ந்து, வெண்மழு ஒன்று ஏந்தி, விரிந்து இலங்கு
சடை ஒடுங்க, தண்புனலைத் தாங்கியது என்னைகொல்ஆம்? -
கடை உயர்ந்த மும்மதிலும் காய்ந்து அனலுள் அழுந்த,
தொடை நெகிழ்ந்த வெஞ்சிலையாய்! சோபுரம் மேயவனே!

viTai amarntu, veNmazu on2Ru Enti, virintu ilagku
caTai oTugka, taN pun2alait tAgkiyatu en2n2ai koL Am?--
kaTai uyarnta mummatilum kAyntu an2aluL azunta,
toTai nekiznta venjcilaiyAy! cOpuram mEyavan2E!

**பொருள்:** வாயில்களாற் சிறந்த முப்புரங்களும் அனலுள் அழுந்துமாறு சினத்தோடு அம்பு செலுத்திய கொடிய மலை வில்லை உடையவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! விடைமீது அமர்ந்து வெண்மையான மழு ஒன்றைக் கையில் ஏந்தி விரிந்து விளங்கும் சடையின்கண் ஒடுங்குமாறு குளிர்ந்த நீரைத் தடுத்துத் தாங்கி இருத்தற்குக் காரணம் என்னையோ?

**குறிப்புரை:** முப்புரம் எரியக் கணை தொடுத்த வில்லையுடைய இறைவா, விடையேறி, வெண்மழுவேந்தி, சடையில் கங்கையைத் தாங்கியது என்னையோ என்கின்றது. விடை – இடபம். வெண்மழு என்றது இறைவன் திருக்கரத்தில் உள்ள மழு அலங்காரப் பொருளாதலன்றி யாரையும் அழித்தல் இல்லையாதலின். தொடை – அம்பு. நெகிழ்ந்த – செலுத்திய.

Oh! Lord Civa abiding in Thiru-choo-puram. Holding in Your hand the mighty mountain Meru as Your bow, You got angry with the hostile Asuraas roaming in their three citadels with ornamented entrances. You sent an arrow by which all the three cities were destroyed under fire. You ride over the bull, holding a white battle axe in Your hand. You have compressed the river Ganges with its cool waters in Your widespread dangling matted hair. What is the reason for You to keep the Ganges like this?

தீயராயவல் லரக்கர் செந்தழலுள் ளழுந்தச்
சாயவெய் துவானவரைத் தாங்கிய தென்னை கொலாம்
பாயும்வெள் ளைஏற்றை யேறிப்பாய் புலித்தோலுடுத்த
தூயவெள் ளைநீற்றினானே சோபுர மேயவனே. 3

***தீயர்ஆய வல்அரக்கர் செந்தழலுள்(ள்) அழுந்தச்***
***சாய எய்து வானவரைத் தாங்கியது என்னைகொல்ஆம்? -***
***பாயும் வெள்ளைஏற்றை ஏறி, பாய் புலித்தோல் உடுத்த***
***தூய வெள்ளை நீற்றினானே! சோபுரம் மேயவனே!***

tIyar Aya val arakkar centazaluL(L) azuntac
cAya eytu, vAn2avarait tAgkiyatu en2n2ai koL Am?--
pAyum veLLai ERRai ERi, pAy pulittOl uTutta
tUya veLLai nIRRin2An2E! cOpuram mEyavan2E!

பொருள்: பாய்ந்து செல்லும் வெண்ணிறமான விடையேற்றின்மீது ஏறி, பாயும் புலியினது தோலை உடுத்துத் தூய வெண்ணீற்றை அணிந்துள்ளவனே! திருச்சோபுரம் மேவிய

இறைவனே! கொடியவர்களாகிய வலிய அரக்கர் சிவந்த அழலுள் அழுந்துமாறு கணை எய்து தேவர்களை வாழ்வித்தது என்ன காரணம் பற்றியோ?

**குறிப்புரை:** இடபத்திலே ஏறி, புலித்தோல் உடுத்த புண்ணியனே! அரக்கரை அழித்து, வானவரை வாழ்வித்தது என்னையோ என்கின்றது. இறைமைக் குணம் வேண்டுதல் வேண்டாமை இலவாய் இருக்க. சிலரை அழித்து, சிலரை வாழ்விப்பது பொருந்துமோ என்பார்க்குக் காரணம் அருள்வதுபோல, தீயராய வல்லரக்கர் என்று திரிபுராதிகள் தீமைதோன்றக் கூறினார். வானவர் என அடைமொழி இன்றிக் கூறியதும் இரங்கத் தக்கார் என்றும் குறிப்புப்பற்றி.

Oh! Lord Civa belonging to Thiru-choo-puram! You ride on the white bull that moves fast galloping. You wear the skin of the charging tiger and have smeared Your body with pure white holy ashes. The nefarious and powerful Asuraas got killed in the blazing fire, and thus saved the Devaas from the onslaught of the Asuraas. What is the reason behind this?

பல்லிலோடு கையிலேந் திப்பல்கடையும் பலிதேர்ந்
தல்லல் வாழ்க்கைமேல தானஆதரவென்னை கொலாம்
வில்லை வென்றநுண் புருவவெல் நெடுங்கண்ணியோடுந்
தொல்லை யூழியாகி நின்றாய் சோபுர மேயவனே. 4

பல்இல்ஓடு கையில் ஏந்தி, பல்கடையும் பலி தேர்ந்து,
அல்லல் வாழ்க்கைமேலதுஆன ஆதரவு என்னைகொல்ஆம்? -
வில்லை வென்ற நுண் புருவ வெல்நெடுங்கண்ணியோடும்
தொல்லை ஊழிஆகி நின்றாய்! சோபுரம் மேயவனே!

pal il OTu kaiyil Enti, palkaTaiyum pali tErntu,
allal vAzkkai mElatu An2a Ataravu en2n2ai kol Am?--
villai ven2Ra nuN puruva vEl neTugkaNNiyoTum
tollai Uzi Aki nin2RAy! cOpuram mEyavan2E!

**பொருள்:** வில்லை வென்றை வளைந்த நுண் புருவத்தையும், வேல் போன்ற நீண்ட கண்ணையும் உடைய உமையம்மையோடும், பழமையான பல ஊழிக்காலங்களாக நிற்பவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! பல் இல்லாத மண்டையோட்டைக் கையிலேந்திப் பலர் இல்லங்களுக்கும் சென்று பலி ஏற்கும் அல்லல் பொருந்திய வாழ்க்கையின்மேல் நீ ஆதரவு காட்டுதற்குக் காரணம் என்னவோ?

**குறிப்புரை:** வேல்நெடுங்கண்ணியோடு ஊழி ஊழியாக இருக்கின்ற நீ பிச்சை வாழ்க்கையை விரும்பியது என்னையோ என்கின்றது. பல் இல் ஓடு – பற்கள் உதிர்ந்து போன மண்டையோடு. கடை – கடை வாயில். அல்லல் வாழ்க்கை – துன்ப வாழ்வு.

Oh! Lord Civa of Thiru-choo-puram. You have been in existence for many many hoary eons along with Your consort Umaa Devi. Her crescent like brows excel the bow in beauty and her attractive long and sharp eyes resemble a spear. You carry the human skull deprived of its teeth, receiving alms from many houses. You are inclined to pursue this sort of miserable life of receiving alms from many homes. What is the reason for this?

நாற்றமிக்க கொன்றை துன்றுசெஞ்சடை மேல்மதியம்
ஏற்றமாக வைத்து கந்தகாரண மென்னை கொலாம்
ஊற்றமிக்க காலன்றன்னை யொல்கவு தைத்தருளித்
தோற்றமீறு மாகிநின்றாய் சோபுர மேயவனே. 5

நாற்றம் மிக்க கொன்றை துன்று செஞ்சடைமேல் மதியம்
ஏற்றம்ஆக வைத்து உகந்த காரணம் என்னைகொல்ஆம்? -
ஊற்றம் மிக்க காலன்தன்னை ஒல்க உதைத்துஅருளி,
தோற்றம் ஈறும் ஆகி நின்றாய்! சோபுரம் மேயவனே!

nARRam mikka kon2Rai tun2Ru cenjcaTaimEl matiyam
ERRam Aka vaittu ukanta kAraNam en2n2ai kol Am?--
URRam mikka kAlan2tan2n2ai olka utaittu aruLi,
tORRam IRum Aki nin2RAy! cOpuram mEyavan2E!

**பொருள்:** வலிமை பொருந்திய காலனை அழியுமாறு உதைத்தருளி, எல்லாப் பொருள்கட்கும் தோற்றமும் ஈறுமாகி நிற்பவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! மணம் மிக்க கொன்றை மலர்கள் நிறைந்த செஞ்சடையின்மேல் பிறைமதியை அழகுபெற வைத்து மகிழ்தற்குக் காரணம் என்னையோ?

**குறிப்புரை:** காலனை உதைத்து உலகத்திற்குத் தோற்றமும் ஈறுமாக இருக்கின்ற தேவரீர், கொன்றை நிறைந்த செஞ்சடைமேல் மதியும் வைத்தது ஏன் என்கின்றது. ஏற்றம் – உயர்வு. உகந்த – மகிழ்ந்த. மகிழ்ச்சிக்குக் காரணம் பலர் சாபத்தால் இளைத்த ஒருவனுக்கு ஏற்றம் அளித்தோமே என்ற மகிழ்ச்சி. ஊற்றம் – வலிமை. தோற்றம் ஈறுமாகி நின்றாய் என்றது. தான் எல்லாவற்றிற்கும் தோற்றமும் ஈறுமாய்

ஆவதன்றித் தனக்குத் தோற்றமும் ஈறும் இல்லாதவன் என்பது குறிப்பு. இதனையே மணிவாசகரும் 'ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே' என்பார்கள்.

Oh! Lord Civa enshrined in Thiru-choo-puram! You caused the death of the mighty god of death (Kaalan). You are the creator and dissolver of all souls in the universe. You have worn the fragrant cassia flowers in abundance on Your ruddy matted hair. Along with this, You have decorated it further with the crescent moon and rejoice over it. What is the reason for this?

கொன்னவின்ற மூவிலை வேற்கூர்மழு வாட்படையன்
பொன்னைவென்ற கொன் றைமாலைசூடும்பொற் பென்னைகொலாம்
அன்னமன்ன மென்னடையாள் பாகமமர்ந்தரைசேர்
துன்னவண்ண ஆடையினாய் சோபுர மேயவனே. 6

**கொல்-நவின்ற மூஇலைவேல், கூர்மழுவாள்படையன்,
பொன்னை வென்ற கொன்றைமாலை சூடும் பொற்பு என்னைகொல்ஆம்? -
அன்னம் அன்ன மென்நடையாள் பாகம்அமர்ந்து, அரை சேர்
துன்ன வண்ண ஆடையினாய்! சோபுரம் மேயவனே!**

kol--navin2Ra mU ilaivEl, kUr mazuvAL paTaiyan2,
pon2n2ai ven2Ra kon2RaimAlai cUTum poRpu en2n2ai kol Am?--
an2n2am an2n2a men2 naTaiyAL pAkam amarntu, arai cEr
tun2n2a vaNNa ATaiyin2Ay! cOpuram mEyavan2E!

**பொருள்:** அன்னம் போன்ற மெல்லிய நடையினை உடைய உமையம்மையை ஒரு பாகமாகப் பொருந்தி, இடையில் அழகிய கோவண ஆடையை அணிந்தவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! கொல்லும் தொழில் பொருந்திய மூவிலை வேலையும் தூய மழுவாட் படையையும் உடையவனே! நிறத்தால் பொன்னை வென்ற கொன்றை மாலையை நீ விரும்பிச் சூடுதற்குரிய காரணம் என்னையோ?

**குறிப்புரை:** ஒரே மேனியில் பெண்பாதியும் உடையன் ஆதலால் கோவணமும், பட்டாடையும் உடைய பெருமானே, கொன்றை மாலை சூடுவதென்னை என்கின்றது. கொன் – பெருமை. பொற்பு – அழகு. துன்ன ஆடையினாய். வண்ண ஆடையினாய் எனத் தனித்தனிப் பிரித்துக் கட்டிக் கோவணமாகிய ஆடையை உடையவனே, நிறம் பொருந்திய ஆடையை உடையவனே என உமையொரு பாதியனாய் இருப்பதற்கேற்பப் பொருள் உரைக்க.

Oh! Lord! You are the presiding deity in Thiru-choo-puram. You wear a good looking loincloth on Your waist. You have accommodated Your consort Umaa Devi on the left half of Your body. Her steps are as gentle as the swan's. You are armed with the murderous three leaf trident in one hand and with the holy battle axe in another hand. What is the reason, for You to create a liking to wear the garland of cassia flowers which are more glowing than gold.

குற்றமின்மை யுண்மைநீ யென்றுன்னடி யார்பணிவார்
கற்றகேள்வி ஞானமான காரணமென்னை கொலாம்
வற்றலாமை வாளரவம் பூண்டையன் வெண்டலையில்
துற்றலான கொள்கையானே சோபுர மேயவனே. 7

"குற்றம்இன்மை, உண்மை, நீ" என்று உன் அடியார் பணிவார்,
கற்றல் கேள்வி ஞானம் ஆன காரணம் என்னைகொல்ஆம்? -
வற்றல்ஆமை வாள்அரவம் பூண்டு, அயன் வெண்தலையில்-
துற்றல்ஆன கொள்கையானே! சோபுரம் மேயவனே!

"kuRRam in2mai, uNmai, nI" en2Ru un2 aTiyAr paNivAr,
kaRRal kELvi njAn2am An2a kAraNam en2n2ai kol Am?--
vaRRal Amai vAL aravam pUNTu, ayan2 veN talaiyil--
tuRRal An2a koLkaiyAn2E! cOpuram mEyavan2E!

**பொருள்:** ஊன் வற்றிய ஆமை ஓட்டையும், ஒளி பொருந்திய பாம்பையும், அணிகலனாகப் பூண்டு, பிரமனின் வெண்மையான தலையோட்டில் பலியேற்று உண்ணும் கொள்கையனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! குணமும் குற்றமும் நீயே என்று பணியும் உன் அடியவர்கட்கு அவர்கள் கற்ற கல்வியும், கேள்வியும் அதனால் விளையும் ஞானமுமாக நீயே விளங்குதற்குக் காரணம் என்னவோ?

**குறிப்புரை:** பிரம கபாலத்துப் பிச்சை ஏற்பவனே, குணமும் நீ, குற்றமும் நீ என்று பணியும் அடியார்கட்குக் கல்வியும் கேள்வியும் அதனால் விளங்கும் ஞானமுமாகத் தேவரீர் விளங்குவது என்னையோ என்கின்றது. கற்ற கேள்வி – கேள்வி பயன்படுவது கற்ற பின்னாதலின் கற்றதன்பின் கேட்கப்படும் கேள்வி எனக் குறித்தமை காண்க. வற்றலாமை – ஆமை ஓடு. துற்றலான – உண்ணுதலாகிய.

Oh! Lord Civa! enshrined in Thiru-choo-puram! You have adorned Your body with a garland of tortoise shell, well dried of flesh, along with a dazzling snake. You have made it a principle to eat the food received in Your alms bowl of Brahma's skull.

Your servitors adore You saying thus "Oh! Lord! You are alike perfect and imperfect". You constitute the learning of Your servitors, as well as the fruit of their wisdom. Why do You pose in such differing aspects?

**Note:** Kelvi: Inter alia, it means interrogation. Through this, clarity is gained. Clarity means certainty and that indeed constitutes wisdom (கற்றல், கேட்டல், சிந்தித்தல், தெளிதல்).

விலங்கலொன் றுவெஞ்சிலையாக் கொண்டு விறலரக்கர்
குலங்கள் வாழுமூரெரித்த கொள்கை யிதென்னை கொலாம்
இலங்கை மன்னுவாள வுணர்கோனை யெழில்விரலால்
துலங்கவூன் றிவைத்து கந்தாய் சோபுர மேயவனே. 8

விலங்கல் ஒன்று வெஞ்சிலையாக் கொண்டு, விறல் அரக்கர்-
குலங்கள் வாழும் ஊர் எரித்த கொள்கை இது என்னைகொல்ஆம்? -
இலங்கை மன்னு வாள் அவுணர்கோனை எழில் விரலால்-
துலங்க ஊன்றி வைத்து உகந்தாய்! சோபுரம் மேயவனே!

vilagkal on2Ru venjcilaiyAk koNTu, viRal arakkar--
kulagkaL vAzum Ur eritta koLkai itu en2n2ai kol Am?--
ilagkai man2n2u vAL avuNarkOn2ai ezil viralAl--
tulagka Un2Rivaittu ukantAy! cOpuram mEyavan2E!

**பொருள்:** இலங்கையில் நிலைபெற்று வாழும், வாட்போரில் வல்ல அவுணர் தலைவனாகிய இராவணனைத் தனது அழகிய கால்விரலால் நடுங்குமாறு ஊன்றிப் பின் அவன் மன்னிப்பு வேண்ட மகிழ்ந்து அருள்புரிந்தவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! மேரு மலையைக் கொடியதொரு வில்லாகக் கொண்டு வலிமை பொருந்திய அரக்கர் குலங்கள் வாழ்கின்ற திரிபுரங்களாகிய ஊர்களை எரித்து அழித்தற்குக் காரணம் என்னவோ?

**குறிப்புரை:** இலங்கை மன்னனை ஒருவிரலால் அடர்த்த நீ, மலையை வில்லாகத் தூக்கித் திரிபுரம் எரித்தது என்னையோ என்கின்றது. விலங்கல் – மேருமலை. அரக்கர் – திரிபுராதிகள்.

Raavanan, the valiant sword fighter, the chief of the Raakshasaas, abides permanently in Sri Lanka. Oh! Lord Civa You once made Raavanan tremble by pressing the top of Your mount Kailash, with Your toe, while he tried to uproot Your abode. Later he regretted and begged for pardon. You felt happy on his singing Saama Gaanam and granted several boons to him. What is the reason for You to destroy by

fire the three citadels where the mighty Asuraas lived, by improvising and using the Meru mountain as Your bow?

விடங்கொள் நாகமால் வரையைச் சுற்றிவிரி திரைநீர்
கடைந்த நஞ்சை யுண்டு கந்தகாரண மென்னை கொலாம்
இடந்து மண்ணை யுண்டமாலுமின் மலர்மேலயனுந்
தொடர்ந்து முன்னங் காணமாட்டாச் சோபுர மேயவனே. 9

விடம் கொள் நாகம் மால்வரையைச் சுற்றி, விரிதிரைநீர்
கடைந்த நஞ்சை உண்டு உகந்த காரணம் என்னைகொல்ஆம்? -
இடந்து மண்ணை உண்ட மாலும், இன் மலர்மேல் அயனும்,
தொடர்ந்து முன்னம் காணமாட்டாச் சோபுரம் மேயவனே!

viTam koL nAkam mAlvaraiyaic cuRRi, viritirai nIr
kaTainta nanjcai uNTu ukanta kAraNam en2n2ai kol Am?--
iTantu maNNai uNTa mAlum, in2 malarmEl ayan2um,
toTarntu mun2n2am kANamATTAc cOpuram mEyavan2E!

**பொருள்:** மண்ணுலகை அகழ்ந்து உண்ட திருமாலும், இனிய தாமரை மலர்மேல் விளங்கும் பிரமனும், முற்காலத்தே உன்னைத் தொடர்ந்து அடிமுடி காணமாட்டாராய், நின்றொழியத் திருச்சோபுரத்தில் மேவி விளங்கும் இறைவனே! தேவர்கள் விடத்தை உடைய வாசுகி என்னும் பாம்பை மந்தரம் என்னும் பெரிய மலையைச் சுற்றிக் கட்டி, விரிந்த அலைகளை உடைய கடல்நீரைக் கடைந்தபோது, அதனிடை எழுந்த நஞ்சை உண்டு மகிழ்தற்குக் காரணம் என்னையோ?

**குறிப்புரை:** அயனாலும் மாலாலும் அறியப்படாத நீர் விடம் உண்டு மகிழ்ந்த காரணம் என்னை என்கின்றது. நாகம் – வாசுகி என்னும் பாம்பு. மால் வரை – மந்தர மலை. நஞ்சை உண்டு உகந்த – தேவர்கள் அஞ்சிய நஞ்சைத் தாம் உண்டு அவர்களைக் காத்தும், சாவாமைக்கு ஏதுவாகிய அமுதத்தை அவர்களுக்குக் கொடுத்து அளித்தும் மகிழ்ந்த. இடந்து – தோண்டி.

Thirumaal who dug deep and swallowed earth, and Brahma who is seated in the enchanting lotus flower, long ago, searched for You in vain. Oh! Lord Civa You are enshrined in Thiru-choo-puram. When Devaas churned the billowing sea of milk using the mountain Meru as the churning rod, and the venomous snake called Vaasuki (*வாசுகி*) as the churning rope, poison came out of the sea. Oh! Civa! What is the reason for You to swallow the poison happily?

புத்தரோடு புன்சமணர் பொய்யுரையே யுரைத்துப்
பித்தராகக் கண்டுகந்த பெற்றிமை யென்னை கொலாம்
மத்தயானை யீருரிவை போர்த்து வளர்சடைமேல்
துத்திநாகஞ் சூடினானே சோபுர மேயவனே. 10

புத்தரோடு புன்சமணர் பொய்உரையே உரைத்து,
பித்தர்ஆகக் கண்டு உகந்த பெற்றிமை என்னைகொல்ஆம்? -
மத்தயானை ஈர்உரிவை போர்த்து, வளர்சடைமேல்-
துத்திநாகம் சூடினானே! சோபுரம் மேயவனே!

puttarOTu pun2camaNar poy uraiyE uraittu,
pittar Akak kaNTu ukanta peRRimai en2n2ai kol Am?--
mattayAn2ai Ir urivai pOrttu, vaLar caTaimEl--
tuttinAkam cUTin2An2E! cOpuram mEyavan2E!

**பொருள்:** மதம் பொருந்திய யானையை உரித்து அதன் தோலைப் போர்த்து, நீண்ட சடையின்மேல் புள்ளிகளை உடைய நாகப் பாம்பைச் சூடியவனே! திருச்சோபுரம் மேவிய இறைவனே! புத்தர்களும், சமணர்களும் பொய்யுரைகளையே பேசிப் பித்தராகத் திரிதலைக் கண்டு நீ மகிழ்தற்குக் காரணம் என்னையோ?

**குறிப்புரை:** புத்தரும் சமணரும் பொய்யுரைத்துப் பித்தராக்கிய தன்மை என்னையோ என்கின்றது. அவர்களுக்கும் ஞானம் அளித்து உயர்த்த வேண்டிய தேவரீர், இங்ஙனம் பித்தராகக் கண்டது அவர்களுக்கு அதற்கேற்ற பரிபாகம் இன்மையாலே என்று உணர வைத்தவாறு. துத்தி – படம்; பொறி.

Oh! Lord Civa! enshrined in Thiru-choo-puram! You killed and peeled of the skin of the exhilarated elephant and covered Your body with it. You have worn in Your long matted hair a speckled snake. What is the reason for Your happiness to see the Buddhists and Jains who always speak lies, and roam about like mad men?

சோலைமிக்க தண்வயல்சூழ் சோபுரமேயவனைச்
சீலமிக்க தொல்புகழார் சிரபுரக்கோன் நலத்தால்
ஞாலமிக்க தண்டமிழால் ஞானசம்பந்தன் சொன்ன
கோலமிக்க மாலைவல்லார் கூடுவர் வானுலகே. 11

சோலை மிக்க தண்வயல் சூழ் சோபுரம் மேயவனை,
சீலம் மிக்க தொல்புகழ் ஆர் சிரபுரக் கோன்-நலத்தான்,
ஞாலம் மிக்க தண் தமிழால் ஞானசம்பந்தன்-சொன்ன
கோலம் மிக்க மாலை வல்லார் கூடுவர், வான்உலகே.

cOlai mikka taNvayal cUz cOpuram mEyavan2ai,
cIlam mikka tolpukaz Ar cirapurak kOn2--nalattAn2,
njAlam mikka taN tamizAn2, njAn2acampantan2--con2n2a
kOlam mikka mAlai vallAr kUTuvar, vAn2 ulakE.

***பொருள்:*** சோலைகள் மிகுந்ததும், குளிர்ச்சியான வயல்களால் சூழப்பட்டதுமான திருச்சோபுரத்தில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். சிரபுரம் என்ற சீகாழிப் பதியில் நல்லொழுக்கம் மிக்க, பழமையான புகழை உடைய சான்றோர்கள் வாழுகின்றனர். இந்தப் பதியின் நன்மைகளையே கருதுபவரும், தலைவரும் ஆவார் ஞானசம்பந்தன். இவர், உலகில் மேம்பட்ட அருள்மொழியான தமிழில் அழகுமிக்க இந்த தமிழ் மாலையைப் பாடினார். இத்தமிழ் மாலையை ஓதவல்லவர்கள் வானுலகை அடைவர்.

***குறிப்புரை:*** இந்தத் தமிழ்மாலையை ஓத வல்லவர்கள் வானுலகைக் கூடுவர் எனத் திருக்கடைக்காப்பு அருளுகின்றது. கோலம் – அழகு.

Gnaanasambandan is the chief of Civapuram, where dwell exceedingly virtuous scholars hailing from the families of hoary glory. He always thinks high and does good for others. He sang this hymn in the world renowned Tamil language. Those who can chant this hymn with all sincerity will gain salvation and will reach heaven.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*51ஆம் பதிகம் முற்றிற்று*
End of 51st Hymn

உ
சிவமயம்

# 52. திருநெடுங்களம்

## திருத்தலவரலாறு:

திருநெடுங்களம் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம் ஆகும். திருச்சிராப்பள்ளிக்குக் கிழக்கே உள்ளது. பேருந்து வசதி உள்ளது. தஞ்சை – திருச்சி பேருந்து வழியில் துவாக்குடி வந்து அங்கிருந்து வடக்கே செல்ல வேண்டும்.

திருநெட்டான்குளம் என இக்காலத்து வழங்கும். வங்கிய சோழன் பூசித்துப் பேறுபெற்ற தலம். சுவாமி நித்தியசுந்தரர். தேவி ஒப்பிலாநாயகி. தீர்த்தம் சுந்தரதீர்த்தம்.

## கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுக்கள் 34 உள்ளன. அவை சுந்தர பாண்டியன் காலத்தன மூன்றும், கரிகாலன் காலத்தது ஒன்றும், ஸ்ரீவல்லப தேவனது ஒன்றும், இராஜ கேசரி வர்மன் காலத்தன ஒன்பதும், 3ஆம் இராஜராஜன் கல்வெட்டு இரண்டும், ஹொய்ஸள வீரராமநாத தேவரது ஒன்றும், திரிபுவன வீரதேவனுடையன இரண்டும், பரகேசரி வர்மன் என்று மட்டும் குறிப்பன மூன்றும், விஜயநகர அரசர்களுடையன ஐந்தும், நாயக்க மன்னரது ஒன்றும் ஏனைய அறியப்படாதனவுமாக அமைந்தன.

இத்தலம் சுந்தரபாண்டியன் காலத்து பாண்டிய குலபதி வடகரை நாட்டுத் திருநெடுங்களம் என்றும், மூன்றாம் இராஜராஜ தேவன் காலத்து பாண்டியகுலாசனி வளநாட்டு வடகாவிரி நாட்டுப் பிரமதேயம் தியாகவல்லி சதுர்வேதி மங்கலமான திருநெடுங்களம் என்றும் குறிக்கப் பெறுகிறது. இறைவன் திருநெடுங்களமுடைய நாயனார், நெடுங்களமுடையார், உலகாண்டேசுவரமுடையார், களந்தை நாயகர், திருநெடுங் களமுடைய தம்பிரானார், நிழலார் சோலை வளமுடைய நாயனார், திருநெடுங்களத்து ஆள்வார் என்றெல்லாம் வழங்கப் பெறுகிறார்.

இவ்வரசர்கள் அனைவரும் கோயிலுக்குப் பொன்னும், நெல்லும், நிலமும் அளித்த செய்தி அறிவிக்கப் பெறுகின்றன. அரசர்களே யன்றி, அரசருடைய தண்டல் நாயகர்களும், அரசகாரியம் பார்ப்பவர்களும், மனைவியார்களும் அறம் செய்துள்ளனர். இராஜகேசரி வர்மன் மூன்றாம் ஆண்டில் உறையூர் உடையான் ஒருவனால் லோகசுந்தரத் திருப்படிமம் பிரதிட்டை செய்யப்பெற்றது, பிள்ளையார் கணபதி கோயிலுக்கு விளக்கீடு செய்வித்தான் முதலாம் இராஜகேசரி வர்மன் (கி.பி. 985–1013). பித்தளையால் செய்யப்பட்டு பொன்முலாம் பூசப்பெற்ற மத்தளி ஒன்றைக் கம்பன்

மணியனான விக்கிரமசிங்கன் மூவேந்த வேளாளன் என்பான் ஸ்ரீபலி உபயத்திற்காகச் செய்து கொடுத்தான். இக்கோயிலில் முழுக்குடி அரசன் வல்லபதேவன் அரங்க மண்டபம் கட்டிக் கொடுத்தான்.

**பதிக வரலாறு:**

திருஎறும்பியூர் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு ஆளுடைய பிள்ளையார் திருநெடுங்களத்தை அடைந்து வழிபட்டு 'நின்பால் நேசம் செலாவகைத் தடுக்கும் இடும்பை தீர்த்தருள்வாய்' என வேண்டி 'மறையுடையாய்' என்னும் இத்திருப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 52. THIRU-NEDUNG-KALAM

### THE HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu, to the east of Thiruchchiraappalli. It can be reached by bus, proceeding towards north from Thuvaakkudi, which lies in Tiruchi - Thanjai bus route. The place is called Thirunettaankulam nowadays.

The Lord's name is Niththiyasundharar and the Goddess's is Oppilaanaayaki. The sacred ford is Sundharatheerththam. Vangiya Cholan attained salvation by worshipping here.

The 34 inscriptions in this temple belong to reigns of various Chola, Paandiya, Hoysala, Vijayanagar and Naayakkar kings. The Lord is described by various names such as Thirunedungkalamudaiyanaayanar, Nedungkalamudaiyaar, Ulagaande-suvaramudaiyaar, Kalandhainaayakar, Thirunedungkalamudaiya Thampiraanaar, Nizhalar Solai Valamudaiyanaayanaar and Thirunedungkalaththu Aalvaar.

The various kings had gifted gold, land and paddy to the temple. In addition, the high officials of the kings and the queens have also made gifts. The installation of the icon Lokasundharar, lamp endowment for the Pillaiyaar Ganapathy shrine, gift of a gold-plated musical drum for the service known as Sreebali, and the construction of a pavilion are all cited in the inscriptions.

## INTRODUCTION TO THE HYMN

The young boy saint adored Civa in Thiruverumpiyur and other shrines. Then he came to Nedungkalam where he sang the following hymn. This patikam is a very significant one in Saivite Literature. Since the staff of the Saraswati Mahal Library, Thanjavur, underwent much hardship in work. They were asked to read and recite this hymn daily. They did it in all sincerity. Their troubles vanished in a short space of time. They then visited the shrine at Nedungkalam in full strength and caused the performance of a great puja to the Lord.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 52. திருநெடுங்களம்

## 52. THIRU-NEDUNG-KALAM

பண் : பழந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakka Raagam*
*Raagam: Aarabi*

மறையுடையாய் தோலுடையாய் வார்சடை மேல்வளரும்
பிறையுடையாய் பிஞ்ஞகனே யென்றுனைப் பேசினல்லால்
குறையுடையார் குற்றமோராய் கொள்கையி னாலுயர்ந்த
நிறையுடையா ரிடர்களையாய் நெடுங்கள மேயவனே. 1

*"மறைஉடையாய்! தோல்உடையாய்! வார்சடைமேல் வளரும்*
*பிறைஉடையாய்! பிஞ்ஞகனே!" என்று உனைப் பேசின்அல்லால்,*
*குறைஉடையார் குற்றம் ஓராய்! கொள்கையினால் உயர்ந்த*
*நிறைஉடையார் இடர் களையாய் - நெடுங்களம் மேயவனே!*

"maRai uTaiyAy! tOl uTaiyAy! vArcaTai mEl vaLarum
piRai uTaiyAy! pinjnjakan2E!" en2Ru un2aip pEcin2 allAl,
kuRai uTaiyAr kuRRam OrAy! koLkaiyin2Al uyarnta
niRai uTaiyAr iTar kaLaiyAy--neTugkaLam mEyavan2E!

**பொருள்:** திருநெடுங்களம் மேவிய சிவபெருமானே! வேதங்களைத் தனக்கு உடைமையாகக் கொண்டவனே! தோல் ஆடையை உடுத்தவனே! நீண்ட சடை மேல் வளரும் இளம்பிறையைச் சூடியவனே! தலைக் கோலம் உடையவனே! என்றவாறு உன்னைத் தோத்தரிக்கின்றேன். குறையுடையவர்களின் குற்றங்களை நீர் மனதில் கொள்ளாதவர். மனத்தினால் வேறு தெய்வத்தை நினையாத கொள்கையில் மேம்பட்ட மாட்சிமை உடைய அடியவர்களின் துன்பங்களை நீக்கி அருள்வாயாக.

**குறிப்புரை:** மறையுடையாய் என்பது முதலிய சொல்லித் தோத்திரித்தால் அல்லது குறையுடையார் குற்றத்தை ஆராயாத தேவரீர், நிறையுடையார் துன்பத்தையும் களைய வேண்டும் என்கின்றது. மறை உடையாய் என்பது முதலியன நிறைந்த மறையையும், அருவருக்கத்தக்க தோலையும், சாபம் ஏற்ற மதியையும் ஒப்ப மதிக்கும் பெரியோனே எனப் பின்னர்வரும் 'குறையுடையார் குற்றம் ஓராய்' என்பதற்கு இயைய அமைந்திருத்தல் காண்க. ஓராய் – ஆராயாதவனே.

"Oh! Lord Civa - You are having a special decorative head-wear and that is why You are called Pinggnakan (பிஞ்ஞகன்); You are the Lord author of the Vedas; Your garment is made of animal skin; You are holding the growing young crescent moon in Your long matted hair". You are gracious enough to ignore the shortcomings even in the prayers of those who do not hail Thy Name. Oh! Lord Chief of Nedungkalam, kindly annul the troubles of the lofty virtuous people, who think of no god other than Your graceful self.

**Note:** Pinggnakam: It is a head-ornament. Civa so binds His matted hair that it resembles a crown.

The message of this hymn is that troubles beset the perfect as well as the imperfect. The perfect are so perfect that they do not pray for their own personal welfare. Our young saint prays for them also.

கனைத்தெழுந்த வெண்திரை சூழ்கடலிடை நஞ்சுதன்னைத்
தினைத்தனையா மிடற்றில் வைத்திருந்திய தேவநின்னை
மனத்தகத்தோர் பாடலாடல் பேணியிராப் பகலும்
நினைத்தெழு வாரிடர்களையாய் நெடுங்கள மேயவனே. 2

*கனைத்து எழுந்த வெண்திரை சூழ் கடல்இடை நஞ்சுதன்னைத்*
*தினைத்தனையா மிடற்றில் வைத்த திருந்திய தேவ! நின்னை*
*மனத்து அகத்தோர் பாடல் ஆடல் பேணி இராப்பகலும்*
*நினைத்து எழுவார் இடர் களையாய் - நெடுங்களம் மேயவனே!*

kan2aittu ezunta veNtirai cUz kaTal iTai nanjcu tan2n2ait
tin2aittan2aiyA miTaRRal vaitta tiruntiya tEva! nin2n2ai
man2attu akattOr pATal ATal pENi, irAppakalum
nin2aittu ezuvAr iTar kaLaiyAy--neTugkaLam mEyavan2E!

**பொருள்:** திருநெடுங்களத்தில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! ஆரவாரித்து எழுந்த, வெண்மையான அலைகளால் சூழப்பட்ட கடல் நஞ்சினைத் தினைஅளவாகச் செய்து, கழுத்தில் நிறுத்திய மேம்பட்ட தேவனே! நின்னை மனத்தின் அகத்தே நிறுத்தி, பாடல் ஆடல்களால் போற்றி, இரவும் பகலும் தியானிக்கும் அடியார்களின் துன்பங்களை நீக்கி அருள்வாயாக.

**குறிப்புரை:** ஆகாத நஞ்சை அழகிய மிடற்றில் வைத்த பெருமானே! அல்லும் பகலும் தியானிக்கும் அடியார் இடர்களைவாயாக என்கின்றது. கனைத்து – ஒலித்து. தினைத்தனையா – அதன் பெருமை எல்லாவற்றையும் அடக்கித் தினையளவாகச் செய்து. மிடறு – கழுத்து.

The white waves rose aloft raging in the billowing sea of milk (in the days of yore). While it was churned, venom came out from the sea and was about to destroy things all around. Oh! Supreme Mahadeva You reduced the size of venom to that of a millet seed, swallowed it and held it in Your throat. Oh! Lord entempled in Thiru Nedungkalam! Pray annul the afflictions of Your devotees who holding You in their minds, hail You. Singing Your praise and dancing by day and night from the moment of their waking up.

நின்னடியே வழிபடுவான் நிமலா நினைக்கருத
என்னடியா னுயிரைவவ் வேலென்றடற் கூற்றுதைத்த
பொன்னடியே பரவிநாளும் பூவொடு நீர்சுமக்கும்
நின்னடியா ரிடர்களையாய் நெடுங்கள மேயவனே. 3

*நின் அடியே வழிபடுவான், - நிமலா! - நினைக் கருத/*
*"என் அடியான் உயிரை வவ்வேல்!" என்று அடல் கூற்று உதைத்த*
*பொன்அடியே பரவி, நாளும் பூவொடு நீர் சுமக்கும்*
*நின் அடியார் இடர் களையாய் - நெடுங்களம் மேயவனே!*

nin2 aTiyE vazipaTuvAn2,--nimalA!--nin2aik karuta,
"en2 aTiyAn2 uyirai vavvEl!" en2Ru aTal kURRu utaitta
pon2 aTiyE paravi, nALum pUvoTu nIr cumakkum
nin2 aTiyAr iTar kaLaiyAy--neTugkaLam mEyavan2E!

**பொருள்:** திருநெடுங்களம் மேவிய சிவபெருமானே! குற்றமற்றவனே! நின் திருவடிகளையே வழிபடும் மார்கண்டேயன் நின்னையே கருதிச் சரண் புகுந்தான். அவனைக் கொல்ல வந்த வலிமை மிக்க எமனைச் சினந்து, 'என் அடியானின் உயிரைக் கவராதே' என்று உதைத்தீர்.

நினது பொன்னடிகளையே வழிபட்டு, நாள்தோறும் பூவும் நீரும் சுமந்து வழிபடும் நின் அடியார்களின் துன்பங்களை நீக்கி அருள்க.

***குறிப்புரை:*** காலகாலராகிய நின்னடியையே கருதும் அடியார்கள் இடரைக்களைக என்கின்றது. நிமலா, நின் அடியே வழிபடுவான் நினைக்கருத (நீ) 'என் அடியான் உயிரை வவ்வேல்' என்று அடல் கூற்று உதைத்த பொன்னடியே பரவி எனக் கூட்டிப் பொருள் காண்க. சுமக்கும் அடியார் இடர்களையாய் என்றது. இவர்கள் வினை இடையீடாக இருந்ததாயினும் சுமைக்குக் கூலி கொடுப்பார்போல, அடியார்கள் பூவும் நீரும் சுமந்தமைக்காகவாவது நீர் அருள் வழங்க வேண்டும் என்று வற்புறுத்தியது.

Oh! Immaculate Lord Civa entempled in Thiru Nedungkalam! Maarkandeya (*மார்க்கண்டேயன்*) was ever thinking of You, worshipped Your Holy Feet and surrendered to You, when the mighty god of death Yaman (*யமன்*) came to snatch his life. You got infuriated at sight of the god of death and shouted "Do not take away the life of my devotee" and kicked him to death. Oh! Civa! pray annul the afflictions of Your devotees who worship You daily by carrying water and offering flowers to Your golden feet that kicked the god of death.

**Note:** Civa smote Yama for the sake of His devotee Maarkandeya, the eternal lad.

மலைபுரிந்த மன்னவன்றன் மகளையோர் பால்மகிழ்ந்தாய்
அலைபுரிந்த கங்கை தங்குமவிர் சடையாரூரா
தலைபுரிந்த பலிமகிழ்வாய் தலைவ நின்றாள் நிழற்கீழ்
நிலைபுரிந்தா ரிடர்களையாய் நெடுங்கள மேயவனே. 4

*மலை புரிந்த மன்னவன்தன் மகளை ஓர்பால் மகிழ்ந்தாய்!*
*அலை புரிந்த கங்கை தங்கும் அவிர்சடை ஆரூரா!*
*தலை புரிந்த பலி மகிழ்வாய்! தலைவ! நின் தாள் நிழல்கீழ்*
*நிலை புரிந்தார் இடர் களையாய் - நெடுங்களம் மேயவனே!*

malai purinta man2n2avan2tan2 makaLai OrpAl makizntAy!
alai purinta kagkai tagkum avir caTai ArUrA!
talai purinta pali makizvAy! talaiva! nin2 tAL nizal kIz
nIgki nillAr iTar kaLaiyAy--neTugkaLam mEyavan2E!

***பொருள்:*** திருநெடுங்களம் எழுந்தருளிய சிவபெருமானே! இமவான் மகளாகிய பார்வதி தேவியைத் தன் திருமேனியின் ஓர் பாதியாகக் கொண்டு மகிழ்பவனே! அலைகள் வீசும்

கங்கை நீரைத் தாங்கிய விரிந்த சடையினை உடைய திருவாரூர் இறைவனே! தலை ஓட்டை விரும்பி ஏந்தி அதன்கண் பலியேற்று மகிழ்பவனே! தலைவனே! நினது திருவடி நிழலின்கீழ் நிற்பதையே விரும்பும் அடியவர்களின் துன்பத்தை நீக்கி அருள்வாயாக.

**குறிப்புரை:** மலைமகளையொருபாலும், அலைமகளைத் தலைமேலும் வைத்து மகிழ்ந்த தேவரீர், நின்னடி மறவாத நிலையுடையார் இடரைக் களைக என்கின்றது. புரிந்த – விரும்பிய. நிலைபுரிந்தார் – அநவரத தியானத்தால் நிற்றலை உடையவர்கள்.

Oh! Lord Civa! enshrined in Thiru Nedungkalam! You are glad to accommodate Your consort Paarvathi Devi, daughter of the king of the Himaalayas on the left portion of Your body. Oh! Lord of Thiruvaaroor! You are holding in Your broad matted hair the billowing river Ganges. You like to hold in Your hands the human skull to get alms and enjoy doing it. You are my chief! Pray! annul the afflictions of Your devotees whose sole desire is to be in unison with You under the shadow of Your Holy Feet.

பாங்கினல்லார் படிமஞ்செய்வார் பாரிடமும் பலிசேர்
தூங்கிநல்லார் பாடலோடு தொழுகழலே வணங்கித்
தாங்கிநில்லா அன்பினோடுந் தலைவ நின்றாள் நிழற்கீழ்
நீங்கிநில்லா ரிடர்களையாய் நெடுங்கள மேயவனே. 5

பாங்கின் நல்லார், படிமம் செய்வார், பாரிடமும் பலி சேர்
தூங்கி நல்லார் பாடலோடு தொழு கழலே வணங்கி,
தாங்கி நில்லா அன்பினோடும் - தலைவ! நின் தாள் நிழல்கீழ்
நீங்கி நில்லார் இடர் களையாய் - நெடுங்களம் மேயவனே!

pAgkin2 nallAr, paTimam ceyvAr, pAriTamum pali cEr
tUgki nallAr pATalOTu tozu kazalE vaNagki,
tAgki nillA an2pin2OTum--talaiva!--nin2 tAL nizal kIz
nIgki nillAr iTar kaLaiyAy--neTugkaLam mEyavan2E!

**பொருள்:** திருநெடுங்களம் மேவிய சிவபெருமானே! குணங்களில் நல்லவர்களும், தவ வேடம் தாங்கியவர்களும், பூமியில் வாழும் மக்களும், பலருடைய இல்லங்களில் பலிசேர்க்கும் உனது செயல்களில் மனம் ஒன்றுகின்றனர். நன்மையானவற்றையே செய்யும் நல்லவர்கள், பாடல்களோடு தொழத்தக்க உனது திருவடிகளை வணங்குகின்றனர். தம்மளவில் பொறுக்க இயலாத பொங்கி வருகின்ற அன்போடு, தலைவனாகிய உனது

திருவடி நிழலில் நீங்காமல் எப்போதும் இருக்கின்றனர். அந்த அடியவர்களின் துன்பங்களைக் களைந்து அருள்வாயாக.

***குறிப்புரை:*** இடையீடின்றியே திருவடிக்கண் உறைத்து நிற்கும் அன்பர் இடர்களையாய் என்கின்றது. தலைவ, நெடுங்களமேயவனே, நல்லார் செய்வார் நல்லார் பாடலொடு அன்பினோடும் நின்தாள் நிழற்கீழ் நீங்கி நில்லார் இடர்களையாய் எனக் கூட்டிப்பொருள் காண்க. பாங்கின் – குணங்களால். படிமம் – தவவேடம். தூங்கி – மனம் ஒன்றி. தாங்கி நில்லா அன்பினோடும் – தம்மளவில் பொறுக்கலாற்றாது கரை கடந்து வருகின்ற அன்போடும்.

Oh! Lord Civa! entempled in Thiru Nedungkalam! Your devotees excel in virtuous deeds. They are clad as ascetics, and some are ordinary folks of this world. All these good people sing with concentration songs in adoration of Your behaviour of getting alms from various householders. With uncontainable love and devotion, they worship Your Holy Feet. They do not flee from the shadow of Your Holy Feet. Pray, do annul the afflictions of these devotees.

விருத்தனாகிப் பாலனாகிவே தமோர் நான்குணர்ந்து
கருத்தனாகிக் கங்கையாளைக் கமழ்சடை மேற்கரந்தாய்
அருத்தனாய ஆதிதேவன டியிணையே பரவும்
நிருத்தர் கீதரிடர்களையாய் நெடுங்கள மேயவனே. 6

***விருத்தன்ஆகி, பாலன்ஆகி, வேதம்ஓர் நான்கு உணர்ந்து,***
***கருத்தன்ஆகி, கங்கையாளைக் கமழ் சடைமேல் கரந்தாய்!***
***அருத்தன்ஆய ஆதிதேவன் அடிஇணையே பரவும்***
***நிருத்தர் கீதர் இடர் களையாய் - நெடுங்களம் மேயவனே!***

viruttan2 Aki, pAlan2 Aki, vEtam Or nAn2ku uNarntu,
karuttan2 Aki, kagkaiyALaik kamaz caTaimEl karantAy!
aruttan2 Aya AtitEvan2 aTi iNaiyE paravum
niruttar kItar iTar kaLaiyAy--neTugkaLam mEyavan2E!

***பொருள்:*** திருநெடுங்களம் மேவிய சிவபெருமானே மூத்த வேடம் தாங்கியும், இளமை வடிவம் கொண்டும் இருப்பவனே! வேதங்கள் நான்கையும் நன்கு உணர்ந்த தலைவனே! கங்கை நங்கையை மனம் கமழும் சடைமேல் வைத்திருப்பவனே! கலைஞானங்கள் மெய்ஞானங்களின் பொருளான முழுமுதற் கடவுளே! உன் திருவடி சேர்ந்து போற்றிப் பாடி, ஆடும் அடியவர்களுடைய துன்பங்களைக் களைந்து அருள்வாயாக.

**குறிப்புரை:** விருத்தகுமாரபாலராகிக் கங்கையைச் சடைமேற்கரந்த பெருமானே, நின்னடி பரவும் ஆடல் பாடலை உடைய அடியார்களின் இடரைக் களைவாயாக என்கின்றது. **கருத்தனாகி** – முழுமுதற்கடவுளாகி, அருத்தன் – பொருளானவன். நிருத்தர் – ஆனந்தத்தால் **திருத்தம் செய்பவர். கீதம்** – பாடுபவர்.

Oh! Lord of Thiru Nedungkalam! At times You disguised Yourself as an elderly man; You disguised Yourself as youngster. You are the Chief well-versed in the four Vedas. In Your fragrant matted hair You have concealed the distinguished goddess of Ganga. You are the scholar erudite, the significance of all arts and spiritual wisdom. Pray! annul the afflictions of Your devotees who adore You and cling to Your feet by dancing and singing Your praise.

கூறுகொண்டாய் மூன்றுமொன்றாக் கூட்டியோர் வெங்கணையால்
மாறுகொண்டார் புரமெரித்த மன்னவனே கொடிமேல்
ஏறுகொண்டாய் சாந்தமீதென் றெம்பெருமானணிந்த
நீறுகொண்டா ரிடர்களையாய் நெடுங்கள மேயவனே. 7

கூறு கொண்டாய்! மூன்றும் ஒன்றாக் கூட்டி ஓர் வெங்கணையால்
மாறுகொண்டார் புரம் எரித்த மன்னவனே! கொடிமேல்
ஏறு கொண்டாய்! "சாந்தம் ஈது" என்று எம்பெருமான் அணிந்த
நீறு கொண்டார் இடர் களையாய் - நெடுங்களம் மேயவனே!

kURu koNTAy! mUn2Rum on2RAk kUTTi Or vegkaNaiyAl
mARu koNTAr puram eritta man2n2avan2E! koTimEl
ERu koNTAy! "cAntam Itu" en2Ru emperumAn2 aNinta
nIRu koNTAr iTar kaLaiyAy--neTugkaLam mEyavan2E!

**பொருள்:** திருநெடுங்களம் அமர்ந்திருக்கும் சிவபெருமானே! உமையம்மையைத் திருமேனியின் ஒருபாகமாகக் கொண்டவனே! திருமால் ஆகிய அம்பு, நெருப்பு, காற்று ஆகிய மூன்றையும் ஒன்றாகக் கொண்ட ஒப்பற்ற அம்பினால், பகை கொண்ட அசுரர்களின் முப்புரங்களையும் எரித்து அழித்த மன்னவனே! கொடிமீது இடபத்தை முத்திரையாகக் கொண்டவனே! மணம் பொருந்திய சந்தனம் இதுவேயாகும் என்று எம்பெருமான் அணிந்துள்ள திருநீற்றை விரும்பி அணியும் அடியவர்களின் துன்பங்களை நீக்கி அருள்வாயாக.

**குறிப்புரை:** திரிபுரம் எரித்த மன்னவனே, விடைக்கொடி உடையவனே, நீறு அணிந்த அடியார்களது இடரைக் களைக என்கின்றது. கூறுகொண்டாய் – உமாதேவியை ஒருபாகத்துக் கொண்டவனே. மூன்றும் ஒன்றாகக்கூட்டி ஓர் வெங்கணையால் – அரி, எரி, கால் என்ற மூன்றையும் ஒன்றாகக் கூட்டிய ஓர் அம்பினாலே, இதனை 'எரி காற்று அரி கோல்' என்னும் திருவீழிமிழலைப் பதிகத்தாலும் அறிக. மாறு – பகை. சாந்தம் – சந்தனம்.

Oh! Lord Civa! enshrined in Thiru Nedungkalam with Your consort Umaa Devi as a part of Your body! You are the king who destroyed with fire the three citadels of the recalcitrant Asuraas, by using Your matchless fierce arrow, which is a combination of discus, fire and air (*அரி, எரி, காற்று*). You have the figure of the bull as insignia in Your flag. Oh! Civa my Guru! Pray! annul the afflictions of Your devotees who willingly smear on their body the same holy ashes used by You, considering it as the fragrant sandal paste.

**Note:** The sons of Taarakaasura, namely Kamalaaksha, Taarakaaksha and Vidyunmaali, by their prolonged tapas, elicited boons from Brahma by praying thus: "We will move about in our aerial citadels as we like. if we are to be overtaken by death, it should be only at the hour when we meet, once in a thousand years. A single arrow alone should cause our destruction". Brahma grants them, these boons. Thus grown well-nigh invulnerable, they wrought havoc for aeons on end. Eventually Civa burnt their citadels by a single dart, when they stood in single file.

குன்றினுச்சி மேல்விளங்குங் கொடிமதில் சூழிலங்கை
அன்றிநின்ற வரக்கர்கோனை யருவரைக் கீழடர்த்தாய்
என்றுநல்ல வாய்மொழியா லேத்தியிராப் பகலும்
நின்றுநை வாரரிடர்களையாய் நெடுங்கள மேயவனே. 8

"குன்றின் உச்சிமேல் விளங்கும் கொடிமதில் சூழ் இலங்கை
அன்றி நின்ற, அரக்கர்கோனை அரு வரைக்கீழ் அடர்த்தாய்!"
என்று நல்ல வாய்மொழியால் ஏத்தி இராப்பகலும்,
நின்று நைவார் இடர் களையாய் - நெடுங்களம் மேயவனே!

"kun2Rin2 uccimEl viLagkum koTi matil cUz ilagkai,
an2Ri nin2Ra, arakkar kOn2ai aru varaikkIz aTarttAy!"
en2Ru nalla vAymoziyAl Etti, irAppakalum,
nin2Ru naivAr iTar kaLaiyAy--neTugkaLam mEyavan2E!

**பொருள்:** திருநெடுங்களம் மேவிய சிவபெருமானே! குன்றின்மேல் விளங்குவதும், கொடிகள் கட்டப்பட்டதும், மதில்களால் சூழப்பட்டதுமான இலங்கை நகரின் மன்னன் இராவணன், முன்பொருகால் கயிலை மலையைப் பெயர்க்க முயன்றான். அந்த அரக்கர் தலைவனை அம்மலையின்கீழே அடர்த்தவனே என்றெல்லாம் நல்ல தோத்திரங்களைக் கூறி, இரவும் பகலும் மனம் உருகித் தொழுகின்ற அடியார்களின் துன்பங்களை நீக்கி அருள்வாயாக.

**குறிப்புரை:** இராவணனை அடர்த்தாய் என்று தோத்திரித்து, இராப் பகலாக உருகித் தொழுகின்ற அடியார்களின் இடரைக் களைவாயாக என்கின்றது. உச்சிமேல் விளங்கும் இலங்கைக் குன்றின் – மேரு மலையில் இருந்து, வாயு தேவனால் பெயர்த்துப் வீழ்த்தப் பெற்ற சிகரங்களுள் ஒன்றாகிய இலங்கைக் குன்றின். அன்றி – கோபித்து; பகைத்து எனலுமாம். வாய்மொழி – தோத்திரம். நைவார் – மனங்களிவார்.

A Top of a hill encircled by flagged walls, Raavanan, king of Sri Lanka and Chief of Asuras abides. Once he tried to uproot mount Kailash but in vain. He got crushed under the mount Kailash when Oh Lord Civa, You pressed the mountain with Your toe. Pray! annul the afflictions of Your suffering devotees who melt in love and adore You day and night, chanting about this eventful action of Yours.

வேழவெண் கொம்பொசித்த மாலும் விளங்கிய நான்முகனும்
சூழவெங்கு நேடஆங்கோர் சோதியுளாகி நின்றாய்
கேழல்வெண் கொம்பணிந்த பெம்மான் கேடிலாப் பொன்னடியின்
நீழல்வாழ் வாரிடர்களையாய் நெடுங்கள மேயவனே. 9

வேழவெண்கொம்பு ஒசித்த மாலும், விளங்கிய நான்முகனும்,
சூழ எங்கும் நேட, ஆங்கு ஓர் சோதியுள் ஆகி நின்றாய்!
கேழல்வெண்கொம்பு அணிந்த பெம்மான்! கேடுஇலாப் பொன் அடியின்
நீழல் வாழ்வார் இடர் களையாய் - நெடுங்களம் மேயவனே!

vEza veNkompu ocitta mAlum, viLagkiya nAn2mukan2um,
cUza egkum nETa, Agku Or cOtiyuL Aki nin2RAy!"
kEzal veN kompu aNinta pemmAn2! kETu ilAp pon2 aTiyin2
nIzal vAzvAr iTar kaLaiyAy--neTugkaLam mEyavan2E!

**பொருள்:** நெடுங்களம் மேவிய சிவபெருமானே, குவலயா பீடம் என்ற யானை, கஞ்சன் என்பவனால் திருமாலைக் கொல்ல ஏவப்பட்டது. அந்த யானையின் கொம்புகளை ஒடித்தான் திருமால். அவனும், புகழ்பெற்ற நான்முகனும், சூழ்ந்துள்ள இடம் முழுவதும் தங்களைத் தேடியபோது, அவர்களுக்கு இடையில் சோதிப்பிழம்பாய் நின்றாய். பன்றியின் வெண்ணிறமான கொம்பை அணிகலனாக அணிந்த பெருமானே! அழிவற்ற உன் பொன் போன்ற திருவடி நிழலின்கீழ் வாழும் அடியவர்களின் துன்பங்களைக் களைந்தருள்வாயாக.

**குறிப்புரை:** அயனும் மாலும் தேடச் சோதியாய் நின்ற பெருமானே! நின் திருவடிக்கீழ்வாழும் அடியாரது இடரைக் களைவாயாக என்கின்றது. வேழம் – குவலயாபீடம் என்னும் யானை. கண்ணன் கம்சனால் ஏவப்பட்ட குவலயாபீடம் என்னும் பட்டத்து யானையின் கொம்பை ஒடித்தார் என்பது வரலாறு. நேட – தேட. கேழல் – பன்றி. அடியின்நீழல் வாழ்வார் – திருவடிச்சார்பே சார்பாகக் கொண்டு மற்றொன்றையும் சாராத அடியார்கள்.

Both Thirumaal who broke the white tusk of an elephant and the four faced Brahma, went in search of You, when You assumed the form of a mighty flame. Oh Lord Civa, of Nedunkalam who wears the white horn of a boar, pray remove the sufferings of Your devotees who dwell in the shadow of Your eternal golden feet.

**Note:** Mythological events in Puraanaas, recalled in this verse.

வெஞ்சொற் றஞ்சொல்லாக்கி நின்றவேட மில்லாச்சமணும்
தஞ்சமில்லாச் சாக்கியருந் தத்துவ மொன்றறியார்
துஞ்சலில்லா வாய்மொழியால் தோத்திர நின்னடியே
நெஞ்சில் வைப்பாரிடர் களையாய் நெடுங்கள மேயவனே. 10

வெஞ்சொல்-தம் சொல் ஆக்கி நின்ற வேடம் இல்லாச் சமணும்
தஞ்சம் இல்லாச் சாக்கியரும், தத்துவம் ஒன்று அறியார்;
துஞ்சல் இல்லா வாய்மொழியால்-தோத்திரம் நின் அடியே
நெஞ்சில் வைப்பார் இடர் களையாய் - நெடுங்களம் மேயவனே!

venjcol--tam col Akki nin2Ra vETam ilAc camaNum,
tanjcam illAc cAkkiyarum, tattuvam on2Ru aRiyAr;
tunjcal illA vAymoziyAl--tOttiram nin2 aTiyE
nenjcil vaippAr iTar kaLaiyAy--neTugkaLam mEyavan2E!

**பொருள்:** சமணர்கள், தமது வேடத்திற்குப் பொருந்தாத கொடுஞ்சொற்களையே தம் சொற்களாகக் கொண்டவர்கள். புத்தர்கள் நற்சார்பு இல்லாதவர்கள். சைவ சமயம் கூறும்

உண்மைப் பொருளை ஒரு சிறிதும் உணராதவர்கள். அவர்களின் உரையைவிட்டு விடுங்கள். நெடுங்களம் மேவிய சிவபெருமானே! என்றும் அழியாத புகழுடைய வேதங்களோடு தோத்திரங்களால் நின்னைப் பரவி நின் திருவடிகளை நெஞ்சில் வைப்பவர்களின் துன்பங்களைப் போக்கியருள்வாயாக.

**குறிப்புரை:** சமணரும் புத்தரும் பொருளுண்மை அறியாதவர்கள். ஆதலால் அவர்கள் உரையை விட்டு நின்னடியையே நெஞ்சில் வைப்பாரது இடர்களைவாய் என்கின்றது. வெம்சொல் – கொடுஞ்சொல். சமணர்கள் கொடுஞ்சொல்லையே எப்பொழுதும் பேசி, கொண்ட வேடத்திற்குப் பொருந்தாதிருப்பர் எனக் குறிப்பிடப்படுகிறது. தஞ்சம் – நற்சார்பு. சாக்கியர் – புத்தர். தத்துவம் – பொருளுண்மை. துஞ்சல் இல்லா – இறவாத. வாய்மொழி – வேதம்.

The Jains who employ harsh words in their routine use and behave in a manner inconsistent with their appearance, and also the Buddhists, devoid of good company – these two, know nothing about the divine knowledge explained in Saiva theology. Your devotees pay no heed to them. They adore You with the famed eternal Vedas and hold Your Holy Feet close to their hearts. Pray! annul the afflictions of these devotees and bless them.

**Note:** Vetam: The worshipful form of a devotee.

நீடவல்லவார் சடையான் மேய நெடுங்களத்தைச்
சேடர்வாழுமா மறுகிற்சிரபுரக் கோன்நலத்தால்
நாடவல்லபனு வன்மாலை ஞானசம்பந்தன் சொன்ன
பாடல்பத்தும் பாடவல்லார் பாவம் பறையுமே. 11

நீட வல்ல வார் சடையான் மேய நெடுங்களத்தைச்
சேடர் வாழும் மா மறுகின் சிரபுரக் கோன் நலத்தால்
நாட வல்ல பனுவல் மாலை, ஞானசம்பந்தன் சொன்ன
பாடல்பத்தும், பாட வல்லார் பாவம் பறையுமே.

nITa valla vAr caTaiyAn2 mEya neTugkaLattaic
cETar vAzum mA maRukin2 cirapurak kOn2 nalattAl
nATa valla pan2uvalmAlai, njAn2acampantan2 con2n2a
pATal pattum, pATa vallAr pAvam paRaiyumE.

**பொருள்:** மேலும் மேலும் நீண்டு வளரத்தக்க சடைமுடியை உடைய சிவபெருமான் எழுந்தருளி இருக்கும் தலம் திருநெடுங்களம். பெரியோர் பலர் வாழும் பெரிய வீதிகளைக்

கொண்ட சிரபுரம் என்னும் சீகாழிப் பதியின் தலைவனாகிய ஞானசம்பந்தன் இத்தலத்தின் இறைவனைப் போற்றிப் பனுவல்மாலை பாடினார். நன்மைப் பொருளால் ஆராய்ந்து உணரத்தக்க இப்பாடல்கள் பத்தையும் பாடவல்லவர்களின் பாவங்கள் நீங்கும்.

**குறிப்புரை:** இப்பாடல் பத்தும் பாடவல்லார் பாவம் பறையும் எனப் பயன்கூறுகிறது. நீடவல்லவார் சடையான் – மேலும் வளரத்தக்க நீண்ட சடையை உடையவன். சேடர் – இளைஞர். ஒவ்வொரு பாடலும் ஒவ்வொரு பனுவல்போல் பயன் விளைத்தலின் பனுவல் மாலை எனப்பட்டது.

Gnaanasambandan the noble of Sivapuram (another name of Seekaazhi) where many virtuous people live in its big streets, adored and sang the glory of Lord Civan of Thiru Nedungkalam whose matted hair is ever growing long. Those who make a deep study of the implications of these ten verses and chant them, will get rid of their sins.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*52ஆம் பதிகம் முற்றிற்று*
End of 52nd Hymn

உ
சிவமயம்

# 53. திருமுதுகுன்றம்

## திருத்தலவரலாறு:

12ம் பதிகம் பார்க்க.

## பதிக வரலாறு:

திருஎருக்கத்தம்புலியூரினின்று எழுந்தருளி பிள்ளையார் திருமுதுகுன்றத்தை அடைந்தார்கள். திருமுதுகுன்றத்தில் எழுந்தருளியிருந்த நாள்களுள் ஒருநாள் 'தேவராயும் அசுரராயும்' என்னும் இத்திருப்பதிகத்தை அருளிச் செய்தார்கள். இதனைச் சேக்கிழார் பெருமான் 'வீழ்ந்த காதலால் பலமுறை விளம்பியே' எனக் குறிப்பிடுகிறார்.

# 53. THIRU-MUTHU-KUNDRAM

## THE HISTORY OF THE PLACE

See Twelfth Hymn.

## INTRODUCTION TO THE HYMN

Starting from Erukkaththampuliyur, our saint came to Thirumuthukundram where he sang the following hymn.

This hymn indicates the supremacy of Lord Civan over everything in the cosmos. As Maanickavaachakar says "You are not anything in the Universe, and yet nothing exists in the Universe without You - ஒன்றும் நீ அல்லை; அன்றி ஒன்றில்லை". This fact is a little more explicitly expressed in this hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 53. திருமுதுகுன்றம் 53. THIRU-MUTHU-KUNDRAM

பண் : பழந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakka Raagam*
*Raagam: Aarabi*

தேவராயு மசுரராயுஞ் சித்தர்செழு மறைசேர்
நாவராயு நண்ணு பாரும் விண்ணெரி கால்நீரும்
மேவராய விரைமலரோன் செங்கண் மாலீசனென்னும்
மூவராய முதலொருவன் மேயது முதுகுன்றே. 1

தேவராயும், அசுரராயும், சித்தர், செழுமறை சேர்
நாவராயும், நண்ணு பாரும் விண் எரி கால் நீரும்
மேவர் ஆய, விரைமலரோன் செங்கண்மால் ஈசன் என்னும்
மூவர்ஆய, முதல்ஒருவன் மேயது - முதுகுன்றே.

tEvarAyum, acurarAyum, cittar, cezumaRai cEr
nAvarAyum, naNNu pArum viN eri kAl nIrum
mEvar Aya, virai malarOn2 cegkaNmAl Ican2 en2n2um
mUvar Aya, mutal oruvan2 mEyatu--mutukun2RE.

**பொருள்:** தேவர், அசுரர், சித்தர், வளம் மிகுந்த வேதங்களை ஓதும் சான்றோர்கள் ஆகியோர் உயர்மக்களாவர். நாம் வாழும் மண், ஆகாயம், நெருப்பு, காற்று, நீர் ஆகியன ஐம்பூதங்கள் ஆகும். மணம் மிக்க தாமரை மலர்மேல் வீற்றிருக்கும் நான்முகன், சிவந்த கண்களை உடைய திருமால், உருத்திரன் ஆகியவர்கள் மும்மூர்த்திகள். இவர்கள் எல்லாமாகவும், அவர்களின் தலைவராகவும் இருப்பவர் சிவபெருமான். இவர் எழுந்தருளி இருக்கும் தலம் திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** இறைவனது முழுமுதற்றன்மையை உணர்த்துகின்றது இது. செழுமறைசேர் நாவர் – அந்தணர். மேவராய – மேவி உள்ளவராகிய. மூவராய முதல் – மூவருமாய் அவர்கள் தலைவருமாய் இருக்கின்ற சிவன்.

**குருவருள்:** இப்பாடல் இறைவன் எல்லாவற்றிலும் கலந்து ஒன்றாய் இருந்து அருள் செய்யும் திறனைக் குறிக்கிறது.

Lord Civan who is entempled in Thiru-Muthu-kundram is Immanent in all. He is the All Pervasive Supreme. He is Omnipresent in everything. He is in all the

following and is also Chief of all these. Devaas, Asuraas, Siddhars (the eighteen classes of supernal beings); the virtuous people of this earth who chant the valuable divine Vedaas; The five elements - Earth, Water, Fire, Wind and Sky; the four-headed Brahma who is seated in the highly fragrant lotus flower; Thirumaal who has reddish eyes; Rudran, the chief dissolver - those three demigods known as Mummoorthi (மும்மூர்த்திகள்). Lord Civa is the Chief of all the above.

**Note:** Eesan: Guna Rudran. He is one of the Trinity. Civa is beyond the Trinity. He is Maha Rudra or Gunaa-theetha-Rudran.

The gods are Devas. Civa is Maha Deva.

பற்றுமாகி வானுளோர்க் குப்பல்கதிரோன் மதிபார்
எற்றுநீர் தீக்காலுமேலை விண்ணிய மானனோடு
மற்றுமா தோர்பல் லுயிராய் மாலயனும் மறைகள்
முற்றுமாகி வேறுமானான் மேயது முதுகுன்றே. **2**

பற்றும் ஆகி வான் உளோர்க்கு, பல்கதிரோன், மதி, பார்,
எற்று நீர், தீ, காலும், மேலைவிண், இயமானனோடு,
மற்று மாது ஓர் பல்உயிர்ஆய், மால் அயனும் மறைகள்
முற்றும்ஆகி, வேறும் ஆனான் மேயது - முதுகுன்றே.

paRRum Aki vAn2 uLOrkku, pal katirOn2, mati, pAr,
eRRu nIr, tI, kAlum, mElaiviN, iyamAn2an2OTu,
maRRu mAtu Or pal uyir Ay, mAl ayan2um maRaikaL
muRRum Aki, vERum An2An2 mEyatu--mutukun2RE.

**பொருள்:** சிவபெருமான், தேவர்களுக்குப் பற்றப்படும் பொருளாய் இருப்பவர். பல வண்ணக் கதிர்களை உடைய சூரியன், சந்திரன், பூமி, கரையை மோதும் நீர், நெருப்பு, காற்று, மேலே உள்ள ஆகாயம், உயிர் முதலியன ஆகி அட்ட மூர்த்தங்களாய் இருப்பவர் அவரே. எல்லா உயிர்களாகியும் திருமால், பிரமன், வேதங்கள் முதலான அனைத்துமாகியும் இருப்பவரும் அவரே. இவைகள் எல்லாவற்றினும் வேறானவராகியும் இருப்பவரான சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலம் திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** அட்டமூர்த்தி வடிவாயும், பல்லுயிராயும், மால் அயன் மறைகள் எல்லாம் ஆகியும் உள்ளவர்மேவிய முதுகுன்று என்கின்றது. வானுளோர்க்குப் பற்றும் ஆகி – தேவர்களுக்குப் பற்றப்படும் பொருளாகியும். எற்றுநீர் – கரையை மோதுகின்ற நீர். கால் – காற்று. மேலை விண் – மேலதாகிய

ஆகாயம். இயமானன் – புருடன். மற்று, மாது, ஓர் இம்மூன்றும் அசை, முற்றும் ஆகி – இவையெல்லாம் ஆகி. வேறும் ஆனான் – இவற்றின் வேறாயும் இருப்பவன்.

Lord Civan is the support for the Devaas. He is known as Attamoorthi (அட்டமூர்த்தி). He is immanent in the myriad rayed sun, moon and water which dashes against the earth, fire, wind, sky above the earth and in all souls. He is in all the souls in cosmos. He is one with Thirumaal, Brahma and Vedaas; but also disunited from all these. This Lord Civan is entempled in Thiru-Muthu-kundram.

**Note:** The message of this verse is this. God is all, but all is not God. The Deity is omniety. Lord Civa is Supreme, over and above all (c.f. Thiruvaachakam also - மூவர்கோன். மூவர்க்கும் மேலானோன்).

வாரிமாகம் வைகுதிங்கள் வாளரவஞ்சூடி
நாரிபாகம் நயந்து பூமேல்நான் முகன்றன்றலையில்
சீரிதாகப் பலிகொள் செல்வன் செற்றலுந் தோன்றியதோர்
மூரிநாகத் துரிவைபோர்த்தான் மேயது முதுகுன்றே. 3

வாரி, மாகம் வைகு திங்கள், வாள்அரவம், சூடி,
நாரி பாகம் நயந்து, பூமேல் நான்முகன்தன் தலையில்
சீரிது ஆகப் பலி கொள் செல்வன்; செற்றலும் தோன்றியது ஓர்
மூரி நாகத்துஉரிவை போர்த்தான்; மேயது - முதுகுன்றே.

vAri, mAkam vaiku tigkaL, vAL aravam, cUTi,
nAri pAkam nayantu, pUmEl nAn2mukan2tan2 talaiyil
cIritu Akap pali koL celvan2; ceRRalum tOn2Riyatu Or
mUri nAkattu urivai pOrttAn2; mEyatu--mutukun2RE.

**பொருள்:** கங்கை, வானகத்தே தங்கும் சந்திரன், ஒளி பொருந்திய பாம்பு ஆகியவற்றை தன் திருமுடியில் சூடியவர். உமையம்மையை ஒரு பாகமாக விரும்பி ஏற்றிருப்பவர். தாமரை மலரில் வீற்றிருக்கும் பிரமனது தலைகளில் ஒன்றைக் கொய்து அந்தத் தலை ஓட்டில் பலி ஏற்கச் செல்பவர். தன்னைச் சினந்து வந்த யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்தியவர். இந்தச் சிவபெருமான் எழுந்தருளிய தலம் திருமுதுகுன்றமாகும்.

**குறிப்புரை:** கங்கை மதி முதலியன சூடி, உமையொரு பாகனாய், பலி ஏற்றுண்ணும் பரமன் விரும்பும் இடம் முதுகுன்றம் என்கின்றது. வாரி – கங்கை. மாகம் – ஆகாயம். வாள் – ஒளி. நாரி – பெண்; உமையம்மை. செற்றலும் – கோபித்தலும், மூரி நாகம் – வலிய யானை.

Lord Civan adorns Himself, wearing in His matted hair, the river Ganges, the moon that roams in the sky and the dazzling snake. With all love and affection to His consort Umaa Devi, He accommodated her on the left portion of His body. He snipped one of Brahma's heads, and went around to get alms in that skull; He killed the angry elephant, which charged towards Him with intent to kill. He stripped its skin and covered His body with that skin. This Lord Civan is entempled in Thiru- Muthu-kundram.

பாடுவாருக் கருளுமெந்தை பனிமுதுபௌ வமுந்நீர்
நீடுபாரு முழுதுமோடி யண்டர்நிலை கெடலும்
நாடுதானு மூடுமோடி ஞாலமு நான்முகனும்
ஊடுகாண மூடும்வெள் ளத்துயர்ந்தது முதுகுன்றே. 4

பாடுவாருக்கு அருளும் எந்தை - பனி முதுபௌவ-முந்நீர்
நீடு பாரும் முழுதும் ஓடி அண்டர் நிலைகெடலும்,
நாடுதானும் ஊடும்ஓடி, ஞாலமும் நான்முகனும்
ஊடு காண, மூடும் வெள்ளத்து உயர்ந்தது - முதுகுன்றே.

pATuvArukku aruLum entai--pan2i mutupauva--munnIr
nITu pArum muzutum OTi aNTar nilaikeTalum,
nATutAn2um UTum OTi, njAlamum nAn2mukan2um
UTu kANa, mUTum veLLattu uyarntatu--mutukun2RE.

**பொருள்:** தன்னைப் பாடி போற்றுவார்க்கு அருள்செய்யும் எம் தந்தையாகிய சிவபெருமான் எழுந்தருளிய தலம் திருமுதுகுன்றம் ஆகும். குளிர்ந்த பழமையான கடலானது, நீண்ட மண் உலகிலும், தேவர் உலகிலும் பரவி, அவர்களின் இருப்பிடங்களை அழித்தது. நாடுகளிலும் அவற்றின் இடையிலும் ஓடியது. பூமியில் உள்ளாரும், நான்முகன் முதலிய தேவரும் உயிர் பிழைக்க வழி தேடும்படி ஊழி வெள்ளமாய் பெருகிய காலத்திலும் அழியாது உயர்ந்து நின்ற தலம் திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** பாடும் அடியார்க்கருளும் எந்தை எழுந்தருளியுள்ளது ஊழிக்காலத்தும் அழியாத முதுகுன்றே என்கின்றது. பனி முது பௌவம் – குளிர்ந்த தொன்மையான கடல். பார் – பூமி. அண்டர் – தேவர்.

நாடுதானும் ஊடும் ஓடி – நாடுகளிலும், அவற்றின் இடையிலும் பரந்து. ஊடுகாண – இடைவெளி காண. ஊழியிலுயர்ந்த குன்று என்றது.

Lord Civan graces those who sing His praise and adore Him. During the great final deluge, water in the very old extensive cool sea spread on the earth, into the world of Devas, destroyed their abodes, gushed into the nook and corner of the entire earth. People on the earth, the four headed Brahma and all the Devass, homeless, ran helter-skelter to save their lives. Even at this stage Thiru-Muthu-kundram was unaffected and stood aloft from the rest of the universe.

வழங்குதிங்கள் வன்னிமத்த மாசுணமீசணவிச்
செழுங்கல் வேந்தன் செல்விகாணத் தேவர்திசை வணங்கத்
தழங்கு மொந்தை தக்கைமிக்க பேய்க்கணம் பூதஞ்சூழ
முழங்கு செந்தீயேந்தியாடி மேயது முதுகுன்றே. 5

வழங்கு திங்கள், வன்னி, மத்தம், மாசுணம், மீசு அணவி,
செழுங் கல்வேந்தன்செல்வி காண, தேவர் திசை வணங்க,
தழங்கு மொந்தை, தக்கை, மிக்க பேய்க்கணம் பூதம் சூழ,
முழங்கு செந்தீ ஏந்தி ஆடி மேயது - முதுகுன்றே.

vazagku tigkaL, van2n2i, mattam, mAcuNam, mItu aNavi,
cezug kalvEntan2 celvi kANa, tEvar ticai vaNagka,
tazagku montai, takkai, mikka pEykkaNam pUtam cUza,
muzagku centI Enti ATi mEyatu--mutukun2RE.

**பொருள்:** சிவபெருமான், வானத்தில் சஞ்சரிக்கும் சந்திரன், வன்னி இலை, ஊமத்தம்பூ, பாம்பு ஆகியவற்றைத் தன் திருமுடிமீது நெருக்கமாகச் சூடியிருக்கின்றார். மலையரசன் மகளாகிய உமையம்மை காண, தேவர்கள் எல்லாத்திசையிலும் நின்று அவரை வணங்குகின்றனர். மொந்தை, தக்கை ஆகிய பறைகள் ஒலிக்கின்றன. பூதங்கள் சூழ்ந்து இருக்கின்றன. அந்தச் சிவபெருமான் முழங்கும் செந்தீயைக் கையில் ஏந்தியபடி ஆடி அமர்ந்த தலம் திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** பாம்பு, மதி முதலியவற்றைச் சூடிக் கொண்டு மலைமகள் காண இறைவன் அடியமர்ந்த இடம் முதுகுன்றம் என்கின்றது. வழங்கு திங்கள் – வான மண்டலத்து ஊடறுத்துச் செல்லும் சந்திரன். வன்னி – வன்னிமரத்து இலை. மாசுணம் – பாம்பு. மீசனவி – சிரத்தின்மேற்கலந்து. செழுங்கல் வேந்தன் –

வளப்பமான மலையரசன். தழங்கும் – ஒலிக்கின்ற. மொந்தை – ஒரு முகப்பறை வகைகளில் ஒன்று. தக்கை – இருமுகப்பறை வகையில் ஒன்று. உடுக்கையும் ஆம்.

Lord Civa wears in His matted hair, close to each other, the moon that sojourns in the sky, the leaves of the sumaa tree (Prosopis spicigera - *வன்னிமரம்*) and Datura flowers (*ஊமத்தம்பூ*). He dances holding the red hissing and flaming fire, surrounded by Bhuta ghosts and goblins, to the accompaniment of music from instruments known as Monthai, Thakkai (*மொந்தை - ஒரு முகப்பறை; தக்கை - இரு முகப்பறை*). Umaa Devi looks on this dance with awe while the Devas worship Lord Civan from all directions of their world. This Lord Civan is entempled in Thiru-Muthu-kundram.

**Note:** Monthai: The modern musical instrument called Gatam.

Thakkai: It is a percussion instrument still in vogue in Srirangam Ranganaathar Temple. There is a Ramayana called 'Takkai Ramayanam' which was recited to the beat of Takkai.

சுழிந்தகங் கைதோய்ந்த திங்கட்டொல்லரா நல்லிதழி
சழிந்தசென் னிச்சைவவேட ந்தான் நினைத்தைம்புலனும்
அழிந்த சிந்தையந்தணாளர்க்கறம் பொருளின்பம்வீடு
மொழிந்த வாயான் முக்கணாதி மேயது முதுகுன்றே. 6, 7

சுழிந்த கங்கை, தோய்ந்த திங்கள், தொல் அரா, நல் இதழி,
சழிந்த சென்னி சைவவேடம் தான் நினைத்து, ஐம்புலனும்
அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு அறம்பொருள்இன்பம்வீடு
மொழிந்த வாயான், முக்கண்ஆதி, மேயது - முதுகுன்றே.

cuzinta kagkai, tOynta tigkaL, tol arA, nal itazi,
cazinta cen2n2i caivavETam tAn2 nin2aittu, aimpulan2um
azinta cintai antaNALarkku aRam poruL in2pam vITu
mozinta vAyAn2, mukkaN Ati, mEyatu--mutukun2RE.

**பொருள்:** சுழிகளோடு கூடிய கங்கை, அதனோடு உறையும் சந்திரன், பழமையான பாம்பு, நல்ல கொன்றை மலர் ஆகியன அணிந்த நெருங்கிய தலை உச்சியை உடையவன் சிவபெருமான். தாழ் சடை, வெண்ணீறு, தாழ்வடம் முதலிய சைவ முனிவர் வேடத்தோடு திருவடிகளை நினைவில் நிறுத்தி, ஐம்புலன்களால் தோன்றும் எண்ணங்களை முற்றிலும் அழித்த சான்றோர்களுக்கு, அறம், பொருள், இன்பம், வீடு ஆகியவற்றை உபதேசித்த

திருவாயினன். முக்கண் உடையவன். அந்தச் சிவபெருமான் எழுந்தருளியிருக்கும் தலம் திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** கொன்றை, மதி, கங்கை முதலியன அணிந்த சென்னியோடு அந்தணர்க்கு அருமறைகளை உபதேசித்த இறைவன் மேயது திருமுதுகுன்றம் என்கின்றது. கழிந்த – கழிகளோடு கூடிய. தொல் அரா – பழம் பாம்பு. இதழி – கொன்றை. சழிந்த – நெருங்கிக் கிடக்கின்ற. சைவ வேடம் – தாழ்சடை வெண்ணீறு தாழ்வடம் முதலிய முனிவர் வேடத்தோடு. தாள் இணைத்து – கால்களைப் பதுமம் முதலிய ஆசன வகைகள் பொருந்தப் பின்னி. அழிந்த – செயலற்றுப் போன. சென்னி, வாயான், ஆதி மேயது எனக் கூட்டிப் பொருள் காண்க.

**குருவருள்:** 'கழிந்த கங்கை தோய்ந்த திங்கள் தொல்அரா நல்லிதழி, சழிந்த சென்னிச் சைவ வேடம் தான் நினைந்து ஐம்புலனும் அழிந்த சிந்தை அந்தணாளர்க்கு' என்ற பாடம் புதுவை பிரெஞ்சு இந்தியக் கலை நிறுவன ஆய்வுப் பதிப்பில் காணப்படுகிறது. இது சிறப்பாய் உள்ளது. 'சைவ வேடம் தாள் நினைந்து' என்பதிலும் சைவ வேடத்தையும் தாளையும் நினைத்து ஐம்புலனும் அழிந்த சிந்தை அந்தணாளர் என்பதும் சிறக்கிறது. தாள் இணைத்து என்பதில் சிறப்புத் தோன்றவில்லை.

The four Supernal aascetics - Sanakar and his three comrades (*சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர்*) who have subdued the five senses and mind were attracted by the divine Saiva posture and the lotus like Holy Feet of the three eyed primal Lord Civan and approached and requested Him to instruct them in the intricate knowledge of Virtue, Wealth, Happiness and Salvation (*அறம், பொருள், இன்பம் மற்றும் வீடு*). Lord Civan took the form of Dakshinaa Moorthy (*தக்ஷிணாமூர்த்தி*) and imparted the knowledge they wanted. With this graceful form the three-eyed Civan is entempled in Thiru- Muthu-kundram.

மயங்குமாயம் வல்லராகி வானினொடு நீரும்
இயங்குவோருக் கிறைவனாய இராவணன் தோள்நெரித்த
புயங்கராகமா நடத்தன் புணர்முலை மாதுமையாள்
முயங்குமார் பன்முனிவரே த்தமேயது முதுகுன்றே. 8

*மயங்கு மாயம் வல்லர் ஆகி, வானினொடு நீரும்*
*இயங்குவோருக்கு இறைவன்ஆய இராவணன் தோள் நெரித்த*
*புயங்க ராக மா நடத்தன், புணர்முலை மாதுஉமையாள்*
*முயங்கு மார்பன், முனிவர் ஏத்த மேயது - முதுகுன்றே.*

mayagku mAyam vallar Aki, vAn2in2oTu nIrum
iyagkuvOrukku iRaivan2 Aya irAvaNan2 tOL neritta
puyagka rAka mAnaTattan2, puNar mulai mAtu umaiyAL
muyagku mArpan2, mun2ivar Etta mEyatu--mutukun2RE.

**பொருள்:** சிவபெருமான் அறிவை மயங்கச் செய்யும் மாயத்தில் வல்லவராய் இருப்பவர். வானிலும் நீரிலும் இயங்குகின்ற அரக்கர்களுக்குத் தலைவனான இராவணனின் தோளை நெரித்தவர். பாம்பு நடனத்தில் விருப்பமுடையவர். இணைந்த முலையை உடைய உமையம்மையைத் தழுவிய மார்பினர். இப்பெருமான் முனிவர்கள் துதிக்க எழுந்தருளிய தலம் திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** மாயம் வல்லராய், வானிலும் நீரிலும் இயங்குகின்ற அரக்கர்களுக்குத் தலைவனாகிய இராவணனை அடக்கிய புஜங்க நடனத்தினராகிய இறைவன் முனிவர்கள் வந்து அடி வணங்க மேயது முதுகுன்றம் என்கின்றது. புயங்கராக மா நடத்தன் – பாம்பு நடனத்தில் விருப்புடையன். புணர் முலை – இணைந்த முலை.

Raavanan, the king of Sri Lanka is the chief of Asuraas. He is an adept in several acts which will confuse one's knowledge. He will travel with ease in the sky and over the water in the sea. Lord Civan once crushed Raavanaa's shoulders by His valour. He is the master of the great snake dance. He who embraced Umaa Devi of closeted breasts; this Lord Civan, hailed by ascetics is gracefully enshrined in Thiru- Muthu-kundram.

ஞாலமுண்ட மாலுமற்றை நான்முகனு மறியாக்
கோலமண்டர் சிந்தை கொள்ளாரா யினுங்கொய் மலரால்
ஏலஇண்டை கட்டி நாமமிசைய எப்போது மேத்தும்
மூலமுண்ட நீற்றர் வாயான் மேயது முதுகுன்றே. 9

ஞாலம் உண்ட மாலும் மற்றை நான்முகனும்(ம்) அறியாக்
கோலம் அண்டர் சிந்தைகொள்ளார் ஆயினும், கொய் மலரால்
ஏல இண்டை கட்டி, நாமம் இசைய எப்போதும் ஏத்தும்
மூல முண்ட நீற்றர் வாயான் மேயது - முதுகுன்றே.

njAlam uNTa mAlum maRRai nAn2mukan2um(m) aRiyAk
kOlam aNTar cintaikoLLAr Ayin2um, koy malarAl
Ela iNTai kaTTi, nAmam icaiya eppOtum Ettum
mUla muNTa nIRRar vAyAn2 mEyatu--mutukun2RE.

**பொருள்:** உலகங்களை உண்ட திருமாலும், நான்முகனும் அறிய முடியாத சிவபெருமானது திருக்கோலத்தைத் தேவர்களாலும் அறிய முடியவில்லை. ஆயினும், நாள்தோறும் கொய்த மலர்களைக் கொண்டு இண்டை வகையான மாலைகள் தொடுத்து, திருவைந்தெழுத்தையே மனம் பொருந்தச் சொல்பவரும், ஆணவ மலத்தை அழிக்கும் திருநீற்றைப் பூசியவர்களின் வாயில் நாம மந்திரமாக உறைந்திருக்கின்றார். அப்பெருமான் எழுந்தருளிய தலம் திருமுதுகுன்றம் ஆகும்.

**குறிப்புரை:** அயனும் மாலும் அறியாத வடிவைத் தேவர்கள் மனங்கொள்ள மாட்டாராயினும் ஆணவவலி கெடுத்த அடியார்கள் மலர்மாலை கட்டி வழிபடும் இடம் முதுகுன்றம் என்கின்றது. கோலம் – விண்ணும் பாதலமும் ஊடுருவி நின்ற தீப்பிழம்பாகிய வடிவம். ஏல – பொருந்த; நாமம் – திருவைந்தெழுத்து மூலம் உண்ட நீற்றர் – மூலமலமாகிய ஆணவத்தின் வலிகெடுத்த திருநீற்றினை உடைய அடியவர்கள். வாயான் – வாயில் நாம மந்திரமாக உறைபவன்.

Thirumaal who swallowed the worlds and the four headed Brahma could not perceive the holy posture of Lord Civan. The Devaas also could not do this. The devotees of Lord Civan daily gather flowers, string garlands for headwear (இண்டை) and for other purposes, chant in all propriety His hallowed name smear their body with the holy ashes which will destroy the three impurities of the soul and with the mystic words chanted wholeheartedly hail Lord Civan. This Lord Civan is entempled in Thiru-Muthu-kundram.

**Note:** **Mulam** - The root. Root cause of birth cycles.

உறிகொள் கையர்சீவரத் தருண்டுழல் மிண்டர் சொல்லை
நெறிகளென்ன நினைவுறாதே நித்தலுங் கைதொழுமின்
மறிகொள் கையன்வங்க முந்நீர்ப் பொங்குவிடத்தையுண்ட
முறிகொள் மேனிமங்கை பங்கன்மேயது முதுகுன்றே. 10

உறி கொள் கையர், சீவரத்தர், உண்டு உழல் மிண்டர் சொல்லை
நெறிகள் என்ன நினைவு உறாதே நித்தலும் கைதொழுமின்!
மறி கொள் கையன் வங்க முந்நீர் பொங்கு விடத்தை உண்ட
முறி கொள் மேனி மங்கை பங்கன் மேயது - முதுகுன்றே.

uRi koLkaiyar, cIvarattar, uNTu uzal miNTar collai
neRikaL en2n2a nin2aivu uRAtE nittalum kaitozumin2!
maRi koL kaiyan2, vagka munnIr pogku viTattai uNTa
muRi koL mEn2i magkai pagkan2; mEyatu--mutukun2RE.

**பொருள்:** சமணர்கள் கமண்டலத்தைக் கயிற்றில் கட்டித் தூக்கி வைத்திருப்பவர்கள். புத்தர்கள் காவி ஆடை அணிந்திருப்பவர்கள். அவர்கள் பெருந்தீனி தின்று உடல் வலிமை பெற்று அலைபவர்கள். அவர்களின் சொற்களைக் கேளாதீர்கள். மானை ஏந்திய கையினனும், கப்பல்கள் ஓடும் கடலில் இருந்து பொங்கி எழுந்த விடத்தை உண்டவனும், தளிர்போன்ற மேனியை உடைய உமையம்மையை ஒரு கூறாக உடையவனும் ஆகிய சிவபெருமான் எழுந்தருளிய தலம் திருமுதுகுன்றம் ஆகும். அத்திருத்தலத்தை நாள்தோறும் சென்று வணங்குவீராக.

**குறிப்புரை:** சமணர் புத்தர் சொற்களைக் கேளாதீர்கள்; இறைவனை நித்தம் தொழுங்கள்; அவ்விறைவன் மேயது முதுகுன்றே என்கின்றது. உறி – சமணர்கள் குண்டிகை வைத்திருக்கும் கயிற்றுறி. சீவரம் – மஞ்சளாடை. மிண்டர் – உடல் வலிமை உடையவர். வங்க முந்நீர் – கப்பலோடுங் கடல்; என்றது கடல் என்ற பொதுமைபற்றி வந்த அடைமொழி. முறி – தளிர்.

The Jains carry their water pot in a sling (உறி); the Buddhists dress themselves in red ochre - both lead lives of eating and wandering. Ye companions! do not consider what they say as real knowledge. Lord Civan holds a deer in one of His hands. He swallowed the venom that surged from the sea where merchant ships move now and then. He is concorporated with His consort Umaa Devi whose body is soft as tender leaves. This Lord Civan abides in Thiru-Muthu-kundram. Worship Him in this sacred place.

மொய்த்து வானோர் பல்கணங்கள் வணங்கு முதுகுன்றைப்
பித்தர்வேடம் பெருமையென்னும் பிரமபுரத்தலைவன்
* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *
* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * 11

மொய்த்து வானோர் பல்கணங்கள் வணங்கு முதுகுன்றை,
பித்தர் வேடம் பெருமை என்னும் பிரமபுரத் தலைவன்
* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *
* * * * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

moyttu vAn2Or palkaNagkaL vaNagkum mutukun2Rai,
pittarvETam perumai en2n2um piramapurat talaivan2
* * * * * * * * * * * * * * * * * * * * * * * * *
* * * * * * * * * * * * * * * * * * * * * * * * *

**பொருள்:** தேவர்கள் கணங்கள் பலவும் நிறைந்து செறிந்து வணங்கும் திருமுதுகுன்றப் பெருமானாகிய சிவபெருமானை, பித்தர்போலத் தன் வயம் இழந்து தியானம் செய்யும் தவத்தினரது வேடம் பெருமை தருகிறது. இது பிரமபுரத்தலைவனாகிய ஞானசம்பந்தனது கருத்தாகும்.

**குறிப்புரை:** பித்தர் வேடம் பெருமை என்னும் – சிவபோதமிகுதியால் பித்தரைப்போல இருப்பார் வேடம் பெருமை தருவதாகும் என்னும் . . . .

Gnaanasambandan, the chief of Piramaapuram, considers those who roam about as frenzied people without any consciousness of their selves. They feel great and proved of them. The devaas and other celestials come in large numbers to worship the Lord of Thiru-Muthu-kundram.

**Note:** The eleventh verse in Tamil is incomplete.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*53ஆம் பதிகம் முற்றிற்று*
End of 53rd Hymn

உ
சிவமயம்

# 54. திருவோத்தூர்

## திருத்தலவரலாறு:

திருவோத்தூர் என்ற திருத்தலம் தொண்டை நாட்டுத் தலம் ஆகும். வட ஆற்காடு மாவட்டம் செய்யாறுக்கு அருகில் உள்ளது. காஞ்சிபுரத்தில் இருந்து பேருந்துகளில செல்லலாம்.

இது திருவத்தூர் என வழங்குகிறது. இறைவன் தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் வேதத்தை அருளிச் செய்தமையால் இப்பெயர் பெற்றது. சம்பந்த சுவாமிகள் எழுந்தருளியபோது கோயிலைப் பராமரித்து வந்த சிவனடியார் ஒருவர் கோயில் நிலங்களில் பனை வைத்து வளர்த்தார். அவை ஆண் பனையாயின. சமணர்கள் பரிகசித்தனர். அதைக் கண்டு வருந்திச் சுவாமிகளிடம் விண்ணப்பித்தார். திருஞானசம்பந்தர் பதிகம் பாடி, திருக்கடைக் காப்பில் 'குரும்பை ஆண் பனை ஈன்குலை ஒத்தூர்' என்று அருளியபோது அவை பெண் பனைகளாயின. ஆலயத்தில் பனை உருவம் பிரதிட்டை செய்யப்பட்டுப் பூசிக்கப் பெற்று வருகிறது. சிவாலயத்து உள்ளேயே ஆதிகேசவப் பெருமாள் சந்நிதியும் இருக்கிறது.

சுவாமி வேதநாதர். அம்மை இளமுலை நாயகி. தீர்த்தம் சேயாறு (வேத தீர்த்தம்).

## கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றிய கல்வெட்டுக்கள் 29 உள்ளன. அவற்றுள் இராஜாதிராஜன், குலோத்துங்கன், இராஜேந்திரன், பொத்தப்பிச் சோழன், முதலாம் இராஜராஜன், மூன்றாம் இராஜராஜன், விக்கிரமசோழன் ஆகிய சோழ மன்னர்கள் காலத்தனவும், சுந்தரபாண்டியன், வீரபாண்டியன் காலத்தனவும், கோப்பெருஞ்சிங்கன் காலத்தனவும், இராஷ்டிரகூட கன்னரதேவன் காலத்தனவும் ஆக அமைந்துள்ளன. இறைவன் பெயர் வேதபுரீசுவரர் எனவும், ஒத்தூர் உடைய நாயனார், எனவும் வழங்கும். கோயில் வழிபாட்டிற்கும் நிவேதனத்திற்கும், அருச்சகர்களுக்கும் நிலமளித்த செய்திகளும், பூந்தோட்டத்திற்கு நிலமளித்த செய்திகளும் அறிவிக்கப் பெறுகின்றன. விளக்கிற்காகப் பசுக்கள் வாங்கி விடப்பெற்றமையைத் தெரிவிக்கின்றன. சிறப்பாக, விளையாட்டாக வேட்டைக்குச் சென்ற ஒருவன் எய்த அம்பு குறிதவறி ஒரு மனிதன்மேல் பட்டுவிட, அதற்காகத் திருஓத்தூர் சபையாரைக் கூட்டி, குற்றத்தைக் கூறி, சபை விதித்த வண்ணம் குற்றத்தண்டமாகக் கோயிலுக்கு 16 பசுக்களை வாங்கிக் கொடுத்து விளக்கிடச் செய்தான். விக்கிரம சோழன் (கி.பி. 1118–1135) காலத்து வெள்ளம் புகுந்து விளைச்சல் அழிந்ததால்

குடிகளுக்கு வரிகட்ட முடியாமல் போக இரண்டாயிரம் குழி நிலத்தை 25 காசிற்கும், 4450 குழி புன்செய்யை 20 காசிற்கும் கோயிலுக்கு விற்று இறையிலி செய்தான். மூன்றாம் குலோத்துங்கன் பொன் ஆபரணங்கள் அளித்திருக்கின்றான். அதே கோயிலில் சிதம்பரேசுவர ஆலயம் ஒன்று இருப்பதாக அறியப்படுகிறது. கேதாரி நாதர் மடம் என்ற ஒன்று குறிப்பிடப் பெறுகிறது.

**பதிக வரலாறு:**

நடுநாட்டு யாத்திரையிலே, சிரபுர வேந்தராகிய பிள்ளையார் திருவண்ணாமலையை வழிபட்டு, திங்கள்முடியார் இனிது அமர்ந்த திருவோத்தூரை அடைந்து, இறைவனை வணங்கி எழுந்தருளி இருக்குங்காலத்து, ஒருநாள் அடியார் ஒருவர் வந்து அழுது கொண்டே வணங்கினார். பிள்ளையார் "காரணம் என்னை ?" என்று வினாவ, அவர், 'அடியேன் இறைவனுக்காக வைத்த பனைகள் எல்லாம் ஆண் பனைகளாய்க் காயாவாயின. அதனைக் கண்ட சமணர்கள், நீர் வைத்த பனைகள் காய்க்குமோ ?' என்று ஏளனம் செய்தனர் என்று விண்ணப்பித்துக் கொண்டார். அதனைக் கேட்ட பிள்ளையார், கோயிலை அடைந்து, 'பூத்தேர்ந்தாயன' என்னும் இப்பதிகத்தைத் தொடங்கி முடித்து, பதினொராந் திருப்பாட்டில் 'குரும்பை யாண்பனை யீன்குலை ஓத்தூர்' என்று திருக்கடைக்காப்பு அருளியபோது அப்பனைகள் எல்லாம் குலை தள்ளின. அடியார்கள் களித்தனர். வியந்தனர். இதனைக் கண்ட சமணரிற் சிலர் தமது கையில் இருந்த குண்டிகையைத் தகர்ந்தெறிந்து இறைவன் கருணையைப் போற்றிச் சைவராயினர். சிலர் அந்நாட்டை விட்டு அஞ்சி ஓடினர். குலையீன்ற ஆண்பனைகள் தமது கால எல்லைவரை வாழ்ந்து பிறவி ஒழிந்து சிவத்தைச் சார்ந்தன.

## 54. THIRU-OOTH-THOOR

### THE HISTORY OF THE PLACE

This sacred place is in Thondai Naadu, near Cheyyaaru in North Aarkkaadu district. It can be reached by bus from Kaanchipuram. This place got its name from the event of the Lord teaching the Vedhaas to the celestials and sages here. Now the place is known as Thiruvaththoor.

The name of the Lord is Vedhanaathar and that of the Goddess is Ilamulainaayaki. Inscriptions name the Lord as Vedhapureesuvarar and Oththoor Udiaya Naayanaar. The sacred ford is Cheyyaaru (Vedhatheerththam).

There is an interesting legend associated with this temple. A devotee of Siva who was the caretaker of the temple had been growing palm trees in the temple lands. As they matured they proved to be all 'male' palms, incapable of bearing fruit. Certain Jains mocked him on this account. As Saint Thiru-Gnaana-sambandhar was visiting the temple at that time, the frustrated devotee told him of the palm trees. The saint then sang a decad in praise of the Lord and in the last verse of that decad, added, '... **kurumbai aanpanai eenkulai Oththoor** ...'. At this, the male palms turned into female palms and started bearing fruits. Thus the icon of a palm is installed in the temple and being offered worship.

A shrine for Aadhikesavapperumaal is with the Siva temple.

The 28 inscriptions in this temple are from the times of many Chola kings and some Paandiyan kings in addition to Kopperunjchingan and Raashtrakoota Kannaradhevan. Most of the information from these pertain to gift of land for temple services, food offerings, flower gardens and grants for priests. They speak of the gift of cows for lamps and of gold ornaments.

An interesting episode from the inscriptions pertains to the case of a man shooting another with an arrow by mistake while hunting playfully. The village assembly of Thiru Oththoor met to consider the case and ruled that the man guilty of the accidental shooting should buy and donate 16 cows for lamp lighting at the temple. During the reign of Vikkirama Cholan flooding ruined the crops and the king sold vast acres of dry land to the temple for a pittance and made that land tax-free.

A Chidhambaresuvara shrine is noted to have been inside the temple and a Kethaarinaathar Matam is also mentioned.

## INTRODUCTION TO THE HYMN

When our Saint arrived at Thiru Ooththoor from Thiruvannaamalai, a devotee of Civa came before him and wept bitterly. When our saint bade him to disclose the reason for his weeping, he said: "I reared palmyra trees for Civa, they proved to be male trees. At their inability to yield, the Jains jeer at me". Hearing this our Saint

proceeded to the shrine of Civa and hailed him in song in solemn strain. The last verse declares thus: "Behold, Ooththoor where male palmyra trees yield kurumpais!". At this, profuse bunches of kurumbais appeared in all the trees. Some of the Samanars became Saivites. Others abandoned the town in sheer dread.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 54. திருவோத்தூர் 54. THIRU-OOTH-THOOR

பண் : பழந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakkaraagam*
*Raagam: Aarabi*

பூத்தேர்ந் தாயனகொண்டு நின்பொன்னடி
ஏத்தாதா ரில்லையெண் ணுங்கால்
ஓத்தூர் மேயவொளி மழுவாளங்கைக்
கூத்தீரும் மகுணங்களே. 1

*பூத் தேர்ந்து ஆயன கொண்டு நின் பொன்அடி*
*ஏத்தாதார் இல்லை, எண்ணும்கால்-*
*ஓத்தூர் மேய ஒளி மழுவாள் அங்கைக்*
*கூத்தீர்! - உ(ம்)ம குணங்களே.*

pUt tErntu Ayan2a koNTu, nin2 pon2 aTi
EttAtAr illai, eNNugkAl--
OttUr mEya oLi mazuvAL agkaik
kUttIr!--u(m)ma kuNagkaLE.

**பொருள்:** திரு ஓத்தூரில் அழகிய கையில் ஒளி பொருந்திய மழுவாகிய வாளை ஏந்தியவராய் எழுந்தருளியிருக்கும் கூத்தராகிய சிவபெருமானே! ஆராய்ந்து பார்க்கையில், பூசைக்குரிய நறுமலர்களைத் தேர்ந்து பறித்தும், ஏனைய உபகரணங்களைச் சேகரித்துக் கொண்டும், உம் குணநலன்களைப் போற்றியும், பொன் போன்ற திருவடிகளைப் போற்றியும், எல்லோரும் வணங்குகின்றனர்.

**குறிப்புரை:** ஓத்தூர் மேய கூத்தரே, பூவேந்தி உம் பொன்னடி போற்றாதார் இல்லை என்கின்றது. பூதேர்ந்து – வண்டு, ஈக்கடி எச்சம், முடக்கு முதலிய குற்றமில்லாத பூக்களை ஆராய்ந்து, ஆயன – பூசைக்கு வேண்டிய உபகரணங்கள்.

Oh! Lord Civa the dancer! You abide in Oo-th-thoor, holding the battle axe in one of Your hands. When we think of Your greatness, the fact comes to our mind, that

there is none who does not adore and worship Your golden feet with selected choice flowers and other adornments.

Note: Ooththoo: Ooththu means Vedas (confer Thirukkural - Ooththu is scriptures). It is Vedapuram. "At Oththoor" says our saint, "there is none that fails to hail Your golden feet ...". The hailing includes the recitation of Vedic hymns.

இடையீர் போகா இளமுலை யாளையோர்
புடையீரே புள்ளி மானுரி
உடையீரே யும்மையேத் துதுமோத்தூர்ச்
சடையீரே யும தாளே. 2

இடை ஈர் போகா இளமுலையாளை ஓர்-
புடையீரே! புள்ளி மான்உரி
உடையீரே! உம்மை ஏத் துதும் - ஓத்தூர்ச்
சடையீரே! - உம தாளே.

iTai Ir pOkA iLamulaiyALai Or--
puTaiyIrE! puLLimAn2 uri
uTaiyIrE! ummai Ettutum--OttUrc
caTaiyIrE!--uma tALE.

**பொருள்:** திரு ஓத்தூரில் சடைமுடியோடு விளங்கும் இறைவனான சிவபெருமானே! ஈர்க்கு இடையில் செல்லாத நெருக்கமான இள முலைகளை உடைய உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டவரே! புள்ளிமான் தோலை ஆடையாக அணிந்தவரே! உம்மை வணங்குகிறோம்.

**குறிப்புரை:** இளமுலையுமையாள் பாகரே, மான்தோல் உடையீரே, உம்மை வணங்குகிறோம் என்கின்றது. இடையீர் போகா இளமுலை – இரண்டு முலைகளுக்கும் இடையில் ஈர்க்கு நுழையாத இளமுலை. 'ஈர்க்கிடைபோகா இளமுலை' என்ற திருவாசகமும் நோக்குக. புடையீர் – பக்கத்துடையவரே!

Oh! Lord Civa! having matted hair! You have accommodated in Your body Your consort Umaa Devi whose breasts are so big and young, that even the rib of a palm leaf (ஈர்க்கு) cannot pass in between them. You have worn the skin of a spotted deer. We worship Your Holy Feet.

Note: Eerkku: Rib of a palm leaf. The description is "between whose young breasts an eerkku cannot pass". This indeed is a stock comparison. Vide Thiruvaachakam, Potrithiruvakaval, line 34 (Eerkku itai pokka ila mulai).

உள்வேர் போலநொடி மையினார்திறம்
கொள்வீ ரல்குலோர் கோவணம்
ஒள்வா ழைக்கனி தேன்சொரி யோத்தூர்க்
கள்வீரே யும காதலே. 3

*உள்வேர் போல நொடிமையினார் திறம்*
*கொள்வீர், அல்குல் ஓர் கோவணம்!*
*ஒள் வாழைக்கனி தேன் சொரி - ஒத்தூர்க்*
*கள்வீரே! உம காதலே!*

uLvEr pOla noTimaiyin2Ar tiRam
koLvIr, alkul Or kOvaNam!
oL vAzaikkan2i tEn2 cori OttUrk
kaLvIrE! uma kAtalE!

***பொருள்:*** ஒளி சிறந்த வாழைக் கனிகள் தேன் போன்ற சாற்றைச் சொரியும் திருவோத்தூரில் அரையிற் கோவணம் உடுத்தியவராய் விளங்கும் கள்வரே, உம் காதல் மிக நன்று. பொய் பேசும் இயல்பினராய் அடியார்களை நினைப்பவரைப் போலக் காட்டி அவரை ஏற்றுக் கொள்வீர்.

***குறிப்புரை:*** ஓத்தூர்க் கள்ளரே! உம்முடைய காதல் நன்றாயிருக்கிறது என்கின்றது. உள்வேர் போல – நினைப்பீர்போல. உள்வீர் என்பதும் பாடம். நொடிமையினார்திறம் – பொய்யாகப் பேசுபவருடைய தன்மையை. அல்குல் – அரை.

Oh! Lord Civa! You behave like a holdup man! Your way of showing Your attachment to Your devotees is funny indeed! You show Yourself as One who considers devotees as false, and yet accept them in Your fold as sincere devotees. Oh! Lord! You present Yourself wearing the loin cloth (*கோவணம்*) in Your waist, and abide in Ooththoor where full ripe bright yellow banana fruits burst and honey drip down.

**Note:** Thief: An endearing description of Civan. A thief acts concealed. The mercy of Civa runs in mystery. He draws His devotees unto Him on the sly.

தோட்டீரே துத்தியைந் தலைநாகத்தை
ஆட்டீரே யடியார்வினை
ஓட்டீரே யும்மையேத் துதுமோத்தூர்
நாட்டீரே யருள் நல்குமே. 4

தோட்டீரே! துத்தி ஐந்தலைநாகத்தை
ஆட்டீரே! அடியார் வினை
ஓட்டீரே! உம்மை ஏத்துதும் - ஓத்தூர்
நாட்டீரே! அருள் நல்குமே!

tOTTIrE! tutti aintalai nAkattai
ATTIrE! aTiyAr vin2ai
OTTIrE! ummai Ettutum--OttUr
nATTIrE! aruL nalkumE!

**பொருள்:** செங்காந்தட்பூவை அணிந்தவரே! படப்பொறிகளை உடைய ஐந்து தலை நாகத்தை ஆட்டுபவரே! அடியவர் வினைகளை ஓட்டுபவரே! திருவோத்தூர் நாட்டில் எழுந்தருளியவரே! உம்மைத் துதிக்கின்றோம். அருள்புரிவீராக.

**குறிப்புரை:** உம்மை ஏத்துவோம்; அருளும் என்கின்றது. தோட்டீர் – செங்காந்தள் பூவை அணிந்தவரே. துத்தி – படப்பொறி.

Oh! Lord Civa! You wear the superb red lily flower (Gloriosa); You caused the speckled snake to dance; You are the remover of the bad Karmaa of Your devotees You are enshrined in the town of Ooththoor. We adore and worship You.

**Note:** Naadu: Country / realm.

குழையார் காதீர் கொடுமழுவாட் படை
உழையாள் வீர்திருவோத்தூர்
பிழையா வண்ணங்கள் பாடிநின்றாடுவார்
அழையாமே யருள் நல்குமே. 5

குழை ஆர் காதீர்! கொடுமழுவாள்படை
உழை ஆள்வீர்! திருஓத்தூர்
பிழையா வண்ணங்கள் பாடிநின்று ஆடுவார்
அழையாமே அருள் நல்குமே!

kuzai Ar kAtIr! koTumazuvAL paTai
uzai ALvIr! tiru OttUr
pizaiyA vaNNagkaL pATi nin2Ru ATuvAr
azaiyAmE aruL nalkumE!

**பொருள்:** குழை அணிந்த காதினை உடையவரே, கொடிய மழு என்னும் வாட்படையை ஒருபாலுள்ள கரத்தில் ஏந்தி ஆள்பவரே, திருவோத்தூரில் பிழை நேராதபடி வண்ணப் பாடல்கள் பல பாடி நின்று ஆடும் அடியார்க்கு அழையாமலே வந்து அருள் நல்குவீராக.

**குறிப்புரை:** பாடி, ஆடும் அடியார்களுக்கு அவர்கள் அழையாமலே வந்து அருளும் என்கின்றது. உழை – பக்கம். பிழையா – தவறாதபடி. வண்ணங்கள் – தாஅவண்ணம் முதலிய வண்ணப்பாடல்கள். அழையாமே நல்கல் முதல்வள்ளல் ஆவார் கடமையென்று விண்ணப்பித்தவாறு.

Oh! Lord Civa! You wear the ear jewel called Kuzhai (குழை) in Your ear. You hold in one of Your hands the lethal battle axe; Your devotees dance and sing faultless divine songs in Your praise. Kindly grace them without waiting for their solicitation, as it is Your good faith.

**Note:** Kuzhai: Male ear ring

மிக்கார் வந்து விரும்பிப் பலியிடத்
தக்கார் தம்மக்களீரென்
றுட்காதா ருளரோ திருவோத்தூர்
நக்கீரே யருள் நல்குமே. 6

*மிக்கார் வந்து விரும்பிப் பலி இடத்*
*தக்கார் தம் மக்களீர் என்று*
*உட்காதார் உளரோ? - திருஓத்தூர்*
*நக்கீரே! - அருள் நல்குமே!*

mikkAr vantu virumpip pali iTat
takkAr tam makkaLIr en2Ru
uTkAtAr uLarO?--tiru OttUr
nakkIrE!--aruL nalkumE!

**பொருள்:** திருவோத்தூரில் மகிழ்ந்து உறையும் இறைவரே, நீர் பலிகொள்ள வருங்காலத்து, உம் திருமுன் அன்பு மிக்கவராய் விரும்பி வந்து பலியிடுதற்குத் தம் மக்களுள் மகளிரை அனுப்புதற்கு அஞ்சாத தந்தை தாயர் உளரோ? எவ்வாறேனும் ஆக, அவர் தமக்கு அருள் நல்குவீராக.

**குறிப்புரை:** நீர் பலியேற்க வந்தகாலத்து, தம் மக்களுள் உம்முன் வந்து பலியிடத்தக்கவர் யார் என்று அஞ்சாதார் உளரோ; அருள் நல்கும் என்கின்றது. இறைவன் கொண்ட விடவேடத்தில் ஈடுபட்டவர்கள்

மயங்கித் தன்வசம் அழிந்தமையின் அவர் அண்மைக்கண் நடந்து வந்து பிச்சைபோடத் தக்கார் யார் என்று அஞ்சாதார் உளரோ என்று கூறியதாம். நக்கீரே – மகிழ்ந்திருப்பவரே.

Oh! Lord Civa! You happily abide in Thiru Ooththoor. Whenever You come out for alms, is there any parent who can, without fear, bid his daughters come before You to give alms with devotion? (The inner meaning is that no one will do so for fear that His divine beauty and radiance will make their daughters lose their chastity). Whatever it may be, kindly do grant us Your grace.

**Note:** A hidden reference to the ancient act at Dharukaavanam.

தாதார் கொன்றை தயங்குமுடியுடை
நாதா என்று நலம்புகழ்ந்
தோதா தாருளரோ திருவோத்தூர்
ஆதீரே யருள் நல்குமே. 7

*"தாது ஆர் கொன்றை தயங்கும் முடி உடை*
*நாதா!" என்று நலம் புகழ்ந்து*
*ஓதாதார் உளரோ? - திருஒத்தூர்*
*ஆதீரே! - அருள் நல்குமே!*

"tAtu Ar kon2Rai tayagkum muTi uTai
nAtA!" en2Ru nalam pukazntu
OtAtAr uLarO?--tiru OttUr
AtIrE!--aruL nalkumE!

**பொருள்:** திருவோத்தூரில் முதற்பொருளாக விளங்குபவரே! மகரந்தம் பொருந்திய கொன்றை மலர் விளங்கும் திருமுடியை உடைய தலைவரே! என்றழைத்து உமது அழகினைப் புகழ்ந்து ஓதாதவர் உளரோ? அருள் நல்குவீராக.

**குறிப்புரை:** கொன்றை விளங்கு முடியுடை நாதா என்று ஓதார் யார்? அருள் நல்கும் என்கின்றது. தாது – மகரந்தம். ஆதீர் – முதற்பொருளாயுள்ளவரே.

Oh! Primal Lord Civa of Ooththoor! Is there any one who does not adore You and praise Your beauty proclaiming that You are the Primal Lord wearing in Your glittering matted hair pollen-laden cassia flowers? Pray grant us Your grace.

**Note:** Kurumpai: Tender palmyra fruits.

என்றானி ம்மலை என்ற அரக்கனை
வென்றார் போலும் விரலினால்
ஒன்றார் மும்மதிலெய் தவனோத்தூர்
என்றார் மேல்வினை யேகுமே. 8

"என்தான் இம் மலை!" என்ற அரக்கனை
வென்றார் போலும், விரலினால்;
"ஒன்றார் மும்மதில் எய்தவன் ஓத்தூர்"
என்றார்மேல் வினை ஏகுமே.

"en2tAn2 im malai!" en2Ra arakkan2ai
ven2RAr pOlum, viralin2Al;
"on2RAr mummatil eytavan2 OttUr"
en2RAr mEl vin2ai EkumE.

**பொருள்:** இக்கயிலை மலை எம்மாத்திரம் என்று கூறிய இராவணனைக் கால் விரலால் வென்றவர் சிவபெருமான். அவர், தம்மோடு மனம் பொருந்தாத திரிபுரத்து அசுரர்களின் மும்மதில்களை, தனது அம்பால் எய்து அழித்தவர். திருவோத்தூர் என்று, அப்பெருமானது ஊர்ப்பெயரைச் சொன்ன மாத்திரத்தில், சொன்னவர்மேல் படிந்திருக்கும் வினைகள் அகலும்.

**குறிப்புரை:** ஓத்தூர் என்றார்மேல் உள்ள வினைகெடும் என்கின்றது. என்தான் – எம்மாத்திரம். ஒண்ணார் – பகைவர். என்றார் மேல்வினை ஏகும் என்றும், என்றார்மேல் வினை ஏகும் என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம்.

Raavanan due to his haughtiness and mighty autocracy once remarked "After all, what is this Kailash mount before my valour". Alas! He was crushed under the mountain by Lord Civa who pressed the mountain with His toe. The three citadels of the recalcitrant Asuraas who were dead against Lord Civa, were destroyed by a shot of an arrow by Civan. This Civan is enshrined in Thiru Ooththoor. Those who pronounce the very name of this town Ooththoor, will find that their bad karma vanishes instantaneously.

நன்றாநான் மறையா னொடுமாலுமாய்ச்
சென்றார்போ லுந்திசை யெலாம்
ஒன்றாயொள் ளெரியாய் மிகவோத்தூர்
நின்றீரேயு மைநேடியே. 9

நன்றா நால்மறையானொடு மாலும்ஆய்ச்
சென்றார் போலும், திசைஎலாம் -
ஒன்றாய்! உள் எரிஆய் மிக, ஒத்தூர்
நின்றீரே! உமை நேடியே!

nan2RA nAl maRaiyAn2oTu mAlum Ayac
cen2RAr pOlum, ticai elAm--
on2RAy! uL eri Ay mika, OttUr
nin2RIrE!--umai nETiyE!

**பொருள்:** திருவோத்தூரில் விளங்கும் இறைவரே! நல்லன செய்யும் நான்கு வேதங்களை ஓதுபவராகிய பிரமன், திருமால் ஆகியோர் எரியுருவாய் நீர் ஒன்றுபட்டுத் தோன்றவும், அறியாராய் திசையனைத்தும் தேடித் திரிந்து எய்த்தனர். அவர்தம் அறிவுநிலை யாதோ?

**குறிப்புரை:** அயனும் மாலும் உம்மைத் தேடித் திசையெல்லாம் சென்றார் போலும் என்று நகைசெய்கின்றது. நன்றாம் நான்மறையான் என்றது நல்லனசெய்யும் நான்மறைகளை ஓதியும் அவன் அறிந்திலன் எனக் குறிப்பித்தபடி. ஒன்றாயும் – பெருஞ்சோதிப் பொருளாயும், நேரில் இருந்தும் காணாது திசையெல்லாந் தேடினர்; அவர்கள் அறிவு இருந்தபடி என்னே என்று நகைசெய்தவாறு.

Oh! Lord Civa! abiding in Thiru Ooththoor! Brahma, who is well-versed in chanting the four Vedas which always does good to those who chant, as well as Thirumaal, were unable to identify You when You explicitly stood by their side as a big tall flame of fire. They went on searching for You in all directions of the universe but in vain. They became weary by exertion. How funny is their ignorance?

காரமண் கலிங்கத்து வராடையர்
தேரர் சொல்ல வைதேறன்மின்
ஓரம்பாலெ யிலெய் தவனோத்தூர்ச்
சீரவன் கழல் சேர்மினே. 10

கார்அமண், கலிங்கத் துவர்ஆடையர்-
தேரர், சொல்அவை தேறன்மின்!
ஓர் அம்பால் எயில் எய்தவன் ஓத்தூர்ச்
சீரவன், கழல் சேர்மினே!

kAr amaN, kaligkat tuvar ATaiyar--
tErar, col avai tERan2 min2!
Or ampAl eyil eytavan2 OttUrc
cIravan2, kazal cErmin2E!

**பொருள்:** கரிய நிறத்தவராகிய சமணர்களும், கலிங்க நாட்டுத் துவர் ஏற்றிய ஆடையை அணிந்த புத்த துறவியரும் கூறும் பொய் மொழிகளை நம்பாதீர். முப்புரங்களை ஓரம்பினால் எய்து அழித்தவனாகிய, திருவோத்தூரில் விளங்கும் சிறப்புமிக்க சிவ ` ானின் கழல்களைச் சேர்வீர்களாக.

**குறிப்புரை:** ஓரம்பால் எயில் எய்தவன் கழல்சேருங்கள்; புத்தர், சமணர் பொய்யுரை கேளாதீர்கள் என அறிவுறுத்தவாறு. தேரர் – பௌத்தர். கலிங்கத்துவராடையர் – துவர் ஏற்றிய கலிங்கநாட்டு ஆடையையுடைய புத்தர்கள். கலிங்கம் என்றாலே ஆடை என்பதாகும். எனவே, துவரேற்றிய கலிங்கம் என்பது குறிப்பு.

Ye! Companions! Do not believe the false words of the shady Jains or those of the Buddhists who wear ochre-dyed garments. Adore the glorious feet of Lord Civa who is enshrined in Thiru Ooththoor and who destroyed the three citadels with just one arrow.

குரும்பை யாண்பனையீன் குலையோத்தூர்
அரும்பு கொன்றை யடிகளைப்
பெரும்புகலி யுள்ஞானசம்பந்தன் சொல்
விரும்புவார் வினைவீடே. 11

குரும்பை ஆண்பனி ஈன் குலை ஓத்தூர்
அரும்பு கொன்றை அடிகளைப்,
பெரும் புகலியுள் ஞானசம்பந்தன் சொல்
விரும்புவார் வினை வீடே.

kurumpai ANpan2ai In2 kulai OttUr
arumpu kon2Rai aTikaLai,
perum pukaliyuL njAn2acampantan2 col
virumpuvAr vin2ai vITE.

**பொருள்:** கொன்றை அரும்பைச் சடைமுடியில் உடைய சிவபெருமான், திருவோத்தூரில், ஆண்பனைகள் குரும்பைக் குலைகள் ஈனும் அற்புதத்தைச் செய்தருளினார். இப்பெருமானைப் பெருமை மிக்க திருப்புகலி என்னும் பெயரை உடைய சீகாழிப் பதியில்

தோன்றிய ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இப்பாமாலை பத்தையும் விரும்பும் அன்பர்களின் வினைகள் அழியும்.

**குறிப்புரை:** ஞானசம்பந்தன் சொல்லிய இவை பத்தும் விரும்புவார்க்கு வினை ஒழியும் என்கின்றது. முதலிரண்டடியிலும் கூறிய கருத்து, பிள்ளையார் பாடல்களைக் கேட்டதும் இறைவனருளால் ஆண்பனைகள் பெண் பனைகளாகக் குலையீன்றன என்பதாம்.

Invoking Lord Civan Gnaanasambandan sang this hymn when all the male palmyra trees in the town became female trees and started yielding palmyra fruits, the tender fruits are called Kurumbai (குரும்பை). This Lord Civan wearing unblossomed cassia flower in His matter hair is entempled in Thiru Ooththoor. Gnaanasambandan hailing from the highly famed Thiru-p-puhali city (another name for Seekaazhi) adored Lord Civan of Thiru Ooththoor and sang this hymn. Those who admire and chant this hymn will get their bad karma wiped out.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*54ஆம் பதிகம் முற்றிற்று*
**End of 54th Hymn**

உ
சிவமயம்

# 55. திருமாற்பேறு

## திருத்தலவரலாறு:

திருமாற்பேறு என்ற திருத்தலம் தொண்டை நாட்டுத் தலம் ஆகும். செங்கல்பட்டு – அரக்கோணம் இருப்புப் பாதையில் காஞ்சிபுரம் இரயில் நிலையத்திலிருந்து 3 மைல் தூரத்தில் உள்ளது. பேருந்து வசதி உள்ளது. இதுவே எளிதானது. இத்தலம் ஹரிசக்ரபுரம் எனவும் வழங்கும். திருமால் ததீசி முனிவருடன் போர் செய்ய அவர் சக்ரம் வாய்மடிந்து போயிற்று. சலந்தரனைக் கொன்ற சக்கரம் சங்கரனிடத்து இருப்பதை அறிந்த திருமால் இத்தலத்திற்கு வந்து இறைவனை ஆயிரந்தாமரை கொண்டு அருச்சிக்க, இறைவன் ஒரு நாள் ஒரு மலரை மறைத்துவிட்டார். திருமால் அதற்குப் பதிலாகத் தம் கண்ணையிடந்து அருச்சிக்க, சுதரிசனம் என்னும் சக்கரத்தை ஈந்தார். கண் இடந்து அருச்சித்தமைக்காக பதுமாக்ஷன் என்னும் பெயரையும் கொடுத்தார். சோமனும் பூசித்துப் பேறுபெற்ற தலம். இச்செய்தி 'மன்னி மாலொடு சோமன் பணிசெயும் மன்னுமாற் பேற்றடிகளை' என்னும் தேவாரத்தாலும், 'பெருமாற்றின் படைவேண்டி நற்பூம்புனல் வருமாற்றின் மலர் கொண்டு வழிபடும் கருமாற் கின்னருள் செய்தவன்' என்னும் திருக்குறுந்தொகையாலும் அறியப்படும். இறைவன் பெயர் மால்வணங்கீசர், மணிகண்டேசர். இறைவி கருணை நாயகி, அஞ்சனாக்ஷியம்மை. தீர்த்தம் பாலாறு.

### கல்வெட்டு:

ஜயங்கொண்ட சோழ மண்டலத்தில் உள்ள காமக் கோட்டத்தின் பகுதியான வல்ல நாட்டில் உள்ள இத்தலம் திருமாற்பேறு என்றும், திருமால்பூர் என்றும், இராஜகேசரி வர்மன் திரிபுவனச் சக்கரவர்த்தி குலோத்துங்க சோழன் காலத்தில் குறிக்கப்பட்டு உள்ளது. இறைவன் பெயர் கல்வெட்டுக்களில் திருமாற்பேறுடையார், ஆளுடையார், உத்தம சோழீசுவரமுடையார், அவிமுக்தீசுவரமுடையார் என்று வழங்கப்படுகின்றன. இத்தலத்தில் அக்கினீசுவரர் கோயில் ஒன்று தனியே இருந்திருக்க வேண்டும். இக்கோயிலுக்குக் கண்டராதித்தனால் ஐம்பெருங்குழு ஏற்படுத்தப்பட்டு நிலங்களைக் கவனிக்கவும், படையலுக்கு நெல் கொடுக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இங்குள்ள விஷ்ணு கோயிலில் உள்ள இறைவன் பெயர் கோவிந்த பதியில் நின்றருளிய பெருமானடிகள் என்பது. இது தண்டக நாட்டின் மாவட்டமான தர்மக்கோட்டத்தின் பிரிவான வல்லநாட்டில் கோவிந்தபதியில் உள்ள கோயிலில் உள்ள நின்றருளிய பெருமான் ஆகும்.

மாற்பேறுடையார் கோயிலைக் கட்டவும், சுற்று மண்டபத்தை முற்றுப்பெறச் செய்யவும் விராட அரசன் அனையமான் என்கிற மண்டலாதித்யனால் தானம் கொடுக்கப்பட்டது. உத்தம சோழீசுவரமுடையார் உருவம் தயார் செய்ய சேதிராயன் என்பவனால் நிலம் தானம் செய்யப்பட்டது, உமாபத்தராகியார் (அதி சுந்தர தேவதேவியார்) உருவம் தயார் செய்ய சோழன் இராஜகேசரி வர்மனால் நிலம் தானம் செய்யப்பட்டது. மணவாளப் பெருமாள் உருவம் செய்யவும், ஆபரணம் தயார் செய்யவும் பரகேசரிவர்மன் இராஜேந்திர சோழன் ஆட்சியில் ஆவன செய்ததைத் தெரிவிக்கின்றது. கோயிலில் அனையமான் பரமண்டலாதித்தன் ஒரு மண்டபம் கட்டி உள்ளான். நம்மாழ்வார் திருவாய்மொழியின் வரிகள் கருப்பக்கிருகத்தின் மேற்குச் சுவரில் காணப்படுகின்றன. மணவில் கோட்டத்தின் பகுதியான மேல்பழுங்கூர் நாட்டில் சிறியரூரில் கோவிந்தபதி ஆழ்வார் கோயில் ஒன்று உள்ளது. தோழனார் தந்தையால் கோவிந்தபதி ஆழ்வார்மீது ஒரு திருப்பதிகம் பாடப்பட்டு உள்ளது.

சோழன் இராஜகேசரி வர்மன் காலத்தில் வைஷ்ணவர்களின் 18 நாடு குறிக்கப்படுகின்றது. மேலும் வண்டல் படிந்த நிலங்களைப்பற்றியும் பாலாற்றில் வெள்ளம் வந்ததைப் பற்றியும், இதற்குச் செப்பனிட 1000 கூலிகள் நியமிக்கப்பட்டு ஒவ்வொருவருக்கும் 12 கோல் நிலம் கொடுக்கப்பட்டது பற்றியும் அறிவிக்கப் பெறுகின்றன. மற்றைய கல்வெட்டுக்கள் விளக்கிற்கு, பிராமண உணவிற்கு, அபிடேகத்திற்குப் பொன், நிலம், பசுக்கள், குடங்கள் முதலியன கொடுக்கப் பட்டதைத் தெரிவிக்கின்றன.

### பதிக வரலாறு:

திருஞான சம்பந்தப் பெருமான், திருக்கச்சிமேற்றளியை வணங்கி, எழுந்தருளி இருக்கின்ற காலத்து, ஒரு நாள், பாலியாற்றுத் தென்கரை வழியாகச் சென்று திருமாற்பேறு என்னும் தலத்தை அடைந்தார்கள். முப்புரம் வென்ற முதல்வரை வணங்கி ‘ஊறியார்தரு’ என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள். இதனை, மொழி மாலை எனச் சிறப்பிப்பர் சேக்கிழார் பெருமான்.

## 55. THIRU-MAAR-PĒRRU

### THE HISTORY OF THE PLACE

This sacred place is in Thondai Naadu with a station in the Kaanchipuram - Arakkonam railway line. It is easier to reach it by bus from Kaanchipuram.

The names of the God are Maalvanangkeesar and Manikandesar and the Goddess is known by the names of Karunainaayaki and Anjchanaakshiyammai. The sacred ford is Paalaaru.

The place is known also as Harichakrapuram. Some notable information given by the inscriptions at this temple are as follows: Inscriptions refer to the God's name as Thirumaarperudaiyaar, Aaludaiyaar, Uththama Chozheesuramudaiyaar, and Avimuktheesuvaramudaiyaar. It seems that there was once a separate shrine for Akkineesuvarar here, as Kandaraadhiththan had constituted a 'committee of five' (imperungkuzhu) to administer the lands and to ensure supply of paddy to the temple for food offering. Land had been donated by kings and others for making icons of the God. There is also a shrine for Vishnu, whose name is Govindhapadhiyil Ninraruliya Perumaanadikal. Lines from the verses of Nammaazhvaar's Thiruvaaimozhi are found written on the west wall of the sanctum.

We also learn from the inscriptions of the flood in Paalaaru which resulted in silting of the lands, and the effort to repair the land with 1000 workers, each having been given 12 'kol' of land in lieu of wages. Gift of gold, land, cows and pots for lamps, Brahmin-feeding and ritual ablutions are recorded in the inscriptions.

### INTRODUCTION TO THE HYMN

From Kacchi Metrali, the godly child arrived in Maarpērru and hailed the Lord in the following hymn. Only the ten verses on Maarpērru have so far been traced.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

# 55. திருமாற்பேறு

# 55. THIRU-MAAR-PĒRRU

பண் : பழந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakkaraagam*
*Raagam: Aarabi*

ஊறியார் தருநஞ்சி னையுண்டுமை
நீறுசேர் திருமேனியர்
சேறுசேர் வயல்தென் திருமாற்பேற்றின்
மாறிலா மணி கண்டரே. 1

ஊறி ஆர்தரு நஞ்சினை உண்டு, உமை
நீறு சேர் திருமேனியர் -
சேறு சேர் வயல் - தென்திருமாற்பேற்றின்
மாறு இலா மணிகண்டரே.

URi Artaru nanjcin2ai uNTu, umai
nIRu cEr tirumEn2iyar--
cERu cEr vayal--ten2 tirumAR pERRil
mARu ilA maNikaNTarE.

**பொருள்:** சிவபெருமான் கடலில் ஊறிவந்த நஞ்சினை உண்டவர் ஆதலால் ஒப்பற்ற நீலமணி போன்ற கண்டத்தை உடையவர். உமையம்மையோடு கூடிய திருநீறு பூசிய திருமேனியை உடையவர். இவர் சேற்று வளம் நிறைந்த வயல்களால் சூழப்பெற்ற அழகிய திருமாற்பேற்றின் இறைவனாவர்.

**குறிப்புரை:** நஞ்சத்தை உண்டு, உமையும், நீறும் சேர்ந்த திருமேனியர் மாற்பேறர் என்கின்றது. ஊறி ஆர் தரு நஞ்சு – கடலில் ஊறி வந்த விடம். உமை நீறு சேர் மேனி எனப் பிரிக்க. மாறிலா – தீது செய்யாத; அருளே வழங்குகின்ற, மணிகண்டர் – நீலகண்டர்.

Lord Civan enshrined in the magnificient Thiru Maarpērru along with His consort Umaa Devi smeared His body with holy ashes. He swallowed the well-soaked poison that came out of the sea. With this His throat dazzled like changeless sapphire. The town Thiru Maarpērru is surrounded by lush fields full of abundant mire.

**Note:** Civa is Manikantan. The meaning of this sacred name is explained in verse 3.

தொடையார் மாமலர் கொண்டிருபோதும்மை
அடைவாரா மடிகள்ளென
மடையார் நீர்மல்கு மன்னியமாற்பே
றுடையீரே யுமையுள்கியே. 2

தொடை ஆர் மா மலர் கொண்டு, இருபோது, உம்மை
அடைவார் ஆம், "அடிகள்(ள்)!" என -
மடை ஆர் நீர் மல்கு மன்னிய மாற்பேறு
உடையீரே! - உமை உள்கியே.

toTai Ar mA malar koNTu, irupOtu, ummai
aTaivAr Am, "aTikaL(L)!" en2a--
maTai Ar nIr malku man2n2iya mARpERu
uTaiyIrE!--umai uLkiyE.

**பொருள்:** சிவபெருமானே! நீவீர் வாய்க்கால் மடைகளில் நீர் நிறைந்து விளங்கும் திருமாற்பேற்றை உமது இருப்பிடமாகக் கொண்டிருக்கின்றீர். சிறந்த மாலைகளைத் தொடுத்தும் அதனை ஏந்திய கையினராயும், காலையிலும் மாலையிலும் உம்மைத் தலைவராக எண்ணி நினைந்து தொழுகின்ற அடியார்கள் உம்மை வந்து அடைகின்றனர்.

**குறிப்புரை:** மாற்பேறரே உம்மை எண்ணி அடியார்கள் மாலை முதலியவற்றை ஏந்தி இருபோதும் அடைகின்றார்கள் என்கின்றது. தொடை – மாலை. இருபோதும் – காலையும் மாலையும்.

Oh Lord Civa! You have selected Thiru Maarpērru as Your abode which has abundant water supply in the sluices of the canals. Your devotees always think of You and bear in their minds that You are their Chief. They carry garlands made of choice flowers both day and night and worship at Your Holy Feet.

**Note:** Even as the sluices are brimming with water, the hearts of the devotees are surcharged with love for Civa.

பையாரும் மரவங்கொடு வாட்டிய
கையானெ ன்று வணங்குவர்
மையார் நஞ்சுண்டு மாற்பேற்றிருக்கின்ற
ஐயா நின்னடியார்களே. 3

"பை ஆரும் அரவம்கொடு ஆட்டிய
கையான்" என்று வணங்குவர் -
மை ஆர் நஞ்சு உண்டு மாற்பேற்று இருக்கின்ற
ஐயா! - நின் அடியார்களே.

"pai Arum aravam koTu ATTiya
kaiyAn2" en2Ru vaNagkuvar--
mai Ar nanjcu uNTu mARpERRu irukkin2Ra
aiyA!--nin2 aTiyArkaLE.

**பொருள்:** கருநிறம் பொருந்திய நஞ்சை உண்டு, நீலகண்டராய்த் திருமாற்பேற்றில் வீற்றிருக்கின்ற சிவபெருமானே! உமது அடியார்கள், நீவீர் 'படம் பொருந்திய பாம்பை பிடித்து ஆட்டும் கைகளை உடையவர்' என்று சொல்லி வணங்குகின்றனர்.

**குறிப்புரை:** நின்னடியார்கள் நின்னை அரவமாட்டிய கையான் என்று வணங்குவார்கள் என்கின்றது. பை – படம். மை – கருமை.

Oh! Lord Civa enshrined in Thiru Maarpērru, You have consumed the black coloured venom and saved the Devas. As a result of this Your throat shines like blue sapphire. Your devotees adore and praise You saying that You have valiant hands, by which You catch hold of the hooded snake and make it dance.

**Note:** Civa indeed is the true Amrita that vanquishes venom.

சாலமா மலர்கொண்டு சரணென்று
மேலையார்கள் விரும்புவர்
மாலினார் வழிபாடு செய்மாற்பேற்று **4**
நீலமார் கண்ட நின்னையே.

சால மா மலர் கொண்டு "சரண்!" என்று,
மேலையார்கள் விரும்புவர் -
மாலினார் வழிபாடுசெய் மாற்பேற்று
நீலம் ஆர் கண்ட! - நின்னையே.

cAla mA malar koNTu, "caraN!" en2Ru,
mElaiyArkaL virumpuvar--
mAlin2Ar vazipATu cey mARpERRu
nIlam Ar kaNTa!--nin2n2aiyE.

**பொருள்:** இத்தலத்தில் திருமால் வழிபாடு செய்து அருள் பெற்றதால் இந்த ஊர் திருமாற்பேறு எனப் பெயர் பெற்றது. இங்கு எழுந்தருளி இருக்கும் நீலநிறம் பொருந்திய கண்டத்தை உடைய சிவபெருமானே! மேன்மைமிக்க சான்றோர்கள், அதிகமான நறுமலர்களைக் கொண்டு விருப்பத்தோடு அருச்சித்து, உம்மையே சரணடைகிறோம் என்று வழிபடுகின்றனர்.

**குறிப்புரை:** நீலகண்ட, உயர்ந்தோர்கள் மலர்கொண்டு நின்னை வழிபடுவார்கள் என்கின்றது. சால – மிக. மேலையோர்கள் – உயர்ந்தோர்கள் மாலினார் வழிபாடு செய் மாற்பேறு என்றது இத்தல வரலாற்றுக் குறிப்பு.

Thirumaal worshipped Lord Civan whose grace he received at the temple in Thiru Maarpērru. For this reason this town carries the name of Thirumaal as Thiru Maarpērru. Here Lord Civan's throat shines like blue sapphire. Very famous scholarly devotees consider You as their only refuge and worship You with dedication by offering large quantities of fragrant choice flowers at Your Holy Feet.

**Note:** Civa is the sole Refuge of all souls.

மாறிலா மணியே யென்றுவானவர்
ஏறவே மிக ஏத்துவர்
கூறனே குலவுந் திருமாற்பேற்றின்
நீறனே யென்றுநி ன்னையே. 5

*"மாறு இலா மணியே!" என்று வானவர்*
*ஏறவே மிக ஏத்துவர் -*
*கூறனே! குலவும் திரு மாற்பேற்றில்*
*நீறனே! - என்று நின்னையே.*

"mARu ilA maNiyE!" en2Ru vAn2avar
ERavE mika Ettuvar--
kURan2E! kulavum tiru mARpERRil
nIRan2E!--en2Rum nin2n2aiyE.

**பொருள்:** திருமாற்பேற்றுச் சிவபெருமான் உமையம்மையை ஒருபாகமாகக் கொண்டு திருநீறு பூசியவராய் விளங்குகின்றார். தேவர்கள் , இப்பெருமானை, இந்த ஒளியான மாணிக்கமணி எத்தகையோர்க்கும் இன்பமே செய்யும் என எப்போதும் வெகுவாகப் புகழ்ந்து போற்றி வழிபடுகின்றனர்.

**குறிப்புரை:** நின்னைத் தேவர்கள் மாறிலா மணியே என்று ஏத்துவர் என்கின்றது. சில ரத்தினங்களை அணிந்தால் தீமையும் செய்யக்கூடும். இந்தமணி எத்தகையோர்க்கும் இன்பமே செய்தலின் மாறிலாமணியே என்றார். ஏறவே – மிக. தாமுயர என்றுமாம். மாறிலா – ஒப்பற்ற எனினுமாம். இதற்கு மாறாக ஒன்றுமில்லாத.

Oh! Lord Civa! You have Your consort Umaa Devi in a portion of Your body and are enshrined in Thiru Maarpērru. You have smeared Your body with holy ashes and

Your body frame comes into view with radiance. The celestials adore and praise You in abounding, magnificent way saying You are like a peerless Ruby.

உரையாதா ரில்லையொன்று நின்தன்மையைப்
பரவாதா ரில்லை நாள்களும்
திரையார் பாலியின் தென்கரைமாற்பேற்
றரையானே யருள் நல்கிடே. 6, 7

உரையாதார் இல்லை, ஒன்றும் நின் தன்மையை;
பரவாதார் இல்லை, நாள்களும்; -
திரை ஆர் பாலியின் தென்கரை மாற்பேற்று
அரையானே! - அருள் நல்கிடே!

uraiyAtAr illai, on2Rum nin2 tan2maiyai;
paravAtAr illai, nALkaLum;--
tirai Ar pAliyin2 ten2 karai mARpERRu
araiyAn2E!--aruL nalkiTE!

**பொருள்:** அலைகள் பொருந்திய பாலியாற்றின் தென்கரையில் உள்ள திருமாற்பேற்றின் அரசனாக வீற்றிருக்கும் சிவபெருமானே! நாள்தோறும் நினது பெருந்தன்மையை வியந்து உரையாதார் இல்லை. நாள்தோறும் உன் பெருமைகளைப் பரவாதவர் இல்லை. அருள் நல்குவீராக.

**குறிப்புரை:** திருமாற்பேற்று அரசனே, உன்னைப் புகழாதாரும், பரவாதாரும் இல்லை என்கின்றது. இத்தலம் பாலியாற்றுத் தென்கரையது என்பது குறிக்கப்பெறுகின்றது.

Oh! Sovereign Lord Civa! You are enshrined in Thiru Maarpērru on the southern bank of the billowing river Paali. There is none who does not extol Your great dignity. There is none who does not propagate daily Your grandeur. Pray! grant us Your grace.

**Note:** The day unspent in praise of Civa is indeed the day that is unlived.

அரசளிக் கும்மரக் கனவன்றனை
உரைகெடு த்தவனொல்கிட
வரமிகுத்த வெம்மாற்பேற்றடிகளைப்
பரவிடக் கெடும் பாவமே. 8

அரசு அளிக்கும் அரக்கன் அவன்தனை
உரை கெடுத்து, அவன் ஒல்கிட
வரம் மிகுத்த எம் மாற்பேற்று அடிகளைப்
பரவிடக் கெடும், பாவமே.

aracu aLikkum arakkan2 avan2tan2ai
urai keTuttu, avan2 olkiTa
varam mikutta em mARpERRu aTikaLaip
paraviTak keTum, pAvamE.

**பொருள்:** எமது திருமாற்பேற்றுச் சிவபெருமான், இலங்கை அரசனான இராவணனின் புகழை மங்கச் செய்தவர். பின்னால், அவன்தன் பிழையை உணர்ந்து மன்னித்தருள வேண்டியபோது, அவனுக்கு வரங்கள் பலவற்றையும் அளித்தருளியவர். இப்பெருமானின் திருவடிகளைப் போற்றிட நம் பாவம் நீங்கும்.

**குறிப்புரை:** இராவணன் வலிகெடுத்து வரமளித்த இறைவனைப் பரவப் பாவம் கெடும் என்கின்றது. உரை – புகழ். ஒல்கிட – பணிய.

Lord Civan did away the name and fame of Raavanan, the king of Sri Lanka for his misdeeds. Later when he repented for his folly and begged for pardon, Civa granted him many boons and graced him. Those who adore His Holy Feet and worship Him who is enshrined in Thiru Maarpērru will get their sins washed off.

இருவர் தேவருந்தேடித் திரிந்தினி
ஒருவரா லறிவொண்ணிலன்
மருவுநீள் கழல்மாற் பேற்றடிகளைப்
பரவுவார் வினை பாறுமே. 9

இருவர்தேவரும் தேடித் திரிந்து, இனி
ஒருவரால் அறிவு ஒண்ணிலன்,
***மருவு நீள்கழல் மாற்பேற்று அடிகளைப்***
***பரவுவார் வினை பாறுமே.***

iruvartEvarum tETit tirintu, in2i
oruvarAl aRivu oNNilan2,
maruvu nILkazal mARpERRu aTikaLaip
paravuvAr vin2ai pARumE.

**பொருள்:** திருமால், பிரமன் ஆகிய இருவரும் அடிமுடியைத் தேடித் திரிந்த போதும், ஒருவராலும் அறிய இயலாத இயல்பினன். இத்தகைய இயல்பினை உடைய திருமாற்பேற்றுச் சிவபெருமானின் விரிந்த திருவடிகளைப் போற்றித் துதிப்பவரின் வினைகள் சிதறி அழியும்.

**குறிப்புரை:** இறைவன் அடிகளைப் பரவுவார் வினைசிதறும் என்கின்றது. தேவர் இருவர் – அயனும் மாலும். இருவர் தேடியும் ஒருவராலும் அறிய முடியாதவன் என்பது கருத்து.

Thirumaal as well Brahma - did their best and went all around in quest of the Holy Feet of Lord Civan but in vain. He could not be reached or realised by anyone. Those who adore and worship Civan's ever grand Holy Feet will get rid of the effects of their bad karma.

**Note:** The two Devas are Vishnu and Brahma.

தூசுபோர்த் துழல்வார்கையில் துற்றணும்
நீசர்தம் முரைகொள்ளெலும்
தேசமல்கிய தென்திருமாற் பேற்றின் 10
ஈசனெ ன்றெடுத் தேத்துமே.

தூசு போர்த்து உழல்வார், கையில்-துற்ற உணும்
நீசர்தம் உரை கொள்ளெலும்!
"தேசம் மல்கிய தென்திருமாற்பேற்றின்
ஈசன்" என்று எடுத்து ஏத்துமே!

tUcu pOrttu uzalvAr, kaiyil--tuRRu uNum
nIcartam urai koLLElum!
"tEcam malkiya ten2tirumARpERRin2
Ican2" en2Ru eTuttu EttumE!

**பொருள்:** ஆடையை உடம்பில் போர்த்து அலைபவரும், கைகளில் உணவை ஏற்று உண்ணும் இயல்புடைய இழிந்தவர்களான புத்தர் மற்றும் சமணர்களின் சொற்களை உண்மை என்று ஏற்காதீர்கள். ஒளி நிறைந்த அழகிய திருமாற்பேற்றின் ஈசனான சிவபெருமானைப் புகழ்ந்து போற்றுங்கள்.

**குறிப்புரை:** சமணர் புத்தர் சழக்குரை கொள்ளாதீர்; திருமாற்பேற்றீசன் என்று ஏத்தும் என்கின்றது. தூசு – ஆடை. துற்று – உணவு. நீசர் – இழிந்தவர். கொள்ளெலும் – கொள்ளாதீர்கள். இது அருவழக்கு. தேசம் – ஒளி.

Ye companions! do not concede the false sermons of the Buddhists who wander all around, and that of the ignoble Samanars who receive alms in their cupped hands and eat. Hail and adore Civa as the true Lord enshrined in the famed and graceful temple in Thiru Maarpērru.

மன்னிமா லொடுசோமன் பணிசெயும்
மன்னுமா ற்பேற்றடிகளை
மன்னுகா ழியுள்ஞான சம்பந்தன்சொல்
பன்னவே வினை பாறுமே. 11

மன்னி மாலொடு சோமன் பணி செயும்
மன்னு மாற்பேற்று அடிகளை
மன்னு காழியுள் ஞானசம்பந்தன் சொல்
பன்னவே, வினை பாறுமே.

man2n2i mAloTu cOman2 paNi ceyum
man2n2um mARpERRu aTikaLai
man2n2u kAziyuL njAn2acampantan2 col
pan2n2avE, vin2ai pARumE.

**பொருள்:** திருமாலும் சந்திரனும் தங்கியிருந்து பணிசெய்து வழிபடும் நிலைபேறுடைய திருமாற்பேற்றுள் விளங்குபவர் சிவபெருமான். நிலைத்த சீகாழி மாநகரில் தோன்றிய ஞானசம்பந்தன் இப்பெருமானைப் போற்றிப் பாடினார். இத்திருப்பதிகத்தை ஓதினால் வினைகள் சிதறி அழியும்.

**குறிப்புரை:** இத்தலம் மாலும், மதியும் வணங்கிய தலமாதலின் இத்தலத் திறைவனை வழிபட வினைகள் சிதறும் என்கின்றது. சோமன் – சந்திரன். பன்ன – சொல்ல.

Those who recite this hymn of Gnaanasambandan who hails from Seekaazhi which exists from time immemorial, on Lord Civan enshrined in the ever existing Thiru Maarpērru will get the evil effects arising out of their karma, destroyed. This Lord in Thiru Maarpērru was served well and worshipped both by Thirumaal and the moon.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*55ஆம் பதிகம் முற்றிற்று*
End of 55th Hymn

உ
சிவமயம்

# 56. திருப்பாற்றுறை

## திருத்தலவரலாறு:

திருப்பாற்றுறை என்ற திருத்தலம் சோழ வளநாட்டுக் காவிரி வடகரைத் தலம் ஆகும். திருச்சிராப்பள்ளியில் இருந்து கல்லணை செல்லும் பேருந்தில் ஏறி, பனையபுரம் என்ற ஊரில் இறங்கி, வடக்கு நோக்கி வரவேண்டும். இத்தலத்துப் போந்த மார்க்கண்டேய முனிவர் சிவபூசைக்குப் பால் இல்லாமையால் வருந்தியபோது, சிவபெருமான் அருளினால் பால் பெருகியது. ஆதலால் இப்பெயர் எய்தியது. கொள்ளிட நதியின் தென்கரையில் உள்ளது. இறைவன் பெயர் திருமூலநாதர், மூலநாதேசுவரர். இறைவியின் பெயர் மோகநாயகி, மேகலாம்பிகை. தீர்த்தம் திருக்குளம். இடம் திருவானைக்காவிலிருந்து கிழக்கே 8 கி.மீ. தூரத்தில் உள்ளது. தற்சமயம் திருப்பாலைத்துறை என வழங்கப்படுகிறது.

## கல்வெட்டு:

இத்தலத்தைப் பற்றி அரசியலாரால் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுக்கள் பதினாறு உள்ளன. அவை முதற்பராந்தகன் பரகேசரிவர்மனான விக்கிரம சோழன், இராஜராஜன், இராஜேந்திர சோழ தேவன் காலத்தன. அவற்றால் இத்தலம் கொள்ளிடத்துத் தென்கரை நாட்டுப் பிரமதேயமான உத்தமசீலி சதுர்வேதி மங்கலத்துத் திருப்பால்துறை என விக்கிரம சோழன் காலத்துக் கல்வெட்டில் குறிப்பிடப்படுகிறது. இறைவன் திருப்பால்துறை மகாதேவர் என்றும் திருப்பால்துறை நாயனார் என்றும் திருப்பால்துறை உடையார் என்றும் வழங்கப்படுகிறார். கல்வெட்டுக் குறிப்பாளர் ஆதிமூலேசுவரர் என்று அழைக்கிறார். தலம் திருப்பாலைத்துறை என இக்காலத்து வழங்குகிறது. கோயிலுக்கண்மையில் திருநாவுக்கரசர் திருமடமும் ஆண்டார் எம்பிரானார் மடம் எனப்பெரிய லிங்கிய சந்தானத்து மடமும திருவானைக்கா திருஞானசம்பந்தர் மடமும் நாற்பத்தெண்ணாயிரவர் திருமடமும் இருந்தனவாகக் குறிக்கப்பட்டு உள்ளன. அவற்றிற்கு அரசர்கள் நிலம் வழங்கிய செய்தியும் குறிக்கப் படுகின்றன. ஏனைய கல்வெட்டுக்கள் திருக்கோயில் விளக்கிற்காக நிலமும் பசுவும் ஆடும் விட்ட செய்திகள் அறிவிப்பன. இவையன்றி, கோயிலுக்கு வடபக்கத்தில் காக்கும் நாயகன்மடம் என்ற ஒன்று இருந்ததாகவும் அதற்கு மும்முடிச் சோழ மங்கலத்துச் சபையார் நிலம் அளித்ததாகவும் தெரிகிறது. திருப்பனம்பூதூர் பரமேசுவரருக்கு அரிகுலகேசரி தேவரால் உத்தமசீலி சதுர்வேதி மங்கலத்து நிலம் விட்ட செய்தியும் அறியப்படுகிறது.

**பதிக வரலாறு:**

திருத்தவத்துறையை வணங்கிப் பிறதலங்களையும் வணங்கத் திருவுளம் பற்றிய பிள்ளையார், திருப்பாற்றுறையை அடைந்தார்கள். அத்தலத்து எழுந்தருளியுள்ள ஏறுயர்ந்த பெருமானை வணங்கிக் 'காரார் கொன்றை' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள். இப்பதிகத்தை அருளுகின்ற காலத்துப் பிள்ளையாரின் திருவுள்ளம் சன்மார்க்க நெறிக்கண் நாயக நாயகித் தன்மையில் ஈடுபடுவதாயிற்று. தலைவியாகிய தன்னுள்ளத்தில் தலைவன் உருவன்றி வேறொன்றும் தோன்றாத நிலையில், ஊடியும் பிரிந்தும் நுகரும் இன்ப நிலைகள் தோன்ற இத்திருப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

## 56. THIRUP-PAAT-TURAI

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thirup-paat-turai is to the north of river Cauvery in Chola Naadu. To reach this place one has to get on the bus from Thiruchchiraappalli going to Kallani, get off at the village Panaiyapuram and go towards the north. It is on the south bank of river Kollidam and is located about 8 km east of Thiruvaanaikka. The name comes from the story that a miracle of flowing milk occurred here when Sage Maarkkandeyar grieved at the lack of availability of milk to offer to the Lord of this temple. Nowadays the place is called Thiruppaalaiththurai.

The God is known as Thirumoolanaathar or Moolanaathesuvarar and the Goddess as Mohanaayaki or Mekalaambikai. The sacred ford is Thirukkulam.

There are sixteen inscriptions about this temple. These are from the times of Paraanthakan I to Raajendhira Cholan. It is known from them that there once were four matams near the temples: Thirunaavukkarasar Matam, Aandaar Empiraanaar Matam or Periya Lingkiya Santhaanaththu Matam, Thiruvaanaikka Thirujnaana-sambandhar Matam and the Matam of the 48 thousands. Kings had given land grants to these Matams. In addition, it seems there was another Matam known as Kaakkum Naayakkan Matam to the north of the temple, for which the village assembly of

Mummudichchola Mangkalam had gifted lands. Other inscriptions speak of gifts of land, cows and sheep for lamps.

## INTRODUCTION TO THE HYMN

It is from Thirutthavatthurai our saint arrived in Thirupppatturai. Gnaanasambandar was absorbed in the path of wisdom (சன்மார்க்க நெறி) when he started singing this hymn. He contemplated on himself as partner servitor (நாயகி) of the Supreme Lord Civan (நாயகன்). This is called Naayaki Naayakan Bhaavam (நாயகி - நாயகன் தன்மையில் ஈடுபடுதல்). In this stage the mind of Gnaanasambandar is fully absorbed in the Lord and realises nothing other than the Supreme as his/her Lord.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 56. திருப்பாற்றுறை

## 56. THIRUP-PAAT-TURAI

பண் : பழந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakka Raagam*
*Raagam: Aarabi*

காரார் கொன்றை கலந்த முடியினர்
சீரார் சிந்தை செலச் செய்தார்
பாரார் நாளும் பரவிய பாற்றுறை
ஆரா ராதி முதல்வரே. 1

கார் ஆர் கொன்றை கலந்த முடியினர்,
சீர் ஆர் சிந்தை செலச் செய்தார் -
பாரார் நாளும் பரவிய பாற்றுறை -
யார், ஆர் ஆதிமுதல்வரே.

kAr Ar kon2Rai kalanta muTiyin2ar,
cIr Ar cintai celac ceytAr--
pArAr nALum paraviya pARRuRai
yAr, Ar Ati mutalvarE.

**பொருள்:** திருப்பாற்றுறையில் உறையும் ஆதி முதல்வனான சிவபெருமான் கார்காலத்தில் மலரும் கொன்றை மலர் மாலை சூடிய திருமுடியினராக விளங்குகின்றார். உலக மக்கள் நாள்தோறும் இங்கு வந்து வழிபடுகின்றனர். இவர், தெவிட்டாத, அன்பு கனிந்த, நிறைவான நம் சிந்தையைத் தம்மிடமே செல்லச் செய்தார்.

**குறிப்புரை:** திருஞானசம்பந்தப் பிள்ளையார் தம்மைப் பெண்ணாக்கி, தலைவனாகத் திருப்பாற்றுறைத் திருமூலநாதரைப் பாவித்து ஈடுபட்டு, சிறந்த சிந்தை தம்மிடமே செல்லச் செய்தார் என்கின்றார். கார் ஆர் கொன்றை – கார்காலத்துக் கொன்றை. சிந்தை செலச் செய்தார். அடியார்கள் சிந்தையைத் தம்மிடமே செல்லச் செய்தார். ஆரார் – தெவிட்டாதவர். ஆதி முதல்வர் என்றது திருமூல நாதர் என்னும் தலத்திறைவர் பெயரைக் குறிப்பது.

The primal Lord Civan wears in His head cassia flower blooming in the rainy season. He draws the minds of glorious folks towards Him. He abides in Thiruppaatturai and is hailed by devotees from all over the world.

**Note:** He who is the Primal Lord is also the One who is the End. St. Meikandaar says "Antam Aadi enmanaar pulavar" (அந்தம் ஆதி என்மனார் புலவர்).

நல்லாரும் மவர்தீய ரெனப்படும்
சொல்லார் நன்மலர் சூடினார்
பல்லார் வெண்டலைச் செல்வரெம் பாற்றுறை
எல்லாரு ந்தொழு மீசரே. 2

நல்லாரும்(ம்) அவர்; தீயர் எனப்படும்
சொல்லார்; நன்மலர் சூடினார்;
பல்ஆர் வெண்தலைச் செல்வர் - எம் பாற்றுறை
எல்லாரும் தொழும் ஈசரே.

nallArum(m) avar; tIyar en2appaTum
collAr; nalmalar cUTin2Ar;
pal Ar veN talaic celvar--em pARRuRai
ellArum tozum IcarE.

**பொருள்:** எல்லாராலும் தொழப்படும் எம் ஈசனாகிய சிவபெருமான் திருப்பாற்றுறையில் உறைகின்றார். அவர் பற்கள் நீங்காதிருந்த வெண்மையான தலை ஓட்டை அணிந்த செல்வந்தர். அவர் நல்லவர். கையில் தீயை ஏந்தி இருப்பதால் தீயர் எனவும் போற்றப்படுபவர். நிறைந்த நல்ல மலர் மாலையைச் சூடியவர்.

**குறிப்புரை:** இவர் நல்லவரும் ஆவர்; தீயர் எனவும் சொல்லப் பெறுவர்; ஆயினும் எனது சொன்மலரைச் சூடினார் என்கின்றது. தீயர் – கையில் தீயையுடையவர். சொல் ஆர் நன் மலர் – சொல்லாகிய நிறைந்து நல்ல மலர்கள்; என்றது, தலைவி பேசுவன யாவும் அவன் புகழேயாதல் தெரிவித்தது. எல்லாரும் தொழும் – பரிபாகமுடையவர் அஃதில்லாத உலகவர் யாவரும் வணங்கும்.

Lord Civan is the most considerate one. He holds fire in one of His hands. He wears fresh unspoiled flowers in His head. He is our resplendent Lord abiding in Thiruppaatturai. He wears a skull in which the teeth are still showing. He is the Supreme Lord adored by all.

**Note:** He is the Good One. He alone is the Good One. His goodness is absolute and eternal.

விண்ணார் திங்கள் விளங்குநுதலினர்
எண்ணார் வந்தெனெழில் கொண்டார்
பண்ணார் வண்டினம் பாடல்செய் பாற்றுறை
உள்நாள் நாளும் முறைவரே. 3

விண் ஆர் திங்கள் விளங்கும் நுதலினர்,
எண்ணார் வந்து, என் எழில் கொண்டார் -
பண் ஆர் வண்டுஇனம் பாடல்செய் பாற்றுறை -
யுள் நாள்நாளும் உறைவரே.

viN Ar tigkaL viLagkum nutalin2ar,
eNNAr vantu, en2 ezil koNTAr--
paN Ar vaNTu in2am pATal cey pARRuRai--
yuL nALnALum uRaivarE.

**பொருள்:** இயற்கையில் பண்ணின் இசை போன்று வண்டினங்கள் முரலிக் கொண்டிருக்கும் திருப்பாற்றுறையில் எக்காலத்திலும் உறைபவர் சிவபெருமான். இவர், தவழும் பிறைச் சந்திரன் விளங்கும் திருமுடியினர் ஆவர். இவர் என் மனதின் எண்ணத்தில் இருந்து என் எழில் நலம் அனைத்தையும் கவர்ந்து கொண்டார்.

**குறிப்புரை:** திருமூலநாதர் ஆராயாதே வந்து என்னழகெல்லாவற்றையும் கவர்ந்தார் என்கின்றது. எண்ணார் – எண்ணத்தில் இருப்பவர். இது உறுப்பு நலனழிதல் என்னும் மெய்ப்பாடு. பாற்றுறையுள் நாள்நாளும் உறைவர் எனப் பிரித்துப் பொருள் காண்க.

Lord Civan's forehead is dazzling by the brightness of the crescent moon of the sky. He invaded my heart and coveted my beauty. He abides forever in Thiruppaatturai, where bees hum. Their noise resembles the songs sung in musical tone.

**Note:** Bees make honey. Honey is symbolic of moksha.

பூவுந் திங்கள் புனைந்த முடியினர்
ஏவினல்லா ரெயிலெய்தார்
பாவந்தீர் புனல்மல்கிய பாற்றுறை
ஓவென் சிந்தை யொருவரே. 4

பூவும் திங்கள் புனைந்த முடியினர்,
ஏவின் அல்லார் எயில் எய்தார் -
பாவம் தீர் புனல் மல்கிய பாற்றுறை,
ஓ! என் சிந்தை ஒருவரே.

pUvum tigkaL pun2ainta muTiyin2ar,
Evin2 allAr eyil eytAr--
pAvam tIr pun2al malkiya pARRuRai,
O! en2 cintai oruvarE.

**பொருள்:** சிவபெருமான் மலர்களையும் பிறைமதியையும் தரித்த திருமுடியினர். பகைவராய் வந்த அசுரர்களின் முப்புரங்களை தனது ஒரே கணையால் அழித்தவர். பாவங்களைப் போக்கும் தீர்த்தங்கள் நிறைந்த திருப்பாற்றுறை இறைவன் ஒருவரே. என் சிந்தை முழுவதையும் ஆட்கொண்டு இருப்பவர்.

**குறிப்புரை:** அம்பால் அடையார் புரம் எய்த பாற்றுறைநாதனே என் சிந்தைக்கண் உள்ள ஒருவர் என்கின்றது. ஏவின் – அம்பால். அல்லார் – பகைவர். ஓ என்பது வினாப்பொருளின் கண்ணது.

Lord Civan wears the crescent moon on His sacred head along with flowers. He destroyed by a single dart, the three citadels of the hostile Asuras. He abides in Thiruppaatturai. By His grace devotees get rid of their sins. A dip in the sacred waters of Paatturai removes sin. Lo! He alone kills my mind, He, the unparalleled One.

மாகந்தோய் மதிசூடி மகிழ்ந்தென
தாகம் பொன்னிற மாக்கினார்
பாகம் பெண்ணுமுடை யவர்பாற்றுறை
நாகம் பூண்ட நயவரே. 5

மாகம் தோய் மதி சூடி மகிழ்ந்து, எனது
ஆகம் பொன்நிறம் ஆக்கினார் -
பாகம் பெண்ணும் உடையவர், பாற்றுறை
நாகம் பூண்ட நயவரே.

mAkam tOy mati cUTi, makizntu, en2atu
Akam pon2niRam Akkin2Ar--
pAkam peNNum uTaiyavar, pARRuRai
nAkam pUNTa nayavarE.

**பொருள்:** சிவபெருமான் தன்னுடைய ஒரு பாதியில் பெண்ணை உடையவர். நாகத்தை அணிகலனாகக் கொண்ட நலமுடையவர். வானகத்தே தோயும் பிறைமதியை முடியிற்சூடி, மகிழ்ந்து வந்து, எனது உடலைப் பொன்னிறமாக்கினார். பசலை பூக்கச் செய்தவராவர்.

**குறிப்புரை:** தன்னுடம்பில் ஒருபாதியில் பெண்ணை உடைய பெருமான் என்னுடைய மார்பைப் பொன்னிறமாக்கினார் என்று பிரிவால் வருந்திய தலைவி பசந்தமையை அறிவிக்கின்றது. மாகம் – ஆகாயம். ஆகம் – மார்பு. நயவர் – நலமுடையவர்.

Lord Civan's consort forms a part of His body. He wears the snake as His jewellery. He abides in Thiruppaatturai. He has the crescent moon on His head, which crawls over in the sky. With joyful heart He approached me and created love-sickness (*பசலை*) in me which results in my complexion turning out to be golden.

**Note:** The sallow hue is symbolic of (conjugal) separation.

போதுபொன் திகழ்கொன்றை புனைமுடி
நாதர்வந் தென்நலங் கொண்டார்
பாதந் தொண்டர் பரவிய பாற்றுறை
வேத மோதும் விகிர்தரே. 6

*போது பொன்திகழ் கொன்றை புனைமுடி*
*நாதர் வந்து, என் நலம் கொண்டார் -*
*பாதம் தொண்டர் பரவிய பாற்றுறை*
*வேதம் ஓதும் விகிர்தரே.*

pOtu pon2 tikaz kon2Rai pun2ai muTi
nAtar vantu, en2 nalam koNTAr--
pAtam toNTar paraviya pARRuRai
vEtam Otum vikirtarE.

**பொருள்:** சிவபிரானது தொண்டர்கள் தம் திருவடிகளைப் போற்றத் திருப்பாற்றுறையுள் வீற்றிருக்கின்றார். அவர் வேதங்களை அருளிய விகிர்தர். அலரும் பருவத்து உள்ள அரும்புகளைக் கொண்ட, பொன்னிறம் திகழும் கொன்றை மலர்களைத் தரித்துள்ள திருமுடியினர். இந்தத் தலைவனான சிவபிரானாரே என்பால் விரும்பி வந்து என் அழகினைக் கவர்ந்தவராவார்.

**குறிப்புரை:** கொன்றை புனைந்த நாதர் வந்து என் நலங்கொண்டார் என்கின்றது.

Lord Civan abides in Thiruppaatturai. Devotees adore His Holy Feet. He is the author of the Vedaas. He is God as different from the world (*விகிர்தன்*). He wears on

His holy head blooming gold coloured kondrai flowers. Lord Civan is my chief who approached me with desire, and snatched away my pleasing physical brilliance.

**Note:** Vikirthan is the one who is different from others.

வாடல் வெண்டலை சூடினர் மால்விடை
கோடல் செய்த குறிப்பினார்
பாடல் வண்டினம் பண்செயும்பாற்றுறை
ஆடல் நாக மசைத்தாரே. 7

வாடல்வெண்தலை சூடினர், மால்விடை
கோடல்செய்த குறிப்பினார் -
பாடல் வண்டுஇனம் பண்செயும் பாற்றுறை
ஆடல் நாகம் அசைத்தாரே.

vATal veNtalai cUTin2ar, mAlviTai
kOTal ceyta kuRippin2Ar--
pATal vaNTu in2am paN ceyum pARRuRai
ATal nAkam acaittArE.

**பொருள்:** பண் இசை போன்ற பாடல்களை முரலுகின்ற வண்டினங்கள் நிறைந்த திருப்பாற்றுறையில் சிவபெருமான் ஆடுதலில் வல்ல நாகப்பாம்பைத் தன் திருமேனியில் பல இடங்களிலும் கட்டி உள்ளார். உலர்ந்த வெண்மையான தலைஓடுகளை மாலையாகச் சூடியுள்ளார். பெரிய இடபத்தின் மேல் ஏறிவந்து என் அழகைக் கவர்ந்து செல்லும் கொள்கையினை உடையவர் ஆயினார்.

**குறிப்புரை:** ஆடும் அரவை அணிந்த பாற்றுறை நாதர் விடையேறிப் பிரிதலைக் கருதினார் என்கின்றது. வாடல் வெண்தலை – உலர்ந்த தலை. மால்விடை கோடல் செய்த குறிப்பினார் – பெரிய இடபத்தைக் கொள்ளுதலைச் செய்த குறிப்பினை உடையவர். என்றது ஊர்தியாகிய விடையைக் கொள்ளுதல் என்பது தலைவன் பிரிவு கருதியதாம்.

Lord Civan abides in Thiruppaatturai where bees hum in musical notes. He wears in many places of His holy body, the cobra which is known for dexterous dance. He puts on white dried skulls as garland in His body. He rode on the big bull and approached me with intention to snatch away my beauty.

**Note:** The snake is symbolic of Kundalini Yoga.

வெவ்வ மேனியராய் வெள்ளை நீற்றினர்
எவ்வஞ் செய்தெனெழில் கொண்டார்
பவ்வநஞ் சடைகண்ட ரெம்பாற்றுறை
மவ்வல் சூடிய மைந்தரே. 8

**வெவ்வ மேனியராய், வெள்ளை நீற்றினர்;**
**எவ்வம் செய்து, என் எழில் கொண்டார்;**
**பவ்வநஞ்சு அடை கண்டர் - எம் பாற்றுறை**
**மவ்வல் சூடிய மைந்தரே.**

vevva mEn2iyarAy, veLLai nIRRin2ar;
evvam ceytu, en2 ezil koNTAr;
pavvananjcu aTai kaNTar--em pARRuRai
mavval cUTiya maintarE.

**பொருள்:** திருப்பாற்றுறை இறைவனான சிவபெருமான் கடல் நஞ்சைக் கண்டத்தில் அடக்கியவர். முல்லை மலர் சூடிய மைந்தர். வெம்மையோடு கூடிய மேனியை உடையவர். திருவெண்ணீறு அணிந்தவர். என் எழிலைக் கவர்ந்துப் பின் எனக்குப் பிரிவுத் துன்பத்தைத் தந்தவர் ஆவர்.

**குறிப்புரை:** முல்லை சூடிய இறைவர் பிரிவுத் துன்பத்தை எனக்குப் பெரிதாக்கி எனது அழகைக் கவர்ந்தார் என்கின்றது. வெவ்வ மேனியர் – வெம்மையோடு கூடிய மேனியை உடையவர். எவ்வம் செய்து – துன்புறுத்தி. பவ்வம் நஞ்சு – கடல் நஞ்சு. மவ்வல் – முல்லை.

Lord Civan's body blazes bright. He smears His body with white ashes. He holds in His throat the oceanic venom. He is the male who wears the November flower (*முல்லைப்பூ* - Jasminum trichotomum). He approached me and snatched away my prettiness, which later caused in me love sickness.

ஏனமன்ன முமான வருக்கெரி
ஆனவண் ணத்தெம ண்ணலார்
பானல ம்மலர்விம் மியபாற்றுறை
வானவெண் பிறை மைந்தரே. 9

**ஏனம் அன்னமும் ஆனவருக் எரி**
**ஆன வண்ணத்து எம் அண்ணலார் -**
**பானல் அம்மலர் விம்மிய பாற்றுறை**
**வானவெண்பிறை மைந்தரே.**

En2am an2n2amum An2avarukku eri
An2a vaNNattu em aNNalAr--
pAn2al ammalar vimmiya pARRuRai
vAn2a veNpiRai maintarE.

***பொருள்:*** நீலோற்பவ மலர்கள் நிறைந்த நீர்நிலைகள் உள்ள தலம் திருப்பாற்றுறை. இங்கு வானகத்தே விளங்கும் வெண்மையான பிறைமதியைச் சூடிய மைந்தராகச் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இவர், பன்றியும் அன்னமுமாய் அடிமுடி தேடிய திருமால், பிரமன் ஆகியோருக்கு தீப்பிழம்பாக ஓங்கி நின்ற அண்ணலார் ஆவார்.

***குறிப்புரை:*** தீப்பிழம்பாகிய செல்வரே வெண்பிறை அணிந்த மைந்தராக இருக்கின்றார் என்கின்றது. ஏனம் – பன்றி. பானல் – நீலோற்பவம்.

In Thiruppaatturai there are a good number of tanks full of water and plenty of blue lily flowers. In this town Lord Civan is enshrined who has on His matted hair the white bright crescent moon, which crawls over in the sky. He is the dignified Lord who stood as a big tall blazing column of fire before Thirumaal and Brahma who had gone out in search of His head and feet in vain.

**Note:** The column of fire symbolises infinity.

வெந்த நீற்றினர் வேலினர் நூலினர்
வந்தென ன்னலம் வெளவினார்
பைந்தண் மாதவிசூழ் தருபாற்றுறை
மைந்தர் தாமோர் மணாளரே. 10

***வெந்தநீற்றினர், வேலினர், நூலினர்,***
***வந்து என் நன்நலம் வௌவினார் -***
***பைந் தண் மாதவி சூழ்தரு பாற்றுறை***
***மைந்தர்தாம் ஓர் மணாளரே.***

venta nIRRin2ar, vElin2ar, nUlin2ar,
vantu en2 nan2 nalam vauvin2Ar--
pain taN mAtavi cUztaru pARRuRai
maintartAm Or maNALarE.

***பொருள்:*** பசுமையான குருக்கத்திக் கொடிகள் சூழ்ந்துள்ள திருப்பாற்றுறை மைந்தரான சிவபெருமான், முன்னரே மலைமகளை மணந்த மணாளர் ஆவார். ஆயினும், அவர் தம்

மேனிமீது வெந்த திருநீறு பூசியவராய், கையில் வேலை ஏந்தியவராய், மார்பில் பூணூல் அணிந்தவராய் வந்து என் அழகினைக் கவர்ந்து சென்றார்.

**குறிப்புரை:** பாற்றுறை மணாளர் என் நலம் வௌவினார் என்கின்றது. இதில் தலைவி தலைவருடைய உள்ளத் தூய்மையைக் காட்டும் வீரத்தை விளக்கும் வேலையும், இதுவரை மணமாகாமையைக் காட்டும் நூலையுங்கண்டு காதலித்தேன். அவர் என் நலத்தை வௌவினார் என்பது தோன்ற, நீற்றினர் வேலினர் நூலினராய் வந்து என் நலத்தை வௌவினார் என்கின்றார். எம்மணாளர் என்னாது ஓர் மணாளர் என்றது மலைமகளையும் முன்னரே மணந்திருக்கின்றமை குறிப்பிக்க. இப்பதிகத்துள் இராவணனை அடர்த்ததும், புறச்சமயிகளைப் பற்றிய குறிப்பும் கூறாமை, தலைவனும் தலைவியுமாய் இருந்து அநுபவிக்கும் அருள்நெறி முதிர்ச்சியால் என அறிக. வரும் தோணிபுரப் பதிகத்தும் இக்காட்சியைக் காண்க.

Manly Lord Civan is enshrined in Thiruppaatturai. In this city the tender and fresh "common delight of the woods" (*குருக்கத்தி - மாதவிக்கொடி* – Hiptage madablota) are found all around the town. He smears His body with burnt holy ashes. He wields in one of His hands the spear. He wears the sacred thread in His chest. He approached me in desire and snatched away my elegant loveliness. He is already a groom, having married the daughter of the Himaalayan king.

**Note:** In this hymn Gnaanasambandar has not mentioned any thing about Raavanaa's incident nor about the false propaganda of Jains and Buddhists. It is evidently because of the imagery of male and female acting as one and experiencing Divine Bliss together (Sanmaargam concept of Lord and Consort).

Civa is the eternal Bridegroom (Kaliyaana Sundarar).

பத்தர் மன்னிய பாற்றுறை மேவிய
பத்து நூறு பெயரனைப்
பத்தன் ஞான சம்பந்த னதின்தமிழ்
பத்தும் பாடிப் பரவுமே. 11

*பத்தர் மன்னிய பாற்றுறை மேவிய*
*பத்து - நூறு பெயரனை,*
*பத்தன் ஞானசம்பந்தனது இன்தமிழ்*
*பத்தும் பாடிப் பரவுமே!*

pattar man2n2iya pARRuRai mEviya
pattu-nURu peyarAn2ai,
pattan2 njAn2acampantan2atu in2 tamiz
pattum pATip paravumE!

**பொருள்:** பக்தர்கள் நிறைந்துள்ள தலம் திருப்பாற்றுறை. இங்கு, ஆயிரம் திருநாமங்களை உடைய சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். பக்தனாகிய ஞானசம்பந்தன் பாடிய இனிய இத்தமிழ் பாடல்கள் பத்தையும் பாடிப் போற்றுங்கள்.

**குறிப்புரை:** பாற்றுறை நாதரைப் பற்றிய இப்பாடல் பத்தையும் சொல்லிப் பரவுங்கள் என்கின்றது. பத்து நூறு பெயரன் – ஆயிரந்திருநாமத்தை உடையவன்.

The names of Lord Civan are ten times a hundred [i.e., innumerable (infinite)]. He abides in Thiruppaatturai where a large number of devotees hail Him. Ye companions! Hail and sing the delightful hymn composed by the devotee Gnaanasambandan, who adored Lord Civan of this place, in chaste Tamil verse.

**Note:** To come by bhakti, the devotee should cultivate the hymns of the bhakta par excellence (St. Thiru Gnaanasambandar).

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

**56**ஆம் பதிகம் முற்றிற்று
End of 56th Hymn

உ
சிவமயம்

# 57. திருவேற்காடு

## திருத்தலவரலாறு:

திருவேற்காடு என்ற திருத்தலம் தொண்டை நாட்டுத் தலம் ஆகும். சென்னையைச் சேர்ந்த தலம். சென்னையில் இருந்து நகரப் பேருந்துகள் பல உள்ளன. இங்கு வேல் தல விருட்சம் ஆதலின் இப்பெயர் எய்தியது. இங்குள்ள இறைவன் அகத்தியருக்கு மணக்கோலம் காட்டி அருளினார். சுப்பிரமணியர், சூரசம்காரத்தின் பின் பூசித்த தலம். இறைவன் பெயர் வேற்காட்டு நாதர், வேதபுரீசுவரர். இறைவியின் பெயர் வேற்கண்ணியம்மை. தீர்த்தம் வேலாயுத தீர்த்தம். விருட்சம் – வேல். கருமாரியம்மன் கோயில் பிரசித்தமானது.

## பதிக வரலாறு:

திருக்காளத்தி மலையை வணங்கிக் காளத்தியிற் சிலகாலம் தங்கியிருந்த காழிப்பிள்ளையார் அடியார் கூட்டத்தோடு காடும் மலையும் கடந்து, வழியில் பல தலங்களையும் வணங்கிக் கொண்டு, பாலியாற்று வடகரையில் இருக்கும் திருவேற்காட்டை வந்தடைந்தார்கள். அங்குள்ள செழுஞ்சுடர் பொற்கோயிலை அடைந்து பணிந்து, 'ஒள்ளிது உள்ள' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

# 57. THIRU-VĒR-KAADU

## THE HISTORY OF THE PLACE

This sacred place is in Thondai Naadu, near the city of Chennai. There are town buses from Chennai to this temple. Since 'vel' is the sacred tree for this temple, the name became Thiruverkaadu.

The name of the God is Verkaattunaathar or Vedhapureesuvarar; that of the Goddess is Verkanniyammai. The sacred ford is Velaayutha Theerththam. The Lord here graced Sage Agaththiyar with a vision of Himself in the style of a bridegroom at His wedding ceremony. It is also known as the temple where Subbiramaniyar offered worship after He destroyed the demon Sooran. The temple for Karumaariyamman here is very famous.

## INTRODUCTION TO THE HYMN

On his return from Kaalatthi, our saint visited Ṭhiru-vēr-kaadu and hailed Civa with the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

### 57. திருவேற்காடு — 57. THIRU-VĒR-KAADU

பண் : பழந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakka Raagam*
*Raagam: Aarabi*

ஒள்ளி துள்ளக் கதிக்காமி வனொளி
வெள்ளி யானுறை வேற்காடு
உள்ளி யாருயர்ந்தா ரிவ்வுலகினில்
தெள்ளி யாரவர் தேவரே. 1

ஒள்ளிது உள்ள, கதிக்கு ஆம்; இவன் ஒளி
வெள்ளியான் உறை வேற்காடு
உள்ளியார் உயர்ந்தார்; இவ் உலகினில் -
தெள்ளியார்; அவர் தேவரே.

pazantakkarAkamoLLitu uLLa, katikku Am; ivan2 oLi
veLLiyAn2 uRai vERkATu
uLLiyAr uyarntAr; iv ulakin2il
teLLiyAr; avar tEvarE.

**பொருள்:** மிகவும் உயர்ந்த மெய்ப்பொருளை அன்போடு உள்ளத்தில் எண்ணினால், அது நற்கதிக்கு செல்லும் நுழைவாயிலாக அமைகிறது. அத்தகைய மெய்ப்பொருளாய், வெண்மையான ஒளி வடிவினனாய், சிவபெருமான் திருவேற்காட்டில் எழுந்தருளியுள்ளார். இந்த ஒளிமயமான இறைவனை நினைந்தவர்கள் இவ்வுலகில் உயர்ந்தவர் ஆவர். அந்த ஒளிமயமான இறைவனைக் கண்டு தெளிந்தவர்கள் தேவர்கள் ஆவர்.

**குறிப்புரை:** மிகவும் உயர்ந்ததை எண்ணின் அது நற்கதிக்கு வாயிலாம்; ஆதலால் வேற்காடு எண்ணியவர்கள் இவ்வுலகில் தேவராவர் என்கின்றது. ஒள்ளிது – உயர்ந்த பொருளை. உள்ள – எண்ண; உள்ளம் – உயிருமாம். உள்ளியார் – எண்ணியவர்கள்.

Those persons who think with sincere love that the Supreme Lord Civan is the only one great Reality, will reach the path to blissful state. The frame of that Civan of Reality, is pure white effulgent. He is enshrined in Thiru-vēr-kaadu. Those who pay obeisance to this Lord will become eminent persons in this world; and by realising His gracefulness they will become Devas.

**Note:** They are demigods who have gained the grace of Civa – the God of gods.

ஆடல்நாக மசைத்தள வில்லதோர்
வேடங் கொண்டவன் வேற்காடு
பாடியும் பணிந்தாரிவ் வுலகினில்
சேடராகிய செல்வரே. 2

**ஆடல் நாகம் அசைத்து, அளவு இல்லது ஓர்**
**வேடம் கொண்டவன் வேற்காடு**
**பாடியும் பணிந்தார் இவ் உலகினில்**
**சேடர் ஆகிய செல்வரே.**

ATal nAkam acaittu, aLavu illatu Or
vETam koNTavan2 vERkATu
pATiyum paNintAr iv ulakin2il
cETar Akiya celvarE.

***பொருள்:*** சிவபெருமான் ஆடுதற்குரிய பாம்பைத் தன் இடையிற் கட்டியுள்ளார். அவர் அளவற்ற பல்வேறு வடிவங்களைக் கொண்டவர். இந்த திருவேற்காடு இறைவனைப் புகழ்ந்து பாடி வணங்குபவர்கள், இவ்வுலகில் பெருமை பொருந்திய செல்வர்கள் ஆவர்.

***குறிப்புரை:*** வேற்காடு பணிந்தார் இவ்வுலகில் பெரிய செல்வராவர் என்கின்றது. சேடர் – பெருமை உடையவர்.

Lord Civan binds the dancing snake in His waist. He takes many different forms as necessitated by the situation. He is enshrined in Thiru-vēr-kaadu. Those who pay obeisance to this Lord by singing His praise will become renowned munificent men in this world.

**Note:** Vetam is Civa-vetam.

பூதம் பாடப்புறங் காட்டிடையாடி
வேத வித்தகன் வேற்காடு
போது ஞ்சாந்தும் புகையுங் கொடுத்தவர்க்
கேத மெய்து தலில்லையே. 3

***பூதம் பாடப் புறங்காட்டுஇடை ஆடி,***
***வேதவித்தகன், வேற்காடு,***
***போதும் சாந்தும் புகையும் கொடுத்தவர்க்கு***
***ஏதம் எய்துதல் இல்லையே.***

pUtam pATap puRagkATTu iTai ATi,
vEtavittakan2, vERkATu,
pOtum cAntum pukaiyum koTuttavarkku
Etam eytutal illaiyE.

***பொருள்:*** சிவபெருமான் பூதகணங்கள் பாட, சுடுகாட்டில் நடனம் ஆடுபவர். வேதங்களை அருளிய ஞானாசிரியன். இந்த திருவேற்காட்டு நாதரை மலர்களும், சந்தனமும், நறும்புகையும் கொண்டு வழிபட்டவர்களுக்கு துன்பங்கள் வாரா.

***குறிப்புரை:*** வேற்காட்டு நாதரைப் பூவுஞ்சாந்தும் புகையுங் கொண்டு வழிபட்டவர்க்கு ஏதம் எய்தாது என்கின்றது. புறங்காடு – சுடுகாடு. ஆடி – ஆடுபவன். பெயர்ச்சொல். ஏதம் – துன்பம்.

Lord Civan of Thiru-vēr-kaadu dances in the burning ground to the singing of goblins. As an embodiment of wisdom He authored the Vedas. Those who worship and hail this Lord with flowers, sandalwood paste and fragrant smoke will never have any calamity.

**Note:** The adorers of Civa are freed from troubles.

ஆழ்கட லெனக்கங்கை கரந்தவன்
வீழ்சடை யினன்வேற்காடு
தாழ்வுடை மனத்தாற் பணிந்தேத்திடப்
பாழ்படும் மவர் பாவமே. 4

***ஆழ்கடல் எனக் கங்கை கரந்தவன்,***
***வீழ்சடையினன், வேற்காடு***
***தாழ்வு உடை மனத்தால், பணிந்து ஏத்திட,***
***பாழ்படும்(ம்), அவர் பாவமே.***

AzkaTal en2ak kagkai karantavan2,
vIzcaTaiyin2an2, vERkATu,
tAzvu uTai man2attAl, paNintu EttiTa,
pAzpaTum(m), avar pAvamE.

**பொருள்:** சிவபெருமான் ஆழமான கடல் என்று சொல்லத்தக்க கங்கை நதியை மறைக்கும் விழுது போன்ற சடைமுடியை உடையவர். இந்த திருவேற்காட்டு இறைவனைப் பணிவான உள்ளத்தோடு வணங்கித் துதிப்பவர்களின் பாவங்கள் அழிந்து ஒழியும்.

**குறிப்புரை:** பணிந்த மனத்தோடு ஏத்தப் பாவம் அழியும் என்கின்றது. ஆழ்கடல் எனக் கங்கை கரந்தவன் – பல மகாநதிகளைத் தன்னகத்து அடக்கிக் கொள்ளும் கடலைப்போல, கங்கையை அடக்கியவன். வீழ்சடை – விழுதுபோலும் சடை. தாழ்வுடை மனம் – பணிந்த உள்ளம். தாழ்வெனுந் தன்மை (சித்தியார்) பாவம் பாழ்படும் – பாவம் பயன் அளியாது ஒழியும்.

Lord Civan of Thiru-vēr-kaadu conceals in His hanging matted hair the Ganges river, deep as the sea. Those who worship and hail this Lord in all humility will get rid of their sins.

**Note:** Civa's Ganga washes all sins away (as the sea absorbs all, so does His matted hair concealed the Ganges).

காட்டி னாலு மயர்த்திடக் காலனை
வீட்டி னானுறை வேற்காடு
பாட்டி னாற்பணிந் தேத்திட வல்லவர்
ஓட்டி னார்வினை ஒல்லையே. 5

***காட்டினாலும், அயர்த்திடக் காலனை***
***வீட்டினான், உறை வேற்காடு***
***பாட்டினால் பணிந்து ஏத்திட வல்லவர்***
***ஓட்டினார், வினை ஒல்லையே.***

kATTin2An2um, ayarttiTak kAlan2ai
vITTin2An2, uRai vERkATu
pATTin2Al paNintu EttiTa vallavar
OTTin2Ar, vin2ai ollaiyE.

**பொருள்:** மார்கண்டேயர் பூசித்து, சிவபெருமானே முழுமுதற் கடவுள் என்பதைக் காட்டியும், காலன் அதனை உணராமல் மயங்கி அவன் உயிரைக் கவர வந்தான். அந்தக் காலனை

அழித்த சிவபிரான் உறையும் இடம் திருவேற்காடு. இந்த இறைவனைப் பாடல்கள் பாடிப் பணிந்து வழிபட வல்லவர்கள் தம் வினைகளை விரைவில் ஓட்டியவர் ஆவார்கள்.

**குறிப்புரை:** இது பாடிப் பணிந்து ஏத்த வல்லவர் வினை ஓடும் என்கின்றது. காட்டினாலும் அயர்த்திடு அக்காலனை – மார்க்கண்டேயர் பூசித்து, சிவன் முழுமுதல்வன் என்பதைக் காட்டினாலும் அதனை உணராதே மயங்கிய காலனை, வீட்டினான் – அழித்தவன். ஒல்லை – விரைவு காட்டினானும் என்ற பாடமும் உண்டு.

Sage Markandeyar declared to Yama, the god of death, that Lord Civan is the only Supreme Being above all in the universe. Ignoring this, Yama approached Markandeyar to take away his life. Lord Civan of Thiru-vēr-kaadu gave a deadly kick to Yama and he fell dead. Those who sing and worship Lord Civan of this place with humility will get rid of the evil effects of their bad karma.

**Note:** Death cannot lay its icy hands on Civa-bhaktas.

தோலினா லுடைமேவ வல்லான்சுடர்
வேலினா லுறைவேற்காடு
நூலினாற் பணிந்தேத் திடவல்லவர்
மாலினார் வினை மாயுமே. 6

**தோலினால் உடை மேவ வல்லான், சுடர்**
**வேலினான் உறை வேற்காடு**
**நூலினால் பணிந்து ஏத்திட வல்லவர்,**
**மாலினார், வினை மாயுமே.**

tOlin2Al uTai mEva vallAn2, cuTar
vElin2An2, uRai vERkATu
nUlin2Al paNintu EttiTa vallavar,
mAlin2Ar, vin2ai mAyumE.

**பொருள்:** திருவேற்காட்டுச் சிவபெருமான் ஒளி பொருந்திய வேலைக் கையில் கொண்டு உள்ளார். தோலினால் அமைந்த உடைகளைக் கட்டியும் போர்த்தும் உள்ளார். ஆகம நூல்களில் விதித்தவாறு வழிபட்டு ஏத்த வல்லவர்க்கு மயங்கச் செய்யும் வினைகள் மாய்ந்து ஒழியும்.

**குறிப்புரை:** விதிப்படி ஏத்த வல்லவர்க்கு வினைமாயும் என்கின்றது நூலினால் – ஆகம விதிப்படி. மாலினார் வினை – மயங்கிய ஆன்மாக்களினது வினை.

Lord Civan of Thiru-vēr-kaadu wears and covers His body with garments made out of animal skin. He holds in one of His hands the luminous spear. Those who offer worship and hail this Lord as detailed in the Aagamaas will get rid of their confusion and the evil effects of bad karma.

மல்லல் மும்மதில் மாய்தர எய்ததோர்
வில்லினா னுறைவேற்காடு
சொல்ல வல்ல சுருங்கா மனத்தவர்
செல்ல வல்லவர் தீர்க்கமே. 7

மல்லல் மும்மதில் மாய்தர எய்தது ஓர்
வில்லினான் உறை வேற்காடு
சொல்ல வல்ல சுருங்கா மனத்தவர்
செல்ல வல்லவர், தீர்க்கமே.

mallal mummatil mAytara eytatu Or
villin2An2 uRai vERkATu
colla valla curugkA man2attavar
cella vallavar, tIrkkamE.

**பொருள்:** திருவேற்காட்டுச் சிவபெருமான் வளமை பொருந்திய முப்புரங்களும் அழிந்து ஒழியுமாறு அம்பை எய்தவர். ஒப்பற்ற மேரு மலையை வில்லாக ஏந்தியவர். இந்தப் பெருமானைப் புகழ்ந்து சொல்ல வல்லவர்கள் பரந்து விரியும் மனதுடையவர்கள். அத்தலத்தில் சென்று தரிசிக்க வல்லவர்கள் நீண்ட ஆயுள் பெறுவர்.

**குறிப்புரை:** இறைவனை எப்பொழுதும் பேசவல்ல குவியா மனத்து அடியவர்கள் நீடு வாழ்வர் என்கின்றது. தீர்க்கம் – நெடுங்காலம்.

Lord Civan of Thiru-vēr-kaadu, by holding the Meru mountain as His bow sent a dart and destroyed the three prosperous citadels of the Asuras. Those who hail Him and the Thiru-vēr-kaadu city where He is enshrined will have liberal minded hearts. Those who can reach this place and worship Him here will have longevity of life.

**Note:** Civa alone can quell the two malas.

மூரல்வெண் மதிசூடு முடியுடை
வீரன்மேவிய வேற்காடு
வாரமாய் வழிபாடு நினைந்தவர்
சேர்வர் செய்கழல் திண்ணமே. 8

மூரல்வெண்மதி சூடு முடி உடை
வீரன் மேவிய வேற்காடு
வாரம் ஆய் வழிபாடு நினைந்தவர்
சேர்வர் செய் கழல்; திண்ணமே.

mUral veN mati cUTum muTi uTai
vIran2 mEviya vERkATu
vAram Ay vazipATu nin2aintavar
cErvar, cey kazal; tiNNamE.

**பொருள்:** சிவபெருமான் இளமையான வெண்மை நிறங்கொண்ட பிறைமதியைத் தனது திருமுடியில் சூடியவர். அவர் ஒரு வீரனாக திருவேற்காட்டில் எழுந்தருளியுள்ளார். இப்பெருமானை அன்போடு வழிபடுபவர்கள் நிச்சயமாக அவரது சிவந்த திருவடிகளைச் சேர்வர்.

**குறிப்புரை:** அன்போடு வழிபடுவார் அடி அடைவர் என்கின்றது. மூரல் – இளமை. வாரம் – அன்பு.

Lord Civan of Thiru-vēr-kaadu is the hero who wears on His holy matted hair the young and bright crescent moon. Those who offer worship to this Lord with utmost love and sincerity will definitely have communion with His ruddy Holy Feet.

**Note:** Civa's feet are salvific.

பரக்கினார் படுவெண்டலை யிற்பலி
விரக்கினா னுறைவேற்காட்டூர்
அரக்கனா ண்மையடரப் பட்டானிறை
நெருக்கி னானை நினைமினே. 9

பரக்கினார் படுவெண்தலையில் பலி
விரக்கினான் உறை வேற்காட்டூர்,
அரக்கன் ஆண்மை அடரப்பட்டான் இறை
நெருக்கினானை நினைமினே!

parakkin2Ar paTu veN talaiyil pali
virakkin2An2 uRai vER kATTUr,
arakkan2 ANmai aTarappaTTAn2 iRai
nerukkin2An2ai nin2aimin2E!

**பொருள்:** சிவபெருமான், பிரமனின் தலை ஓட்டில் பலி ஏற்கின்ற சமர்த்தர். இவர் உறைகின்ற தலம் திருவேற்காடு. இப்பெருமான், அரக்கனாகிய இராவணனின் ஆணவத்தைத் தன் கால் விரலால் அடர்த்து நெருக்கியவர். இப்பெருமானை நினைந்து வழிபாடு செய்யுங்கள்.

**குறிப்புரை:** இராவணனது ஆண்மையை அடர்த்த இறைவனை நினையுங்கள் என்கின்றது. பரக்கினார் – உலகில் தன் படைப்பால் உயிர்களைத்தனு கரண புவன போகங்களோடு பரவச் செய்தவராகிய பிரமனார். விரக்கினான் – சாமர்த்தியமுடையன். விரகினான் என்பது எதுகை நோக்கி விரிந்தது.

Lord Civan of Thiru-vēr-kaadu is very skillful in accepting alms in the skull of Brahma. By slightly pressing the mount Kailash by His toe, He quelled the might of Raavanan. Ye companions! contemplate on this Lord and pay obeisance to Him.

**Note:** All can be done if the God-touch is there.

மாறிலா மலரானொடு மாலவன்
வேறலா னுறைவேற்காடு
ஈறிலா மொழியே மொழியாவெழில்
கூறினா ர்க்கில்லை குற்றமே. 10

*மாறு இலா மலரானொடு மால்அவன்*
*வேறுஅலான் உறை வேற்காடு*
*ஈறுஇலா மொழியே மொழியா எழில்*
*கூறினார்க்கு இல்லை, குற்றமே.*

mARu ilA malarAn2oTu mAl avan2
vERu alAn2 uRai vERkATu
IRu ilA moziyE moziyA ezil
kURin2Arkku illai, kuRRamE.

**பொருள்:** திருவேற்காட்டில் உறையும் சிவபெருமான், ஒப்பற்ற தாமரை மலர்மேல் உறையும் நான்முகனையும், திருமால் ஆகியவர்களையும் வெற்றி கொள்பவர். இந்த இறைவனைப் பற்றிய மொழியே ஈறிலா மொழியாக அதனை அழகுபெறக் கூறினார்க்குக் குற்றமில்லை.

**குறிப்புரை:** இறைவனைப் பற்றிய மொழியே ஈறிலா மொழியாக அதனை அழகுபெறக் கூறினார்க்குக் குற்றமில்லை என்கிறது. வேறலான் – வெல்லுதலையுடையான். வேறாகாதவன் எனலுமாம்.

Lord Civan of Thiru-vēr-kaadu overpowered Thirumaal and Brahma who is seated in the matchless Lotus flower. Those who praise this Lord in sacred and endless words on His uncomparable aspects and attributes will be His flawless devotees.

**Note:** Praise Civa and travel on life's decent way in cheerful Godliness.

விண்ட மாம்பொழில் சூழ்திருவேற்காடு
கண்டு நம்பன் கழல்பேணிச்
சண்பை ஞானசம்பந்தன செந்தமிழ்
கொண்டு பாடக் குணமாமே. 11

*விண்ட மாம்பொழில் சூழ் திரு வேற்காடு
கண்டு, நம்பன் கழல் பேணி,
சண்பை ஞானசம்பந்தன செந்தமிழ்-
கொண்டு பாட, குணம்ஆமே.*

viNTa mAmpozil cUz tiru vERkATu
kaNTu, nampan2 kazal pENi,
caNpai njAn2acampantan2 centamiz--
koNTu pATa, kuNam AmE.

**பொருள்:** விரிந்த மலர்களை உடைய மாஞ்சோலைகள் சூழ்ந்த திருவேற்காட்டை அடையுங்கள். அங்கு எழுந்தருளியுள்ள சிவபெருமானின் திருவடியைத் தியானியுங்கள். சீகாழிப் பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் உரைத்த செந்தமிழ் பதிகத்தால் பாடிப் போற்றுங்கள். நன்மைகள் விளையும்.

**குறிப்புரை:** திருவேற்காட்டைத் தரிசித்து இறைவன் திருவடியைத் தியானித்து இப்பதிகத்தைப் பாடக் குணமாம் என்கின்றது. விண்ட – மலர்ந்த. சண்பை சீகாழிக்கு மறுபெயர்.

Sage Gnaanasambandan hailing from Seekaazhi praised and worshipped the Holy Feet of Lord Civan and sang this hymn in chaste Tamil language. He is enshrined in Thiru-vēr-kaadu. This town is surrounded by mango groves full of blossomed flowers. Those who can sing this hymn and worship this Lord will get all goodness.

**Note:** St. Sambandhar's hymns show us the way.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*57ஆம் பதிகம் முற்றிற்று*
End of 57th Hymn

உ
சிவமயம்

# 58. திருக்கரவீரம்

## திருத்தலவரலாறு:

திருக்கரவீரம் என்ற திருத்தலம் சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம் ஆகும். இத்தலம் கரையபுரம் என வழங்கும். திருவாரூர், கும்பகோணம் பேருந்து வழியில் உள்ளது. கௌதமர் பூசித்துப் பேறு பெற்ற தலம். கரவீரம் – பொன் அலரி. அலரியைத் தலமரமாகக் கொண்ட காரணத்தால் கரவீரம் என்றாயது. இறைவன் கரவீரநாதர். இறைவி பிரத்தியட்ச மின்னம்மை. தீர்த்தம் அனவரத தீர்த்தம். இத்தலம் திருவாரூருக்கு மேற்கே உள்ளது.

## பதிக வரலாறு:

திருஞானசம்பந்த சுவாமிகள் திருச்சாத்தங்குடி சென்று பெருமானை வணங்கிய பின்பு, திருக்கரவீரத்தை அடைந்து நம்பர்தாளை வணங்கி 'அரியும் நம்வினை' என்னும் இத்திருப்பதிகத்தை அருளிச் செய்தார்கள்.

# 58. THIRU-K-KARA-VEERAM

## THE HISTORY OF THE PLACE

This sacred place is to the south of river Cauvery in Chola Naadu. It is also known as Karaiyapuram. The place got this name since Karaveeram or Pon Alari is the sacred tree of the temple. It is in the bus route connecting Thiruvaaroor and Kumbakonam and is to the west of Thiruvaaroor.

The name of the God is Karaveeranaathar and that of the Goddess is Piraththiyatchaminnammai. The sacred ford is Anavaratha Theerththam.

## INTRODUCTION TO THE HYMN

Thirugnaanasambandar arrived at this holy place during his pilgrimage from Thiru-ch-chatthangudi and sang the following hymn:

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 58. திருக்கரவீரம் 58. THIRU-K-KARA-VEERAM

பண் : பழந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakka Raagam*
*Raagam: Aarabi*

அரியுநம் வினையுள்ளன ஆசற
வரிகொள் மாமணி போற்கண்டங்
கரியவன் திகழுங் கரவீரத்தெம்
பெரியவன் கழல் பேணவே. 1

அரியும், நம் வினைஉள்ளன ஆசு அற -
வரி கொள் மாமணி போல் கண்டம்
கரியவன், திகழும் கரவீரத்து எம்
பெரியவன், கழல் பேணவே.

ariyum, nam vin2ai uLLan2a Acu aRa--
vari koL mAmaNi pOl kaNTam
kariyavan2, tikazum karavIrattu em
periyavan2, kazal pENavE.

**பொருள்:** திருக்கரவீரத்தில் எழுந்தருளியுள்ள எம்பெருமானாகிய சிவபெருமான், வரிகள் அமைந்த சிறந்த நீலமணி போலக் கருநீலக் கழுத்துடையவராக விளங்குகின்றார். இவரது திருவடிகளைத் துதித்தால் நம் வினைகள் யாவும் முற்றிலும் நீங்கும்.

**குறிப்புரை:** கரவீரத்து இறைவன் கழல் பேண வினையுள்ளன எல்லாம் அரியும் என்கின்றது. கழல்பேண நம்வினையுள்ளன அரியும் எனக் கூட்டுக. வரிகொள் மாமணி – நிறங்கொண்ட நீலமணி. வினை உள்ளன – உள்ள வினைகள், எஞ்சு வினைகள் எனலும் கூடும். எஞ்சு வினை – சஞ்சிதம்.

Our Lord Supreme, Civan is entempled in Thiru-k-kara-veeram. His neck is of dark blue in colour, similar to the lined sapphire gem. If we worship the Holy Feet of this Lord, the entire evil effects of bad karma will be completely wiped out.

தங்குமோ வினைதாழ் சடைமேலவன்
திங்களோ டுடன்சூடிய
கங்கையா ன்திகழுங் கரவீரத்தெஞ்
சங்கரன் கழல் சாரவே. 2

தங்குமோ, வினை-தாழ்சடை மேலவன்,
திங்களோடு உடன்சூடிய
கங்கையான், திகழும் கரவீரத்து எம்
சங்கரன், கழல் சாரவே?

tagkumO, vin2ai--tAzcaTai mElavan2,
tigkaLOTu uTan2cUTiya
kagkaiyAn2, tikazum karavIrattu em
cagkaran2, kazal cAravE?

**பொருள்:** திருக்கரவீரத்தில் விளங்கும் சங்கரனாகிய சிவபெருமான், தாழ்ந்து தொங்கும் சடைமுடிகளை உடையவர். அவர் யாவருக்கும் உயர்ந்தவர். இளம்பிறைச் சந்திரனோடு கங்கையையும் உடனாகச் சூடியவர். இந்தச் சங்கரனின் திருவடிகளை வழிபட்டால் நம்மைப் பற்றின வினைகள் தங்குமோ? தங்காது.

**குறிப்புரை:** சங்கரன் கழல்சார வினை தங்குமோ என வினாவுகிறது. சங்கரன் – சுகத்தைச் செய்பவன்.

Lord Sankaran (Civan) enshrined in Thiru-k-kara-veeram accommodates in His dangling matted hair, the young crescent moon as well as the river Ganges. If we worship His Holy Feet, will our evil karma affect us? No; it will not.

ஏதம்வந் தடையா வினிநல்லன
பூதம்பல் படையாக்கிய
காதலான் திகழுங்கர வீரத்தெம்
நாதன் பாதநணுகவே. 3

ஏதம் வந்து அடையா, இனி-நல்லன
பூதம் பல்படை ஆக்கிய
காதலான், திகழும் கரவீரத்து எம்
நாதன், பாதம் நணுகவே.

Etam vantu aTaiyA, in2i--nallan2a
pUtam palpaTai Akkiya
kAtalAn2, tikazum karavIrattu em
nAtan2, pAtam naNukavE.

***பொருள்:*** திருக்கரவீரத்தில் எழுந்தருளிய எம் நாதனான சிவபெருமான் அன்பு வடிவினன். நல்லனவாகிய பூதகணங்களைப் பல்வகைப் படைகளாக அமைத்துக் கொண்டவன். இவரது திருவடிகளை அடைவோரைத் துன்பங்கள் வந்தடையா.

***குறிப்புரை:*** கரவீரநாதன் பாதம் நணுக ஏதம் அடையா என்கின்றது. ஏதம் – துன்பம்.

Our Lord Civan enshrined in Thiru-k-kara-veeram is an embodiment of love. He commands the good goblins who constitute the different categories of soldiers. Those who hail His Holy Feet will not be affected by any calamity.

பறையுநம் வினையுள்ளன பாழ்பட
மறையுமா மணிபோற் கண்டம்
கறையவன் திகழுங்கர வீரத்தெம்
இறையவன் கழலேத்தவே. 4

***பறையும் நம் வினை உள்ளன பாழ்பட***
***மறையும் - மாமணி போல் கண்டம்***
***கறையவன், திகழும் கரவீரத்து எம்***
***இறையவன், கழல் ஏத்தவே.***

paRaiyum nam vin2ai uLLan2a pAzpaTa
maRaiyum--mAmaNi pOl kaNTam
kaRaiyavan2, tikazum karavIrattu em
iRaiyavan2, kazal EttavE.

***பொருள்:*** திருக்கரவீரத்தில் எழுந்தருளியுள்ள இறைவனான சிவபெருமான் நீலமணி போன்ற கழுத்தில் கறையுடையவனாக விளங்குகின்றார். இப்பெருமானின் திருவடிகளை வணங்கினால் நமது சஞ்சித கர்ம வினைகள் நீங்கும்.

***குறிப்புரை:*** கழல் ஏத்த வினை பறையும் என்கின்றது. பறையும் என்றதோடமையாது பாழ்பட பறையும் என்றது அதன் வாசனையும் கெடும் என்பதை விளக்க.

Our Lord Civan is entempled in Thiru-k-kara-veeram. His neck is of dark blue colour, similar to the sapphire gem. Even as we hail His Holy Feet, our two karmaas (Sanchitham and Aahamiyam) will vanish.

பண்ணினார் மறைபாடல னாடலன்
விண்ணினார் மதிலெய்தமுக்
கண்ணினா னுறையுங் கரவீரத்தை
நண்ணுவார் வினைநாசமே. 5

*பண்ணின் ஆர் மறை பாடலன், ஆடலன்,*
*விண்ணின் ஆர் மதில் எய்த முக்-*
*கண்ணினான் உறையும் கரவீரத்தை*
*நண்ணுவார் வினை நாசமே.*

paNNin2 Ar maRai pATalan2, ATalan2,
viNNin2 Ar matil eyta muk--
kaNNin2An2, uRaiyum karavIrattai
naNNuvAr vin2ai nAcamE.

**பொருள்:** திருக்கரவீரத்தில் உறையும் சிவபெருமான் வானத்தில் சஞ்சரித்த மும்மதில்களையும் எய்து அழித்த மூன்றாம் கண்ணை உடையவராக விளங்குகின்றார். இப்பெருமானை சந்த இசை அமைப்போடு கூடிய வேதங்களால் பாடியும், ஆடியும் அடைபவர்களின் வினைகள் நாசமடையும்.

**குறிப்புரை:** கரவீரத்தை நண்ணுவார்வினை நாசமாம் என்கின்றது. பண்ணின் ஆர் மறை – சத்தத்தோடு கூடிய வேதம்.

Lord Civan enshrined in Thiru-k-kara-veeram has a third eye in His forehead. He destroyed the three citadels flying in air. He enjoys the dance as well as the songs of Vedas sung to the tune of musical note. Those who reach Thiru-k-kara-veeram where He is entempled and offer worship, will get rid of their sins.

நிழலினார் மதிசூடிய நீள்சடை
அழலினா ரனலேந்திய
கழலினா ருறையுங் கரவீரத்தைத்
தொழவல் லார்க்கில்லை துக்கமே. 6

*நிழலின் ஆர் மதி சூடிய நீள்சடை*
*அழலினார் அனல் ஏந்திய*
*கழலினார், உறையும் கரவீரத்தைத்*
*தொழ வல்லார்க்கு இல்லை, துக்கமே.*

nizalin2 Ar mati cUTiya nIL caTai
azalin2Ar, an2al Entiya
kazalin2Ar, uRaiyum karavIrattait
toza vallArkku illai, tukkamE.

**பொருள்:** திருக்கரவீரத்தில் எழுந்தருளிய சிவபெருமான் ஒளி நிறைந்த பிறைமதியைச் சூடியிருக்கின்றார். நீண்ட சடைமுடியினர். நெருப்பைக் கையில் ஏந்தியிருக்கிறார். வீரக்கழலை திருப்பாதத்தில் அணிந்திருக்கின்றார். இப்பெருமானைத் தொழ வல்லவர்க்குத் துக்கம் இல்லை.

**குறிப்புரை:** இத்தலத்தைத் தொழுவார்க்குத் துக்கம் இல்லை என்கின்றது. நிழலின் ஆர் மதி – ஒளி நிறைந்த பிறை.

Lord Civan is enshrined in Thiru-k-kara-veeram. He wears on His long matted hair the bright crescent moon. He holds the fire in one of His palms. He is decked with anklets. Those who hail this Lord are freed from sorrows.

வண்டர்மும் மதில்மாய் தரவெய்தவன்
அண்டனா ரழல்போலொளிர்
கண்டனா ருறையுங் கரவீரத்துத்
தொண்டர் மேற்றுயர் தூரமே. 7

*வண்டர் மும்மதில் மாய்தர எய்தவன்,*
*அண்டன், ஆர் அழல் போல் ஒளிர்*
*கண்டனார் உறையும் கரவீரத்துத்*
*தொண்டர்மேல்-துயர் தூரமே.*

vaNTar mummatil mAytara eytavan2,
aNTan2, Ar azal pOl oLir
kaNTan2Ar uRaiyum karavIrattut
toNTarmEl--tuyar tUramE.

**பொருள்:** திருக்கரவீரத்தில் உறையும் சிவபெருமான் விடம் போல் ஒளிவிடும் கண்டத்தை உடையவர். தீயவர்களாகிய அசுரர்களின் முப்புரங்கள் அழிந்து ஒழியுமாறு அம்பை எய்தவர். அனைத்து உலகங்களின் வடிவாக விளங்குபவர். இப்பெருமானை வழிபடும் தொண்டர்களின் துயரங்கள் தூர விலகிவிடும்.

**குறிப்புரை:** அடியார்மேல் துயரம் தூரமாம் என்கின்றது. வண்டர் – தீயோர்களாகிய முப்புராதிகள். அழல்போல் ஒளிர் கண்டனார் – விடத்தைப் போல் ஒளிவிடுகின்ற கழுத்தை உடையவர். துயர் தூரமே – துன்பம் தூர விலகும்.

Lord Civan is entempled in Thiru-k-kara-veeram. He demolished the three citadels of the evil Asuraas by an arrow. He is the personification of the entire universe. His neck blazes like poison. The servitors of this Lord will get rid of their misery.

புனலில ங்கையர்கோன் முடிபத்திறச்
சினவலாண்மை செகுத்தவன்
கனலவன் னுறைகின்ற கரவீரம்
எனவல்லார்க் கிடரில்லையே. 8

“புனல் இலங்கையர்கோன் முடிபத்து இறச்
சின வல் ஆண்மை செகுத்தவன்,
கனலவன்(ன்), உறைகின்ற கரவீரம்”
என வல்லார்க்கு இடர் இல்லையே.

"pun2al ilagkaiyar kOn2 muTipattu iRac
cin2a val ANmai cekuttavan2,
kan2alavan2(n2), uRaikin2Ra karavIram"
en2a vallArkku iTar illaiyE.

**பொருள்:** கடலால் சூழப்பட்ட இலங்கை மக்களின் தலைவனாகிய இராவணனின் பத்துத் தலைகளையும் நெரித்தவர் சிவபெருமான். கோபத்தோடு கூடிய அவனது ஆண்மையை அழித்தவர். இப்பெருமான் எரிபோன்ற உருவினராக எழுந்தருளிய தலம் கரவீரம் என்று சொல்ல வல்லவர்க்கு துன்பம் இல்லை.

**குறிப்புரை:** கரவீரம் என்பார்க்கு இடர் இல்லை என்கின்றது. புனல் இலங்கை – கடல் சூழ்ந்த இலங்கை. சின வல் ஆண்மை – கோபத்தோடு கூடிய வலிய ஆண்மை. செகுத்தவன் – அழித்தவன்.

Lord Civan of Thiru-k-kara-veeram crushed the ten heads of Raavanan, head of the people of Sri Lanka which is surrounded by sea on all four sides. Lord Civan also nullified Raavana's anger and mighty manhood. His body dazzles like fire. Those who declare that Thiru-k-kara-veeram is the divine town where our Lord abides and adore Him, will get rid of their distress.

வெள்ளத் தாமரையா னெடுமாலுமாய்த்
தெள்ளத் தீத்திரளாகிய
கள்ளத்தா னுறையுங் கரவீரத்தை
உள்ளத்தான் வினை ஒயுமே. 9

**வெள்ளத் தாமரையானெடு மாலும்ஆய்த்**
**தெள்ள, தீத்திரள் ஆகிய**
**கள்ளத்தான் உறையும் கரவீரத்தை**
**உள்ளத் தான் வினை ஒயுமே.**

veLLat tAmaraiyAn2oTu mAlum Ayt
teLLa, tIttiraL Akiya
kaLLattAn2 uRaiyum karavIrattai
uLLat tAn2 vin2ai OyumE.

***பொருள்:*** நீரில் தோன்றும் தாமரை மலர்மேல் உறையும் நான்முகனும் திருமாலும் உண்மையைத் தெளிவாக அறியத் தீப்பிழம்பாகத் தோன்றினார் சிவபெருமான். அவர்கள் தன் உருவத்தை அறியாத வண்ணம் கள்ளம் செய்தார். இப்பெருமான் உறையும் திருக்கரவீரத்தைத் தியானிக்க வினைகள் நீங்கும்.

***குறிப்புரை:*** கரவீரத்தைத் தியானிக்க வினைவலி குன்றும் என்கின்றது. வெள்ளத் தாமரையான் – நீரில் இருக்கும் தாமரையானாகிய பிரமன். வெள்ளத்தாமரை என்றது சாதியடை. பிரமனிருக்கும் தாமரை உந்தித் தாமரையாயினும் தாமரையென்ற பொதுமை நோக்கிக் கூறப்பட்டது. தான்; அசை.

Both Vishnu, and Brahma seated on the Lotus flower that stems from water were bewildered. To make them understand the divine truth Lord Civan acting on the sly (***கள்ளம் செய்து***) took the form of a big column of dazzling fire. Those who can contemplate on and hail Thiru-k-kara-veeram where abides Lord Civan, and adore Him will get rid of their karma.

செடிய மண்ணொடு சீவரத்தாரவர்
கொடிய வெவ்வுரை கொள்ளேன்மின்
கடியவன் னுறைகின் றகரவீரத்
தடியவர்க் கில்லை யல்லலே. 10

**செடி அம(ண்)ணொடு சீவரத்தார் அவர்**
**கொடிய வெவ்உரை கொள்ளேன்மின்!**
**கடியவன்(ன்) உறைகின்ற கரவீரத்து**
**அடியவர்க்கு இல்லை, அல்லலே.**

ceTi ama(N)NoTu cIvarattAr avar
koTiya vev urai koLLEn2 min2!
kaTiyavan2(n2) uRaikin2Ra karavIrattu
aTiyavarkku illai, allalE.

**பொருள்:** அமணர்கள் முடை நாற்றமுடையவர்கள். அவர்களோடு காவி ஆடை அணிந்த புத்தர்களும் பேசுகின்ற கொடிய வெம்மையான பேச்சுக்களை உண்மை என்று கொள்ள வேண்டாம். அனைத்து உலகையும் காத்து அருளுகின்ற சிவபெருமான் திருக்கரவீரத்தில் உறைகின்றார். அவரை அண்டியவர்களுக்குத் துன்பம் இல்லை.

**குறிப்புரை:** கரவீரத்தடியவர்க்கு அல்லல் இல்லை என்கின்றது. செடி – நாற்றம். அமணொடு என்பது அமண்ணொடு என விரித்தல் விகாரம் பெற்றது. சீவரம் – காவியாடை. கொடிய வெவ்வுரை – நெறியல்லா நெறிக்கண் செலுத்தலின் கொடிய வெம்மையான உரையாயிற்று. கடியவன் – காத்தலை உடையவன்.

The Buddhists wearing cloth dyed in red ochre along with the Jains whose body emits bad smell, utter evil and cruel words as divine knowledge. Ye devotees! abiding in Thiru-k-kara-veeram, never take their words as divine knowledge. Be sure to adore Lord Civan who abides in Thiru-k-kara-veeram and sustains all the worlds, will remove your distress.

வீடிலான் விளங்குங் கரவீரத்தெஞ்
சேடன் மேற்கசிவாற்றமிழ்
நாடுஞான சம்பந்தன சொல்லிவை
பாடுவார்க் கில்லை பாவமே. 11

வீடுஇலான், விளங்கும் கரவீரத்து எம்
சேடன்மேல் கசிவால்-தமிழ்
நாடும் ஞானசம்பந்தன் சொல்இவை
பாடுவார்க்கு இல்லை, பாவமே.

vITu ilAn2, viLagkum karavIrattu em
cETan2 mEl kacivAl-tamiz
nATum njAn2acampantan2 col ivai
pATuvArkku illai, pAvamE.

**பொருள்:** அழிவில்லாதவனாக விளங்கும் திருக்கரவீரத்துப் பெருமை உடையவனான சிவபெருமான் மேல் அன்புக் கசிவால் தமிழை விரும்பும் ஞானசம்பந்தன் இப்பதிகத்தைப் பாடினார். இத்திருப்பதிகப் பாடல்களைப் பாடுவோர்க்குப் பாவம் இல்லை.

In deep love and with devotion to the Tamil language Gnaanasambandan sang this hymn on the Supreme Lord of Thiru-k-kara-veeram, who is immortal. Those who can sing with sincere devotion these verses will have no trouble in their life.

**Note:** The entire hymn attests to the truth that karma becomes nullified unto them who sing in devotion the hymns of the godly child.

The conquest of karma and flaws (1), the cessation of karma (2), the abolition of troubles (3), the vanquishing of karma, both past and present (4), the perishing of karma (5), the freedom from sorrows (6), the annulment of misery (7), completely get rid of troubles (8), the quelling of karma (9), the wiping out of trembles (10) and the eternal freedom from sin (11) constitute the message of this hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*58ஆம் பதிகம் முற்றிற்று*
End of 58th Hymn

ஓ
சிவமயம்

# 59. திருத்தூங்கானைமாடம்

## திருத்தலவரலாறு:

திருத்தூங்கானைமாடம் என்ற திருத்தலம் நடு நாட்டுத் தலம் ஆகும். விருத்தாசலத்தில் இருந்து பேருந்துகளில் செல்லலாம். இத்தலம் பெண்ணாகடம் எனவும், திருக்கடந்தை நகர் எனவும் வழங்கும். பெண் (தேவ கன்னியர்) ஆ (காமதேனு) கடம் (வெள்ளை யானை) ஆகிய இவர்கள் பூசித்துப் பேறு பெற்றதாதலின் இப்பெயர் எய்தியது. ஆலயத்தின் பெயர் தூங்கானைமாடம். அப்பரடிகள் 'பொன்னார் திருவடிக் கொன்றுண்டு விண்ணப்பம்' என்றேத்தித் தம்முடைய தோளின் மேல் சூலக்குறியும் இடபக்குறியும் பெற்ற தலம். இங்கு அவதரித்த கலிக்கம்ப நாயனார், ஒருநாள் தன் பணியாளனே சிவனடியாராக வர, தம் மனைவி அவருக்கு நீர்வார்க்கத் தாழ்த்தமையை அறிந்து மனைவியின் கரத்தை வாள்கொண்டு வெட்டி வீடு பெற்றார். மெய் கண்ட தேவரின் தகப்பனார் அச்சுத களப்பாளர் வாழ்ந்த தலமும் இதுவே. சுவாமி பெயர் சுடர்க்கொழுந்து நாதர். அம்மை கடந்தை நாயகி. தீர்த்தம் கெடில நதி.

## கல்வெட்டு:

பரகேசரி வர்மனான இராஜேந்திரன் காலத்தில் வடகரை இராஜாதிராஜ வளநாட்டு மேற்காநாட்டுப் பிரமதேயமான முடிகொண்ட சோழ சதுர்வேதி மங்கலத்துத் திருத்தூங் கானை மாடம் என்று குறிக்கப்பட்டு உள்ளது. இறைவன் நாமம் திருத்தூங்கானை மாடமுடைய மகாதேவர் எனவும், திருத்தூங்கானை மாடமுடைய நாயனார் எனவும் நல்ல பெண்ணாகடத்தில் உள்ள வீற்றிருந்த பெருமான் எனவும், திருத்தூங்கானை மாடத்துக் கடவுள் எனவும் வழங்கப்படுகின்றது. இவையன்றி கோயிலுள் கோச்செங்கணேசுவரம் உடையார் கோயிலும் மதுராந்தக ஈச்சரமுடையார் கோயிலும் தனிமையாகப் பள்ளிகொண்ட பெருமாள் கோயிலும் இருந்திருக்கின்றன.

இராஜகேசரி வர்மனான குலோத்துங்கன் காலத்து வடகயிலாயமுடைய மகாதேவர்க்கு விருதராச பயங்கர வளநாட்டு மேற்கா நாட்டு முடிகொண்ட சோழ சதுர்வேதி மங்கலத்துச் சபையாரால் நிலம் தானம் வழங்கப்பட்டது. திருத்தூங்கானை மாடமுடைய மகாதேவர் கோயிலுக்கும் கோச்செங்ணேசுவரமுடையார் கோயிலுக்கும் முடிகொண்ட சோழ சதுர்வேதி மங்கலத்துத் தேவதானமான கிராமத்தைச் சேரிசபையார் இறையிலி செய்தார். குலோத்துங்கன் தான்பிறந்த நாளாகிய மாதபூச விழாவை நடத்தவும், கோயில் நாட்பூசைக்காகவும் நிலமளிக்க

உத்தரவிட்டான். மேலும் மதுராந்தகேசுவரமுடையார் கோயிலிலுள்ள சிவப்பிராமணர்கள் இருவருக்கு உணவளிக்க பணம் வழங்கப்பட்டது. பரகேசரி வர்மனான இராஜேந்திரன் காலத்து, திருத்தூங்கானை மாடமுடைய மகாதேவர் கோயிலுக்கு தூண்டா விளக்கெரிக்கப் பசுக்கள் வழங்கப்பட்டன. தென்கரை நித்த வினோத வளநாட்டுக் கிழார்க் கூற்றத்துக் கீழநல்லூர் உடைய ஒருவன் பசுக்கள் அளித்த செய்தி குறிக்கப்பட்டுள்ளது. கடவுளுக்கு நீராட்டவும் பார்ப்பனர்களுக்கு அன்னம் அளிக்கவும் ஸ்ரீராமன் ஸ்ரீதரரான பவித்திர மாணிக்கச்சேரி உடையான் ஒருவனால் ஏற்பாடு செய்யப்பட்டது. இராஜகேசரி வர்மனான ராஜராஜன் முத்திரையிடப்பட்ட அளவைகளால் வியாபாரிகள், பொருள்களை அளக்கவும் சில வரிகளைக் கோயிலுக்கு அளிக்கவும் ஏற்பாடு செய்தான். 249ஆவது கல்வெட்டால் மூவாயிரவன் கோல் என்ற நீட்டலளவையால் (15 அடி) நிலமளந்த செய்தி தெரிகிறது. பரகேசரி வர்மனான விக்கிரமன் காலத்து அரையன் ஆதித்த தேவன் தேவர்கள் நாதன் என்ற மரக்காலைப் பயன்படுத்தி உள்ளான். குலசேகரன் காலத்துப் பொன்பேத்தி அம்பலத்தாடி அழகனால் மண்டபமும், முகப்பும் கட்டப் பட்டன. அரசன் மந்திரியான மையிருஞ்சோலை மண்டபம் கட்டியுள்ளான்.

விஜயநகர தேவமகாராயர் காலத்தில் நைவேத்தியத்திற்கும், திருப்பணிக்கும் பள்ளி கொண்ட பெருமாள் கச்சிராயருடைய மகனான *ஏகாம்பரநாதன் சில* கிராமங்களை இறையிலி *செய்தான். தேவராஜ மகா*ராஜா சகம் 1356இல் 18ப் பற்றுச்சபையாரால் வீதிகளுக்கு இறையிலி செய்து திருமடை விஜயத்திற்காகவும் நல்ல பெண்ணாகடத்துப் பெருமாளுக்கும் திருமாறன் பாடியிலுள்ள தாகந்தீர்த்தருளிய நாயனாருக்கும் விழா செய்வதற்காக, பெரிய நாட்டான் இறையிலி செய்தார். விக்கிரமன் காலத்தில் அமாவாசையில் சுவாமி உலா வரவும், விளக்கு முதலானவற்றிற்கு நிலம், பொன், பசுக்கள், நெல் முதலியன அளித்தமையையும் குறிப்பிடுகின்றன.

**பதிக வரலாறு:**

திருமுதுகுன்றத்தை வணங்கி எழுந்தருளிய பிள்ளையார் பெண்ணாகடத்தை அடைந்தார்கள். அங்கு, வேதவோசை நீங்காத தூங்கானைமாடச் சுடர்க்கொழுந்தை வணங்கி வலங்கொண்டு 'ஒடுங்கும் பிணி பிறவி' என்னும் இப்பதிகத்தை அருளிச் செய்தார்கள். இப்பதிகத்தின் சுருக்கமான குறிக்கோள் 'தீங்கு நீங்குவீர் தொழுமின்கள் தூங்கானைமாடம்' என்பது எனச் சேக்கிழார் பெருமான் அருளியுள்ளார்கள்.

## 59. THIRU-TH-THOONGAANAI-MAADAM

### THE HISTORY OF THE PLACE

This sacred place is in Nadu Naadu. It is accessible by bus from Virudhdhaachalam. It is known also a Pennakadam and Thirukkadanthai Nagar. The name Pennaakadam is derived by the combination of penn (celestial maidens), aa (the divine cow Kaamadhenu) and kadam (white elephant), all of whom offered worship here. The name of temple is known as 'Thoongkaanai Maadam'.

The name of the God is Sudarkkozhundhunaathar and that of the Goddess is Kadanthainaayaki. The sacred ford is Kedilam river.

This temple has the distinction that Saint Appar Suvaami appealed to the Lord, 'ponnAr thiruvaDikk konRunDu viNNappam' (I have a prayer at your holy golden feet) and got branded with the marks of the trident (soolam) and the sacred bull (idabam) on his shoulders. This is the birthplace of Saint Kalikkamba Naayanar, who obtained salvation after showing his devotion to the devotees of Siva by cutting off the hand of his wife when she hesitated to give water to a servant who took the guise of a devotee of Siva. This is also the place where Saint Meikanda Thevar's father Achchutah Kalappaalar lived.

From the inscriptions, it could be seen that shrines for Kochchengkanesuvara-mudaiyaar and Madhuraanthaka-eecharamudaiyaar were once inside this temple and there was a separate temple for Vishnu in the reclining pose without his consorts.

Endowments during the reign of Kuloththungkan are described in some inscriptions. He ordered land be granted for celebrating on his birth asterism the monthly Poosam festival and for the daily worship services. Inscriptions record gift of cows and gold for feeding Siva-Brahmins and for lamps and ceremonial bathing of the holy icons. We also know from the inscriptions that Raajaraajan made merchants use only measuring devices with a royal seal for trade purposes. During the reign of Kulasekaran one Azhagan had the front mandapam built. One of his ministers built the 'Maiyirunjcholai mandapam'.

During the time of Vijayanagar king, some villages were made tax-free gifts for the temple for celebration of festivals, food offering, and renovation. Grants of land, gold, cows and paddy for lamps etc., are detailed in the other inscriptions.

## INTRODUCTION TO THE HYMN

After hailing the Lord-God at Muthukundram our saint arrived at Thiru-th-thoongaanai-maadam where he hailed Civa and sang the following hymn. This town is called Thiru-k-kadanthai-nagar and/or Pennaa-kadam. The temple goes by the name Thoongaanai-maadam.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 59. திருத்தூங்கானைமாடம் 59. THIRU-TH-THOONGAANAI-MAADAM

பண் : பழந்தக்கராகம் *Pann: Pazhanthakka Raagam*
ராகம் : ஆரபி *Raagam: Aarabi*

ஒடுங்கும் பிணிபிறவி கேடென்றிவை யுடைத்தாய வாழ்க்கை யொழியத்தவம்
அடங்கும் மிடங்கருதி நின்றீரெல் லாமடிகளடி நிழற்கீழாளாம் வண்ணம்
கிடங்கும் மதிலுஞ்சுலா வியெங்குங் கெழுமனைகள் தோறுமறை யின்னொலி
தொடங்குங் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடந்தொழு மின்களே. 1

*ஒடுங்கும் பிணி, பிறவி கேடு, என்று இவை உடைத்துஆய வாழ்க்கை ஒழியத் தவம்*
*அடங்கும் இடம் கருதி நின்றீர்எல்லாம், அடிகள் அடி நிழல் கீழ் ஆள்ஆம் வண்ணம்,*
*கிடங்கும் மதிலும் சுலாவி எங்கும் கெழு மனைகள்தோறும் மறையின்(ன்) ஒலி*
*தொடங்கும் கடந்தைத் தடங்கோயில் சேர் தூங்கானைமாடம் தொழுமின்களே!*

oTugkum piNi, piRavi, kETu, en2Ru ivai uTaittu Aya vAzkkai oziyat tavam
aTagkum iTam karuti nin2RIr ellAm, aTikaL aTi nizal kIz AL Am vaNNam,
kiTagkum matilum culAvi egkum kezu man2aikaL tORum maRaiyin2(n2) oli
toTagkum kaTantait taTagkOyil cEr tUgkAn2aimATam tozumin2kaLE!

*பொருள்:* வெளிப்படுவதற்குரிய நேரம் வரும் வரைக்கும் வெளிப்படாமல் மறைந்து இருக்கும் நோய்கள், இனி வரும் பிறப்புகள், துன்பங்கள் ஆகியன இவைகள்தான் நமது வாழ்க்கையில் அடங்கி இருப்பனவாம். இத்துன்ப வாழ்க்கை நீங்கத் தவம் புரிதலுக்கு ஏற்ற இடத்தை நீவிர் விரும்புகின்றீர். அது, அகழியும் மதிலும் சூழ்ந்து, எங்கும் உள்ள வீடுகள் தோறும் வேதங்கள் ஒலிக்கும் இடமான கடந்தைத் தலமாகும். அந்தத் தலத்தின் தலைவனாகிய

சிவபெருமானின் திருவடி நிழலின்கீழ், அவருக்கு ஆளாகுமாறு, அவர் கோயிலாகிய திருத்தூங்கானைமாடம் சென்று தொழுது தவம்புரிவீர்களாக.

**குறிப்புரை:** தவம் செய்யும் இடத்தைத் தேடுகின்ற மக்களே! தூங்கானைமாடம் தொழுமின்கள் என்கின்றது. நின்றீர் எல்லாம் ஆளாம்வண்ணம் தொழுமின்கள் எனக்கூட்டுக. ஒடுங்கும் பிணி – தமக்குரிய பருவம் வருந்துணையும் வெளிப்படாதே ஒடுங்கியிருக்கும் நோய் அடங்கும் இடம் – அடங்கியிருத்தற்குரிய இடம். கிடங்கு – அகழ். கலாவி – சுற்றி. கெழுமனைகள் – கூடிய வீடுகள். கடந்தை – பெண்ணாகடம் இது தலப்பெயர். தூங்கானை மாடம் என்பது கோயிலின் பெயர்.

Diseases are subdued in our physical frame until such time they are ripe for exposure. In addition, future births and innumerable miseries make up our total life period. Do you want to escape from these miseries? If so, do penance in Thiru-th-thoongaanai-maadam temple which is the most appropriate place for this. Ditches and walls surround this city. Vedic scholars in all the houses in this city are reciting the Vedas. The impact of the sound waves of this recitation reverberates all over the city. Lord Civan is enshrined at the Thiru-th-thoongaanai-maadam temple in Kadanthai city. You go to this temple and be our Lord's servitor under the shadow of His salvific feet and gain the path to salvation.

பிணிநீர சாதல்பிறத் தலிவைபிரியப் பிரியாதபேரின் பத்தோ
டணிநீர மேலுலக மெய்தலுறிலறி மின்குறைவில்லை ஆனேறுடை
மணிநீல கண்டமுடைய பிரான்மலை மகளுந்தானு மகிழ்ந்துவாழும்
துணிநீர்க் கடந்தைத் தடங்கோயில் சேர்தூங்கானை மாடந்தொழு மின்களே. 2

*பிணிநீர சாதல், பிறத்தல், இவை பிரியப் பிரியாத பேர்இன்பத்தோடு*
*அணி நீர மேல்உலகம் எய்தல்உறில், அறிமின் குறைவுஇல்லை; ஆன்ஏறு உடை*
*மணிநீலகண்டம் உடைய பிரான் மலைமகளும் தானும் மகிழ்ந்து வாழும்*
*துணிநீர்க் கடந்தைத் தடங்கோயில் சேர் தூங்கானைமாடம் தொழுமின்களே!*

piNi nIra cAtal, piRattal, ivai piriyap piriyAta pEr in2pattOTu
aNi nIra mEl ulakam eytal uRil, aRimin2! kuRaivu illai; An2 ERu uTai
maNi nIlakaNTam uTaiya pirAn2 malaimakaLum tAn2um makizntu vAzum
tuNi nIrk kaTantait taTagkOyil cEr tUgkAn2ai mATam tozumin2kaLE!

**பொருள்:** நோய்த்தன்மையுடைய இறத்தல், பிறத்தல் ஆகியன நீங்கவும், எக்காலத்தும் நீங்காத பேரின்பத்தோடு கூடிய அழகிய தன்மை வாய்ந்த மேலுலகத்தை, நீவீர் அடைய

விரும்புகின்றீர். குறைவில்லாமல் இதை அறியுங்கள். இடபத்தை ஊர்தியாகவும் தனது கொடியாகவும், நீலமணி போன்ற கண்டத்தையும் உடைய சிவபெருமான், தெளிந்த நீரை உடைய கடந்தைத் தலத்தில் மலைமகளும் தானுமாக மகிழ்ந்து வாழும் திருத்தூங்கானை மாடம் சென்று, அப்பெருமானைத் தொழுவீர்களாக.

**குறிப்புரை:** பிறப்பிறப்பு நீங்கிப் பேரின்பம் உற எண்ணில் இக்கோயிலைத் தொழுங்கள் என்கின்றது. பிணிநீர் – நோய்த்தன்மையை உடைய. அணிநீர – அழகிய. மணிநீல கண்டம் – அழகிய நீலகண்டத்தை உடைய. பிரான் – வள்ளன்மை உடையவன். துணிநீர் – தெளிந்த நீர்.

Ye companions! Do you wish to be freed from the miseries arising out of the cycle of birth and death? Do you wish to reach heaven, the abode of Lord Civan where you can have permanent enjoyment of Supreme Bliss without any break? If so, proceed to Thoongaanai-maadam temple in the city of Thiru-k-kadanthai and offer worship to Lord Civan therein. The bull is His vehicle, in which He rides majestically, as well the insignia of His flag. His neck is of dark blue colour similar to the sapphire gem. He is happily enshrined in the temple in the company of His consort, the daughter of the Himaalayan king. This city is rich in crystal clear water source and the temple is radiating the brightness of the Lord. If you hail and worship Lord Civan therein with all sincerity and love, you will be blessed with all Your wants without any shortfall.

சாநாளும் வாழ்நாளுந் தோற்றமிவை சலிப்பாய வாழ்க்கை யொழியத்தவம்
ஆமாறறியா தலமந்து நீரயர்ந்து ங்குறைவில்லை ஆனேறுடைப்
பூமாணலங் கலிலங்கு கொன்றை புனல்பொதிந்த புன்சடையி னானுறையும்
தூமாண் கடந்தைத் தடங்கோயில் சேர்தூங்கானை மாடந்தொழுமின்களே. 3

சாம்நாளும் வாழ்நாளும் தோற்றம் இவை சலிப்புஆய வாழ்க்கை ஒழியத் தவம்
ஆம்ஆறு அறியாது, அலமந்து, நீர் அயர்ந்தும் குறைவு இல்லை ஆ;னஏறு உடைப்
பூ மான் அலங்கல் இலங்கு கொன்றை புனல் பொதிந்த புன்சடையினான் உறையும்
தூ மாண் கடந்தைத் தடங்கோயில் சேர் தூங்கானைமாடம் தொழுமின்களே!

cAm nALum vAz nALum tORRam ivai calippu Aya vAzkkai oziyat tavam
Am ARu aRiyAtu, alamantu, nIr ayarntum kuRaivu illai; An2 ERu uTaip
pU mAN alagkal ilagku kon2Rai pun2al potinta pun2caTaiyin2An2 uRaiyum
tU mAN kaTantait taTagkOyil cEr tUgkAn2ai mATam tozumin2kaLE!

**பொருள்:** இறப்பு நாளும், வாழும் நாளும், பிறக்கும் நாளும் ஆகிய இவற்றோடு கூடியது நம் சலிப்பான வாழ்க்கை. இவற்றை நீங்கத் தவம் சித்திக்கும் தலம் யாதென அறியாது நீவீர் மறந்ததினால் யாதும் குறைவில்லை. விடையேற்றை ஊர்தியாகவும், மலர்களில் மாட்சிமை பெற்று விளங்கும் கொன்றை மாலையும், கங்கையும் தாங்கிய சிவந்த சடையினை உடையவனுமாகிய சிவபெருமான் உறையும் தலமானது தூய்மையான மாண்புடைய கடம்பை நகரில் விளங்கும் பெரிய கோயிலாக அமைந்த திருத்தூங்கானைமாடம் ஆகும். அங்கு சென்று தொழுவீர்களாக. அது ஒன்றே தவம் சித்திக்கும் தலமாகும்.

**குறிப்புரை:** பிறந்து, வாழ்ந்து, இறந்துவரும் இந்த வாழ்க்கையை ஒழிக்க விரும்புவீர் இக்கோயிலைத் தொழுங்கள் என்கின்றது. சலிப்பு – ஓய்தல். தவம் ஆமாறு – தவம் சித்திக்கும் வண்ணம் அலமந்து – வருந்தி. தூமாண் கடந்தை – தூய்மையான மாட்சிமை பொருந்திய கடந்தை.

Ye companions! You have forgotten the type of penance and the place where you have to do it, which will enable you to get rid of the disgusting life arising out of the cycle of birth, sustenance and death. You feel bewildered and exhausted. Do not worry. Now you proceed to the big Thoongaanai-maadam temple and offer dedicated worship to Lord Civan therein. The bull is His vehicle. He wears in His ruddy matted hair the river Ganges along with the garland made out of cassia flowers which is more elegant than other flowers. He is enshrined in the pure, magnificent and huge temple of Thoongaanai-maadam in the city of Thirukkadanthai. It is enough to get the full benefit of your penance and prayer, if you do it in this temple.

ஊன்றும்பிணி பிறவிகேடென்றி வையுடைத்தாய வாழ்க்கை யொழியத்தவம்
மான்றுமனங் கருதிநின்றீ ரெல்லாமனந் திரிந்து மண்ணில் மயங்காதுநீர்
மூன்றுமதிலெய் தமூவர்ச்சிலை முதல்வர்க்கிடம் போலுமுகில்தோய்கொடி
தோன்றுங்கடந் தைத்தடங்கோயில் சேர்தூங்கனை மாடந்தொழுமின்களே. 4

ஊன்றும் பிணி, பிறவி, கேடு, என்று இவை உடைத்துஆய வாழ்க்கை ஒழியத் தவம்
மான்று மனம் கருதி நின்றீர் எல்லாம், மனம் திரிந்து மண்ணில் மயங்காது, நீர்
மூன்றுமதில் எய்த மூவர்ச் சிலை முதல்வர்க்கு இடம்போலும் - முகில் தோய் கொடி
தோன்றும் - கடந்தைத் தடங்கோயில் சேர் தூங்கனைமாடம் தொழுமின்களே!

Un2Rum piNi, piRavi, kETu, en2Ru ivai uTaittu Aya vAzkkai oziyat tavam
mAn2Ru man2am karuti nin2RIr ellAm, man2am tirintu, maNNil mayagkAtu, nIr
mUn2Ru matil eyta mUvAc cilai mutalvarkku iTampOlum--mukil tOy koTi
tOn2Rum--kaTantait taTagkOyil cEr tUgkAn2ai mATam tozumin2kaLE!

**பொருள்:** நிலைபெற்ற நோய், பிறப்பு, இறப்பு இவற்றை உடைய வாழ்க்கை நீங்கவும், நிலையான வீடுபேற்றைப் பெறவும் தவம் செய்ய மனம் விரும்பி மயங்கி நிற்கிறீர். நீவீர் எல்லோரும் மனம் திரும்புங்கள். உலகில் மயங்காதீர்கள். திரிபுரங்களை எய்த அழியாத வில்லை உடையவரும், உலகின் தலைவருமாகிய சிவபெருமானது இடமாக விளங்குவதும், மேகங்களில் முழுகும் கொடிகள் தோன்றும் கடந்தை நகரில் உள்ள பெரிய கோயிலாக அமைந்த திருத்தூங்கானை மாடம் சென்று தொழுவீர்களாக.

**குறிப்புரை:** இதுவும் அது. பிணியூன்றும் பிறவி – நோய் நிலை பெற்ற பிறப்பு. மான்று – மயங்கி. மூவாச்சிலை – மூப்படையாத வில். முகில் – மேகம்.

Ye companions! you are confused in your mind as to how to perform proper penance to get rid of permanent bodily ailments, birth, death, and other miseries so as to enable you to get permanent salvation. You give up the earthly muddle mindedness caused by mental aberration. You adore and worship Lord Civan enshrined in Thoongaanai-maadam. He holds the ageless bow which destroyed the three citadels of Asuraas. He is the Universal Lord. Lord Civan is entempled in the huge temple at Thoongaanai-maadam in the city of Thirukkaranthai where flags are flying high in the sky.

மயல்தீர்மை யில்லாததோற்றம் மிவைமரணத் தொடொத்தழி யுமாறாதலால்
வியல்தீரமே லுலகமெய்தலு றின்மிக்கொன்றும் வேண்டா விமலனிடம்
உயர்தீர வோங்கிய நாமங்களாலோ வாதுநாளுமடி பரவல்செய்
துயர்தீர கடந்தைத் தடங்கோயில் சேர்தூங்கானை மாடந்தொழுமின்களே. 5

மயல் தீர்மை இல்லாத தோற்றம்இவை மரணத்தொடு ஒத்து அழியும்ஆறு ஆதலால்,
வியல் தீர மேலுலகம் எய்தல்உறின், மிக்கு ஒன்றும் வேண்டா; விமலன் இடம் -
உயர் தீர ஓங்கிய நாமங்களால், ஓவாது நாளும் அடி பரவல்செய்
துயர் தீர் - கடந்தைத் தடங்கோயில் சேர் தூங்கானைமாடம் தொழுமின்களே!

mayal tIrmai illAta tORRam ivai maraNattoTu ottu aziyum ARu AtalAl,
viyal tIra mEl ulakam eytal uRin2, mikku on2Rum vENTA; vimalan2 iTam--
uyar tIra Ogkiya nAmagkaLAl, OvAtu nALum aTi paravalcey
tuyar tIr-kaTantait taTagkOyil cEr tUgkAn2ai mATam tozumin2kaLE!

**பொருள்:** மாறிமாறி வருகின்ற பிறப்பு, இறப்பு என்ற சூழலில் அகப்பட்டு உழன்று கொண்டு இருக்கும்வரை, நமக்கு மெய்யறிவு கிட்டாது. மயக்கமே தலைதூக்கி நிற்கும். முத்தி அடையும் வழியை அறிய முடியாது இந்த மயக்கம் நீங்கி மேலுலகம் எய்த நீவீர் விரும்பினால் பெரிதாக முயற்சி எதுவும் வேண்டாம். எளிய வழியாகச் சிவபெருமானது இடமாக விளங்குவதும், நம் துயர்களைத் தீர்ப்பதும் ஆகிய கடந்தை நகரில் உள்ள பெரிய கோயிலாகிய திருத்தூங்கானைமாடம் செல்லுங்கள். அப்பெருமானுடைய மிக உயர்ந்த திருப்பெயர்களைக் கூறி இடைவிடாது அவன் திருவடிகளைத் தொழுவீர்களாக.

**குறிப்புரை:** பிறப்பிறப்புக்கள் அழியும் வழிகள்; ஆதலால், அவற்றை நீங்கி மேலுலகம் எய்தலுறின் வேறொன்றும் தேட வேண்டாம்; இறைவன் நாமத்தைச் சொல்லிக் கொண்டு தூங்கானை மாடத்தைத் தொழுங்கள் என்கின்றது. மயல்தீர்மை – மயக்கம் நீங்கும் உபாயம். ஆறு – வழி. வியல்தீர – பலதிறப்படுதல் நீங்க. உயர்தீர ஓங்கிய நாமம் – உயர்ந்த பெயர். ஓவாது – இடைவிடாது.

The non-ending cycle of birth and death causing all sorts of confusion in your mind will not lead you to salvation but only degradation. If you desire to get rid of this confusion and get salvation, you need not make any big effort. The simple way is to go to the big temple Thoongaanai-maadam in the city of Kadanthai where Lord Civan is entempled and chant His famous five-lettered lofty Divine name (the Pentad) 'Namasivaaya' and offer worship without any break, at His Holy Feet. By doing this in this temple you will get all your miseries ended.

பன்னீர்மை குன்றிச்செவி கேட்பிலா படர்நோக்கிற் கண்பவளநிற
நன்னீர்மை குன்றித்திரை தோலொடுநரை தோன்றுங்காலம் நமக்காதல்முன்
பொன்னீர்மை துன்றப்புறந் தோன்றுநற்புனல் பொதிந்த புன்சடை யினானுறையும்
தொன்னீர்க் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடந்தொழுமின்களே. 6

பல்-நீர்மை குன்றி, செவி கேட்பு இலா, படர் நோக்கின் கண் பவள(ந்) நிற
நன்நீர்மை குன்றி, திரைதோலொடு நரை தோன்றும் காலம் நமக்கு ஆதல்முன்,
பொன்நீர்மை துன்றப் புறம் தோன்றும் நல் புனல் பொதிந்த புன்சடையினான் உறையும்
தொல்-நீர்க் கடந்தைத் தடங்கோயில் சேர் தூங்கானைமாடம் தொழுமின்களே!

pal-nIrmai kun2Ri, cevi kETpu ilA, paTar nOkkin2 kaN pavaLa(n)niRa
nan2nIrmai kun2Ri, tiraitOloTu narai tOn2Rum kAlam namakku Atal mun2,
pon2 nIrmai tun2Rap puRam tOn2Rum nal pun2al potinta pun2caTaiyin2An2 uRaiyum
tol-nIrk kaTantait taTagkOyil cEr tUgkAn2ai mATam tozumin2kaLE!

**பொருள்:** மூப்புக் காலத்தில் புலன்நுகர்ச்சிக்குரிய பல தன்மைகளும் குறைந்து விடுகிறது. காதுகள் கேட்பதில்லை. கண்களில் படலம் மூடியதால் பார்வை குறைகிறது. பவளம் போன்ற உடல் நிறம் குறைகிறது. தோல் சுருங்கி நரை தோன்றுகிறது. இந்த மூப்புக் காலம் நம்மை வந்து அணுகுவதற்கு முன்பே, பொன் போன்ற நிறம் பொருந்திய, கங்கை தங்கிய செஞ்சடையினை உடைய சிவபெருமான் உறையும் பழமையான புகழை உடைய கடம்பை நகர்த் தடங்கோயிலாகிய திருத்தூங்கானை மாடத்து இறைவனைத் தொழுவீர்களாக.

**குறிப்புரை:** காது, கண் இவை கெட்டு, தோல் சுருங்கி, நரை தோன்றுவதற்குமுன் தொழுமின் என்கின்றது. பல் நீர்மை குன்றி – புலன் நுகர்ச்சிக்கு ஏற்ற பலதன்மைகளும் குறைந்து. படர்நோக்கின் – படலம் மூடியதால். பவளநிற நல்நீர்மை – செவ்வரி பரந்த நல்ல நிலைமை. திரை – திரங்கிய. பொன் நீர்மை துன்ற – பொன் போன்ற தன்மை பொருந்த; புறந்தோன்றும் – உருத்தாங்கிக் காட்சியளிக்கும்.

As you reach old age, all your five senses loose their efficiency. The ear looses its hearing capacity; eyes loose the power of vision; body colour fades; wrinkles form on the skin; hair becomes grey. Before the advent of these physical discomforts, you go and offer worship to Lord Civan at Thoongaanai-maadam temple in the city of Kadanthai Lord Civan is enshrined in this age old glorious temple Thoongaanai-maadam in the well watered Kadanthai city. In His golden coloured ruddy matted hair, abides the river Ganges.

இறையூண் துகளோடிடுக் கணெய்தியிழிப் பாயவாழ்க்கை யொழியத்தவம்
நிறையூணெறி கருதிநின்றீ ரெல்லாம்நீள்கழலே நாளுநினைமின் சென்னிப்
பிறைசூழலங்க லிலங்கு கொன்றை பிணையும் பெருமான் பிரியாதநீர்த்
துறைசூழ்கடந் தைத்தடங்கோயில் சேர்தூங்கானை மாடந்தொழுமின்களே. 7

இறை ஊண் துகளோடு இடுக்கண் எய்தி இழிப்புஆய வாழ்க்கை ஒழியத் தவம்
நிறை ஊண் நெறி கருதி நின்றீர் எல்லாம், நீள் கழலே நாளும் நினைமின்! சென்னிப்
பிறை, சூழ் அலங்கல் இலங்கு கொன்றை, பிணையும் பெருமான் பிரியாத நீர்த்
துறை சூழ் கடந்தைத் தடங்கோயில் சேர் தூங்கானைமாடம் தொழுமின்களே!

iRai UN tukaLOTu iTukkaN eyti izippu Aya vAzkkai oziyat tavam
niRai UN neRi karuti nin2RIr ellAm, nIL kazalE nALum nin2aimin2! cen2n2ip
piRai, cUz alagkal ilagku kon2Rai, piNaiyum perumAn2 piriyAta nIrt
tuRai cUz kaTantait taTagkOyil cEr tUgkAn2ai mATam tozumin2kaLE!

**பொருள்:** குறைந்த உணவோடு பல்வகைத் துன்பங்களும் நிரம்பி, வருந்தும் இழிந்த வாழ்க்கை நீங்க, தவமாகிய நிறைந்த உணவைப் பெறும் வழி யாது என நீவீர் எல்லோரும் மயங்கி நிற்கிறீர். நீண்ட திருப்பாதத்தைத் தினமும் நினையுங்கள். முடியில் பிறை சூடிக் கொன்றை மாலை அணிந்த சிவபெருமான் பிரியாது உறையும் நீர்த்துறைகள் சூழ்ந்த கடந்தை நகரில் உள்ள தடங்கோயிலாகிய தூங்கானை மாடத்தை நாளும் நினைந்து தொழுவீர்களாக.

**குறிப்புரை:** புல்லிய உணவு கொண்டு வருந்தும் இழிந்த வாழ்வு ஒழியத் தவமாகிய பேருண்டியை விரும்பியிருக்கின்றவர்களே! இக்கோயிலைத் தொழுமின் என்கின்றது. இறையூண் – சிற்றுணவு. துகள் – தூளி. இடுக்கண் – துன்பம். தவம் நிறையூண் நெறி – தவமாகிய நிறைந்த உணவைப் பெறுமார்க்கம். அலங்கல் – மாலை. பிணையும் – விரும்பும்.

You are afflicted with all sorts of miseries; arising out of your sparse consumption of food and food insufficient to your bodily requirements. All of you are in a confused state of mind as to how to get rid of such a mean way of life. Do you want to undertake penance which is better nourishment than real food? The way is this. You set your mind daily on Lord Civan who abides permanently in Thoongaanai-maadam of Kadanthai city surrounded by tanks full of water. He accommodates crescent moon in His matted hair. He wears the garland of kondrai flowers. Here you adore and worship Lord Civan; all your confusion will disappear.

பல்வீழ்ந்துநாத் தளர்ந்துமெய்யில் வாடிப்பழிப்பாய வாழ்க்கையொழியத்தவம்
இல்சூழிடங் கருதிநின்றீரெல்லா மிறையேபிரியா தெழுந்துபோதும்
கல்சூழரக்கன் கதறச்செய்தான் காதலியுந்தானுங் கருதிவாழும்
தொல்சீர்க்கடந் தைத்தடங்கோயில் சேர்தூங்கானை மாடந்தொழுமின்களே. 8

பல் வீழ்ந்து, நாத் தளர்ந்து, மெய்யில் வாடி, பழிப்புஆய வாழ்க்கை ஒழியத் தவம்
இல்சூழ் இடம் கருதி நின்றீர்எல்லாம் இறையே பிரியாது எழுந்து போதும்!
கல் சூழ் அரக்கன் கதறச் செய்தான், காதலியும் தானும் கருதி வாழும்,
தொல்சீர்க் கடந்தைத் தடங்கோயில் சேர் தூங்கானைமாடம் தொழுமின்களே!

pal vIzntu, nAt taLarntu, meyyil vATi, pazippu Aya vAzkkai oziyat tavam
il cUz iTam karuti nin2RIr ellAm iRaiyE piriyAtu ezuntu pOtum!
kal cUz arakkan2 kataRac ceytAn2, kAtaliyum tAn2um karuti vAzum,
tolcIrk kaTantait taTagkOyil cEr tUgkAn2ai mATam tozumin2kaLE!

**பொருள்:** பல்வீழ்ந்து, பேச்சுத் தளர்ந்து, உடல் வாடிப் பலராலும் பழிக்கப்படும் இவ்வுலக வாழ்க்கை நீங்கத் தவம் புரியும் இடம் யாது எனக் கருதி நிற்கும் நீவீர் அனைவரும் சிறிதும் காலம் தாழ்த்தாது எழுந்து வாருங்கள். கயிலை மலையைப் பெயர்த்த இராவணனைக் கதறுமாறு அடர்த்த சிவபெருமான் மலைமகளும் தானுமாய்க் கருதி வாழும் பழமையான புகழுடைய கடம்பை நகரில் உள்ள பெருங்கோயிலான தூங்கானைமாடம் சென்று அங்கு எழுந்தருளியுள்ள சிவபெருமானைத் தொழுவீர்களாக.

**குறிப்புரை:** பல்வீழ்ந்து நாத்தளர்ந்து பழிப்பாய வாழ்க்கை நீங்கத் தவம் புரியும் இடம் தேடுபவர்களே! விரைந்து வாருங்கள்; இக்கோயிலைத் தொழுங்கள் என்கிறது. பழிப்பாய வாழ்க்கை – காளையரான காலத்துக் காமுற்றாரும் இந்நிலையைக் கண்டு ஏளனம் செய்யும் கிழப்பருவத்தது. இறையே – சிறிதும். போதும் – வாருங்கள். கல் – கயிலை. அரக்கன் – இராவணன்.

Ye companions! You are disgusted with your life in this world, because of public slander against yore in your old age, when you have lost your teeth, your voice has become feeble and the body skin has wrinkled. Do you want to select a proper place where to perform penance so as to enable you to get rid of your wretched life? Without making any further delay come forward to worship Lord Civan. He is enshrined in the big temple Thoongaanai-maadam in the age old glorious city Kadanthai. It was He who pressed the mountain and made Raavanan cry aloud out of pain, when He tried to lift the mount Kailash, the aboard of Lord Civan. Along with His consort, the daughter of Himalayan mountain, Lord Civan is willingly enshrined at this temple.

நோயும்பிணியு மருந்துயரமுநு கருடையவாழ்க் கையொழியத்தவம்
வாயுமனங் கருதிநின்றீ ரெல்லாமலர் மிசையநான் முகனும் மண்ணும் விண்ணும்
தாய அடியளந்தான் காணமாட்டாத் தலைவர்க்கிடம் போலுந்தண் சோலைவிண்
தோயுங் கடந்தைத் தடங்கோயில்சேர் தூங்கானை மாடந்தொழுமின்களே. 9

நோயும் பிணியும் அருந்துயரமும் நுகர்உடைய வாழ்க்கை ஒழியத் தவம்
வாயும் மனம் கருதி நின்றீர் எல்லாம் மலர்மிசைய நான்முகனும், மண்ணும் விண்ணும்
தாய அடி அளந்தான், காணமாட்டாத் தலைவர்க்கு இடம்போலும் - தண்சோலை விண்
தோயும் - கடந்தைத் தடங்கோயில் சேர் தூங்கானைமாடம் தொழுமின்களே!

nOyum piNiyum aruntuyaramum nukar uTaiya vAzkkai oziyat tavam
vAyum man2am karuti nin2RIr ellAm malarmicaiya nAn2mukan2um, maNNum viNNum
tAya aTi aLantAn2, kANamATTAt talaivarkku iTampOlum--taN cOlai viN
tOyum--kaTantait taTagkOyil cEr tUgkAn2ai mATam tozumin2kaLE!

**பொருள்:** உடலை வருத்தும் நோய்களையும் மனத்தை வருத்தும் கவலைகளையும் அவற்றால் வரும் துன்பங்களையும் அனுபவிக்கும் இந்த வாழ்க்கை நீங்குவதற்கு உரிய தவம் புரியும் எண்ணத்துடன் நீவிர் நிற்கின்றீர். நீவீர் அனைவரும் தாமரை மலர்மேல் உறையும் நான்முகனும், மண்ணையும் விண்ணையும் தன் காலால் அளந்த திருமாலும், காணமாட்டாத தலைவனாகிய சிவபெருமானுக்கு உரிய இடமாகிய விண் தோயும் சோலைகளால் சூழப்பட்ட கடந்தை நகரில் உள்ள திருத்தூங்கானை மாடப்பெருங்கோயில் சென்று அங்கு அருள்பாலித்து வரும் சிவபெருமானைத் தொழுவீர்களாக.

**குறிப்புரை:** இதுவும் அது. நோய் – உடலைப் பற்றியனவாகி வாதபித்த சிலேட்டுமத்தால் விளைவன. பிணி – மனத்தைப் பிணித்து நிற்கும் கவலைகள். அருந்துயரம் – அவற்றால் விளையும் துன்பங்கள். வாயும் – பொருந்தும். தாய – தாவிய.

Ye companions! You all are tired of your life, which is full of miseries caused by bodily illness and mental worries. Do you all want to get rid of such a miserable life and do penance? If so you all come to Thoongaanai-maadam temple in the city of Kadanthai which is surrounded by tall trees in the cool groves which brushes the sky. The four faced Brahma who is seated in the Lotus flower and Thirumaal who scaled the earth and heaven by His two feet could not see our Lord Civan entempled here. You offer worship with devotion to this Lord Civan and fulfil your wishes by His grace.

பகடூர்பசி நலியநோய் வருதலாற்பழிப் பாயவாழ்க்கையொ ழியத்தவம்
முகடூர்மயிர் கடிந்த செய்கையாருமூடு துவராநடை யருநாடிச் சொன்ன
திகடீர்ந்த பொய்ம்மொழிகள் தேறவேண்டா திருந்திழையுந்தானும் பொருந்திவாழுந்
துகடீர்கடந் தைத்தடங்கோயில் சேர்தூங்கானை மாடந்தொழுமின்களே. 10

பகடுஊர்பசி நலிய, நோய் வருதலால், பழிப்புஆய வாழ்க்கை ஒழிய, தவம்
முகடு ஊர் மயிர் கடிந்த செய்கையாரும் மூடு துவர் ஆடையரும் நாடிச் சொன்ன
திகழ் தீர்ந்த பொய்ம்மொழிகள் தேறவேண்டா; திருந்திழையும் தானும் பொருந்தி வாழும்
துகள் தீர் கடந்தைத் தடங்கோயில் சேர் தூங்கானைமாடம் தொழுமின்களே!

pakaTu Urpaci naliya, nOy varutalAl, pazippu Aya vAzkkai oziya, tavam
mukaTu Ur mayir kaTinta ceykaiyArum mUTu tuvar ATaiyArum nATic con2n2a
tikaz tIrnta poymmozikaL tERavENTA; tiruntizaiyum tAn2um porunti vAzum
tukaL tIr kaTantait taTagkOyil cEr tUgkAn2ai mATam tozumin2kaLE!

***பொருள்:*** பெரும்பசியால் நோய்கள் வந்து வருத்துவதால் பழிக்கத்தக்க இவ்வாழ்க்கை நீங்கத் தவம் செய்ய நீவீர் விரும்புகின்றீர். தலை உச்சி முடியைப் பிடுங்கும் சமணரும், உடலைக் காவி நிற ஆடையால் போர்த்த புத்தர்களின் ஞானமற்ற பொய்மொழிகளை நம்ப வேண்டாம். இறைவன் இறைவியோடு பொருந்தி வாழும் குற்றமற்ற கடந்தை நகர்த் தடங்கோயிலாகிய தூங்கானைமாடம் சென்று, தவம் செய்து, அங்குள்ள சிவபெருமானைத் தொழுவீர்களாக.

***குறிப்புரை:*** பிறப்பறுக்கப் புறச்சமயத்தார் பொய்ம்மொழிகளைத் தேறவேண்டா. தூங்கானை மாடம் தொழுமின்கள் என்கின்றது. பகடு ஊர் பசி – யானைப்பசி. முகடு – தலையுச்சி. திகழ் தீர்ந்த – விளக்கம் ஒழிந்த. துகள் – குற்றம்.

Ye companions! You are suffering from many diseases caused by severe hunger. Do you want to perform penance to get freed from such a wretched life? Then do not listen to the false and inglorious propaganda by the bald headed Jains and by Buddhists who cover their body in ochre robes. All of you come to the sacred Thoongaanai-maadam temple where Lord Civan is happily enshrined along with His consort, and offer worship to Him with full devotion.

மண்ணார் முழவதிரும்மாட வீதிவயற்காழி ஞானசம்பந்தன்நல்ல
பெண்ணா கடத்துப்பெருங் கோயில்சேர் பிறையுரிஞ்சுந் தூங்கானை மாடமேயான்
கண்ணார் கழல்பரவு பாடல்பத்துங் கருத்துணரக் கற்றாருங் கேட்டாரும்போய்
விண்ணோ ருலகத்துமே விவாழும் விதியதுவே யாகும் வினைமாயுமே. 11

*மண் ஆர் முழவு அதிரும் மாட வீதி வயல் காழி ஞானசம்பந்தன், நல்ல*
*பெண்ணாகடத்துப் பெருங்கோயில் சேர் பிறை உரிஞ்சும் தூங்கானைமாடம் மேயான்*
*கண் ஆர் கழல் பரவு பாடல்பத்தும் கருத்து உணரக் கற்றாரும் கேட்டாரும் போய்,*
*விண்ணோர் உலகத்து மேவி வாழும் விதிஅதுவே ஆகும்; வினை மாயுமே.*

maN Ar muzavu atirum mATa vIti vayal kAzi njAn2acampantan2, nalla
peNNAkaTattup perugkOyil cEr piRai urinjcum tUgkAn2ai mATam mEyAn2
kaN Ar kazal paravu pATal pattum karuttu uNarak kaRRArum kETTArum pOy,
viNNOr ulakattu mEvi vAzum viti atuvE Akum; vin2ai mAyumE.

**பொருள்:** கருஞ்சாந்து பூசப்பட்ட முழவு ஒலி செய்யும் மாடவீதிகளைக் கொண்டுள்ள வயல்கள் சூழ்ந்த சீகாழிப் பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தர். இவர், பெண்ணாகடத்தில் பெருங்கோயிலாக விளங்கும் வானளாவிய திருத்தூங்கானை-மாடத்து இறைவன் சிவபெருமானின் திருவடிகளில் போற்றிப் பாடியுள்ளார். இவர் பாடிய பாடல்கள் பத்தையும் கற்றவரும், கேட்டவரும், விண்ணவர் உலகத்தை அடைந்து வாழ அப்பாடல்களே தவப்பயன் தரும். வினைகள் அழியும்.

**குறிப்புரை:** சுடர்க்கொழுந்து நாதன் கழலைப்பரவும் பாடல் பத்தும் கருத்துணரக் கற்றாரும் கேட்டாரும் தேவராய் வாழ்வர். வினைகள் மாயும் எனப் பயன் கூறுகின்றது. மண் – மார்ச்சனை.

Gnaanasambandan was born in Seekazhi which is surrounded by fields, and streets with mansions where the musical notes of drums pasted black resound. He hailed and adored the Holy Feet of Lord Civan in the great temple of Thiru-th-thoongaanai-maadam and sang these ten verses. Those who studied, or heard these ten verses will reach the world of Devas and will be bestowed with all the goodness of penance performed. Also they will get freed of their sins.

**Note:** It was at Thoongaanai-maadam St. Appar was blessed to receive the inscribing of the insignia of Saivism on his person when he prayed to Civa thus:

"O Lord Sutar-k-kozhuntu of Thoongaanai-maadam
Of Katanthai - girt with vaulting clouds!
Be pleased to inscribe on my person
The effulgent, three-leaved trident".

Thoongaanai-maadam is an extraordinary shrine of singular and sacred significance. The message of the Godly child is this:

It is tapas that shows the way to deliverance". Tapas in Siva Siddhantha is asceticism practised through charya, kriya and yoga leading to gnosis that confers moksha.

Our saint says that the best place for performing tapas is Kadanthai where Thoongaanai-maadam is situated.

pakaTu Urpaci naliya, nOy varutalAl, pazippu Aya vAzkkai oziya, tavam
mukaTu Ur mayir kaTinta ceykaiyArum mUTu tuvar ATaiyArum nATic con2n2a
tikaz tIrnta poymmozikaL tERavENTA; tiruntizaiyum tAn2um porunti vAzum
tukaL tIr kaTantait taTagkOyil cEr tUgkAn2ai mATam tozumin2kaLE!

***பொருள்:*** பெரும்பசியால் நோய்கள் வந்து வருத்துவதால் பழிக்கத்தக்க இவ்வாழ்க்கை நீங்கத் தவம் செய்ய நீவீர் விரும்புகின்றீர். தலை உச்சி முடியைப் பிடுங்கும் சமணரும், உடலைக் காவி நிற ஆடையால் போர்த்த புத்தர்களின் ஞானமற்ற பொய்மொழிகளை நம்ப வேண்டாம். இறைவன் இறைவியோடு பொருந்தி வாழும் குற்றமற்ற கடந்தை நகர்த் தடங்கோயிலாகிய தூங்கானைமாடம் சென்று, தவம் செய்து, அங்குள்ள சிவபெருமானைத் தொழுவீர்களாக.

***குறிப்புரை:*** பிறப்பறுக்கப் புறச்சமயத்தார் பொய்ம்மொழிகளைத் தேறவேண்டா. தூங்கானை மாடம் தொழுமின்கள் என்கின்றது. பகடு ஊர் பசி – யானைப்பசி. முகடு – தலையுச்சி. திகழ் தீர்ந்த – விளக்கம் ஒழிந்த. துகள் – குற்றம்.

Ye companions! You are suffering from many diseases caused by severe hunger. Do you want to perform penance to get freed from such a wretched life? Then do not listen to the false and inglorious propaganda by the bald headed Jains and by Buddhists who cover their body in ochre robes. All of you come to the sacred Thoongaanai-maadam temple where Lord Civan is happily enshrined along with His consort, and offer worship to Him with full devotion.

மண்ணார் முழவதிரும்மாட வீதிவயற்காழி ஞானசம்பந்தன்நல்ல
பெண்ணா கடத்துப்பெருங் கோயில்சேர் பிறையுரிஞ்சுந் தூங்கானை மாடமேயான்
கண்ணார் கழல்பரவு பாடல்பத்துங் கருத்துணரக் கற்றாருங் கேட்டாரும்போய்
விண்ணோ ருலகத்துமே விவாழும் விதியதுவே யாகும் வினைமாயுமே. 11

மண் ஆர் முழவு அதிரும் மாட வீதி வயல் காழி ஞானசம்பந்தன், நல்ல
பெண்ணாகடத்துப் பெருங்கோயில் சேர் பிறை உரிஞ்சும் தூங்கானைமாடம் மேயான்
கண் ஆர் கழல் பரவு பாடல்பத்தும் கருத்து உணரக் கற்றாரும் கேட்டாரும் போய்,
விண்ணோர் உலகத்து மேவி வாழும் விதிஅதுவே ஆகும்; வினை மாயுமே.

maN Ar muzavu atirum mATa vIti vayal kAzi njAn2acampantan2, nalla
peNNAkaTattup perugkOyil cEr piRai urinjcum tUgkAn2ai mATam mEyAn2
kaN Ar kazal paravu pATal pattum karuttu uNarak kaRRArum kETTArum pOy,
viNNOr ulakattu mEvi vAzum viti atuvE Akum; vin2ai mAyumE.

**பொருள்:** கருஞ்சாந்து பூசப்பட்ட முழவு ஒலி செய்யும் மாடவீதிகளைக் கொண்டுள்ள வயல்கள் சூழ்ந்த சீகாழிப் பதியில் தோன்றியவர் ஞானசம்பந்தர். இவர், பெண்ணாகடத்தில் பெருங்கோயிலாக விளங்கும் வானளாவிய திருத்தூங்கானை-மாடத்து இறைவன் சிவபெருமானின் திருவடிகளில் போற்றிப் பாடியுள்ளார். இவர் பாடிய பாடல்கள் பத்தையும் கற்றவரும், கேட்டவரும், விண்ணவர் உலகத்தை அடைந்து வாழ அப்பாடல்களே தவப்பயன் தரும். வினைகள் அழியும்.

**குறிப்புரை:** சுடர்க்கொழுந்து நாதன் கழலைப்பரவும் பாடல் பத்தும் கருத்துணரக் கற்றாரும் கேட்டாரும் தேவராய் வாழ்வர். வினைகள் மாயும் எனப் பயன் கூறுகின்றது. மண் – மார்ச்சனை.

Gnaanasambandan was born in Seekazhi which is surrounded by fields, and streets with mansions where the musical notes of drums pasted black resound. He hailed and adored the Holy Feet of Lord Civan in the great temple of Thiru-th-thoongaanai-maadam and sang these ten verses. Those who studied, or heard these ten verses will reach the world of Devas and will be bestowed with all the goodness of penance performed. Also they will get freed of their sins.

**Note:** It was at Thoongaanai-maadam St. Appar was blessed to receive the inscribing of the insignia of Saivism on his person when he prayed to Civa thus:

"O Lord Sutar-k-kozhuntu of Thoongaanai-maadam
Of Katanthai - girt with vaulting clouds!
Be pleased to inscribe on my person
The effulgent, three-leaved trident".

Thoongaanai-maadam is an extraordinary shrine of singular and sacred significance. The message of the Godly child is this:

It is tapas that shows the way to deliverance". Tapas in Siva Siddhantha is asceticism practised through charya, kriya and yoga leading to gnosis that confers moksha.

Our saint says that the best place for performing tapas is Kadanthai where Thoongaanai-maadam is situated.

Maarcchanai: A black paste glued to the head of a percussion instrument to enhance its resonant quality.

In every stanza of this hymn, the saint points to the miseries inherent in the repeated cycles of births and deaths and exhorts devotees to get rid of this conundrum through prayers to Lord Civa at Thiru-th-thoonganai-maadam. Evidently, an indication of the high importance of this shrine in saivite lore.

In stanza (9), there is reference to the episode of Thirumaal scaling the earth and the heavens, during interaction with the King Bali. Even though, this incidence is well known the usage of the verse "*அடி அளந்தான் தாய*" reminds one of Thiru-k-kural (verse 610) where Valluvar has used precisely the same words "*அடி அளந்தான் தாஅய தெல்லாம் ஒருங்கு*". Thiru-k-kural must have been quite popular even in Sambandar's time. Further, it must have been studied avidly by all saivites as a noble code of ethics.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*59ஆம் பதிகம் முற்றிற்று*
End of 59th Hymn

உ
சிவமயம்

# 60. திருத்தோணிபுரம்

## திருத்தலவரலாறு:

முதலாம் பதிகம் பார்க்க.

## பதிக வரலாறு:

பிரிவாற்றாத தலைவி, வண்டு முதலியவற்றை திருத்தோணிபுரத்தில் உள்ள சிவபெருமானிடம் தூதாக அனுப்புவதாக அகப்பொருள் துறையில் இத்திருப்பதிகம் அமைந்து உள்ளது.

# 60. THIRU-TH-THŌNI-PURAM

## THE HISTORY OF THE PLACE

See First Hymn.

## INTRODUCTION TO THE HYMN

The mistress who is unable to bear her separation from her Lora, requests the king bee and other birds to go to Him as her special messenger and convey to Him about her pathetic condition due to her separation from Him. The ten verses in this hymn come under the category of love-theme (அகப்பொருள்துறை). The real philosophical meaning is that the soul's deep anxiety to reach the pervasion of Lord Civan and to enjoy His Supreme bliss.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 60. திருத்தோணிபுரம்

## 60. THIRU-TH-THŌNI-PURAM

பண் : பழந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakka Raagam*
*Raagam: Aarabi*

வண்டரங்கப் புனற்கமலமது மாந்திப் பெடையினொடும்
ஒண்டரங்க இசைபாடு மளியரசே ஒளிமதியத்
துண்டரங்கப் பூண்மார்பர் திருத்தோணி புரத்துறையும்
பண்டரங்கர்க் கென்நிலைமை பரிந்தொரு காற்பகராயே. 1

**வண் தரங்கப் புனல் கமல மது மாந்திப் பெடையினொடும்
ஒண் தரங்க இசை பாடும் அளி அரசே! ஒளி மதியத்-
துண்டர், அங்கப்பூண் மார்பர், திருத் தோணிபுரத்து உறையும்
பண்டரங்கர்க்கு என் நிலைமை பரிந்து ஒரு கால் பகராயே!**

vaN taragkap pun2al kamala matu mAntip peTaiyin2oTum
oN taragka icai pATum aLi aracE! oLi matiyat--
tuNTar, agkappUN mArpar, tirut tONipurattu uRaiyum
paNTaragkarkku en2 nilaimai parintu oru kAl pakarAyE!

**பொருள்:** வளமையான அலைகளோடு கூடிய நீர் நிலைகளில், மலர்ந்த தாமரை மலர்களின் தேனைக் குடித்துத் தன் பெண் வண்டோடு களித்து, சிறந்த அலைபோல மேலும் கீழுமாய் அசையும் நடையில் இசைபாடும் அரச வண்டே! என்மேல் பரிவு கொள்ளாய்! என் பிரானாகிய சிவபெருமான் ஒளி பொருந்திய இளம் பிறையை முடியிற் சூடியுள்ளார். எலும்பு மாலைகளை மார்பில் அணிகலனாகப் பூண்டுள்ளார். திருத்தோணிபுரத்தில் பண்டரங்கக் கூத்து ஆடுகின்றார். அவரிடம் சென்று எனது பிரிவாற்றாத நிலையை ஒரு முறையேனும் பகர்வாயாக.

**குறிப்புரை:** பிரிவாற்றாமையால் பேதுறுகின்ற தலைவி, தன் நிலைமையை உணர்த்த வண்டைத் தூதாக அனுப்பக்கருதி, அதனைப் பார்த்து வேண்டுகின்றாள். வண் தரங்கம் – வளப்பமான அலை. தரங்க இசை – அலைபோல் அசைகின்ற இசையின் ஆலத்தி. அளி – வண்டு. மதியத்துண்டர் – பிறைத்துண்டை அணிந்தவர். அங்கப்பூண் – எலும்பாகிய ஆபரணம். பண்டரங்கன் – பண்டரங்கக் கூத்தை ஆடுபவன். பதினொரு வகைக் கூத்தினுள் சிவபெருமான் திரிபுரத்தை அழித்தபோது வெண்ணீறணிந்து ஆடிய கூத்து, தான் ஏவுந்தொழிலுக்கு உடந்தையாய் இருக்க அளி அரசே எனச் சிறப்பித்து அழைத்தாள். பெடையினொடும் இசைபாடும் அளி என்றதனால், பிரிவுத்துன்பம் அறியாமையால், அழைத்து உணர்த்த வேண்டிய அவசியம் ஏற்பட்டது. அதிலும் மது மாந்தி மயங்கியவர்களுக்கு, காதல் வாழ்க்கையில் களித்து

இருப்பவர்களுக்கு உணர்த்தினாலல்லது தானே உணரும் ஆற்றல் இல்லை என்பதையும் அறிவித்தவாறு. பெடையோடு இருக்கும் அளியை மூன்றாமவளாகிய தான் பார்த்தமையால் உடன் உறைவு இனிக்கூடாது; என் வேண்டுகோளை நிறைவேற்ற வேண்டும் என்ற கடமையையும் குறிப்பித்தாள். இசைபாடும் அளியாதலின், தோணிபுரநாதரை உன் இசை முதலில் வசப்படுத்த, என்னிலைமையை எடுத்தியம்ப உனக்கு இனிய வாய்ப்புக் கிட்டுமென்று உணர்த்தினாள். காதலனொடு களித்திருக்கும் பெடை வண்டு பெண்கள் படும் பிரிவுத் துன்பத்தை நன்கு முன்னர் அறியுமாயினும், அதனைத் தனித்து மற்றொரு தலைவனிடத்து அனுப்புதல் மரபு அன்றாகலின் அளி அரசே என ஆண் வண்டை விளித்தாள். நீ செல்லினும் என்னிலைமை உணர்த்தக் கூடிய அளவிற்கு அவகாசம் இராதென்பாள் பண்டரங்கற்கு என்றாள். கூத்தில் ஈடுபட்டவர்க்குக் கேட்பதற்கு அவகாசம் ஏது? இத்தனை நயங்கள் இப்பாடலில் பொதிந்து ஆன்மாவின் பெண்மைத் தன்மையை மிகுதிப்படுத்தி, இறைவனாகிய தலைவனின் இன்றியமையாமையை உணர்ந்து இடையறாப் பேரன்பாகிற வண்டைத் தூதனுப்புகின்ற நிலை மிக அறிந்து இன்புறுதற்கு உரியது. அளி என்பது அன்பிற்கும் ஒரு பெயராதல் காண்க.

Oh king bee! You have consumed a lot of honey from the lotus flowers grown in deep ponds, where wavelets dash against the banks. You move up and down like those wavelets and make music and enjoy with your mate. Kindly have sympathy on my pathetic condition due to my separation from my Lord. Therefore fly up to reach my Lord and explain to Him at least once, my mental suffering I am undergoing due to His separation from me. He accommodates in His head the bright crescent moon. He wears over His chest garland of bones as His ornament. He will be dancing in Thiru-th-thōni-puram the special dance known as 'Pandarangam'. These are His identification for your guidance to spot Him. Do oblige me!

**Note:** Pandarangam: is the name of one of the many dances enacted by Civa.

எறிசுறவங் கழிக்கானலி ளங்குருகே என்பயலை
அறிவுறா தொழிவதுவு மருவினை யேன்பயனன்றே
செறிசிறார் பதமோதுந் திருத்தோணி புரத்துறையும்
வெறிநிறார் மலர்க்கண்ணி வேதியர்க்கு விளம்பராயே. 2

எறிசுறவம் கழிக் கானல் இளங்குருகே! என் பயலை
அறிவுஉறாது ஒழிவதுவும் அருவினையேன் பயன் அன்றே!
செறி சிறார் பதம் ஓதும் திருத்தோணிபுரத்து உறையும்
வெறி நிற ஆர்மலர்க்கண்ணி வேதியர்க்கு விளம்பராயே!

eRi cuRavam kazik kAn2al iLag kurukE! en2 payalai
aRivu uRAtu ozivatuvum aruvin2aiyEn2 payan2 an2RE!
ceRi ciRAr patam Otum tirut tONipurattu uRaiyum
veRi niRa Ar malarkkaNNi vEtiyarkku viLampAyE!

***பொருள்:*** வெற்றி கொள்ளும் இயல்புடைய சுறாமீன்கள் நிறைந்த கடலை அடுத்த உப்பங்கழி அருகில் உள்ள சோலைகளில் வாழும் இள நாரையே! என்னுடைய பிரிவுத் துன்பத்தை நீ அறியாமல் இருப்பது, என் வினைப்பயன் அல்லவா? தூய்மையான மனமுடைய சிறுவர்கள் பலர்கூடி பத மந்திரங்களை ஓதிப் பயிலும் திருத்தோணிபுரத்தில் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். அவர், மணமும் நிறமும் கொண்ட மலர் மாலையை தன் தலையில் சூடியிருக்கின்றார். அவரிடம் சென்று என் துன்ப நிலையைக் கூறுவாயாக.

***குறிப்புரை:*** வண்டின் இன்னிசை அங்கு ஓதப்படும் வேத ஒலியில் இறைவன் காதில் வீழாது என்பதை உணர்ந்த தலைவி, தாரை போல் பெருங்குரல் இடும் குருகைத் தூதனுப்ப எண்ணி, என்னுடைய பசலைத் துன்பத்தை நீ அறியாமல் இருப்பதும் என் வினைப்பயன் தான்; ஆயினும் அவர்க்கு நீ சொல்லு என்று தூதனுப்புகின்றாள். சுறவம் – சுறாமீன். கழி – உப்பங்கழி. கானல் – கடற்கரைச் சோலை. குருகு – நாரை. பயலை (பசலை) – தலைவனைப் பிரிந்த மகளிர்க்கு உண்டாகும் ஒரு நோய். செறி சிறார் – நெருங்கிய சிறுவர்கள். பதம் – பதமந்திரங்கள். வெறி நிற ஆர் மலர் – மணமும் நிறமும் பொருந்திய மலர். நீ இளங்குருகாயிருந்தும் என் நோய் அறியாதது என் வினைப்பயன் என்றாள்.

Oh young heron! You live in the groves adjoining the salt pans near the sea. You wait there for the swordfish which is a habitual killer of all that comes before it. It is my evil fate that you are not aware of my affliction till now. On my behalf, kindly go to Lord Civan who is entempled in Thiru-th-thōni-puram where you will find many young pupils chanting again and again the pentad mantras and trying to memorise them. Their voice reverberates all around. Lord Civan, the author of Vedas, wears in His head fragrant and elegant flowers. These are the identification for your guidance, to help reach the proper place and to meet Him. Introduce yourself as you are my special messenger and explain to Him my sufferings due to His separation from me. Do oblige!

பண்பழனக் கோட்டகத் துவாட்டமிலாச் செஞ்சூட்டுக்
கண்பகத்தின் வாரணமே கடுவினையே னுறுபயலை
செண்பகஞ் சேர்பொழில் புடைசூழ்திருத் தோணிபுரத்துறையும்
பண்பனுக்கென் பரிசுரைத்தாற் பழியாமோ மொழியாயே. 3

பண் பழனக் கோட்டு அகத்து வாட்டம் இலாச் செஞ்சூட்டுக்
கண்பு அகத்தின் வாரணமே! கடுவினையேன் உறு பயலை,
செண்பகம் சேர் பொழில் புடை சூழ் திருத் தோணிபுரத்து உறையும்
பண்பனுக்கு என் பரிசு உரைத்தால் பழி ஆமோ? மொழியாயே!

paN pazan2ak kOTTu akattu vATTam ilAc cenjcUTTuk
kaNpu akattin2 vAraNamE! kaTuvin2aiyEn2 uRu payalai,
ceNpakam cEr pozil puTai cUz tirut tONipurattu uRaiyum
paNpan2ukku en2 paricu uraittAl pazi AmO? moziyAyE!

**பொருள்:** பண்படுத்தப்பட்ட வயல்களின் கரைகளில் சம்பங்கோரைகள் முளைத்திருக்கின்றன. அவற்றின் இடையே வருத்தமின்றி மகிழ்ச்சியாக வாழும் சிவந்த உச்சிக் கொண்டையை உடைய கோழியே! சண்பக மரங்கள் நிறைந்த பொழில்களால் சூழப்பட்ட திருத்தோணிபுரத்தில், எனக்கு இனியனாகிய சிவபெருமான் எழுந்தருளியிருக்கிறார். கடுமையான என் வினைப்பயனால், அவரைப் பிரிந்து மிகுதியான பசலை நோயால் வருந்தி வாழுகின்றேன். அவரிடம் சென்று என் நிலைமையை அறிவித்தால் உனக்குப் பழி விளையுமோ? சொல்வாயாக.

**குறிப்புரை:** இளங்குருகும் இவள் துன்பத்தை அறியாதாகவே, கோழியை விளித்துக் கூறுகிறாள். நற்பண்புடைய நாயகனுக்கு என் தன்மை உரைத்தால் உனக்குப் பழியா வந்துவிடும் என வேண்டுகிறாள். பழமை – வயல். கோடு – கரை. சூட்டு – உச்சிக் கொண்டை. கண்பு அகத்தின் – சம்பங்கோரையின் நடுவில். 'செருந்தியோடு கண்பு அமர்ந்து ஊர்தார்' (மதுரைக் 122) என்பதிலும் இப்பொருளதாதல் காண்க. தன் துன்பம் கண்டும் தான் தூதுபோகாமல் இருப்பது வருத்தம் அறியாமையால் என்று எண்ணிய தலைவி வாட்டமில்லா வாரணமே என்கின்றாள். சம்பங்கோரையின் நடுவில் வாழ்வதால் உனக்கு வருத்தம் தெரியாது. ஆனாலும் நீ ஒரு சேவலாதலின் எம்போலியர் வேண்டுகோளை மொழியத்தான் வேண்டும், என்று வற்புறுத்துகிறாள். அதற்குள், நான்போய்ச் சொல்லுகிறேன் அவர் கேட்பாரோ என்று ஐயம் வாரணத்திற்கு உண்டாவதாக எண்ணி, தன் தலைவன் பண்பன் என்று அறிவிக்கின்றாள். அதிலும் சிறப்பாக அவனியல்பு அவன் ஊருக்கும், ஊர் இயல்பு அவனுக்கும் உண்டாகையாலே செண்பகஞ்சேர் பொழில்சூழ் தோணிபுரம் என்ற குறிப்பால், வண்டு மொய்க்காத மலராகிய செண்பகம் சேர்ந்திருப்பதால்

வண்டுகள் செல்ல அஞ்சுகின்றன. நீ கோரையின் நடுவில் வாழ்வதால் தோணி அணுகும்போது செல்லும் வாய்ப்பிருக்கிறது என்று எண்ணித்தான் உன்னை அனுப்புகின்றேன் என்கின்றாள்.

Oh! ruddy crested rooster! You reside happily without any want amidst the elephant grass grown on the well-developed ridges of the fields. I am restless in my mind due to my evil fate and my complexion is becoming pale owing to the separation of my Lord (love sickness). My Lord abides in Thiru-th-thōni-puram which is surrounded by thick groves full of chambaka trees (Michelia champaca - which yields very fragrant yellow flowers). My Lord is a very pleasant and good-natured one. Do you feel that any blame will fall upon you if you apprise Him about my pathetic condition? (Certainly not. Kindly go and explain to Him my sorrowful situation).

**Note:** Kanupu: This Tamil word refers to Sampang-korai which is elephant-grass.

Even while experiencing the agony resulting from separation, the lady-love does not blame her beloved. She but bemoans her bad karma.

காண்ட கையசெங் காலொண்கழி நாராய் காதலாற்
பூண்ட கையமுலை மெலிந்து பொன்பயந் தாளென்றுவளர்
சேண்ட கையமணி மாடத்திருத் தோணிபுரத்துறையும்
ஆண்ட கையாற்கின்றே சென்றடி யறியவுணர்த்தாயே. 4

*காண் தகைய செங்கால் ஒண்கழி நாராய்! "காதலால்*
*பூண் தகைய முலை மெலிந்து பொன் பயந்தாள்" என்று, வளர்*
*சேண் தகைய மணி மாடத் திருத் தோணிபுரத்து உறையும்*
*ஆண்தகையாற்கு இன்றே சென்று அடி அறிய உணர்த்தாயே!*

kAN takaiya cegkAl oN kazi nArAy! "kAtalAl
pUN takaiya mulai melintu pon2 payantAL" en2Ru, vaLar
cEN takaiya maNi mATat tirut tONipurattu uRaiyum
ANtakaiyARku in2RE cen2Ru aTi aRiya uNarttAyE!

***பொருள்:*** உப்பங்கழியில் வாழும் அழகுமிக்க கால்களை உடைய நாரையே! வானோங்கி வளர்ந்துள்ள அழகிய மாட வீடுகளைக் கொண்டுள்ள திருத்தோணிபுரத்தில், ஆண்மக்களில் சிறந்தவராய் விளங்கும் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். அங்கு இன்றே சென்று அடைவாயாக. காதல் மிகுந்ததால் அணிகலன்கள் பொருந்திய அழகிய தனங்கள் மெலிந்து உன் அடியவள் வருந்துகிறாள் என்று என் மெலிவுக்குரிய காரணத்தை அவர் அறியுமாறு உணர்த்துவாயாக.

**குறிப்புரை:** கோழியும் பயன்படாதொழிய, நாரையைப் பார்த்து வேண்டுகிறாள். நாராய்! தோள் மெலிந்து மேனி பசந்தாள் என்று இன்றே சென்று உணர்த்து என்கின்றனள். காண்தகைய – அழகுமிக்க. பூண்தகைய – அணிகளால் அழகுபெற்ற. பொன்பயந்தாள் – பயலை பெற்றாள். சேண் – ஆகாயம். அவர் ஆண்டகையாய் இருப்பதால் அவரால் பூணத்தக்க தளராத முலையும் தளர்ந்து. மெலிந்து, மேனி பசந்தது என்று உணர்த்தினால், உடனே வந்து தலையளி செய்வர் என்று இன்றே சென்று தூது சொல்ல வேண்டிய இன்றியமையாமையை விளக்குகிறாள். நீ சென்றால் பிறர் கண்ணில் படாமல் தங்கி, என் தூதை இரகசியமாய்ச் சொல்லுதற்கேற்ற அவகாசம் கிட்டும் வரைத் தங்குவதற்கு மணிமாடங்கள் இருக்கின்றன. அவரோ திருத்தோணிமலைச் சிகரத்தில் இருக்கிறார் என்று செவ்வி அறிதல் எளிமையும் செப்புகிறாள். இதில் நுகர்ச்சிக்குரிய முலை மெலிந்தால் இனி அவருக்கு பயன்படுமாறு யாங்ஙனம் என்பதனையும் உணர வைத்தாள். அடி – காரணம்.

Oh! Beautiful red footed heron living in salt pans! Kindly inform my Lord that due to my love sickness, my jewelled breasts have become small and charmless and my complexion has turned pale. Kindly go to day itself to Thiru-th-thōni-puram where you will notice the tall and imposing mansions brush the sky. Here abides my Lord Civan who is the most adorable of all. Tell Him the reason and make Him realise the affliction of His servitor - this unfortunate soul of mine.

**Note:** தோணிபுரம் ஒரு நெய்தல் நிலம் (i.e.) sea embrazing land. In Tamil literature, *நெய்தல்* is associated with folks bitten by the love bug (vide the five fold classification of land in Tamil grammar works). *நெய்தல் திணை* - wherein sorrowing couples suffer the pangs of separation.

பாராரேயெனை யொருகால் தொழுகின்றேன் பாங்கமைந்த
காராருஞ் செழுநிறத்துப் பவளக்காற் கபோதகங்காள்
தேராருநெடு வீதித்திருத் தோணிபுரத்துறையும் 5
நீராருஞ்சடை யாருக்கென் நிலைமை நிகழ்த்தீரே.

பாராரே, எனை ஒரு கால்; தொழுகின்றேன், பாங்கு அமைந்த
கார் ஆரும் செழு நிறத்துப் பவளக்கால் கபோதகங்காள்!
தேர் ஆரும் நெடுவீதித் திருத்தோணிபுரத்து உறையும்
நீர் ஆரும் சடையாருக்கு என் நிலைமை நிகழ்த்தீரே!

pArArE, en2ai oru kAl; tozukin2REn2, pAgku amainta
kAr Arum cezu niRattup pavaLakkAl kapOtakagkAL!
tEr Arum neTuvItit tirut tONipurattu uRaiyum
nIr Arum caTaiyArukku en2 nilaimai nikazttIrE!

***பொருள்:*** அழகியதாய் அமைந்துள்ள கருமை நிறைந்த செழுமையான நிறத்தினையும் பவளம் போன்ற கால்களையும் உடைய மாடப்புறாக்களே! உம்மைத் தொழுகின்றேன். வண்டு முதலியவற்றிடம் என் நிலைமையைக் கூறியும் அவை என்னை ஒருமுறையேனும் பார்க்கவில்லை. தேரோடும் அகலமான வீதிகளை உடைய திருத்தோணிபுரத்தில், கங்கை தங்கிய சடையினை உடைய சிவபெருமான் எழுந்தருளியிருக்கிறார். நீவீர் அங்கு சென்று, என் பிரிவாற்றாத நிலையைக் கூறுவீர்களாக.

***குறிப்புரை:*** இங்ஙனம் நாரை முதலானவற்றை இவள் வேண்ட அவை இவளைத் திரும்பியும் பாராமல் ஒழிய, இன்னது செய்வது என்று தோன்றாத நிலையில், மாடப்புறாக்களை அழைத்துக் கூறுகிறாள். கபோதகங்காள்! உங்களைத் தொழுகின்றேன். என் தலைவருக்கு என் நிலையை உணர்த்துங்கள் என்கின்றாள். எனை ஒருகால் பாராரே – யான் அழைத்த அளி குருகு முதலியவர்கள் என்னை ஒருமுறையும் பாராரே. அளி முதலியவற்றைப் பாரார் என உயர்திணையாற் கூறியது, பிரிவால் விளைந்த பேதைமையால் ஆகும். பாங்கு – பக்கத்தில். கார்ஆரும் – கருமை நிறைந்த. கபோதகம் – மாடப்புறா. நீர் – கங்கை. கபோதகங்காள் எனப் பன்மை வாய்ப்பாட்டால் அழைத்தது புறாக்கள் என்றும் இணை பிரியாமல் இருத்தலின். அன்றி, இணைந்து வாழுகின்ற இவைகளும் என் வேண்டுகோளிற்காகப் பிரிந்து, யான் அடையும் துன்பத்தை இவைகள் எய்தல் ஆகாது என்ற இரக்கத்தாலும் ஆம். தலைவனை "நீர் ஆரும் சடையார்" என்றது கங்கையாகிய ஒருத்தி எஞ்ஞான்றும் உடன் உறைவதால் அவருக்குப் பிரிவுத் துன்பம் தெரியாது. நிழலில் இருப்பவனுக்கு வெயிலின் கொடுமை தெரியாதவாறுபோல, என்னிலையைக் கண்ட நீங்களே சொல்லும் வன்மையால் அவரைச் செவிமடுக்கச் செய்ய வேண்டும் என்று குறிப்பித்தவாறு.

Oh! Ye strong hued, well-formed pigeons with feet of coral shade! I adore you all! I conveyed my love-sickness to the king bee and many others. None so far met me once even. They turned a deaf ear to my request. Therefore I now appeal to you all; please go to Thiru-th-thōni-puram where chariots will be plying now and then in the broad streets. In this town my Lord Civan abides in whose matted hair lady Ganges

(River Ganges personified) also abides. Kindly apprise Him of my affliction and my pitiable plight.

**Note:** The idea is that Civa who is the conqueror of death, should grant His devotee the deathless beatitude, by allowing the praying devotee (one who prays), to get communion with His salvific feet.

சேற்றெழுந்த மலர்க்கமலச் செஞ்சாலிக் கதிர்வீச
வீற்றிருந்த அன்னங்காள் விண்ணோடு மண்மறைகள்
தோற்றுவித்த திருத்தோணி புரத்தீசன் துளங்காத
கூற்றுதைத்த திருவடியே கூடுமாகூறீரே. 6

சேற்று எழுந்த மலர்க்கமலச் செஞ்சாலிக்கதிர் வீச,
வீற்றிருந்த அன்னங்காள்! விண்ணோடு மண் மறைகள்
தோற்றுவித்த திருத்தோணிபுரத்து ஈசன், துளங்காத
கூற்று உதைத்த, திருவடியே கூடுமா கூறீரே!

cERRu ezunta malarkkamalac cenjcAlik katir vIca,
vIRRirunta an2n2agkAL! viNNOTu maN maRaikaL
tORRuvitta tirut tONipurattu Ican2, tuLagkAta
kURRu utaitta, tiruvaTiyE kUTumA kURIrE!

**பொருள்:** வளமான சேற்றிடை முளைத்து மலர்ந்த தாமரை மலர்மேல், நெற்பயிர்கள் தம் கதிர்களையே சாமரையாக வீச, அரச போகத்தில் வீற்றிருக்கும் அன்னங்களே! விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையும் வேதங்களையும் தோற்றுவித்த சிவபெருமான் திருத்தோணிபுரத்தில் உறைகின்றார். அவர் யாவராலும் அசைக்க முடியாத இயமனை தன் காலால் உதைத்து அழித்தவர். அந்தத் திருவடிகளை யாம் அடையும் வழிகளைக் கூறுவீர்களாக.

**குறிப்புரை:** புறாக்களும் இன்பத்தில் மூழ்கி அசையாதிருக்க, தாமரை ஆசனத்தில் இருபுறமும் செந்நெற்கதிர்களாகிய சாமரைவீச அரசபோகத்தில் இருக்கும் அன்னங்கள் இவள் கண்ணில் பட்டன. இரங்கும் பெருந்தன்மை அற்ற அவைகள் கிடக்கட்டும். இந்த அரச அன்னமாவது என் குறையை நிறைவேற்றும் என்று எண்ணி அதனை அழைத்தாள். தனக்குப், பிரிவே பெருங்காலனாக இருந்து உயிர்கொள்வதை உணர்த்தினாள். காலகாலன் திருவடியைக் கூடினால் கலக்கமில்லை என்று தெரிவித்துக் கொள்கின்றாள். விண்ணும் மண்ணும் தோற்றுவித்தல் – பொருட்பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தல். மறையைத் தோற்றுவித்தல் – சொற்பிரபஞ்சத்தைத் தோற்றுவித்தல்.

Oh! Swans! You enjoy kingly pleasures and abide in the opulent mire where the panicles of paddy, fan the lotus flowers that rise aloft in the mire. Kindly let me know the ways and means to have communion with the Holy Feet of Lord Civan who kicked to death Yama, the god of death. Lord Civan is the first cause to create the heaven and earth and author of the Vedas and abides in Thiru-th-thōni-puram town.

முன்றில்வாய் மடற்பெண்ணைக் குரம்பைவாழ் முயங்குசிறை
அன்றில்காள் பிரிவுறு நோயறியா தீர்மிகவல்லீர்
தென்றலார் புகுந்துலவுந் திருத்தோணி புரத்துறையும்
கொன்றை வார்சடை யார்க்கென் கூர்பயலைகூறீரே. 7

முன்றில்வாய் மடல்பெண்ணைக் குரம்பை வாழ், முயங்கு சிறை,
அன்றில்காள்! பிரிவு உறும் நோய் அறியாதீர்; மிக வல்லீர்;
தென்றலார் புகுந்து உலவும் திருத்தோணிபுரத்து உறையும்
கொன்றை வார் சடையார்க்கு என் கூர் பயலை கூறீரே!

mun2RilvAy maTal peNNaik kurampai vAz, muyagku ciRai,
an2RilkAL! pirivu uRum nOy aRiyAtIr; mika vallIr;
ten2RalAr pukuntu ulavum tirut tONipurattu uRaiyum
kon2Rai vArcaTaiyArkku en2 kUr payalai kURIrE!

**பொருள்:** வீடுகளின் வாயிற் பகுதியில் மட்டைகளோடு கூடிய பனை மரங்களில் கூடுகள் கட்டி வாழ்ந்து தம் பெடைகளைத் தழுவும் சிறகுகளோடு கூடிய அன்றில் பறவைகளே! நீவீர் பிரிவுத் துன்பத்தை அறியமாட்டீர். ஆயினும் நேசிப்பதில் மிக வல்லவர்கள். தென்றல் காற்று தவழ்ந்து வரும் திருவீதிகள் உடையது திருத்தோணிபுரம். கொன்றை மாலை அணிந்த சடைமுடியினை உடைய சிவபெருமான் அங்கு எழுந்துள்ளார். அவரிடம் சென்று என்பால் மிகுந்துள்ள பசலை நோயின் தாக்கத்தை எடுத்து உரைப்பீர்களாக.

**குறிப்புரை:** அன்னங்களாலும் பயன்பெறாது மயங்கிய தலைவி, பனை மடலில் வாழும் அன்றிலைப் பார்த்துக் கூறுகிறாள். அவள் பார்த்த காலம் பகல் ஆதலின் அன்றில்கள் கூடிக்குலாவிக் கொண்டிருந்தன. ஆதலால் அவற்றை அழைக்கின்ற அவள் உங்களுக்குப் பிரிவுத்துன்பமே தெரியாது. ஆனாலும் மிக வல்லவர்கள். என் பயலை நோயைக் கூறுங்கள் என்கின்றாள். மேலும் "தென்றலார் புகுந்துலவு" என இளவேனிற்காலம் வந்தமை காரணத்தால் தான்படும் துன்பத்தை மிகுத்துக் காட்டுகின்றாள். "கொன்றைவார் சடையார்க்கு" என்ற குறிப்பால் என்நோயைக் கூறுகின்ற நீங்கள், அவர் சடைக் கண்ணதாகிய கொன்றை மாலையைப் பெற்றுக் கொண்டு வந்து கொடுத்தால், அது

பெற்றாயினும் உய்வேன் என்று, உபாயம் அறிவித்தாள். முன்றில் – வாயில். மடற்பெண்ணை – மட்டைகளோடு கூடிய பனை. குரம்பை – கூடு. முயங்கு சிறை – தழுவியிருக்கின்ற சிறகுகள். கூர் பயலை – மிக்க பசலைநோய்.

Oh! Nightingale of India! You build your nest in between the stems of palmyrah tree that grows in the front yard of houses. You happily abide there with your mate embracing it with your plumes. You never part from your mate. Therefore you are unaware of the affliction due to separation. However by nature, you are an expert in bestowing affection especially to your mate. Therefore, I request you to meet my Lord Civan who abides in Thiru-th-thōni-puram where the southern wind blows gently in the streets. He wears in His matted hair the garland of cassia flowers. You meet Him and explain to Him in detail the love-sickness that afflicts me very badly because of His separation from me.

**Note:** Andrils (male and female) never part from each other. It is said that the male sleeps with one eye shut, while its other eye is°open and watches its sleeping mate.

In Tamil 'thendral' means southerly wind.

பானாறுமலர்ச் சூதப்பல்லவங் களவைகோதி
ஏனோர்க்கு மினிதாகமொழி யுமெழிலிளங்குயிலே
தேனாரும் பொழில்புடை சூழ்திருத் தோணிபுரத்தமரர்
கோனாரை யென்னிடைக் கேவரவொரு காற்கூவாயே. 8

பால் நாறும் மலர்ச் சூதப் பல்லவங்கள் அவை கோதி,
ஏனோர்க்கும் இனிதுஆக மொழியும் எழில் இளங்குயிலே!
தேன்ஆரும் பொழில் புடை சூழ் திருத்தோணிபுரத்து அமரர்-
கோனாரை என்னிடைக்கே வர ஒரு கால் கூவாயே!

pAl nARum malarc cUtap pallavagkaL avai kOti,
En2Orkkum in2itu Aka moziyum ezil iLagkuyilE!
tEn2 Arum pozil puTai cUz tirut tONipurattu amarar--
kOn2Arai en2n2iTaikkE vara oru kAl kUvAyE!

**பொருள்:** பால் மணம் கமழும் மலர்களைக் கொண்ட மாமரத்தின் தளிர்களைக் கோதி உண்டு, எல்லோர்க்கும் இனிதாகக் கூவும் அழகிய இளமையான குயிலே! தேன் நிறைந்த பொழில்கள் சூழ்ந்து விளங்கும் திருத்தோணிபுரத்தில் தேவர் தலைவனாகிய சிவபெருமான்

எழுந்தருளியுள்ளார். அவர் என்னிடம் வருமாறு ஒருமுறையேனும் அங்கு சென்று கூவுவாயாக.

**குறிப்புரை:** பிரிவுநோய் அறியாமையினாலே அன்றில் பறவைகளும் பேசாமல் இருக்க, குரல் நயம் இன்மையால் அவரும் கேளார் என்ற எண்ணத்தால், அவரை மீட்டும் வற்புறுத்தாது குயிலைப் பார்த்துத் தலைவன் வரக் கூவாய்! என வேண்டுகின்றாள். குயில் மாந்தளிரை உண்டு மிக இனிமையாகக் கூவும் தன்மையது என்று குறிக்கின்றாள். அது அங்கு சென்று கூவினாலே போதும் அவர் மனம் மாறும் என்று எதிர்நோக்கினளாக, அளி முதலியவற்றைப் பார்த்துப் பகராய், விளம்பாய் என வேண்டிய அவள், இதனைக் கூவாய் என்று மட்டும் வேண்டுகிறாள். தோணிபுரத்தைப் பொழில்சூழ் தோணிபுரம் என்றது தூது போகின்ற குயிலுக்குத் தங்குமிடம் வசதியாய் உள்ளது என்பதை அறிவிக்க. என் இடைக்கே என்பதில், ஏகாரம் வந்தால் பிரியவிடாது காப்பாற்றும் பொறுப்பும் உன்னுடையதே என்று குறிப்பித்து நிற்கின்றது. சூதப் பல்லவம் – மாந்தளிர்.

Oh! the young and good looking Indian Cuckoo (a bird celebrated in Indian poetry for the sweetness of its notes) - you are cooing sweetly to one and all. You eat the tender shoots of mango tree full of fragrant flowers. The aroma of the flower similar to milk spreads all around. You, please go to my Lord Civan, Chief of Devas who resides in Thiru-th-thōni-puram. This town is surrounded by groves full of honey-laden flowers. See Him there, and request Him to visit me by cooing near Him your sweet note at least once.

**Note:** Kuyil: Pope says that Kuyil is mystically speaking, the human soul.

நற்பதங்கள் மிகஅறிவாய் நானுன்னை வேண்டுகின்றேன்
பொற்பமைந்த வாயலகிற் பூவைநல்லாய் போற்றுகின்றேன்
சொற்பதஞ் சேர்மறையாளர் திருத்தோணி புரத்துறையும்
விற்பொலி தோள்விகிர் தனுக்கென் மெய்ப்பயலை விளம்பாயே. 9

நல் பதங்கள் மிக அறிவாய்; நான் உன்னை வேண்டுகின்றேன்;
பொற்பு அமைந்த வாய் அலகின் பூவை நல்லாய்! போற்றுகின்றேன்;
சொல்பதம் சேர் மறையாளர் திருத் தோணிபுரத்து உறையும்
வில் பொலி தோள் விகிர்தனுக்கு என் மெய்ப் பயலை விளம்பாயே!

nal patagkaL mika aRivAy; nAn2 un2n2ai vENTukin2REn2;
poRpu amainta vAy alakin2 pUvainallAy! pORRukin2REn2;
colpatam cEr maRaiyALar tirut tONipurattu uRaiyum
vil poli tOL vikirtan2ukku en2 meyp payalai viLampAyE!

**பொருள்:** அழகாக அமைந்த வாயாகிய அலகினை உடைய நாகணவாய்ப் பறவையே! நான் உன்னைத் துதித்துப் போற்றுகின்றேன். தலைவனிடம் முறையிடுதற்கு உரிய நல்ல சந்தர்ப்பத்தை நீ நன்கு அறிவாய். ஆகையால், உன்னிடம் நான் வேண்டிக் கொள்ளுகிறேன். திருத்தோணிபுரத்தில் வேதங்களில் வல்லவர்களும், சொல்லப்படுகின்ற பதம் என்னும் ஓதும் முறை அறிந்த சான்றோர்களும் வாழ்கின்றனர். அங்கு எழுந்தருளிய வில்லாற் பொலிந்த தோளை உடைய விகிர்தனாகிய சிவபெருமானிடம் என் உடலிற் தோன்றிய பசலை நோயை உரைப்பாயாக.

**குறிப்புரை:** குயிலும் வேனிற்காலத்தன்றி, வேறு காலங்களில் தூது செல்லும் தரத்தன அல்ல என்பதை உட்கொண்ட தலைவி, நாகணவாய்ப் புள்ளை வேண்டுகின்றாள். நற்பதங்கள் மிக அறிவாய் – நல்ல சந்தர்ப்பத்தை நன்றாக அறிவாய். பொற்பு – அழகு. சொற்பதம் – சொல்லப்படுகின்ற பதம் என்னும் ஓதும் முறை. தலைவன் தோளும் சாமர்த்தியமுமே தம்மை வசீகரித்தன என்பாள். தோள் விகிர்தனுக்கு என்றாள். தன்னுடைய உள்ளக் காதலை, மெய்ப்பயலை பலர் அறியப் பரப்புதலின், அதனை நீக்க வேண்டியதன் இன்றியமையாமையை எடுத்து இயம்புக என்று குறிப்பித்தாள்.

Oh lovely Bush Myna (*நாகணவாய்ப் பறவை*) having a charming beak of mouth. I adore and praise you. I know that you are adept at establishing liaison with my Lord. I shall now let you know my grievance. Kindly go to my Lord who carries a bow on His bright shoulders and who is the pre-eminent, Supreme Lord (*விகிர்தன்*). He abides in Thiru-th-thōni-puram where eminent Vedic scholars also reside. The Vedic words they chant are full of musical note. Meet my Lord in Thiru-th-thōni-puram and apprise Him in a convincing manner of the seriousness of my affliction, as a result of which, my complexion became pale.

சிறையாரு மடக்கிளியே யிங்கேவாதே னொடுபால்
முறையாலே யுணத்தருவன் மொய்பவளத் தொடுதாளந்
துறையாருங் கடற்றோணி புரத்தீசன் றுளங்குமிளம்
பிறையாளன் திருநாமமெனக் கொருகாற் பேசாயே. 10

*சிறை ஆரும் மடக்கிளியே! இங்கே வா! தேனொடு பால்*
*முறையாலே உணத் தருவன்; மொய் பவளத்தொடு தாளம்*
*துறை ஆரும் கடல்-தோணிபுரத்து ஈசன், துளங்கும் இளம்-*
*பிறையாளன், திருநாமம் எனக்கு ஒரு கால் பேசாயே!*

ciRai Arum maTakkiLiyE! igkE vA! tEn2OTu pAl
muRaiyAlE uNat taruvan2; moy pavaLattoTu taraLam
tuRai Arum kaTal--tONi purattu Ican2, tuLagkum iLam--
piRaiyALan2, tiru nAmam en2akku oru kAl pEcAyE!

***பொருள்:*** அழகிய சிறகுகளை உடைய இளங்கிளியே! என்னிடம் வருவாயாக. நான் உனக்குத் தேனையும் பாலையும் மாறி மாறி உண்ணத் தருவேன். திருத்தோணிபுரம் நெருக்கமான பவளங்களையும் முத்துக்களையும் கரைகளில் சேர்ப்பிக்கும் கடல் அருகில் உள்ளது. அங்கு இளம்பிறை சூடிய சிவபெருமான் உறைகின்றார். அப்பெருமானின் திருநாமத்தை எனக்காக ஒருமுறையேனும் என் செவி குளிரப் பேசுவாயாக.

**குறிப்புரை:** இங்ஙனம் சேய்மையிலும் அண்மையிலும் இருக்கின்ற பொருள்களை வேண்டிக் கொள்ள, அவை பயன்படாதொழியவே, தான்வளர்த்த கிளியையே நோக்கி, ஒருகால் அவர் பெயரைச் சொல் என்று வேண்டுகின்றாள். இதுவரை தூது வேண்டிய அவள் இப்போது கிளியிடம் பெயரை வேண்டுவது, கிளி சென்று தூதுரைத்துத் தலைவரை உடன்படுத்தி அழைத்துவரும் வரையில் பிரிவுத்துன்பம் பொறுக்க முடியாத அளவு பெரிதாம் என்பதை எண்ணி, தலைவனுடைய பெயரைக் கேட்கின்ற அளவிலாவது துன்பந் தோன்றாது என்ற குறிப்பினளாக இங்ஙனம் வேண்டுகின்றாள். அங்ஙனம் சொல்வதற்குக் கைக்கூலியும் தருவதாக தேனொடுபால் முறையாக உண்ணத்தருவேன் என்கின்றாள்.

Oh young parrot! I very much admire your attractive coloured wings. Kindly do come to me. I will feed you honey and milk alternately which you will definitely enjoy very much. I think you know the town Thiru-th-thōni-puram which is near the sea that brings plenty of coral and pearls and drops them on the shores. In that city my Lord Civan abides wearing the young crescent moon in His matted hair. May I request

you to pronounce His divine name 'Namasivaayaa' at least once, in your sweet tone, so as to enable me to enjoy in my mind, this holy chant, through my ears.

போர்மிகுத்த வயற்றோணி புரத்துறையும் புரிசடையெங்
கார்மிகுத்த கறைக்கண்டத் திறையவனை வண்கமலத்
தார்மிகுத்த வரைமார்பன் சம்பந்தனுரை செய்த
சீர்மிகுத்த தமிழ்வல்லார் சிவலோகஞ் சேர்வாரே. 11

*போர் மிகுத்த வயல் - தோணிபுரத்து உறையும் புரிசடை எம்*
*கார் மிகுத்த கறைக் கண்டத்து இறையவனை, வண்கமலத்-*
*தார் மிகுத்த வரைமார்பன் - சம்பந்தன் - உரைசெய்த*
*சீர் மிகுத்த தமிழ் வல்லார் சிவலோகம் சேர்வாரே.*

pOr mikutta vayal-tONipurattu uRaiyum puricaTai em
kAr mikutta kaRaik kaNTattu iRaiyavan2ai, vaNkamalat
tAr mikutta varaimArpan2--campantan2--uraiceyta
cIr mikutta tamiz vallAr civalOkam cErvArE.

**பொருள்:** திருத்தோணிபுரம் வைக்கோற்போர் மிகுதியாகக் கொண்ட வயல்களால் சூழப்பட்டு உள்ளது. அங்கு முறுக்கேறிய சடையினையும், கருமை நிறைந்த விடக்கறை பொருந்திய கழுத்தையும் உடைய சிவபெருமான் எழுந்தருளி உள்ளார். வளமையான தாமரை மலர் மாலை அணிந்த மார்புடையவனான ஞான சம்பந்தன் இப்பெருமானைப் போற்றிப் பாடினார். புகழ்பொருந்திய இத்தமிழ் பதிகத்தை ஓதி நினைய வல்லவர் சிவலோகம் சேர்வர்.

**குறிப்புரை:** கழுமலநாதனைப்பற்றிச் சம்பந்தர் அருளிச் செய்த சிறப்பமைந்த இத்தமிழ் மாலையை ஓத வல்லவர்கள் சிவலோகம் சார்வர் எனத் திருக்கடைக்காப்பு அருளுகின்றது. போர் – வைக்கோற்போர். கார் – கருமை. கமலத்தார் மிகுத்த வரை மார்பன் – தாமரை மலர் மாலை அணிந்த மார்பை உடையவன். அந்தணர்க்கு அடையாள மாலை தாமரை யாதலின் இங்ஙனம் கூறினார். பதிகங்கள் தோறும் கூறப்பெறும் இராவணனை அடர்த்த வரலாறு, புத்தர் சமணர்களைப் பற்றிய குறிப்பு இவைகள் இத்திருப்பதிகத்து இல்லாமை ஊன்றி இன்புறுதற்குரியது. சன்மார்க்க நெறியில் தலைவனும் தலைவியுமாக இறைவனும் ஆன்மாவும் ஈடுபடுகிறபோது காதல் வெள்ளத்து ஆழங்காற்படுகின்றபோது, இறைவனுடைய இன்றியமையாத் தன்மை உள்ளத்தைக் கவர்ந்துநின்ற போது இன்ப உணர்ச்சியன்றி வேறு எதுவும் தோன்றாது என்பதற்கு இதுவே ஒரு சிறந்த எடுத்துக்காட்டு.

Lord Civan abides in Thiru-th-thōni-puram that abounds in rich fields and many big haystacks. His neck is of dark blue colour similar to sapphire gem. Gnaanasambandan wears garland of lotus flowers on his comely and majestic chest. He has sung this glorious Tamil hymn on Lord Civan of Thiru-th-thōni-puram. Those who are well-versed in reciting these hymns will, for sure, gain access to Civa-Loka.

**Note:** Sending messages to loved ones through the medium of verse (as carriers of news) is common in literary folklore. Vide Kantha Puraanam, . . . வனந்தனை வினவும் . . . மற்றை வரைகளை வினவுமாதோ . . . in Aham Naanuuru a mother appeals to crow for help in bringing back her daughter by promising a good food in golden cup. However, in sangam literature, animal food is widely spoken about (பச்சூன் பெய்த பைந்நிண வல்சி, பொலம்புனை கலத்தில் தருகுவன்மாதோ).

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

60ஆம் பதிகம் முற்றிற்று
End of 60th Hymn

உ
சிவமயம்

# 61. திருச்செங்காட்டங்குடி

## திருத்தலவரலாறு:

ஆறாம் திருப்பதிகம் பார்க்க.

## பதிக வரலாறு:

நாகை, கீழ்வேளூர் முதலிய தலங்களை வணங்கிக் கொண்டு பெருகிய ஞானம் பெற்ற பிள்ளையார் எழுந்தருளுகின்றபோது, இச்செய்தியைச் செவியுற்ற சிறுத்தொண்டர் ஓடிப் போய் அழைத்துவந்து திருச்செங்காட்டங்குடி சேர்ப்பித்தார். சிறுத்தொண்டரோடு நட்புக் கொண்டு அங்கு எழுந்தருளி இருக்கின்ற காலத்தில் கணபதீச்சரம் வழிபடச் சென்றார். கோயிலை வலங்கொண்டார். அரவணிந்தார் அடிக்கீழ் வீழ்ந்து எழுந்து திருமுன் கைகூப்பி நின்று, சிறுத்தொண்டர் தொழ இருந்த பெருமையைச் சிறப்பித்து 'நறை கொண்ட மலர்தூவி' என்னும் பொங்கியெழும் இசைப்பதிகமாகிய இதனைப் பாடினார்.

# 61. THIRU-CH-CHENG-KAATTANG-KUDI

## THE HISTORY OF THE PLACE

See 6th Hymn.

## INTRODUCTION TO THE HYMN

This Temple is called Ganapathy-eech-charam.

Our saint adored Civa at Nakaippattinam and Keezhvelur and continued his pilgrimage. Sirutthondar called on him and took him to his hometown, namely Thiruchchengkaattangkudi. In its temple Ganapathi-eechcharam the following hymn was sung by the godly child.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 61. திருச்செங்காட்டங்குடி 61. THIRU-CH-CHENG-KAATTANG-KUDI

பண் : பழுந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakka Raagam*
*Raagam: Aarabi*

நறைகொண்ட மலர்தூவி விரையளிப்ப நாடோறும்
முறைகொண்டு நின்றடியார் முட்டாமே பணிசெய்யச்
சிறைகொண்ட வண்டறையுஞ் செங்காட்டங்குடியதனுள்
கறைகொண்ட கண்டத்தான் கணபதீச் சரத்தானே. 1

*நறை கொண்ட மலர் தூவி, விரை அளிப்ப, நாள்தோறும்*
*முறை கொண்டு நின்று, அடியார் முட்டாமே பணி செய்ய,*
*சிறை கொண்ட வண்டு அறையும் செங்காட்டங்குடி அதனுள்,*
*கறை கொண்ட கண்டத்தான் - கணபதீச்சுரத்தானே.*

naRai koNTa malar tUvi, virai aLippa, nAL tORum
muRai koNTu nin2Ru, aTiyAr muTTAmE paNi ceyya,
ciRai koNTa vaNTu aRaiyum cegkATTagkuTi atan2uL,
kaRai koNTa kaNTattAn2--kaNapatIccurattAn2E.

***பொருள்:*** சிறகுகளை உடைய வண்டினங்கள் ஒலிக்கும் இடம் திருச்செங்காட்டங்குடி. அந்த இடத்தில் கணபதீச்சரம் என்னும் கோயிலில், விடக்கறை பொருந்திய கண்டத்தினராகச் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். அங்கு, அடியவர்கள் நாள்தோறும் விதிப்படி தேன் பொருந்திய மலர்களைத் தூவி, மணம் கமழச் செய்வித்து, இடைவிடாமல் பணிசெய்து வழிபடுகின்றனர்.

***குறிப்புரை:*** அடியார் மணந்தரும் பூக்களைத் தூவி வழிபட இறைவன் கணபதீச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்றான் என்கின்றது. நறை – தேன். விரை – மணம். முறைகொண்டு – விதிப்படி. முட்டாமே – இடைவிடாமல். சிறை – சிறகு. அறையும் – ஒலிக்கும். கறை – விடம்.

Lord Civan whose neck is of dark blue colour similar to the colour of sapphire gem, is entempled at Ganapathy-eechcharam in the Thiruchchengkaattangkudi town, where the humming sound of the winged bees is heard all around. Devotees without any break daily offer flowers full of honey to this Lord and worship Him. The pleasant smell of the flowers prevails everywhere in the shrine.

Note: Honey is symbolic of moksha. Fragrance in floral service is Civa-manam.

வாரேற்ற பறையொலியுஞ் சங்கொலியும் வந்தியம்ப
ஊரேற்ற செல்வத்தோ டோங்கிய சீர்விழவோவாச்
சீரேற்ற முடைத்தாய செங்காட்டங்குடியதனுள் 2
காரேற்ற கொன்றை யான்கணபதீச் சரத்தானே.

வார் ஏற்ற பறை ஒலியும் சங்கு ஒலியும் வந்து இயம்ப,
ஊர் ஏற்ற செல்வத்தோடு ஓங்கிய சீர் விழவு ஓவாச்
சீர் ஏற்றம் உடைத்துஆய செங்காட்டங்குடிஅதனுள்,
கார் ஏற்ற கொன்றையான் - கணபதீச்சுரத்தானே.

vAr ERRa paRai oliyum cagku oliyum vantu iyampa,
Ur ERRa celvattOTu Ogkiya cIr vizavu OvAc
cIr ERRam uTaittu Aya cegkATTagkuTi atan2uL,
kAr ERRa kon2RaiyAn2--kaNapatIccurattAn2E.

**பொருள்:** திருச்செங்காட்டங்குடியில், வாரால் இழுத்துக் கட்டப்பட்ட பறைகளின் ஒலியும், சங்குகளின் ஒலியும் நீங்காது ஒலிக்கின்றன. ஊர் முழுவதும் செல்வ வளங்கள் நிறைந்துள்ளன. மேன்மையான புகழை உடைய திருவிழாக்கள் இடைவிடாது நிகழும் இடம் இது. இங்கு விளங்கும் கணபதீச்சரம் என்ற கோயிலில் கார்காலத்தே மலரும் கொன்றை மலரை அணிந்துள்ள சிவபெருமான் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** பலவகை வாச்சிய ஒலிகள் நீங்காததும் விழவறாததுமாகிய செங்காட்டங்குடிக் கணபதீச்சரத்தான் என்கின்றது. வார் ஏற்ற பறை – வாரால் இழுத்துக் கட்டப்பெற்ற பறை. சீர் ஏற்றம் – புகழின் மிகுதி. கார் – கார்காலம்.

Lord Civan wears the cassia flowers that blossom during the rainy season and is enshrined at Ganapathy-eechcharam in Thiruchcheng-kaattangkudi. In this town, festivals take place all round the year. During these festivals the noise of drums tightened by leather straps as well the noise of conch shells reverberate all around. The glory and fame of this prosperous city spreads everywhere.

**Note:** Festivities keep alive the glory of the Vedic faith.

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 61. திருச்செங்காட்டங்குடி 61. THIRU-CH-CHENG-KAATTANG-KUDI

பண் : பழந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakka Raagam*
*Raagam: Aarabi*

நறைகொண்ட மலர்தூவி விரையளிப்ப நாடோறும்
முறைகொண்டு நின்றடியார் முட்டாமே பணிசெய்யச்
சிறைகொண்ட வண்டறையுஞ் செங்காட்டங்குடியதனுள்
கறைகொண்ட கண்டத்தான் கணபதீச் சரத்தானே. 1

நறை கொண்ட மலர் தூவி, விரை அளிப்ப, நாள்தோறும்
முறை கொண்டு நின்று, அடியார் முட்டாமே பணி செய்ய,
சிறை கொண்ட வண்டு அறையும் செங்காட்டங்குடிஅதனுள்,
கறை கொண்ட கண்டத்தான் - கணபதீச்சுரத்தானே.

naRai koNTa malar tUvi, virai aLippa, nAL tORum
muRai koNTu nin2Ru, aTiyAr muTTAmE paNi ceyya,
ciRai koNTa vaNTu aRaiyum cegkATTagkuTi atan2uL,
kaRai koNTa kaNTattAn2--kaNapatIccurattAn2E.

**பொருள்:** சிறகுகளை உடைய வண்டினங்கள் ஒலிக்கும் இடம் திருச்செங்காட்டங்குடி. அந்த இடத்தில் கணபதீச்சரம் என்னும் கோயிலில், விடக்கறை பொருந்திய கண்டத்தினராகச் சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். அங்கு, அடியவர்கள் நாள்தோறும் விதிப்படி தேன் பொருந்திய மலர்களைத் தூவி, மணம் கமழச் செய்வித்து, இடைவிடாமல் பணிசெய்து வழிபடுகின்றனர்.

**குறிப்புரை:** அடியார் மணந்தரும் பூக்களைத் தூவி வழிபட இறைவன் கணபதீச்சரத்தில் எழுந்தருளியிருக்கின்றான் என்கின்றது. நறை – தேன். விரை – மணம். முறைகொண்டு – விதிப்படி. முட்டாமே – இடைவிடாமல். சிறை – சிறகு. அறையும் – ஒலிக்கும். கறை – விடம்.

Lord Civan whose neck is of dark blue colour similar to the colour of sapphire gem, is entempled at Ganapathy-eechcharam in the Thiruchchengkaattangkudi town, where the humming sound of the winged bees is heard all around. Devotees without any break daily offer flowers full of honey to this Lord and worship Him. The pleasant smell of the flowers prevails everywhere in the shrine.

Note: Honey is symbolic of moksha. Fragrance in floral service is Civa-manam.

வாரேற்ற பறையொலியுஞ் சங்கொலியும் வந்தியம்ப
ஊரேற்ற செல்வத்தோ டோங்கிய சீர்விழவோவாச்
சீரேற்ற முடைத்தாய செங்காட்டங்குடியதனுள்
காரேற்ற கொன்றை யான்கணபதீச் சரத்தானே. 2

வார் ஏற்ற பறை ஒலியும் சங்கு ஒலியும் வந்து இயம்ப,
ஊர் ஏற்ற செல்வத்தோடு ஓங்கிய சீர் விழவு ஓவாச்
சீர் ஏற்றம் உடைத்துஆய செங்காட்டங்குடிஅதனுள்,
கார் ஏற்ற கொன்றையான் - கணபதீச்சுரத்தானே.

vAr ERRa paRai oliyum cagku oliyum vantu iyampa,
Ur ERRa celvattOTu Ogkiya cIr vizavu OvAc
cIr ERRam uTaittu Aya cegkATTagkuTi atan2uL,
kAr ERRa kon2RaiyAn2--kaNapatIccurattAn2E.

**பொருள்:** திருச்செங்காட்டங்குடியில், வாரால் இழுத்துக் கட்டப்பட்ட பறைகளின் ஒலியும், சங்குகளின் ஒலியும் நீங்காது ஒலிக்கின்றன. ஊர் முழுவதும் செல்வ வளங்கள் நிறைந்துள்ளன. மேன்மையான புகழை உடைய திருவிழாக்கள் இடைவிடாது நிகழும் இடம் இது. இங்கு விளங்கும் கணபதீச்சரம் என்ற கோயிலில் கார்காலத்தே மலரும் கொன்றை மலரை அணிந்துள்ள சிவபெருமான் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** பலவகை வாச்சிய ஒலிகள் நீங்காததும் விழவறாததுமாகிய செங்காட்டங்குடிக் கணபதீச்சரத்தான் என்கின்றது. வார் ஏற்ற பறை – வாரால் இழுத்துக் கட்டப்பெற்ற பறை. சீர் ஏற்றம் – புகழின் மிகுதி. கார் – கார்காலம்.

Lord Civan wears the cassia flowers that blossom during the rainy season and is enshrined at Ganapathy-eechcharam in Thiruchcheng-kaattangkudi. In this town, festivals take place all round the year. During these festivals the noise of drums tightened by leather straps as well the noise of conch shells reverberate all around. The glory and fame of this prosperous city spreads everywhere.

**Note:** Festivities keep alive the glory of the Vedic faith.

வரந்தையான் சோபுரத்தான் மந்திரத்தான் தந்திரத்தான்
கிரந்தையான் கோவணத்தான் கிண்கிணியான் கையதோர்
சிரந்தையான் செங்காட்டங்குடியான் செஞ்சடைசேருங்
கரந்தையான் வெண்ணீற்றான் கணபதீச்சரத்தானே. 3

வரந்தையான், சோபுரத்தான், மந்திரத்தான், தந்திரத்தான்,
கிரந்தையான், கோவணத்தான், கிண்கிணியான், கையது ஓர்
சிரந்தையான், செங்காட்டங்குடியான், செஞ்சடை சேரும்
கரந்தையான், வெண்நீற்றான் - கணபதீச்சுரத்தானே.

varantaiyAn2, cOpurattAn2, mantirattAn2, tantirattAn2,
kirantaiyAn2, kOvaNattAn2, kiNkiNiyAn2, kaiyatu Or
cirantaiyAn2, cegkATTagkuTiyAn2, cenjcaTaic cErum
karantaiyAn2, veN nIRRAn2--kaNapatIccurattAn2E.

**பொருள்:** கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ள இறைவன், வரந்தை, சோபுரம் ஆகிய தலங்களில் எழுந்தருளி இருப்பவன். வேதாகமங்களை அருளிச் செய்தவன். கோவணம் அணிந்தவன். காலிற் கிண்கிணி அணிந்தவன். கையில் உடுக்கை ஒன்றை ஏந்தியவன். சிவந்த சடைமுடி மீது கரந்தை சூடியவன். திருவெண்ணீறு அணிந்தவன். அப்பெருமான் திருச்செங்காட்டங்குடியில் கணபதீச்சரத்தில் எழுந்தருளி உள்ளான்.

**குறிப்புரை:** வரந்தை முதலிய பதிகளில் இருப்பவனும், உடுக்கை, கோவணம், கிண்கிணி, கபாலம் இவற்றை உடையவனும் கணபதீச்சரத்தான் என்கின்றது. வரந்தை, கிரந்தை, சோபுரம் என்பன ஊர்ப் பெயர்கள். மந்திரம் – வேதம். தந்திரம் – ஆகமம். கையது ஓர் சிரந்தையான் – கையின் கண்ணதாக ஓர் உடுக்கையை உடையான். சிரந்தை – உடுக்கை. கரந்தை – சிவகரந்தை என்ற மணமுள்ள பூண்டு.

Lord Civan who is entempled in Thiruchchengkaattangkudi also presides over the towns of Varanthai and Chōpuram. He is the author of Vedas and Aagamaas (மந்திரத்தான், தந்திரத்தான்). He is clad in a fore-lap cloth (கோவணம்) strapped to His loins. He wears on His feet tinkling anklets. He holds a small drum (தமருகம்) in His hand. He wears on His ruddy matted hair the Karanthai leaves. He is the Lord of Thiruchcheng-kaattangkudi who smears His body with holy ashes.

**Note:** Kirantai: This place is not identified.

தொங்கலுங் கமழ்சாந்து மகிற்புகையுந் தொண்டர்கொண்
டங்கையால் தொழுதேத்த அருச்சுனற்கன் றருள்செய்தான்
செங்கயல் பாய்வயலுடுத்த செங்காட்டங் குடியதனுள்
கங்கைசேர் வார்சடையான் கணபதீச் சரத்தானே. 4

தொங்கலும் கமழ்சாந்தும் அகில்புகையும் தொண்டர் கொண்டு,
அங்கையால்-தொழுது ஏத்த, அருச்சுனற்கு அன்று அருள்செய்தான்;
செங்கயல் பாய் வயல் உடுத்த செங்காட்டங்குடிஅதனுள்;
கங்கை சேர் வார்சடையான் - கணபதீச்சுரத்தானே.

togkalum kamazcAntum akil pukaiyum toNTar koNTu,
agkaiyAl--tozutu Etta, aruccun2aRku an2Ru aruLceytAn2;
cegkayal pAy vayal uTutta cegkATTagkuTi atan2uL,
kagkai cEr vArcaTaiyAn2--kaNapatIccurattAn2E.

**பொருள்:** சிவபெருமான் கங்கை தங்கிய நீண்ட சடைமுடியை உடையவர். முன்பொரு நாள் சிவனை நோக்கி தவம் செய்த அருச்சுனனுக்கு அருள் செய்தவர். சிவந்த கயல்மீன்கள் பாயும் வளமான வயல்களால் சூழப்பட்ட திருச்செங்காட்டங்குடியில் கணபதீச்சரம் என்னும் கோயிலில் எழுந்தருளி உள்ளார். தொண்டர்கள் மாலைகளும் மணம் கமழும் சந்தனமும், அகில் புகையும் கொண்டு தம் அழகிய கைகளால் தொழுது போற்றி வணங்கி அருச்சித்த உடனே அருள் செய்யும் பெருமான் இவர்.

**குறிப்புரை:** அருச்சுனனுக்கு அருள் செய்தான் கணபதீச்சரத்தான் என்கின்றது. தொங்கல் – மாலை.

Lord Civan is enshrined at Ganapathy-eechcharam in the Thiruchcheng-kaattangkudi town surrounded by fertile fields where ruddy kayal fish leap about. He accommodates the river Ganges in His long matted hair. Servitors perform puja and adore, praise and worship Him by their graceful hands using fragrant flower garlands, sandalwood paste, and the smoke of eaglewood. He graces the servitors then and there. He showered Blessings on Arjunan in the days of yore, in response to this prayers and rituals.

பாலினால் நறுநெய்யாற் பழத்தினாற் பயின்றாட்டி
நூலினால் மணமாலை கொணர்ந்தடி யார்புரிந்தேத்தச்
சேலினார் வயல்புடை சூழ்செங்காட்டங் குடியதனுள்
காலினாற் கூற்றுதைத்தான் கணபதீச் சரத்தானே. 5

பாலினால் நறுநெய்யால் பழத்தினால் பயின்று ஆட்டி,
நூலினால் மணமாலை கொணர்ந்து, அடியார் புரிந்து ஏத்த,
சேலின் ஆர் வயல் புடை சூழ் செங்காட்டங்குடிஅதனுள்,
காலினால் கூற்று உதைத்தான் - கணபதீச்சுரத்தானே.

pAlin2Al naRu neyyAl pazattin2Al payin2Ru ATTi,
nUlin2Al maNamAlai koNarntu, aTiyAr purintu Etta,
cElin2 Ar vayal puTai cUz cegkATTagkuTi atan2uL,
kAlin2Al kURRu utaittAn2--kaNapatIccurattAn2E.

**பொருள்:** திருச்செங்காட்டங்குடி, சேல்மீன்கள் நிறைந்த வளமான வயல்களால் புடை சூழப்பட்டு உள்ளது. இங்குள்ள கணபதீச்சரத்தில், தனது இடது காலால் இயமனை உதைத்த சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். இங்கு, அடியவர்கள் ஆகம விதிப்படி பாலினாலும், மணம் கமழும் நெய்யாலும், பழங்களாலும் பலகாலமாக விரும்பி அபிடேகிக்கின்றனர். மண மாலைகளைக் கொண்டு வந்து சூட்டி அன்போடு வழிபடுகின்றனர்.

**குறிப்புரை:** அடியார் பாலும் நெய்யுங்கொண்டு அபிடேகித்து மணமாலை கொண்டு வழிபடக் கூற்றுதைத்தான். இவ்வூரான் என்கின்றது. பயின்று – பலகாலும் பழகி நூலினான் – வேதவிதிப்படி. புரிந்து – விரும்பி.

Lord Civan kicked with His left leg Yama, the god of death. He is enshrined at Ganapathy-eechcharam in the Thiruchchengkaattangkudi town which is surrounded by fertile fields having plenty of carp fishes. Devotees of Civan offer worship to Him, here in this temple, full of devotion. They perform the sacred bath and other rituals strictly according to prescribed rules of the Aagamaas. They use milk, fragrant fresh ghee, different kinds of fruits and other sacred items for the holy bath. Then they garland Him with elegant flowers, and worship Him.

நுண்ணியான் மிகப்பெரியான் ஓவுளார் வாயுளான்
தண்ணியான் வெய்யானந் தலைமேலான் மனத்துளான்
திண்ணியான் செங்காட்டங்குடியான் செஞ்சடைமதியக்
கண்ணியான் கண்ணுதலான் கணபதீச்சரத்தானே. 6

*நுண்ணியான், மிகப் பெரியான், நோய்உளார் வாய் உளான்,*
*தண்ணியான், வெய்யான், நம் தலைமேலான், மனத்து உளான்,*
*திண்ணியான், செங்காட்டங்குடியான், செஞ்சடை மதியக்-*
*கண்ணியான், கண் நுதலான் - கணபதீச்சுரத்தானே.*

nuNNiyAn2, mikap periyAn2, nOy uLAr vAy uLAn2,
taNNiyAn2, veyyAn2, nam talaimElAn2, man2attu uLAn2,
tiNNiyAn2, cegkATTagkuTiyAn2, cenjcaTai matiyak--
kaNNiyAn2, kaN nutalAn2--kaNapatIccurattAn2E.

**பொருள்:** திருச்செங்காட்டங்குடியில் கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான் நுண்ணியன யாவற்றிலும் மிக நுண்ணியன், பருமையான பொருள்கள் யாவற்றிலும் மிகப் பருமையானவன். நோயினால் வருந்துபவர்களால் துதிக்கப்படுபவன். தன்னடியடைந்த அடியார்களுக்கு குளிர்ச்சியானவன். புறச்சமயத்தார்க்கு வெய்யவன். ஞானிகளின் முடிமீதும் மனத்திலும் உறைபவன். உறுதியானவன். தனது சிவந்த சடைமீது பிறைமதிக் கண்ணியைச் சூடியவன். நெற்றியில் மூன்றாவது கண்ணை உடையவன்.

**குறிப்புரை:** நுண்மைக்கு நுண்ணியனாகவும், பருமைக்குப் பரியனாகவும், வருந்துவார் வாயுளானாகவும், தண்ணியனாகவும் வெம்மையனாகவும், மேலும் அகத்தும் இருப்பவனாகவும் விளங்குங் கண்ணுதலான் கணபதீச்சரத்தான் என்கின்றது. 'நுண்ணியான் மிகப் பெரியான்' என்றதும், அணோரணீயாந் மஹதோ மஹீயாந் என்னும் உபநிடதக் கருத்தும் ஒத்தமை காண்க. தன்னடியடைந்த அடியார்கட்குத் தண்ணியான், புறச்சமயத்தார்க்கு வெய்யான், கிரியாவான்களுக்கு சகத்திரதளபத்மத்தின் மேலதாகத் தலைமேலோன், ஞானிகட்கு மனத்துளான் என்க. கண்ணி – தலையில் சூடப்படும் மாலை.

Lord Civan who is enshrined at the Ganapathy-eechcharam in Thiruchchengkaattangkudi has the third eye in His forehead and wears the crescent moon in His ruddy matted hair. He is the subtlest of the subtle. He is much bigger than all the biggest. He is adored by the sick through their sincere prayers. He is cool and calm to those devotees who adore Him. But He will be very furious to those who defy Him. He is calm and steady temperamented. He is in the head and heart of His devotees and graces them as an invisible guide (அடியார்களின் உள்ளத்திலும் மனத்திலும் தோன்றாத் துணையாக இருந்து அருள் புரிவான்).

**Note:** Pain is a blessing in disguise. It inculcates bhakti.

மையினார் மலர்நெடுங்கண் மலைமகளோர் பாகமாம்
மெய்யினான் பையரவ மரைக்கசைத்தான் மீன்பிறழச்
செய்யினா ரகன்கழனிச் செங்காட்டங்குடி யதனுட்
கையினார் கூரெரியான் கணபதீச்சரத்தானே. 7

மையின்ஆர் மலர்நெடுங்கண் மலைமகள் ஓர்பாகம்ஆம்
மெய்யினான், பைஅரவம் அரைக்கு அசைத்தான், மீன் பிறழ் அச்
செய்யின் ஆர் அகன் கழனிச் செங்காட்டங்குடி அதனுள்
கையின் ஆர் கூர் எரியான் - கணபதீச்சுரத்தானே.

maiyin2 Ar malar neTugkaN malaimakaL Or pAkam Am
meyyin2An2, pai aravam araikku acaittAn2, mIn2 piRaz ac
ceyyin2 Ar akan2 kazan2ic cegkATTagkuTi atan2uL
kaiyin2 Ar kUr eriyAn2--kaNapatIccurattAn2E.

**பொருள்:** சிவபெருமான், கருங்குவளை மலர் போன்ற நீண்ட கண்களை உடைய மலைமகளாகிய பார்வதி தேவியை ஒரு பாகமாகத் தன் திருமேனியில் கொண்டுள்ளார். படத்தோடு கூடிய பாம்பை இடையிலே கட்டியுள்ளார். கையில் மிகுந்துள்ள தீயை ஏந்தியுள்ளார். இவர் மீன்கள் துள்ளுகின்ற அந்த வயலையும், அகன்ற நீர் நிலைகளையும், பண்படுத்தப்பட்ட வயல்களையும், தானே அமைந்த விளைநிலங்களையும் உடைய திருச்செங்காட்டங்குடி கணபதீச்சரத்தில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** மலைமகளை ஓர் பாகமாகக் கொண்டவன், கையில் மழுவேந்திய கணபதீச்சரத்தான் என்கின்றது. மையினார் மலர் – நீல மலர். பையரவம் – படத்தோடு கூடிய பாம்பு. மீன் பிறழ் அச்செய்யின் ஆர் அகன்கழனி – மீன்கள் துள்ளுகின்ற அந்த வயலையும், நிறைந்த அகன்ற நீர்நிலைகளையும் உடைய. செய் – பண்படுத்தப்பெற்ற வயல். கழனி – தானே அமைந்த விளைபுலம்.

Lord Civan is enshrined at Ganapathy-eechcharam in the Thiruchcheng-kaattangkudi town. This town is encircled by broad natural fields as well as developed fields where different kinds of fish swim around in the water. He is concorporate with His consort Paarvathi Devi, daughter of the Himalayan king, whose long dyed eyes resemble flowers. He is clothed in wasit by a hooded snake. He holds in one of His hands the sharp battle axe.

**Note:** The snake is symbolic of Kundalini yoga.

தோடுடையான் குழையுடையா னரக்கன்றன்றோளடர்த்த
பீடுடையான் போர்விடையான் பெண்பாக மிகப்பெரியான்
சேடுடையான் செங்காட்டங்குடி யுடையான் சேர்ந்தாடுங்
காடுடையானா டுடையான் கணபதீச்சரத்தானே. 8

தோடுஉடையான், குழைஉடையான், அரக்கன்தன் தோள் அடர்த்த
பீடு உடையான், போர் விடையான், பெண் பாகம் மிகப் பெரியான்,
சேடு உடையான், செங்காட்டங்குடி உடையான், சேர்ந்து ஆடும்
காடு உடையான், நாடுஉடையான் - கணபதீச்சுரத்தானே.

tOTu uTaiyAn2, kuzai uTaiyAn2, arakkan2tan2 tOL aTartta
pITu uTaiyAn2, pOr viTaiyAn2, peN pAkam mikap periyAn2,
cETu uTaiyAn2, cegkATTAgkuTi uTaiyAn2, cErntu ATum
kATu uTaiyAn2, nATu uTaiyAn2--kaNapatIccurattAn2E.

**பொருள்:** திருச்செங்காட்டஞ்குடியில் விளங்கும் கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ள சிவபெருமான், ஒரு காதில் தோடையும், பிறிதொரு காதில் குழையையும் அணிந்தவர். கயிலையை பெயர்த்த இராவணனின் தோள்களை நெரித்த பெருமை உடையவர். போரிடும் காளையை உடையவர். பெண்ணை ஒரு பாகமாகக் கொண்டவர். மிகவும் பெரியவர். பெருமைகட்கு உரியவர். பூதகணங்களோடு சேர்ந்து ஆடும் சுடுகாட்டைத் தனக்கு இடமாகக் கொண்டவர். நாடுகள் பலவற்றிலும் கோயில் கொண்டு அருளாட்சி புரிபவர்.

**குறிப்புரை:** தோடும் குழையும் பீடும் உடையவன் என்பது முதலாக அவன் சிறப்பியல்புகள் பலவற்றைச் செப்புகிறது. தோடு சத்தி பாகத்திற்குரியது. குழை சிவத்தின் பாகத்திற்கு உரியது. அரக்கன் – இராவணன். பீடு – பெருமை.

Lord Civan wears an 'ola roll' (*தோடு*) in His left ear and an ear jewel (*குழை, குண்டலம்*) in His right ear. He is the eminent One who crushed the shoulders of Raavanan who tried to lift His abode mount Kailas. His vehicle is the martial Bull. He is the pre-eminent and glorious One, having His consort on the left portion of His body. He dances in the burning ground along with His hosts of goblins. He is entempled in Ganapathy-eechcharam and graces His devotees everywhere. He is Chief of the magnificent Kailas peak and also Chief of everywhere, forest and land.

**Note:** The first line of this verse is indicative of Civa's form as Ammai-appar.

The glorious peak is Mt. Kailas. The Tamil word 'Cedu' means 'mountain peak'.

ஆனூராவுழி தருவானன்றி ருவர்தேர்ந்துணரா
வானூரான் வையகத்தான் வாழ்த்துவார் மனத்துளான்
தேனூரான் செங்காட்டங்குடியான் சிற்றம்பலத்தான்
கானூரான் கழுமலத்தான் கணபதீச்சரத்தானே. 9

*ஆன் ஊரா உழிதருவான், அன்று இருவர் தேர்ந்து உணரா*
*வான்ஊரான், வையகத்தான், வாழ்த்துவார் மனத்துஉளான்,*
*தேனூரான், செங்காட்டங்குடியான், சிற்றம்பலத்தான்,*
*கானூரான், கழுமலத்தான் - கணபதீச்சுரத்தானே.*

An2 UrA uzi taruvAn2, an2Ru iruvar tErntu uNarA
vAn2 UrAn2, vaiyakattAn2, vAzttuvAr man2attu uLAn2,
tEn2UrAn2, cegkATTAgkuTiyAn2, ciRRampalattAn2,
kAn2UrAn2, kazumalattAn2--kaNapatIccurattAn2E.

**பொருள்:** சிவபெருமான் இடபத்தில் ஏறி அதன் மீது ஊர்ந்து பல இடங்களிலும் திரிபவர். முன்னொரு காலத்தில் திருமால், பிரமன் ஆகிய இருவர்க்கும் அடிமுடிகளைத் தேடி உணர முடியாதவாறு வானளாவ ஓங்கி நின்றவர். இவ்வையகத்திலும், சிற்றம்பலத்திலும், தேனூரிலும், கானூரிலும், கழுமலத்திலும் விளங்குபவர். இவ்வாறு புறத்தில் வையகத்திலும் வானிலும் விளங்குபவர், வாழ்த்துபவர்கள் மனத்தினுள்ளும் விளங்குபவர் ஆவார். இவர் திருச்செங்காட்டங்குடியில் கணபதீச்சரத்தில் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** அவன் ஏறுவது விடை. இடம் வான், வையகம், வாழ்த்துவார் மனம், தேனூர், கானூர் முதலியன என்கின்றது. ஆன் ஊரா ஊழி தருவான் – இடபத்தை ஏறிச் சுற்றுவான். இருவர் – அயனும் மாலும். வானூரான் – விண்ணிடமாக ஓங்கி வளர்ந்தவன். இங்ஙனம் புறத்தானே எனினும் வாழ்த்துவார் மனத்தகத்துள்ளான்.

Lord Civan rides on His bull through many realms. He is the Lord who, in the past, stood as a big column of Fire blazing beyond the upper reaches of the atmosphere, unknowable to Thirumaal and Vishnu. In this earth He is enshrined in Citrambalam (Chidambaram) Thenoor, Kanoor and Kazhumalam towns. Though He is externally present as above, He also resides internally in the minds of His devotees, who adore Him. This Lord Civan is enshrined at Ganapathy-eechcharam in the Thiruchcheng-kaattangkudi town.

செடிநுகருஞ் சமணர்களுஞ் சீரவரத்த சாக்கியரும்
படிநுகராத யருழப்பார்க்கரு ளாதபண்பினான்
பொடிநுகருஞ் சிறுத்தொண்டர்க் கருள்செய்யும் பொருட்டாகக்
கடிநகராய் வீற்றிருந்தான் கணபதீச்சரத்தானே. 10

செடி நுகரும் சமணர்களும், சீரவரத்த சாக்கியரும்,
படி நுகராத அயர் உழப்பார்க்கு அருளாத பண்பினான்;
பொடி நுகரும் சிறுத்தொண்டர்க்கு அருள் செய்யும் பொருட்டாகக்
கடி நகர்ஆய் வீற்றிருந்தான் - கணபதீச்சுரத்தானே.

ceTi nukarum camaNarkaLum, cIvaratta cAkkiyarum
paTi nukarAtu ayar uzappArkku aruLAta paNpin2An2;
poTi nukarum ciRut toNTarkku aruL ceyyum poruTTAkak
kaTi nakar Ay vIRRiruntAn2--kaNapatIccurattAn2E.

**பொருள்:** முடை நாற்றத்தை நுகரும் சமணர்களும், காவி ஆடை உடுத்த புத்தர்களும் எம்பெருமானுடைய அருளை அறியாது துன்புறுபவர்கள். அவர்களுக்கு எம்பெருமான் அருள்புரியாத இயல்பினர். திருநீற்று மணத்தையே நுகரும் சிறுத்தொண்ட நாயனாருக்கு அருள் செய்யும் பொருட்டுத் திருச்செங்காட்டங்குடியைத் தலமாகக் கொண்டு அங்குள்ள கணபதீச்சரத்தில் எழுந்தருளி உள்ளார்.

**குறிப்புரை:** புறச்சமயத்தார்க்கிருளாயிருப்பவன் சிறுத்தொண்ட நாயனார்க்கு அருள் வழங்க இந்நகரில் எழுந்தருளி இருக்கின்றான் என்கின்றது. செடி – நாற்றம். சீவரம் – காவியாடை. படி நுகராது – பூமியின் கண் நுகரத்தகுவன நுகராதே. அயர் உழப்பார் – துன்பத்தைத் தாமே தேடிக்கொண்டு வருந்துபவர்கள். பொடி – விபூதி. கடி நகர் – காவல் நகரம்.

The stinking smell that emanates from the body of Samanars spreads all around. Buddhists cover their body with ochre-robed cloth. Both these people suffer in their life; because they neither realise nor acknowledge the golden attributes, aspects and the supremacy of our Lord Civan. Naturally they get deprived of His grace. For the sole purpose of showing grace on Siru-th-thonda-naainaar, a great devotee of Civan, who hails from this town and who wears only the sweet smelling holy ashes of Civan, our Lord is enshrined at the Ganapathy-eechcharam in Thiruchchengkaattangkudi.

**Note:** St. Thiru-Gnaanasambandar, a contemporary of Siru-thondar gives an advance indication through this verse, about Lord Civan's plans to redeem Siru-thondar from within this shrine in Thiruchchengkaattangkudi.

கறையிலங்கு மலர்க்குவளை கண்காட்டக் கடிபொழிலின்
நறையிலங்கு வயற்காழித் தமிழ்ஞான சம்பந்தன்
சிறையிலங்கு புனற்படப்பைச் செங்காட்டங்குடி சேர்த்தும்
மறையிலங்கு தமிழ்வல்லார் வானுலகத்திருப்பாரே. **11**

கறை இலங்கு மலர்க்குவளை கண் காட்டக் கடிபொழிலின்
நறை இலங்கு வயல் காழித் தமிழ் ஞானசம்பந்தன்
சிறை இலங்கு புனல் படப்பைச் செங்காட்டங்குடி சேர்த்தும்
மறை இலங்கு தமிழ் வல்லார் வான்உலகத்து இருப்பாரே.

kaRai ilagku malarkkuvaLai kaN kATTak kaTipozilin2
naRai ilagku vayal kAzit tamiz njAn2acampantan2,
ciRai ilagku pun2al paTappaic cegkATTagkuTi cErttum
maRai ilagku tamiz vallAr vAn2 ulakattu iruppArE.

**பொருள்:** நீலமலராகிய குவளைக் கண் போல் மலர்ந்து விளங்குவதும், மணம் கமழும் சோலைகளில் உள்ள தேனின் மணம் வீசுவதுமான, வயல்களால் சூழப்பட்ட சீர்காழிப் பதியில் தோன்றியவர் தமிழ் வல்லவரான ஞானசம்பந்தன். கரைகளோடு நீர் நிறைந்து தோன்றும் வயல்கள் சூழ்ந்து திருச்செங்காட்டங்குடியில் விளங்கும் கணபதீச்சரத்துச் சிவபெருமான்மீது வேதப் பொருள் நிறைந்த இப்பதிகத்தைப் பாடினார். இத்திருப்பதிகத் தமிழ் மாலையை ஓதவல்லார் வானுலகில் வாழ்வார்கள்.

**குறிப்புரை:** இத்திருப்பதிகத் தமிழ் மாலையை ஓத வல்லவர்கள் வானுலகத்திருப்பவர் என்கின்றது. கறை இலங்கு மலர் – நீலமலர். நறை – தேன். சிறை – கரை. படப்பை – தோட்டம். மறை இலங்கு தமிழ் – வேதக் கருத்துக்கள் விளங்கும் தமிழ்ப் பாடல்கள் வானுலகத்து இருப்பார் – புண்ணிய லோகந் துய்க்கச் சென்ற தேவர்கள் போலாது அயனால் படைக்கப்பட்ட பதினென் கணத்தவர்களில் ஒருவராக என்றும் இருப்பார்.

Gnaanasambandan, scholar in Tamil hails from Seekaazhi which is encircled by fields and groves, where fragrant smell of honey and flowers spreads all around; lilies (*குவளை மலர்*) like unto human eyes, blossom in the ponds everywhere. He sang this hymn on Lord Civan of the Eechcharam temple in Thiruchchengkaattangkudi, which is surrounded by fields full of water with well-formed ridges. Those who can master these Tamil hymns, which is the gist of the Vedas, will abide and flourish in heaven.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*61ஆம் பதிகம் முற்றிற்று*
End of 61st Hymn

உ
சிவமயம்

# 62. திருக்கோளிலி

## திருத்தலவரலாறு:

திருக்கோளிலி என்ற திருத்தலமானது சோழ நாட்டுக் காவிரித் தென்கரைத் தலம் ஆகும். திருவாரூரில் இருந்து பேருந்துகளில் செல்லலாம். திருக்குவளை என வழங்கப் பெறுகிறது. ஆதியில் பிரமன் சிருட்டித் தொழிலைப் பெறவேண்டிப் பூசித்தான். அதனால் பிரமதபோவனம் என வழங்கப் பெறும். இது சப்தவிடங்கத் தலங்களுள் ஒன்று. இங்கே எழுந்தருளியுள்ள தியாகர் அவனி விடங்கர், நவகோள்கள் பூசித்துப் பேறு பெற்றமையால் கோளிலி என வழங்கப் பெறுகிறது.

இறைவன் பிரமபுரீசுவரர். அம்மை வண்டமர் பூங்குழலாள். தியாகர் ஊழிப்பரன். அவனி விடங்கத்தியாகர். விநாயகர் தியாக விநாயகர். முருகன் சுந்தர வடிவேலன். சுந்தர மூர்த்திகளுக்குக் குண்டையூர்கிழார் தந்த நெல் மலையைப் பூதங்களைக் கொண்டு திருவாரூரில் சேர்ப்பித்த அற்புதத் தலம்.

தீர்த்தம், முத்தி நதியாகிய சந்திர நதி, மணி கர்ணிகை, இந்திர தீர்த்தம், அகத்திய தீர்த்தம், விநாயகதீர்த்தம், சக்தி தீர்த்தம் என்பன. தலவிருட்சம் தேற்றாமரம் (Water Clearing Nut Tree – Strychnos pototorium).

### வழிபட்டவர்கள்:

பிரமதேவர், திருமால், இந்திரன், அகத்தியன், முசுகுந்தன், பஞ்சபாண்டவர்கள், நவகோள்கள், ஓமகாந்தன் முதலியோர்.

### விழாக்கள்:

மாசி மகத்தில் நெல் திருவிழா, மார்கழி மாதத்தில் ஆருத்ரா தரிசனம், கார்த்திகை ஞாயிற்றுக் கிழமைகளில் தீர்த்தம். தருமை ஆதீன அருளாட்சியில் உள்ளது.

### கல்வெட்டு:

இங்குள்ள கல்வெட்டுக்கள் 19. இத்தலம் இராஜேந்திர சோழ வளநாட்டு இடையள நாட்டு வெண்டாழை வேளூர்க் கூற்றத்திற்கு உட்பட்டதாய் இருந்தது. வட்வல்லத்து இருள்குடியான் இந்திராபதி நல்லூர் உய்ய வந்தான் சிய்யாழிப் பிள்ளையான ஜெயதுங்க வன்மன் மகாமண்டபந்

தொடங்கிக் கீழைவாசல் வரையில் திருப்பணி செய்தான். இத்திருப்பணி ஜடாவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தது ஆகும். இத்திருக்கோயிலில் சிவன்படாரில் (செம்படவர்) ஒருவனான ஆலன் என்பான் அதிபத்த நாயனார் படிவத்தை எழுந்தருளிவித்தான்.

**பதிக வரலாறு:**

மல்லல் நீடிய வலிவலம் வணங்கிப் போதரும் பிள்ளையார், கோளிலிப் பெரும்பதியை அடைந்து கோளிலிப் பெருமான் குரைகழலைக் கும்பிட்டு 'நாளாய போகாமே' என்னும் இத்திருப்பதிகத்தைப் பாடினார்.

## 62. THIRU-K-KŌLILEE

### THE HISTORY OF THE PLACE

The sacred city of Thiru-k-kōlilee is to the south of river Cauvery in Chola Naadu. It is accessible by bus from Thiruvaaroor. It is also called Thirukkuvalai.

The Lord is called Biramapureesuvarar and the Goddess is known as Vandamar Poongkuzhalaal. The Thiyaagar image is known by the names of Oozhipparan and Avanividangkath Thiyagaar. The Vinaayakar is known as Thiyaaga Vinaayakar. Murugan here is called Sundharar Vadivelan. The sacred fords are Muththi River or Chandhiranadhi, Manikarnikai, Indhira Theerththam, Agaththiya Theerththam, Vinaayaka Theerththam, and Sakthi Theerththam. The sacred tree is the Therraa tree (*தேற்றாமரம்;* Water clearing nut tree; Strychnos pototorium).

In the beginning of creation, Brahman worshipped here to get the work of creation. For that reason this is called 'Biramathapovanam'. This is one of the seven 'vidangka' temples. It is called 'Kolili' as the nine planets (kol) offered worship here.

This temple is associated with the miracle of Siva's servants (bhoothas) transporting to Thiruvaaroor the huge amount of paddy given to Saint Sundharamoorthi by Kundaiyoor Kizhaar. In addition to Biraman and the nine planets, others who offered worship here include Indhiran, Agaththiyan, Mucukundhan, the Five Paandavaas, Omakaanthan and others.

The festivals celebrated here are the paddy festival in Maasi Magham, Aarudhraa Dharisanam in Maargazhi, and Theerththam on Kaarthigai Sundays. This temple is under the administration of Dharumai Aadheenam.

There are 19 inscriptions in this temple. During the reign of Jataavarman Sundharapaandiyan, one Jayathungkavarmań renovated the part of the temple from the great mandapam to the east entrance. One Aalan of the fisherman clan had the image of Adhipaththa Naayanar installed here.

## INTRODUCTION TO THE HYMN

From Valivalam our saint came to this holy place and sang the following hymn.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 62. திருக்கோளிலி — 62. THIRU-K-KŌLILEE

பண் : பழந்தக்கராகம்
ராகம் : ஆரபி

*Pann: Pazhanthakka Raagam*
*Raagam: Aarabi*

நாளயபோகாமே நஞ்சணியுங் கண்டனுக்கே
ஆளாயஅன்பு செய்வோம் மடநெஞ்சே யரன்நாமம்
கேளாய்நங் கிளைகிளைக்குங் கேடுபடாத்திறமருளிக்
கோளாயநீக் குமவன்கோளிலியெம் பெருமானே. 1

நாள்ஆய போகாமே, நஞ்சு அணியும் கண்டனுக்கே
ஆள்ஆய அன்பு செய்வோம்; - மடநெஞ்சே! - அரன் நாமம்
கேளாய்! நம் கிளைகிளைக்கும் கேடு படாத் திறம் அருளிக்
கோள்ஆய நீக்குமவன் - கோளிலி எம்பெருமானே.

nAL Aya pOkAmE, nanjcu aNiyum kaNTan2ukkE
AL Aya an2pu ceyvOm;--maTa nenjcE!--aran2 nAmam
kELAy! nam kiLai kiLaikkum kETu paTAt tiRam aruLik
kOL Aya nIkkumavan2--kOLili emperumAn2E.

**பொருள்:** அறியாமையை உடைய மனமே! உலகில் உயிர் வாழும் நாட்கள் வீணாகிப் போவதற்கு முன்பே, நீலகண்டனான சிவபெருமானுக்கு அடியவராக விளங்கி, அவரிடத்தில் அன்பு செய்வாயாக. அப்பெருமானின் திருநாமங்களை எப்பொழுதும் கேட்பாயாக. அவ்வாறு கேட்டால் நம் சுற்றத்தினரும் செழித்து இனிது வாழ்வர். துன்பங்கள் நம்மைத்

தாக்காதவாறு அருள்புரிவான். நம் மனத்தின் மாறுபாடுகளையும் அவன் தீர்த்து அருளுவான். அவ்விறைவன், திருக்கோளிலி என்னும் தலத்தில் எழுந்தருளி உள்ளான்.

**குறிப்புரை:** வாழ்நாள் வீணாளாகக் கழியாத வண்ணம், நீலகண்டனுக்கு ஆளாய் அன்பு செய்வோம். நமக்கு மட்டுமன்று; நம் சுற்றமுங்கூட நன்மையடையும் உபாயத்தை அருளிச் செய்து கோள்களை நீக்குபவன் கோளிலிப் பெருமான் என்கின்றது. மட நெஞ்சே – அறியாமையை உடைய நெஞ்சமே. கேளாய் – கேட்பாயாக. கிளை கிளைக்கும் – சுற்றம் சுற்றத்திற்குச் சுற்றம் இவைகட்கும். கோள் – மாறுபாடு.

Oh humanity! I pity your ignorance. Without wasting our lives on earth and before leaving this world, let us adore Lord Civan with sincere devotion, whose poisoned neck is of dark blue colour. Let us attain bliss by hearing His name Namasivaaya again and again. By this our kith and kin as well their kith and kin will flourish in life. Our Lord will remove our sufferings as well as our mental aberrations and grace us. This Lord is enshrined at the temple in Thiru-k-kōlilee.

**Note:** In this verse Gnaanasambandan addresses literally the minds. However his intention is that he address humanity at large.

ஆடரவத் தழகாமை அணிகேழற் கொம்பார்த்த
தோடரவத் தொருகாதன் துணைமலர் நற்சேவடிக்கே
பாடரவத் திசைபயின்று பணிந்தெழுவார் தம்மனத்தில்
கோடரவந் தீர்க்குமவன் கோளிலியெம் பெருமானே. 2

ஆடுஅரவத்து அழகு ஆமை, அணி கேழல்கொம்பு, ஆர்த்த
தோடுஅரவத்து ஒரு காதன், துணைமலர்நல்சேவடிக்கே
பாடு அரவத்து இசை பயின்று, பணிந்து எழுவார்தம் மனத்தில்
கோடரவம் தீர்க்குமவன் - கோளிலி எம்பெருமானே.

ATu aravattu, azaku Amai, aNi kEzal kompu, Artta
tOTu aravattu oru kAtan2, tuNai malar nal cEvaTikkE
pATu aravattu icai payin2Ru, paNintu ezuvAr tam man2attil
kOTaravam tIrkkumavan2--kOLili emperumAn2E.

**பொருள்:** சிவபெருமான், படம் எடுத்து ஆடும் இயல்புடைய பாம்பை நாணாகக் கொண்டவர். அதில் அழகிய ஆமை ஓட்டையும், பன்றிக் கொம்பையும் கோர்த்து அணிந்திருப்பவர். தோடாகப் பாம்பையே கொண்டவர். திருக்கோளிலியில் எழுந்தருளி

உள்ள எம்பிரானின் இரண்டு மலர் போன்ற நல்ல சிவந்த திருவடியில் துதிப் பாடல்களை இசையோடு பாடிப் பணிந்து வணங்குபவர்களின் மனக் கோணலைத் தீர்த்து அருளுவான்.

**குறிப்புரை:** பாம்பாகிய நாணில் ஆமையோட்டையும், பன்றிக் கொம்பையும் கட்டியணிந்த இறைவன் திருவடியில், துதிப்பாக்களைச் சொல்லி எழுவார் மனத்துக் கோணலை நீக்கும் பெருமான் இவர் என்கின்றது. கேழல் – பன்றி. தோடு அரவம் – தோடாக உள்ள பாம்பு. பாடு அரவம் – பாட்டோசை. கோடரவம் – கோணல்.

Lord Civan is bedecked with a snake to which is attached the turtle shell and the tusk of hog. Also He wears the snake itself as His ola roll (தோடு). Those who adore Him in tuneful song glorifying and worshiping His twin beautiful, ruddy flower-like Holy Feet will get rid of their aberrations. This our Lord is enshrined in Thiru-k-kōlilee.

**Note:** The carapace: Vishnu made an avatar in the shape of a tortoise. Civa had to wrench its carapace when it grew haughty beyond measure.

The Hog: Vishnu who made his avatar as a boar. Civa had to wrench its tusks when it grew haughty.

Snakes are Civa's jewels. He alone can tame the thanatophidian creature.

நன்றுநகு நாண்மலரால் நல்லிருக்கு மந்திரங்கொண்
டொன்றி வழிபாடு செயலுற்றவன் றனோங்குயிர்மேல்
கன்றிவரு காலனுயிர் கண்டவனுக் கன்றளித்தான்
கொன்றை மலர்பொன்றி கழுங்கோளிலியெம் பெருமானே. 3

நன்று நகு நாள்மலரால், நல் இருக்குமந்திரம்கொண்டு,
ஒன்றி வழிபாடு செயல்உற்றவன்தன் ஓங்கு உயிர்மேல்
கன்றி வரு காலன் உயிர் கண்டு அவனுக்கு அன்று அளித்தான் -
கொன்றைமலர் பொன்திகழும் கோளிலி எம்பெருமானே.

nan2Ru naku nALmalarAl, nal irukku mantiram koNTu,
on2Ri vazipATu ceyal uRRavan2 tan2 Ogku uyirmEl
kan2Ri varu kAlan2 uyir kaNTu, avan2ukku an2Ru aLittAn2--
kon2Raimalar pon2 tikazum kOLili emperumAn2E.

**பொருள்:** திருக்கோளிலியில் எழுந்தருளியுள்ள எம்பெருமானாகிய சிவபெருமான் பொன் போன்று விளங்கும் கொன்றை மலரைச் சூடியிருக்கின்றார். இப்பெருமானை, மார்க்கண்டேயன் மலர்ந்த புதிய பூக்களைக் கொண்டும், இருக்கு வேத மந்திரங்களைக் கூறியும், மன ஒருமைப்பாட்டுடன் வழிபாடு செய்தான். இவனின் உயர்ந்த உயிரைக் கவர

இயமன் சினந்து வந்தான். சிவபெருமான் இயமனது உயிரைப் போக்கியும், மார்க்கண்டேயனுக்கு என்றும் பதினாறாண்டாக இருக்கும் வரத்தையும் அருளினார்.

**குறிப்புரை:** அன்றலர்ந்த புதுப்பூக்களைக் கொண்டு இருக்குவேத மந்திரங்களுடன் பூசை செய்த மார்க்கண்டேயன் மேல்வந்த காலனை உதைத்து மார்க்கண்டனுக்கு உயிர் வழங்கிய இறைவன் இவன் என்கின்றது. நகுநாண்மலர் – மலர்ந்த புதுப்பூ. ஒன்றி – மன ஒருமைப் பாட்டுடன். கன்றி – கோபித்து. கண்டு – போகக் கண்டு.

Sage Maarkandeyan was worshipping Lord Civan with single-minded deep devotion using fresh elegant flowers and chanting the Rig Vedic verses (Mantras). Yama, the Regent of Dharma Raajan, the god of death, came furiously to snatch away the life of this sage. Then he was kicked away to death by Lord Civan. Also Civan blessed Maarkandeyan, the youthful saint, and gave him the boon of Eternity without ageing beyond sixteen.

**Note:** Civa is worshipped with Vedic mantras. The form of worship is prescribed in the Aagamaas.

வந்தமணலாலி லிங்கமண்ணி யின்கட்பாலாட்டும்
சிந்தைசெய்வோன் தன்கருமந் தேர்ந்துசி தைப்பான்வருமத்
தந்தைதனைச் சாடுதலுஞ் சண்டீசனென்றருளிக்
கொந்தணவு மலர்கொடுத்தான் கோளிலியெம் பெருமானே. 4

வந்த மணலால் இலிங்கம் மண்ணியின்கண் பால்ஆட்டும்
சிந்தைசெய்வோன்தன் கருமம் தேர்ந்து சிதைப்பான் வரும் அத்
தந்தைதனைச் சாடுதலும், "சண்டீசன்" என்று அருளி,
கொந்து அணவும் மலர் கொடுத்தான் - கோளிலி எம்பெருமானே.

vanta maNalAl iligkam maNNiyin2 kaN pAl ATTum
cintai ceyvOn2 tan2 karumam tErntu citaippAn2 varum at
tantaitan2aic cATutalum, "caNTIcan2" en2Ru aruLi,
kontu aNavum malar koTuttAn2--kOLili emperumAn2E.

**பொருள்:** விசார சருமர், மண்ணியாற்றங்கரையில் மணலால் இலிங்கம் அமைத்து, மேய்ச்சலுக்குக் கொண்டு வந்த பசுவின் பாலை அபிடேகித்து வழிபட்டார். இவரது செயலைக் கண்டு அச்சிவபூசையைச் சிதைக்க முற்பட்ட அவன் தந்தையான எச்ச தத்தனின் காலை விசாரசருமர் வெட்டினார். திருக்கோளிலியில் விளங்கும் எம்பெருமானான

சிவபெருமான், அதனைக் கண்டு, விசாரசருமருக்குச் சண்டீசப்பதவி அருளித், தான் உண்ட கலத்தோடு சூடிய மலர் மாலைகளைச் சூடிக்கொள்ளும் சிறப்பையும் அளித்தார்.

**குறிப்புரை:** மண்ணியாற்றங் கரையில் மணலால் இலிங்கம் தாபித்துப் பாலாபிஷேகம் செய்த விசார சருமர் செயலை அறிந்து பூசனைக்கு இடையூறு செய்த தந்தை எச்சதத்தனை ஒறுத்தலும் அவருக்குச் சண்டேசப் பதவியைக் கொடுத்து, சூடிய மாலையும் உண்ட கலமும் அருளிச் செய்தவர் இவர் என்கின்றது. சிதைப்பான் – இடற. கொந்து அணவும் மலர் – பூங்கொத்துக்களில் உள்ள மலர்.

A deeply devoted and learned youth of the priestly class, Visaara Sarumar (*விசாரசருமர்*) son of Echchathaththan (*எச்சதத்தன்*) was tending cattle belonging to the entire people of his village Thiru-ch-chēnga-loor (*திருச்சேய்ஞலூர்*). He daily takes the cows to the rich grassy area on the banks of the river Manni (*மண்ணி ஆறு*) to graze in the lawns. As the cows graze, he used to erect a Civalingam out of the river sand in the banks of the river and do all rituals including a sacred bath to the Lingam by milk obtained from the cows he was tending. His father came to know about his 'misuse' of the milk belonging to the cow owners in the village. He came to the riverbed and saw his son pouring a lot of milk over the Civalingam he had erected out of sand. By seeing this, he became furious and kicked the Civalingam and the milk pot etc., resulting in a mess of everything he has arranged. The son took a stick that was lying nearby and gave a severe blow on the leg of his father, which kicked his Civalingam. Lo! The wooden stick miraculously transmuted into an axe and his father fell down dead, his leg amputated. Lord Civa then appeared along with his consort before the saintly lad, pardoned his impartial action and graced him with several boons as under:

1. A position as chief Lord Civa's attendants known as 'Chandeesan' (**சண்டீசன் என்னும் பதம்**).
2. Flower garlands after His use daily.
3. His dress after His use daily.
4. His food along with His daily.

Such is our Lord enshrined at Thiru-k-kōlilee.

**Note:** The Linga spoken of here, is called the Kshanika-linga. It has to be daily evolved out of the wet sand and has to be dissolved into it after the puja is completed. It is Chandeesa who runs the shrine of Civa.

The hagiography of Chandeesa indicates that all sections of the then society could be engaged in cattle breeding activity.

வஞ்சமனத் தஞ்சொடுக்கி வைகலும் நற்பூசனையால்
நஞ்சமுது செய்தருளு நம்பியெனவே நினையும்
பஞ்சவரிற் பார்த்தனுக் குப்பாசுபத மீந்துகந்தான்
கொஞ்சுகிளி மஞ்சணவுங் கோளிலியெம் பெருமானே. 5

வஞ்ச மனத்து அஞ்சு ஒடுக்கி, வைகலும் நல் பூசனையால்,
"நஞ்சு அமுது செய்து அருளும் நம்பி" எனவே நினையும்
பஞ்சவரில் பார்த்தனுக்குப் பாசுபதம் ஈந்து உகந்தான் -
கொஞ்சுகிளி மஞ்சு அணவும் கோளிலி எம்பெருமானே.

vanjca man2attu anjcu oTukki, vaikalum nal pUcan2aiyAl,
"nanjcu amutu ceytu aruLum nampi" en2avE nin2aiyum
panjcavaril pArttan2ukkup pAcupatam Intu ukantAn2--
konjcukiLi manjcu aNavum kOLili emperumAn2E.

***பொருள்:*** பாண்டவர் ஐவரில் ஒருவன் அருச்சுனன். அவன் தன் வஞ்சகமான மனத்தைத் திருத்தி, ஐம்பொறிகளை ஒடுக்கி, நாள்தோறும் நல்ல சிவபூசையைச் செய்தவன். 'நஞ்சினை அமுதாக உண்ட நம்பியே அடைக்கலம்' என நினைந்த சிவபக்தன். இந்த அருச்சுனனுக்கு பாசுபதம் என்னும் அஸ்திரம் வழங்கி மகிழ்ந்தவர் சிவபெருமான். இப்பெருமான், கொஞ்சும் கிளிகள் வானவெளியில் பறக்கும் திருக்கோளிலியில் எழுந்தருளி இருக்கும் எம்பெருமான் ஆவார்.

***குறிப்புரை:*** பொறிகளை ஒடுக்கித் தவம் செய்த விஜயனுக்குப் பாசுபதம் தந்த பரமன் இவர் என்கின்றது. அஞ்சு – மெய் வாய் முதலிய பொறிகள் ஐந்து. வைகலும் – தினந்தோறும். பஞ்சவர் – பாண்டவர். பார்த்தன் – அருச்சுனன். மஞ்சு – ஆகாயம்.

Arjunan, one of the five Paandava brothers, controlled his deceiving mind, controlled his five senses, and daily worshipped Lord Civan daily addressing Him in his mind "Oh Lord Civa! You quaffed the poison as though it is nectar and saved the Devaas and all humanity from disaster". To him, Oh Lord Civa You happily gave Your

invincible missile and projectile weapon (*பாசுபதாஸ்திரம்*). This Civan is our Supreme Lord enshrined in Thiru-k-kōlilee where loveable parrots are flying in the sky above this town.

**Note:** The paasupata Astra, divine weapon, is the greatest. The astraas of Brahma and Naarayana are no match for it. So Krishna (Vishnu) helped Arjunaa to secure this from Civa.

தாவியவனு டனிருந்துங்காணாத தற்பானை
ஆவிதனி லஞ்சொடுக்கி யங்கணனென் றாதரிக்கும்
நாவியல் சீர்நமிநந்தி யடிகளுக்கு நல்குமவன்
கோவியலும் பூவெழுகோற் கோளிலியெம் பெருமானே. 6

**தாவியவன் உடன் இருந்தும் காணாத தற்பானை,
ஆவிதனில் அஞ்சு ஒடுக்கி, "அங்கணன்" என்று ஆதரிக்கும்
நா இயல் சீர் நமிநந்தியடிகளுக்கு நல்குமவன் -
கோ இயலும் பூ எழு கோல் கோளிலி எம்பெருமானே.**

tAviyavan2 uTan2 iruntum kANAta taRparan2ai,
Avitan2il anjcu oTukki, "agkaNan2" en2Ru Atarikkum
nA iyal cIr nami nantiyaTikaLukku nalkumavan2--
kO iyalum pU ezu kOl kOLili emperumAn2E.

**பொருள்:** தலைமை சான்ற மலர் மரங்களை உடைய திருக்கோளிலியில் எம்பெருமானான சிவபெருமான் எழுந்தருளியுள்ளார். மூவுலகங்களையும் தனது ஒரு காலால் அளந்த திருமால் தன்னோடு உடனிருந்தும், தன் திருவடிகளை அவனால் காண இயலவில்லை. சிவபெருமான், காணப்படாத எல்லாவற்றிற்கும் மேலானவன். எனினும், தன் ஐம்பொறிகளை ஒடுக்கி, கருணையாளனாக உயிர்க்குயிராய் காதலித்து சிவபெருமானைப் புகழ்ந்து வழிபடும் நமிநந்தி அடிகளுக்கு, விருப்பத்தோடு அருள் செய்த பெருமானாகிய சிவபெருமான் எழுந்தருளிய இடம் திருக்கோளிலி ஆகும்.

**குறிப்புரை:** உலகத்தைத் தாவியளந்த திருமாலும் காணாத தற்பரன், பொறிகளை அடக்கி அன்பு செய்த நமி நந்தியடிகளுக்குப் புகழைத் தந்த பெருமான் இவர் என்கின்றது. தாவியவன் – மூவுலகத்தையும் ஈரடியால் தாவியளந்த திருமால். காணாத தற்பரனை – நாயகனாகவும், ஊர்வோனாகவும், ஆண்டானாகவும், மைத்துனனாகவும், கண்டதன்றித் தற்பரன் என்று காணப்படாதவற்றிற்கெல்லாம் மேலானாவனை.

Thirumaal measured the three worlds by his one foot. Even he could not perceive or find out the Holy Feet of Lord Civan who is the absolute deity independent of agencies (தற்பரன்). Sage Nami Nandi Adigal suppressed his five senses and brought them under his mind's control. He was an ardent worshipper of Lord Civan whom he loved more than his own soul and adored by singing His praise. For this, our Supreme Lord Civa Perumaan who is enshrined in Thiru-k-kōlilee, graced him. This city is full of stately trees and plants full of flowers.

**Note:** Nami Nandi is one of the 63 Naayanmars.

Nami Nandi Adigal once went to the 'Aranneri Temple' (அறநெறிக் கோவில் - தியாகேசர் கோவிலில் தனிச் சன்னிதியாக உள்ள இடம்) in the town Tiruvaaroor (திருவாரூர்). He wanted to undertake the service of lighting all the lamps in that temple. He went out to the neighbouring houses and asked for some ghee for lighting the lamps. The occupants were Samanars (Jains). They not only refused to give ghee but rebuked him. With a heavy heart he returned to the temple and prayed to Lord Civan. An ethereal voice was then heard, which thus "Take water from the temple tank and light the lamps". He immediately brought water from the temple tank and lighted all the lamps. Lo! All the lamps started glowing more brightly than before and throughout the night. The Jains were stunned. All others enjoyed this and praised Lord Civan and Nami Nandi Adigal.

கன்னவிலு மால்வரையான் கார்திகழு மாமிடற்றான்
சொன்னவிலு மாமறையான் தோத்திரஞ் செய்வாயினுளான்
மின்னவிலுஞ் செஞ்சடையான் வெண்பொடி யானங்கையினில்
கொன்னவிலுஞ் சூலத்தான் கோளிலியெம் பெருமானே. 7

கல்-நவிலும் மால்வரையான், கார் திகழும் மாமிடற்றான்,
சொல்-நவிலும் மாமறையான், தோத்திரம்செய் வாயின்உளான்,
மின் நவிலும் செஞ்சடையான் வெண்பொடியான், அம் கையினில்
கொல்-நவிலும் சூலத்தான் - கோளிலி எம்பெருமானே.

kal-navilum mAlvaraiyAn2, kAr tikazum mAmiTaRRAn2,
col-navilum mAmaRaiyAn2, tOttiram cey vAyin2 uLAn2,
min2 navilum cenjcaTaiyAn2; veNpoTiyAn2, am kaiyin2il
kol-navilum cUlattAn2--kOLili emperumAn2E.

**பொருள்:** கற்கள் செறிந்த பெரிய கயிலாய மலையில் எழுந்தருளி இருப்பவன் சிவபெருமான். கருமை விளங்கும் பெரிய மிடற்றை உடையவன். புகழ் பொருந்திய வேதங்களை அருளிச் செய்தவன். தன்னைத் தோத்திரிப்பாரின் வாயின்கண் உள்ளவன். மின்னல் போன்ற சிவந்த சடையினை உடையவன். திருவெண்ணீறு அணிந்தவன். அழகிய கையில் கொல்லும் தொழிலில் பழகிய சூலப்படையை ஏந்தியவன். இத்தகையோனாகி விளங்குவோன் திருக்கோளிலியின்கண் விளங்கும் எம்பெருமான் ஆவான்.

**குறிப்புரை:** கயிலையை உடையவன், நீலகண்டன்; வேதங்களை உடையவன்; தோத்திரம் செய்யும் வாயில் உள்ளவன்; செஞ்சடையான்; வெண்பொடியான்; சூலத்தான் இவன் என்கின்றது. கல் நவிலும் மால்வரை எனப் பிரிக்க. கார் – கருமை நிறம். கொன் – பெருமை.

Lord Civan abides in the big rocky Kailas mountain. His huge neck is dark blue in colour. He is the author of the universally renowned Vedaas. He is in the mind and words of those who adore Him. His matted hair is brilliant like lightning. He smears His body with holy ashes. He holds in one of His hands a highly remarkable and extraordinarily powerful trident. Such a resplendent, transcendental and immanent Lord of ours is enshrined in Thiru-k-kōlilee and graces everybody.

அந்தரத்தில் தேரூருமரக்கன் மலையன்றெடுப்பச்
சுந்தரத்தன் திருவிரலா லூன்றவ வனுடல்நெரிந்து
மந்திரத்த மறைபாட வாளவனுக் கீந்தானும்
கொந்தரத் தமதிச்சென்னிக் கோளிலியெம் பெருமானே. 8

அந்தரத்தில்-தேர் ஊரும் அரக்கன் மலை அன்று எடுப்ப,
சுந்தரத் தன் திருவிரலால் ஊன்ற அவன் உடல் நெரிந்து,
மந்திரத்த மறை பாட, வாள் அவனுக்கு ஈந்தானும் -
கொந்து அரத்த மதிச் சென்னிக் கோளிலி எம்பெருமானே.

antarattil-tEr Urum arakkan2 malai an2Ru eTuppa,
cuntarat tan2 tiruviralAl Un2Ra, avan2 uTal nerintu,
mantiratta maRai pATa, vAL avan2ukku IntAn2um--
kontu aratta matic cen2n2ik kOLili emperumAn2E.

**பொருள்:** ஆகாய வெளியிலே தேரில் ஊர்ந்து வந்து, இராவணன் கயிலை மலையைப் பெயர்த்தபோது, சிவபெருமான் தனது அழகிய கால் விரலால் சிறிது ஊன்ற, அவன் உடல் நெரிந்தது. இராவணன் மந்திரமாக விளங்கும் சாமகானத்தைப் பாடிச் சிவபெருமானைப் போற்ற, அவர் சந்திரஹாசம் என்னும் வாளைக் கொடுத்து அருள் செய்தார். இப்பெருமான் பெருமையுடைய, பிறைமதியைச் சூடிய சடையினராகத் திருக்கோளிலியில் எழுந்தருளியுள்ளார்.

**குறிப்புரை:** வானவூர்தியனாகிய இராவணன் கயிலையை எடுத்த காலத்து விரலூன்றி அடர்த்து அவன் சாம கானம் செய்ய அருள் செய்தவன் இவன் என்கின்றது. அந்தரம் – ஆகாயம். சுந்தரம் – அழகு. வாள் – சந்திரஹாசம் என்னும் வாள். உம்மை – இசைநிறை. கொன்தரத்த – கொந்த ரத்த எனத் திரிந்தது. பெருமை உடைய என்பது பொருள்.

Raavana, the king of Sri Lanka used to travel in the sky in his own sky chariot. He once tried to lift and keep aside mount Kailas, the abode of Lord civan. The charming Lord Civan slightly pressed the mountain by His holy toe by which Raavanaa's body got crushed under the mountain. Raavanan realised his fault, begged for pardon and adored Lord Civan by singing 'Saama Gaanam' full of Vedic Mantras. Pleased by hearing the song Lord Civan gave him the powerful divine sword known as 'Chandrahaasam' and other boons. Civan accommodates in His matted hair the eminent crescent moon. This Civan is our Lord of Thiru-k-kōlilee.

நாணமுடை வேதியனு நாரணனு நண்ணவொணாத்
தாணுவெனை யாளுடையான் றன்னடியார்க் கன்புடைமை
பாணனிசை பத்திமையாற் பாடுதலும் பரிந்தளித்தான்
கோணலிளம் பிறைச்சென்னிக் கோளிலியெம் பெருமானே. 9

நாணம் உடை வேதியனும் நாரணனும் நண்ண ஒணாத்
தாணு, எனை ஆள்உடையான், தன் அடியார்க்கு அன்புஉடைமை
பாணன் இசை பத்திமையால் பாடுதலும் பரிந்து அளித்தான் -
கோணல் இளம்பிறைச் சென்னிக் கோளிலி எம்பெருமானே.

nANam uTai vEtiyan2um nAraNan2um naNNa oNAt
tANu, en2ai AL uTaiyAn2, tan2 aTiyArkku an2pu uTaimai
pANan2 icai pattimaiyAl pATutalum parintu aLittAn2--
kONal iLampiRaic cen2n2ik kOLili emperumAn2E.

**பொருள்:** அறிய முடியாததால் நாணமுற்ற வேதியனாகிய பிரமனும், திருமாலும் அணுக முடியாத நிலைத்த பொருள் ஆனவன் சிவபெருமான். அவன் என்னை அடிமையாக உடையவன். தன் அடியவர்களுக்கு அன்பு வடிவானவன். பாணபத்திரன் பக்தியோடு பாடப் பரிவோடு அவனுக்கு அருள்புரிந்தவன். வளைந்த பிறைமதியைத் தலைமுடியில் சூடியவன். அந்தச் சிவபிரான், திருக்கோளிலியில் எழுந்தருளும் எம்பெருமான் ஆவான்.

**குறிப்புரை:** அயனும் மாலும் அறியவொண்ணாத் தாணு, பாணபத்திரன் அன்போடு பாடுதலும் அருள் சுரந்து பரிசில் பல அளித்தவன் இவன் என்கின்றது. நாணம் உடை வேதியன் – அறிய முடியாமையால் வெட்கமுற்ற பிரமன், தலை போனமையால் வெட்கிய என்றுமாம். தாணு – நிலைத்த பொருள். பாணன் – பாணபத்திரன். பரிந்து – விரும்பி.

Lord Civan, the permanent Reality could not be approached by Thirumaal as well as by the shame faced Brahma who lost one of his five heads. Lord Civan treats me as His faithful servitor. He is the embodiment of love for His devotees. The temple songster Paanapathiran (*பாணபத்திரன்*) is the customary songster to sing divine songs with sincere devotion daily before Him in the temple. Lord Civan graced him with his wants. He wears the young crescent moon on His head. He is our Supreme Lord enshrined in Thiru-k-kōlilee.

**Note:** The everlasting pillar is Sthaanu. The Lord is hailed as Sthamba and Kamba, by the Atharva Veda. 'Nadu Thari' the Tamil term refers to this aspect of Civa.

தடுக்கமருஞ் சமணரொடு தர்க்கசாத்திரத் தவர்சொல்
இடுக்கண் வருமொழி கேளாதீசனையே ஏத்துமின்கள்
நடுக்கமிலா அமருலகம் நண்ணலுமா மண்ணல்கழல்
கொடுக்ககிலா வரங்கொடுக்குங் கோளிலியெம் பெருமானே. 10

தடுக்கு அகமரும் சமணரொடு தர்க்க சாத்திரத்தவர் சொல்
இடுக்கண் வரும் மொழி கேளாது, ஈசனையே ஏத்துமின்கள்!
நடுக்கம் இலா அமருலகம் நண்ணலும் ஆம்; அண்ணல் கழல்
கொடுக்ககிலா வரம் கொடுக்கும் - கோளிலி எம்பெருமானே.

taTukku amarum camaNaroTu tarkka cAttirattavar col
iTukkaN varum mozi kELAtu, Ican2aiyE Ettumin2kaL!
naTukkam ilA amarulakam naNNalum Am; aNNal kazal
koTukkakilA varam koTukkum--kOLili emperumAn2E.

**பொருள்:** தடுக்கையை ஆசனமாக விரும்புகின்ற சமணரும் தர்க்க சாஸ்திரத்தில் வல்ல புத்தர்களும் கூறுகின்ற துன்ப வார்த்தைகளைக் கேளாதீர்கள். ஈசனான சிவபெருமானையே புகழுங்கள். பயம் இல்லாமல் அமரர் வாழும் வானுலகத்தை அடையலாம். அப்பெருமான் திருவடிகள் வேறு யாராலும் தர இயலாத வரங்கள் பலவற்றைத் தரும். அவ்விறைவன் திருக்கோளிலி எம்பெருமானே ஆவான்.

**குறிப்புரை:** சமணர்களும் தார்க்கீகர்களும் கூறும் துன்ப வார்த்தைகளைக் கேளாமல் ஈசனையே ஏத்துங்கள். வானுலகை அடையலாம். அவன் கழல் அரிய வரங்களையும் கொடுக்கும் என்கின்றது. தடுக்கு அமரும் – தடுக்கை ஆசனமாக விரும்புகின்ற. தர்க்க சாஸ்திரிகளும் நாஸ்திகர்கள் ஆதலின் அவருரையும் கேளாதீர் என்றார்.

Ye companions! Listen not to the trouble making words of the Jains who are clad in mats and the Buddhists who profess words of logic. You adore Lord Civan alone. You can gain the trouble free world of the immortals. His Holy Feet will confer all boons which none else can grant. He is our Supreme Lord enshrined in Thiru-k-kōlilee.
**Note:** The Samanars and the Buddhists are atheists. Godless people lack basic clarity.

நம்பனை நல்லடியார் கணாமுடை மாடென்றிருக்கும்
கொம்பனையாள் பாகனெழிற் கோளிலியெம் பெருமானை
வம்பமருந்தண் காழிச்சம்பந்தன் வண்டமிழ்கொண்
டின்பமர வல்லார்களெய் துவர்களீசனையே. 11

*நம்பனை, நல் அடியார்கள் "நாம் உடை மாடு" என்று இருக்கும்
கொம்பு அனையாள்பாகன், எழில் கோளிலி எம்பெருமானை,
வம்பு அமரும் தண் காழிச் சம்பந்தன் வண்தமிழ்கொண்டு
இன்பு அமர வல்லார்கள் எய்துவர்கள், ஈசனையே.*

nampan2ai, nal aTiyArkaL "nAm uTai mATu" en2Ru irukkum
kompu an2aiyAL pAkan2, ezil kOLili emperumAn2ai,
vampu amarum taN kAzic campantan2 vaN tamiz koNTu
in2pu amara vallArkaL eytuvarkaL, Ican2aiyE.

**பொருள்:** பூங்கொம்பு போன்ற அழகிய உமையம்மையின் கணவனாய், அழகிய திருக்கோளிலியில் விளங்கும் எம்பெருமானை, நல்ல அடியவர்கள் ஒவ்வொருவரும் நம்முடைய செல்வம் என நம்பியிருப்பர். இப்பெருமானை மணம் கமழும் குளிர்ச்சியான சீகாழிப் பதியுள் தோன்றிய ஞானசம்பந்தன் போற்றிப் பாடினார். இத்தமிழ்ப் பதிகத்தை இன்பம் பொருந்தப் பாடவல்லவர்கள் அப்பெருமானையே அடைவர்.

**குறிப்புரை:** நல்ல அடியார்கள் ஒவ்வொருவரும் நம்முடைய செல்வம் என்று நம்பியிருக்கும் கோளிலிப் பெருமானை ஞானசம்பந்தன் அருளிய வண்டமிழ் கொண்டு இன்பங்கொள்ள வல்லவர்கள் ஈசனை எய்துவர் என்கின்றது. கொம்பு அனையாள் – பூங்கொம்பை ஒத்த உமாதேவி. வம்பு – மணம். இன்பு அமரா – இன்பத்து இருக்க.

True devotees hold Civan as their resplendent Lord. His consort Umaa Devi is charming as the flowery shoots. He is our Lord enshrined in the renowned city of Thiru-k-kōlilee. Those who can sing this holy Tamil hymn comosed by Gnaanasambandan of Seekaazhi which is cool and odoriferous, and are poised in pure joy, will reach the Holy Feet of Lord Civan.

**Note:** The verses of St. Sambandhar are Vedic hymns in Tamil. They breathe salvific fragrance.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*62ஆம் பதிகம் முற்றிற்று*
End of 62nd Hymn

உ
சிவமயம்

# 63. திருப்பிரமபுரம் – பல்பெயர்ப்பத்து

## திருத்தலவரலாறு:

முதலாம் பதிகம் பார்க்க.

## குருவருள்:

ஞானசம்பந்தர் அவதரித்த சீகாழிப்பதி பன்னிரு திருப்பெயர்களை உடையது. ஆளுடைய பிள்ளையார் அப்பன்னிரு திருப்பெயர்களைத் தனித்தனியே குறிப்பிட்டுப் பதிகங்கள் அருளியிருப்பதோடு, பன்னிரு பெயர்களுக்குப் பன்னிரு திருப்பாடல்களைக் கொண்ட 11 திருப்பதிகங்கள் அருளியுள்ளார். அத்தகைய பதிகங்களில் ஒன்றாய் அப்பெயர்கள் அமைதற்குரிய புராண வரலாற்றுக் குறிப்புக்களுடன் இப்பல்பெயர்ப் பத்து அமைந்துள்ளது. இத்திருப்பதிகத்தில் பிரமபுரம் முதலாக ஒவ்வொரு பாடலிலும் ஒவ்வொரு தலம் வருமாறு பன்னிரு பெயருக்கும் பன்னிரு பாடல்கள் அமைந்துள்ளன.

## அகத்துறைப் பதிகம்:

சீகாழிப் பதியின் பன்னிரு பெயர்களைத் தனித்தனியே ஒவ்வொரு பாடலிலும் குறிக்கும் பல்பெயர்ப் பத்து.

# 63. THIRU-P-PIRAMA-PURAM
# PAL PEYAR PATTHU (The Hymn of Many Names)

## THE HISTORY OF THE PLACE

See First Hymn.

## INTRODUCTION TO THE HYMN

The town where our saint was born, bears twelve names. This hymn celebrates these twelve names in the twelve verses. They are as under:

| Verse No. | Name | Verse No. | Name |
|---|---|---|---|
| 1. | Piramapuram | 7. | Sivapuram |
| 2. | Venupuram | 8. | Puravam |

| Verse No. | Name | Verse No. | Name |
|---|---|---|---|
| 3. | Poompukali | 9. | Chanbai |
| 4. | Venkuru | 10. | Kaazhi (Seekaazhi) |
| 5. | Thonipuram | 11. | Kochaivayam |
| 6. | Poontharai | 12. | Kazhumalam |

**Note:** There are a total of eleven hymns in the three Thirumurais of Thiru-Gnaanasambandar, in which the twelve names of the birth place of St. Sambandhar are celebrated. Vide hymn numbers, 63, 90, 117, 127, 128, 206, 209, 210, 325, 368 and 371.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAMBALAM

## 63. திருப்பிரமபுரம் – பல்பெயர்ப்பத்து

## 63. THIRU-P-PIRAMA-PURAM PAL PEYAR PATTHU (The Hymn of Many Names)

பண் : தக்கேசி
ராகம் : காம்போதி

*Pann: Thakkēsi*
*Raagam: Kaambothi*

எரியார் மழுவொன்றேந் தியங்கையிடு தலையேகலனா
வரியார் வளையாரையம் வவ்வாய்மா நலம்வவ்வுதியே
சரியா நாவின் வேதகீதன் தாமரைநான் முகத்தன்
பெரியான் பிரமன் பேணியாண்ட **பிரமபுரத்தானே.** 1

எரி ஆர் மழு ஒன்று ஏந்தி, அங்கை இடுதலையே கலனா,
வரி ஆர் வளையார் ஐயம் வவ்வாய், மா நலம் வவ்வுதியே? -
சரியா நாவின் வேதகீதன், தாமரை நான்முகத்தன்,
பெரியான், பிரமன் பேணி ஆண்ட **பிரமபுரத்தானே!**

eri Ar mazu on2Ru Enti, agkai iTutalaiyE kalan2A,
vari Ar vaLaiyAr aiyam vavvAy, mA nalam vavvutiyE?--
cariyA nAvin2 vEtakItan2, tAmarai nAn2mukattan2,
periyAn2, piraman2 pENi ANTa **piramapurattAn2E!**

**பொருள்:** பெரியவனாகிய பிரமன் நான்கு திருமுகத்தை உடையவன். வேதகீதங்களை உச்சரிப்புத் தவறாதவாறு பாடுபவன். தாமரை மலர் மேல் விளங்குபவன். இந்தப் பிரமன் விரும்பி, வழிபட்டு ஆட்சிபுரிந்த பிரமபுரத்தில் விளங்கும் சிவபெருமானே! எரியும் மழு ஆயுதத்தைக் கையில் ஏந்தியிருக்கின்றீர். அழகிய மற்றொரு கையில் பிரமனது ஐந்து

தலைகளில் ஒன்றைக் கொய்து அந்த மண்டை ஓட்டையே உண்கலனாகக் கொண்டு வீதிகள்தோறும் பலிஏற்பதுபோல் வந்து வரிகளை உடைய வளையல்களை அணிந்த (முனி பத்தினி) மகளிரிடம் பிச்சை வாங்காது, அவர்களின் அழகைக் கவர்ந்து செல்கின்றீரே! இது ஏன்?

**குறிப்புரை:** பிரமபுரத்தானே! ஒருகையில் மழுவையும், ஒருகையில் கபாலத்தையும் ஏந்திக் கொண்டு மகளிரிடம் பிச்சை வாங்காது அவர்கள் அழகை வாங்குகிறீரே ஏன் என்று வினாவுகிறது. எரியார் மழு – எரிதலைப் பொருந்திய மழு. வரியார் வளையார் – கோடுகளோடு கூடிய வளையலை உடைய முனிபத்தினியர். ஐயம் – பிச்சை. சரியா நாவின் என்பது முதல் பிரமன் என்பது வரை பிரமனைக் குறிக்கும் தொடர். பிரமன் வழிபட்டதால் பிரமபுரம் எனத் தலத்திற்குப் பெயர் வந்தமை விளக்கியது.

Brahma, the four faced, recites the Vedas without any flaw. He is normally seated in the Lotus flower. He is an eminent and noble person. With great desire and dedication, he ruled over the city Piramapuram (Seekaazhi). Oh! Lord Civa! You are enshrined in that famed city of Piramapuram, holding a red-hot battle-axe in one of Your hands. In another lovely hand, You hold the skull clipped from the head of Brahma and utilise it as your begging bowl. You move about in the streets as a mendicant. Young girls (of Dhaarukaa Vanam) wearing lined bangles come forward to give You alms. But without accepting it, You snatch their beauty. Is this legitimate behaviour of yours?

**Note:** Civa is a seeker of alms from the wives of the sages of Daarukaa Vanam (*தாருகாவனம்*) to contain the haughtiness and egoism of the saints and not done permanently.

பெயலார் சடைக்கோர் திங்கள்சூடிப் பெய்பலிக்கென்றயலே
கயலார் தடங்கணஞ் சொனல்லார் கண்டுயில் வவ்வுதியே
இயலான டாவியின்ப மெய்தியிந் திரனாள்மண்மேல்
வியலார் முரசமோங்கு செம்மை **வேணுபுரத்தானே.** 2

*பெயல் ஆர் சடைக்கு ஓர் திங்கள்சூடி, பெய் பலிக்கு என்று, அயலே*
*கயல் ஆர் தடங்கண் அம் சொல் நல்லார் கண் துயில் வவ்வுதியே? -*
*இயலால் நடாவி இன்பம் எய்தி இந்திரன் ஆள் மண்மேல்*
*வியல் ஆர் முரசம் ஓங்கு செம்மை* ***வேணுபுரத்தானே!***

peyal Ar caTaikku Or tigkaL cUTi, pey palikku en2Ru, ayalE
kayal Ar taTagkaN am col nallAr kaN tuyil vavvutiyE?--
iyalAl naTAvi, in2pam eyti, intiran2 AL maNmEl
viyal Ar muracam Ogku cemmai **vENupurattAn2E**!

**பொருள்:** வேணுபுரமானது, இந்திரன் மண்ணுலகம் வந்து மூங்கிலாய் மறைந்திருந்த இடம். முறைப்படி ஆட்சி நடத்திய இடம். மகிழ்வெய்தி வழிபட்டு வாழ்ந்த தலம். இங்கு அகலமான முரசு ஒலிக்கும். நீதி நிலைபெற்று இருக்கும். இந்தத் தலத்தில் எழுந்தருளிய சிவபெருமானே! கங்கை தங்கிய சடைமுடியில் பிறையைச் சூடி உள்ளீர். மகளிர் இடும் பலியை ஏற்பதற்காக வீதிகளில் வந்தீர். ஆனால், அதற்கு மாறாகக் கயல் மீனை ஒத்ததும், நீர் நிறைந்த கண்களை உடைய (முனி பத்தினி) இளம் பெண்கள் (விரக நோயால்) துயில் கொள்வதைக் கவர்ந்தீர். இது நீதியோ?

**குறிப்புரை:** வேணுபுரத்தானே! சடையிற் சந்திரனையும் சூடிப் பிச்சைக்கென்று புறப்பட்டு மகளிர் துயிலை வவ்வுவதேன் என்கின்றது. பெயல் – கங்கை. திங்கள் – பிறை. கயல் ஆர் – கயல் மீனை ஒத்த. நல்லார் – பெண்கள். கண் துயில் வவ்வுறியே என்றது விரக நோயால் அவர்கள் துயில் துறந்தார்கள் எனக் குறித்தது. இயலான் நடாவி – முறைப்படி நடத்தி. இந்திரன் ஆள் மண் மேல் – இந்திரன் வந்து மறைந்திருந்தாண்ட மண்ணுலகத்தில். வியல் – அகலம். இந்திரன் மூங்கிலாய் மறைந்திருந்தமையின் வேணுவனம் ஆயிற்று எனக் காரணம் குறித்தது.

Indira having lost his kingdom "Indra Loka", came to this earth and remained incognito as bamboo tree. Later he ruled over the city Venupuram (Seekaazhi) according to the best laws of the land and happily lived there. In this city big drums make heavy musical notes now and then. Justice prevailed in the city always. Oh! Lord Civa! You are enshrined in such a renowned city accommodating the river Ganga and the crescent moon on Your matted hair. You go about in the streets as a mendicant to collect alms. Young fish eyed and charming girls uttering harmonious voice come forward to give alms. By seeing You they fall asleep due to lasciviousness (விரகநோய்) (probably due to your mesmerizing them) plunging them into carnal diseases. You take this opportunity to snatch their beauty especially of their eyes. Is this legitimate behaviour of Yours?

**Note:** Indra hid himself in a bamboo at Seekaazhi. It offered him refuge thanks to Civa's grace. Surapanma's search for Indra did not extend to Venupuram.

நகலார் தலையும் வெண்பிறையு நளிர்சடை மாட்டயலே
பகலாப் பலிதேர்ந் தையம்வவ் வாய்பாய் கலைவவ்வுதியே
அகலா துறையு மாநிலத்தி லயலின் மையாலமரர்
புகலால் மலிந்த **பூம்புகலி** மேவிய புண்ணியனே. 3

*நகல்ஆர் தலையும் வெண்பிறையும் நளிர்சடைமாட்டு, அயலே*
*பகலாப் பலி தேர்ந்து, ஐயம் வவ்வாய், பாய் கலை வவ்வுதியே? -*
*அகலாது உறையும் மா நிலத்தில் அயல் இன்மையால், அமரர்*
*புகலால் மலிந்த* ***பூம் புகலி*** *மேவிய புண்ணியனே!*

nakal Ar talaiyum veNpiRaiyum naLir caTai mATTu, ayalE
pakalAp pali tErntu, aiyam vavvAy, pAy kalai vavvutiyE?--
akalAtu uRaiyum mA nilattil ayal in2maiyAl, amarar
pukalAl malinta **pUm pukali** mEviya puNNiyan2E!

***பொருள்:*** இந்த உலகத்தில் அடைக்கலம் புகும் இடம் வேறு இல்லை. ஆதலால், தேவர்களின் புகலிடமாகவும் அவர்கள் என்றும் நீங்காது உறைவதுமாகிய அழகிய புகலி என்னும் தலம். இந்தப் புகலித் தலத்தில் எழுந்தருளிய புண்ணியனான சிவபெருமானே! சிரிக்கும் தலையோட்டையும், வெண்மையான பிறை மதியையும், குளிர்ந்த சடையில் அணிந்து இருக்கின்றீர். பகற்பொழுதில் பலி ஏற்பதுபோல் வருகின்றீர். ஆனால், மகளிர் தரும் பிச்சையை ஏற்றுக் கொள்ளாமல் அவர்களுக்கு விரக தாபத்தை உண்டு பண்ணுகின்றீர். அந்த விரக தாபத்தால் அவர்கள் அணிந்துள்ள பரந்த ஆடை முதலியன நெகிழும்படி செய்து போதல் நீதியோ?

***குறிப்புரை:*** இவ்வுலகத்தில் அடைக்கலத்தானம் வேறில்லாமையால் அமரர்கள் வந்து அடைக்கலம் புகுந்த புகலிமேவிய புண்ணியனே! கலையைக் கவர்ந்த தேன் என்கின்றது. நகல் – சிரித்தல். பகலாப் பலி – நடுவற்ற பிச்சை; பகற்காலத்துப்பலி என்றுமாம். ஐயம் – பிச்சை; பாய் கலை – பரந்த ஆடை. அயல் இன்மையால் – (அடைக்கலம்) வேறின்மையால். புகல் – அடைக்கலம். புகலி என்பதற்குத் தேவர்களால் அடைக்கலம் புகப்பெற்ற இடம் எனக் காரணம் விளக்கியவாறு.

Unable to get any refuge, the Devas come and settle down for long in the famed city of Pugali (Seekazhi). Oh! Lord Civa! You are enshrined in this renowned city. In Your matted hair You wear Brahma's skull in which the teeth are exposed. In the

daytime You roam about as a mendicant as though to get alms. Young girls come forward to offer You alms. But without accepting it, You create by Your divine charm, lascivious tendencies (விரகதாபம்) in those girls. Thereby the dress, bangles etc., they are wearing get loosened. Is this legitimate behaviour of Yours?

**Note:** Pukali: The place of refuge. It is the resort of sages and seers, siddhars and yogi's as well as munis and seekers of moksha.

சங்கோடி லங்கத்தோடு பெய்துகா திலொர்தாழ் குழையன்
அங்கோல் வளையாரை யம்வவ்வா யானலம் வவ்வுதியே
செங்கோன டாவிப்பல்லுயிர்க் குஞ்செய்வினை மெய்தெரிய
வெங்கோத் தருமன்மே வியாண்ட **வெங்குரு** மேயவனே. 4

சங்கோடு இலங்கத் தோடு பெய்து காதில் ஓர் தாழ்குழையன்,
அம் கோல்வளையார் ஐயம் வவ்வாய், ஆய்நலம் வவ்வுதியே? -
செங்கோல் நடாவிப் பல்உயிர்க்கும் செய் வினை மெய் தெரிய,
வெங் கோத் தருமன் மேவி ஆண்ட **வெங்குரு** மேயவனே!

cagkOTu ilagkat tOTu peytu, kAtil or tAzkuzaiyan2,
am kOlvaLaiyAr aiyam vavvAy, Aynalam vavvutiyE?--
cegkOl naTAvip pal uyirkkum cey vin2ai mey teriya,
veg kOt taruman2 mEvi ANTa **vegkuru** mEyavan2E!

**பொருள்:** எமதரும ராசன் கொடிய அரசன் எனப்படுபவன். இவன் வெங்குரு என்ற தலத்தில் செங்கோல் ஆட்சி நடத்தினான். தான் செய்யும் செயல்கள் நீதிநெறிக்கு உட்பட்டவை என்ற உண்மை எல்லா உயிர்களுக்கும் தெரியுமாறு ஆண்டான். இந்த வெங்குரு என்ற தலத்தில் எழுந்தருளிய சிவபெருமானே! கடல் சங்கினால் ஆகிய குண்டலம் என்று சொல்லப்படும் தோட்டை ஒரு காதில் அணிந்திருக்கின்றீர். மற்றொரு காதில் குழையை அணிந்திருக்கின்றீர். பலி ஏற்பதற்காக வந்திருக்கின்றீர். ஆனால் அதை ஏற்காது, அழகிய திரண்ட வளையல்கள் அணிந்த இளம் பெண்களின் அழகைக் கவர்ந்து செல்லுகின்றீர். இது நீதியோ?

**குறிப்புரை:** வெங்குரு மேயவனே! தோடும் குழையும் காதிற்பெய்த உமையொரு பாதியனாகிய உருவத்தைக் கொண்டு மகளிரிடம் ஐயம் பெறாது நலங்கவர்ந்தது ஏன் என்கின்றது. சங்கோடு இலங்க – சங்க குண்டலத்தோடு விளங்க. அம்கோல் வளையார் – அழகிய திரண்ட வளையலை உடையவர்கள். ஐயம் வவ்வாயால் – பிச்சையை ஏற்காய். நடாவி – நடத்தி. வெங்கோ தருமன் செங்கோல் நடாவிச் செய்வினை பல்லுயிர்க்கும் மெய்தெரிய மேவி ஆண்ட வெங்குரு எனக் கூட்டுக. தருமன் செங்கோல்

முறைப்படி பல உயிர்கட்கும் செய்யும் ஆட்சியின் உண்மையை அறிய வெங்குரு எனப் பெயர் பெற்றது எனக் காரணம் விளக்கியது.

Dharma Raajan (Guna Rudran), the god of death is wrongly personified as a cruel king. To nullify that impression and to prove that his actions are justifiable as per Divine laws, he came to Venguru (Seekaazhi). From here, he governed and earned a good name as a benevolent ruler. Oh! Lord Civa! You are enshrined in such a famed city. You wear a bright 'ola' roll in one of Your ears and a long hanging ear ring in the other ear. You roam about to receive alms. Instead of receiving alms, You loot the beauty of the young girls (at Dhaarukaa Vanam) who wear good looking heavy bangles and come forward to give You alms. Is this a legitimate behaviour of Yours?

தணிநீர் மதியஞ்சூடி நீடுதாங்கிய தாழ்சடையன்
பிணிநீர் மடவாரை யம்வவ்வாய் பெய்கலை வவ்வுதியே
அணிநீரு லகமாகியெங் குமாழ்கடலா லழுங்கத்
துணிநீர் பணியத்தான் மிதந்த**தோணி புரத்தானே.** 5

*தணி நீர் மதியம் சூடி, நீடு தாங்கிய தாழ்சடையன்,*
*பிணி நீர் மடவார் ஐயம் வவ்வாய், பெய் கலை வவ்வுதியே? -*
*அணி நீர் உலகம் ஆகி எங்கும் ஆழ்கடலால் அழுங்க,*
*துணி நீர் பணிய, தான் மிதந்த* ***தோணிபுரத்தானே!***

taNi nIr matiyam cUTi, nITu tAgkiya tAzcaTaiyan2,
piNi nIr maTavAr aiyam vavvAy, pey kalai vavvutiyE?--
aNi nIr ulakam Aki egkum AzkaTalAl azugka,
tuNi nIr paNiya, tAn2 mitanta **tONipurattAn2E!**

***பொருள்:*** ஊழிக்காலத்தில் மண்ணுலகம் அழகிய நீருலகம் ஆகி, அனைத்து இடங்களும் ஆழமான கடலால் மூழ்கி வருந்தியது. அந்த வேளையில் அச்சம் தரும் அந்தத் துணிவு கொண்ட தண்ணீர் பணிந்து போகவும் தான் மட்டும், அந்த ஊழி வெள்ளத்தில் அழியாது, தோணிபுரத்தில் எழுந்தருளிய இறைவனான சிவபெருமானே! தன்னை வந்து பணிந்த பிறைமதியைச் சூடியிருக்கிறீர். நீண்டு தாழ்ந்து தொங்கும் சடைமுடியை உடையவராக இருக்கின்றீர். ஏற்கனவே பருவமடைந்து காமநோயால் வருந்தும் இளம் மகளிரிடம் பிச்சை ஏற்கச் செல்கின்றீர். ஆனால் அவர்கள் தரும் பிச்சையை ஏற்காது, உம்முடைய தெய்வீகப்

பார்வையால், அவர்கள் விரக நோயடையப் பெற்று, அவர்களது ஆடைகள் நிலை குலைகின்றன. இவ்வாறு செய்தல் நீதியாகுமா?

**குறிப்புரை:** உலகம் கடலுள் ஆழ்ந்த காலத்து மிதந்த தோணிபுரத்தானே! மகளிரிடம் ஐயம் ஏற்காது உடுத்த ஆடையை வவ்விய தேன் என்கின்றது. தணிநீர் மதியம் – கீழ்ப்படிந்த தன்மையை உடைய பிறை. பிணிநீர் மடவார் – காமநோய்வாய்ப்பட்ட மாதர்கள். ஐயம் – பிச்சை. பெய்கலை – உடுத்திய ஆடை. உலகம் எங்கும் அணி நீராகிக் கடலால் அழுங்க எனக் கூட்டுக. துணிநீர் பணிய – துணிவு கொண்ட தண்ணீர் கீழ்ப்படிய. தோணிபுரம் என்ற பெயரின் காரணம் விளக்கியது.

At the time of the final deluge (*ஊழிக்காலம்*), the entire earth got submerged in the deep-sea waters. By the grace of Your divinity, the sea calmed down and You floated in the boat over the wide expanse of sea water. Thonipuram was the only place on the earth not drowned by the sea, as it was Your abode at the time. Oh! Lord Civa of this famed city! You gave protection for a long period to the crescent moon that came to You as a refugee and kept him in Your long and dangling matted hair. How come You approach infatuated young girls in forest homes for alms? Yet You did not accept their alms. Your divine charming presence before them, increased their infatuation resulting in the derangement of their garments. Is this a legitimate behaviour of Yours?

கவர்பூம் புனலுந்தண் மதியுங்கமழ் சடைமாட்டயலே
அவர்பூம் பலியோடை யம்வவ் வாயானலம் வவ்வுதியே
அவர்பூண ரையர்க்காதியாய் அவள் தன்மன்னனாள் மண்மேல்
தவர் பூம்பதிகளெங்கு மெங்குந்தங்கு **தராயவனே.** 6

**கவர் பூம்புனலும் தண்மதியும் கமழ் சடைமாட்டு, அயலே**
**அவர் பூம் பலியோடு ஐயம் வவ்வாய், ஆய் நலம் வவ்வுதியே? -**
**அவர் பூண் அரையர்க்கு ஆதிஆய அவள் தன் மன்னன் ஆள் மண்மேல்**
**தவர் பூம் பதிகள் எங்கும் எங்கும் தங்கு தராயவனே!**

kavar pUmpun2alum taN matiyum kamaz caTai mATTu, ayalE
avar pUm paliyOTu aiyam vavvAy, Ay nalam vavvutiyE?--
avar pUN araiyarkku Ati Aya aTal man2n2an2 AL maNmEl
tavar pUm patikaL egkum Ogkum tagku **tarAyavan2E**!

**பொருள்:** வலிமை மிக்க காக்கும் தெய்வமாகிய திருமால், அணிகலன்களை அணிந்த எல்லா மக்களையும் காத்து வருகின்ற அரசர்கள் அனைவருக்கும் தலைவன் ஆவான். அவன் தனது

வராக அவதாரத்தில் இரண்யகசிபுவைக் கொன்றான். அதனால் வந்த பழியைப் போக்க, இம்மண்ணுலகத்தில் பூந்தராய் என்னும் தலத்திற்கு வந்து பூக்களைக் கொண்டு அங்கு எழுந்தருளியுள்ள சிவபெருமானைப் பூசித்தான். இந்தத் தலம், தவமுனிவர்கள் எல்லா இடங்களிலும் தங்கும் சிறப்புப் பெற்றது. இந்தப் பூந்தராயில் எழுந்தருளிய சிவபெருமானே! இந்த மண்ணுலகைக் கவர வந்த அழகிய கங்கையையும், குளிர்ச்சியான பிறைமதியையும், மணம் கமழும் சடைமுடியையும் சூடி இருக்கின்றீர். நீர் பலிகேட்டு வீதிகளில் செல்லும் காலத்து மகளிர் ஆங்காங்கே இடும் சுவைமிக்க பலியாகிய உணவை ஏற்றுக் கொள்ளாமல், அவர்களது அழகைக் கவர்ந்து கொள்ளுகின்றீர். இது நீதியோ?

***குறிப்புரை:*** பூந்தராய் மேவியவனே! பலி வவ்வாயாய் அவர்கள் நலம் வவ்வுதியே என்கின்றது. வவ்வாய் ஆய் நலம் வவ்வுதியே எனப் பிரித்துப் பொருள் கொள்க. பூண் அரையர் அவர்க்கு ஆதியாய் அடல் மன்னன் – மன்னர்க்கெல்லாம் முதலாகிய வலிமை மிக்க திருமால். காக்கும் மன்னர்க்கு எல்லாம் தலைவன், காத்தற்றெய்வமாகிய திருமால் என்ற ஒற்றுமைபற்றி உரைக்கப் பெற்றது. திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக் கண்டேன் என்பதும் இந்த இயைபு பற்றியே, ஆதிவராகமான திருமால் இரணியனைக் கொன்ற பழிபோகப் பூக்களைக் கொண்டு பூசித்தமையால் பூந்தராய் என அழைக்கப் பெற்றது எனத் தலப் பெயர்க்காரணம் கூறியவாறு.

Kings who rule over the earth wear all sorts of jewels in their body. They protect all their subjects. Thirumaal is the Chief of all these kings and sustains the whole universe. In the days of yore, Thirumaal incarnated as a wild boar and killed an Asura called Hiranya Kasipu (*இரண்யகசிபு*). To atone for this sin Thirumaal came to the earth and selected the city Poontharai (*பூந்தராய்*) and worshipped Lord Civan entempled therein. This town was sanctified by the stay of holy saints in many parts of the city. Oh! Lord Civa! You are enshrined in such a renowned city - Poontharai. You contained in your sweet smelling matted hair the awe-inspiring Ganges that came down fiercely to drown the earth. The cool crescent moon also abides in your head. Whenever You roam about to receive alms, You never accept the delicious food the young girls offer, but steal away their beauty. Is this legitimate behaviour of Yours?

**Note:** Vishnu, be it remembered, is ever devoted to Civa.

முலையாழ் கெழுமமொந்தை கொட்டமுன் கடைமாட்டயலே
நிலையாய்ப் பலிதேர்ந்தை யம்வவ்வாய் நீநலம்வவ்வுதியே
தலையாய்க் கிடந்திவ்வைய மெல்லாந்தன்ன தோராணைநடாய்ச்
சிலையால் மலிந்தசீர்ச் சிலம்பன் **சிரபுரமேயவனே.** 7

*முலையாழ் கெழும, மொந்தை கொட்ட, முன் கடைமாட்டு அயலே,*
*நிலையாய்ப் பலிதேர்ந்தை யம்வவ்வாய் நீநலம்வவ்வுதியே*
*தலையாய்க் கிடந்திவ்வைய மெல்லாந்தன்ன தோராணைநடாய்ச்*
*சிலையால் மலிந்தசீர்ச் சிலம்பன்* ***சிரபுரமேயவனே!***

mulaiyAz kezuma, montai koTTa, mun2 kaTai mATTu ayalE,
nilaiyAp pali tErntu, aiyam vavvAy, nI nalam vavvutiyE?--
talai Ayk kiTantu iv vaiyam ellAm tan2atu Or ANai naTAy,
cilaiyAl malinta cIrc cilampan2 **cirapuram mEyavan2E**!

***பொருள்:*** வில் வீரனான சிலம்பன் என்ற இராகு தேவர்களுடன் கலந்து வஞ்சனையாக திருப்பாற்கடலில் இருந்து வந்த அமுதை உண்டான். அதனால் திருமாலால் வெட்டப்பட்டு தலைமாத்திரமாய் நின்றான். இந்த இராகு வையகம் முழுவதையும் தனது ஆணை வழி நடத்தி ஆட்சிபுரிந்த நகரம் சிரபுரம் என்ற தலம். இந்தச் சிரபுரம் என்ற தலத்தில் எழுந்தருளியுள்ள இறைவனான சிவபெருமானே! முல்லை யாழ், சுரம் ஒத்து ஒலிக்கவும், மொந்தை என்னும் பறை ஒலிக்கவும், வீடு வீடாகச் சென்று வீட்டின்முன் கடையின் அயலே நின்று உண்பதற்காக அன்றி பொய்யாகப் பிச்சை கேட்கிறீர். மகளிர் தரும் உணவைக் கொள்ளாது நீர் அவர்தம் அழகினைக் கவர்வது நீதியோ?

***குறிப்புரை:*** சிரபுரமேயவனே! நிலையாப் பிச்சையாக ஐயம் ஏற்காது நலம் வவ்வுதியே என்கின்றது. முலையாழ் கெழுவ – முல்லை யாழ் சுரம் ஒத்து ஒலிக்க. கெழும் என்பதும் பாடம். நிலையாப் பலி என்றது தாருகாவனத்து முனிவர்களின் ஆணவத்தை அடக்க ஏற்றுக் கொண்ட பிச்சையேயன்றி நிலைத்ததன்று என்பது விளக்கிற்று. தலையே வடிவாய் (உடல் முதலியன இன்றி) உலகத்தையெல்லாம் தன்னாணையின் நடக்கச் செய்யும் சிலம்பன் என்னும் அசுரன், ராகு என்ற பெயர் தாங்கி வழிபட்ட சிரபுரம் என விளக்கியவாறு. தேவர்களுடன் கலந்து கரவாக அமுதுண்ட சிலம்பன் என்னும் அசுரனை மோகினியான திருமால் சட்டுவத்தால் வெட்ட, தலை மாத்திரமான ராகு இத்தலத்தில் பூசித்தான் என்பது வரலாறு.

Silamban was an Asura (Raakshasan) who later became Raaghu. He was an expert archer and ruled over the earth, and lived in Sirapuram (*சிரபுரம்*). Oh Lord

abiding in Sirapuram, You went out for alms beating the musical instruments (மொந்தை & கடம்), but snatched the beauty of forest maids. Is this proper on Your part?

**Note:** More on the life of Silamban (who had only the head and no body and name) can be seen in Mythological texts.

Monthai (மொந்தை): It is known as gatam (கடம்) in modern times.

எருதேகொணர் கென்றேறியங் கையிடுதலை யேகலனாக்
கருதேர் மடவாரையம் வவ்வாய்கண்டு யில்வவ்வுதியே
ஒருதேர் கடாவியார மருளொரு பதுதோள்தொலையப்
பொருதேர் வலவன் மேவியாண்ட **புறவமர்** புண்ணியனே. 8

"எருதே கொணர்க!" என்று ஏறி, அங்கை இடு தலையே கலனா,
கருது ஏர் மடவார் ஐயம் வவ்வாய், கண் துயில் வவ்வுதியே? -
ஒரு தேர் கடாவி ஆர் அமருள் ஒருபதுதோள் தொலையப்
பொரு தேர் வலவன் மேவி ஆண்ட **புறவு அமர்** புண்ணியனே!

"erutE koNarka!" en2Ru ERi, agkai iTu talaiyE kalan2A,
karutu Er maTavAr aiyam vavvAy, kaN tuyil vavvutiyE?--
oru tEr kaTAvi Ar amaruL orupatu tEr tolaiyap
poru tEr valavan2 mEvi ANTa **puRavu amar** puNNiyan2E!

**பொருள்:** புறவம் என்ற சீகாழியை சிபிச் சக்கரவர்த்தி அரசாண்டான். அவன் தனது ஒரு தேரைச் செலுத்தி பத்துத் தேர்கள் அழியுமாறு போர்புரிவதில் வல்லவன். அவன் புறாவிற்கு அடைக்கலம் கொடுத்து தன் தசையையும், தன்னையும் தியாகம் செய்த காரணத்தால் புறவம் என்ற பெயர் கொண்ட சீகாழிப் பதியில் விளங்கும் இறைவனே! தனது எருது ஊர்தியைக் **கொணர்க** என ஆணையிட்டு அதன்மீது ஏறித் தனது அழகிய கையில் ஏந்திய பிரம **கபாலத்தையே** உண்கலனாகக் கொண்டு பலிஏற்கச் சென்றாய். வீடுகளில் உள்ள மகளிர் கொடுக்கும் பலியைக் கொள்ளாது, அவர்கள் உறக்கம் கெடுமாறு விரகதாபத்தை உண்டு பண்ணினாய். இது உனக்கு நீதியாகுமா?

**குறிப்புரை:** இதுவும் புறவமர் புண்ணியனே மாதர் துயில் வவ்வியது ஏன் என்கின்றது. ஐயம் ஏற்பார் ஊர்தியேறிச் செல்லார் ஆகவும் எருதைக் கொணர்க என்று ஆணையிட்டு அதில் ஏறி. கருதேர் மடவார் – கருவைத் தேரும் மடவார்; காமினிகள். கருது ஏர் மடவார் எனப் பிரித்தலுமாம். ஒருதேரைச் செலுத்தி, பத்துத்தேரை வென்ற தேர் வல்லவனாகிய சிபியாண்ட புறவம் எனப் பெயர்க் காரணத்தைக் குறிப்பாக

உணர்த்தியது. சிபியின் தசை எடைக்கு எடை பெற்ற தீக்கடவுளாகிய புறா அப்பாவம் போக வழிபட்ட தலமாதலின் புறவம் என்றாயிற்று என்பது வரலாறு.

The Chola emperor Cibi (*சோழச்சக்கரவர்த்தி சிபி*) was a mighty charioteer. Once, in a battle field he rode on his single chariot and brought down ten chariots of his enemy. He dwelt in and ruled over Puravam. By unfair means, he was cheated by his enemies Indra and Agni. Later the god of Fire, came down to Puravam and begged Lord Civan to pardon him for his deceitful action against the king. He stayed in Puravam and worshipped Lord Civan entempled therein.

"Oh! the righteous Lord Civa! You are entempled in such a famed city. You summoned Your bull vehicle, rode on it, holding in Your pretty hand the skull of Brahma as Your begging bowl and went round to receive alms. The beautiful girls of the forest zone (*தாருகாவனம்*) come out of their houses to give You alms. You did not receive the alms; but by Your divine charm You kindled the flames of bust in those damsels and spoiled their sleep. Is this legitimate behaviour of Yours?"

**Note:** Indra, the king of Devas and Agni the god of Fire took the form of a hunter and dove respectively. The dove flew in Thirumaal took the form of Mohini (*மோகினியின் வடிவம் எடுத்து*) and distributed the nectar obtained from the ocean of milk to the Devas. Silamban the Asura took the form of a Deva and stood in between the sun and moon on the line and got the nectar from Thirumaal. The Sun and the Moon identified Silamban and revealed the fact to Thirumaal who became wild and stroke the head of Silamban by a Laddle (*சட்டுவம்*). His body became two parts - the head alone without body frame known as Raagu (*இராகு*), and the body frame without the head known as Kēthu (*கேது*) (These two became celestial bodies but not planets. However they move round the Sun taking 18½ years to make one round. They are descending nodes and rarely visible in the sky. They are also known as Saaya Giraham (*சாயாகிரகம்*) in Tamil language. In Indian Astronomy they play an important role). This Silamban who became Raaghu did severe penance and prayer and was bestowed with several boons.

By the boons, he became a super powerful man. He ruled over the entire earth dwelling in Sripuram and making it his capital city and worshipped Lord Civa in all sincerity.

துவர்சேர் கலிங்கப்போர்வை யாருந்தூய்மை யிலாச்சமணுங்
கவர்செய் துழலக்கண்ட வண்ணங் காரிகைவார் குழலார்
அவர்பூம் பலியோ டையம்வவ் வாயானலம் வவ்வுதியே
தவர்செய் நெடுவேற் சண்டனாளச் **சண்பை**ய மர்ந்தவனே. 9

*துவர் சேர் கலிங்கப் போர்வையாரும், தூய்மை இலாச் சமணும்,*
*கவர் செய்து உழலக் கண்ட வண்ணம், காரிகை வார்குழலார்-*
*அவர் பூம் பலியோடு ஐயம் வவ்வாய், ஆய்நலம் வவ்வுதியே? -*
*தவர்செய் நெடுவேல் சண்டன் ஆளச் **சண்பை** அமர்ந்தவனே!*

tuvar cEr kaligkap pOrvaiyArum, tUymai ilAc camaNum,
kavar ceytu uzalak kaNTa vaNNam, kArikai vAr kuzalAr--
avar pUm paliyOTu aiyam vavvAy, Ay nalam vavvutiyE?--
tavar cey neTuvEl caNTan2 ALac **caNpai** amarntavan2E!

***பொருள்:*** உடலைத் துளைக்கின்ற நீண்ட வேலை இயமன் ஏந்தியிருக்கின்றான். அவனை அடக்கி ஆண்ட சண்பை என்னும் தலத்தில் எழுந்தருளிய சிவபெருமானே! புத்த சமயத்தினர் கலிங்க நாட்டில் நெய்த காவி நிறத்தை உடைய போர்வையைப் போர்த்து இருக்கின்றனர். சமணர்கள் தூய்மை இல்லாதவர்கள். இந்த இரு சமயத்தினரும் மனம் திரிந்து உழலுகின்றனர். நீர், நீண்ட கூந்தலை உடைய மகளிர் வாழும் இல்லங்களுக்குச் செல்கிறீர். அம்மகளிர் உம்மைக் கண்ட அளவில் மனம் திரிந்து நிற்கின்றனர். அவர்கள் கொடுக்கும் இனிய உணவாகிய பிச்சையை ஏற்காது, அவர்களின் அழகினைக் கவர்ந்து செல்கின்றீரே? இது நீதியோ?

***குறிப்புரை:*** புறச்சமயிகள் மனந்தேராது உழலச் செய்தது போல மகளிர் நலத்தையும் கொண்டனையே என்கின்றது. கலிங்கப் போர்வை – கலிங்க நாட்டில் நெய்த போர்வை. கவர்செய்து – மனந்திரிந்து. காரிகை – அழகு. தவர்செய் நெடுவேல் சண்டன் ஆள – துளைக்கின்ற நீண்ட வேலை ஏந்திய யமனை அடக்கி ஆள. இது மார்க்கண்டேயர்க்காக யமனை உதைத்த வரலாற்றை உட்கொண்டது.

Oh! Lord Civa! You are enshrined in such a renowned city, Shanbai. You take the form of a mendicant and reach the houses of ladies of Dhaarukaa Vanam to receive alms. The household ladies of Dhaarukaa Vanam having long hair come to You to give alms. By Your divine charm they were amazed and become dumbfounded. You did

not accept the sumptuous food they offer, but loot away their beauty. Is this legitimate behaviour of Yours?

**Note:** The Samanas and the Teras are notorious doubters. The Lord let the Samanars and Buddhists roam about in confusion. So did He with the maids of the forests.

நிழலால்மடிந்த கொன்றை சூடிநீறுமெய் பூசிநல்ல
குழலார்மடவா ரையும்வவ்வாய் கோல்வளை வவ்வுதியே
அழலாயுல கங்கவ்வை தீரஐந்தலை நீண்முடிய
கழனாகரையன் காவலாகக் **காழியமர்ந்தவனே.** 10

*நிழலால் மடிந்த கொன்றை சூடி, நீறு மெய் பூசி, நல்ல*
*குழல் ஆர் மடவார் ஐயும் வவ்வாய், கோல்வளை வவ்வுதியே? -*
*அழல்ஆய் உலகம் கவ்வை தீர ஐந்தலை நீள் முடிய*
*கழல் நாக(அ)ரையன் காவல் ஆகக் காழி அமர்ந்தவனே!*

nizalAl malinta kon2Rai cUTi, nIRu mey pUci, nalla
kuzal Ar maTavAr aiyam vavvAy, kOlvaLai vavvutiyE?--
azal Ay ulakam kavvai tIra, aintalai nIL muTiya
kazal nAka(a)raiyan2 kAval Akak **kAzi** amarntavan2E!

***பொருள்:*** ஊழிக்காலத்தில் உலகம் வெப்பத்தால் வெதும்பி வருந்தித் துன்புற்றது. ஐந்து தலைகளையும் வீரக்கழலையும் நீண்ட முடியையும் அணிந்த நாகங்களின் தலைவனான 'காளிதன்' என்ற பாம்பு காழிப்பதியை காவல் புரிந்தது. அந்தக் காழிப்பதியில் அமர்ந்திருக்கும் தலைவனான சிவபெருமானே! நீர், ஒளிநிறைந்த கொன்றை மலர் மாலையைச் சூடியிருக்கிறீர். திருமேனியில் நீற்றினைப் பூசியிருக்கிறீர். பிச்சையேற்பவர் போல மகளிர் வாழும் வீதிகளில் செல்கிறீர். அந்த அழகிய கூந்தலை உடைய மகளிரின் பிச்சையை ஏற்காது, அவர்களை விரக தாபத்தால் மெலியச் செய்கின்றீர். அவர்களின் திரண்ட வளையல்களைக் கவ்வுகின்றீர். இது நீதியோ?

***குறிப்புரை:*** காழியமர்ந்தவனே, வளை கவர்ந்தனையே என்கின்றது. கோல் – திரட்சி. அழலாய் – வெதும்பி. கவ்வை – துன்பம். ஐந்தலை நீள்முடிய கழல் நாக அரையன் – ஐந்து தலையோடும் முடியோடும் கூடிய வீரக்கழலை அணிந்த காளிதன் என்னும் பாம்பு.

In the days of yore, once the world suffered by excessive heat. To alleviate this and protect the city of Kaazhi and to give relief to the people therein from the oppressive heat, the king of snakes known as 'Kaalithan' (*காளிதன்*) had a close watch

and saved the city from excessive heat. The king of snakes has five heads, very long hair and was wearing a string of bells on the leg as a sign of heroism (*வீரக்கழல்*).

Oh! Lord Civa! You are enshrined in this famous city of Kaazhi. You wear the garland made up of elegant and dazzling cassia flowers. You smear Your body with holy ashes. You pretend to be like a mendicant and roam about in the streets where ladies are dwelling. These ladies of Dhaarukaa Vanam with beautiful long hair come forward to give You alms. You do not accept it. Instead by Your divine charm, You kindle carnal desires in them. Their body gets debilitated. You then coveted their thick bangles and walked away. Is this legitimate behaviour of Yours?

**Note:** Kaalithan, the five headed serpent king.

கட்டார் துழாயன் தாமரையா னென்றிவர் காண்பரிய
சிட்டார் பலிதேர்ந்தை யம்வவ்வாய் செய்கலை வவ்வுதியே
நட்டார் நடுவே நந்தனாள நல்வினையா லுயர்ந்த
கொட்டா றுடுத்ததண் வயல்சூழ் **கொச்சையமர்ந்தவனே.** **11**

*கட்டுஆர் துழாயன், தாமரையான, என்று இவர் காண்பு அரிய*
*சிட்டார் பலி தேர்ந்து, ஐயம் வவ்வாய், செய் கலை வவ்வுதியே? -*
*நட்டார் நடுவே நந்தன் ஆள, நல்வினையால் உயர்ந்த*
*கொட்டாறு உடுத்த தண்வயல் சூழ் கொச்சை அமர்ந்தவனே!*

kaTTu Ar tuzAyan2, tAmaraiyAn2, en2Ru ivar kANpu ariya
ciTTAr pali tErntu, aiyam vavvAy, cey kalai vavvutiyE?--
naTTAr naTuvE nantan2 ALa, nalvin2aiyAl uyarnta
koTTARu uTutta taNvayal cUz **koccai** amarntavan2E!

**பொருள்:** பராசர முனிவன் ஆற்றின் நடுவே மச்சகந்தியோடு கூடினான். அந்தப் பழி நீங்குவதற்கு அம்முனிவன் பூசை செய்தான். அவன் செய்த பூசையால் அப்பெண்ணுக்கு உயர்ந்த மயிர்ச்சாந்து போன்ற மணத்தையும் நல்ல ஒழுக்கத்தையும் கொடுத்தீர். அந்தச் சிறப்பினை உடையதும், குளிர்ந்த வயல்களால் சூழப்பட்டதுமாகிய தலம் கொச்சைவயம். இந்தத் தலத்தில் எழுந்தருளிய இறைவனான சிவபெருமானே! நீவிர், கட்டப்பட்ட துளசி மாலையை அணிந்த திருமாலும், நான்முகனும் காணமுடியாத மேன்மையை உடையவராக இருக்கின்றீர். ஆனால், நீர், பிச்சை ஏற்கச் சென்று, மகளிர் தரும் பலியை ஏற்காது, அவர்களின் அழகிய ஆடைகளைக் கவர்கின்றீர். இது நீதியோ?

**குறிப்புரை:** திருமாலும் பிரமனும் காணுதற்கரிய சிட்டராய்ப் பலி கொள்ளாது கலை கொள்ளக் காரணம் ஏன் என்கின்றது. கட்டு ஆர் துழாயன் – கட்டுதல் பொருந்திய துளசி மாலையை உடைய திருமால்.

சிட்டார் – ஒழுங்கினை உடையவர். கலை – ஆடை. நட்டாறு என்பது நட்டார் என ஆயிற்று. நந்தன் – பிரமன் மகனாகிய பராசரன். ஆள – மச்சகந்தியைப் பெண்டாள. (அப்பழி போம்படி) நல்வினையால் – அவன் செய்த பூசையால். கொட்டு ஆறு உடுத்த – மயிர்ச்சாந்து போன்ற மணத்தையும். நல்லொழுக்கத்தையும் பொருந்தச் செய்த. உடுத்த கொச்சை எனக் கூட்டுக. இது கொச்சைவயம் என்றதன் காரணம் உணர்த்தியவாறு.

The saint Paraasaran (*பராசரமுனிவன்*) son of Brahma had union with the girl Mach-cha-ganthi (*மச்சகந்தி*) while she was in the middle of a river. She was also called Satyavathi. She gave birth to sage Vyaasa (*வியாசமுனி*). To nullify the evil effect that might affect Paraasaran for his sinful act, he came down to Koch-chai-vayam (Seekaazhi) and did penance and prayer along with Mach-cha-ganthi with appropriate rituals before Lord Civan entempled therein. The Lord condoned him without malice. Also He bestowed on her more beauty than before, virtuousness and a good permanent fragrance from her body. He also made them live together and lead a virtuous life thereafter.

Oh! Lord Civa! You are abiding in such a famed Koch-chai-vayam which is surrounded by cool fields. You are unknowable even to Thirumaal and to the four headed Brahma who were wearing garlands made up of Tulsi leaves. You roam about to get alms in the forest areas where girls are living, but without accepting their alms, You coveted their garments. Is this legitimate behaviour of Yours?

**Note:-** Vyaasar was born to Paraasaran and Sathyavathi. This Sathyavathi later married Santhanu Maharaaja as a second wife.

கடையார் கொடிநன் மாடவீதிக் **கழுமலவூர்க்** கவுணி
நடையார் பனுவல் மாலையாக ஞானசம்பந்தன் நல்ல
படையார் மழுவன் மேல்மொழிந்த பல்பெயர்ப்பத்தும் வல்லார்க்
கடையா வினைகளுலகில் நாளுமமரு லகாள்பவரே. 12

கடை ஆர் கொடி நல் மாட வீதிக் கழுமலஊர்க் கவுணி -
நடை ஆர் பனுவல்மாலைஆக ஞானசம்பந்தன்-நல்ல
படை ஆர் மழுவன்மேல் மொழிந்த பல்பெயர்ப்பத்தும் வல்லார்க்கு
அடையா வினைகள் உலகில் நாளும்; அமருலகு ஆள்பவரே.

kaTai Ar koTi nal mATa vItik kazumala Urk kavuNi--
naTai Ar pan2uval mAlai Aka njAn2acampantan2--nalla
paTai Ar mazuvan2mEl mozinta palpeyarppattum vallArkku
aTaiyA, vin2aikaL ulakil nALum; amarulaku ALpavarE.

***பொருள்:*** கழுமலம் என்ற பெயர் பெற்ற தலம் சீகாழிப்பதி. இப்பதியில் வாசல்களில் கொடிகள் கட்டப்பட்ட மாடவீடுகளை உடைய வீதிகள் உள்ளன. இந்தக் கழுமலம் என்ற சீகாழிப்பதியில் கவுணியர் குலத்தில் தோன்றியவர் ஞானசம்பந்தன். இவர், மழுப்படையைக் கையில் ஏந்திய சீகாழி இறைவர்மீது, 'பல்பெயர் பத்து' என்னும் இத்திருப்பதிகத்தை பத்தின்மேலும் பலவாகிய பெயர்களைக் (12 பெயர்களையும் குறிப்பிட்டு) குறிப்பிட்டு இலக்கிய மாலையாகப் பாடினார். இத்திருப்பதிகத்தை ஓதி வழிபடும் வல்லவர்களை, இவ்வுலகில் துன்புறுத்தும் வினைகள் ஒருபோதும் வந்து அடையாது. இவர்கள் மறுமையில் அமரர் உலகத்தை ஆளுவார்கள்.

***குறிப்புரை:*** மேற்கூறிய கழுமலநகரின் பெயராகக் கூறிய பன்னீரண்டையும் பாடிய பதிகத்தை ஓத வல்லார்க்கு இவ்வுலகில் தீவினை பொருந்தா. தேவர் உலகினையும் ஆள்வர் எனப் பயன்கூறுகிறது. கடை – வாயில். கவுணி – கவுணிய கோத்திரத்து உதித்தவர். பல்பெயர்ப் பத்தும் – பத்தின் மேலும் பலவாகிய பெயர். அமரர் உலகு அமருலகாயிற்று.

Gnaanasambandan of the clan of Kauniyars (*கௌண்ய கோத்திரம்*) hailed from the city of Kazhu-malam (*கழுமலம்*). This city also known as Seekaazhi has streets with big mansions, where flags are flying aloft in the front portion of the mansions. He has sung this hymn known as 'Pal-peyar-path-thu' (*பல் பெயர்ப் பத்து*) containing twelve names one in each verse. This hymn he sang as a garland of literature with rhythmic musical flow (*சந்த நடை*) on Lord Civan of this place, who is holding a battle axe in one of his hands. Those who can chant this hymn and offer worship with sincere devotion to Lord Civan, will not get affected by the evil effects of their karma. In their next birth they will rule over the celestials.

**திருச்சிற்றம்பலம்**
**THIRU-CH-CHITRAM-BALAM**

***63ஆம் பதிகம் முற்றிற்று***
**End of 63rd Hymn**

உ
சிவமயம்

# 64. திருப்பூவணம்

## திருத்தலவரலாறு:

திருப்பூவணம் என்ற திருத்தலமானது பாண்டி நாட்டுத் தலம் ஆகும். மதுரைக்குக் கிழக்கே வைகையின் தென்கரையில் 18 கி.மீ. தூரத்தில் இத்தலம் இருக்கிறது. மதுரையில் இருந்து பேருந்துகள் உள்ளன. இது பிரமன் பூசித்த தலம். நான்மறையோன் கழலே சென்று பேணி ஏத்த நின்ற தேவர் பிரான் இடமாம் என்பது சம்பந்தர் தேவாரம்.

இத்தலம் தமிழ்நாட்டு மூவேந்தர்களும் ஒருங்குகூடி வழிபட்ட தலமாக இருந்தது என்பதனை 'முன்சேர் தென்னர் சேரர் சோழர்கள் தாம் வணங்கும் திருப்பூவணம்' என்னும் சம்பந்த சுவாமிகள் வாக்காலும், 'உதியருடன் வன்றொண்டர் தாமிருந்த இடங்கெழுமி வளவனார் மீனவனார் வளம்பெருக மற்றவரோடும் அளவளாவிய விருப்பால் அமர்ந்து கலந்து இனிதிருந்தார்' என்னும் சேக்கிழார் திருவாக்காலும் அறியலாம். பொன்னனையாள் என்னும் அம்மையாருக்குச் சொக்கலிங்கப் பெருமான் சித்தர் வடிவாக எழுந்தருளி ரசவாதம் செய்து சோமாஸ்கந்தர் திருவுருவத்தை அமைக்க அருள் செய்தனர் என்பது திருவிளையாடற்புராணத்தில் காணப்படும் வரலாறு.

இறைவன் பூவண நாதர், இறைவி மின்னம்மை, மின்னனையாளம்மை என்று வழங்குவதும் உண்டு. தலவிருட்சம் பலா. தீர்த்தம் வைகை.

## கல்வெட்டு:

கோநேரின்மை கொண்டான் தனது எட்டாம் ஆட்சியாண்டில் புஷ்பவனேசுவரர் கோயிலுக்கு நிலம் வழங்கினான். குலசேகர தேவன் தனது 25ஆம் ஆட்சியாண்டில் தினந்தோறும் வேத பாராயணம் செய்ய 1008 பிராமணர்களுக்கு உணவிற்காக நிலம் அளித்தான். ஒரு செப்பேடு ராஜகெம்பீர சதுர்வேதி மங்கல சபைக்கு 25 காசுகள் வழங்கியதை அறிவிக்கிறது.

## பதிக வரலாறு:

திருப்புத்தூரை வணங்கிப் பதிகம் பாடி எழுந்தருளும் பிள்ளையார், புற்றில்வாழ் அரவம் பூண்ட பெருமான் எழுந்தருளியுள்ள திருப்பூவணத்தைச் சேர்ந்தார். 'அறையார் புனலும்' என்னும் இப்பதிகத்தை அருளினார்.

## 64. THIRU-P-POOVANAM

### THE HISTORY OF THE PLACE

This sacred city of Thiru-p-poovanam is in Paandiya Naadu, 18 km east of Madurai on the south bank of Vaigai river. There are buses from Madurai to this place.

The name of the God is Poovananaathar and that of the Goddess os Minnammai, also known as Minnanaiyaalammai. The sacred tree is Palaa and the sacred ford is Vaigai.

Biraman worshipped the Lord at this temple, which is noted in Sambandhar Thevaaram as 'nAnmaRaiOn kazhalE senRu pENi Eththa ninRa thEvar pirAn iDamAm'. According to a story in the Thiruvilaiyaadal Puraanam, the Lord came here in the guise of a Sidhdhar to answer the prayers of a devotee, Ponnanaiyaal and with alchemy made an icon of Somaaskandhar.

That this temple had the distinction of having all the three Tamil kings offer worship is noted by Gnaana-sambandhar in 'mun sEr thennar sErar sozhargaL thAm vanangkum tiruppoovaNam', and by Sekkizhaar in 'udhiyarudan vanRondar thAmirundha idam kezhumi vaLavanAr meenavanAr vaLam peruga maRRavarodum aLavaLAviya viruppAl amarndhu kalandhu inidhirundhAr'.

Inscriptions speak of the grants of land by Konerinmaikondaan and Kulasekara Thevan for the Pushpavanesuvarar temple and for the daily feeding of 1008 Brahmin reciters of the Vedas. A copper plate notes the gift of 25 'kaasu' for a village assembly.

### INTRODUCTION TO THE HYMN

From Thirupputhur our saint arrived at Thiru-p-poovanam where he sang the following hymn:

திருச்சிற்றம்பலம்

THIRU-CH-CHITRAMBALAM

## 64. திருப்பூவணம் 64. THIRU-P-POOVANAM

பண் : தக்கேசி *Pann: Thakkēsi*

ராகம் : காம்போதி *Raagam: Kaambothi*

அறையார் புனலுமா மலருமாடரவார் சடைமேல்
குறையார் மதியஞ்சூடி மாதோர் கூறுடையானிடமாம்
முறையார் முடிசேர் தென்னர்சேரர் சோழர்கள்தாம் வணங்கும்
திறையா ரொளிசேர் செம்மையோங்குந் தென்திருப்பூவணமே. 1

அறை ஆர் புனலும் மா மலரும் ஆடு அரவும் ஆர் சடைமேல்
குறை ஆர் மதியம் சூடி, மாது ஓர்கூறு உடையான் இடம்ஆம் -
முறை ஆர் முடி சேர் தென்னர் சேரர் சோழர்கள்தாம் வணங்கும்,
திறை ஆர் ஒளி சேர், செம்மை ஓங்கும், தென்திருப்பூவணமே.

aRai Ar pun2alum mA malarum ATu aravu Ar caTaimEl
kuRai Ar matiyum cUTi, mAtu Or kURu uTaiyAn2 iTam Am--
muRaiyAl muTi cEr ten2n2ar cErar cOzarkaL tAm vaNagkum,
tiRai Ar oLi cEr, cemmai Ogkum, ten2 tiruppUvaNamE.

**பொருள்:** சிவபெருமான் தன் சடைமீது, ஆரவாரித்து வரும் கங்கை, ஆத்திமலர், ஆடும் பாம்பு, ஒருகலையாகக் குறைந்த பிறைமதி ஆகியவைகளைச் சூடியிருக்கிறார். உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டிருக்கிறார். இவர் எழுந்தருளிய தலம் திருப்பூவணம் ஆகும். இது வைகை ஆற்றின் அலைகளும், வயல் வளமும், புகழும் உடைய தலமாகும். திருப்பூவணமானது, நீதி தவறாமல் முடிசூடி ஆளுகின்ற வேந்தர்களான பாண்டியர், சேரர், சோழர் ஆகிய மூவேந்தர்களும் வணங்கும் தலமாகும்.

**குறிப்புரை:** புனலும், ஆத்திமலரும், மதியும் சூடிய உமையொரு பாகன் இடம் பூவணம் என்கின்றது. அறை – பாறை. ஆ – ஆச்சா (ஆத்தி). குறையார்மதி – பிறைமதி. தென்னர் – பாண்டியர். திறை – கப்பம். செம்மை – ஒழுங்கு.

**குருவருள்:** 'முறையார் முடிசேர் தென்னர் சேரர் சோழர்கள் தாம் வணங்கும் திறையாரொளி சேர் செம்மை ஓங்கும் தென்திருப்பூவணமே' என்ற தொடரால் மூவேந்தரும் பூவணத்தில் ஒருங்கு வணங்கிய குறிப்பு இப்பாடலில் அமைந்துள்ளமையை, கண்டு மகிழலாம்.

The roaring Ganges river descending from the mountains, the Aath-thi flower (ஆத்திப்பூ - Bauhinia racemosa) and the dancing snake adorn Lord Civan's matted crest

on which the crescent moon also rests. He is concorporate with His consort. He is entempled in the well renowned city of Poovanam situated on the banks of the billowing river Vaigai (வைகை நதி). The righteous and duly crowned trio monarches - the Cheras, Cholas and Paandyaas (சேர, சோழ, பாண்டியர்) regularly come to this town and offer worship to Lord Civan enshrined therein.

மருவார் மதில்மூன்றொன் றவெய்துமா மலையான்மடந்தை
ஒருபால் பாகமாகச் செய்தவும்பர் பிரானவனூர்
கருவார் சாலியாலை மல்கிக்கழல் மன்னர் காத்தளித்த
திருவால் மலிந்தசேடர் வாழுந்தென் திருப்பூவணமே. 2

மருவார் மதில்மூன்று ஒன்று எய்து, மாமலையான் மடந்தை
ஒருபால் பாகம் ஆகச் செய்த உம்பர்பிரான் அவன் ஊர்
கரு ஆர் சாலி ஆலை மல்கி, கழல் மன்னர் காத்து அளித்த
திருவால் மலிந்த சேடர் வாழும் தென்திருப்பூவணமே.

maruvAr matil mUn2Ru on2Ra eytu, mAmalaiyAn2 maTantai
orupAl pAkam Akac ceyta umparpirAn2 avan2 Ur--
karu Ar cAli Alai malki, kazal man2n2ar kAttu aLitta
tiruvAl malinta cETar vAzum ten2tiruppUvaNamE.

**பொருள்:** சிவபெருமான், பகைவர்களாகிய திரிபுர அசுரர்களின் மூன்று மதில்களையும், ஒருசேர எய்து அழித்தவர். மலையரசன் மகளாகிய பார்வதி தேவியை தனது உடம்பின் ஒரு பக்கத்தில் பாகமாகக் கொண்டுள்ளவர். தேவர்களின் தலைவராக விளங்குபவர். இவரது ஊர் திருப்பூவணம். இப்பூவண நகரில் கதிர்கள் நிறைந்த நெல் பயிர்களும், கரும்புச் சோலைகளும் நிறைந்திருக்கின்றன. வீரக்கழல் அணிந்த மன்னர்கள் காப்பாற்றிக் கொடுத்த செல்வ வளத்தால், இத்தலத்தில் சிறந்த மேலோர்கள் வாழ்கின்றனர்.

**குறிப்புரை:** திரிபுரம் எரித்துத் தேவியை ஒருபாகம் வைத்தவனூர் இது என்கின்றது. மருவார் – பகைவர். உம்பர்பிரான் – தேவதேவன். கருவார் சாலி – கருக்கொண்ட நெல். ஆலை – கரும்பு. திரு – செல்வம். சேடர் – பெருமை உடையவர்.

Lord Civan completely destroyed all the three citadels of Asuraas in one single shot. He is the Chief of Devaas having in one half of His body His consort Paarvathi Devi (பார்வதி தேவி), is the daughter of the Himalayan mountain king. He is entempled in the delightful city of Poovanam (பூவணம்) surrounded by sugarcane fields and flourishing paddy fields having fully ripe grains. In this town opulent and generous

people live who become rich by the liberal gifts of kings who visited this town, who wore anklets made up of little bells (*வீரக்கழல்*).

**Note:** Not only the three crowned sovereigns, namely the Paandya, the Chera and the Chola, but other princes too gathered in Thiru-p-poovanam to offer obeisance to the God of the Supernal.

போரார் மதமாவுரிவை போர்த்துப் பொடியணி மேனியனாய்க்
காரார் கடலின் நஞ்சமுண்ட கண்ணுதல் விண்ணவனூர்
பாரார் வைகைப் புனல்வாய் பரப்பிப்பன் மணிபொன்கொழித்துச்
சீரார் வாரிசேர நின்றதென் திருப்பூவணமே. 3

போர் ஆர் மதமா உரிவை போர்த்து, பொடி அணி மேனியனாய்,
கார் ஆர் கடலில் நஞ்சம் உண்ட கண்ணுதல், விண்ணவன், ஊர் -
பார் ஆர் வைகைப் புனல் வாய் பரப்பி, பல்மணி பொன் கொழித்து,
சீர் ஆர் வாரி சேர நின்ற தென்திருப்பூவணமே.

pOr Ar matamA urivai pOrttu, poTi aNi mEn2iyan2Ay,
kAr Ar kaTalil nanjcam uNTa kaNNutal, viNNavan2, Ur--
pAr Ar vaikaip pun2al vAy parappi, palmaNi pon2 kozittu,
cIr Ar vAri cEra nin2Ra ten2tiruppUvaNamE.

**பொருள்:** போர் பயிற்சியுடைய மதம் பொருந்திய யானையைக் கொன்று அதன் தோலைப் போர்த்தி இருப்பவர் சிவபெருமான். திருநீற்றுப் பொடி அணிந்த மேனியை உடையவர். கருநிறம் பொருந்திய கடலில் தோன்றிய நஞ்சினை உண்டவர். நெற்றிக்கண்ணை உடையவர். இவரது ஊர் திருப்பூவணமாகும். இத்தலத்தில் நிலவுலகை வளம் செய்வதற்கு வந்த வைகை ஆறு வாய்க்கால் வழியே பரவுகிறது. இந்த வைகை நதியின் நீரோடு வந்த பலவகை மணிகளும், பொன்னும் பூவணத்தின் செல்வ வளத்தை அதிகரிக்கச் செய்கின்றன.

**குறிப்புரை:** யானையை உரித்துப் போர்த்தது. பொடியணிந்து, நஞ்சுண்டு விளங்கும் கண்ணுதற் பெருமானூர் இது என்கின்றது. போர் ஆர் மதமா – சண்டை செய்யும் மத யானை. உரிவை – தோல். கண்நுதல் – நெற்றிக் கண்ணை உடையவன். பார் ஆர் – பூமியிற் பொருந்திய. வாய் – வாய்க்கால். வாரி – நீர்.

The city Thiru-p-poovanam is very fertile as a result of the river Vaikai (வைகை) which came to enrich the earth and reached the city Poovanam. It brings with its water gold and several kinds of gems and distribute them all along the channels that gush

through this town. Lord Civan covers His body with the skin of the martial elephant which He killed; He smears His body with holy ashes; He swallowed the black poison that came out of the ocean; He has a third eye in His forehead. Lord Civan of such characteristics is enshrined in the fertile city of Thiru-p-poovanam.

கடியாரங் கற்கொன்றை சூடிக்காதிலொர் வார்குழையன்
கொடியார் வெள்ளையே றுகந்த கோவண வன்னிடமாம்
படியார் கூடிநீடியோங்கும் பல்புகழாற்பரவச்
செடியார் வைகைசூழ நின்றதென் திருப்பூவணமே. 4

கடி ஆர் அலங்கல் கொன்றை சூடி, காதில் ஓர் வார்குழையன்,
கொடி ஆர் வெள்ளை ஏறு உகந்த கோவணவன் இடம்ஆம் -
படி ஆர் கூடி, நீடி ஓங்கும் பல்புகழால் பரவ,
செடி ஆர் வைகை சூழ நின்ற தென்திருப்பூவணமே.

kaTi Ar alagkal kon2Rai cUTi, kAtil Or vArkuzaiyan2,
koTi Ar veLLai ERu ukanta kOvaNavan2, iTam Am--
paTiyAr kUTi, nITi Ogkum palpukazAl parava,
ceTi Ar vaikai cUza nin2Ra ten2tiruppUvaNamE.

**பொருள்:** சிவபெருமான் மணம் பொருந்திய கொன்றை மலர் மாலையைச் சூடியிருக்கின்றார். ஒரு காதில் நீண்ட குழையை அணிந்திருக்கிறார். வெண்மையான இடபக் கொடியை ஏந்தியிருக்கிறார். கோவணத்தை அணிந்துள்ளார். இவர் எழுந்தருளிய இடம் திருப்பூவணமாகும். இது புதர்கள் நிறைந்த வைகை ஆறு சூழ்ந்துள்ள தலம். இத்தலத்தில் நிலவுலக மக்கள் ஒன்றுகூடி, நீண்டு விரிந்த சிவபெருமானின் புகழைப் போற்றி வணங்குகின்றனர்.

**குறிப்புரை:** கொன்றை அணிந்து, காதில் குழை விளங்க இடபக் கொடி ஏந்திய கோவணாண்டி இடம் இது என்கின்றது. கடி – மணம். அலங்கல் – மாலை. படியார் – பூமியில் உள்ள மக்கள். செடி ஆர் வைகை – புதர் நிறைந்த வைகை.

Lord Civan wears the fragrant cassia garland. In one of His ears He wears a dangling ear-ring (*குழை*). He uses the sign of the white bull as insignia of His flag. He wears the fore lap cloth (*கோவணம்*) in His loins. Thiru-p-poovanam is His choice city surrounded by the river Vaikai, full of bushes on its banks. The devotees of the earth gather here, hail His endless glory and pay obeisance to Him.

கூரார்வாளி சிலையிற் கோத்துக் கொடிமதில் கூட்டழித்த
போரார்வில்லி மெல்லியலாளோர் பால்மகிழ்ந்தானிடமாம்
ஆராஅன்பில் தென்னர் சேரர்சோழர்கள் போற்றிசைப்பத்
தேரார் வீதிமாடநீடுந் தென்திருப்பூவணமே. 5

கூர் ஆர் வாளி சிலையில் கோத்துக் கொடிமதில் கூட்டுஅழித்த
போர் ஆர் வில்லி, மெல்லியலாள் ஓர்பால் மகிழ்ந்தான், இடம்ஆம் -
ஆரா அன்பில் தென்னர் சேரர் சோழர்கள் போற்றி இசைப்ப,
தேர் ஆர் வீதி மாடம் நீடும் தென்திருப்பூவணமே.

kUr Ar vALi cilaiyil kOttuk koTi matil kUTTu azitta
pAr Ar villi, melliyalAL Or pAl makizntAn2, iTam Am--
ArA an2pil--ten2n2ar cErar cOzarkaL pORRu icaippa,
tEr Ar vIti mATam nITum ten2 tiruppUvaNamE.

**பொருள்:** சிவபெருமான், கூர்மை பொருந்திய அம்பை வில்லில் பூட்டி கொடிகள் கட்டிப் பறந்த மும்மதில்களின் கூட்டுக்களையும் ஒருசேர அழித்தார். அவர் போரில் வல்ல வில் வீரர். உமையம்மையை ஒரு பாகமாகக் கொண்டு மகிழ்பவர். இவர் எழுந்தருளிய இடம் திருப்பூவணமாகும். இது தேர் ஓடும் வீதியையும், மாடவீடுகளையும் கொண்ட தலம். இந்த அழகிய திருப்பூவணத் தலத்தை பாண்டியர், சேரர், சோழர் ஆகிய மூவேந்தர்கள் குன்றாத அன்போடு போற்றுகின்றனர்.

**குறிப்புரை:** திரிபுரம் எரித்த வில்லாளியாய் உமையொரு பாகம் கொண்டான் இடம் இது என்கின்றது. சிலை – வில். கூட்டழித்த – ஒருசேர அழித்த. ஆரா அன்பில் – போதும் என்றமையாத அன்பொடு.

Lord Civan is an unparalleled hero, adept in field of battle, who has His bow fitted with a sharp arrow. He destroyed at one stroke, all the three citadels of the Asuraas over which flags were flying then. He has in the left side of His body, His consort Umaa Devi and is happily enshrined in Thiru-p-poovanam. The three kings Chera, Chola and Paandya gather here with unabated love and pay obeisance to Lord Civan entempled here. In the Thiru-p-poovanam town, tall mansions are to be found all over and streets, big and wide, where the temple chariots ply during festive days.

**Note:** This verse celebrates the regal splendour of the shrine of Thiru-p-poovanam.

நன்றுதீ தென்றொன் றிலாதநான் மறையோன் கழலே
சென்றுபேணி யேத்தநின்ற தேவர் பிரானிடமாம்
குன்றிலொன் றியோங் கமல்குகுளிர் பொழில்சூழ் மலர்மேல்
தென்றலொன் றிமுன்றிலாருந் தென்திருப்பூவணமே. 6

*நன்று தீது என்று ஒன்று இலாத நால்மறையோன், கழலே*
*சென்று பேணி ஏத்த நின்ற தேவர்பிரான், இடம்ஆம் -*
*குன்றில் ஒன்றி ஓங்க மல்கு குளிர்பொழில் சூழ் மலர்மேல்-*
*தென்றல் ஒன்றி முன்றில் ஆரும் தென் திருப்பூவணமே.*

nan2Ru tItu en2Ru on2Ru ilAta nAlmaRaiyOn2, kazalE
cen2Ru pENi Etta nin2Ra tEvarpirAn2, iTam Am--
kun2Ril on2Ri Ogka malku kuLir pozil cUz malarmEl--
ten2Ral on2Ri mun2Ril Arum ten2 tiruppUvaNamE.

**பொருள்:** சிவபெருமான் நன்மை தீமை என்பவற்றுள் ஒன்றும் இல்லாதவன். நான்கு வேதங்களையும் அருளியவன். தேவர்களின் தலைவன். இப்பிரான், தன் திருவடிகளை அடைந்த அன்பர்கள் போற்றி அருள்பெறுமாறு நின்ற இடம் திருப்பூவணமாகும். பொதிகை மலையில் உற்பத்தியான தென்றல் காற்று, அங்குள்ள மலைகளில் பொருந்தி பூக்கள் நிறைந்த குளிர்ச்சியான ஓங்கிய மரங்களில் படர்ந்து, அதன் மணத்தையும் தன்னகத்தே கொண்டு, கீழ்த்திசையை நோக்கி வந்து, மிக்க அழகு வாய்க்கப் பெற்ற திருப்பூவணத்தில் உள்ள மாளிகைகளில் முன்வாசலில் அடிக்கப்பட்டு அங்குள்ளோரை மகிழ்விக்கின்றது.

**குறிப்புரை:** நல்லது தீது இரண்டையும் கடந்த பெருமான். எல்லோரும் ஏத்த நின்ற பெருமான் இடம் இது என்கின்றது. நன்றும் தீதும் வினையான் வருவன ஆதலின் வினையிலியாகிய பெருமானுக்கு அவ்விரண்டும் இல்லையாயிற்று. குன்றில் ஒன்றி – மலைகளிற் பொருந்தி. முன்றில் – முன்வாயிலில்.

Good and bad occurs from out of one's own karma. Lord Civan is immaculate. It is therefore said that He is above the good and the bad. He is the author of four Vedas. He is the Chief of Devaas. He is enshrined in Thiru-p-poovanam to enable His devotees to adore His feet, pay their obeisance and to get His grace. The southerly wind (*தென்றல்*) rising from the Pothihai hills in the Western Ghats, blows over the flowers that blossom in the cool and tall vegetation; and carrying the pleasant smell of the flowers it travels all along towards the east and reaches the foreyard of mansions in this Thiru-p-poovanam city giving pleasure to the inhabitants therein.

பைவாயரவ மரையிற்சாத் திப்பாரிடம் போற்றிசைப்ப
மெய்வாய் மேனிநீறு பூசிஏறு கந்தானிடமாம்
கைவாழ் வளையார் மைந்தரோடுங் கலவியினால் நெருங்கிச்
செய்வார் தொழிலின் பாடலோ வாத்தென் திருப்பூவணமே. 7

பைவாய் அரவம் அரையில் சாத்தி, பாரிடம் போற்றி இசைப்ப,
மெய் வாய் மேனி நீறு பூசி ஏறு உகந்தான் இடம் ஆம் -
கை வாழ் வளையார் மைந்தரோடும் கலவியினால் நெருங்கிச்
செய்வார் தொழிலின் பாடல் ஓவாத் தென்திருப்பூவணமே.

paivAy aravam araiyil`cAtti, pAriTam pORRu icaippa,
mey vAy mEn2i nIRu pUci, ERu ukantAn2 iTam Am--
kai vAz vaLaiyAr maintarOTum kalaviyin2Al nerugkic
ceyvAr tozilin2 pATal OvAt ten2 tiruppUvaNamE.

**பொருள்:** சிவபெருமான் படம் பொருந்திய வாயினை உடைய பாம்பை இடையில் கட்டியிருப்பவர். பூதகணங்கள் போற்றிப் பாட ஆடுபவர். மேனிமுழுவதும் மெய்மை வடிவான திருநீற்றைப் பூசியிருப்பவர். விடையேற்றில் ஊர்ந்து வருபவர். இவரது இடம் திருப்பூவணமாகும். இந்த அழகிய திருப்பூவணத் தலத்தில் கைகளில் வளையல்களை அணிந்துள்ள இளமகளிர் தம் காதலர்களோடு புணர்ச்சி விருப்பமுடையவராய் நெருங்கிச் செய்யப்படும் கலவி பற்றிய பாடல்கள் நீங்காது ஒலித்துக் கொண்டு இருக்கும்.

**குறிப்புரை:** பாம்புடுத்துப் பூதம் போற்ற நீறுபூசி இடபமூர்ந்தவன் இடம் இது என்கின்றது. பை – படம். பாரிடம் – பூதம். கைவாழ் வளை யார் – இளைய மகளிர்கள். கலவி – புணர்ச்சி. கலவிக் காலத்து நிகழ்த்தும் காதற்பாட்டு நீங்காத பூவணம் என்க.

Lord Civan ties in His waist, the hooded snake. He smears His body with holy ashes. He rides on His Bull and moves around while His goblin hosts accompany Him singing His praise. He is enshrined in the Thiru-p-poovanam. In this city the love songs of young girls sung during their union with their life partners reverberate in the night hours.

**Note:** The holy ashes is the vital symbol of Saivism and it is indeed the mark of truth.

மாடவீதி மன்னிலங்கை மன்னனை மாண்பழித்துக்
கூடவென் றிவாள்கொடுத் தாள்கொள்கை யினார்க்கிடமாம்
பாடலோடு மாடலோங்கிப் பன்மணி பொன்கொழித்து
ஓடநீரால் வைகை குழுமுயர் திருப்பூவணமே. 8

*மாட வீதி மன் இலங்கை மன்னனை மாண்பு அழித்து,*
*கூட வென்றிவாள் கொடுத்து ஆள் கொள்கையினார்க்கு இடம்ஆம் -*
*பாடலோடும் ஆடல் ஓங்கி, பல்மணி பொன் கொழித்து,*
*ஓட நீரால் வைகை சூழும் உயர் திருப்பூவணமே.*

mATa vIti man2 ilagkai man2n2an2ai mANpu azittu,
kUTa ven2RivAL koTuttu AL koLkaiyin2Arkku iTam Am--
pATalOTum ATal Ogki, palmaNi pon2 kozittu,
OTi nIrAl vaikai cUzum uyar tirup pUvaNamE.

**பொருள்:** இராவணன் மாடவீதிகள் நிலைபெற்ற இலங்கையின் மன்னன். அவன் பெருவீரன் என்ற புகழை சிவபெருமான் அழித்தார். அவன், தன் பிழையை உணர்ந்து பாடியபோது, வெற்றி நல்கும் வாளைக் கொடுத்து ஆண்டு கொண்டார். இத்தகைய அருட்கொள்கையாளன் சிவபெருமானாவார். இவரது இடம் திருப்பூவணமாகும். ஆடல் பாடல்களால் மிக்க சிறப்புடைய தலம் இது. பல்வகை மணிகளையும், பொன்னையும் செழிப்பாகக் கொடுத்து, ஓடிவரும் வைகை ஆற்று நீரால் சூழப்பெற்ற உயர்ந்த தலம் திருப்பூவணமாகும்.

**குறிப்புரை:** இராவணனை அடக்கி ஆண்டு, வாளும் அருளிச் செய்த மன்னர்க்கு இடம் பூவணம் என்கின்றது. மாண்பு – சிறப்பு.

Raavanan was king of Sri Lanka where exist tall and good looking mansions in the streets making it an impressive city. This Raavanan was glorified by his subjects as the best hero of his time. His ego was quelled by Lord Civan. Raavanan realised his fault, begged for pardon and sang Saama geetham in praise of Lord Civan. Pleased with his music, Lord Civan forgave him and gifted a divine sword that would bring him fame and victory over his enemies whenever needed. This Lord Civan abides in Thiru-p-poovanam which is famous for its fine arts, music and dance. The river Vaikai flows along this city carrying all kinds of gems and gold particles and makes it prosperous.

**Note:** Thiru-p-poovanam is renowned for arts, music and dance.

பொய்யா வேதநாவினா னும்பூமகள் காதலனும்
கையாற் றொழுதுகழல்கள் போற்றக் கனலெரி யானவனூர்
மையார் பொழிலின் வண்டு பாடவைகை மணிகொழித்துச்
செய்யார் கமலந் தேனரும்புந் தென்திருப்பூவணமே. 9

பொய்யா வேத நாவினானும், பூமகள்காதலனும்,
கையால்-தொழுது கழல்கள் போற்ற, கனல்எரிஆனவன் ஊர் -
மை ஆர் பொழிலின் வண்டு பாட, வைகை மணி கொழித்து,
செய் ஆர் கமலம் தேன் அரும்பும் தென்திருப்பூவணமே.

poyyA vEta nAvin2An2um, pUmakaL kAtalan2um,
kaiyAl--tozutu kazalkaL pORRa, kan2al eri An2avan2 Ur--
mai Ar pozilin2 vaNTu pATa, vaikai maNi kozittu,
cey Ar kamalam tEn2 arumpum ten2tiruppUvaNamE.

**பொருள்:** என்றும் பொய்யாகாத வேதங்களை ஓதும் நாவினன் நான்முகன் ஆவான். திருமால் மலர்மகளின் கணவன். இவ்விருவரும் தங்கள் கைகளினால் சிவன் திருவடிகளைத் தொழுது போற்ற, சிவந்த எரி உருவாகத் தோன்றிய அவனது ஊர் திருப்பூவணமாகும். இந்த அழகிய திருப்பூவணத் தலத்தில் இருள் செறிந்த சோலைகளில் வண்டுகள் பாடுகின்றன. அதன் பயனாய் சிவந்த தாமரை மலர்களில் தேன் துளிர்கின்றது. வைகை ஆறு மணி கொழித்து வளம் சேர்க்கிறது.

**குறிப்புரை:** அயனும் மாலும் அறியொண்ணா வகை அழலுருவானவன் ஊர் இது என்கின்றது. பொய்யா வேதம் – எக்காலத்தும் பொய்யாகாத வேதம். வேதத்தின் நித்யத்துவம் கூறியது. பொழிலில் வண்டு பாடச் செய்களிற் கமலம் தேனரும்பும் என்றது கன்று கத்தச் சுரக்கும் கறவை போல வண்டு பாடக் கமலம் மலர்ந்து தேன்சுரக்கும் என்பதாம்.

Lord Civan in the days of yore stood as a tall and huge column of fire. Brahma, who chants the never failing Vedas and Thirumaal, (husband of the goddess of the earth) who resides in the lotus (பூமகள்) - both of them worshipped Lord Civan by raising both their hands and adored His Holy Feet. This Lord Civan abides in this impressive southern Thiru-p-poovanam city which is very prosperous as a result of the river Vaikai bringing and depositing here all kinds of gems. The city gardens are dark, full of tall trees close to one another. Honeybees are humming tunes in these gardens. The humming noise of the bees makes the lotus flower to drop their honey.

அலையார் புனலை நீத்தவருந் தேரருமன்பு செய்யா
நிலையா வண்ண மாயம் வைத்தநின்மலன் தன்னிடமாம்
மலைபோ ற்றுன்னிவென்றி யோங்குமாளி கைசூழ்ந்தயலே
சிலையார் புரிசைபரிசு பண்ணுந்தென் திருப்பூவணமே. 10

*அலை ஆர் புனலை நீத்தவரும், தேரரும், அன்பு செய்யா*
*நிலையா வண்ணம் மாயம் வைத்த நின்மலன் தன் இடம்ஆம் -*
*மலை போல் - துன்னி வென்றி ஓங்கு மாளிகை சூழ்ந்து, அயலே*
*சிலை ஆர் புரிசை பரிசு பண்ணும் தென்திருப்பூவணமே.*

alai Ar pun2alai nIttavarum, tErarum, an2pu ceyyA
nilaiyA vaNNam mAyam vaitta nin2malan2 tan2 iTam Am--
malai pOl--tun2n2i ven2Ri Ogkum mALikai cUzntu, ayalE
cilai Ar puricai paricu paNNum ten2tiruppUvaNamE.

**பொருள்:** அலைகள் வீசும் நீரில் நீராடாது, சமணர்கள் அதனைத் துறந்தனர். இந்தச் சமணரும், புத்தரும் புண்ணியப் பேறு இல்லாதவர்கள். ஆதலால் அன்பு செய்து வழிபாட்டில் நிலைத்திராது இருக்கின்றனர். அவர்களுக்கு அப்படிப்பட்ட மாயத்தை வைத்தவர் சிவபெருமான். இந்தக் குற்றமற்ற சிவபெருமான் எழுந்தருளிய இடம் திருப்பூவணம். இந்த அழகிய திருப்பூவணத்தில் வெற்றிமிக்க மாளிகைகள் மலைபோல் நெருங்கி அமைந்திருக்கின்றன. அவற்றைச் சுற்றி கருங்கல்லால் அமைந்த மதில்கள் அழகு செய்கின்றன.

**குறிப்புரை:** புத்தர் சமணர் அன்பு செய்து நிலையாத வண்ணம் அவர்கட்கு மாயையைக் கூட்டிய நின்மலன் இடம் இது என்கின்றது. புனலை நீத்தவர் – நீராடாதே. அதனை விலக்கிய சமணர். தேரர் – புத்தர். துன்னி – நெருங்கி. சிலையார் புரிசை – மலையை ஒத்த மதில். பரிசு – அழகு.

Lord Civan is ever free from soul impurities; He caused the Samanars and the Buddhists who never take bath in rippling waters and thus loose virtuous life. They cannot have sincerity or steadfastness in their prayers. Therefore, the unblemished Civan caused bewilderment in their minds. This Civan is entempled in this fair southern Thiru-p-poovanam, which has impregnable and hill-like mansions close to each other. They are surrounded by good looking blue granite stone walls - all of which enhance the beauty of the city.

திண்ணார் புரிசைமாட மோங்குந்தென் திருப்பூவணத்துப்
பெண்ணார் மேனியெம் மிறையைப் பேரியலின் தமிழால்
நண்ணாருட் கக்காழிமல்கு ஞானசம்பந்தன் சொன்ன
பண்ணார் பாடல் பத்தும் வல்லார் பயில்வது வானிடையே. 11

திண் ஆர் புரிசை மாடம் ஓங்கும் தென்திருப்பூவணத்துப்
பெண் ஆர் மேனி எம் இறையை, பேர் இயல் இன்தமிழால்,
நண்ணார் உட்கக் காழி மல்கும் ஞானசம்பந்தன் சொன்ன
பண் ஆர் பாடல்பத்தும் வல்லார் பயில்வது வான்இடையே.

tiN Ar puricai mATam Ogkum ten2tiruppUvaNattup
peN Ar mEn2i em iRaiyai, pEr iyal in2tamizAl,
naNNAr uTkak kAzi malkum njAn2acampantan2 con2n2a
paN Ar pATal pattum vallAr payilvatu vAn2 iTaiyE.

**பொருள்:** வலிமை பொருந்திய மதில்களும் மாடவீடுகளும் நிறைந்த அழகிய தலம் திருப்பூவணம். இங்கு, எம் இறைவனான சிவபெருமான் பெண்ணொரு பாகனாக விளங்குகின்றார். இந்தச் சிவபெருமானைப் பெருமை பொருந்திய இனிய தமிழால், புறச்சமயத்தார் அஞ்சுமாறு விளங்கும் சீகாழிப்பதியில் தோன்றிய ஞானசம்பந்தன் பாடினார். இந்த இசைத்தமிழ்ப் பாடல்கள் பத்தையும் பண்ணோடு ஓதவல்லவர்கள் வானுலகில் வாழ்வர்.

**குறிப்புரை:** இந்தப் பண்ணார்ந்த பாடலைப் பாட வல்லவர்கள் வானுலகிற் பயில்வார் என்கின்றது. திண் – வலிமை. நண்ணார் – பகைவர். உட்க – அஞ்ச.

Lord Civan, our Chief, is entempled in the divine form having His consort on the left portion of His body. This beautiful city has multi-storied mansions surrounded by impregnable fort walls. Gnaanasambandan hailing from Seekaazhi (dreaded by the adherents of alien faiths) has sung in glorious sweet Tamil language on Lord Civan, our Chief entempled in Thiru-p-poovanam. Those who can chant these ten verses of tuneful hymn, will flourish in the world of Devaas.

**Note:** Gnaanasambandar is Parasamaya Kolari. He is ever dreaded by the adherents of alien faiths.

Saivite hymns sung at various shrines in the Tamil land, speak of Lord Civan ever abiding at the respective shrines and not leaving those shrines at any time –

e.g. ... பெருமானார் பெருவேளூர் பிரியாரே (vide திருப்பெருவேளூர் திருப்பதிகம் - பாடல்(1) - விழையாதார் விழைவார் போல் விகிர்தங்கள் ... This can possibly by amplified further for clarity, thus:

Shrines were built in the past at various places for the benefit of local people who may not be able to travel far and wide. A vast majority of folks, confined to certain regions should have the full benefit at the shrines nearby. Hence each decad is in itself a complete composition on the glories of Lord Civa and how to attain His grace. Thus our hymns come forward to assure all men of the gift of liberation from within their neighbourhood shrines as well. Assigning different location as permanent abodes of Lord Civan, does not therefore involve any inconsistency. It is well known that Lord Civa is omnipresent.

திருச்சிற்றம்பலம்
THIRU-CH-CHITRAM-BALAM

*64ஆம் பதிகம் முற்றிற்று*
End of 64th Hymn